ஓம்

ஸ்ரீ ஜிநாயநம:

வாமன முனிவர்

அருளிய

# மேருமந்தர புராணம்



வீடூர் - கு. அப்பாசாமி சாஸ்திரியார்

இயற்றிய உரை

---

பதிப்பாசிரியர் :

சென்னை பிரசிடென்சி கலாசாலை தத்துவ சாஸ்திர போதகாசிரியர்

அ. சக்கரவர்த்தி M. A., I. E. S.

சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை சென்னை

1923



[விலை ரூபா 6

# PREFACE

Perumandara Puranam is a wellknown Tamil classic. It is a mine of information relating to Jaina philosophy and religion. The author Vamanacharya who was also known as Mallishenacharya, was the Guru of Irugapa, the minister of Hari - Hara II of Vijianagar. Hence his age would be somewhere about the end of the 14th century. From internal evidence as well as evidence from inscriptions it is clear that the author was well versed in Tamil as well as Sanskrit. The way in which he uses Sanskrit and Prakrit technical terms in tamilised form is very instructive. It is not necessary to enumarate the several merits of the work which is of high literary excellence. They will be evident even to the casual reader. The book is offered to the public for the first time in complete form. The successful publication of the work is due mainly to the help and encouragement which I derived from Mr. K. Appaswami Sastriar of Vidoor, a cousin of mine and a distinguished student of my father. I owe to him the lucid commentary which he wrote for me and which is based upon a traditional commentary transmited orally from guru to student of which illustrious line of scholars he happens to be the last. Though the commentary is given shape to just now it has all the weight and importance of the traditional and authoratative commentary by an old master. Further, I must acknowledge my thanks to

Mr. T Authy Nainar for allowing the first 3 sargas, of which he holds the copyright, to be included in this work, to Mr V. Arumugam Servai for seeing the manuscript through the press and also to Mr. T V. Kalyanasundara Mudaliar for the several valuable suggestions which he offered to me in the matter of editing the work. In the 6th sarga where there is a comparative study of Indian philosophy, I made several alterations in the commentary. For any inaccuracy that may have crept into the interpretation of the stanzas concerned, on account of these changes, I take the full responsibility. I have added a philosophical introduction in Tamil with the hope that it would help understanding the philosophical and religious doctrines relating to Jainism. The introduction is largely drawn from Gunaratna's commentary called "Tarka Rahasya Dipika" on Haribhadra's "Shad-darsana - Samuchchaya" and hence it does not claim any originality.

Madras, May 17, 1923

A CHAKRAVARTI

# விஷய அட்டவணை

பக்கம்



## மேருமந்தா புராண கதைச் சுருக்கம்

## மேருமந்தர புராணம் மூலமும் உரையும்

பக்கம்

ஸ்ரீ

# நூலாசிரியர் வரலாறு

" தூய தவராச ராசன் குறுமுனிவன் தந்த பாட்டு " — என்று இந்நூலின் கடையில் செய்யுட்டொகையைக் குறிக்கும் வெண்பாவை நோக்குழி, இந்நூல் ஆக்கியோன் பெயர் 'வாமனமுனி' என்பதும், அவர் தவவேடம் பூண்டு கீர்த்தி பெற்றவரென்பதும் மட்டும் விளங்குகின்றன. இவருடைய ஊர் காலம் முதலிய விஷயங்கள் நூற்கண் குறிப்பிடப்பட்டில்லை. தென்னாட்டில் 'வாமனமுனி' என்று பெயர் பூண்ட நூலாசிரியர் பலர். அவருள் கீர்த்தி வாய்ந்தவர் ஆதி அகத்தியனாரின் சிஷ்யரும், அவரிடம் இலக்கணம் கற்றவருமான ஒரு வாமன முனிவரும், வடமொழியில் சிறந்த அலங்கார சாஸ்திரமியற்றிய மற்றொரு வாமனாசாரியரும், ஏலாசாரியரென்று நாமம் பெற்ற திருக்குறளாசிரியரான ஸ்ரீகுந்தகுந்தாசாரியராகிய வேறொரு வாமனாசாரியரும் ஆவர். ஆனால் மேருமந்தர நூலாசிரியரான வாமன முனி மேற் குறிக்கப்பட்டவர்களினின்றும் வேறுபட்டவரென்பதில் சிறிதும் ஐயமில்லை.

இவர் வடமொழி, பிராக்கிருதம், இந்தப் பாஷைகளிலும் நன்கு தேர்ந்தவரென்பதும், ஜைன தரிசனமட்டுமன்றி, ஏனைய தரிசன தத்துவ விஷயங்களையும் நன்கு ஆராய்ந்தறிந்தவரென்பதும் நூலின் அகச்சான்றுகளால் ஊகிக்கக் கூடும். மற்றும் இந்நூலில் சிற்சில விடங்களில் குறள், நாலடியார் முதலிய சிறந்த தமிழ் நூல்களிற் போந்துள்ள சொற்களும் சொற்றொடர்களும் அடிகளும் ஆளப்பட்டுள்ளமையால் தமிழிலும் இவ்வாசிரியர் வல்லுநர் என்பதும் புலப்படும்.

இந்நூலாசிரியர் காஞ்சீபுரத்துக்குச் சமீபத்திலுள்ள திருப்பருத்திக்குன்றமெனும் பதியிலிருந்தவர். இதனை வலியுறுத்த அவ்வூர் ஆலயத்தில் போதிய சிலா சாஸனங்களுண்டு. ஆங்கொரு கோரா மரத்தடியில் இருவர் பாதங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. அவை கள் குரு சிஷ்யரான மல்லிஷேண புஷ்பசேன முனிகள் பாதங்கள். ஆங்கே அடியிற்கண்ட வடமொழி ஸ்லோகம் கிரந்தத்தில் எழுதப் பட்டிருக்கிறது.

ஸ்ரீமத் ஜயதாமேகம் சாஸ்த்ரம் சாஸ்த்ரவ்ருத்தயே
பத்மஹம் வாமநாசார்ய-ம் மல்லிஷேண முநீச்வரம்

இதனால் இவருக்கு மல்லிஷேண முனி என்று வேறு பெயருள்ள தாகத் தெரிகிறது. வடமொழியிலுள்ள, பஞ்சாஸ்தி காயம், பிரவசன சாரம், சமயசாரம் என்னுந் தத்துவ நூல்களுக்கும், ஸ்யாத்வாத மஞ்சரி என்னும் நூலுக்கும் இவர் உரை எழுதியுள்ளார். மற்றும் தமிழில் சிறந்த நூலாகிய நீலகேசித் திரட்டு என்ற நூலுக்குச் சமய திவாகரம் என்ற விருத்தியை எழுதிய வாமனமுனிவரும் இவராக இருத்தல் வேண்டும். அந்தச் சமய திவாகர விருத்தியிலும் இவரது வடமொழி தென்மொழிக் கல்வித்திறமும் தத்துவ ஞானமும் நன்கு புலப்படும். மற்றும் இந்த மல்லிஷேண முனிக்கு வடமொழியில், 'உபய பாஷா கவிச்சக்கரவர்த்தி' என்றொரு சிறப்புப்பெயருமுண்டு. அதற்கிலக்காக இந்நூலின் ஆரம்பத்திலேயே இவர் "தமிழாலொன்று சொல்லலுற்றேன்" என்று பாடியுள்ளது கவனிக்கத்தக்கது. இதனால் இவர், இந்நூலைப் பாடுதற்கு முன் வடமொழியில் வேறு நூல்கள் செய்திருக்கவேண்டுமென்பது வெளிப்படும்.

மற்றொரு சிலா சாசனம்—திருப்பருத்திக் குன்றத்தில்,

ஸ்ரீமல்லிஷேண யதிவாமந ஸச்சிஷ்ய:
ஸ்ரீபுஷ்பஸேந முநிபுங்கவா................என்றுளது.

இதனால் மல்லிஷேண வாமன முனியின் சிஷ்யன் புஷ்பசேன முனியென்று சந்தேகமறத் தெளியலாம். மல்லிஷேண புஷ்பசேன முனிவரிருவரும் காஞ்சீபுரத்தில் வதிந்திருக்க வேண்டும். இவர்களின் பாதங்கள் திருப்பருத்திக் குன்றம் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ளன வென்பது முன்னரே காட்டப்பட்டது.

## நூலாசிரியர் காலம்

நூலில் இவருடைய காலத்தைக் குறிப்பிட யாதொரு ஆதாரமுமில்லாவிடினும், கால நிர்ணயம் செய்வதற்குப் போதுமான சாதனங்கள் சிலாசாசனங்களிற் காணலாம். மேற்கண்ட கோயில் வடக்கு மதிலிலுள்ளது வருமாறு :—

## தமிழ்.

“ஸ்வஸ்திஸ்ரீ:—துந்துபி வருஷம் கார்த்திகை மாதத்தில் பூர்வ பக்ஷத்து, திங்கட்கிழமையும் பௌர்ணமியும் பெற்ற நாள் மஹா மண்டலேஸ்வரன் அரிஹர ராஜ குமாரன் ஸ்ரீமத் புக்கராஜன் தர்மமாக வைசய தண்டநாத புத்ரன், ஜைநோத்தமன் இருகப்ப மஹாப் பிரதானி திருப்பருத்திக்குன்று நாயனார் த்ரைலோக்ய வல்லபற்கு பூஜைக்கு, சாலைக்கும் திருப்பணிக்கும் மாவண்டூர் பற்றில் மாஹேந்திர மங்களம் நாற்பார்க்கெல்லையும் இறையிலி பள்ளிச் சந்தமாக சந்த்ரா வரையும் நடக்கத் தருவித்தார்.”

மண்டபத்திலுள்ளது வருமாறு:—

ஸ்ரீமாந் வைசய தண்டநாத தநய ஸௌஜந்ய ரத்நாகர |
ஸம்ஸாராம்புதி தர்மஜ்ஞ நுதி ஸ்ரீபுஷ்பஸேநா
[ஜ்ஞயா ||

ஸ்ரீகாஞ்ச்யாம் ஜிநவர்த்தமாந நிலயஸ்யாக்ரே மஹாமண்டபம் |
ஸங்கீதார்த்த மசீகரச்சுபமயா ஹஸம்ஸகோத்ஸவம் ||

இவைகளால் இருகப்பனென்னும் புக்கராய சேனாபதி, ஜிநபக்தனென்றும் புஷ்பசேனமுனி சிஷ்யனென்றும் உணரலாம். * சாசன ஆராய்ச்சி நிபுணரான இ: ஹல்ஷ் என்பவர் இருகப்பனும் இவன் பிதா வைசப்பனும் விஜய நகரத்தை யாண்ட ஹரிஹர ராஜனுடைய மந்திரிகளென்றும், இங்கு சாஸனங்களில் குறிக்கப்பட்ட காலம் முறையே 1382 A. B. (2) 1387-88 A. B. ஆக விருக்கவேண்டுமென்றும் நிச்சயிக்கிறார். விஜயநகரையாண்ட ஹரிஹர ராஜன், இவன் மந்திரி இருகப்ப தண்ட நாயகன், இவன் குரு புஷ்பசேன முனி, இவர் குரு மல்லிஷேணவாமன முனி - இவர் எல்லோரும் சமகாலத்தவராவர். ஆகையால் மேருமந்தர நூலாசிரியரான மல்லிஷேண வாமன முனி சுமார் 550-வருஷங்களுக்கு முன்னிருந்தவரென்று சொல்லக் கூடும்.

---

* Epigraphia Indica Vols. VII & VIII.

# ஜைந சமயம்

எல்லாக் கருமங்களினீங்கி முடிவிலாவறிவும், இன்பமும் பொருந்தி, பரமாத்ம ஸ்வரூபனாகிப் பிறப்பு பிணி மூப்பு சாக்காடுகளே கோணையா வமைந்த சம்சார மாற்றத்தினை ஜெயித்தவனே ஜிநன். சர்வஜீவ தயாபரனும் சர்வ ஹிதகாரனுமான ஜிநனால் ஏனைய ஜீவன்கள் மாற்றத்தினின்றும் மீண்டு பரமசுக மடைந்துய்யுமாறு உபதேசிக்கப்பெற்றதும், "கொல்லாவ்ரதமே மூலமந்திர" மென்றும், பரமாத்மனை தெய்வமென்றும், எல்லாவுயிர்களிடத்தும் அன்பும் தயவும்பூண்டு அவைகளுக் கிதகரமே செய்தல் உண்மை வேள்வியென்றும், தனக்குள் அநாதிகாலமாய்ப் படிந்து உரம்பெற்றுள்ள கர்மமாகிற களங்கத்தினைத் தியானமாகிற அக்கினியால் எரித்தொழித்து ஆத்தும ஜோதியைப் பெறுவதே தபமென்றும், சம்சாரம் அநித்தியமாகையால் வீடே பெறற்பாலதென்றும், வீடுபெறும் வழி நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம்—மூன்று மொருதலைப்பட்டு நிற்பதென்றும் உணர்த்தி ஸ்யாத்வாதம் என்ற பெயர் பூண்டு விளங்குவதுமாகிய சமயமே ஜைந சமயம்.

இந்து தேச வாராய்ச்சிக்கு மூலாதாரமாயும், ஆரியமதக் கோட்பாடுகளை விளக்குவதாயும், அவர்கள் இந்திர வருணாதிகளை வேள்வி செய்து வழிபாட்டுத் துதிக்கும் முறைகளைத் தொகுத்தியற்றப் பட்டதாயுமிருப்பது ரிக்வேத சம்ஹித மென்பது. ரிக்வேத காலமே இந்திய நாகரிகத்துக்குத் தொடக்கமெனக் கொள்ளற் பாற்று. சரித்திர ஆராய்ச்சியிற் றேர்ந்தோர் இதையே வேதகால மென்று கூறுவர். ஆரிய வம்சத்தவரில் ஒரு கிளையாரால் போற்றப் பெற்றதான ஜைந சமயம் வேதகாலந் தொடங்கியே இத்தேசத்தில் நிலவியிருக்க வேண்டுமெனக் கொள்வது மிகையாகாது. இவ்வாறு யான் கூறுவது, ஒரு பொருள் நீண்டகால மிருப்பதாலேயே சிறப்பும் மேன்மையு மடையுமென்ற கொள்கையினாலன்று. ஒவ்வொரு வஸ்துவும் தன்னுடைய இயற்கையாலும் குணத்தாலுமே பெருமை யடையுமென்பது திண்ணம். என் கொள்கையு மதுவே.

ஆனால் சரித்திர வுணர்விலாதார் சிலர் ஜைந, பௌத்த மதங்களுக்குள்ள முன் பின் கால வரிசையையும், தத்துவ வேறுபாட்டை

யும், முக்கிய கொள்கையின் முரண்பாட்டையு மறியாது ஜைந சமயம் பௌத்த சமயத்தின் ஒரு பாகுபாடென்றும், அதற்குப் பின் தோன்றியதென்றும் சொல்லித் திரிகிறுராகையாலும், தற்போது சரித்திர, சாஸ்திர, சாஸன ஆராய்ச்சி நிபுணர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆதாரங்கள் ஜைந சமயத்தின் காலம் வேத காலத்திேைடியைந்து கிடந்தலைக் குறிப்பிடுதலாலும் மேற் கூறியவாறு கொள்ளத் துணிந்தேன்.

பௌத்த மதத்தை வெளியிட்ட கௌதம சாக்கிய முனிவர் தம் சிஷ்யர்களுக்குப் போதித்தபோது ஜைந சமயத்தைக் குறிப்பிட்டாரென்று பௌத்த சாஸ்திரத்திலேயே கூறப்பட்டுளதாலும், சரித்திர வாராய்ச்சியில், ஜைந சமய அந்திய தீர்த்தங்கரரான வர்த்தமான மஹாவீரர் கௌதம புத்தருக்குச் சில வருஷங்கள் முந்தியிருந்தவரென்று புலப்படுதலாலும் ஜைந சமயம் பௌத்த மதத்திற்குப் பிந்தினதாகாதென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நன்கு விளங்கும்.

மேலும் ஸ்ரீ வர்த்தமானருக்குச் சுமார் 250-வருஷத்திற்கு முன் தர்ம போதனம் செய்தவரான ஸ்ரீ பார்சுவ நாதர் காலந்தொடங்கி ஜைநசமய மிருந்திருக்க வேண்டுமென்பது ஹெர்மன் ஜாகோபி, வின்சன்ட் ஸ்மித்து, டாக்டர் தாமஸ் முதலிய ஆராய்ச்சி மேதாவிகள் கொள்கை. இப்போது வெளியான கேம்பிரிட்ஜ் - சர்வகலாசாலை இந்துதேச சரித்திர முதல்பாகத்திலும் இக்கொள்கை அங்கீகரிக்கப் பெற்றுளது.

இனி, பிராம்மணரால் வேதமெனப் போற்றப்படுவது, பொது வகையால் மூன்று பிரிவுள்ளது. ரிக், எஜுர், சாம, அதர்வணமென்று வழங்கப்படும் மூல சம்ஹிதைகள். அதனதன் பின்பற்றியனவாக, வசனமாகவேயியற்றப் பெற்றனவும், பெரிதும் யாகம் செய்புமுறைகளை விளக்குவனவும், பலவகைப்பட்டு, பல பேர் பூண்டனவுமாயிருப்பன பிராம்மணங்கள். இவைகளின் பின்னமைக்கப்பட்டனவாயும், அத்தியாத்தும விஷயத்தையே நோக்கிச் செல்வனவாயும், பின் இத்தேசத்திற்றேன்றிய சர்வதரிசனங்கட்கும் மூலாதாரப் பொருளாயும் விளங்குவன உபநிஷதங்கள். இம்மூன்று பிரிவுகளும் முறையே ஒன்றிற்கொன்று பின் காலத்தன.

யாகாதிகளைச் செய்வதூஉம் செய்புமா றுணர்வதூஉம் இழிகல்வி—அபரவித்தியா—வெனப்படுவதூஉமான விஷயங்களில் காலம்

போக்காமல் ஆன்மாவைத் தேடியடைந்து சுயராஜ்யம் பெறுவதே பேறென்றார், அதே பரவித்தியா வென்றும் கசடறக் கூறுவதே உபநிஷதப் பொருள். இவ்வுண்மைப் பொருள் முதலில் க்ஷத்திரிய சிரோமணிகளால் கண்டுணரப் பெற்ற தென்றும், அவர்களைப் பின்பற்றிப் பிராமணர் முதலானோர் தெளிந்தாரென்றும் உபநிஷதங்களே கூறுகின்றன.

மற்றும் பௌத்தமத நாயகனான கௌதம சாக்கிய முனிவரும், ஜைந மதம், வெவ்வேறு காலங்களில் மங்கியிருந்தபோது அதை விளங்கச் செய்த தீர்த்தங்கர பரம தேவர்களும் க்ஷத்திரியோத்தமரே. மேலும் நந்நாட்டு ஹிந்து மதத்தில் கடவுள் பதம்பெற்று ஆலயங்களமைக்கப்பெற்று, துதிக்கப்பட்டுவரும், ஸ்ரீ ராமரும், ஸ்ரீ கிருஷ்ணரும், இக்ஷ்வாகுவம்ச ஹரிவம்ச க்ஷத்திரிய சிகாமணிகளல்லவா? ஆதியிலேயே பசு, நராதி மேதங்களை வெறுத்து வைதிக யாகாதிகளிலும் மேம்பட்டதான உண்மையைக் கைப்பற்றி யூபஸ்தம்பத்தி லிணையப்பட்டிருந்த சுனஷேபனென்ற பிராம்மண குமாரனை விடுவித்து, தன்னரசுக்கு யுவராஜனாக ஸ்வீகரித்துச் சென்ற விஸ்வாமித்திரரும் க்ஷத்திரிய சூடாமணியே.

இவ்விஷயங்களைக் கவனிக்கும்போது பிராம்மணர் ஹிம்சா சம்பந்தமான யாகாதிகளுட் சுழன்றிருந்த போதே இவைகளை யிழி தருமமென் றிகழ்ந்து உயர்பதமாகிய சுத்தாத்மாவைத் தேடிச் செல்லும் யாத்திரையில் முன்னின்று ஏனையோர்க்கு வழிகாட்டிச் சென்றவர் க்ஷத்திரியர்களே யென்பது துணியப்பெறும்.

வேத காலத்தில் மூன்றும் பிரிவான உபநிஷத காலத்திலேயே ஜைந சமயமும் பௌத்த சமயமு மிருந்திருக்க வேண்டுமென்பது ஊகிக்கப்படும். வேதத்திற்கு முரண்பட ஆத்ம சாஸ்திரங்களிற் பயின்று வந்த க்ஷத்திரியரெல்லோரும் ஆரியரேயாகையால் அவர்களில் ஜனகர்போன்ற சிலர் யாஜ்ஞவல்கியர் முதலான வேதியர்களால் போதிக்கப்பட்டு வேதக் கோட்பாடுகளைப் புதிய ஆத்மவித்தையுடன் சமரசப்படுத்திக் கைப்பற்றினர். வேறு சிலர் முரண்பாடே வலிதென்று கொண்டு வேறே நின்றார். பின்னவரின் வம்சத்தினரே ஜைந மதத்தினர். மற்றும் ஒரு சார்பாராய் வைதிக சமயத்தில் முற்றும் முரணநின்று வர்ணாஸ்ரம தர்மத்தை வேரறுத்தெறிந்து ஆத்மா பிரமாண பூதமல்ல வென்று அனாத்மவாதம் பற்றி முற்றும் சிதறி நின்ற

வர் பௌத்தர். இவர்கள் ஆரிய சமூகத்தினின்றும் கடையில் பிரிந்தவர்.

இதுநிற்க வேத நூல்களாகிய வாஜஸநேய ஸம்ஹிதையிலும், சதபத பிராம்மணத்திலும் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது :—

காசி, கோசல, விதேக, மகத முதலிய தேசங்களில் யாகாதிகள் ஒழுங்காய் நடைபெறவில்லை; அவ்விடங்களில் ஆரியர் மதத்தினின்றும் நழுவினர்; அவ்விடங்களில் க்ஷத்திரியரே ஜனசமூஹங்களில் மேன்மை பெற்றுப் பிராம்மணரை யடக்கிக்கொண்டார் ; ஆங்கே பிராம்மணர் வசிக்க யோக்கியமல்ல; ஆங்குள்ளோர் வடமொழித் திரிபான ஒருவித பாஷையையுடையார் ; வைதிகயாகாதிகளைக் கைவிட்டதுமன்றி வேத தர்மத்திற்கு முற்றும் முரணாக யாகஞ் செய்வது பாபமென்றும் யாகாதிகளைச்செய்யாதொழிதலே புண்ணியமென்றும் ஒருவித குதர்மத்தை யுடையார். "வேத தரும பரிபாலனஞ் செய்து வரும் குரு பாஞ்சால தேசத்தினர் நழுவின இழிதர்மத்தினராகிய இன்னாரை எதிரியாகவும் மிலேச்ச சமானராகவும் கருத வேண்டும்."

குருபாஞ்சால தேசத்தினர் இவ்வாறு காசி, கோசலர் முதலியோரை இழித்துக் கூறியதல்லாமல் பலமுறை அவர்களிடம் போர் புரிந்ததாகவும் எழுதப்பட்டுள்ளது.

இவ்வாறு வைதிக மதத்தினின்று நழுவினவரும், வடமொழித் திரிபான ஒரு பாஷையைப் பேசி வந்தவரும், யாகத்திலும் கொலை பாபமென்றும் கொல்லாமையே தருமமென்றுங் கொண்டு குருபாஞ்சாலர்களால் எதிரியாகப் பாவிக்கப்பட்டு வந்தவருமாகிய ஆரிய வம்சத்தினர் யாவர் ? சரித்திரவாராய்ச்சித் திறமுடைய ஒருபாலார், இவர்கள், ஆரிய சமூகத்திலொரு சாகையென்றும், இந்தியாவுக்குள் குரு பாஞ்சால தேசத்தாரியருக்கு முன் குடியேறி வந்தவர்களென்றும், பின் வந்தவர்களால் நெருக்கப்பட்டுக் கிழக்கே - காசி, கோசல, விதேக, மகத தேசங்களில் நகர்ந்து போயினரென்றும் எண்ணுகிறார். வேறு சிலர், ஏனையவை இந்நாட்டிலேயே யிருந்த தேசிய சமூகங்களில் சேர்ந்தவராக எண்ணுகிறார். எத்துணையர், எங்கிருந்து வந்தவரென்பதை நிச்சயிக்கப் போதுமான ஆதாரமில்லாவிடினும் அவர்கள் ஆரிய வம்சத்தினராகவே யிருந்திருக்க வேண்டுமென்பது அனுமானிக்கப் பெறும். ஏனெனில் குருபாஞ்சால தேசத்திலிருந்த வைதிக மதத்தினர், இவர்

கள் எதிரிகளாயிருந்தும் இவர்களை நழுவின ஆரியர்களாகக் கொண்டாராதலின்.

இது நிற்க, கௌதம புத்தரும், வர்த்தமான மஹா வீரரும், மகத தேசத்தினரென்பதும், மகத தேசாதிபதிகளால் இவ்விரு சமயங்களும் நன்காதரிக்கப்பட்டு வந்தனவென்பதும் சரித்திர ஞாநிகளுக்கு நன்கு தெரிந்த விஷயங்களே. மஹாவீரர் அர்த்தமாகதியென்ற பாஷையால் தர்மோபதேசஞ் செய்தாரென்பதும், பௌத்தருமவ்வாறே மாகத பாஷையின் ஒரு பிரிவான பாலியால் உபதேசித்தாரென்பதும் அவரவர் சாஸ்திரங்களால் தெரிகின்றன. வர்த்தமான மஹாவீரருக்கு முன்னிருந்தவரான, ஸ்ரீபார்ஸ்வ நாதர் காசிவிஷய வாரணாஸி நகரத்தில் உக்கிரவம்சத்தில் விஸ்வசேந மஹாராஜனுக்குப் புத்திரராக உதித்தவரென்பது அவர் சரித்திரத்தில் கூறப்பட்டுளது. ஜைந சாஸ்திரங்களும் கதைகளும் விதேக க்ஷேத்திரத்தை நித்திய புண்ணிய பூமியென்றும், அவ்விடத்தில் ஜிநதர்மம் எக்காலத்திலேயும் போஷிக்கப்பெற்று வருகிறதென்றும், ஏனைய தேசங்களிலுள்ள ஜிந முனிகளுக்கும், ஆசாரியருக்கும் தர்ம விஷயத்தில் சந்தேக முண்டானால் அவர்கள் விதேக க்ஷேத்திரஞ்சென்று தெளிந்து வருவதாயும் கூறுகின்றன. மேலும் ஆதி ஜிநரான விருஷபதேவரும் கோசலவிஷய அயோத்தியா நகரத்து இக்ஷுவாகுவம்சத்து நாபி மஹாராஜன் புத்திரராக அவதரித்தார். மற்ற எல்லாத் தீர்த்தங்கரர் கதையிலும் அவர்கள் காசி கோசலாதி க்ஷேத்திரங்களில் க்ஷத்திரிய வம்சங்களில் அவதரித்தவர்களென்பது தெரிகிறது.

ஆகையால் பிராம்மணங்கள் எழுதப்பட்ட வேத காலத்திலே காசி கோசல விதேக க்ஷேத்திரங்களில் ஜைந சமயமிருந்திருக்க வேண்டுமென்பது எளிதில் அனுமானிக்கப் பெறும்.

தென்னாட்டில் ஜைநர் யாண்டு போந்தாரென ஐயமறக் கூறுவதற்குப் போதுமான ஆதாரமில்லை. தமிழிற் கிலக்கணம்வகுத்த அகத்தியனார் காலந்தொட்டுத் தெக்ஷணத்தில் ஆரியர்கள் வதிந்திருக்கவேண்டும். அகத்தியர் தென்னாட்டிற்குவந்து தமிழ் கற்றாரென்று வழங்குதலானும், அவரே அகத்தியத்துள் வடமொழி யிலக்கணங் கூறினாராதலானும், "எல்லா நாட்டினு மியல்வதுபாகதம்" எனச் சூத்திரமியற்றினாராதலானும் அவர் காலத்திலேயே வடமொழி வழங்கிவந்தோர் தமிழருடன் மயங்கிக்கிடந்தாரென்பது திண்ணம். வடமொழி நாலு

வகையாமெனக் கூறி, 'சநுக்கிரகஞ் சங்கதந்தேவர் மொழியென்ப', 'அவப்பிர ரஞ்சக மொழி யசேதனர்க்காகும்', 'எல்லா நாட்டிலு மியல்வது பாகதம்' எனச் சூத்திர மியற்றினர். இவற்றை நோக்குங்கால் முதலிரண்டு வகை மொழிகளும் ஆரியரில் ஒரு பாலாரான வேதியரால் சில விடங்களில் மட்டும் பேசப்பட்டனவென்பதும், மூன்றாவது பிரிவு ஆரியரைப் பின்பற்றி ஊழியஞ்செய்து வடக்கேயிருந்து வந்த ஓர் இழிசாதியாருடைய தென்பதும் ஊகிக்கப் பெறும்; பாகதம் அவ்வாறன்றி, எல்லா நாட்டிலும் கற்றோராலும் போற்றப் பெற்றதென்பதும், தென்னாட்டின் ஏனைய வடமொழிப் பிரிவுகளுக்கு முன்னமே அது வந்திருக்க வேண்டுமென்பதும், அம்மொழியுணர்ந்தோர் தென்னாட்டிற் பரவித் தேச ஜனங்களுடன் விரவிக் கிடந்தனரென்பதும் உணரப்பெறும்.

பிராக்கிருதம் ஜைந சமயத்திற்குரிய பாஷையென்பது முன்னமே கூறப்பட்டது. இனி, ஜைநர் தென்னாட்டில் வந்து தமிழைக்கற்று அதனை விளங்கச் செய்தனரென்பதும் கற்றோரறிந்த விஷயமே; அதற்குத் தமிழ் நூற்களும் சான்று கூறும். இனி, 'அக்கரகாலம்,' 'இலக்கண காலம்', 'சங்க காலம்' எனத் தமிழின் காலத்தை வகுத்துக் கூறும் பேரிசைச் சூத்திரத்தில்,

"கொல்லா விரதம் பூண்ட நலத்தோர<br>
அறிவா னிறைந்த வறமாண் புடையோர்<br>
தமிழின தருமை தனியா யுணர்ந்தோர்<br>
கருவிநூற் காவியங் கழறும் பெரியோர்<br>
கால கதியாற் கடைநிலைப் படுவோர்<br>
தம்வயப் படுவது சமண காலம்."

எனச் சமணகாலங் கூறப்பட்டது.

இக்கால முறை, சரித்திர வுணர்ச்சிக்கும் 'இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே' என்ற இலக்கண நூல் கொள்கைக்கும் முற்றும் முரணிக்கிடத்தலால் கொளற்பாலதன்று. அக்கரக்காலம், இலக்கண காலம், சங்க காலம், சமணகாலம் ஆகிய இவை ஒன்றிலொன்று கலந்து கிடத்தல் வேண்டும்.

மற்றும் வால்மீகி ராமாயணம், ஸ்ரீராமர் தென்னாட்டிற் போந்துழி ஸ்ரமணர்களாஸ்ரமத்தைக் கண்டதையும், ஏனையோர் சிறப்பையும் கூறுகிறது.

II

மௌரிய சக்கரவர்த்தியான சந்திரகுப்த மஹாராஜனும் அவன் குருவாகிய பத்திரபாகு ஸ்வாமியும் தென்னாட்டிற்கு வந்தபோது அவர்களுடனே ஜைநர் தென்னாட்டுள் முதல் முதல் நுழைந்திருத்தல் வேண்டுமென்ற கொள்கை பொருந்தாதென்பதை, யான் பஞ்சாஸ்திகாய ஆங்கில முகவுரையில் காட்டியுள்ளேன். சந்திரகுப்த மஹாராஜன் காலத்திற்கு முன்பே தென்னாட்டில் ஜைநரிருந்தனரென்பது வெள்ளிடைமலை. தென்னாட்டோர் கப்பல் வியாபாரம் செய்து வந்தனரென்பதும், இங்கிருந்து வியாபாரப் பொருள்கள் எகிப்து, ரோம், முதலிய தேசங்களுக்கு அனுப்பப்பட்டனவென்பதும், ரோமாபுரி நாணயங்கள் மதுரையிற் காணப்படுகின்றமையானும, தமிழ் நூல்களினாதாரத்தானும் மேனாட்டுச் சாஸ்திர சாதனங்களானும், அனுமானிக்கப் பெறும். மௌரிய வம்சத்து அசோக மஹாராஜன் கப்பல் மூலமாய் இலங்கைக்குப் பௌத்த மத போதகர்களை யனுப்பினானென்பது சரித்திர சாதனங்களால் தெரிகிறது. தென்னாட்டினர்க்கும் வட தேசத்திலுள்ள மகத தேசத்தினர்க்கும் தரை வழி போக்குவரவு ஏற்படாத முன்னமே கப்பல் மூலமாய்ப் போக்குவரவு இருந்திருக்கலாம் எனக் கொள்வது அசாத்தியமன்று.

## ஜைநதரிசனமும் ஏனைய தரிசனங்களும்

இனி ஜைநசமயக் கோட்பாடுகளைக் கூறுமுன்னர் இதற்கும் மற்றத் தரிசனங்களுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறுவாம் :

ஹிந்து தத்துவ சாஸ்திரிகளால் போற்றப் பெற்று வந்த தரிசனங்களில் முக்கியமானவை ஆறு. அவையாவன : சாங்கியம், யோகம், நியாயம், வைசஷிகம், மீமாம்சம், வேதாந்தம். இவைகளை வைதிக தரிசனங்களென்றும் சாஸ்திரிகள் கூறுவர். இவையன்றி ஜைந, பௌத்த, சார்வாக தரிசனங்களென்ற மூன்றும் வேதபாகிய அல்லது, அவைதிக தரிசனங்களென வழங்கும். இவைகளின் உண்மைப் பொருளைப் பகுத்தறியாது சிலர் முன்னாறினையும் ஆஸ்திக தரிசனமென்றும், பின் மூன்றையும் நாஸ்திக தரிசனமென்றும் கூறுவர். இப்பாகுபாட்டிற்குச் சமய வேற்றுமையேயன்றி வேறு தகுந்த காரணமேற்படவில்லை.

யூதேய, மகம்மதிய, கிருஸ்துவ வேதங்களின் சிருஷ்டிவாதக் கொள்கையே ஆஸ்திக மதத்தின் முக்கிய பொருளெனக் கொண்டால்

வைதிக தரிசனங்களில் யாதொன்றனுக்கும் அப்பெயர் பொருந்ாது. ஏனெனில் சாங்கிய, யோக, மீமாம்ச, வேதாந்த தரிசனங்கள் சிருஷ்டி வாதத்தை முற்றும் கண்டித்தொழித்தலானும், நையாயிக, வைசேஷிக தரிசனங்களின்படி கடவுள் உலகத்தைப் படைப்பதற்கு முன், நித்தியமான பரமாணுத் திரள்களும் ஜீவராசிகளும் மூலப்பொருளாய்க் கிடத்தலானு மென்க.

சம்சாரம் அநித்தியமென்றும், அதைக் கடந்ததே மோக்ஷமென்றும், அதைப் பெறுவதற்கு வழியுண்டென்றுங் கொண்டு அவ்வழி நடப்பதே ஆஸ்திகத்தின் முக்கிய குணம். இக்குணம்பற்றி நோக்குழி, சார்வாக தரிசனமொன்றே நாஸ்திகமெனச் சொல்லற்பாலது. ஏனெனில் சார்வாக மதத்திற்குப் பிரத்தியக்ஷமொன்றே பிரமாணம். பரோக்ஷ வஸ்துக்கள் உண்மையல்ல. பரலோகத்தையடையுமாறு இகலோக சுகத்தை யனுபவியா தொழித்தல் நீரிற்றோற்றத்தைப் பெற நினைத்து வாயிலுள்ள மாம்சத்துண்டத்தை யிழந்த நரியின் செய்கை போன்றதாம். இவ்வாறு பரலோகத்தைப் பழித்து விஷய சுகத்தையே சுகமெனக் கருதிபொழுகும் சார்வாக மதத்தையன்றி ஏனைய தரிசனங்களை நாஸ்திகமெனப் பழிப்பது நிந்தைச் சொல்லாகும்.

## சாங்கிய தரிசனம்

சாங்கிய மதம் கபில ரிஷியாலாக்கப்பட்டது. வைதிக சமயத்திற்கு மாறுபட்டது. வேறு ஜீவனை ஹிம்சை செய்து யாகாதிகளை யியற்றுவது சம்சார துக்கத்தை யொழிக்கவும், மோக்ஷசுகத்தையடையவும் மார்க்கமாகாது; சம்சாரத்தில் மூன்றுவித துக்கமுண்டு; அவை: அத்தியாத்மிகம்-(தன்னாலானது), அதிபௌதிகம்-(இயற்கைப் பொருள்களாலானது), அதிதைவிகம் - (தேவதைகளாலானது) என்பனவாம். துக்கத் திரயத்தை யொழித்துப் பரமசுகம் பெறும் வழி தத்துவ ஞானமொன்றே. அறியப்படும் தத்துவங்கள் இருபத்தைந்து. இவற்றில் மூலதத்துவம் பிரக்கிருதி யெனப்படும். இதற்குப் பிரதானம் அவியக்தமென வேறு பெயர்களுமுள. சத்துவ, ரஜோ, தமோ குணங்கள் மூன்றும் சமாவஸ்தையாய்ப் பிரக்கிருதியில் பொருந்தி யிருக்கும். அவியக்தமென்ற பிரக்கிருதி நித்தியப் பொருள்; ஒருவராலாக்கப்பட்டதன்று. இதனினின்று முதல் புத்தியல்லது மஹானெனுந் தத்துவம் உண்டாயிற்று; புத்தியினின்று அகங்காரந் தோன்

றிற்று ; இதனினின்றும் பதினாறு கணங்கள் தோன்றின. மெய்யுணர்வு, நாவுணர்வு, நாற்றவுணர்வு, கண்ணுணர்வு, செவியுணர்வுகளாகிய வைந்து ஞானேந்திரியங்களென்ற அறிவுப் பொறிகளும், பாயு, உபஸ்தம், வசனம், கை, கால், ஆகிய கர்மேந்திரியங்களென்ற செய் பொறிகளைந்தும், மனமும் பஞ்சேந்திரியங்களா லுணரப்படும் ரூப, ரச, கந்த, ஸ்பரிச, சப்தம் ஆகிய ஐந்து தன் மாத்திரைகளுஞ் சேர்ந்து பதினாறு கணங்களாகும். ரூபத்தினின்று தேஜசும், ரசத்தினின்று நீரும், கந்தத்தினின்று பூமியும், சப்தத்தினின்று ஆகாசமும், ஸ்பரிசத்தினின்று வாயுவுமாகப் பஞ்ச பூதங்கள் உண்டாயின. இவ்வாறு மூலப் பிரக்கிருதியும், அதனினின்றுண்டான, புத்தி, அகங்காரம், ஞானேந்திரியம், கர்மேந்திரியம், தன் மாத்திரை, பஞ்ச பூதங்களுஞ் சேர்ந்து தத்துவம் இருபத்து நான்காம். பிரக்கிருதி அசேதன வஸ்துவானதால் அதனினின்றுண்டான மற்ற தத்துவங்களும் அசேதனமே. அவியக்தமான பிரதானம் அதிசூக்ஷ்மமானதால் புலன்களுக்கு மீறினது ; பிரத்தியக்ஷமாக அறியப்படாதது. பிரத்தியக்ஷமாகும் மற்றப் பொருள்கள் அதன் காரியமாதலாலும் காரியத்தைக் கொண்டு காரணமநுமானிக்கப் பெறுமாதலாலும், பிரக்கிருதி அநுமானத்தால் சித்தியாகும்.

இவையன்றி மற்றுமொரு முக்கிய தத்துவப் பொருளுண்டு ; அதாவது : நித்தியமாயும், சேதன ஸ்வரூபியாயும், செயலற்று அகர்த்தாவாயும், சுக துக்கமுண்ணும் போக்தாவாயும் விளங்கும் புருஷ தத்துவமே. அஃது எண்ணிலவாகையால் அனந்தமுமாம். பாகியாப்பியந்தர செயல்கள் யாவும் பிரக்கிருதி சம்பந்தமேயொழியப் புருஷனுடையவையன்று. புருஷனுக்கும் பிற பொருள்களுக்கு மிடையில் புத்தி இருமுகக் கண்ணாடியைப் போனின்று இருபக்கமும் பிரதிபிம்பிக்கிறது. இதனால் கேவலம் சேதன மயமான ஆன்மா, 'நான் சுகி, நான் துக்கீ, நான் ஞாதா (அறிவோன்) என உபசரிக்கின்றது.

இவ்வாறு அசேதன காரியங்களைத் தனதென்று கொள்வதினாலே ஆத்மனுக்கு அவிவேகத்தினால் துக்கமுண்டாகும். கண்ணுள்ள முடவன் ஒரு குருடன் முதுகிலேறி வழிகாட்டிச் செல்லுமாறு போல் செயலற்ற சேதன ஸ்வரூபியான புருஷன் சர்வ செயலுக்கும் காரணமான அசேதன பிரக்கிருதியைப் பற்றிச் சம்சாரத்திலுழலும். மோக்ஷ

மென்பது பிரக்கிருதியை விட்டு நீங்குவதே. 'பிரக்கிருதி வியோகோ மோக்ஷ:" என்பர் மேலோர்.

மூல தத்துவங்களாகிய பிரக்கிருதி புருஷரிரண்டும் ஒருவராலு மாக்கப்பட்டவையன்று. லோகம் பிரக்கிருதியின் காரியமாகையால் ஈஸ்வர சிருஷ்டியன்று.

சாங்கிய தரிசனத்தின்படி பிரமாணம் மூன்று ; அவை : பிரத்தியக்ஷம், அனுமானம், ஆப்தவசனம், அல்லது ஆகமம் என்பனவாம். ஈஸ்வரன் லோகத்திற்குக் காரணமாகான். எள்ளினுள் நெய்போல் அவ்யக்தத்தினுள் லோகம் சக்தியிலிருந்து வியாபித்ததால் அதன் காரியமே.

கபில மதம் நிரீஸ்வர சாங்கியமென்றும் வழங்கும். சமாவஸ்தையிலுள்ள முக்குணங்கள், யாது காரணம்பற்றி ஏற்றக்குறைவு அடைந்து லோகம் பரிணமிக்கக் காரணமாகின்றனவென்பது தெரியவில்லை. மேலும் அகுணனும், அகர்த்தாவுமான ஆத்மா அசேதன பிரக்கிருதி காரியமான சரீரச் செய்கையின் பலனை என் அநுபவிக்க வேண்டும்? தான் கர்த்தாவல்லாதபோது கர்ம பலனைப் புசிப்பது என்னை? சரீர அவயவங்களில் சிலவற்றைச் சிறப்புப்படுத்திக் கர்மேந்திரியமெனக் கருதுவது எங்ஙனம்? இவ்வித சந்தேகங்களுக்குப் போதுமான சமாதானம் கபில தரிசனத்தில் காணப்படவில்லை.

## பதஞ்சலியின் - யோகதரிசனம்

யோக தரிசனத்திற்கு - ஈஸ்வரனுள்ள சாங்கியமென மறுபெயருண்டு, பதஞ்சலி சாங்கிய தத்துவம் இருபத்தைந்துடன் ஈஸ்வர தத்துவமொன்று உண்டென்பதால். ஏனைய புருஷர்கள், பிரக்கிருதியிற் சிக்கிச் சம்சாரத்திலிருந்து பிறகு மோக்ஷமடைவதால், எப்பொழுதும் பிரக்கிருதிப்பற்றின்றியே நிற்கும் ஈஸ்வரனில் சிறிது தாழ்ந்தவராவர். பரம முக்தனாகிய ஈஸ்வரன் மற்ற ஆன்மாக்களுக்கு மோக்ஷ நாயகனாகும். மற்ற தத்துவங்களின் குணமும், உற்பத்தியும் கபில தரிசனத்திலுள்ள வாறேயாம்.

யோக தரிசனம், கபில தரிசனத்துடன் தத்துவப் பொருளால் ஒன்றுபட்டு நிற்க, மற்றதினின்றும் வேறெனக் கொள்வதேன்? யோக ஞான மட்டுமேயன்றி யோகாப்பியாசமும் மோக்ஷ காரணமென்று கொள்ளப்படுதலானும், மற்றந்த யோக முறையை விரிவாய்க் கூறுத

லானும் சித்தவிருத்தி நிரோதமே யோகம். அசேதனப் பிரக்கிருதியி லிருந்துண்டான புத்தி, அகங்காரம், இந்திரியம் முதலானவைகள் சுத்த சேதனனாகிய புருஷனைப்பற்றி அவனைச் சம்சாரத்திலழுத்துத லால், மோக்ஷமடைய வேண்டி அவைகளை விலக்கும் வழியே யோக மெனப்படும். சித்த விருத்தியானவையும் புத்தியின் தொழிலே. புத்தி எல்லா வஸ்துக்களையும் கண்ணாடி போல் பிரதிபிம்பித்து ஆத்மனுக் குக் காட்டுதலினின்றும் ஆத்மன் அவைகளைத் தனதென்றும், அவை களையறிவோனும், செய்வோனும் தானேயென்றும் நினைத்து மயங்குத லால் புறவஸ்துக்களின் வரவும், அவ்வரவுக்குக் காரணமான புத்தி யும் நீங்கின மாத்திரத்தில் ஆத்மா சுத்த சேதனனாய் மாசற நிற்பான். இதுவே பெறற்பாலது.

சித்த விருத்தியல்லது புத்தியின் தொழில்கள் ஐந்து வகை; அவை: பிரமாணங்கள், விபர்யயம், விகல்பம், நித்திரை, ஸ்மிருதி யென்பனவாம். பிரமாணங்களென்பன - பிரத்தியக்ஷம், அனுமானம், சப்தம். இவைகளால் பிறபொருள்களறியப்படுதலால் இவை புத்தி யின் தொழிலாகும். விபர்யயமென்பது, மேற்கூறிய பிரமாணங்கள், பிரமாணாபாசங்களாகிப் பொருளை உள்ளவாறுணராது மாறுபடக்கொள் வதே. விபர்யய ஞானமே அவித்யா, அஸ்மிதா, ராக, த்வேஷ, அபினிவேசமென்கிற கிலேச காரணமாகும். விகல்ப ஞானம், நித் திரை, ஸ்மிருதி ஆகிய இவைகளோடு முன்னிரண்டுஞ் சேர்ந்து சித்த விருத்தி ஐந்தாம்.

இவைகளைத் தடுத்தலிருவிதம்; அவை: அப்பியாசமும், வைராக் கியமல்லது அவாவொழித்தலுமாம். அப்பியாசமென்பது சித்தவிருத் தியை யொழிக்கும் முறையைச் செய்யப் பிரயத்தனப்படுதலும், அவ் வாறு அனுஷ்டித்தலுமாம். வைராக்கியமென்பது பிரத்தியக்ஷத்தி னாலும் பரோக்ஷத்தினாலு மறியப்படும் பொருள்களின் மேலுண்டாகும் அவாவை யொழித்து ஆத்மா தன் வயனாகி நிற்றலேயாம்; இதுவே சமாதியெனப்படும்.

சமாதியடையச் சாதனங்கள்: தபம், அத்தியயனம், ஈஸ்வரபக்தி என்பவையாம். இச்சாதனங்கள் சமாதிக்கு இடையூறு விளைப்பன வான கிலேசங்களை நீக்கும். கிலேசங்களாவன: அவித்யா, யான் எனது என வழங்கும் அஸ்மிதம, விஷயராகம், த்வேஷம், அபினிவேச மென் பனவாம். அவித்தை யென்பது அநித்தியத்தை நித்தியமாகவும், அசுத்

தத்தைச் சுத்தமாகவும், துக்கத்தைச் சுகமாகவும், ஆத்மனுக்குப் பேதமான வஸ்துவை ஆத்மனெனப் பாவிப்பதுமாம். அஸ்மிதமென்பது புத்திசரீராதிகளைத் தன்னோடு ஒன்றுபடக்கொண்டு தானென வெண்ணுதல். ராகமென்பது சுகத்தை விரும்புதல். த்வேஷமென்பது துக்கத்தை வெறுத்தல். அபிநிவேசமென்பது ஜீவனுக்குச் சம்சாரத்திலுள்ள ருசியும் சம்சார ஊக்கமுமாம். இவ்வித கிலேசங்களினால் மோதப்பட்ட சித்தம் கர்மத்தினோடு கட்டுண்டு கதிக்குக்காரணமாகும். கர்மத்தின் மூலமிருக்குமளவும் ஜன்மமும், ஆயுவும், சுகதுக்காதிகளும் உண்டாகும். ஆகையால் கிலேசங்களினின்றும் ஆன்மாவைத் தனிப்படுத்தி விஷயப்பற்றினின்றும் விடுவித்துப் பரிசுத்தனாகும்படிச் செய்தல் கடமை.

இனியோகத்தின் அஷ்டாங்கங்களைக் கூறுதும்: யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், இந்திரிய தமனம், ஏகாக்கிரசித்தம், தியானம், சமாதி என யோக அங்கங்கள் எட்டாம். இவற்றில் யமமென்பது, அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரம்மசரியம், அபரிக்கிரகமென ஐந்து வகைப்படும். இவ்வைந்துமே குண, தேச, காலங்களால் வரம்பிடப்படாவிடின் ஐந்து மஹா விரதம் எனப்படும். பரிசுத்தம், திருப்தி, தபம், அத்தியயனம், ஈஸ்வரபக்தி யென நியமங்கள் ஐந்தாம். மேற்கூறிய எட்டு அங்கங்கள் ஒன்றின் பின்னொன்றாக அனுசரிக்கப்படும்.

இவ்வித யோக சாதனங்களை யனுஷ்டித்து வரும்போது விபூதியென்ற அநேக அதிசய சக்திகளுண்டாகும். அவையாவன: அணுமாத்திர முள்ளதாகச் சரீரம் சுருங்குதல், மிகப்பெரிதாக விரிதல், கண்ணுக்குப் புலப்படாதிருத்தல், ஆகாயத்தில் செல்லுதல், எவ்விததடையுமின்றிக் கடின வஸ்துக்களிலும் நுழைந்துபோதல், தூரத்திலுள்ள வஸ்துக்களையும், முன்னுண்டானவைகளையும், பின்னுண்டாகும் விஷயங்களையும் அறிதல் முதலான அபூர்வ சக்திகளே. இவ்வித விபூதிகளைப் பெற்றதனால் சந்தோஷமடைந்து மனந்தளராது யோகத்தில் முன்னேற்றமடைதல் வேண்டும். பிறகு சர்வசங்க விமுக்தனாகி ஆத்மன் தன்வயமாய் நிற்கும். இதுவே மோக்ஷமெனப்படும்.

இவ்வாறு சாங்கிய தரிசன சம்பந்தமான யோகம் கூறப்பட்டது. இனி நையாயிக தரிசனம் இப்பெற்றிய தென்பதைக் கூறுதும்:

## நியாய தரிசனம்

நியாய தரிசனம் கௌதமரிஷியால் உபதேசிக்கப்பட்டது. இவருக்கு அக்ஷபாதரென்று மறுபெயருண்டு. ஆகையால் நியாய தரிசனத்தை அக்ஷபாத மதமென்றும் கூறுவர் அறிஞர். கௌதமர் என்ற பெயர் வேதங்களிலும் உபநிஷதங்களிலும் பல விடங்களில் காணப்படுகின்றது. எமனிடஞ்சென்று ஆத்மவித்தை கற்றுவந்த நசிகேதஸ் என்போனுக்குக் கௌதமனென்று மறுபெயருண்டு. அஜாத சத்ருவென்னும் அரசனிடம் சென்று உபநிஷத ரஹஸியம் வேண்டிய ஆருணேயனும் கௌதமனெனப்பட்டான். இந்திய பண்டை நாகரிக சூடாமணியும், பௌத்தமத நாயகனுமான சாக்கிய முனியும் கௌதமரெனும் பெயரினனே. இவர் காலத்தவரும் இருபத்து நான்காவது ஜினருமான ஸ்ரீவர்த்தமான ஸ்வாமியின் முக்கிய சிஷ்யரும் முதல் கணதராருமாயிருந்தவருக்கும் கௌதமரென்ற பெயருளது.

மற்றும் இந்திரனைச் சபித்தவரும் ஸ்ரீராமரின் பாததூளால் ரக்ஷிக்கப்பட்ட அகலிகையின் பர்த்தாவுமான ஒரு கௌதம ரிஷி ராமாயணத்தில் கூறப்பட்டுள்ளார். இந்தக் கௌதமரே அக்ஷபாதரென்றும் நியாயதரிசன கர்த்தாவென்றும அறிஞர் கூறுவர்.

நியாய தரிசனம் முக்கியமாய்த் தர்க்க சாஸ்திரத்தொகையேயாம். ஆகிலும், சம்சாரத்தை யொழித்து மோக்ஷத்தைப் பெறும் வழி தத்துவஞானமே. மோக்ஷ காரணமான தத்துவ ஞானத்தின் நிலையும், அதைப்பெறும் வழியும் கூறப்போந்துழித் தர்க்கமுறையும் நிலையும் கூறினர்.

நியாய தரிசனத்துள் தத்துவங்கள் பதினாறும். அவை: பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோஜம், திருஷ்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம், வாதம், ஜல்பம், விதண்டம், ஹேதுவாபாஸம், சலம், ஜாதி, நிக்கிரஹஸ்தான மெனப்படும்.

பிரமாண மென்பது யாதெனில் நல்லறிவு பெறும்வழி. பிரமிதி யென்பது ஞானம் அல்லது அறிவு. அறியப்படும் பொருள் பிரமேயமெனப்படும். அறிவோன் பிரமாதாவாகும். பிரமாணங்கள் அல்லது ஞானம் பெறுமுறைகள் அந்தந்தத் தரிசனங்களின் கொள்கைபோல் வேறு வேறும். கபில, பதஞ்சலி தரிசனங்களின்படி பிரத்தியக்ஷம், அனுமானம், ஆகமமெனப் பிரமாணங்கள் மூன்றும். சார்வாக தரிசனத்

திற்குப் பிரத்தியக்ஷமொன்றேயாம். நையாயிக மதத்தின் பிரமாணங்கள் நான்கு: அவை: பிரத்தியக்ஷம், அனுமானம், உபமானம், சப்தமெனப்படும். பிரத்தியக்ஷத்தின் லக்ஷணம் அக்ஷபாத சூத்திரத்தில் பின்வருமாறு கூறப்பட்டுளது. "இந்திரியங்களோடு பொருள்கள் சம்பந்தப்படுவதா லுண்டான ஞானமே பிரத்தியக்ஷமாம். இது பொருள்படும் சொல்லைக் கொண்டுணரும் பொருளுணர்ச்சிக்கு வேறான தால் அவியபதேசமாகும்; உருவெளித்தோற்ற முதலான போலிப் பிரத்தியக்ஷத்திற்கு வேறாகி உண்மைப் பொருளைக் காட்டுவதால் அவியபசாரியாம்." வஸ்துவை உள்ளவாறு உணராது சிப்பியை வெள்ளியென்றும், கண்ணாடித் துண்டை மணியென்றும் கொள்வது வியபசார ஞானமாம். பிரத்தியக்ஷம் இதில் வேறாகிப் பொருளை உள்ளபடி உணர்த்தலால் அவியபசாரி யெனப்பட்டது. சம்சய ஞானத்தைப் போல் பல பொருளைக் குறிக்காது, பிரத்தியக்ஷம் தனித்தனியாய்ப் பொருளைப் பகுத்தறிதலால் அதனை, 'வியவஸாயாத்மகம்' என்றார் பெரியோர். பொருள்களைத் தனித்தனியாக்கும் விசேஷ குணம் வியவஸாய மெனப்படும். ஆகையால் பிரத்தியக்ஷம், வியவஸாய ஞானம் அல்லது பகுத்தறிவெனப்படும்.

சிலர், பிரத்தியக்ஷம் அயோகிப் பிரத்தியக்ஷமென்றும், யோகிப் பிரத்தியக்ஷமென்றும், இருவகையா மென்பர். நம் போன்ற சாமான்யர் புலன்களாலுணர்தல் அயோகிப் பிரத்தியக்ஷமாம். தபஸிகள் யோகஞ்செய்து புலனுக்கு மீறின வஸ்துக்களை யோக சக்தியாலுணர்தல் யோகிப் பிரத்தியக்ஷமாம்.

இனி, அனுமான லக்ஷணம் சொல்வாம்: அனுமானமென்பது பிரத்தியக்ஷத்தைப் பூர்வமாவுடையது. பிரத்தியக்ஷமின்றி அனுமானம் தோன்றாதாகலின், "அனுமானம் தத்பூர்வகம்"—எனப்பட்டது. பிரத்தியக்ஷத்தை முன்னாகப் பெற்றுத் தான் அதன்பின் தோன்றி வரும் அனுமான ஞானம் மூன்று வகைப்படும். அவை: பூர்வவத், சேஷவத், சாமான்யதோ திருஷ்டம் என்பனவாம். காரணத்தைப் பார்த்து அதை ஆதாரமாகக் கொண்டு காரியத்தை அனுமானித்தல் பூர்வவத் எனப்படும்; முன் தோன்றும் காரணத்தால் பின்வரும் காரியமுணரப்படும்; கரியமேகத்தைக் கண்டு மழை பெய்யுமென்பது போலும். காரியத்தைக் கண்டு காரணத்தை யனுமானித்தல் சேஷவத் - எனப்படும்; பின்வரும் காரியத்தைப் பார்த்தலால் அதன் முன்

ேய காரணம் உணரப்படும் ; அது, நதியின் பிரவாகத்தைப் பார்த்து மேலே மழை பெய்தது என்பது போலும். காரண காரிய சம்பந்த மில்லாமலே ஒரு விஷயத்தைக் கொண்டு ஒற்றுமையுள்ள வேறு விஷ யத்தையறிதல் சாமான்யதோ திருஷ்ட மெனப்படும் ; ஓரிடத்திலுள்ள மனிதனை வேறோரிடத்தில் பார்க்கும்போது அவன் இவ்விடத்திற்குப் பிரயாணஞ் செய்துள்ளான் என்பது நமக்கு அநுபவ ஞானம் ; ஓரிடத் திலிருந்த சூரியன் மற்றோரிடத்தில் காணப்பட்டால் இடம்மாறுதல் செல்கையால் எனக்கொள்ளுதல் போல் இது கொள்ளப்படும். மனித னுக்கும் சூரியனுக்கும் தேசாந்தரமடைதல் கதிபூர்வகம் - சாமான்ய மாதலால் இது சாமான்யதோதிருஷ்டமாகும்.

பிரசித்தமான வஸ்துவுக்கும், அப்பிரசித்தமான வஸ்துவுக்கு முள்ள குண ஒற்றுமையைப்பற்றி, முன்னதினால் பின்னதை அறிதல் உபமானமாகும் ; அதாவது : நமக்குத் தெரிந்த பசுவைக்காட்டி, நமக் குத் தெரியாத காட்டுப்பசுவும் இது போலாம், என்பது உபமான ஞானம்.

சப்தப்பிரமாண மென்பது ஆப்தனு லுபதேசிக்கப்பட்ட ஆகம மாகும். இவ்விதம் நையாயிக மதத்தில் பிரமாணம் நான்கு வகைப் படும்.

இனிப் பிரமேய தத்துவம் கூறப்படும். பிரமாணங்களாலறியப் படும் பொருளே பிரமேயமாகும். அவை : ஆத்மா, தேகம், புத்தி, இந்திரியம் முதலியவையாம். நையாயிக மதத்துள் பிரமேயம் அல் லது பொருள்கள் ஆத்மா, சரீரம், இந்திரியம், அர்த்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோஷம், பிரேத்தியபாவம், பலம், துக்கம், அபவர்க்க மெனப் பன்னிருவகையாம். இவற்றுள் சரீராதி துக்கபர்யந்தம் ஹேயம் ; அபவர்க்கமுபாதேயம் ; ஆத்மா சிறிது ஹேயமும் சிறிது உபதேயமுமாம். அது சுக துக்காதிகளை அனுபவித்தலால் ஹேயமும், அவற்றை விடுதலால் உபாதேயமுமாம். இச்சை, வெறுப்பு, பிரயத் னம், சுகம், துக்கம், ஞானம் முதலியவற்றிற்கு ஆஸ்ரயமாயிருப்பது ஆத்மா. இன்னுமது சேதனத்துவம், கர்த்திருத்துவம், சர்வகதத்துவம் முதலிய குணங்கள் பொருந்தியது. இது தங்குமிடம் சரீரம். கண் முதலியவை பஞ்சேந்திரியங்கள். அவற்றிற்கு விஷயமாகும் ரூபாதிகள் பொருள்கள். கந்தம், ரசம், ரூபம், ஸ்பரிசம் ஆகிய இந்நான்கும் பிரத்வி குணங்கள். ரூபம், ரஸம், ஸ்பரிசம் ஆகிய இம்மூன்றும் ஜலத்தின்

குணங்கள். ரூபமும், ஸ்பரிசமும் தேஜஸின் குணமாம். ஸ்பரிச மட்டுமே வாயுவின் குணம். சப்தம் ஆகாசத்தின் குணமாகும். புத்தி யென்பது இந்திரிய விஷயங்களாலாகிய ஞானம். இது க்ஷணிகமாயும், போகஸ்வபாவமாயும், சம்சார காரணமாயுமிருத்தலால் ஹேயமாம். அந்தக் கரணம் - மனம். இது அனுமானத்தாலறியப்படும். இது அணுவளவுள்ளதாயும், நித்தியமாயும், சீக்கிரம் செல்லுங்குணமுள்ள தாயுமிருப்பது. மன வசன காய வியாபாரம் பிரவிருத்தி யெனப்படும். ராகம், துவேஷம், மோகம் ஆகிய இம்மூன்றும் தோஷமென்பனவாம். இவற்றாலானதே சம்சாரம். சரீர இந்திரியாதிகளால் கட்டப்பட்ட பழமையான யாக்கையை விட்டுப் புதிதான யாக்கையை யடைதல் பிரேத்திய பாவமாம். இதுவே சம்சாரமெனப்படும். பிரவிருத்தியா லுண்டாகும். பலம் சுக துக்கம் பீடா சந்தாபம் துக்கமெனப்படும். பிரவிருத்தியின் பலனாகிய சுகமும் துக்கமின்றி ஆகாதாதலால் அது வும் துக்கமேயாகும். அத்தியந்தம் துக்கத்தை விடுதலே அபவர்க்க மல்லது மோக்ஷமாகும். துக்கத்தை ஜெயிக்கவேண்டில் சுகத்தையும் ஜெயித்தல்வேண்டும். ஆகையால் அபவர்க்கமென்பது பிறப்பு, மூப்பு, சாக்காடு ஒழிந்ததேயாம். இதுவே பரமமென்றும் புருஷார்த்தமென் றும் கூறப்படும். இதுவோ அதுவோ வென்று மயங்குதல் சம்சய மாம். எதைப் பெறுமாறு முயற்சியுண்டாகிறதோ அது பிரயோஜ னம். வாதி பிரதிவாதிகளிருவரும் ஏற்றுக்கொள்ளும்படியான விஷ யத்தை எடுத்துக்காட்டல் திருஷ்டாந்த மெனப்படும். இஃது இனிக் கூறப்படும் அவயவங்களிலொன்றானாலும் ஈங்குத் தனியே கூறப்பட் டது. சித்தாந்தமென்பது கொள்கை. பிரமாணங்களால் சாதிக்கப் பெற்றது.

இனி அவயவங்கள் கூறப்படும்: இவை அனுமானத்தின் அங்கங் களேயாம். அவயவங்கள் ஐந்து வகைப்படும். அவை: பிரதிக்ஞா, ஹேது, திருஷ்டாந்தம், உபநயம், நிகமம் என்பவையாம். பிரதிக்ஞா வென்பதுக்கு பக்ஷமென வேறு பெயருமுண்டு. அது, 'அங்கே நெருப் புளது,' என்பது போன்றது. ஹேது அல்லது சாதனம் என்பது காரணத்தைக் கூறும் வசனம்; அது 'புகையிருப்பதால்' என்பது போன்றது. திருஷ்டாந்த மென்பது உதாரணம்; 'சமயலிடம்போல' என்பது போன்றது. உபநயமென்பது காரணத்தை உபஸம்ஹரித் துக் கூறுதலாம். அது 'இங்கும் அவ்வாறே புகையுளது' என்பது

போன்றது. நிகமம் என்பது சாத்தியமாகிய வசனத்தை உறுதிப் படுத்துதலாம். 'இங்குப் புகையுளதால் நெருப்புமுண்டு'—என்பது போன்றது.

தர்க்க தத்துவமென்பது சந்தேக மொழிக்கும் பொருட்டு மற்றும் ஆராய்தலாம். காணப்படும் வஸ்து தம்பமா மனிதனா என்று மயங்கிய வழி மற்றும் அதைக் கவனித்துப்பார்த்து, அஃது அசையா திருத்தல், அதில் பக்ஷிகள் தங்குதல், கொடிகள் அதன் மேல் படர்ந் திருத்தல் முதலிய குணங்களைக் கண்டறிதல் தர்க்கமாகும்.

நிர்ணய தத்துவமென்பது அவ்வாறு தர்க்கித்தறிந்த குணங்களை ஆதாரமாகக் கொண்டு புருஷனென்றாவது, தம்பமென்றாவது நிச்சயித் தலாம். ஆசாரியனும் சிஷ்யனும் அப்பியாசத்தின் பொருட்டுப் பக்ஷம் பிரதி பக்ஷம் கொண்டு தம் தம் மதத்தைச் சாதிப்பதே வாதமெனப் படும். ஜெயிக்கும் பொருட்டு வேறொருவரோடு தர்க்கித்துத் தன் சித்தாந்தத்தை ஸ்தாபிப்பதும் வாதமாகும். அவ்வாறு வாதிக்கும் போது தகாதமுறைகளைக் கொண்டு குதர்க்கம் செய்தல் குற்றமாகும். தூஷணமான வாதத்தின் குற்றங்கள் பலவகைப்படும்; அவை: சலம், ஜாதி, ஜல்பம், விதண்டம், ஹேத்வாபாசம், நிக்கிரஹ ஸ்தானம் என் பனவாம். இவற்றை விரிவாய்ச் சொல்ல வேண்டியதில்லை.

இவ்வாறு தர்க்க முறைகளையும் குற்றங்களையும் முக்கியமாகக் கொண்ட நையாயிக மதத்துள் எல்லாப் பொருள்களும் பிரமேயமென்ற தத்துவத்துள் அடக்கிக் கூறப்பெற்றன. பல பொருள்களமைந்த லோகமும், அதனுள் நிற்கும் ஜீவராசிகளும் ஆக்கப்பட்டனவாகத் தோன்றுகின்றன. ஆகையால் இவற்றைச் சிருஷ்டித்த ஈஸ்வரன் கர்த்தாவாம். ஆக்கலும் அழித்தலுமாகிய இருதொழிலும் பொருந் தியவன். பரமாணுத் திரள்களினின்று இவ்வுலகத்தை அமைத்தலும் ஜீவராசிக்குத் தொழில் காரணமாகச் சரீரத்தை ஆக்கியளித்தலும் சிருஷ்டியெனப்படும். சரீரமும், உலகமும் அமைப்பழிந்து சிதறி மூலபரமாணுக்களாக மறைந்தொழிதலும், ஜீவராசிகள் தொழிலற்று மயங்கிக் கிடத்தலுமே சம்ஹாரமாகும். இவ்வாறு மாறி மாறித் தோன்றும் ஆக்கல் அழித்தல் இரண்டிற்கும் உபாதான காரணமான அணுத்திரள்களும் ஜீவராசிகளும் நித்திய வஸ்துக்களாம்.

ம் சில கொள்கைகள் நையாயிக மதத்திற்கும் வைசேஷிக மதத்திற்கும் பொதுவாக விருக்கின்றமையால் அவற்றை ஒருங்கே கூறுவாம்: இனி வைசேஷிக தரிசனம் கூறப்படும்.

## வைசேஷிக மதம்

விசேஷமென்ற தத்துவப்பொருளை முக்கியமாயுடையபதாதலால் இதற்கு வைசேஷிக தரிசனமெனப் பெயராயிற்று. இதற்குக் கணாத தரிசனம், ஔலூக்கிய தரிசனமென்ற வேறு பெயர்களுமுண்டு. கணாதரிஷியால் சொல்லப்பட்டது கணாததரிசனம். கணாதா என்ற வடமொழி நொய்புண்போன் எனப் பொருள்படும். இம்முனி கபோத வடிவங்கொண்டு வழியிற் கிடக்கும தானிய துண்டங்களைத் தின்றாராதலால் கணாதர் எனப் பெயர் வந்ததாக ஒரு கதையுண்டு. சிவன் உலூக ரூபமெடுத்துக்கொண்டு அம்முனிக்கு இந்தத் தரிசனத்தைப் போதித்ததால் இதற்கு ஔலூக்கிய தரிசனமென்ற நாமம் வந்ததாகச் சிலர் கூறுவர்.

தேவதா விஷயத்தில் இதற்கும் நையாயிக தரிசனத்திற்கும் முற்றும் ஒற்றுமையுண்டு. சிருஷ்டி சம்ஹார கர்த்தாவான ஈஸ்வரனை தெய்வமாம். தத்துவ விஷயங்களில் சில வேற்றுமைகள் உண்டு. அவற்றைக் கூறுதும்: வைசேஷிக மதத்தின்படி தத்துவம் ஆறும். அவை திரவியம், குணம், கர்மம், சாமான்யம், விசேஷம், சமவாயமென்பனவையாகும். இவ்வாறு பதார்த்தங்களுள் சில நித்தியமும் சில அநித்தியமும் ஆம். இம்மதத்தினர் சிலர் அபாவமென்ற ஏழாவது பதார்த்தமொன்று உண்டென்பர்.

இந்த ஆறு பதார்த்தங்களில் திரவியமென்பது ஒன்பது வகைப்படும். பூமி, ஜலம், அக்கினி, வாயு, அந்தரிக்ஷம் அல்லது ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் என திரவியங்கள் ஒன்பதாம். பூமி என்பது கடின குணமுள்ள மண், கல், மரம் முதலியவற்றைக் குறிக்கும். ஜலம், ஆறு, கடல் முதலியவற்றைக் குறிக்கும். தேஜஸ் என்பது அக்கினியாம். அது நால்வகைப்படும்: கட்டையெரித்துண்டாம் அக்கினியை பௌமம் என்றும், சூரிய நக்ஷத்திராதிகளாலுண்டாகும் ஒளிக்கு திவ்வியமென்றும், உண்ணும் உணவை ஜீர்ணமாக்கும் அக்கினிக்கு ஔதர்யமென்றும், பொன் முதலிய பொருள்களில் இயற்கையாயுள்ள ஒளிக்கு ஆகாரஜம் என்றும் கூறப்பட்டு அக்கினி நால்வகை

யாம். அந்தரிக்ஷம் என்பது ஆகாசம். இந்த திரவியம் ஏகமாயும், நித்தியமாயும், அமூர்த்தமாயும், சர்வவியாபியாயுமுள்ளது. காலத்திரவியமென்பது, முன்பு, பின்பு, சமகாலம், வேறு காலம், நெடுங்காலம், சீக்கிரம் முதலிய பாகுபாட்டிற்குக் காரணமாயுள்ளது. இதுவும் ஏகமும், நித்தியமும், அமூர்த்தமும், சர்வவியாபியுமானதே. திசை என்னும் திரவியமும் அவ்வாறே. மூர்த்தத் திரவியங்களை ஆதாரமாகக் கொண்டே கிழக்கு, மேற்கு என்ற திசை வேற்றுமைகள் உண்டாகின்றன. ஆத்மா வென்பது - ஜீவன். இது அநேகமாயும், நித்தியமாயும், அமூர்த்தமாயும், விபுவாயுமுள்ளது. மனோ திரவியமென்பது சித்தம். இஃது அணுவளவுள்ளதாயும், அமூர்த்தமாயும், அநேகமாயும், சீக்கிரம் சஞ்சாரம் செய்வதாயுமுள்ளது. இது தனித்தனி சரீரத்துக்கும் வேறு வேறாயது. பூமி முதல் நான்கு திரவியங்கள் நித்தியா நித்திய குணமுள்ளன. இவற்றுக்குக் காரணமாயுள்ளதும், தான் அகாரணமானதான பரமாணு ரூபத்தால் நித்தியமும், பரமாணுவின் கார்யமாகிய ஸ்கந்தங்களை அபேக்ஷித்து அநித்தியமும் ஆகும். ஆகாச முதலாக மற்ற திரவியங்கள் நித்தியமேயாம் - உத்பத்தியில்லாமையால்.

குணங்கள் இருபத்தைந்து விதமானவை. அவை: ஸ்பரிசம், ரஸம், ரூபம், கந்தம், சப்தம், சங்கியா, அல்லது எண், விபாகம், சம்யோகம், பரிமாணம், பிருதக்த்துவம், பரம், அபரம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, தர்மம், அதர்மம், பிரயத்தனம், சம்ஸ்காரம், துவேஷம், ஸ்நேஹம், குருத்வம், திரவத்துவம், வேகம் என்பவையாம். ஸ்பரிசமென்பது பூமி, ஜலம், அக்கினி, காற்று இவற்றின் குணமாம். ரஸமென்பது பிருதிவி ஜலமிவற்றின் ஸ்வபாவமாம். ரூபம் - பிருதிவி, ஜலம், அக்கினி இவற்றின் குணமாம். கந்தம் பிருதிவியின் குணமாம். சப்தம் ஆகாச குணமாகும். சங்கியா வென்பது ஒன்று முதலாகிய எண் லக்ஷணம். சேர்ந்திருந்து வேறுப்பிரிதல் விபாகம். வேறுயிருந்து சேர்தல் சம்யோகம். அளவைக்குக் காரணமாயுள்ளது பரிமாணம். பரிமாணமென்பது நான்கு வகைப்படும்; அவை: பெரிது, (மகத்), சிறிது, (அணு), நெடில், (தீர்க்கம்), குறில் (ஹ்ரஸ்வம்) என்பவையாம். இவற்றுள் மகத் நித்தியம் அநித்தியமென இருவிதமாம். நித்தியமாவது ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா - இவை பரம மகத்துவமுடையவை. அநித்திய மகத்துவமானவை, இரண்டு அணு கூடிய ஸ்கந்தம் முதலானவையாம். அணுத்துவமும் அவ்வாறே நித்தியா

நித்தியபேதமாம். ஒன்று சேர்ந்திருந்தும் தன் தன் குணத்தால் வேறாய் நிற்றல் பிரதக் குணமாம். பரம் அபரம் என்பவை முன் பின் என்ற குணங்களாம். இவை கால சம்பந்தமாயும் இடசம்பந்தமாயு முள்ளன.

புத்தியென்பது ஞானத்திற்கு வேறானவற்றைக் கிரகிக்கும்குணம். இது வித்தியா அவித்தியாவென இருவிதம். இவற்றுள் அவித்தியாவென்பது சம்சயம், விபர்யயம், அனத்யவசாயம், ஸ்வப்னமென நாலு வகையாம். வித்தியா வென்பதும் நான்கு விதமாம்; அவை: பிரத்தியக்ஷம், அனுமானம், ஸ்மிருதி, ஆர்ஷமென்பனவாகும். சுகம், துக்கம், இச்சை ஆகியவை எளிதில் விளங்கும். தர்மமென்பது புருஷனுடைய குணமாம். சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டுள்ள முறைகளின்படி தன்தன் வர்ணாச்ரமத் தொழில்களைப் பொருந்தி நடத்தல் தர்மமாம். அவ்வாறன்றித் தவறி நடத்தல் அதர்மமாம். பிரயத்னமென்பது உத்சாகம், முயற்சியாம். சம்ஸ்கார மிருவிதம்; அவை: பாவனை, ஸ்திதி ஸ்தாபனமென்பனவாம். முன்னது ஆத்மகுணம்; ஞானத்தாலுண்டானது. பின்னது மூர்த்தத் திரவியங்களின் குணமாம். முன்னிருந்த ஸ்திதிபோல் நிற்பது சம்ஸ்கார குணத்தாலாம். இதற்கே ஸ்திதி ஸ்தாபகமென்று பெயர். த்வேஷமென்பது வெறுப்பு. ஸ்நேகமென்பது ஒட்டுந்தன்மை; அது ஜலதைலாதிகளின் முக்கிய குணமாம். குருத்துவம் பளுவுள்ள தன்மை. திரவத்துவம் ஒழுகுந்தன்மை. திரவத்துவ மிருவகை; அவை: ஸஹஜம், நைமித்திகம். ஜலம் ஸஹஜதிரவத் தன்மையுடையது. கடினமாயிருந்து உருக்கப் பெற்றவை நைமித்திக திரவத் தன்மையுள்ளன. அவை உஷ்ணத்தால் உருக்கப்பட்ட பொன்போன்றனவாம். வேகமென்பது பூமி முதலான திரவியங்களிலும், மனதிலும், மற்ற மூர்த்த வஸ்துக்களிலும் உண்டாகும் செல்கைக் குணத்தின் விசேஷமாம். இவ்வாறு குணங்கள் இருபத்தைந்தாம்.

இவற்றுள் சில மூர்த்தகுணமாம். சில ஆத்மகுணமாம். சில இரண்டின் குணமாம்.

உயரக்கிளம்புதல், விழுதல், சுருங்கல், விரிதல், செல்லுதல் எனக் கர்மங்கள் ஐந்து வகைப்படும்.

இனிச் சாமான்ய லக்ஷணம் சொல்லப்படும். பரம் அபரம் எனச் சாமான்ய மிருவிதம். பர சாமான்யத்திற்குச் சத்தா சாமான்யமென வேறு பெயருண்டு. 'வஸ்து உண்டு' என்று அறியும் ஞானத்திற்

துக் காரணமானது எதுவோ அது சத்தா சாமான்ய மெனப்படும். திரவியம், குணம், கர்மம் இம்மூன்றினுக்கும் பொதுவகையாயுள்ளதால் அஸ்தித்துவத்தைச் சாமான்யமென்றார். அபர சாமான்யமென்பது திரவியங்களுக்கு மட்டும் தமக்குள்ள பொதுத்தன்மையாம். அவ்வாறே குணங்களுக்குள்ளும், கர்மங்களுக்குள்ளு மிருக்கும் பொதுவகைக்கு அபர சாமான்யமென்ற பெயர் பொருந்தும். திரவியத் தன்மை, குணத்தன்மை, கர்மத்தன்மை இவையே அபர சாமான்யமாம். திரவியத் தன்மையைப்பற்றியே 'இது திரவியம்' என்ற ஞானமுண்டாகிறது. அவ்விதமே, குணத்தன்மை காரணமாக 'இது குணம்' என்றும், கர்மத்தன்மை காரணமாக 'இது கர்மம்' என்றும் அறியப்பெறும்.

திரவியம், குணம், கர்மம் இம்மூன்றும் தம் தம்மிடமுள்ள ஒற்றுமை மாத்திரமேயன்றி ஒன்றிற்கொன்று ஜாதிவேற்றுமையுடையன. ஜாதிவேற்றுமைக்கே விசேஷமெனப் பெயர். அபர சாமான்யங்கள் தமக்குள் பொதுவாயும், பிறவற்றில் வேறாயுமிருப்பதால், சாமான்யம், விசேஷமென இருபெயரும் பொருந்தியுள.

கடம், படம் இவற்றின் வேற்றுமைக்குக் காரணமான சிறப்புத் தன்மை - வியவ்ஹாரவழியால் விசேஷமெனப்படும். ஆனால் வைசேஷிக தரிசனத்தில் விசேஷமெனப்படுவன வேறு. இங்கு நிசசயமாயுள்ள தத்துவ விருத்தியே விசேஷமெனக் கூறப்பட்டது. நித்திய திரவிய மென்பவை உத்பத்தி விநாச மற்ற, பரமாணு, ஆகாசம், காலம், திக், ஆத்மா, மனம், என்பவாம். உலோக உத்பத்தி, விநாச காலங்களில் உளவாகையால் அணுக்களுக்கும், சம்சாரபர்யந்த மிருப்பனவாகையால், ஆன்மாவுக்கும், மனசுக்கும் அந்திய விசேஷமென்ற பெயர் வழங்கப்படும். எப்படி நாம் 'இந்தப் பசு, வெளுப்பு, உயரமானது' என்று இந்திரிய நிமித்தமாக உணருகிறோமோ அவ்வாறே யோகிகள் வேறு உபகரணங்கள் நிமித்தமன்றியே சாக்ஷாத் மேற்கூறப்பட்ட அந்திய விசேஷங்களைக் கண்டறிவர்.

யாதொன்று அயுதசித்தங்களாயும் ஆதார ஆதேய பூதங்களாயுமுள்ளவற்றின் சம்பந்தமாயுள்ளதோ அது அறிதற் காரணமாயுமிருக்கிறது. அதுவே சமவாயமெனப்படும். அயுதசித்தம் என்பது வேறுபடுத்தக்கூடாத சேர்க்கை. அது நூலினின்றும் வஸ்திரம் வேறாக்கப்படாதது போன்றது. ஆதாரமென்பது ஆச்ரயமல்லது இடம். ஆதேயமென்பது அவ்விடத்தில் பொருந்தியுள்ளது. திரவியம் ஆதா

ரம், குணம், ஆதேயமாம். இவ்விரண்டும் வேறு வேறாயிருந்தும் பிரிக்கப்படாத ஒற்றுமையுடையன. இந்தச் சம்பந்தமே ஞானகாரண மாயுளது. 'இங்கு நூலினால் வஸ்திரமானது; வஸ்திரத்தில் குண முளது; திரவிய குண கர்மங்களில் சத்தா அல்லது அஸ்தித்துவ முளது; திரவியத்தில் திரவியத்தன்மையும், குணத்தில் குணத் தன்மையும், கர்மங்களில் கர்மத்தன்மையுமுள' என்ற இவ்வாறான ஞானங்களுக்குக் காரணமானதால் அது 'பிரத்திய ஹேது' வெனப் பட்டது. இரண்டு பொருள்களின் பிரிக்கவியலாத சேர்க்கையே சம வாய பதார்த்தமாம். இந்தச் சம்பந்தம் நூலுக்கும் வஸ்திரத்திற்கும், திரவியத்திற்கும் குணத்திற்கும், திரவிய, குண, கர்மங்களுக்கும், அதனதன் தன்மைக்கும், திரவியத்திற்கும், அந்திய விசேஷங்களுக் கும் உள்ள கூட்டுறவேயாம். இந்தச் சமவாயம் ஏகமாயும், நித்திய மாயும், சர்வவியாபியாயுமுளது.

வைசேஷிக மதத்துள் பிரமாணம் பிரத்தியக்ஷம், அனுமானமென இருவிதம்.—பிரத்தியக்ஷமும் இருவகைப்படும். இந்திரிய மூலத்தா லானது ஐந்திரியம்; யோகத்தாலானது யோகஜம். ஐந்திரிய பிரத்தி யக்ஷம் மற்றும் இருவிதம்: சாமான்யமாகப் பொருளைக் காணல் நிர் விகல்பகம்; விசேஷ குணத்துடன் அறிதல் சவிகல்பகமாம். யோகஜப் பிரத்தியக்ஷமும் யுக்தம், வியுக்தமென இருவகையாகும். இந்திரியங் களுக்குப் புலப்படாத வஸ்துக்களைக் கால தேச வரம்புடன் அறியும் சக்தி யுக்தப் பிரத்தியக்ஷம். இது, யோகத்தால் உண்டானதால் யுக்த மெனப்பட்டது. விசேஷ யோகத்தாலானது வியுக்தம். இது வரம் பின்றிச் சர்வ தரிசியாகும். ஒரு குறிப்பால் வேறொன்றை யறிதல் அனுமானம் அல்லது லைங்கிக ஞானம். லிங்கமென்பது குறி அல்லது அடையாளம்; அதனாலானது லைங்கிகம். இது கார்யம், காரணம், ஸம்யோகி, ஸமவாயி, விரோதி என ஐவகையாம். நதியின் பிரவாகத் தைப் பார்த்து இது மழையின் கார்யமென்றலும், மேகத்தைக் கண்டு இது மழைக்குக் காரணமாமெனக் கூறுதலும், புகையைக் கண்டு நெருப் புளது என்றலும், உஷ்ண ஸ்பரிசத்தால் அக்கினியை யறிதலும் சீத குணமில்லாததால் உஷ்ணமுளதென்றலும் ஆகிய இவை முறையே ஐந்து லைங்கிக ஞான வகைகளுக்கு உதாரணங்களாம்.

IV

மற்ற தரிசனங்களில் கூறியுள்ள ஏனைய பிரமாணங்களெல்லாம் அனுமான விசேஷங்களென்றே கொள்ளப்படும். இனி மீமாம்ஸ தரிசனம் கூறப்படும்.

## ஜைமிநீய தரிசனம்

மீமாம்ஸ மதத்திற்கு ஜைமிநீய தரிசனமென்று மறுபெயருண்டு ; அது, ஜைமிநி என்பவரால் ஆக்கப்பட்டதால் ஏற்பட்டது. வேதாந்தமென்று வழங்கிவரும் உத்தர மீமாம்ஸத்தினின்றும் வேறு படுத்துமாறு இதை பூர்வ மீமாம்ஸமென்றும் அறிஞர் கூறுவர். மீமாம்ஸமென்ற சிறப்புப் பெயரே பெரும்பான்மையும் வழங்கப்பெறும்.

ஜைமிநீய தரிசனத்தில், சர்வஜ்ஞனும், சர்வதரிசியாயும், வீதராகனும், சிருஷ்டி ஸம்ஹார கர்த்தாவாயுமுள்ள தேவன் ஒருவன் காணப்படவில்லை. முன் கூறப்பட்ட தரிசனங்களில் சில அவ்வித தேவன் உண்டென்றும் அவன் வாக்கியமே பிரமாணமென்றும் ஏற்றுக் கொண்டன. இங்குச் சர்வக்ஞன் இல்லையாதலால் அவனுடை வசனம் பிரமாணமாம் என்ற கொள்கையு மில்லாதுபோம். ஒரு புருஷன் சர்வஜ்ஞனாகமாட்டான் அத்தியந்த வேற்றுமையால், ஸ்தம்பம் புருஷனாகாததுபோல். சுராசுரர்களால் சேவிக்கப்படுதலும், மூன்றுலோக சாம்ராஜ்யம் பெறுதலும், சத்திர, சாமராதி விபூதிகளையடைதலுமே சர்வஜ்ஞ லக்ஷணமெனில், கீர்த்தி, பூஜாதிகளை விரும்புவோன் இவற்றை மாயவித்தையாலும் இந்திர ஜாலத்தாலும் உண்டுபண்ணிக் கொள்ளக்கூடும். மனுஷ்யனுக்கு சர்வஜ்ஞத்தன்மை கூடாது. பிரம்மா, விஷ்ணு, மாஹேஸ்வராதிகளுக்கும் அவ்வாறே சர்வஜ்ஞத்துவ முண்டென்பது, பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சாதிக்கப்படாது, கண்கள் முதலிய இந்திரியங்களுக்குப் புலப்படவில்லையாகையால். அனுமானத்தால் சாதிக்கலாமோ வென்றால், பிரத்தியக்ஷ பூர்வகமே அனுமானமாகையாலும், பிரத்தியக்ஷத்தால் சர்வஜ்ஞனுடைய குறிப்புக்கள் காணப்படவில்லையாகையாலும் இதனாலும் சாதிக்கப்படாது. ஆகமத்தால் சர்வஜ்ஞன் சித்தியாமெனில் பொருந்தாது-சர்வஜ்ஞனில்லாதபோது அவனால் வெளியிடப்பட்ட ஆகமம் இல்லாதொழியுமாகையால். உபமானத்தாலாமோ வெனில், ஆகாது, அதுபோன்ற வேறு பொருள் யாதொன்று மில்லாமையால். அர்த்தாபத்தியால் சாதிக்கப்பெறுமோ வெனில் கூடாது, சர்வஜ்ஞ சாதகத்திற்குக் காரணமான வேறு

யாதொரு பதார்த்தமும் காணப்படாமையால். இவ்வைந்து பிரமாணங்களால் சாதிக்கப்பெறாத சர்வஜ்ஞப் பொருள் அபாவப் பிரமாண கோசரமாகி இல்லையென்றே சித்தியாகும்-முயலின் கொம்புபோல.

அதீந்திரியமான பதார்த்தங்களைக் காண்பவனான சாக்ஷாத் தேவனும், அவனால் வெளியிடப்பட்ட ஆகமமுமில்லையாமாகில் அதீந்திரிய விஷயங்களை எவ்வாறு அறிதல் கூடும்? நித்தியமானதும் புருஷனாலாகாப் பெறாததுமான வேதவாக்கியத்தால்தான் யதார்த்தம் நிச்சயிக்கப்படும். இந்திரிய விஷயத்திற்கு மீறின பதார்த்தங்கள் ஆத்மா, தர்மம், அதர்மம், காலம், ஸ்வர்க்கம், நரகம், பரமாணு முதலியவையாம். வேதம் ஆதல் அழிதல் என்னும் குணங்களின்றி யிருப்பதால் நித்தியமென்றும், யாதொரு புருஷனாலும் முதல் முதல் வெளியிடப்படாமையால் அபௌருஷேயமென்றும் கூறப்பட்டது.

ஆகையால் நம்முடைய முதல் கடமை வேதங்களைப் படித்தலும், பிறகு தர்மம் யாதென ஆராய்ந்தறிய முயற்சித்தலுமேயாம்.

ஜைமினீய மதத்தினர் வேதம் நித்தியமெனக் கொள்வதால் நையாயிகருக்கு மாறாக சப்தமும் நித்தியமெனக் கொள்வர். ஆதல் அழிதல் ஆகிய குணங்களைப் பெற்று அநித்தியமாயும், க்ஷணிகமாயுமிருப்பது நாதம் என வேறுபடுத்துவர். சப்தமெனும் பதத்தை, பொருள்படும் வசனத்திற்கே பொருத்துவர். சொல்லுக்கும் பொருளுக்கும் அநாதி சம்பந்தமிருப்பதாலும், சொல்லுக்கு இஷ்டமான பொருளைக் கூற முடியாததாலும் சப்தம் உண்டாக்கப்பட்டதெனக் கூறுதல் பொருந்தாது. முதல் முதல் சப்தத்தை உபயோகித்தல் அதனால் குறிக்கப்படும் பொருளைப்பற்றியேயா மாகையால் இந்த சப்தம் இப்பொருளைக் காட்டும் என்பது முன்னமே யேற்பட்டு இருக்கவேண்டும். ஆகையால் சப்தம் நித்தியமெனக் கொளற்பாலது.

தர்மமென்பது வேதத்தில் சொல்லப்பட்ட யாகாதிகளைச் செய்தலேயாம். தர்மா தர்மங்கள் முறையே இஷ்டானிஷ்டங்களைச் சாதிக்கும்.

தர்மம் சோதனா லக்ஷணமுடையதென்பர் அறிஞர். சோதனையென்பது பிரேரணை-தூண்டுதல். வேதவாக்கியத்தில் 'ஸ்வர்க்கம் விரும்பில் அக்கினி ஹோத்திரம் செய்யக்கடவாய்' என்றிருப்பதே சோதனமாம். இவ்வாறு விரும்பப்படும் ஒவ்வொரு பலனுக்கும் சாதகமான ஒவ்வொரு யாகமுறை கூறப்பட்டுளது. இஷ்டத்தைப் பெற

மாறு வேதத்தால் தூண்டப்பட்டு அதில் கூறியுள்ள கர்மத்தைச் செய்தலே தர்மமாம். இதுவே செய்ய யோக்கியமானது. தர்ம முறைப்படி கர்மத்தைச் செய்தால் அதனால் அபூர்வமென்ற ஒரு அதீந்திரிய சக்தி தோன்றும். இந்த அபூர்வத்தினுதவியால் ஜீவனுக்கு, தான் விரும்பிய பலனுண்டாகும்.

அநந்தமாயும் வேறு வேறாயும் நித்தியமாயுமுள்ள ஜீவராசிகளுக்குத் தர்மமே கர்த்தவியமாம்.

இனி ஜைமினி மதத்தின் பிரமாணங்களின் லக்ஷணம் கூறுதும். மீமாம்ஸகர் பிராபாகர மதத்தினர், பாட்ட மதத்தினர் என இருவகையினராவர். பிராபாகரர் பிரமாணம் ஐந்தேயென்பர். பாட்டர் ஆறும் என்பர். அவை பிரத்தியக்ஷம், அனுமானம், சப்தம், உபமானம், அர்த்தாபத்தி, அபாவமென்பவையாம். இறுதியிலுள்ள அபாவப் பிராமணம் பிரத்தியக்ஷத்தின் ஒருவகையென்று பிராபாகரர் கொள்கிறாராதலால் அவருக்குப் பிரமாணம் ஐந்தேயாகும்.

உண்மையாயுள்ள வஸ்துக்களின் மேல் இந்திரியங்களைப் பிரயோகிப்பதால் ஆத்மனிடத்திலுண்டாகும் ஞானம்பிரத்தியக்ஷமெனப்படும்.

அனுமான லக்ஷணம் யாதெனில் லிங்கம் அல்லது குறியைக் கொண்டு அதையுடைய வஸ்துவை அறிதலாம். காணப்பட்ட வஸ்துவைக் கொண்டு அதனோடு சம்பந்தமாயுள்ள பரோக்ஷ வஸ்துவில் புத்தியைச் செலுத்துவது அனுமானமாம்.

சப்தம் என்பது நித்தியமாயுள்ள வேதத்தைப் படிப்பதால் உண்டாகும் ஞானம். பிரசித்தமாயுள்ள பொருளைக் கொண்டு அதனோடு ஒற்றுமையுடைய அப்பிரசித்தமான வேறு பொருளைத் தெரிதல் உபமானமாகும்.

பெறப்பட்ட பொருளின் குணத்தையாவது ஸ்வபாவத்தையாவது நன்குணரப் போதுமான காரணம் காணாதபோது, இன்ன காரணமிருந்தாலல்லது அவையுண்டாகாவென்று ஒரு பொருளைக் காரணமாகக் கல்பித்து ஊகித்தலே அர்த்தாபத்தி யெனப்படும். புஷ்டியாயிருக்கும் தேவதத்தனைப்பார்த்து 'இவன் பகலில் சாப்பிடுவதில்லை' யென்றால் 'அவன், இரவில் சாப்பிடவேண்டும்' என்று ஊகித்தல் அர்த்தாபத்திப் பிரமாணமாம். தேவதத்தனுடைய இராப்போஜனம் அர்த்தாபத்தியால் பெறப்படும். அர்த்தாபத்தி ஞானத்திற்கு மூலமாய்த்தோன்றும் விஷயம் எல்லாப் பிரமாணங்களாலும் பெறப்படு

மாகையால் இவற்றை நோக்கி அர்த்தாபத்திப் பிரமாணம்-பிரத்தியக்ஷ பூர்விகம், அனுமான பூர்விகம், சப்த பூர்விகம், உபமான பூர்விகம், அர்த்தாபத்தி பூர்விகம் என ஐவகையாம்.

இனி ஆறுவது : அபாவப்பிரமாணம். இதன் உபயோகம் சர்வஜ்ஞன் உண்டோ இல்லையோ வென்ற வாதத்தில் காணப்பட்டது. ஏனைய பிரமாணங்கள் இருக்கும் பொருளைச் சாதிக்குமாகையால் இல்லாப்பொருளை இல்லையெனக் கூறுவதற்கு அபாவமே பிரமாணமாகும். வஸ்துஸ்வரூபம் சத் என்றும், அசத் என்றும் இருவிதம் : அசத் ஸ்வரூபம பிரத்தியக்ஷாதி பிரமாணங்களால் அறியப்படாது, இல்லாததைக்காணல் கூடாதாகையால். அனுமானத்தாலும் ஆகாது. ஏனெனில் காணப்பட்ட லிங்கத்தால் (அடையால்) லிங்கியை (அடையுள்ள பொருளை) அறிவதே அனுமானமாகையாலும், அஸத்தானதற்கு யாதொரு லிங்கமுமில்லையாதலானும். ஆகையால் அபாவம் தனிப்பிரமாணமாகக் கொள்ளப்பட்டது. இது பிராக் அபாவம், பிரத்வம்ஸ அபாவம், அன்யோன்ய அபாவம், அத்தியந்த அபாவம் என நான்கு விதமாம். ஒருவஸ்து முன் இல்லாதிருந்து பின் உண்டானபோது அதன் பூர்வ அசத் தன்மையைக் குறிப்பது பிராக் அபாவமெனப்படும். அதாவது, பாலில் தயிர் இல்லை என்பது. முன் இருந்து பின் இல்லாதொழிதல் பிரத்வம்ஸ அபாவமாம் ; அதாவது, தயிரில் பாலில்லை என்பது. இருபொருள்களில் தமக்குள்ள வேற்றுமையைக் குறித்து 'இதில் அது இல்லை' யென்பது அன்னியோன்ய அபாவம். அதாவது, 'பசு குதிரையல்ல' என்பது. எப்பொழுதும் இல்லாத ஒருபொருளைக் குறிப்பது அத்தியந்த அபாவமாம் ; அதாவது, 'முயலின் கொம்பு இல்லை', என்பது.

ஜைமினீய மதம் கர்மத்தையும் கர்ம பலத்தையுமே முக்கிய பொருளாயுள்ளது. "சிருஷ்டி சம்ஹார கர்த்தாவான ஈஸ்வரன் இல்லாதபோது ஒவ்வொரு ஜீவனும் தன்தன் கர்மத்தினாலேயே கதியிற்றிரிதலும், வீட்டையடைதலும் பெறும். இஷடத்தைச் சித்திக்கச் செய்வது தர்மமே. தர்மமென்பது வேத வாக்கியத்தில் கூறப்பட்டுள்ள யாகாதிகளைச் செய்தலே" என்பது அம்மதக் கொள்கை. இவ்வாறு கர்மத்தையே முக்கிய தத்துவமாகக் கூறுகின்றமையால் இந்தத் தரிசனத்தைக் கர்ம மீமாம்சமென்றும் அம்மதத்தினர் சொல்லுவர்.

இனி வேதாந்த தரிசனம் கூறப்படும்.

## வேதாந்த தரிசனம்

பாதராயண அல்லது துவைபாயன முனியால் இயற்றப்பட்ட வேதாந்த சூத்திரமென்ற நூலே இந்தத் தரிசனத்திற்கு மூலாதாரமெனப்படும். உபநிஷதங்களும் ஆதாரமாகக் கூறப்படுகின்றன. வேதாந்த சூத்திரமென்ற நூலுக்கு மூன்று பேருரைகளுண்டு; அவை: சங்கரபாஷ்யம், ராமானுஜபாஷ்யம், மாத்வபாஷ்யம் என்பவையே. இம்மூன்றுரைகளும் தம்முள் தத்துவ விஷயங்களில் முரணிக்கிடத்தலால் வேதாந்த தரிசனம் மூன்று வகையாகக் கூறப்படுகிறது. அவை அத்துவைதமென்றும், விசிஷ்டாத்துவைதமென்றும், துவைதமென்றும் கூறப்படுகின்றன. உரையாசிரியர்களே இம்மூன்று உட்பிரிவுகளுக்குக் காரணமாகையால் இவை அவர்கள் பெயரைக் கொண்டு சங்கரமதம், ராமானுஜமதம், மாத்வமதம் என்றும் வழங்குகின்றன.

வேதாந்த தரிசனத்தில் கூறப்பட்டுள்ள முக்கிய தத்துவம் பிரம்மம் என்பதே. இந்த பிரம்மமே உபநிஷத்திலும் கூறப்பட்டுளது. ஆங்கு அது ஆத்மனென்றும் சொல்லப்படுகிறது. அது சேதனஸ்வரூபமாயும், அரூபியாயும், நித்தியமாயும, சர்வ கதமாயுமுளது. இது காரணம் பற்றியே பிராணன்கள் தம தம் தொழில்களில் தவறாது நிற்கின்றன. பார்க்கப்படும் விஷயங்களை யறியும் பார்வைக்கு இதுவே காரணமாயினும் இது பார்க்கப்படாது-அரூபியானதால். கேட்கப்படும் பொருள்களை யுணரும் ஸ்ரோத்திரேந்திரியத்திற்கு இதுவே மூல காரணமாயிருந்தும் இது, கேட்கப்படாத வஸ்துவாம் - சப்தகுணமின்மையால். சுவையுணரும் நாவிற்குக் காரணமானாலும இது ரசனேந்திரியத்தா லுணரபபடாது-சுவையின்மையால். மூர்த்த வஸ்துக்களையறியும் ஸ்பரிசனேந்திரியத்திற்கு மூல காரணமாயினும் இஃது ஊற்றுணர்வின் விஷயமாகாது-அமூர்த்தமாகையால். இவ்வாறு சரீரத்துள் நின்று இந்திரிய பிராணாதிகளின் தொழில்களுக்குத் தானே காரணமாயிருந்து தான் அவைகளை மீறி நிற்கும் ஆத்மாவும் இவ்வாறே மூர்த்த வஸ்துக்களாலும் அசேதன வஸ்துக்களாலும் அமைந்த உலகத்திற்கு மூல காரணமாயுள்ள பிரம்மமும் ஒன்றேயென்பர் அத்தரிசனத்தார்.

உலகத்தின் ஜன்ம, ஸ்திதி, விநாசங்களுக்கு எது காரணமாயுளதோ அதுவே பிரம்மம எனப்படும். அதாவது எது காரணத்

நால் சமஸ்தவஸ்துக்களும் உண்டாகின்றனவோ, எதனால் அவை நிலை பெறுகின்றனவோ, பின் அவை அழியும்போது எதனுள்ளடைந்து மறைகின்றனவோ அந்தத் தத்துவப்பொருளே பிரம்ம மெனப்படும். பிரம்மனுடைய லக்ஷணம் கூறினமையின் எல்லாப் பொருள்களும் மற்றதன் காரியமென்பது சித்தமாகும். பிரம்மம் என்பது சேதன வஸ்துவாகையானும், மூர்த்தா மூர்த்த எல்லாப் பொருள்களும் சேத னத்திரவியத்தின் காரியமாகையானும் இந்தத் தரிசனத்துள் சாங்கி யாதி தரிசனங்களில் கூறியுள்ளவாறு, சேதனுசேதன பேதம் இல் லாது போம். அசேதனமென்றும் மூர்த்தமென்றும் வழங்கும் இந் திரிய விஷயங்களான வஸ்துக்களும் உண்மையில் சேதன ஸ்வரூபி யான பிரம்மத்தின் பரியாயமேயாம். வேதாந்த தரிசனத்தில் இவ் வாறு, பொதுவகையாயுள்ள பிரம்மதத்துவப் பொருளை ஆராயுமிடத்து ஸ்ரீ சங்கராசாரியர் பின்வருமாறு கூறுகின்றனர்:

சரீரத்துள் நிற்கும் ஜீவாத்மாவும் உலகத்துள் நிலவிய பரமாத் மாவும் ஒன்றே. வேறெனக்கொள்வது அறியாமையாம். நித்தியமா யுள்ள பொருள் ஒன்றே. அதுவே வேறு வேறாய்க் காணப்படுகிறது. ஆகையால் நாநா தத்துவமும் அறியாமையாலானதே. நீ நான் என்று தோன்றும் வேற்றுமையும், வஸ்துக்களின் பன்மையும் பாலைவனத்தில் நீர்க்காட்சிபோலாம். ஞானம் பெருகப்பெருக உண்மை விளங்கிப் பொய்த்தோற்றங்கள் நில்லாமற்போம். சத்தாயும் ஒன்றாயும் நின்ற பொருள் சித் ஸ்வரூபியாம். பிரம்மம் என்ற பொருள் வேறு அதன் குணமாகிய ஞானம் வேறு என்று குணகுணி வேறுபடுத்திக் கொள்ளற்பாற்றன்று-அஃதே ஞானமானது பற்றி. ஒரு பொருளே சத்தாயும், சித்தாயும் நின்று, ஞானப்பெருக்கால் அறியாமையொழிந்து விஷயப் பற்று நீங்கினமையால் பேரானந்த மயமாயும் நிற்கும். இதுவே பரமாத்ம ஸ்வரூபமாம். நம்முடைய புத்திக்கு விளங்கும் விஷயங் களுள் மாத்திரமே குணகுணிபேதம் காணப்படுகிறதாதலானும், பர மாத்மன், நம் ஞானத்திற்கு விஷயமாகாத ஒரு பெரும் பொருளான தானும், நம்மாலுணரப்படும் குணங்களை அதனில் நிறுத்திக் கூறுதல் குற்றமாதலானும் அஃது குணங்களால் வர்ணிக்கப் பெறாது. மற்றும் தன்னுள் குணகுணிபேதமின்மையால் அது நிர்க்குணமென்று கொள் ளற்பாலது. நிர்க்குண பிரம்மன் ஒன்றே உண்மை வஸ்து. மற்ற யாவும் பொய்த் தோற்றமாம். மாயையின் விசித்திரமாகும்.

பொருள் ஒன்றேயாகின் வேறு வேறான ஜீவராசிகளும் மற்ற வஸ்துக்களும் எவ்வாறாயினவெனில் - அசேதனமாயும் மூர்த்தமாயும் வேறு வேறாயும் தோன்றும் விஷயங்கள் யாவும் மாயை என்பதின் காரியமாம்.

உண்மையில் அசத்தாயும், பிரபஞ்சத்தின் தோற்றத்தையாக்கக் கூடிமான சக்தியுடைமையால் சிறிது சத்தாயுமிருப்பது மாயை யென்பது. அது முரணிக்கிடக்கும் இவ்விரு குணங்களும் பொருந்தினதாகையால் அதை அவாசியமென்பர் அறிஞர். இப்பெற்றிய மாயையே பலவகையான அஜீவப்பொருள்களுக்கு உபாதான காரணமாகும்.

பரம பரிசுத்தனான பிரம்மன் மாயையால் மயங்கித் தன் இயற்கைக்குணம் திரிந்துழி ஈச்வரனெனப்படுவான். இவ்வாறு திரிபுபெற்ற ஈச்வரனே சிருஷ்டி கர்த்தாவெனக் கொள்ளப்படுகிறான். இது சகுணப்பிரம்மம் எனப்படும். மாயையாலான உபாதிவசமானதாலும் நிச்சய பிரம்மனிற் சிறிது மாறுதலடைந்ததாலும் இதுவும் அநித்தியமேயாம்.

சரீரத்தில் பொருந்தியிருக்கும் ஜீவாத்மன் தான் பிரம்மனில் வேறெனக்கொள்வது உபாதியாலான அறிவின்மையின் காரியமே. உபாதி நீங்கி, அவித்தையழிந்து ஞானம் தன்வழியாகில் அது 'நானே பிரம்மன்' என்றுணர்ந்து நிற்கும். இதுவே மோக்ஷமெனப்படும்.

இவ்வாறு உலகம் முழுதும் உருவெளித் தோற்றமென்று மாயாவாதங் கூறிய அத்துவைத மதப்படி, வேதத்துள் கூறப்பட்ட தேவதைகளும், யாகாதிகளும், லோகத்தின் உத்பத்தி முதலான விஷயங்கள் யாவும் போலித் தோற்றமாக விலக்கப் பெறுமாகையால், வைதிக விஷயங்களோடு தம்முடைய தத்துவ சாஸ்திரத்தைச் சமரசப்படுத்துமாறு அத்துவைதிகள் நயவேற்றுமை யுண்டுபண்ணி - லோகமும் அதனுள்ளிருக்கும் ஜீவராசிகளும் நிச்சய நயத்தால் பிராந்தமாயினும் வியவகார நயத்தால் உண்மையாம் என்பர். சிருஷ்டி ஸம்ஹார கர்த்தாவான ஈச்வரனைத் துதித்தலும், யாகாதிகளைச் செய்தலும் வியவகார நயாபேக்ஷையால் பொருந்தும் என்பர்.

பிரம்மம் ஒன்றே நித்தியப் பொருளென்றும், ஜீவன் லோகம் முதலியவை மாயையென்றும், உபாதி நீங்கி தத்ஸ்வரூபமடைதலே மோக்ஷமென்றும் கூறுவதே சங்கர மதமெனப்படும். இதுவே அத்து

வைத மதமென்ற மறுபெயர் கொண்டு வழங்கும். வைணவ சமயத் தவருள் பாஷ்யகாரர் என்று சிறப்புப் பெயர் வகித்து வழங்கிவரும் ஸ்ரீராமானுஜர் என்பவர் தாமியற்றிய ஸ்ரீபாஷ்யத்தில் மாயாவாதத் தைக் கண்டித்து வேதாந்த சூத்திரத்திற்கு வேறு பொருள்பட உரை கூறியுள்ளார்.

நிர்க்குணமான பொருளொன்றுண்டு என்பது பிரமாணங்களுக்கு விஷயமாகாதென்றும், அவ்விதம் ஒன்றும் நிற்காதென்றும் கண்டித்து, பிரம்மம் அனந்த குணமுள்ளதென்று சாதிக்கின்றனர். இன்னும் அவர், இப்பொருள், அனந்த ஞானமும், அனந்த வீரியமும், அனந்த சுகமும், அனந்த காருண்யமும் பொருந்திய புருஷோத்தமனேயாம் என்பர். ஞானமேயன்றி ஆத்மன் வேறல்லவெனக் கூறும் சங்கர மதத்தை நிராகரித்து ஆத்மனுடைய குணமே ஞானமாமென்பர். ஞானத்தாலறியப்படும் ஞேய வஸ்துக்களான லோகமும் ஜீவராசிகளும் உண்மைப் பொருள்களாம் - ஞேயப் பொருள்களின்றி ஞானமின்மை யால். இவற்றைப் பொய்த்தோற்றமெனக் கூறுவதே பொய்க்கூற்றும்.

பிரமத்திற்கும் லோகத்திற்கும் காரண காரிய சம்பந்தமாகும். காரணாவஸ்தையில் தன்வயமாகிய பிரம்மன் காரியாவஸ்தையில் பல பிரகாரமான லோகமாய் வியாபிக்கும். லோகம் கல்பாந்தத்தில் திரும் பத் தன்னுள் லயமாகி மறையும். பிரம்மனில் வேறாயும் நித்தியமாயு முள்ள ஜீவாத்மா தன்னுள் சுருங்கிச சங்கோசாவஸ்தையிலிருந்து லோகம் பரிணமித்துத் தோன்றுங்கால், தானொரு சரீரம் பற்றி வியா பித்து வெளிவரும். ஆனால் அது பிரம்மனன்றி, தன்னில் தொழிலற் றமையால்-காரியமியற்றச் சக்தியற்றது. லோகமும் ஜீவராசிகளும் ஒருங்கு சேர்ந்து பிரம்மத்திற்குச் சரீரமாக நிற்கும். பரமாத்மனுக் கும் மற்றைய ஜீவாஜீவ வஸ்துக்களுக்கும் உள்ள சம்பந்தம் ஜீவனுக்கும் சரீரத்திற்குமுள்ள சம்பந்தத்தைப்போன்றதேயாம். ஜீவாத்மன் பிரம் மனின் அம்சமாம். ஒரு ஆலமரம் கிளை, இலை, காய் முதலிய பல பிர காரமாய் பரிணமித்து விளங்குவதுபோல் ஒரே பிரம்மன் பல பிரகார மாய்ப் பரிணமித்து ஜீவராசிகளாயும் லோகமாயும் தோன்றும். இராமா நுஜ தரிசனத்துள் ஜீவாத்மன் நித்தியமென்றும் பொய்த்தோற்ற மல்ல வென்றும் கூறப்பட்டபோதிலும் அது பிரம்மத்தின் அம்சமென்றே கொள்ளப்படுதலால் பிரம்மம் தவிர வேறு பொருளில்லையென்றே கொள் ளப்படும். ஆகையால் இதுவும் அத்துவைதமாம். ஆயினும் மாயாவாதத்

தைக் கண்டித்து பிரம்மத்திற்கு அனந்த குணங்களுண்டு என்று சாதிப்பதினால் இது சங்கரதரிசனத்தினின்றும் வேறாக விசிஷ்டாத்துவைதம் எனக் கூறப்படும்.

சுத்தாத்துவைத சங்கர தரிசனத்துள்ளும், "ஜீவராசிகள் ஏன் சில துக்கமும் சில சுகமும் அநுபவிக்கின்றன என்ற பூர்வ பக்ஷத்தைப் பரிஹரித்துச் சித்தாந்தம் கூறும்போது சங்கராசாரியர் - 'தன் தன் கர்மத்தின் பலனே மாறு' என்று பதில் அளித்தார். இன்னும் அவர், சுகதுக்கம் அந்தந்த ஜீவனின் கர்ம பலனும் என்று ஜீவாத்மனைத் தனித்தனியாக்கிக் கொண்டமையால் ஒருவாறு ஜீவன் பிரம்மனில் வேறென்று கொள்ளப்பட்டதென்பர்.

இவ்விஷயத்தையே வற்புறுத்திக் கூறி ஜீவனையும் பரமாத்மாவையும் அத்தியந்தம் வேறாகக் கொள்ளும மதம் மாத்வ தரிசனமாம். ஆனந்த தீர்த்தர் அல்லது மாத்வாசாரி என்பவரா லியற்றப்பட்ட வேதாந்த சூத்திர உரையில் இஃது அடங்கியுள து. உலோகமும் ஜீவராசிகளும் நித்தியமும், பிரம்மனில் முற்றும் வேறானவையுமாம். ஜீவாத்மனே பரமாத்மன் என்றாவது ஜீவாத்மன் பரமாத்மனின் அம்சமென்றாவது கூறுவது அறியாமைத்தன்மையாம். அரசனும் ஏவலாளர்களும் ஒருபோதும் ஒன்றாக மாட்டார். ஒருவேலையாள் அரசனது அனுக்கிரகத்தை யபேக்ஷித்திருந்து தானே அரசன் என நினைத்துக் கூறுவானாகில் அஃது அறிவின்மையாவதுமன்றி அவன் அரசனுடைய தண்டனைக்குப் பாத்திரனாவதும் நேரிடும். அவ்வாறே பரமாத்ம ரக்ஷணையை வேண்டும் ஜீவன் தானே பிரம்மனென்றாவது தானும் அவனுடைய அம்சமே என்றாவது பிதற்றுதல் தவறாம். குற்றம் நிறைந்த தன்னுடைய இழிவான பதவியை மறவாது தனக்குச் சரணாயுள்ள பகவானைத் துதித்தலே புருஷனின் கடமையாம். பரமாத்ம கருணையால் தான் பரமபதமடைந்த காலத்திலும் ஜீவன் பிரம்மனில் தாழ்ந்தும் வேறாகியும் நிற்பதுமன்றி முத்தியடைந்த ஆத்மாக்கள் தம்முள் ஒன்றுக்கொன்று வேறுவேறாயும நிற்கும். பிரம்மம் ஒன்றே என்று கூறும் வேத வாக்கியத்திற்கு - ஒப்பற்றது என்று பொருள் படும். அதைப் போன்ற வேறு பொருளில்லையென்றும் மற்ற ஜீவாஜீவப் பொருள்கள் யாவும் அதற்குத் தாழ்ந்தவையே என்றும் பொருளுரைக்கத் தவறி யாவையும் பிரம்மமே என்றும் பிரம்மனில் வேறான பொருளில்லை என்றும் உரைக்கும் பொய் வாதம் பொருந்தாது. 'தான்

பிரம்மனில் வேறென்று கொள்ளும் அகங்கார குணம் அறியாமையா லானது' என்று கூறும் சங்கரமதத்திற்கு எதிராக 'நானே பிரம்மம்' என்று ஒற்றுமை கொள்வது அறிவின்மையென்றார் மாத்வாசாரியர் - துவைதமே பரமதத்துவப் பொருளாகையால். பிரம்மஞ்ஞான மடைந் தால் பிரமம் ஆகலாம் என்ற வாக்கும் பொய்யாம். பிரம்மஞ்ஞானம் அடைந்துழி தன்னுடைய வேற்றுமையும் இழிவும் புலப்படும். அர சனையறிந்த ஏவலாளன் அரசனுகாது அரசனது அநுக்கிரகம் பெறு வான். அவ்வாறே பிரம்மஞ்ஞானம் ஜீவாத்மாவை பிரம்மனுக்காது; அப்புருஷோத்தமனுன பரமாத்மனுடைய கருணைக்குப் பாத்திரமாகி, வீடு பெற்று உய்யும்.

மாத்வ தரிசனமென்ற துவைத வேதாந்தம் இப்பெற்றியதாகும். இனி பௌத்த தரிசனம் கூறப்படும்.

## பௌத்த தரிசனம்

பௌத்த தரிசனம் புத்தரால் போதிக்கப்பட்டது. புத்தர் என் னும் பதத்திற்கு ஞானமடைந்தவர் எனப் பொருள். இவர் சாக்கியர் எனும் க்ஷத்திரிய வம்சத்தில் கௌதம குலத்தில் கி. மு. 563-ம் வரு ஷத்தில் அவதரித்தவர். இவர் தந்தையின் பெயர் சுத்தோதனன்; தாய் மாயாதேவி. கபிலவஸ்து என்னும் நகரம் இவரது பிறப்பிடம். இவருடைய பெயர் சித்தார்த்தர். இவருக்குச் சாக்கியமுனி, சுகதன், ததாகதன், தர்மதாது முதலிய மறு பெயர்களுண்டு. சம்சாரத்தைத் துறந்து வெகுகாலம் தபம் செய்து இறுதியில் ஞானம் பெற்றுச் சம் சாரத்தைக் கடந்து நிர்வாணமடையும மார்க்கத்தையுணர்ந்து, உலகம் உய்யுமாறு அதை ஜனங்களுக்குப் போதித்து எண்பதாவது வயதில் (483-கி. மு. வருஷத்தில்) உயிர் நீங்கிப் பரிநிர்வாணமடைந்ததாகச் சரித்திர ஆதாரங்களால் விளங்கும்.

இவரால் போதிக்கப்பட்ட தத்துவப் பொருளே தர்மமெனப் படும். இவருக்குப் பின் தர்மத்தைப் பாதுகாத்துப் பிறருக்கும் போதித்து வந்த பிக்ஷுக்களின் கூட்டம் சங்கமெனப்படும். புத்தன், தர்மம், சங்கம் இம்மூன்றும் இரத்தினத்திரயமென்று வழங்கும் மும்மணிகளாம். இம்மூன்று மணிகளையே பௌத்தர், "புத்தம் கச் சாமி, தம்மம் கச்சாமி, சங்கம் கச்சாமி"— என மூலமந்திரமாகக்

கொண்டு துதிப்பர். இம்மூன்றில் 'தம்மம்' என்பது இங்கு முக்கிய மானது—தத்துவப்பொருளை யுணர்த்துமாகையால்.

பௌத்த தரிசனத்துள் ஆரிய சத்தியங்களெனப்படும் தத்துவப் பொருள்கள் நான்கு. அவை: துக்கம், துக்கோத்பத்தி, மார்க்கம், நிரோதம் என்பவையாம். இவற்றுள் துக்கமென்பது விஜ்ஞானாதி ஐந்து ஸ்கந்தங்களே உபாதானமாக வமைந்த தன்மையாம். உத்பத்தி யென்பது திருஷ்ணை-ஆசையின் காரணமாக உண்டாகும் காரண காரிய பரம்பரையும் துக்கமுண்டாகும் முறையுமாம். மார்க்கமென்பது நிரோதத்திற்குக் காரணமாய் நின்று 'நான் ஆத்மாவன்று' என்பது முதலிய சித்த விசேஷமாம். சித்தத்தின் கிலேசமற்ற அவஸ்தையே நிரோதமெனப்படும். ராக துவேஷங்களால் மோதப்பட்ட சம்சா ரத்தை விலக்குதலால் நிரோதமே மோக்ஷமாம்.

துக்கமென்பது சம்சார குணமுடைய பஞ்சஸ்கந்தங்களையே குறிக்கும். பஞ்சஸ்கந்தங்கள், விஜ்ஞானம், வேதனை, ஸஜ்ஞா, ஸம்ஸ கரம், ரூபம் என்பவையாம். சம்சார குணமென்பது இடம் விட்டு வேறிட மடையும்-அதாவது பவம் விட்டு வேறு பவம் அடையும் தன்மையாம். ஸ்கந்தங்கள் இக்குணமுடையவை யாகையால் சம்சாரிகள் எனப்பட் டன. சேதனசேதன தன்மையுள்ள வஸ்துக்கள் யாவும் பரமாணு சமூகங்களேயாம். சிலர் ஆத்மனென்ற ஸ்கந்தம் உண்டென்பர். அஃது உண்மையன்று என்று விலக்கப்பட்டு ஸ்கந்தங்கள் ஐந்தேயாம். விஜ் ஞானம் என்றால விசிஷ்டஜ்ஞானம். ரூப விஜ்ஞானம், ரஸ விஜ்ஞானம் முதலிய நிர்விகல்பக விஜ்ஞானம் விஜ்ஞான ஸ்கந்தமெனப்படும். சுகத்தையாவது, துக்கத்தையாவது, இருவகைக்கும் பொதுவான அவஸ்தையையாவது அநுபவிப்பது வேதனை ஸ்கந்தமெனப்படும். வேதனை என்பது பூர்வத்தில் செய்யப்பட்ட கர்மத்தாலானது. ஸஜ்ஞா அல்லது சொல்லைக் காரணமாய்க் கொண்டு பொருளை அறியும் ஞானம் ஸஜ்ஞா ஸ்கந்தமாம். ஸஜ்ஞாவென்பது பசு முதலிய சொற் களைக் குறிக்கும். பொருள்படும் சொல்லைக் கேட்டு அதனால் உண் டாகும் ஞானம் ஸவிகல்பகஞான மெனப்படும் புண்ய பாபங்களின் சமுதாயம் ஸம்ஸ்கார ஸ்கந்தமெனப்படும். ஸம்ஸ்காரம் தோன்றுவ தால் முன் அநுபவிக்கப்பட்ட விஷயங்கள் ஸ்மரணத்தில் உண்டாகின் றன. பிரத்வீ முதலியவற்றின் ரூபம் - அல்லது தோற்றம் ரூப ஸ்கந்தமெனப்படும். விஜ்ஞானாதி ஸ்கந்தங்களில் வேறானதும், சுகம்,

துக்கம், இச்சை, துவேஷம், ஞானம் இவைகளுக்கு ஆதாரமானதும், ஆத்மனென்று சொல்லப்பட்டதுமான பதார்த்தம் பிரத்தியக்ஷமாய்க் காணப்படவில்லை. அது அனுமானத்தாலும் சாதிக்கப் பெறாது. குற்றமற்றதான குறிப்பு, யாதொன்றும் காணப்படவில்லையாதலால் பிரத்தியக்ஷம் அனுமானம் இவ்விரண்டும் நீங்க வேறு தத்துவமின்மையால் ஆத்ம பதார்த்தம் உண்டெனக் கொள்ளற்பாலதன்று. ஐந்து ஸ்கந்தங்களும் ஒரு க்ஷணமாத்திரம் நிற்பனவாகையால் அவற்றை நித்தியமென்றுவது, சில காலம் நிலையுள்ளன வென்றுவது கூறுதல் பொருந்தாது. இப்போது, பஞ்ச பேதமாகிய துக்க தத்துவம் கூறப்பட்டது. இனி மற்றதன் காரணமாகிய சமுதய தத்துவம் கூறப்படும். ராகாதி சமஸ்த தோஷங்களின் கூட்டம் எதனாலுண்டாகிறதோ அதுவே உதய தத்துவமெனப்படும். சமுதயமென்பது 'நான்' 'எனது' என்பதாலுண்டாகும் - நான், எனது என்னும் பாவங்கள் நீ, உனது என்று பிறரை வேறுபடுத்தி ராக, துவேஷங்களை யுண்டுபண்ணுமாகையால். எல்லா சம்ஸ்காரங்களும் க்ஷணிகம் என்று உணரும் உணர்ச்சியே மார்க்கமெனப்படும். ஒரு க்ஷணத்திலுண்டாகி யழியும் தன்மைக்கு க்ஷணிகமெனப் பெயர். சம்ஸ்காரங்கள் பதார்த்தங்களாம். எல்லாப் பதார்த்தங்களும் க்ஷணத்தி லழியுந் தன்மையுள்ளன என்பது பௌத்த தரிசனத்தின் கொள்கை. 'க்ஷணிகா ஸர்வ ஸம்ஸ்காரா' என்ற வாக்கியத்தால் நித்தியமான ஆத்மா ஒன்று இல்லையென்பதும் ஞானமும் க்ஷண சந்தானமென்பதும் புலப்படும். பூர்வ ஞானம் உத்தரஞானத்தை உண்டுபண்ணித் தான் கெட்டுப் பின்னதுள் சக்தியாய் நிற்பது வாசனை யெனப்படும். எல்லாப் பதார்த்தங்களும் ஒரு க்ஷணத்தில் அழியும்; ஆத்மாவென்ற பொருளில்லை; ஞானம் வாசனா சக்தியால் க்ஷண சந்தானமாம்'— என்ற தத்துவ அறிவே மார்க்கமென்ற ஆர்ய சத்தியமாகும். இதுவே நிரோதத்திற்குக் காரணமென்பது விளங்கும். நான்காம் சத்தியமாகிய நிரோதமென்பது மோக்ஷம், அல்லது அபவர்க்கம் எனப்படும். கிலேசமகன்ற சித்த ஸ்வபாவமே நிரோதமென்றும் முக்தியென்றும் அறியப்படும்.

பௌத்த தரிசனத்தில் பிரமாணங்கள் இரண்டேயாம். அவை: பிரத்தியக்ஷம், அனுமானம் என்பனவாம். பிரமாணமென்பது பொது வகையால் 'அவிசம்வாதக ஞான' மெனப்பட்டது; அதாவது வாதி

பிரதிவாதி இருதரத்தாராலும் ஒத்துக்கொள்ளப்பட்டது, சம்வாதம் அற்றதாம். பிரத்தியக்ஷம், அனுமானமின்றி வேறு சம்வாதமில்லாத ஞானம் இல்லையாகையால் வேறு பிரமாணமும் இல்லை. பிரத்தியக்ஷத்தினால் பொருள், தொழில் இவ்விரண்டையும் சாதிக்கவல்ல வஸ்து பார்க்கப்படுவதினால் தன்னுடைய சத் தன்மையை வெளியிடு

பிரத்தியக்ஷம் கல்பனுபோடம் என்றும், அப்பிராந்தமென்றும் கூறப்பட்டுள்ளது. கல்பனை என்றால் ஒரு சொல்லைக்கேட்ட மாத்திரத்தில் அது காரணமாக மனதில் தோன்றும் ஞானமாம். அபோடம் என்ற சொல்லுக்கு நீங்கின, இல்லாத என்ற பொருளாம். கல்பனுபோடம் என்ற வட சொற்றொடர்ச்சி 'சொல்லினால் தோன்றும் ஞானத்திற்கு வேறானது, என்று பொருள்படும். கல்பனை ஐந்து வகைப்படும். அவை: நாம கல்பனை, ஜாதி கல்பனை, குண கல்பனை, கிரியா கல்பனை, திரவிய கல்பனை என்பனவாம்.

நாமகல்பனை யென்பது ஒரு மனிதனுடைய நாமத்தைக் கேட்டு அதையுடைய மனிதனை நினைத்தலாம். அதாவது, 'டித்தா' என்பது போல். ஜாதிகல்பனை என்பது "பசு" என்ற சொல்லைக் கேட்டு, அதனால் குறிக்கப்பட்ட பசு ஜாதியின் தன்மையை நினைத்தலாம். குணகல்பனை யென்பது குணத்தைக் குறிக்கும் சொல்லினால் குறிக்கப்பட்ட குணத்தை நினைத்தலாம். அதாவது 'சுக்கிலம்' என்பதைக் கேட்டு வெண்மைக் குணத்தை யறிதல் போன்றது. கிரியாகல்பனை-என்பது தொழிலைக் காட்டும் சொல்லினால் கூறப்பட்ட தொழிலை யறிதல்; அதாவது, 'சமைத்தல்' 'உழவு' என்பவை போன்றது. திரவிய கல்பனை என்பது யாதேனுமொரு திரவியத்தைக் குறிக்கும் சொல்லைக் கொண்டு மற்றதை நினைத்தலாம். அதாவது, 'தண்டீ'—தண்டத்தையுடையோன்—என்பது போன்றது. இவ்வாறு சப்தத்தாலன்றி ஸ்வலக்ஷணத்தாலுண்டாவது பிரத்தியக்ஷமாம். இன்னும் பிரத்தியக்ஷம் எப்பெற்றியது? அது அப்பிராந்தமாம். பிராந்தம் என்னுஞ் சொல் ஒரு வஸ்துவை உள்ளவாறன்றி வேறாகக் கொள்வது எனப் பொருள் தரும். அதாவது, சிப்பியை வெள்ளி யென்றாற்போல. அப்பிராந்தமென்றதால் இவ்வாறான பொய்த் தோற்றங்கள் விலக்கப்பட்டன. பிரத்தியக்ஷம் என்பது உள்ளதை உள்ளவாறு அறிவதாம். பிரத்தியக்ஷ ஞானம் என்பது இந்திரிய ஞானம், மானஸம், ஸ்வஸம்வேத

னம், யோகிஞானம் என நான்கு வகையாகும். கண் முதலிய பொறிகளால் தோன்றியது இந்திரிய ஞானம். ஒரு விஷய ஞானம் காரணமாக மனதில் தோன்றும் மற்றொரு ஞானம் மானஸமாம். தன்னையே விஷயமாகவுடைய ஞானம் ஸ்வஸம் வேதனமாம். யோகத்தாலுண்டாகும் ஞானம் யோகிஞானமாம். இந்நான்கு வகையும் பிரத்தியக்ஷத்தின் பேதங்களாம்.

இனி அநுமான லக்ஷணம் சொல்லப்படும். மூன்றுவித குறிகளைக்கொண்டு குறிக்கப்பட்ட பரோக்ஷ வஸ்துக்களை யறிதல் அநுமானமாம். அநுமானம், ஸ்வார்த்தாநுமானம், பரார்த்தாநுமானம் என இருவகையாகும். தன்னுடைய பிரயோஜனத்திற்காக ஒரு குறியைக்கொண்டு சம்பந்தமான பொருளை அறிவது ஸ்வார்த்தாநுமானம். பிறர் பிரயோஜனத்தின் பொருட்டு அநுமானித்தல் மற்றவகையாம். அநுமான ஞானத்திற்குச் சாதனமாயுள்ள ஹேது மூவகையாம். அவை ஸ்பாவஹேது, காரியஹேது, அநுபலப்திஹேது எனப்படும். அவற்றுள் ஸ்வபாவஹேது என்பது "இது, சிம்சபாவானதால் ஒரு விருக்ஷம்" என்பது போன்றதாம். காரியஹேது "அங்கே புகையிருப்பதால் நெருப்புளது" என்பது போலாம். அநுபலப்தி என்பது தன்னுள் முக்கியமாய் நாலு விதமாம், விருத்த ஸ்வபாவோபலப்தி, விருத்த காரியோபலப்தி, காரணாநுபலப்தி, ஸ்வபாவாநுபலப்தி என்பனவாம். அவை, முறையே பின் கூறப்பட்டவாறும் :

1. "இங்கு நெருப்புளதால் சீத ஸ்பரிசமின்று."

2. "இங்கு புகையுளதால் சீதஸ்பரிசம் இன்று."

3. "இங்கு புகை இலது நெருப்பின்றாகையால்."

4. "புகை இன்று, மற்றது காணப்படாமையால்."

பின்னும் குறி என்பது மூன்று ரூபங்களையுடையதாம். அவை பக்ஷதன்மத்துவம், சபக்ஷம், விபக்ஷம் எனப்படும். பக்ஷம் என்பது அநுமானத்தால் சாதிக்கப்படும் பொருள். அதனுடைய தன்மம் பக்ஷதன்மம். அதைப் பொருந்தியிருத்தல் பக்ஷதன்மத்துவம் ஆகும். பக்ஷத்திற்குச் சமானமான குணத்தைப் பொருந்துதல் சபக்ஷமாம். பக்ஷம் இல்லாதொழிதல் விபக்ஷமாம். இம்மூன்று வகை லிங்க ரூபங்கள் பின் உதாரணங்களைப் பொருந்தும்.

பக்ஷதர்மத்துவம்: 'சப்தம் உண்டாக்கப்பட்டதால் அனித்திய மாம்' என்பது போன்றது. சபக்ஷம்: 'சப்தம் கடத்தைப் போன்ற தால் அனித்தியமாம்' என்பது போன்றது; இதற்கு அனுவயம் என்று மறுபெயருண்டு. விபக்ஷமென்பது: "சப்தம் ஆகாசத்தைப் போன்ற தல்லவாகையால், அனித்தியமாம்" என்பது போன்றது. இதற்கு வெதிரேகமென்று மறுபெயருண்டு.

இவ்விரண்டு பிரமாணங்கள் தவிர வேறில்லை. மற்ற தரிசனங் களுள் கூறப்பட்ட உபமாநாதி பிரமாணங்கள் இவ்விரண்டனுள் அடங் கும் என்று சௌகதர் கொள்வர்.

இனி சௌகத மதத்துள் சம்சாரத்தினியல்பு எப்பெற்றியது என்பது கூறப்படும். பிணி மூப்பு சாக்காடு இம்மூன்றும் பொருந் திய சம்சாரம் துக்கமேயாம். துக்கமயமான இம்மூன்றனுக்கும் கார ணம் பிறப்பேயாம். பிறப்பு பவத்தாலுண்டாகும்; பவம் உபாதானத் தால் ஆகும்; உபாதானம் திருஷ்ணையின் பயனும்; திருஷ்ணைக்கு வேதனை, வேதனைக்கு ஸ்பரிசம், ஸ்பரிசத்திற்கு ஆயதனங்கள், ஆய தனங்களுக்கு நாமரூபம், நாமரூபத்திற்கு விஜ்ஞானம், விஜ்ஞானத் திற்கு சம்ஸ்காரம், சம்ஸ்காரத்திற்கு அவித்தை முறையே காரணங்க ளாகும். காரணகாரிய சந்தானத்திற்கு மூலகாரணமாகிய அவித்தை யொழிய முறையே காரிய வரிசை நீங்கி, பவத்திறம் விலகும். இது நீங்கப் பிணி மூப்பு சாக்காடாகிய துன்ப மொழியும். இச்சந்தானம் பற்றற ஒழிதலே வீடாம்.

சௌகதர் இல்லறத்தில் நிற்கும் ஸ்ராவகரென்றும், துறவு பூண்ட பிக்ஷுக்கள் என்றும் இருவகையாவர். அவரவர் தான சீலாதி ஒழுக் கங்கள் பலவகைப்படும். பிக்ஷுக்கள் தங்கள் பிக்ஷாபாத்திரத்துள் விழுந்தவை யாவும் தூயவாம் என்றெண்ணி மாம்ஸமும் உண்பர். பிக்ஷுக்களிவ்வாறெனில் கிருஹஸ்தரான சௌகதரின் உணவு ஒழுக் கம் கூற வேண்டுவதில்லை.

பௌத்தர் நான்கு வகையாவர், சௌத்திராந்திகர், வைபாஷிகர், மாத்தியமிகர், யோகாசாரர்—என. முதலவர் சுகதனால் போதிக்கப் பட்ட மூல சூத்திரங்களை ஆதாரமாகக்கொண்டு தத்துவம் தெரிந்தா ராதலால் சௌத்திராந்திகர் எனப்பட்டார். சர்வ சரீரிகளும் ஐந்து ஸ்கந்தங்களாலானவை; இவையன்றி ஆத்மா ஒன்று இல்லை; இக்கந் தங்களே, பவமாற்றத்திற்கு மூலப்பொருள்கள்; அனாத்ம பாவனையால்

ஞான சந்தானத்தை முற்றும் ஒழித்தலே மோக்ஷம் என்ற இவை களே சௌத்திராந்திகர் சித்தாந்தம். வைபாஷிகர் இவர்களில் சற்று மாறுபட்டவர். மாத்திய மிகருக்குச் சூனியவாதிகள் என்று மறு பெய ருண்டு. சர்வமும் சூனியமென்பதும், மோக்ஷமும் அவ்வாறும் என் பதும் இவருடைய சித்தாந்தம். யோகாசாரர் என்பவருக்கு விஜ்ஞான வாதிகள் என்று மறு பெயருண்டு. இவர் சர்வம் விஜ்ஞான மயமென் றும், 'ஆலய விஜ்ஞான' மெனும் மூலப் பொருளில் ஐக்கியமாதலே மோக்ஷமென்றும், இதைப் பெறும் வழிகள் யோக முறைகளென்றும் கொள்வர். இவர்களது தத்துவ உரை சாங்கர அத்வைதத்துடன் முற்றும் பொருந்தும். இதுபற்றியே சங்கராசாரியர் "பிரச்சன்ன பௌத்தர்" எனப்பட்டார். இனி,

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று."

என்று கூறி, யாகாதிகளைப் போற்றும் வைதிக தரிசனங்களைக் கண்டித்தும்,

"தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்"

என்று கூறி, தான் கொல்லாது, கொன்று ஈந்ததை விலைக்குக் கொண்டு தின்னலாம் என்று போலி யொழுக்கம் பொருந்திய சௌகத தரி சனத்தை அகற்றி,

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்."

என்றும் "எம்மோத்தில்" கூறியவாறு தன் பரமதர்மமாகிய அஹிம் சையை வற்புறுத்தி விளங்கும் ஜைனதரிசனம் கூறப்படும்.

## ஜைந தரிசனம்

ஜைந தரிசனம் ஜினேந்திரனால் அருளிச் செய்யப்பட்டது. ராகத்வேஷமற்றவனும், மோஹமாகிற மஹா மல்லனை வென்றவனும், கேவலஞான தரிசனங்களைப் பொருந்தினவனும், சுராசுரேந்திரர்க ளால் பூஜிக்கப்பட்டவனும், எல்லாத் தத்துவப் பொருள்களையும் வெளி யிட்டவனும், சமஸ்த கர்மங்களைக் கெடுத்தவனும், பரமபதமாகிற

மோக்ஷத்தை யடைந்தவனுமா யிருப்போன் ஜிநேந்திரன். ராகாதிகளை ஜெயித்தவன் சாமான்யமாய் ஜிநனுவான். ஜிநர்களுக்கு இந்திரனென்னும் ஸ்வாமி ஜிநேந்திரனுவான் தீர்த்தகர புண்யாதிசயங்களையடைந்து பரம ஐஸ்வரியங்களைப் பொருந்திய தேவனும். மாயாலோப மிவ்விரண்டும் ராகமாம்; குரோதமும் மானமும் த்வேஷமாம். ராக த்வேஷ மகன்றவன் - 'வேண்டுதல் வேண்டாமையிலான்' ஆகியவீதராகனுவான். ராக த்வேஷ மிவ்விரண்டுமே வீட்டின் வழியடைக்கும் கல்லாம். மோஹநீயம் மற்றவர்களால் ஜெயிக்க முடியாதாகையால் மஹா மல்லன் எனப்பட்டது. இவற்றை வென்று மீளாப் பதவியாகிய முக்தியை யடைந்ததால் ஜிநேஸ்வரரின் 'அபாயாபகமம்' என்ற அதிசயம் குறிக்கப்பட்டது. இந்திரியாதி சகாயமின்றித் தோன்றும் ஸம்பூர்ண ஞானம் கேவல ஞானமெனப்படும்; ஸம்பூர்ண தரிசனம் கேவல தரிசனமாம். கேவல ஞான தரிசன ஸ்வபாவமுடையவன் பகவான். மற்றும் திரவிய பரியாயாத்மகமாகிய உலகம் முற்றும் வரம்பின்றி ஒருங்கே உள்ளங்கை நெல்லிக் கனிபோல் பார்த்தல் கேவல தரிசனமென்றும் உட்புகுந்தறிதல் கேவல ஞானமென்றும் கொள்ளப்படும். இக்குணங்களினுல் ஸ்வாமியின் ஞானுதிசயங் கூறப்பட்டது. மற்றும் ஜிநேந்திரன், சுராசுராதிகளின் ஸ்வாமியான இந்திரர்கள் நூற்றுவர்களால் வந்திக்கப்படுவான். சதேந்திர பூஜையால் பூஜாதிசயங் குறிக்கப்பட்டது. ஜீவாதி பதார்த்தங்களை உள்ளவாறு உணர்ந்து வெளியிட்ட தன்மையுடைமையால் ஸ்வாமியின் வசனுதிசயமும் குறிக்கப்பட்டது.

சுகதாதி ஏனைய தேவர்கள் தர்ம மார்க்கத்தை வெளியிடவேண்டி ஸம்ஸாரத்தில் திரும்பத் திரும்ப அவதரிப்பார் என்று கூறப்படுகிறார்கள். இவ்வாறு பவாவதாரம் எல்லாக் கர்மங்களும் கெடுக்கப்படாமையின்பாலனும். எல்லாக் கருமங்களையும் வேருடன் கெடுத்துச் சித்திபதமடைந்த ஜிநேந்திரனுக்கு அப்பெற்றிய பவாவதாரமில்லை—பரம வீதராகனுகையால். மற்றும் கேவல ஞானம் பொருந்தியதால் 'வாலறிவ னென்றும்' தேவேந்திரனு லமைக்கப்பட்ட சமவசரணத்துள் திவ்விய தாமரைக் கமலத்தில் நின்று தர்மபிரபாவனை செய்யுமாறு ஸ்ரீ விஹாரம் சென்றதால் 'மலர் மிசை யேகினு' னென்றும், பரம வீதராகனுதால் 'வேண்டுதல் வேண்டாமையிலான்' என்றும், தன்னுல் காதி அகாதி இருவகைக் கர்மங்களும் வேருடன் கெடுக்கப்பட்டமையால் "இருள்சேரிருவினையுஞ் சேராவிறைவன்" என்றும், சம்சார சமுத்திரத்

துள் ஆழ்ந்துகிடக்கும் ஜீவராசிகள் உய்யுமாறு மெய்க்காக்ஷி மெய்ஞ்ஞானம் மெய்யொழுக்கம் என்ற முக்குணம் பொருந்திய வீட்டின் வழியை விளக்கி இகலோக ஆட்சியை வேண்டாது, தரும சக்கரம் வகித்துத் திரிலோக இறைமை பொருந்தியதால் "அறவாழி அந்தணன்" என்றும், அநந்த ஞானாதி அஷ்டகுணங்களால் நிறைந்தானாகையால் "எண்குணத்தான்" என்றும், சிறப்புப் பெயர்கள் கொண்டு வழங்கிவரும் ஜிநேஸ்வரனே இச்சமயத்துள் தேவனாவன். ஜைநதரிசனத்துள் முக்கியமாய்க் கூறப்பட்டுள்ள பதார்த்தங்கள் ஒன்பதாம். அவை ஜீவ, அஜீவ, புண்ய, பாவ, ஆஸ்ரவ, சம்வர, பந்த, நிர்ஜர, மோக்ஷ பதார்த்தங்கள் என்பவையாம். சேதநா லக்ஷணமுடையது ஜீவன். அதற்கு வேறானது அஜீவ பதார்த்தம். இது புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாசம், காலமென ஐவகையாம். ஜீவாஜீவ பதார்த்தங்களிரண்டின் தன்மையேயாம் உலகமும் அதனுள் நிற்கும் எல்லாப் பொருள்களும். ஞானாதி, ரூபரஸாதி குணங்களும், உத்க்ஷேபணாதி கர்மங்களும், ஸாமாந்ய விசேஷ, சமவாய மென்றவைகளும் ஜீவாஜீவ பதார்த்தங்களில் வேறாய் நிற்கும் என்பர் வைசேஷிகர். அவ்வாறு கூறுதல் பொருந்ாது-அவை ஜீவாஜீவ பதார்த்தங்களிலேயே காணப்படுகின்றமையானும், வேறாகக் காணப்படாமையானும். அவை தனித்தனிப் பொருளாக வேண்டப்படின் அசத்தாகி ஒழியும். பௌத்தாதிகளால் கூறப்பட்ட துக்காதி தத்துவங்கள் ஜீவாஜீவ பதார்த்தங்களை வேறு வேறாக வேண்டாமல் ஒன்றுபட்டு மயங்குமாறு கொள்கின்றன. அவ்வழி கூறுதலும் ஒழுங்கன்று, உலக மிவ்விருவகைத்தாதலானும், இவ்விருவகை நீங்கப் பொருள் முயற்கோடுபோல் இல்லாது போமாகலானும். ஜீவாஜீவ பதார்த்தங்களிரண்டுமே மூலப் பொருள்களாம். ஈங்குக் கூறப்பட்ட ஏனைய பதார்த்தங்கள் ஏழும் இவ்விரண்டின் சேர்தல் பிரிதல் காரணமாக உண்டானவை. ஸம்ஸார மோக்ஷாபேக்ஷையினால் அவை தனித் தனியாக வேறுபடுத்திக் கூறப்பட்டன.

புண்யமென்பது சுபபரிணாமமாம். இந்தச் சுபபரிணாமம் நிமித்தமாக அதற்குத் தக்க கர்ம புத்கலங்கள் ஜீவனிடம் பொருந்தி ஜீவனுக்கு சூக்ஷ்மமான கார்மண சரீரத்தையாக்கும். ஜீவனுடைய சுப சேதனையாகிய தன்மை பாவபுண்ய மென்றும் இது நிமித்தமாக ஆத்மனிடம் சேரும் புத்கலராசிகள் திரவிய புண்யமென்றும்—புண்ய பதார்த்தம் இருவகையாகும்.

பாப பதார்த்தமென்பது அசுப பரிணாமமாகும். இது மேற் கூறியவாறே பாவ பாபம் திரவிய பாபமென இருவகைப்படும். ஆஸ்ரவமென்பது கருமம் சுரக்கும் ஊற்றாம். இது மனவசனகாய வியாபாரங்களாலாகும். புண்யாஸ்ரவம், பாபாஸ்ரவம் என ஆஸ்ரவம் இருவகையாம்.

சம்வர பதார்த்தமென்பது ஆஸ்ரவமாகிய வினையின் வழியடைத்தலாம். குப்தி, சமிதி, தர்மம், அனுப்பிரேக்ஷை முதலிய முறைகளைப் பொருந்தி ஒழுகுதலால் கர்மத்தின் ஊற்று அடைக்கப்படும். சர்வ ஸம்வரை தேச சம்வரை யென ஸம்வர பதார்த்தம் இருவகைப்படும். உண்மையில் சுத்த சேதன ஸ்வரூபியான ஜீவன் அனாதி சம்சாரத்துள் நின்று மனவசன காயங்களின் வியாபார நிமித்தமாகத் தோன்றும் சுபாசுப பாவ கர்மங்களாலிழுக்கப்பட்ட திரவிய கர்மமாகிற புத்கலத்திரள்கள் ஆத்மனில் பற்றுவதே பந்தமெனப்படும்.

இவ்வாறு கர்ம வர்க்கணையாகிய புத்கலத்திரள் ஜீவனைப்பற்றி நிற்பதால் ஜீவன் சரீரம் பொருந்தி சம்சாரத்துள் திரியும். பற்று உண்டாக சம்சாரம் உண்டாகும்.

பொது வகையால் பந்தம் நான்கு வகையாகும். அவை பிரக்கிருதி, ஸ்திதி, அனுபாகம், பிரதேசமென்பவையாம். மற்றும் அவை ஞானவரணாதி மூலப் பிரக்கிருதி பேதத்தால் எட்டு வகையாகவும் மதியாதி உத்தர பிரக்கிருதி பேதத்தால் அநேக விதமாகவும் கூறப்படும். ஆத்மனில் பொருந்தியுள்ள கர்மங்களை யுதிர்த்தல் நிர்ஜரை யெனப்படும். இது பன்னிரு வகையான தபத்தினால் ஆகும். "தபஸா நிர்ஜரா" என்று சூத்திரத்துள் கூறியதைக் காண்க. எல்லா வினைகளின் பற்று நீங்கி நிஜஸ்வரூபமடைந்த ஆத்மஸ்வபாவம் மோக்ஷமெனப்படும், "பந்த விப்ர யோகோ மோக்ஷ:" என்றதனால். இவ்வொன்பதுமே ஜைநதரிசனத்துள் நவ பதார்த்தமென விளங்கும்.

இவற்றையே விரிவாகக் கூறுவாம். யாதொன்று ஞானாதி தர்மங்களில் பின்னாபின்னமாயும், விவிருத்திமானாயும், சுபாசுப கர்மங்களுக்குக் கர்த்தாவாயும், கர்ம பலங்களுக்கு போக்தாவாயும், சைதன்ய லக்ஷணமுடையதாயு முளதோ அஃதே ஜீவனெனப்படும். "ஞானாதி" என்ற சொல்லால் ஞானம், தரிசனம், சாரித்திரம், சுகம், துக்கம், வீரியம், பவ்யாபவ்யத்துவம், சத்துவம், பிரமேயத்துவம், குரோதாதி

பரிணாமத்துவம், சம்சாரித்துவம், சித்தத்துவம் முதலிய தர்மங்கள் குறிக்கப்பட்டன.

இவை ஜீவனுடைய பர்யாயங்களாம். இவையே தர்மமெனப் படும். தர்மத்தையுடையது தர்மி. ஈங்கு ஜீவன் தர்மியாம். இது தன் தர்மங்களில் ஒன்றாயும் வேறாயுமுளது. ஜீவன் ஞானாதி தர்மங் களில் முற்றும் வேறாயின் " நான் பார்க்கிறேன்; நான் அறிகிறேன் " என்றும், 'நான் ஞானி' 'நான் சுகீ' என்றும் ஜீவனையும் குணத்தையும் ஒன்றுபடப் பொருத்திக் கூற இயலாது. இவ்வாறு கூறுதல் உலக வியற்கை யாகையால் ஜீவன் ஞானாதி தர்மங்களில் வேறன்று. ஞானாதி தர்மங்களில் ஜீவன் அத்தியந்தம் அபின்னமாயின் 'ஜீவன் தர்மீ' 'ஞானாதிகள் தர்மங்கள்' என்ற வசனங்கள் உளவாகா. அவ்வாறு கூறுதல் மரபாதலான் ஜீவனும் ஞானாதி தர்மங்களும் ஒன்றே யென்ப தும் பொருந்தாது. தர்மியாகிய ஜீவன் தர்மமாகிய ஞானாதிகளில் பின்னாபின்ன தன்மையுடையது என்பது பெறப்படும். இதனால் தர்ம தர்மிகள் வேறே யென்று கூறும் வைசேஷிக தரிசனத்தின் பேத ஏகாந்தமும், க்ஷண பரம்பரையாகிய ஞானமே யொழிய ஆன்மா வேறன்று என்று கூறும் சௌகத மதத்தின் அபேத ஏகாந்தமும் விலக் கப்பெற்றன. சுரநராதி பர்யாயங்களைப் பொருந்தி இகபர பவங்களில் பலவிதமாய் வர்த்திப்பதால் ஜீவன் 'விவிருத்திமான்' எனப்பட்டது. சுபாசுப கர்மங்களைச் செய்தலால் கர்த்தாவாகவும், அவற்றின் பலனை அனுபவித்தலால் போக்தாவாகவும் நிற்கும் இவ்விரு குணமும் ஆத் மாவில் உளவாகையான் " ஆத்மா கர்த்தாவன்று, போக்தா மட்டு மாம் " எனும் சாங்கிய மதக்கொள்கை கண்டிக்கப்படும். ஈங்கு 'ஜீவன் சைதன்ய லக்ஷணமுளது' என்றதனால் 'ஆன்மா ஜடஸ்வரூபி' என்று கூறும் நையாயிகாதி தரிசனங்களின் கொள்கை நீக்கற்பாலது. மற்றும் பூதங்களால் ஆக்கப்பட்ட சரீரத்திற்கு வேறான ஜீவன் என்ற பொரு ளில்லை என்று பௌதிக வாதம் கூறும் சார்வாக மதமும் விலக்கப் பட்டது.

சேதனா லக்ஷணமே முக்கியமாயுடைய ஜீவன் அமூர்த்தமாம். இந்திரிய ஞானத்திற்கு மூலகாரணமாயிருந்தும் தான் அதீந்திரியமாம். ஆயினும் ஸ்வஸம் வேதன பிரத்தியக்ஷத்திற்குப் பொருளாம். மூர்த்த வஸ்துக்களின் அளவையான குருலகு சிறுமை பெருமை என்னும் குணங்கள் ஜீவனிடத்தில் பொருந்தா. சரீரியாகிய ஜீவன், தான் எடுத்த

தேகம் முற்றிலும் பரவியுள்ளதால் தேகத்தில் ஓரிடத்தைக் குறிப்பிட்டு ஈங்குதான் ஜீவனிருக்கிறது என்று சுட்டிக்கூற வியலாது. ஜீவராசி பொதுவாய் இருவகைப்படும்; அவை: சம்சார ஜீவன் சித்த ஜீவனெனப்படும். அநாதி கர்ம சம்பந்தத்தால் அசேதனமான புத்கலத்தாலாகிய சரீரத்தோடு பொருந்தித் தன்னுடைய சுத்ததைதன்ய ஸ்வரூபமிழந்து நான்கு கதிகளிலும் சுழன்றுகிடப்பது சம்சாரியாம். இவற்றை இந்திரியாபேக்ஷயால் ஆறுபேதமாகக் கொள்வது வழக்கம். அவை முறையே ஏகேந்திரிய த்வீந்திரிய திரீந்திரிய சதுரிந்திரிய, பஞ்சேந்திரிய, ஸஜ்ஞிபஞ்சேந்திரிய ஜீவன் எனப்படும். சிலர் மனதை ஒரு இந்திரியமாகக் கொள்வர். அவ்வாறு கூறும்போது கடையிற் கூறப்பட்ட ஜீவவகை ஆறு இந்திரியங்களைப் பொருந்தியவையாம்.

சர்வ உபாதிகளும் ஒழிந்து சுத்தசேதன தன்மையுடன் நிற்கும் ஜீவன் சித்தஜீவ னெனப்படும்.

இனி அஜீவ பதார்த்தம் கூறப்படும்.

சேதன குணமின்றி ஜடஸ்வரூபியாயிருக்கும் பதார்த்தம் அஜீவ பதார்த்த மெனப்படும். அஜீவ பதார்த்தம் தர்மாதர்ம ஆகாசகால புத்கலம் என ஐவகையாம். இவற்றுள் புத்கலமென்பது கூறப்படும். "ஸ்பரிசரஸ கந்தவர்ணவந்தா : புத்கலா" என்று கூறியபடி புத்கலம் இந்திரியங்களுக்கு விஷயமாகி ரூபாதி குணங்களைப் பொருந்தி நிற்கும். புத்கலத்திற்கு மூலகாரணம் பரமாணு. பரமாணுக்கள் சேர்ந்து ஸ்கந்தங்களையாக்கும். புத்கல குணங்களுள் ஸ்பரிசம் என்பது-மிருது, கடின, குரு, லகு, சீத, உஷ்ண, ஸ்நிக்த, ரூக்ஷமென எண்வகைப்படும். ஸ்நிக்த, ரூக்ஷ, சீத, உஷ்ணமென்னும் இந்நான்கு குணங்கள் பரமாணுக்களிடம் உண்டு. ஸ்கந்தங்களில் எட்டுக் குணங்களும் காணப்படும். ரஸமென்பது திக்த, கடுக, கஷாய, ஆமல, மதுரமென ஐவகையாகும். கந்தம் சுரபி அசுரபி என இருவகைப்படும். கிருஷ்ணாதி பேதமுள்ளது வர்ணம். இக்குணங்களையுடையது புத்கலம். இஃது பரமாணுவென்றும் ஸ்கந்த மென்றும் இருவகைப்படும்.

பரமாணு வென்பது புத்கல ஸ்கந்தங்களுக்குத் தானே காரணமாகையால், அந்தியமாயும், தான் மற்றொன்றால் ஆக்கப்படாமையால் தானே காரணமாயும், நித்தியமாயும், இந்திரியங்களுக்குப் புலப்படாது கேவல ஞானத்திற்கு விஷயமாகுமாகையால் அதீந்திரியமாயும், ஆகம

கம்யமாகியும் நிரவயவமாயும் நிற்பது. ஸ்கந்தங்கள் பரமாணுக்கள் இரண்டு முதல் அனந்தமீறுகச் சேர்த்துக் கட்டப்பட்டனவாகிப் பல பேதங்களாக நிற்பனவாம்.

தர்ம பதார்த்தமென்பது லோக முழுதும் வியாபித்து நித்திய மாயும், அரூபியாயும் நிற்கும் திரவியம். இது ஸ்வபாவமாய்ச் செல்லும் ஜீவபுத்கல வஸ்துக்களின் செல்கைக்கு நிமித்த காரணமானது. அமூர்த்தமானதால் ரூபாதிகுணங்கள் இதனிடமில்லை. புண்ய கார்ய மெனப் பொருள்படும் தர்மத்திற்கு இது வேருனது. அதர்மமென் பதும் லோகவியாபி முதலிய குணங்களால் விசேஷிக்கப்பட்டு ஜீவபுத் கலங்களுடைய ஸ்திதிக்கு நிமித்த காரணமாகும். ஆகாசம் என்பது நித் தியமாயும், அரூபியாயும், அவஸ்திதமாயும், மற்ற திரவியங்களுக்கு இருக்க இடம் தருவதாயும் நிற்கும். இது லோகாலோக வியாபியான தாகையால் லோகாகாசம் என்றும் அலோகாகாசமென்றும் இருவகைப் படும். வைசேஷிக தரிசனங்களுள் சப்தம் ஆகாசகுணமெனக்கூறப்படுகிறது. ஈங்கு சப்தம் புத்கலத்தால் உண்டாக்கப்படுதலால் அஃது ஆகாசத்தின் குணமாகாது. காலம் என்பது இதர வஸ்துக்களின் வர்த்தனு காரண மானது. முன் பின் என்னும் கால பேதங்களுக்கு மூலகாரண மானது. நித்தியகாலம் வியவகார காலமென அஃது இருவகைப் படும். நித்தியகாலமென்பது அவிபாகியாகிய கால பரமாணுக்களின் கோர்வையாய் அனுதி அநந்தமாய் நிற்கும். வியவகார காலமென்பது கண் இமைகொட்டுதல், சூரியசந்திரர்கள் செல்கை முதலிய புத்கல பரிணுமங்களை அளவாகக் கொண்டு அமைக்கப்பட்ட கால பேதங் களாம். இவை குறைந்த சமயம் முதலாக, நாழிகை, நாள், மாதம், அயனம் எனப் பல பேதங்களாம்.

ஜீவ, புத்கல, தர்ம, அதர்ம, ஆகாசமென்ற வைந்தும் அஸ்தி காயங்களெனப்படும். அஸ்தி என்ற பதத்தால் உண்மையாயுளவென் பதும், காயம் என்றதால் பெருபிரதேசிகளென்றும் குறிக்கப்பட்டன. ஒரு புத்கல பரமாணு நிற்குமிடம் ஏகபிரதேச மெனப்படும். பல வணுக்கள் கூடிய ஸ்கந்தங்கள் பெரு பிரதேசங்களில் பொருந்துமாகை யால் காயமெனப்பட்டன. தர்மாதர்ம மிரண்டும் சூக்ஷ்மமாயிருந்தும் லோகமளவு வியாபித்திருப்பதால் அளவிலாப் பிரதேசமுடைய வாகை யால் இவையும் காயங்களாம். ஜீவன் உண்மையில் பெரிது சிறிது எனக் கூறப்படாததாகிலும் தான் எடுத்த தேக முழுதும் வியாபித்

திருக்குமாகையால் அஃதும் பிரதேச சமுதாயமுடையதாம். ஆகாசம் மற்ற வஸ்துக்களுக்கு இடம் தருதலால் இஃதும் காயத்துவமுடைய தென்பது நிர்விவாதம் மேலாசம் பஞ்சாத்திகாயங்களால் அமைக்கப் பட்டது.

இனி இவ்வைந்தும் காலத்துடன் சேர்ந்து ஆறு திரவியங்களாம். 'திரவ தீதி திரவியம்' என்றபடி, சமய சமயம் மாறிக்கொண்டிருப்பது திரவியமெனப்படும்.

'குணபர்யபவத் திரவியம்' என்றபடி திரவியம் குணங்களும் பரி யாயங்களும் பொருந்தியதாம். பொன்னுகிய திரவியத்திற்கு வர்ணுதி கள் குணங்கள்; அதனுல் செய்யப்பட்ட குண்டலாதிகள் பரியாயமாம். ஜீவாதி திரவியங்கள் தம்முள் வேறுனதால் தனித்தனி குணங்களும் பரியாயங்களு முடையனவாம். திரவியமும் மற்றதன் குணங்களும் பின்னுபின்ன லக்ஷண முடையவை. குணமும் திரவியமும் வேறுகிப் புலப்படாவிடில் குணமொழிந்து அதனேடு குணியும் இல்லாது போமாகையால் அவை பின்னமேயாம். அவை அத்தியந்தம் பின்ன மென்றும் திரவியமென்பது சமவாய சம்பந்தத்தாலுண்டானதென்றும் கொண்டால் ஒரு குணிக்குப் பல குணங்களும் ஒரு குணம் பல குணி களில் பொருந்தலும் கூடும். மற்றும் குணம் ஆஸ்ரய மற்றும் திரவியம் குணமிழந்தும் காணப்படும். அவ்வாறு காணப்படவில்லையாகையால் குணகுணி அபின்னமாம். வசனத்தால் வேறுகக் கூறப்படுமாகை யால் வேறுயும், திரவியத்தில் பிரிக்கப்படாவாகையால் ஒன்றுயும் நிற் கும். இந்தச் சித்தாந்தத்தினுல் குணகுணி சர்வதா வேறெனக் கூறும் நியாய வைசேஷிகதரிசனங்களும், சத் நிர்குணி எனும் அத்துவைத மதமும், குணகுணி சர்வதா அபின்னமெனக் கூறும் பௌத்த தரி சனமும் விலக்கப்பட்டன.

திரவிய லக்ஷணம் மாறுதலடைதலே யாகையால் திரவிய பரியா யங்களும் அவ்வாறே பின்னுபின்னமாம். திரவியமின்றிப் பரியாய மில்லை; பரியாயமின்றித் திரவியமில்லை. ஒரு திரவியத்தின் பரியாயங் கள் தம்முள் முற்றும் வேறுதலினுல் ஒரு பரியாய மொழிந்துதான் மற் ெருன்று தோன்றும். குண்டல மழிந்து கடகமாகும். குண்டலம் நிற்கக் கடகம் தோன்ருது. முன்னிருந்து அழிந்த பரியாயத்திற்கும், பின் தோன்றிய கடகத்திற்கும் மூல காரணமாய் அழியாது நிற்பது பொன்னுகிய திரவியமாம். ஒரு பரியாயம் கெட்டு மற்ருென்று

தோன்றி, தான் இரண்டிற்கும் அழியாக் காரணமாய் நிற்பதாகிய இம் முக்குணங்களுடையது திரவியம். 'உத்பாத விபயத்ரௌவ்ய யுக்தம் திரவியம்' என்பதைக் காண்க. திரவியாபேக்ஷையால் நித்தியமும் பரியாயாபேக்ஷையால் ஆதலும் அழிதலும் உண்டாகையால் அநித்தியமுமாம் திரவியம். இது சித்தாந்தமாகையால் வஸ்து சர்வதா அநித்தியமெனும் சௌகத மதமும், மற்றது சர்வதா நித்தியமெனும் ஏனைய தரிசனங்களும் நிராகரிக்கப்பட்டன. மேலும் திரவியம் ஆதல் அழிதல் நிலைத்தல் என்ற முக்குணமுடையதென்ற கொள்கை மேனாட்டுத் தத்துவ சாஸ்திர சித்தாந்தத்தோடு ஒற்றுமைப்பட்டிருப்பது கவனிக்கற்பாலது.

கணக்கற்ற குணங்களும், பரியாயங்களும் பொருந்தியுள்ளவையாகையால் ஜீவா ஜீவ வஸ்துக்கள் 'அநேக தர்மாத்மகம்' அல்லது அநந்த தர்மாத்மகம்' எனப்பட்டன. 'தர்மம்' என்பது குணத்தையும், 'ஆத்மகம்' ஸ்வபாவத்தையும் குறிக்கும். வஸ்து பல குணங்களும் ஸ்வபாவமும் உள்ளதால் அதை ஒரு பிரகாரத்தால் முடிவு பெற உணரலும் கூறலும் இயலா. அறிவு அறியப்படும் பொருளைப் பற்றி உண்டாதலானும், அறியப்படும் தத்துவப் பொருள் அநேக தர்மாத்மகமானதானும் தத்துவ ஞானமும் அவ்வாறே அநேகாந்தமாக விளங்கும். இக்காரணம் பற்றியே ஜைந தரிசனம் அநேகாந்த தரிசனம் என வழங்கப்படுகிறது. ஈங்கு அநேகாந்த தரிசன சம்பந்தமான நயம் சப்தபங்கி இவ்விரண்டும் கூறப்படும்.

நயமென்பது அனந்த தர்மாத்மக வஸ்துவை யாதானும் ஒரு பிரகாரத்தால் அறிந்து மற்றதன் ஸ்வபாவத்தை நிச்சயிப்பதாம். திரவியார்த்திக நயம் பரியாயார்த்திக நயமெனப் பொதுவாய் நயம் இருவகைப்படும். ஒரு வஸ்து திரவியாபேக்ஷையால் நித்தியமாகவும் பரியாயாபேக்ஷையால் அநித்தியமாகவும் கொள்ளப்படும். கடம் உடைபட்டபொழுது கடாபேக்ஷையால் அழிவும் கபாலாபேக்ஷையால் உண்டாதலும் மிருத் அபேக்ஷையால் நிலையுள்ள தன்மையும் பெறும். உத்பத்தி விநாசமான பரியாயங்களால் அநித்தியமும் அழியா மண்ணாகிய திரவியத்தை நோக்குமிடத்து நித்தியமும் ஆகிய இவ்விரண்டு தன்மையும் பொருந்திய வஸ்து நித்தியா நித்தியமாக உணரப்படும். ஓரே வஸ்து நித்தியாநித்திய குணங்களைப் பொருந்துதல் நயாபேக்ஷையாலாகும்.

அவ்வாறு கூறுவது குற்றமன்று. பொதுவகையாற் கூறப்பட்ட இவ்விரு நயங்களுள் இரண்டாவதாகிய பரியாயார்த்திக நயம் பின்னும் ஏழுவகையாகக் கூறப்படும். அவையாவன: நைகம நயம், சங்கிரக நயம், வியவகார நயம், ரிஜுஸூத்திர நயம், சப்த நயம், சமபிரூட நயம், ஏவம்பூத நயம். இவற்றுள் நைகம நயமென்பது தொடர்ச்சியாய் நடைபெற்று முடிவுபெறாத ஒரு தொழிலின் முக்கிய அர்த்த சங்கல்ப மாத்திரத்தைக் குறிக்கும். எவ்வாறெனில் விறகு தண்ணீர் முதலியவற்றை எடுத்துச் செல்லும் ஒரு மனிதனை நோக்கி, 'யாது செய்கின்றாய்' என்று வினவ, அவன் 'சமயல் செய்கிறேன்' என்று உத்தரம் கூறுவது நைகம நயத்தால்தான் உண்மையாம். ஏனெனில் பாகசாலையில் சமையல் வேலை செய்யாது நீர்கொண்டு போந்துழி அவன் அவ்வாறு கூறுதல் வேறு விதத்தால் பொருந்தாது. முன் வரும் குதிரை வீரர் முதலிய பரிவாரங்களைக் கண்டு அரசன் வருகிறான் என்று கூறுதலும் இந்நைகம நயம் பற்றியாம்; இராஜனைக் காணாது அவனுடைய பரிவாரங்களைக் கண்டபோது பரிவாரமின்றி வெளிவராத அரசன் நயவிவக்ஷையால் வருகிறானென்று கூறப்பட்டான்.

கால வித்தியாசத்தை அனுசரித்து நைகமநயம் மூன்று வகைப்படும். அவை: வர்த்தமான நைகமம், பூதநைகமம், பாவி நைகமம் என்பவையாம். மேல் கூறப்பட்ட உதாரணம் வர்த்தமான நைகமத்தைக் குறிக்கும். பூதநைகமமென்பது முன்னொரு காலத்தில் நடைபெற்ற தொழிலை நோக்கி உண்டானதாம். இப்போது ஒருநாளைக் குறிப்பிட்டு இந்தத்தினம்தான் விருஷப சுவாமி மோக்ஷமடைந்த நாள் எனக் கூறுவது பூதநைகம நயாபேக்ஷயால் பொருந்தும். பாவிநைகம மென்பது இனி வரப்போகும் விஷயத்தைப்பற்றி ஆனதாம். யுவராஜனை நோக்கி நமது அரசன் வருகிறான் என்பதும் ஒவ்வொரு பவ்விய ஜீவனும் பரமாத்ம ஸ்வரூபத்தையுடையது என்பதும் அவை இனி அடையப்போகும் குணம் பற்றியாதலால் பாவி நைகமமாம்.

நயாபேக்ஷயால் கூறுதல் ஒரு பிரகாரத்தால் உண்மையேயன்றி சமஸ்த பிரகாரத்தால் உண்மையாகாது. எல்லா விதத்திலும் உண்மையெனக் கொண்டால் நயாபாஸமாகும். ஒவ்வொரு ஜீவாத்மனும் பரமாத்மனே என்று ஏகாந்தமாகக் கூறும் அத்துவைத மதக்கொள்கை நைகம நயாபாஸமாகும்.

(2) சங்கிரக நயமென்பது பல வஸ்துக்களின் ஜாதி ஒற்றுமையை பற்றி ஒன்றெனக் கூறுதலாம். சமான்யமாய் பசு, குதிரை முதலிய சொற்கள் ஜாதியைக் குறிப்பது வெளிப்படை. இவ்வாறு தத்துவ விஷயங்களிலும் உலகத்திலுள்ள ஸமஸ்த பதார்த்தங்களேயும் ஜீவா ஜீவங்களென இருவகையாய்க் கொள்ளுதலும் சத் ஸ்வருபத்தை நோக்கி எல்லா வஸ்துக்களும் சத்தேயாம் என ஒன்றுபடக்கூறுதலும் சங்கிரக நயாபேக்ஷையால் பொருந்தும். நயத்தின் வரம்பைக் கவனியாது எல்லா வஸ்துக்களும் ஒன்றே என ஏகாந்தமாய் பிரம்மாத்துவைதம் கூறும் வேதாந்த தரிசனம் சங்கிரக நயாபாஸமாகும்.

(3) வியவகார நயம் : வியவகார நயமென்பது தெள்ளிதில் விளங்கும். சாதாரணமான ஜீவாஜீவ வஸ்துக்களின் வேற்றுமை ஒற்றுமை வியவகார நயத்தினுல் அறியப்படும். இந்நயத்தையே முக்கியமாகக் கொண்டு பிரத்தியக்ஷ பிரமாண பூதமான கடபடாதிகளேயே நித்திய வஸ்துக்களாகக் கொள்ளும் சார்வாக தரிசனம் வியவகார நயாபாஸத்திற்கு உதாரணமாம்.

(4) ரிஜு சூத்திரம் என்பது பரியாய குணத்தினுல் சமயசமயம் மாறுபட்டுவரும் வஸ்துவின் ஒரு சமயத்திலுள்ள தர்மத்தை அனுசரித்து அப்பொருளே விளக்குவதாம். இந்த நயத்தை ஆதாரமாகக் கொண்டு ஒரு வஸ்துவை க்ஷணவர்த்தி எனக் கூறலாம்.

ஒவ்வொரு க்ஷணமும் வஸ்துவின் குணபரியாயங்கள் மாறுதலானும், ஏகாந்தமாய் க்ஷணிகவாதம் கூறும் சௌகதமதம் ரிஜுசூத்திர நயம் ஒன்றையே ஆதாரமாகக் கொண்டு தத்துவம் கூறுதலானும் ரிஜு சூத்திர நயாபாசமாம்.

(5) சப்தநயமென்பது பொருள்படும் சொல்லேப் பற்றித் தோன்றும். அர்த்தத்தைக் குறிக்கும் சப்தம், பால், திணை, வேற்றுமை முதலியவற்றை அனுசரித்துத் திரிதல் தன்மையுடைத்து. பெயர்ச் சொல் ஒருமை பன்மையால் விகுதி பெற்று வேறுபடுதலும் வினேச் சொல் காலத்தை அனுசரித்து வேறுபடுதலும் இலக்கண விதிப்படி விளங்கும். ஆயினும் நயத்தின் தன்மையைக் கவனியாது வேறு வேறு சொற்கள் வேறு வேறு பொருள்களேக் குறிக்கும் என்ற இலக்கண விதியையே முக்கியமாகக் கொண்டு தாரா, நக்ஷத்திரம் என்ற லிங்க வேறுபாடுள்ள சொற்கள் குறிக்கும் பொருள்களும் வேறும் எனக்கொள்வது சப்த நயாபாசமாம்.

(6) சமபிரூட நய மென்பது பல பொருள்படும் ஒரு சொல் தன்மையைக் குறிக்கும். "நானார்த்த சமபிரோகணாத் சமபிரூட:" என்னும் வாக்கியத்தால் காண்க. வாக், பசு, வெனப் பல பொருள் குறிக்கும் கோ வென்னும் சப்தத்தால் இஃது உணரப்படும். பொருள் வேறுபட சப்தமும் வேறாக வேண்டும் என்ற இலக்கண விதி ஒரு பிரகாரத்தால் உண்மையே யன்றிச் சர்வ பிரகாரத்தாலும் அன்று, என்பதே இந்த நயத்தின் உண்மைப் பொருளாம்.

(7) ஏவம்பூத நயமென்பதும் இலக்கண நூல் சம்பந்தமாகும். இது முக்கியமாய்க் காரணப் பெயர்களையே குறிக்கும். சக்ரன் புரந்தரன் இந்திரன் என்னும் பெயர்கள் தேவேந்திரனையே குறித்தாலும் ஒவ்வொரு காரணம்பற்றித் தோன்றிய சப்தங்களாம். இச்சொற்களின் உற்பத்தியைக் கவனித்தால் தேவேந்திரனுடைய வேறு வேறு குணங்கள் சொற்களின் காரணமாக விளங்கும். 'இந்தக் குணத்தை யுடைமையால் இச்சொற் பொருந்தியது.' என்பது ஏவம் பூதநயத்தின் தன்மையாம். ஆகிலும் இவ்விதியை எல்லாப் பிரகாரத்தாலும் உண்மை எனக் கொண்டு சப்தத்தை உபயோகிப்பது நயாபாசமாம். எவ்வாறெனில் கௌவென்னும் வடசொல் பசுவைக் குறிக்கும். அதன் உற்பத்தியை நோக்குமிடத்து செல்வது எதுவோ அது கௌவெனப்படும் என்பதாம். இதை உத்தேசித்து நடந்து கொண்டிருக்கும் போதுதான் பசுவுக்குக் கௌசப்தம் பொருந்தும். நிற்கும் போதாயினும், படுத்திருக்கும்போதாயினும் பசுவை கௌவெனக் கூறுதல் பொருந்தாது என ஏகாந்தமாய் வாதித்தல் இந்த நயத்தின் ஆபாசமாகும்.

அநேகாந்த தரிசனமாகிய ஜைன மதத்துள் மேற்கூறிய நயங்களை ஆதாரமாகக்கொண்டு தத்துவப் பொருள் நிச்சயிக்கப்படும்.

இனி சப்தபங்கி யென்பது கூறப்படும். முன்னமே வஸ்து ஸ்வரூபம் நித்தியா நித்தியமெனக் கூறப்பட்டது. ஒரே வஸ்து ஒரு பிரகாரத்தால் நித்தியமென்றும் மற்றொரு பிரகாரத்தால் அனித்தியமென்றும் கூறப்படுதல் அவிருத்தமாம். உண்டு, இல்லை என்னும் இருவித குணங்களும் ஒரே வஸ்துவில் பொருந்தி இருக்கும். ஒரு கடத்தை நோக்கி இது மண்ணாலானது, பொன்னாலானது அன்று எனக் கூறும்போது ஒரே வஸ்துவில் மண் தன்மை உண்டென்பதும் பொன் தன்மை இல்லை யென்பதும் விளக்கப்பட்டன. இவ்விரு குணங்களும் ஒரே வஸ்துவில் ஒரே சமயத்தில் சேர்ந்திருப்பதால்

மேற்கூறிய இருவாக்கியங்களும் தம்முள் மாறுபட்டிருந்தும் ஒரே பொருளில் பொருந்தும். இவ்வாறே கூடத்திலுள்ள கடத்தைநோக்கி கூடத்தில் கடம் உண்டு வாசலில் இல்லையென்று விதிபிரதிஷேத வாக்கியங்கள் இரண்டும் ஒரே கடத்தைக் குறித்தலும் பொருந்தும். காலத்தை அனுசரித்து நேற்றுக் கடமிருந்தது இன்றைக்கு அதுது உடைந்து போனதால் இல்லை, என உண்டு இல்லை யென்ற முரண்பட்ட வாக்கியங்கள் கால பேதத்தால ஒரே கடத்தைக் குறிக்கும். இங்ஙனம் ஒரு வஸ்துவின் திரவியம், க்ஷேத்திரம், காலம், பாவம் என்ற நான்கு தன்மைகளை நோக்கி உண்டு இல்லை என்னும் முரண்பட்ட இருசொற்களும் ஒரே பொருளில் ஒன்றுபடக் கிடத்தல் அசாத்திய மன்று. பொருள்களின் தன்மையை ஐபமற அறிந்தோர்க்கு இவ் விஷயம் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல் நன்கு விளங்கும். இத் தத்துவப் பொருளை மூல ஆதாரமாகக்கொண்டு ஏற்பட்டதே சப்தபங்கி எனப்படும். இவ்வடசொல் தொடர்ச்சிக்கு ஏழுவகைப் பாகுபாடுகள் எனப் பொருள்படும். இவ்வேழு வகையுள் முன் கூறிய உண்டு இல்லை என்ற இருதன்மை மூல பங்கங்களெனப்படும். (1) ஸ்யாத் அஸ்திகட: (2) ஸ்யாத் நாஸ்திகட: என்ற மூல வாக்கியங்கள் ஒரே கடத்தை முன் சொல்லியவாறு குறிக்கும். ஸ்யாத்தென்னும் வட சொல் ஒரு பிரகாரத்தால் எனப் பொருள்பட்டுக் குறிக்கப்பட்ட குண மன்றி இதர குணங்களும் வஸ்துவில் உளவென்பதைக் காட்டும். அஸ்தி, நாஸ்தியென்ற முரண்பட்ட குணங்களிரண்டும் ஒரே வஸ்து வில் ஒரே சமயத்தில் ஒன்றுபடக் கிடந்தமையால் ஸ்யாத் அஸ்தி நாஸ்தி கட: என இருகுணங்களையும் முறையே ஒரு வஸ்துவில் பொருத்திக் கூறுதல் மூன்றும் பங்கமாகும். அவ்விரண்டும் ஒரே வஸ்துவின் குணமாகையானும் இவ்விரு குணங்கள் ஒருங்கே கூறப் படுமோவெனின் அவ்வாறு கூறுதல் இயலாது, முரண்பட்ட குணங் களை ஒருங்கே கூற வசனமில்லையாதலின்; இக் காரணம் பற்றிக் கடத் தின் ஸ்வரூபம் வசனத்தை மீறினதாகையால் அவாச்சியமாம். இதனை லேயே ஸ்யாத் அவக்த்தவ்வியம் கட: என நான்காம் பங்கம் தோன் றும். கடத்தின் தன்மை எல்லா விதத்திலும் அவாச்சியமோவெனின் அவ்வாறன்று. முரண்பட்ட குணங்களை ஒருங்கே கூறச் சொல் இல்லா விடினும் அக்குணங்கள் தனித்தனியே கூறப்படும் ஆகையால் அவாச்சிய மாகிய கடமே ஒரு விதத்தால் உண்டென்றும் ஒருவிதத்தால் இல்லை

என்றும் முறையே உண்டு இல்லை என்றும் கூறப்படும். இவையே ஸ்யாத் அஸ்தி அவக்த்தவ்வியம் கட: ஸ்யாத் நாஸ்தி அவக்த்தவ்வியம் கட: ஸ்யாத் அஸ்தி நாஸ்தி அவக்த்தவ்வியம் கட: என மற்ற மூன்று பங்கங்களாகத் தோன்றும். இவ்வேழுமே சப்த பங்கங்களாம். ஏழு பிரகாரமான பொருளின் தன்மையை ஏழுவித வாக்கியங்களால் விளக்கும் முறையே சப்தபங்கி எனப்படும். ஜைன தரிசனத்திற்கு சப்தபங்கி மூலமெனக் கூறலாம். இதை ஆதாரமாகக்கொண்டே தத்துவப் பொருள் உள்ளவாறுணரப்படும். வஸ்துவை நித்தியாநித்திய மென்பதும் சத் அசத் என்பதும், பின்ன பின்னமென்பதும் இவ்வாறே சப்தபங்கி முறையின்படி ஒரே வஸ்துவில் உணரப்படும்-வஸ்து யாதார்த்மியம் சப்த பங்கி முறைப்படி கிடைத்தலான். ஜைன தரிசனத்திற்கு ஸ்யாத்வாதம் என மறுபெயர் உண்டு. ஜின சாஸனத்திற்கு ஸ்யாத்வாதமே முக்கிய குறிப்பாகும். ஸ்யாத் வாதத்தின் உண்மைப் பொருளையுணராது "முரணக் கிடந்த குணங்களை ஒரே வஸ்துவில் ஏற்றிக் கூறும் ஜைன மதம் உண்மையன்று" எனப் பழித்துக் கூறும் தத்துவஞானிகள் கண்டாராம் தாம் கண்டவாறு. மற்றும் அவர்கள் 'அநேகாந்த தரிசனம் உண்மையாகில் பிரமாணம் அப்பிரமாணமாகும் ; ஸர்வக்ஞனும் அஸர்வக்ஞனும்; ஸித்தனும் அஸித்தனும்' என்று குற்றம் கூறுவர். இந்த தூஷணை, வசனமாத்திரமேயாம், போதுமான ஆதாரம் இன்மையால். பிரத்தியக்ஷாதி பிரமாணங்கள் தம்தம் விஷயங்களில் பிரமாணமாகுமேயன்றி இதர விஷயங்களில் அப்பிரமாணமாகும்; ஆகம விஷயமான பரோக்ஷ வஸ்துக்கள் இந்திரிய ஞானத்திற்கு விஷயமாகமாட்டா. ஆகையால் ஒவ்வொரு பிரமாணமும் தம்தம் விஷயத்தில் பிரமாணமாயும் இதர விஷயங்களில் அப்பிரமாணமாயுமிருப்பது அவிருத்தம். அவ்வாறே சர்வக்ஞன் தன்னுடைய கேவல ஞானத்தை நோக்கி சர்வக்ஞானியாயும் சம்சார ஜீவனாயிருந்து மறைபட்ட மதிஞானாதிகளைப் பொருந்தியதன்மையை நோக்குமிடத்து அஸர்வக்ஞனையும் இருக்கலாம். அப்படியே ஸர்வ கர்மங்களையும் கெடுத்த சுத்தாவஸ்தையில் சித்தனையும் கர்மப் பற்றுள்ளபோது அசித்தனையு மிருந்தானென்பது ஒருங்கே பொருந்தும். ஒரு ஜீவன் ஏகாந்தமாய்ச் சித்தனையிருப்பின் சம்சாரம் இல்லா தொழியும்; நித்திய சம்சாரியே யாகின் மோக்ஷம் ஆகாச புஷ்பமாம். சம்சாரம் பிரத்தியக்ஷமாகையாலும் மோக்ஷம் ஆகமப் பிரமாண பூதமாகி சர்வ ஜீவன்களாலும் விரும்பப்பட்டதாகை

யாலும் அநேகாந்த மதம் திருஷ்டேஷ்டத்திற்கு அவிருத்தமாகி விளங்கும்.

மேலும் ஸ்யாத்வாதம் பௌத்தாதி தரிசனங்களிலும் காணப் படுகிறது. பௌத்த தரிசனத்துள் இந்திரிய பிரத்தியக்ஷம் ஸ்வஸம் வேதன பிரத்தியக்ஷம் என்ற பிரமாணங்கள் வஸ்துக்களும் ஞானமும் கதஞ்சித் க்ஷணிகமென்றும் கதஞ்சித் அக்ஷணிகமென்றும் கொள்ளப் பட்டாலொழியப் பொருந்தா.

நியாய வைசேஷிக தரிசனங்களிலும் ஸ்யாத்வாதம் ஒருவாறு காணப்படுகிறது. ஓரே தூபகடம் ஒரு பக்கத்தில் குளிர்ச்சியாயும் வேறு பக்கத்தில் உஷ்ணமாயும் ஸ்பரிசிக்கப்படும். ஓரே நெல்லிக்காய் இளாக்காய்க்குப் பெரிதென்றும் வில்வக்காய்க்குச் சிறிதென்றும் கூறப் படும். ஓரே புருஷன் தன் பிதாவுக்குப் புத்திரனென்றும் தன் சுத னுக்குப் பிதாவென்றும் கூறப்படுவான். 'அபரசாமான்யம்' ஒரு பிரகாரத்தால் சாமான்யமென்றும் வேறு பிரகாரத்தால் விசேஷ மாகவும் கூறப்படும். திரவியத்வம் என்பது ஒன்பது திரவியங்களி லும் சமான்யமாய் விளங்குவதால் சாமான்யமென்றும் குண கர்மங் களுக்கு வேறானதால் விசேஷமென்றும் கூறப்படும். இவ்விதமே, குணத்வ கர்மத்வங்கள் சாமான்யமென்றும் விசேஷமென்றும் இருவித மாய்க் கூறப்படும். இவ்வாறு நையாயிக வைசேஷிகர்கள் தாமே ஸ்யாத் வாதம் பலமாய்ப் பேசிப் பிறரிடத்தில் மற்றதைத் தூஷிப்பது எங்ஙனம்?

சாங்கிய மதத்தினரும் சத்வ ரஜஸ் தமோ குணங்கள் தம்முள் முற்றும் வேறுபட்டிருந்தும் பிரதானமென்னும் மூலப் பொருளில் ஒருங்கே மயங்கிக் கிடக்கும் எனக் கூறுவர். ஓரே வஸ்துவில் முரண் பட்ட பல குணங்கள் பொருந்தியுளவென்பது அநேகாந்த மன்றோ. வேதாந்த தரிசனத்திலும் அநேகாந்தம் விளங்குகிறது. இராமாநுஜ கொள்கையின்படி ஜீவன் பிரமனில் வேறென்றும் ஒன்றென்றும் கூறு வது பொருந்தும். சாங்கர மதத்திலும் மாயை என்னும் ஓரே பொருள் சத் என்றும் அசத் என்றும் கூறப்படுகிறது. மற்றும் தத்துவ ஞானம் வியவகார நயத்தாலும் பாரமார்த்திக நயத்தாலும் அறியப்படுமென் பர் அத்துவைதிகள். ஸ்வபக்ஷ சாதகமாகியுள்ள அநேகாந்தம் பரபக்ஷத் தில் ஏன் தூஷிக்கப்பட வேண்டும். ஆகையால் அநேகாந்த மதம் சர்வ தரிசன சம்மதமென்பது சித்தமாகும்.

ஜீவாஜீவ பதார்த்தங்கள் விஸ்தாரமாய்க் கூறப்பட்டமையானும் ஏனைய பதார்த்தங்களும் அவ்வாறே கூறப்படின் நூல் விரியும் என்ற பயத்தினாலும் முன்னமே அவை சுருங்கக் கூறப்பட்டிருப்பதானும் புண்ணிய பாப ஆஸ்ரவ, பந்த சம்வர, நிர்ஜரை என்ற பதார்த்தங்கள் இங்கு மற்றுங் கூறப்படவில்லை. முக்கியமாகையால் மோக்ஷ பதார்த்தத்தின் ஸ்வரூபம் இங்குக் கூறப்படும். சரீர பஞ்சேந்திரியங்களும் ஆயுராதி பாஹ்ய பிராணன்களும் புண்ணியா புண்ணிய கர்மங்களும் புனர்ஜன்ம கிரகண ஏதுவாகிய கஷாயாதிகளும் அத்தியந்தம் விலக்கப் படுதலே மோக்ஷமெனப்படும். "பந்தஹேத்வபாவ நிர்ஜராப்யாம் க்ருத்ஸ்ன கர்ம விப்ரமோக்ஷோ மோக்ஷ:" என்ற சூத்திரத்தினால் இதனைக் காண்க. அத்தியந்தமென்ற சொல்லால் கர்ம நிர்மூலனம் குறிக்கப் பட்டதேயன்றிச் சர்வ குண ஹானியன்றாகையால், மோக்ஷம் நிர்க் குணத்துவத்தைக் குறிக்காது. ஒரு வஸ்துவின் குணம் ஸ்வபாவ, விபாவமென இருவகைப்படும். ஸ்வர்ணம் ஸ்வபாவமாய் மஞ்சள் நிற முடையது. பூமியிற் கிடந்து பாஷாணாதிகளில் பொருந்தி தன் சுத்த குணம்மாறிக் களங்கமடைந்தால் விபாவகுணம் பெறும். அக்கினியி னால் புடம்போட்டுச் சுத்தப் படுத்தும்போது களங்கம் முற்றும் நீங்கச் சுத்த ஸ்வர்ணம் தன்னுடைய ஸ்வபாவ குணத்தைப் பூர்ணமாக அடையும். அவ்வாறே ஜீவனும் சம்சாரத்துள் திரியும்போது தன் னுடைய சுத்த சைதன்ய ஸ்வரூபம் இழந்து உபாதி வசத்தால் விபாவகுணம் பெற்று நிற்கும். தபசினால் சர்வ கர்மங்களையும் நிர் மூலமாக தகித்துச் சுத்தசேதன ஸ்வரூபம் பெற்றுத் தன்னில்தானே நிற்பது மோக்ஷமெனப்படும். சேதன குணம் ஆத்மனின் அன்வய குணமாகையால் அது ஒருபோதும் ஆத்மனை விடாது, உபாதி வசத்தால் மறைப்பட்டும் உபாதி நீங்க விளங்கியும் நிற்கும். விடப் படுவது அன்வயமல்லாத விபாவ குணங்களான கர்மங்களேயாம். சுத்த சேதன ஸ்வரூபமே கேவல ஞானம் கேவல தரிசனமெனப்படும். அனந்தஞானம், அனந்த தரிசனம் தோன்றிச் சுத்தாத்ம ஸ்வரூபம் விளங்கியபோது இக்குணங்களை விட்டு நீங்காது, (அவினாபாவியான) தோன்றும், அனந்த சுகமாகும் மோக்ஷ சுகம் உபமாதீதம் என்பதும் அதீந்திரிய மென்பதும் சர்வ சம்மதம்.

நையாயிக வைசேஷிக தரிசனங்களுள் மோக்ஷமென்பது ஆத்மன் புத்தி முதலிய எல்லாக் குணங்களையும் விலக்கி நிற்பதேயாம்.

புத்தியாதி சமஸ்த ஆத்ம குணங்களும் நீங்கியவிடத்து மோக்ஷசுகம் ஆத்மனுக்கு எவ்வாறாம். பௌத்த மதத்துள் ஞானசந்தான மொழிந்து நிக்லேசாவஸ்தையைப் பெறுதல் மோக்ஷமாம். காரண காரியசந்தான மொழிந்து சூன்யமடைந்தபோது மோக்ஷமும் மோக்ஷ சுகமும் எவ்வாறு தோன்றும். சாங்கிய மதத்துள் நிர்க்குணனும் அகர்த்தாவாயும் இருக்கும் புருஷன் சுகதுக்கங்களை மட்டும் புஜிக்கிறான். சுகதுக்கங்களும் அசேதன வஸ்துவான பிரக்கிருதியினால் உண்டாக்கப்பட்டுப் புருஷனுடைய அஞ்ஞானத்தால் அநுபவிக்கப்படுகின்றன. பிரக்கிருதி வசனாயிருந்து சுகாதிகளை உண்ணும் ஆத்மா விவேகஞானம் பெற்று, தான் பிரக்கிருதியில் வேறென்றும் அசேதன ஸ்வரூபி என்றும் உறுதியாய்ப் பற்றிப் பிரக்கிருதி சம்பந்தம் முற்றும் நீங்கி நிற்பதே மோக்ஷமெனப்படும். மோக்ஷாவஸ்தையில் ஆத்மன் அபோக்தாவாயிருப்பதாலும் நிர்க்குணனாயிருப்பதாலும் மோக்ஷமும் மோக்ஷசுகமும் எவ்வாறு பொருந்தும். இங்ஙனமே அத்வைத தரிஸனத்துள் மோக்ஷசுகமென்பது பொருந்தாது. ஏனெனில் மோக்ஷாத்மன் நிர்க்குணனெனப்பட்டானாகையால்.

இப்பெற்றிய பெரும்பேற்றை அடைதல் எவ்வாறெனில் தூய காட்சி, தூய அறிவு, தூய ஒழுக்கம் என இம்மூன்றும் பொருந்தி நிற்பதேயாம். சம்யக்தரிசன ஞானசாரித்திராணி மோக்ஷமார்க்கம் என்னும் சூத்திரத்தால் இதனைக் காண்க. தரிசனமென்பது தத்வப்பொருளில் சிரத்தை. ஸம்யக் என்பது உண்மைப்பொருளை நம்புதலாம். உள்ளவாறு அறியாது தான் கண்டவாறு கொள்ளும் எல்லா மூட பக்திகளும் இதனால் விலக்கப்பட்டன. இவ்வாறே சம்யக் ஞானமென்பதால் மயங்கிய தத்துவஞானம் விலக்கப்பட்டது. சம்யக் சாரித்திரமென்பதால் சமஸ்த குமார்க்கங்களும் நீக்கப்பட்டன. அன்றியும் தரிசனம், ஞானம், சாரித்திரம் இம்மூன்றும் தனித்தனியே நிற்பின் பலன்தரா. ஒரு ரோகி தன் ரோக நிவாரணம் வேண்டியபொழுது நோயை ஒழிக்க மருந்துண்டென்ற நம்பிக்கையும் மருந்தின் தன்மை இப்பெற்றியதென்ற ஞானமும் அம்மருந்தை உட்கொள்ளும் ஒழுக்கமும் ஆகிய மூன்றும் பொருந்தினாலொழியச் சுகம் பெறான். இம்மூன்றில் இரண்டுமட்டுமிருந்தாலும் பயன்தரா. அவ்வாறே சம்ஸாரமாகிய கொடிய நோயை ஒழிக்க விரும்பும் ஜீவன் மேற்கூறிய மும்மணிகளையும் அரணாகக்கொண் டொழுகற்பாலது. ரத்தினத்திரயம் மோக்ஷமார்க்க

மெனக் கொண்டதால் பக்தி ஒன்றையே மோக்ஷத்தின் வழியென்றும் ஞானமே மோக்ஷ வழி யென்றும் சாரித்திரமே மோக்ஷ வழி யென்றும் மோக்ஷ மார்க்கத்தைக் குன்றக் கூறும் ஏனைய தரிசனங்கள் கண்டிக்கப்பட்டன. இம்மூன்றுமே பவரோக மந்திரமாகி மோக்ஷத்துள் செலுத்தும்.

நவபதார்த்த வழியாய் ஸ்பாத்வாத வாஞ்சனம் பெற்று விளங்கும் ஜைன தரிசனம் கூறப்பட்டது.

"கலையிலா வறிவனீ கலங்கிலா வழகுநீ
மலைவிலா மதனுநீ மறுவிலா மதனுநீ
யுலகினுள் ளாயுநீ யுலகினுள் ளாயொரு
நிலையிலா நிலையைநீ யாகினு மிறைவனீ."

அமலனீ யறிவனீ யருகனீ யசலனீ
விமலனீ வீரனீ வோதி லொருவனீ
தமிலனீ துறவனீ சுகதனீ சிவனுநீ
கலடனீ கருணைநீ கைவலச் செல்வனீ.

இறைவனீ ஈசனீ எண்குணத் தலைவனீ
பொறியிலா வறிவனீ பூசனைக் கிறைவனீ
மறுவிலா வொருவனீ மாதவத் தலைவனீ
சிறியயா னின்குணஞ் செப்புதற் கரியனீ.

ஸ்ரீ : ஜிநாயநம:

# தெய்வீகம்பொருந்திய
# மேருமந்தர புராண கதைச்சுருக்கம்.

## 1 - வது : வைசயந்தன் முத்திச்சருக்கம்

இந்நிலவுலகில் ஜம்பூத்வீப மகா விதேகத்து, 'கந்தமாலினி' என்னும் நாட்டில், அறம்பொரு ளின்பங்களால் மிகவும் உயர்ந்து விளங்கும், 'வீதசோக' மென்னும் நகரம் உளது. அந்நகரத்தை யாண்ட மன்னர் மன்னவன், நீநயமகன்ற காக்ஷியும், நன்னயமமர்ந்த மாக்ஷியுமுடையனாகி, கொடையால் கற்பகமும், சுருதிப் பொருளால் சமுத்திரமும் நிகர்க்க, வேற்றரசர்க்கெல்லாம் கூற்றமொத்து விளங்கிய, 'வைசயந்தன்,' என்னும் நாமமுடையனாகும். அவ்வரசனது மகா தேவி, அழகுவாய்ந்த, 'சர்வஸ்ரீ,' யென்பாள். அரசனுடன் இஷ்ட விஷய சுகபோகங்களை யனுபவித்து இனிது செல்கின்ற காலத்து, சர்வஸ்ரீ, கருப்பமுற்று நவமாச பரிபூர்ணமாகிய பின், ஓர் ஆண் குழந்தையை யீன்றாள். அக்குழந்தைக்கு, 'சஞ்சயந்தன்,' என்று நாம கரணஞ்செய்து வளர்க்கு நாளில், சர்வஸ்ரீ, 'சயந்தன்,' என்னும் மற்றொரு குமாரனையும் பெற்றனள்; சஞ்சயந்தன் வளர்ந்து யௌவன பருவத்தை யடைந்ததும், தாய் தந்தையர் ஓர் ராஜகன்னிகையை அவனுக்கு மணம் புணர்வித்தார்கள்.

அம்மாதுடன், சஞ்சயந்தன், போகமனுபவித்துச் செல்லுகின்ற நாளில், அவள் கருப்பமுற்று, 'வைசயந்தன்,' என்னும் குமாரனைப் பெற்றனள். புத்திர பௌத்திர பாரங்கதனாகிய, வைசயந்த மகா ராஜன், மகா சந்தோஷ சித்தத்தனாகி, தானதர்மங்கள் செய்து வந்தான். அக்காலத்தில், அந்நகரில், 'அசோகம்,' என்னும் உத்தியானத்து, சுவயம்புநாம தீர்த்தங்கரர் ஸமவஸரணம் எழுந்தருளி யிருக்க, அதனை அரசன் அறிந்து, விசோதிபரிணாமத்தால் துதித்து, அந்த சமவஸரணம் சென்று உட்புகுந்து, திரிப்பிரதக்ஷணம் செய்து, பகவானுடைய திரிமூர்த்தியினைக் கண்டு, விசோதியால் ரூபஸ்தவ,

வஸ்துஸ்தவ, குணஸ்தவங்களால் துதித்து, தத்துவங்களை வினவ, கேவலஜ்ஞானியாகிய தீர்த்தங்கரர், ஜீவ, அஜீவ, புண்ணிய, பாவ, ஆஸ்ரவ, பந்த, ஸம்வர, நிர்ஜர, மோக்ஷங்களென்னும் நவபதார்த்த சொரூபங்களை உணர்தலே சம்மியக்ஞானமும், தெளிதலே தரிசனமும், அதனைத் தரித்தலே ஸம்மியக் சாரித்திரமுமாமென்றும், அவைகளே மோக்ஷமார்க்கமென்றும் உபதேசித்தருளினர். இதைக்கேட்டு மன்னன் ஸம்ஸார விரக்தனாகி, தனது ஜேஷ்ட புத்திரன் மிசை ராஜ்ஜியபாரத்தை வைத்து, அவனுக்குச் சில தருமங்களைச் சொல்ல, அவனும் தருமசித்தத்தனாகி, "எனக்கு ராஜ்ஜியபாரம் உறுதியானதல்ல," வென்று அரசுரிமையை ஏற்றுக்கொள்ள மறுத்தான். பின்னர் அரசன் கனிஷ்டனாகிய சயந்தனை இராஜபட்டத்தில் ஸ்தாபிக்கக் கருதி, அரசுரிமையை ஏற்றுக்கொள்ளுமாறு அவனிடம் கூறினான்; அவனும் இசைந்திலன். அதனால் தனது பௌத்திரனாகிய வைசயந்தனுக்கு ராஜ்ஜிய பட்டாபிஷேகம் செய்து, அரசனும், குமாரரிருவரும் சமவஸரணமடைந்து, சர்வசங்க பரித்தியாகமாகிய ஜினதீக்ஷயினைக் கொண்டார்கள்.

இம்மூவர்களுமே முனிவர்களாகி, அரிய சாரித்திரங்களைத் தாங்கிச்செல்கின்ற காலத்தில், வைசயந்த மகாமுனிகள், ஒரு பர்வத சிகரம்சேர்ந்து, யோகத்தில் தளர்வின்றிச் சுக்லத்தியான பலத்தால் காதி கர்மங்களைக் கெடுத்து, அனந்தஜ்ஞானாதி அனந்த ஸதுஷ்டயங்களை அடைந்து, ஸயோகிஜினராகி விளங்கினர். அப்போது சதுர்ணிகாய அமரர்களும் வந்து அவரைத் துதித்து, அவருக்குக் கேவலபூஜை செய்தனர். அங்ஙனம் செய்கின்ற காலத்தில் தரணேந்திரன், மிகவும் அழகாகத் தனது ரூபத்தை நிரூபித்துக் கொண்டு, அங்கு பூஜார்த்தமாக வர, அவ்வுருவத்தைச் சயந்தனென்னும் முனி கண்டு, 'எனது தவத்தால் இனி நான் இவ்வுருவாக வேண்டும்,' என்று, நீங்கிய காட்சியதாக நிதானசல்லியத்தை உற்று ஓங்கிய உலகம் வேண்டாது உயிகொண்ட ஒருவனைத்துப் பவணலோகத்தில் தரணேந்திரனாயினன். வைசயந்தரென்னும் ஸயோகிஜினபட்டாரகர், ஒழிந்த அகாதி வினைகளையும் வென்று சித்தக்ஷேத்திரத்தை அடைந்து ஸித்தபரமேஷ்டியாய் அனந்தஜ்ஞானாதி அஷ்டகுணங்களையெய்தித் திரிலோக சூடாமணியாயினர். ஒழிந்த சஞ்சயந்தரென்னும் மகா முனிகளது சரிதையை யினிக் கூறுவோம்,

# 2-வது: சஞ்சயந்தன் முத்திச்சருக்கம்

பஞ்சம கதியை உற்ற வைஜயந்தருக்குச் சிறப்புச் செய்து, தேவர்கள் தமதிடம் சென்றனர். சஞ்சயந்த மகாமுனியும், பகவானை வணங்கிப்போந்து குறைவில்லாத சாரித்திரங்களைத் தாங்கி, பீமாரண்ணியமென்னும் வனத்தில் தியானத்திலிருந்தனர். அப்போது வித்துத் தந்தனென்னும், வித்தியாதர அரசன், ஆகாசமார்க்கமாக விமானத்தில் சென்றான். அம்முனிவர் இருக்குமிடத்தைச் சமீபித்தவுடனே அந்த விமானமானது செல்லாமல் நின்றது. அதுகண்டு, அவன் ஆச்சரியமடைந்து, அதிக கோபாவேகத்தனாகிச் சஞ்சயந்தரென்னும் இம்முனிவரைக் கண்டு பொறாதவனாகி, இவரைத் தூக்கித் தனது விமானத்தில் வைத்துக்கொண்டு விஜயார்த்த பர்வதத்தின் வடகீழ்ப்புறம் அடைந்து, குமுதவதி, சொர்ணவதி, அரிவதி, கஜவதி, சண்டவேகை என்னும் ஐந்து நதிகளும் ஒன்றாகச் சேரும் தடத்தில் உற்றபோது அதற்கு மேல் விமானம் செல்லாமல் நின்றுவிட்டது. அப்படிச் செல்லா வகையைக் கண்டு அவன் முனிவரை அவ்விடத்தில் தள்ளிவிட்டுப் பலவித உபத்திரவங்கள் செய்தனன். அங்ஙனம் செய்தும் முனிவர், அவனைக் கோபியாராகி, “இது நம்முடைய வினைகளின் பயன்,” என்று தியானத்தில் சலியாது நிற்க, அந்த நீசன் இவரை விட்டு நீங்கிப் போய்த் தனதிடஞ் சேர்ந்து, அங்குள்ள சில அறிவிலிகளைக் கூட்டிக்கொண்டு, மீண்டும் முனிவரிருக்குமிடம் வந்து, பொறுக்கலாகாத சில உபத்திரவங்களைச் செய்தான். அப்போதும், முனிவரர், சமாதியில் தளர்வின்றிச் சுக்கிலத்தியான பலத்தால், காதி கர்மங்களை வரிசைக் கிரமமாகக் கெடுத்து, அனந்தஜ்ஞானாதி சதுஷ்டயங்களை அடைந்தார். அங்ஙனம் அடைதலும் கேவல பூஜார்த்தமாக மூவுலகத்துள்ள தேவர்களும் அங்கு வந்தடைந்தார்கள். பொல்லாங்கு செய்த வித்துத்தந்தன் திகைத்து வெகு தூரத்தில் போய் வீழ்ந்து கிடந்தனன். தேவர்கள் கேவல பூஜையைச் செய்து, சில துதிகளைச் சொல்கின்ற காலத்தில் சஞ்சயந்த பகவான், அகாதி கர்மங்களைக் கெடுத்து, உலகுச்சியை அடைந்தனர்.

அதன்மேல் பரிநிர்வாண பூஜைக்காகப் பல தேவர்களும் வந்தார்கள். அப்போது, முன்னம் சயந்தனுகி நிதான சல்லியத்தால், பவண லோகத்தில் அவதரித்த தரணேந்திரனும் வந்து, முக்தி யடைந்த பகவான் தனது சுற்றத்தாரென்று, மிகச் சந்தோஷத்தை யடைந்து, இவரை வணங்கி நின்றனன். அங்ஙனம் நின்ற அவன் பக்கத்தில் வித்துத்தந்தனுல், முனிவரை உபசர்க்கம் செய்யப்பட்ட ஆயுதங்களும், கற்களும், மரங்களும் கிடப்பக்கண்டு, தனது அவதிஜ்ஞானத்தால், வித்துத்தந்தன் செய்த தீங்கையுணர்ந்து, யாவர்களும், நடுங்கும்படி ஓடி அவனைப் பாதத்தால் உதைத்து வீழ்த்தினன். அப்படி உதைக்க, வீழ்ந்தானை அவனது சுற்றத்தோடும் நாகபாசத்தால் கட்டிச் சமுத்திர நடுவே பெய்வேனெனத் தரணேந்திரனுரைத்தான். அவ்வாறு அவன் கோபித்துச் சொன்னபோது, அந்தத் தரணனது கோபத்தைப் பார்த்து வித்தியாதரத் தலைவரெல்லாம், ‘ இன்று நமக்கு மரணம் வந்தது, ’ என்று மயங்கிய மனத்தராகித் தரணேந்திரனை நமஸ்கரித்து, “ வித்துத் தந்தனுகிய இப்பாவி, தான் முன்செய்த பாவத்தால், விதேக க்ஷேத்திரத்தினின்றும் இம்முனிவரைக் கொண்டுவந்து இவ்விடத்திட்டு எங்களிடம் வந்து, ‘ ஒரு அரக்கன் நம்மைத் தின்னும்படி வந்திருக்கின்றனன்,’ என்று சொல்ல நாங்கள் தவத்தின் குணத்தை அறியாமையால் இவ்வாறு முனிவர்க்குத் தீங்கு செய்தோம்; ஆதலின், அஞ்ஞானத்தினுல் யாங்கள் செய்த பொல்லாங்கினைப் பொறுத்தருளல் வேண்டும், ” என்று பயத்தை உடையவர்களாகி உரைத்தார்கள்.

இப்படி அவர்கள் உரைத்த வசனத்தால், தரணேந்திரன் நெஞ்சம் தளர்ந்து, பாசத்தை நீக்கி அவர்கள் பலரையும் போகவிட்டு, “ வித்துத் தந்தனென்னும் இப்பாவியைச் சுற்றத்தோடும் சமுத்திரத்தில் இடுவேன், ” என்று கோபித்தெழுந்தான். அப்போது, பரிநிர்வாண பூஜார்த்தமாக வந்திருந்த லாந்தவேந்திரனுகிய ஆதித்தியாபனென்னும் கல்பவாசிதேவன், அத்தரணேந்திரனைக் கண்டு, அவனது கோபத்தை நீக்கி, அவனிடத்தே குணம் குடி கொள்ளும்படியாக, “ தரணனே! அஞ்ஞானியாகிய இவனுல் என்ன குற்றம் செய்யப்பட்டது? அப்படியே இவன் குற்றம் செய்த போழ்திலும் இவன் உனது கோபத்திற்குச் சரியானவனல்லன்; இவன் பேரில் நீ தயவு செய்ய வேண்டுமேயல்லாமல் வேறொன்றும் செய்யலாகாது; நீ சந்தோஷமுடையவனுகி நான் சொல்லும் சமாசாரத்தைக் கேட்பாயாக;

இதற்குமுன் ஆதி தீர்த்தங்கரராகிய விருஷபசுவாமி யோகத்தில் நின்ற போது வினமியும், நமியுமென்பார் இருவர் அவரிடமடைந்து, எங்களுக்கு நிதியும் நாடும் கொடுக்க வேண்டுமென்றும், கொடுத்தாலல்லது போகோமென்றும் கீதங்களைப் பாடினர். அப்போது, அக்காலத்திருந்த தரணன், அஃதறிந்து, அவ்விடம் வந்து, அந்தக் குமாரர்களைத் தனது உபாயத்தால், தெளிவித்துத் தன்னோடவர்களை விமானத்தில் ஏற்றி, விஜயார்த்த பர்வதமடைந்து, அந்த விஜயார்த்தத்தில் உத்தர ஸ்ரேணியில் அறுபது நகரங்களுக்கு அரசனாக வினமியை நாட்டி, அவற்றிற்கு, கனகபல்லவம் என்னும் நகரத்தை இராஜதானியாக்கி, தக்ஷிணஸ்ரேணியில் ஐம்பது நகரங்களுக்கு நமிகுமாரனை அரசனாக ஸ்தாபித்து, ரதநூபுரசக்கிரவாளமென்னும் நகரத்தை அவற்றிற்கு இராஜதானியாக்கி, அவர்கட்கு, ஐந்நூறு மகா வித்தைகளும், எழுநூறு க்ஷுல்லக வித்தைகளும் ரக்ஷிணையாகும்படி கொடுத்து, வித்தியாதரர்களையெல்லாம் அவர்களிடம் அடங்கியிருக்கும்படி செய்து விட்டுத் தனதிடம் சென்றனன்; அது முதல் இதுவரையில் உங்களால் அருள்பெற்று வந்த வினமி குலத்தில் வந்தவன் இவ்வித்துத் தந்தனுகும்; ஆதலின், உங்களால் ஸ்தாபிதமாகிய இக்குலத்தின்மேல் உனது கோபத்தைச் செலுத்தாமல் விடுவாயாக,'' என்றனன்.

அதைக்கேட்டுத் தரணன், "கர்மங்களைக்கெடுத்து, முத்தியை அடைந்த இச்சஞ்சயந்தர், விதேகத்து, வீதசோகபுரத்து வைசயந்தன் குமாரரானவர்; எனக்கு ஜேஷ்ட ப்ராதா (ஸஹோதரர்) ஆவர்; யாவர்க்கும் ஒரு குற்றத்தினையும் மனத்திலுமெண்ணுத இவரை இவ்வித துன்பஞ் செய்தான் யாவனாயினும் அவனை நான் தண்டிக்காமல் விடுவதில்லை,'' என்றனன். அதற்கு ஆதித்தியாபன், "தரணனே! உனக்கு இம்முனிவரன் தமையனாகிய பிறப்பு ஒன்றையே நீ அறிந்திருக்கின்றாய்; அதற்கு முன்னாகிய பிறப்புக்களை ஆலோசித்தால் சொல்ல முடியாதனவாயிருக்கின்றன; ஆதலின் நீ கோபத்தைப் பெருக்கிக் கர்மங்களுக்கு விதையைச் சம்பாதிக்கவேண்டாம். நினைக்குமிடத்தில் சம்சாரத்தில் உறவினரும் பகைவருமல்லாமல் நின்றவர்கள் ஒருவருமில்லை; அவ்வாறுவது வினைவசமல்லது நிச்சய நயத்தால் ஒன்றுமில்லை; நிச்சய நயத்தினால் சுற்றமும் பகையும் இலவாகும்; வினையினால் உளவாகும்; ஆகையினால் ஞானிகள், இம்மனித பவத்தைப் பெற்றுச் செற்றமும் ஆர்வமும் நீங்கி நிற்பார்கள்; அன்றியும்,

இப்பிறப்பில் பெற்ற பகை உறவுகளுக்கு நீ இப்படிக் கோபத்தை அடைவாயாகுல் இதற்கு முன் உண்டாய் நீங்கின பகை உறவுகளுக்கு என்ன செய்வது? இதற்கு முன் இம்முனிவரன், அரசனுயிருந்து செய்த ஓர் விஷயத்தால் இவ்வித்துத் தந்தன் அக்காலத்தில் அவ்வரசனுக்கு மந்திரியாயிருந்து, அவ்வரசன்மேல் கோபமுற்று, அந்த தீவ்ர கோபானு பந்தத்தால், இப்பிறப்பில் இவருக்கு இவ்வித துன்பஞ் செய்தனன். அருந்தவராகிய முனிவரரோ, யாதாத்மியம் அறிந்து, திரும்பி வாராமையாகிய சாசுவத கதியை அடைந்தனர்; இந்த வித்துத் தந்தனே, இவருக்கு இவ்வித தீமைகளைச் செய்து, அவற்றைப் பொறுத்த இவருக்கு நீங்காத புகழையும், தனக்கு நீங்காத பழியையும் விளைத்துக்கொண்டான்; மேலும் இவன் செய்த துன்பங்களைப் பொறுத்ததால், முனிவரர் நீங்காக் கதியை அடைந்தனர். ஆதலால், பொறுத்தல் ஒறுத்தல் என்னும் இரண்டினுலும் ஏற்படும் பயன்களை நீ அறிந்துகொள்வாயாக," என்றனன்.

இவ்வாறு கூறியவுடன் தரணன், ஆதித்தியாபனை நோக்கி, "இதற்கு முன் நிகழ்ந்த பிறவிகளில் இம்முனிவரர்க்கு இவன் செய்த துன்பங்களையும், அவற்றிற்குக் காரணத்தினையும் சொல்லவேண்டும்," என்ன, ஆதித்தியாபன், "நின்கோப வெப்பத்தைத் தயவால் தணித்து, கர்மங்களை ஜெயித்த பகவானைப் பணிந்துவந்தால் நீ வினவியவற்றை உரைப்பேன்," என்றனன்.

இவ்விதம் கூறலும், அந்த ஆதித்தியாபனது வசனமாகிற மழையினுல், தரணனது கோபாக்கினி தணிந்தது. அதன் மேல் அவன் தெளிவடைந்து, ஜினவரன் சரணம்பணிந்து, கமலமலர் சூரியன் நேர்பட்டதை ஒத்து நின்றனன். அதன்மேல், ஆதித்தியாபன், அவனை நோக்கி, "இம்முனிவரரும், நீயும், நானும், இந்த வித்துத் தந்தனும் விரும்பிய மனத்தர்களாகிச் சென்ற அப்பிறவி முதல் இதுவரையில் நடந்த வரலாறுகளை ஒன்றும் தவருமல் சொல்லுகிறேன்; நீ ஒரு மனதோடு கேட்பாயாக," என்று சொல்லத்தொடங்கினுன்.

# 3 - வது : பத்திரமித்திரன் அறங்கேள்விச்சருக்கம்.

---

இப்பரதகண்டத்தில் ஸிம்ம மகாபுரமென்னும் நகரத்தை ஸிம்ம ஸேனன் என்னும் அரசன் அரசாண்டு வந்தான். அவனது பட்ட மகிஷி இராமதத்தை என்பாள். மந்திரி சத்தியகோஷன் என்னும் அன்வர்த்த நாமத்தையுடைய ஸ்ரீபூதி என்பான். இவர்கள் தமது நாட்டில் பொல்லாங்குகளையெல்லாம் நீக்கி நடுநிலைமையுடன் இராஜ்ஜியம் செய்கின்ற காலத்தில் பத்மஷண்டம் என்னும் நகரத்து, சுதத்தன் என்னும் வைசியனுக்கும் அவன் மனைவியாகிய சுமித்திரைக்கும் பத்திரமித்திரனென்னும் குமாரன் தோன்றி யௌவனனும் விவாக விதியால் ஸ்திரீமார்களை அடைந்து சௌக்கிய மனுபவித்து வந்தான்.

அப்படி அனுபவித்து வருநாளில் அந்தப் பத்திரமித்திரனென்பான், திரவியம் சம்பாதிக்க வேண்டுமென்னும் எண்ணமுடையவனாகி இலாபத்தைக் கருதித் தன்னுடைய வர்த்தகத் தொழிலுக்கேற்பச் சரக்குகள் கொண்டு இரத்தின தீபமென்னும் தீவையடைந்து வர்த்தகஞ் செய்து தனது புண்ணியத்தினால் அதிக லாபத்தை பெற்றி அங்கு நின்றும் திரும்புகாலையில் ரத்தினங்களும், முத்துக்களும், வைரமும், சந்தனக் கட்டைகளும், அகிற்கட்டைகளும், பவளங்களும், இன்னும் பல வஸ்துக்களும் கொண்டுவந்தான். அவ்வாறு வந்த அவன் ஸிம்ம மகாபுரம் வந்து சேர்ந்து, அந்நகரின் அழகும், பெருமையும், அரசனது நன்மையும், வியாபாரத்தகுதியும், சத்தியந் தவறாமையும், கள்ளரில்லாமையும் கண்டு அந்நகரில் தங்கிவிட வேண்டுமென்னும் எண்ணமுடையவனாய், "நம்மிடமிருக்கும் பெரும்பொருளினை இந்நகரத்தில் ஒரு யோக்கியரிடத்தில் இரகசியமாக வைத்து நமது நகரம்போய் நம்முடைய பந்துக்கள் எல்லாரையும் அழைத்துக் கொண்டு இந்நகரத்திற்கே வந்து சேர்ந்து இங்கு நிலையாக வேண்டும்," என்று தீர்க்காலோசனை செய்து அந்நகரத்தில் மிகுந்த கீர்த்தியுடையவனாகியும், பிராம்மணனாகியும், அரசனது முக்கிய மந்திரியாகியும் இருந்த சத்திய கோஷனிடம் சென்று மரியாதையுடன் வணக்கஞ் செய்து ஜனங்கள் நீங்கி அவன் தனியாயிருக்குங் காலத்தில் தனது எண்ணத்தினைச் சொல்லி, "என்னுடைய பெரும்பொருளை நான் என்னகர்க்குப் போய்த் திரும்பி வரும்வரையில் உன்னிடத்திலேயே

வைத்திருந்து நான் வந்தவுடன் அதை நீ எனக்குக் கொடுக்கவேண்டும்'' என்று வேண்டினன். அதைக் கேட்டு மந்திரி, 'நீ கொடுப்பது பெரும்பொருளாகையால் அதைக் காப்பாற்றுவது முதலாகிய காரியங்கள் நிரம்ப அருமையாகும்; ஆகையால் ஒருவரும் இல்லாத காலத்தில் அதை நீ என் கையில் கொடுக்கவேண்டும்' என்றான். பத்திரமித்திரன், அவ்விதமே செய்து தனது நகரஞ்சென்று தன்னுடைய சுற்றத்தாரையெல்லாம் அழைத்துக்கொண்டு மறுபடியும் ஸிம்மபுரம் வந்து, தன் பந்துக்களுடனே ஒரு மாளிகையில் குடியேறி, பிறகு அமைச்சனிடம் சென்று சில வார்த்தைகள் பேசிக்கொண்டிருந்தான். அப்போது அவனுடைய பெரும் பொருள்களாகிய மணிகளின்மீது மந்திரிக்கு விருப்பம் அதிகரித்ததாதலின் அவற்றை அபகரிக்கவேண்டுமென்னும் கெட்ட சித்தத்தால் நீதிக்குப்பொருந்தாத வசனங்களை யுரைக்கத் தொடங்கி, அந்தச் சத்தியகோஷன், பத்திரமித்திரனை முன்னே அறியாதவன்போல அவனை நோக்கி, "நீ யார்? எவ்விடமிருப்பவன்? எங்குப் போகின்றனை?," என்றான். அதற்குப் பத்திரமித்திரன், "யான் கப்பல் யாத்திரை செய்து வந்து இரத்தினச் செப்பினைத் தங்கள் கையில் சேர்த்துப்போனவன்," என, "செப்பெனச் செப்பியது என்ன?" என்று மந்திரி அதட்டிக்கேட்கப் பத்திரமித்திரன், "நான் ஒப்பில்லாத மணிச்செப்பைத் தங்களிடம் வைத்துச் சென்றதைக் குற்றமில்லாத தாங்கள் மறந்துவிட்டீர்களோ?" என்றான். அதைக் கேட்டவுடனே சத்தியகோஷன், "என்ன! பைத்தியக்காரனாயிருக்கின்றாய்! நான் உன்னை என்றும் கண்டதில்லை; என் கையில் நீ இரத்தினச் செப்பு வைத்ததற்கு சாக்ஷி உண்டாகில் காட்டு; அவ்வாறு காட்டினாலல்லது நீ சொல்வது பொருந்தாது" என்று அவன் சொற்களை எடுத்தெறிந்து பேசினான்.

இந்த வசனங்களைக் கேட்டவுடனே பத்திரமித்திரன், 'நல்லது; உம்முடைய பேரினுக்குப் பொருந்தும்படியாகவே பேசுகிறீர்; செப்புவைத்த அன்றைக்கும் இன்றைக்கும் அல்லாது மற்ற காலங்களில் என்னை நீர் கண்டதில்லை; இப்பொழுது நீர் சாக்ஷி வேண்டுமென்று உரைக்கின்றீர்; சத்தியகோடராகிய தமக்கே யல்லது வேறொருவருக்குந் தெரியாமல் செப்பைக் கொடுக்க வேண்டுமென்று நீர் சொன்ன காலத்தில் சாக்ஷி வேண்டுமென்கிற சடபுத்தி தம்மிடமிருப்பதை நான் அறிந்திலேன்; பிறர் பொருள்களைக் கோடல், மாற்றல் முதலா

யின மறமென்று அன்று நீர் சொன்ன வாய்மொழியும் மறந்திட்டீரோ ; எனது செப்பைக்கொண்டிருப்பதன்றி மோஹத்தினாலே என்னைப் பைத்தியக்காரனாக்கித் தகாதவசனம் சொல்லவேண்டாம்'' என்று கூறினான்.

இவ்வாறு சொல்லவே சத்தியகோஷன் மிகுந்த கோபங்கொண்டு ஓடி அவனை அடிப்ப, அங்கு நின்றவர்கள் வெளியில்பிடித்துத் தள்ளி விட்டார்கள். பின்னர் பத்திரமித்திரன் மிக மனவருத்தமுற்றுத் தெருக்கடோறும் சென்று, "சத்தியகோஷனென்னும் பிராமணன் பெரியனென்றும், பரிசுத்தனென்றும் யான் தெளிந்து அவனிடம் இரத்தினச் செப்பை வைத்துச் சென்றேன் ; மீண்டு வந்து கேட்க அவன் என்னைப் பைத்தியக்காரனாக்கி அடித்துத் துரத்துகின்றான் ; அரசனே இக்காரியத்தை விசாரித்து நியாயம் செலுத்தவேண்டும்,'' என்று இரைச்சலிட்டுக்கொண்டு திரிந்தான்.

அவன் இவ்வாறு திரிய, சத்தியகோஷன், தன் குற்றமறியாமல், அவனைக் கோபித்து அந்நகரினின்றும் துரத்திவிட உத்தேசித்து, அவனுடைய வீட்டில் கொள்ளையடிக்கும்படி திருடர்களை ஏவ, அவர்கள் அந்தப் பத்திரமித்திரன் வீட்டிலுள்ள எல்லாப்பொருள்களையுங் கொள்ளைகொண்டனர். அதன்மேல் பத்திரமித்திரன், "அந்தோ! சத்தியகோஷன் என்னுடைய பெரிய இரத்தினங்களை மாறுபடச்செய்து கைக்கொண்டதோடு, திருடர்களையும் ஏவி என் வீட்டிலுள்ள பொருள்களெல்லாவற்றையும் கொள்ளைகொள்ளும்படி செய்தான் ; இதைப்பற்றி இங்கே விசாரிப்பாரில்லையோ'' என்று அந்நகரத்திலுள்ளவர்களெல்லோரும் மனமிரங்கும்படி மேலும் இரைச்சலிட்டுக் கதறி அழுது கொண்டு திரிந்தான்.

அவன், இவ்வாறு பிதற்றிக்கொண்டு திரிந்ததை அரசன் உணர்ந்து, மந்திரியை அழைத்து அவனிடத்தில், "இவன் ஏன் இவ்வாறு புலம்பிக்கொண்டு திரிகின்றனன்? நீ இவனுடைய பொருளை அபகரித்ததாகச் சொல்கின்றானே? இதற்குக் காரணமென்ன?'' என்று வினவினான். அதற்குச் சத்தியகோஷன், "இவன் பித்தன் ; இவனை யான் கண்டதில்லை ; இவன், என்னிடம் இரத்தினச்செப்பைக் கொடுத்ததாகவும், நான் அதனை அபகரித்துக் கொண்டதாகவும் பெரிய இரைச்சலிட்டுக்கொண்டு திரிகின்றனன் ; களவினால் அளவிறந்த பாவங்களுண்டாகுமென்று பிறருக்கு உபதேசிக்கும் யானே களவு

செய்வேனானல், உலகத்தில் எவர்தாம் களவுசெய்யமாட்டார்கள்? கள்ளமில்லாதவர் ஒருவருமேயிரார்" என்று அரசனும், பிறரும் தன்னை யோக்கியனென்று நம்பும்படி, தான் அந்த இரத்தினச் செப்பை அபகரிக்கவில்லையென்று பெரிய சத்தியஞ்செய்தான். அவ்வாறு செய்யவே, அரசன் அவனுடைய வார்த்தைகளை மெய்யென்று நம்பி, பத்திரமித்திரனைப் பைத்தியக்காரனென்றே தீர்மானித்தான். அதுகண்டு பத்திரமித்திரன், "ஐயோ! சத்தியகோஷன் மிகவுஞ் சூதுசெய்துவிட்டான்; அரசன் இவனுடைய வார்த்தைகளை மெய்யென்றே நம்பி, இவனை யோக்கியனென்று தீர்மானித்துவிட்டான்; இவன் செய்கையை உணராமல் மன்னனே இவ்வாறு நினைத்தால் மற்றவர்கள் என்னைப் பைத்தியக்காரனென்று ஏன் சொல்லமாட்டார்கள்; வேடன், தழையால் உடம்பை மறைத்துக்கொண்டு பக்ஷிகளைப் பிடிப்பதுபோல, சத்தியகோஷனும் மாயத்தால் தன்னுடைய மோசச்செய்கைகளை மறைத்துக்கொண்டு என்னுடைய இரத்தினங்களை அபகரித்து யோக்கியனைப் போல நடித்துக்கொண்டு திரிகின்றான்" என்று மேலும் புலம்பிக் கொண்டு திரிந்தான்.

பத்திரமித்திரன் இவ்வாறு மேன்மேலும் தன்னை நிந்தித்துக் கொண்டு திரிவதைச் சத்தியகோஷன் பார்த்து, மேலும் கடுஞ்சின மடைந்து, ஏவலாளர்களையழைத்து அவர்களிடத்தில், "மதயானைகளை விட்டும், நாய்களை ஏவியும் துன்பப்படுத்தி இந்தப் பைத்தியக்காரனை இந்நகரத்தை விட்டுச் செல்லும்படி துரத்துவீராக," என்று கட்டளை யிட, பாவிகளாகிய அவர்கள் அவ்விதமே செய்தார்கள். பத்திரமித்திரன் அந்தத் துன்பத்திற்குப் பயந்து பிரதிதினமும் காலையில் ஒரு பெரிய மரத்தின்மேல் ஏறியிருந்துகொண்டு தன் வழக்கத்தை விடாமல் மேற்கூறிய வார்த்தைகளையே சொல்லி அரசனுக்குக் கேட்குமாறு புலம்பிக்கொண்டு வந்தான். அரசன், அவனுடைய புலம்புதலைத் தினந்தோறும் கேட்டுவந்தும், சத்தியகோஷன் மீது தனக்கேற்பட்ட நம்பிக்கையால், பத்திரமித்திரனைப் பைத்தியக்காரனென்றே நினைத்து அவன் விஷயத்தைப்பற்றி ஒன்றுமே விசாரிக்காமலிருந்தான்.

இப்படியிருக்க, அரசன் தேவியாகிய இராமதத்தை யென்பாள், பத்திரமித்திரன் தினந்தோறும் ஒரேவிதமாகப் புலம்பிக்கொண்டிருப்பதைக்கேட்டு, மனதில் ஆலோசனை செய்து, "நாள்தோறும் வித்தியாசமில்லாமல் இவன் ஒரே காரியத்தையே சொல்லிப் புலம்

புகின்றான்; வைத்தியக்காரனால் அடிக்கடி வார்த்தை மாறுதலடையும்; அப்படி யில்லாதபடியால் இவன் பித்தனல்லன்; ஒருவாறு இவன் சொல்லும் செய்கை, சத்தியகோஷனிடம் நடந்திருந்தாலு மிருக்கலாம்; இதனைத் தீரவிசாரிக்கவேண்டும்," என்று, பத்திர மித்திரனை யழைத்து, அவனிடம் நடந்ததையெல்லாம் விசாரித்து, "நீ இப்படியே புலம்பிக்கொண்டிரு; உன் விஷயத்தின் உண்மையை வெளிப்படுத்துதற்குத் தக்க உபாயஞ்செய்கின்றேன்" என்றுசொல்லி அவனை அனுப்பிவிட்டு, அரசன்பாற்சென்று, "இங்கே ஒருவன், பொருள் பறிகொடுத்ததாகப் புலம்பிக்கொண்டு திரிகின்றானே; அவனுடைய விஷயத்தைச் சரியாக விசாரிக்கலாகாதா? இப்படி விசாரிக்காமலிருப்பது அரச நீதியாகுமா?" என்று கூறினாள்.

அதைக்கேட்டு மன்னன், "அவன் வைத்தியக்காரன்; அவன் புலம்புவதைப்பற்றி விசாரிப்பதில் பலனில்லை" என்றான். அதற்கு இராஜபத்தினி, "இவன் நாள்தோறும் பிராதக்காலத்தில் மரத்தின் மேல் ஏறி ஒரே ரீதியான வார்த்தைகளையே பேசிக்கொண்டிருக்கிறான்; ஆதலின் இவன் வைத்தியக்காரன் அல்லன்; இவன் சொல்வது உண்மையா யிருந்தாலுமிருக்கலாம்," என்று கூற, மன்னன், "அப்படியானால் நீயே இதனை விசாரித்து உண்மை காண்பாயாக" என்றான். அதன்மேல் இராமதத்தை, "நீதிபடித்தான் போல உரைக்கின்ற இவனது வழக்கையும், மந்திரியாகிய வேதியனது சொல்லையும் விளக்குப் போலகாட்ட எனக்குச் சாமர்த்தியமுண்டு; யான் மந்திரியோடு சூதாட்டம்ஆடுவேனானால் என் காரியம் சித்தியாகும்" என்றாள். அரசன், 'அவ்வாறே செய்க' என்றான். பிறகு இராஜபத்தினி, மன்னன் ஆக்கினையால், மந்திரியை அழைப்பித்து, அவனிடம் முதலில் பரிகாச வசனங்களைப்பேசிப் பின்னர், 'சூதாடுவதில் எனக்கொப்பானவர்கள் இல்லை' என்றாள். அரசன் மந்திரியை நோக்கி, 'இது ஆச்சரியம்,' என்றனன். உடனே இராமதத்தை, "மந்திரியை வெகுசீக்கிரத்தில் அதாவது: ஒரு வார்த்தை பேசிமுடியும் எல்லைக்குள் சூதாட்டத்தில் ஜெயிப்பேன்" என்றனள். அதுகேட்டு மந்திரி, "இம்மாதை சூதாட்டம் ஆரம்பிப்பதற்குக் காய்களைப் பூட்டும்பொழுதே யான் ஜெயிப்பேன்" என்றான். அரசன் புன்சிரிப்புடன் ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்தான். உடனே இராமதத்தையும், சத்தியகோஷனும் சூதாட்டம் ஆரம்பித்தார்கள். மன்னன்தேவி, ஆரம்பத்திலேயே

மறையவன் மார்பு நூலையும், முத்திரை மோதிரத்தையும் முறையே ஜெயித்துக்கொண்டாள். மந்திரி, பெருமூச்சுவிட்டு, வியர்த்து அவமானமுற்றிருந்தான்.

அதன்மேல் இராமதத்தை யென்பாள், இரகசியமாகச் செவிலியை அழைத்து, அவள் கையில், தான் மந்திரியிடம் ஜெயித்தபொருள்களைக் கொடுத்து, அவளை நோக்கி, "நீபோய் மந்திரியின் பண்டாரியினிடத்தில் இவற்றைக்காட்டி, பத்திரமித்திரன் பொருள்களை மந்திரி வாங்கிவரச் சொன்னதாக உபாயமான வார்த்தைகளைச் சொல்லிப் பெற்றுக்கொண்டு வந்துவிடு" என்றுசொல்லி அவளை மந்திரி மாளிகைக்கனுப்பினாள். நிபுணமதியென்னும் செவிலியும் அவ்வாறேபோகி அமைச்சன் மாளிகையை அடைந்து, பண்டாரியைக்கண்டு அவனிடத்தில், "இராமதத்தையும், அரசனும், மந்திரியிடத்தில், 'பத்திரமித்திரனது இரத்தினச்செப்பு உன்னிடமிருந்தால் அதை அவனுக்குக் கொடுத்துவிடு' என்று தெரிவித்தார்கள்; அதற்கு மந்திரி, பத்திரமித்திரனிட இரைச்சல் தனக்குப் பழியை உண்டுபண்ணுமென நினைந்து, அவர்களை நோக்கி, 'உலகத்தில் உத்தமர்க்கு வரும் பழிச்சொற்களை விலக்கலாகாது; ஆதலால் எனக்கிப்போதுண்டாகிய பழிப்பானது இந்த வுலகமெல்லாம் படர்வதாயிற்று; அவன் என்னிடம் செப்புவைத்துப் போனதை நான் மறந்துவிட்டேன்; அதனால் அவன் வந்துகேட்டபோது முதலில், அதைக் கொடுக்கவில்லையென்று சொல்லிவிட்டேன்; பின்பு அவன் கொடுத்த நினைவுவந்தது; அதன்மேல் அதனை அவனிடம் கொடுத்துவிட நினைத்தேன்; ஆயினும், முதலில் இல்லையென்று சொல்லிவிட்டு இப்பொழுது கொடுத்தால் முன்னினும் அதிகப் பழிப்புண்டாம் என்று, அவன் பன்முறை வேண்டிக்கேட்டும் அதைக் கொடுக்காமலிருந்துவிட்டேன்; ஆயினும், உம்முடைய தயவிருக்குமானால், எனக்கொரு குறையும்வராது; நீர் உத்தரவுசெய்தால் அதைக்கொடுத்து விடுகிறேன்,' என்று கூறினார். அதைக்கேட்டு அரசன், 'உனக்குவந்த பழிகளை உபாயத்தால் விலக்கிக்கொள்ளலாம்; நீ என்னிடம் மணிச்செப்பைக் கொடுத்துவிடு; நான் அதனை அவ்வணிகனிடங்கொடுத்து, எனக்குப் பயித்தியம் பிடித்திருந்தது; அதனாலேயே சத்தியகோஷன் என் இரத்தினச்செப்பை அபகரித்துக் கொண்டதாகப் புலம்பிக்கொண்டு திரிந்தேன்; இப்பொழுது என்னுடைய பயித்தியத்தை ஒரு முனிவரன் தீர்த்து

விட்டான் என்ற அவனை, ஊராரிடம் சொல்லும்படி செய்துவிடுகின்றேன்,' என்றார். மந்திரி அதற்குச் சம்மதித்து, தமது மார்பின் நூலையும், முத்திரை மோதிரத்தையும் என்னிடம் கொடுத்து உம்மிடங் காட்டி அந்தச் செப்பை வாங்கிக்கொண்டு வரும்படி என்னை அனுப்பினார்; இது இரகசியமான இராஜகாரியம்; ஒருவரும் அறியாதபடி என் கையில் அந்தச் செப்பைக் கொடுத்துவிடு," என்று சொன்னாள். உடனே, பண்டகாரி, யாதொரு தடையுஞ்சொல்லாமல், அந்த மணிச் செப்பையெடுத்து அவளுடைய கையிற் கொடுத்துவிட்டான்.

நிபுணமதி, 'காரியம் முடிந்தது,' என்று சந்தோஷித்து, இராமதத்தையிடம் சென்று அந்தச் செப்பை அவள் கையிற்கொடுத்து, நடந்த வர்த்தமானங்களைக் கூறினாள். இராமதத்தை மகிழ்ந்து, செவிலியைப்புகழ்ந்து, அரசனிடம்போய் அச்செப்பைக் காட்டினள். அரசன் அவளை மிகவும் புகழ்ந்து, செப்பைப்பார்த்து, "இதனை அபகரித்த சத்தியகோஷனை எனது மந்திரியாக வைத்திருந்தது மிகவும் யோக்கியந்தான்!" என்று சிரித்து, இராமதத்தையின் ஆலோசனையின்படி அவ்வணிகனைச் சோதிக்கக் கருதி, சில உயர்ந்த இரத்தினங்களை அவ்வணிகனுடைய இரத்தினங்களோடு கலந்து, அந்த இரத்தினச் செப்பிலடைத்து, வேறு முத்திரையிட்டு இன்னும் பல இரத்தினச் செப்புகளையும் அதனோடு கலந்து வைத்துப் பத்திரமித்திரனை அழைத்து, "இவற்றில் உன்னுடைய இரத்தினச் செப்பிருக்குமேயானால் அதனைத் தெரிவிப்பாயாக" என்றான். அப்போது பத்திரமித்திரன், தன்னுடைய இரத்தினச்செப்பைக் காட்டினான். அதன்மேல், அரசன், "இந்தச் செப்பிலிட்ட முத்திரை உன்னுடையதுதானோ பார்; உன்னுடையதாயிருந்தால் இதனைக் கொண்டுசெல்" என்றான். பத்திரமித்திரன் அதைப் பார்த்துவிட்டு, "முத்திரை என்னுடையதன்று; இது, யாரோ சார்த்தர்களால் இடப்பட்டது" என்றான். "அஃதிருக்கட்டும் இதனைத்திறந்து உள்ளேயிருக்கும் இரத்தினங்களெல்லாம் உன்னுடையவைகள்தானோ பார்" என்று அரசன் கூறினான். பத்திரமித்திரன் அவ்வாறே செப்பைத் திறந்து பார்த்து அதில் தன்னுடைய இரத்தினங்களுடன் வேறு இரத்தினங்கள் கலக்கப்பட்டிருந்ததை யுணர்ந்து, "இதில் என்னுடைய இரத்தினங்களுடனே வேறு விலைமதிக்க வொண்ணா இரத்தினங்களும் கலக்கப்பட்டிருக்கின்றன" என்றுசொல்ல, அரசன், "உனது மணி

களோடு விலையுயர்ந்த இரத்தினங்களை இங்கே வேறு யாவர் கலக்கப் போகின்றனர்; நீ தெரியாமல் சொல்லுகின்றாய்; விலையில்லாமணிகளைப் பார்க்கவே உனது கண்கள் கலக்கத்தை அடைகின்றன; ஆதலால், நீ இன்னும் நிதானமாகப் பார்" என்று சொன்னான். பத்திரமித்திரன், "பெட்டியில்வைத்த எனது மணிகளைமறந்து, நான் இவ்விதமாக நாடோறும் கூவிக்கொண்டு திரிவேனேயாகில், ஜனங்கள் என்னைப் பயித்தியக்காரனென்பது சரியான காரியமேயாகும்; நான் அப்படி ஒருபோதும் அவற்றை மறந்துவிடமாட்டேன்" என்று சொல்லி, அந்தச்செப்பிலிருந்த மணிகளில், தன்னுடையவைகளல்லாதவைகளை நீக்கித் தன்னுடைய மணிகளை மாத்திரம் எடுத்துக்கொண்டான். அதன்மேல் அரசன் பத்திரமித்திரனை நோக்கி, "இந்த மணிகள் மந்திரியால் வைக்கப்பட்டவையாகும்; அவனால் செய்யப்பட்ட குற்றத்திற்குப் பரிகாரமாக அவற்றை நீயே எடுத்துக்கொள்வாயாக" என்று அவற்றுடன் கலந்திருந்த இரத்தினங்களைக் காட்ட, பத்திரமித்திரன், "பிறர் பொருள் கவர்ந்து வாழுந்தன்மை எனக்குத் தகாது; அப்படியே அவற்றைக் கைக்கொண்டாலும் அப்பொருள்கள் தானதர்மங்களுக்கு உரியவைகளுமல்ல; அவை மானத்தையுங் கெடுக்கும்; ஈனத்தைச் சேர்ப்பிக்கும்; இன்னும், அவைகள், தம்மைக்கொண்டவர்களை அடிமைகளாகவும் செய்து நரகத்திலும் செலுத்தும் தன்மையையுடையன; இலாபநஷ்டம், இன்பதுன்பம், பிணிபகை என்னுமிவைகள் ஒரு மனிதனுக்கு முன்செய்த வினைவழி வருமேயல்லாமல் வேறாக வருவனவல்ல" என்று சொன்னான்.

இந்தந் நீதிலா மொழிகளை, ஸிம்மஸேன மகாராஜன் கேட்டு, "இவ்வணிகன் கோதில்லாத குணத்தன்; பொய்யாவாக்கினன்; மரணத்தை நீக்கும் மருந்தென்றாலும் அன்னியர் திரவியத்திற்கு ஆசைவையான்; தருமநீதி, சமநிலை, தயவு, நன்னடக்கை ஆகிய இவைகளே இவ்வுலகத்தில் இவ்வணிகனாக உருவெடுத்து வந்திருக்கின்றன" என்று பத்திரமித்திரனை வியந்தான். இராமதத்தா தேவியும் அவ்வணிகன் பேரில் மிகவும் மகிழ்ச்சிகொண்டாள். அதன்மேல் அரசன், அவ்வணிகனுக்கு இராஜசிரேஷ்டிப் பட்டங்கொடுத்து, அநேக மரியாதைகளையும் செய்தான். அதுகண்டு அங்குள்ளவர்கள், "வணிகன், ஞானியும் பெரியோனுமானதால் மந்திரியினால் செய்யப்பட்ட

இடைஞ்சலைக்கடந்து, அரசனால் இவ்வித மரியாதைகளைப் பெற்றான்" என்று அவனைப் புகழ்ந்தார்கள்.

பின்னர், மன்னன், சத்தியகோஷன் இவ்வாறு பத்திரமித்திரனை வஞ்சித்ததற்குச் சகியாதவனாய்க் கோபங்கொண்டு, "இராஜ நீதிப்படி இவனைத் தண்டித்தல் வேண்டும்; இவனை அப்பாரத்துடன், சாதைக்கையுங்களைந்து இவன் தலைசுற்றி, இவனுடைய நிதிய முழுமையுங் கைக்கொண்டு, இவனை இப்பதியினின்றும் நீங்கும்படியாகத் துரத்திவிடவேண்டும்; இவைகளே இவனுக்குச் சரியான சிக்ஷைகளாகும்" என்று, அவ்வாறே அவற்றைச் செய்யும்படி அங்குள்ள காவலாளிகளுக்குக் கட்டளையிட்டான். அவ்விதமே காவலாளிகள் அந்த சிக்ஷைகளைச் செய்யத் தொடங்கினார்கள்; சத்தியகோஷனுடைய செல்வாக்கானது பனியின்முன் னெதிர்ப்பட்ட தாமரைத் தடாகம்போலப் பொலிவிழந்து போயிற்று; அவனுடைய தலையில் சாணிநீரைக் கரைத்து ஊற்றிப் புலையர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு, 'நீ செல்! செல்!!' என்று அவனைத் தெரு வழியே நடத்திக்கொண்டு போனார்கள். அப்போது அவனுடைய சுற்றத்தார்கள், அவனது பரிதாப நிலைமையைப் பார்த்து, கப்பல் கவிழ்ப்பெற்றார் உற்ற துயரத்தை உற்றார்கள்.

"மந்திரியாகிய சத்தியகோஷன், தன்னுடைய வஞ்சனையினாலே, வணிகன் செப்பைக்கவர்ந்து, அவனைப் பேய்போலச் சுழலப்பண்ணி, அவனுக்கு முதலில் பெரிய துக்கங்களை உண்டாக்கினான்; பிறகு ஓர் உபாயத்தாலே இரத்தினச் செப்பைத் தன் கையினின்றும் வாங்கிவிடவே, பேயை நிகர்த்துச் சுழன்று, தானும் பெருந்துயரமுற்றான்; ஆகையால், ஆசையே பிறவிக்கு வித்தாகும்; ஆசையே உயிர்களுக்குச் சத்துருவுமாகும்; ஆசையே பொல்லாதது; ஆசையே நரகாதி துக்கங்களை உண்டுபண்ணுவது" என்று பலரும் அந்தச் சத்திய கோஷனை நிந்திக்க, அவன், தன்னுடைய செல்வத்தையும், மாளிகையையும், பந்துக்களையும் நீத்து, நிந்தங்கொண்டு, அரசன்மேல், அனந்தானுபந்தி என்னும் முதலாவது குரோதம் உதிப்ப, ஆர்த்த தியானத்தால் தனது ஆயுஷ்யம் நீங்கி, திரியக்காயுஷ்யத்தைப் பெற்று, அரசன் மேலுள்ள துவேஷத்தினாலும், பொருளாசையின் மயக்கத்தாலும், அரசனது பாண்டாகாரத்தில், அகந்தனென்னும் சர்ப்பமாயினன்.

அதன்மேல் அரசன், இந்த மந்திரியினது செயலினையும், களவினாலாகிய துக்கங்களையும் வெகுவாக நினைத்து ஆச்சரியமடைந்து, "இனி

யாரை மந்திரியாக நியமிப்பது?" என்று ஆலோசித்து, தர்மிலன் என்னும் பிராமணனை, சத்தியகோஷன்பதத் தமைச்சனுக்கி, இராஜ்ஜியம் செய்து வந்தான். அவ்வாறு செங்கோல் நடத்திவருங் காலத்தில், பத்திரமித்திரன் ஒருநாள், அதிங்கவனஞ்சென்று, விமலகாந்தாரமென்னும் பர்வதத்திலேறி அவ்விடத்தில், வரதர்மர் என்னும் அரிய தபோதனரைக்கண்டு வணங்கி வாழ்த்தி, அவரிடத்தே தருமங்களைக்கேட்க, சம்யக்ஞானம், சம்யக்தரிசனம், சம்யக்சாரித்திரம், உத்தம க்ஷமை, பிராணி ஸம்யமம், விஷயஸம்யமம், திரிகுப்தி, பஞ்ச ஸமிதி ஆகியவைகளிற் பொருந்தி, இராக துவேஷங்களை நீக்கிய மனத்தரும், திரிதண்டம், திரிகாரவம், சதுஸ்ஸஞ்ஞைகள் ஆகியவற்றின் நீங்கினருமாகிய அந்த வரதர்மமுனிவர், பத்திரமித்திரனுக்கு, "அபய, ஆகார, சாஸ்திர, ஔஷதமென்னும் சதுர்வித தானங்களை, ஸத்பாத்திரங்களிற் செய்வதும், மோகநீயத்தை வென்ற பரமேஷ்டிகளின் பாதத்தை வணங்கி பூஜிப்பதும், தத்துவந் தெளிவதும், சீலாசாரத்தைக் கொள்வதும் ஆகிய இவைகளில் சேர்ந்தொழுகுதல், ஸம்ஸார சுழற்சியைத் தீர்க்கும் மருந்தாகும்" என்று கூறி இவற்றின் விவரங்களை விரிவாக உபதேசஞ் செய்தருளினர்.

---

# 4-வது : பூரணசந்திரன் அரசியற்சருக்கம்

---

வரதர்ம முனிவருடைய தர்மோபதேசத்தைக்கேட்ட பத்திர மித்திரன், திரும்பி நகரம்வந்து, அவ்வுபதேசமானது தன் மனதில் நன்றாக அழுந்தி வேரூன்றியபடியால், தன் சக்திக்குத்தகுந்த விரதங் களைக் கைக்கொண்டு, மனதில் அருகந்தருடைய பாதத்தை ஸ்தாபித்து, தன்னுடைய பொருள்களெல்லாவற்றையும் வறியோர்க்குத் தானமாக வழங்கிவந்தான்.

அக்காலத்தில் அவன் தாய் சுமித்திரையென்பாள் அவ்வாறு அவன் பொருளைச் செலவுசெய்தலைப்பார்த்து மனம் புழுங்கி, அவனை நோக்கி, "புத்திரனே ! பொருளால் சகல பெருமைகளு முண்டாகும். அப்படியிருக்க அதனை இவ்விதமாகச் செலவழித்தல் தகாது" என்று கூறினாள். அவன் அம்மொழிகளைச் சிறிதுங் கேளாமல் மேலும் மேலும் அப்பொருளைச் செலவுசெய்துவந்தான். அதனால் அவள் அக்கினிபோலக்கொதித்து, அவன்மேல் மிகுந்த கோபத்தையுடையவ ளாகித் தனக்குப் பொல்லாங்கினை உண்டுபண்ணி மனதில் ஆர்த்தத் தியானத்தை அடைந்து, அதே காரணமாக இறந்து, அதிங்கவனத் தில் புலியாகப்பிறந்து திரிந்தாள்.

அவ்வாறு திரியுங்காலத்தில் ஒருநாள் தருமவானாகிய பத்திரமித் திர வணிகன் அவ்வனத்தில்சென்றான். அப்போது அந்தப்புலி அவ னைக்கண்டு தனக்கிருந்த பசிமிகுதியாலும், பூர்வ வைரத்தினாலும் அவன்மேற் பாய்ந்து அவனைக் கொன்றுதின்றது. கற்பகத் தருவில் இடிவீழ அது சாய்ந்ததுபோல பரோபகாரியாகிய அவ்வணிகன் இறந்து, இராமதத்தையின்மேல் உண்டாகிய சிநேகபாவத்தால் அவ ளுடைய கெற்பத்திலடைந்து, நவமாச பூரணமாகியபின் அவளிடத்தே சிம்மசந்திரனென்னும் புத்திரனாகப்பிறந்து வளர்ந்து யௌவனத்தை யடைந்து, தன் தாய் தந்தையர் தனக்குத் தகுதியான இராஜ கன்னி கைகளை மணம் புணர்விக்க, அவர்களுடன் இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தான்.

அதன்மேல், இராமதத்தையின் வயிற்றில் பூரண சந்திரனென் னும் மற்றொரு புத்திரனும் உதித்து வளர்ந்தான். இந்த இராஜ குமாரர்களிருவரும் அதிக பிரதாபத்தை யுடையவர்களாகி வளர்ந்து

வருங்காலத்தில் அவர்கள் தந்தையாகிய அரசன், ஒருநாள் பாண்டாகாரத்தையடைய, முன்னம் அவனுடைய மந்திரியாகி, குரோதத்தாலிறந்து அங்கேவந்து பிறந்த அகந்தனன் என்னும் சர்ப்பமானது, பூர்வ வைர பாவத்தால் அரசனைக் கடித்தது. உடனே அதன் விஷத்தால் அரசன் மூர்ச்சித்துப் பூமியில் வீழ்ந்தான். அதுகண்டு இராஜ புத்திரர்களும், இராமதத்தையும், மற்றுமுள்ளோரும் மிகுதியாக வியாகூலத்தை அடைந்து அழுது புலம்பினார்கள். உடனே கருடதண்டனென்னும் மாந்திரீகன் வந்து மந்திரித்துப் பார்த்தான். அதனாலும் விஷம் நீங்காமல் அரசன் தேகவியோகமாயினான். அதன்மேல் மாந்திரீகன் அவ்வாறு கொன்ற சர்ப்பத்தின்மேல் கோபங்கொண்டு அதனைக் கண்டு அடியோடொழிக்கக் கருதி ஓமம் வளர்த்துத் தனது மந்திர பலத்தால் ஆங்குள்ள சர்ப்பங்களையெல்லாம் வரவழைத்து, அவற்றை நோக்கி, "நீங்கள் இந்த ஓமாக்கினியில் புகுந்து வரவேண்டும்; உங்களில் குற்றமில்லாதவற்றிற்கு இந்த ஓமாக்கினி தாமரைப் பொய்கை போல சீதளமுடையதாயிருக்கும்; குற்றமுடையவற்றைச் சுடும்" என்றனன். அவனுடைய ஆக்ஞைப்படியே குற்றமற்ற சர்ப்பங்களெல்லாம் அந்த ஓமாக்கினியிற் புகுந்து பிழைத்துப்போயின. அரசனைக்கடித்த அகந்தனன் என்னும் சர்ப்பமானது அந்நெருப்பிற் புகுந்தவுடனே நீறுகி யிறந்து கானவனத்தில் சமரீ மிருகமாய்ப் பிறந்தது. அரசனோ மேற்கூறியபடி இறந்தபின் தீவினையின் வன்மையால் சல்லகீ வனத்திலே அசனிகோஷமென்னும் யானையாய்ப் பிறந்தனன்.

இவ்வாறு அரசன் இறக்கவே, அத்துக்கத்தால் இராமதத்தா தேவி மூர்ச்சித்து உயிர்விடத் துணிந்தாள். அச்சமயத்தில் சில பெரியோர்கள் அவளிடம்சென்று, ஸம்ஸார அநித்திய ஸ்வரூபத்தைப் போதித்தனர். அதனால் அவள் தெளிவடைந்து, சில தினங்கள் சென்றபின் தன் புத்திரர்களை அழைத்து, தந்தை யிறந்ததால் அவர்களுக்கேற்பட்ட துக்கத்தையாகற்றி அவர்களில் ஜேஷ்டனாகிய சிம்மசந்திரனை நோக்கி, "நீ பட்டாபிஷேகம்பெற்று, பூர்ண சந்திரனை யுவராஜனாக்கித் தேசத்தை ஆளக்கடவாய்" என்று ஆக்ஞாபித்தாள். அவன் அவ்வாறே இராஜ்யாதிகாரம் நடத்திவந்தான்.

இவ்வாறு நடந்துவருங்காலத்தில் ஸிம்மஸேன மகாராஜன் இறந்த செய்தியைக் கேள்விப்பட்டுச் சாந்தமதி, ஹிரணியமதி என்னும் இரண்டு ஆரியாங்கனைகள் இராமதத்தையிடம் வந்து, அரசனிறந்ததால்

அவளுக்கேற்பட்டிருந்த வருத்தம் நீங்கும்படி அவளைநோக்கி, "இராஜ பத்தினியே! இறந்து போன அரசனுக்காக இனி நீ எவ்வளவு அழுத போதிலும் அவர் வரப் போகிறதில்லை; ஆர்த்தத்தியானத்தால் அழுது கொண்டிருந்தால், திரியக் முதலான அசுபகதிகளை யடைந்து, துக்கப்பட ஏதுவுண்டாகும். ஆதலால் நீ அத்துக்கத்தை ஒழித்து சமத்வீபாவத்தை உடையவளாய், ஸம்ஸாரத்து அநித்திய ஸ்வரூபத்தையே நினைக்கக் கடவாய்; தர்மத்தைச் சேர்ந்து, விசோதி பரிணமத்தால் துக்கங்களை நீக்கி, உனது சத்திக்கேற்ற விரத சீலங்களைத் தாங்கி, உன் ஆத்மனுக்கு உறுதியாகிய காரியத்தில் உத்ஸாகிக்கக் கடவாய்" என்று உபதேசித்தார்கள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும், இராமதத்தை, தவத்தை விரும்பிய மனத்தளாகித் தன் மூத்த மகனை வரவழைத்து அவனிடத்தே தனது எண்ணத்தைத் தெரிவித்தாள். அவன் அவளுடைய பிரிவுக்கு வருத்தமுற்று அவளை நோக்கி, "மாதா! நான் செய்த தவறுதல் என்ன? ஏன் இவ்வெண்ணங் கொண்டீர்கள்?" என்று வினவ, தேவி, "நீ ஒரு தப்பிதமுஞ் செய்யவில்லை; எனது மனம் தர்மானுராகத்தை அடைந்திருக்கின்றது" என்றாள். அதைக் கேட்டதே சிம்மசந்திரன், அத்தவத்தினைத் தடுத்தல் தகாதெனக் கருதி, இராமதத்தையை நோக்கி, "அன்னையே! தங்கள் எண்ணம் அதுவாயின், அவ்விதமே செய்க" என்று அதற்குடன்பட்டான். இராமதத்தை, ஏகாக்கிர சிந்தையுடையவளாகி, தீக்ஷாவிதியின் பிரகாரம் ஆரியாங் கனையாயினள்.

அதன்மேல் அவளுடைய புத்திரர்கள் அவள் துறவு பூண்டிருந்த விடத்திற்குச் சென்று அவளின் துறவினைக் கண்டு ஸ்தோத்திரஞ் செய்து மீண்டு நகரமடைந்து சுகமாக வாழ்ந்தார்கள். சிம்மசந்திரன் தன் மாதா துறவடைந்ததை நினைந்து வாடித் தானும் சமுசாரத்தில் இச்சையற்றவனாய் வைராக்கியத்தை அடைந்திருந்தான்.

அக்காலத்தில் பூரண சந்திரரென்னும் ஒரு மகாமுனிவர், சர்யா மார்க்கமாக அரசனது கிருகத்தை அடைந்தார். அவரைக் கண்டதும் சிம்மசந்திர மன்னன் அவருக் கமுதுபடைத்து பஞ்சாச்சரியத்தை யடைந்தான். அங்ஙனமடைந்து, முனிவரர், நியமமுற்றியிருந்த பின்னர், அம்மன்னன், அம்முனிவரரை வணங்கி வாழ்த்தி, "பிறமுடிவு உண்டோ இல்லையோ?" என்று வினவ, அவர், "நற்

பான்மையுடையவர்களுக்குத் தபோ அநுஷ்டானத்தால் முடிவுண்டா· கும். அவையில்லாதவர்க்குப் பிறவி சுழன்று கொண்டேயிருக்கும்; தவத்தின் தன்மையாவது : மனிதர், பாகிய அப்பியந்தர பரிக்கிரகங் களினின்றும் நீங்கி, தசதரும சகிதராகித் தம்மிடத்தில் உத்தமகாட்சி, ஞானம், ஒழுக்கம் ஆகிய குணங்களை அழுத்தலாகும்'' என்றார்.

எனலும், சிம்மசந்திரன், ஸம்ஸாரபீதியையும், தர்மாநுராகத் தையுமுடையவனாகித் தனது தம்பியாகிய பூர்ண சந்திரனுக்கு இராஜ்ஜி யத்தை ஸ்தாபித்து, மேற்கூறிய பூர்ண சந்திரரென்னும் மகாமுனிகளது பாதமூலத்தையடைந்து, விதியின்பிரகாரம் தீக்ஷையைக் கைக்கொண்டு, பாகிய, அப்பியந்தர பரிக்கிரகங்களை நீக்கி, குணமணிகளைப்பொருந்தி, சீலாசாரங்களையும், உத்தமக்ஷமாதி தருமங்களையும் சேர்ந்து, தத்துவ விசாரணைசெய்து, உறக்கம் என்னும் காரியத்தையகற்றி துவாதச வித மாகிய தபஸோடு துவாதசாநு பிரேக்ஷைகளை பாவித்து, துவாவிம்சதி பரீஷகங்களை ஜெயிக்க உண்டாகிய சாரித்திர பலத்தினால் குற்றமில் லாத விபுலமதி மநப்பரியயமென்னும் ஞானத்தைப்பெற்று, ஆகாயத் திற்செல்லும் சாரணத்தன்மையு மடைந்திருந்தான்.

அப்படியிருந்த காலத்தில், அரசனாயிருந்த அவன் சகோதரனாகிய பூர்ண சந்திரன் என்பான், தன் மனத்தை ஸ்திரீகளின்பாற் செலுத் திப் பஞ்சேந்திரிய விஷயங்களில் மிகவும் மயங்கியிருந்தான். அவன் அவ்வாறிருப்பதை ஆரியாங்கனையாகிய இராமதத்தா தேவியுணர்ந்து வருந்தி, அவனிடம் சென்று அப்படியிருத்தல் கூடாதென்று தரு மோபதேசஞ் செய்தாள். அவ்வாறு செய்தும் அவன் தன் குணத்தை விடவில்லை. அதனால், அத்தேவி, சிம்மசந்திர மகாமுனிகளிடம் சென்று வணங்கி "சுவாமி! பூர்ண சந்திர குமாரன் அதிமோகத் தனாகி மாயா காரியங்களிற் சென்று கொண்டிருக்கின்றான். யான் அவனைக்கண்டு அவனுக்குத் தர்மோபதேசம் பண்ணியும் அதனை அவன் சிறிதும் உறுதிப்பொருளென மதிக்காமல் எழுந்துபோயினன்; அவன் தர்மத்தை ஸ்வீகரிப்பானோ?'' என்று வினவினாள். அதற்கு அம்முனிவரர், "அவன் தர்மத்தை ஸ்வீகரிப்பான்; அவ்வாறு ஸ்வீகரிக்கச் செய்வதான ஒரு கதையை உனக்குச் சொல்லுகிறேன்; நீ அதனைக் கேட்டு அவனுக்குரைப்பாயாக'' என்று அக்கதையைச் சொல்லத் தொடங்கினார்.

# 5-வது : நால்வரும் சுவர்க்கமேறினசருக்கம்

அவ்வாறு கூறத்தொடங்கிய சிம்மச்சந்திர முனிவர், இராமதத்தையிடம், "கோசலேயென்னும் நாட்டில் விருத்த கிராமத்தில், மிருகாயணனென்னும் க்ஷமாரூபத்தையுடைய ஒரு பிராம்மணனிருந்தான். அவனது மனைவி மதுரையென்பாள். இவர்களுக்கு வாருணியென்னும், ஒரு குமாரத்தியுமிருந்தாள். இந்த மதுரையும், வாருணியும் வாட, அம்மறையவன் மரித்து அயோத்தியாளும் அதிபலனென்னும் அரசனுக்கும் சுமதியென்னும் அவன் தேவிக்கும் இரண்யவதியென்னும் புத்திரியாகி, சுரம்யவிஷயபௌதனபுரத்து பூர்ண சந்திரனென்னும் அரசனுக்குத் தேவியாகி சுகித்திருந்தாள். அப்போது, மதுரையென்னும் பிராம்மணி, அத்தேவியினிடம் பெண்ணாயவதரித்தனள். அவள் நீயே யாவை. பத்திரமித்திரனென்னும் வணிகன் உன்னிடம் சிம்மச்சந்திரனென்னும் குமாரனாகப் பிறந்தயானவன். மேற்கூறிய வாருணியென்னும் பிராம்மண புத்திரியே உனக்கு அதி பிரியனாகிய பூர்ணச் சந்திரனென்னும் குமாரனாயினன். ஆதலால் நீ அவன் மீது நீங்காத காதலுடையவளானாய். அவனும் நற்குணத்தனேயாவன். உன் பிதாவாகிய பூர்ணச்சந்திரர், முனிவரராகி, எனக்கு ஹிதமாகிய தர்மத்தை ஓதி, என்னை ரத்னத்திரய மார்க்கத்தில் ஸ்தாபித்த பரம குருவாயினர். உனது தாயாகிய ஹிரண்யவதி சாந்தமாமதியென்னும் ஆர்யாங்கனைகளைச் சேர்ந்து துறவு கைக்கொண்டனள்.

உனது புருஷனாகிய சிம்மஸேனனென்னும் அரசன் சர்ப்பங் கடித்து இறந்து சல்லகீவனத்து யானையாகினன். அந்த யானை பர்வத சிகரத்தில் என்னைக் கண்டு மிகுந்த கோபத்தால் கொல்ல ஓடி வர, ஆகாயத்து யான் எழுந்தேன். அது எமராஜனையொத்து என்னை மேனோக்கிப் பார்த்தது. யான் அவதிஜ்ஞானத்தால் அதனது ஸ்வரூபந் தெரிந்து, அதனை நோக்கி, 'ஓ சிம்மஸேனனென்னும் அரசனே ! பாவத்தால் நீ யானையாயினாய் ; அங்ஙனமாகியும் பாவத்தொழிலே மேற்கொண்டாய் ; அதனால், இத்தேகத்தையும் விட்டால் நரகத்தில் பொருந்தவே முயற்சி செய்கின்றாய், அரசனாகிப் பெரிய ஸௌக்கியத்திலிருந்த உன்னைக் கண்ட அக்கண்களாலேயே யானையாகிப் பெரிய துன்பத்தை யடைய இக்காட்டில் நான் கண்டேன். பாவத்தாலாகிய இப்

குப் பெரிதும் பயந்து சத்தர்மத்தைச் சேரக்கடவாய்; நான் உனது குமாரனாகிய சிம்மச்சந்திரனவன்' என்றேன்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் அந்த யானை அப்பொழுதுண்டாகிய பவஸ்மிருதியால் தனது பிறப்பை யறிந்து மூர்ச்சித்துத் தெளிந்து க்ஷமையோடு நிற்ப, யான், செல்வ நிலையாமை யாக்கை நிலையாமை முதலிய ஸம்ஸார அனித்திய ஸ்வரூபத்தையும், ஆத்மனது குணஸ்வரூபத்தையும், அந்தக் குணத்தால் பாவங்கள் நிர்ஜரையாகும் மார்க்கத்தையும் அதற்கு உபதேசிக்க அது மனம் பொருந்திக் கேட்டு அணுவிரதங்களைப் பொருந்திச் சகல ஜீவன்களையும் பாதுகாக்கும் முனிவரனை யொப்ப ஜீவதயையையுடையதாகிப் பஞ்சேந்திரிய விஷயங்களில் வைராக்கியத்தை யடைந்து, குரோதாதிகஷாயங்களினின்று நீங்கிச் சமத்விபாவத்தைப் பெற்றுப் பக்ஷோபவாஸ மாஸோபவாஸங்களோடு பொருந்தி, இதர யானைகளினால் தின்றுவிடப்பட்ட காய்ந்த சருகும் புற்களும் பாரணையாக அருந்தவும் பயின்று, ஒருநாள் யூபகேசரி யென்னும் நதியினை யடைந்து, அதிலிறங்கி, நீர் பருகுவான் வேண்டித் துதிக்கையைத் தண்ணீரில் நீட்ட, தனது கால்கள் சேற்றிலழுந்திக் கொள்ளப் பிடுங்கி வரமாட்டாமல் நின்றது.

அப்போது, முன்னே சத்தியகோஷ மந்திரியாயிருந்த அகந்தன ஸர்ப்பமானது, சமரியாயிருந்திறந்து அக்காட்டில் கோழிப் பாம்பாகியிருந்து, இந்த யானையைக் கண்டு மிகுதியான கோபத்தாலோடி அதனது மஸ்தகத்தில் கடிப்ப, இதற்கு விஷம் பரவியும் இது, மனோ நிலையிற்றளர்வின்றிக் குருவின் பாதம் சிரசில் கொண்டு பஞ்ச மந்திரம் சிந்தை செய்து அவ்வுடம்பு நீங்கி ஸஹஸ்ராரமென்னும் கல்பத்தை யடைந்து, சூர்யப் பிரபையென்னும் விமானத்தில் ஒரு முகூர்த்தத்தில் சரீர அங்கோபாங்கங்கள் நிறைந்து, ஸ்ரீதரனென்னும் தேவனாகித் தோன்றியிருந்தது. அக்காலத்தில், கற்பக மரங்கள் புஷ்ப வருஷங்களைப் பொழியத் தேவதுந்துபி முழங்க, மந்தமாருதங்கள் வீச, தேவ ஸ்த்ரீயர்களும் சாமானிய தேவர்களும் அவனைச் சூழ வந்து சேர்ந்தார்கள். அந்த ஸ்ரீதர தேவன், அவர்களைக் கண்டு, "இவர்கள் யார்? இந்த க்ஷேத்திரம் யாருடையது? யான் யார்?" என்று நினைக்க, அந்த பவ சம்பந்தமாகிய அவதிஜ்ஞானம் அவனுக்குத் தோன்றி, அவன் யானையாயினது முதல் எல்லாம் தெரிந்து, "இது தேவலோகமாகும்; இது புண்ணியத்தினால் பெறப்பட்டதாகும்; இவர்களெல்லாம் தேவி

மார்கள்; இவர்கள் அரம்பையர்கள்; இவ்வோசை தேவதுந்துபி ஓசை" என்று அங்குள்ள விசேஷங்களையெல்லாம் உணர்ந்தான். அப்போது அவனிடத்தில் சாமானிய தேவர்கள் வாழ்த்துச் சொல்லிப் பிறகு சில நீதிகளைச் சொல்லத் தொடங்கி, அவனை நோக்கி, "ஸ்ரீதர தேவனே! முதலிலே நீ திருமஞ்சனமென்னும் ஸ்நானத்தை முடித்துப் பிறகு தேவி பரிவாரங்களுக்குக் காட்சி கொடுத்து, அனந்தரம் ஜினேஸ்வரனை ஸ்துதித்து அவர்க்குச் சிறப்புச் செய்து, பின் நர்த்தன சாலை முதலியவற்றைக் கண்டு, அதன்பின் தேவிமார்களிடத்திலுண்டாகிய சுகங்களை யனுபவிக்கக்கடவாய்" என்றார்கள். அமரனும் அவ்வாறே அவைகளைச் செய்து, சர்வஜ்ஞனைப் புகழ்ந்து, துதிசொல்லித் தேவ போகங்களையனுபவித்து, இனிதாயிருந்தனன்.

இவன் இங்ஙனமிருப்ப, சிம்மசேனையைத் தூண்டிய இரண்டாவது மந்திரியாகிய தர்மிலன் மரித்து, வனத்தில் வானரமாய்த் திரிந்து, யானையைக் கடித்த கோழிப் பாம்பைக்கொல்ல, அது மூன்றாம் நரகத்தையடைந்து சொல்லுதற்கரிய துன்பங்களையுற்றது; இங்ஙனம் அசனிகோஷமென்னும் யானையானது ஸர்ப்பத்தாலிறந்து தேவலோகம் எய்தவும், சர்ப்பமானது வானரத்தாலிறந்து நரகத்தை யெய்தவும், அந்த யானையினுடைய கொம்புகளையும் முத்துக்களையும் ஒரு வேடன் கொண்டு, தனமித்திரனென்னும் வணிகனுக்குக் கொடுக்க, அவ்வணிகன் பூர்ணச்சந்திரனென்னும் அரசனுக்குக் கொடுத்து மிகவும் சிறப்புப்பெற்றான்; அரசன் யானையினது கொம்பிரண்டினையும் தனது கட்டிலுக்கு நாலு கால்களாகக் கடைந்து போட்டு, கொம்பினிடம் உண்டாகிய முத்துக்களை மாலையாக்கி அணிந்து கொண்டு, தனது தேவிமார்கள் சூழக் கட்டிலின் மேலேறி யினிதிருக்கின்றனன்.

இந்நிலைமையாகிய தன்மையைக் கேட்டபின் விராகமடைந்து தர்மத்தில் தலைப்படாது நீங்குபவர்கள் ஒருவருமில்லை; ஆகையால் இக்கதையை நீ பூர்ணசந்திர குமாரனாகிய அரசனுக்குச் சொல்வாயானால், "அவன் கேட்டுத் தர்மத்தை யடைவான்" எனலும், இராமதத்தை வணங்கிப் போகி, அரசனும் மகனைக் கண்டு காதலும் களிப்பும் நீங்கும் இக்கதையினை உரைப்ப, அரசன் மிகவும் வருத்தமுற்றுப் பெருமூச்செறிந்து தர்ம வழியினைச் சிறிது கண்டு, தகப்பன் மேலாகிய காதலால் துக்கமுற்று, முத்தையும் கொம்புகளையும் அக்னியிலிட்டுத் தகித்துச் சம்சாரத்துக்குப் பயந்தவனாகிப் பஞ்சேந்திரிய விஷயங்களை

விஷத்துக்குச் சமானமென்று நினைத்து நடுங்கி அவற்றைச் செய்யத் தொடங்காமல் அடங்கி, ராகத்வேஷங்களினின்றும் நீங்கிப் பஞ்சாணு விரதங்களோடு சீலங்கள் பயின்று, ஜினவரன் பாதம் சென்னியில் வைத்துத் தத்துவம் பயின்று தானம் தவம் தயாவென்னும் குணங் களோடு, ஸ்ரீ ஜின தர்மத்தைச் சேர்ந்தான். பின், இராமதத்தையும், இந்தப் புத்திரனையே மறுபடியும் நான் எனக்குப் புத்திரனாக அடைய வேண்டுமென்று நிதானஞ் செய்து நோற்று, ஆயு நீங்கி மகா சுக்ர மென்னும் தேவலோகத்தில் பாஸ்கரப் பிரபனென்னும் தேவனாகத் தோன்றித் தேவ சௌக்கியம் அனுபவித்திருந்தாள். அப்போது பூர்ணசந்திரனென்னும் அரசனும், அந்தக் கல்பத்தில் அவனுக்குப் பிள்ளையாய் வைடூர்ய பிரபனென்னும் தேவனானான். இவ்விரு தேவர் களும் அங்கே தேவபோகம் நுகர்ந்திருக்கின்ற காலத்து, ஸிம்மசந் திர மகா முனிகள் உக்கிரமாகிய தவத்தைச் செய்து ஆராதனா விதியில் தளர்வின்றிச் சமத்துவபாவமாகி பரீஷகங்களை ஜெயித்துப் பஞ்ச பரமேஷ்டிகளைத் தியானித்துத் தமது உடம்பையும் உயிரினையும் தட றும் வாளுமென அவற்றின் ஸ்வரூபங்களை உணர்ந்து சரீரம் நீங்கி, உபரிமோ உபரிமமென்னும் அகமிந்திர லோகத்தையடைந்து, பிரீதிங் கரனென்னும் அகமிந்திர தேவனாகி, முப்பத்தோரு கடலாயுஷ்யத் தைப் பெற்று, வனிதையரால் வரும் காமபலன் ஒன்றுமின்றிச் சிவகதி யவரைப் போல நல்வினை உதயத்தால், இடையறாத சுகமல்லது துன்பம், கவலை முதலியன இன்றிச் சௌக்கியமனுபவித்தனன். ஸிம்மஸேன னென்னும் அரசனாதியாக இந்நால்வரும் தவத்தினாலும் சீலத்தினாலும் தேவராயினார்கள்; சத்தியகோஷனென்னும் மந்திரி தீவினையினால் விலங் கில் வீழ்ந்து பின் நரகத்தையடைந்தனன். ஆகையால், பகை, தனக் குத்தானே பாபங்களைச் செய்வதாகும். நண்பு நல்வினைக்கு ஹேது வாகும். இங்ஙனம் பகை உறவு என்னும் இரண்டும் பாப புண்ணியங் களுக்கு ஏதுவாதலை, இந்த யானையினிடத்திலும் பாந்தளினிடத்திலும் பார்த்துத் தெளிந்து கொள்ளலாம். ஆகையால் சிந்தையால் தீக்கதிச் செலவாகிய பாபங்களை மாற்றி இன்பத்தையாக்கி இம்மாற்றினை நீக்கி வீட்டினையாக்கும் நல்லறத்தினையமர்ந்து செய்யவேண்டும்.

# ௬-வது : மன்னனுந் தேவியும் மைந்தனுஞ் சுவர்க்கம்புக்க சருக்கம்

---

மேற்கூறியபடி தேவலோகத்தை யடைந்த ஸிம்மஸேன மஹாராஜனும், இராமதத்தா தேவியும், அரச புத்திரர்களாகிய ஸிம்மசந்திர பூர்ணச் சந்திரரென்னும் குமாரர்களும் மறுபடி இப்பூமியிலவதரித்த வரலாற்றினை இனிக் கூறுவாம்: இராமதத்தையாகிய பாஸ்கர பிரபனென்னும் தேவன், தனதாயுஷ்யம் முடியப் பதினைந்து நாளிருக்கும் போது அவ்விஷயத்தை, தேவலோகத்தில் சில குறிகளால் தெரிந்து, மரணத்திற்குப் பயந்து, சோகமும் துயருமெய்தி, அதிக கஷ்டப்பட்டான். அக்காலையில், ஸாமான்ய தேவர்கள் ஸம்ஸார அஸாரத்தையும், சரீர முதலியன அனித்தியமென்பதையும், ஆக்மனுக்குத் தர்மமே சரணமென்பதையும், ஆத்ம தருமத்தைப் பாவித்து இறைவன் பாதத்தைத் தியானத்திலே புண்ணியத்தை யாக்குமென்பதையும் போதிக்க, அதனால் அவன், மரண பயமிலனாகித் தருமத்தியானத்தோ டொன்றி ஆயுஷ்யம் நீங்கினன்.

அவ்வாறு நீங்கிய அவன், ஜம்பூத்வீப பரதக்ஷேத்திர விஜயார்த்த பர்வத தக்ஷிண ஸ்ரேணியில், தரணீதிலகபுரத்து ராஜா அதிவேகனுக்கும், ஸுலக்ஷணையென்னும் அவன் தேவிக்கும் ஸ்ரீதரையென்னும் புத்திரியானான். அப்புத்திரி யௌவனத்தை யடைந்தபோது, அளகா புராதிபதி தருசகனென்பவன் அவளை, விவாஹ விதியால் மணஞ் செய்ய அவள் இஷ்ட விஷய போகங்களையனுபவித்துக் கொண்டிருந்தாள். அப்போது வைடூர்யப் பிரபனென்னும் தேவன் அச்சீதரை கருப்பத்திலடைந்து யசோதரையென்னும் புத்திரியானான். அவள் யௌவனமெய்தினபோது, அக்குமாரியை பாஸ்கர புராதிபதியாகிய சூர்யாவர்த்தனென்னும் வித்தியாதர வரசன் விவாஹ விதிக்கிரமத்தாலெய்திப் போக நுகர்ந்தான். அப்போது பூர்வம் சிம்மஸேனனாகிய ஸ்ரீதரதேவன் ஆயுஷ்யாவசானத்தில் அவ்விருவர்க்கும் கிரணவேகனென்னும் குமாரனாயவதரித்து, குமரப் பருவமடைந்து இராஜகன்னிகைகளை மணந்து சிற்றின்பத்திலே மூழ்கியிருந்தான். அப்போது சூர்யாவருத்தன் ஸம்ஸாரம் அனித்தியமென்று பாவித்து விஜயார்த்த பர்வதத்தினின்றும் பூமியில் வந்து முனிச்சந்திரரென்னும் மகா முனி

களை வணங்கி, அஷ்ட கருமங்களது ஸ்வரூபத்தைக் கேட்டு வைராக்கியமடைந்து இராஜ்ஜியத்தைத் தனது குமாரனாகிய கிரணவேகன் பேரில் ஸ்தாபித்து, தான் முனியாயினன். சூரியாவர்த்தனது தேவியாகிய யசோதரையும், அவளது தாயாகிய சீதரையும், குணவதி என்னும் அஜ்ஜிகை பாதஞ் சேர்ந்து துறந்து அஜ்ஜிகையாயினார்கள்.

பிறகு கிரணவேகனென்னு மரசன் ஸம்ஸார போகம் துக்கத்துக்குக் காரணமென்று நினைத்து ஜினசைத்யாலய வந்தனார்த்தமாகச் சித்தாயதன கூடமென விஜயார்த்த பர்வதத்திலுள்ள அக்கிருத்திமசைத்யாலயமடைந்து ஜினப் பிரதிமைகளைக் கண்ணாரக்கண்டு ஆனந்தங்கொண்டு ஸ்துதிசெய்து வணங்கிப் பின்னை, அக்கோயிலி லமர்ந்திருந்த அரிச்சந்திரரென்னும் சாரண பரமேஷ்டிகளை வணங்கி அவரிடம் ஆசீர்வாதம் பெற்று, ஸம்ஸாரத்தும் மோட்சத்துமாக்கும் தத்துவ ஸ்வரூபங்களையும், ஸப்தபங்கி நயங்களையும், ஆத்மன் அனுதித்திபாத்துவ கருமோப சமத்தால் பஞ்சலப்திகளைபெய்தி க்ஷாயிக தர்சனபலத்தால் ரத்னத்திரய பாவனை முற்றிய தியானத்தால் ஸம்ஸாரம் நீங்கி மோட்சமடையும் வரிசைக் கிரமத்தையும் அவர் விரிவாகக்கூறி அருளக்கேட்டு, மித்தியாத்துவ அந்தகாரம் நீங்கித் தத்துவந்தெளிந்து அதிப்பிரயத்தனத்தால் அம்முனிவரிடத்திலேயே ஜினதீக்ஷையினைக் கைக்கொண்டு இந்திரிய விஷயங்களையடக்கி, தசதருமத்தின் வழியனாகி பரீஷஹங்களை வென்று, ஆகாசச் சாரணத் தன்மைபெற்றுத் திரிகால யோகங்களில் சலனமின்றித் தியானத்தினின்று, முனிவர்களுமஞ்சும் சாரித்திர பலமுடையராகி நிர்பயராய்க் காஞ்சன பர்வத குகையில் வசித்தார். அக்காலத்தில், ஸ்ரீதரை யசோதரையென்னும் ஆரியாங்கனைகளிருவரும் அவரிடம் சென்று வணங்கித் தருமங்களை அவரால் சொல்லக் கேட்டு மீண்டு போனார்கள். பின்னர், அம்முனிவர் குகையையடைந்தார். அப்போது முன் அசனிகோடமாகிய யானையைக் கடித்த சத்தியகோஷனாகிய பாம்பு, நரகமடைந்து, அங்கு நின்று வந்து திரஸஸ்தாவரத்தில் சுழன்று, மறுபடி இப்பர்வத குகையில் மலைப்பாம்பாய்ப் பரிணமித்திருந்து இம்முனியைக் கண்டு தனது வாயைத்திறந்து பிடிப்ப, முனிவர் அருகன் என்று சொல்லித் தியானித்தார்.

முன்கூறியபடி சென்ற ஆரியாங்கனையிருவரும் அத்தொனியைக் கேட்டுத் திரும்பிவந்து பார்த்துப் பாம்பின் வாயிடைப்பட்ட முனிவரர் தோள்களைப்பற்றி அஞ்சாதிழுத்தார்கள். அப்போது விடாமல் அம்

மூவரையும் சேர்த்து அப்பாம்பு விழுங்கிற்று. மூவரும் தியானத்தில் தளர்வின்றி இப்பாபிஷ்டன் மேல் த்வேஷமிலராகிக் காபிஷ்ட கல்ப மடைந்து தேவர்களாகிப் பதினாலு கடலாயுஷ்யமுடையராகி, அமரசுக மனுபவித்திருந்தார்கள். அம்மலைப்பாம்பு நாலாவது நரகத்தையடைந்து அறுபத்திரண்டரை யோஜனையெழுந்து விழும் அறுபத்திரண்டரை வில்லுயர்ந்த நரக சரீரத்தைப்பெற்றது. தருமத்தைக் காட்டிலும் மேலாகிய செல்வமும் பாபத்தைக் காட்டிலும் மேலாகிய கேடுமில்லை யென்பதை இவர்கள் கதையால் அறிந்து தீக்கதிப் பிறவிக்கஞ்சி, மறத்தை நீத்து அறத்தோடு யாவர்களும் சேரக் கடவார்களாக.

இது நிற்க; "ஸிம்மஸேன அரசனும் தேவியும் இளையகுமார னும் இப்போது சொல்லப்பட்ட தேவர்களானார்கள். நவக்கிரைவே யகத்துச்சியாகிய உபரிமோபரிம கிரைவேயகத்திருந்த பூர்வம் ஸிம்மச் சந்திரனாகிய அஹமிந்திர தேவன் வரலாற்றை இனிச்சொல்வேன் கேள்" என்று தரணேந்திரனுக்கு ஆதித்யாபதேவன் சொல்ல லுற்றனன்.

## எ-வது : சக்கராயுதன் முத்திச்சருக்கம்

ஜம்பூத்வீபத்து, பரதக்ஷேத்திரத்தில், சக்கரபுரமென்னும் நக ரத்து, அபராஜித மஹாராஜனும், அவன் தேவியாகிய ஸுந்தரியும் சுகித்திருக்கும் நாளில், அஹமிந்திரத்திருந்த ஸிம்மசந்திரனாகிய பிரீதிங்கரதேவன் அவ்விருவருக்கும் சக்கராயுதன் என்னும் புதல்வனா யினன். அப்புதல்வன் வளர்ந்து சகல கலைகளையும் பயின்று, யௌவன மானதை அபராஜிதனறிந்து, சித்திர மாலையென்னும் ஓர் இராஜகன்னி கையை அவனுக்கு மணம் புணர்விப்ப, அவளுடன் சக்கராயுதன் சுகித் திருக்கையில், காபிஷ்ட கல்பத்தில் தேவனாகிய கிரணவேகன் இவர் கட்குப் புதல்வனாயவதரிக்க, அபராஜிதன் ஸந்தோஷமெய்தி யாசகர் களுக்கு மிகுதியாக திரவியம் முதலான தானம் அளித்து வறுமையைப் போக்கி அக்குமாரனுக்கு வச்சிராயுதனென்று நாமகரணஞ் செய்ய அக் குமாரனும் வளர்ந்து பருவகாலமடைந்தான். அப்போது பிருத்வீதி லகமென்னும் நகரத்து அதிவேக மகாராஜனுக்கும் பிரியகாரிணிதேவிக் கும், முன் தவத்தினால் தேவனாகிய ஸ்ரீதரை, இரத்தினமாலையென்

னும் குமாரியாய்ப் பருவமடைந்திருந்தாள். அவளை ஔபாஸன விதிக் கிரமத்தால் வச்சிராயுதனுக்குக் கல்யாணம் செய்விப்ப, வச்சிராயுதன் தேவியாகிய, இரத்தினமாலையது கருப்பத்தில் யசோதரையாகிய தேவன் அடைந்து இரத்தினாயுதனென்னும் குமாரனாகினான்.

அவனும் வளர்ந்து இராஜ கன்னிகைகளை மணந்து மிகுதியாகப் போகத்தில் மூழ்கினன். இப்படியாக, அபராஜித மகாராஜனும், அவன் புத்திரனும், பௌத்திரனும், பிரபௌத்திரனும் பேரானந்தத் தழுந்துகின்ற காலத்தில், அபராஜிதன் பிஹிதாஸ்ரவரென்னும் முனிவரிடத்தில் தர்மங்கேட்டு, இராஜ்ஜியத்தைச் சக்கராயுதனுக்களித்து, தான் மாதவனாகிய உருவைத் தரித்தான். பிறகு சக்கராயுதன் சிறிது காலம் இராஜ்ஜியம் செய்து வைராக்கியமடைந்து தனது குமாரனாகிய வஜ்ஜிராயுதனுக்கு இராஜ்ஜியத்தை ஸ்தாபித்து, அபராஜித முனிகளிடம் ஜினதீக்ஷைபெற்றுத் திரிகால யோகந்தாங்கித் துவாதச ஸம்யமம் பாவித்துத் தியானத்தினால் பாஹியாப்பியந்தர பரீஷஹங்களைவென்று, ஷட்திரவிய குணபரியாயங்களை யறிந்து, ஸம்ஸாரத்தில் ஆத்மன் கருப்பம், உப்பாதம், சம்மூர்ச்சனைகளால் தோன்றுந் தன்மையையும், பஞ்ச பாவத்தில் அடைந்து வர்த்திக்கும் ஸ்வரூபத்தையும், ஹிதமாகிய முக்தியையும், அதற்குபாயமாகிய இரத்னத் திரயத்தையும் மனதில் வைத்துக் கருமங்களி னுதயத்தாலாகும் விகாரங்களை யோஜித்து, தவ மார்க்கத்தில் சென்று கொண்டிருந்தான். அப்போது வஜ்ஜிராயுத மகாராஜனும் வைராக்கியமடைந்து, மகனுக்கு இராஜ்ஜிய பதவியளித் துச் சில தருமங்களையும் சொல்லிப் பின்பு தன் தந்தையாகிய சக்ராயுத முனிகளிடம் சென்று வணங்கித் தவம் கைக்கொண்டனன். பிறகு சின்னாள் சென்று சக்கராயுத முனிவர் ஒரு பர்வத சிகரமடைந்து சுக்கிலத் தியானத்தால் வரிசைக் கிரமமாகக் காதி கருமங்களைக்கெடுத்து, அனந்த நன்மையடைந்து, தேவர்கள் கேவல பூஜை செய்து துதிப்ப, மற்ற அகாதி வினைகளையும் வென்று உலகுச்சியையடைந்தார். தேவர்கள் மலர் சொரிந்து அவரைத் துதித்துத் தமதிடம் சேர, வஜ்ராயுத முனியும் அந்தச் சக்கராயுத பட்டாரகரை வணங்கிப் போயினன்.

இங்ஙனம் சக்கராயுத பட்டாரகர், ஆதியில், பத்திரமித்திரனென்னும் வணிகனாகி, தருமமேவி, ஸிம்மச்சந்திர அரச குமாரனாகி, மாதவத்தால் அஹமிந்திரனாகி, இவ்விடத்தில் சக்கராயுதராகித் தவத்தினால் மாற்றையொழித்து வீட்டையடைந்தனர். இது தருமத்தினது இயல்பாகும்.

# அ-வது : வஜ்ராயுதனுத்தரம்புக்க சருக்கம்

---

மேற்கூறியபடி அரசியற்றிய, அரசனுகிய இரத்தினுயுதன், ஸம்ஸார போகத்தில் அதிப்பிரீதியுடையவனுகி, தர்ம ஸ்வரூபமே அறியாதவனுகி மோஹத்தால் மயங்கியிருந்தான். அந்நாளில், அந்நகரத்து மநோஹரமென்னும் உத்தியானவனத்து, முனி ஸமூகங்களோடு கூட ஸம்ஸார துக்கத்தைப் போக்கும் சக்தியையும், மிருதியான ஸம்மியக் சாரித்திரத்தையும் உடைய வஜ்ரதந்தரென்னும் முனிவரர் வந்து சேர்ந்து, முனி ஸங்கங்களுக்கு இம்மூன்று லோக ஸ்வரூபமும், அவற்றில் பிறக்கும் சதுர்கதி ஜீவஸ்வரூபமுமாகிய, த்ரிலோக பிரஜ்ஞப்தி என்னும் கிரந்தத்தை உபதேசிக்கருளத் தொடங்கி, சதுர்கதியில் விலங்கு கதிஸ்வரூபமும் அதில் பிறக்கும் ஜீவர்களுடைய தன்மையும் சொன்னார். அக்காலத்தில், அவ்வுத்தியானத்திருந்த அரசனுடைய பட்டத்து யானை அவற்றைக்கேட்டு, கருமோபசமத்தால் தனது பூர்வ பிறப்புணர்ந்து, மாம்ஸமிஸ்ரமாகிய கவளங்கொள்ளாமல் பெருமூச்சு விட்டு நிற்ப, பாகன் அதனை அரசனுக்கறிவித்தான். அரசன் வைத்தியர்களையழைத்து இவ்வியானைக் குற்றமென்னென்று கேட்ப, அவர்கள், இதற்கு வாதபித்த சிலேத்தும விகாரமாகிய வியாதியொன்றுமில்லை. இது விடும் பெருமூச்சை யோசித்தால் ஏதோ பிறப்புணர்ந்தது போல தோற்றுகிறது. இதன் கையில் மாம்ஸமிஸ்ரமில்லாத பவித்திரமாகிய கவளத்தையிட்டால் இது வாங்கிப் புசிக்கின் பிறப்புணர்ந்ததாகும் என்று நிச்சயமாயறியலாமென்ன, அப்படிக் கவளமிட யானை அதனை வாங்கிப் புசித்தது. மன்னன் சந்தோஷித்து அக்காவிலுள்ள மஹா முனியைக் கண்டு வணங்கி, "யானைக் குற்றமென்" னென்று வினவ, முனிவரரும் அவதி ஞானத்தால் உற்றதறிந்து சொல்லத் தொடங்கி, "இப்பரத க்ஷேத்திரத்து அஸ்தினபுரத்தில் பிரீதிபத்திரன் என்னும் அரசனிருந்தான். அவன் தேவிவசுந்தரி; புதல்வன் பிரீதிங்கரன்; மந்திரி, சித்திரமதியென்பான்; அவன் தேவி கமலை; இவர்கட்குப் புதல்வன், விசித்திரமதி என்பான்; இந்த அரசகுமாரனும், மந்திரி குமாரனும், பிரியாச் சிநேகிதர்களாயிருந்தார்கள். அங்ஙனமிருக்கும்போது அவர்கள், தருமருசி என்னும் ஸாதுவின் சரணஞ் சார்ந்து, திருவறங் கேட்டு, ஜும்

புலன்கண்மேல் வெறுப்புற்று ஜினதீக்ஷை கொண்டிருந்தார்கள். அவர்களில், பிரீதிங்கரமுனி க்ஷீராஸ்ரவத்துவம் என்னும ரித்தியாகிய, பால்போல மதுரமுடைய வார்த்தையுடையவனுஞன். இவ்விரு முனிவரும் அயோத்தியாபுரத்தின் பாறையப் பிரதேசத்திலடைந்தார்கள். அப்போது அரசகுமாரனுகிய பிரீதிங்கரமுனி அந்நகரில் ஆகாரம் கொள்வதற்காகச் சரியாமார்க்கமாக வெழுந்தருளினன். அத்தருணத்தில் அந்நகரத்திலுள்ள புத்திஷேணை யென்னும் கணிகை மாதானவள் அம்முனி தன் வீட்டின் சமீபமடைய அந்த முனியை எதிர்கொண்டு வணங்கி, " ஸ்வாமி ! மேலான சத்பாத்திரங்களில் ஆகாராதி தானம் செய்வதற்குரிய நற்குலத்தில் பிறப்பதற்கு ஹேதுவென் " என்று கேட்ப, அவர், " மனிதர் தம்மை நிந்தித்துப் பெரியோர்களை ஸ்துதித்து, ஜீவதயவையுடையராகி, புலசு தேன்கள் ஆகிய இவைகளை நீக்கி, ஸம்யக்த்வாதி குணங்களோடு சேர்ந்து மாயமில்லாத மனத்தராகி வர்த்தித்தால் மேலான குலத்தில் பிறக்க ஏதுவுண்டாகும் " என்றுரைத்தார். இதைக்கேட்டதும், கணிகை, புலசு, தேன், இவற்றினின்று மீண்டு பொருந்திய சீலவிரதமும் கொண்டு திருந்திய குணத்தளாகினள். முனிவரும் திரும்பிக் கானிலிருக்கும் விசித்திரமதி முனியிடமடைந்தார். அப்போது, அவரை, " இவ்வளவு காலதாமதமாய் வந்ததற்குக் காரணமென்ன ?" என்று விசித்திரமதி முனி வினவ, அவர், கணிகையாகிய புத்திஷேணையைக் கண்டதையும், அவள் கேட்ட விஷயத்தின் விவரத்தையும், அதற்குத் தாம் சொல்லிய விதத்தையும், அவள் சீலாசாரங்களைக் கைக்கொண்டதையும் கூறினர். அவற்றைக்கேட்டதும், விசித்திரமதி முனிவன் ஆச்சரியமடைந்து, பெருமூச்சுவிட்டு, அவள்பேரில் காமராகத்தனுகி அவளின் உருவத்தையும் அவளிருக்கும் விடுதியையும் கேட்டுக்கொண்டு கருமவசத்தினல், அவளிடமடைய, அக்கணிகை அவனைக்கண்டு வணங்கி விரதத்தினல் உண்டாகும் பலனென்னென்று கேட்டாள். அதற்கவன் மோஹஹேதுவாகிய வசனத்தைச் சொல்ல, அவள், " இம்முனி புதியன் " என்றறிந்து, அவனிடத்தே ஸ்த்ரீராகத்தால் கெட்டார் கதைகளைச் சொன்னள். அவன் கேளாது மோஹத்தனுஞன். அதன்மேல் கணிகை கோபித்து அவனை வெறுத்து இகழ்ந்து நீங்க, அதனல் அம்முனிவன் கோபமுற்று வருத்தத்தோடு அவளைச் சேரும் உபாயத்தை யோசித்து, அந்நகரமாளும் மாம்ஸபோஜியாகிய கந்தமித்திரனென்னும்

அரசனுக்குச் சமையற்காரனுகி அவனுவக்குமாறு ஊனைச் சமையல் செய்து அவனுக்குப் போட்டு, அவனது உதவியால் புத்திஷேணையிடம் சேர்ந்தான். இவ்வாறு அவன் மாதின் மோகத்தில் மயங்கி, மாதவத்தைத் தொலைத்து, மாம்ஸத்தைச் சமைத்து, மடையனுய் நின்ற பாவத்தால் அவ்வுடல் விட்டு இந்த யானையாய்ப் பிறந்தனன். இந்த யானை அவ்வாறு வந்ததாதலின், யான் இப்போது த்ரிலோக ப்ரஜ்ஞப்தியில் விலங்கு கதி ஸ்வரூபமும் பிறக்கும் ஹேதுவும் சொல்லக்கேட்டு, அப்பிறப்பறிந்து நொந்து விரத சீலத்ததாயது.'' என்று கூறிப் பின்னரும் சில தருமவசனங்களையும் சொன்னர். அவற்றைக்கேட்டு இரத்திஞயுதன் விராகமடைந்து, முடியினை மகனுக்கீந்து, வஜ்ரதந்த முனிவரை வணங்கி ஸர்வஸங்கபரித்தியாகமாகிய தவங்கொண்டனன். இவ்வாறு இரத்திஞயுதன் துறந்ததும், அவனது தாயாகிய அரதன மாலையும் துறந்து நோற்றனள். தாயும் மகனும் தவத்தில் நழுவாமல் இருந்து அந்தியத்தில் அச்சுதகல்பமடைந்து இருபத்திரண்டு கடலாயுஷ்யமுற்று இன்பம் அடைந்திருந்தனர்.

இப்பால் நரகந்தாழ்ந்த அரவின் செய்கை என்னவென்ருல் அது பங்கப் பிரபையென்னும் நாலாவது நரகத்தில் பத்துக்கடலாயுஷ்யங் கழித்து அந்நரகத்தினீங்கி நாலு கடற்காலம் த்ரஸஸ்தாவரத்தில் சுழன்று தீய துயரமுற்றுப் பிறகு பரதத்தில் கச்சையென்னும் புரத்தில் தாருண கிரணனென்னும் வேடனுக்கும் அவன் மனைவியாகிய மங்கிக்கும் புதல்வனுய் அதிதாருணனென்னும் பெயருடையவனுயிற்று. பாவமே உருக்கொண்டாலொத்த தூர்த்தனுகிய இவன், ஒருநாள், வில்லும் அம்புகளுங் கொண்டு பிராணிகளை வதைசெய்யும்படி பர்வதத்தின் மேலேறினன். அங்ஙனமேறினவன் அவ்வரைமிசை யோகத்தினின்ற வச்சிராயுத முனியைக் கண்டு, கோபத்தீயால் அவருக்கு அளவற்ற கொடுமைகளைச் செய்தான். அவைகளை முனிவர் பொறுத்து, அறிவால் மிகுந்து, அறத்தினை நினைந்து, தியானத்தில் நின்று, சரீரம் நீங்கி ஸர்வார்த்த சித்தியடைந்து, முப்பத்து மூன்று கடலாயுஷ்யத்தைப் பெற்று, உத்தம தேவனுய் அறமிந்திரனுயினன். இவ்வேடன் இணையிலாப் பாவஞ்செய்து இறுதியில் ஏழாம் நரகமடைந்து, சொல்லரிய துன்பமுற்ருன். ஆகையால், ஆர்வ செற்றங்களன்றி, ஆத்மனுக்கு வேறு பகையில்லையென்பதை யாவருமறிந்து அறநெறிபொழுகி ஆர்வம் நீங்குதல் மிக நன்று.

## கூ-வது : பலதேவன் சுவர்க்கம்புக்க சருக்கம்

சிம்மஸேன அரசன், மேற்கூறியபடி வஜ்ராயுதனாகி, சர்வார்த்த சித்திபடைந்தான். அப்போது மந்திரியான சத்தியகோஷன் வேடனாகி ஏழாம் நரகமெய்தினான். இவர்களிருவரும் பூமியில் வந்து கூடுமளவும் இளைய குமாரனாகிய பூர்ணச்சந்திரனும் அவனது தாயாகிய இராமதத்தா தேவியும் உற்றபிறப்புக்களை இனிக் கூறுவாம். தாதகீஷண்டத்வீப பூர்வ பாகத்து, மஹம்மேரு பர்வதத்திற்கு மேற்கில், ஸீதோதாநதியின் வடகரையில், கந்திலையென்னும் நாட்டில், அயோத்தி என்னும் நகரத்து அரசன் அருநத்தாஸன் என்பான். அவனுக்குத் தேவிமார், ஸுவ்ரதையென்றும் ஜினதத்தையென்றும் இருவர். முன் அரதனமாலையாகி அச்சுதகல்பத்து இருந்த தேவன், ஸுவ்ரதா தேவியின் கருப்பத்திலடைந்து, நவமாஸ பரிபூர்ணமாகிய பின் வீதபயனென்னும் குமாரனாயினன். மற்றொரு தேவியினிடம் இரத்தினாயுதனாகிய அச்சுதகல்பத்து தேவன் வந்து தோன்றி விபீஷணனென்பானாயினன். இந்த வீதபய விபீஷணரிருவரும், இராம கேசவர்களாகி வளர்ந்து நிலமகட்கிறைவராகி யிருக்கும்போது சத்துருவாகிய பிரதி வாஸுதேவன் இவர்கள் பேரில் யுத்த சன்னத்தனாக இருபடைகளும் சண்டையிட்டன. அப்போது சத்துருவின் சேனை வீதபயனது சண்டைக்குப் பயந்தோடிற்று. அதுகண்டு சத்துரு பொறுதவனாகி நேரில் வந்து யுத்தகளத்தில் இவ்விருவருடன் அனேகமாகிய யுத்தஞ் செய்தும் முடியாமல் கடைசியாகச் சக்கரத்தை விட அது வந்து விபீஷணனாகிய கேசவனது ஹஸ்தத்திலடைந்தது. விபீஷணன் அந்தச் சக்ராயுதத்தையே திருப்பிச் சத்துருவின் மேல் விட்டான். அது போய் அவனை லோகாந்தரமடைவித்தது. அது கண்டு "என்ன ஆச்சரியம்! ஸம்ஸாரபோகம் நிலையில்லாமையாக இருந்தாலும் இச்சக்ராயுதம் சில காலம் ஒருவனிடத்திலிருந்து, பிறகு வேறொருவன் வசமாகி, முன்னிருந்தவனைக் கொன்றது மிகவுங் கொடுமையாகும்" என்று பலருமுரைத்துப் பரிதபித்தனர். பிறகு வீதபய, விபீஷணரிருவரும் திரிகண்டத்துள்ள யாவரையும் ஜயித்துத் தமது நகரமடைந்து ராஜ்யாபிஷேகஞ் செய்துகொண்டு பலதேவ - வாஸுதேவ ஸாம்ராஜ்யம் அடைந்து ஸுகித்திருந்தார்கள். பல ஆண்டுகள்

சென்ற பின், விபீஷணன் வியோகமானான். அதனால் வீதபயன் வைராக்யமுற்று வீதராகனாகிய முனியாகி, நோற்றுச் சதுர்விதாராதனையினால் சரீரம் விட்டு இலாந்தவகற்பம் புக்கான். அவன் யாரெனில் யானுங்கண்டாய்'' என்று தரணேந்திரனுக்கு ஆதித்யாபன் கூறி, பின்னும் சொல்லத் தொடங்கி, ''யான், விபீஷணன் எங்குற்றானென்று எனது அவதிஞானத்தால் அவன் இரண்டாவது நரகமடைந்ததை அறிந்து அவ்விடம் சென்று அவனைக்கண்டு அவலமடைந்தேன்.

## ௧௦-வது : நிரயத்துளறவுரைச் சருக்கம்

ஆதித்யாபனாகிய யான் மேற்கூறியபடி சக்கரப்பிரபையென்னும் இரண்டாம் நரகமடைந்து அவ்விடத்து விபீஷணனாகிய நாரகனைக் கண்டு அவன் சமீபத்திலணுகி, அவனை நோக்கி, ''நாரகனே! என்னை நீ அறிவாயா? ஆதியில் யான் மதுரை என்னும் பிராம்மண மாதாக, நீ அவள் மகள் வாருணியானாய். பிறகு யான் இராமதத்தை யாக, நீ அவள் குமாரனாகிய பூர்ணசந்திரனானாய். பின் இருவரும் நோற்று மஹா சுக்ரகல்ப தேவர்களாகி அதன்மேல் வித்தியாதர உலகத்தில் யான் ஸ்ரீதரையாக நீ என் மகள் யசோதரையாகினாய். பின் இருவரும் நோற்றுக் காபிஷ்ட கல்பம் அடைந்தோம். அங்கு நின்றும் யான் இந்தப் பூமியில் இரத்தினமாலை என்னும் மாதானேன். நீ என் மைந்தன் இரத்தினாயுதனானாய். இருவரும் சுபத்தியானத்தையுடையவராய் நோற்று அச்சுதகல்பஞ் சென்று மீண்டோம். அதன்மேல் தாதகீஷண்டத்வீபத்தில் பூர்வபாக கந்திலா நாட்டு அயோத்தி நகரத்தில் யான் வீதபயனென்னும் இராமனாக நீ, தம்பியாகிய விபீஷணனென்னும் கேசவனாகி இறந்து இவ்வேதனையையுடைய இரண்டாவது நரகத்திலாழ்ந்தாய்; யான் பெரிதாகிய தபம் புரிந்து லாந்தவமென்னுங் கல்பத்தில் ஆதித்யாபனென்னும் தேவனாகி அவதிஞானத்தாலுன்னையறிந்து இவ்விடத்தில் உனக்கு உறுதியாகிய தர்மம் போதிக்கும்படி வந்தேன்'' என்றேன். அவ்வாறு கூறலும் அவன் முற்பவங்களையறிந்து என்னை வணங்கி மயங்கினான். நான் அவனைத் தேற்றி, ''இந்திர போகமாயினும் யார்க்கும் நின்றதில்லை, வெந்துயர் நரகின் வீழாவுயிர்களுமில்லை; ஸம்ஸாரப் பிராணிகட்குச் செல்வந் தோற்றித்

E

தொடர்தலும் மாய்தலும் இயல்பு; அதற்காக நீ கவல வேண்டாம்; சகித்தற்கரிய நரக துன்பம் பெரிதென மயங்கவேண்டாம்; இன்னும் கீழுள்ள நரக துன்பம் இதைவிட இரட்டிபிரட்டிபதாகும்; இப்படிப் பட்ட துன்பமுடைய நரகங்களில் தர்மத்தை மறந்து ராகத்வேஷ மோஹ தீவ்ரத்தால் அதிபாபம் செய்தவர்கள் விழுவார்கள்; நீயும் ராஜ்ய போகத்தில் அதிராகமுற்று ஆர்தத்தால் மரித்து, அதி துக்கத் திற்கிடமான துர்க்கதியை யடைந்தனை; இனி உன்னை மீட்டல் அருமை யாயினும் நான் இதற்கு சிறிதுரைப்பன்; நீ தருமத்திலொன்றிய மனத் தனாகி, இந்நரகத்தி லுன்மேல் கோபித்துத் தீங்கு செய்பவர்களை நீ முனியாமல், 'இது முன்னை, என்னால் செய்யப்பட்ட வினைப்பய' னென்று நினைத்து க்ஷமாபரனாகுக; அன்றேல் மிகுபாவமாகும்; அது உன்னைப் பிறகு விலங்கிலுய்க்கும்; இன்னும் அறிவன் முதலாகிய ஐவர் சரணமடைந்தால், ஸம்ஸார பயற்சி நீங்கும். ராகத்வேஷத் தோடு கூடினால் பல தீவினைகள் பந்தித்து பல பிறவியையாக்கும்; நீ வீட் டினை விளைக்கும் காட்சியை நீத்து மாட்சியில்லா நரகமெய்தினை; மீட்டும் நரகத்தில் வீழாமல் நற்கதியுற வேண்டின் காட்சியிற் கலங்காது காதல் முதலாம் கடுமைகளைவிட்டு நீங்குக; இக்கதி என்று நீங்குமென்று நீ எதமுற வேண்டாம்; நின்ற வினை நீங்க நீங்குமிதுவும்; உனதாயுளும் அனேகமாய்க் கழிந்துவிட்டது; இன்னும் சிறிதுநாளில் இக்கதி நீங்கி விடும்; இனி நீ வினைநீங்கி யுபர்வதற்காக வினையைவென்ற வீரியன் பாதத்தை மனதிலெண்ணித் தத்துவ உணர்ச்சியாம் ஸம்யக்ஞான மும், தெளிதலென்னும் தர்சனப்பகுதியும், ஒன்றியொழுகும் நன்று மொழுக்கமுமாகிய இரத்தினத் திரயத்தை இனிதாயடைந்தால், இரு வினை நீங்கி இன்பமுறலாம். ஆதலால் அரியபொருளை அறிவாற் பொருந்தி வினையினீங்கி விழுமியனாகுக; தருமமானது தத்துவந் தெளிதல். அவ்விதம் தெளிந்து அறத்தினைபுற்றால், அவ்வறம் உன்னை உம்பருலகுப்த்துப் பிறகு மூவுலகுக் கிறைபாக்கி மோட்சமும் அடை விக்கும்; ஆகையால், தம்பி! நல்லறத்தைப் போல் உயிர்கட்கு உற்ற துணை வேறில்லை; நீ சலனமின்றித் திருவறங் கொள்ளக்கடவாய்" என்றேன். அவன் என்னை வணங்கி, நான் சொன்னதையடைந்தான். யானுமென துலகடைந்தேன்.

---

# கக-வது : பிறவிமுடி சருக்கம்

பிறகு அங்காரகன், உபசமபாவமுற்று, அறிவரன் சரணமடைந்து, அருளுடையனாய், அப்பிறவியினீங்கி, ஜம்பூத்வீப ஐராவத க்ஷேத்திர, அயோத்தி நகரத்தரசன், ஸ்ரீ வர்மாவுக்கும் ஸுஸிமா தேவிக்கும் புதல்வனாய், ராஜ்யமடைந்து ராஜ கன்னிகைகளையும் சேர்ந்து, போகமனுபவித்திருந்தான். அங்ஙனமிருக்கும்போது அனந்தமா முனிவனென்னுஞ் சாதுவை வணங்கி ஸம்ஸாரத்தினது ஸ்வரூபத்தைக் கேட்டு ராஜ்ய போகத்தினீங்கித் தவத்தினையெய்தித் தருமத்தியானத்தோடு ஸம்யமம் பாலித்து, மோகராகங்கள் முதுகிட்டோட ஆராதனா விதியிற்றளர்வின்றி நோற்றுச் சரீரம் விட்டுப் பிரம்மகல்பமடைந்தனன். நரகனாதலும், நரனாதலும், தேவனாதலும், தீவினை தீர்த்தலும், தன்னாலாகுமென்னும் மொழிக்கு இலக்காய் நின்றானிவனே யாகும். இதையறிந்தும், நல்லறத்தைத் தெளியாதார் பேதைமையுடையராவர். பவணலோகத்திறைவனை தரணேந்திரனே! பஞ்சானுத்தரம்புக்க வச்சிராயுதன் வந்து சஞ்சயந்தனானான். பிரம்மகல்பம் புக்குத் தேவனாகியவன் வந்து சயந்தகுமாரனாகித் தவம்புரிந்து நிதான சல்லியத்தால் தரணேந்திரனாகிப் பவண லோகத்துக்கதிபதியாகிய நீயானான். உனது வருகை யித்தன்மையதாகும். அதிதாருணனென்னும் வேடன் ஏழாம் நரகினின்று பூமியில் பெரும்பாம்பாகி மறுபடி மூன்றாம் நரகமெய்திப் பிறகு ஐம்பொறி விலங்கிற் சுழன்று, பரத க்ஷேத்திரத்தில் பூதரமணமென்னும் வனத்தில் ஐராவதி யென்னும் நதிக்கரையிலுள்ள தாபஸத் தலைவன் கோசிருங்கனுக்கும் சங்கிக்கும் மிருக சிருங்கனென்னும் புதல்வனாகி, தூய்மையில்லாத் தவத்திற் சென்றான். அவ்வாறு செல்லும்போது ஒரு வித்யாதரனைக் கண்டு இத்தவத்தினால் யான் இவனைப் போலவே ஆகவேண்டுமென்று நிதானித்து, அப்பிறப்பினை யொருவி, இப்போது விஜயார்த்த பர்வத உத்தரஸ்ரேணி கனகபல்லவபுரத்து வச்சிரதந்தனுக்கும் அவனது தேவி வித்யுத் பிரபைக்கும் வித்துத்தந்தனென்னும் புத்திரனாய்த் தோன்றி அரசனாகி யிருக்கின்றான். அத்தகைய இவன், பழைய வைரத்தால் சஞ்சயந்த முனிக்கு இப்படிப்பட்ட கொடிய உபசருக்கஞ் செய்தான். இவன் ஆதியில் சத்திய கோடனென்னும் மந்திரியாயிருந்தவன்.

வைரத்தால் அரசன்மேல் த்வேஷமுற்று அத்துவேஷத்தால் துன்ப பாரத்தையுற்றனன். அரசனும் வைரமின்றி வீட்டின்ப பாரத்தை யடைந்தனன். சத்தியகோட மந்திரி பாம்பாகி, சமரியாகி, குக்குட ஸர்ப்பமாகி, மூன்றாம் நரகெய்தி, மலைப்பாம்பாகி, நாலாநரகெய்தி, வேடனாகி, ஏழாம் நரகனாகி, ஸர்ப்பமாய், மீண்டும் மூன்றாம் நரகனாகி, மிருக சிருங்கனென்னும் தாபஸனாகி, முடிவில் இந்த வித்துத்தந்தனாய் வந்தான். சிம்மஸேனவரசன், யானையாகி, ஸஹஸ்ரார தேவனாய், கிரண வேகனாய், காபிஷ்ட கற்பத் தேவனாகி, வச்சிராயுதனாகி, பஞ்சாணுத்தரத்தமரனாகி, பார் மேல் மன்னிய புகழையுடைய சஞ்சயந்தனாகி முக்தியடைந்தனன். ஆகையால் அஞ்ஞானியான இவ்வித்துத்தந்தனை நாகபாசத்தினின்றும் விடுத்து உயிரோத்து இவனோடு ஒழுகக் கடவாய்'' என்று லாந்தவேந்திரனாகிய ஆதித்யாபன் சொன்னான். இவற்றைக் கேட்டுத் தரணேந்திரன், ஆதித்யாபனை நோக்கி, ''எனக்கு நீயே இறைவன்; முன்னரகத்தில் வந்து தருமோபதேசஞ் செய்தென திடும்பை போக்கினாய்; இப்போதும் பவாந்தரத் தொடர்பெலாஞ் சொல்லித் தர்சனத்தை விமலமாகச் செய்தாய்; ஆகிலும் இவ்வித்துத் தந்தன் குலத்துள்ள வித்தையைப் பறித்து வித்தியாதரருலகத்திருத்துவேன்'' என்றான். அதற்கு ஆதித்யாபன், ''அப்படிச் செய்யலாகாது; இப்பிழையை நீ பொறுக்க வேண்டும்'' என்ன, தரணேந்திரன், ''அப்படியாயின் உனதருளால் இவன் குலத்து ஸ்த்ரீகட்கே மஹா வித்தை வசம் வரத்தக்கதாகவும், அதுவும் சஞ்சயந்த பட்டாரகர் மோக்ஷம் போன இவ்விடத்திலேயே அவர் பாத மூலத்திருந்து சாதிக்கத் தக்கதாகவும் செய்கின்றேன். அன்றேல் இவர்கள், மேல் வருங்காலத்து எளியவர்களுக்கெல்லாம் அனேக துன்பம் செய்வார்கள்'' என்று அவ்விடத்தில் ஹ்ரீமந்தமென்னுங் குன்றின்மேல் சஞ்சயந்த பட்டாரகர்க்குக் கோயில் செய்து அவருடைய பிரதிபிம்பமும் செய்து பிரதிஷ்டை பூஜை செய்து அவரை மிகவும் வணங்கித் துதித்துத் தனதிடமடைந்தனன்.

ஆதித்யாப தேவனும் வித்தியாதரனாகிய வித்துத்தந்தனைப் பார்த்து, ''நீ வைரத்தை விடக்கடவாய்'' என்று தருமோபதேசஞ் செய்து மேலும், ''ஆதியில் இந்தச் சஞ்சயந்தரே சிம்மஸேனவரசனாக அவ்வரசனுக்கப்போது நீ மந்திரியாக யான் இராமதத்தை யென்னும் தேவியாகி இருந்தேன். அது முதல் இதுவரையில் நடந்த விவரங்

களை யெல்லாம் இப்போது தரணேந்திரனுக்குச் சொல்லியதால் நீயுங் கேட்டிருந்தனை " என, வித்துத்தந்தன் தெளிந்து த்வேஷம் நீங்கி அத்தேவனை வணங்கி, யான் அரசன் மேல் கறுவினால் பிறவிதோறுஞ் செய்த தீமை நீங்குமாறு பரிஹாரஞ் சொல்லென்று வேண்ட, அத் தேவன் சஞ்சயந்த பட்டாரகர் பாதத்தை புஷ்பாதிகளா லருச்சித்து வணங்கென, அவன் அப்படியே செய்து அறிவிலேன் செய்த தீமையைப் பொறுக்கவென்று அவரை ஸ்துதித்துப் போயினன். உறுதி யுரைத்த ஆதித்யாப தேவனும் உவந்து தன்னுலகடைந்தனன்.

## கஉ-வது: ஸ்ரீ விஹாரச் சருக்கம்

சிம்மஸேன வரசன் சஞ்சயந்தனுப்க் காதி யகாதிகளைக் கெடுத்து முக்தியடைந்தனன்; அப்பவத்தில் அமைச்சனாகிய ஸ்ரீபூதியன் வித்தியா தரனாகித் தன் பூர்வ பவங்களைக் கேட்டு வியந்து தருமந்தேறி யான் றிப் போயினன். இனி இராமதத்தையாகிய ஆதித்யாபனும், பூர்ணச் சந்திரனாகிய தரணேந்திரனும் எவ்விதமானார்கள் என்றால், கூறுவாம்: இப்பரத க்ஷேத்திரத்தில் உத்தர மதுரையென்னும் நகரத்து, அரசன் அனந்த வீரியனென்பான்; மனைவிகள் மேருமாலினியென்றும் அமிர்த மாமதியென்று மிருவருளர். அவரில் மேருமாலினியிடம் ஆதித்யாப தேவன் வந்து மேருவென்னும் புதல்வனானான். அமிர்தாமதியினிடம் தரணேந்திரன் வந்து மந்தரனென்னுங் குமாரனாகினான். இவ்விருவர் களும், வளர்ந்து, ஸகல கலாவல்லவர்களாகி யௌவன வயதடைந்த காலத்திலேயே ஸம்ஸார அஸாரத்தையறிந்து, த்வாதசானுப்பிரே க்ஷைகளை பாவித்து, வைராக்ய பரர்களாயிருந்தார்கள். அப்போது, விமல தீர்த்தங்கர பகவான் ஸ்ரீ விஹாரம் ஆகி, உத்தர மதுரையில் ஒரு உத்தியானத்தில் வந்து த்வாதசகணங்களுடனும், சதுர்ணிகாய தேவர்களால் செய்யப்பட்ட தேவ துந்துபி புஷ்பமாரி முதலாகிய பல அதிசயங்களோடும், சேர்ந்து, ஸமவஸரண மிருப்பதைக் கண்டு வன பாலகர் இந்த அரசகுமாரர்களுக் கறிவிப்ப, இவர்கள் சந்தோஷித்து அவ்வன பாலகர்களுக்கு அனேக ஆபரண முதலானவைகளை, மரி யாதையாகக் கொடுத்து, தாங்கள் எழுடி நடந்து இறைவனை வணங்கி, " இறைவன் பாதங்களை வணங்கும்படி நாம் இப்போதே அவ்விடம்

செல்ல வேண்டும்" என்று, பூஜாத் திரவியங்களுடன் அனேகர் கூட வரப் புஷ்ப மாலை முதலியவைகளைப் படலிகைகளில் ஏந்திக்கொண்டு, யானையின் மேலில் உத்தியானத்துள்ள ஸமவஸரணத்திற்குச் சென்றார்கள்.

## ௧௩-வது : சமவசரணச் சருக்கம்

அவ்வாறு சென்ற மேருமந்தர குமாரரிருவரும் ஸமவஸரண மண்டலத்துக்குச் சமீபத்தில் சென்று, யானையினின்றும் இறங்கி, தங்களுக்குள்ள சாமரை முதலாகிய பரிவாரங்களையெல்லாம் விட்டுப் பன்னிரண்டு யோஜனை விஸ்தீர்ணமுடையதாகி, வட்டமாகி, நவமணிகளாலும் ஸ்வர்ணங்களாலும் தேவர்களால் நிருமிக்கப்பட்டதாகி, பூமிக்கு மேல் ஐயாயிரந் தண்ட உயரத்திலிருப்பதாய், இருபதினாயிரம் படிகளையுடையதாகிய ஸமவஸரண மண்டலத்தில் பிரதம பூமியாகிய ப்ராஸாதசைத்ய பூமியையடைந்து, நான்கு மஹா திக்குகளிலிருக்கின்ற வீதியால் உள் நுழைந்து, அப்பூமியிலிருக்கின்ற மானஸ்தம்பங்கள் நாலையும் வணங்கி, நீங்கின மான கர்மத்தையுடையவர்களாய், உட்சென்று, பார்ப்பவர்களுக்கு ஸமுத்திரம் போன்று ஆழமாய்த் தோன்றி அடைந்தவர்கட்கு முழந்தாள் பரியந்தமாகி மேடுபள்ளமில்லாமல் சமமாகி நீர்ப்புஷ்பங்களால் நிறைந்ததாகி விளங்கும் இரண்டாம் ப்ராகாரமாகிய அகழ்ப்பூமியையுஞ் சுற்றிப் போய், கோபுரவாசல் வீதியால் உள் நுழைந்து, மல்லிகை முல்லை முதலாகிய புஷ்பங்கள் பூத்திலங்கும் மூன்றாம் பிராகாரமாகிய வல்லி பூமியையும் தாண்டி, உதயதரமதிலையும் கோபுரத்தையும் தாண்டிச் சென்று, அதனுள்ளிருக்கும் நாலாம் பிராகாரமாகிய வனபூமியையும் அதிலுள்ள தோப்புகளையும் சைத்ய விருக்ஷங்களையும் ஸ்தூபங்களையும் தடாகங்கள் முதலியவைகளையும் வீதியிலுள்ள நாடக சாலைகளையும் பார்த்துக்கொண்டு பிரீதிகர மதிலையும் பிரீதிகர கோபுரத்தையும் தரிசித்துக் கோபுர வாயிலால் உட்சென்று, தசவிதலாஞ்சனங்களையுடைய துவஜங்களால் வரிசை பெற்றிலங்கும் ஐந்தாம் பிராகாரமாகிய தவஜ பூமியைப் பார்த்துக்கொண்டு, கல்யாணதர மதிலையுங் கோபுரத்தையும் தரிசித்து, அதனுட் பிரவேசித்துக் கல்பக விருக்ஷ பூமியாகிய ஆறும் பிராகாரத்திலிருக்கப்பட்ட

அனேக அழகதிசயங்களையும் முனிவர் கூட்டங்களையும் கண்டு வணங்கி ஆனந்தங்கொண்டு அப்பால் சென்று, ஏழாம் பிராகாரமாகிய கிரஹாங்கண பூமியிலுள்ள ஸ்தூபைகளை வணங்கி, ஜெயபாஸ்ரீய மண்டபம் மஹோதய மண்டபம் முதலானவைகளையும் பார்த்து, இவ்விதம் ஸப்த பிராகாரங்களை வரிசைக் கிரமத்தால் கடந்து, உள்ளிருக்கும் லட்சுமிவர மண்டபத்தில் வீதி வாசல்கோபுர வழியால் நுழைந்து, த்வாதச கணங்களையும் கண்டு அதனுள்ளிருக்கும் ரத்னபீடமாகிய பிரதம பீடத்தில் ஏறி வலங்கொண்டு, த்விதீய பீடமாகிய துவஜ பீடத்தையும் தரிசித்து அதன் மேல் திருதீயபீடத்தின் மேலுள்ள கந்தகுடி மண்டபத்தினுள், ஸிம்மபீடத்தின் மிசை சதுர்முகத்தையுடையவராய், நாலு பக்கங்களிலும் தேவர்கள் வெண்சாமரை வீச சத்திரத்திரயமுடையவராய், தேவதுந்துபி பிரபா மண்டலம் அசோக விருக்ஷம் புஷ்பமாரி திவ்யத்துவனி முதலாகிய அஷ்டமஹா பிராதிஹாரியங்களையடைந்து, கோடி சூர்ய சந்திரர்களது பிரகாசத்தினையும் ஜெயித்த ஜோதியையுடையவராய் விளங்கும் அனந்தஞானாதி அனந்த சதுஷ்டயங்களையுடைய விமல தீர்த்தங்கரரது திவ்விய ரூபத்தைக் கண்டு, ஆனந்தங்கொண்டு அனேகமாக ரூப ரூபஸ்துதி வஸ்துஸ்துதி குணஸ்துதிகளால் ஸ்துதித்து, கணதர கோஷ்டம்புக்கு ஸர்வ ஸங்க பரித்தியாகமாகிய தீக்ஷையைக்கொண்டு ஸம்பத் சீலங்களினிறைந்து, சப்தரித்திகளையும் குணோத்கிருஷ்டத்தால் பெற்றுச் சுருத கேவலிகளாகி, லோக ஸ்வரூபமும் ஞானப் பிரமாணமும் மித்தியாத்துவ ஸ்வரூபமும் கர்மாஸ்ரவங்கட்குக் காரணமாகிய தன்மையும் ஸம்ஸார ஸ்வரூபமும் மோட்சத்தின் பெருமையும் ஆகிய ஆறுவித தன்மைகளை யாவர்க்கும் விளங்கும்படி தங்களுடைய ஸ்ருதஞான பலத்தால் நாற்பத்திரண்டு பரமாகமங்களாகச் செய்து, வசனத்தின் வழியாக முனிவராதியர்களுக்குபதேசித்து விளங்கினார்கள். விமல தீர்த்தங்கரருக்கு மேருமந்தராதியாக கணதரர் ஐம்பத்தைவர், பூர்வதரர் ஆயிரத்து நூறு பேர், அவதிஞானிகள் நாலாயிரத்தெண்ணூறு பேர், விக்கிரியாரித்திபிராப்தர் தொளாயிரம் பேர், ஸம்பூர்ண ஸம்யதர் அறுபத்தெண்ணாயிரவர், நவஸம்யதர் மூன்று லட்சத்தறுபத்து நாலாயிரவர்; ஸ்ராவகரிரண்டு லக்ஷம் பேர்; ஸ்ராவகிகள் நாலு லக்ஷம் பேர்; ஆர்யாங்கனைகள் லட்சத்து மூவாயிரவர். இத்தன்மையாகிய விமல தீர்த்தங்கரரின் கணங்களுக்கு முதல்வர்களாகிய மேருமந்தரர்களிருவரும், தங்கள்

வினைகளைக் கெடுக்க நினைத்துக் கணங்களினின்றும் போய் ஓர் பர்வத சிகரமடைந்து, தசதரும தத்பரர்களாய்ப் பஞ்ச சமிதி திரிகுப்திகளை யுடையவர்களாய், பரீஷஹங்களைவென்று, ஷடாவசியக் கிரியைகளோடு கூடித் திரிகால யோகந்தாங்கி, திரிவித கரணங்களையும் ஒரு வழியாக்கி ஆத்துமபாவனை செய்து, அப்பிரமத்த குண ஸ்தானர்களாகி, ஸப்த பிரகிருதிகளைக் கெடுத்துப் பிறகு வரிசைக் கிரமத்தால் சுக்கிலத் தியானத்தால் காதி கர்மங்கள் முழுதும் வென்று, அனந்தஞானாதி அனந்த சதுஷ்டயத்தை யடைந்தார்கள். அப்போது தேவர்கள் வந்து இவர்களுக்கு ஏற்றவிதமாகச் சிறப்புக்கள் செய்து ஸ்துதித்தார்கள். அக்காலத்தில் இவர்கள் மீந்த அகாதி கருமங்களையும் அயோகி கேவலி குண ஸ்தானத்தில் தியானத்தால் வென்று, உலகுச்சியைச் சேர்ந்து ஸ்வயம்புவானார்கள். இவர்கள் சரீரத்துக்கு விண்ணவர் பரி நிர்வாண விதி பூஜையைச் செய்து, இவர்களைப் பணிந்து போனார்கள். இவர்கள் பவ வரிசைகளாவன:- மதுரை, இராமதத்தை, ஸ்ரீதரை, காபிஷ்டதேவன், அரதனமாலை, அச்சுதகல்பதேவன், வீதபயன், ஆதித்யாப தேவன், மேரு, ஸித்த பரமேஷ்டி.

வாருணி, பூர்ணசந்திரன், தேவன், யசோதரை, மறுபடி தேவன், இரத்தினாயுதன், அச்சுதகல்ப தேவன், விபீஷணன், நரகன், ஸ்ரீதாமாவென்னுமரசன், பிரம்மகல்பதேவன், ஜயந்தன், தரணேந்திரன், மந்தரன், சிவகதியடைந்த ஸித்த பரமேஷ்டி.

இம்மேருமந்தரர்களது ஸ்வரூபத்தை ஆதியோடந்தமாகப் படித்து அறிவுடையராகி ஆர்வத்தி னீங்கி யாவரும் நல்லறத்தினைப் பொருந்தி நாளாவர்த்தியில் நற்றவஞ் செய்து முத்தியடைகுதல் சித்தியாகும்.

**கதைச் சுருக்கம் முற்றுப்பெற்றது.**



## ஸ்ரீ புராணத்திலுள்ள

## ஸகர சக்ரவர்த்தி புராணம்

அஜித தீர்த்தங்கர தீர்த்தகாலத்து ப்ரஸித்தராகிய ஸகர சக்ரவர்த்தியவர்களது சரிதஞ் சொல்லுதும்.

ஜம்பூத்வீபத்து பூர்வவிதேஹ ஸீதாநதி வடதடத்து ஸம்யோஜநி விஷய வீதசோக நகரத்து ராஜா வைஜயந்தன். தேவி ஸர்வஸ்ரீ. இவர்கட்கு புத்ரர் ஸஞ்ஜயந்தனும், ஜயந்தனு மெனவிருவர். ஒருநாள் வைஜயந்த மஹாராஜன் புத்ரர்களோடுங் கூடப் போகி அசோகவநத்தெழுந்தருளியிருந்த ஸ்வயம்புநாம தீர்த்தங்கரர் ஸமீபமடைந்து மஹாமோஹ வியாக்யான ப்ரமாண ச்ரவணாநந்தரம் ஸம்ஸார வைராக்ய சித்தராகி மூவரும் ஸஞ்ஜயந்த குமாரன் புத்ரனாகிய வைஜயந்தனுமிசை வைத்த ராஜ்யபாரத்தராகி ஜிநதீக்ஷா ப்ராப்தராயினர். அதில் வைஜயந்த மஹாமுநி பரம ஸாமாயிக ஸம்பூர்ணித ஸகல காதிகர்மத்தனாகி பரமார்ஹந்த்யபதமடைந்தருளினன்.

ததநந்தரம் தத்கேவல பூஜார்த்தமாகவந்த தரணேந்த்ரனது ஐஶ்வர்ய ஸம்பதாதிசயங் கண்டு ஜயந்த தபோதநன் நிதாநம் பண்ணி அத்ராயுஷ்காந்தத்து தரணேந்த்ரனாயினன். அதில் ஸஞ்ஜயந்த தபோதநன் மேநாஹரபர்வத ஸமீபவர்த்தியாகிய பீமாரண்ய வநத்து ப்ரதிமாயோகியாகி நிற்ப, ஆகாசத்துப் போகாநின்ற வித்யுத்தம்ஷ்ட்ரனென்னும் வித்யாதரன் கண்டு பூர்வஜந்ம வைராநுபந்தத்தால் மஹாகோபமுஞ் சென்று தீவ்ரோபஸர்க்கஞ் செய்வான் வேண்டி எடுத்துப் போகி பரதக்ஷேத்ர விஜயார்த்த தக்ஷிணபாகத்து குஸுமாவதி,

ஹரிவதி, ஸ்வர்ணவதி, ரஜவதி, ஸ்வச்சோதையென்னும் நதிகளது கூட்டமாகிய ஸமாயக்ஷேத்ரத்துப் புகவிட்டுப்போகி விந்த்யாரண்யமொகத்துச் சென்று விந்த்யாரண்ய ஜநங்கட்கெல்லாம் விஸ்வாஸமாமவ்வண்ணஞ் சொல்லுவான்.

“கோராகாயத்தால் பீஷணனாயினனொரு ஸமானு ராத்ரி ஸமயத்துள் விஜநமாகியபொழுது வந்து ஸர்வஜநஷ்யாதி ஸம்ஸ்ரோணி ஸக்ஷணானுவநாகின்றனன். இதுபொழுதே சென்று நாமவனை மொகாஸுர மடைவியோமாகில் ஸர்வஜந ஸம்ஹாரமாகும்.” என, கோரமாகிய விந்த்யாயனர் ஸமானஸக்ஷண பீதராகி விந்த்யாஸம் ஓம்ஷத்ரோடு திரண்டு போகி ஸம்ஜபத தபோ யநர் ஸமீபமடைந்து ஸர்வஸ்வாதிகளாலும் கோராவஸமர்ங்களைப் பண்ணுதலும் தபோயநரு மந்த உபஸமர்த்தினால் ஸராயி யிற்றளர்வின்றி நின்று நிரதிஸய ஸாக்ஷ்யாந நிஸர்மித வாதி கஸர்க்கனாகி வரரா நம்ஷ வதாஷ்யமடைந்தருளினன்.

அதுபொழுதே தகூமெஸவஸ்ய வஜ்ராஸர்மாக வந்து வதா விர்ய ஷேவராஸிகள் கோரகோர வியாயிகளாகியபின் ஜயனாகிய யாமெணம்ஷத்ரநு விந்த்யாயரநு செய்த கொராவஸமர்த்தைக் கண்டு கோரகோப வெமஞ்சென்று விந்த்யாயர ஜநங்களையெல்லாம் ஸமூ ஷத்ரஸ்யத்திடுவனென்று நினைந்து நாமவாஸத்தால் பம்ஸிப்பானுற்ற பொழுது, ஸகலவிந்த்யாயர ஜனங்களும் “ஷேவனே! நினது கோப த்தினை க்ஷமித்தருளவேண்டும். ஈநவராயிகளாகிய வெங்கட்கு ஸரண ஸயத்தினை சூவாதித்து வம்ஸித்த விந்த்யாஸம்ஷம்ஷத்ரனே நினது கோ பத்திற்கு விஷயனாகும்.” என்று சொல்லுதலும், அதுகேட்ட நாமெமம் ஷத்ரநு, விந்த்யாயரவமர் விஷயமொராஷ காஸாஷ்யத்தினை விட்டு விந்த்யாஸம்ஷம்ஷத்ரனை நாமவாஸ பஸ்ஸனுக்கிக்கொண் டெழுலுற்றபொழுது குஷிதாஸனென்னுந் ஷேவநு யாமெணம்ஷத்ரனை நோக்கிச் சொல்லுவான் :— “ நாமெமம்ஷத்ரனே! விந்த்யாஸம்ஷம்ஷநு கூதாவராய

னேயாயினும் க்ஷத்ரியனாகிய இவன் உனது கோபத்திற்கு ஆற்றகில்லான். அன்றியும் ஆதிதீர்த்தங்கர காலத்து நமோஸ்து ப்ரதிஷ்டிதமாகிய வித்யாதர வம்சத்துக்கு நீங்களே விநாசம் பண்ணுகை யொழுமன்று. அன்றியும் ஸம்ஸார சக்ரத்து சதுர்கதி ஸ்வபாவத்தால் வர்த்திக்கின்ற ஸம்ஸார ஜீவர்களுள் அன்யோன்ய வைர ஸம்பந்தமில்லாதாரில்லை யாதலில் வித்யுத்தம்ஷ்ட்ரனும் ஸஞ்ஜயந்த முனிவரனைப்போல் உனக்கு வைரியேயாகும். அன்றே முன் பிறந்த ஜந்மங்களுள் அன்யோன்ய வைராநுபந்தத்தால் சத்ருவாயிராகிய இவர்களது கதாப்ரபந்தத்தினைக் கேட்பாயாக'' வென்று சொல்லலுற்றனன்.

'' ஜம்பூத்வீபபரத க்ஷேத்ர ஸிம்ஹபுரத்து ராஜா ஸிம்ஹஸேநன். தேவி ராமதத்தை. இவன் மந்த்ரி ஸ்ரீபூதி ப்ராஹ்மணாதி ஸகலசாஸ்த்ர பாரங்கதனாகி ஸத்யவாதித்வத்தால் ஸத்யகோஷனென்னும் நாமத்தினனாகிய ஸ்ரீபூதியென்பான். பத்மஷண்டபுரத்து ஸமுத்ரதத்த ச்ரேஷ்டிக்கும் ஸுமித்ராதேவிக்கும் புத்ரன் பத்ரமித்ரன். இவன் ரத்நத்வீபமடைந்து உபார்ஜித்த பஹுவித ரத்நங்களுகி ஸிம்ஹபுரத்திலே வஸிப்பான்வேண்டி வந்து ஸ்ரீபூதிஸமீபமடைந்து ஸ்வவ்ருத்தாந்த நிவேதநபூர்வகம் ப்ரமாணபூதனென நினைந்து இவன் கையில் தனது ரத்நங்களை நிக்ஷேபித்துப் போகி பத்மஷண்டத்துநின்றும் ஸ்வபாந்தவ ஜநங்களைக் கொடுபோந்து ஸிம்ஹபுரம் புகுந்து ஸத்யகோஷனை யடைந்து தனது ரத்நங்களை வேண்டியபின் ஸத்யகோஷனும், '' அஸத்யஞ் சொல்லுகின்றாய்; யானுன்னைக் கண்டறிவதில்லை.'' யென்று சொல்லி லோபகஷாயோதயவசத்தால் அத்யந்தாபஹ்நவம் பண்ணினன். அதுகேட்ட பத்ரமித்ரனும் அதிக கோப சோகத்தினால், அஹோ! ஸ்ரீபூதி ராஜமந்த்ரி ஸத்யகோஷனென்றும், விப்ரோத்தமனென்றும், மந்த்ரஜ்ஞனென்றும், யசோராசியென்றும், பரதத்வஸாக்ஷியென்றும்

நினைந்து ஸ்வப்ரகாசமாக வென்னால் ஸஹஸ்ர நிக்ஷிப்தமாகிய ரத்நகா ஸ்நகத்தினை வெளியேற்றதினால் ஸ்வீகரித்து,

(க) வேளஜந்யம் ஹந்யேதத்ரம்ஸோ
விஜ்ரம் ஸம்யங்நாதிஷ்டா
விவத்த: வ்ராணவயஷ்யம் த
தீஹஸ்வம் ய்யாதிஹிஸ்வஹா.

(உ) ஶாணவ்ரஸவஸம் த்ரஸ்யா
கீர்த்தேர்ரதா நதாவிகா
ஸதேதவதா ஹஸம்ஶ்லிஷ்ட ॥
ஸத்யெஸ்வாயெஷ்யணதஹ்ய ஈத.

(ந) தேநவெவாயெஷ்யணவந்தாதி
தாராயாதஹர்ரவம் வேவஷ்டயா
தாஶர்தேதாதத்ரம் தாரவம்
தாரம் தம் ஹ்ர்நாஹாவயெக.

என்று யதேஶஸ்ய வ்ராக்ஷமாகிய ந்யாஸாவநவதோஷத்தை யறிந்து த்ரவ்யஹோராதிரேகத்தால் ஸத்யம் தாவநவம் பண்ணுகின்ற தீ த்ரியது ஸந்ராய தாஶத்தை ஸகல ஜநங்களும் அறிவீராமினென்று ஸநவர தீர்த்த ராஜமார்க்கங்களிலும், ஶஹாஸ்ய நங்களிலும், வக்ஷாஶ்ரங்களிலும்நின்று ஸவ ஜநங்களுமறியக் கூப்பிடலுற்றனன். ஸத்யவொஷனும் ஸ்வதோஷவ்ராஜ்ஞாதநாதமாக "ஐயோ! ஹத்ரதீத்ரநுவொர ஜநங்களாற் ஸவ ஹத்தஸவஸ்வ ரத்நத்தலில் ஶோகத்தாலுந்நத்தனுகி ஸஸதேஜஸவ்ரஸாவியாகின்றனன்." என்று ஸகல ஜநங்கட்கு மறிவித்து ஶுத்தஶாஸ்த்ரமாக நரவதிஸம்நியாநத்து யதேராயிகாரவெவ்ராக்ஷமாகிய ஶவயத்தினையுஞ் செய்தனன். ராஜா த்ருதாதஹாஷெவி ஹத்ரதீத்ரனது ஸநவரதாகெராஶத்தைக் கேட்டு வசீவசாவர விரோதமின்றியே ஏகவ்ரகாரத்தாலா கெராஶிக்

கின்ற இவன் உத்தமனல்லன்போலும். ஸத்யகோஷாவஹனத்தினை
த்யூத வ்யாஜத்தாலே பரீக்ஷிப்பனென்று ஸிம்ஹஸேநமஹாராஜா
வுக்கறிவித்து அநுஜ்ஞாபித நாமாங்கிதமுத்ரிகைகளையே பணித
பணயமாகவே பிசைந்து ஸத்யகோஷனோடு த்யூதஞ்செய்து ஜயி
த்தபின் அவ்விரண்டினையும் வாங்கி ரஹஸ்யமாக நிபுணமதியென்
னும் தாஸிகையுட் கொடுத்து இவையே அபிஜ்ஞாநமாக ஸ்ரீபூதி
தானு நிக்ஷிப்த ரத்நகரண்டகத்தினைத் தருகவென்று ஸத்யகோஷன்
ஆஜ்ஞாபித்தனனென்று தத்பண்டாரிகனுக்குச் சொல்லி யதனை
வாங்கிக்கொண்டு வருவாயாகவென்று, சொல்லிப் போகவிட்டழைப்
பித்தபின் ராஜா அநேகமாகிய ஸ்வரத்நங்களையும் அவைமறையுங்
கலந்து ரத்நகரண்டகத்தினை ஸ்ரீபூதிக்குக் காண்பித்துக் கொடுப்ப
அவனுமவற்றுள் ஸ்வரத்நங்களையே தெரிந்துகொண்டு சேஷரத்நங்க
ளைக் கொடுத்தனன். ராஜாவு மதுகண்டு ஸந்தோஷமுற்று அதிசய
ஸாதஞ் செய்து ஸ்ரீபூதிக்கு ஸத்யகோஷநாமஸஹித
ச்ரேஷ்டிபதமும் கொடுத்து ப்ரஷாவாதியும் மாயாவியுமாகிய
ஸ்ரீபூதியினுக்கு யதோசிதமான நிக்ரஹமாகிய தண்டங்களைச்
செய்கவென்று நியோகித்து யதிஷ்டமென்னும் ப்ராஹ்மணன்றனை
பூர்வபதத்தினை வைத்தனன். ஸ்ரீபூதியும் ஸர்வஸ்வஹரண
மும் மல்லமுஷ்டியென்னும் மஹாயோதரால் இடப்பட்ட சவட்டை முப்ப
தும், கம்ஸபாத்ரத்ரயம் நிறைந்த கோமய பக்ஷணமுமாகிய தண்ட
த்ரயங்களை அநுபவித்து நரபதிமிசை வைரமனத்தனாகி
ஆர்த்தத்யாநத்தோடு மரித்து ராஜபண்டாரத்து அகந்தன
னென்னும் ஸர்ப்பமாகிப் பிறந்தனன். அதச்ரேஷ்டிபதவ்யனாகிய
ஸ்ரீபூதியொருநாள் அஸநாடவியென்னும் வநத்து விமலகாந்தார
பர்வதத்து எழுந்தருளியிருந்த வரதர்ம பட்டாரகர் ஸமீப
த்தே பரிக்ருஹீத ஸம்யக்தர்சநாதி வ்ரதத்தினனாகி ஸம்ய
க்தர்சநங்களிலே அதிசய அநுராகம் பண்ணிச் செல்லாநின்ற
விடத்து இவன் மாதா ஸர்வஸ்ரீயென்பாள் ஸம்யக்தர்சநாலங்க்ருதை

யத்தினால் ஸம்ஸாரனென்பானாகி ப்ரத்யுமனைன அதிககோபத்தி
னோடுகூடி அவஸாநகாலமந்தத்து சேர்த்து அவநாடவிபிலே ஸாக்ஷிக்கோ
மாகிப் பிறந்து ஒருநாள் யஜ்ஞமெடுப்பால் அவ்வநத்தைப் போகாநின்ற
ஹஸ்திரத்தினைக் கண்டு சென்று பாய்தலும் வசித்த்ரு ஸரீரத்தினை
ஹோஷாநஸமயத்தாலே ராக்ஷஸர் ஹோமத்திக்கு ஸிம்ஹவம்ஸ
னென்னும் பாத்ராயினன். தத்காலத்து ப்ராண்யத்வம்ஸனென்
பானொரு பாத்ரனுமுளனாயினன். ஒருநாள் ஸிம்ஹஸேந ஹோ
ராஜனு ஸாணாகார ஜபஸ்நாநமாக ப்ரவேஸித்தலும் அநம்
யநஹோமஸர்ப்பம் அதிக கோபத்தினோடுங்கூடிக் கடித்தபொழுது
ஸர்வநிஜ்ஞஹ வித்யாநிபுணனாயினனொருவன் மாரணத்தி
னாலே ஸர்வ ஸர்ப்பங்களையும் ஸங்கம ஸர்ப்பங்களு
மிந்த ஹோமாக்நியிலே புக்கு அநபராதிகளானவை பிழைத்துப்
புறப்பட்டுப் போகவென்றும், அபராதியாகியது ஹஸ்மமாகவென்றுஞ்
சிந்தித்து ஹோமித்தலும் ஸர்ப்பங்களும் அதனுட்புக்குப்
பிழைத்துப் புறப்பட்டபின் அகந்தனஹோமஸர்ப்பம் அக்நியில் விழுந்து
ஹஸ்மீபூதமாகி காலவசத்து சமரீ மமமாயிற்று. ஸிம்ஹஸேந
ஹோமராஜனும் அதுவே காரணமாகவைராக்யமாதலில் சேர்த்து ஸமுகி
வசத்து அஸநிகோஷமென்னும் யானையாயினன். அந்த ஸிம்ஹவம்ஸ
ப்ராணவம்ஸர்கள் பரிவ்ராஜபராஜ யாவராஜஸத்தினராகிச்
செல்கின்ற காலத்து ஸிம்ஹஸேந ஹோமராஜ சரணவாத்ஸல்ய
ணாநந்தனும் ஹோமதேவி ஜபஸ்நாநமாக வந்த தன்மாதாவும்
ஜாதாவுமான தாந்தமதி ஹிரண்யமதிகளென்னும் ஆர்யாங்கனை
கள் ஸமீபத்தே பூர்ணசந்த்ராநந்தன் ராஜ்யஸ்ரீதேவியினைக்
கைக்கொண்டனன். அந்த பூர்ணசந்த்ரனவியோக ஸோகத்தினால் ஸம
ஸாரவிரக்தித்தனாகிய ஸிம்ஹவம்ஸ நரபதி அநந்தனாகிய ப்ராண
ணவம்ஸனுக்கு ராஜ்யபதங் கொடுத்து ராஜ்யத்துக்கு பிதாவா
கிய ப்ராணவம்ஸ தபோதநர் ஸமீபத்தே பூர்ணசந்த்ர
னன் ஜிநதீக்ஷாபத்ரனாகி விஸாகஸமய ஸமயத்திலாகாச

சாரணர்த்திஸஹித மந:பர்யயஜ்ஞானங்களைப் பெற்றனன். மற்றொருநாள் ராமதத்தாயார்யாங்கனைகள் மநோஹரோத்யானத்தெழுந்தருளியிருந்த ஸிம்ஹசந்த்ர தபோதநரைக் கண்டு வந்தித்து, 'முநீந்த்ரனே! ஸம்ஸாரத்திலே அநாஸக்தசித்தனாகிய பூர்ணசந்த்ரன் ஜிநதர்மத்தினைத் தலைப்படுவனோ' வென்று வினவ ஸிம்ஹசந்த்ரமுநீந்த்ரன் அருளிச்செய்வான்:— பூர்ணசந்த்ரனும் மாலு விசிஷ்டமாகிய தர்மத்தினைக் கேட்டற்கு ஸம்சயமில்லை. அவனது கதையினையுங் கேட்பீராமின்.

கோஸல விஷயத்து வ்ருத்தக்ராமத்து ப்ராஹ்மணன் ம்ருகாயணன், பத்நி மதுரை, இவர்கட்கு புத்ரி வாருணியென்பாள். ம்ருகாயணன் ஸ்வாயுராவஸாநத்து மரித்து ஸாகேதபுரத்து அதிபலநரபதிக்கும் ஸ்ரீமதி தேவிக்கும் ஹிரண்யவதியென்னும் புத்ரியாகிப் பிறந்து ஸௌராஷ்ட்ரவிஷய போதநபுரத்து பூர்ணசந்த்ரநரபதிக்கு தேவியாயினள். மதுரை பூர்ணசந்த்ர ஹிரண்யவதிகட்கு ராமதத்தையென்னும் புத்ரியாயினை, ஸ்ரீபூதிஸ்ரேஷ்டி உமக்கு ஸிம்ஹசந்த்ரனென்னும் புத்ரனாயினேன். வாருணி பூர்ணசந்த்ரனாயினன். உம் பிதாவாகிய பூர்ணசந்த்ரன் ஹரிவாஹநமுநிபதி ஸமீபத்தே தீக்ஷித்து இருவருமுமக்கு குருக்களாயினர். உம் மாதாவாகிய ஹிரண்யவதியும் தாந்தமதிகளென்னு மார்யாங்கனைகள் ஸமீபத்தே தீக்ஷையினைக் கைக்கொண்டனள். ஸிம்ஹஸேநமஹாராஜன் ஆர்த்தத்யாநவசத்தனாகிப்போகி அசநிகோஷனென்னும் கஜேந்த்ரமாகி வர்த்திக்கின்ற விது யத்ருச்சையால் தத்தாதநாகிய வென்னைக் கண்டு பயப்பாடொருப்பட்டு வந்தபின் யானும் ஆகாசத்தெழுந்து நின்று பூர்வ ஸம்பந்தப்ரபோதநபூர்வ அஹிம்ஸாதி ஸகல வ்ரதங்களையும், ஸம்யக்தர்சந ஸம்யக்ஜ்ஞாந சாரித்ரத்தினையுஞ் சொல்ல கஜபதியும் சாந்த சித்தந்தநாகி சித்தப்ரணிதாநத்தோடு கேட்டு ஸந்யாஸஸந்யஸ்நாநத்தினையடைந்து அநவரதம்

ஷ்யாவஸாநத்து உத்தரவிக்ரியாரூபமாக க்ரமத்தால் ஶரீர பரி த்யாகஞ் செய்து உபரிமோபரிமத்து ப்ரீதிங்கர விமாநத்து அஹமிந்த்ரனாயினன். அப ராஜேந்த்ரனாகிய ஸாகரதேவனு அவ்விமி தேவாயுஸ் ஸாகரோபமங்களை அநுபவித்தபின், ஜம் பூத்வீப ஐராவத க்ஷேத்ர விஜயார்த்த பர்வத தக்ஷிணஶ்ரேணி யாரண்யதிலகபுரத்து, ராஜா அதிவேகனு தேவி ஸுலக்ஷணை யிவர்கட்கு ஸ்ரீதரையென்னும் புத்ரியாகிப் பிறந்து அலகாபு ரத்து தர்ஶகனென்னும் வித்யாதர ராஜனுக்கு தேவியாயபின் இவர்கட்கு பூர்ணசந்த்ரனாகிய வைடூர்ய தேவனு போந்து யஶோதரையென்னும் புத்ரியாகி ப்ரபாகரபுரத்து ஸூர் யாவர்த்தனென்னும் ராஜாவுக்கு தேவியாயினள். இவர்கட்கு ஸிம்ஹஸேநனாகிய ஸ்ரீதரதேவனு தேவாயுஸ்ஸாகரோபமா வஸாநத்து வந்து ரஶ்மிவேகனென்னும் புத்ரனாயினன். ஸூர் யாவர்த்தனு முநிசந்த்ரமுநிஸமீபத்தே ஜிநதீக்ஷாபரனா யினன். பின்பு யஶோதரா ஸ்ரீதரைகளிருவரும் குணவதி யென்னும் ஆர்யாங்கனை ஸமீபத்தே தீக்ஷிதைகளானர். ரஶ்மிவேகனொரு நாள் ஸித்தகூட ஜிநாலயத்தெழுந்தருளியிருந்த ஹரிசந்த்ரமுநி ஸமீபத்தே தர்மஶ்ரவணாநந்தரம் ஜிநதீக்ஷாபரனாகி ஆகாஶ சாரணத்வத்தினையெய்தி யொருநாள் காஞ்சநகிரிகுஹையருகே யிரு ப்ப, ஸ்ரீதரை யஶோதரைகள் கண்டு வந்தித்திருந்தபொழுது முன்சொன்ன ஸத்யகோஷனாகிய நாரகனு போந்து ஸம்ஸாரத்து பரிப்ரமித்து தஜ்ஜந்மஹா ஸமீபத்தே ஜஹாஸர்ப்பமாகி வர்த்திக் கின்றவது ரஶ்மிவேகமுநியைக் கண்டுழிப் பூர்வ வைரஹேதுவாய நுபவயத்தினால் விழுங்கலுற்றபொழுது அதனை விலக்க வொருப்பட்ட ஆர்யாங்கனைகளு மொருமுறையே விழுங்கப்பட்டனர். மூவரும் தமது ஆர்யநா வியாற்றலின்றி ஶரீரம்விட்டு ரஶ்மிவேக முநி காபிஷ்டகல்பத்து ருசகவிமாநத்து அர்க்கப்ரபதேவனாயினன். ஸ்ரீதரா யஶோதரைகளுந் தத்கல்பத்து தேவராயினர்.

போதும், என்று சொல்லுதலும் அதுகேட்ட ராஜா ஸம்வேகாத்யோக்ஷ மாகிய ஸம்ஸாராஹார ஸகலதத்வத்தினைக் கொடுப்ப முனிவர்த்தி கொண்டபின் ஸவிதாயனாகி ஸம்ஜ்ஞாநத சாரித்ரவத் ஸமீபஸ்தரென்று முனிவரெல்லா யினை ப்ரத்யக்ஷபண்ணி சாரித்ரசக்ஷு அருளிச்செய்வான்:—

ஜம்பூத்வீப பரதக்ஷேத்ர சித்ரவாரத்து ராஜா ப்ரீதி வர்த்தநு; தேவி ஸாம்பரி; இவர்கட்கு புத்ரநு ப்ரீதிங்கரநு. சித்ரகீர்த்தியென்னும் மந்த்ரியும் கமலையென்னும் பத்நியும்பா த்ரநு விசித்ரமதியென்பான். ப்ரீதிங்கர விசித்ரமதிகளாகிய ராஜ மந்த்ரிபுத்ரரிருவரும் யசோதர சாரணமுநீந்த்ர யசோதர ணாநந்தரர் ஸம்ஸார ஸ்வரூபமொழி கேட்டவராகி தீக்ஷா ப்ராப்தராகியபின் ப்ரீதிங்கர சாரணஸமந்வித க்ஷீராஸ்ரவமென்னும் ருத்தி யையடைந்தனர். ஒருநாள் ப்ரீதிங்கர தமனாயநந ஸாகேத புரத்து அயோத்யா ராஜமார்க்கமாக விருந்தனனாய் புத்திஸேநனை யென்னும் கணிகையின் க்ருஹஸமீபமடைதலும் புத்திஸேநை ஆஹாரதாநாயோக்யம் பண்ணியானாயில் சொகந்நிறைவ் ஆஹா நிமிஷநம் பண்ணுநின்று சாரணமுநியை விநயோபசாரவியியால் வந்தித்து, "ஸ்வாமியே! உத்க்ருஷ்டதேவ விஜ்ஞாநாதி ஸம்பந்ந ளைப் பெறுதற்குக் காரணமியாதுகொ" லென்றுவினவ, சாரணமுநி "யோக்யாஹாரமதனுத்ரதத்தமிகு, தஸ்யோவா பேதியோ வவாஸாஷிகளாலாகும்," என்றருளிச் செய்துபோக விசித்ரமதி ஸமீ பமடைய, விசித்ரமதியும் பிந்தினைக் காலமெல்லாம் நகரத்துள் விளம்பித் தற்குக காரணமென்னென, அவரும் புத்திஸேநை யசோதரவண ப்ரத்தாந்தத்தினை யருளிச்செய்தனர். அதுகேட்டு விசி த்ரமதியும் காமோத்ரேகித சித்தத்தினனாகி மற்றைநாள் அந் நகரத்திலே அயோத்யா ராஜமார்க்கத்திலே தஸ்கணிகா க்ருஹங் குறு குதலும் புத்திஸேநை விநயபூர்வகம் நமஸ்க ரித்து யசோதரவணோத்மவெயாக உத்க்ருஷ்டியாகிய விசித்ரமதி யும் காமோத்ரேகியினையே சொல்லலுற்றனன். அவளுமிவனது

அம்பவிஸ்ருஷ்ட கடாக்ஷ விக்ஷேப ஸ்மரேங்கிதாதி ஸாத்விகபாவ விகாரங்களாலுந் தத்விஷய வசநங்களாலுமிவன் தேவமாயா வ்யாமோஹிதத்தினனென நினைந்து வைராக்ய நிமித்தமாகிய விஷயதோஷங்களை யெடுத்துரைத்து அவன்கண் அவஜ்ஞையினையே பண்ண, அவனும் அவஜ்ஞாதோஷத்தினாலும் தத்ஸந்நிதாநாபாவத்தினாலும் தீக்ஷ்ண ஸம்ஸாரம் வந்து தன்னகராதிபதியாகிய ஸம்யசித்ர நாமவதிராஜாவாஸந தசவாசநாதலில் ஸூதவசாஸ்த்ரஞ்சொன்ன முறையால் ராஜ ஸம்ஸ்காரம்பண்ணிக் காட்டி ராஜ ஸந்ததனாகி ஸூதவகாரனாகிப்பின், பாதிவேஷணமேய வஶீகரித்துச் சென்றபின் அவ்ருகாமுகா பரிந்து தேவவிஜய மென்னும் ஜனபதியாகி யென்றால் வ்யாவ்ருத்தி ரோக வ்ருஜுவிவாஹ ப்ரவணத்தினாலே ஜாதிஸ்ம்ருதிவந்து ஸ்வத்ருநிந்தா வைராக்ய ஸம்ஸார ஶரீரமோஹ நிவிர்ண்ணமாயிற்று. ஆதலில் ஹேயாஸூதவ விஷயாநுபவநாசகமாக ஸதிதேவ்யஸ்ஸமாகிய வரத ஜிநயத்தினை வரிதுஜித்தல் ஸநவ்யோ தேஹாரத்தினை காவாசமாகவும் ஜநநியினை தாவலி பொருட்டாகவும் த்யஜித்தல் போலும்.

(தஷாங்கம் :—மஹாபுராணம்.)

த்யாகேநா ஹோஸூய யச்சஸ்ய காமாயேவ தேஹாத்மந: |
ஜநந்யா ஜ.வ தாஸ்யாசம் தஸ்யத்தா த்ருக் ஸ்ருஜேஸ பாய: ||

என்றிவ்வண்ணம் வஜ்ரதந்த தேஹாரதிகள் பக்கல் விஷயநிந்தா வ்யாதமாகிய ஸூக்தத்தினைக் கேட்டு ஸம்ஸாரவிரக்தனாகி அதுபொழுதே ஸ்வபுத்ரனுக்கு ராஜ்யபதங் கொடுத்து தீக்ஷித்து ஸம்ஸ்த்ரகாமத்து ஸூராயநாவியால் ஶரீர பரித்யாகஞ்செய்து அச்யுதகல்பத்து தேவனாயினன். புத்ராயாயநு மாதாவாகிய புத்ரதேவியும் ஆர்ஜ்யாம்ஸனையாகி ஸம்த்யகாமத்து அச்யுதகல்பத்து தேவனாயினள். வஜ்ராயாய தேஹாதமி பொருளுள் ஸ்ரீமதியம் ஹரிஷேணமென்னும் வநத்து வ்ருதிராயோமயாரியாகி நிற்ப முன்சொன்ன நாரகநு

போந்து கஹ்வரத்து தாருணனென்னும் வ்யாதனுக்கும் மங்கியென்னும் ஸ்த்ரீக்கும் அதிதாருணனென்னும் வ்யாதனாகிப் பிறந்து திரிகின்றவனொருநாள் வஜ்ராயுத மஹாமுனியைக் கண்டதும் பூர்வ வைராநுபந்தத்தால் மஹாகோபமுற்றுச் சென்று மஹோபஸர்க்கங்களைப் பண்ண யோகீந்த்ரனந்த உபஸர்க்கங்களால் ஸமாதியிற்றவறின்றி சரீரபரித்யாகஞ்செய்து ஸர்வார்த்தமாகிய ஸர்வார்த்தஸித்தியை யடைந்தருளினன். மஹாபாப வ்யாதியாகிய அதிதாருணனு வ்யாதனு தமஸ்தமப்ரபையினை யடைந்தனன்.

அத அச்யுதகல்பத்து ஸ்ரீதராகிய ரத்னமாலா ரத்னாயுதனாகிய தேவர்கள் ஆயுஸ்திதி ஸமாப்தியாக அங்கு நின்றும் போந்து தாதகீஷண்ட த்வீபத்து பூர்வமந்தர பஸ்சிம விதேஹத்து கந்தில விஷய அயோத்யா நகரத்து ராஜா அர்ஹத்தாஸன்; தேவியர் ஸுவ்ரதை, ஜினதத்தை யென விருவர். ரத்னமாலையாகிய தேவன் ஸுவ்ரதைக்கு வீதபயனென்னும் புத்ரனாகி பலதேவனாயினன். ரத்னாயுதனாகிய தேவன் ஜினதத்தைக்கு விபீஷணனென்னும் புத்ரனாகி வாஸுதேவனாயினன். வீதபய விபீஷண ராமகேசவர்கள் த்ரிகண்டம் அர்த்தசக்ரவர்த்தி ஸாம்ராஜ்ய ஸம்பந்நராயிருந்து ஆயுராவஸானத்து வாஸுதேவன் சர்க்கராப்ரபையென்னும் நரகத்துட் டோன்றியபின், வீதபய பலதேவன் தம்பியொருவன் சோகத்தினால் ஸம்ஸாரவிரக்தி வந்து அநிவ்ருத்த கேவலியர் ஸமீபத்து தீக்ஷித்து முடிவின்கண் ஸந்யாஸ விதியால் சரீரபரித்யாகஞ் செய்து லாந்தவகல்பத்து ஆதித்யாபனென்னும் தேவனாயினன். ஆயின பின் அவதிஜ்ஞாநாவபோதத்தால் விபீஷணகதியினை யறிந்து த்விதீய நரகத்துட் சென்று ஸம்போதனம் பண்ணியபின் விபீஷணன் நரகத்துப் போந்து ஜம்பூத்வீப ஐராவத க்ஷேத்ரத்து அயோத்யா நகரத்து ஸ்ரீவர்ம நரபதிக்கும் ஸுஸீமா தேவிக்கும் ஸ்ரீதாமனென்னும் புத்ரனாகித் தோன்றினன். இவனொருநாள் அநந்தமதி ஸமீபத்தே ஜிநதீக்ஷா ப்ராப்தனாகி முடிவின்கண் ப்ர

ஓம்.

நமஃ ஸித்தேப்யஃ

# மேருமந்தர புராணம்

## மூலமும் உரையும்

## 1-வது : வைசயந்தன் முத்திச்சருக்கம்.

### கடவுள் வாழ்த்து.

1. குற்றங்க ளில்லான் குணத்தானிறைந் தான் குணத்தான்
மற்றிந்த வைய மளந்தான்வைய நின்ற பெற்றி
முற்று முரைத்தா னுரையீரொன்ப தாய தொன்றாற்
செற்றங்க டீர்ப்பான் விமலன்சரண் சென்னி வைத்தேன்.

(**இதன் பொருள்**) குற்றங்கள் - (விபாவமாகிய இராகத்வேஷமோகங்க ளென்னும்) குறைகள், இல்லான் - இல்லாதவனும், குணத்தால் - (ஸ்வபாவ குணங்களாகிற அனந்தஞானாதி) குணங்களால், நிறைந்தான் - நிறையப் பெற்ற வனும், குணத்தால் - (அந்த அனந்தஞானாதி) குணங்களால், மற்று - பின்னே, இந்தவையம் - இந்த உலகத்தை, அளந்தான் - (பரமாணுவினால்) அளப்பவனும், வையம் - இந்தவுலகத்தில், நின்ற - நிலைபெற்றிராநின்ற, பெற்றி - (ஜீவாதி பதார்த்தங்களினது) தன்மையை, முற்றும் - முழுமையும், ஒன்றால் - (திவ்வியத் துவனி) ஒன்றினால், உரை யீரொன்பதாயது - பதினெட்டு விதமான பாஷை களினால், உரைத்தான் - கூறி அருளியவனும், செற்றங்கள் - (தனது பாதத்தைச் சேர்ந்த பவ்வியப் பிராணிகளது) த்வேஷங்களை, தீர்ப்பான் - நீக்குபவனும், (ஆகிய) விமலன் - ஸ்ரீ விமல தீர்த்தங்கரருடைய, சரண் - பாதங்களை, சென்னி - சிரசில், வைத்தேன் - தரித்தேன், என்றவாறு.

இந்த நூலாசிரியர், இருபத்துநாலு தீர்த்தங்கரருள் பதின்மூன்றாந் தீர்த்தங் கரராகிய ஸ்ரீ விமல தீர்த்தங்கரரை மங்களார்த்தமாக முதலில் ஸ்தோத்திரம் செய்ததற்குக் காரணம்:—' இந்தக் கதா நாயகர்களாகிய மேரு, மந்தரர்கள், விமல

தீர்த்தங்கரரின் கணதரர்களாதலால், முக்கியமாக அநந்த விமல தீர்த்தங்கரரையே ஸ்துதிக்கவேண்டு' மென்பதே. மேரு, மந்தரர்கள், யாரெனில், சிம்மசேன மகா ராஜனுடைய பத்தினியாகிய ஸ்ரீராமதத்தை மேருவும், பூர்ணசந்திரனென்னும் இரண்டாவது குமாரன் மந்தரனுமாவர். அனந்த ஞானாதி குணங்களாவன:— அனந்த ஞானம், அனந்த தரிசனம், அனந்த சுகம், அனந்த வீரியம் என்பன. பரமாணு என்பது - அதி சூக்ஷ்மமும், அவிபாகியுமாகிய அணு. (க)

## அவையடக்கம்

2. மேதக்க சோதி விமலன்கணத் துக்கு நாதர்
மாதக்க கீர்த்தி யுபரமந்தர மேரு நாமர்
போதக் கடலார் புராணப்பொரு ளானம னத்தைச்
சோதிக்க லுற்றேன் றமிழாலொன் றுசொல்ல லுற்றேன்.

(இ - ள்) மேதக்க - மேன்மைபாகிய, சோதி - ஜோதியையுடைய, விமலன் - விமலதீர்த்தங்கரருடைய, கணத்துக்கு - (த்வாதச) கணங்களுக்கு, நாதர் - முக்கியர்களாகிய, மாதக்க - பெருமைபொருந்திய, கீர்த்தி - புகழினால், உபர - மேன்மையாகிய, மந்தரமேரு நாமர் - மந்தரனென்றும் மேருவென்றும் பெயருடையவர்களாகிய, போதக்கடலார் - சுருத ஞானமாகிய சமுத்திரத்தையுடையவர்களின், புராணப்பொருளால் - புராணமாகிய பொருளினால், மனத்தை - நூலாசிரியனாகிய எனது மனத்தை, சோதிக்கலுற்றேன் - பரீக்ஷிப்பதற்கு உத்தேசித்தவனாய், தமிழால் - திராவிட பாஷையினால், ஒன்று - ஒரு காவியத்தை, சொல்லலுற்றேன் - சொல்லத் தொடங்கினேன் எ - று (உ)

3. மலைபோல நின்று வெயில்வன் பனி மாரி வந்தால்
நிலைபோத லில்லார் நிலையின்முன னெண்ணாது நின்றேன்
கலையா னிறைந்தார் கடந்தகவி மாக கடலின்
நிலையாது மெண்ணா திதுநீந்துதற் கும்மெ ழுந்தேன்.

(இ - ள்) வெயில் - வெயிலாகிய கோடை காலமும், வன் - கொடுமையாகிய, பனி - பனிக்காலமும், மாரி - மழைக்காலமும், (ஆகிய இம்மூன்றும்) வந்தால் - வந்தாலும், மலைபோல நின்று - பர்வதம்போல சலியாது நின்று, நிலை - நின்ற நிலைமையில், போதலில்லார் - நீங்குதலில்லாதவர்களாகிய முனிவர்களது, நிலையின் - கூட்டங்களின், முன் - எதிரில், எண்ணாது - (இம்முனிமை, அதாவது: திரிகால யோகத்தோடு கூடிய துறவு கஷ்டமென்று) எண்ணாமல், நின்றேன் - நூதனமாக தபசைச் சேர்ந்திராநின்ற (இந்நூலாசிரியனாகிய) யான், கலையானிறைந்தார் - ஸாஸ்திரங்களினால் சம்பூரணமாகிய சுருதகேவலிகளினால்,

கடந்த - தாண்டப்பட்ட, கவி - சாஸ்திரமாகிற, மா - பெரிய, கடலின் - சமுத்திரத்தினது, நிலை - ஆழம் அல்லது அளவு, யாதும் - சற்றும், எண்ணாது - (இவ்வளவென்று) நினையாமல், இது - இந்தச் சாஸ்திரமாகிற சமுத்திரத்தை, நீந்துதற்கு - நீந்திக் கடப்பதற்கு, எழுந்தேன் - உத்தேசித்து முன் வந்தேன், எ - று. (எனவே நூலாசிரியர் நூதனதபசி என்பதும், துணிவால் இது சொல்லலுற்றனரென்பதும் விளக்கமாயின.) (௩)

4. நல்லோர்கள் போய வழிநாலடிப் போயினும்
பொல்லாங்கு நீங்கிப் புகழாய்ப்புண் ணியமு மாகுஞ்
சொல்லா னிறைந்த சுதகேவலி சென்ற மார்க்கஞ்
சொல்வா னெழுந்தேற் கொருதீமையுண் டாக வற்றே.

(இ - ள்) நல்லோர்கள் - நற்குணமுள்ள பெரியோர்கள், போய - சென்ற, வழி - நன்மார்க்கத்தில், நாலடி - நாலடிதூரம் (அதாவது: சிறிதாகிலும்), போயினும் - சென்றாலும், பொல்லாங்கு - கெடுதிகள் (அதாவது: பாவங்கள்), நீங்கி - விலகி, புகழாய் - கீர்த்தியாகி, புண்ணியமும் — ஆகும் - உண்டாகும், சொல்லால் - நல் வசனத்தினால், நிறைந்த - நிறைந்திரா நின்ற, சுதகேவலி - சுருதகேவலிகளாகிய (மேருமந்தரர்களால்), சென்ற - செல்லப்பட்ட, மார்க்கம் - நெறியாகிய சரித்தையை, சொல்வான் - சொல்லுதற்கு, எழுந்தேற்கு - ஆரம்பித்தனக்கு, ஒருதீமை - யாதொரு விக்கினமும், உண்டாகவற்றோ - உண்டாகுமோ, (உண்டாகாது என்றபடி), எ - று. (௪)

5. பொன்னைப் பொதிந்த கிழிபொன்னோ டிருந்த போழ்திற்
பொன்னைப் பொதிந்த கிழிதன்னையும் பொன்னின் வைப்பர்
புன்மைச்சொல் லேனும் புராணப்பொருளைப் பொதிந்தால்
நன்மைக்கண் வைத்தற் கினிநாமிரங் கும்ப டித்தோ.

(இ - ள்) பொன்னை - சுவர்ணத்தை, பொதிந்த - முடிந்த, கிழி - துணி, பொன்னோடு - ஸ்வர்ணத்தோடு, இருந்த போழ்தில் - இருந்த காலத்தில், பொன்னை - ஸ்வர்ணத்தை, பொதிந்த - முடிந்த, கிழிதன்னையும் - அந்துணியையும், பொன்னின் - ஸ்வர்ணத்தைப்போலவே, வைப்பர் - பாதுகாப்பில் வைப்பார்கள்; (அதுபோல்) புன்மைச்சொல்லேனும் - (நூலாசிரியனாகிய எனது சொல்) அற்பவசனமானாலும், புராணப்பொருளை - (உயர்ந்தோர்களது) புராணமாகிற பொருளை (சரிதத்தை), பொதிந்தால் - சேர்த்துச்சொன்னால், நன்மைக்கண் வைத்தற்கு - நன்மையாகக் கொள்வதற்கு, நாம் —, இரங்கும்படித்தோ - வருந்தவேண்டியதோ? (வேண்டியதில்லை என்றபடி), எ - று. (௫)

## நூல்.

6. மணிமுடி கவித்து வேந்தன் மன்னவர் தன்னைச் சூழ
வணியினே டிருந்த வேபோ லயங்கியங் கடலுந் தீவுந்
தணிவில்சூழ் மேரு வென்னுந் தடமுடி கவித்துச் சம்பூ
வணியினே டிருந்த தீபத் தரசன தகலத் தம்பொன்.

(இ - ள்) மணிமுடி - அழகியகிரீடத்தை, கவித்து - அணிந்து, வேந்தன் - சக்ரவர்த்தியானவன், மன்னவர் - அநேக அரசர்கள், தன்னைச்சூழ - தன்னைப் புடை சூழ்ந்திருப்ப, அணியினேடு - அழகோடு, இருந்தவே போல் - (மத்தியில்) இருந்ததைப்போல, அயங்கியம் - அசங்கியாதமாகிய (அதாவது கணக்கில்லாத), கடலுந்தீவும் - சமுத்திரமும் தீபமும், சூழ் - சூழ்ந்த, தணிவில் - குறைவில்லாத, மேருவென்னும் - மஹாமேருவென்னும், தடமுடி - பெரிதான மகுடத்தை, கவித்து - அணிந்து, அணியினேடு - அழகுடன், இருந்த - மத்தியில் இராநின்ற, சம்பூ - ஜம்பூவென்னும் பெயரையுடைய, தீபத்தரசனது - த்வீபராஜனது, அகலத்து - மார்பில் (அதாவது மத்தியில்), அம்பொன் - அழகிய, எ - று. (சு)

(இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்)

7. திருவெனத் திகழ்ந்து செம்பொன் மலையினைச் சேர்ந்து தீர்த்த
மருவியே செல்லுங் கந்த மாலினி யென்னு நாடு
விரவிலா விதேகர்க் கென்று முறையுளாய் விதேக நாமம்
மருவிய நாட்டுச் சீதோ தகைவட தடத்தி லுண்டே.

(இ - ள்) திருவென - இலக்குமியைப்போல, திகழ்ந்து - பிரகாசித்து, செம்பொன் மலையினை - சிவந்த பொன் மலையாகிய மகம்மேரு பர்வதத்தை, சேர்ந்து - சார்ந்து, தீர்த்தம் - தரும தீர்த்தமானது, மருவியே - (எக்காலமும் நீங்குதலில்லாமல்) சேர்ந்தே, செல்லும் - செல்லுகின்ற, கந்தமாலினியென்னும் - கந்தமாலினி யென்று சொல்லும் பெயரையுடைய, நாடு - தேசமானது, விரவு - (சம்சாரத்தில்) கலத்தல், இலா - இல்லாத (வைராக்கியத்தால் தபசைச் சேர்ந்த), விதேகர்க்கு - தேகத்தை நீக்கி முக்தி யடைபவர்க்கு, என்றும் - எப்பொழுதும், உறையுளாய் - வாசஸ்தலமாகி, (அதனுல்) விதேகம் - விதேகமென்கிற, நாமம் - பெயரை, மருவிய - சேர்ந்திராநின்ற, நாட்டு - விதேக க்ஷேத்திரத்து, சீதோதகை - சீதோதா நதியினுடைய, வடதடத்தில் - வடகரையில், உண்டு - இரா - நின்றது, எ - று. (எ)

## நாட்டுச்சிறப்பு.

8. ஐஞ்சிறப் பயருந் தேவர் நால்வகைக் குழுவோ டம்பொ
னிஞ்சிசூழ்ந் திலங்கு மேழு நிலத்திறை யிருக்கை வட்ட

மஞ்சிலம் பார்க ளாட லறிவன தெழுச்சி யாதி
யெஞ்சிடா வந்த நாட்டின் பெருமையா ரியம்ப வல்லார்.

(இ - ள்) ஐஞ்சிறப்பு - பஞ்ச கல்யாண பூஜையை, அயரும் - செய்யும், நால்வகைத் தேவர் குழுவோடு - (பவண, வியந்தா, ஜோதிஷ்க்க, கல்பவாசியராகிய) நான்குவகைத் தேவ கூட்டங்களோடு, அம்பொன் - அழகிய பொன்னுலாகிய, இஞ்சி சூழ்ந்து - மும்மதில்களால் சூழப்பட்டு, இலங்கும் - விளங்கும், எழுநிலம் - சப்த பூமியையுடைய, இறை - மூன்றுலகிற்கும் நாதனுகிய அருகத் பரமேஷ்டி, இருக்கை - தங்குதலையுடைய, வட்டம் - வ்ரத்தமாகிய சமவசாணம் (அதாவது கோயில்), அம் - அழகிய, சிலம்பார்கள் - பாதச் சிலம்புகளையுடைய தேவஸ்த்ரீக ளது, ஆடல் - நர்த்தனங்கள், அறிவனது - சர்வஞ்ஞனுடைய (அதாவது: அருகத் பரமனுடைய), எழுச்சி - ஸ்ரீ விஹாரம், ஆதி - முதலாகிய அதிசயங்களால், எஞ்சிடா - குறையாத, அந்த நாட்டின் - அந்தக் கந்தமாலினி நாட்டினது, பெருமை - பெருமையை, யார் - எவர்கள், இயம்ப - சொல்ல, வல்லார் - வல்லமையை யுடையவர்கள் ?. எ - று.

பஞ்சகல்யாணமாவன :—ஸ்வர்க்காவதரணம், ஜன்மாபிஷேகம், பரிநிஷ்க்கிரமணம், கேவலஞ்ஞானம், பரிநிர்வாணம் என்பனவாம். சப்தபூமி, மும்மதில், ஸ்ரீ: விஹாரம் முதலியவற்றின் விவரங்களை 12-வது 13-வது சருக்கங்களில் பார்த்துக்கொள்க. (அ)

9. மணியிலா மலையு மில்லை வனப்பிலா வனமு மில்லை
கணியிலா நிலமு மில்லை கரும்பிலாக் காடு மில்லை
யணியிலா மகளி ரில்லை யழகிலா மைந்த ரில்லை
துணிவிலாத் துறவு மில்லை தூய்திலா வொழுக்க மில்லை.

(இ - ள்) மணி - ரத்தினங்கள், இலா - இல்லாத, மலையும் - பர்வதமும், இல்லை - (அத்தேசத்தில்) இல்லை, வனப்பு - அழகு, இலா - இல்லாத, வனமும் - உத்தியானமும், இல்லை—, கணி - மருதநிலம் (வயல் நிலம்), இலா - இல்லாத, நிலமும் - பூமியும், இல்லை—, கரும்பிலா - கரும்புகள் விளையாத, நாடும் - ஊரும், இல்லை—, அணி - அழகு, இலா - இல்லாத, மகளிர் - ஸ்திரீகள், இல்லை—, அழகிலா - நன்மையில்லாத, மைந்தர் - புருஷர்கள், இல்லை—, துணிவு - திடன் (தெளிவு, நம்பிக்கை), இலா - இல்லாத, துறவும் - இல்லற நீக்கமும் (அதாவது: தபமும்), இல்லை—, தூய்திலா - பரிசுத்த மில்லாத, ஒழுக்கம் - சாரித்திரமும், இல்லை—, எ - று. (க)

10. கற்பிலா மகளி ரில்லை கருணையில் லாரு மில்லை
பொற்பிலா வறமு மில்லை போதமில் லாரு மில்லை

தற்கமில் லாரு மில்லை தானமில் லாரு மில்லை
சொற்கண்மெய் யிலாத வில்லை தூயால் லாரு மில்லை.

(இ - ள்) கற்பு - பதிவிரதமென்னும் நெறி, இலா - இல்லாத, மகளிர் - ஸ்திரீகள், இல்லை—, கருணை - தயவு, இல்லாரும் - இல்லாதவர்களும், இல்லை—, பொற்பு - அழகு (மிகுதி), இலா - இல்லாத, அறமும் - தருமமும், இல்லை—, போதமில்லாரும் - அறிவு இல்லாதவர்களும், இல்லை—, தற்கம் - நியாயசல்லாபம் (யோசனை), இல்லாரும் - இல்லாதவர்களும், இல்லை—, தானமில்லாரும் - (சற்பாத்திரங்களில், அபய, ஆகார, ஔஷத, சாஸ்திரமென்னும்) தானம் பண்ணாதவர்களும், இல்லை—, மெய்யில்லாத - சத்தியமில்லாத, சொற்கள் - வசனங்களும், இல்லை—, தூயரல்லாரும் - பரிசுத்தமில்லாதவர்களும், இல்லை—, எ - று.

எதுகையின்ப நோக்கித் தர்க்கமென்பது தற்கமெனத் திரிந்துவந்தது. (௧௦)

**11.** மணிநல வைரம் பைம்பொன் வரன்றிமா திரையுஞ் சந்துந்
துணிநல வகிலுங் கொம்புந் தோகையு மயிரு மேந்தி
வணிகநல் லொருவன் போல வயலக மடுத்த வாறு
பணிவிலாப் பழங்கொ டெங்கி னிலையெனப் பரந்த தன்றே.

(இ - ள்) மணி - இரத்தினங்களையும், நல்ல - நன்மையாகிய, வைரம் - வைரங்களையும், பைம்பொன் - பசுமையாகிய பொன்றுகள்களையும், வரன்றி - வாரி, மா - பெரிய, திரையும் - அலைகளையும், துணிசந்தும் - சந்தனக் கட்டைகளையும், நல் - நன்மையாகிய, அகிலும் - அகிற்கட்டைகளையும், கொம்பும் - யானைக் கொம்புகளையும், தோகையும் - மயிலிறகையும, மயிரும் - கவரிமான் மயிரையும், ஏந்தி - தரித்து, நல் - நன்மையாகிய, வணிகனொருவன்போல - ஒரு வியாபாரியைப்போல, வயலகம் - கழனியிடத்தை, அடுத்த - சேர்ந்த, ஆறு - நதியானது, பணிவிலா - குறைவில்லாத, பழங்கொள் தெங்கின் - பழத்தைக் கொண்ட தென்னமரத்தினுடைய, இலை என - ஓலையைப்போல, பரந்தது - பல பிரிவுகளாகப் பரவிற்று. எ - று.

ஆற்றின் கால்கள் தென்ன மரத்தின் இலையெனப் பரந்து பாயுமென்பது, 'பழங்கொடெங்கிலையெனப் பரந்து பாய்புனல்,' என்னும் சீவக சிந்தாமணிச் செய்யுளடியாலுணர்க.) (௧௧)

**12.** குழைகளும் மலருஞ் செற்றிக் குயில்களு மயிலு மார்த்து
மழையென மதுக்கள் பெய்து வண்டொடு தும்பி பாடி
விழைவுறுந் தகைய வாகி வேண்டினர் வேண்டிற் றீயு
மழகுடை மரங்கள் போன்ற வம்மலர்ச் சோலை யெல்லாம்.

(இ - ள்) அம் - அழகிய, மலர் - புஷ்பங்களையுடைய, சோலையெல்லாம் - தோப்புகளெல்லாம், குழைகளும் - தளிர்களும், மலரும் - புஷ்பங்களும், செற்றி - நெருங்கி, குயில்களும் - கோகிலங்களும், மயிலும் - மயிற் பறவைகளும், ஆர்த்து - சப்தித்து, மழையென - மாரியைப்போல, மதுக்கள் - மதுக்துளிகள், பெய்து - சொரிந்து, வண்டோடு - வண்டுகளோடு, தும்பி - தும்பி இனங்களும், பாடி - கீதங்களைப்பாடி, விழைவுறும் - விரும்பும்படியான, கவினவாகி - அழகுடையனவாகி, வேண்டினோர் - விரும்பினவர்களுக்கு, வேண்டிற்று - இச்சிக்கப்பட்டவைகளை, ஈயும் - கொடுக்கும்படியான, அழகுடை - அழகுவாய்ந்த, மரங்கள் - கற்பகத் தருக்களை, போன்ற - ஒத்திருப்பனவாம். எ - று. (கஉ)

13. மதியொடு மீன்க ணீல மணித்தலத் திருந்த வேபோற்
பொதியவிழ் கமல மாம்பல் பூத்தன பொய்கை யெல்லாம்
மதிமிசைக் கறுப்பின் வெண்டா மரைமிசை வண்டின் பாடல்
மதியன்ன முகத்தி னல்லார் வாய்ப்பண்ணி னெழுச்சித் தொன்றே.

(இ - ள்) மதியொடு - சந்திரனோடு, மீன்கள் - நட்சத்திரங்களும், நீல மணித்தலத்து - இந்திர நீலரத்தினத்தாலாகிய பூமியில், இருந்தவே போல் - இருந்ததுபோல, பொய்கையெல்லாம் - குளங்களிலெல்லாம், பொதியவிழ்ந்த - கட்டவிழ்ந்த, கமலம் - தாமரையும், ஆம்பல் - அல்லியும், பூத்தன - புஷ்பித்தனவாம்; மதிமிசை - சந்திரன் மேலேயிருக்கின்ற, கறுப்பின் - களங்கத்தைப்போல, வெண் - வெளுப்பாகிய, தாமரைமிசை - தாமரைப் பூவின்மேல், (இருக்கின்ற) வண்டு - வண்டுகளின், இன் - இனிமையாகிய, பாடல் - இசைப்பாடலானது, மதியன்ன - சந்திரன்போன்ற, முகத்தின் - முகத்தையுடைய, நல்லார் - ஸ்திரீகளது, வாய் - வாயினால் பாடப்பட்ட, பண்ணின் எழுச்சித்து - கீதத்தினது ஆரோகணம் போன்றதாகிய, ஒன்று - ஒன்றாம், எ - று. (கங)

14. அன்னமென் குருகு தாரா நாரைவண் டானங் கோழி
துன்னின பெடைக ளோடுந் துறந்தவு மழைத்த தோற்ற
மின்னரிச் சிலம்பி னல்லார் சில்லரி சிலம்ப வாடிக்
கன்னியாழ் பயிலுஞ் சாலை போன்றன கயங்க ளெல்லாம்.

(இ - ள்) கயங்களெல்லாம் - தடாகங்களெல்லாம், அன்னம் - அன்னப் பறவைகளும், மென் - மிருதுவாகிய, குருகு - குருகென்னும் ஒருவித நாரையும், தாரா - தாராவென்னும் புள்ளும், நாரை - பெருநாரையும், வண்டானம் - வண்டானமென்னும் நாரையும், கோழி - நீர்க்கோழியும் (ஆகிய நீர்வாழ் பறவைகளில்), பெடைகளோடும் - பெட்டைகளோடும், துன்னின - சேர்ந்திரா நின்றவைகளும், துறந்தவும் - துணையைவிட்டு நீங்கினவைகளும், அழைத்த - குரல்விட்டுக்கூவித் தங்கள் இணைகளை யழைத்ததனாலேற்பட்ட, தோற்றம் - விதத்தினாலே, மின் -

பிரகாசம் பொருந்திய, அரி - பருக்கைக் கற்களையுடைய, சிலம்பின் - பாதச்சிலம்பு களை யணிந்திராநின்ற, நல்லார் - ஸ்திரீகள், சில் - சிறிதாகிய, அரி-சிலம்பின் கற்கள் (மணிகள்), சிலம்ப - சப்திக்க, ஆடி - நர்த்தனமாடி, கன்னி - இளமைப் பருவமுள்ள, யாழ்பயிலும் - வீணையைக் கற்கும், சாலை - இடங்கை, போன்றன - ஒத்திருப்பனவாம், எ - று. (கச)

15. சாலிகள் கரும்பிற் செற்றிச் சாலவு முயர்ந்து தம்மின்
மேலள வொத்துச் செம்பொன் விரிந்துட னீன்று மேலோர்
காலுற வணங்கு வாரிற் கமலத்தி னிறைஞ்சிக் காய்த்த
நீலநற் பவழ முத்தின் கழுத்தவாய் நிறைந்த பூகம்.

(இ - ள்) சாலிகள் - நெற்பயிர்கள், கரும்பில் - கரும்பைப்போல், செற்றி - நெருங்கி, சாலவும் - மிகவும், உயர்ந்து - ஓங்கி வளர்ந்து, தம்மில் - தங்களுக்குள்ளே, மேலளவு - மேல் மட்டமானது, ஒத்து - சமமாகி, உடன் - அங்ஙனமானவுடனே, விரிந்து - விசாலித்து, செம்பொன் - சிவந்தபொன் போன்ற கதிர்களை, ஈன்று - பெற்று, மேலோர் - பெரியோர்களது, கால், பாதத்தில், உற - பொருந்த, வணங்குவாரில் - வீழ்பவர்களைப்போல், கமலத்தில் - தாமரைப்பூவில், இறைஞ்சி - வணங்கி (அதாவது தலை சாய்ந்து), காய்த்த - காய்த்து விளைந்தன; பூகம் - பாக்கு மரமானது, நீலம் - நீலமணியினதும், நற்பவழம் - நன்மையான பவழத்தினதும், முத்தின் - முத்தினதும் (நிறத்தையுடைய), கழுத்தவாய் - கழுத்தினையுடையனவாய் (அதாவது: கழுத்தில் முத்தனைய மலரும், நீலமணியை நிகர்த்தகாயும், பவளத்தை நிகர்த்த பழமுமுடைய பாளைகளை யுடையனவாய்), நிறைந்த - நிறைந்தன, எ - று.

(பாக்குப்பாளையில் முத்துக்களைப்போன்ற பூவும், நீலமணியைப்போன்ற காய்களும், பவழம்போன்ற பழங்களுமுள்ளனவாதலின் அதற்கு இம்மூவகை நிறங்களும் சொல்லப்பட்டன). (கரு)

16. சொற்பழி யிலாமை யாலுந் தூயநல் லொழுக்கி னாலு
மிற்பிறப் போம்ப லாலு மெள்ளற்பா டின்மை யாலு
நற்றவர்க் கீத லாலு நாதன்சீ ரோத லாலுங்
கற்புடைக் காமர் வல்லி யார்களே போலு மூர்கள்.

(இ - ள்) ஊர்கள் - அந்தேசத்திலூர்கள், சொற்பழி - பழிச்சொற்கள், இலாமையாலும் - இல்லாததினாலும், தூய - பரிசுத்தமாகிய, நல்லொழுக்கினாலும் - நல்ல நடத்தையிருக்கின்றமையாலும், இல்பிறப்பு - இல்வாழ்க்கையிலுயிர்களை, ஓம்பலாலும் - காப்பாற்றுதலாலும், எள்ளற்பாடு - இழிதொழில் (இகழ்ச்சி), இன்மையாலும் - இல்லாததினாலும், நற்றவர்க்கு - நன்மையாகிய தவத்தையுடைய யதிகளுக்கு, ஈதலாலும் - ஆஹாராதி தானங்களைச் செய்வதாலும், நாதன் - சர்வக்ஞிய

னது, சீர் - குணங்களை, ஓதலானும் - சொல்லி ஸ்துதிப்பதனாலும், கற்புடை - பதிவிரதாகுணமுடைய, காமர் - அழகிய, வல்லியார்களைப்போலும் - பூங்கொடி போன்ற ஸ்திரீமார்களுக்கு ஒப்பாகும், எ - று.

(ஊர்கள் என்பது இடவாகு பெயராய் அதிலுறையும் மனிதர்களைக் காட்டி நின்றது.) (கசு)

வேறு.

17. பாரிலுள்ள வர்க்கெலாம் படுபயன் பொதுவுமாய்
ஏர்மலிந் திடங்களெங்கு மின்பமே பயந்துநல்
வேரிசாந்த மூடுபோகி மேவியாடல் பாடலோடும்
வாரமாதர் போன்ற மாட வூர்கடோறு மாடெலாம்.

(இ - ள்) மாடம் - உப்பரிகைகளையுடைய, ஊர்கள்தோறும் - ஊர்களிலெல்லாம், மாடெலாம் - செல்வங்களெல்லாம், பாரில் - பூமியில், உள்ளவர்க்கெலாம் - இருக்கும் மனிதர்க்கெல்லாம், படு - தம்மில் உண்டாகிய, பயன் - பிரயோசனமானது, பொதுவுமாய் - சாமான்யமாகி, இடங்களெங்கும் - எவ்விடங்களிலும், ஏர் - அழகினால், மலிந்து - நிறையப்பட்டு, இன்பமே பயந்து - சௌக்கியத்தைக் கொடுத்து, நல் - நன்மையாகிய, வேரி - வாசனையையுடைய, சாந்தம் - சந்தனக் கால் - (அதாவது: சந்தனக்குழம்பு பூசிச் செய்துகொண்ட அலங்காரத்தாலே), ஊடுபோகி - நர்த்தன சபையினுட்புகுந்து, மேவி - (தங்கள் இன்பத்தை எல்லோருமனுபவிக்கும்படி) சார்ந்து, ஆடல் பாடலோடும் - நர்த்தன கானங்களோடும், (பொருந்திய) வாரமாதர் போன்ற - வாரவிலாசினி ஸ்திரீகளை நிகர்த்திருப்பனவாம், எ - று. (கஎ)

18. சுந்தரத் தலம்மணி சுவர்பளிங்கு செம்பொனா
லந்தரத் தடக்கமா யநேகமாலை நான்றகம்
மைந்தரும் மயிலனாரு மல்குமாட மாளிகை
யிந்திர விமானமிங் கிழிந்திருந்த நீரவே.

(இ - ள்) சுந்தரத்தலம் - அழகிய பூமி (கீழிடமானது), மணி - அரதனம் முத்து முதலிய இரத்தினங்களாகவும், சுவர் - சுவரானது, பளிங்கு - ஸ்படிகமாகவும், (செய்து) செம்பொனால் - சிவந்த பொன்னால், அந்தரத்து - மேலே, அடக்கமாய் - மூடப்பட்டதாகி, அகம் - உள்ளே, அநேக மாலை - (முத்து, இரத்தினம், பூ, பொன் முதலியவற்றாலாகிய) பல மாலைகள், நான்று - தொங்கவிடப்பட்டு, மைந்தரும் - புருடர்களும், மயிலனாரும் - மயிற்சாயலுடைய ஸ்திரீகளும், மல்கும் - நிறையும்படி சமைந்த, மாடம் - உப்பரிகைகளும், மாளிகை - வீடுகளும், இந்திர விமானம் - தேவவிமானம், இங்கு - இவ்விடத்தில், இழிந்திருந்த - வந்திருந்த தென்று சொல்லும்படியான, நீர - குணத்தையுடையனவாகும், எ - று. (கஅ)

19. சாதுரிய மில்லவரு மில்லைமைந்தர் தஞ்சொலு
மாதுரிய மில்லவையு மில்லைமற் றவர்செயல்
போதுரிய மில்லவையு மில்லைபொன் னெயிலிறைக்
காதாரமு மில்லவரு மில்லையந்த நாடெலாம்.

(இ - ள்) அந்நாடெலாம் - அந்தேச முழுதிலும், மைந்தர் - புருஷர்களில், சாதுரியமில்லவரும் - கல்வித்திறமை யில்லாதவர்களும், இல்லை—, தம் - அவர்களுடைய, சொல்லும் - வசனங்களிலும், மாதுரியம் - மதுரமாக, இல்லவையும் - இல்லாதவைகளும், இல்லை—, அவர்செயல் - அவர்கள் செய்கைகளில், போதுரியம் - காலத்துக்குரியவைகளாய், இல்லவையும் - இல்லாதவைகளும், இல்லை—, பொன் - பொன்னாலாகிய, எயில் - மும்மதில் சூழ்ந்த சமவசரணத்திலிராநின்ற, இறைக்கு - அருக பரமனுக்கு, ஆதாரம் - பிரீதியாகிய அருகத்பக்தி, இல்லவரும் - இல்லாதவரும், இல்லை—, எ - று. (கக)

மற்று - அசை. ஆதாரமும் என்பதில் உம் - அசைநிறைப் பொருளது.

20. சீலமும் வதங்களுஞ் செறிவுமில் லவரில்லை
காலைமாலை நீதிபோடு கல்வியில் லவரில்லை
வேலைமுன்பு நல்லதான மின்றியுண் பவரில்லை
மாலைகாலை மாதவரை வந்தியாரு மில்லையே.

(இ - ள்) சீலமும் - சீலாச்சாரமும், வதங்களும் - விரதங்களும், செறிவும் - அடக்கமும், இல்லவர் - இல்லாதவர்கள், இல்லை—, காலை - பிராதக்காலத்திலும், மாலை - மாலைக்காலத்திலும், நீதியோடு - நீதியுடனே, கல்வி யில்லவர் - வித்தை ஓதுதல் இல்லாதவர்கள், இல்லை—, வேலை - ஆகார வேளைக்கு, முன்பு - முன்னதாக, நல்ல - நன்மையாகிய, தானம் - ஆகாராதி தானங்களை, இன்றி - செய்தல் இல்லாமல், உண்பவர் - புசிப்பவர்கள், இல்லை—, மாலை - மாலையிலும், காலை - காலையிலும், மாதவரை - மஹா தபசையுடைய பரமேஷ்டிகளை, வந்தியாரும் - வணங்காதவர்களும், இல்லை—, எ - று.

பரமேஷ்டிகளின் ஸ்வரூபத்தை பதார்த்த ஸாரமென்னும் நூலில் 30-வது உபயோகாதிகாரத்தில் பார்த்துக்கொள்க. (உ0)

21. ஐங்கணைக் கிழவனைக் கடந்தமெய்த் தவரெனும்
புங்கவர்க் கிறைவனற் சிறப்புமுன் பிலாதன
மங்கலத் தொழில்களில்லை மானமா யமந்நா
டெங்குமில்லை யாவரு மிறைஞ்சிமெய் யொழுகலால்.

(இ - ள்) ஐங்கணைக்கிழவனை - பஞ்சபாணங்களுக்கு முரியவனாகிய மன்மதனை, கடந்த - ஜெயித்த, மெய் - உண்மையையுடைய, தவரெனும் - தபசை

யுடையவர்களென்னும், புங்கவர்க்கு - சிரேஷ்டர்களுக்கு, இறைவன் - எஜமானாகிய ஜினேஸ்வரனது, சிறப்பு - பூஜை, முன்பு - பிரதமத்தில், இலாதன - செய்யப்படாதனவாகிய, மங்கலத்தொழில்கள் - சுபகாரியங்கள், இல்லை—, அந்த நாடெங்கும் - அத்தேச முழுவதிலும், (உள்ள) யாவரும் - சகலரும், மெய் - உண்மையாக, இறைஞ்சி - வணக்கத்தை யுடையவர்களாகி, ஒழுகலால் - நடக்கிறபடியால், மானம் - கர்வமும், மாயம் - மாய்கையும், இல்லை - அத்தேசத்தில் கிடையா, எ - று. (உக)

**22.** நடுக்கடற் பிறந்தசங்கி னுள்ளிருந்த பாலினற்
குடிப்பிறந்த மைந்தர்தங் குழைமுகம் பிறர்மனை
யிடைக்கண்வைத்த லில்லைகாத லார்கள்மேலு மார்வமூர்
கடைக்கணோக்கி லாதமாதர் கற்பையாவர் செப்புவார்.

(இ - ள்) நடுக்கடல் - நடுச் சமுத்திரத்தில், பிறந்த - உற்பவித்த, சங்கினுள் - சங்கினுள்ளே, இருந்த - உண்டாகியிராநின்ற, பாலின் - வெண்மையைப் போல் (சுத்தமாகிய), நற்குடிப்பிறந்த - உயர்ந்த குடியில் பிறந்த, குழை - கர்ண குண்டலத்தை யணிந்திராநின்ற, முகம் - முகத்தையுடைய, மைந்தர் - புருடர்கள், தம் - தங்களுடைய, கண் - நேத்திரத்தை, பிறர்மனையிடை - அன்னிய மாதர்மேல், வைத்தலில்லை - ஸ்தாபித்து மனம் வைப்பதில்லை, காதலார்கள்மேல் - வாஞ்சையை யுடைய தங்கள் புருடர்கள்மேல், ஆர்வமூர் - ஆசைமேலிடுகின்ற, மாதர் - ஸ்திரீகள், கடைக்கணோக்கிலாத - அன்னிய புருடர்களைக் கடைக்கணித்துப் பாராத, கற்பை - அவர்களின் பதிவிரதா குணத்தை, யாவர் - எவர்கள், செப்புவார் - அளவிட்டுச் சொல்லுவார்கள்? எ - று.

மேலும் என்பதில் உம்மை - அசை நிறைப்பொருளது; இன்னும் அதனை உயர்வு சிறப்பும்மையாகக்கொண்டு, 'காதலர் மேலும் ஆசை மேலிடுகின்ற கடைக்கண் ணோக்கஞ் செய்யாத,' எனப் பொருள் கூறினும் அமையும்; 'காதலரையும் ஆசையோடு நோக்காதவர்,' எனவே, அவர்கள் நிலையற்ற சிற்றின்பத்தைப் பெரிதாகப் பாராட்டாதவரென்பது பெறப்படும்; அதனால் அவர்களின் கற்பின் உயர்வு இன்னும் விசேஷித்து நிற்கும். (உஉ)

**23.** அணியினுக் கணியனார்க ளாடுமா மயிலனார்
மணியைமண்ணி வைத்தனாகள் வஞ்சமின் மனத்தினார்
பணிவிலா வொழுக்கினார்கள் பண்ணவர்ப் பழிச்சுவார்க்
கணிகைமாதர் சீலமின்ன காமுறாத் தகையவே.

(இ - ள்) கணிகைமாதர் - அந்நாட்டில் உள்ள வேசியர்கள், அணியினுக்கு - அழகுக்கெல்லாம், அணியனார்கள் - அழகைச் செய்வாரைப் போன்றவர்கள்; ஆடும் - நர்த்தனம் பண்ணும், மா - பெருமையுடைய, மயிலனார் - மயில்போன்ற

சாயலுடையவர்கள்; மணியை - இரத்தினத்தை, மண்ணி - உருவகுத்து அலங் காரம்பண்ணி, வைத்தனூர் - வைத்ததைப் போன்றவர்கள்; வஞ்சமில் - கபட மில்லாத, மனத்தினூர் - மனதையுடையவர்கள்; பணிவிலா - தாழ்வில்லாத, ஒழுக் கினூர்கள் - நடத்தை யுடையவர்கள்; பண்ணவர் - அருகபரமனை, பழிச்சுவார் - துதிப்பவர்கள்; சீலம் - அவர்களது சீலாச்சாரம், இன்ன - இத் தன்மையாக, காமுறுந்தகைய - விரும்புங் குண முடையதாகும், எ - று. (உங)

24. இடையரு தறிவொளி யிரவியங் கெழுதலால்
கடையிலா வறிவிறைவ னூலயங்க ளல்லது
படரொளி விமானத்தோடு பாயிருள தின்மைபோல்
விடையுலாவி யாதியாய வேற்றிலிங்க மில்லையே.

(இ - ள்) படர் - பரந்த, ஒளி - ஒளியையுடைய, விமானத்தோடு - சூரிய விமானத்தோடு, பாய் - பரந்த, இருளது - இருளானது, இன்மைபோல் - இல்லா மற் போவதுபோல், இடையறாது - நீங்காமல், அறிவு - அனந்த ஞானமாகிற, ஒளி - சோதியையுடைய, இரவி - ஜினேஸ்வரனென்னுஞ் சூரியன், அங்கு - அந் நாட்டில், எழுதலால் - எப்போதும் உதித்திருப்பதால், கடையிலா - முடிவிலாத, அறிவ - கேவல ஞானமுடைய, இறைவன் - நாதனது, ஆலயங்களல்லது - கோவில் களே யல்லாமல், விடையுலாவியாதியாய - விருஷப வாஹனமேறிச் செல்லும் ஈஸ்வரன் முதலாகிய, வேற்றிலிங்கம் - பேதஸ்வரூபம், இல்லை—, எ - று. (உச)

25. குறையிலாக் குடிகளாற் குழீஇயவூர் கொடைவளர்த்
திறையிடு மிவற்றினூ லியல்பினுய நாடெழில்
னிறைமதி நடுவணைய்த நின்றமீன் குழாங்கள்போ
லிறைவன திருக்கைசூழ்ந்த நாலெண்ணா யிரங்களே.

(இ - ள்) குறையிலா - (தனம் குணம் முதலியவைகளால்) குறைவில் லாத, குடிகளால் - குடிஜனங்களால், குழீஇய - சேர்ந்திருக்கப்பெற்ற, ஊர் - ஊர் கள் (அதாவது ஊரில் உள்ளவர்கள்), கொடைவளர்த்து - தானங்களை மிகுதியாகச் செய்து, இறையிடும் - அரசனுக்கும் பகுதிப்பணம் கட்டும், இவற்றினூல் - இவை முதலாகிய தொழில்களினூலே, இயல்பினுய - நல்ல ஸ்வபாவத்தோடு கூடிய, நாடு - அத்தேசத்தில், எழில்நிறை - கலைகளாகிய அழகு நிறைந்த, மதி - சந்திரன், நடுவ ணைய்த - மத்தியிலிருப்ப, நின்ற - சூழ்ந்திராநின்ற, மீன்குழாங்கள்போல் - தாரா கணங்களைப் போல், இறைவன திருக்கை - அரசன் இருப்பிடமாகிய பிரதான நகரத்தை, சூழ்ந்த - சூழ்ந்திருக்கும் நகரங்கள், நாலெண்ணாயிரங்கள் - முப்பத்தீ ராயிரங்களாம், எ - று.

இவை சக்ரவர்த்தியின் ஆளுகைக்குட்பட்டுத் தனித்தனி அரசர் ஆளும் நகரங்களாகும். (உரு)

## நகரச்சிறப்பு.

### வேறு.

26. அறைகழ லரசர் கோமா னிருக்கைய தமைதி செப்பிற்
குறைவிலா வீத சோகங் குபேரன திருக்கை போலும்
நெறியினாற் புகை யிரண்டா றொன்பது நீண்ட கன்று
மறுகுமா நதிகள் போன்று வழங்குமா யிரத்த தாமே.

(இ - ள்) அறை - சப்தியாநின்ற, கழல் - வீரகண்டையையுடைய, அரசர் கோமான் - இராஜாதிராஜனான சக்ரவர்த்தியானவன், இருக்கையது - இராநின்ற இராஜதானியினது, அமைதி - மாட்சிமையை, செப்பில் - சொல்லுமிடத்தில், (அது) குறைவிலா - தனமுதலியவைகளாற் குறைவில்லாத, குபேரனது - குபேரனென்னும் தேவனுடைய, இருக்கைபோலும் - நகரமாகிய அளகாபுரிக்குச் சமானமாகின்ற, வீதசோகம் - வீதசோகமென்னும் பெயருடையதாகும்; நெறியினால் - கிரமத்தால் (அந்நகரானது), புகையிரண்டாறு - பன்னிரண்டு யோசனை, நீண்டு - நீளமாகி, ஒன்பதுகன்று - ஒன்பது யோசனை பகலமாகி, மாநதிகள்போன்று - ஜலம் பற்றறுமலொழுகும் மஹா நதிகளுக்குச் சமானமாகி, வழங்கும் - ஜனங்களால் செல்லப்படுகின்ற, மறுகு ஆயிரத்ததாம் - ஆயிரம் மஹா வீதிகளை யுடைத்தானதாம், எ - று. (உசு)

27. அறுபது தலைவைத் திட்ட மூன்றுநூ றறிவன் கோயில்
செறிமலர்ச் சோலை குன்றம் வாவியுஞ் செப்பி னன்ன
அறுபதிற் குணிக்கப் பட்ட வாயிரஞ் சேரி பாடி
பறுபதோ டிசைந்த பத்தாற் குணித்தவா யிரங்க டாமே.

(இ - ள) அறிவன் - சர்வக்ஞனுடைய, கோயில் - ஸ்ரீ ஜிந சைத்யாலயங்கள், அறுபது தலை வைத்திட்ட - அறுபது என்கிற கணக்கை முதலில் வைக்கப்பட்ட, மூன்று நூறு - முந்நூறாகும், (அதாவது முந்நூற்றறுபதாகும்), செறி - சேர்ந்திராநின்ற, சோலை - தோப்புகளும், குன்றம் - செய்குன்றங்களும், வாவியும் - குளங்களும், செப்பின் - சொல்லப்புகுந்தால், அன்ன - முன்சொன்ன அக்கணக்கையுடையனவேயாம், (அதாவது: தனித்தனி முந்நூற்றறுபதாம்), சேரி - இடைச்சேரி முதலாகியவைகள், அறுபதிற்குணிக்கப்பட்ட வாயிரம் - அறுபதினாயிரமாகும், பாடி - பாடி என்னும் இடங்கள், அறுபதோடிசைந்தபத்தால் - எழுபதினாலே, குணித்த - பெருக்கப்பட்ட, ஆயிரங்கள் தாம் - எழுபதினாயிரங்களாகும், எ - று. (உஎ)

28. அஞ்சுநூற் றிரட்டி வாயி லேழுநூ றுகும் பூழை
துஞ்சிலாப் பலிபெய் பீட மாயிரஞ் சதுக்க மன்ன

குஞ்சரங் கடாவி வாழுங் குடிகளும் நூற்றுக் கோடி
யிஞ்சிமா நகர மிவ்வா றியற்கையா லியன்ற தொன்றே.

(இ - ள்) வாயில் - (அந்நகருக்கு) கோபுரவாயிலை யுடைய மஹா வழிகள், அஞ்சு நூற்றிரட்டி - ஆயிரமாகும், பூழை - க்ஷுல்லகத் துவாரங்கள், எழுநூறு - எழுநூறாகும், துஞ்சிலா - நீங்குதலில்லாத, பலி - பலி பூஜையை, பெய் - இடும்படியான, பீடம் - பலிபீடங்கள், ஆயிரம் - ஆயிரமாகும், சதுக்கம் - சதுஷ்கங்கள், (அதாவது நாற்சந்திகளும்,) அன்ன - அத்துணையே, குஞ்சரம் - யானையை, கடாவி - செலுத்தி, வாழும் - வாழுகின்ற, குடிகளும் - குடிகளும், நூற்றுக்கோடி - நூறுகோடியாகும், இஞ்சி - மதில் சூழ்ந்திராநின்ற, மா - பெரிய, நகரம் - வீதசோகமென்னும் அப்பட்டணமானது, இவ்வாறு - இப்பிரகாரமான, இயற்கையால் - ஸ்வபாவத்தால், இயன்றது - இசைந்துள்ளதாகிய, ஒன்று - ஒன்றாகும், எ - று. (உஅ)

வேறு.

29. சுந்தரம் மலர்களெண்ணெய் சுண்ணந்தாது குங்குமஞ்
சந்தனக் குழம்புமேற் பரந்து பாடி சூழ்ந்தக
ழந்தரத் தருக்கனை யணிந்துசூழ் கிடந்ததோ
ரிந்திர தனுவின்வண்ண மென்னதன்ன தாகுமே.

(இ - ள்) அகழ் - (அந்நகரத்தைச்சூழ்ந்த) அகழானது, (மாந்தர்கள் ஸ்நானஞ்செய்வதால்), சுந்தரம - அழகிய, மலர்கள - (அவர்களணிந்திராநின்ற) புஷ்பங்களும், எண்ணெய் - எண்ணெய்களும், சுண்ணம் - கந்தப்பொடிகளும், தாது - புஷ்பதாதுக்களும். குங்குமம் - குங்குமப்பொடியும், சந்தனக்குழம்பு - சந்தனக்குழம்பும், மேல் - ஜலத்தின்மேல், பரந்து - படிந்து, பாடி - பட்டினத்தை, சூழ்ந்த - சூழ்ந்திராநின்ற (தோற்றம்), அந்தரத்து - மத்தியில், அருக்கனை - சூரியனை, அணிந்து - தரித்து, சூழ்கிடந்தது - வளைந்து கிடந்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, இந்திர தனுவின் - இந்திரதனுசினுடைய, வண்ணம் - வடிவமானது, என்னது - எத்தன்மைத்தோ, அன்னது - அத்தன்மையது, ஆகும் - -, எ-று. (உகூ)

30. கிடங்கிடைத் தடங்கள்சூழ்ந்து கேடுதோற்ற மின்றியே
மடங்கன்மொய்ம்பின் வானவர்க்கும் மீதுபோ கொணாமதில்
தடங்கடல் மறைத்தலத் தரையுஞ்சூழ மானவர்க்
கடந்திடா வகையினின்ற நாகந்தன்னைக் காட்டுமே.

(இ - ள்) கிடங்கு - அகழியினுடைய, இடை - உட்பக்கத்தில், தடங்கள் - விசாலமான மைதானத்தால், சூழ்ந்து - சூழப்பெற்று, கேடு - கெடுகையும், தோற்றம் - உண்டாதலும், இன்றி - இல்லாமல், மடங்கல் - சிங்கம் போன்ற, மொய்ம்

பின் - பராக்கிரமத்தையுடைய, வானவர்க்கும் - தேவர்களுக்கும், மீதுபோகொணு - மேற்செல்லமுடியாத (உயரமானதாய்ச் சமைந்த), மதில் - மதிலானது, தடம் - விசாலம் பொருந்திய, கடல் - புஷ்கரவா சமுத்திரமும், மனைத்தலத்தையும் - புஷ்கரவா த்வீபத்தின் வெளிப்பாதியாகிய இடமும், (அதாவது: அத்தீபத்தின் பாதி பூமியும்,) சூழ - தன்னைச் சூழும்படி, மானவர் - மனுஷியர்களால், கடந்திடாவகையின் - தாண்ட முடியாத விதத்தில், நின்ற - இராநின்ற, நாகந்தன்னை - மானுஷோத்தர பர்வதத்தின் தன்மையை, காட்டும் - (நிகராகக் காட்டிக் கொண்டிருக்கும், எ - று (௩௰)

31. திக்கயம் மலைகள்போற் சிறந்துநின்ற கோபுரங்க
ளொக்குமா ளிகைநிரை குலமலைக ளொத்தன
மிக்கமா சனஞ்செல்வீதி சீதைபாதி யாறன
சக்கரன்றன் மாளிகையு மேருவென்ன தன்னதே.

(இ - ள்) கோபுரங்கள் - அம்மதிலிற் கோபுரங்கள், திக்கயம் மலைகள் போல் - திக்கஜ பர்வதங்களைப்போல, சிறந்து - அழகுடையனவாகி, நின்ற - இராநின்றனவாம்; மாளிகை நிரை - உப்பரிகையின் வரிசைகள், குலமலைகள் - குலகிரிகளை, ஒத்தன - நிகர்த்தனவாம்; மிக்க மாசனம் - மிகுதியாக மஹா ஜனங்கள், செல் - (எப்போதும்) செல்லும், வீதி - வீதிகள், சீதை யாதி ஆறன - சீதாசீதோதா முதலாகிய மஹா நதிகளுக்குச் சமானமுள்ளவையாம்; சக்கரன்றன் - அரசனது, மாளிகை - அரண்மனையானது, மேரு - மஹா மேருவானது, என்னது - எத்தன்மைத்தோ, அன்னது - அத்தன்மைத்தாகும், எ - று.

இவ்விரண்டு பாடல்களாலும், நகரின்றன்மை, உலகின் பாகத்தன்மைக்குப் பொருத்தமாகச் சொல்லப்பட்டது. உலகின் தன்மை இந்தப் புராணத்தில் சிற்சில விடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றமை தெரிந்துகொள்க. (௩௧)

32. முகிற்கணங்கள் பொன்மலையை மொய்த்தயானை போன்மொய்ப்
பகற்கிடை கொடாதசெம்பொன் மாளிகைப் படிந்தன [ப்ப
வகிற்புகைய ளாயநீர் மதத்தருவி போன்றன
துகிற்கணங்க ளங்கதர் மதிமறைந் துடைக்குமே.

(இ - ள்) பொன்மலையை - ஹேமமேரு பருவதத்தை, மொய்த்த - சூழ்ந்த, யானைபோல் - யானைகளைப்போல், பகற்கு - சூரியனுக்கு, இடை கொடாத - நடுவில் வழிகொடாதுயர்ந்த, செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, மாளிகை - இராஜமாளிகையில், முகிற் கணங்கள் - மேககூட்டங்கள், படிந்தன - சேர்ந்திராநின்றன; அகிற்புகையளாய - அகிற்புகையைக் கலந்திராநின்ற, நீர் - (அம்மாளிகையினின்றும் கீழே சொரியும்) ஜலத்திரள்கள், மதத்து அருவி - மதஜலமாகிற

அருவியை, போன்றன - ஒத்திராநின்றன; அந்நகர் - அந்நகரத்தில், (மேலே யாடு கின்ற) துகிற்கணங்கள் - துவஜக் கூட்டங்கள், மதி - சந்திரனுடைய, மறு - களங் கத்தை, துடைக்கும் - தடவி நீக்குவனவாம், (எனவே கொடிகள் சந்திரமண்டலம் வரை உயர்ந்துள்ளன வென்பதாயிற்று.) எ - று. (௩௨)

33. பளிக்கறைத் தலத்தினூடு பந்தோடாடு பாவையர்
களிக்கயலனையகண்கள் காமர்பந்தின் மேற்செல்வ
வளைத்தநற் புருவவில் மலர்க்கணை தொடுத்துவில்
விளைப்பநீங்க மாரனம் பிலக்கிலெய்த தொக்குமே.

(இ - ள்) பளிக்கறை - ஸ்படிகக்கற்களாலான பாத்திகளையுடைய, தலத்தி னூடு - தலத்தில், பந்தோடாடு பாவையர் - பந்தாட்டஞ் செய்கின்ற சித்ரப் பாவைக்கு ஒப்பாகிய மாதர்களின், களி - களிப்பையுடைய, கயலனைய - கெண்டை மீனுக்கொப்பாகிய, கண்கள் - கண்களானவை, காமர் - அழகிய, பந்தின்மேல் - அப்பந்துகளின் மேலே, செல்வ - செல்கின்ற தோற்றமானது, வளைத்த - வளைக் கப்பட்ட, நல் - நன்மையான, புருவவில் - புருவமாகிய வில்லில், மலர் - புஷ்பம் போன்ற, கணை - கண்களாகிற அம்பை, தொடுத்து - சேர்த்து, வில்விளைப்ப - வில்விளைக்கும்படி, நீங்க - அவ்வில்லைவிட்டு நீங்கிச் செல்லுமாறு, மாரன் - மன் மதன், அம்பு - அவ்வம்பை, இலக்கில் - குறியில், எய்த - எய்த தன்மையை, ஒக் கும் - நிகர்க்கும், எ - று. (௩௩)

வேறு.

34. மாலைசாந் தெண்ணெய் சுண்ணங் கைசெய்வார் மறுகு மைந்தர்
கோலவார் குழலி னார்போ லிருந்தன வணிசெய் வீதி
மாலைமா மணியு முத்தும் வீழ்ந்தவை கிடந்த தோற்றம்
மேலுலாம் வானயாறு வீழ்ந்திவட் கிடந்த தொன்றே.

(இ - ள்) மாலை - பூமாலைகளையும், சாந்து - சந்தனத்தையும், எண்ணெய் - வாசனை எண்ணெய்களையும், சுண்ணம் - கந்தப்பொடிகளையும், கைசெய்வார் - கையாற் செய்பவர்களுடைய, மறுகு - குறுந்தெருவுகள், (அவற்றை யணிகின்ற) மைந்தர் - யௌவன புருஷரையும், கோலம் - அழகிய, வார் - நீண்ட, குழலி னார்போல் - குழல்களையுடைய மாதர்களையும் போல், இருந்தன - இராநின்றன; வணிசெய்வீதி - வர்த்தகம் செய்யும் பெருங் கடைவீதிகளில், மாலை மாமணியும் - சிறந்த இரத்தினமாலைகளும், முத்தும் - முத்துமாலை முதலானவைகளும், வீழ்ந் தவை - தவறி வீழ்ந்தவைகளாய், கிடந்த - (ஒருவரும் எடுக்காமல் அவ்வவ்விடங் களில்) கிடந்ததாகிய, தோற்றம் - விதமானது, மேலுலாம் - ஆகாசத்தில் வியா பித்திராநின்ற, வானயாறு - ஆகாச கங்கையானது, வீழ்ந்து - விழுந்து, இவண் - இவ்விடத்தில், கிடந்தது - கிடந்ததாகிய, ஒன்று - ஒருதோற்றமாம், எ - று (௩௪)

35. குழைமுகம் புரள வாங்கிக் கொடுஞ்சிலைப் புருவங் கோலி
யழலுமிழ்ந் திலங்கும் வேற்க ணம்புகோத் தாட வாரை
யுழையின்மென் னோக்கத் தெய்திட் டுள்ளத்தைப் பறித்துக் கொள்ளும்
மழலையாழ் மொழியி னார்தம் வாழ்க்கையா ருரைக்க வல்லார்.

(இ - ள்) குழை - குண்டலமணிந்த, முகம் - முகமானது, புரள - புரளும்படியாக, வாங்கி - வளைத்து, கொடுஞ்சிலை - வளைந்தவிற்போன்ற, புருவம் - புருவத்தை, கோலி - நெற்றியிலேயிட்டு, அழல் - விரகாக்கினியை, உமிழ்ந்து - கக்கி, இலங்கும் - விளங்கும், வேல் - வேல்போன்ற, கண் - கண்ணாகிற, அம்பு - பாணத்தை, கோத்து - தொடுத்து, ஆடவரை - காமுகர்களை, உழையின் - பெட்டைமானினது, மென் - மிருதுவாகிய, நோக்கத்து - பார்வையால், எய்திட்டு - எய்து, உள்ளத்தை - மனதை, பறித்துக்கொள்ளும் - கைப்பற்றிக்கொள்கின்ற, மழலை - மழலையாகிய, யாழ் - வீணையின் கீதம்போல் இனிமையான, மொழியினார் - சொல்லையுடைய மாதர்களின், வாழ்க்கை - வாழ்வை, உரைக்க வல்லார் - சொல்லவல்லவர்கள், யார் - எவர்கள்? (உள்ள பரிசுரைக்கலருமை என்றபடி), எ - று.

ஆடவர் என்பது ஆடவார என்று செய்யுள் விகாரத்தால் நீண்டு வந்தது. (௩௫)

36. கள்ளுமிழ்ந் திலங்கும் வாசக் கமலவாண் முகத்துக் காம
ருள்ளமுங் கண்ணும் வண்டோ டுடன்சுழன் றாட வாடித்
தெள்ளொலி யாழும் பாட்டுந் திருவனார் பயிலுஞ் சாலை
புள்ளொலித் தளிகள் பாடுந் தாமரைப் பொய்கை போலும்.

(இ - ள்) கள் - மதுவை, உமிழ்ந்து - கக்கி, இலங்கும் - விளங்கும், வாசம் - வாசனை பொருந்திய, கமலம் - தாமரைப்பூப்போன்ற, வாள் - ஒளிபெற்ற, முகத்து - முகத்திலுண்டாகிய, காமர் - அழகிய, கண்ணும் - நேத்திரங்களும், உள்ளமும் - மனதும், வண்டோடு - வண்டுகளுடன், உடன் - ஒத்து, சுழன்று - சுற்றி, ஆட - ஆடும்படியாக, ஆடி - நர்த்தனங்கள் செய்து, தெள் - தெளிந்த, ஒலி - சப்தத்தையுடைய, யாழும் - வீணையின் கீதங்களையும், பாட்டு - கண்டத்தால் பாடும் பாட்டையும், திருவனார் - இலக்குமிபோன்ற நர்த்தனமாதர்கள், பயிலும் - பழகும், சாலை - நர்த்தன சாலையானது, புள் - பறவைகள், ஒலித்து - சப்தித்து, அளிகள் - வண்டுகள், பாடும் - பாடுகின்ற, தாமரைப் பொய்கை - தாமரைத் தடாகத்தை, போலும் - ஒத்திருக்கும், எ - று. (௩௬)

37. ஆனைதேர் குதிரை நிற்கு மிடம்படை யடைக்குஞ் சாலை
சேனைமா வேந்தர் தெவ்வர் தருதிறைக் காணுஞ் சாலை

மானவேன் மன்னர் கோமான் மந்திரச் சாலை யாதி
ஏனைய பிறவு மிவ்வா றியம்புதற் கரிய வன்றே.

(இ - ள்) ஆனை - யானையும், தேர் - இரதமும், குதிரை - குதிரைகளும், நிற்கும் - இருக்கும்படியான, இடம் - சாலைகளும், படைபடைக்கும் - ஆயுதங்கள் வைக்கும்படியான, சாலை - ஆயுதச்சாலைகளும், சேனை - சேனைகளையுடைய, மாவேந்தர் - பெரிய அரசர்களும், தெவ்வர் - சத்துரு இராஜாக்களும், தரு - கொடுக்கப்பட்ட, திறை - கப்பப்பணத்தை, காணும் - கொடுக்கப் பார்க்கும்படியான, சாலை - பொக்கிஷ சாலையும், மானம் - அபிமானத்தையுடைய, மன்னர் கோமான் - இராஜாதி இராஜனுடைய, மந்திரச்சாலை - ஆலோசனை சபையும், ஆதி - இவை முதலாகிய, ஏனைய - மற்றைய, பிறவும் - இன்னும் அநேகங்களும், இயம்புதற்கு - சொல்வதற்கு, அரியன - அருமையானவைகளாம், எ - று. (௩௭)

38. காமவே ளனையர் மைந்தர் காவியங் கண்ணி னாரும்
பூமக ளிலங்கும் வீரர் போர்ப்புலிக் குழாங்கள் போல்வார்
தாமவெண் குடையி னானுஞ் சக்கரன் றன்னை யொக்கும்
வாமஞ்சூழ் கமலஞ் சங்கின் வண்கையார் வணிக ரெல்லாம்.

(இ - ள்) மைந்தர் - புருடர்கள், காமவேளனையர் - மன்மதன் போன்ற அழகினை யுடையவர்கள், காவி - உத்பலம்போன்ற, கண்ணினாரும் - கண்களை யுடைய ஸ்திரீகளும், பூமகள் - இலக்ஷ்மி தேவிக்குச் சமானமானவர்களாவார்; இலங்கும் - விளங்குகின்ற, வீரர் - வீரபுருடர்கள், போர் - யுத்தத்தில், புலிக்குழாங்கள் போல்வார் - புலிக் கூட்டங்களுக்குச் சமானமாவார்கள்; தாமம் - மாலையை யணிந்திராநின்ற, வெண் - வெள்ளையாகிய, குடையினானும் - குடையையுடைய அரசனும், சக்கரன் றன்னை யொக்கும் - தேவேந்திரனுக்குச் சமானமாவன்; வணிக ரெல்லாம் - வர்த்தகர்களெல்லாரும், வாமம் - அழகாக, சூழ் - சேர்ந்திராநின்ற, கமலம் - பதுமமும், சங்கின் - சங்கமுமாகிய (ரேகைகளையுடைய அல்லது, நிதிகளையுடைய), வண் - வளப்பம்பொருந்திய, கையார் - கையை யுடையவர்களாவர், எ - று. (௩௮)

39. மாலையுஞ் சாந்தும் பஞ்ச வாசமும் வழங்கு வாரும்
சாலியி னடிசி லுண்பார் தமர்களுக் கூட்டு வாரும்
வேலைநல் லுலகம் விற்கும் விழுப்பொருள் வாங்கு வாரு
மாலையந் தோறு மைமை யமர்ந்துசெய் வாரு மானார்.

(இ - ள்) (இன்னும் அங்குள்ளார்) மாலையும் - பூமாலை முதலியவையும், சாந்தும் - சந்தனமும், பஞ்சவாசமும் - பஞ்சவாசத் திரவியங்களும், வழங்குவாரும் - ஒருவருக்கொருவர் கொடுத்துக் கொள்கிறவர்களும், சாலியினடிசிலுண்

பார் - நெல்லரிசியால் சமைத்த அன்னங்களை உண்பாரும், தமர்களுக்கு - சுற்றத்தார்களுக்கு, ஊட்டுவாரும் - அவற்றை ஊட்டுகின்றவர்களும், வேலை - சமுத்திரஞ் சூழ்ந்த, நல் - நன்மையாகிய, உலகம் - இந்தப் பூமியில், விற்கும் - விற்கப்படுகிற, விழுப்பொருள் - பெரிய பொருள்கள், வாங்குவாரும் - வாங்குகின்றவர்களும், ஆலயந்தோறும் - ஸ்ரீகோயில்கடோறும், ஐமை - பூசனைச் சிறப்பை, அமர்ந்து - பொருந்தி, செய்வாரும் - செய்கின்றவர்களும், ஆனார் - ஆகியவர்களாய் விளங்குவார்கள், எ - று. (௩௯)

40. முழவமா முரசஞ் சங்கங் கடலென முழங்க வம்பொற்
குழலியாழ் வீணை யேங்கக் கொம்பனார் குலாவி யாட
நிழலுலா மதியம் போலுங் குடைமும்மை நீழல் வேந்தன்
விழைவறு மூதூர் வீத சோகமாய் விளங்கு நின்றே.

(இ - ள்) முழவம் - மத்தளங்களும், மா - பெரிய, முரசம் - பேரிகைகளும், சங்கம் - ஊதுசங்குகளும், கடலென - சமுத்திரம்போல, முழங்க - சப்திக்கவும், அம் - அழகிய, பொன் - பொன்னாலாகிய, குழல் - புள்ளாங்குழல்களும், யாழ் - யாழாகிய, வீணை - நால்வகை வீணைகளும், ஏங்க - சப்திக்கவும், கொம்பனார் - பூங்கொடி போன்ற நர்த்தனமாதர்கள், குலாவி - பிரகாசித்து, ஆட - நர்த்தனம் பண்ண, நிழல் உலாம் - குளிர்ந்த கிரணங்கள் பரவுகின்ற, மதியம்போலும் - சந்திரன்போன்ற, குடைமும்மை - சந்திரத்திரயத்தினது, நிழல் - நிழலிலுள்ள, வேந்தன் - அருகபரமனது, விழைவு - திருவிழாக்கள், அறு - பற்றறுந்த, மூதூர் - பெரிதாகிய அப்பட்டணமானது, வீதசோகமாய் - சோகமில்லாமல், நின்று விளங்கும் - நிலைபெற்றுப் பிரகாசித்திருக்கும், (வீதசோகம் என்னும் நகர் வீதசோகமாய் விளங்கும் என்றபடி.), எ - று. (௪௰)

## வைசயந்தன் சரிதை

வேறு.

41. பொன் னுலகுலாய்ப் போந்து பூமிசை
மன்னு மன்னவிம் மாந கர்க்கிறை
யன்ன மென்னடை யார்க் கனங்கனா
மன்னர் மன்னவன் வைச யந்தனே.

(இ - ள்) பொன்னுலகு - தேவலோகமானது, உலாய்ப்போந்து - எழுந்தருளிவந்து, பூமிசை - பூமியின்மேலே, மன்னும் - சேர்ந்தாற்போல, அன்ன - ஒத்திராநின்ற, இம்மாநகர்க்கு - இந்த வீதசோகம் என்னும் பட்டணத்திற்கு, இறை - அதிபதியானவன், அன்னமென்னடையார்க்கு - அன்னப்பறவையோலும்

மிருதுவான நடையையுடைய ஸ்திரீமாரகளுககு, அனஙகனும் - மன்மதனுகிய, மன்னா மன்னவன் - இராஜாதி இராஜனுன, வைசயந்தன் - வைசயநதனென் னும் பெயருடையவனுகும், எ - று. (சக)

42 ஆறு தீநய ம கன்ற காட்சியான
ஆறு நன்னய மமாநத மாட்சியா
னூறு தொன்மை க யடாதந சூட்சியா
னூறி லொன்றிலா னகன்ற வேட்கையான்.

(இ - ள்) ஆறு - ஆறுவிதமாகிய, தீநயம - மிததியா நயஙகளை (விட்டு), அகனற - நீஙகிய, காட்சியான் - தாசனததை யுடையவன்; ஆறு - ஆறு வித மாகிய, நன்னயம - நன்னயஙகள், அமாநத - பொருநதிய, மாட்சியான் - பெருமையை யுடையவன்; ஆறு தொல்பகை - பழமையான உட்பகையாறினை யும், அடாதத - ஜெயிதத, சூட்சியான் - உபாயததை யுடையவன்; ஆறிலொன்று கொண்டு - குடிகளிடததில ஆறிலொரு கடமை வரி வாஙகி, அகன்ற - நீஙகிய, வேட்கையான் - ஆசையையுடையவன் (அதாவது பேராசை யில்லாதவன்), எ - று.

நயஙகளின் விவரஙகள் 6-வது சருககததில காணபபடும். (சஉ)

43. கற்ப கமவன் கருதிற் றீதலால்
சொற் பொருளறி சுருதி மாக்கடல்
மற்பு யத்தினன் மால்வ ரைமலைக
கொற்ற வர்க்கெலாங் கூற்ற னொக்குமே.

(இ - ள்) அவன் - அமமன்னன், கருதிற்று - யாசக ஜனஙகளால் வேண டியவைகளை, ஈதலால் - கொடுககிறதினுல, கற்பகம - கற்பக மரததிற்குச சமான மானவன்; சொல் - சாஸ்திரததில் சொல்லப்பட்ட, பொருள - பொருள்களை, அறி - அறிகின்ற, சுருதி - சாஸ்திர வுணாச்சியில், மாககடல் - பெரிதாகிய சமுததிர மானவன்; மல் - மல்ல யுததனுசெயயும், புயததினுல - தோளினுல், மால் - பெரி தாகிய, வரை - பாவதமாகும், மலை - மாறுபட்டுப் போா செய்கின்ற, கொறற வாககெலாம் - (சததுரு) இராஜாககளுககெல்லாம, கூற்றன் - எமராஜனையும், ஒக கும - நிகாப்பான், எ - று. (சங)

44. சூட்சி யாற்பகை சுருகக லல்லது
வாட்செய் போரிலன் வன்சொ லின்றிமண்
ணாட்சி யாலிசை கேட்ட வசுணமாத்
தாட்சி போல்வையந் தானி றைஞ்சுமே.

(இ - ள) சூட்சியால் - உபாயத்தினால், பகை - சத்துருக்களை, சுருக்க லல்லது - குறையச் செய்வதே யல்லாமல், வாள் - வாளாயுதத்தினால், செய் - செய்கின்ற, போர் - யுத்தம், இலன் - இல்லாதவன், வன்சொல் இன்றி - கடுஞ் சொல் இல்லாமல் (இன் சொல்லால் செய்யும்), மண் ஆட்சியால் - பூலோக ஆளுகையினாலே, இசைகேட்ட - இனிமையான கீதத்தைக் கேட்ட, அசுணமா - அசுணப்பறவையின், தாட்சிபோல் - வணக்கத்தைப்போல, வையம் - உலகி லுள்ளோர், இறைஞ்சும் - தாமாகவே அவனை வணங்குவார்கள், எ - று.

தான் - அசை. (சச)

45. நல்ல தொல்குலத் தரச னாதலாற்
சொல்லுஞ் செய்கையுஞ் சோர்வெய் தாமையாற்
புல்லி னார்புகழ் மாது பூமகள்
சொல்லின் செல்வியுஞ் சுளிவு நீங்கியே.

(இ - ள்) (இன்னும் அவன்) நல்ல - நன்மையாகிய, தொல் - பழமை பொருந்திய, குலத்து - உயர்குலத்தில் பிறந்த, அரசனாதலால் - இராஜாவாகையி னாலும், சொல்லும் - வசனமும், செய்கையும் - காரியமும், சோர் வெய்தாமை யால் - சோர்வடையாதபடியாலும், புகழ்மாது - கீர்த்திதேவியும், பூமகள் - இலக் குமி தேவியும், சொல்லின் செல்வியும் - சரஸ்வதிதேவியும், சுளிவு - கோபம் (விரோதம்), நீங்கி - இல்லாமல், புல்லினார் - அவனைச் சேர்ந்தார்கள், எ - று.

எனவே அவன் பெரும்புண்ணியமுடையவனென்பது பெறப்படும். இப் புண்ணியோதயத்தாலாகிய, புகழ் பூமி ஞானங்கள் உலக வழக்கிற்கிணங்கப் பெண்பாலாகச் சொல்லப்பட்டன. [சாஸ்திரப் பிரமாணத்தில் லௌகிகம், பர மார்த்தம் என இருவகையுண்டு; அவற்றுள் பரமார்த்தம் என்பது - நிச்சயம் (யதாஸ்வரூபம்) ஆகும். லௌகிகம் - பலவிதமாகும். ஆகையால் உலக வழக்கிற் கேற்ப இச்செய்யுளில் புண்ணியம் பலவிதமாகச் சொல்லப்பட்டது.] (சரு)

வேறு

46. கற்பகந் தனையணை காமர் வல்லிபோல்
வெற்றிவேல் வேந்தனை வேள்வி நீர்மையாற்
பொற்பமைந் தெழுதிய கொடிய னார்புணர்ந்
தற்புநீர்க் கடலிடை யழுந்து நாளிலே.

(இ - ள்) கற்பகந்தனை - கற்பகமரத்தை, அணை - சேர்ந்திருக்கின்ற, காமர் வல்லிபோல் - காமர்வல்லிக் கொடிபோல, வெற்றி - ஜெயம்பொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, வேந்தனை - வைசயந்தனென்னுமவ்வரசனை, பொற்

பமைந்து - அழகமைந்து, எழுதிய - சித்திரக்காரனலெழுதப்பட்ட, கொடியனார் - புஷ்பக்கொடிபோன்ற தேவிபரிவாரங்கள், வேள்வி நீர்மையால் புணர்ந்து - விவாக விதியால் சேர்ந்து, அற்பு - அன்பாகிய, நீர் - ஜலத்தையுடைய, கடலிடை - ஆனந்த சமுத்திரத்தில், அழுந்து நாளில் - மூழ்குங் காலத்தில், எ - று. (சுசு)

## வேறு

47. பூவிற் கொம்பும் புகழும் படிநல் வடிவின்மா
தேவிப் பட்டம் பெற்றன ளெல்லாந் திருவென்பாள்
காவிக் கண்ணாள் வதனக் கமலத் தளியாய்மண்
காவற் கோமா னியலும் நாளாற் கவின்பெற்றாள்.

(இ - ள்) பூவிற்கொம்பும் - இலக்குமிதேவியும் (பார்த்து), புகழும்படி - புகழ்ச்சி செய்யும்படியான, நல் - நன்மையாகிய, வடிவின் - உருவத்தையுடைய, எல்லாந் திருவென்பாள் - ஸர்வஸ்ரீ என்பவள், மாதேவிப்பட்டம் - மஹாதேவிப் பட்டத்தை, பெற்றனள் - அடைந்தாள், காவி - உற்பலம் போன்ற, கண்ணாள் - கண்களையுடைய அந்த ஸர்வஸ்ரீயினுடைய, வதனம் - முகமாகிற, கமலத்து - தாமரைப்பூவில், அளியாய் - வண்டாகி (அதாவது தாமரையில் வண்டு நெருங்கு வதுபோல அவள் கண்பார்வையால் விரும்பி அவளைச்சேர்ந்து), மண்காவல் - பூமியைக் காக்கின்ற, கோமான் - அரசன், இயலும் - செல்கின்ற, நாள் - காலத்தில், கவின் - தக்க பண்பை, (அதாவது கருப்பத்தை), பெற்றாள் - அவள் அடைந்தாள், எ - று. (சஎ)

48. முல்லைக் கன்னிக் கொடிமுன் னரும்பைப் பயந்தாற்போற்
செல்வச் சிறுவற் பயந்தா ளந்தத் திருவன்னாள்
மல்லிற் பொலிதோண் மன்னன் முன்னாண் மதிகாணா
வொல்லென் கடல்போ லுவந்திட் டுலகத் திடர்தீர்த்தான்.

(இ - ள்) கன்னி - இளமையாகிய, முல்லைக்கொடி - முல்லைக்கொடியானது, முன் - முதலிலே, அரும்பை - முல்லையரும்பை, பயந்தாற்போல் - பெற்றதுபோல, அந்தத் திருவன்னாள் - இலக்குமிக்குச் சமானமாகிய அந்த ஸர்வஸ்ரீயானவள், செல்வச்சிறுவன் - ஸ்ரீமானாகிய புத்திரனை, பயந்தாள் - பெற்றாள், மல்லில் - மல்ல யுத்தத்தில், பொலி - பொலிவுபெற்றிராநின்ற, தோள் - புயங்களையுடைய, மன்னன் - அரசனானவன், முன்னாள் - பூர்வபக்கத்து, மதி - சந்திரனை, காணா - பார்த்து, ஒல்லென் - மகிழ்ச்சியால் ஒல்லென்றொலிக்கின்ற, கடல்போல் - சமுத்திரம்போல, உவந்திட்டு - சந்தோஷம் அடைந்து, உலகத்து - உலகத்திலுள்ள, இடர் - வருத்தங்களை, தீர்த்தான் - நீக்கினான், எ - று.

வருத்தங்களாவன - வறுமையாதி துன்பங்கள். (சஅ)

வேறு

49. சுண்ண மெண்ணெய்ச் சொரிந்தனர் தூரியம்
விண்ணை விம்மி முழங்கின வெண்கொடி
யண்ண றோன்றலு மெங்கணு மாடின
புண்ணி யன்னகர் பொன்னக ராயதே.

(இ - ள்) சுண்ணம் - கந்தப்பொடிகளையும், எண்ணெய் - சம்பங்கி எண்ணெய் முதலானவைகளையும், சொரிந்தனர் - இராஜ குடும்பத்தார் வழங்கினார்கள், தூரியம் - (அஷ்டாதச) வாத்தியங்கள், விண்ணை - தேவலோகத்தில் சார்ந்து, விம்மி - அதிகரித்து, முழங்கின - சப்தித்தன, வெண்கொடி - வெள்ளைத் துவசங்களானவை, அண்ணல் - சிரேஷ்டனாகிய புத்திரன், தோன்றலும் - பிறத்தலும், எங்கணும் - எவ்விடங்களிலும், ஆடின - அசைந்தன, புண்ணியன் - புண்ணியவந்தனாகிய (இவ்வரசனது), நகர் - பட்டணமானது, பொன்னகராயது - தேவலோகத்துக்குச் சமானமாயிற்று, எ - று. (௪௯)

50. சஞ்ச யந்த னெனும்பெய ரானவ
னஞ்சு தாயர்தங் கைவழி யந்திவாய்
மஞ்சி லாமதி போல வளர்ந்தபி
னஞ்சி லோதியர்க் கின்னமிர் தாயினான்.

(இ - ள்) சஞ்சயந்தனெனும் - சஞ்சயந்தனென்கிற, பெயரான் - பெயரினாலே, அவன் - அப்புத்திரன், அஞ்சுதாயர்தம் - ஐவகைத் தாய்மார்களுடைய, கைவழி - கைவசத்தில், அந்திவாய் - சந்தியாகாலத்தில் உண்டாகிய, மஞ்சிலா - களங்கமில்லாத, மதிபோல - மூன்றாம்பிறைச் சந்திரன்போல், வளர்ந்த - கிரமத்தால் வளர்ந்த, பின் - பிற்பாடு, *அஞ்சிலோதியர்க்கு - ஐந்துவகைப் பாகுபாட்டில் அமைந்த கூந்தலையுடைய ஸ்த்ரீமார்களுக்கு, இன் - இனிமையாகிய, அமிர்தாயினான் - அமிர்தத்துக்குச் சமானமானான் (யௌவனத்தை யடைந்தான் என்றபடி), எ - று. (௫௰)

வேறு

51. குஞ்சிக ணிழன்மணிக் கதிர்க்கு ழாமுக
மஞ்சிலா மதிபுப மணியெ ழுக்கண்மார்

*சில் - தகட்டணி யென்னப்படும்; இது கூந்தலின் உச்சியிலிடப்படும் ஒரு வகை ஆபரணம்; இக்காலத்தில் சடைபில்லை யென வழங்குவது. ஆதலின், 'அஞ்சிலோதி' என்பதை "அம் - சில் - ஓதி" எனப்பிரித்து 'அழகிய தகட்டணியை யணிந்த கூந்தல்' எனப் பொருள் கொள்ளலும் பண்டைய உரையாசிரியர்களிற் பெரும்பாலார் வழக்கு.

வஞ்சிநுண் ணிடைமல ராட்கி டந்துடை
யஞ்சொலார் மனக்களி றணைபொற் றம்பமே.

(இ - ள்) குஞ்சிகள் - (அப்புத்திரனது) தலையின் மயிர்கள், நிழல்-பிரகாசம் பொருந்திய, மணி - இந்திரநீல ரத்தினத்தினது, கதிர்க்குழாம் - கிரணசமூகங்களாகும்; முகம் - முகமானது, மஞ்சிலா - களங்கமில்லாத, மதி - சந்திரனையொக்கும்; புயம் - தோள்கள், மணி - அழகிய, எழுக்கள் - ஸ்தம்பங்களையொக்கும்; மார் - மார்பானது, வஞ்சி - கொடிபோன்ற, நுண் - மெல்லிதாகிய, இடை - இடையையுடைய, மலராட்கு - இலக்குமிக்கு, இடம் - இடமாகும்; துடை - துடைகளானவை, அம் - அழகிய, சொல்லார் - சொல்லையுடைய மாதர்களது, மனம் - மனமாகிய, களிறு - யானையை, அணை - கட்டும்படியான, பொற்றம்பம் - அழகிய ஸ்தம்பங்களாகும், எ - று. (ருக)

வேறு

52\. மணியிழைக்கடைந் தாக்கிய வானவிற்
கணைபெய் தூணிக ளாங்கணைக் காலடி
பிணிய விழ்ந்தசெந் தாமரைப் பீடினு
லணியி னுக்கணி யும்மவ னுயினுன்.

(இ - ள்) கணைக்கால் - கணைக்கால்கள், மணியிழை - இரத்தினங்களை, கடைந்து - கடைசல் பிடித்து, ஆக்கிய - (அவற்றால்) செய்யப்பட்டிருக்கிற, வானவில் - இந்திரன் தனுவினது, கணை - அம்புகளை, பெய் - வைக்கப்பட்ட, தூணிகளாம் - அம்பறாத்தூணிகளை யொக்கும்; அடி - பாதங்கள், பிணியவிழ்ந்த - கட்டவிழ்ந்து மலர்ந்திராநின்ற, செம் - சிவந்த, தாமரை - தாமரைப்பூவை யொக்கும், பீடினுல் - பெருமையினுல், அணியினுக்கு - அழகுகளுக்கெல்லாம், அவன் - அக்குமாரனுனவன், அணியும் ஆயினுன் - மேலான அழகானுன், எ - று.()

53\. இந்து வின்னுத யத்திலங் குந்திசை
வந்த தாரகை போல மடந்தைபால்
மைந்தன் வந்து பிறந்து சயந்தனென்
றிந்த வையக மேத்த வளர்ந்தநாள்.

(இ - ள்) (இவன்செய்தி இப்படியிருக்க) இந்துவின் - சந்திரனுடைய, உதயத்து - உதயத்திலுலே, இலங்கும் - விளங்கும், திசை - கீழ்த்திசையில், வந்த - பிறகு உதயமாகிவந்த, தாரகைபோல - நட்சத்திரம்போல, மடந்தைபால் - அம்மாதினிடமாக, வந்து - கருப்பத்தில் வந்து, மைந்தன் - மற்றெரு புத்திரன், பிறந்து - தோன்றி, சயந்தனென்று - சயந்தனென்னும் நாமமுடையனுகி, இந்த

வையகம் - இந்த உலகிலுள்ளோர், ஏத்த - தோத்திரம் பண்ண, வளர்ந்த நாள் - வளர்ந்த காலத்தில், எ - று. (டுங)

வேறு

54. புண்ணிய முதித்துழிப் போக மெய்துமா
லண்ணல்சஞ் சயந்தனற் குமா ரனுழி
விண்ணுறை திருவனாள் வேள்வி நீர்மையாற்
பண்ணமை மொழியளோர் பாவை யெய்தினாள்.

(இ - ள்) புண்ணியம் - பூர்வத்தில் செய்யப்பட்ட புண்ணியமானது, உதித்துழி - தோன்றிய காலத்தில், போகம் - போகோப போக சௌக்கியம், எய்தும் - அடையும் (அதுபோல்), அண்ணல் - பெருமையிற் சிறந்தவனாகிய, சஞ்சயந்தன் - சஞ்சயந்தனானவன், நல் - நன்மையாகிய, குமாரனுழி - யௌவன குமாரனான காலத்தில், வேள்வி நீர்மையால் - ஔபாஸன விதிக்கிரமத்தால், விண்ணுறை - தேவலோகத்தில் வசிக்கும்படியான, திருவனாள் - இலக்குமிக்குச் சமான முள்ளவளாகிய, பண்ணமை - கீதமமைந்த, மொழி - வசனத்தையுடைய, ஓர் - ஒப்பற்ற, பாவையள் - சித்திரப் பாவைபோன்ற மாதானவள், எய்தினாள் - (அவனை) அடைந்தாள், எ - று.

ஆல் - அசை. (டுச)

55. வண்டுபூ மலர்ந்துழி மதுவை யுண்பதிற்
றொண்டைவா யவணலம் பருகு நாளவன்
வண்டிரை வலம்புரி மணியை யீன்றவா
புண்டவழ் வேற்கணாள் புதல்வற் பெற்றனள்.

(இ - ள்) பூ - பூவானது, மலர்ந்துழி - மலர்ந்த விடத்தில், மதுவை - அதிலுள்ள மதுவை, வண்டு - வண்டானது, உண்பதின் - உண்பதுபோல், தொண்டை - கோவைக்கனிபோன்ற, வாய் - (சிவந்த) வாயையுடைய, அவள் - அந்த ஸ்திரீயினிடத்துண்டாகிய, நலம் - இன்பத்தை, அவன் - அந்தச் சஞ்சயந்த குமாரனானவன், பருகுநாள் - அனுபவிக்கும் காலத்தில், வண் - வளப்பம் பொருந்திய, திரை - அலைகளையுடைய (கடலிலுண்டாகிய), வலம்புரி - வலம்புரிச் சங்கானது, மணியை - முத்துமணியை, ஈன்றவா - பெற்றதுபோல், புண் - பகைவர் மாம்சத்திலே, தவழ் - பாய்ந்து தவழ்கின்ற, வேல் - வேல்போன்ற, கணாள் - கண்களையுடைய அம்மாது, புதல்வன் - ஒரு புத்திரனை, பெற்றனள் - பெற்றாள், எ - று. (டுரு)

## வைசயந்தன் சமவசரணம் சேர்தல்.

---

வேறு.

56. மதிதலைப் பட்ட போழ்தின் மகிழ்ந்துவை சயந்த னென்றே
நிதியறை திறந்து வீசி நீதியாற் செல்லு நாளுட்
டுதைமல ரசோக மென்னும் வனத்திடைச் சுயம்பு நாமத்
தேசய மடையக் கண்டா ரரசனுக் கறிவித் திட்டார்.

(இ - ள்.) மதி - சந்திரன், தலைப்பட்ட போழ்தின் - சம்பூர்ணத்தை யடைந்த காலத்தில் (சமுத்திரம் மகிழ்வதுபோல), மகிழ்ந்து - (அரசன்) சந்தோஷமடைந்து, (அப்புதல்வனுக்கு) வைசயந்தனென்று - வைசயந்தனென்று பெயரிட்டு, நிதியறை - பாண்டாகாரத்தை, திறந்து - திறந்துவிட்டு, வீசி - யாசக ஜனங்களுக்குப் பொன்னை யெடுத்துச் சிதறித் தானங்கொடுத்து, நீதியால் - கிரமத்தால், செல்லு நாளுள் - நடக்கின்ற காலத்தில், துதை - நெருங்கிய, மலர் - பூக்களையுடைய, அசோகமென்னும் - அசோகமென்கிற, வனத்திடை - உத்தியானத்தில், சுயம்பு நாமத்து - ஸ்வயம்பு நாமதீர்த்தங்கரருடைய, அதிசயம் - * சமவசரணம், அடைய - வந்துசேர, கண்டார் - பார்த்த வனபாலகர்கள், அரசனுக்கு - ராஜாவுக்கு, அறிவித்திட்டார் - அவ்விசேஷத்தைத் தெரிவித்தார்கள், எ - று. (நிசு)

57. விழுநிதி யெளிதிற் பெற்ற வறியவன் போல வேந்த
னெழுதரு விசோதி தன்னா லெழுந்துசென் றிறைஞ்சி வாழ்த்தி
முழுதுட னவர்கட் கீந்து முனிவர்தங் கோன் சிறப்புக்
கெழுகென வீதிதோறு மியம்பின முரச நின்றே.

(இ - ள்) விழுநிதி - பெரிதாகிய நிதியை, எளிதில் - சுலபமாக, பெற்ற - அடைந்த, வறியவன்போல - ஏழையைப்போல, வேந்தன் - வைசயந்த மஹாராஜன், எழுதரு - உண்டாகிய, விசோதி தன்னால் - விசுத்த பரிணாமத்தால், எழுந்து - ஆசனத்தைவிட்டு எழுந்திருந்து, சென்று - †ஏழடி நடந்து, இறைஞ்சி - வணங்கி, வாழ்த்தி - ஸ்தோத்திரம்பண்ணி, உடன் - உடனே, முழுதும் - (தானணிந்திருந்த ஆபரணம்) முழுமையும், அவர்கட்கு - அவ்வன பாலகர்களுக்கு, ஈந்து - கொடுத்து, முனிவர்தங்கோன் - முனீஸ்வரர்களுக்கெல்லாம் எஜமானாகிய ஸர்வக்ஞனது, சிறப்புக்கு - பூஜைக்கு, எழுகென - எல்லோரும் செல்லக்கடவீராக என்று கட்டளையிட, வீதிதோறும் - வீதிகள்தோறும், முரசம் - பேரிகைகள், நின்று - நிலைபெற்று, இயம்பின - அவ்விஷயத்தைக்கூறி முழங்கின, எ - று. ()

---

* சமவசரணம் - தேவர்களால் நிர்மிக்கப்பட்ட கோயில்.

† ஏழடி நடத்தல் - சப்த பரிவர்த்தனையைத் தாண்டுதலுக் கறிகுறியாம்.

58. இடிமுர சியம்பு மெல்லை யிந்திர னகரந் தன்னைப்
படிமிசை யணிந்து வைத்துப் படங்களைந் திட்ட வண்ணங்
கொடிநக ரணிந்து பூணு மாரமுங் குழையு மின்னக்
கடிமலர்க் களப மேந்திக் கணத்திடை யெழுந்த தன்றே.

(இ - ள்) இடி - இடியைப்போல சப்திக்கும், முரசு - பேரிகையானது, இயம்புமெல்லை - அவ்வாறு முழங்குங் காலத்தில், இந்திரநகரந் தன்னை - தேவேந்திரனது பட்டணமாகிய அமராவதி நகரத்தை, அணிந்து - அலங்கரித்து, படிமிசை - இப்பூமிமேல், வைத்து - ஸ்தாபித்து, படம் - (மேலே மூடியிருந்த) திரையை, களைந்திட்ட வண்ணம் - நீக்கின விதம்போல், கொடி - துவசங்களையுடைய, நகர் - அவ்வீதசோகபுரத்துள்ளார், பூணும் - ஆபரணங்களும், ஆரமும் - முத்தாஹார ரத்தினஹாரங்களும், குழையும் - குண்டலங்களும், மின்ன - பிரகாசிக்க, அணிந்து - அலங்கரித்துக்கொண்டு, கடி - வாசனை பொருந்திய, மலர் - புஷ்பங்களும், களபம் - சந்தனக் குழம்புகளும், ஏந்தி - எடுத்துக்கொண்டு, கணத்திடை - அச்சமயத்திலேயே, எழுந்தது - அங்குச் செல்ல வாரம்பித்தார்கள், எ-று.

நகர் - ஆகுபெயராய் அதிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. நகர் என்பது அஃறிணைப் பெயராதலின், எழுந்தது என்னும் அஃறிணை முடிபை யேற்றது. ()

59. கால்பொரு கடலிற் பொங்கிக் கடிநக ரடையு மெல்லை
மாலையுஞ் சாந்து மேந்தி மயிலனார் சூழப் போகிக்
காலனைக் கடிந்த வேந்தன் கடிநகர்க் குறுகிக் கைமா
மேலிழிந் திறைஞ்சிப் புக்கான் விண்ணவர்க் கிறைவ னொத்தான்.

(இ - ள்) கால்பொரு - காற்றினால் மோதப்படுகின்ற, கடலில் - சமுத்திரம்போல், பொங்கி - திரண்டு, கடி - காவலையுடைய, நகர் - நகரிலுள்ளார், அடையும் - வந்து சேரும், எல்லை - காலத்தில், மாலையும் சாந்தும் ஏந்தி - (அரசன்) பூமாலை சந்தனம் முதலானவைகளை யெடுத்துக்கொண்டு, மயிலனார் - மயில் போன்ற சாயலையுடைய தேவிமார்கள், சூழ - தன்னைச் சூழ்ந்துவர, கைமாமேல் - யானையின்பேரில், போகி - சென்று, காலனை - இயமனை, கடிந்த - கோபித்து நீக்கிய, வேந்தன் - ஸ்வயம்பு நாமபகவானது, கடி - விளக்கமாகிய, நகர் - கோவிலை, குறுகி - அடைந்து, இழிந்து - யானையினின்று மிறங்கி, புக்கான் - புகுந்தான், (அங்ஙனம் புகுந்த மாத்திரத்தில் அவன்) விண்ணவர்க் கிறைவன் ஒத்தான் - தேவேந்திரனை நிகர்த்து யாவரிலுஞ் சிறந்தான், எ - று. (ருகூ)

60. வானவிற் கடந்து மான பீடத்தை வணங்கி வாழ்த்தி
மானதம் பத்தை எய்தி வலங்கொண்டு பணிந்து போகி

மானமெல் லார்க்கு மொத்து மலர்மலி கிடங்கு பின்னு
மானமில் லாத வல்லி வனத்திடை மலர்க்கை யேந்தி.

(இ - ள்) வானவில் - இந்திர தனுசினது ஒளியையுடைய தூளிசாலமென்னும் முதல் மதிலை, கடந்து - தாண்டி, மானபீடத்தை - அவ்விடத்தில் அளவோடுள்ள பலிபீடத்தை, வணங்கி - நமஸ்கரித்து, வாழ்த்தி - தோத்திரம்பண்ணி, மான தம்பத்தை - (அதற்குமேல் அந்த ப்ராசாத சைத்ய பூமியாகிய முதல் பூமியின் பேர்பாதியில் நாலு மகா திக்குகளிலும் இரா நின்ற) மானஸ்தம்பத்தை, எய்தி - அடைந்து, வலங்கொண்டு - பிரதட்சணம் பண்ணி, பணிந்து - வணங்கி, போகி - (அப்பூமியின் மற்ற பாதி தூரமும்) சென்று, மானம் - அளவானது, எல்லார்க்கும் - யாவர்களுக்கும், ஒத்து - சமத்துவமாகி, மலர்மலி - புஷ்பங்களினால் நிறைந்த, கிடங்கு - அகழ்ப் பூமியினிடத்தும், போகி - சென்று, பின்னால் - அதற்கப்பால் இராநின்ற, மானமில்லாத - அளவில்லாத, வல்லி - புஷ்பக கொடிகளையுடைய, வனத்திடை - வல்லி வனத்தில், மலர் - புஷ்பங்களை, கை - கையில், ஏந்தி - தரித்துக்கொண்டு, எ - று. (சுய)

61. கோபுரஞ் சுரும்புண் சோலை கோபுரங் கொடியின் பந்தி
கோபுரங் காவுஞ் செம்பொன் மாளிகைக் குழுவுங் குன்று
மாபுரி யனைய தூபை மணிமுத்த மணலின் முற்ற
நூபுரத் தரவ மார்ப்ப நுவலிய கடந்து புக்கான்.

(இ - ள்) கோபுரம் - உதயதரமென்னும் மதிலையும் கோபுரத்தையும், சுரும்புண்சோலை - (அம்மதிலினுட் பாகத்தில்) வண்டுகளானவை மதுவை உண்ணும் தோப்புகளையுடைய வனபூமியையும், கோபுரம் - பிரீதிதரமென்னும் மதிலையுங் கோபுரத்தையும், கொடியின் பந்தி - அதனுள் த்வஜவரிசைகள் இராநின்ற த்வஜ பூமியையும், கோபுரம் - கல்யாணதர மென்னும் மதிலையுங் கோபுரத்தையும், காவும் - அதற்குள் உள்ள கற்பகவிருக்ஷ பூமியையும், செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, மாளிகைக் குழுவும் - உப்பரிகையின் கூட்டங்களையுடைய கிரஹாங்கண பூமியையும், குன்று - குறைவில்லாத, மாபுரியனைய - பெரிதாகிய பட்டணத்துக்குச் சமானமாகிய, தூபை - ஸ்தூபைகளையும், மணிமுத்தம் - முத்து மணிகளாகிற, மணலின் - மணல்களையுடைய, முற்றம் - வாசல்களில், நூபுரத்து - பாதச்சிலம்புகளின், அரவம் - சப்தம், ஆர்ப்ப - சப்திக்க, நுவலிய - சொல்லப்பட்ட சப்த பூமிகளை, கடந்து - தாண்டி, புக்கான் - உள்ளே போயடைந்தான், எ - று.

இதனால் சப்த பூமிகளையும் மும்மதில்கள் கோபுரம் முதலியவற்றையும் தாண்டிச் சென்றான் என்பது பெறப்படும். (சுக)

62. பத்தொடு பதினு றாய பைம்பொனன் மணிய வற்றிற்
சித்திரத் தியற்றப் பட்ட திருநிலை யத்தை யெய்தி

மத்தமால் களிறு செம்பொன் மலையினை வலம்வந் தாற்போற்
றொத்தொளிர் மலர்க டூவிப் பலமுறை வலம்வந் திட்டான்.

(இ - ள்) பத்தொடு - பத்து மாற்றொடுகூடி யுயர்ந்த, பைம் - பசுமை பொருந்திய, பொன் - பொன்னினாலும், பதினாறய - பதினாறு குணங்கள் பொருந்திய, நல் - நன்மையாகிய, மணியவற்றில் - இரத்தினங்களாலும், சித்திரத்து - விசித்திரமாக, இயற்றப்பட்ட - இழைத்துச் செய்யப்பட்ட, திருநிலையத்தை - ஸ்ரீநிலயத்தை, எய்தி - அடைந்து, மத்த - மதம்பொருந்திய, மால் - பெரிய, களிறு - ஒரு யானையானது, செம்பொன் மலையினை - மகம்மேரு பர்வதத்தை, வலம் வந்தாற்போல் - வலமாக வந்ததுபோல், தொத்து - கொத்துகளாகி, ஒளிர் - பிரகாசிக்கின்ற, மலர்கள் - புஷ்பங்களை, தூவி - சொரிந்து, பலமுறை - பலமுறைகள், வலம் வந்திட்டான் - வலமாக வந்தான், எ - று. (சுஉ)

63. நிறைமதி கண்ட நீல மாக்கடல் போல நீடா
திறைவன துருவங் காணு வெழுதரு விசோதி தன்னாற்
சிறையழி புனலிற் செல்லுங் காதல ளுகிச் சீர்சால்
துறவினுக் கிறைவன் றன்மேற் றுதிவகை தொடங்கி னானே.

(இ - ள்) நிறைமதி - சம்பூர்ணச் சந்திரனை, கண்ட - பார்த்த, நீலம் - நீல நிறமாகிற (ஜலத்தையுடைய), மா - பெரிய, கடல்போல - சமுத்திரம்போல, நீடாது - சீக்கிரமாக, இறைவனது - பகவானுடைய, உருவம் - ரூபத்தை, காணு - கண்டு, எழுதரு - அதனாலுண்டாகிய, விசோதி தன்னால் - சுத்தபரிணாம மிகுதியால், சிறை - அணையை, அழி - அழித்து, செல்லும் - செல்கின்ற, புனலிற் - ஜலத்தைப்போல, காதலனாகி - அடங்காத பக்தி விருப்பையுடையவனாகி, சீர் - சிறப்புகளினால், சால் - மிகுதியாகிய, துறவினுக்கு - துறவையுடைய முனிகளுக் கெல்லாம், இறைவன் றன்மேல் - நாயகனாகிய சுவாமியின்பேரில், துதிவகை - தோத்திரங்களை, தொடங்கினான் — கூற ஆரம்பித்தான், எ - று.

துறவு - ஆகுபெயராய் அதனையுடையாரை உணர்த்திற்று. (சுந)

வேறு.

64. பூமாலை முதலாய புனையாத திருமூர்த்தி
காமாதி வென்றுயர்ந்த கடவுளோன் றறையுமே
காமாதி வென்றுயர்ந்த கடவுளோன் றறைந்தாலுங்
கோமானின் றிருவுருவங் கொண்டுவப்பா ரரியரே.

(இ - ள்) பூமாலை முதலாய - பூமாலை முதலானவைகளை, புனையாத - அலங்காரமாக வணியாத, திருமூர்த்தி - அழகிய உமது பரமௌதாரிக திவ்ய தேகமானது, காமாதி - ஆசை முதலாகிய குற்றங்களை (அதாவது விபாவங்களை),

வென்று - ஜெயித்து, உயர்ந்த - ஸ்வபாவ குணங்களாலுயர்ந்த, கடவுள் என்று - பகவான் என்று, அறையும் - தெரிவிக்கும், காமாதிவென்றுயர்ந்த - இராகாதிகளை வென்று உயர்ந்த நிலைமைமையுடைய, கடவுளென்றறைந்தாலும் - கடவுள் இவர் தாம் என்று அங்ஙனம் தெரிவித்தாலும், கோமான் - கோமானே, நின் - உனது, * திருவுருவம் - அழகிய ரூபத்தை, கொண்டு - மனத்துக்கொண்டு, உவப்பார் - சந்தோஷித்துச் செல்கின்றவர்கள், அரியர்.- அருமையா யிராநின்றார்கள், எ - று.

இதனால் ரூபஸ்தவம் சொல்லப்பட்டது. (சுச)

65. விளக்ககத்துப் பளிங்கேபோல் விரிந்தொளிமூன் றுடைமேனி
யளப்பரிய வொளியகத்துள் ளிருப்பதென் றறையுமே
யளப்பரிய வொளியகத்துள் ளிருப்பதென் றறைந்தாலுந்
துளக்கறவென் றுயர்ந்தோயைத் தொழுதெழுவா ரரியரே.

(இ - ள்) விளக்கு - தீபத்தை, அகத்து - உள்ளே உடைய, பளிங்கேபோல் - ஸ்படிகத்தைப்போல், விரிந்து - விசாலித்து, ஒளி மூன்றுடை - (மனோஜோதி, வாக்ஜோதி, காயஜோதி என்னும்) மூன்று ஜோதிகளையுடைய, மேனி - (உமது) பரம ஔதாரிக திவ்விய சரீரமானது, அளப்பரிய - (பிறர்களால்) அளவிடுதற் கரியதாகிய, ஒளி - பிரகாசமானது, அகத்துள் - தனக்குள்ளே, இருப்பதென்று - இருக்கிறதென்று, அறையும் - தெரிவியாநின்றது, அளப்பரியவொளி - மிகுதியான ஒளி, அகத்துள்ளிருப்ப தென்றறைந்தாலும் - தன்னுக்குள்ளே இருக்கிற தென்று தெரிவித்தாலும், துளக்கற - சலனமின்றி, வென்று - விபாவங்களைக் கெடுத்து, உயர்ந்தோயை - ஸ்வபாவகுணத்தால் உயர்ந்த உன்னை, தொழுதெழு வார் - வணங்கிச் செல்பவர்கள், அரியர் - அருமையா யிராநின்றார்கள், எ - று.

இதனால் வஸ்து ஸ்தவம் சொல்லப்பட்டது. (சுரு)

66. அமலமா யருள்சுரந்திட் டறிவரிய திருமூர்த்தி
விமலமாய் விரிந்தநாற் குணத்தலைமை விரிக்குமே
விமலமாய் விரிந்தநாற் குணத்தலைமை விரித்தாலுங்
கமலமீ துலவுமுனைக் காதலிப்பா ரரியரே.

(இ - ள்) அமலமாய் - நிர்மலமாகி (அதாவது விபாவமின்றி), அருள்சுரந் திட்டு - தயவை சகலப் பிராணிகளிடத்திலும் அதிகரிக்கச்செய்து, அறிவரிய - பிறர்களாலறிதற்கரிதாகிய, திருமூர்த்தி - அழகிய பரமௌதாரிக திவ்விய தேக மானது, விமலமாய் - குற்றமின்றி, விரிந்த - தன்னுக்குள் விசாலித்த, நாற்குணத் தலைமை - (அனந்த ஞான, தர்சன, சுக, வீர்யமென்னும்) நான்கு குணங்களின் முதன்மையை, விரிக்கும் - விசாலித்துத் தெரிவிக்கும், விமலமாய் விரிந்த - அப்

* திருவுருவம் - நிர்க்கந்தரூபம், அதாவது: பரிக்கிரகரஹிதரூபம்.

படிக் குற்றமின்றி விசாலித்த, நாற்குணத் தலைமை - அனந்த சதுஷ்டய குண முதன்மையை, விரித்தாலும் - தெரிவித்தாலும், கமலமீது - செந்தாமரைப் பூவின் மேலே, உலவும் - *ஸ்ரீ விஹாரம் செய்யும், உனை - உன்னை, காதலிப்பார் - விரும்பி பக்தி பண்ணக்கூடியவர்கள், அரியர் - அருமையா யிரா நின்றார்கள், எ - று.

இதனால் குணஸ்தவம் சொல்லப்பட்டது. (சுசு)

## தத்துவங் கேட்டல்.

வேறு.

67. என்றுநின் றிறைவனை யேத்தி மாதவத்
தொன்றிய மனத்தனு யுலக நாதனை
நின்றதத் துவத்தது நீர்மை யென்னெனக்
குன்றனற் கருளினன் குற்ற மற்றகோன்.

(இ - ள்) என்று - என்று கூறி, நின்று - அபிமுகத்தில் நின்று, இறைவனை - ஸ்வாமியை, ஏத்தி - ஸ்தோத்திரம்பண்ணி, மாதவத்து - உத்க்ருஷ்டமாகிய தபசிலே, ஒன்றிய - பொருந்திய, மனத்தனாய் - மனதை யுடையவனாகி, உலக நாதனை - மூன்று லோகத்திற்கும் நாதனாகிய அந்த ஸ்வாமியை, நின்ற - உலகத்தில் நிலைபெற்றிரா நின்ற, தத்துவத்தது - ஜீவாதி பதார்த்தங்களினது, நீர்மை - குணங்கள், என்னென - எப்படிப்பட்டவை யென்று கேட்க, குன்றனற்கு - பர்வதம்போல் சலியாத குணத்தையுடைய வைசயந்த மகாராஜனுக்கு, குற்றமற்ற கோன் - ராகத்வேஷ மோகங்களில்லாத ஸ்வயம்பு நாம தீர்த்தங்கரர், அருளினன் - அவற்றின் விவரங்களைக் கூறியருளினர், எ - று. (சுஎ)

வேறு.

68. உயிரும்முயி ரல்லதும் புண்ணியம் பாவமூற்றுஞ்
செயிர்தீர் செறிப்பு முதிர்ப்புங் கட்டும் வீடுமுற்ற
துயர்தீர்க்குந் தூய நெறியுஞ்சுருக் காயு ரைப்பன்
மயறீர்ந்த காட்சி யுடையோயிது கேண் மதித்தே.

(இ - ள்) மயல் - மயக்கத்தினின்றும், தீர்ந்த - நீங்கிய (அதாவது: தெளிந்த), காட்சி - சம்மியக்தர்சனத்தை, உடையோய் - உடைய வைசயந்த மகாராஜனே, உயிரும் - ஜீவபதார்த்தமும், உயிரல்லதும் - அஜீவபதார்த்தமும், புண்ணியம் - புண்ணிய பதார்த்தமும், பாவம் - பாவ பதார்த்தமும், ஊற்றும் -

* ஸ்ரீ: விஹாரம் செய்தல் - செல்லுதல்.

ஆஸ்ரவ பதார்த்தமும், செயிர்தீர் - குற்றம் நீங்கிய, செறிப்பும் - சம்வர பதார்த்தமும், உதிர்ப்பும் - நிர்ஜரை பதார்த்தமும், கட்டும் - பந்த பதார்த்தமும், வீடும் - மோக்ஷபதார்த்தமும், உற்ற - சம்சார ஜீவன்களிடம் பொருந்திய, துயர் - துக்கங்களை, தீர்க்கும் - கெடுத்து மோக்ஷமடைவிக்கும், தூய - பரிசுத்தமாகிய, நெறியும் - இரத்தினத் திரயமாகிற மார்க்கத்தையும், சுருக்காய் - லகுவாக (அல்லது சுருக்கமாக), உரைப்பன் - சொல்லுவேன், இது - (இந்த ஜீவாதி நவ பதார்த்தங்களைப்பற்றிக் கூறும்) இதனை, மதித்து - உயர்வாக எண்ணி, கேள் - கேட்பாயாக, எ - று. (சுஅ)

வேறு

69. அறிவு காட்சிய தாயைந்து மூன்றமம்
பொறியோ டுட்கா ணத்துயிர்ப் பாயுவிந்
நெறியின் வாழும் பொருளது சீவனு
மறியின் வீட்டது மாற்றது மாகுமே.

(இ - ள்) அறிவு - ஞானமும், காட்சியது - தர்சனமும், ஆய் - ஸ்வபாவமாகி, ஐந்து பொறியோடு - பஞ்ச இந்திரியங்களோடும், மூன்று - மூன்றாகிய, உட்கரணத்து - அந்தக் கரணங்களோடும், உயிர்ப்பு - உச்சுவாஸ நிச்சு வாஸமும், ஆயு - ஆயுஷ்யமும் (ஆகிய), அம் - அழகிய, இந்நெறியின் - இந்த தசப் பிராணன்களில் (வரிசைக் கிரமத்தால்), வாழும் - வாழ்ந்த வாழ்கின்ற வாழும்படியான, பொருளது - பொருளானது, சீவனும் - ஜீவனாகும், அறியின் - அந்த ஜீவன்களை யறியுமிடத்தில், வீட்டது - மோட்ச ஜீவன்களென்றும், மாற்றதும் - ஸம்ஸார ஜீவன்களென்றும், ஆகும் - இருவகையாகும், எ - று.

ஸ்வபாவ ஞானதர்சனம் பெற்ற ஜீவன்கள் மோட்ச ஜீவன்கள்; விபாவ ஞான தர்சனத்தால் பௌத்கலிகமான தசப்பிராணதார ஜீவன்கள் ஸம்ஸார ஜீவன்கள்; இவைகளின் விவரங்கள் மேல் 2 - பாடல்களில் சொல்லப்படும்.

தசப்பிராண வரிசைகள் :—ஏகேந்திரிய ஜீவனுக்கு - ஸ்பரிசன இந்திரியம், காயவந்தக்காணம், உச்வாஸம், ஆயுஷியம் என்னும் நாலு பிராணன்கள்; த்வீந்திரிய ஜீவனுக்கு - இவற்றோடு ரஸனேந்திரியம், வாக்வந்தக் கரணம் சேர்ந்து, ஆறு பிராணன்கள்; திரி இந்திரிய ஜீவனுக்கு க்ராண இந்திரியம் சேர்ந்து ஏழுபிராணன்கள்; சதுர் இந்திரிய ஜீவனுக்கு - சக்ஷு சேர்ந்து எட்டுப்பிராணன்கள்; அஸஜ்ஞி பஞ்சேந்திரிய ஜீவனுக்கு - காது சேர்ந்து ஒன்பது பிராணன்கள்; ஸஜ்ஞி பஞ்சேந்திரிய ஜீவனுக்கு - மனோவந்தக்காணம் சேர்ந்து பத்துப் பிராணன்களாகும். இவையெல்லாம் பதார்த்தஸாரத்தில் தசப்பிராணாதிகாரத்திலும், இந்திரியமார்க்கணாதிகாரத்திலும் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. (சுகு)

70. வீட்டி னின்றது வெவ்வினை யெண்மையின்
கேட்டி லெண்குண மெய்தியோர் கேடிலா
மாட்சி யாலுல கந்தொழ மாற்றற
வோட்டி வைத்தசெம் பொன்னெனத் தொளிருமே.

(இ - ள்) வீட்டினின்றது - மோட்சஜீவன், வெவ்வினையெண்மையின் - தீயனவாகிய ஞானவாரணாதி அஷ்டகாமங்களின், கேட்டில் - கெடுகையினாலே (அதாவது கர்மரஹிதத்வத்தினால்), எண்குணமெய்தி - அனந்தஞானமுதலாகிய அஷ்டகுணங்களை யடைந்து, ஓர் கேடிலா - எக்காலமும் ஒரு கெடுதியுமில்லாத, மாட்சிமையால் - பெருமையினாலே, உலகம் - உலகத்திலுள்ள பவ்வியப் பிராணிகள், தொழ - வணங்க, மாற்றற - களங்கமற, ஓட்டிவைத்த - புடம்போட்டுக் களங்கம் நீக்கி வைக்கப்பட்ட, செம் - சிவந்த, பொன்னெனத்து - ஸ்வர்ணத்துக்குச் சமானமாகி, ஒளிரும் - தன்னிலையில் பிரகாசிப்பதாகும், எ - று. (எ0)

71. மாற்றி னின்றது வையக மூன்றினு
மாற்ற வும்பரி யட்டமோ ரைந்தினாற்
றோற்றம் வீத றொடர்ந்திடை யில்வினைக்
காற்றி னாற்கதி நான்கிற் சுழலுமே.

(இ - ள்) மாற்றில் நின்றது - (முன் சொல்லியதற்கு) மாற்றமாகிய ஸம்ஸார நெறியில் நின்ற ஸம்ஸார ஜீவன், வையமூன்றினும் - மூன்றுலோகத்திலும், ஆற்றவும் - மிகவும், பரியட்ட மோரைந்தினால் - (திரவிய, க்ஷேத்திர, கால, பாவ பவமென்னும்) பஞ்சபரிவர்த்தனைகளினால், தோற்றம் - பிறத்தலும், வீதல் - சாவதும் (ஆகிய இவைகளை), தொடர்ந்து - சேர்ந்து, இடையில் - மத்தியில், வினைக்காற்றினால் - கருமங்களாகிற காற்றினால், கதிநான்கில் - (நாரக, திரியக், மனுஷ்ய, தேவ என்னும்) நாலு கதிகளிலும், சுழலும் - சுழலாநிற்கும், எ - று.

பரிவர்த்தனைகளின் விவரங்களைப் பஞ்சாஸ்திகாயசாரத்தில் முப்பதாவது அதிகாரத்தில் பார்த்துக்கொள்க. (எக)

72. மானு டம்பு விடா கதி நான்கெய்து
மீன மில்விலங் கினுமோர் நான்கெய்தும்
வானின் வந்து விலங்கு மனிதனா
மீன மில்லவை யெய்திடு நாரகன்.

(இ - ள்) மானுடம்பு - மனுஷ்ய சரீரத்தை உடைய ஜீவன், விடா - அந்தச் சரீரத்தைவிட்டு, கதிநான்கு - நாலு கதிகளிலும், (எதிலானாலும் தனது பரிணாமத்தின்படி தன் தன் பாவத்தினால்), எய்தும் - அடையும், ஈனமில் - குறை

வில்லாத, (அதாவது :- ஸஜ்ஞி பஞ்சேந்திரியமாகிய), விலங்கிலும் - விலங்கு ஜாதிகளிலும் (ஒன்று சரீரம் விடுமேயானால்), ஓர் நான்கு - முன்சொன்ன நாலு கதிகளிலும், எய்தும் - தக்கபடி அடையும், (தேவ ஜீவன்கள்) வானின் வந்து - தேவலோகத்தினின்றும் சரீரம் விட்டுவந்து, விலங்கும் - விலங்கு ஜாதியும், மனிதன் - மனிதனும், ஆம் - ஆகிய இவ்விரு கதிகளில் தக்க யோக்கியத்தின்படி பிறக்கும், நாரகன் - நரகஜீவன்கள், ஈனமில்லவை - குறைவில்லாதனவாகிய கதிகளை, (அதாவது : முன் தேவகதி எப்படிச் சொல்லப்பட்டதோ அப்படியே குறைவில்லாமல்), எய்திடும் - தக்கபடி அடையும், எ - று.

சதுர்கதி சீவன்கள் வேறு கதிக்குச் செல்லும் விவரம் சாமான்யமாகச் சொல்லப்பட்டது. (எஉ)

வேறு.

73. நாலறி யீறு நான்கும் நரகரும் தேவர் தாமும்
மாலுறு போக பூமி மக்களும் விலங்கு மாகார்
மேலுற வான தாதி தேவர்கள் விலங்கின் வாரார்
சாலவீ சானன் மேலா ரீரைவர் சன்னி யாவார்.

(இ - ள்) நாலறியீறு நான்கும் - ஏக, த்வீ, த்ரீ, சதுரிந்திரிய சீவன்கள் நான்கும், நரகரும் - நாரகர்களும், தேவர் தாமும் - தேவர்களும், மாலுறு - ஆசை பொருந்திய, போகபூமி - போகபூமிகளில், மக்களும் - மனுஷ்யர்களாகவும், விலங்கும் - விலங்குகளாகவும், ஆகார் - பிறக்கமாட்டார்கள், (பின்னையாவர் பிறப்பரெனில், கரும பூமியிலுள்ள மனுஷ்ய சீவன்களும், விலங்குகளும் உத்தம, மத்திம, ஜகன்னிய பாத்திரதானனுமோத புண்ணியத்தினால், போய்ப் பிறப்பனவாம்), மேலுற - மேன்மை பொருந்த, ஆனதாதி தேவர் - ஆனத, பிராணத, ஆரண, அச்சுதமாகிய நாலு கல்பத்திலும், அகமிந்திரத்திலுமாகிய தேவர்கள், விலங்கின் - விலங்கு கதியில், வாரார் - பிறக்கமாட்டார்கள் (மனுஷ்யராகவே பிறப்பரென்றபடி), சால - மிகவும், ஈசானமேலார் - சௌதர்ம ஈசான கல்பத்துக்கு மேலாக உள்ள, ஈரைவர் - சனத்குமாரர் முதல் சஹஸ்ராரர் வரையிலும் உள்ள பத்துத் தரத்தார்களும், சன்னியாவர் - ஸஜ்ஞி சீவன்களாகவே பிறப்பார்கள் ; (அஸஜ்ஞி சீவன்களாகப் பிறக்கமாட்டார்கள் என்றபடி), எ - று. (எங)

74. நீர்மர நிலங்க ளாவர் நின்றநால் வகைய தேவர்
நீர்மர நிலங்கள் செல்லும் விலங்கொடு மக்க டம்மிற்
சீர்மையில் விலங்கு மக்கட் டீயொடு வளியு மாவர்
நீர்மையின் னெருப்பிற் காற்றி னின்றன விலங்கிற் றோன்றும்.

(இ - ள்) நின்ற - கீழிலிராநின்ற, நால்வகைய தேவர் - நாலுவிதமாகிய (அதாவது: பவண, வியந்தா, ஜோதிஷ்க, ஸௌதர்ம ஈசான்யராகிய நாலுவகை) தேவர்களும், நீர் - அப்புகாயிகங்களாகவும், மரம் - வநஸ்பதிகாய சீவன்களாகவும், நிலங்கள் - பிருத்திவிகாய சீவன்களாகவும், ஆவர் - பிறப்பார்கள் (என்றதனால், தேயு, வாதகாய சீவன்களாகார் என்பது பெறப்படும்), நீர் - அப்புகாயிக சீவன்களும், மரம் - வநஸ்பதி சீவன்களும், நிலங்கள் - பிருத்திவி சீவன்களும், விலங்கொடு - விலங்கு ஜாதியோடு, மக்கட்மயில் - மனுஷ்ய ஜன்மத்திலும், செல்லும் - போய்ப் பிறக்கும், சீர்மையில் - சிறப்பில்லாத, விலங்கும் - விலங்குகளும், மக்கள் - மனுஷ்யர்களும் (என்றதனால் தெளிவில்லாத மோஹனீய உத்க்ருஷ்ட ஸ்திதி பந்தமுள்ள சீவன்கள் என்பது பெறப்படும்), தீயோடு - தேஜஸ்காயத்தோடு, வளியுமாவர் - வாதகாய சீவன்களாகவும் பிறப்பார்கள், சீர்மையில் - குணமில்லாத (மிகவுந் தாழ்ந்த), நெருப்பின் - நெருப்பிலும், காற்றின் - காற்றிலும், நின்றன - நிலைபெற்றனவாகிய தேஜஸ்காய சீவன்களும் வாதகாய சீவன்களும், விலங்கிற்றேன்றும் - விலங்கு ஜாதியிலேயே பிறக்கும் (மனுஷ்யராகப் பிறவார் என்றபடி), எ - று. (எச)

75. அருகன தருவ மில்லா ரகமிந்தி ரத்துட் டோன்ரு
ரருமையிற் சாச ராந்த மடைவரா சீவ ரன்றிப்
பிரமனே யந்த மாகப் பரிப்பிரா சகருஞ் செல்வர்
மருவுவர் சோதி டாந்தம் மற்றத்தா பதர்க டாமே.

(இ - ள்) அருகனது - அருகத்பரமேஸ்வரனுடைய, உருவமில்லார் - ரூபமாகிய நிர்க்கந்ததபம் பண்ணுதவர்கள், அகமிந்திரத்துள் - அகமிந்திரலோகமாகிய நவக்கிரைவேயகம், நவானுதிசை, பஞ்சானுத்தரங்களில், தோன்ருர் - பிறக்க மாட்டார்கள், ஆசீவா - சுவேதாம்பரிகள், அருமையில் - மஹா அருமையினால், (மிகத் தபசுபண்ணி சாசராந்தம் ஸஹஸ்ராரகல்பம் வரையிலும்), அடைவர் - செல்லுவார்கள், பரிப்பிராசகரும் - பரிவ்ராஜக சன்னியாசிகள், பிரமனேயந்தமாக - பிரம்ம கல்பம் வரையிலும், செல்வர் - செல்லுவார்கள், மற்றத்தாபதர்கள் -(பஞ்சாக்னி மத்தியில் தபம்பண்ணப்பட்டவர்கள் முதலாகிய) மற்ற பாஷண்டிகள், சோதிடாந்தம் - பவண, வியந்தா, ஜோதிஷ்கரென்னும் கீழ்முத்தேவர்களாகவே, மருவுவர் - அடைவார்கள், எ - று. (எரு)

வேறு.

76. நற்காட்சி யுடைவிலங்கும் மாணிடரும் வதஞ்செறிந்துங்
கற்பாதி முதலாகக் கற்பாந்த முறச்செல்வர்
நற்பால வதஞ்செறிந்த நார்விலங்கு பவணாதி
கற்பாந்தஞ் சாசராந் தங்காண்பர் முறையுளியே.

(இ - ள்) நற்காட்சி - ஸம்யக்தரிசனத்தை, உடை - உடைத்தாகிய, விலங்கு - விலங்குகளும், மானிடரும் - மனுஷ்யர்களும், வதம் - பஞ்சாணு விரதத்தை, செறிந்தும் - சேர்ந்து (அனுஷ்டித்தாலும் அனுஷ்டிக்காவிட்டாலும்), கற்பாதி முதலாக - கல்பத்துக்கு முதலாகிய ஸௌதர்ம கல்பம் முதலாக, கற்பாந்தம் - அச்சுதகல்பம் வரையில், உற - பொருந்த, செல்வர் - அடைவார்கள், நற்பால - நன்மையின் பகுதியாகிய, வதம் - பஞ்சாணு விரதங்களை, செறிந்த - சேர்ந்திராநின்ற, நரர் - மனுஷ்யர்கள், பவமுறுதி - பவணலோகம் முதல், கற்பாந்தம் - அச்சுத கல்பம் வரையிலும், விலங்கு - விலங்குகள், (பவணலோகம் முதல்) சாசராந்தம் - ஸஹஸ்ரார கல்பம் வரையிலும். முறையுளி - வரிசைக்கிரமமாக, காண்பர் - அடைவார்கள், எ - று. (எகூ)

77. போகநில விலங்குநரர் பொருந்தியநற் காட்சியரேல்
நாகமுத லாஞ்சோத மீசான நண்ணிடுவர்
மோகமிச்சார் பவணர்வி யந்தரர்சோ திடராவா
ராகுபவ ரணுதிசா ணுத்தரத்தைய மறத்தெளிந்தார்.

(இ - ள்) போகநிலம் - போக பூமியிலிராநின்ற, விலங்கும் - விலங்குகளும், நரர் - மனுஷ்யர்களும், பொருந்திய நற்காட்சியரேல் - ஸம்யக்தர்சனத்தையுடையவர்களானால், நாகம் - தேவலோகத்துக்கு, முதலாம் - முதலாகிய, சோதமீசானம் - ஸௌதர்ம ஈசான கல்பத்தை, நண்ணிடுவர் - அடைவார்கள்; மோகமிச்சார் - மோகநீயபரிணமமுள்ள மித்தியாதிருஷ்டிகள், பவணர் - பவணர்களாகவும், வியந்தரர் - வியந்தரர்களாகவும், சோதிடர் - ஜோதிஷ்கர்களாகவும், ஆவார் - பிறப்பார்கள், ஐயமறத்தெளிந்தார் - சந்தேகமின்றித் தெளிந்த க்ஷாயிக சம்யக்தர்சனத்தையுடைய மஹாமுனிகள், அணுதிசை - நவாணுதிசையிலும், அணுத்தரத்து - பஞ்சாணுத்தரத்திலும், ஆகுபவர் - அடைபவராவார்கள், எ - று. (எஎ)

78. மீனாணும் பெண்ணு நாற்காலுங் காலிலவும்
வான்மேல் வருவ தவழ்வ குறியிலவு
மேன்மேல வேழ்நரகின் கீழ்ச்செல்லா மேற்செல்லு
மேனன்கு வீடுதவம் விரதம்விலங் காமுறையே.

(இ - ள்) மீன் - ஸ்வயம்புரமண சமுத்திரத்திலிராநின்ற மகாமஸ்யங்களும், ஆணும் - ஆடவர்களும், பெண்ணும் - ஸ்திரீகளும், நாற்காலும் - சதுஷ்பாத ஜீவன்களும், கால் இலவும் - கால் இல்லாதனவாகிய சர்ப்பம் முதலியனவும், வான்மேல் - ஆகாயத்தின்மேல், வருவ - பறந்து வருவனவாகிய பட்சி முதலியனவும், தவழ்வ - தவழ்ந்து செல்வனவாகிய ஆமை முதலியவைகளும், குறியில வும் - மனமில்லாத அதாவது: அஸஞ்ஞிபஞ்சேந்திரியமாகிய ஓணான் முதலியவைகளும், எழ்நரகின் - எழுநரகங்களில், மேன்மேல - ஒன்றுக்கொன்று மேலே

இராநின்றவைகளிற் பிறப்பனவாம் (அதாவது: மஹாமத்ஸ்யங்களும் ஆடவர்களும் ஏழாநரகபரியந்தமும், ஸ்திரீகள் ஆறாநரகபரியந்தமும், சதுஷ்பாத ஜீவன்கள் ஐந்தாநரகம் வரையிலும், ஸர்ப்பம் முதலியவைகள் நான்காம் நரகம் வரையிலும், பறவை முதலியவைகள் மூன்றா நரகம் வரையிலும், ஆமை முதலியவைகள் இரண்டாம் நரகம் வரையிலும், ஓணான் முதலியவைகள் முதல் நரகம் வரையிலும் பிறப்பனவாம்; இவை), கீழ்செல்லா - இப்பொழுது சொன்ன கிரமங்களுக்குக் கீழே செல்லமாட்டா, மேற்சொல்லும் - ஒன்றிற்கொன்று மேற்பட்டவைகளிலேயே பிறக்கும், மேல் நான்கு - முதல் நான்கு நரகங்களினின்றும் வரும் ஜீவன்களில் மனிதராகப் பிறப்பவை, வீடு ஆம் - கர்மக்ஷயம் செய்து மோக்ஷத்தையடைந்தாலும் அடையும், (மற்ற மூன்றிலுமிருந்துவரும் ஜீவன்கள்) முறையே - கிரமமாக, தவம் விரதம் விலங்கு ஆம் - தவத்திலும் விரதத்திலும் விலங்கிலும் சார்வனவாம் (அதாவது: ஐந்தாம் நரகத்தினின்றும் வரும் ஜீவன்களின் மனிதராய்ப் பிறப்பவை தவம்கொண்டாலும் கொள்ளும், கர்மக்ஷயம் செய்யமாட்டா; ஆறாம் நரகத்தினின்றும் வரும் ஜீவன்கள் மனிதர்களாகவாவது விலங்குகளாகவாவது பிறந்து ஏகதேச விரதங்களை ஸ்வீகரித்தாலும் ஸ்வீகரிக்கும், தபம்சேரா; ஏழாம் நரகத்தினின்றும் வரும் ஜீவன்கள் விலங்குகளாகவே பிறப்பனவாம்), எ - று. (எஅ)

79. இந்திய மொன்றினு லுலக மெங்குமா
மைந்தினு ணாளிகை யகத்து வாழுமே
யந்தினோ டிரண்டரைத் தீப மாழிமூன்
றிந்திய நான்குமூன் றிரண்டி னெல்லையே.

(இ - ள்) இந்தியமொன்றினால் - ஏகேந்திரிய ஜீவன்களினால், உலகமெங்குமாம் - இந்த உலகமாகிய முந்நூற்று நாற்பத்து மூன்று ரஜ்ஜுப் பிரமாணமுமாக நின்றது, ஐந்தினால் - பஞ்சேந்திரிய ஜீவன்களால், நாளிகையகத்து - த்ரஸநாளிகைக்குள், வாழும் - வாழாநிற்கும். அந்தினோடு - அந்தியத்தில் இராநின்ற ஸ்வயம்புரமணத்த்வீபத்தோடு, இரண்டரைத்தீபம் - இரண்டரை த்வீபமும், ஆழிமூன்று - மகாலவண, காளோதக, ஸ்வயம்புரமணமென்னும் மூன்று சமுத்திரங்களும், இந்தியநான்கு - சதுரிந்திரிய ஜீவன்களினுடையவும், மூன்று - த்ரீந்திரிய ஜீவன்களினுடையவும், இரண்டின் - த்வீந்திரிய ஜீவன்களுடையவும், எல்லை - பிறப்பு ஸ்தானங்களாம், எ - று. (எக)

80. இரண்டரைத் தீவினுண் மனித ருங்கணடங்
திரண்டநூற றெழுபதிற் றிரு வறத்தனை
முரண்கெடக் குலங்கணோர் மூன்றிற் றோன்றினைற்
றிரண்டதீ வினையடாச் சித்தி யெய்துமே.

(இ - ள்) இரண்டரைத்தீவினுள் - (ஜம்பூ, தாதகி, புஷ்கரார்த்த மென்னும்) இரண்டரைத்வீபத்துள், மனிதனும் - மனிதன் பிறப்பான், (அதிலும்), கண்டம் - கண்டங்களாக, திரண்ட - சேர்க்கையாகிய, நூற்றெழுபதில் - நூற்றெழுபது தர்ம கண்டங்களில், திருவறத்தனும் - ஸ்ரீஜிந தர்மத்தையுடையவன் பிறப்பான்; (அவன்) முரண்கெட - பாபங்கள்கெட, குலங்களோர் மூன்றில் - (பிரம்ம, க்ஷத்திரிய, வைசியரென்னும்) முக்குலங்களில், தோன்றினல் - பிறந்தால், திரண்ட - ஆத்மனிடத்தில் சேர்ந்திரா நின்ற, தீவினை - கருமங்களை, அடா - ஜெயித்து, சித்தியெய்தும் - மோட்சத்தை அடைந்தாலும் அடைவான், எ-று. ()

81. குடங்கையில் விளக்கெனக் கொண்ட கொண்டதன்
னுடம்பின தளவுமா முலக மெங்குமா
மொடுங்குழி புரைதரங் கில்லை யோங்கிய
விடங்கொளிற் பிளத்தலு மின்ற மூர்த்தியால்.

(இ - ள்) அமூர்த்தியால் - சீவன் அமூர்த்தஸ்வபாவமானதால், குடங்கையில் - உள்ளங்கையில் வைத்து மூடப்பட்ட, விளக்கென - தீபத்தைப்போல, கொண்டகொண்டதன் - எடுக்கப்பட்ட எடுக்கப்பட்ட தன்னுடைய, உடம்பினது - சரீரத்தினது, அளவுமாம் - பிரமாணமுடையதுமாகும், உலக மெங்குமாம் - கேவலிஸமுத்காதம் பண்ணும் தண்ட, கவாட, பிரதர, பூர்ணைகளினல், பூர்ணையின்கண் லோக முழுமையும் ஒரேசீவன் ஸூக்ஷ்மகாய யோகத்தினலும் ஆகாநின்றது, ஒடுங்குழி - சீவன் சிறிதாகிய சரீரத்தை யெடுக்குமிடத்தில், புரைதரங்கில்லை - மடிப்பாகச் சுருங்கியிருக்கிறது மில்லை, ஓங்கிய விடங்கொளில் - பெரிதாகிய சரீரத்தை யெடுக்குமிடத்தில், பிளத்தலுமின்று - விண்டுவிரிந்து இருக்கிறதுமில்லை, எ-று.

சப்தசமுத்காதங்களில் கேவலி சமுத்காதம் ஒன்று; இந்த சமுத்காதங்களின் விவரங்களை பதார்த்தசார கிரந்தத்தில் முப்பதாவது அதிகாரத்தில் பார்த்துக் கொள்க. (அக)

82. பொறிகளாற் புலத்தெழு போகந் துய்ப்புழி
யிறுகிய வினைகளுக் கிறைவ னுயபின்
பிறிதொரு பிறப்பினவ் வினைப் பயத்தினுக்
கிறைவனு மிதுவுயி ரியற்கை வண்ணமே.

(இ - ள்) உயிர் - சீவபதார்த்தமானது, பொறிகளால் - இந்திரியங்களால், புலத்து - விஷயங்களில், எழும் - உண்டாகிய, போகம் - போகோப போகங்களை, துய்ப்புழி - (ராகத்வேஷ மோகங்களால்) அனுபவிக்குமிடத்தில், இறுகிய - அதனல் வந்துசேரப்பட்ட, வினைகளுக்கு - கர்மங்களுக்கு, இறைவனுயபின் - கர்த்தாவாயிருந்து பந்தித்துக்கொண்ட பிறகு, பிறிதொரு பிறப்பில் - மறுசன்மத்திலும்,

அவ்வினைப்பயத்தினுக்கு - அந்தக் கர்மங்களினுடைய உதயமாகிய பலனை அனுப விப்பதற்கு, இறைவனும் - போக்தாவாகி அனுபவியாநிற்கும், இது - இந்தச் செய்கை, இயற்கை - அந்தச் சீவ பதார்த்தத்தினுடைய ஸ்வரூபமாகிய, வண் ணம் - குணமாம், எ - று. (அஉ)

வேறு.

83. நாற்றமுஞ் சுவையு மூறும் வண்ணமுந் தனமைத் தாகிப்
போற்றல்பூ ரித்தல்வாட லுடையதாய் புற்க லந்தான்
மாற்றிடை யுயிரைப் பற்றி வினைமுத லாகித் துன்ப
மாற்றவும் செய்து கந்த மணுவுமாய் நிற்ப தாமே.

(இ - ள்) புற்கலந்தான் - புத்கலமானது, நாற்றமும் - கந்தத்தையும், சுவையும் - ரஸத்தையும், ஊறும் - ஸ்பரிசத்தையும்; வண்ணமும் - வர்ணத்தையும், தன்மைத்தாகி - தன்னுடைய ஸ்வபாவத்தில் அல்லது நிச்சயத்திருஷ்டியுடையதாகி, போற்றல் - கூடுவதும், பூரித்தல் - நிரம்புவதும், வாடல் - பிரிவதும் (ஆகிய இவைகளை), உடையதா - பரியாயத்தால் அல்லது வியவகாரத்தாலுடையதாகி, மாற்றிடை - ஸம்சாரத்தில் வர்த்தியா நின்ற, உயிரை - ஸம்சார சீவன்களை, பற்றும் - பிணிக்கின்ற, வினைமுதலாகி - (ஞானாவரணாதி அஷ்டகர்மங்களுக்குக்) ஆதாரமாகி, துன்பம் - துக்கங்களை, ஆற்றவும் - மிகவும், செய்து - உண்டு பண்ணி, கந்தம் - ஸ்கந்தங்களாகவும், அணுவுமாய் - அணுக்களாகவும் ஆகி, நிற்ப தாம் - இருப்பதாகும், எ - று.

கந்தம் இரண்டு; சுவை ஆறு; பரிசம் எட்டு; வர்ணம் ஐந்து. (அங)

வேறு.

84. நுண்மையு நுண்மையு நல்ல நுண்மையு
நுண்மையிற் பருமையும் பருமை நுண்மையு
மெண்ணரும் பருமையு மிரு பருமையுங்
கண்ணுறு மணுவினு ளறுகுங் கந்தமே.

(இ - ள்) கந்தம் ஸ்கந்தமானது, நுண்மையு நுண்மையும் - ஸூக்ஷ்ம ஸூக்ஷ்மமும், நல்ல - நன்மையான, நுண்மையும் - ஸூக்ஷ்மமும், நுண்மை யிற்பருமையும் - ஸூக்ஷ்ம ஸ்தூலமும், பருமை நுண்மையும் - ஸ்தூல ஸூக்ஷ்ம மும், எண்ணரும் - நினைத்தற்கரிய, பருமையும் - ஸ்தூலமும், இருபருமையும், ஸ்தூலஸ்தூலமுமென்று, கண்ணுறும் - கருதப்பட்டிருக்கிற, அணுவின் - பர மாணுவினாலே, ஆறுகும் - ஆறுவிதமாகும், எ - று. (அச)

85. கருமத்தின் கீழ்ன கரும நோகமம்
பெரியவா நோகமம் பொறிகொ ளாதன
ஒருபொறி புலத்தன பலபு லத்தன
கருதிய வறுவகைக் கந்த மாகுமே.

(இ - ள்) கருதிய - கருதப்பட்ட, அறுவகை - ஆறுவிதமாகிய, கந்தம் - ஸ்கந்தங்கள், (கருமாபேக்ஷயினால்) கருமத்தின் கீழ்ன - கருமஸ்கந்தத்திற்கு கீழ்ப்பட்டனவும், கருமம் - கருமத்திற்கு யோக்கியமான ஸ்கந்தம், நோகமம் - நோகருமஸ்கந்தம், பெரியவாநோகமம் - பெரியவா நோகருமஸ்கந்தம் என நான்கு வகையும், (இந்திரியாபேக்ஷயினால்), பொறி கொளாதன - இந்திரியங்களுக்கு விஷயமாகாதவை, ஒரு பொறிபுலத்தன - ஒரு இந்திரியத்திற்கு மட்டும் விஷய மானவை, பல புலத்தன - பல இந்திரியங்களுக்கு விஷயமானவை (என மூன்று வகையாகவும்), ஆம் - ஆகும், எ - று.

ஆறுவகைஸ்கந்தங்களாவன :

(1) ஸூக்ஷ்மஸூக்ஷ்மம் - இரண்டு பரமாணு கூடினவை முதல் ஒன்று குறைந்த அனந்த பரமாணுக்கள் கூடினவை வரையில்.

(2) ஸூக்ஷ்மஸ்கந்தம் - அனந்த பரமாணுக்கள் கூடினவை ; இவை கரும ஸ்கந்தமாகும் , ஆத்ம குணத்திற்குத் தக்கவாறு ஆத்மனில் பந்தித்துக் கருமசரீ ரத்தை ஆக்கும்.

(3) ஸூக்ஷ்மஸ்தூலஸ்கந்தம் - ரஸம், கந்தம் முதலியவை.

(4) ஸ்தூல ஸூக்ஷ்மம் - தம சாயாதிகள்.

(5) ஸ்தூலம் - ஜலதைலாதி.

(6) ஸ்தூலஸ்தூலம் - பூமி பர்வதாதிகள்.

இவைகளில் (1) - கருமத்திற்குக் கீழ்ன.

(2) - கருமஸ்கந்தம்.

(3) & (4) - நோகருமஸ்கந்தங்கள்.

(5) & (6) - பெரியவாநோகருமம்.

(1) & (2) - பொறிகொளாதன.

(3) & (4) - ஒரு பொறிபுலத்தன.

(5) & (6) - பல புலத்தன.

வேறு.

86. ஊறிரண் டாகி நாற்றம் வண்ணமுஞ் சுவையு மொன்றாய்க்
கூறிரண் டாக்க லாகா நுண்மைத்தா யளவைக் கெல்லாம்
பேறுதன் வழிய தாகிப் பிறங்கிமூ வுலக முற்று
மாறுகந் தங்கட் காதி யாகிய தணுவ தாமே.

(இ - ள்) அணுவது - (ஸ்நிக்தபரமாணு, ரூக்ஷபரமாணு என்னும் இருவகையான) அணுவானது, ஊறு - அஷ்டஸ்பரிசங்களுள், இரண்டாகி - (ஸ்நிக்தபரமாணுவுக்கு ஸ்நிக்த ஸ்பரிசமும் சீதஸ்பரிசமும், ரூக்ஷபரமாணுவுக்கு ரூக்ஷஸ்பரிசமும் உஷ்ணஸ்பரிசமுமாக) இரண்டிரண்டு ஸ்பரிசங்களை யுடையதாகி, (என்றதனால் மற்ற குரு லகு மிருது கர்க்கச மென்னும் நாலுஸ்பரிசங்களும் ஸ்கந்தங்களிடத்தினுள், அணுவுக்கில்லை என்பது பெறப்படும்), நாற்றம் - சுகந்தம் துர்க்கந்தங்களிலும், வண்ணம் - பஞ்சவர்ணங்களிலும், சுவையும் - ஷட்ரஸங்களிலும், ஒன்றாய் - ஒவ்வொன்றை யுடையதாகி (அதாவது ஒருகந்தம் ஒருரஸம் ஒரு வர்ணத்தையுடையதாகி), கூறிரண்டாக்கலாகா - கேவலஞானத்துக்கும் இரண்டுகூறுபடுக்க முடியாத, நுண்மைத்தாய் - ஸூக்ஷ்மமாகி, அளவைக்கெல்லாம் - (த்ரவிய, க்ஷேத்ர, கால, பாவ) அளவைகளுக்கெல்லாம், பேறு - பெறற்பாடு, தன் வழியதாகி - தனது வழியாலாகி, மூவுலகம் - மூன்றுலோகத்தில், முற்றும் - முழுமையும், பிறங்கி - நிறைந்து, ஆறுகந்தங்கட்கு - முன்சொன்ன ஆறு ஸ்கந்தங்கட்கும், ஆதியாகிய தாம் - முதலாயிராநின்றதாம், எ - று. (அசு)

வேறு.

87. கருமநல் லுபசயங் காய நோகமம்
மருவிய புலம்வத்து போகங் காரண
மிருள்வெயி லொளியொலி நிழனாற் பூதமாய்த்
திரிவுடைப் புற்கலந் தான சீவனே.

(இ - ள்) கருமம் - ஞானாவரணாதி கருமங்களும், நல்லுபசயம் - நன்றாகிய தாது உபதாதுக்களும், காயம் - ஔதாரிகாதி பஞ்சசரீரங்களும், நோகமம் - நோகர்மவர்க்கணைகளும், மருவிய - சேர்ந்திராநின்ற, புலம் - பஞ்ச இந்திரியங்களும், வத்து - இந்திரியவிஷய வஸ்துக்களும், போகம் - போக உபபோக வஸ்துக்களும், காரணம் - (தர்ம, அர்த்த, காமத்துக்குக்) காரண வஸ்துக்களும், இருள் - இருட்டும், வெயில் - வெயிலும், ஒளி - பிரகாசமும், ஒலி - சப்தமும், நிழல் - நிழலும், நாற்பூதமாய் - (பிருத்திவி, அப்பு, தேயு, வாயு) என்னும் நான்கு பூதங்களுமாய், திரிவுடை - (திரவிய, குண, கிரியா) விகாரங்களையுடைய, புற்கலந்தான் - புக்கலங்கள், அசீவன் - அஜீவனாகும், (என்றதனால் ஜீவகுணமிதற்கில்லை என்பது பெறப்பட்டது) எ - று.

தருமம் ஆதியாய் இப்பாடலில் சாமான்யமாகச் சொல்லப்பட்ட புத்கலத்தின் விசேஷங்களைப் பதார்த்த சாரமென்னும் கிரந்தத்தில் பார்த்துத் தெரிந்து கொள்க. (அஎ)

88. அத்தியா யமூர்த்தியா யளவி றேசியா
யொத்தள வுலகினோ டுலக லோகமாந்
தத்துவந் தனைச்செய்து தன்ம தன்மமா
மத்திகள் செலவொடு நிலையிற் கேதுவாம்.

(இ - ள்) அத்தியாய் - அஸ்திஸ்வரூபமாகி, அமூர்த்தியாய் - அமூர்த்தமாகி, அளவில்தேசியா - அஸங்கியாதப் பிரதேசியாகி, உலகினோடு - இந்த லோகத்தோடு, ஒத்த அளவு - தாம் பொருந்தி யிராநின்ற அளவு, உலகம் - லோகமும், அலோகம் - (தாமில்லாத விடம்) அலோகமும், ஆம் - ஆகின்ற, தத்துவமதனை - ஸ்வரூபத்தையும், செய்து - உண்டாக்கி (அதாவது: லோகத்தோடு பொருந்திய அளவுடையதாகியும், தாம் உள்ளவரை உலகமும். இல்லாதவிடம் அலோகமுமா மென்னும் தத்துவத்தை யுடையதாகியும்), தன்ம தன்மமாமத்திகள் - தர்மாஸ்தி அதர்மாஸ்திகள், செலவொடு - (முன் சொன்ன ஜீவபுத்கல மிரண்டுக்கும்) செல்கையோடு, நிலையிற்கு - ஸ்திரத்திற்கும், ஏதுவாம் - காரணமாகும் (அதாவது: தர்மாஸ்திகாயம் செல்கைக்கும், அதர்மாஸ்திகாயம் நிலவாத்திற்கும் ஏதுவாம்), எ - று (அஅ)

89. அளவதாம் பொருளுல கத்துக் கில்லையே
லளவிலா காயத்தி லணுக்க ளோடுயி
ரளவளா வின்றியே யகன்று போயபின்
னுளவல கட்டுவீ டுலகத் தோடுமே.

(இ - ள்) அளவதாம் - அளவையுடைய, பொருள் - இந்ததர்மாஸ்தி அதர்மாஸ்திகள், உலகத்துக்கு - இந்த லோகத்தினுக்கு, இல்லையேல் - இல்லாவிட்டால், அளவில் - அளவில்லாமல் அனந்தமாகிய, ஆகாயத்தில் - ஆகாசத்திலே, அணுக்களோடு - அணுவர்க்கணைகளாகிய கர்மங்களோடு, உயிர் - சீவனானது, அளவளாவின்றி - ஒன்றோடொன்று சேர்ந்து பந்தியாமல், அகன்று - நீங்கிப்போய், போயபின் - அங்ஙனம் சென்ற பிற்பாடு, உலகத்தோடும் - இந்த லோகமும், கட்டு - பந்தமும், வீடு - மோட்சமும், உளவல - உண்டாகா, (லோகம், சம்சாரம், மோட்சம் இம்மூன்றும் ஒழியும்) எ - று. (அகூ)

90. அச்சுநீர் தேரொடு மீனை யீர்த்திடும்
அச்சுநீ ரின்றியே தேரு மீன்செலா
வச்சுநீர் போலதன் மத்தி சேறலை
யிச்சையும் முயற்சியு மின்றி யாக்குமே.

**(இ - ள்)** அச்சு - அச்சும், நீர் - ஜலமும், தேரொடு - இரதத்தையும், மீனை - மத்ஸியத்தையும், ஈர்த்திடும் - முறையே இழுக்கும், அச்சு - இரதத்துக்கு அச்சும், நீர் - மத்ஸியத்துக்கு ஜலமும், இன்றி - இல்லாமல், தேரும் - இரதமும், மீன் - மத்ஸியமும், செல்லா - செல்லமாட்டா, அச்சு - இரதத்துக்கு அச்சும், நீர் - மத்ஸியத்துக்கு ஜலமும், போல—, தன்மத்தி - தர்மாஸ்தி திரவியமானது, சேறலை - (சீவ புத்கல மிரண்டுக்கும் கமனத்தை அதாவது) செல்கையை, இச்சையும் - ஆசையும், முயற்சியும் - பிரயத்தனமும், இன்றி - இல்லாமல், ஆக்கும் - செய்விக்கும், எ - று.

91. அந்தரத் தறுபத்து மூன்ற தாகிய
விந்திர படலமும் நிரய மேழ்களும்
மந்தர மலைமண் ணு மற்று நின்றிடா
வந்தமி னிலையதன் மத்தி யில்லையேல்.

**(இ - ள்)** அந்தமில் - முடிவில்லாத, நிலை - நிலைமையையுடைய, அதன் மத்தி - அதர்மாஸ்தி திரவியமானது, இல்லையேல் - இல்லாமல் போகுமேயானால், அந்தரத்து - ஆகாயத்திலிராநின்ற, அறுபத்து மூன்றதாகிய - அறுபத்து மூன்றாகிய, இந்திர படலமும் - சுவர்க்கலோக படலங்களும், நிரயமேழ்களும் - ஏழ்நரகங்களும், மந்தரம் - மகம்மேருபர்வதமும், மலை - குலகிரி முதலாகிய பர்வதங்களும், மண்ணும் - பூமியும், மற்றும் - இன்னும் உள்ளவைகளும், நின்றிடா - நிலைத்திருக்க மாட்டா, எ - று. (கூக)

92. பறவையின் சிறகொடு பாத நின்றுழி
நெறியினுற் செலவொடு நிலையை யாக்குமா
றுறவிபுற் கலமிவை யோட னிற்றலைச்
செறிவுறித் தம்மதம் மத்தி செய்யுமே.

**(இ - ள்)** பறவையின் - பக்ஷியினுடைய, சிறகொடு - இறகோடு, பாதம் - கால்களும், நின்றுழி - இராநின்ற விடத்தில், நெறியினுல் - கிரமத்தினுல், செலவொடு - இறகு செல்கையையும், நிலையை - கால்கள் ஸ்திரதரத்தையும், ஆக்கும் - செய்யும், (அவைபோல்) உறவி - சீவன்களும், புற்கலம் - புத்கலமும், (ஆகிய) இவை - இவைகள், ஓடல் - செல்கையையும், நிற்றலை - ஸ்திரதரத்தையும், செறிவுறி - சேர்தலைப்பொருத்தி (அதாவது: செல்லவும் நிற்கவும்) இசைவித்து, தம்மதம்மத்தி - தர்மாஸ்தி அதர்மாஸ்திகள், செய்யும் - செய்வனவாம், எ - று.

ஆக்குமால் என்பதில், ஆல் - அசை. (கூஉ)

93. அளவின்றி யத்தியா யமூர்த்தி யாதியா
யுளவென்ற பொருட்கெலா மிடங்கொ டுத்துடன்

றளர்வின்றி நிற்பதா காயஞ் சார்வினு
லளவிலாக் காலத்தோ டசீவ னைந்துமே.

(இ - ள்) அளவின்றி - அளவில்லாமல் (அனந்தமாகி), அத்தியாய் - அஸ்திஸ்வரூபமாகி, அமூர்த்தியாதியா - அமூர்த்தத்துவம் அதிசூக்ஷ்மத்துவம் அகுருலகுத்துவம் அவகஹனத்துவம் என்னுங் குணங்களையுடையதாகி, உளவென்ற - இந்த வுலகத்தில் உள்ளனவாயிராநின்றனவென்ற, பொருட்கெலாம் - சீவாதி பொருள்களுக்கெல்லாம், இடம் கொடுத்து - ஸ்தானங் கொடுத்து, உடன் - அவைகளுடன், தளர்வின்றி - தளர்ச்சியில்லாமல், நிற்பது - இருப்பது, ஆகாயம் - ஆகாசத்திரவியமாகும்; (இன்னும்) சார்வின் - இவைகளோடு சேர்ந்த சார்பினையுடைய, அளவிலா - அனந்தமாகிய, காலத்தோடு - காலத்திரவியத்தோடு, அசீவன் - அசீவபதார்த்தங்கள், ஐந்து - ஐந்துவிதமாம், எ - று.

ஆல் - அசை,

அசீவபதார்த்தங்கள்: - புத்கலத்திரவியம், தர்மதிரவியம், அதர்மதிரவியம், ஆகாசதிரவியம், காலதிரவியம் என்பன. அஸ்திகாயம், திரவியம், தத்துவம், பதார்த்தம் என்னும் இவைகளை பதார்த்த சாரத்தில் முதலில் சொல்லப்பட்டிருக்கும், நவபதார்த்த, சப்ததத்துவ, ஷட்திரவிய, பஞ்சாஸ்திகாய மென்னும் அதிகாரங்களில் பார்த்துக்கொள்ளவும். (கூங)

வேறு.

94. கணம்வளி யுயிர்ப்புத் தோவ மிலவமே நாளி மூழ்த்த
மிணையினுள் பக்கந் திங்க ளிருதுவே யயன மாண்டு
பணையுகம் பூவம் பல்ல பவ்வமே யனந்த மீறாக்
கணமுதற் காலபேதஞ் சொல்லுறிற் கால மில்லை.

(இ - ள்) (வியவஹார காலத்தைப்பற்றி ஆராயுமிடத்து) கணம் - (பரமாணுவினது புடைபெயர்ச்சி அதாவது: அணு, தான் நின்ற க்ஷேத்திரத்தை கடந்து அடுத்த க்ஷேத்திரத்தில் சேரும் நேரமாகிய சீக்கிரகாலமென்னும்) ஸமயமும், வளி - (அந்த ஸமயம் அஸங்கியாதங் கொண்டதாகிய) ஆவளியும், உயிர்ப்பு - (ஆவளியஸங்கியாதங் கொண்டதாகிய) ப்ராணனும், தோவம் - (ப்ராணன் ஏழுகொண்ட) ஸ்தோகமும், இலவம் - (ஸ்தோகம் ஏழுகொண்ட) லவமும், நாளி - (லவம் முப்பத்தெட்டரை கொண்ட) நாழிகையும், மூழ்த்தம் - (நாழிகை இரண்டுகொண்ட) முகூர்த்தமும், இணையினுள் - (முப்பது முகூர்த்தங் கொண்ட இரவும், பகலுமாகிய இரண்டுஞ் சேர்ந்த) ஒரு திவஸமும், பக்கம் - (திவஸம் பதினைந்துகொண்ட) பக்ஷமும், திங்கள் - (அதன்மேல்) மாஸமும், இருது - இருதுவும், அயனம் - அயனமும், ஆண்டு - வருஷமும், பணை - (ஐந்து

வருடங் கொண்ட) பணையும், யுகம் - (அதன்மேல் எண்பத்துநான்கு நூறுயிரம் வருஷம் கொண்ட) பூர்வாங்கமும், பூவம் - (எண்பத்துநான்கு நூறுயிரம் பூர்வாங்கம்·கொண்ட) பூர்வமும், பல்லம் - (அசங்கியாதம் பூர்வங்கொண்ட) பல்லமும், பவ்வம் - (பல்லம் பத்துக்கோடாகோடி கொண்ட) கடலும், அனந்தம் - அதன்மேல் அனந்தமும், (ஆகிய இவைகள்) கணம் முதலீரு - ஸமயம் முதல் அனந்த மீருக, காலபேதம் - காலபேதமாகும்; சொல்லுறில் - இதற்குமேல் சொல்ல வேண்டுமாஞல், காலமில்லை - ஸமயத்துக்குக் குறைந்த காலமும் அனந்தத்துக்கு மீறினகாலமும் இல்லை, எ - று.

இந்தக் காலதிரவியத்தின் அம்சங்களும், மற்ற சீவ, புத்கல, தாம, அதர்ம, ஆகாசதிரவியங்களின் அம்சங்களும் இங்குச் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. இவைகளின் விரிவான விசேஷாம்ச குணங்களைப் பதார்த்தசாரம், ப்ராப்ரதத்திரயம் முதலிய பெருநூல்களில் கண்டுகொள்க. (கூச)

95. அருடெளி வார்வஞ் சிந்தை யழகிய நிகழ்ச்சி ஞானம்
பொருவரு தவத்தி ஞனும் புனிதனை முயிரைப் புக்கு
மருவிய வினைகள் மாற்ற மாசினைக் கழுவி வீட்டைத்
தருதலாற் புனித மாகுந் தன்மையாற் புண்ணிய மாமே.

(இ - ள்) அருள் - காருண்யத்தாலும், தெளிவு - ப்ரஸன்ன பாவத்தாலும் (அதாவது: ஸமத்வீபாவத்தாலும்), ஆர்வம் - குணுனுராகத்தாலும்: (அதாவது, இரத்னத்திரய பிரீதியாலும்), சிந்தை - தியானப்ரவிருத்தியாலும், அழகிய நிகழ்ச்சி- ப்ரசஸ்தப்ரவிருத்தியாலும், ஞானம் - சம்மியக்ஞான விருத்தியாலும், பொருவரு - உவமையில்லாத, தவத்தினுனும் - தபனு ப்ரயோகத்தினுலும், புனிதனும் - பவித்திரமாகிய பரிணும பாவபுண்ணியமுடையவனுன, உயிரை - ஆத்மனே, புக்கு - அடைந்து, மருவிய - சேர்ந்திரா நின்ற, வினைகள் - கர்மங்கள், மாற்றும் - முத்திவழிக்கு மாற்றமாகிய ஸம்சாரமென்னும், மாசினை - அழுக்கை, கழுவி - பரிஹரித்து, வீட்டை - மோட்சத்தை, தருதலால் - கொடுப்பதினுல், புனிதமாகும் - பவித்திரமாகிய பாவபுண்ணியமாகும், தன்மையால் - இத்தன்மையினுல், புண்ணியமாம் - திரவிய புண்ணியமாகாநின்றது, எ - று. (கூரு)

பாவமென்பது - சேதனுபரிணுமம்.

96. சாதமே புருச வேதஞ் சம்மத்தந் தக்க நாமங்
கோதமே லாய தேவர் மானவ ராயு வாழும்
போதமே பொருளோ டின்பம் புகழ்ச்சிமீக் கூற்ற மன்னர்க்
காதியாந் தன்மை நல்கி யறவா சாக்கு மன்னு.

(இ - ள்) மன்னு - வைஜயந்த மஹாராஜனே!, (திரவிய புண்ணியமானது) சாதமே - ஸாதவேதநீயமும், புருசவேதம் - புருஷவேதமும், சம்மத்தம் - ஸம்,

மியத்துவமும், தக்க நாமம் - சுபநாமகர்மமும், மேலாய கோதம் - உச்சைர் கோத்திரமும், வாழும் - வாழ்கின்ற, தேவர்மானவராயு - தேவாயுஷ்யம் மனுஷ்யாயுஷ்யங்களும், போதம் - ஞானமும், பொருளோடு - ஐஸ்வரியமும், இன்பம் - சௌக்கியமும், புகழ்ச்சி - யசஸும், மீக்கூற்றம் - மேன்பாடும், மன்னர்க்கு - அரசர்களுக்கு, ஆதியாம் - முதன்மையாகிய, தன்மை - சக்ரவர்த்தி தன்மையும், நல்கி - கொடுத்து, அறவரசு - தர்ம சக்ரத்துக்கு அதிபதியாகிய அரஹந்த பதவியையும் ஆக்கும் - உண்டாக்கும், எ - று. (கூகூ)

97. காதியுங் கருணை யின்மை யாதியாற் கட்டி நின்ற
வேதனை முதல வெல்லாம் வெந்துயர் விளைக்கும் பாவ
மோதிய விரண்டும் யோகி னுயிரினை யுறுத லூற்றாந்
தாதுறக் காய்ந்த போழ்திற் றானுறு நீரை யொத்தே.

(இ - ள்) காதியும் - காதி கர்மத்தினுடைய உதயத்தினாலும், கருணையின்மையாதியால் - அகாருண்யம் முதலியவைகளினாலும் (அதாவது: அகாருண்யம் அப்ரஸன்னபாவம், அகுணானுராகம், அத்தியானப்ரவர்த்தி, அப்ரசஸ்தப்ரவர்த்தி அஞ்ஞானவிருத்தி, அதபோனு ப்ரயோகமுமாகிய ஏழினாலும்), கட்டிநின்ற பந்தித்திராநின்ற, வேதனை முதலவெல்லாம் - அசாதவேதநீயம் முதலாகிய சமஸ்தத்தையும், வெம் - வெப்பம் பொருந்திய, துயர் - நரகாதி துக்கங்களையும், விளைக்கும் - உண்டுபண்ணும், (அஃதியாதெனின்) பாவம் - பாப பதார்த்தமாம், ஓதிய சொல்லப்பட்ட, இரண்டும் - புண்ணியபாப மிரண்டும், யோகின் - மனவசன காய பரிணாமங்களினால், உயிரினை - ஸம்ஸார சீவன்களை, உறுதல் - அடைதலானது தாது - இரும்பானது, உற - மிகுதியாக, காய்ந்த போழ்தில் - அக்கினியிற் காய்ந்த காலத்தில், உறு - அதனிடத்தில் அடைந்த, நீரையொத்து - ஜலத்துக்கு ஸமானமாகி, ஊற்றாம் - ஆஸ்ரவமாகும், எ - று.

(தான் - அசை). (கஎ)

98. ஈனமே யதிக மீரா பதகமே சாம்பராயம்
ஞானமே ஞான மின்மை நல்லவாம் புண்ணிய பாவந்
தேனுலா மலங்கல் வேந்தே தவியமே பாவமென்றா
தானெலா வுயிர்க்கு மாகு மூற்றிவை தாம்பத் தாரும்.

(இ - ள்) தேன் - மதுவானது, உலாம் - வியாபித்திராநின்ற, அலங்கல் - மாலையையணிந்த, வேந்தே - வைஜயந்த மகாராஜனே!, ஊற்று - ஆஸ்ரவமானது. ஈனமே - ஹீநாஸ்ரவமென்றும், அதிகம் - அதிகாஸ்ரவமென்றும், ஈராபதகம் - ஈர்யாபதாஸ்ரவமென்றும், சாம்பராயம் - கஷாயாஸ்ரவமென்றும், ஞானம் - ஞானாஸ்ரவமென்றும், ஞானமின்மை - அஞ்ஞானாஸ்ரவமென்றும், நல்லவாம் - நன்மை

யாகிய, புண்ணியம் - புண்ணியாஸ்ரவமென்றும், பாவம் - பாபாஸ்ரவமென்றும், தவியம் - திரவியாஸ்ரவமென்றும், பாவம் என்று - பரிணாமாஸ்ரவமென்றும், எலா வுயிர்க்கும் - ஸம்சார சீவன்களெல்லாவற்றிற்கும், ஆகும் - ஆகாநின்ற, இவை தாம் - இவ்வாஸ்ரவங்கள், பத்தாகும் - பத்து விதங்களாகும், எ - று.

இன்னும் விரிவாக இவ்வாஸ்ரவ பேதங்களை பதார்த்த சாரத்தில் கண்டு கொள்ளலாம். தான் - அசை. (கஅ)

99. கோபனஞ் சமிதி தம்மஞ் சிந்தையீ ராற டக்கந்
தாபனம் பரிசை வெல்லுந் தன்மையான் முனிவ னின்றால்
வேபமொன் றிலாத சிந்தை வினைவழி விலக்கி நிற்குந்
தீபநின் றகத்தைச் சேரு மிருளுண்டோ செறிப்பி தாமே.

(இ - ள்) கோபனம் - திரிகுப்தியும், சமிதி - பஞ்சசமிதியும், தம்மம் - தச தர்மமும், சிந்தை - த்வாதசானுப்பிரேட்சையும், ஈராறடக்கம் - த்வாதசஸம்யமும், தாபனம் - த்வாதசதபமும், (உடையவராய்), பரிசை - த்வாவிம்சதி பரீஷஹங்களை, வெல்லும் தன்மையால் - ஜெயிக்கும் ஸ்வபாவமுமாகிய இவற்றோடு, முனிவன் - ஒரு முனீஸ்வரன், நின்றால் - (வீதராக சுத்தோப யோகமாகிய தியானத்தில்) நின்றால், வேபமொன்றிலாத - சலனமில்லாத, சிந்தை - அந்தத் தியானமானது, வினைவழி - கருமங்கள் வரும் வழியை, விலக்கி நிற்கும் - தடைசெய்து நிற்கும், தீபநின்ற அகத்தை - தீபமானது இராநின்ற விடத்தில், சேருமிருளுண்டோ - அந்தகாரம் சேருமோ? (சேராது), செறிப்பு - ஸம்வரபதார்த்த சேர்க்கையானது, இதாம் - இதுவாம், எ - று.

குப்தி, சமிதி, தர்மம், அனுப்ரேட்சை, தவாதச ஸமயமம ஆகியவைகளின் விவரங்கள் இப்புராணத்தில் 13-வது சமவசரண சருக்கத்தில் மேரு மந்தரர்கள் தபத்திலும், த்வாதசதபசு நான்காவது பூர்ண சந்திரன் அரசியற் சருக்கத்தில் சிம்மசந்திரர் தபத்திலும், பரீஷஹங்களின் விவரம் 7-வது சக்கராயுதன் முக்திச் சருக்கத்தில் சக்கராயுதன் தபத்திலும் விளங்கும். (கக)

100. நின்றவந் தத்தின் மூன்று நினைப்புணர் வுதிர்ப்பை யாக்கு
முன்புசென் றுயிர்க்க ணின்ற வினையின்கண் மூழ்த்த மாதி
நின்றவத் திதியி னோடு பயன்செய்யு மாற்ற லூக்கு
மொன்றிய வகையி னாலே கணந்தொறு முருவத் தாரோய்.

(இ - ள்) உருவம் - ரூபம் பொருந்திய, தாரோய் - மாலையை யணிந்திரா நின்ற வைஜயந்த மகாராஜனே! நின்ற - முன்பாடலில் சொல்லியிராநின்ற, அந்தத்தின் மூன்று - அந்தியத்தில் உள்ள த்வாதசஸம்யமம் த்வாதசதபம் பரீஷஹஜயம் ஆகியவைகளும், நினைப்பு - தருமத்தியான சுக்கிலத்தியானங்

களும், உணர்வு - ஸம்மியக்ஞான உத்க்ருஷ்டமும், உதிர்ப்பையாக்கும் - நிர்ஜரையை உண்டாக்கும், (அது) முன்பு - ஆதியில், சென்று - வந்து, உயிர்க்கண் - ஆத்மனிடத்தில், நின்ற - நிலைபெற்ற, வினையின்கண் - ஞானுவாரணுதி அஷ்ட கர்மங்களினிடத்தே உள்ளதான, மூழ்த்தமாதி - ஒரு முகூர்த்தம் முதலாக, நின்ற- பொருந்தி யிராநின்ற, அத்திதியினேடு - அந்தந்த கருமஸ்திதிகளோடு, பயன் செய்யும் - பலனைத்தரும், ஆற்றல் - ஸத்துவத்தை, ஒன்றியவகையினுலே - ஞானதியானத்தில் பொருந்திய விதாயத்தினுலே, கணந்தொறும் - ஸமயந்தோறும், உய்க்கும் - நீக்கி வெளிப்படுத்தும், எ - று.

நிர்ஜரையின் விவரத்தை விரிவாக பதார்த்தஸாரத்தில் முதல் நவபதார்த்தாதிகாரத்தில் கண்டுகொள்க. (௧00)

101. அனந்தமா மணுக்கள் கூடி யங்குலி யயங்கம் பாகிற்
குணங்களாற் செறியக் கட்டிக் குணங்களோ டாற்றன் மூன்றிற்
றணந்திடா தயங்க லோக பதேசமாஞ் சமய கால
மனந்தமா லோக மெல்லாம் வர்க்கணு ரூபத் தாலே.

(இ - ள்) அனந்தமாம் - அநேகமாகிய, அணுக்கள்கூடி - பரமாணுக்கள் சேர்ந்து, (திரவ்விய ஸம்பத்தென்று சொல்லப்பட்டு), அங்குலி அயங்கம்பாகில் - அங்குலி அஸங்கியாத ஏகபாக க்ஷேத்திரத்தில், (க்ஷேத்திர ஸம்பத்தென்று சொல்லப்பட்டு), குணங்களால் - (ஸ்நிக்த, ரூக்ஷ) குணங்களால், செறிய - நெருங்கும்படி, கட்டி - பந்திக்கப்பட்டு, குணங்களோடு - (வர்ணுதி) குணங்களோடு, ஆற்றல் மூன்றில், (ஸ்வபாவ, உபலப்தி, ஸம்ஸ்காரமென்னும்) திரிசக்திகளினின்றும், தணந்திடாது - நீங்காமல், (பாவ ஸம்பத்தென்று சொல்லப்பட்டு), அயங்க லோகபதேசமாம் - (நீங்காமல் நிற்கும் கால அளவின் உத்கிருஷ்டஸ்திதியினுல்) அஸங்கியாத லோகப்பிரதேச காலமும், சமய காலம் - (ஜகன்னியஸ்திதியினுல்) ஒரு சமயமும் உடையவாய் (கால சம்பத்து என்று சொல்லப்பட்டு), லோகமெல்லாம் - லோக முழுமையும், வர்க்கணுரூபத்தால் - கார்மணவர்க்கணை யென்று சொல்லப்பட்ட இவ்விதமான கர்மரூபத்தாலே (அதாவது கர்மப்பிரகிருதிகளினுலே), அனந்தமாம் - அனந்தங்களாகும், எ - று. (௧0௧)

102. யோகமே பாவந் தானு முடனின்ற வுயிரின் யோகின்
வேகந்தான் மூல மாகி விகற்பமாய் விரிந்த கந்தம்
யோகத்தா லுயிர்ப்ப தேசத் தொழிவின்றி யொப்பச் சென்றுற்
பாகமுந்தி திதியு மோக பாவத்தாற் பந்த மாமே.

(இ - ள்) யோகமேபாவந்தானும் - மநவசனகாயபாவபரிணுமம், உடனின்ற சேர்ந்திராநின்ற, உயிரின் - ஆத்மனுடைய, யோகின் - அந்தமன வசனகாயத்தி

னுடைய, வேகந்தான் - தீவ்ரமானது, மூலமாகி - காரணமாகி, விகற்பமாய் - நானுவிகற்பங்களாய், விரிந்த - விசாலித்திராநின்ற, கந்தம் - முன்கவியில் சொன்ன ப்ரகிருதிபந்தமானது, யோகத்தால் - மன வசனகாயத்தால், உயிரப்ப தேசத்து - ஆத்மப்ரதேசத்தில், ஒழிவின்றி - இடைவிடாமல், ஒப்பச்சென்றால் - (பாலும் நீரும் கலந்ததுபோல்) ஒரு தன்மையாக பந்திக்கப்பட்டால், (அது ப்ரதேச பந்தமென்று சொல்லப்பட்டு), மோகபாவத்தால் - மோகநீயபரிணமத்தால், பாக பந்தமும் - அனுபாகபந்தமும், திதிபந்தமும்-ஸ்திதிபந்தமும், ஆம் - ஆகும், எ - று.

ஈற்றிலுள்ள பந்தமென்பது தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. ()

103. ஏழுமூன் றிரண்டு பத்தா லெறிந்தன கோடா கோடி
யாழிக ளாகு மான்ற நிலையல்ல தந்த மூழ்த்தம்
மோழைமோ வத்தி னுகரு முதல்மும்மை யீற்றி னுக்கு
மாழிய நாம கோதத் தாயுமுப் பத்து மூன்றே.

(இ - ள்) மோழை - மடமையாகிய, மோவத்தினுக்கும் - மோஹநீய கர்மத்திற்கும், முதல் - முதலிலுள்ள, மும்மை - ஞானுவரணீயம் தரிசனுவரணீயம் வேதநீயம் ஆகிய மூன்றிற்கும், ஈற்றினுக்கும் - அந்தியத்திலுள்ள அந்தராய கர்மத்திற்கும், ஆழிய - பெரிதாகிய, நாமம் - நாமகருமத்திற்கும், கோதத்து - கோத்திர கர்மத்திற்கும், ஆன்றநிலை - உத்கிருஷ்ட ஸ்திதிபந்த நிலையானது, (முறையே) ஏழுமூன்று இரண்டு - ஏழையும் மூன்றையும் இரண்டையும், பத்தால் எறிந்தன - பத்தால் பெருக்கியனவாகிய, கோடாகோடி ஆழிகளாகும் - கோடா கோடி கடல்களின் காலமாகும் [அதாவது 70 கோடாகோடி கடல்களும் முப்பது கோடாகோடி கடல்களும் இருபது கோடாகோடி கடல்களும் ஆகும். எப்படியெனில் மோஹநீய கருமத்திற்கு 70 கோடாகோடி கடற்காலமும், ஞானுவரணீயம், தரிசனுவரணீயம், வேதநீயமென்னும் மூன்று கருமத்திற்கும் ஈற்றிலுள்ள அந்தராய கருமத்திற்கும் 30 - கோடாகோடி கடற்காலமும், நாமகருமத்திற்கும் கோத்திர கருமத்திற்கும் 20 கோடாகோடி கடற்காலமும் ஆகும்], ஆயு - ஆயுஷ்ய கருமத்திற்கு, முப்பத்துமூன்று - (உக்கிருஷ்ட ஸ்திதியானது) முப்பத்துமூன்று கடற் காலமேயாகும், அல்லது - இவையல்லாததாகிய ஜகன்னிய ஸ்திதிபந்தமானது, அந்த மூழ்த்தம் - ஓர் அந்தர் முகூர்த்தகாலமாகும், (மத்திம ஸ்திதியானது பலப் பிரகாரமாகும்), எ - று.

இச்செய்யுள் நிரனிரைப்பொருள்கோளணியாக வமைந்தது. (க0௩)

104. நஞ்சென வுறைக்கும் பாவம் நல்வினை நாவி லிட்ட
வஞ்சுவை யமிர்தம் போல வின்பத்தை யாக்கு மாற்ற

புஞ்சிய பந்த சந்த வுதயமோ டுதிர்ச்சி யாக்கி
யஞ்சினா லுதயஞ் செய்திட் டப்பய னாக்கு மன்னா.

(இ - ள்) மன்னா - வைஜயந்த மகாராஜனே!, பாவம் - பாபானுபாகமானது, நஞ்சென - விஷத்தைப்போல, உறைக்கும் - எரிச்சலாகி சீவன்களுக்கு துக்கத்தைக் கொடுக்கும், நல்வினை - புண்ணிய வினையினனுபாகமானது, நாவில் - நாவிலே, இட்ட - இடப்பட்ட, அம் - அழகிய, சுவை - ரஸம்பொருந்திய, அமிர்தம்போல - அமிர்தத்தைப்போல, இன்பத்தையாக்கும் - சௌக்கியத்தை யுண்டு பண்ணும், ஆற்ற - மிகுதியாக, புஞ்சிய - சேர்ந்த, பந்தம் - பந்தமும், சந்தம் - ஸத்துவமும், உதயமோடு - உதயத்தோடு, உதிர்ச்சியாக்கி - உதிரணையையும் செய்து, அஞ்சினால் - (திரவிய, க்ஷேத்திர, கால; பவ, பாவமென்னும்) ஐந்தினால், உதயஞ்செய்திட்டு - உதயத்தைக்கொடுத்து, அப்பயன் - அந்தந்தக்கர்மபலனை, ஆக்கும் - செய்விக்கும், எ - று.

பந்த, ஸத்துவ, உதய, உதிரணைகளின் விவரங்களை பதார்த்த ஸாரத்தில் முதல் அதிகாரத்திலும், இரண்டாவது அதிகாரத்திலும் விரிவாகக் கண்டு கொள்க. (௧0௪)

105. யோகமே பாவந் தம்மா லுயிரினை யார்த்த கம்மம்
யோகமே பாவந் தாம்வந் துயிரினை யுற்ற போழ்தின்
யோகமே பாவந் தாமு முயிரின்கண் விடுதல் வீடாம்
யோகமே பாவந் தம்மு ளுவந்தெழு மரச வென்றான்.

(இ - ள்) அரச - வைசயந்த மஹாராஜனே!, யோகமே பாவந்தம்மால் - சுபாசுபமனவசனகாய பரிணாமங்களினால், உயிரினை - ஆத்மனை, கம்மம் - கர்மங்கள், ஆர்த்த - பந்தித்த, யோகமேபாவந் தாம்வந்து - சுத்தநிச்சயமாகிய மனவசனகாய பரிணாமமானது வந்து சேர்ந்து, உயிரினை - ஆத்மனிடத்தில், உற்ற போழ்தில் - அடைந்த காலத்தில், யோகமே பாவந்தாமும் - சுபாசுபமனவசனகாய பரிணாமமானது, உயிரின்கண் - ஆத்மனிடத்தினின்றும், விடுதல் - விட்டு நீங்குதல், வீடாம் - பாவமோக்ஷமாகும், யோகமே பாவந்தம்முள் - அப்படிப்பட்ட (பாவமோக்ஷமாகிய) சுத்தநிச்சய மனவசனகாய பரிணாமங்களில், உவந்து - சந்தோஷித்து, எழும் - செல்வீராக, என்றான் - என்று ஸ்வயம்பு நாமதீர்த்தங்கரர் அருளிச்செய்தார், எ - று. (௧0௫)

106. வினையற விட்ட போழ்தின் வெடித்தவே ரண்டம் போல
நினைவருங் குணங்க ளெட்டு நிறைந்துமே லோக்கி யோடி
முனிவரு முலக மூன்று மிறைஞ்சவூ வுலகி னுச்சி
கனைகழ லரச நிற்றல் கைவல மாகுங் கண்டாய்.

(இ - ள்) கனை - சப்தியாநின்ற, கழல்-வீரகண்டயத்தை அணிந்த, அரச - வைஜயந்த மஹாராஜனே !, (இன்னும), வினை - ஞானவரணாதி அஷ்டகருமங்கள், அற - முழுமையும் நீங்க, விட்டபோழ்தின் - ஆத்மனை விட்டு நீங்கினகாலத்தில், வெடித்த - வெடித்துநீங்கிய, ஏரண்டம்போல - ஆமணக்கங்கொட்டையைப் போல, நினைவரும் - நினைத்தற்கரிய, குணங்களெட்டும் - அனந்த ஞானாதி அஷ்ட குணங்களும், நிறைந்து - சம்பூர்ணமாகி, மேனோக்கி - ஊர்த்துவகதி ஸ்வபாவமாகி, ஓடி - சென்று, முனிவரும் - முனீஸ்வரர்களும், உலக மூன்றும் - மூன்றுலகத்தி லுள்ள ஞானிகளும், இறைஞ்ச - வணங்க, மூவுலகினுச்சி - மூன்றுலோகத்துக் கும் உச்சியாகிய தனுவாதாக்கிரத்தில், நிற்றல் - நிலையாயிருக்குந்தன்மை, கைவல மாகும் - கைவல்லியமாகிய திரவியமோட்சமாகும், எ - று.

கண்டாய் - விஞவொடுசாரா த ஒருவகை அசை. (கOசு)

107\. உரைத்தவிப் பொருளின் மெய்ம்மை யுணர்வது நல்ல ஞானம்
புரைபபறத் தெளிதல் காட்சி பொருந்திய விரண்டு மொன்றிற்
றரித்தனல் லொழுக்க மாகுஞ் சாற்றிய மூன்று மொன்றின்
விரைபொலி தாரோய் வீட்டின் மெய்ந்நெறி யாவ தாமே.

(இ - ள்) விரை - வாசனையுள்ள, பொலி - அழகு விளங்குகிற, தாரோய் - மாலையை யணிந்திராநின்ற வைஜயந்த மஹாராஜனே !, உரைத்த - சொல்லப் பட்ட, இப்பொருளின் - இந்தஜீவாதி பதார்த்தங்களினது, மெய்ம்மை - உண் மையை, உணர்வது - அறிவது, நல்லஞானம் - ஸம்யகஞானமாம், புரைப்பற - சந்தேகமின்றி, தெளிதல் - தெளிவது, காட்சி - ஸம்யக்தர்சனமாகும், பொருந் திய - சேர்ந்திராநின்ற, இரண்டும் - இந்த சம்யக்ஞான தர்சனங்க ளிரண்டை யும், ஒன்றிற்றரித்தல் - ஒரு தன்மையிற் கொண்டு அனுஷ்டித்தல், நல்லொழுக்க மாகும் - சம்யக் சாரித்திரமாகும், சாற்றிய - சொல்லப்பட்ட, மூன்றும் - (ஸம் யக்தர்சன, ஞான, சாரித்திர மென்னும் இந்த) இரத்னத்திரயங்கள், ஒன்றின் - ஆத்மனிடத்தில் பொருந்துமேயாகில், வீட்டின் - மோட்சத்திற்கு, மெய் - உண் மையாகிய, நெறி - மார்க்கம், ஆவதாம் - உண்டாவதாம், எ - று.

'அறிவு காட்சியதா' என்ற 69-வது பாடல் முதல் 'உரைத்தவிப்பொரு ளின் மெய்ம்மை' என்னும் இந்த 107-வது பாடல் வரையில், நவபதார்த்த ஸ்வரூப மும், மோட்சமார்க்கமும் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இன்னும் இவற்றை விரிவாகத் தெரியவேண்டின் பதார்த்தசார கிரந்தத்தில் பார்த்துக்கொள்க. இன்னும் ப்ராப்ரதத்திரயத்திலும், சர்வார்த்த ஸித்தியிலும், கோமடஸாரத்திலும் இவை விரித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளிலும் இவற்றின் விவரங்களைப் பார்த்துக் கொள்ளலாம். (கOஎ)

## அரசன் நகருக்குத் திரும்புதல்.

108. எழுதரு பருதி முன்ன ரிறைஞ்சிய கமலம் போலத்
தொழுதெதிர் முழுதுங் கேட்டுப் போய்நகர்த் துன்னிச் சுற்ற
முழுதையு மழைத்து முத்திக் கரசனாய் முயல்வ னென்று
பழுதிலாப் புதல்வன் றன்மேற் பாரைவைத் தினைய சொன்னான்.

(இ - ள்) எழுதரு - உதயமாகிய, பருதிமுன்னர் - சூரியனுக்கெதிரிலே, இறைஞ்சிய - மலர்ந்து வணங்கிய, கமலம்போல - தாமரைப்பூப் போல, எதிர் - ஸ்வயம்பு நாமதீர்த்தங்கரருக்கெதிரில், தொழுது - (வைஜயந்த மகாராஜன்) வணங்கி, முழுதும் - ஜீவாதிபதார்த்தங்கள் முழுதும், கேட்டு - அவர் சொல்லக் கேட்டு, போய் - அங்கு நின்றுபோகி, நகர் - நகரத்தில், துன்னி - (தனது அரண் மனையைச்) சேர்ந்து, சுற்றமுழுதையும் - பந்துக்களனைவரையும், அழைத்து - (சமீபத்தில்) வரவழைத்து, முத்திக்கு - மோக்ஷத்திற்கு, அரசனாய் - எஜமானாக, முயல்வன் - (இனிதபத்தில்) முயற்சி செய்வேன், என்று - என்று தெரிவித்து, பழுதிலா - குற்றமில்லாத, புதல்வன்றன்மேல் - ஜேஷ்டபுத்திரனாகிய சஞ்சயந் தன்மேல், பாரை - இந்த பூமி ராஜ்யத்தை, வைத்து - ஸ்தாபித்து, இனைய - இத்தன்மையானவைகளை (பின் பாடல்களில் வரும் விஷயங்களை), சொன்னான் - அந்தக் குமாரனுக்குக் கூறினான், எ - று. (கO அ)

109. இளமையு மெழிலும் வானத் திடுவிலி னீண்ட மாயும்
வளமையுங் கிளையும் வாரிப் புதியதன் வரவு போலும்
வெளியிடை விளக்கின் வீயு மாயுவு மென்று வீட்டுக்
குளபக லூக்கஞ் செய்வா ருணர்வினாற் பெரிய நீரார்.

(இ - ள்) உணர்வினால் - ஞானத்தினால், பெரியநீரார் - பெரிதாகிய குண வந்தர்கள், இளமையும் - பால்யமும், எழிலும் - அழகும், வானத்து - ஆகாயத்தில், இடு - இடப்பட்ட, நீண்ட - நீட்சியாகிய, வில்லின் - இந்திர தனுஸைப்போல, மாயும் - நிலையின்றிக்கெடும், வளமையும் - வளப்பமாகிய செல்வமும், கிளையும் - பந்துத் தன்மையும், வாரிப்புதியதன் வரவு போலும் - மழையினால் வரப்பட்ட புது வெள்ளத்துக்கு ஒப்பாகும், ஆயுவும் - ஆயுஷ்யமும், வெளியிடை - (காற்றின் மறைவில்லாத) வெளியிலே வைக்கப்பட்ட, விளக்கின் - தீபத்தைப்போல், மாயும் - மாய்ந்துபோகும், என்று - (இவ்வாறு ஸம்ஸார ஸ்வரூபம் அனித்தியம்) என்று நினைத்து, உளபகல் - தங்களுக்குண்டாகிய ஆயுஷ்ய நாளுக்குள்ளே, வீட்டு - மோட்சத்திற்கு, ஊக்கம் செய்வார் - (ஸர்வசங்க பரித்தியாகமாகிற தபசைக்கொண்டு சுத்தோப யோகத்திற்கு) முயற்சி செய்வார்கள், எ - று. (கOகூ)

110. கடல்களும் மலையுங் கானும் வானமுங் கடல்கள் சூழ்ந்த
திடர்களும் கயமு மாறும் நாளிகைப் புறவுந் தீராப்
படுதுயர் நரக மேழும் நிகோதமும் பதேச முன்ன
ருடல்கிடந் தழிந்தி டாத விடமில்லை யுணரி னென்றான்.

(இ - ள்) உணரின் - ஆராய்ந்தறியுமிடத்தில், கடல்களும் - (அஸங்கியாத) ஸமுத்திரங்களும், மலையும் - (மஹாமேரு முதலான) பர்வதங்களும், கானும் - (தேவாரண்ணியம் பூதாரண்ய முதலான) வனங்களும், வானமும் - தேவலோகமும், கடல்கள் சூழ்ந்த - ஸமுத்ரங்களினால் சூழப்பட்ட, திடர்களும் - (அஸங்கியாத) த்வீபங்களும், கயமும் - (பத்மை முதலாகிய) தடாகங்களும், ஆறும் - (கங்கா முதலாகிய) நதிகளும், நாளிகை - (த்ரஸ) நாளிகையும், புறவும் - நாளிகாபாஹ்யமும், படு - உண்டாகிய, துயர் - துக்கமானது, தீரா - நீங்காத, நரகமேழும் - சப்த நரகங்களும், நிகோதமும் - நிகோதமும், (ஆகிய) பதேசம் - இப்படிப்பட்ட லோகப்ர தேசங்களிலே, முன்னர் - இதற்கு முன்னாலே, உடல் கிடந்து - (நமது ஆத்மனாலே எடுக்கப்பட்ட) சரீரம் கிடந்து, அழிந்திடாத - நாசத்தை யடையாத, இடம் - க்ஷேத்ரமானது, இல்லை - இல்லாததாகும், என்றான் - என்று கூறினான், எ - று. (கக0)

111. வெருவுறு துயரந் துய்த்து விலங்கினுண் மயங்கும் போழ்தும்
மருவியாங் கருவின் மக்கள் யாக்கையின் வருந்தும் போழ்தும்
எரியன நரகின் மூழ்கி யெழுந்துவீழ்ந் தலறும் போழ்தும்
அருகன சரண மல்லா லரண்பிறி தில்லை கண்டாய்.

(இ - ள்) வெருவுறு - பயத்தையே ஸ்வபாவமாகவுடையும், துயரம் - துக்கங்களை, துய்த்து - அனுபவித்து, விலங்கினுள் - விலங்கு கதியில், மயங்கும்போழ்தும் - மயங்குகின்ற காலத்தும், கருவின் - கருப்பமாகிற, ஆங்கு - வயிற்றறையென்னும் அவ்விடத்தில், மருவி - சேர்ந்து, மக்கள் யாக்கையின் - மனித சரீரத்தில், வருந்தும்போழ்தும் - வருந்துகின்ற காலத்திலும், எரியன, அக்கினிக்குச் சமானமாகிய, நரகின் - நரகத்திலே, மூழ்கி - வீழ்ந்து, எழுந்து வீழ்ந்து - அதினின்றும் ஆகாயத்தில் கிளம்பித் தலைகீழாக வீழ்ந்து, அலறும்போழ்தும் - அழுகின்ற காலத்திலும், அருகன் - அருகத் பரமேஸ்வரனது, சரணமல்லால் - பாதமல்லால், அரண் - துணையாவது, பிறிது - வேறொன்றும், இல்லை - கிடையாது, எ - று.

அருகன - இதில், அ - சாரியை, கண்டாய் - அசை. (ககக)

112. இறந்தநம் பிறவி மேனா ளெண்ணுதற் கரிய தம்முட்
கறந்துகொண் டுயிரை யுண்ணுங் காலன்வாய்ப் பட்ட போழ்தும்
பிறந்துநாங் கதிக ளான்கிற் பெருந்துய ருழக்கும் போழ்துந்
துறந்திடா வினைக ளன்றித் துணைபிறி தில்லை கண்டாய்.

(இ - ள்) மேனுள் - முற்காலத்தில், இறந்த - ஜன்மமெடுத்திறந்த, நம் - நம்முடைய, பிறவி - பிறப்புக்கள், எண்ணுதற்கு - இத்தனையென் றெண்ணுதற்கு, அரிய - முடியாத தன்மையையுடையனவாம், தம்முள் — அப்படிப்பட்ட அனந்தம் பிறப்புக்களில், கறந்து - சரீரத்தினின்று நீக்கி, கொண்டு - கைக்கொண்டு, உயிரை - ஆத்மனை, உண்ணும் - விழுங்குகின்ற, காலன்வாய் - (காலத்திரவிய மென்னும்) அந்திய காலனுடைய வாயிலே, பட்டபோழ்தும் - அகப்பட்ட காலத்திலும், கதிகணுன்கில் - சதுர்க்கதியில், நாம் - ஆத்மர்களாகிய நாம், பிறந்து - மறுபடியும் மறுபடியும் பிறந்து, பெரும் - பெரிதாகிய, துயர் - இப்படி ஜனனமரண முதலாகிய அநேக துன்பங்களில், உழக்கும்போதும் - வருந்தும்போதும், துறந்திடா - நம்மைவிட்டு நீங்காத, வினைகளன்றி - கருமங்களேயல்லாமல், துணை - ய, பிறிதில்லை - வேறொன்றுமில்லை, எ - று. (கக௨)

113. காதிக ணன்கும் வீய்ந்த கணத்துளே காணற் பாடி
லாதியாய்ப் பிறிதி னுய வொன்றிடு மனந்த நான்மை
யோதினோர் வகையி னுற்ற லுயிரினுன் முடிந்த முன்னோ
காதியா மேகஞ் சூழ்ந்த கதிரென நின்ற கண்டாய்.

(இ - ள்) பிறிதினுய - (ஆத்மனுடைய) விபாவத்தன்மையாலாகிய, காணற்பாடில்லாதியாய் - தர்சனுவரணீய முதலாகிய, காதிகணுன்கும் - நாலுவிதமான காதி கருமங்களும், வீய்ந்தகணத்துளே - (ஆத்மனது சுத்த ஸ்வபாவத்தன்மையால்) நீங்கின காலத்தில், அனந்தநான்மை - அனந்த சதுஷ்டயங்கள், ஒன்றிடும் - ஆத்மனிடத்தில் சேரும், ஓதின் - சொல்லுமிடத்தில், ஓர் - ஒப்பற்ற, வகையின் - விதாயத்தினுல், ஆற்றல் - இந்த அனந்த சதுஷ்டய சக்தியானது, உயிரினுல் - ஆத்மனுலேயே, முடிந்த - செய்து முடிக்கப்பட்டது, முன்னோ - (அப்படிப் பெருததற்கு) முன்னம், காதியாம் - காதிகர்மமாகிற, மேகம் - மேகத்தினுல், சூழ்ந்த - மூடப்பட்ட, கதிரென - சூர்யனைப்போல, நின்ற - நின்றதாகும், எ - று.

கண்டாய் - ஓர்வகைச் செய்யுளசை.

காதிகர்மம் நான்காவன :—ஞானுவரணீயம், தர்சனுவரணீயம், மோஹநீயம், அந்தராயம் என்பன. அனந்த சதுஷ்டயம் நான்காவன : அனந்தஞானம், அனந்த தர்சனம், அனந்த சுகம், அனந்த வீர்யம் என்பனவாம். (ககா)

114. குற்றமோர் மூன்று நான்கு கதிகளிற் பொறிக ளைந்திற்
பற்றிய காய மாறிற் பழவினைத் திரிவோ ரேழிற்
சுற்றிய வினைக ளெட்டிற் ருேற்றிய சுழற்சி கண்டாய்
கற்றவர் கடக்க வெண்ணு மாற்றிது கடிகொ டாரோய்.

(இ - ள்) கடி - வாசனையை, கொள் - கொண்ட, தாரோய் - மாலையையணிந்திராநின்ற சஞ்சயந்தனே !, கற்றவர் - கல்வியறிவுடைய ஸம்யக் திருஷ்டி

கன், கடக்க எண்ணும் - நீங்கிச்செல்ல நினைக்கும், மாற்றிது - மாற்றமாகிய இந்த ஸம்ஸார சுழற்சியானது, குற்றமோர் மூன்று - (ராக, த்வேஷ, மோஹமென்னும்) முக்குற்றங்களால், நான்குகதிகளில் - சதுர்க்கதிகளில், பொறிகளைந்தில் - பஞ்ச இந்திரியங்களில், பற்றிய - சேர்ந்த, காயம் ஆறில் - (பிருத்வி, அப்பு, தேயு, வாயு, வனஸ்பதி, த்ரஸ, காயமென்னும்) ஷட்சீவ நிகாயங்களில், பழவினைத் திரிவோ ரேழில் - சப்த பரிவர்த்தனைகளில், சுற்றிய - சேர்ந்திராநின்ற, வினைகளெட்டில் - அஷ்ட கர்மங்களில், தோற்றிய - உண்டாகிய, சுழற்சி - சுழற்சியாகும், எ - று.

பஞ்சபரிவர்த்தனைகளோடு ரூபம், நாமம் என இரண்டு சேர்ந்து ஏழு பரி வர்த்தனைகளாகும்; இதன் விவரம் பதார்த்தசாரம், அஷ்ட பதார்த்தம் முதலிய கிரந்தங்களில் தெளிவாகக் காணப்படும். கண்டாய் - அசை. (கக௪)

115\. எழுகயி றகன்று மீரேழ் கயிறுயர்ந் திடையி லொன்றாய்
முழுவென விடையி லைந்தாய் முடியொன்றா யடியி லேழா
யழிவிலா வுலகிற் றோற்ற மனந்தமாம் படிப்ப தேச
மெழுவெனத் திரண்ட தோளா யிறந்தநாட் பிறந்த வென்றான்.

(இ - ள்) எழுவென - ஸ்தம்பம்போல், திரண்ட - திரட்சிபெற்ற, தோளாய் - புயத்தையுடைய குமாரனே!, எழுகயிறகன்று - (உத்தரதக்ஷிண வியாஸமானது) சப்தரஜ்ஜுப்பிரமாணமாகி, ஈரேழ் கயிறுயர்ந்து - பதினாலுகயிறுன்னதமாகி, இடையில் - உயரத்தின் பாதியாகிய மத்தியமலோகத்தில், ஒன்றாய் - (பூர்வாபர வியாஸம்) ஒரு ரஜ்ஜுவாகி, முழுவென - (இதற்குமேல்) மத்தளம்போன்ற, இடை யில் - ஊர்த்துவலோக மத்தியமாகிய விடத்தில் (அதாவது மத்திம லோகத்தினின் றும் மூன்றரைக்கயிறுயர்ந்த பிரம்ம கல்பத்துச்சியில்), ஐந்தாய் - (பூர்வாபரவியா ஸம்) பஞ்சரஜ்ஜுவாகி, முடி - அந்த லோகத்தினுடைய உச்சியில், (பூர்வாபர வியாஸம்) ஒன்றாய் - ஒரு கயிறாகி, அடியில் - அதோலோகத்தின் அடியிலே, ஏழாய் - (பூர்வாபரவியாஸம்) ஏழுகயிறாகி, படிப்பதேசம் - (இந்தக் கணக்கினால் முந்நூற்று நாற்பத்துமூன்று ரஜ்ஜுப்ரமாணமாகிய) லோகப்ரதேசமென்னும், அழிவில்லா - கெடாத, உலகின்தோற்றம் - இந்த வுலகத்தினுடைய தோற்றத் தில், இறந்தநாள் - நாம் சரீரத்தை விடுத்தநாள்களும், பிறந்தநாள் - வேறொரு சரீரத்தை எடுத்துப்பிறந்த நாள்களும், அனந்தமாம் - எண்ணிலவாம், என்றான் - என்று வைஜயந்தன் சொன்னான், எ - று.

நாள் இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (ககரு)

116\. என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப்
புன்புறந் தோலின் மூடி யழுக்கொடு புழுக்கள் சோரு
மொன்பது வாயிற் றாய வூன்பயில் குரம்பை தன்மே
லன்பறா மாந்தர் கண்டா யறிவினாற் சிறிய நீரார்.

(இ - ள்) உதிரம் தோய்த்து - இரத்தத்தை ஊறவைத்து, நரம்பில் - நரம்புகளினால், என்பினை - எலும்புகளை, பின்னி - தொடுத்துக்கட்டி, இறைச்சி - மாமிசத்தை, மெத்தி - அப்பி (அதாவது: பூசி), புறம் - மேலே, புன் - அற்ப மாகிய, தோலின் - சர்மத்தினால், மூடி - போர்த்து, அழுக்கொடு - மலங்களோடு, புழுக்கள் - கிருமிகளும், சோரும் - சொரியும், ஒன்பது வாயிற்றாய - நவத்துவாரங்களையுடையதாகிய, ஊன் பயில் - நிணம் சேர்ந்த, குரம்பைதன்மேல் - (அசுசித்வத்தையுடைய) சரீரமாகிய குடிசையின்பேரில், அன்பு - ஆசை, அறா - நீங்காத, மாந்தர் - மனுஷ்யர்கள், அறிவினால் - ஞானத்தினால், சிறியரோர் - அற்ப குணத்தை யுடையராவர், எ - று.

சீவகசிந்தாமணி கனகமாலையாரிலம்பகம் 21-வது செய்யுளினும், இப்பாடலின் கருத்து அமைந்திருத்தலோடு அச்செய்யுளடிகளும் இப்பாடலடிகளோடு ஒத்திருத்தல் காண்க. (கககூ)

117. தோன்றிமாய்ந் துலக மூன்றிற் றுயரெய்து முயிர்க டம்மை
ஈன்றதாய் போல வோம்பி யின்பத்து ளிருத்தி நாதன்
மூன்றால கிற்கு மாக்கி முடிவிலாத் தன்மை நல்கு
மான்றநல் லறத்தைப் போலு மரியதொன் றில்லை யென்றான்.

(இ - ள்) தோன்றி - பிறந்தும், மாய்ந்து - இறந்தும், உலகமூன்றில் - மூன்றுலோகத்திலும், துயரெய்தும் - துக்கத்தையடையும், உயிர்கள் தம்மை - ஜீவன்களை, ஈன்ற தாய்போல - பெற்ற தாயைப்போல, ஓம்பி - இரட்சித்து, இன்பத்துள் - தேவாதிசுகங்களில், இருத்தி - ஸ்தாபித்து, மூன்றுலகிற்கும் - மூன்று லோகத்திற்கும், நாதன் - நாதனாகிய அரகந்த பதவியையும், ஆக்கி - உண்டாக்கி, முடிவிலா - அழிவில்லாத, தன்மை - ஸித்தபதவியையும், நல்கும் - கொடுக்கும், ஆன்ற - பெரிதாகிய, நல் - நன்மையாகிய, அறத்தைப்போலும் - ஸ்ரீஜிந தர்மத்தைப்போலும், அரியது - அருமையானது, ஒன்று - வேறொன்று, இல்லை - (இவ்வுலகில்) இல்லை, என்றான் - என்று வைஜயந்தன் கூறினான், எ - று. (கக௭)

வேறு.

118. அரியது திருவற மல்ல தில்லையேல்
மருவிய திருவற மொருவி மன்னனா
யுருகெழு முடிகவித் துலக மாள்வது
பெருவிலை மணியினைப் பிண்டிக் கீவதே.

(இ - ள்) (இவற்றைக்கேட்டுச் சஞ்சயந்தன்) அரியது - (இவ்வுலகில்) அருமையானது, திருவறம் அல்லது - ஸ்ரீஜிந தருமமேயல்லாமல், இல்லையேல் - மற்றொன்று மில்லையானால், மருவிய - சேர்ந்திராநின்ற, திருவறம் - அந்த ஸ்ரீஜிந தர்

மத்தை, ஒருவி - விட்டு, (ஒருவன்) மன்னனாய் - இராஜாவாகி, உருகெழு - ரூபம் விளங்குகின்ற, முடி - கிரீடத்தை, கவித்து - தரித்து, உலகம் - இப்பூமியை, ஆள்வது - ஆட்சிசெய்வது, பெருவிலை - பெரிதாகிய விலையையுடைய, மணியினை - இரத்தினத்தை, பிண்டிக்கு - பிண்ணாக்குக்கு, ஈவதே - கொடுத்ததற்கு அல்லது மாறியதற்குச் சமானமாகும்.

ஈவதே என்பதில் ஏகாரந்தேற்றப்பொருளது. (கக அ)

119. ஆதலா லருளிய துறுதி யன்றெனப்
போதுலா முடியினான் புகழ்ந்து பூமிக்கு
நாதனாய்ச் சயந்தனை நாட்ட வுற்றனன்
றாதுலா மலங்கலான் றானு நேர்ந்திலன்.

(இ - ள்) ஆதலால் - ஆகையால், அருளியது - தாங்களென்னைப் பூமியாளும்படி கூறியருளியது, உறுதியன்று - எனக்குறுதியானதில்லை, என - என்று மறுத்துச்சொல்ல, போது - புஷ்பங்கள், உலாம் - வியாபித்திராநின்ற, முடியினான் - முடியை உடைய வைஜயந்த மகாராஜன், புகழ்ந்து - (அந்த மூத்தகுமாரனது தெளிவுக்கு) அவனைப்புகழ்ந்து, பூமிக்கு - இப்பூமிக்கு, நாதனாய் - இராஜாவாக, சயந்தனை - (இளையகுமாரனாகிய) சயந்தனை, நாட்ட - ஸ்தாபிக்க, உற்றனன் - உத்தேசித்தான், தாதுலாம் - பூந்தாதுக்கள் வியாபித்திராநின்ற, அலங்கலான் தானும் - மாலையை யணிந்தவனாகிய அச்சயந்த குமாரனும், நேர்ந்திலன் - அதற்கிசைந்திலனாகி, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கக௯)

வேறு.

120. அறிவினாற் சிறிய நீரா ரான்றவர் தாங்கள் சென்ற
நெறியினைப் பிழைக்கப் போகின் மாற்றிடைச் சுழல்வர் நீடு
மறுவிலாக் குணத்தி னீர்கள் மாற்றிய வரசு மேவின்
நெறியினாற் கதிக ணான்கி னின்றியான் சுழல்வ னென்றான்.

(இ - ள்) அறிவினால் - புத்தியினால், சிறிய - அற்பமாகிய, நீரார் - குணத்தையுடையவர்கள், ஆன்றவர் தாங்கள் சென்ற - பெரியோர்களால் செல்லப்பட்ட, நெறியினை - ஸன்மார்க்கத்தை, பிழைக்க - தங்கள் மனம் தவறிச்செல்ல, போகில் - வேறுவழியிற் சென்றால், நீடு - நீடித்தகாலம், மாற்றிடை - (பெரியோர் நெறிக்கு மாற்றமாகிய) ஸம்ஸாரத்தில், சுழல்வர் - சிக்கிச்சுழலுவார்கள், (ஆதலால்) மறுவிலா - குற்றமில்லாத, குணத்தினீர்கள் - குணங்களையுடைய நீங்கள், மாற்றிய - (குணமல்லவென்று) நீக்கிய, அரசு - இராஜ்யத்தை, மேவின் - பொருந்தினால், நெறியினால் - கிரமத்தால், கதிகணான்கில் - சதுர்கதிகளில், யான் - நான், நின்று - நிலைபெற்று, சுழல்வன் - சுழலுவேன், என்றான் - என்று சொல்லி மறுத்துவிட்டான், எ - று. (கஉ0)

## வைஜயந்தன், தன் பௌத்திரனாகிய வைஜயந்தனுக்கு முடிசூட்டித் தன்புத்திரருடன் துறவெய்தல்.

121. வானத்தின் றுள்ளி யல்லால் வருந்தினும் விரும்பல் செல்லா
மானத்தை யுடைய புள்ளின் மைந்தர்கள் மறுத்து நிற்பக்
கானப்போ ரேற்றின் பாரங் கன்றின்மே லிட்ட தேபோற்
றேனொத்த முடியை மன்னன் சிறுவன்றன் சிறுவற் கீந்தான்.

(இ - ள்) வானத்தின் - ஆகாயத்தினின்றும் பெய்கிற, துள்ளியல்லால் - மழைத்துளியையல்லாமல், வருந்தினும் - தாகத்தினால் வருந்தினும், விரும்பல் செல்லா - (பூமியில் இருக்கும் ஜலத்தை) இச்சியாத, மானத்தையுடைய - அபிமானத்தையுடைய, புள்ளின் - வானம்பாடியென்கிற பக்ஷியைப்போல, மைந்தர்கள் - (சஞ்சயந்த, சயந்தரென்னும்) குமாரரிருவரும், மறுத்துநிற்ப - இராஜ்யம் வேண்டாமென்று நடைசெய்ய, கானம் - காட்டில் சஞ்சரிக்கும், போர் - யுத்தத்தைச் செய்யும்படியான, ஏற்றின்பாரம் - விருஷபத்தின்பேரில் இடும்படியான சுமையை, கன்றின்மேல் - ஒரு கன்றின்மீது, இட்டதேபோல் - வைத்தது போல, தேனொத்த - இனிமைபொருந்திய, முடியை - கிரீடத்தை, சிறுவன்றன் சிறுவற்கு - தனது மூத்தகுமாரனுடைய குமாரனாகிய வைஜயந்தனென்னும் தனது பேரனுக்கு, மன்னன் - வைஜயந்தராஜன், ஈந்தான் - கொடுத்தான், எ - று.

பேரன் - பாட்டன் பெயரையுடையவன்; பாட்டன் பெயரை, பௌத்திரனுக்கிடுதல் தொன்று தொட்ட வழக்கமாதலின், பௌத்திரனுக்குப் பேரன் என்னும் பெயர் ஏற்பட்டது. (கஉக)

122. மண்ணினுக் கிறைமை பூண்டான் மன்னன்வை சயந்த னென்றே
திண்முர சறைந்த பின்னைச் சிறப்பொடுஞ் சென்று புக்கு
புண்ணியக் கிழவன் றன்னைப் புகழ்ந்தடி பணிந்து பொய்தீர்
பண்ணவர் படிமங் கொண்டார் பார்த்திபர் குழாத்தி னோடே.

(இ - ள்) (அதன்மேல்) மண்ணினுக்கு - இந்த பூமிக்கு, இறைமை - இராஜ்யத்துவத்தை, வைசயந்தன் - வைஜயந்தனென்னும் பெயரனாகிய, மன்னன் - இராஜகுமாரன், பூண்டான் - தரித்தான், என்று—, திண் - வலிமையாகிய, முரசு - பேரிகையை, அறைந்தபின்னை - அடித்துத் தெரிவித்த பிறகு (வைஜயந்தன் முதலிய மூவரும்), சிறப்பொடும் - பூஜாத்திரவியத்தோடும், சென்று - போகி, புக்கு - சமவஸரணமடைந்து, புண்ணியக் கிழவன்றன்னை - புண்ணியத்திற் குரிய ஸ்வயம்பு நாமபகவானை, புகழ்ந்து - ஸ்தோத்திரம்பண்ணி, அடிபணிந்து - பாதத்திலே வணங்கி, பார்த்திபர் குழாத்தினோடு - அநேக அரசர்களோடும், பொய்

நீர் - குற்றம் நீங்கிய, பண்ணவர் படிமம் - பகவானது ரூபமான நிர்க்கந்தரூபசை, கொண்டார் - கைக்கொண்டார்கள், எ - று. (கஉஉ)

123. மணிமுடி கலிங்க மாலை மணித்துணை ரனைய குஞ்சி
பணியொடு பரிந்து நின்றார் பருமத யானை யொத்தார்
குணமணி யணிந்து குன்றாப் பண்ணவர் குழாத்தைப் புக்கா
ரிணையிலாச் சித்தி நன்னாட் டிளவர சியன்ற தொத்தார்.

(இ - ள்) மணி - இரத்தினத்தாலாகிய, முடி - முடியையும், கலிங்கம் - பட்டுவஸ்திரத்தையும், மாலை - மாலைகளையும், மணித்துணைரனைய - இந்திர நீலமணியின் கிரணங்கொத்துக்களுக்குச் சமானமாகிய, குஞ்சி - தலையின் மயிர் முதலியவைகளையும், பணியொடு - ஸர்வக்ஞரால் சொல்லப்பட்ட தீக்ஷாவிதியின் பிரகாரம், பரிந்து - நீக்கி, நின்றார் - தவநிலையில் நின்ற அவர்கள், பரு - பருத்த, மதயானை யொத்தார் - மதயானைக்குச் சமானமானவர்களாயும், (என்றதனால், 'மதயானையைப் பாகர்கள் வசமாக்கும்பொருட்டு அதன் அணி முதலானவைகளை நீக்கி ஆகாராதிகளையுங் கட்டுப்படுத்த அது அக்கட்டுக்கடங்கியதுபோல இவர்களும் இந்திரியங்களை வசமாக்கி அடக்கும்பொருட்டு ஏற்பட்ட சர்வக்ஞர் ஆக்கினையில் கட்டுப்பட்டு நின்றார்கள்,' என்பது பெறப்படும்). குணமணி - ஸம்யக்ஞானாதி குண ரத்தினங்களை, அணிந்து - தரித்து, குன்றா - குறைவில்லாத, பண்ணவர் - முனிவர்களுடைய, குழாத்தை - கூட்டத்தை, புக்கார் - அடைந்தவர்களாயும், இணையிலா - உவமையில்லாத, சித்தி - ஸித்தி அல்லது மோக்ஷமென்னும், நல் - நன்மையாகிய, நாட்டு - க்ஷேத்திரத்தின், இளவரசு - யுவராஜபதவியில், இயன்றது - பொருந்தியதை, ஒத்தார் - நிகர்த்தார்கள், எ - று. (கஉங)

124. ஆங்கவ ரங்க பூவ மாதிநூ லோதி யார்க்குந்
தாங்கருங் கொள்கை தாங்கித் தாமுடன் சென்று பின்னா
ளோங்கிய வுலக மூன்று மொருவழிப் படுக்க லுற்றுப்
பாங்கினால் வைச யந்தன் பருப்பத சிகரஞ் சேர்ந்தான்.

(இ - ள்) ஆங்கவர் - அவ்விடத்தில் அம்முனிவர்கள் மூவரும், அங்க பூவமாதி - அங்காகமம் பூர்வாகமம் முதலாகிய, நூல் - பரமாகமங்களை, ஓதி - படித்து, யார்க்கும் - எவர்களுக்கும், தாங்கரும் - தாங்குவதற்கரிதாகிய, கொள்கை - சாரித்திரங்களை, தாங்கி - தரித்து, தாம் - தாங்கள், உடன் - அந்தக்கொள்கையுடனே, சென்று - போய், பின்னாள் - பிற்பட்ட நாளில், ஓங்கிய - பெரிதாகிய, உலகமூன்றும் - மூவுலகத்தையும், ஒருவழிப்படுக்கலுற்று - ஒரேதன்மையாக வசப்படுத்த உத்தேசித்து, பாங்கினால் - கிரமத்தினால், வைசயந்தன் - (அவர்களில்) வைஜயந்தமகாமுனி, பருப்பதசிகரம் - (தனியாக) ஒருபர்வத சிகரத்தை, சேர்ந்தான் - அடைந்தான், எ - று. (கஉச)

125. மழைபனி வெயில்க டாங்கி மலைமிசை மலையைப் போல
வெழில்பெற நின்ற போழ்தி னெழுந்தசுக் கிலத்தி யானம்
பழவினை முழுதும் பாறப் பரந்தன வனந்த நான்மை
முழையிடைப் பழகிற் றேனும் விளக்கின்முன் னிருளுண் டாமோ.

(இ - ள்) மழை - மழையும், பனி - பனியும், வெயில்கள் - வெயிலுமாகிய இவைகளை, தாங்கி - சகித்து, மலைமிசை - பர்வதத்தின்மேல், மலையைப்போல - மற்றொருபர்வதம்போல, எழில்பெற - அழகுபெற, நின்ற போழ்தில் - யோகத்தில்நின்ற காலத்தில், எழுந்த - உண்டாகிய, சுக்கிலத்தியானம் - பிரதம த்விதீய சுக்கிலத்தியானங்களினால், பழவினை முழுதும் - பழமையாகிய காதிகருமங்கள் முழுமையையும், பாற - கெட, அனந்த நான்மை - அனந்த சதுஷ்டயங்கள், பரந்தன - ஆத்மனிடத்தில் விசாலித்தன, முழையிடை - பர்வத குகையினிடத்தில், பழகிற்றேனும் - வெகுகாலம் பழகியிருந்தாலும், விளக்கின்முன் - தீபத்தினது எதிரில், இருள் - அந்தகாரமானது, உண்டாமோ - இருக்குமோ? (இராது என்றபடி), எ - று.

சுக்கிலத்தியானத்தின் விவரம் பதார்த்தசாரத்தில் முப்பதாவது அதிகாரத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (கஉரு)

126 சித்தநல் லிரதஞ் சென்ற தாதுக்கள் போலத் தாது
வொத்தொரு வகைய தாகி யொளியுமிழ்ந் திலங்கு மேனி
சித்திரத் தியற்றப் பட்ட படமெனத் தேவர் சென்றார்
முத்திபெற் றிருந்த கோவு மதன்முன்னர் விளக்கை யொத்தான்.

(இ - ள்) நல் - நன்மையாகிய, சித்தஇரதம் - ஸித்தரஸமானது, சென்ற - சென்றடைந்த, தாதுக்கள்போல - இரும்பு முதலிய லோகங்களைப்போல (அதாவது:—இரசஞ்சேர்ந்த வுலோகங்கள் ஸ்வர்ணமானது போல), தாது - தாது உபதாதுக்கள், ஒத்து - பொருந்தி, ஒருவகையதாகி - ஒப்பற்ற விதமாகி, மேனி - (இந்த வைஜயந்த பட்டாரகருடைய) சரீரமானது, ஒளியுமிழ்ந்து - ஆத்மஜோதியை விரித்து, இலங்கும் - விளங்குந்தன்மைத்தாயிருந்தது; (அப்போது) தேவர் - சதுர்ணிகாய தேவர்கள், சித்திரத்தியற்றப்பட்ட - சித்திரக்காரனால் சித்திரத்திற் செய்யப்பட்ட, படமென - சித்திரப்படம்போல, (ரூபங்களை வெகு அழகாக நிர்மாணம் பண்ணிக்கொண்டு), சென்றார் - (இவரிடத்தில்) அடைந்தார்கள், முத்திபெற்றிருந்த - முத்தி மார்க்கத்தை யடைந்திருந்த, கோவும் - வைசயந்தபட்டாரகரும், அதன்முன்னர் - அத்தேவர்களாகிய படங்களின் கூட்டத்தின் முன்னர், விளக்கையொத்தான் - ஏற்றிவைத்த தீபத்தைப்போல பிரகாசித்தார், எ - று. ()

127. தேமலர் மாரி சுண்ணஞ் சிதறினர் திசைகண் முட்டத்
தூமமு மெழுந்த தீபஞ் சுடர்ந்தன மிடைந்த தேவர்

தாமமுஞ் சாந்து மேந்தித் தாம்பணிந் தெழுந்து நின்று
காமனைக் கடந்த கோமான் கழலடி பரவ லுற்றார்.

(இ - ள்) மிடைந்த - அவரிடத்தில் வந்து சேர்ந்த, தேவர் - அத்தேவர்கள், தேம் - வாசனைபொருந்திய, மலர்மாரி - புஷ்பவருஷத்தையும், சுண்ணம் - கந்தப் பொடியையும், சிதறினர் - சொரிந்தார்கள், திசைகள் - எத்திக்குகளிலும், முட்ட - (வாசனை) வியாபிக்கும்படியாக, தூமமும் - அகில்தூப முதலானவைகளும், எழுந்த - உண்டாய்ப் பரவின, தீபம் - (இரத்ன) தீபமுதலாயினவும், சுடர்ந்தன - பிரகாசித் தன, (பின்னும்) தாம் - அத்தேவர்கள் தாம், தாமமும் - மாலைகளையும், சாந்தும் - சந்தன முதலானவைகளையும், ஏந்தி - சர்வக்ஞனுக்கு அர்ச்சனையாகத் தரித்து, பணிந்து - வணங்கி, எழுந்துநின்று - எதிரில் எழுந்துநின்று, காமனை - மன் மதனை, கடந்த - ஜெயித்த, கோமான் - அந்த இறைவரது, கழலடி - முன்பு வீர கண்டை யணிந்திருந்த பாதத்தை, பரவலுற்றார் - ஸ்துதிக்கத் தொடங்கினார் கள், எ - று.

கழலடி - என்பது, பூர்வாபேக்ஷையைப்பற்றிச் சொல்லப்பட்டது, பூர்வா பேக்ஷ முன் அரசனாயிருந்த நிலைமை. (கஉஎ)

வேறு.

128. உவத்தல் காய்தலா லுன்றிரு வடித்தலத் தெழுந்தோர்க்
குவத்தல் காய்தலுன் றிருவுளத் தொன்றிலை யிலையேற்
சுவர்க்க மாநர கத்தவர் துன்னுவ துனது
தவத்தின் றன்மையோ தம்வினைத் தன்மையோ வருளே.

(இ - ள்) உவத்தல் - சந்தோஷித்தலாலும், காய்தலால், கோபித்தலாலும், உன் - உன்னுடைய, திருவடித்தலத்து - அழகிய பாதகலத்து, எழுந்தோர்க்கு - வந்தடைந்தவர்களுக்கு, நீ—, உன் - உன்னுடைய, திரு - அழகிய, உளத்து - மனதில், உவத்தல் - சந்தோஷிப்பதும், காய்தல் - கோபித்தலும், ஒன்றிலை - பொருந்திலை, இலையேல் - (அங்ஙனம் உன்னிடத்தில் அக்குணங்கள்) இல்லை யானால்; அவர் - அவ்விருதிறத்தவர்களில், சுவர்க்கம் - (உன்மேல் அனுராகித்தவர், அதாவது: சந்தோஷித்தவர்) சுவர்க்கத்தையும், மாநரகத்து - (உன்மேல் த்வேஷித் தவர், அதாவது கோபித்தவர்) பெரிய துக்கத்தையுடைய நரகத்தையும், துன்னு வது - அடைவது, உனது - உன்னுடைய, தவத்தின்றன்மையோ - தபஸினது குணமோ?, தம்வினைத் தன்மையோ - அவர்களுடைய வினையினது குணமோ? அருள் - எங்களுக்குத் தெரியும்படி கூறியருள்வாயாக, எ - று. (கஉஅ)

129. இறந்த காதிக னன்மையு மழிந்தவக் கணத்தே
நிறைந்த நான்மையும் வானவர் நிலையுடன் றளராய்

பறந்து வந்துநின் றிருவடி பரவுவ திதுவுன்
சிறந்த தன்மையோ திருவறத் தியற்கையோ வருளே.

(இ - ள்) இறந்த - கெட்ட, காதிகள் நான்மையும் - நான்கு காதி கருமங்களும், அழிந்த - கெட்டு நீங்கின, அக்கணத்து - அப்பொழுது, நான்மையும் - அனந்த சதுஷ்டயமும், நிறைந்த - நிறைந்தன, உடனே - அங்ஙனம் நிறைந்தவுடனே, வானவர் - தேவர்கள், நிலைதளரா - (தங்கள் ஆசனங்கள்) சலித்தல் செய்ய, பறந்து வந்து - சீக்கிரமாகவந்து, பரவுவது - நின்னை ஸ்துதிப்பதாகிய, இது - இந்தத்தன்மை, உன் - உன்னுடைய, சிறந்த - மேலான, தன்மையோ - ஸ்வபாவமோ?, திருவறத்து - ஸ்ரீ: ஜிநதருமத்தினது, இயற்கையோ - ஸ்வபாவமோ?, அருள் - அருள்செய்து கூறுவாயாக, எ - று.

'இயற்கையோசெப்பே' என்றும் பாடம். (கஉகூ)

130. குற்ற மொன்றிலை யெனிற்குற்ற மூன்றுநீ யுரைத்தாய்
பற்று நீயிலை யென்னினு லோகமுன் பற்றாஞ்
சுற்ற நீயிலா யென்னிலெவ் வுயிருமுன் சுற்ற
மற்ற நீயில்லாய் முனிவர்கோ னுயதோர் மாயம்.

(இ - ள்) (பெரியோர் நினக்குக் குற்றமில்லை யென்கிறார்கள்; அங்ஙனம்) குற்றமொன்று - யாதொரு குற்றமும், இலையெனில் - உனக்கில்லை யென்றால், குற்றமூன்று - முக்குற்றத்தை, நீ—, உரைத்தாய் - சொன்னாய், (உனக்குப் பற்றிலை யென்கிறார்கள். அங்ஙனம்) நீ—, பற்றிலையென்னில் - எதையும் பற்றிலையானால், உலோகம் - மூன்று லோகமும், உன் - உனது, பற்றுஆம் - ஞானமாகிய பற்றில் சிக்கியனவாம், (உனக்குச் சுற்றமில்லை யென்கிறார்கள்; அங்ஙனம்) நீ—, சுற்றம் - யாதொரு சுற்றமும், இலாயென்னில் - இல்லாதவனென்றால், எவ்வுயிரும் - ஸகல ஜீவன்களும், உன் - உனது, சுற்றம் - சுற்றமாகும், (இப்படியிருப்பதனாலே) அற்றம் - யாதொரு சோர்வும், இல்லாய் - இல்லாதவனாகிய, நீ—, முனிவர் - (முக்குற்றம், பற்று, சுற்றம் ஆகியவற்றைவிட்ட) முனிவர்களின், கோனுயது - இறைவனாகியது, ஓர் - ஒப்பற்ற, மாயம் - ஆச்சரியமாகும், எ - று. (கங0)

131. அறிவு நீயிலை யொன்றல தெமக்கவை யநேகம்
பிறவி நீயிலை யாங்களோ பிறவியிற் பெரியோம்
செறிவ தோர்கதி யுனக்கிலை யெமக்குநான் கிவற்றால்
வறியை நீயெம்மை யாட்கொண்ட வசியிது பெரிதே.

(இ - ள்) நீ - உனக்கு, அறிவு - ஞானம், ஒன்றலது - (கேவலக் ஞானமாகிய) ஒன்றேயல்லாமல், இலை - மற்றவிகற்ப ஞானங்கள் இல்லை, எமக்கு -

எங்களுக்கு, அவை - அந்த ஞானங்கள், அனேகம் - (மதியாதியாக உள்பேதம்) அநேகமாம், பிறவி - ஸம்ஸாரப்பிறப்பு, நீ - உனக்கு, இலை - கிடையாது, யாங்களோ - நாங்களோ, பிறவியில் - அப்பிறப்புக்களினால், பெரியோம் - மிகுந்தவர்களாயிராநின்றோம், செறிவது - இனிச் சேரும்படியான, ஓர் - ஒப்பற்ற, கதி - கதியானது, உனக்கு - உனக்கு, இலை - கிடையாது, எமக்கு - எங்களுக்கு, நான்கு - நாலுகதிகள் இரா நின்றன, இவற்றால் - இவைகளாலெல்லாம், (பார்க்குமிடத்தில்) நீ—, வறியை - வறுமையையுடையாய்; (அப்படியிருந்தும் இத்தகைய நீ) எம்மை - (மேலாகிய) எம்மை, ஆட்கொண்ட - அடிமையாகக் கொண்டருளிய, வசியிது - வசியமாகிய இது, பெரிது - பெருமையையுடையது, எ - று. (கங்க)

132. என்று வானவ ரிறைவனை யிறைஞ்சுமப் பொழுதே
யன்று மூவுல கத்துள வமரரும் வியப்ப
நின்ற தோர்படி நிருமிபா வரிவையர் சூழச்
சென்ற னன்றர ணேந்திரன் சிறப்பொடும் விரைந்தே.

(இ - ள்) என்று - என்றுசொல்லி, வானவர் - தேவர்கள், இறைவனை - வைஜயந்த பகவானை, இறைஞ்சுமப்பொழுது - வணங்குகின்ற அச்சமயத்தில், மூவுலகத்துள்ள - மூன்று லோகத்திலுமுள்ள, அமரரும் - தேவர்களும், வியப்ப - ஆச்சரியமடையும்படியாக, நின்றது - நலமெபற்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, படி - உருவத்தை, நிருமிபா - நிர்மாணம் பண்ணிக்கொண்டு, அரிவையா - தேவிமார்கள், சூழ - சூழும்படியாக, தரணேந்திரன் - (பவணலோகத்துக்கதிபதியான) தரணேந்திரனென்பான், சிறப்பொடு - பூஜாதிரவியத்தோடு, விரைந்து - சீக்கிரமாக, அன்று - அப்பொழுது, சென்றனன் - அவ்விடம் வந்தடைந்தான், எ - று. ()

வேறு.

133. நிழலுமிழ்ந் திலங்கு மேனி நிறைமதி முகமுஞ் செம்பொற்
கழலணிந் திலங்கும் பாதங் கமலங்கள் காம னேயுங்
குழலணிந் திலங்கு நல்லார் வடிவினாற் குழைய வாங்குந்
தழலுறாந் தன்மைத் தந்தத் தரணன துருவு தானே.

(இ - ள்) காமனையும் - மன்மதனைநிகர்த்த, அந்த - அந்தத், தரணனது - அந்தத் தரணேந்திரனுடைய, மேனி - சரீரம், நிழல் - பிரகாசத்தை, உமிழ்ந்து - சொரிந்து, இலங்கும் - விளங்கும், முகமும் - முகமானதும், நிறைமதி - ஸம்பூர்ணச் சந்திரனுக்குச் சமானமாகும், செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, கழல் - வீரகண்டயத்தை, அணிந்து - தரித்து, இலங்கும் - விளங்கும், பாதம் - பாதங்கள், கமலங்கள் - தாமரைப் புஷ்பத்திற்குச் சமமாகும், உருவு - (இந்த அவயவங்கள் சேர்ந்த அவனது) உருவமானது, குழல் - அளகபாரத்தை, அணிந்து - சீவி முடித்து

அலங்கரித்து, இலங்கும் - விளங்கும், நல்லார் - ஸ்த்ரீமார்களை, வடிவினால் - வடிவத்தினால், குழைய - மனம் தளர்ச்சி யடையும்படி, வாங்கும் - அவர் மனதை கிரகிக்கும், தழல் - பிரகாசம், உறும் - அடைந்த, தன்மைத்து - தன்மையையுடையது, எ - று. (கஙௗ)

134. ஆங்கவ னுருவங் காணா வருந்தவன் சயந்த னந்தோ
வீங்கிய தவத்தி னான்மே லிவ்வுரு வாக வென்று
நீங்கிய காட்சித் தாய நிதானத்தை நிறைய நின்றா
னோங்கிய வுலகம் வேண்டா துமிகொண்ட வொருவ னொத்தான்.

(இ - ள்) ஆங்கு - அவ்விடத்தில், அவன் - அத் தரணேந்திரனது, உருவம் - வடிவத்தை, காணா - கண்டு, அரும் - அரிதாகிய, தவன் - தபசை யுடையவனாகிய, சயந்தன் - ஜயந்தனென்னும் முனி, அந்தோ - ஐயோ!, நீங்கிய காட்சித்தாய - நீங்கிய காக்ஷியையுடையதாகிய (அதாவது: சம்மியக் தரிசனமல்லாத), நிதானத்தை - நிதான சல்லியத்தில், நிறைய நின்றான் - நிறையும்படி நின்றவனாய், வீங்கிய - பெரிதாகிய, தவத்தினால் - யான் பண்ணிய தபத்தினால், மேல் - மறு சன்மத்தில், இவ்வுருவு - இப்படிப்பட்ட உருவம், ஆக - எனக்கு உண்டாவதாக, என்று - என்றுநினைத்து, ஓங்கிய - மேலாகிய, உலகம் - உலகத்தை, வேண்டாது - வேண்டாமல், உமி - உமியை, கொண்ட - ஏற்றுக்கொண்ட, ஒருவன் - ஒருவனை, ஒத்தான் - நிகர்த்தான், எ - று. (கஙௌ)

135. அருந்தவந் தாங்கி மேரு வனையவர்க் கேலு மாசை
துரும்பிடைத் தோன்று மேனுந் துகளினுஞ் சிறிய ராவ
ரருந்தவ னிவனிற் கண்டா மாசையில் லாமை யன்றோ
பெருந்தவ மாத லன்றேற் பிறவிவித் துலர்த்த லன்றோ.

(இ - ள்) அருந்தவம் - அரிதாகிய தவத்தை, தாங்கி - தரித்து, (அதனாலே), மேரு அனையவர்க்கு - மஹாமேரு பர்வதத்துக்குச் சமமாகிய பெருமையை அடைந்தவர்க்கும், ஏலும் - இசையும், ஆசை - ஆசையானது, துரும்பிடை - ஒரு துரும்பினிடத்தில், தோன்றுமேனும் - உண்டாகுமானாலும், (அவர்கள்) துகளினும் - சிறுதுகளைப் பார்க்கிலும், சிறியராவர் - அற்பராவார்கள், (இதனை) அரும் - அரிய, தவனிவனில் - தவத்தையுடைய இச்சயந்த முனியிடத்தில், கண்டாம் - நாம் பார்த்தோம், பெரும் - பெரியதாகிய, தவமாதல் - தபமாவது, ஆசையில்லாமை யன்றோ - பரத்திரவியங்களில் விஷய வாஞ்சையில்லாத தன்மையல்லவா?, அன்றேல் - அப்படி இல்லாமல் (ஆசை உண்டானால்), (அது) பிறவி - ஸம்ஸாரப் பிறப்புக்கு, வித்து - விதையை, உலர்த்தல் அன்றோ - உலர்த்திச் சித்தப்படுத்துவதற்குச் சமானமல்லவோ?, எ - று.

வித்தை, விதைப்பதற்கு உலர்த்திப் பக்குவப்படுத்தல் இயற்கை. (கங௫)

136. கனிந்தநெய்க் கவளங் கையில் வைத்துடன் கழறு வாரை
முனிந்திடுங் களிறு போல்வார் முத்தியை விளைக்கு நீரார்
மனங்கொளத் துறந்தி டாதே வால்குழைத் தெச்சிற் கோடுஞ்
சுணங்கனைப் போலு நீரார் மாற்றிடைச் சுழலு நீரார்.

(இ - ள்) கனிந்த - கனிவுபெற்ற, நெய்க்கவளம் - நெய்ச்சோற்றுத் திரளையை, கையில் - தமது கையில், வைத்து - வைத்துக்கொண்டு, உடன் - கூடவிருந்து, கழறுவாரை - கூவி யழைத்து இதைத்தின்னக்கடவாயென்று விரும்பும் பாகர்களையும், முனிந்திடும் - கோபித்து வெறுக்கின்ற, களிறுபோல்வார் - யானைக்குச் சமானமானவர்கள், முத்தியை - மோட்சத்தை, விளைக்கும் - உண்டு பண்ணும்படியான, நீரார் - குணத்தையுடையவர்கள், மனங்கொள - மனம் நிறையும்படியாக, துறந்திடாது - விடாமல், வால்குழைத்து - வாலை ஆட்டிக்கொண்டு, எச்சிற்கு - எச்சிலான அற்ப அன்னத்துக்குங்கூட, ஓடும் - ஓடுகின்ற, சுணங்கனைப்போலும் - நாய்க்குச் சமமாகிய, நீரார் - குணத்தையுடையவர்கள், மாற்றிடை - ஸம்ஸாரத்தில், சுழலும் - சுழலும்படியான, நீரார் - தன்மையுடையார், எ - று. ()

137. நஞ்சினை யமிர்த மென்றே யுண்டவ னயர்ந்து பின்னைத்
துஞ்சுவ தஞ்சிக் கான்ற நஞ்சையே துய்த்தல் போலும்
புஞ்சிய பொறியின் போகம் மாற்றிடைச் சுழற்று மென்ன
வஞ்சிமுன் றுறந்த போகத் தருந்தவ னாசை தானே.

(இ - ள்) புஞ்சிய - சேர்ந்திராநின்ற, பொறியின் - இந்திரியங்களாலாகிய, போகம் - போகோப போகமானது, மாற்றிடை - ஸம்ஸாரத்தில், சுழற்றும் - சுழலப்பண்ணும், என்ன - என்று, அஞ்சி - (ஸம்ஸாரச் சுழற்சிக்கு) பயந்து, முன் - முன்னமே, துறந்த - நீக்கிய, போகத்து - அந்தப் போகோப போகத்தின் மேல், (இவ்வாறு ஏற்பட்ட) அருந்தவன் - அரிய தவத்தையுடைய சயந்த முனியின், ஆசைதான் - ஆசையானது, (எத்தகையதெனில்), நஞ்சினை - விஷத்தை, அமிர்தமென்று - அமுதமென்று நினைத்து, உண்டவன் - தின்ற ஒருவன், அயர்ந்து - வருத்தத்தையடைந்து, துஞ்சுவது - இறந்து விடுவதற்கு, அஞ்சி - பயந்து, கான்ற - கக்கிவிட்ட, நஞ்சையே - அந்த விஷத்தையே, பின்னை - மறுபடியும், துய்த்தல்போலும் - உண்ணுதலை நிகர்க்கும், எ - று. (கஙௗ)

138. ஐந்தலை யரவந் தன்வா யைந்துடன் கலந்த நஞ்சிற்
றன்பமோர் கடிகை யல்லாற் றுஞ்சினாற் றொடர்ந்தி டாதா
மைம்பொறி யரவந் தன்வா யொன்றினா லாய நஞ்சு
துஞ்சினு மநேக காலந் தொடர்ந்துபின் றடுங்கள் கண்டீர்.

(இ - ள்) ஐந்தலை-ஐந்து சிரசையுடைய, அரவம்-ஸர்ப்பமானது, தன் வாய் ஐந்துடன் - தன்னுடைய ஐந்துவாயினாலும், கலந்த - (கடித்துச்) சேர்ந்த, நஞ்சின்- விஷத்தினாலாகிய, துன்பம் - துயரமானது, ஓர் கடிகையல்லால் - ஒரு நாழிகையே யிருக்குமல்லாமல், துஞ்சினால் - இறந்து விட்டால், தொடர்ந்திடாதாம்-அதன்மேல் சேர்ந்து வருத்தாதாம், ஐம்பொறி - பஞ்சேந்திரிய விஷயவாஞ்சையாகிற, அரவந் தன் - ஸர்ப்பத்தினது, வாயொன்றினால் - ஒருவாயினாலே, ஆய - உண்டாகிய, நஞ்சு - விஷமானது, துஞ்சினால் - சரீரம் நீங்கினாலும், (தான் நீங்காமல்) அநேக காலம் - நெடுங்காலம் (அதாவது: கர்ம ஸ்திதிகாலபரியந்தம்), தொடர்ந்து நின்று - ஆத்மனிடத்தில் ஸத்துவத்தில் நின்று, அடும் - துன்பத்தைச் செய்யும், எ - று.

கள், கண்டீர் என்பன அசைகள். (கஙஅ)

139. காட்சியைக் கலக்கி ஞானக் கதிர்ப்பினைத் திரித்துப் புக்கான்
மீட்சியி லுலக மேற்று மொழுக்கத்தை யழித்து வைய
மாட்சிபெற் றவனை வைய மதனுக்கே யடிமை யாக்கு
மாட்சித்தா னிதானந் தன்னை மனங்கொள்ளார் மதியின் மிக்கார்.

(இ - ள்) காட்சியை - ஸம்யக்தர்சனத்தை, கலக்கி - சிதைத்து, ஞானம் - ஸம்யக்ஞானமாகிற, கதிர்ப்பினை, பிரகாசத்தை, திரித்து - கெடுத்து, மீட்சியில் - திரும்புதலில்லாத, உலகம் - ஸித்திக்ஷேத்திரத்தில், ஏற்றும் - உயர்த்திச்சேர்க்கும் படியான, ஒழுக்கத்தை - சம்யக்சாரித்திரத்தையும், அழித்து - கெடுத்து, புக்கான் - (சயந்தமுனி) நிதானசல்லியத்தால் பவணலோகஞ்சேர்ந்து தரணேந்திர னானான், வையம் - இந்த உலகத்தில், ஆட்சி - (நிதானசல்லியத்தால்) அதன் ஆளுகையை, பெற்றவனை - அடைந்தவனை, வையம் - இந்தவுலகமானது, அத னுக்கு - அதற்கே, அடிமையாக்கும் - அடிமையாகச்செய்யும், மாட்சித்து - மாட்சி மையை யுடையது, (ஆதலால்) நிதானந்தன்னை - நிதான சல்லியமாகிற தோஷத்தை, மதியின் மிக்கார் - புத்தியிற் சிறந்த பெரியோர்கள், மனங்கொள் ளார் - மனதிலே கொள்ளமாட்டார்கள், எ - று.

மாட்சித்தால் என்பதில், ஆல் - அசை. (கஙகூ)

140. ஒழிந்தநால் வினையும் வென்றிட் டுலகொரு மூன்று மேத்த
வெழுந்துசென் றுலகத் துச்சி யெய்தினான் வைச யந்த
னழுந்திய நிதானத் தாலே சயந்தனவ் வமர னாய்க்கீழ்
விழுந்தன னொழிந்த வீரன் சரிதையான் விளம்ப லுற்றேன்.

(இ - ள்) ஒழிந்த - மீதியாகிய, நால்வினையும் - (அகாதிகருமங்களாகிய வேதநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரமென்னும் நாலுவிதமான) கருமங்களையும்,

வென்றிட்டு - ஜெயித்து, உலகொருமூன்றும் - இந்தமூன்று லோகத்திலுமுள்ள பவ்வியப் பிராணிகளெல்லாம், ஏத்த - ஸ்தோத்திரம்பண்ண, வைசயந்தன் - வைஜயந்தரென்னும் அருகத்பட்டாரகர், எழுந்துசென்று - ஊர்த்துவகதிஸ்வபாவமாகச் ·சென்று, உலகத்துச்சி - மூன்றுலகத்துக்கும் உச்சியாகிய ஸித்தியென்னும் இடத்தை, எய்தினன் - ஸ்வயம்புத்தன்மை பெற்றடைந்தான், அழுந்திய - மனதிலுண்டாகிய, நிதானத்தாலே - நிதான சல்லியமென்னும் தோஷத்தினலே, சயந்தன் - ஜயந்தமுனி, அவ்வமரனாய் - அத்தரணேந்திரனாகவே, கீழ் - பவணலோகத்தில், விழுந்தனன் - அடைந்தான், ஒழிந்த - எஞ்சிய, வீரன் - வீரபுருடனாகிய சஞ்சயந்த முனியினுடைய, சரிதை - சரித்திரத்தை, யான் - நான், விளம்பலுற்றேன் - இனிச்சொல்வேன், எ - று. (கசO)

வைசயந்தன் முத்திச் சருக்கம் முற்றுப்பெற்றது.



141. பஞ்சம கதிக்கட் சென்ற பரமன்றன் சாம மூர்த்திக்
கஞ்சலி செய்து வாழ்த்திச் சிறப்பயர்ந் தமரர் போனார்
வஞ்சமி றவத்தி னன்சஞ் சயந்தனும் வணங்கிப் போகி
எஞ்சலில் கொள்கை தாங்கி யிராப்பகல் படிம நின்றான்.

(இ - ள்) பஞ்சம கதிக்கண் - ஐந்தாவதாகிய மோட்சகதியில், சென்ற - அடைந்த, பரமன்றன் - வைஜயந்த பகவானுடைய, சாமமூர்த்திக்கு - அந்திய சரீரத்திற்கு, அஞ்சலி செய்து - வணக்கஞ் செய்து, வாழ்த்தி - ஸ்தோத்திரம் பண்ணி, சிறப்பு - பரி நிர்வாண பூஜையை, அயர்ந்து - செய்து, அமரர் - தேவர்கள், போனார் - தங்கள் தங்களிடம் சென்றார்கள், வஞ்சமில் - மாய்கையில்லாத, தவத்தினன் - தபத்தையுடையவனாகிய, சஞ்சயந்தனும் - சஞ்சயந்த முனியும், வணங்கி - (வைஜயந்த பட்டாரகரை பரிநிர்வாண பூஜையில்) வணங்கி, போகி - (ஏகவிகாரியாகிப்) போய், எஞ்சலில் - குறைவில்லாத, கொள்கை - சாரித்திரங்களை, தாங்கி - தரித்து, இராப்பகல் - இரவும் பகலும், படிமம் - ப்ரதிமாயோகத்தில், நின்றான் - நிலைபெற்றிருந்தான், எ - று. (க)

142. மான்கன்றும் புலியின் கன்று மாறியே முலையை யுண்ணும்
ஆன்கன்று மானைக் கன்றுஞ் சிங்கத்தின் கன்றோ டாடும்
ஊன்றின்று வாழுஞ் சாதி யத்தொழி லொழிந்த வுள்ளந்
தான்சென்ற சாந்தி யார்க்கும் மாதவன் றன்மை யாலே.

(இ - ள்) மாதவன் - மஹா தபஸையுடைய சஞ்சயந்த முனியினது, தன்மையால் - குணத்தினால், மான்கன்றும் - மான்குட்டிகளும், புலியின் கன்றும் - புலிக்குட்டிகளும், மாறி - ஒன்றின் தாயில் மற்றொன்று மாறுபட்டு, முலையை - ஸ்தனத்தை (அதாவது: தனத்திலுள்ள பாலை), உண்ணும் - குடிப்பனவாகும் (அதாவது: மான்குட்டி புலியினிடத்தும், புலிக்குட்டி மானிடத்தும் விரோத குணமின்றிப் பாலுண்டு விளையாடும்), ஆன்கன்றும் - காட்டுப்பசுவின்கன்றும், ஆனைக் கன்றும் - யானைக் குட்டிகளும், சிங்கத்தின் - சிம்மத்தினது, கன்றோடு - குட்டிகளோடு, ஆடும் - விளையாடும், ஊன்தின்று - மாமிசந்தின்று, வாழும் - வாழ்கின்ற, சாதி - கீழ்ஜாதிகள், அத்தொழில் - அக்காரியத்தை, ஒழிந்த - விட்டு நீங்கின, யார்க்கும் - எவர்களுக்கும், உள்ளம் - மனம், சாந்தி - சாந்தி பரிணாமத்தில், சென்ற - சார்ந்தன, எ - று.

தான், ஏ - அசைகள். (உ)

143. எலிசென்று நாகந் தன்மே லேறிடும் நாகங் கீரி
நலியுமென் றஞ்ச மில்லை மானமா வாலின் முள்ளைப்
புலிசென்று வாங்கும் புல்வாய் கிடந்துழி நடுங்குமென்று
நலிவுசெய் வேடர் செல்லார் செற்றமி னற்ற வத்தால்.

(இ - ள்) செற்றம் - த்வேஷம், இல் - இல்லாத, நல் - நன்மையாகிய, தவத்தால் - அத்தபஸினாலே, எலி - எலியானது, சென்று - போய், நாகந்தன் மேல் - ஸர்ப்பத்தின்மேல், ஏறிடும் - ஏறி விளையாடும், நாகம் - ஸர்ப்பமானது, கீரி - கீரிப்பிள்ளை, நலியுமென்று - வருத்துமென்று, அஞ்சலில்லை - பயப்படுவ தில்லை, மானம் - அபிமானமுடைய, மா - கவரிமிருகத்தினது, வாலின் - வாலில் பற்றப்பட்ட, முள்ளை - முள்ளுகளை, புலி - புலியானது, சென்று - போய், வாங்கும் - நீக்கிவிடும், புல்வாய் - மான் கூட்டங்கள், கிடந்துழி - படுத்திருக் கின்ற விடங்களில், நடுங்குமென்று - (அவைகள்) பயப்படுமென்று, நலிவுசெய் - துன்பத்தைச் செய்யும்படியான, வேடர் - வேடர் முதலானவர்கள், செல்லார் - அடையமாட்டார்கள், எ - று. (ரு)

144. ஒருவகைப் பட்ட வுள்ளத் திருவகைத் துறவு தன்னால்
மருவிய குத்தி மூன்றிற் சன்னைக ணான்கு மாற்றிப்
பொருவிலைம் பொறி செறித்துப் பொருந்தியா வாச மாறின்
இருவகைச் செவிலித் தாய ரெழுவரைச் செறிய வைத்தான்.

(இ - ள்) ஒருவகைப்பட்ட - ஒரேவிதமான (அதாவது : வேறொன்றிற் செல்லாத), உள்ளத்து - மனதில், இருவகை - இரண்டு விதமாகிய, துறவு தன்னால் - (பாஹ்யாப்யந்தர பரிக்கிரகத் தியாகமாகிய) தபத்தினால், மருவிய - சேர்ந்த, குத்தி மூன்றில் - திரிகுப்திகளினால், சன்னைகள் நான்கும் - சதுஸ் ஸன்னைகளை, மாற்றி - நீக்கி, பொருவில் - உவமையில்லாத, ஐம்பொறி - பஞ் சேந்திரியங்களை, செறித்து - விஷயங்களிற் செல்லவொட்டாமற் றடுத்து, ஆவாசமாறில் - ஷடாவசியக் கிரியைகளில், பொருந்தி - சேர்ந்து, இருவகை - இரண்டு விதமாகிய, செவிலித்தாயர் - புண்ணிய பாவத்திற்குச் செவிலித்தாயா கியவர்களில், எழுவரை - புண்ணியத்திற்குத் தாயாகிய வெழுவிதமான பரிணாமங் களை, செறிய - மனதில் சேரும்படியாக, வைத்தான் - தரித்தான் (அதாவது: சுபத்தியானத்தோ டொன்றினான்), எ - று.

சதுஸ்ஸன்னையாவன:—ஆஹாரஸன்னை, ஸ்த்ரீஸன்னை, பயஸன்னை, பரிக் கிரஹ ஸன்னை என்பனவாம்.

ஷடாவசியக்கிரியைகளாவன .—ஸாமாயிகம், ஸ்துதி, வந்தனை, பிரதிக்கிர மணம், பிரத்தியாக்கியானம், வியுத்ஸர்க்கம் என்பனவாம். இவைகளின் விவரத்தை பதார்த்த சாரத்தில் பார்த்துக்கொள்க. (சு)

145. சுத்தியோ ரெட்டிற் றூயா னொன்பதா மியோகி லூற்றுப்
பத்தையுந் தடுக்க வங்கம் பதினொன் றிற் பயின்ற ஞானஞ்
சித்தம்பன் னிரண்டிற் சென்று சிந்தையை முறுக்கி யிட்டுப்
பத்துமூன் றாகி நின்ற கிரியையைப் பயின்றிட் டானே.

(இ - ள்) சுத்தியோரெட்டில் - அஷ்ட சுத்திகளினுல், தூயான் - பரிசுத்தனாகிய சஞ்சயந்தமுனி, ஒன்பதாம் - ஒன்பதாகிய, யோகில் - யோகத்தினுல், ஊற்றுபத்தையும் - தசவிதமான ஆஸ்ரவங்களேயும், தடுக்க - தடுக்கும்படியாக, அங்கம் பதினொன்றில் - ஏகாதசாங்கமாகிய சாஸ்திரங்களில், பயின்ற - பழகிய, ஞானம் - சுருத ஞானத்தையுடைய, சித்தம் - மனஸானது, பன்னிரண்டில் - துவாதசானுப்பிரேக்ஷைகளில், சென்று - அடைய, சிந்தையை - தியானத்தை, முறுக்கியிட்டு - பலஞ்செய்து, பத்துமூன்றாகிநின்ற - திரயோதசவிதமாகிய, கிரியையை - சாரித்திரங்களை, பயின்றிட்டான் - பழகினுன், எ - று.

சுத்திகள் எட்டாவன :—பரிணமைசுத்தி, விநயசுத்தி, ஈரியாபதசுத்தி, பிரதிஷ்டாபநசுத்தி, சய்யாஸனசுத்தி, வாக்சுத்தி, பிக்ஷாசுத்தி, காயசுத்தி என்பனவாம்.

யோகங்கள் ஒன்பதாவன :—மனம், வசனம், காயம், கிருதம், காரிதம், அனுமோதம், ஸம்ரம்பம், ஸமாரம்பம், ஆரம்பம் என்பனவாம்.

ஏகாதசாங்கங்கள் என்பன :—துவாதச அங்காகமங்களில் திருஷ்டிவாதாங்கம் நீங்கலாக மற்ற பதினொன்றுமாம்.

திரயோதச சாரித்திரங்களாவன :—பஞ்சமஹா விரதம், பஞ்சஸமிதி, திரிகுப்தி என்பனவாம். (௫)

146. காமமா மரணி யத்தைக் கடந்தபின் மடங்கல் போலும்
வாமமார்ந் திலங்கு மாட மனேகர புரத்தைச் சேர்ந்த
பீமமா மரணி யத்திற் பெரியவ னின்ற போழ்திற்
சாமமார்ந் திலங்கு மேனித் தானவ னொருவன் வந்தான்.

(இ - ள்) காமமாம் - ஆசையாகிற, அரணியத்தை - வனத்தை, கடந்தபின் - நீங்கினபிறகு, வாமம் - அழகினுல், ஆர்ந்து - நிறைந்து, இலங்கும் - விளங்கும், மாடம் - உப்பரிகைகளையுடைய, மனேகரபுரத்தை - மனோஹரபுரமென்னும் நகரத்தை, சேர்ந்த - சேர்ந்து சமீபத்தில் இராநின்ற, பீமமாம் - பயங்கரமாகிய, அரணியத்தில் - காட்டில், (அதாவது: பீமாரண்ணிய மென்னும் பெயரினையுடைய காட்டில்), மடங்கல்போலும் - சிம்மத்தைப்போலும், பெரியவன் - பெரியோனுகிய சஞ்சயந்த முனிவன், (நிர்ப்பயனுகி), நின்ற போழ்தில் - யோகத்தில் நின்ற காலத்தில், சாமமார்ந்து - கறுப்புநிறமாய் நிறைந்து, இலங்கும் - விளங்கும், மேனி - சரீரமுடைய, தானவனொருவன் - ஒரு வித்தியாதரன், வந்தான் - அவ்விடத்தில் வந்தான், எ - று. (௬)

வேறு.

147. வித்துத் தந்த னென்பவன் விச்சா தரவேந்தன்
மத்தத் தந்தி போல்பவன் வானம் வழியாக
முத்தத் தந்த மொய்குழற் சாமை யொடுசெல்வான்
சித்தத் தந்த மின்றி நின்றவன் மேற்சென்றான்.

(இ - ள்) வித்துத்தந்த னென்பவன் - *வித்யுத்தம்ஷ்ட்ரன் என்னும் பெயரையுடையவனாகிய, விச்சாதரவேந்தன் - வித்தியாதரவரசன், மத்தம் - மதம் பொருந்திய, தந்திபோல்பவன் - யானைக்குச் சமானமாகியவன், முத்தம் - முத்துப் போன்ற, தந்தம் - பற்களையுடைய, மொய் - நெருங்கிய, குழல் - அளகத்தை யுடைய, சாமையொடு - தனது தேவியாகிய சியாமையுடன், வானம் வழியாக - ஆகாயமார்க்கமாக, செல்வான் - விமானரூடனாகிச் செல்பவன், சித்தத்து - மனதில், அந்தமின்றி - இருளின்றி (அதாவது : ராகாதிகளின்றி), நின்றவன் மேல் - யோகத்தில் பொருந்திநின்ற சஞ்சயந்த முனியின் மேலாக, சென்றான் - போயினான், எ - று. (எ)

148. மண்மே னின்ற மாதவர் கோன்மீ தோடாதாய்
விண்மே னின்ற விமானங் கண்டு வியப்பெய்திப்
புண்மேல் வேலா லேறுண் டான்போற் புகைந்தாற்றான்
கண்மேற் கண்டான் கைவல செல்விக் கணியானை.

(இ - ள்) மண்மேல் - பூமியின்மேல், நின்ற - யோகத்தில் பொருந்திநின்ற, மாதவர்கோன்மீது - மஹா தபஸையுடைய முனிவர்களுக்கெல்லாம் முதல்வனாகிய இச்சஞ்சயந்த முனியின் மேலாக, ஓடாதாய் - செல்லாததாகி, விண்மேல்-ஆகாயத்தில், நின்ற - நிற்கப்பட்ட, விமானம் - தனது விமானத்தை, கண்டு - பார்த்து, வியப்பெய்தி - ஆச்சரியமடைந்து, கைவலசெல்விக்கு-கேவல ஞானமாகிய இலக்ஷ்மிக்கு, அணியானை - அழகு செய்பவனாகிய தலைவனாகும் தன்மையையுடைய இம் முனியை, கண்மேல் - தனது கண் முன்பாக, கண்டான் - பார்த்த அவன், புண் மேல் - இரணத்தின் மேல், வேலால் - வேலாயுதத்தால், ஏறுண்டான்போல் - அடிபட்டவன் போல், புகைந்து - கோபித்து, ஆற்றான் - பொறுக்கவொண்ணான், எ-று.

149. காணா நின்ற வேரங் கனற்றக் கடிதோடி
மாணா னேந்தி மாதவர் கோனைக் கொடுவந்து
சேணா ரோடும் விமான மேற்றிச் செல்கின்றான்
வேணார் வெள்ளி மலையி னிவட்கீழ்ப் பரதத்தே.

---

* ஜொலிக்கும் பற்களையுடையவன்; காரணப் பெயர்.

(இ - ள்) காணு - (இம்முனிவனைப்) பார்த்து, நின்ற - (வித்துத்தந்தனுக்கு) ஸத்துவத்தில் நின்ற, வேரம் - வைரபாவமானது, கனற்ற - (அதிகமாக) எரிதலைச் செய்ய (அதாவது: உதயத்தைக் கொடுக்க), மாணுன் - மாட்சிமைக் குணமில்லாத அவன், கடிது - சீக்கிரமாக, ஓடி - சென்று, மாதவர்கோனை - முனி நாயகனுன சஞ்சயந்தனை, எந்தி - தூக்கி, கொடுவந்து - கொண்டுவந்து, சேணுறு - ஆகாயமார்க்கமாக, ஓடும் - செல்லும், விமானம் - தனது விமானத்தில், எற்றி - வைத்து, வேணுர் - மூங்கில்களால் நிறைந்த, வெள்ளிமலையின் - விஜயார்த்த பர்வதத்தின், கீழ் - தாழ்வரையில், இவட்பாதத்து - இவ்விடத்திலுள்ள பாத க்ஷேத்திரத்தில், செல்க - செல்வாயாக, என்றான் - என்று அவனைச் செலுத்தினான், எ - று. (௯)

150. வந்தான் குமுதா வதியு மரிநற் சுவணம் பொற்
கந்தார் கயமும் வதிபின் வைத்த நதிமூன் றும்
சந்தார் சண்ட வேகையு மாய நாமத்தின்
ஐந்தா றுஞ்சென் றொன்றாந் தடத்தி னடுவாக.

(இ - ள்) குமுதாவதியும் - குமுதவதியும், அரி - ஹரியும், நல் - நன்மையாகிய, சுவணம் - ஸ்வர்ணமும், பொன் - அழகிய, கந்து - கல்லுக்கம்பங்களில், ஆர் - கட்டும்படியான, கயமும் - கஜமும் என்கிற மூன்றிலும், வதி - வசிக்கின்ற சக்கக்கை, பின்வைத்த - பின்னாலே வைக்கப்பட்ட, நதிமூன்றும் - ஹரிவதி ஸ்வர்ணவதி கஜவதி யென்கின்ற மூன்று நதிகளும், சந்து - சந்தன மரங்களால், ஆர் - நிறைந்த, சண்டவேகையும் - சண்டவேகையென்கிற ஆறும், ஆய - ஆகிய, நாமத்தின் - அப்பெயர்களையுடைய, ஐந்தாறும் - இந்த ஐந்து நதிகளும், சென்று - போய், ஒன்றாம் - ஒன்றாகச்சேரப்பட்ட, தடத்தின் - விசாலமாகிய இடத்தினுடைய, நடுவாக - மத்தியத்தில், வந்தான் - வந்து சேர்ந்தான், எ - று. (௧௦)

151. சிந்தை முறுக்கி விமானஞ் செல்லா வகைநோக்கி
அந்தத் தடத்தி னடுவே முனியை யவனிட்டு
முன்செய் வினையா லவனம் முனியை முறுக்கினான்
முன்செய் வினையின் மேலே முனியு முறுகின்றான்.

(இ - ள்) சிந்தை - மனதில், முறுக்கி - பலஞ்செய்து செலுத்தியும், விமானம் - தனது விமானமானது, செல்லாவகை - அதற்குமேல் போகாத விதாயத்தை, நோக்கி - பார்த்து, அந்தத் தடத்தின் - அவ்விடத்தின், நடுவே - மத்தியத்தில், முனியை - சஞ்சயந்த முனியை, அவன் - அவ்வித்துத்தந்தன், இட்டு - தள்ளிவிட்டு, முன்செய் - பூர்வத்தில் தன்னுற் பண்ணபட்ட, வினையால் - பாப

அதிர - அதிரும்படியாக, ஆர்க்கும் - சப்திக்கும், தோளினை - கைகளை, துணிப்ப னென்று - வெட்டுவேனென்று, வாளினை - வாளாயுதத்தை, சுழற்றி - சுழற்றிக் கொண்டு, தோன்றும் - தோன்றுவான், எ - று. (கரு)

154. அழலுமிழ்ந் திலங்கும் வெவ்வா யோரியா யழைத்துக் கத்தும்
சுழலும்வெங் கண்ண வாய வெருவையாய்ச் சுழல வோடும்
மழையெனக் துறுகற் பெய்யா மலையெடுத் திடவந் தெய்து
முழையவர் நடுங்க வெல்லா வூனமு மொருங்கு செய்யும்.

(இ - ள்) அழல் - அக்கினியை, உமிழ்ந்து - சொரிந்து, இலங்கும் - விளங்கும், வெவ்வாய் - வெப்பம்பொருந்திய வாயையுடைய, ஓரியாய் - குள்ளநரியாகி, அழைத்து - குரல்கொடுத்தழைத்து, கத்தும் - கூவுவான், சுழலும் - சுழல்கின்ற, வெம் - வெப்பம்பொருந்திய, கண்ணவாய - கண்களையுடையதாகிய, வெருவையாய்- கோட்டானாகி, சுழல - சூழ, ஓடும் - ஓடுவான், மழையென - மேகமானது மழையைச் சொரிவதுபோல, துறுகல் - பெரிய கற்களை, பெய்யா - சொரிந்து, மலை - பர்வதத்தை, எடுத்து - தூக்கி, இட - இவர்பேரில் போடும்படியாக, வந்தெய்தும் - வந்தடைவான், உழையவர் - பக்கத்திலிராநின்ற தனது ஏவலாளர் யாவரும், நடுங்க - பயப்படும்படியாக, எல்லா ஊனமும் - மிதமில்லாத பொல்லாங்குகளெல்லாம், ஒருங்கு - ஒருதன்மையாக, செய்யும் - செய்யாநின்றவனானான், எ - று. (கச)

155. இனையன பலவுஞ் செய்ய விறைவனு மிவையெ லாமென்
வினையின பயன்க ளென்றே வெகுண்டிலன் வினைகண் மேலே
நினைவினை நிறுத்தி நின்றா னீசனு நீங்கிப் போகித்
தனதிடங் குறுகி யாருஞ் சலித்தெழும் படியிற் சொன்னான்.

(இ - ள்) இனையன - இத்தன்மையனவாகிய, பலவும் - அநேகம் உபசருக்கங்களையும், செய்ய - அவன் செய்யவும், இறைவனும் - சஞ்சயந்த முனிவனும், இவையெலாம் - இவைகளெல்லாம், என் - என்னுடைய, வினையின - கருமங்களினது, பயன்களென்று - பலனாகுமென்று, வெகுண்டிலன் - (அவ்வித்துத்தனை) கோபிக்காதவனாகி, வினைகள்மேலே - தனது கருமங்களின்மேலே, நினைவினை - தியானத்தை, நிறுத்தி - ஸ்தாபித்து, நின்றான் - யோகத்தில் நின்றான், ஈசனும் - நீசத்தன்மையனான வித்துத்தந்தனும், நீங்கிப்போகி - அவரைவிட்டு நீங்கிப்போய், தனதிடம் - தனது நகரத்தை, குறுகி - அடைந்து, யாரும் - எவர்களும், சலித்து - சலனத்தை அடைந்து, எழும்படி - தன்னுடன்கூட வரும்படியாக, சொன்னான் - (சில உபாய வசனங்களைச்) சொல்லுகிறான், எ - று.

ஏ - அசை. (கரு)

156. பிலமெனப் பெரிய வாயன் பிணமலா லொன்றுந் தின்னான்
மலைபல விழுங்கி னாலும் வயிறொன்று நிறைதல் செல்லான்
பலபகல் பசியின் வாடிப் பதைப்பின்றி யத்தம் பெற்றா
லலைபல செய்து நம்மை விழுங்கவந் தரக்க னின்றான்.

(இ - ள்) அரக்கன் - ஓர் இராக்கதன், பிலமென - பர்வதக்குகைபோல, பெரிய - பெரிதாகிய, வாயன் - வாயையுடையவன், பிணமலால் - பிரேதங்களே யல்லாமல், ஒன்றும் - யாதொன்றும், தின்னான் - தின்னமாட்டான், மலைபல - பல பர்வதங்களை, விழுங்கினாலும் - தின்றாலும், வயிறு - வயிறானது, ஒன்றும் - கொஞ்சமும், நிறைதல் செல்லான் - நிறையாதவனாவான், (அவன்) பலபகல் - அநேக நாள்கள், பசியின் - பசியினால், வாடி - வாட்டமுற்று, பதைப்பின்றி - அசைவில்லாமல், அத்தம் பெற்றால் - ஸூர்யாஸ்தங்கதமானால், அலைபலசெய்து - பலவாகிய வருத்தங்கள் செய்து, நம்மை - நம்மெல்லாரையும், விழுங்க - விழுங்கும்படியாக, வந்து - இவ்விடத்தில் வந்து, நின்றான் - நின்றான், எ - று. (கசு)

157. இன்றிரா நம்மை யெல்லாம் பிடித்தவ னடையத் தின்னும்
இன்றிரா வாரா முன்னே யீண்டுநா மடையக் கூடி
இன்றிரா வண்ணஞ் செய்யா தொழிதுமே லிழந்தும் வாழ்நாள்
என்றிடா வெவர்க்குஞ் சொன்னா னெரிநர கத்து வீழ்வான்.

(இ - ள்) இன்று இன்றையதினம், இரா - இராத்திரிக்கு, நம்மை யெல்லாம் - நம்மெல்லோரையும், பிடித்து - கைப்பற்றி, அவன் - அவ்விராக்ஷதன், அடைய - ஒருமிக்க, தின்னும் - தின்னுவான், (ஆகையால்) இன்றிரா - இன்றைய விராத்திரி, வாராமுன்னே - வருவதற்குள்ளாக, ஈண்டு - இவ்விடத்தில், நாம் - நாமனைவரும், அடைய - ஒருங்காக, கூடி - சேர்ந்து, இன்று - இன்றைய தினம், இராவண்ணம் - அவன் இவ்விடத்தி லிராதவிதமாக, செய்யாது - செய்யாமல், ஒழிதுமேல் - விடுவோமேயானால், வாழ்நாள் - நமது ஆயுஷ்ய நாளை, இழந்தும் - இழந்துவிட்டோம், என்றிடா - என்று, எவர்க்கும் - அந்த நகரத்திலுள்ள யாவருக்கும், எரி - அக்கினி போன்ற, நரகத்து - நரகத்திலே, வீழ்வான் - வீழ்வதற்குக் காரணமான குரோதமுடைய வித்துதந்தன், சொன்னான் - சொல்லினான், எ - று. (கஎ)

158. எமக்கிவன் செய்த குற்ற மில்லையென் றிகழ வேண்டாம்
உமக்குநா னுறுதி சொன்னே னுரைத்ததும் பின்னை மெய்யாஞ்
சுமக்கலா மலைக ளேந்திச் சொரிந்தவன் றன்னைக் கொன்மின்
எமக்கிவன் செய்த வின்னாப் பின்னையு மறிந்து கொள்மின்.

((இ - ள்) எமக்கு - எங்களுக்கு, இவன் - இவனால், செய்த - செய்யப்பட்ட, குற்றம் - தப்பிதம், இல்லையென்று - யாதொன்றுங் கிடையாதென்று, இகழவேண்டாம் - என் சொல்லை இகழ்ந்து தள்ளவேண்டாம், உமக்கு - உங்களுக்கு, நான் - நான், உறுதி - உறுதி வாக்கியத்தை, சொன்னேன் - சொல்லித் தெரிவித்தேன், உரைத்ததும் - இவ்வாறு சொன்னதும், பின்னை - பிற்பாடு, மெய்யாம் - உண்மையாகும், சுமக்கலாம் - தூக்கத்தகுந்த, மலைகள் - பாவதங்களை, ஏந்தி - தாங்கி, சொரிந்து - போட்டு, அவன்தன்னை - அவ்விராக்கதனை, கொன்மின் - கொல்லுங்கள், எமக்கு - எமக்கு, இவன் - இவ்வரக்கனால், செய்த - செய்யப்பட்ட, துன்பம் - துன்பத்தை, பின்னை - பிற்பாடு, அறிந்துகொண்மின் - தெரிந்துகொள்ளுங்கள், எ - று.

உம் - அசை. (கஅ)

159\. அரக்கனென் றுரைத்த மாற்றஞ் செவிப்புறத் துறலு மஞ்சா
திரைத்தடித் தெழுந்து சென்று செறிதவன் பெருமை காணா
அரக்கனே யிவனென் றஞ்சா வருந்தவ மறிவி லாதார்
வரைத்திர ளேந்திச் சூழ்ந்தார் வானவர் நடுங்கி யிட்டார்.

((இ - ள்) அரக்கனென்று - இராக்ஷதனென்று, உரைத்த - சொன்ன, மாற்றம் - வசனம், செவிப்புறத்து - காதினுள், உறலும் - அடையவும் (அதாவது: கேட்ட மாத்திரத்தில்) செறி - நிறைந்த, தவன் - தபஸையுடைய முனிவானது, பெருமை காணா - பெருமையை உணராதவர்களும், அஞ்சா - எதற்குமஞ்சாமற் செய்யப்படும், அருந்தவம் - அருமையாகிய தபஸினது தன்மையை, அறிவிலாதார் - தெரியாத மூடர்களுமாகிய பல வித்தியாதரர்கள், அஞ்சா - பயந்து, திரைத்து - கடலலைகளைப்போலத் திரண்டு, அடித்து - போர்ப்பறைகளை அடித்து முழக்க, எழுந்து - கிளம்பி, சென்று - அவ்விடம் போய், இவன் - இவன், அரக்கனே யென்று - இராக்ஷதனேயென்று, வரைத்திரள் - பாவதசமூகங்களை, ஏந்தி - தாங்கிக்கொண்டு, சூழ்ந்தார் - முனிவரனைச் சூழ்ந்துகொண்டார்கள், வானவா - தேவர்களும், நடுங்கியிட்டார் - இதைப்பார்த்துப் பயந்தார்கள், எ - று. (கக)

160\. மின்னொடு தொடர்ந்து மேகம் வெடிபட விடித்துத் தோன்றிப்
பொன்மலை தன்னைச் சூழ்ந்து புயலினைப் பொழிவ தேபோல்
மின்னும்வெள் ளெயிற்றர் மேனிக் கரியவர் வெடிப்ப வார்த்துக்
கன்மழை பொழிய வீரன் கனகமா மலையி னின்றான்.

((இ - ள்) மின்னொடு - மின்னற் கொடிகளோடு, தொடர்ந்து - சேர்ந்து, மேகம் - மேகங்கள், வெடிபட - அதிர்ச்சிபடும்படி, இடித்து - இடிகளையிடித்து, தோன்றி - உண்டாகி, பொன்மலைதன்னை - மஹாமேருபர்வதத்தை, சூழ்ந்து -

சூழ்ந்துகொண்டு, புயலினை - மழையை, பொழிவதேபோல் - சொரிவதுபோல், மின்னும் - பிரகாசியாநின்ற, வெள் - வெளுப்பாகிய, எயிற்றர் - பற்களையுடையவர்களாகிய, மேனிக்கரியவர் - கறுப்பு வர்ணமேனியையுடைய வித்தியாதரர்கள், வெடிப்ப - கேட்டோர் செவி வெடிக்கும்படியாக, ஆர்த்து - சப்தித்து, கல்மழை - சிலாவருஷங்களை, பொழிய - சொரிய, வீரன் - வீரபுருஷனாகிய சஞ்சயந்தமுனி, கனகமாமலையின் - மகாமேருபர்வதம்போல், நின்றான் - சலனமின்றி யோகத்தில் நின்றான், எ - று. (உ௰)

வேறு

161. வந்த தானவர் வரையெடுத் தெறியவு மாதவஞ் சலியாதே
நின்ற தன்மையைப் பொறுக்கலா தான்செய்த வெறுப்பினை மாதவ[னோக்கி
இன்றி வன்செய்த லெண்வினை கழிந்தபின் யாவர்க்கு மரிதாகும்
என்று சுக்கிலத் தியானவா ளெடுத்திடர் வினைப்பகை யுடைக்[குற்றான்.

(இ - ள்) வந்த - அவ்வாறு வந்த, தானவர் - வித்தியாதரர்கள், வரையெடுத்து - பர்வதங்களைத் தூக்கி, எறியவும் - போடவும், மாதவர் - உத்கிருஷ்டமான தபசில், சலியாது - சலனமில்லாமல், நின்ற - நிலைபெற்றிருந்த, தன்மையை - குணத்தை, பொறுக்கலாதான் - சகிக்காத வித்துதந்தன், செய்த - இயற்றிய, வெறுப்பினை - த்வேஷத்தை, மாதவன் - சஞ்சயந்தமுனி, நோக்கி - பார்த்து, இன்று - இப்பொழுது, இவன் - இவன், செய்தல் - செய்வது, எண்வினை - அஷ்டகருமங்கள், கழிந்தபின் - நீங்கினபிறகு, யாவர்க்கும் - எவர்களுக்கும், அரிதாகும் - இல்லாததாகும், என்று - என்றெண்ணி, சுக்கிலத் தியானவாள் - சுக்கில தியானமாகிற வாளாயுதத்தை, எடுத்து - தரித்து, இடர் - துன்பம்பண்ணும், வினைப்பகை - கர்மமாகிய சத்துருக்களை, உடைக்குற்றான் - கெடுப்பதற்கு உத்தேசித்துத் தியானத்தில் பொருந்தினான், எ - று. (உக)

வேறு.

162. வீரன் மேற்செலும் வெகுளிவெந் தீயினன் விரைந்தே
மாரி போற்பல மலையெடுத் தெறிந்தன னெறிய
வீரன மேற்செலும் வெகுளியை விலக்கிப்பன் னூறு
வாரஞ் சென்றபின் பமத்தினைப் பறித்தெறிந் திட்டான்.

(இ - ள்) வீரன் - வீரபுருஷனாகிய சஞ்சயந்தமுனியின், மேல் - மேலே, செலும் - செலுத்தப்பட்ட, வெகுளி - கோபமாகிற, வெம் - வெப்பம்பொருந்திய,

தீயினன் - அக்கினியையுடைய வித்துத்தந்தன், விரைந்து - சீக்கிரமாக, மாரி போல் - மழைபெய்வதுபோல, பலமலை - பலமலைகளை, எடுத்து - தூக்கி, எறிந்தனன் - எறிந்தான், எறிய - அப்படி யெறியவும், வீரன் - சஞ்சயந்தமுனி, மேற்செல்லும் - வித்துத்தந்தன் மேலே செல்லும், வெகுளியை - கோபத்தை, விலக்கி - இல்லாமல் நீக்கி க்ஷமைகொண்டு, பன்னூறு வாரம் - இப்படிப் பல நூறு தடவை, சென்றபின் - சென்றப்பாடு, பமத்தினை - பிரமத்தகுணஸ்தானமாகும் தன்மையை, பறித்து - நீக்கி, எறிந்திட்டான் - தள்ளினான் (அதாவது: அப்பிரமத்த குணஸ்தானத்தை யேறினான்), எ - று. (உஉ)

163. விண் புதைக்கவெஞ் சரமவன் பொழிந்தனன் விண்ணோர்
கண் புதைத்துமெய்ம் மயங்கினர் முனிவனு மறிவன்
பண்பு மெய்த்தவர் தன்மையு நூலையும் பார்க்குங்
கண்பு தைக்குமோ ரெழுவரை யக்கணத் தழித்தான்.

(இ - ள) அவன் - அவ்வித்துத்தந்தன், (மேலும்) வெம் - வெப்பம்பொருந்திய, சரம் - பாணங்களை, விண்புதைக்க - ஆகாயமும் மறையும்படியாக, பொழிந்தனன் - சொரிந்தான், விண்ணோர் - தேவர்கள், கண்புதைத்து - கண்ணை மூடிக்கொண்டு, மெய்ம்மயங்கினர் - தேகத்தில் பிரமித்தார்கள். முனிவனும் - சஞ்சயந்த முனியும், அறிவன் - அருகத் பரமேஸ்வரனது, பண்பும் - குணமும், மெய்த்தவர் - மஹா முனிகளாகிய சாதுக்களது, தன்மையும் - குணமும், நூலையும் - பரமாகமத்தையும் (இந்த ஆப்த ஆகம குருக்களென்னும் மூன்றினுடைய தன்மையையும்), பார்க்கும் - பார்க்கும்படியான, கண் - தரிசனத்தை, புதைக்கும் - மறைக்கும், ஓரெழுவரை - சப்தபிரகிருதிகளை, அக்கணத்து - அக்கருணத்தில் அந்த அப்பிரமத்த குணஸ்தானத்திலே நின்று, அழித்தான் - கெடுத்தான் (அதாவது: வாராமல் விலக்கிவிட்டான்), எ - று.

இதனால் க்ஷாயிக சம்யக்த்வ ஞானம் நிலைத்த தென்பது பெறப்படும். (உ௩)

164. கவ்வை நூற்றட னெரிகனல் கடுகினன் கடுக
வெவ்வந் தீர்முனி வினைகளை யழிப்பனென் றெண்ணு
பவ்வ நூறுநா ளும்வினைப் பகைநிலை தளர்த்தான்
புவ்வி யோடுமின் றணியட்டி தன்னையும் புணர்ந்தான்.

(இ - ள்) எரிகனல் - எரிகின்ற அக்கினிபோன்ற, நூற்று - நூற்றுக்கணக்காகிய, கவ்வை - துன்பங்களை, உடன் - உடனே, (அவ்வித்துத்தந்தன்) கடுகினன் - சீக்கிரமாகச் செய்தான், கடுக - அவ்வாறு சீக்கிரமாகச் செய்ய, எவ்வந்தீர் - குற்றம் நீங்கிய, முனி - முனிவரனும், வினைகளை - கருமங்களை, அழிப்பனென்று - கெடுப்

பையனென்று, எண்ணு - நினைத்து, பல்வம் - கடல்கள், நூறுநூறும் - நூறுநூறுக ளாகும், வினைப்பகை - கர்மசத்துருக்களுடைய, நிலை - ஸ்திதியை, தளர்த்தான் - குறைவு பண்ணியவனாகி, புவ்வியோடு - அபூர்வ கரண குணத்தோடு, நின்று - நிலைபெற்று, அணியட்டி தன்னையும் - பிறகு அநிவிருத்தி கரண குணத்தையும், புணர்ந்தான் - சேர்ந்தான், எ - று. (உச)

வேறு.

165. காரட்ட மேனி யானுங் கண்டவர் நடுங்கும் வண்ணம்
ஓரெட்டுத் திசைகள் மேலு முருமெனத் தோன்ற வீரன்
ஆரட்டி யோடுங் கூடா வினைப்படைத் தலைவ ராய
வீரெட்டு வினையர் தம்மை யெடுத்தெறிந் திட்டு நின்றான்.

(இ - ள்) கார - கருமேகத்தை, அட்ட - ஜெயித்திராநின்ற, மேனியானும் - சரீரகாந்தியுடைய விகதுத்தந்தனும், கண்டவர் - பார்த்தவர், நடுங்கும் - பயப்படும், வண்ணம் - விதமாய், ஓரெட்டுத் திசைகள் - எட்டுப்பக்கங்களிலும், மேலும் - ஆகாயத்திலும், உருமென - இடிபோல கர்ஜித்து, தோன்ற - தோன்றித் துன்பத்தைச்செய்ய, வீரன் - வீரனாகிய முனிவரன், ஆரட்டியோடும் - அநிவிருத்திகரண குணத்தினோடும், கூடா - சேர்ந்து (அந்தர்முகூர்த்த காலமாகிய அக்குணஸ்தானத்தின் அந்தியத்து ஒன்பது ஸமயத்தின் முதல் ஸமயத்தில்), வினை - கர்மங்களின், படைத்தலைவராய - சேனாதிபதிகளாகிய, ஈரெட்டு வினையர் தம்மை - பதினாறு கருமப் பிரகிருதிகளை, எடுத்து - தூக்கி, எறிந்திட்டு - அப்புறம் தள்ளிக் கெடுத்து, நின்றான் - (ப்ரதக்வ விதர்க்க விசாரமென்னும் ப்ரமம சுக்கிலத்தியானத்தோடு) நிலைபெற்றிருந்தான், எ - று.

பதினாறு பிரகிருதிகள் :—(நாமகர்மத்தில்) நரகதி, தக்கதியானுபூர்வி, திரியக்கதி, தக்கதியானுபூர்வி, ஏகேந்திரியம், த்வீந்திரியம், திரீந்திரியம், சதுரிந்திரியம், ஆதபம், உத்யோதம், ஸ்தாவாம், சூக்ஷ்மம், சாதாரண சரீரம் எனப் பதின்மூன்றும், (தரிசனாவரணீயகர்மத்தில்) நித்திராநித்திரை, ப்ரசலாப்ரசலை, ஸ்தியானக்கிரந்தி என மூன்றுமாம். (உரு)

166. மயக்கப்போ ரரசன் மக்கள் வந்தெண்மர் தம்மு ளொன்றிக்
கயக்கறப் பொருது மாயக் காய்ந்தலி மாய்ந்த பின்னை
வியக்கவந் தொருத்தி வீழ்ந்தாள் மெல்லிய ரவ ரோடு[ந்தான்.
முயப்பிழைத் தொருவ னின்று ளெநந் தபோர் தொடங்கி மாய்

(இ - ள்) (அப்போது) மயக்கம்-மோஹநீயமாகிய, போர்-யுத்தத்தைச் செய்யும்படியான, அரசன் - கர்மராஜனது, மக்கள் - புத்திரர்களான, எண்மர் - எட்டுப்

பேர்கள், வந்து - சேர்ந்து வந்து, தம்முள் - தங்களுக்குள், ஒன்றி - மனம் ஒன்று பட்டு, கயக்கற - சோர்வின்றி, பொருது - தாக்கி, மாய - இரண்டாவது ஸமயத்தில் மாய்ந்துவிட, காய்ந்து - கோபித்துத் தாக்கி, அலி - நபும்ஸகவேதமும், மாய்ந்த பின்னை - மூன்றாஞ் சமயத்தில் மாய்ந்துபோன பிறகு, (நாலாம் ஸமயத்தில்) வியக்க - ஆச்சரியமாக, வந்து - வந்து, ஒருத்தி - ஸ்திரீவேதமென்னும் கர்மபிரகிருதி, மெல்லியர் - அற்ப குணமுடையவர்களாகிய, அறுவரோடும் - (தனக்குப் பின் ஐந்தாம் சமயத்தில் கெடும்) ஹாஸ்யாதி அறுவர்களுடனே, வீழ்ந்தாள் - நாசத்தையடைந்தாள், (அதாவது: அவள் நாசத்தையடைய அவ்வறுவரும் ஐந்தாம் சமயத்தில் கெட்டார்கள். அவ்வாறு ஹாஸ்யாதி யறுவர்கள் ஐந்தாம் ஸமயத்தில் கெட), உயப்பிழைத்து - அப்போது நிலைபெறத் தப்பிப்பிழைத்து, ஒருவன் - புருஷவேதமென்னும் ஒருவன், நின்றான் - தங்கினான், (அவ்வாறு நின்ற அவன்) ஒருங்கு - உடனே (ஆறாம்ஸமயத்தில்), போர் தொடங்கி - யுத்தஞ் செய்யத்தொடங்கி, மாய்ந்தான் - கெட்டான், எ - று.

எட்டுப்பேர்:—அப்பிரத்தியாக்கியான குரோதம், மானம், மாயம், லோபம், பிரத்தியாக்கியான குரோதம், மானம், மாயம், லோபம் என்பனவாம்.

அறுவர்:—ஹாஸ்யம், ரதி, அரதி, சோகம், பயம், ஜுகுப்சை என்பனவாம். (௨௬)

167. கல்மழை கவணிற் பெய்துங் கணைமழை வில்லிற் பெய்தும்
எல்லையி லிடும்பை செய்த விறைவன்மே லுறுமை நோக்கிப்
புல்லியர் பொருது நால்வர் போர்முறை மூவர் வீழ்ந்தார்
மெல்லியா னொருவன் வீழ்ந்து கிடந்துபின் மாய்ந்து போனான்.

(இ - ள்.) கல்மழை - சிலா வருஷங்களை, கவணில் - கல்லெறி கயிற்றினால், பெய்தும் - சொரிந்தும், கணைமழை - அம்பு வருஷங்களை, வில்லில் - வில்லினால், பெய்தும் - சொரிந்தும், எல்லையில் - அளவில்லாத, இடும்பை - துன்பங்களை, செய்தல் - செய்வது, இறைவன்மேல் - முனியின் பேரில், உறுமை - அடையாமையை, நோக்கி - பார்த்து, புல்லியர் - அற்பர்களாகிய, நால்வர் - ஸஞ்சுவலன குரோத மான மாயா லோபமென்னும் நால்வர்களில், பொருது - சகிக்காமல், மூவர் - ஸஞ்சுவலன குரோத மான மாயா என்ற மூவர்களும், போர் - யுத்தத்தில், முறை - கிரமமாக (ஏழாஞ் சமயத்தில் ஸஞ்சுவலன குரோதமும், எட்டாஞ் சமயத்தில் ஸஞ்சுவலன மானமும், ஒன்பதாவது ஸமயத்தில் ஸஞ்சுவலன மாயையும்), வீழ்ந்தார் - நாசமடைந்தார்கள், (இந்த அநிவிருத்திகுணஸ்தானத்தில் இவ்விதமாக முப்பத்தாறு கர்மங்கள்கெட) மெல்லியான் - மிருதுவாகிய தன்மையையுடைய, ஒருவன் - ஸஞ்சுவலன லோப மென்னுமொருவன், வீழ்ந்து கிடந்து - தங்கியிருந்து, பின் - பிற்பாடு, (ஸூக்ஷ்ம ஸாம்பராயகுணஸ்தானத்தின் அந்திய ஸமயத்திலே) மாய்ந்து போனான் = அவனும் நாசமடைந்தான், எ-று.

## வேறு.

168. விளங்கு வாளெயி றிலங்கநக் குருமெனத் தெழியாப்
புளங்கொள் கார்முகி லெனவிழி யாப்பொடித் தெழுந்தான்
துளங்கு சுக்கிலத் தியானவா ளுளங்கறப் பிடியாக்
களங்கொள் சிந்தையன் பசலைநித் திரைகளைக் கடிந்தான்.

(இ - ள்) விளங்கு - விளங்குகின்ற, வாள் - ஒளிபெற்ற, எயிறு - பற்கள், இலங்க - பிரகாசிக்க, நக்கு - நகைத்து, உருமென - இடியைப்போல, தெழியா - கர்ஜித்து, புளங்கொள் - வேகத்தைக்கொண்ட, கார் - கறுத்த, முகிலென - மேகம்போல, விழியா - கண்ணைவிழித்து, பொடித்து - மயிர் சிலிர்த்து, எழுந்தான் - (வித்துத்தந்தன்) உபத்திரவஞ்செய்ய எழுந்தான், (அப்போது) துளங்கும் - பிரகாசியாநின்ற, சுக்கிலத்தியானவாள் - இரண்டாவது சுக்கிலத்தியானமாகிய ஏகத்துவ விதர்க்க விசாரமென்னும் வாளாயுதத்தை, துளக்கற - சலனமின்றி, பிடியா - பிடித்து, களங்கொள் - மனதிடமாகக்கொண்ட, சிந்தையன் - தியானத்தையுடைய சஞ்சயந்தமுனி, (க்ஷீணகஷாய குணஸ்தானத்தின் அந்தியத்தில் இரண்டுஸமயத்தின் முதல் ஸமயத்திலே) பசலைநித்திரைகளை - ப்ரசலைநித்திரையென்னுமிரண்டு கருமப்பிரகிருதிகளை, கடிந்தான் - விலக்கினான், எ - று. (உअ)

169. கணங் கடந்தபின் கண்மிசை நால்வரைக் காணாப்
பிணங்கு மெல்லையு ளறிவினைச் செறிவுறுத் தைவர்
இணங்கி வந்தைவ ரிடையுறு மவரொடு மெதிர்ந்தார்
மணந்து மற்றவ்வீ ரெழுவருங் கணத்திலே மடிந்தார்.

(இ - ள்) கணங்கடந்தபின் - முதல் ஸமயம் நீங்கினபிறகு, கண்மிசை நால்வரை - தரிசனாவரணீயமென்னும் நால்வரை, காணா - பார்த்து, பிணங்குமெல்லையுள் - அவர்களுடன் போராடுங்காலத்தில், அறிவினைச் செறிவுறுத்தும் - ஞானத்தைத் தடைசெய்யும், ஐவர் - ஞானாவரணீயமாகிய ஐவரும், இணங்கி வந்து - சேர்ந்துவந்து, ஐவர் இடையுறும் அவரொடும் - அந்தராயமென்கிற ஐவருடனே கூடி, எதிர்ந்தார் - எதிர்த்தார்கள். மணந்து - அப்படிச்சேர்ந்து, அவ்வீரெழுவரும் - அந்தப்பதினாலு பிரகிருதிகளும், கணத்திலே - க்ஷீணகஷாய குணஸ்தானத்தின் அந்திய சமயத்திலே, மடிந்தார் - நாசமானார்கள், எ - று.

இவ்விடத்தில் தரிசனாவரணீயம் நான்காவன :—சக்ஷுர்தரிசனாவரணீயம், அசக்ஷுர்தரிசனாவரணீயம், அவதி தரிசனாவரணீயம், கேவல தரிசனாவரணீயம் என்பனவாம்.

ஞானாவரணீயம் ஐந்தாவன :—மதிஞானாவரணீயம், ஸ்ருத ஞானாவரணீயம், அவதிஞானாவரணீயம், மனப்பரிய ஞானாவரணீயம், கேவல ஞானாவரணீயம் என்பனவாம்.

*அந்தராயம் ஐந்தாவன :—தானாந்தராயம், லாபாந்தராயம், போகாந்தராயம், உபபோகாந்தராயம், வீரியாந்தராயம் என்பனவாம்.*

*மற்று - அசை.* (உக)

வேறு.

170. காதி நால்வர சழிந்தன வழிதலுங்
கைவல வொரு நான்மை
போதி யாதிகள் புணர்ந்தன புணர்தலும்
புகழ்ந்துல கொருமூன்றும்
சோதி மாமலர் சொரிந்துவந் தடைந்தன
ரடைதலுந் துயரெய்தித்
தீது செய்தவன் றிகைத்தனன் றிகைத்திடா
நிலத்திடைப் போய் வீழ்ந்தான்.

**(இ - ள்)** காதி - காதிகாமங்களாகிற, நால்வ - (ஞானாவரணீய தரிசனாவரணீய மோஹனீய அந்தராய மென்னும்) நான்குவிதமாகிய, அரசு - காமராஜ்யங்கள், அழிந்தன - இவ்வாறு கெட்டன, அழிதலும் - இப்படிக் கெடவும், கைவல - கைவல்லிய மாகிற, ஒரு - ஒப்பற்ற, போதியாதிகள் - ஞான முதலாகிய, நான்மை - (அனந்த ஞான அனந்த தரிசன அனந்த ஸுகஹ அனந்த வீரியமென்னும்) அனந்த சதுஷ்டயங்கள், புணர்ந்தன - சேர்ந்தன, புணர்தலும் - அங்ஙனம் சேர்தலும், புகழ்ந்து - புகழ்ந்து, உலகு ஒரு மூன்றும் - மூன்றுலகத்திலுமுள்ள தேவர்கள், சோதி - பிரகாசமாகிய, மாமலர் - மிகுதியாகிய புஷ்பங்களை, சொரிந்து - பொழிந்து, வந்தடைந்தனர் - வந்து சேர்ந்தார்கள், அடைதலும் - அங்ஙனம் சேர்தலும், தீதுசெய்தவன் - பொல்லாங்குசெய்த வித்துதந்தன், துயரெய்தி - துன்பமடைந்து, திகைத்தனன் - பிரமித்தான், திகைத்திடா - அவ்வாறு பிரமித்து, (பின்பு), போய் - கொஞ்ச தூரத்தில் போய், நிலத்திடை - பூமியின் மேல், வீழ்ந்தான் - வீழ்ந்து கிடந்தான், எ - று. (௯0)

வேறு.

171 பகலவ னெழுச்சியிற் பவணர் தோன்றினார்
இகலிடத் தவர்தொண் டிசையு மீண்டினார்
முகைமலர் சொரிந்துமே லவர்கண் மூடினார்
இகலொறுத் தவன்செப்பின் மணியை யொத்தனன்.

**(இ - ள்)** பகலவன் - சூரியனுடைய, எழுச்சியில் - உதயம்போல், பவணர் - பவணதேவர்கள், தோன்றினார் - கீழ்நின்றும் வந்தார்கள், இகலிடத்தவர்கள் -

றும் மத்திம லோகத்திலிராநின்ற வியந்தரஜோதிஷ்கதேவர்கள், எண்டிசையும் - அட்டுத்திக்குகளிலும், ஈண்டினார் - நெருங்கினார்கள், மூகை - கூட்டமாக, மலர் - புஷ்பங்களை, சொரிந்து - பொழிந்து, மேலவர்கள் - கல்பவாஸிதேவர்கள், மூடினார் - வந்து மூடினார்கள், இகல் - கருமங்களின் பராக்கிரமத்தை, ஒறுத்தவன் - கண்டித்துக் குறைத்து நீக்கின சஞ்சயந்த பட்டாரகன், செப்பின்மணியை - செப்புக்குள்ளிராநின்ற இரத்தினத்தை, ஒத்தனன் - நிகர்த்தான், எ - று. (௱௭௧)

## வேறு.

172 தாம நான்றன சந்தன மெழுகின சருவலத் தானவந்த
தூம மார்ந்தன சுடர்விளக் கெரிந்தன சொரிந்தன மலர்மாரி
வாம வாரியின் வால்வளை யரிசியின் மங்கையர் நடமுன்னாத் [தார்.
காம வேளைவென் றிருந்தவன் றிருந்தடி பணிந்துடன் றுதிசெய்

(இ - ள்) (அவர்களெல்லோரும் வந்து கூடியபின் சஞ்சயந்த பட்டாரகர் இருந்த ஸ்தானத்தில்) தாமம்நான்றன - (மேலிடங்களெல்லாம்) பூமாலை முதலிய மாலைகள் தொங்கவிடப்பட்டன, சந்தனம் - சந்தனக்குழம்பால், மெழுகின - கீழிடங்களெல்லாம் மெழுகப்பட்டன, சரு - (தேவநிர்மிதமாகிய அல்லது நிர்மாபணமாகிய) பலகாரவகைகளோடும், பலதான் - பழவகைகளோடும், வந்த - வரப்பட்ட, தூமம் - அகில்தூபங்களும், ஆர்ந்தன - நிறைந்தன, சுடர் - பிரகாசியாநின்ற, விளக்கு - இரத்தின தீபம் முதலியவைகளும், எரிந்தன - பிரகாசித்தன, மலர்மாரி - புஷ்பவருஷங்கள், சொரிந்தன - பொழியப்பட்டன, வாரியின் - ஸமுத்திரத்திலுண்டாகிய, வாமம் - அழகிய, வளை - சங்கின் வர்ணம்போல், வால் - வெளுப்பாகிய, அரிசியின் - அக்ஷதை அரிசிகளையுடைய (அதாவது: அக்ஷதைகளால் அர்ச்சிக்கின்ற), மங்கையர் - தேவரமணியர்கள், நடம்முன்னா - நர்த்தனத்துக்கெதிரில், காமவேளை - மன்மதனை (அதாவது: மோஹநீய கருமத்தை), வென்று - ஜெயித்து, இருந்தவன் - இராநின்ற வீதராகரூபியாகிய சஞ்சயந்த பட்டாரகனுடைய, திருந்து - திருத்தமாகிய, அடி - பாதங்களை, பணிந்து - வணங்கி, உடன் - ஒருதன்மையாக (அதாவது: ஒற்றுமையாக), துதி - ஸ்தோத்திரங்களை, செய்தார் - (எல்லோரும் கீழ்வருமாறு) செய்தார்கள், எ - று.

"வாமவாரியின் வால்வளை யரியினமங்கையர் நடமுன்னா" எனக்கொண்டு "வெள்ளிய சங்கு வளையலையும் பாதச்சிலம்புகளையு மணிந்த மங்கையர் நடனத்தின் முன்பாக" என்று பொருள்கொள்ளினு மமையும். (௱௭௨)

173. விதிக ளைங்கையுங் கடந்தவை யடைந்தனை
விகலமி லொரு தன்மை

மதிக ணான்கையுங் கடந்தனை யடைந்தனை
புலகெலா மதி யொன்றிற்
கதிக ணான்கையுங் கடந்தனை யடைந்தனை
யகதியைக் கதி யின்றித்
துதிக ணான்கையுங் கடந்ததோர் துறவுடைச்
சுகதவெம் பெருமானே.

(இ - ள்) விதிகள் நான்கையும் - காதிசதுஷ்டயங்களை, கடந்தனை - தாண்டினாய், விகலமில் - குற்றமில்லாத, ஒரு - ஒப்பற்ற, நான்மை - அனந்த சதுஷ்டயத்தை, அடைந்தனை - அடைந்தாய், மதிகள் நான்கையும் - (மதி, சுருத, அவதி, மனப்பரிய மென்னும்) நான்குஞானங்களையும், கடந்தனை - தாண்டினாய், உலகு எலாம் - லோகாலோக சமஸ்தங்களையும், மதியொன்றில் - கேவலஞ்ஞானமொன்றினால், அடைந்தனை - அடைந்தாய், கதிகணான்கையும் - சதுர்க்கதிகளையும், கடந்தனை - தாண்டினாய், அகதியை - மோட்ச கதியை, கதியின்றி - அதற்கு மேல் கதியில்லாமல், அடைந்தனை - சேர்ந்தாய், துதிகள்நான்கையும் - (அரகந்த சித்த ஸாது தர்மமென்கிற) சதுஸ்துதிகளையும், கடந்து - தாண்டிய,தாகிய, ஓர் - ஒப்பற்ற, துறவுடை - பரத்திரவியாபேட்சையினீங்கின சுத்தாத்துமதியான மான, சுகத - ஸௌக்கியமுடைய, எம்பெருமானே - எங்கள் தலைவனே, எ - று.

174. உலக மூன்றையு மேந்திடு மாற்றலை யொருகணத் துலகத்தின்
அலகி னீளமு மகலமு முயரமு மணுவினா லளக்கிற்கும்
இலகு தன்மையை யியல்பிலெவ் வுயிர்களு மியற்றுமத் தொழில்
[செய்து
விலகி நின்றிடும் விசித்திரக் கிரியைநல் வீரிய விறல்வேந்தே.

(இ - ள) உலக மூன்றையும் - மூவுலகங்களையும், ஏந்திடும் - தரித்திரா நின்ற, ஆற்றலை - ஞானசக்தியையுடையாய்!, ஒருகணத்து - ஒரு ஸமயத்தில், உலகத்தின் - உலகத்தினுடைய, அலகில் - கணக்கில்லாத, நீளமும் - நீளத்தையும், அகலமும் - அகலத்தையும், உயரமும், உன்னதத்தையும், அணுவினால் - பரமாணுவினாலே, அளக்கிற்கும் - அளக்கும்படியான, இலகும் - விளங்காநின்ற, தன்மையை - ஸ்வபாவமுடையாய்!, இயல்பில் - ஸ்வபாவகுணமாகிய ஞான தரிசனத்தினது முடிவில்லாத விருத்தியினால், எவ்வுயிர்களும் - ஸகல ஜீவன்களும், இயற்றும் - செய்கின்ற, அத்தொழில் - அந்தக் காரியங்களை, செய்து - பரமாகமத்தினால் சகலருக்கும் தெரியச்செய்து, விலகிநின்றிடும் - ஒன்றிலும் பற்றாமல் நீங்கிநிற்கும், விசித்திரக்கிரியை - ஆச்சரியமாகிய கிரியையையுடையாய், நல் - நன்மையாகிய, வீரிய - அனந்தவீரியமாகிய, விறல் - பராக்கிரமத்தையுடைய, வேந்தே - நாதனே, எ - று. (௩௭)

175. மறைகள் மாய்ந்திட வான்பொறி யைந்தையு
மாற்றிமற் றவற்றா லாம்
முறையு நீங்கமூ வுலகினோ டலோகின்முக்
காலத்தி னிகழ்வெல்லாம்
உறலு மோர்தலு மின்றியே யோர்கணத்
தொற்றுமை முதலாய
அறியு நின்னறி வறிவதோ ரறிவெமக்
கருள்செயெம் பெருமானே.

(இ - ள்) மறைகள் - ஸ்வபாவகுணங்களை மறைக்கும் ஆவரணிய கருமங்கள், மாய்ந்திட - நீங்க, வான் - பெரிதாகிய, பொறியைந்தையும் - பஞ்சேந்திரியங்களையும், மாற்றி - விஷயங்களிற்செல்லாமல் தடுத்து, மற்று - பின்னே, அவற்றால் - அவ்விந்திரியங்களால், ஆம் - ஆகின்ற, முறையும் - கிரமமும், நீங்க - நீங்கிவிட, மூவுலகினோடு - மூன்றுலகங்களோடு, அலோகின் - அலோகத்தினுடையவும், முக்காலத்தின் - பூத பவிஷ்ய வர்த்தமான மென்னும் திரிகாலங்களினுடையவும், நிகழ்வெல்லாம் - நிகழ்ச்சிகளையெல்லாம், உறலும் - அடைதலும், ஓர்தலும் - நினைத்தலும், இன்றி - இல்லாமல், ஓர் கணத்து - ஒரு சமயத்தில், ஒற்றுமை முதலாய - ஸாமான்ய முதலாகிய எல்லா விசேஷங்களையும், அறியும் - அறிகின்ற (கேவலஞானமாகிய), நின்னறிவு - உனது ஸ்வபாவ ஞானமானது, அறிவது - ஸகலத்தையும் அறியும்படியான, ஓர் - ஒப்பற்ற, அறிவு - திவ்வியஞானமாகும், எம்பெருமானே - எங்கள் தலைவனாகிய ஸ்வாமியே!, எமக்கு - எங்களுக்கு, அருள் செய் - ஸ்வபாவகுணமாகிய அந்தச் சுத்த ஞானத்தைப் பெறும்படியாக உபதேசம் பண்ணியருள்வாயாக, எ - று. (கூரு)

176. பொறிக ளாறிலைம் புலத்தினாற் கதியின்முக் காலத் திருபோகத்
துறவியாவையு முற்றவின் பத்தினோ டுனதின்பந் தனையொப்பித்
தறியின் மற்றவை யணுவுமா காயமு மனையவுன் பேரின்பத்
துறைதி யுன்னைநீ யுன்னுளே யனுபவித் துலகவுத் தமனீயே.

(இ - ள்) பொறிகள் ஆறில் - ஷடிந்திரியங்களில், ஐம்புலத்தின் - பஞ்சவிஷயங்களில், நாற்கதியின் - சதுர்க்கதிகளில், முக்காலத்து - மூன்று காலங்களில், இருபோகத்து - போகோப போகங்களில், உறவியாவையும் - (அநுபவியாநின்ற) ஸகல ஜீவன்களும், உற்ற - அடைந்த, இன்பத்தினோடு - சௌக்கியத்தினோடு, உனது - உன்னுடைய, இன்பந்தன்னை - சௌக்கியத்தை, ஒப்பித்து - ஒன்று சேர்த்து, அறியின் - தெரியுமிடத்தில், மற்றவை - (ஸகல ஸம்ஸாரப் பிராணிகளுடைய) ஸுகங்கள், அணுவும் - அணுவையும், ஆகாயமும் - ஆகாயத்தையும், அனைய - நிகாப்பனவாம், (இத்தகைய) உன் - உனது,

பேரின்பத்து - பெரிதாகிய அனந்த ஸௌக்கியத்தில், உறைதி - நீ தங்கியிருப்பாயாக, உன்னை - உன்னை, நீ - நீ, உன்னுள்ளே - உன்னுக்குள்ளே, அனுபவித்து - அனுபவித்து, உலகம் - இம்மூவுலகத்துக்கும், உத்தமன் - மேலானவன், நீயே - நீயேயாகும், எ - று. (௱௭௬)

வேறு.

177. செறிந்த மாதவன் றிருவடித் தலத்தினிப் படிச்சில துதிசொன்னார்
எறிந்த காதியி னெண்குணத்தின னெய்தினா னுலகுச்சி
பறந்து வந்துநற் பழுமரப் பறவையின் பன்னகர் முதலானோர்
நிறங்கொள் மாமலர் சொரிந்தன ரேத்தினர் வேர்த்தன வினையெல்
[லாம்.

(இ - ள்) செறிந்த - சேர்ந்திராநின்ற, மாதவன் - மஹாதபஸையுடைய சஞ்சயந்த பட்டாரகரது, திரு - அழகிய, அடித்தலத்து - பாதமூலத்தில், இப்படி - இந்தப் பிரகாரம், சில - சிலவாகிய, துதி - ஸ்தோத்திரங்களை, சொன்னார் - அவர்கள் சொன்னார்கள், (அப்போது) எறிந்த அகாதியின் - அகாதி கர்மங்களைக்கெடுத்ததினுல், எண்குணத்தினன் - அஷ்டகுணங்களை யுடையவனாய், உலகுச்சி - உலகுச்சியாகிய ஸித்தக்ஷேத்திரத்தை, எய்தினன் - அவன் அடைந்தான், பன்னகர் முதலானோர் - பவணலோக முதலாகிய மூவுலகத்துள்ள தேவர்களும், நல் - நன்மையாகிய, பழுமரம் - பழங்களையுடைய மரத்தில், பறவையின் - பட்சிகள்வந்து சேர்வதுபோல், பறந்துவந்து - வேகமாகவந்து, நிறங்கொள் - நல்ல நிறத்தைக்கொண்ட, மாமலர் - சிறந்த புஷ்பங்களை, சொரிந்தனர் - பொழிந்தவர்களாய், ஏத்தினர் - ஸ்துதித்தார்கள், வினையெல்லாம் - அவர்களுடைய கருமங்களெல்லாம், வேர்த்தன - வேர்த்துப்போயின, (அதாவது: நிலைதளர்ந்தன), எ - று.

வேறு

178. அமிர்தினு நஞ்சு கண்ணுக் கழகிதென் றுண்ட வன்போல்
திமிரமாம் வினையை நீக்கிச் சித்திசெய் தவத்திற் காக்கும்
அமரனா துருவங் கொண்ட முனிவனுந் தமரன் றேனும்
தமரென மகிழ்ந்து நெஞ்சிற் சாலவும் பணிந்து நின்றான்.

(இ - ள) அமிர்தினும் - அமிர்தத்தைப் பார்க்கினும், நஞ்சு - விஷமானது, கண்ணுக்கு - நேத்திரத்தினது பார்வைக்கு, அழகிதென்று - அழகாயிருக்கிறதென்று, உண்டவன்போல் - அதனைப் புசித்தவன்போன்று, திமிரமாம் - மித்தியாத்துவ அந்தகாரத்தினுலாகிய, வினையை - கருமங்களை, நீக்கி - விலக்கி, சித்தி - ஸித்தியை, செய் - செய்யும்படியான, தவத்திற்கு - தபத்திற்கு, ஆக்கும் -

(தெளிவில்லாத தன்மை பெற்று அதாவது: மித்தியாத்துவமடைந்து, சம்சாரத்தை) ஆக்கும்படியான, அமரனது - பவணதேவனாகிய தரணேந்திரனது, உருவங்கொண்ட-ரூபத்தைக்கொண்ட, முனிவனும் - பூர்வம் சயந்தமுனியாகிய, குமரன்றானும் - இளையனாகிய தரணேந்திரனும், தமரென - இச்சஞ்சயந்த பட்டாரகர் தனது பந்துவென்று, நெஞ்சில் - மனதில், மகிழ்ந்து - சந்தோஷித்து, சாலவும் - மிகவும், பணிந்து - வணங்கி, நின்றான் - நின்றனன், எ - று. (௧௭அ)

179. வில்லொடு கணைகள் வேல்கோல் விட்டெறி பிண்டி பாலம்
கல்லொடு மரமும் வாவி திடர்படக் கிடந்த காணூ
வெல்லைசெய் தவதி யாற்பார்த் திவன்செய லோவீ தென்னாப்
பல்லவர் நடுங்க வோடிப் பாதத்தா லுதைப்ப வீழ்ந்தான்.

(இ - ள்) வில்லொடு - விற்களோடு, கணைகள் - அம்புகளும், வேல் - வேல்களும், விட்டெறிகோல் - கைவிட்டெறியும் கோல்களும், பிண்டிபாலம் - பிண்டிபாலம் என்கிற ஆயுதங்களும், கல்லொடு - கற்களோடு, மரமும் - மரங்களும், வாவி - அந்தடாகமாகிய க்ஷேத்திரத்தில், திடர்பட - மேடுபட, கிடந்த - கிடந்தவற்றை, காணூ - கண்டு, எல்லை செய்து - அளவுசெய்து, அவதியால் - அவதி ஞானத்தினாலே, பார்த்து - பார்த்து, இவன் - இவ்வித்துத்தனது, செயலோ -செய்கையோ, ஈது - இது, என்று - என்று, பல்லவர் - பலரும், நடுங்க - பயப்படும்படியாக, ஓடி - வேகமாய்ச் சென்று, பாதத்தால் - தனது காலினால், உதைப்ப - உதைக்க, வீழ்ந்தான் - வித்துத்தந்தன் பூமியில் விழுந்தான், எ - று.

180. மேகபா சத்திற் றோன்று மின்னனை தந்தத் தாளைப்
போகபா சத்தின் வந்து பொருந்திய சுற்றந் தோடும்
நாகபா சத்திற் கட்டா நடுக்கட லிடுவ னென்னச்
சோகபா சத்தி னாவா யுடைந்தவர் துயா முற்றார்

(இ - ள்) மேகபாசத்தில் - மேகக்கூட்டத்திலே, தோன்றும் - தோன்றுகின்ற, மின்னனை - மின்னலைப்போன்ற, தந்தத்தாளை - பற்களையுடைய வித்துத்தந்தனை, போகபாசத்தில் - போகவாஞ்சையினால், வந்து - கூடவந்து, பொருந்திய - சேர்ந்த, சுற்றத்தோடு - பந்துக்களோடு, நாகபாசத்திலே - நாகபாசத்திலே, கட்டா - கட்டி, நடுக்கடல் - ஸமுத்திர நடுவிலே, இடுவன் - போடுவேன், என்ன - என்று சொல்ல, சோகபாசத்தில் - துக்க ஸமூகத்தால், நாவாயுடைந்தவர் - (கடலிலே) கப்பலுடைபட்டவர்களது, துயரம் - துக்கத்தை (அதாவது: கடல் நடுவில் கப்பலுடைபட்டவர் அடைந்த துன்பத்தைப்போன்ற துன்பத்தை), உற்றார் - வித்தியாதரர்கள்) பொருந்தினார்கள், எ - று. (௧௮௰)

181. தாரணன்றன் கோபங் காணூத் தானவர் தலைவ ரெல்லாம்
மாரணமின் றெய்திற் றென்று மயங்கிய மனத்த ராகிச்

சரணமுன் சரண மென்றுச் சார்ந்தனர் பலருஞ் சோர்ந்தார்
காணந்தம் புலங்கள் காணுர் கைதொழு திறைஞ்சி மாதோ.

(இ - ள்) தாணன்றன் - தரணேந்திரனது, கோபம் - கோபத்தை, காணு - பார்த்து, தானவர் - வித்தியாதரர்களில், தலைவர் எல்லாம் - தலைமை பெற்றவர்களெல்லாம், இன்று - இப்போது, மாணம் - மரணமானது, எய்திற்று - வந்தது, என்று - என்று, மயங்கிய - பிரமித்த, மனத்தராகி - மனதுடையவர்களாகி, காணம் - (தப்பித்துக்கொள்ளும்) செய்கையை, தம் - தங்களுடைய, புலங்கள் - விஷயங்களில், காணுர்-(வேறொருவகையிலும்) அறியாதவர்களாகி, கைதொழுது - கைகூப்பி, இறைஞ்சி, வணங்கி, உன் சரணம் - (வாராய் தரணேந்திரனே) உனது பாதம், சரணம் - (எங்களுக்கு) ரக்ஷணே, என்று - என்று சார்ந்தனர் - அடைக்கலமானுர்கள், பலரும் - அவர்களைச் சேர்ந்த வேறு பல பேர்களும், சோர்ந்தார் - சோர்வுற்ருர்கள், எ - று. (கூசு)

182. மின்னெத்த துந்தத் திந்தப் பாவிதான் விதேயத் தின்று
முன்னைத்தன் பாவத் தாலே முனிவனைக் கொண்டு வந்து
கன்மொய்த்த திணிதிண் டோளாய் கயத்திடை யிட்டு நம்மைத்
தின்னத்தா னரக்கன் வந்தா னின்றெனச் செப்ப லோடும்.

(இ - ள்) மின்னொத்த - மின்னலைப்போன்ற, தந்தத்து - பற்களையுடைய, இந்தப்பாவிதான் - இந்தப் பாபிஷ்டனுகியவன், முன்னை - பூர்வத்தில் செய்யப்பட்ட, தன் - தன்னுடைய, பாவத்தாலே - பாபகருமோதயத்தாலே, இன்று - இப்போது, விதேயத்து - விதேஹ க்ஷேத்திரத்தினின்றும், முனிவனை - இச் சஞ்சயந்த பட்டாரகரை, கொண்டுவந்து - தனது விமானத்தில் தூக்கிக் கொண்டு வந்து, கன்மொய்த்த - கல்லைப்போன்ற, திணி - கெட்டியாகிய, திண் தோளாய் - வலிமைபெற்ற புயத்தை யுடையவராகிய தரணேந்திரரே, கயத்திடை - இந்தத் தடாகத்தினிடத்திலே, இட்டு - தள்ளிவிட்டு, நம்மை - நம்மெல்லாரையும், தின்னத்தான் - தின்னும்படியாக, அரக்கன் - ஓரிராக்கதன், இன்று - இப்பொழுது, வந்தான் - இவ்விடத்தில் வந்திருக்கிருன், என - என்று, செப்பலோடும் - அவன் சொல்லவும், எ - று. (கூஉ)

183. அறிவிலான் சொல்லை மெய்யென் றஞ்சினே மடையக் கூடி
மறிவிலா னவத்தின் றன்மைப் பயத்தைநா மதிக்க மாட்டாச்
சிறியர்யாஞ் செய்த தீமை பெரியைநீ பொறுக்கல் வேண்டு
மிறைவனே யெடுத்துக் காட்டா மென்றவர் பணிந்து நின்ருர்.

(இ - ள்) அறிவிலான் - புத்தியில்லாதவனுடைய, சொல்லை - வசனத்தை, மெய்யென்று - உண்மைதானென்று, அஞ்சினேம் - பயந்தவர்களாகி, அடைய -

முழுமையும், கூடி - சேர்ந்து, மறுவிலான் - களங்கமில்லாத முனிவரனது, தவத்தின்தன்மை - தபஸினுடைய மேலான குணத்தினது, பயத்தை - பலனை, நாம் - நாங்கள், மதிக்கமாட்டா - மதித்தறிய முடியாத, சிறியர் - அற்பர்கள், யாம் - அத்தகைய நாங்கள், செய்த - இயற்றிய, தீமை - பொல்லாங்குகளை, பெரியை - பெரியோனாகிய, நீ - நீ, பொறுக்கல் வேண்டும் - க்ஷமைபண்ணி யருளவேண்டும், இறைவனே - இச்சஞ்சயந்த பகவானே, எடுத்துக் காட்டாம் - எங்களால் செய்யப்பட்ட தீமைகளைப்பொறுத்து உயர்ந்ததற்குத் திருஷ்டாந்தமா யிராநின்றார், என்று - என்றுசொல்லி, அவர் - அவ்வித்தியாதரர்கள், பணிந்து - வணங்கி, நின்றார் - நின்றார்கள், எ - று. (சஅ)

184. புலியினைக் கண்டு போக்கற் றடைந்தபுல் வாய்கள் போல
மெலியவ ருரைக்க நெஞ்சங் குழைந்துபா சத்தை நீக்கிப்
பலரையும் போக விட்டிப் பாவியைச் சுற்றத் தோடு
மொலிகட லிடுவ னென்றா வுடன்றவ னெழுந்த போழ்தில்.

(இ - ள்) புலியினை - புலியை, கண்டு - பார்த்து, போக்கற்று - நீங்கிப் போகச் சக்தியற்று, அடைந்த - அதனிடத்தில் சேர்ந்த, புல்வாய்கள்போல - மான்கூட்டங்களைப்போல, மெலியவர் - அற்பர்களாகிய வித்தியாதரர்கள், உரைக்க - தரணேந்திரனிடம் சொல்லி வேண்டிக்கொள்ள, நெஞ்சம் - மனதானது, குழைந்து - தளர்ந்து, பாசத்தை - நாகபாசத்தை, நீக்கி - விலக்கி, பலரையும் - அக்கூட்டத்தாராகிய பல பேர்களையும், போகவிட்டு - அனுப்பிவிட்டு, இப்பாவியை - இந்த வித்துத்தந்தனை, சுற்றத்தோடு - இவனது நெருங்கிய பந்துக்களுடன், ஒலி - அலைகளால் சப்தியாநின்ற, கடல் - ஸமுத்திரத்தில், இடுவென் - போடுவேன், என்று - என்று, உடன்று - கோபித்து, அவன் - அதரணேந்திரன், எழுந்த போழ்தில் - உத்தேசித்தெழுந்த காலத்தில், எ - று. (சச)

185. நீதிதா னத்தி னாலெண் வினைகளை வென்ற வீரன்
பாததா மரைக ளேத்திப் பரிநிர்வாணக் கிரியை முற்றி
ஆதிதா பத்து நாமத் தமரனின் றவனை நோக்கிக்
கோபதா பத்தை நீக்கிக் குணங்கொளக் கூறலுற்றான்.

(இ - ள்) நீதிதானத்தினால் - வரிசைக்கிரமத்தினால், எண் வினைகளை - அஷ்ட கருமங்களையும், வென்ற - ஜெயித்திராநின்ற, வீரன் - சஞ்சயந்தபட்டாரகருடைய, பாததாமரைகள் - பாதகமலங்களை, ஏத்தி - ஸ்தோத்திரம்பண்ணி, பரிநிர்வாணக்கிரியை - பரிநிர்வாண பூஜையை, முற்றி - செய்து முடித்து, ஆதிதாபத்து நாமத்து - ஆதித்யாபனென்னும் பெயரையுடைய, அமரன் - கல்பவாஸிதேவன், நின்றவனை - இப்படிக் கோபித்தெழுந்துநின்ற தரணேந்திரனை,

நோக்கி - பார்த்து, கோபதாபத்தை - கோபவெப்பத்தை, நீக்கி - விலக்கி, குணங்கொள - குணத்தையடையும்படியாக, கூறலுற்றான் - சொன்னான், எ - று. (சரு)

186. இவன்செய்த குற்ற மென்கொ லெருதுபோ லிருந்த வேழை
இவன்செய்த போழ்திற் சால வருள்செய வேண்டு மன்றி
இவன்றன்னை யனையா ருன்றன் கோபத்துக் கிடமு மல்லர்
உவந்தின்ன மொன்று கேளா யுரைக்கின்றே னுரகர் கோவே.

(இ - ள்) உரகர்கோவே - வாராய் தரணேந்திரனே!, இவன் - இவனால், செய்த - செய்யப்பட்ட, குற்றம் - தப்பிதம், என்கொல் - என்ன, எருதுபோல் - விருஷபத்தைப்போல், இருந்த - இராநின்ற, ஏழை - அஞ்ஞானியாகும், இவன் - இப்படிப்பட்டவன், செய்தபோழ்தில் - (தப்பிதம்) செய்தகாலத்தில், சால - மிகவும், அருள்செய்யவேண்டும் - தயவுசெய்யவேண்டும், அன்றி - அதுவல்லாமலும், இவன் தன்னை யனையார் - இவனுக்குச் சமானமானவர்கள், உன்தன் - உன்னுடைய, கோபத்துக்கு - கோபத்திற்கு, இடமுமல்லர் - உரித்தானவர்களல்லர், இன்னமொன்று - மற்றொரு சமாசாரம், உரைக்கின்றேன் - யான் சொல்லுகின்றேன், உவந்து - சந்தோஷித்து, கேளாய் - அதைக் கேட்பாயாக, எ - று. ()

187. ஆதிவே தத்து நாதன் புருவிந்த வுலக மேத்த
நீதிமா தவத்தைத் தாங்கி நிறைந்தபோ கத்தி னின்ற
போதினா தரத்தின் வந்தார் போகவா தரத்தி னார்கள்
தீதிலாக் குணத்தி னார்கள் விநமியு நமியு மென்பார்.

(இ - ள்) ஆதி - முதன்மையாகிய, வேதத்து - வேதசாஸ்திரத்துக்கு, நாதன் - முதல்வனாகிய, புரு - விருஷப தீர்த்தங்கரராகிய ஆதிநாதன், இந்த வுலகம் - இந்த வுலகத்திலுள்ள ஞானிகள், ஏத்த - ஸ்தோத்திரஞ்செய்ய, நீதி - நீதிவரிசையுடைய, மாதவத்தை - மஹாதபஸை, தாங்கி - தரித்து, நிறைந்த - நிறைவுபெற்ற, போகத்தின் - பிரதிமாயோகத்திலே, நின்றபோதின் - (காயோத்ஸர்க்கமாக) நின்றகாலத்தில், தீதிலா - பொல்லாங்கில்லாத, குணத்தினார்கள் - குணத்தையுடையவர்களாகிய, விநமியும் நமியுமென்பார் - விநமி நமி என்கிற இருவர்கள், போக வாதரத்தினார்கள் - போகோப போகங்களிலே பிரியத்தை யுடையவர்களாய், ஆதரத்தின் - அப்பிரீதியினாலே, வந்தார் - அவ்விடத்தில் வந்தார்கள், எ - று. (சஎ)

188. வந்தவ ரிறைவன் பாதம் வலங்கொண்டு வணங்கி வாழ்த்தி
அந்தமி னிதியு நாடு மரசருக் கீந்த வந்நாள்
வந்தில மடிக ளின்றே வந்தன மண்ணெமக்குத்
தந்தபின் னன்றிப் போகோ மென்றுதாழ்ந் தேத்தி னாரே.

(இ - ள்) வந்தவர் - வந்த அக்குமாரர்கள், இறைவன் - நாதனுடைய, பாதம் - பாதங்களை, வலங்கொண்டு - வலம்வந்து, வணங்கி - நமஸ்கரித்து, வாழ்த்தி - ஸ்தோத்திரம்பண்ணி, அளவில் - அளவில்லாத, நிதியும் - ஐஸ்வரியமும், நாடும் - தேசமும், அரசருக்கு - இராஜர்களுக்கு, ஈந்த அந்நாள் - உம்மால் பகிர்ந்துகொடுத்த அந்நாளில், வந்திலம் - நாங்கள் வரவில்லை, அடிகள் - ஸ்வாமிகளே!, இன்றே - இப்பொழுதே. வந்தனம் - வந்தோம், எமக்கு - எங்களுக்கு, மண் - பூமிராஜ்ஜியம சிறிதாகிலும், தந்தபின்னன்றி - உம்மால் கொடுக்கப்பட்ட பின்னல்லது, போகோம் - நாங்கள் இவ்விடம் விட்டுப் போகமாட்டோம், என்று - என்று சொல்லி, தாழ்ந்து - பணிந்து, ஏத்தினார் - ஸ்தோத்திரம் பண்ணினார்கள், எ - று. (கஅ)

வேறு.

189. மூன்றுலக மேத்தவரு முத்திக் கிளவரசா
யான்ற வனுத்தரத்து ளன்றமர்ந்தாய் நீயே
யான்ற வனுத்தரத்து ளன்றமர்ந்து வந்தாயை
மூன்றுலக மேத்திய வாறு சொல்ல முடியாதே.

(இ - ள்) மூன்றுலகர் - மூன்றுலோகத்திலுமுள்ள தேவராதியோர், ஏத்த - ஸ்தோத்திரம்பண்ண, வரும் - வாரா நின்ற, முத்திக்கு - மோக்ஷத்திற்கு, இளவரசா - யௌவராஜ பதவியையுடையவனே!, நீ - நீ, ஆன்ற - மேலாகிய, அனுத்தரத்துள் - பஞ்சாணுத்தரமென்னும் அஹமிந்திர வுலகத்தில், அன்று - இதற்கு முன் ஜன்மங்கொண்ட அக்காலத்தில், அமர்ந்தாய் - பொருந்தினாய், ஆன்ற - மேலான, அனுத்தரத்துள் - பஞ்சாணுத்தரத்தில், அன்று - அப்போது, அமர்ந்து - பொருந்தி, வந்தாயை - இப்போது பூமியிலவதரித்த உன்னை, மூன்றுலகம் - இம் மூவுலகமும், ஏத்தியவாறு - ஸ்துதித்த விதத்தை, சொல்லமுடியாது - எங்களால் வசனித்தல் முடியாததாகும், எ - று.

ஸ்துதியாவது : ஸ்வர்க்காவதரண, ஜன்மாபிஷேக, கல்யாணங்களில் தேவர்கள் செய்த ஸ்தோத்திரங்கள். (சகூ)

190. அந்தரமொன் றின்றிவரு முத்திக் கிளவரசா
மந்தரத்தின் மாண்ட சிறப்பமர்ந்தாய் நீயே
மந்தரத்தின் மாண்ட சிறப்பமர்ந்த மண்ணுலகத்
தந்தரத்தை நீக்க மாசனித்தாய் நீயே.

(இ - ள்) அந்தரமொன்று - யாதொரு விக்கினமும், இன்றி - இல்லாமல், வரும் - உண்டாகின்ற, முத்திக்கு - மோக்ஷத்திற்கு, இளவரசா - யௌவராஜ்ஜிய பதவியையுடையவனே!, நீ - நீ, மந்தரத்தின் - மஹாமேரு பர்வதத்தில், மாண்ட-

மாட்சிமையுடைய, சிறப்பு - ஜன்மாபிஷேக கல்யாணத்தை, அமர்ந்தாய் - (தேவர்களால் செய்யப்) பொருந்தினாய், நீ - நீ, மந்தரத்தின் - மஹம்மேரு பர்வதத்தில், மாண்ட - மாட்சிமையையுடைய, சிறப்பு - ஜன்மாபிஷேகத்தை, அமர்ந்து - பொருந்தி, மண்ணுலகத்து - இந்தப்பூமியில், அந்தரத்தை - தீமைகளை, நீக்கும் - போக்கும், அரசு - இராஜ்ஜியத்தையும், அளித்தாய் - செய்தருளினாய், எ - று. ()

191. ஆதியோ டந்தமிலா முத்திக் கிளவரசாய்
மாதவனாய் மண்ணின் மிசையமர்ந்தாய் நீயே
மாதவனாய் மண்ணின் மிசையமர்ந்தோய் வான்புகழே
யோதிய மூவுலகு மேத்தாவா றுண்டோ.

(இ - ள்) ஆதியோடு - முதலோடு, அந்தமிலா - முடிவுமில்லாத, முத்திக்கு - மோட்சத்திற்கு, இளவரசாய் - யுவராஜ பதவியுடையவனாய், நீ - நீ, மாதவனாய் - மஹாதபஸையுடையவனாக, மண்ணின்மிசை - பூமியின்பேரிலும், அமர்ந்தாய் - பொருந்தினாய், மாதவனாய் - மஹாதபஸையுடையவனாகி, மண்ணின்மிசை - இப்பூமியில், அமர்ந்தோய் - பொருந்திய ஸ்வாமியே!, வான்புகழ் - உனது பெரிதாகிய புகழ்ச்சியே, மூவுலகும் - மூன்றுலோகமும், ஓதிய - சொல்லியன, (ஆகையால்) ஏத்தாவாறு - உன்னை ஸ்துதிக்காதவகை, உண்டோ - உளதோ? (இல்லை என்றபடி), எ - று. (௬க)

வேறு.

192. பாடினார் பறவை யெல்லாந் தரையின்மேல் வீழ்ந்த மண்மே
லோடுவார் தாங்க ளெல்லா மொருங்குநின் றுவந்து கேட்டார்
பீடினா லிறைவ னின்றான் பிறங்குதார் திறங்கொள் சென்னி
யாடுமா னாக ராச னவதியா லதனைக் கண்டான்.

(இ - ள்) பாடினார் - (மேற்சொன்ன வகையான ஸ்துதிகளை விநமி, நமி குமாரர்கள் சங்கீதங்களாகப்) பாடினார்கள், (அப்போது) பறவையெல்லாம் - பட்சிகளெல்லாம், (அச்சங்கீதத்தால்) தரையின்மேல் - இப்பூமியின்மேல், வீழ்ந்த - வீழ்ந்தன, மண்மேல் - பூமியின்மேல், ஓடுவார் தாங்களெல்லாம் - செல்லப்பட்டவர்களெல்லாம், ஒருங்கு நின்று - ஒன்றுசேர்ந்து நின்று, உவந்து - சந்தோஷித்து, கேட்டார் - கேட்டார்கள், பீடினால் - (யோகத்திற் றளர்வின்றிப்) பெருமையினாலே, இறைவன் - ஸ்வாமியான தலைவன், நின்றான் - சலனமின்றி இருந்தான், அதனை - அந்த விதத்தை, பிறங்குதார் - விளங்குகின்ற மாலையை யணிந்த, திறங்கொள் - பிரகாசங்கொண்ட, சென்னி - மகுடத்தில், ஆடு - படமெடுத்தாடுகின்ற, மால் - பெரிய, நாகராஜன் - ஸர்ப்பராஜனாகிய தரணேந்திரன், அவதியால் - அவதிஞானத்தால், கண்டான் - அறிந்தான், எ - று. (௬௨)

193. கண்டவன் கலைக ளெல்லாங் கடந்துப சாந்தி சென்ற
பண்டித னொருவ னாகிப் பாதம்வாய் கைமு கத்தாற்
புண்டரீ கத்தை வென்று புலமையை நடிப்பான் போலக்
கொண்டதோர் வேடந் தன்னா லிறைவனைக் குறுக வந்தான்.

(இ - ள்) கண்டவன் - அவ்வித மறிந்த தாமோணேந்திரன், கலைகளெல்லாம் - கலைஞானங்களை யெல்லாம், கடந்து - கரைகண்டு, உபசாந்திசென்ற - சாந்த பரிணாமமடைந்த, பண்டிதனொருவனாகி - ஒரு வித்துவானுக்குச் சமானமாகி, பாதம் - பாதத்தினாலும், வாய் - வாயினாலும், கை - கைகளாலும், முகத்தால் - முகத்தினாலும், புண்டரீகத்தை - தாமரை மலரை, வென்று - ஜெயித்து, புலமையை - வித்வத்திறத்தை, நடிப்பான் போல - அபிநயத்தால் காட்டுவான்போல, கொண்டது - தன்னால் நிர்மித்துக் கொள்ளப்பட்டதாகிய, ஓர் - ஒப்பற்ற, வேடந் தன்னால் - ரூபத்தால் (அதாவது: ரூபத்தோடு), இறைவனை - தலைவனை, குறுக - அடைய (சமீபத்தில்), வந்தான் - வந்து சேர்ந்தான், எ - று. (௯௩)

194. வந்தவன் மைந்தர் செய்கை வடிவுகண் டுவந்து வானிற்
சுந்தர மலர்க டூவி யிறைவனை வணங்கிச் சொன்னா
னிந்திரர்க் கிறைவன் செந்தா மரையடிக் கிசைவி லாத
வந்தரம் பலவுஞ் செய்தீ ரறிவிலீர் போக வென்றான்.

(இ - ள்) வந்தவன் - அவ்வாறு வந்த தாமோணேந்திரன், மைந்தர் - இக் குமாரர்களுடைய, செய்கை - செய்கையையும், வடிவு - ரூபத்தையும், கண்டு - பார்த்து, உவந்து - சந்தோஷித்து, வானில் - ஆகாயத்தினின்றும், சுந்தரம் - அழகிய, மலர்கள் - புஷ்பங்களை, தூவி - இறைவன்மேற் சொரிந்து, இறைவனை - ஸ்வாமியை, வணங்கி - நமஸ்கரித்து. சொன்னான் - சொல்லினான், (என்ன வென்றால்), இந்திரர்க்கு - தேவேந்திரர் முதலானவர்களுக்கெல்லாம், இறைவன் - நாதனாகிய ஸ்வாமியினது, செம் - சிவந்த, தாமரை - தாமரைப்பூப்போன்ற, அடிக்கு - பாதங்களுக்கு, இசைவிலாத - பொருந்தாத, அந்தரம் பலவும் - பல விக்கினங்களையும், செய்தீர் - உண்டுபண்ணினீர்கள், அறிவிலீர் - புத்தியில்லாதவர்களே!, போக - இவ்விடம் விட்டு நீங்கிப் போகக்கடவீராக, என்றான் - என்று சொல்லினான், எ - று. (௯௪)

195. என்றலுங் குமரர் சொன்னா ரிறைவன்றன் பெருமை யாமே
யொன்றிமற் றறிது நீர்போ முங்கரு மத்து மேலே
யன்றெனி லறிவி லாமை யும்மைவந் தடையு மென்றார்க்
கின்றுநீ ரிறைவன் றன்னை யிரக்கின்ற தென்கொ லென்றான்.

(இ - ள்) என்றலும் - என்று சொன்னமாத்திரத்தில், குமரர் - குமாரர்கள், சொன்னார் - சொன்னார்கள், (எப்படியெனில்) இறைவன்றன் - நாதனது, பெருமை - மஹாத்மியத்தை, யாமே - நாங்களே, ஒன்றி - பொருந்தி, அறிதும் - தெரிந்திருக்கின்றோம், நீர் - நீர், உங்கருமத்து மேலே - உம்முடைய காரியத்தின் பேரில், போம் - போவீராக, அன்றெனில் - அல்லாவிட்டால், அறிவிலாமை - மூடத்தனமானது, உம்மை - உம்மிடத்தில், வந்தடையும் - வந்துசேரும், என்றார்க்கு - என்று சொல்லிய குமாரர்களிடத்து, இன்று - இப்பொழுது, நீர் - நீங்கள், இறைவன்தன்னை - பகவானை, இரக்கின்றது - யாசிக்கின்றது, என்கொல் - என்ன ? , என்றான் - என்று தரணன் கேட்டான், எ - று. (ருரு)

196. அரசராய்ச் சிலரை நாட்டி யரும்பொரு ளீந்து மண்ணை
விரகினாற் கண்டஞ் செய்து வேண்டுவார்க் கீந்து போந்தா
னரசரே நாங்களெங்க ளவனிக்கு வந்தோ மென்ன
வுரைசெய்த பொருளிங் குண்டோ வுறுவனா யிறைவ னின்றால்.

(இ - ள்) அரசராய் - இராஜாக்களாக, சிலரை - சிலபேர்களை, நாட்டி - ஸ்தாபித்து, அரும் - அரிதாகிய, பொருள் - திரவியங்களையும், ஈந்து - (அவர்களுக்குக்) கொடுத்து, மண்ணை - பூமியை, விரகினால் - கிரமத்தால், கண்டஞ்செய்து - பங்கு செய்து, வேண்டுவார்க்கு - வேண்டினவர்களுக்கு, ஈந்து - கொடுத்து, போந்தான் - இவ்விடம் வந்து தபஞ்செய்கின்றான், நாங்கள் - நாங்களும், அரசரே - இராஜ குமாரர்களே, (ஆகையால்) எங்கள் - எங்கள் ஸம்பந்தமாகிய, அவனிக்கு - பூமி இராஜ்ஜியத்துக்காக, வந்தோம் - இவரிடம் வந்தோம், என்ன - என்று குமாரர்கள் சொல்ல, (தரணன்) உறுவனாய் - முனிவனாய், இறைவன் - நாதன், நின்றால் - தபஸில் நின்றால், உரைசெய்த - உங்களால் சொல்லப்பட்ட, பொருள் - பொருள்களானவை, இங்கு - இவ்விடத்தில், உண்டோ - இருக்கின்றனவோ ? (இல்லை என்று சொன்னான்), எ - று. (ருசு)

197. உலகமூன் றுடைய கோமாற் கொன்றுமற் றில்லை யென்றீர்
பலமருந் துண்டு தீராப் பழம்பித்தர் நீவி ரென்ன
நிலமெலாம் பரதனாட்சி யவனுழைச் செல்லு மென்றா
னுலகினுக் குறுதி சொல்ல வும்மையோ விடுத்த தென்றார்.

(இ - ள்) உலகமூன்றுடைய-மூன்றுலகும் ஆட்சியாகவுடைய, கோமாற்கு-கோமானாகிய ஸ்வாமிக்கு, ஒன்றும் - யாதொன்றும், இல்லையென்றீர் - கிடையாதென்று சொன்னீர், பலமருந்து - பல ஔஷதங்களை, உண்டு - தின்றும், தீரா - நீங்காத, பழம் - பழைய, பித்தர் - பைத்தியத்தையுடையவர், நீவிர்-நீரே, என்ன - என்று குமாரர்கள் சொல்லவும், நிலமெலாம் - பூமிமுழுதும், பரதன் - பரதராஜ

னுடைய, ஆட்சி - ஆளுகையாகும், (ஆகையால்), அவனுழை - அவனிடத்தில், செல்லும் - நீங்கள் வேண்டியகாரியத்துக்காகச் செல்வீராக, என்றான் - என்று தாணன் சொன்னான், உலகினுக்கு - இந்த உலக ஜனங்களுக்கு, உறுதி - உறுதியை, சொல்ல - சொல்வதற்கு, உம்மையோ - உம்மைத்தானோ, விடுத்தது - அனுப்பியது, என்றார் - என்று குமாரரிருவரும் சொல்லினார்கள், எ - று. (கஎ)

198. மறுவிலாத் துணத்தி னீர்கள் வடிவொடு வாக்குண் டேனு
மறிவினாற் சிறியீர் சால வப்பனீ ரேனுங் கேண்மின்
பிறர்வினா வாமற் செப்பல் பேர்ந்துழி செறிதல் பின்சென்
றிறைவரைப் பிரிந்தி டாமை யேழைக ளியற்கை கண்டீர்.

(இ - ள) மறுவிலா - குற்றமில்லாத, குணத்தினீர்கள்-குணங்களையுடைய நீங்கள், வடிவொடு - உருவத்தோடு, வாக்கு உண்டேனும் - (உங்களுக்கு) வசன சாமர்த்தியமிருந்தபோதிலும், அறிவினால் - புத்தியினாலே, சால - மிகவும், சிறியீர்-சிறுமையுடையவர்களாவீர், ஏனும் - இது உங்கட்குப்பொருந்தும், அப்பனீர் - ஐயன்மார்களாகிய நீங்கள், கேண்மின் - நான் சொல்வதைக் கேளுங்கள், பிறர் - எதிரிலிருக்கும் மற்றவர், வினவாமல் - கேளாது விடவும், செப்பல் - (ஒன்றைச்) சொல்லுகிறதும், பேர்ந்துழி - ஒரு பெரிய மனிதன் நீங்கின விடத்தில், பின் - அவன் பின்னாலேயே, சென்று - போய், செறிதல் - அவனிடத்தில் சேர்வதும், இறைவரை - பெரியோராயுள்ளவர்களை, பிரிந்திடாமை - பிரியாமல் கூடவேஹே யோபாதேயமறியாமல் சுற்றித் திரிகிறதும் (ஆகிய இவைகள்), ஏழைகள்-அறிவில்லாதவர்களுடைய, இயற்கை-சுபாவமாகும் (என்று தாணன் சொன்னான்), எ-று.

கண்டீர் - அசை. (கஅ)

199. நாதன்பா ளுங்க ளொன்று பெற்றுநல் லவர்க ளேத்தப்
போதலோ டொக்கு மோவிப் பூமியந் தரங்கள் பெற்றால்
ஆதலாற் பரத னன்றித் தேவர்கோ னளித்த தேனும்
யாதுநாம் வேண்டல் செல்லோ மினியுரை யொழிக வென்றார்.

(இ - ள்) நாதன்பால் - ஸ்வாமியினிடத்தில், நாங்கள் - நாங்கள், ஒன்று - (எங்களுடைய இஷ்டவஸ்து) ஒன்றை, பெற்று - அடைந்து, நல்லவர்கள் ஏத்த - மேலோர் துதிக்க, போதலோடு - செல்வதோடு, இப்பூமி அந்தரங்கள் பெற்றால் - இப்பூவுலகத்தையும் விண்ணுலகத்தையும் பெற்றாலும், ஒக்குமோ - அது பொருந்துமோ, ஆதலால் - (எங்களெண்ணம் அவ்விதம்) ஆகையினாலே, பரதன் அன்றி - பரதராஜனே அல்லாமல், தேவர்கோன் - தேவேந்திரன், அளித்தேனும் - கொடுத்ததானாலும், யாதும் - எதையும், நாம் வேண்டல்செல்லோம் - நாங்களிச்சிக்கமாட்டோம், இனியுரை - (ஆகையால்) இனி விருதாவாகப் பேசுவதை, ஒழிக- விடக்கடவீராக, என்றார் - என்று குமாரர்கள் சொன்னார்கள், எ - று. (கக)

200. என்றலு மென்னை மன்னர் மைந்தர்தம் பெருமை யென்னாச்
சென்றவன் சென்னி சாய்த்திட் டிறைவன்றான் செப்பக் கேட்ட
தொன்றுள தென்ப வன்போ லுருவுகொண் டதனி னீங்கி
நின்றனன் முடியும் பூணு மாரமுங் குழையு மின்ன.

(இ - ள்) என்றலும் - என்று குமாரர் சொல்லவும், என்னை - என்ன ஆச்சரியம்!, மன்னர் மைந்தர்தம் - இராஜகுமாரர்களாகிய இவர்களது, பெருமை - பெருமையானது, என்னா - என்று எண்ணி, அவன் - அத்தரணேந்திரன், சென்று - ஸ்வாமியின் ஸமீபத்தில் சென்று, சென்னி சாய்த்திட்டு - தலையைச் சாய்த்து அசைத்து, இறைவன் - ஸ்வாமி, செப்ப - சொல்ல, தான்—, கேட்டது - கேட்டிருந்ததாகிய, ஒன்று - ஒருகாரியம், உளது - இருக்கின்றது, என்பவன் போல் - என்று தெரிவிப்பவன்போல நடித்து, அதனினீங்கி - ஸ்வாமி ஸமீபத்திற் சென்றிருந்ததாகிய அந்தகாரியத்தினின்றும் நீங்கி வந்து, உருவுகொண்டு - தனது சுயரூபத்தை எடுத்துக்கொண்டு, முடியும் - கிரீடமும், பூணும் - ஆபரணமும், ஆரமும் - கழுத்திலணியும் மாலைகளும், குழையும் - குண்டலமும், மின்ன - பிரகாசிக்க, நின்றனன் - குமாரர்களுக்கெதிரில் நின்றான், எ - று. (௬௦)

201. முன்னைத்தன் னுருவங் காட்டி முனிவனீர் வேண்டிற் றீய
வென்னையின் றருளிச் செய்தா னெழுகநீ ரென்னோ டென்னா
மின்னுமோர் விமான மேற்றி வேதண்ட மவரோ டெய்தி
மன்னராய் நாட்டி யிட்டான் மலைமிசை யரசர்க் கெல்லாம்.

(இ - ள்) (அப்படி நின்ற அவன்) முன்னை - குமாரர்களுக்கெதிரில், தன் - தன்னுடைய, உருவம் - ரூபத்தை, காட்டி - காண்பித்து, முனிவன் - ஸ்வாமியானவன், நீர் - நீங்கள், வேண்டிற்று - இச்சித்ததை, என்னை - என்னை, ஈய - கொடுக்கும்படியாக, இன்று - இப்பொழுது, அருளிச்செய்தான் - கடாட்சித்து உரை செய்தான் (ஆகையால்), நீர் - நீங்கள், என்னோடு - என்னுடன்கூட, எழுக என்று - வரக்கடவீராக என்று, மின்னும் - பிரகாசியாநின்ற, ஓர் - ஒப்பற்ற, விமானம் - விமானத்தில், ஏற்றி - அவர்களை ஏற்றிக்கொண்டு, அவரோடு - அவர்களுடன், வேதண்டம் - விஜயார்த்த பர்வதத்தை, எய்தி - அடைந்து, மலைமிசை - அப்பர்வதத்தின் மேலுள்ள, அரசர்க்கெலாம் - அரசர்களுக்கெல்லாம், மன்னராய் - அதிராஜர்கள் ஆக, நாட்டியிட்டான் - ஸ்தாபித்தான், எ - று. (௬௧)

202. மனமலி வடக்கிற் சேடி யறுபது நகரந் தன்னை
விநமியை நாட்டிப் பூரம் ககனவல் லவத்தை யீந்தா
னனையவை தெற்கிற் சேடி யைம்பது நமிக்கு மீந்து
புனைவருஞ் சக்கவாள மிரதநூ புரத்தை வைத்தான்.

(இ - ள்) மனமலி - மனதுக்கு நிறைவுபெற்ற, வடக்கிற்சேடி - உத்தர ஸ்ரேணியில், அறுபதுக்கு - அறுபது நகரங்களுக்கு, அரசனாக-இராஜாவாக, விநமியை - விநமி குமாரனை, நாட்டி - ஸ்தாபித்து, பூரம் கனக பல்லவத்தை - கனக பல்லவமென்னும் பட்டணத்தை, ஈந்தான் - அவனுக்கு இராஜதானியாக வளித்தான், அனையவை - அத்தன்மையனவாகிய, தெற்கிற்சேடி - தக்ஷிணஸ்ரேணியில், ஐம்பது - ஐம்பது நகரங்களை, நமிக்கும் - நமி குமாரனுக்கும், ஈந்து - கொடுத்து, புனைவரும் - வருணிக்கற்கரிய, சக்கவாள மிரதநூபுரத்தை - இரதநூபுர சக்ரவாளமென்னும் பட்டணத்தை, வைத்தான் - இராஜதானியாக ஸ்தாபித்தான், எ - று.

'புரம்' என்பது, 'பூரம்' எனச் செய்யுள் விகாரம்பற்றி நீண்டது. (கூஉ)

203. விஞ்சைக ளஞ்சு நூறுஞ் சிறியன வேழு நூறுந்
தஞ்சமா யவர்கட் கீந்து தானவர் தம்மை யெல்லா
மஞ்சினீ ரிவர்க ளாணை கேட்டுவந் திறைஞ்சீ ராகிற்
றுஞ்சினீ ரென்று கொண்மின் மலையுமோர் துகள தாமே.

(இ - ள்) விஞ்சைகள் - மறைவித்தைகள், அஞ்சுநூறும் - ஐந்நூறும், சிறியன - க்ஷுல்லகவித்தைகள், ஏழுநூறும் - எழுநூறும், தஞ்சமாய் - துணையாகும்படியாக, அவர்கட்கு - அக்குமாரர்களுக்கு, ஈந்து - கொடுத்து, தானவர் தம்மையெல்லாம் - வித்தியாதரர்களை யெல்லாம் (பார்த்து), நீர் - நீங்கள், அஞ்சி - இவர்களுக்குப் பயந்து, இவர்கள் - என்னால் ஸ்தாபிக்கப்பட்ட இவர்களது, ஆணை - ஆக்கினையை, கேட்டு-கேட்டு அங்கீகரித்து, உவந்து - ஸந்தோஷித்து, இறைஞ்சீராகில் - வணங்காமல் போவீர்களானால், துஞ்சினீரென்று - இறந்தீர்களென்று, கொண்மின் - நினைத்துக்கொள்ளுங்கள், மலையும் - பர்வதமும், ஓர் துகளதாம் - ஒரு தூளுக்குச் சமானமாகும், எ - று. (கூங)

204. என்றவர்க் கரசு நாட்டி யிலங்குபன் னகர்க்கு நாதன்
சென்றுதன் பவனம் புக்கான் செழுமணி முடிவில் வீச
வன்றுதொட் டின்றுகாறு மருளும்மிற் பெற்று வந்த
மின்றிகழ் தந்த னந்த விநமிதன் குலத்தி னுள்ளான்.

(இ - ள்) என்று - என்றுசொல்லி, அவர்க்கு - அக்குமாரர்களுக்கு, அரசு - இராஜ்ஜியத்தை, நாட்டி - ஸ்தாபித்து, இலங்கும் - விளங்கும், பன்னகர்க்கு - பவணதேவர்களுக்கு, நாதன் - அதிபனாகிய தரணன், செழு - செழுமை பெற்ற, மணி - இரத்தினத்தினாலாகிய, முடி - கிரீடமானது, வில்வீச - கிரணத்தை யெறிக்க, சென்று - போய், தன்பவனம் - தனது விமானத்தை, புக்கான் - அடைந்தான், அன்றுதொட்டு - அன்றுமுதல், இன்றுகாறும் - இன்றையவரை

யிலும், அருள் - தயவு, உம்மில் - உங்கள் முன்னோர்களால், பெற்றுவந்த - அடைந்து வந்த, அந்த வினமிதன் குலத்தில் - அந்த வினமி வம்சத்திலே, மின் திகழ்தந்தன் - மின்னலைப்போல் பிரகாசியாநின்ற பற்களையுடைய இவ்வித்துத் தந்தன், உள்ளான் - உண்டானவனாயிராநின்றான், எ - று. (௨௱௪)

205. நஞ்சுடை மரத்தை யேனு நட்டுநீ ரட்டி யாக்கி
விஞ்சிய வதனைத் தாமே வீட்டுத லரிதி யார்க்கு
மென்பதிவ் வுலகி னின்ற தறிதியே நீவிர் நட்ட
விஞ்சையர் குலத்து மேனீ வெகுள்வதென் விடுக வென்றான்.

(இ - ள்) நஞ்சுடை - விஷத்தையுடைய, மரத்தையேனும் - மரத்தையாயினும், நட்டு - ஸ்தாபித்து, நீர் - ஜலத்தை, அட்டியாக்கி - மிகவிட்டு, விஞ்சியவதனை - மிஞ்சிவளர்ந்த அதை, தாமே - தாங்களே, வீட்டுதல் - போக்கடித்தல் (அதாவது: வெட்டிப்போடுதல்), யார்க்கும் - எவ்வகைப் பட்டவர்க்கும், அரிது - கூடாது, என்பது - என்கிற பழமொழி, இவ்வுலகின் - இவ்வுலகத்தில், நின்றது - நிலைபெற்றிருப்பதை, அறிதி - அறிவாயாக, (இப்படியிருந்தும்), நீவிர் - நீங்கள், நட்ட - ஸ்தாபித்த, விஞ்சையர் குலத்துமேல் - வித்தியாதர குலத்தின்பேரில், நீ - நீ, வெகுள்வது - கோபிப்பது, என் - என்ன?, விடுக - (இதனை) விடக்கடவாய், என்றான் - என்று ஆதித்யாபதேவன் சொன்னான், எ - று. (௨௱௫)

206. வினையற வெறிந்த வீரன் விதேகத்து வீத சோகந்
தனையுடை வைசயந்தன் றன்மக னென்முன் றன்மைக்
கினையவ னெவர்க்கு மேத மனத்தினு நினைத்தி டாதான்
றனையிவை செய்தான் யாவ னாயினுந் தடிவன் கண்டாய்.

(இ - ள்) வினை - கருமங்களை, அற - (முழுதும்) நீங்க, எறிந்த - கெடுத்த, வீரன் - வீரனாகிய இச்சஞ்சயந்த பட்டாரகன், விதேகத்து - விதேக க்ஷேத்திரத்து, வீதசோகந்தனையுடை - வீதசோகபுரத்ததிபதியான, வைசயந்தன் தன் - வைஜயந்த மகாராஜனுடைய, மகன் - குமாரனாகிய, என்முன் - எனது தமையனாரும், தன்மைக்கு - ஸ்வபாவத்தன்மை அடைவதற்கு, இனையவன் - இப்படிப் பொருந்திய தபஞ்செய்யப்பட்டவன், எவர்க்கும் - எவர்களுக்கும், ஏதம் - பொல்லாங்குகளை, மனத்தினும் - மனத்தினாலும், நினைத்திடாதான் தனை - எண்ணாதவனாகிய இவனுக்கு, இவை - இந்த உபசருக்கங்களை, செய்தான் - செய்தவன், யாவனாயினும் - எவனாயிருந்தபோதிலும், தடிவன் - யான் சிக்ஷைசெய்வேன், (என்று தரணேந்திரன் சொன்னான்.) எ - று.

கண்டாய் - அசை. (௨௱௬)

207. உனக்கிவன் றமைய னாய பிறப்புநீ யறிந்த தொன்றே
உனக்குமு னிவனு மாய பிறப்பெண்ணி னுரைக்க லாற்றா
வினைக்குவித் தீட்ட வேண்டா வெகுளியைப் பெருக்கி மெய்ம்மை
நினைத்திடிற் சுற்ற மன்றி நின்றவ ரில்லை கண்டாய்.

(இ - ள்) (அதைக்கேட்டு) உனக்கு - உனக்கு, இவன் - இச்சஞ்சயந்தன்-றமையனாய - அண்ணனாகிய, பிறப்பு ஒன்றே - இவ்வொரு பிறப்பே, நீ - நீ, அறிந்தது - தெரிந்தது, உனக்கு - உன்றனக்கு, முன் - முன்னே, இவனும் - இச்சஞ்சயந்தனும், ஆய - உண்டாகிய, பிறப்பு - பிறப்புக்களை, எண்ணில் - இத்தனையென்று எண்ணினால், உரைக்கல் - வசனத்தினாற் சொல்வது, ஆற்றா - முடியாது, (அதாவது: அனந்தமாயிராநின்றன; ஆகையால்), வெகுளியை - கோபத்தை, பெருக்கி - விருத்தியாக்கி, வினைக்கு - கருமங்களுக்கு, வித்து - விதையை, ஈட்டவேண்டா - சம்பாதிக்கவேண்டாம், மெய்ம்மை - (பிறப்பினது) உண்மையை, நினைத்திடில் - நினைக்குமிடத்தில், சுற்றமன்றி - பந்துக்களல்லாமல், நின்றவர் - இருக்கப்பட்டவர், இல்லை - இவ்வுலகத்தில் ஒருவருமில்லை, எ - று.

கண்டாய் - அசை. (௨௭)

வேறு.

208. வருதிரை மணலினும் வளியி னாற்றிரள்
சருகிலை போலவுஞ் சாயை போலவும்
மருவிய வினைவசம் வருவ தல்லதிங்
கொருவர்க ணுறவொரு நாளு மில்லையே.

(இ - ள்) திரை - சமுத்திரத்தில் (அலைகளினாலே), வரு - வரப்பட்டிருக்கிற, மணலினும் - மணலைப்போலவும், வளியினால் - காற்றினால், திரள் - கூடப்பட்ட, சருகிலைபோலவும் - காய்ந்த இலைபோலவும், சாயைபோலவும் - தன்நிழலானது தன்னுடனிற்பதுபோலவும், மருவிய - சேர்ந்திராநின்ற, வினைவசம் - கர்மவசத்தினால், வருவதல்லது - வருவதேயல்லாமல், இங்கு - இவ்விடத்தில் (அதாவது: ஸம்ஸாரத்தில்), ஒருவர்கண் - ஒருவரிடத்தில், உறவு - நிலையான பந்துத்துவமானது, ஒருநாளும் - ஒரு தினமும், இல்லை - கிடையாது. எ - று. ()

209. மின்னினு மிகைநனி தோன்றி வீதலின்
மன்னிய வுயிர்தமை மருவி லாதன
முன்னைமூ வுலகினு ளில்லை யாயினும்
பின்னிய வுறவிது பெரிது மில்லையே.

(இ - ள்) மின்னினும் - மின்னலைப்பார்க்கிலும், மிகைநனி - மிகவும் அதிக மாக, தோன்றி - பிறந்து, வீதலின் - மரணத்தை அடைவதில், முன்னே - அநாதியாகவே, மன்னிய - சேர்ந்திராநின்ற, மூவுலகினுள் - மூன்றுலோகத்தி லும், (உள்ள), உயிர்தமின் - உயிர்களுள், மருவிலாதன - சேர்ந்த பந்துவல்லாதவை கள், இல்லையாயினும் - இல்லாமல் உறவாகவே யிருந்தபோதிலும், பின்னிய - அப்படிச் சேர்ந்திராநின்ற, உறவிது - இந்தப் பந்துத்துவமானது, பெரிதும் - மிகவும், இல்லை - சாஸ்வதமாக நிலைத்திருக்கப்பட்டதில்லை, எ - று. (கஅ)

210. உற்றவ ரேயுறு பகைஞ ராகுவர்
செற்றவ ரேசிறந் தாரு மாகுவர்
மற்றவ ரேமறித் திரண்டு மாகுவர்
அற்றவ ரொருவரிங் காரு மில்லையே.

(இ - ள) உற்றவரே - (பூர்வ ஜன்மத்தில்) பந்துவாகப் பொருந்தினவர் களே. (மறுஜன்மத்தில்), உறு - அடையப்பட்ட. பகைஞராகுவர் - சத்துருக்க ளாவார்கள், செற்றவரே - பகைவர்களே, சிறந்தாரு மாகுவர் - சிறப்பையுடைய பந்துக்களும் மித்திரர்களுமாவார்கள், மற்றவரே - பகையாளிகள் உறவாளிகளாகிய அவ்விருவருமே, மறித்து - திரும்பவும். இரண்டுமாகுவர் - அப்படியே இரண்டு விதமாகவும் பிறந்தாலும் பிறப்பார்கள், (ஆகையினால்), அற்றவர் - சத்துருமித்துரு வல்லாதவர்களாகிய. ஒருவர் - ஒருவர். இங்கு - இந்த ஸம்ஸாரத்தில், ஆரும் - எவ ரும், இல்லை - இலராவர், எ - று. (௭௦)

211. அரசர்க ளேயரு நரக ராகுவர்
நரகர்க ளேநல வரச ராகுவர்
சுரரவ ரேதொழு புலைய ராகுவர்
நரரவ ரேகரு நாயு மாகுவர்.

(இ - ள்) அரசர்களே - இராஜாக்களே. அரு - அரிய துன்பத்துக்கிடமா கிய, நரகராகுவர் - நரகர்களாகவும் பிறப்பார்கள், நரகர்களே - நரகர்களானவர்களே, நல்ல - நன்மையான. அரசராகுவர் - இராஜாக்களாகவும் பிறப்பார்கள், சுரரவரே - தேவர்களே. தொழு - தொழுநோயையுடைய, புலையராகுவர் - கீழ் மக்களாய்ப் பிறப்பார்கள், நரரவரே - மனுஷ்யர்களானவர்களே, கரு - கரிய, நாயுமாகுவர் - நாயாகவும் பிறப்பார்கள், எ - று. (௭௧)

212. மங்கைய ரேமணவாள ராகுவர்
நங்கைய ரேமறுத் தாயு மாகுவர்
அங்கவ ரேயடி யாரு மாகுவர்
இங்கிது பிறவிய தியல்பின் வண்ணமே.

(இ - ள்) மங்கையரே - ஸ்திரீமார்களே, மணவாளராகுவர் - புருஷர்களாகவும் பிறப்பார்கள், தங்கையரே - தங்கையானவர்களே, மறுத்து - மீண்டு, ஆயுமாகுவர் - மாதாவாகவுமாவார்கள், அங்கவரே - அங்கு அப்படிப்பட்டவரே, அடியாருமாகுவர் - (மறு சன்மத்தில்) அடியார்களாகவுமாவார்கள், பிறவியது - ஸம்ஸாரத்தினது, இயல்பின் - ஸ்வபாவமாகியதின், வண்ணம் - விதாயமானது, இங்கிது - இங்கே இத்தன்மையா யிராநின்றது, எ - று. (எஉ)

213. சுற்றமும் பகையுமென் றிரண்டு மில்லையா
மற்றிந்த வழக்கினான் மதியின் மாந்தர்கள்
பெற்றியைப் பார்கொடா பெற்ற தொன்றிலே
செற்றமு மார்வமுஞ் சென்று நிற்பரே.

(இ - ள்) சுற்றமும் - உறவினரும், பகையுமென்று - சத்துருக்களுமென்று, இரண்டு - இவ்விரண்டு தன்மையும், இல்லையாம் - நிலையாக ஆகப்பட்டவை இல்லையாகும், மற்று - பின்னர், இந்த வழக்கினால் - இந்த நிலையல்லாத வழக்கத்தினால், மதியின் - புத்தியையுடைய, மாந்தர்கள் - ஞானிகளானவர்கள், பெற்றியை - மேன்மைத் தன்மையை, பார் - இப்பூமியிலே, கொடா - கொடுக்கும்படியாக, பெற்றது - அடையப்பட்டதாகிய, ஒன்றிலே - இம்மனிதப்பிறப்பொன்றிலே, செற்றமும் - பகையினின்றும், ஆர்வமும் - ஆசையினின்றும், சென்று - நீங்கி, நிற்பர் - சமத்துவ பாவனையில் நிற்பார்கள், எ - று. (எங)

214. அனந்தமாம் பிறவியு ளருந் தவனுனைப்
புணர்ந்தவும் பகைவனு யனந்தம் போலுமா
லனந்தமே யிவனுற வாகி வந்தவும்
நினைந்தபின் னிதுபகை யுறவி னீர்மையே.

(இ - ள்) அனந்தமாம் - முடிவில்லாதனவாய் இதுவரையிலாகிய, பிறவியுள் - பிறப்புகளில், அருந்தவன் - அரிய தபத்தையுடைய சஞ்சயந்தன், உனை - உன்னை, பகைவனுய் - சத்துருவாக, புணர்ந்தவும் - சேர்ந்தனவும், அனந்தம்போலுமால் - அனந்தமென்கிறதற்குச் சமானமாகவும் ஆகும், இவன் - இவ்வித்துத் தந்தன், உறவாகி வந்தவும் - உறவினனாகி வந்தனவும், அனந்தம் - அனந்தமாகும், பின் - பிறகு (அதாவது அவற்றிற்குப் பிந்தின ஜன்மமாகிய இதில்), நினைந்த - நீ சிந்தித்த, பகையுறவின் நீர்மை - சத்துருத்துவமித்துருத்துவ ஸ்வபாவமானது, இது - இங்குக் கூறிய இத்தன்மையதாகும் (அதாவது: நிலையில்லாத தன்மையையுடையதாகும்), எ - று.

ல், ஏ - அசைகள். (எச)

வேறு

215. எப்பிறப்பினும் பகையுனக் கிவனலன் முனியுமோ ருறவல்லன்
எப்பிறப்பினும் பகையிவர்க் குண்டுமற் றுறவுனக் கிவனல்லன்
இப்பிறப்பிலிப் பகையுற வுக்குநீ யிப்படி யெழுவாயேற்
செப்பிறந்துழிப் பகையுற வுக்குநீ செய்வதென னிருவாளா.

(இ - ள்) எப்பிறப்பினும் - (முன் அனந்தமாகிய) எந்த ஜன்மங்களிலும், உனக்கு - உனக்கு, இவன் - இவ்வித்துதந்தன், பகையல்லன் - சத்துருவாகவே வரப்பட்டவனுமல்லன், முனியும - சஞ்சயந்தமுனியும், ஓர - ஒரு, உறவல்லன் - மித்திரனாகவே வரப்பட்டவனுமல்லன், எப்பிறப்பினும் - (இதற்குமுன் அடுத்த) எந்த ஜன்மங்களிலும், பகை - சத்துருவான தன்மை, இவர்க்கு - இவ்விருவர்களுக்கும், உண்டு - சில அபயர் உளது, மற்று - பின்னர், இவன் - இவ்வித்துத் தந்தன், உனக்கு - உனக்கு, உறவு அல்லன் - உறவானவனுமல்லன், இப்பிறப்பில் - இந்த ஒரு ஜன்மத்தில் உண்டாகிய, இப்பகையுறவுக்கு - இச்சத்துருமித்துருத் தன்மைக்கு, நீ - நீ, இப்படி - இத்தன்மையாக, எழுவாயேல் - ராகத்வேஷங்களுடன் கூடிச் செல்வையாகில், இறந்துழி - இதற்குமுன் சென்ற ஜன்மங்களிலுண்டாகிய, பகையுறவுக்கு - சத்துருமித்திரத் தன்மைக்கு, நீ - நீ, செய்வது - செய்வது, என் - என்னவிருக்கின்றது?, செப்பு - (அதை ஆராய்ந்து தெளிந்து) சொல்வாயாக, (இவற்றை யோசித்து) இருவாளா - பேசாதிருப்பாயாக, எ - று. (எரு)

வேறு.

16. ஐம்பரி வட்டணை யகத்தில் வாழுயிரக
கென்பல சொல்லினின் றிவனை நீவிடு
முன்பிவன் றனக்கிந்த முனிக்க ணுயதோ
ரென்புறு வேரத்தா லிவர்க்கி தாயதே.

(இ - ள்) ஐம்பரி வட்டணை - பஞ்சபரிவர்த்தனையாகிற, அகத்தில் - பரிணமிக்கிய ஸம்ஸாரத்தினிடத்தில், வாழ் - ஜீவிக்கப்பட்ட, உயிர்க்கு - ஆத்மாக்களுக்கு, பலசொல்லின் - அநேகமாகச் சொல்லினும, என் - என்ன? (அதாவது: என்ன பிரயோஜனமாகப்போகிறது; எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லலாம்; ஆதலின்), இன்று - இப்பொழுது, இவனை - இவ்வித்துதந்தனை, நீவிடு - நீவிட்டு விடக்கடவாயாக; முன்பு - பூர்வத்தில், இவன் தனக்கு - இவ்வித்துத் தந்தனுக்கு, இந்த முனிக்கண் - இச்சஞ்சயந்த முனியினிடத்தில், ஆயது - உண்டாகியதான, ஓர் - ஒரு, என்புறும் - எலும்புக்குள்ளும் ஊடுருவிச் செல்லும்படியான, வேரத்தால் - வைரபாவத்தால், இவர்க்கு - இவ்விருவருக்கும், இதாயது - இத்தன்மை யான செய்கை உண்டானது, எ - று. (எசு)

**217.** ஆதலால் வெகுளியே பகை நமக்கெலாம்
தீதெலாம் வினையினாற் றீக்க திப்பெய்யும்
காதலார் தம்மையு மொருக ணத்துளே
ஏதிலா ராக்குமிக் கிகழத் தக்கதே.

**(இ - ள்)** ஆதலால் - ஆகையினால், வெகுளியே - கோபமே, நமக்கு - ஆத்மாக்களாகிய நமக்கு, பகை எல்லாம் - சத்துருவெல்லாமாகும், தீதெல்லாம் - தீங்குகளெல்லாமாகும், வினையினால் - (தன்னுடைய) கருமங்களினால், தீக்கதி - கெட்டகதிகளிலே, பெய்யும் - (நம்மை) அடைவிக்கும், காதலார் தம்மையும் - உறவினர்களையுங்கூட, ஒரு கணத்துளே - ஒரு க்ஷணத்திற்குள்ளே, ஏதிலாராக்கும் - பகைவர்களாகவும் செய்விக்கும், (ஆதலின்), இது - இக்கோபமானது, இகழத்தக்கது - இகழ்ச்சி செய்யத்தக்கது, எ - று. (௭௭)

வேறு.

**218.** மற்றிவன் செய்த தீமைக் கேதுமா முனிவனேமுன்
கொற்றவ னாகிச் செய்த கொடுமைசெய் கோபத் தீயால்
வெற்றிவே லுண்ட நீர்போ னின்றவே ரத்தின் வீடி
யிற்றவிப் பிறப்பின் வேரத் திவனிவை செய்த தென்றான்.

**(இ - ள்)** மற்று - பின்னையும், இவன் - இவனால், செய்த - செய்யப்பட்ட, தீமைக்கு - பொல்லாங்கிற்கு, ஏது - காரணம், மாமுனிவனே - உச்சஞ்சயந்த மஹாமுனியே, (இவன்) முன் - பூர்வத்தில், கொற்றவனாகி - ஸிம்மஸேனனென்னும் அரசனாயிருந்து, செய்த - செய்ததாகிய, கொடுமை செய் - துன்பஞ் செய்யும்படியான, கோபத்தீயால் - கோபாக்கினியினால், வெற்றி - வெற்றியைத்தருகின்ற, வேலுண்ட - காய்ச்சிய வேலாயுதமானது உட்கொண்ட, நீர்போல் - ஜலத்தைப்போல, நின்ற - தங்கியிராநின்ற, வேரத்தின் - வைரபாவத்தோடு, வீடி - இறந்து (தீக்கதிகளில் செல்பவனாகிய), இவன் - இவ்வித்துத்தந்தன், இற்றவிப் பிறப்பின் - (ஸிம்மஸேன வரசனுக்கு) அந்நியபவமாகிய சஞ்சயந்தராய இப்பிறப்பினிடத்தே, வேரத்து - அவ்வைரத்தால், இவை செய்தது - இப்படிப்பட்ட உபசருக்கங்களைச் செய்ததுண்டாகியது, என்றான் - என்று ஆதித்யாபதேவன் சொல்லினான், எ - று. (௭அ)

**219.** இதற்குமுன் போன நான்கு பிறப்பிலிவ் வீரன் செய்கை
மதித்தவன் பிறவி தோறும் வயிரத்தால் வானத் துய்த்தான்
அதற்கெலாஞ் செய்வ தென்கொ லருந்தவன் றிரிந்து வாராக்
கதிக்கணின் முனிவன் றன் றீமையாற் கண்ட துண்டோ.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும்) இதற்குமுன் - இதற்கு முன்னால், போன - நீங்கிப்போன, நான்கு பிறப்பில் - நாலு ஜன்மங்களில், இவ்வீரன் - இச் சஞ்சயந்தன், செய்கை - பொறுமையாகிற காரியத்தை, மதித்து - மனத்தி லெண்ணி, அவன் - அவ்வித்துத்தந்தன், பிறவிதோறும் - அந்த நாலு பிறப்புக் களிலும், வயிரத்தால் - வயிரபாவத்தினால், (அநேக துன்பங்களைச்செய்து), வானத் துய்த்தான் - (இச்சஞ்சயந்த முனியை) தேவலோக மடையும்படியாகவுஞ் செய் தான், அதற்கெலாம் - அப்படி அவன் செய்ததற்கெல்லாம், செய்வது - உன்னால் செய்யப்படுவது, என்கொல் - என்னவிருக்கது, அருந்தவன் - இச்சஞ்சயந்தன், இவன்றன் தீமையால் - இவன் செய்த துன்பத்தால் (அதாவது: அதனை ஸஹித்த குணத்தினின்றுமே கருமங்கள் விலகி), திரிந்து வாரா - திரும்பி வாராமையாகிய, கதிக்கணின்றான் - சாஸ்வத கதியில் சேர்ந்து நிலைபெற்றான், கண்டதுண்டோ - இதை நீ அறிந்ததுண்டோ, எ - று. (எக)

220. இன்றிவன் செய்த தெல்லா முறுதியே யிறைவற் கென்றும்
நின்றிடும் புகழை வித்தி நெடும்பழி விளைத்துக் கொண்டான்
அன்றியு மிவன்செய் துன்பம் பொறுத்தத லகதி புக்கான்
ஒன்றியிவ் விரண்டின் மிக்க தொன்றுண்டோ வுரகர் கோவே.

(இ - ள) உரகர் கோவே - தரணேந்திரனே!, இன்று - இப்போது, இவன் - இவனால், செய்தவெல்லாம் - செய்யப்பட்ட பொல்லாங்கெல்லாம், இறை வற்கு - சஞ்சயந்த பட்டாரகர்க்கு, உறுதியே - உறுதியானதே, (இதனால்), என்றும்- எப்பொழுதும், நின்றிடும் - நிலைநிற்கும்படியான, புகழை - கீர்த்தியை, வித்தி - அவருக்குண்டுபண்ணி, நெடும்பழி - நீங்காத பழிச்சொல்லை, விளைத்துக்கொண் டான்-இவன் தனக்கு உண்டுபண்ணிக்கொண்டான், அன்றியும்-அது வல்லாமலும், இவன் செய்துன்பம் - இவன் செய்த தீமையை, பொறுத்தால் - சகித்ததி னாலே, அகதி - மோட்சகதியை, ஒன்றி - பொருந்தி, புக்கான் - சஞ்சயந்தன் அடைந்தான், இவ்விரண்டின் - இந்தத் தீமை நன்மைகளைக் காட்டிலும், மிக்கது- மேலானது, ஒன்றுண்டோ - ஒன்றிருக்கின்றதோ? (நீ யோசித்தறிவாயாக,) எ-று.

221. என்றலு முரக ராச னிறந்தநாட் பிறவி தோறுஞ்
சென்றிவன் செய்த வெல்லாஞ் செப்பெனத் தேவராசன்
நின்றநின் வெகுளி வெப்பங் கருணையா லவிந்து நின்று
வென்றவர்ப் பணிந்துவாநீ வினவிய துரைப்ப னென்றான்.

(இ - ள) என்றலும் - என்று ஆதித்யாபன் சொன்னமாத்திரத்தில், உரக ராசன் - தரணேந்திரனானவன், இறந்தநாள் - சென்ற நாள்களில், பிறவிதோறும் சென்று - முன் ஒவ்வொரு சன்மங்களிலும் சென்று, இவன் - இவ்வித்துத்தந் தன், செய்தவெல்லாம் - செய்த தீமைகளையெல்லாம், செப்பென - சொல்லக்

கடவாயென்று கேட்ப, தேவாசன் - இலாந்தவகல்பத்துத் தேவேந்திரனுகிய ஆதித்யாபன், நின்ற - நிலைபெற்ற, நின் - உன்னுடைய, வெகுளி - கோபமாகிய, வெப்பம் - வெதுப்பத்தை, கருணையால் - தயவாகிய ஜலத்தால், அவித்து - அவியப்பண்ணி, நின்று - ஸ்வஸ்தபாவத்தில் நிலையாகி, வென்றவர்-கருமங்களைவென்ற சஞ்சயந்தபட்டாரகரை, பணிந்து - வணங்கி, வா - வரக்கடவாய், (அப்படி வருவையேயாமாகில்) நீவினவியது - நீகேட்ட ஸமாசாரத்தை, உரைப்பன் - (அப்போது) சொல்வேன், என்றான் - என்று சொன்னான், எ - று. (௮௧)

**222.** என்றலு நின்ற கோபத் தெரிமழை யிடருற் றாற்போல்
அன்றவன் சொன்ன வின்சொன் மாரியா லவிந்த தாங்கண்
சென்றது தெளிவு சிந்தை சினவரன் சரண மூழ்கி
நின்றனன் கமலமாதித் தாபனேர் பட்ட தொத்தே.

(இ - ள்) என்றலும் - என்று சொன்னவுடனே, நின்ற - நிலைபெற்ற, கோபத்து - கோபத்தாலுண்டாகிய, எரி - அக்கினியானது, மழை - மழையினால், இடருற்றாற்போல் - கெட்டதுபோல, அன்று - அப்பொழுது, அவன்சொன்ன - அத்தேவனால் சொல்லப்பட்ட, இன்சொல்மாரியால் - இனியவசனமாகிய மழையினால், அவிந்தது - கெட்டு நீங்கிற்று, ஆங்கண் - அப்படியாமிடத்து, தெளிவு-தெளிவானது, சிந்தை - அவன் மனதில், சென்றது - அடைந்தது, (அவ்வாறாகவே அவன்) சினவரன் - ஜிநேஸ்வரனது, சரணம் - பாதங்களில், மூழ்கி - படிந்து வணங்கி, கமலம் - தாமரைப்பூவானது, ஆதித்தபன் - சூரியனுடைய, நேர் - எதிரில், பட்டதொத்து - அடைந்து மலர்ந்ததுபோல், நின்றனன் - (ஆதித்யாபதேவனுக்கெதிரில்) நின்றான், எ - று. (௮௨)

**223.** நின்றவன் றன்னை நோக்கி முனிவனு நீயு நானும்
மின்றிகழ் தந்த ஞேடும் விரும்பிய மனத்த ராகிச
சென்றவப் பிறவி தொட்டு வந்தன மின்று காறும்
ஒன்றுமெஞ் சாமை கேணீ யுரைக்கின்றே னூரகர் கோவே.

(இ - ள்) நின்றவன்தன்னை - அப்படி நின்றவனை, நோக்கி - பார்த்து, முனிவனும் - இச்சஞ்சயந்தனும், நீயும் - நீயும், நானும் - நானும், மின் - பிரகாசமானது, திகழ் - விளங்காநின்ற, தந்தஞேடும் - இவ்விதத்துத் தந்தஞேடும், விரும்பிய மனத்தராகி, விருப்பங்கொண்ட மனத்தையுடையவர்களாகி, சென்ற - முன்சென்ற, அப்பிறவிதொட்டு - அந்தப் பிறப்பாகிய ஸிம்மஸேன வாசன்பவ முதற்கொண்டு, இன்றுகாறும் - இன்றைய வரையிலும், வந்தனம் - சேர்ந்து பிறந்துவாராநின்றோம், உரகர்கோவே - தரணேந்திரனே!, ஒன்றும் - அச்சங்கதிகளிலொன்றும், எஞ்சாமை - குறைவில்லாமல், உரைக்கின்றேன் - யான் சொல்லுகின்றேன், நீ-நீ, கேள் - கேட்பாயாக, (என்று ஆதித்யாபதேவன் கூறத்தொடங்கினான்), எ - று.

---

இரண்டாவது :
சஞ்சயந்தன் முத்திச்சருக்கம் முற்றுப்பெற்றது.

மூன்றாவது :

## பத்திரமித்திரன் அறங்கேள்விச்சருக்கம்

---

**224.** மந்தர நடுவ தாகக் குலமலை யாறின் வந்த
அந்தரத் தேழு நாடா மாறுமீ ரேழ தாகிச்
சுந்தரத் தடங்க ளாறிற் சூழ்ந்தவே திகைத்து மாகி
நந்திய மதியி னின்ற நாவலந் தீவி னுள்ளால்.

**(இ - ள்)** மந்தரம் - மஹாமேருபர்வதமானது, நடுவதாக - மத்தியிலுள்ளதாயிருக்க, குலமலையாறின் - ஆறுகுலகிரிகளினால், வந்த - உண்டாகிய, அந்தரத்து - இடைவெளியில், ஆய் - இருக்கின்ற, ஏழுநாடு - பரதாதி ஏழுநாடுகளையும், ஆறு ஈரேழதாகி - பதினான்கு ஆறுகளையுமுடையதாகி, சுந்தரம் - அழகிய, ஆறின் - ஆறொன்றுமெண்ணிக்கையையுடைய, தடங்கள் - பொய்கைகளையும், சூழ்ந்த - சூழ்ந்திராநின்ற, (மஹாலவண ஸமுத்திரத்தினையுடைய), வேதிகைத்துமாகி - வஜ்ரவேதிகையையுமுடையதாகி, நந்திய - நிறைந்திராநின்ற, மதியின் - ஸம்பூர்ணச் சந்திரனைப்போல, நின்ற - வட்டமாய் நிலைபெற்றிருந்த, நாவலந்தீவினுள் - ஜம்பூத்வீபத்திலே, எ - று.

ஆறும் என்பதில் உம்மை - அசை. (க)

**225.** பாகதுண் டத்தைப் போலும் பரதகண் டத்துச் செம்பொன்
நாகதுண் டத்தை யொக்குந் தருமகண் டத்து நல்ல
போகதுண் டத்தைப் போலுஞ் சீயமா புரத்தைச் சூழ்ந்து
மேகதுண் டங்கள் மேயுஞ் சோலைநா டுண்டு திங்கள்.

**(இ - ள்)** திங்கள் - சந்திரனுடைய, பாகதுண்டத்தைப் போலும் - பாதிப் பாகத்துக்குச் சமானமாகிய, பரதகண்டத்து - பரதக்ஷேத்திரத்தில், செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, நாகதுண்டத்தை யொக்கும் - தேவலோகத்தின் ஒரு பாகத்துக்குச் சமானமாகிய, தருமகண்டத்து - தர்மகண்டத்திலே, நல்ல - நன்மையாகிய, போகதுண்டத்தைப் போலும் - உத்தமபோக பூமிக்குச் சமானமாகப் போகங்களில் மிகுதியான, சீயமாபுரத்தை - ஸிம்ம மஹாபுரமென்னும் பட்டணத்தை, சூழ்ந்து - வளைந்து, மேகதுண்டங்கள் - மேகஸமூகங்கள், மேயும் - வியாபித்து நிற்கும், சோலை - (உன்னதமாகிய) தோப்புகளையுடைய, நாடு - தேசமானது, உண்டு - உளது, எ - று. (உ)

226. சீயமா புரத்தின் றன்மை செப்புவன் சிறிது கேண்மோ
காயமா ருகச் செல்வோர் கண்டபின் கடந்து போகார்
தூயவாந் தலஞ்செய் குன்றஞ் சோலைகண் மாடந் தம்மாற்
சேயிழை மடநல் லார்போல் சித்தத்துக் கினிய தொன்றே.

(இ - ள்) சீயமாபுரத்தின - அந்த ஸிம்மமஹா புரத்தினது, தன்மை - தன்மையை, சிறிது - கொஞ்சம், செப்புவன் - சொல்லுவேன், கேண்மோ - கேட்பாயாக, காயமாருக - ஆகாயமார்க்கமாக, செல்வோர் - செல்பவர்களாகிய தேவர்கள் வித்தியாதரர்கள் முதலியவர்கள், கண்டபின் - அந்நகரத்தைப் பார்த்த பின்பு, கடந்து - தாண்டி, போகார் - போகமாட்டாமல் தங்குவார்கள், தூயவாம் - பரிசுத்தமாகிய, தலம் - தலங்களும், செய்குன்றம் - கிரீடாத்திரிபர்வதங்களும், சோலைகள் - தோப்புகளும், மாடம் தம்மால் - உப்பரிகைகளும் (ஆகிய) இவைகளால், (பார்க்குமிடத்தில் அது) சேயிழை - சிவந்த ஒளியுள்ள ஆபரணங்களை யணிந்திராநின்ற, மடம் - அறியாமையையுடைய, நல்லார்போல் - ஸ்திரீமார்களைப்போல, சித்தத்துக்கு - மனதுக்கு, இனியதொன்று - இனிமையான தோற்றத்தையுடையதாகிய ஒன்றாகும், எ - று. (ரு)

227. செப்பிய நகர்க்கு நாதன் சீயமா சேன னென்பான்
வெப்பநின் றருத வேலான் வேந்தரை வென்ற பெற்றிக்
கொப்புமை யின்றி நின்றா னுதவிகற் பகத்தை யொப்பான்
துப்புறழ் தொண்டை வாயார் தொழுதெழு காமன் கண்டாய்.

(இ - ள்) செப்பிய - சொல்லப்பட்ட, நகர்க்கு - அந்த ஸிம்ம மஹாபுரத்திற்கு, நாதன் - இராஜாவானவன், சீயமாசேன னென்பான் - சிம்மசேனனென்பவனும், வெப்பம்நின்று - சத்துருக்கள்பேரில் ஏற்படும் கோபவெதுப்பம்நின்று, அருத - நீங்காத, வேலான் - வேலாயுதத்தையுடைய அவ்வரசன், வேந்தரை - சத்துரு இராஜாக்களை, வென்ற - ஜெயித்த, பெற்றிக்கு - பெருமைத்தன்மைக்கு, ஒப்புமையின்றி - உவமையில்லாமல், நின்றான் - நிலைபெற்றிருந்தான், உதவி - உதவி செய்வதில், கற்பகத்தையொப்பான் - கற்பகவிருட்சத்துக்குச் சமானமானவன், துப்பு - பவளத்தை, உறழ் - ஒத்த, தொண்டை - கொவ்வைக் கனிபோன்ற, வாயார் - சிவந்த வாயையுடைய ஸ்திரீமார்கள், தொழுதெழு - வணங்கிச் செல்லும்படியான, காமன் - மன்மதனும், கண்டாய் - தெரிந்தனையா?, எ - று. (சு)

228. ஊனுமிழ்ந் திலங்கும் வைவேல் மன்னவ னுள்ளத் துள்ளாள்
தேனுமிழ்ந் திலங்கு மைம்பாற் றேவிதா னிராம தத்தை;
வானுமிழ்ந் திலங்கு மின்போல் வருந்துநுண் ணிடையாள் வாரி
தானுமிழ்ந் தமிழ்து பெற்ற கலசம்போற் றனத்தினாளே.

(இ - ள்) ஊன் - மாமிசத்தை, உமிழ்ந்து - கக்கி, இலங்கும் - விளங்கும், வை - கூர்மையான, வேல் - வேலாயுதத்தையுடைய, மன்னவன் - அவ்வரசனது, உள்ளத்து - மனதில், உள்ளாள் - தங்கியிராநின்றவளாகிய, தேன் - தன்னிடம் அணியப்பட்டிருக்கும் மலரிலுள்ள மதுவை, உமிழ்ந்து - சொரிந்து, இலங்கும் - விளங்கும், ஐம்பால் - ஐந்து பகுப்பையுடைய கூந்தலைப்பெற்ற, தேவிதான் - பட்டத்தரசியானவள், இராமதத்தை - இராமதத்தையென்னும் பெயரினையுடையாள், (அவள்) வான் - ஆகாயத்திலுள்ள மேகத்தால், உமிழ்ந்து - வெளிப்படுத்தப்பட்டு, இலங்கும் - விளங்கும், மின்போல் - மின்னற் கொடிபோல, வருந்தும் - (தளர்ச்சியால்) வருந்தாநின்ற, நுண் - மெல்லிய, இடையாள் - இடையினையுடையாள், வாரிதான் - க்ஷீரஸமுத்திரத்தால், உமிழ்ந்த - தரப்பட்ட, அமிழ்து - அமிர்தத்தை, பெய்த - உள்வைக்கப்பட்ட, கலசம்போல் - சிறு கும்பத்துக்குச் சமானமான, தனத்தினள் - கொங்கைகளையுடையாள், எ - று.

வான் இடவாகுபெயராய் மேகத்தைப் புணர்த்திற்று. தான் இரண்டும் அசைகள். உமிழ்ந்தமிழ்து என்பதில் அகரந்தொக்கது. (ரு)

229. வேதநான் கங்க மாறம் புராணமும் விரிக்குஞ் சொல்லிற்
றீதிலாச் சத்திய கோட னாமஞ்சீ பூதி யென்பான்
போதுலா முடியி னானுக் கமைச்சனாய்ப் புணர்ந்து பின்னைத்
தீதெலா மகற்றி வையஞ் செவ்வியாற் காக்கு நாளால்.

(இ - ள்) வேதம்நான்கு - சதுர்வேதங்களையும், அங்கமாறும் - ஆறுவிதமான சாஸ்திரத்தினது அங்கங்களையும், புராணமும் - பதினெண்புராணங்களையும் உபபுராணங்களையும், விரிக்கும் - விரித்துரைக்கின்றவனும், சொல்லில் - வசனத்தினால், தீதிலா - குற்றமில்லாதவனுமாகிய, சத்தியகோடன் - ஸத்தியத்தை கோஷிக்கின்றவனென்னும், நாமம் - அன்வர்த்த நாமத்தையுடைய, சீபூதியென்பான் - ஸ்ரீபூதி என்கிற பிராமணன், போது - புஷ்பமாலை, உலாம் - அணியப்பெற்றுப் பரளுகின்ற, முடியினானுக்கு - முடியையுடைய அவ்வரசனுக்கு, அமைச்சனாய் - மந்திரியாகி, புணர்ந்து - சேர, பின்னை - பிற்பாடு, வையம் - தனது இராஜ்யத்தில், தீதெலாம் - பொல்லாங்குகளையெல்லாம், அகற்றி - நீக்கி, செவ்வியால் - நடுநிலைமையால், காக்கு நாள் - (அவ்வரசன்) இராஜ்யம் பண்ணுகின்ற காலத்தில், எ - று.

புணர என்னும் செயவெனெச்சம், புணர்ந்து எனச் செய்தெனெச்சமாய்த் திரிந்து வந்தது. ஆல் - உருபுமயக்கம். (சு)

வேறு.

230. பத்ம சங்க நிதிக்கிட மாயது
பத்ம சண்ட மெனப்பகர் மாநகர்

மற்ற தனக்கண் வணிகொரு வனுளன்
சொற்க டந்த கொடைக்கைச் சுதத்தனே.

(இ - ள்) பத்மசங்க நிதிக்கு - பத்மநிதி சங்கநிதி என்கிற நிதிகளுக்கு, இடமாயது - ஸ்தானமாயிரா நின்றதாகிய, பத்மசண்டமென - பத்மஷண்டமென்று, பகர் - சொல்லப்பட்ட, மா - பெரிய, நகரந்தன்கண் - பட்டணத்தில், சொல் கடந்த - வித்துவான்களால் சொல்லப்படும் உரைக்கடங்காது மேற்பட்ட (அதாவது: அளவில்லாத), கொடை - தியாகம் கொடுத்தலையுடைய, கை - கையுள்ள, சுதத்தன் - ஸுதத்தனென்னும் பெயரையுடையவனாகிய, வணிகொருவன் - ஒரு வணிகனானவன், உளன் - இருப்பவனானான், எ - று.

வணிகம் என்னும் வியாபாரத்தின் பெயர் விகுதிகுன்றி வணிகென நின்றது; இஃதாகு பெயராய் வணிகனை யுணர்த்திற்று. மற்று - அசை. (எ)

231. மற்ற வன்றன் மனைக்கு விளக்கனாள்
சுற்ற நன்மையி னாமஞ் சுமித்திரை
விற்கு னிப்புரு வத்தொளிர் வேற்கணாள்
கற்ப லர்ந்தவோர் காமரு வல்லியே.

(இ - ள்) மற்று - பின்னை, அவன்தன் - அந்தச் சுதத்தனுடைய, மனைக்கு - வீட்டிற்கு, விளக்கனாள் - தீபம்போல் பிரகாசிப்பவளாகிய மனையாளானவள், வில் - வில்லைப்போல, குனி - வளைந்த, புருவத்து - புருவத்தையும், ஒளிர் - பிரகாசியாநின்ற, வேல் - வேல் போன்ற, கணாள் - கண்களையும் உடையவளாகிய, கற்பு - பதிவிரதாகுணம், அலர்ந்த - உண்டாகியிராநின்ற, ஓர் - ஒப்பற்ற, காமர் - அழகு பொருந்திய, வல்லி - பூங்கொடி போன்றவள். சுற்றம் - பந்துக்களுக்கு, (அவள் செய்யும்) நன்மையின் - நன்மையினால், (அவளுக்கேற்பட்ட) நாமம் - பெயரானது, சுமித்திரை - ஸுமித்திரையென்பதாகும், எ - று.

காமரு என்பதில் உ - சாரியை. (அ)

232. அந்தி யும்மகல் வானுமுன் னாளினால்
இந்து வைப்பயந் தாங்கவ் விருவரும்
மைந்த னைப்பயந் தார்மதி போல்வளர்ந்
தந்த மில்லுவ கைக்கிட மாயினான்.

(இ - ள்) அந்தியும் - ஸந்தியாதேவியும், அகல் - விசாலமாகிய, வானும் - ஆகாயமும், முன்னாளினால் - பூர்வபட்சத்தில், இந்துவை - பாலசந்திரனை, பயந்தாங்கு - பெற்றதைப்போல, அவ்விருவரும் - அந்த இரண்டு பேர்களும், மைந் - குமாரனை, பயந்தார் - பெற்றார்கள், (அப்புதல்வன்) மதிபோல் - சந்திர

னைப்போல, வளர்ந்து - விருத்தியடைந்து, அந்தமில் - அளவில்லாத, உவகைக்கு - சந்தோஷத்திற்கு, இடமாயினான் - ஸ்தானமானான், எ - று.

நாளினால் என்பதில் இன், ஆ - சாரியைகள்; இன் - சாரியையாய், ஆல் - உருபு மயக்கமாக வந்ததெனினுமாம். (கூ)

233. சுரந்த கார்முகில் போல சுதத்தனென்
றிரந்த வர்க்கிடர் தீர வளித்தவன்
பரந்து லாம்பெயர் பத்திர மித்திரனெம்
மரந்தை தீர்த்தலி னாமென வோதினான்.

(இ - ள்) சுரந்த - நீர்நிறைந்த, கார் - கரிய, முகில்போல - மேகத்தைப் போல, (அதாவது அம்மேகம் மழையைப் பொழிவதுபோல்), சுதத்தனென்று - நல்ல ஈகையையுடையவனென்று உலகத்தார் சொல்லும்படி, இரந்தவர்க்கு - யாசித்தவர்களுக்கு, இடர் - வறுமை, தீர - நீங்க, அளித்து - திரவியத்தைக்கொடுத்து, அவன் - அந்த ஸ்ரேஷ்டியானவன், எம் - எங்களுடைய, அரந்தை - வருத்தத்தை, தீர்த்தலின் - இக்குமாரன் நீக்கினபடியால், (இவனுக்கு) பரந்து - எவ்விடங்களினும் சென்று, உலாம் - வியாபிக்கும் (புகழையுடைய), பெயர் - நாமமானது, பத்திரமித்திரன் ஆமென - பத்திரமித்திரனாகுமென்று, ஓதினான் - (அப்புத்திரனுக்குப் பெயரிட்டுச்) சொன்னான், எ - று.

எனவென்னும் எச்சம் என்று எனத்திரிந்து வந்தது. (சுo)

234. கலையி னின்பமுங் காமரு கன்னியர்
மலையி னின்பமு முத்தொடு மாமணி
விலையி னின்பமும் வேண்டினர்க் கீந்தெய்தும்
தலையி னின்பமுந் தானவ னெய்தினான்.

(இ - ள்) (அதன்மேல்) கலையின் இன்பமும் - சாஸ்திரங்களைத் தெரிந்து அதனாலாகிய இன்பத்தையும், காமரு - அழகிய, கன்னியர் - மாதர்களினது, மலையினின்பமும் - இல்லற வியலாலுண்டாகிய சுகமும், முத்தொடு - முத்துக்களோடு, மா - பெரியதாகிய, மணி - இரத்தினங்களுடைய, விலையினின்பமும் - விலைமதித்தலாலாகிய இரத்தின வியாபாரத்தின் சுகமும், வேண்டினர்க்கு - யாசித்தவர்களுக்கு, ஈந்து - கொடுத்து, எய்தும் - அதனாலடையப்பட்ட, தலையினின்பமும் - மேன்மையின் சுகத்தையும், அவன் அக்குமாரனாகிய பத்திரமித்திரன், எய்தினான் - அடைந்தான், எ - று.

தான் - அசை. (சுக)

235. படங் கடந்தணி தங்கிய வல்குலுங்
குடங்கை யேயள வுள்ள கொழுங்கணும்
வடஞ் சுமந்தெழு கொங்கையு மங்கையர்
நுடங்கு நுண்ணிடை யுண்ணுநர் வெய்தினன்.

(இ - ள்) மங்கையர் - உரியமாதர்களுடைய, படம் - ஸர்ப்பத்தினது பணுமுடியை, கடந்து - (உருவத்தினால் மீறி) ஜெயித்து, அணி தங்கிய - அழகு பொருந்திய, அல்குலும் - கடிதடமும், குடங்கையேயளவுள்ள - விசாலமாய் உள்ளங்கை யளவாகிய, கொழும் - செழுமையாகிய, கண்ணும் - நேத்திரமும், வடம் - முத்துவடம் முதலானவைகளை, சுமந்து - தரித்து, எழு - நிமிர்ந்திருக்கின்ற, கொங்கையும் - குயங்களும், நுடங்கும் - அசையும்படியான, நுண் - மெல்லிய, இடை - இடையும், (ஆகிய அங்கங்களின்) நுகர்வு - அனுபவத்தை, உள் - மனத்தின் கண்ணே, எய்தினன் - அடைந்தான், எ - று.

குடங்கையே என்பதில், ஏ - அசை. (கஉ)

236. வளஞ் சுருங்கிடின் மாநிதி யும்பலோ
ரளந்து கொண்டுண லாம்படி தானெழ
லுளஞ்செய் தூதிய முள்பொருள் கொண்டுபோய்
விளங்கு மாமணித் தீவது மேவினன்.

(இ - ள்) வளம் - பொருள் வருவாயாகிய வளப்பமானது, சுருங்கிடின் - குறையுமேயானல், மாநிதியும் - (ஒருவனிடமிருக்கும்) பெரிதாகிய திரவியமும், பலோர் - சுற்றத்தார் பலரும், அளந்துகொண்டு - அளவிட்டுக் குறைவாகக் கொண்டு, உணல் ஆம் - உண்ணும்படியாகிய தன்மை ஆகும் (அதாவது: பொருள் அதிகமிருந்தாலும் மேல்வருவா யில்லையேல் அதனை யெல்லாரும் குறைவாக அளந்தெடுத்துண்ணும்கஷ்டமுண்டாகும்; ஆதலின்), ஊதியம் ஆம்படி - மேலும் வருவாயுண்டாகும்படி, தான் - அப்பத்திரமித்திரனென வணிகன், எழல் உளஞ்செய்து - வியாபாரஞ்செய்யக் கப்பல் யாத்திரைபோக உத்தேசித்து, உள் - தன்னிடமிராநின்ற, பொருள் - பண்டங்களை, கொண்டு - கப்பலிலேற்றிக்கொண்டு, போய் - சென்று, விளங்கும் - பிரகாசியாநின்ற, மா - பெரிய, மணித்தீவது - இரத்தினத் வீபத்தை, மேவினன் - அடைந்தான், எ - று.

'ஆம்' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (கங)

237. சென்று சாத்தோடத் தீவினைச் சேர்ந்தவன்
ஒன்றும் வாணிபத் தாற்பெற்ற வூதியம்

மன்ற மாதவர் கையிட்ட வல்சியால்
நின்ற போக நிலம்பெற்ற தொக்குமே.

(இ - ள்) சாத்தொடு - ஸார்த்தத்தோடு, சென்று - போகி, அத்தீவினை - அந்த இரத்தின தீபத்தைச், சேர்ந்தவன் - சேர்ந்த பத்திரமித்திரன், ஒன்றும் - பொருந்திய, வாணிபத்தால் - வியாபாரத்தால், பெற்ற - அடைந்த, ஊதியம் - இலாபமானது, மன்ற - நிச்சயமாக, மாதவர் - மஹா தபஸையுடைய முனிவர்களின், கை - கையிலே, இட்ட - இடப்பட்ட, வல்சியால் - ஆகார தானத்தினாலே, நின்ற - இவ்வுலகத்தில் நிலைபெற்ற, போகநிலம் - உத்தம போக பூமியை, பெற்றதொக்கும் - அடைந்ததற்குச் சமானமாகும், எ - று.

எனவே மிகுதியான இலாபம் பெற்றானென்பது பெறப்பட்டது. (கச)

238. புண்ணி யம்முத யஞ்செய்த போழ்தினில்
எண்ணி லாத பொருட்குவை யாவையும்
நண்ணு மென்றருள் நாத னுரையினுக்
கண்ண லேயெடுத் தீடது வாயினான்.

(இ - ள்) புண்ணியம் - முன்செய்த புண்ணியம், உதயஞ்செய்த போழ்தினில் - உதித்த காலத்தில், எண்ணிலாத - கணக்கில்லாத, பொருள்குவை யாவையும் - திரவிய சமூகங்களெல்லாம், நண்ணுமென்று - அடையுமென்று, அருள் - கூறியருளுகின்ற, நாதனுரையினுக்கு - ஸர்வஜ்ஞனுரைத்த வசனத்திற்கு, அண்ணலே - ச்ரேஷ்டனாகிய பத்திரமித்திரனே, எடுத்தீடது - எடுத்துக் காட்டாக (அதாவது: உவமையாக), ஆயினான் - ஆனான், எ - று. (கரு)

239. மணியும் முத்தும் வயிரமுஞ் சந்தனத்
துணியு நல்லகி லுந்துகி ரும்பிற
மணியுந் தூரியுங் கொண்டு வருமவன்
இணையில் சீய புரமதை யெய்தினான்.

(இ - ள்) (இவ்வாறு இலாபத்தை அடையவே திரும்பி) மணியும் - இரத்தினங்களும், முத்தும் - முத்துக்களும், வயிரமும் - வச்சிரக்கற்களும், சந்தனத்துணியும் - சந்தனக்கட்டைகளும், நல் - நன்மையாகிய, அகிலும் - அகிற்கட்டைகளும், துகிரும் - பவளங்களும், பிறமணியும் - இவையல்லாமல் இன்னும் அநேகமாகிய பிற இரத்தினங்களும், தூரியும் - பலகறையும், கொண்டு - வியாபாரத்தால் சம்பாதித்துக் கொண்டு, வருமவன் - வருகின்ற அப்பத்திரமித்தின், இணையில் - உவமையில்லாத, சீயபுரமதை - ஸிம்ம மஹாபுரத்தை, எய்தினான் - அடைந்தான், எ - று.

**240.** மிக்க லாபத்தின் மேவிய சிந்தையான்
செக்கர் வான மெனத்திகழ் மேனியான்
திக்க னைத்துந் திகழ்ந்ததோர் தேசினாற்
புக்க னன்புரம் வந்தெதிர் கொள்ளவே.

(இ - ள்) (அவ்வாறடைந்த) மிக்க - மிகுதியான, லாபத்தின் - இலாபத்திலே, மேவிய - பொருந்திய, சிந்தையான் - மனதுடையவன், செக்கர்வானமென- அந்திச் செவ்வானம்போல, திகழ் - பிரகாசியாநின்ற, மேனியான் - சரீரத்தையுடையவன், திக்கனைத்தும் - எத்திக்குகளிலும், திகழ்ந்தது - பிரகாசியா நின்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, தேசினால் - ஒளியால், புரம் - அப்பட்டணத்திலுள்ள வர்த்தகர்கள், வந்து எதிர்கொள்ள - வந்து எதிர்கொண்டு பேசியழைக்க, புக்கனன்- அப்பட்டணத்தில் புகுந்தான், எ - று. (கஎ)

**241.** அந் நகரி னழகும் பெருமையும்
மன்ன னன்மையும் வாணிபத் தாக்கமும்
சொன்ன வைபிற ழாமையுஞ் சோரர்தா
மின்மை யுங்கண் டிருக்கையு மேவினன்.

(இ - ள்) (அவ்வாறு புகுந்த அவன்) அந்நகரின் - அப்பட்டணத்தின், அழகும் - அழகையும், பெருமையும் - மேம்பாட்டையும், மன்னன் - அரசனுடைய, நன்மையும் - நற்குணத்தையும், வாணிபத்து - வர்த்தகத்தினது, ஆக்கமும் - செல்வத்தையும், சொன்னவை - சொன்ன சொற்கள், பிறழாமையும் - தவறாத தன்மையையும், சோரர்தாம் - திருடர் முதலானவர்கள், இன்மையும் - இல்லாத தன்மையையும், கண்டு - பார்த்து, இருக்கையும் - அந்தப்பட்டணத்தில் வாசமாய்த் தங்கவேண்டுமென்கிற எண்ணத்தை, மேவினான் - மனத்திற் பொருந்தினான், எ — று.

உம் - அசை. (கஅ)

**242.** மற்றிம் மாநக ரத்திலிவ் வான்பொருள்
அற்ற மாகநல் லார்கையில் வைத்தணி
பத்ம சண்டம தெப்பியோர் பாங்கிலே
சுற்ற மும்மழைத் தென்வழித் தொக்கபின்.

(இ - ள்) (அங்ஙனமெண்ணி) மற்று - பின்னை, இம்மாநகரத்தில் - இப்பெரிய பட்டணத்தில், இவ் வான்பொருள் - என்னுடைய இப்பெரிய பொருள்களை, அற்றமாக - மறைவாக, நல்லார்கையில் - பெரியோர்களிடத்தில் (அதாவது : குணவந்தர்களிடத்தில்), வைத்து - வைத்துவிட்டு, அணி - அழகையுடைய, பத்ம

சண்டமது எய்தி - பத்மஷண்ட புரத்தையடைந்து, என்வழி - என் சம்பந்தமாக, தொக்க - சேர்ந்திராநின்ற, சுற்றமும் - பந்துக்களையும், ஓர் பாங்கிலே - ஒரு பக்கமாக, அழைத்து - அழைத்துக்கொண்டு, பின் - பிற்பாடு, எ - று. (கக)

**243.** பீடி னாற்பெயர்ந் திங்குவந் தோங்கிய
மாட மாநக ரத்திடை வாழ்க்கைமேல்
ஓடு முள்ளத்த னொண்பொருள் வைப்பிடந்
தேடு வான்சிரி பூதியை நண்ணினான்.

**(இ - ள்)** பீடினால் - பெருமையோடு, பெயர்ந்து - திரும்பி, இங்குவந்து - இந்த ஸிம்ஹ மஹாபுரத்தில் வந்து, (சேர்வேன் என்று) ஓங்கிய - உன்னதமான, மாடம் - உப்பரிகைகளையுடைய, மாநகரத்திடை - அப்பெரிய பட்டணத்தில், வாழ்க்கைமேல் - செய்யும்படியான வாழ்க்கையின்மீது (அதாவது: அவ்விடத்திலே வசிப்பதில்), ஓடும் - செல்லுகின்ற, உள்ளத்தன் - மனத்தையுடையவனாய், ஒண்பொருள் - பிரகாசியாநின்ற தனது இரத்தினங்களை, வைப்பிடம் - வைக்கும்படியான இடத்தை, தேடுவான் - தேடுசென்றவனாய், சிரிபூதியை - ஸ்ரீபூதியென்னும் மந்திரியிடம், நண்ணினான் - அடைந்தான், எ - று.

பொருண்முடிபு நோக்கி 'சேர்வேன் என்று' என்னுந்தொடர் வினையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது. (உ0)

**244.** மிக்க சீர்த்தியன் வேதியன் வேந்தற்குத்
தக்க மந்திரி சத்திய கோடனென்
றெக்க தைப்புரா ணஞ்சுரு திப்பொருள்
வக்க ணிப்பவன் மானவ னல்லனே.

**(இ - ள்)** (அவ்வாறடைந்தவன்) மிக்க-மிகுதியாகிய, சீர்த்தியன் - சிறப்பையுடையவன், வேதியன் - ஜாதியில் பிராமணன், வேந்தற்கு - அரசனுக்கு, தக்க - தகுதியாகிய, மந்திரி - அமைச்சன், சத்தியகோடனென்று - சத்தியகோஷனென்று பலராலுஞ் சொல்லப்பெற்று, எக்கதை - எந்தக் கதைகளையும், புராணம் - புராணங்களையும், சுருதிப்பொருள் - வேதார்த்தங்களையும், வக்கணிப்பவன் - வர்ணித்துச் சொல்லும்படியான விற்பனத்தையுடையவன், மானவனல்லன் - இவன் மனித ஜன்மத்தில் சார்ந்தவனல்லன் (தேவாம்சத்தையுடையவன்), எ - று. ()

**245.** தக்க தொன்றிவன் கைப்பொருள் வைத்தலென்
றக்க ணத்தொரு பாகுட மீந்தபின்
மிக்க மாசனம் வீந்ததோர் போழ்தினிற்
றெக்க தன்கரு மஞ்சொல மற்றவன்.

(இ - ள்) தக்க தொன்று - ஒரு தகுதியான காரியமாம், இவன் - இவனுடைய, கை - கையிலே, பொருள் - நமது பொருளை, வைத்தல் என்று - வைப்பதென்று, அக்கணத்து - அப்பொழுது, ஒருபாகுடம் - ஒருமரியாதைப்பொருளை, ஈந்தபின் - கொடுத்தபிற்பாடு, மிக்க - மிகுதியாகிய, மாசனம் - மஹாஜனங்கள், வீந்ததோர் போழ்தினில் - நீங்கினதோர்காலத்தில், தொக்க - சேர்ந்திராநின்ற, நன்கருமம் - தனதுகாரியத்தை, சொல்ல - உரைக்க, மற்றவன் - அம்மந்திரியானவன், எ - று. (உஉ)

**246.** வைத்தல் கோடல் வழங்கிடன் மாய்த்திடல்
துய்த்தல் மாற்ற விருந்த விடஞ் சொலல்
இத்தி றத்துப் பிறனபொருள் மேற்செலச்
சித்தம் வைத்தலும் தீவினைக் கேதுவே.

(இ - ள) வைத்தல் - வைக்கிறதும், கோடல் - எடுத்துக் கொள்வதும், வழங்கிடல் - பிறருக்குக் கொடுத்து விடுகிறதும், மாய்த்திடல் - நாசஞ்செய்து குறையப்பண்ணுவதும், துய்த்தல் - தான் அனுபவிப்பதும், மாற்றல் - வேறொன்றாக மாற்றிவிடுவதும், இருந்தவிடம் சொலல் - இருக்கின்ற விடத்தைச் சொல்வதும், (ஆகிய) இத்திறத்து - இப்போது சொன்னவகையினால், பிறன் - அன்னியனுடைய, பொருள்மேல் - திரவியத்தின் மேலே, செல்ல - செல்லும்படி, சித்தம் வைத்தலும் - மனத்தினால் நினைப்பதும், தீவினைக்கு - பாவவினைக்கு, ஏதுவாம் - காரணமாகும், எ - று. (உங)

**247.** என்ற லும்பணிந் தானுக் கியாவரும்
நின்றி டாப்பொழு தென்கையி னீட்டென
அன்ற வன்கை யரும்பொருள் வைத்தபின்
முந்தை யூர்புக மொய்ம்பனு மேவினான்.

(இ - ள்) என்றலும் - என்று மந்திரி சொல்லவும், பணிந்தானுக்கு - (அதைக் கேட்டு ஸ்வாமி அப்படியாமென்று) வணங்கிய பத்திரமித்திரனுக்கு, யாவரும் - எவர்களும், நின்றிடாப்பொழுது - இங்கில்லாமல் நீங்கி நான் தனியாயிருக்குங் காலத்தில், என் கையில் - எனது கையில், நீட்டென - (உன் பொருளைக்) கொடுவென்று மந்திரி சொல்ல, அன்று - அப்பொழுது, அவன் கை - அம்மந்திரி கையில், அரும் பொருள் - அரிதாகிய பொருள்களை, வைத்தபின் - வைத்த பிற்பாடு, மொய்ம்பனும் - வல்லமையையுடைய பத்திரமித்திரனும், முந்தையூர் - முன் தனது வாஸமாகிய பத்மஷண்ட புரத்தை, புக - அடைய, மேவினான் - பொருந்திப் புறப்பட்டான், எ - று. (உச)

**248.** வேய்கள் வெந்து வெடித்திடு மோசையும்
பாய கள்ளி பாற்பொடி யோசையும்

ஆயர் தங்குழ லோசையு மாலைகள்
பாயு மோசையும் பாய்விரி யோசையும்.

(இ - ள) (அவ்வாறு புறப்பட்டு) வேய்கள் - மூங்கில்கள், வெந்து - அக்கினியினால் வெந்து, வெடித்திடும் - வெடிக்கின்ற, ஓசையும் - குறிஞ்சிநில சப்தமும், (நிர்ஜலப் பிரதேசமாகிய பாலை நிலத்தில் வெயிலால் வெடித்து) பாய - பரந்த, கள்ளி - கொடிக்கள்ளி இலைக்கள்ளி திருகுகள்ளி முதலாகிய கள்ளிகளும், பரல் - பருக்கைக் கற்களும், பொடியோசையும் - பொடியாகின்ற சப்தமும், ஆயர் தம் - ஆடுமாடுகள் மேய்க்கின்ற இடையர்களுடைய, குழலோசையும் - முல்லை நிலத்திலுண்டாகிய புள்ளாங்குழலின் சப்தமும், ஆலைகள் - இட்சு யந்திரங்களினால், பாயும் - பரந்த, ஓசையும் - மருதநிலத்தின் சப்தமும், பாய்விரி - கப்பலில் பாய்விரித்துக் கட்டும், ஓசையும் - நெய்தனிலத்தின் சப்தமும், எ - று. (உரு)

249. இன்ன வோசை யியம்ப நிலந்தொறும்
பன்ன ரும்பத்ம சண்டம தெய்தினான்
மன்னுஞ் சுற்றமெ லாம்வரக் கொண்டுபோய்த்
துன்னி னான்சீய புரமது தோன்றலே.

(இ - ள) (ஆகிய) இன்ன - இத்தன்மையான, ஓசை - சப்தங்கள், நிலந்தொறும் - பஞ்ச நிலங்கள் தோறும், இயம்ப - சப்திக்க, (அந்நிலங்களைக் கடந்து போய்) பன்னரும் - சொல்லுதற்கரிய, பத்மசண்டமது - பத்மஷண்ட புரத்தை, எய்தினான் - அடைந்தான், (அங்ஙனம் அடைந்த பின்னர்), தோன்றல் - பெருமையிற்சிறந்தவனான அப்பத்திரமித்திரன், மன்னும் - சேர்ந்திராநின்ற, சுற்றமெலாம் - பந்துக்களெல்லாம், வரக்கொண்டு - வரவழைத்துக்கொண்டு, போய் - போகி, சீயபுரமது - ஸிம்ம மஹா புரத்தை, துன்னினான் - சேர்ந்தான், எ-று. ()

250. வழிவருத்த மொழித்தவன் வான்கிளைக்
கழிவி லாதவின் பத்தை யளித் திரீஇத்
தொழுத கைசென் றமைச்சனைத் துன்னிநின்
றெழில்பெ றச்சில வின்மொழி கூறினான்.

(இ - ள) (அங்ஙனம் சேர்ந்த பின்பு) அவன் - அப்பத்திரமித்திரன், வான்- பெரிதாகிய, கிளைக்கு - சுற்றத்தார்களுக்கு, வழிவருத்தம் - வழிநடைச்சிரமத்தை, ஒழித்து - நீங்கி, அழிவிலாத - கெடுதலில்லாத, இன்பத்தை - ஸௌக்கியத்தை, அளித்து - கொடுத்து, இரீஇ - (அந்நகரில் வாழும்படியாக அவர்களை) இருத்தி, தொழுதகை - யாவர்களுங் கண்டு வணங்கும்படியான குணத்தையுடைய பத்திரமித்திரன், சென்று - போய், அமைச்சனை - மந்திரியிடம், துன்னி - சேர்ந்து,

நின்று - எதிரில் நின்று, எழில்பெற - மேன்மை படும்படியாக, சில - சிலவாகிய, இன்மொழி - இனிய வசனங்களை, கூறினன் - சொன்னான், எ - று. (உஎ)

**251.** செப்ப மும்புக ழும்மறி வுஞ்சிதைத்
தொப்பி லாத பிறப்பை யுடைத்திடா
செப்பி னன்மணி மேன்மனஞ் சிக்குறா
ஒப்பி லாத வுரைப்பதற் கூக்கினான்.

(இ - ள்) (அப்போது மந்திரி) செப்பமும் - நடுநிலையையும், புகழும் - கீர்த்தியையும், அறிவும் - ஞானத்தையும், சிதைத்து - கெடுத்து, ஒப்பில்லாத - உவமையில்லாத, பிறப்பை - இம்மனுஷ்ய ஜன்மத்தையும், உடைத்திடா - நாசஞ் செய்து, செப்பின் - செப்புக்குள் வைத்திராநின்ற, நல் - நன்மையான, மணி மேல் - பத்திரமித்திரனது இரத்தினங்களின்பேரில், மனம் - தனது மனமானது, சிக்குறா - அகப்படுத்தப்பட்டு, (அதாவது அவற்றை விரும்பி), ஒப்பிலாத - இசையாத வார்த்தைகளை, உரைப்பதற்கு - சொல்வதற்கு, ஊக்கினான் - உத்ஸாஹித்தான், எ - று. (உஅ)

**252.** மாயஞ் செய்த மரச்செப் பனையவன்
மாய மில்லவன் றன்மணிச் செப்பினை
மாயஞ் செய்து கொளற்கு மனத்தெணா
மாய மேசில வார்த்தையுஞ் செப்பினான்.

(இ - ள) (அவ்வாறு சொல்லத் தொடங்கி) மாயஞ் செய்த - மாய்கையினாலே செய்யப்பட்ட, மரச் செப்பனையவன் - மரத்தின் செப்பிற் கொப்பவன், (அதாவது: கருமமதிகரித்து ஞானங் குறைந்தவன்), மாயமில்லவன் தன் - மாயாச் சாரமில்லாத பத்திரமித்திரனது, மணிச் செப்பினை - இரத்தினச் செப்பை, மாயஞ் செய்து - வஞ்சனை செய்து, கொளற்கு - ஸ்வீகரித்துக் கொள்வதற்கு, மனத்து - மனதில், எணா - எண்ணி, மாயமே - பொய்யாகவே, சில - சிலவாகிய, வார்த்தையும் - வசனங்களையும், செப்பினான் - (கீழ் வருமாறு) சொன்னான், எ-று.

**253.** எங்கு நீயுளை யாவனீ மற்றுநீ
எங்குப் போவ தெனச்சொல வேந்தலும்
வங்க மீதுவந் தன்றுா மணிச்செப்புத்
தங்கை தந்துபோம் வாணிக னென்றான்.

(இ - ள்) நீ - நீ, எங்கு - எவ்விடம், உளை - இருக்கின்றாய், நீ யாவன் - நீ யார், மற்று - பின்னை, நீ எங்குப்போவது - நீ எங்குப் போகின்றாய், என - என்று, சொல்ல - மந்திரிகேட்க, ஏந்தலும் - (பெருமையிற் சிறந்தவனாகிய)

ஸ்ரேஷ்டியும், வங்கமீது - கப்பலின்மீது, அன்று - அன்றொருநாள், வந்து - இவ்விடம் வந்து, மணிச்செப்பு - இரத்தினச் செப்பை, நம்கை - நங்கள் கையில், தந்து - கொடுத்துவைத்து, போம் - போய் வந்த, வாணிகன் - வர்த்தகன், நான் - யானேகும், என்றான் - என்று சொன்னான், எ - று. (௩௰)

254. செப்பெ னச்செப்பி யிட்டதென் செப்பென
ஒப்பி லாத மணிச்செப்பு வைத்தது
தப்பி லீர்மறந் திட்டதோ தாமென
எப்ப டிப்பித்த னேயென் றுரைத்தனன்.

(இ - ள்) (அதைக்கேட்டு மந்திரி) செப்பென - இரத்தினச் செப்பென்று, செப்பியிட்டது - சொல்லப்பட்டது, என் - என்ன, செப்பென - அதைச் சொல்வாயாக என, (வணிகன்) ஒப்பிலாத - உவமையில்லாத, மணிச்செப்பு - இரத்தினச் செப்பை, வைத்தது - உம்மிடம் வைத்ததை, தப்பிலீர் - குற்றமில்லாத தாங்கள், மறந்திட்டதோ - மறந்துவிட்டீர்கள் போலும், என - என்றுரைக்க, எப்படி - எப்படிச் சொன்னாய்?, பித்தனேயென்று - நீ பைத்தியக்காரனேயென்று, உரைத்தனன் - மேலும் மந்திரி கீழ்வருமாறு சொன்னான், எ - று.

தான் - அசை. (௩௧)

255. என்று நானுனைக் கண்டறி யேனினி
மன்ற வென்கை மணிச்செப்பு வைத்தநாள்
நின்ற சான்றுள தாகினீ காட்டினால்
ஒன்று மன்றிமற் றுன்னோடே போகுமே.

(இ - ள்) என்றும் - எப்பொழுதும், நான் - யான், உனை - உன்னை, கண்டறியேன் - பார்த்ததில்லை, இனி - இனிமேல், மன்ற - பொருந்த, என்கை - எனது கையில், மணிச்செப்பு - இரத்தினச் செப்பை, வைத்த நாள் - நீ வைத்த தினத்தில், நின்ற - நிலையான, சான்று - சாட்சி, உளதாகில் - உண்டாகில், நீ - நீ, காட்டினால் - அதைக் காண்பித்தால், ஒன்றும் - பொருந்தும், அன்றி - அல்லாவிட்டால், மற்று - பின்னை, உன்னோடே - (உனது வார்த்தையானது) உன்னுடனே, போகும் - போய்விடும், (என்றுரைத்தான்), எ - று. (௩௨)

256. நன்று சாலவு நம்பிநின் பேரினுக்
கொன்ற வேயுரைத் தாய்செப்பு வைத்தநாள்
அன்று மின்று மலாதுள நாளினால்
என்று மென்னைநீ கண்டது மில்லையே.

(இ - ள்) (அதைக்கேட்டு) நம்பி - புருஷரிற் சிறந்தோனே!, சாலவும் - மிகுதியாக, நன்று - நல்லது, நின் - உன்னுடைய, பேரினுக்கு - புகழினால் வியாபித்த பேருக்கு, ஒன்றவே - பொருந்தும்படியாகவே, உரைத்தாய் - சொல்லினாய், செப்பு - இரத்தினச் செப்பை, வைத்த - உன்னிடம் வைத்த, நாள் - நாளாகிய, அன்றும் - அந்நாளும், இன்றும் - (நான் வந்து கேட்கின்ற) இந்நாளும், அலாது - அல்லாமல், உள - உண்டாகிய, நாளினால் - நாட்களில், என்றும் - என்றைக்கும், நீ - நீ, என்னை - என்னை, கண்டதுமில்லை - பார்த்ததுமில்லை, எ - று.

இது நிந்தாஸ் துதியாகக் கூறியது. (௩௩)

257. சான்று வேண்டினுஞ் சத்திய கோடராம்
ஆன்ற நீரன்றி யில்லையன் றியாவர்க்குந்
தோன்றி டாமைத் தாவென்று சொன்னநாட்
சான்று வேண்டுஞ் சடத்தை யறிந்திலேன்.

(இ - ள்) சான்று - சாக்ஷி, வேண்டினும் - நீர் வேண்டியதாய்க் கேட்டாலும், சத்தியகோடராம் - ஸத்யம் தவறாதென்னும் பெயரையுடையவராகிய, ஆன்ற - பெரிய, நீரன்றி - நீங்களல்லாமல், அன்று - அந்நாளில், இல்லை - வேறொரு சாட்சியமிருந்ததில்லை, யாவர்க்கும் - எவர்களுக்கும், தோன்றிடாமை - தெரியாமல், தாவென்று - பொருளைக் கொடுப்பாயாகவென்று, சொன்ன நாள் - நீர் சொன்ன காலத்தில், சான்று வேண்டும் - இப்போது நீர் சாட்சியத்தை இச்சிக்கும், சடத்தை - இச்சடபுத்தியை (அதாவது: அஞ்ஞானத்தை), அறிந்திலேன் - யானறியவில்லை, எ - று. (௩௪)

258. கணம தொன்றிலே கண்புதைத் திட்டழப்
பிணம தாகுமிவ் வாழ்க்கையைப் பேணுவான்
அணிக ளாமறி வும்புக ழுங்கெட
மணிகண் மேன்மனம் வைத்ததோர் மாயமே.

(இ - ள்) கணமதொன்றில் - ஒரு க்ஷணநேரத்திற்குள்ளாக, கண் புதைத்திட்டு - கண்ணை மூடிக்கொண்டு, அழ - சுற்றத்தாரழ, பிணமதாகும் - பிரேதமாகும்படியான, இவ்வாழ்க்கையை - மனுஷ்ய சரீரத்தினாலாகிய இந்த ஸம்ஸார வாழ்க்கையை, பேணுவான் - காக்கும்பொருட்டு, அணிகளாம் - இம்மனிதப் பிறப்புக்கு ஆபரணங்களாகிய, அறிவும் - ஞானமும், புகழும் - கீர்த்தியும், கெட - கெட்டு நீங்க, மணிகள்மேல் - இரத்தினங்களின் மேல், மனம் வைத்தது - வஞ்சித்துக் கொள்வதற்கு மனம் வைத்ததானது, ஓர் - ஒரு, மாயம் - அஞ்ஞானமாகும், எ - று. (௩௫)

259. செய்த நன்றி சிதைத்தறத் தேறினார்க்
கெய்த வஞ்சனை செய்து பிறர்மனை
மைய லான்மகிழ் வார்க்கிந்த மண்மிசை
யெய்தி டாப்பழி யின்மை யறியிரோ.

(இ - ள்) செய்தநன்றி - ஒருவர் செய்த வுபகாரத்தை, சிதைத்து - கெடுத்தும், அறத்தேறினார்க்கு - (அதுவல்லாமலும்) சந்தேகமின்றித் தெளிந்து நம்பின பேர்களுக்கு, எய்த - அடையும்படியாக, வஞ்சனை செய்து - சூது செய்தும், பிறர் மனை - அன்னியஸ்திரீகளை, மையலால் - காமமயக்கத்தினால், மகிழ்வார்க்கு - மகிழ்ந்து சேர்கின்றவர்களுக்கு, இந்த மண்மிசை - இப்பூமியின் பேரில், எய்திடா - அடையாத, பழியின்மை - பழியில்லாததை, அறியிரோ - நீர் அறியமாட்டீரோ?, எ - று.

எய்திடாப் பழியின்மை யென்றதனால், எல்லாப் பழியும் அடையும் என்பது பெறப்படும். (௫௬)

வேறு.

260. பிறர்பொருள் வைத்தல் கோடல் பிறர்தமக் கீதன் மாற்றன்
மறமென வன்று சொன்ன வாய்மொழி மறந்திட் டீரோ
திறமல துரைக்க வேண்டாஞ் செப்புக்கொண் டிருப்ப தன்றி
முறைமுறை பித்த னாக்கி முடிந்தனீர் மோகத் தாலே.

(இ - ள்) பிறர்பொருள் - அன்னியருடைய பொருளை, வைத்தல் - நிட்சேபித்துக் கொள்வதும், கோடல் - அபகரித்துக் கொள்ளுதலும், பிறர் தமக்கு - அன்னியர்களுக்கு, ஈதல் - கொடுத்தலும், மாற்றல் - மாற்றிவிடுவதும், மறமென - பாபமாகு மென்று, அன்று - அப்பொழுது, சொன்ன - சொல்லிய, வாய்மொழி - வசனத்தை, மறந்திட்டீரோ - நீர் மறந்துபோய் விட்டீரோ, மோகத்தாலே - பொருளாசையாலே, செப்பு - எனது இரத்தினச் செப்பை, கொண்டு - கைக்கொண்டு, இருப்பதன்றி - இருப்பதல்லாமல், முறைமுறை - நான் பேசும் ஒவ்வொரு முறையிலும் திரும்பத் திரும்ப, பித்தனாக்கி - என்னைப் பைத்தியக்காரனாக்கி, முடிந்தனீர் - இவ்வாறு சொல்ல இசைந்தீர்கள், திறமலது - இவ்வாறு உறுதியற்றதாகிய வார்த்தையை, உரைக்க வேண்டாம் - சொல்லவேண்டாம், எ - று. (௫௭)

261. என்றலு மெழுந்த கோபத் தெறியெறி யென்ன வோடிப்
பொன்றுமா றடித்து நின்றார் புறப்படத் தள்ளப் போந்திட்
டன்றவ னடித்துச் செப்புக் கொண்டதற் கவல முற்றுச்
சென்றவன் றெருவு தோறுஞ் சிலபகல் பூச லிட்டு

(இ - ள்) என்றலும் - என்று பத்திரமித்திரன் சொல்லவும், எழுந்த - உண்டாகிய, கோபத்து - கோபத்தினாலே, எறி எறி யென்ன - இவனை அடி அடி யென்று சொல்ல, நின்றார் - அவ்விடத்தில் நின்ற ஏவலாளர்கள், ஓடி - போய், பொன்றுமாறு - இறந்து படும்படியாக (அதாவது: மிகுதியாக), அடித்து - அடித்து, புறப்பட-வெளியில் போகும்படியாக, தள்ள-அவனைத் தள்ளிவிட, போந்திட்டு - வந்து, அன்று - அப்பொழுது, அவன் - அம்மந்திரி, அடித்து - அடித்து, செப்புக்கொண்டதற்கு - இரத்தினச் செப்பை யபகரித்துக்கொண்டதற்கு, அவலமுற்று - வருத்தமடைந்து, தெருவுதோறும் சென்று - வீதிகள்தோறும் போய், அவன் - அப்பத்திரமித்திரன், சில பகல் - சில தினங்கள், பூசலிட்டான் - (கீழ் வருமாறு) இரைச்சலிட்டான், எ - று. (ரு அ)

262. சத்திய கோட னென்னுஞ் சாதியால் வேதி யன்றான்
வித்தத்தாற் பெரியன் றூய னென்றியான் மிகவுந் தேறி
வைத்தவென் மணியைக் கொண்டு தருகிலன் மன்னகேண்மோ
பித்தனு மாக்கு மென்னைப் பெரும்பொரு ளடக்கு வானே.

(இ - ள்) (அவ்வாறு இரைச்சலிடத் தொடங்கிய அவன்) சத்திய கோஷனென்னும் - சத்திய கோஷனென்கின்ற, சாதியால் - ஜாதியினால், வேதியன் - பிராம்மணனாகிய ஸ்ரீ பூதி யென்கிற மந்திரியானவன், வித்தத்தால் - ஞானத்தால், பெரியன் - பெரியவன், தூயன், பரிசுத்த குணத்தையுடையவன், என்று - என்று நினைத்து, யான் - நான், மிகவும் - மிகுதியாக, தேறி - தெளிந்து, வைத்த - அவனிடம் கொடுத்து வைத்த, என் - எனது, மணியை - இரத்தினத்தை, கொண்டு கைக்கொண்டு, தருகிலன்-அவன் கொடுக்கிலன், பெரும்பொருள்-எனது பெரிய பொருளை, அடக்குவான் - தனக்குள் அடக்கிக்கொள்ளும் பொருட்டு, என்னை - என்றனை, பித்தனுமாக்கும் - பைத்தியக்காரனாகவும் செய்கின்றான், மன்ன - இந்நகரத்தையாளும் அரசனே!, கேண்மோ - இதைக் கேட்பாயாக, (என்று கூச்சலிட்டுக்கொண்டு திரிந்தான்), எ - று. (ரு க)

263. தன்வழிக் குற்றங் காணாக் கண்ணெனத் தான்செய்குற்ற
முன்னிடா தவனைக் கோபித் தூர்வயிற் கடிய லுற்று
மின்னெனக் காக்குங் கள்ளர் தங்களை விட்டான் வீட்டி
லுன்னுதற் கரிய வாய பொருளெலா மொருங்கு கொண்டார்.

(இ - ள்) தன்வழி - தன்னுளுண்டாகிய, குற்றம் - குற்றத்தை, காணா - காணாத, கண்ணென - நேத்திரத்தைப் போல, தான் செய்குற்றம் - (இம்மந்திரியானவன்) தான் செய்த தப்பிதத்தை, உன்னிடாது - நினைத்தறியாமல், அவனை - அப்பத்திரமித்திரனை, கோபித்து - சினந்து, ஊர்வயிற் கடியலுற்று - அவ்வூரி

விருந்தும் நீக்க உத்தேசித்து, மின்னென - மின்னல்போல், கரக்கும் - பிறர் பொருளைத் திருடி மறையும் சாமர்த்தியமுள்ள, கள்ளர் தங்களை - சோரர்களை, வீட்டில் - (பத்திரமித்திரனது) கிருகத்தில், விட்டான் - ஏவினான், உன்னுதற் கரியவாய - நினைத்தற் கருமையானவையாகிய, பொருளெலாம் - எல்லாப் பண்டங்களையும், ஒருங்கு - ஒருங்காக, கொண்டார் - (அத்திருடர்) அபகரித்துக்கொண்டார்கள், எ - று. (௬௦)

264. பணமணிக் கிரங்கு நாகம் பணத்தையு மிழந்த தேபோற்
றணிமணிக் கிரங்கு நாய்கன் றொடுபொருண் முழுதும் போகக்
குணமணி யிலாத கோடன் கள்வனென் பொருள் கொண்டா
னணிநக ரிரங்க வாற்றப் பூசலிட் டவல முற்றான். [னென்

(இ - ள்) (அவ்வாறு கொள்ளவே) பணம் - தனது பணமுடியிலிருக்கும், மணிக்கு - இரத்தினத்துக்கு, இரங்கும் - (அதனை யிழந்து) வருத்தமடையும், நாகம் - நாகமானது, பணத்தையும் - பணமுடியையும், இழந்ததேபோல் - இழந்து விட்டதைப்போல், துணி - ஒளிபெற்ற, மணிக்கு - தனது இரத்தினங்களுக்கு, இரங்கும் - வருத்தமடைகின்ற, நாய்கன் - வணிகனாகிய பத்திரமித்திரன், தொடு பொருள் முழுதும் - தனது பெரும்பொருளெல்லாம், போக - போய்விட, குணமணியிலாத - அழகிய நற்குணமில்லாத, கோடன் - ஸத்தியகோஷனென்னும், கள்வன் - திருடன், என் பொருள் - எனது வீட்டிலுள்ள பொருள்களையும், கொண்டானென்று - அபகரித்துக் கொண்டானென்று, அணி - அழகிய, நகர் - பட்டணத்திலுள்ள ஜனங்கள், இரங்க - கேட்டு வருத்தமடையும்படியாக, ஆற்ற - மிகவும், பூசலிட்டு - இரைச்சலிட்டு, அவலமுற்றான் - வருத்தமடைந்தான், எ - று.

265. மன்னவ னதனைக் கேட்டு மந்திரி தன்னைக் கூவி
யென்னிவ னுரைத்த தென்ன விறைவகே ளிவனோர் பித்தன்
றன்னையா னறிந்த தில்லை தருகவென் மணிச்செப் பென்னப்
பின்னைபோ பென்னைக் கள்வ னென்றிட்டான் பெரிய பூசல்.

(இ - ள்) மன்னவன் - சிம்மஸேனவரசன், அதனை - (அந்தவணிகனால் இடப்பட்ட) அவ்விரைச்சலை, கேட்டு - கேட்டு, மந்திரி தன்னை - அமைச்சனாகிய ஸத்தியகோஷனை, கூவி - அழைத்து, என் - என்ன, இவன் - இவ்வணிகன், உரைத்தது - சொல்லுவது, என்ன - என்று கேட்க, (அவன்) இறைவ - அரசனே!, கேள் - கேட்பாயாக, இவன் - இம்மனிதன், ஓர் - ஒரு, பித்தன் - பைத்தியக்காரன், தன்னை - இவன் றன்னை, யான் - நான், அறிந்ததில்லை - என்றுங் கண்டதில்லை, (அப்படியிருக்கச் சில தினங்கட்கு முன் என்னிடம் வந்து) தருக என்மணிச்செப் பென்ன - என்னுடைய இரத்தினச் செப்பைக் கொடுப்பாயாக

என்று கூறி, பின்னை - பிறகு, போய் - வெளியிற் சென்று (மீண்டும்), என்னை - என்னை, கள்வனென்று - திருடனென்றும், பெரியபூசல் - பெரிய இரைச்சலை, இட்டான் - செய்தான், எ - று. (சு௨)

266. கருமமே யிறைவ கேளாய் களவின்றன் விளைவை யோதுந்
தருமநூ லுரைக்கு நானே தக்கில்லாக் களவு செய்யின்
ஒருவரு முலகிற் கள்ள ரல்லவ ரில்லை யென்னாப்
பெரியதோர் சபதஞ் செய்தா னரசனும் பிறருந் தேற.

(இ - ள்) இறைவ - அரசனே!, கருமம் - எனது காரியத்தை, கேளாய் - கேட்பாயாக, களவின் தன் - களவினலாகும், விளைவை - இம்மைமறுமைப் பயன்களை, ஓதும் - சொல்லுகின்ற, தருமநூல் - தருமசாஸ்திரத்தை, உரைக்கும் - (தெரிந்து) யாவர்களுக்கும் சொல்லுகின்ற, நானே - யானே, தக்கிலா - தகுதியில்லாத, களவு - களவை, செய்யின் - செய்தால், உலகில் - இவ்வுலகத்தில், கள்ளரல்லவர் - திருடரல்லாத யோக்கியர்கள், ஒருவரும் - யாவரொருவரும், இல்லை - இலராவர், என்னா - என்று, அரசனும் - இராஜாவும், பிறரும் - மற்றுமுள்ளவர்களும், தேற - (தன்னை யோக்கிய னென்று) தெளியும்படியாக, பெரியது-பெரிதாகிய, ஓர்-ஒரு, சபதம் - ஆணையை (அதாவது: வாக்கு நிர்ணயத்தை,) செய்தான் - பண்ணினான், எ - று.

இவ்வாறு சொன்னதை நம்பி அரசன் பத்திரமித்திரனிடம் நீதி செலுத்தாமல் மௌனமாயிருந்து விட்டான். (சுரு)

267. பறையனிக் கள்வன் றன்னைப் பார்த்திப னென்னைப் போல
மறையவ னென்று கொண்டான் சபதத்தால் வஞ்சிப் புண்டு
பிறரிவன் செய்கை யோரா ரென்னையே பித்த னென்னக்
குறையுண்டோ வென்று பின்னுங் கூப்பிட்டா னீதி யோதி

(இ - ள்) (அவ்வாறாகவே மேலும்) பறையன் - சண்டாளனாகிய, இக்கள்வன்றன்னை - இந்தத் திருடனை, பார்த்திபன் - அரசனானவன், என்னைப் போல் - முதலில் நம்பின என்னைப் போலவே, சபதத்தால் - இவன் சொல்லிய உறுதிமொழியால், வஞ்சிப்புண்டு - வஞ்சிக்கப்பட்டு, மறையவனென்று-சரியான வேதந் தெரிந்த பிராமணனென்று, கொண்டான் - நம்பிக் கொண்டான், (இவனே இப்படியிருக்கும்போது) பிறர் - மற்றவர்கள், இவன் - இம்மந்திரியின், செய்கை- செய்கையை, ஓரார் - அறியாதவர்களாய், என்னையே - என்றனையே, பித்தனென்ன - பைத்தியக் காரனென்று சொல்வதற்கு, குறை - தவறுதல், உண்டோ - இருக்கின்றதோ, என்று - என்று சொல்லி, பின்னும் - திரும்பவும், நீதி யோதி -

விரோத மில்லாமல் உள்ளதைச் சொல்லி, கூப்பிட்டான் - பத்திரமித்திரன் இரைச்சலிட்டான், எ - று. (சச)

**268.** சிறகமை பறவை பேர்ப்பா னுடம்பெலாஞ் செடியின் மூடிப்
பறவையைச் சிமிழ்ப்பின் வாங்கும் பாவியைப் போல நீயும்
மறையவ னறிவ னென்னும் மாயத்து மறைந்து நின்றென்
பெறலரும் மணியைக் கொண்டா யென்றவன் பேசக் கேளா.

(இ - ள்) (அப்படிப் பூசலிட்டுப் பின்னரும்) சிறகு - இறகு, அமை - அமைந்த, பறவை - பக்ஷிகளை, பேர்ப்பான் - பிடிப்பான் வேண்டி, உடம்பெலாம் - தனது சரீரமுழுமையும், செடியின் - தழைகளால், மூடி - மறைத்து, பறவை - அப்பக்ஷிகளை, சிமிழ்ப்பின் - வலைக்குள், வாங்கும் - வளைத்துப் பிடிக்கின்ற, பாவியைப்போல - பாபிஷ்டனாகிய குருவிக்காரனைப் போல, நீயும் - நீயும், மறையவன் - பிராம்மணன், அறிவன் - ஞானத்தையுடையவன், என்னும் - என்கிற, மாயத்து - மாய்கையினால், மறைத்து - உனது கள்ளத்தை மூடி, நின்று - மோச வழியிலே நின்று, என் - என்னுடைய, பெறலரும் - சம்பாதித்தற் கருமையாகிய, மணியை - இரத்தினத்தை, கொண்டாய் - அபகரித்துக் கொண்டாய், என்று - என்று சொல்லி, அவன் - அப்பத்திரமித்திரன், பேச - மந்திரியை நிந்தித்துப் பேசி இரைச்சலிட, கேளா - அதைக்கேட்டு, எ - று. (சரு)

**269.** படுமத யானை விட்டும் பாசத்தி னாயை விட்டும்
கொடி நகர்ப் பேயன் றன்னைக் கடிகவென் றமைச்சன் கூறக்
கடியவர் படியிற் கண்டு செய்வதற் கஞ்சிக் காலை
நெடியதோர் மரத்தி னேறி நித்தமா யழைத்திட் டானே.

(இ - ள்) படுமதயானை - கொல்லுகின்ற மதயானையை, விட்டு - (இவ்வணிகன் மேல்) விட்டும், பாசத்தின் - சங்கிலியினாற் பிணித்திரா நின்ற, நாயை - வேட்டை நாய்களை, விட்டும் - ஏவியும், பேயன்றன்னை - பைத்தியக்காரனாகிய இவனை, கொடி - துவஜக் கொடிகளையுடைய, நகர் - இந்நகரத்தினின்றும், கடிகவென்று - துரத்துவீராக என்று, அமைச்சன் - மந்திரியானவன், கூற - சொல்ல, கடியவர் - கொடுமையையுடையவர்களாகிய அவனுடைய ஏவலாளர்கள், படியில் - பூமியில், கண்டு - இவ்வணிகனைப் பார்த்து, செய்வதற்கு - அப்படியே செய்வதற்கு, அஞ்சி - வணிகன் பயந்து, காலை - பிராதக் காலத்தில், நெடியது - பெரிதாகிய, ஓர் - ஒரு, மரத்தின் - விருக்ஷத்திலே, ஏறி - ஏறி, நித்தமாய் - நாள்தோறும், அழைத்திட்டான் - (கீழ் வருமாறு) கூச்சலிட்டான், எ - று. (சசு)

**270.** தூயநல் வேத நான்குஞ் சொல்லிய சாதி யாதி
மேயநல் லமைச்ச னென்றம் விருதுமெய் யுரைத்த லென்றுங்

தீயினற் றெழிலனென்றுந் தேறியான் வைத்த செப்பை
மாயநீ செய்து கொண்டால் வரும்பழி பாவ மன்றே.

(இ - ள்) தூய - பரிசுத்தமாகிய, நல் - நன்மையான, வேதம் நான்கும் - சதுர்வேதங்களும், சொல்லிய - உரைத்த, சாதியாதி - முதல் ஜாதியில், மேய - பொருந்திய, நல் - நன்மையாகிய, அமைச்சனென்றும் - மந்திரி யென்றும், விருது - தனது விரதமானது, மெய்யுரைத்த லென்றும் - ஸத்தியங் கூறுதலென்றும், தீயின் - அக்கினியினாலே, நற்றொழிலனென்றும் - (ஆகார வேளைக்கு முன்) ஔபாஸனம் செய்யப்பட்ட குணமுடையவனென்றும், தேறி - தெளிந்து, யான் - நான், வைத்த - அடைக்கலமாக வைத்த, செப்பை - இரத்தினச் செப்பை, நீ - நீ, மாயஞ்செய்து - வஞ்சனைசெய்து, கொண்டால் - அபகரித்துக் கொண்டால், பழி - பழிச்சொல்லும், பாவம்-பாவமும், வருமன்றே - வந்துசேரும், எ - று.

271. கொற்றவெண் குடையுஞ் சீய வணையுஞ்சா மரையு நீத்தால்
வெற்றிவேல் வேந்த னென்ன நீ யென்ன வேறி லாதாய்
குற்றமென் றறிந்து மென்ன குறையிலென் செப்பைக் கொண்
மற்றிதோ பூதி மாய மாகுமிவ் வையத் தையா. (டாய்

(இ - ள்) (அரசன் இராஜ்ஜியத்தைக் கவனிக்க முடியாமலிருக்கும் சில சமயங்களில்) கொற்றம் - வெற்றி பொருந்திய, வெண் குடையும் - வெள்ளைக் குடையும், சீயவணையும் - சிம்மாஸனமும், சாமரையும் - வெண்சாமரையும், நீத்தால் - தான் நீக்கி உனக்களித்தால், வெற்றி - வெற்றி பொருந்திய, வேல் - வேலையுடைய, வேந்தனென்ன - அரசனென்றும், நீயென்ன - நீ என்றும், வேறிலாதாய் - வேறில்லாமல் அவ்வரசனுக்குச் சமானமான தன்மையைப் பெற்றிருக்கக் கூடியவனே!, குற்றமென்றறிந்து - பிறர் பொருள்களை அபகரிப்பது குற்றமென்று தெரிந்திருந்தும், என்ன குறையில் - உனக்கு என்ன குறைவால், என் செப்பை - எனது இரத்தினச்செப்பை, கொண்டாய் - கைக்கொண்டாய், பூதி - ஸ்ரீ பூதியாகிய மந்திரியே!, இவ்வையத்து - இவ்வுலகத்தில், இது - இச்செய்கை, மாயமாகும் - மாயத்தையுடையதாகும், ஐயா - ஐயனே!, எ - று.

மற்று, ஓ - அசைகள். (௪அ)

272. மறம்பழி சிறுமை நிந்தை வந்தெய்த மணியை வவ்வின்
அறம்புகழ் பெருமை சீர்த்தி யறிவொடு செறிவி லாக்கும்
மறந்துவைத் தூற தொட்டு வைப்பினை வவ்வு வாரைத்
துறந்திடுந் திருவென் றோதுஞ் சுருதியும் விருத்த மாய்த்தோ.

(இ - ள்) மறம் - பாவமும், பழி - பழிச்சொல்லும், சிறுமை - தாழ்மையும், நிந்தை - இகழ்ச்சியும், வந்தெய்த - வந்தடையும்படியாக, மணியை வவ்வின் - எனது இரத்தினத்தை அபகரித்தால், (அது) அறம் - தருமமும், புகழ் - புகழ்ச்சியும், பெருமை - மேம்பாடும், சீர்த்தி - சிறப்பும், அறிவொடு - ஞானமும், செறிவு - சேர்தல், இல் ஆக்கும் - இன்மையாக்கும், (ஆயினும் மந்திரி சௌக்கியமாயிருக்கின்றான்; ஆகலின்) மறந்து - தெரியாமல், வைத்து - வைக்க, ஊறுதொட்டு - இடையூறு செய்யத் தொடங்கி, வைப்பினை - அந் நிக்ஷேபப் பொருளை, வவ்வுவாரை - அபகரிப்பவர்களை, திரு - இலக்குமி, துறந்திடும் - நீங்கிவிடும், என்றோதும் - என்று சொல்கின்ற, சுருதியும் - சாஸ்திரமும், விருத்தமாய்த்து - இம் மந்திரி விஷயத்தில் பயனற்றதாயிருக்கின்றது, எ - று. (சகூ)

273 வடிநுனைப் பகழிநூறும் மன்னரை மாயஞ் செய்திட்
டடுமத யானை வவ்வ லமைச்சருக் காய வஞ்சம்
வடுவிலார் தேறித் தங்கைப் பொருளினை வைத்து வந்து
அடிமிசை யுறங் கும் போழ்தில் வஞ்சிப்பா னமைச்ச னோமோ.

(இ - ள்) வடி - கூர்மைபெற்ற, நுனை - நுனியையுடைய, பகழி - அம்புகளை, நூறும் செலுத்தும்படியான, மன்னரை - பகையரசரை, மாயஞ் செய்திட்டு - மாறுபாடு செய்து, அடும்-பிறரைக் கொலை செய்யும்படியான, மதம் - மதம் பொருந்திய, யானை - அவர்களது பட்டத்து யானையை, வவ்வல் - அபகரிக்கின்றது, அமைச்சருக்கு - அரசனுடைய மந்திரிகளுக்கு, ஆய - உண்டாகிய, வஞ்சம் - வஞ்சனையாகும், (அப்படியல்லாமல்) வடுவிலார்-குற்ற மில்லாதவர்கள், தேறி - நல்லவரென்று தெளிந்து, தம் - தங்களுடைய, கைப்பொருளினை - சொந்தப் பொருளை, வைத்து - வைத்து விட்டுப்போய், வந்து - மறுபடி வந்து, அடி மிசை - பாதத்தின் பேரில் நமஸ்கரித்து, உறங்கும் போழ்தில் - வாடிக்கிடந்து கேட்குங் காலத்தில், வஞ்சிப்பான் - வஞ்சனை செய்பவன், அமைச்சனோமோ - இராஜ மந்திரியாவனோ?, எ - று. (ருo)

274. மந்திரம் பயின்று சால வல்லவர் தமகருப் பேய்கள்
மந்திரம் பூதி தன்னா லன்றிமற் றொன்றிற் றீரா
வெந்துயர் நரகத் துய்க்கும் வேகத்து மோகப் பேயை
மந்திரி பூதி நீயேன் றீர்த்திடா வாறி தென்றான்.

(இ - ள்) மந்திரம் பயின்று - மந்திரங்களைக்கற்று, சால - மிகவும், வல்லவர் தமக்கு - வல்லமையையுடையவர்களுக்கு, பேய்கள் - பிசாசுகள், மந்திரம் - மந்திரத்தினாலும், பூதிதன்னால் - விபூதியினாலும், அன்றி - அல்லாமல், மற்றொன்றில் - வேறொன்றால், தீரா - நீங்கமாட்டா, (அப்படியிருந்தும்) வெம் - வெப்பம்

பொருந்திய, துயர் - துன்பத்தையுடைய, நரகத்து - நரகத்திலே, உய்க்கும் - செலுத்தும்படியான, வேகத்து - தீவிரத்தையுடைய, மோகப்பேயை - துராசையாகிய பிசாசை, மந்திரி - மந்திரியும், பூதி - ஸ்ரீபூதியும் (ஆகிய), நீ - நீ, தீர்த்திடாவாறு - நீக்காதவிதாயமாகிய, இது - இச்செய்கை, என்னென்றான் - யாதுகாரணமென்று சொன்னான், எ - று. (ருக)

275. நீர்மையுங் குணமு நின்ற சாதியு நிறமுங் கல்விச்
சீர்மையுஞ் சாரு வாக வறிந்துநீ செய்யு மாயம்
நேர்மைசெய் தரசன் கேட்ட நாளின்க ணீங்கு முன்றன்
கூர்மையுங் குணமு மெல்லாங் காட்டுவன் கோட வென்றான்.

(இ - ள்) (மேலும்) கோட - சத்தியகோஷனே !, நீர்மையும் - ஒப்புரவும், குணமும் - மேலான குணமும், நின்ற - நிலைபெற்ற, சாதியும் - ஜாதியும், நிறமும் - ஒளியும், கல்வி - வித்தையும், சீர்மையும் - சிறப்பும், சாருவாக - சேர்ந்திருக்கவும், அறிந்து - சகலமுந் தெரிந்து, நீ - நீ, செய்யும் - செய்கின்ற, மாயம் - வஞ்சனையை, அரசன், - இராஜாவானவன், நேர்மைசெய்து - நம்மிருவரையும் நேரில் வைத்துக்கொண்டு, கேட்ட - கேட்கின்ற, நாளின்கண்-காலத்தில், நீங்கும் - நீங்கிவிடும், உன்றன் - உன்னுடைய, கூர்மையும் - சூக்ஷ்ம புத்தியும், குணமும் - மேலான குணமும், (ஆகிய) எல்லாம் - எல்லாவற்றையும், காட்டுவன் - யான் உண்மையாக விளக்கிக் காண்பித்துவிடுவேன், என்றான் - என்று சொன்னான், எ - று. (ருஉ)

276. சொரிமதக் களிற்று வேந்தன் செவியுற நாளும் வந்திப்
பரிசினா லழைப்பக் கேட்டும் பருவர லின்றி விட்டான்
சுரிகுழற் கருங்கட் செவ்வாய்த் துடியிடைப் பரவை யல்குற்
றெரிவைமா திராம தத்தை சித்தத்தொன் றெழுந்த தன்றே.

(இ - ள்) சொரிமதம் - மதஞ்சொரியும், களிற்று - யானையையுடைய, வேந்தன் - அரசனது, செவி - காதில், உற - பொருந்த, நாளும் - நாடோறும், வந்து - பிராதக் காலத்தில் வந்து, (மரத்தின் மேலேறிக்கொண்டு), இப்பரிசினால் - இப்போது சொன்னவகையாகவே, அழைப்ப - கூச்சலிட, கேட்டும் - அது அரசன் காதில் விழுந்தும், பருவரலின்றி - அருவருதலின்றி, விட்டான் - அரசன் அதை விசாரிக்காமல் விட்டான், (அப்படியிருக்கும்போது) சுரி - சுருண்ட, குழல் - அளகத்தையும், கரும் - கரிய, கண் - கண்ணையும், செவ்வாய் - சிவந்த வாயையும், துடி-உடுக்கைபோன்ற, இடை - இடையையும், பரவை - விசாலமான, அல்குல் - கடிதடத்தையும், (உடைய) தெரிவைமாது - தெரிவைப்பருவத்தையுடைய மாதாகிய, இராமதத்தை - இராஜபத்தினியாகிய இராமதத்தா தேவியின், சித்தத்து - மனதில், ஒன்று - ஒரு யோசனை, எழுந்தது - உண்டானது, எ - று.

277. முன்புபின் பொன்றுந் தம்மின் மலைவிலா மூர்த்தி நூல்போற்
பின்புமுன் பொன்ற வென்று முரைக்கின்றான் றன்னைப் பித்த
னென்பதொன் றன்றென் றெண்ணி யவனைத்தா னழைத்து ராமை
முன்புநின் றுருவக் கேட்டுப் போயின்ன முறையி டென்றாள்.

(இ - ள்) முன்பு - முன்னுக்கு, பின்பு - பிற்பாடு, ஒன்றும் - யாதொன்றும், தம்மின் - தமக்குள், மலைவிலா - மாறுபாடில்லாத (அதாவது: பூர்வாபர விரோதமில்லாத), மூர்த்தி நூல் போல் - ஸர்வஜ்ஞனால் சொல்லப்பட்ட பரமாகமம்போல, என்றும் - எப்பொழுதும், பின்பு முன்பொன்ற - பின்னதும் முன்னதும் வித்தியாசமடையாமல் ஒத்துவர, உரைக்கின்றான் றன்னை - சொல்லுகின்ற இவனை, பித்தனென்பது - பைத்தியக்காரனென்று சொல்வது, ஒன்று - ஒரு காரியம், அன்றென்று - அல்லவென்று, எண்ணி - யோசித்து, ராமை - இராமதத்தையானவள், அவனை - அவ்வணிகனை, அழைத்து - கூப்பிட்டு, முன்பு நின்று - எதிரில் நின்று, உருவக்கேட்டு - அவனுடைய விருத்தாந்தம் முழுவதும் மனத்திற் பதியக்கேட்டு, போய் - நீ போய், இன்னம் - இன்னமும், முறையிடு - இப்படியே சொல்லி முறையிடுவாய், என்றாள் - என்று அவனிடம் சொன்னாள், எ - று.

தான் - அசை. (௩௪)

வேறு.

278. வாளார் தடந்தோண் மன்னர் மன்னர்தஞ் செய்கைவன்போர்
தோளால் விலக்கி முறை கேட்டறம் போற்றலாகிற்
றாளாள நல்லா னிவன்றானிடும் பூசனாளுங்
கேளா தொழிவா னிதுவென்னரு ளென்று கேட்டாள்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின் அவள் அரசனிடத்தில்) வாள் - வாள்வித்தையில், ஆர் - நிறைந்த, தடம் - பெரிய, தோள் - புயத்தை யுடைய, மன்னர் மன்னர்தஞ் செய்கை - இராஜாதி இராஜர்களுடைய காரியமாவது, வன் - வலிமைபொருந்திய, போர் - சத்துரு ராஜாக்களால் தாக்கப்பட்ட யுத்தத்தை, தோளால் - புயபலத்தால், விலக்கி - நீக்கி, முறை - தமதுராச்சியத்தில் குடிகள் இடும் முறையீடுகளை, கேட்டு - விசாரித்து, அறம் - தருமத்தை, போற்றல் - பாதுகாத்தலாம், ஆகில் - அரசநீதி அப்படி ஆயின், தாளாள - அத்தொழிலில் முயற்சியையுடையவரே!, நல்லான் - நல்லவனாகிய, இவன்றானிடும் பூசல் - இம்மனிதனாலிடப்பட்ட இரைச்சலை, நாளும் - தினந்தோறும், கேளாதொழிவான் - கேட்காமல் விடும்படியான, இது - இத்தன்மை, என் - என்ன காரியம், அருளென்று - அதைஎனக்குச் சொல்லியருள்வீரென்று, கேட்டாள் - கேட்டனள், எ-று.

279. மத்தக் களிற்ற னழைப்பான் மத்தனென்ன மங்கை
நித்தம் வந்தம் மரத்தப்பொழுது தேறி நீதி
வைத்த வகையா லுரைப்பான் மத்தனல்ல னென்ன
முத்தன்ன பல்லாய் முறைநீயிது கேண்மோ வென்றான்.

(இ - ள்) (அதைக்கேட்டு) மத்தம் - மதம்பொருந்திய, களிற்றான் - யானையையுடைய அரசன், அழைப்பான் - அப்படி இரைச்சலிடுபவன், மத்தன் - பயித்தியக்காரன், என்ன - என்று சொல்ல, மங்கை - இராமதத்தை, நித்தம் - நாடோறும், வந்து - அரண்மனை எதிரில் வந்து, அம்மரத்து - அவ்விடமிருக்கும் பெரிய விருக்ஷத்தின் பேரில், அப்பொழுது - அவ்விடியற்காலத்தில், ஏறி - ஏறிக் கொண்டு, நீதி வைத்தவகையால் - முன்பின் விரோதமில்லாமல் நீதி பொருந்திய விதமாக, உரைப்பான் - சொல்லுகின்ற இவன், மத்தனல்லன் - பைத்தியக்கார னல்லன், என்ன - என்று சொல்ல, முத்தன்னபல்லாய் - முத்துப்போன்ற பற் களையுடைய தேவியே!, நீ - நீ, இது முறை - இந்தமுறைப்பாட்டை, கேண்மோ - கேட்கக்கடவாய், என்றான் - என்று அரசன் தேவியிடத்திற் சொன்னான், எ - று.

வேறு.

280. நீதியே படித்தான் போல வழைக்கின்றான் வழக்கு நின்ற
வேதியன் செயலு மெல்லாம் விளக்குப்போற் காட்ட வல்லன்
சூதியான் பூதி யோடு பொருதபின் னென்னச் சொன்னாள்
யாதுநீ வேண்டிற் றெல்லா மிசைந்தன னென்று சொன்னான்.

(இ - ள) (அதைக்கேட்டு இராமதத்தை) நீதியே - நீதி சாஸ்திரமே, படித் தான் போல - படித்தவன் போல வித்தியாசமில்லாமல், அழைக்கின்றான் - சொல்பவனாகிய வணிகனுடைய, வழக்கும் - வழக்கையும், நின்ற - மந்திரி பதத் தில் நிலைபெற்றிருக்கின்ற, வேதியன் - ஸ்ரீபூதியாகிற பிராமணனுடைய, செய லும் - செய்கையும், (ஆகிய) எல்லாம் - எல்லாவற்றையும், விளக்குப்போல் - சகலத்தையும் காட்டும் தீபம்போல, காட்ட - காண்பிப்பதற்கு, சூது - சூதாட்டத் தில், யான் - நான், பூதியோடு - ஸ்ரீபூதியுடன், பொருதபின் - எதிர்த்து ஆடிய பிறகு, வல்லன் - வல்லமையுடையவளாவேன், என்ன - என்று, சொன்னாள் - கூறினாள், நீ - நீ, வேண்டிற்று - இச்சித்தது, யாது - எதுவோ, எல்லாம் - அதற் கெல்லாம், இசைந்தனன் - நான் பொருந்தினேன், என்று சொன்னான் - என்று அரசன் சம்மதித்துக் கூறினான், எ - று. (ருஎ)

281 அரசன தருளி னாலே மந்திரி யவனைக் கூவிப்
பெரிதுபோ தசதி யாடிப் பின்னைபொன் னைத்தொடங்கா

உரைசெய்தாள் சூதி லென்னோ டொப்பவ ரில்லை யென்றே
அரசன்மந் திரியை நோக்க வகோபெரி தழகி தென்றான்.

(இ - ள்) (அதன்மேல் இராமதத்தை) அரசனது - இராஜாவினுடைய, அருளினாலே - தயவினால், மந்திரியவனை - மந்திரியாகிய அந்த ஸ்ரீபூதியை, கூவி - அழைத்து, பெரிது போது - நெடுநேரம், அசதியாடி - பரிஹாசவசனங்கள் பேசி அவனுடன் விளையாடி, பின்னை - பிற்பாடு, ஒன்றை - ஒருகாரியத்தை, தொடங்கா - தொடங்கி, சூதில் - சொக்கட்டானாடுவதில், என்னோடு ஒப்பவர் - எனக்குச் சமான மானவர்கள், இல்லை என்று - இவ்வுலகத்திலில்லை என்று, உரை செய்தாள் - சொன்னாள், அரசன் - அதைக்கேட்டு அரசன், மந்திரியை - அமைச்சனாகிய ஸ்ரீ பூதியை, நோக்க - பார்க்க, (அவன்) அகோ - ஆஹா, பெரிது - மிகவும், இது - இச்சொல், அழகு - அழகாயிருக்கின்றது, என்றான் - என்று இகழ்ச்சிக்குறியாகச் சொன்னான், எ - று. (௫அ)

282. வரையென சேறிந்த மார்ப மந்திரி தன்னை வல்லே
உரையொன்று முடியு மெல்லை யுடைப்பனிப் போரி லென்னத்,
திரைசெறி கடலந் தானை வேந்தயான் றேவி தன்னைப்
பொரவென்று பூட்டும் போழ்தே வெல்வனிப் போரி லென்றான்.

(இ - ள்) (அதைக்கேட்டு இராமதத்தை) வரைஎன - பர்வதம்போல, செறிந்த - சேர்ந்த, மார்ப - மார்பையுடைய அரசனே!, மந்திரிதன்னை - மந்திரியை, வல்லே - சீக்கிரமாக, உரையொன்று - ஒருவார்த்தையானது, முடியுமெல்லை - பேசிமுடிவதற்குள், இப்போரில் - இச்சொக்கட்டான் போரில், உடைப்பன் - தோல்வியடையச் செய்வேன், என்ன - என்றுசொல்ல, (மந்திரி) திரைசெறி - அலைகள் நெருங்கிய, கடலந்தானை - சமுத்திரம்போன்ற பெரிதாகிய சேனையை யுடைய, வேந்த - அரசனே!, யான் - நான், தேவிதன்னை - இத்தேவியை, பொர வென்று - பொருதவென்று ஆரம்பித்து, பூட்டும் போழ்தே - காய்களைப் பூட்டும் காலத்திலேயே, இப்போரில் - இந்தச்சூதாட்டப் போரில், வெல்வன் - ஜெயிப்பேன், என்றான் - என்று சொன்னான், எ - று. (௫௯)

283. முறைமுறை சபதம் செய்ய வரசனும் முகிழ் முகிழ்த்துப்
பிறைநுதற் பேதை தன்பா லிருந்தனன் றேவி பின்னை
மறையவன் மார்பி னானு நாமமோ திரமு மீண்டு
முறைமுறை வென்றுகொண்டாள் மூர்ச்சியா வெய்து யிர்த்தான்.

(இ - ள்) (இவ்வாறு) முறைமுறை - ஒவ்வொரு முறையிலும் திரும்பத் திரும்ப, சபதம் செய்ய - வாக்குறுதி செய்ய, அரசனும் - இராஜாவும், முகிழ் முகிழ்த்து - பிரமித்து, பிறைநுதல் - பிறைபோன்ற நெற்றியையுடைய, பேதை

தன்பால் - தேவியின்பக்கத்து, இருந்தனன் - இருந்தான், பின்னை - பிற்பாடு, தேவி - இராமதத்தை, மறையவன் - பிராமணனாகிய மந்திரியினுடைய, மார்பினூலும் - மார்பிலுள்ள பூணூலும், நாமமோதிரமும் - அவனது நாமங்குறித்த முத்திரை மோதிரமும், ஈறு - முடிவாக, முறைமுறை - வரிசைக் கிரமமாக இரண்டாட்டத்தில், வென்று - ஜெயித்து, கொண்டாள் - கைக்கொண்டாள், (அப்போது மந்திரி) மூர்ச்சியா - மூர்ச்சித்து, வெய்துயிர்த்தான் - பெருமூச்சு விட்டான், எ - று. (௬௦)

284. மயிலொடு பொருது தோற்ற வாளரி போல மாழ்கிப்
புயலென மேனி வேர்ப்புப் பொடிப்பவ னிருந்த போழ்திற்
குயின்மொழி வென்று கொண்ட காட்டிச்செப் பதனை வாங்குஞ்
செயலெலாஞ் செவிலித் தாய்க்குச் செப்பிவிட் டினிதின்
மீண்டாள்.

(இ - ள்) மயிலொடு - ஒருபெண் மயிலோடு, பொருது - எதிர்த்து, தோற்ற - தோல்வியடைந்த, வாளரிபோல் - ஒளிபொருந்திய சிம்மத்தைப் போல, மாழ்கி - மயக்கமுற்று, புயலென - மழைத்துளியைப்போல துளித்துளியாக, மேனி - சரீரத்தில், வேர்ப்பு - வேர்வை, பொடிப்ப - உண்டாகிச் சொரிய, அவன் - அம்மந்திரி, இருந்தபோழ்தில் - இவ்விதநிலைமையிலிருந்த காலத்தில், குயின்மொழி - குயில்போலும் மதுரவசனத்தையுடைய இராமதத்தை, வென்று - சூதில் செயித்து, கொண்ட - கைக்கொண்டவஸ்துக்களை, காட்டி - மந்திரியுடைய பாண்டாகாரிக்குக் காண்பித்து, செப்பதனை - பத்திரமித்திரனது இரத்தினச்செப்பை, வாங்கும் - வாங்கும்படியான, செயலெல்லாம் - செய்கை எல்லாம், செவிலித்தாய்க்கு - தனது செவிலித்தாயாகியவளுக்கு, செப்பி - சொல்லி (அப்பொருள்களை அவள் கையிற்கொடுத்து), விட்டு - அவளை யனுப்பிவிட்டு, இனிதின் - இனிமையாக, மீண்டாள் - திரும்பி அவ்விடத்திற்கே வந்து விட்டாள், எ - று. (௬௧)

285. கரும்பைமென் றனைய தீஞ்சொற் காவலன் றேவி தாயாம்
நெருங்கிநின் றெழுந்த கொங்கை நிபுணமா மதியும் போகிச்
சுரும்பிருந் துறங்குந் தொங்க லமைச்சன்றன் மாடந் துன்னி
விரும்பிவந் தடைந்த பண்ட காரிக்கு வேறு சொன்னாள்.

(இ - ள்) கரும்பை - கரும்பினை, மென்றனைய - மென்று தின்றதற்குச் சமானமாகிய, தீஞ்சொல் - மதுரமாகிய சொல்லையுடைய, காவலன் தேவி - அரசனது தேவியின், தாயாம் - செவிலித்தாயாகிய, நெருங்கிநின்று - சேர்ந்துநின்று, எழுந்த - மார்பினிடமாக வுண்டாகிய, கொங்கை - தனபாரங்களையுடைய, நிபுண

மாமதியும் - நிபுணமாமதி என்பவளும், போகி - சென்று, சுரும்பு - வண்டுக்கூட்டங்கள், இருந்துறங்கும் - தங்கித்துயில்செய்கின்ற, தொங்கல் - புஷ்பமாலையை அணிந்திரா நின்ற, அமைச்சன் தன் - அந்த மந்திரியினுடைய, மாடம் - மாளிகையை, துன்னி - அடைந்து, விரும்பிவந்து - அவ்விடத்தில் தன்னை விரும்பி வந்து, அடைந்த - சேர்ந்த, பண்டகாரிக்கு - அம்மந்திரியினுடைய பாண்டாகாரியாகியவனுக்கு, வேறு - நடந்துகொண்டிருக்க வேறொரு விஷயத்தை, சொன்னாள் - கீழ்வருமாறு சொன்னாள், எ - று. (௯௨)

286. சித்திர மொத்த ராம தத்தையுஞ் சீய சேனுஞ்
சத்தியம் வைத்த நாமன் றன்னைமுன் னாணை யிட்டுப்
பத்திர மித்தி ரன்செப் புண்டெனிற் கொடுக்க பார்மேல்
நித்தலு மிட்ட பூசல் நெடும்பழி விளக்கு மென்ன.

(இ - ள்) சித்திர மொத்த - சித்திரப்பாவையை யொத்த, ராமதத்தையும் - இராமதத்தா தேவியும், சீயசேனும் - சிம்மஸேன மகாராஜனும், சத்தியம் வைத்த - சத்திய மென்கிற பட்டத்தை முன்னேவைத்திராநின்ற, நாமன்றன்னை - (பெயருள்ளவனாகிய) சத்தியகோஷமந்திரிக்கு, முன் - எதிரில், ஆணையிட்டு - வாக்குறுதி செய்து, பத்திரமித்திரன் - பத்திரமித்திரனது, செப்பு - இரத்தினச்செப்பு, உண்டெனில் - உண்டாயிருந்தால், கொடுக்க - கொடுக்கக் கடவாய், பார்மேல் - பூமியின்மேல், நித்தலும் - நாடோறும், இட்ட - பத்திரமித்திரனால் செய்யப்பட்ட, பூசல் - இரைச்சல், நெடும் - பெரிய, பழி - பழியை, விளக்கும் - உண்டு பண்ணும், என்ன - என்று சொல்ல, எ - று. (௯௩)

287. மத்தக மொத்த திண்டோண் மந்திரி சொன்ன வார்த்தை
வித்தக ருத்த மர்க்கும் வரும்பழி விலக்க லாகா
பத்திர பாகு வல்லி பரதற்கும் பழியொன் றாய
தித்தலத் தென்று நின்ற திந்திரோ பேந்தி ரர்க்கும்.

(இ - ள்) மத்தகம் - யானைமஸ்தகம்போன்ற, திண் - கெட்டியாகிய, தோள் - புயத்தையுடைய, மந்திரி - அமைச்சன், சொன்ன - பதில்சொன்ன, வார்த்தை - வசனமாவது, வித்தகர் - சாமர்த்திய புருஷர்களுக்கும், உத்தமர்க்கும் - உத்தமபுருஷர்களுக்கும், வரும் - வருகின்ற, பழி - பழிச்சொல்லை, விலக்கலாகா - தடைசெய்தல் முடியாது, பத்திரம் - பூஜ்ஜியமாகிய, பாகுவல்லி - பாகுபலி குமாரனுக்கும், பரதற்கும் - பரதராஜனுக்கும், இந்திரோ பேந்திரர்க்கும் - இந்திரஸேன உபேந்திரஸேனனென்னும் இரண்டு இராஜகுமாரர்களுக்கும், பழியொன்றாயது - உண்டாகிய ஒரு பழியானது, இத்தலத்து - இவ்வுலகத்தில், என்றும் நின்றது - எப்பொழுதும் வியாபித்து நின்றது, எ - று.

இங்குக்கூறியவர்களின் விருத்தாந்தத்தை ஸ்ரீபுராணத்தில் அறிந்துகொள்க.

288. ஆதலா லென்க ணின்று மூளைத்தவிப் பழியும் போகி
ஓதநீர் வட்ட மெல்லாந் தடையின்றிப் படர்வ தொன்றாய்த்
தீதிலாக் குணத்து வேந்தே செப்பவன் வைத்துப் போயிற்
றியாதுநா னினைந்தி டாதே யில்லைசெப் பென்று சொன்னேன்.

(இ - ள்) ஆதலால் - ஆகையினால், என்கணின்று - என்னிடமாகவிருந்து, மூளைத்த - உண்டாகிய, இப்பழியும் - இந்தப் பழிச்சொல்லும், ஒன்றாய் - அவற்றைப்போல ஒன்றாகி, போகி - சென்று, ஓதநீர்வட்டமெல்லாம் - சமுத்திரஞ் சூழ்ந்த இப்பூமிமுழுதும், படர்வது - பரவப்பட்டதாயிற்று, தீதிலா - பொல்லாங்கில்லாத, குணத்து - நற்குணமுடைய, வேந்தே - அரசனே!, செப்பு - இரத்தினச்செப்பை, அவன் - அந்தப் பத்திரமித்திரன், வைத்துப் போயிற்று - வைத்துச் சென்றதை, யாதும் - எவ்வளவும், நான் - யான், நினைந்திடாது - நினைப்பில்லாமல், செப்பு - இரத்தினச்செப்பு, இல்லை என்று - என்னிடம் வைத்ததில்லை என்று, சொன்னேன் - சொல்லிவிட்டேன், எ - று. (சுரு)

289. நினைத்தபின் சத்தியகோட னென்பது நீங்கு மென்றென்
வினைப்பயன் பெருமை யாலே கொடுத்திலன் வேண்ட வன்றிச்
சினக்களிற் றுழுவ மற்றுன் றிருவுள்ள மிருக்க வையத்
தெனக்கொன்று மரிய தில்லை யினிச்செய்வ துரைக்க வென்றான்.

(இ - ள்) நினைத்தபின் - (அவன் செப்பு வைத்துச் சென்றதை) நினைத்த பிற்பாடு, (அதனைக்கொடுத்தால் நாம் சொன்ன சொல்லுக்கு மாற்றமாகி) சத்தியகோடனென்பது - சத்தியகோஷனென்கிற பெயரானது, நீங்குமென்று - நீங்கிவிடுமென்று, என் - என்னுடைய, வினைப்பயன் பெருமையாலே கருமோதயத்தின் பெருமையாலே, வேண்ட - பத்திரமித்திரன் வேண்டிக்கேட்கவும், கொடுத்திலன் - நான் கொடுக்கவில்லை, அன்றி - அல்லாமல், சினக்களிற்றுழுவ - கோபம் பொருந்திய யானையையுடைய வீரனே!, உன் - உன்னுடைய, திருவுள்ள மிருக்க - அழகிய உள்ளத் தயவிருக்க, வையத்து - இவ்வுலகில், எனக்கு - எனக்கு, அரியது - அருமையானது, ஒன்றும் - யாதொன்றும், இல்லை - இல்லை, இனி - இனிமேல், செய்வது - செய்யுங் காரியத்தை, உரைக்க - சொல்லக்கடவாய், என்றான் - என்று கூறினான், எ - று.

மற்று - அசை. (சுசு)

290. மன்னவ னதனைக் கேட்டு வரும்பழி விலக்கொ ணாவே
என்னுனக் கிங்கு வந்த பழியொன்று மில்லை யீண்டம்
மின்மணிச் செப்பை யீந்தவ் வணிகனை வேண்டிக் கொளவேன்
முன்னையென் பித்துத் தீர்த்தான் முனிவனென் றுரைக்க வென்றே.

**(இ - ள்)** மன்னவன் - அரசன், அதனை - மந்திரியால் சொல்லப்பட்ட அவ்வசனத்தை, கேட்டு - கேட்டு, வரும்பழி - உலகத்தில் வரும்பழியை, விலக்கொணாவே - நீக்கமுடியாது தான், (ஆயினும்) உனக்கு - நினக்கு, இங்கு - இவ்வுலகில், வந்த - வந்ததாகிய, பழி - பழிச்சொல், என் - என்ன, ஒன்றுமில்லை - யாதொன்றுமில்லை, ஈண்டு - இவ்விடத்து, அ - அந்த, மின் - பிரகாசமுடைய, மணி - இரத்தினங்களுள்ள, செப்பை - செப்பினை, ஈந்து - கொடுத்து, அவ்வணிகனை - அந்த வணிகனை, (எனக்குப் பித்துப்பிடித்திருந்ததனாலே நான் அவ்வாறு சொல்லிக்கொண்டு திரிந்தேன்; அவ்விதம்) முன்னை - முன்னாலே பிடித்திருந்த, என்பித்து - எனது பைத்தியத்தை, முனிவன் - ஒரு மகாதபசையுடைய முனிவரன், தீர்த்தானென்று - (அருள் செய்து) நீக்கினானென்று, உரைக்கவென்று - உலகில் சொல்லக்கடவாய் என்று, வேண்டிக்கொள்வேன் - நான் வேண்டிக்கொள்ளுகிறேன், (அதனால் உனக்குப் பழியும் வாராது உண்மைக்கும் சரியாய்விடும் என்று அரசன் சொன்னான்), எ - று. (௬௭)

**291.** மந்திரி நன்றி தென்று வரைபுரை மார்பி னூலுந்
தன்பெய ரங்கித் திட்ட வாழியுந் தந்து செப்புக்
குன்கணின் றென்னை விட்டா னொருவரு மறியா வண்ண
மென்கையிற் செப்பைத் தாவென் றுரைத்துக்கொண் டினிதின்
மீண்டாள்.

**(இ - ள்)** மந்திரி - மந்திரியானவன், நன்றிதென்று - இது நன்மையான காரியமென்று, வரைபுரை - பர்வதம் போன்ற, மார்பின் - தனது மார்பிலணிந்த, நூலும் - பஜ்ஞோபவீதமும், தன்பெயரங்கித்திட்ட - தனது நாமத்தைப் பதித்த, ஆழியும் - முத்திரை மோதிரத்தையும், தந்து - அடையாளமாக உனக்குக் காட்டும்படி கொடுத்து, உன்கண் - உன்னிடத்திரா நின்ற, செப்புக்கு - இரத்தினச் செப்பை வாங்கி வருவதற்கு, இன்று - இப்பொழுது, என்னை விட்டான் - என்னை அனுப்பினான், ஒருவரும் - யாவரொருவரும், அறியாவண்ணம் - தெரிந்துகொள்ளாதபடி, என் கையில் - எனது கரதலத்தில், செப்பை - அந்த இரத்தினச் செப்பை, தாவென்று - தரக்கடவாயென்று (அவற்றைக் காட்டி), உரைத்து - சொல்லி, கொண்டு - வாங்கிக்கொண்டு, இனிதின் - சந்தோஷமாக, மீண்டாள் - திரும்பி வந்துவிட்டாள், எ - று. (௬௮)

**292.** மந்தித்த நோக்கத் தாலிம் மண்ணெலாம் வணக்க வல்லாள்
சிந்தித்தொன் றுரைத்துச் செய்யிற் றேவரும் பிழைக்க மாட்டார்
வந்திக்கா ரார்க்கு மூத்தான் வைத்தசெப் பதனை வாங்கித்
தந்திட்டாள் முகத்தை நோக்கா தாமரைக் கிழத்தி யன்னாள்.

(இ - ள்) மந்திரித்த - மந்தமாகிய (அதாவது நிதானமாகிய), நோக்கத்தால் - பார்வையினால், இம்மண்ணெலாம் - இப்பூமியிலுள்ளவர்களை எல்லாம், வணக்க - வசப்படுத்த, வல்லாள் - வல்லமையையுடைய இவள், சிந்தித்து - மனதில் தியானித்து, ஒன்று - தக்க ஒன்றை, உரைத்து - சொல்லி, செய்யின் - செய்வாளே யானால், தேவரும் - தேவர்களும், பிழைக்கமாட்டார் - இவளுடைய சூழ்ச்சியினின்றுந் தவறமாட்டார்கள், (ஆதலினால்) வந்திக்காரார்க்கு மூத்தான் - உலகத்தவரால் புகழ்ந்தகாத வஞ்சனைக்காரர்களுக்கெல்லா மேலானவனாகிய மந்திரியால், வைத்த - வைக்கப்பட்ட, செப்பத்தினை - இரத்தினச் செப்பை, வாங்கித் தந்திட்டாள் - மேற்கூறியபடி வாங்கிக்கொண்டு வந்து இராமதத்தையிடம் கொடுத்துவிட்டாள், தாமரைக் கிழத்தியன்னாள் - செந்தாமரை மலருக்குரியவளான லக்ஷ்மிதேவிக்குச் சமானமாகிய இராமதத்தா தேவியானவள், முகத்தை - செவிலித்தாயினுடைய முகக்குறியை, நோக்கா - பார்த்து, எ - று. (சுகூ)

293. முடிந்ததிக் கருமமென்று முறுவலித் தவளோ டும்போய்ப்
படங்கிடந் தல்குற் பாவாய் பட்டது பகர்க வென்ன
நுடங்குநுண் ணிடையி னாய்நீ நுவலிய நினைத்துப் போகி
மடங்கல்போ லிருந்த விந்த மந்திரி மாடம் புக்கேன்.

(இ - ள்) இக்கருமம் - இந்தக் காரியமானது, முடிந்தது - முடிந்துவிட்டது, என்று - என்று, முறுவலித்து - புன்சிரிப்புக்கொண்டு, அவளோடும் - அச்செவிலித்தாயுடன், போய் - தனியாகப்போய் (அவளைநோக்கி), படங்கிடந்த - சர்ப்பத்தினது படத்தின் உருவமைந்த, அல்குல் - அல்குலையுடைய, பாவாய் - சித்திரப் பாவைபோன்ற செவிலித்தாயே!, பட்டது - நடந்த விருத்தாந்தத்தை, பகர்கவென்ன - சொல்லக்கடவாயென்று கூற, (அவள் இராமதத்தையை நோக்கி) நுடங்கு - அசையாநின்ற, நுண் - மெல்லிதாகிய, இடையினாய் - இடையை உடைய இராமதத்தையே!, நீ நுவலிய - உன்னால் சொல்லப்பட்டவைகளை, நினைத்து - மனதிலே ஆலோசித்துக்கொண்டு, போகி - சென்று, மடங்கல்போல் இருந்த - சிம்மத்தைப்போ லிராநின்ற, இந்தமந்திரி - இம்மந்திரியினது, மாடம் - உப்பரிகையை, புக்கேன் - அடைந்தேன், எ - று.

கிடந்தல்குல் என்பதில் அகரந்தொக்கது. (௭௦)

294. புக்கபின் பாண்ட காரி புலியொப்பான மெலியும் வண்ண
மொக்கநீ யுரைத்த வெல்லா முரைத்தடை யாளஞ் சொல்லி
மிக்கவன் வெருளி மார்பி னூலுமோ திரமுங் காட்டித்
தக்கதொன் றுரைத்த பின்னைத் தந்ததெப் பிதுவென் றிட்டாள்.

(இ - ள்) புக்கபின் - அவ்வாறு அடைந்தபிறகு, பாண்டகாரி - பாண்டகாரியான, புலியொப்பான் - புலிக்குச் சமானமாகியவன், மெலியும் வண்ணம் -

தளர்ச்சி யடையும்படி, ஒக்க - பொருந்த, நீயுரைத்தவெல்லாம் - உன்னால் சொல்லப்பட்டவைகளை எல்லாம், உரைத்து - சொல்லி, அடையாளஞ்சொல்லி - அடையாளத்தையுங்கூறி, வெகுளிமிக்கவன் - கோபமிகுந்த மந்திரியினுடைய, மார்பினூலும் - மார்பிலணியும் பூணூலையும், மோதிரமும் - முத்திரை மோதிரத்தையும், காட்டி - காண்பித்து, தக்கதொன்று - தகுதியானதொரு காரியத்தை, உரைத்த பின்னை - சொன்ன பிறகு, தந்த - அவனால் கொடுக்கப்பட்ட, செப்பு - செப்பானது, இது - இதுவாகும், என்று - என்று சொல்லி, இட்டாள் - அச்செப்பை எதிரில் வைத்தாள், எ - று. (௭௧)

வேறு.

295. கறந்த பாலு முலைபுகு நீ கருதி னென்ற பெரியவர்க
ணிறைந்த மதிபோன முகத்தாளைப நிபுண மதியென் றுரைத்தார்க
ளறிந்தோர் சொல்லும் பொய்யாமோ வறிய காலன் பாலுயிர்போ
லிறந்த பொருளைக் கொடுவந்தாய்க் கென்னான் செய்வ தென
வுரைத்தாள்.

(இ - ள்) (அவ்வாறு வைத்தபின்பு) கறந்த - கறக்கப்பட்ட, பாலும் - பாலும், நீ - நீ, கருதின் - கருதுவையேயானால், முலைபுகும் - மறுபடியும் கொங்கையிலடையும், என்று - என்றுகூறி, (அதற்குத்தக) பெரியவர்கள் - பெரியோர்கள், நிறைந்த - நிறைவுபெற்ற, மதிபோல் - சந்திரன்போல், முகத்தாயை - முகத்தையுடைய உன்னை, நிபுணமதி என்று - நிபுணமாமதி என்று, உரைத்தார்கள் - சொன்னார்கள், அறிந்தோர் - ஞானத்தை உணர்ந்த பெரியோர்களது, சொல்லும் - வசனமும், பொய்யாமோ - பொய்யாகுமோ (ஆகாது), வறிய - வறுமையையுடைய (அதாவது எவ்வளவானாலும் நிரம்பாத தொழிலையுடைய), காலன்பால் - அந்தியகாலனிடத்தே சிக்கிய, உயிர்போல் - உயிரைப்போல, இறந்தபொருளை - நீங்கிவிட்டபொருளை, கொடுவந்தாய்க்கு - மறுபடியும் கொண்டுவந்த உனக்கு, நான் செய்வது - நான் செய்யத்தக்கது, என் - என்ன இருக்கின்றது, என - என்று, உரைத்தாள் - இராமதத்தாதேவி சொல்லினாள், எ - று. (௭௨)

296. மந்தா ரத்தை வந்தணையும் வல்லி போல மன்னவனைச்
சந்தார் முலையாள் வந்தணுகித் தன்கைச் செப்புங் காட்டுதலுங்
கந்தார் களிற்று வேந்தன்றன் கையை மறியாக் காரிகையைச்
சிந்தா மணியோ நீயென்றான் சிறைவண் டெழுந்த முடியானே.

(இ - ள்) மந்தாரத்தை - கற்பக விருக்ஷத்தை, வந்தணையும் - வந்து சேருகின்ற, வல்லிபோல் - காமர்வல்லிக் கொடிபோல, மன்னவனை - அரசனை, சந்தார் - அழகார்ந்த, முலையாள் - ஸ்தனங்களையுடைய இராமதத்தை, வந்தணுகி - வந்து

சேர்ந்து, தன்கைச்செப்பு - தன்கைவசமாகக் கொண்டுவந்த இரத்தினச் செப்பை, காட்டுதலும் - (அவனிடம்) காண்பித்தலும், கந்தார் - கல்ஸ்தம்பத்தில் பிணிக்கப் பட்டுச் சேர்ந்திருக்கும்படியான, களிற்று - யானைக்குத் தலைவனாகிய, வேந்தன் - அரசன், தன்கையை - தனதுகையை, மறியா - (அப்படியாவென்பதற்கடையாள மாக எதிரே திருப்பி) அசைத்து, காரிகையை - இராமதத்தையை (பார்த்து), சிறை - இறகுகளையுடைய, வண்டு - வண்டுகள், எழுந்த - புஷ்ப மாலையினின்று மெழும்படியான, முடியான் - முடியையுடைய அரசன், நீ - தேவியே நீ, சிந்தா மணியோ - (சிந்திதார்த்தங்களைக் கொடுக்கும்படியான) சிந்தாரத்தினமோ, என் றான் - என்று சொல்லி ஆச்சரியமடைந்தான், எ - று. (எசு)

வேறு.

297. மன்னவன் செப்பைக் காணா மற்றிவ னமைச்ச னாக
முன்னமென் னரசு சென்ற படியிதோ வென்றா நக்காங்
கன்னமென் னடையி னாளோ மந்திரித் தாக வென்னாச்
சொன்னவவ் வணிகன் றன்னைச் சோதித்தற் குள்ளம் வைத்தான்.

(இ - ள) மன்னவன் - அரசன், செப்பை - இரத்தினச்செப்பை, காணா - பார்த்து, மற்று - பின்னை, இவன் - இந்த ஸ்ரீபூதியானவன், அமைச்சனாக - மந்திரி யாக, முன்னம் - இதற்குமுன், என் அரசு - எனது ராஜ்ஜியம், சென்றபடி - நடந்த விதம், இதோவென்று - இந்தன்மைத்தோவென்று, நக்கு - சிரித்து, ஆங்கு - அவ் விடத்தில், ஆக - நல்லதாகட்டும், என்னா - என்று, அன்னம் - அம்சபக்ஷிபோன்ற, மெல் - மிருதுவாகிய, நடையினாளொ - நடையையுடைய இராமதத்தா தேவியோடு, மந்திரித்து - ஆலோசித்து, சொன்ன - (மந்திரி எனது இரத்தினச் செப்பை மோசஞ் செய்தானென்று) சொல்லிய, அவ்வணிகன் றன்னை - அவ்வர்த்தகனை, சோதித்தற்கு - பரீக்ஷிப்பதற்கு, உள்ளம் வைத்தான் - (அவ்வெண்ணத்தை) மன தில் கொண்டான், எ - று. (எச)

298. மணிச்செப்பு நல்ல வல்லே தருகென வந்த வற்றிற்
குணிப்பற்ற மணியை வாங்கி வணிகன்றன் மணியிற் கூட்டிப்
பணித்தவன் வணிகன் றன்னை யழைத்தெனப் பணிந்து நின்றா
னிணைத்தனா வளத்துச் சீறும் பன்னகர்க் கிறைவ வென்றான்.

(இ - ள்) (அவ்வாறு கருதிய அரசன்) மணிச் செப்பு - இரத்தினச்செப்பு, நல்ல - நன்மையானவைகளை, வல்லே - சீக்கிரத்தில், தருகென - கொண்டு வரு வீராக வென்று, (பண்டாகாரிகளுக்கு ஆஜ்ஞைசெய்ய), வந்தவற்றில் - அப்பிர காரம் அவர்களால் கொண்டுவரப்பட்ட அவைகளினின்றும், குணிப்பற்ற - மதித் தற்கரிய, மணியை - இரத்தினங்களை, வாங்கி - எடுத்து, வணிகன்றன் - பத்திர

மித்திரனுடைய, மணியில் - இரத்தினங்களில், கூட்டி - ஒன்ருகச்சேர்த்து, (அவ் வணிகனுடைய இரத்தினச் செப்பையும், தன்னுடைய செப்புக்களையும் கலந்து வைத்துக்கொண்டு), வணிகன்றன்னை - அவ்வணிகனை, அழைக்கென - வர வழைக்கவென்று, பணித்தனன் - (பணியாளர்க்கு) உத்தரவு செய்தான், (அப் படியே அவர்கள் போயழைக்க அவன் வந்து), பணிந்துநின்ருன் - அரசனை வணங்கி எதிரில் நின்ருன், இணைந்தநா - இரண்டாகிய நாக்களை, வளைத்து - வளைத்து, சீறும் - கோபிக்கின்ற, பன்னகர்க்கு, நாகர்களுக்கு (அதாவது பவண தேவர்களுக்கு), இறைவ - அதிபதியாகிய தரணேந்திரனே, என்ருன் - (கவனிப் பாயாக) என்று ஆதித்தியாப தேவன் சொன்னன், எ - று. (எ௬)

299. கச்சட்ட முலையி ளுளும் வேந்தனும் வணிக கண்ட
விச்செப்பி லுன்செப் புண்டே லியம்புநீ யென்ன லோடு
மெய்ச்செப்பு மொழியி ளுனும் வேந்தனை வணங்கிப் பாரா
விச்செப்பென் மணிச்செப்பென்ருெளிமணிக்கடகங் கையான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும் சொல்லத்தொடங்கினவனுப்) கச்சு- இரவிக்கையை, அட்ட - மீறிஇராநின்ற, முலையினளும் - ஸ்தனங்களையுடைய இராமதத்தையும், வேந்தனும் - சிம்மசேன வரசனும், (அதன் மேல் அவ்வணிகனை நோக்கி) வணிக - வணிகனே!, கண்ட - இவ்விடத்தில் நீபார்த்த, இச்செப்பில் - இந்தச் செப்புக்கூட்டங்களில், உன் - உனது, செப்பு - இரத்தினச் செப்பு, உண் டேல் - இருந்தால், நீ இயம்பு - நீ அதைச் சொல்லு, என்னலோடும் - என்று ஆஜ் ஞாபித்தவளவில், எரி - பிரகாசியாநின்ற, மணி - இரத்தினங்களைப் பதித்துச்செய்த, கடகம் - கங்கணத்தையணிந்த, கையான் - கைகளையுடையவனுகிய, மெய் - உண் மையையே, செப்பும் - சொல்லுகின்ற, மொழியினனும் - வசனத்தையுடைய பத் திரமித்திரனும், வேந்தனை - அரசனை, வணங்கி - நமஸ்கரித்து, பாரா - நன்ருகப் பார்த்து, இச்செப்பு - இந்தச்செப்பு, என் - என்னுடைய, மணிச்செப்பு - இரத்தி னச்செப்பு, என்ருன் - என்று தன்னுடைய செப்பைக்கண்டுசொன்னன், எ - று.

300. உரைத்தவன் றன்னைப் பாரா மன்னன்முன் னிவனையோரும்
பிரத்தய மின்றி நின்ருர் பித்தெனப் பித்த னென்று
வுரைத்திவன் னரசு சென்ற நிலத்தவ ருற்ற துன்பம்
மரக்கலத் தவர்க்கு நாய்கன் வாரியின் மடிந்த தென்ருன்.

(இ - ள்) உரைத்தவன் றன்னை - அவ்விதமாகச் சொல்லிய பத்திரமித்தி ரனை, பாரா - பார்தது, மன்னன் - அரசன், முன் - இதற்கு முன், இவனை - இவ்வணிகனை, ஓரும் - அறியும், பிரத்தயம் - ப்ரத்தியமம், (அதாவது நல்லறிவு), இன்றி - இல்லாமல், நின்ருர் - நிலைபெற்றிருந்தவர்கள், பித்தென - இவன்

பைத்தியக்காரனென்று சொல்ல, பித்தனென்ற - பைத்தியக்காரனே என்று, உரைத்த - சொல்லிய, என் - எனது, அரசு - இராஜ்யாதிகாரம், சென்ற - நடந்த, நிலத்தவர் - பூமியிலுள்ளவர்கள், உற்ற - அடைந்த, துன்பம் - துக்கமானது, மரக்கலத்தவர்க்கு - கப்பலிலுள்ளவர்களுக்கு, நாய்கன் - எஜமானனவன், வாரியின் - சமுத்திர ஜலத்திலே, மடிந்தது - விழுந்து மடிந்ததற்குச் சமானமாகும், என்றான் - என்று சொன்னான், எ - று. (எஎ)

301. பத்திர மித்தி ராவுன் சித்திர மணிச்செப் பிட்ட
முத்திரை யுன்ன தாகில் வைத்திடல் கொண்டு போக
வத்திர முற்றி யானை மத்தக மறுக்கு மன்ன
முத்திரை யென்ன தன்று வித்தக ரிட்ட தென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி வணிகனை நோக்கி) பத்திரமித்திரா - பத்திரமித்திரனே!, உன் - உனது, சித்திரம் - விசித்திரமாகிய, மணிச்செப்பு - இரத்தினச்செப்பில், இட்ட - வைக்கப்பட்ட, முத்திரை - அடையாள முத்திரையானது, உன்னதாகில் - உன்னுடையதாயிருந்தால், வைத்திடல் - அதனை இங்கே வைத்திடாதே, கொண்டுபோக - கொண்டுபோகக்கடவாய், (என்று அரசன் சொல்ல) அத்திரம் - அம்புகளை, உற்று - கையிற் பொருந்தி, யானை - யானைகளின், மத்தகம் - மஸ்தகங்களை, அறுக்கும் - பிளக்கின்ற, மன்ன - அரசனே!, முத்திரை - முத்திரையானது, என்னதன்று - என்னதல்ல (அதாவது நான் வைத்த அடையாளமல்ல), வித்தகர் - யாரோசாமர்த்தியர்களால், இட்டது - இடப்பட்டிருக்கின்றது, என்றான் - என்று வணிகன் சொன்னான், எ - று.

'என்று அரசன் சொல்ல' என்பது இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது. (எஅ)

302. திறவெனத் திறந்து பார்த்திட்
டிறைவமற் றென்ன வல்லா
வறிவரு விலைய கற்கண்
ணிறையவுங் கிடந்த வென்றான்.

(இ - ள்) (அதைக்கேட்டு அரசன்) திற வென - அச்செப்பைத் திறக்கக்கடவாயென்று சொல்ல, திறந்துபார்த்திட்டு - திறந்து பார்த்துவிட்டு, இறைவ - அரசனே!, என்ன வல்லா - என்னுடைய வல்லாதனவாகிய, அறிவரும் - அளவிட்டறிதற்கரிய, விலைய - விலையையுடையனவாகிய, கற்கள் - இரத்தினங்கள், நிறையவும் - செப்புநிறைய, கிடந்த - இராநின்றன, என்றான் - என்று வணிகன் சொன்னான், எ - று.

மற்று - அசை. (எகூ)

## வேறு.

303. மண்ணின் மிக்கவிம் மணியைநின் மணியொடு கலக்கும்
மண்ணை தானுள னோவறி யாதுநீ யுரைத்தாய்
எண்ணி லாவிலை யிம்மணித் தன்மையைப் பார்க்குங்
கண்ணு மோடின காணெனக் காவல னுரைத்தான்.

(இ - ள்) மண்ணில் - இப்பூமியில், மிக்க - மிகுதியான குணமுள்ள, இம் மணியை - இந்த இரத்தினங்களை, நின்மணியொடு - உனது இரத்தினங்களோடு, கலக்கும் - சேர்க்கும்படியான, மண்ணை தான் - அறிவில்லாதவன், உளனோ - உண்டோ, (இல்லை), அறியாது - தெரியாமல், நீயுரைத்தாய் - நீ சொல்லினாய், எண்ணிலா - கணக்கில்லாத, விலை - விலைமதிப்பையுடைய, இம்மணி - இந்த இரத்தினங்களினது, தன்மையை - குணத்தை, பார்க்கும் - பார்க்கின்ற, கண்ணும் - உன்னுடைய கண்களும், ஓடின - பிரமித்துக் குறிப்புத்தவறிப்போயின, காண் - இப்போது பயமில்லாமல் நன்றாக நிதானித்துப் பார்க்கக்கடவாய், என - என்று, காவலன் - அரசன், உரைத்தான் - சொன்னான், எ - று. (௨0)

304. மத்த னல்லவன் கருமத்தின் வரும்பயன் றெரிந்து
சித்தம் வைத்தலாற் செய்வதோர் தொழில்வையத் தில்லை
வைத்த வென்மணி மறந்துவை கலுமழைத் தேனேற்
பித்த னென்றெனை யழைத்தவர் பிழைத்ததென் பெரியோய்.

(இ - ள்) (அதைக்கேட்டு வணிகன்) பெரியோய் - மேலான அரசனே!, மத்தனல்லவன் - பைத்தியமில்லாதவன் ஞானமுடையவன், கருமத்தின் - காரியங்களினால், வரும் - வருகின்ற, பயன் தெரிந்து - பலனைத் தெரிந்து, சித்தம் - மனதை, வைத்தலால் - வைத்து ஆராய்ந்து பார்த்தல்லாமல், செய்வது - செய்யும்படியான, ஓர் தொழில் - ஒரு காரியம், வையத்து - இவ்வுலகில், இல்லை - இல்லையாய், (ஆதலின்), வைத்த - வைக்கப்பட்ட, என்மணி - எனது இரத்தினங்களை, மறந்து - மறந்து போய், வைகலும் - நாடோறும், அழைத்தேனேல் - நான் கூவினால், பித்தனென்று - பைத்தியக்காரனென்று, என்னை - என்றனை, அழைத்தவர் - சொன்னவர்கள், பிழைத்தது - செய்த தப்பிதமானது, என் - என்ன இருக்கின்றது (இல்லை; அப்படியானால் நான் பித்தனேயாவன் என்று கூறினான்), எ - று. (௨க)

## வேறு.

305. இப்பரி சுரைத்துச் செப்பி விட்டமா மணியை யெல்லாம்
செப்பரும் பரிசு நீக்கிச் செழுமணி கையிற் கொண்டான்

மெய்ப்பரி சறிந்து தன்மை கைக்கொண்டு பிறிது விட்ட
வப்பிர மத்த னைய முனியைப்போல் வணிக னின்றான்.

(இ - ள்) இப்பரிசு - இப்பிரகாரமாக, உரைத்து - சொல்லி, செப்பில் - இரத்தினச் செப்பில், இட்ட - வைக்கப்பட்ட, மா - பெருமை பொருந்திய, மணியை எல்லாம் - இரத்தினங்களை எல்லாம், செப்பரும் - சொல்லுதற்கரிய, பரிசு - விதாயமாக, நீக்கி - விலக்கி, செழும் - செழுமைபெற்ற, மணி - தனது இரத்தினங்களை, கையில் - தன்கையில், கொண்டான் - எடுத்துக் கொண்டான், (அதனால்), மெய்ப்பரிசு - உண்மைத் தத்துவத்தை, அறிந்து - தெரிந்து, தன்மை - தனது ஸ்வரூபத்தை, கைக்கொண்டு - உபாதேயமாகஸ்வீகரித்து, பிறிது - அன்னிய ஸ்வரூபத்தை, விட்ட - ஹேயமாக நீக்கிய, அப்பிரமத்தனைய - அப்பிரமத்தகுணமுடைய, முனியைப்போல் - முனிவரனைப்போல், வணிகன் - அவ்வணிகனான பத்திரமித்திரன், நின்றான் - நின்றான், எ - று. (அஉ)

306. மணியிவை சிறிது பூதி வைத்தன வாகு முன்னைக்
குணியிலான் செய்த குற்றந் தீரநீ கொண்டி டென்ன
வணியிலா மகளிர் போலப் பிறன்பொருள் கொண்டு வாழும்
பணியிலே னரச வென்றான் பருமணி வயிரத் தோளான்.

(இ - ள) (அப்போது அரசன்) மணி இவை - இந்த இரத்தினங்கள், சிறிது - கொஞ்சம், பூதி - ஸ்ரீபூதியினாலே, வைத்தன வாகும் - வைக்கப்பட்டன வாகும், உன்னை - உன்றனை, குணியிலான் - நற்குணமுயில்லாத அவன், செய்த - இவ்வாறு செய்த, குற்றம் தீர - குறையானது நீங்கும்படி, நீ - நீ, கொண்டிடு - (இவற்றைக்) கைக்கொள்வாயாக, என்ன - என்று அரசன் சொல்ல, பரும் - பருத்த, மணி - அழகிய, வயிரத்தோளான் - வஜ்ஜிரம் போல் கெட்டியாகிய புயத்தையுடைய பத்திர மித்திரன், அரச - இராஜனே!, அணியிலா - (நற்குண மில்லாத) அழகில்லாத, மகளிர்போல - பொதுஸ்திரீகளைப் போல, பிறன் - அன்னியனுடைய, பொருள் - பொருள்களை, கொண்டு - கைக்கொண்டு, வாழும் - வாழ்கின்ற, பணியிலேன் - தொழிலில்லாதவன் நான், என்றான் - என்று சொன்னான், எ - று. (அங)

307. மன்னிய சுத்த மில்லான் பொருளினை வலிதின் வாங்கி
இங்கில வரைப்பி னென்றும் நின்றிடும் பழியு மெய்தி
மின்னினுங் கடிது வீயும் யாக்கையுங் கிளையு மோம்பல்
மன்னவ பெரிய தொன்றே மக்களிப் பிறவிக் கென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும்) மன்னிய - நிலைபெற்றிரா நின்ற, சுத்தம் - மனோசுத்தம், இல்லான் - இல்லாதவனாகி, பொருளினை - பிறர் பொருள்

களை, வலிதின் - வலிய பிரயத்தனத்தால் அல்லது மாறுபாட்டினால், வாங்கி - கிர கித்து, இந்நிலவரைப்பின் - இப்பூமியில், என்றும் - எப்பொழுதும், நின்றிடும் - நிலைபெறும்படியான, பழியும் - பழிச்சொல்லையும், எய்தி - அடைந்து, மின்னி னும்-மின்னலைப்பார்க்கிலும், கடிது - சீக்கிரமாக, வீயும் - நாசமாகும், யாக்கையும் - இச்சரீரத்தையும், கிளையும் - பந்துக்களையும், ஓம்பல் - இரக்ஷிக்கின்றது, மன்னவ- அரசனே!, மக்களிப் பிறவிக்கு - இந்த மனிதராகிய பிறப்புக்கு, பெரியதொன்றோ- பெரிதான தொன்றுகுமோ (ஆகாது), என்றான் - என்று சொன்னான், எ - று.

308. தானத்திற் குரித்து மன்று தன்கிளைக் கீயிற் சால
வீனத்து ளுய்க்கு நிற்கு மெச்சத்தை யிழக்கப் பண்ணு
மானத்தை யழிக்குந் துய்க்கில் மற்றவர்க் கடிமை யாக்கு
மூனத்து நரகத் துய்க்கும் பிறன்பொரு ளுவக்கின் வேந்தே.

(இ - ள்) (பின்னும்) வேந்தே - அரசனே!, பிறன்பொருள் - அன்னிய பொருளை, உவக்கின் - சந்தோஷித்துக் கைக்கொண்டால், (அது) தானத் திற்கு - சற்பாத்திரங்களில் தானஞ் செய்வதற்கு, உரித்துமன்று - உரியதுமல்ல, தன் - தனது, கிளைக்கு - பந்துக்களுக்கு, ஈயில் - கொடுத்தால், சால - மிகவும், ஈனத்துள் - இழிவான நிலையில், உய்க்கும் - செலுத்தும், நிற்கும் - நிலைத்திருக் கும், எச்சத்தை - சந்ததியை, இழக்கப்பண்ணும் - இழக்கும்படி செய்யும், மானத்தை - பெருமையை, அழிக்கும்-அழித்துவிடும், துய்க்கில் - அனுபவித்தால், அவர்க்கு - அப்பொருட்காரர்க்கு, அடிமையாக்கும் (அவ்வாறு அனுபவித்தவர்களை) ஏவலர்களாகவும் செய்விக்கும், ஊனத்து - குற்றம் பொருந்திய, நரகத்து - நரகத்தி லும், உய்க்கும் - செலுத்தி விடும், எ - று.

மற்று - அசை. (அரு)

309. பேறிழ வின்ப துன்பம் பிணிபகை பிறப்பி வற்றின்
ஆறுதான் முன்பு செய்த வினைவழி வருவ தல்லால்
வேறொன்று லாவ துண்டோ வினையென்பா னின்ற தொன்றால்
மாறின்றாய் நின்ற தல்லான் மற்றிவன் செய்த துண்டோ.

(இ - ள்) பிறப்பு - இந்த ஜன்மத்திலே, பேறு - அடையும் இலாபமும், இழவு - நஷ்டமும், இன்பதுன்பம் - சுகதுக்கங்களும், பிணி - வியாதியும், பகை - சத்துருத்வமும், (ஆகிய) இவற்றின் - இவைகளின், ஆறுதான் - வழியானது, முன்புசெய்த - பூர்வத்தில் செய்த, வினைவழி - கர்மானுரீதியாய், வருவதல்லால் - உதயமாவதேயல்லாமல், வேறொன்றால் - வேறொரு தன்மையால், ஆவதுண்டோ- ஆவதுளதோ, வினை - பூர்வவினையானது, என்பால் - என்னிடத்தே, நின்ற தொன்றால் - உதயமானபிரகாரம், மாறு - (இம்மந்திரிக்கும் எனக்கும் ஏற்பட்ட)

விரோதம், இன்று - இப்பொழுது, ஆய் - உண்டாகி, நின்றதல்லால் - அனுபவத்தில் நின்றதல்லாமல், மற்று - பின்பு, இவன் செய்தது - இம்மந்திரியால் செய்யப்பட்டது, உண்டோ - வேறொன்றுண்டோ, (இல்லை; வினையின்படியே நடந்தது என்று சொன்னான்), எ - று. (அசு)

310. நீதிநூ லோது வான்போ னின்றவ னன்று சொன்ன
தீதிலா மொழியைக் கேளா திண்டிறற் சீய சேனன்
வேதவா ணிகனே நீதி நூல்கண்ட வேந்த னேவிக்
கோதிலாக் குணத்தி னானென் றுவந்தன னிருந்துசொன்னான்.

(இ - ள்) நீதிநூல் - நீதி சாஸ்திரத்தை, ஓதுவான்போல் - படிப்பவன் போல, நின்றவன் - நின்ற பத்திரமித்திரன், அன்று சொன்ன - அப்பொழுது சொன்ன, தீதிலா - குற்றமில்லாத, மொழியை - வசனத்தை, கேளா - கேட்டு, திண் - வலிமை பொருந்திய, திறல் - பராக்கிரமத்தையுடைய, சீயசேனன் - சிம்மஸேனமகாராஜன், (அவனைநோக்கி) வேதவாணிகனே - வேத சாஸ்திரவர்த்தகஞ்செய்கின்றவனே, (அல்லது) நீதிநூல் - நீதிசாஸ்திரத்தை, கண்ட - கரை கண்ட, வேந்தனே - முதல்வனாகிய அரசனே, இக்கோதிலா - இந்தக்குற்றமில்லாத, குணத்தினான் - நற்குணத்தையுடையவன், என்று - என்று புகழ்ந்து, உவந்தனன் - சந்தோஷித்தவனாய், இருந்து - தங்கி, சொன்னான் - மேலும் (கீழ்க் கண்டவாறு) சொன்னான், எ - று. (அஎ)

311. வையகம் பெறினும் பொய்யா வாக்கினன் மரணம் வந்தா
லுய்யலா மருந்தென் றாலும் பிறன்பொ ருட் குள்ளம் வையான்
றையலாய் தரும நீதி சமநிலை தயா வொழுக்கம்
வையகந் தன்னி லிந்த வணிகனாய் வந்த தென்றான்.

(இ - ள்) வையகம் பெறினும் - இந்தப் பூமி ராஜ்ஜியத்தை அடைவதாயினும், பொய்யா - பொய் சொல்லாத, வாக்கினன் - வசனத்தை யுடையவன், மரணம் வந்தால் - சாவுவந்த போது, உய்யலாம் - பிழைக்கும்படியான, மருந்தென்றாலும் - அவுஷதமென்றபோதிலும், பிறன் பொருட்கு - அன்னியனுடைய பொருளுக்கு, உள்ளம் - மனத்தில் ஆசையை, வையான் - வைக்கமாட்டான், தையலாய் - இராமதத்தையே!, தருமநீதி - தருமநீதியும், சமநிலை - சமதாநிலைமையும், தயா - தயவும், ஒழுக்கம் - நன்னடக்கையும், வையகந் தன்னில் - இந்த வுலகத்தில், இந்த வணிகனாய் - இந்த வணிகனாக ரூபமெடுத்து, வந்த - வந்தனவாகும், என்றான் - என்று இராமதத்தையை நோக்கிக் கூறினான், எ - று. (அஅ)

312. என்றலும் தேவி வென்ற வாதிதன் பக்கத் தார்போல்
நின்றன ளுவகை நெஞ்சி னிறைந்தன ளாக நீதிக்

கொன்றவப் பூதி தன்பால் கோன்செட்டிப் பட்டந் தன்னை
மன்றலாந் தொங்கல் வேந்தன் வணிகனுக் கீந்து சொன்னான்.

(இ - ள்) என்றலும் - என்று அரசன் சொல்லவும், தேவி - இராமதத்தா தேவி, வென்ற - ஜெயித்த, வாதிகன் - வழக்காளியினுடைய, பக்கத்தார்போல் - கக்ஷியிலுள்ளவர்களைப்போல, நெஞ்சில் - மனதில், உவகை - சந்தோஷம், நிறைந் தனளாக - நிறையப்பெற்றவளாக, நின்றனள் - நின்றாள், நீதி - நீதியை, கொன்ற - கெடுத்த, அப்பூதி தன் பால் - அந்த ஸ்ரீ பூதியினிடத்துள்ள, கோன் செட்டிப்பட்டந் தன்னை - இராஜஸ்ரேஷ்டி பட்டத்தை, மன்றலாம் - வாசனை பாவித்கொண்டிருக்கின்ற, தொங்கல் - புஷ்பமாலையை யணிந்த, வேந்தன் - அர சன், வணிகனுக்கு - பத்திரமித்திரனுக்கு, ஈந்து - கொடுத்து, சொன்னான் - (மேலும் அவனை நோக்கிக் கீழ்க்கண்டவாறு) சொல்லினான், எ - று. (௬௯)

313. மணிகளும் பொன்னும் முத்தும் வயிரமும் பிறக்கும் பூமி
மணிகளும் பொன்னும் முத்தும் வயிரமு மடக்கு மாடம்
மணிகளும் பொன்னும் முத்தும் வயிரமும் வடித்துச் செய்த
வணிகளும் துகிலும் சந்து மல்லவுங் கைக்கொ ளென்றான்.

(இ - ள்) மணிகளும் - இரத்தினங்களும், பொன்னும் - ஸ்வர்ணமும், முத்தும் - முத்துக்களும், வயிரமும் - வஜ்ஜிரரத்தினங்களும், பிறக்கும் - உண்டாகும், பூமி - பூமிகளையும், மணிகளும் - இரத்தினங்களையும், பொன்னும் - ஸ்வர்ணத்தையும், முத்து - முத்துக்களையும், வயிரமும் - வஜ்ஜிரங் கற்களையும், அடக்கும் - தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கின்ற, மாடம்-உப்பரிகை பாண்டா கார முதலானவைகளையும், மணிகளும் - இரத்தினங்களாலும், பொன்னும் - ஸ்வர் ணத்தினாலும், முத்தும் - முத்துக்களாலும், வயிரமும் - வஜ்ஜிரரத்தினங்களாலும், வடித்துச் செய்த - ஆராய்ந்தெடுத்துப் பதித்து வடிவுபெறச் செய்த, அணிகளும் - ஆபரணங்களையும், துகிலும் - பட்டு வஸ்திரங்களையும், சந்தும் - சந்தன முதலாகிய வாசனாதிரவியங்களையும், அல்லவும் - இவையல்லாதனவாகிய மற்ற அனேக இனிய வஸ்துக்களையும், (திருடர்களெயெனி மந்திரியால் அபகரிக்கப்பட்ட உன் னுடைய பொருள்கள் எல்லாவற்றையும்), கைக்கொள் - நீ கைக்கொள்ளக்கடவாய், என்றான் - என்று ஆஜ்ஞாபித்துத் தன் காரியஸ்தர்களைக் கொண்டு அவற்றை யெல்லாம் அவனுக்குக் கொடுக்கும்படி செய்தான், எ - று. (௭௦)

வேறு.

314. இடம்பெரி துடையவர் பழியில் காரியந்
தொடங்கிய முடித்தலால் விடார்க ளென்பது
மடங்கல்போ னின்றிந்த வணிகன் மந்திரி
இடஞ்சலைக் கடந்திது முடிந்த தென்றனர்.

(இ - ள்) (அதன்மேல்) இடம் பெரிதுடையவர் - பெரிய எதுக்களை அல்லது மனோ வலிமையை யுடையவர்கள், தொடங்கிய - செய்ய ஆரம்பித்த, பழியில் காரியம் - பழியில்லாத செய்கையை, முடித்தலால் - முடித்து ஜெயம் பெறுவதல்லாமல், விடார்கள் - நடுவில் தளர்ச்சியடைந்து அதனை விடமாட்டார்கள், என்பது - என்று சொல்வது, மடங்கல்போல் - சிம்மத்தைப்போல, நின்று - பலமாய் நின்று, இந்த வணிகன் - இந்த வர்த்தகன், மந்திரி - மந்திரியால் செய்யப்பட்ட, இடைஞ்சலை - பொல்லாங்கை, கடந்து - ஜெயிக்க, இது - இந்தக் காரியம், முடிந்தது - முடிந்ததேயாகும், (அதாவது இதுவே அதற்குதாரணமாகும்), என்றனர் - என்று அந்நகரத்திலுள்ள ஜனங்கள் சொன்னார்கள், எ - று. (கக)

வேறு.

315. மத்தமால் களிறுபோதும் வழியினைக் குழித்து மாணப்
பொய்த்தரை செய்து வீழ்த்துப் பிடித்திடும் புலையன் போலச்
சத்திய கோட னென்னுஞ் சடத்திறை றன்னைத் தேற்றி
வைத்திந்த வையத் தோடும் வஞ்சித்தா னென்னை யென்னா.

(இ - ள்) (அப்போது அரசன்) மத்தம் - மதம் பொருந்திய, மால் - பெரிதாகிய, களிறு - யானை, போதும் - போகின்ற, வழியினை - வழியை, குழித்து - குழியாகச்செய்து, மாண - மாட்சிமையாக, பொய்த்தரை செய்து - மேல்பரப்புச் செய்து குழிதெரியாமல் மறைத்துத் தரையாகவே பொய்யாகக் காட்டி, வீழ்த்து - அதில் யானைகளை விழும்படிசெய்து, பிடித்திடும் - பிடிக்கின்ற, புலையன்போல - புலையனைப்போல, சத்திய கோடனென்னும் - சத்திய கோஷனென்கிற, சடத்திறைல் - திரையினால் (மறைத்து), தன்னை - தன்னை, தேற்றிவைத்து - நல்லவனென்று யாவர்களுக்கும் தெரியப் பண்ணி, இந்த வையத்தோடும் - இந்த உலகிலுள்ள ஜனங்களையும், என்னை - என்னையும், வஞ்சித்தான் - ஏமாற்றினான், என்னா - என்று, எ - று. (கஉ)

316. கோபியா வரசு நீதிக் குறைபடா வகையி னான்மா
பாவியா மிவனை நூலின் படியினாற் கடிக வென்ன
நாபிகா லத்தி னிப்பா னடக்கின்ற வழக்கு நூலின்
தீபிகா மனத்தி னார்கள் செப்பவது தெரிந்து சொன்னார்.

(இ - ள்) கோபியா - கோபமுற்று, மா - பெரிய, பாவியாம் - பாபிஷ்டனாகிய, இவனை - இந்தச் சத்திய கோஷனை, அரசுநீதி - இராஜ்ஜிய நீதியில், குறைபடாவகையினால் - குறையாத விதமாக, நூலின் படியினால் - சட்டத்தின் பிரகாரம், கடிக - தண்டிக்கக்கடவீராக, என்ன - என்று சொல்ல, நூலின் - இராஜ்ஜியநீதிச் சட்டங்களின் ஆராய்ச்சியினாலே, தீபிகாமனத்தினார்கள் - தீபிகை

போன்ற மனத்தையுடையவர்கள் (அதாவது தீபம்போல பிரகாசம் பொருந்திய மனமுடையவர்கள்), நாபி காலத்தின் - போக பூமியில் நாபி மகாராஜன் ஆள்கையின் காலத்திற்கு, இப்பால் - பிறகு, (அதாவது கருமபூமியானது முதல்), நடக்கின்ற - நடைபெறுகின்ற, வழக்கு - வழக்கமாகிய சட்டத்தில், செய்வது - செய்யக்கூடிய காரியத்தை, தெரிந்து - அறிந்து, சொன்னார் - கீழ்க்கண்டவாறு சொன்னார்கள், எ - று.

நாபி மகாராஜன் கால முதலான காலவேற்றுமைகளையும், அப்போது இந்த க்ஷேத்திரம் போகபூமியான தன்மையையும், பிறகு கர்மபூமியான விவரங்களையும் ஸ்ரீ புராணத்தில் விருஷபஸ்வாமி புராணப் பகுதியில் பார்த்துக்கொள்க. (கூடு)

317. மடித்துவாய் கடித்து மல்லர் முப்பது சவட்டை திண்டோ
ளெடுத்திடா வடித் தெருத்தின் சாணமுத் தாலந் தீற்றிப்
படைத்தமா டனைத்துங் கொண்டிட் டிப்பதி நின்றும் போக
வடித்தலாந் தண்ட மென்று ராசனப் படிச்செய் கென்றான்.

(இ - ள்) மல்லர் - மல்லர்கள், வாய்மடித்து - வாயைமடித்து, கடித்து - பயங்கரமாகக் கடித்துக்கொண்டு, திண்தோள் - வலிமையாகிய கைகளால், எடுத்திடா - தூக்கி, சவட்டைமுப்பது அடித்து - சவட்டை அடியால் முப்பது அடிகளை அடித்து, எருத்தின் - எருதினது, சாணம் - சாணியை, முத்தாலம் - மூன்று சட்டி, தீற்றி - தலைமேலூற்றி, படைத்த - அவனால் சம்பாதிக்கப்பட்ட, மாடனைத்தும் - பொன்களெல்லாவற்றையும், கொண்டிட்டு - நாம் கைக்கொண்டு, இப்பதி நின்றும் - இப்பட்டணத்தினின்றும், போக - அவன் குடியில்லாமல் நீங்கிப்போகும்படியாக, அடித்தல் - அடித்துத் துரத்திவிடுதல், தண்டம் ஆம் - சிக்ஷை ஆகும், என்றார் - என்று சொன்னார்கள், அரசன் - இராஜனானவன், அப்படிச் செய்க - அந்தப் பிரகாரமே செய்வீராக, என்றான் - என்று பணியாளர்க்கு ஆஜ்ஞாபித்தான், எ - று. (கூசு)

318. குனிசிலைக் கடவுள் போலும் கொற்றவன் குறிப்பை நோக்கா
பணையின்வெஞ் சிலைக ளேந்திப் பாடிகாப் பார்கள் சூழ்ந்தார்
நினைவரும் பெரிய செல்வம் நினைப்பதன் முன்னம் நீறாப்
பனியின்முன் மலர்ந்த செந்தா மரைத்தடம் போன்ற தன்றே

(இ - ள்) குனி - வளைந்த, சிலை - கரும்புவில்லையுடைய, கடவுள்போலும் - மன்மதன்போலு மழகையுடைய, கொற்றவன் - அரசனது, குறிப்பை - மனோவபிப்பிராயத்தை, நோக்கா - பார்த்து, பணையின் - திரளாக, வெம் - வெவ்விதாகிய, சிலைகள் - வில் முதலியவைகளை, ஏந்தி - கையில் தாங்கி, பாடிகாப்பார்கள் - சேனையைக்காக்கும் தலைவர்கள், சூழ்ந்தார் - அவ்விடம் சேர்ந்தார்கள், நினை

வரும் - நினைத்தற்கரிய, பெரிய - பெரியதாகிய, செல்வம் - மந்திரியின் செல்வமெல்லாம், நினைப்பதன் முன்னம் - அவ்வாறு அழிக்க எண்ணுவதற்கு முந்தியே, நீறாய் - பஸ்பமாகி, (அதாவது ஒன்றுமில்லாமல்), பனியின் முன் - பனியினது எதிரில், மலர்ந்த - புஷ்பித்த, செந்தாமரைத்தடம் போன்றது - சிவந்ததாமரைத் தடாகத்துக்குச் சமானமானது, எ - று. (கூ௬)

319. மலைமிசைச் சிங்க வேற்றை வருத்துமான் கன்று போலத்
தலைமிசைச் சவட்டை யிட்டுச் சாணகந் தீற்றி யிட்டார்
புலையர்சென் றவனைச் சூழ்ந்து போகென வுரைப்பச் சுற்ற
மலைகடற் கவிழ நாவா யவருற்ற துற்ற தன்றே.

(இ - ள்) (மேற்கூறியபடி சூழ்ந்தவர்கள்) மலைமிசை - பருவதத்தின் மேலே, சிங்க ஏற்றை - ஆண்சிங்கத்தை, வருத்தும் - வருத்துகின்ற, மான் கன்றுபோல - மான் குட்டிகளைப்போல, சவட்டையிட்டு - சவட்டையடித்து, தலைமிசை - அவனது தலையின்மேல், சாணகம் - சாணிக்குழம்பை, தீற்றியிட்டார் - ஊற்றினார்கள், (அதன்மேல்) புலையர் - கீழ்மக்கள், சென்று - சமீபத்திற் சென்று, அவனைச் சூழ்ந்து - அவனை வளைந்து, போகென - நீ இந்நகரத்தை விட்டுப் போகக்கடவாயென்று, உரைப்ப - சொல்ல, (அவன் அவ்வாறே சென்றான்; அப்போது) சுற்றம் - அவனுடைய பந்துக்கள், அலைகடல் - அலைகளையுடைய சமுத்திரத்தில், நாவாய் - கப்பல், கவிழ - கவிழ்ந்துபோக, அவர் - கப்பலிலுள்ளவர்கள், உற்றது - அடைந்த துன்பத்தைப்போன்ற துன்பத்தை, உற்றது - அடைந்தார்கள், எ - று.

'போகென' என்பதில் அகரந் தொக்கது. (கூ௭)

320. முன்பகற் றேவ னென்று மொய்த்துடன் புகழப் பட்டான்
பின்பகற் பேய னென்று பின்செலா திகழப் பட்டான்
அன்புறு மிளமை மூப்பி லரிவையர்க் கொருவ னைத்தான்
முன்புதான் செய்து வந்த விதிமுறை யுதயத் தாலே.

(இ - ள்) (அப்போது) முன்பு - பூருவத்தில், தான் செய்துவந்த - தன்னால் செய்யப்பட்டு வந்த, விதிமுறை - விதிக்கிரமத்தின், உதயத்தாலே - தோற்றத்தினாலே, முன்பகல் - காலையில், (இராஜசபைக்குப் போகும்போது), தேவனென்று - இவனே தெய்வமென்று, மொய்த்து - ஜனங்கள் நெருங்கி, உடன் - அப்பொழுதே, புகழப்பட்டான் - அவர்களால் புகழ்ச்சி செய்யப்பட்டவனாகிய மந்திரி, பின்பகல் - அம்மாலையில், பேயனென்று - பேய்க்குச் சமானமானவன் (அதாவது புத்தி நிலை இல்லாதவன்) என்று, பின் - அவனுக்குப் பின்னே, செல்லாது - ஒருவருஞ் செல்லாமல், இகழப்பட்டான் - அவர்களாலிகழ்ச்சி பண்ணப்

பட்டான், (அதனால்), அரிவையர்க்கு - ஸ்திரீமார்களுக்கு, அன்புறும் இளமைமூப்பில் ஒருவன் ஒத்தான் - அன்பு பொருந்திய இளமைப்பருவத்திலே இனிமையையும் முதுமைப்பருவத்திலே வெறுப்பையும் உண்டாக்கும் ஒருவனை நிகர்த்தான், எ - று. (கஎ)

321. மாயத்தால் செப்பை வவ்வி மந்திரி வணிகன் றன்னைப்
பேயொத்துச் சுழலப் பண்ணிப் பெருந்துயர் முன்னஞ் செய்தான்
மாயத்தாற் செப்புத் தன்கை வாங்கவும் பட்டுப் பின்னைப்
பேயொத்துச் சுழன்று சாலப் பெருந்துயர் தானு முற்றான்.

(இ - ள்) (அவனுடைய அந்நிலைமையைப்பார்த்து) மாயத்தால் - மாயாச்சாரத்தால், செப்பை - இரத்தினச் செப்பை, வவ்வி - அபகரித்து, மந்திரி - மந்திரியானவன், வணிகன்றன்னை - செட்டியாகிய பத்திரமித்திரனை, பேயொத்து - பேய்க்குச் சமானமாக, சுழலப்பண்ணி - அலையும்படி செய்து, பெருந்துயர் - பெரிதாகிய துன்பத்தை, முன்னம் - முன்னால், செய்தான் - பண்ணினான், மாயத்தால் - மாயாச்சாரத்தால், செப்பு - அச்செப்பை, தன்கை - தன்னுடைய கையினின்றும், வாங்கவும் பட்டு - வாங்கி விடவும் பட்டு, பின்னை - பிற்பாடு, பேயொத்து - பேய்க்குச்சமானமாகி, சுழன்று - சுழற்சியுற்று, சால - மிகவும், பெருந்துயர் - பெரிதாகிய துன்பத்தை, தானும் - அம்மந்திரிதானும், உற்றான் - அடைந்தான், எ - று. (கஅ)

322. மணியினால் வணிக னுக்கும் மந்திரி தனக்கும் வந்த
தணிவிலாத் துயரம் பற்றின் றன்மையைச் சாற்றக் கண்டும்
பணிவிலாத் துயர மாக்கும் பற்றினைப் பரியும் நல்ல
துணிவிலா தார்க ளன்றே துயரங்கட் கிறைவ ராவார்.

(இ - ள்) மணியினால் - இரத்தினத்தால், வணிகனுக்கும் - வர்த்தகனாகிய பத்திர மித்திரனுக்கும், மந்திரி தனக்கும் - இம்மந்திரிக்கும், வந்த - வந்துசேர்ந்ததாகிய, தணிவிலா - குறைவில்லாத (அதாவது விலகாத), துயரம் - துக்கமாகிய, பற்றின் - ஆசையினது, தன்மையை - ஸ்வபாவத்தை, சாற்றக் கண்டும் - சொல்லக்கேட்டறிந்தும், பணிவிலா - குறைவில்லாத, துயரம் - துக்கத்தை, ஆக்கும் - உண்டாக்கும், பற்றினை - ஆசையை, பரியும் - கெடுக்கும், (அதாவது நீக்கும்படியான), நல்ல - நன்மையாகிய, துணிவு - நிச்சய ஞானம், இல்லாதார்களன்றே - இல்லாதவர்களே, துயரங்கட்கு - துக்கங்களுக்கு, இறைவராவார் - தலைவராவார்கள், எ - று. (கக)

323. பற்றினைப் பற்றி னாலே பற்றெனப் பற்றி னாரைப்
பற்றுதா னிடும்பை நீருட் பரியட்டந் தன்னை யாக்கும்

ாப பற்றி லாமை பற்றெனப் பற்றி னரைப்
பற்றுவிட் டிடும்பை நீருட் பரியட்ட மொழிக்குங் கண்டீர்.

(இ - ள்) பற்றினை - ஆசையை, பற்றினாலே - ஆசையினாலே, பற்றெனப்பற்றுப்போல உறுதியாக, பற்றினரை - பற்றியவர்களை, பற்றுதான் - அவ்வாசையாகிறபற்றுத்தான், இடும்பை நீருள் - துக்கமாகிற சமுத்திரத்துள், பரியட்டந்தன்னை - பரிவர்த்தனையாகிய ஸம்ஸாரத்தை, ஆக்கும் - உண்டுபண்ணும், பற்றினை - ஆசையை, பற்றிலாமை - பற்றாமையையே, பற்றெனப் - பற்றுப்போல உறுதியாக, பற்றினரை - சேர்ந்தவர்களை, பற்றுவிட்டு - அவ்வாசையாகிற பற்று நீங்கி, இடும்பை நீருள் - துக்க சமுத்திரத்துள், பரியட்டம் - சுழல்வதாகிய மாற்றை, ஒழிக்கும் - நீக்கும், எ - று.

கண்டீர் - முன்னிலை அசை. (௩௦௦)

வேறு.

324. மோக மேபிற விக்குநல் வித்தது
மோக மேவினை தன்னை முடிப்பது
மோக மேமுடி வைக்கெட நிற்பது
மோக மேபகை முன்னை யுயிர்க்கெலாம்.

(இ - ள்) பிறவிக்கு - ஜனனமரண மாகிற ஸம்ஸாரத்துக்கு, நல் - நன்மையாகிய, வித்தது - விதையாவது, மோகமே - மோகநீய கர்மோதயமாகிய ஆசையே, மோகமே - அவ்வித அஞ்ஞானத்தாலாகிய ஆசையே, வினைதன்னை - மற்றெல்லா வினைகளையும், முடிப்பது - சேர்த்துப் பந்திப்ப தாகும், முடிவை - தத்துவத்தின் முடிவாகிய மோக்ஷத்தை, கெட - அடையாமல் கெடும்படி, நிற்பது - தடையாக நிற்பதும், மோகமே - மயக்கமே, முன்னை - அநாதியாக, உயிர்க்கெலாம் - ஸம்ஸார ஜீவன்களுக்கெல்லாம், பகை - சத்துருவா யிருப்பதும், மோகமே - ஆசையினலாம் அறிவில்லா மயக்கமே யாகும், எ - று. (௩௦௧)

325. மோக மேதிரி யக்கிடை யுய்ப்பது
மோக மேநர கத்தில் விழுப்பது
மோக மேமற மாவது முற்றவும்
மோக மேயற மாசுற நிற்பதும்.

(இ - ள்) திரியக்கிடை - விலங்குகதியில், உய்ப்பது - ஜீவன்களைச் சேர்ப்பது, மோகமே - மயக்கமே, நரகத்தில் விழுப்பது - நரகத்தில் தள்ளுவதும், மோகமே - ஆசைக்காரணமாகிய தன்மையே, முற்றவும் - முழுதிலும், மறமாவது - பாபவினையாவது, மோகமே - ஆசையே, அறமாசுற - தர்மம் கெட்டு நீங்கும்படி, நிற்பதும் - இருப்பதும், மோகமே - ஆசையே, எ - று. (௩௦௨)

**326.** மோக மேநிறை யாநிறை யாயது
மோக மேமூ வுலகின் வலியது
மோக மேமுனி மைக்கிடை யூறது
மோக மில்லவர் நல்ல முனிவரே.

**(இ - ள்)** மோகமே - ஆசையே, நிறையா - ஒருகாலும் நிரம்பாத, நிறை யாயது - அளவையுடையது, மோகமே - ஆசையே, மூவுலகின் - மூன்றுலோகத் திலும், வலியது - பலம் பொருந்திய பொல்லாங்கினை யுடையது, மோகமே - ஆசையே, முனிமைக்கு - முனீஸ்வரர் தன்மையினுக்கு, இடையூறது - விக்கின காரியாயிரா நின்றது, மோகமில்லவர் - ஆசையில்லாதவர்கள், நல்ல - நன்மையை யுடைய, முனிவரே - முனி சிரேஷ்டர்களாவார்கள், எ - று. (௧௦௫)

**327.** மேகம் வில்லொடு வீந்தது போலவே
போக மும்கிளை யும்பொரு ளுங்கெடச்
சோக மும்துய ரும்துணை யாகவன்
ஏக நின்றவ ரின்ன வியம்பினார்.

**(இ - ள்)** (இது நிற்க) மேகம் - மேகமானது, வில்லொடு - இந்திர தனுசோடு, வீந்ததுபோல - அழிந்து மறைந்து போவதுபோல, போகமும் - தனது போகமும், கிளையும் - பந்துக்களும், பொருளும் - ஐஸ்வரியமும், கெட - நீங்க, சோகமும் - மனோவருத்தமும், துயரும் - துன்பமும், துணையாக - தனக்குத் துணையாகச் சேர, அவன் - அம்மந்திரியானவன், ஏக - (மேற்கூறியபடி) பட்டணத்தை விட்டுப்போக, நின்றவர் - அக்காலத்தில் நின்ற ஜனங்கள், இன்ன - இத்தன்மையான வார்த்தைகளையே, (அதாவது மேற்கவிகளிற் சொன்னவைகளை), இயம்பினார் - சொன்னார்கள், எ - று.

ஆகவன் என்பதில் அகரந்தொக்கது. (௧௦௬)

**328.** அங்கு நின்றவ னேகலு மாயிடைச
சங்கை தன்முறை யென்று தழுவலு
மெங்கும் வந்திரு ளாய திடர்க்கட
லுங்கி னொடி யும்நெடி தாயதே.

**(இ - ள்)** (அதன் மேல் முன் கூறியபடி துரத்தப்பட்டு) அங்கு நின்று - அந்நகரத்தினின்றும், அவன் - அம்மந்திரியானவன், ஏகலும் - நீங்கிப்போதலும், ஆயிடை - அப்பொழுது, சங்கை - மனச்சங்கையானது (அதாவது பயமானது), தன்முறை என்று - அவனிடத்தே நீங்காமல் இருக்கவேண்டியது தன்னுடைய முறைமை என்று, தழுவலும் - அவனிடத்தே வந்து சேர்தலும், எங்கும் வந்து -

அதனால் அவனுக்கு எவ்விடங்களினும் வந்து (அதாவது பொறிபுலன்களிலெல்லாம் சேர்ந்து), இருளாயது - அந்தகாரம் நிறைந்துவிட்டது, (அதாவது அஞ்ஞானமாகி விட்டது அங்ஙனமாகவே அவன்), இடர்க்கடல் - துக்கமாகிற சமுத்திரத்தில், மூழ்கினன் - முழுகினன், நொடியும் - ஒரு நொடிப் பொழுதும், நெடிதாயது - அவனுக்கு நீண்டகாலமாகத் தோற்றியது, எ - று.

சங்கை என்பதனை மூதேவி என்றும் சிலர் கூறுவர். (௩௨௮)

329. மதலை மாடமும் மன்னிப செல்வமுங்
குதலை மென்மொழி யாரையும் நீத்தவன்
விதலை கொண்டு விழுந்தனன் வேந்தன்மேல்
முதல தாகிய வேரம் முளைத்ததே.

(இ - ள்) (அவ்வாறாகவே) மதலை - தூண்களையுடைய, மாடமும் - மாளிகையையும், மன்னிய - சேர்ந்திராநின்ற, செல்வமும் - ஐஸ்வரியத்தையும், குதலை - மழலை பொருந்திய, மெல் - மிருதுவாகிய, மொழியாரையும் - வசனத்தையுடைய ஸ்திரீமார்களையும், நீத்து - நீங்கி, அவன் - அம்மந்திரி, விதலைகொண்டு - நடுக்கங்கொண்டு, விழுந்தனன் - மூர்ச்சித்து விழுந்தான், (அப்பொழுது) முதலதாகிய - அவனுக்கு முதன்மையாகிய, வேரம் - வைரபாவமாகிய அனந்தானுபந்திக்குரோதபரிணாமம், வேந்தன்மேல் - அரசன்மேல், முளைத்தது - தன் மனதில் பாவகர்மமாக உண்டாகி அதனால் திரவியகர்மம் ஆத்மனோடு பந்தித்தது, எ - று. (௩௨௯)

330. என்று தானிவை யெய்துவ தென்றெழா
நின்ற வார்த்தத்தி னீடிய வாயுளுங்
குன்ற வந்து விலங்கினு ளாயுக
மன்று கட்டிய தாயுவு மற்றதே.

(இ - ள்) (மேலும் அவனுக்கு) என்று தான் - எப்பொழுது தான், இவை எய்துவது - நாம் அடைந்திருந்த இத்தன்மையான ஐஸ்வரியங்களை அடைவது, என்று - என்று, எழாநின்ற - மனதில் உண்டாகாநின்ற, ஆர்த்தத்தின் - இஷ்டவியோகாதி ஆர்த்தத்தியானத்தால், நீடிய - பெரிதாகிய, ஆயுளும் - மனுஷ்யாயுஷ்யமும், குன்ற - குறைய, விலங்கினுள் ஆயுகம் வந்து - திரியக்கதியாயுஷ்யமானது ஆஸ்ரவித்து, அன்று - அப்பொழுது, கட்டியது - அவனைப் பந்தித்தது, ஆயுவும் - மனுஷ்யாயுஷ்யமும், அற்றது (அவனுக்கு) நீங்கிவிட்டது, எ - று. ()

வேறு

331. மிக்கு நின்றெறி விளக்கு வீந்துழி
அக்க ணத்திரு ளடையு மாறுபோல்

மக்க ளாயுகம் மாய்ந்த போழ்தினே
திக்க வாயுகம் சென் றுதித்ததே.

(இ - ள்) மிக்கு நின்று - மிகுதியாக நின்று, எரி - பிரகாசிக்கின்ற, விளக்கு - தீபமானது, வீந்துழி - அவிந்தவிடத்தில், அக்கணத்து - அப்பொழுதே, இருள் - அந்தகாரமானது, அடையுமாறு போல் - சேர்வது போல், மக்களாயுகம் - மனுஷ்யாயுஷ்யம், மாய்ந்தபோழ்தினே - (அவ்வாறு) நீங்கின காலத்திலேயே, திக்கவாயுகம் - திரியக்காயுஷ்யமானது, சென்று - அவனிடத்தே புகுந்து, (அதாவது வந்து), உதித்தது - தோன்றியது, எ - று. (௩0அ)

332. ஆயு வுங்கதி யைம்பொறி புவ்வி
நீச கோதமு நின்று தித்திடப்
போயம் மன்னவன் பொன்ன றையுபா
வாயி னன்பெய ரகந்த னுகுமே.

(இ - ள்) (அவ்வாறு) ஆயுவும் - திரியக்காயுஷ்யமும், கதி - திரியக்கதிநாமமும், ஐம்பொறி - பஞ்சேந்திரிய ஜாதிநாமமும், புவ்வி - திரியக்கத்தியானு பூர்வி நாமமும், நீசகோதமும் - நீசகோத்திரமும், (ஆகிய இக்கர்மங்கள்), நின்று - பந்தித்து நின்று, உதித்திட - உதயஞ்செய்ய, போய் - அம்மந்திரி இறந்துபோய், அம்மன்னவன் - அந்த சிம்மஸேனவரசனுடைய, பொன்னறை - பாண்டாகாரத்தில், பெயர் அகந்தனுகும் - அகந்தனமென்னும் பெயராகின்ற, (அதாவது: பெயரையுடைய), அரவாயினன் - சர்ப்பமாகப் பிறந்தான், எ - று. (௩0௯)

வேறு.

333. அரசன் மேற்கரு விற்பொரு ளாசையின்
மரீஇய மாயத்தின் மந்திரி மற்றிந்த
திரியக் காயினன் றீயவிச் செய்கையை
மருவு வாருள ரோமதி மாந்தரே.

(இ - ள்) அரசன்மேல் - இராஜாவின் பேரிலேற்பட்ட, கருவில் - த்வேஷத்தினுலும், பொருளாசையின் - பொருள்களின் மேலுண்டாகிய ஆசையினுலும், மரீஇய - மருவிய (அதாவது சேர்ந்திரா நின்ற), மாயத்தின் - மாயாச்சாரத்தினுலும், மந்திரி - ஸ்ரீபூதிமந்திரி, இந்த - இப்படிப்பட்ட, திரியக்காயினன் - விலங்கு ஜாதியிற் பிறந்தான், மதிமாந்தர் - புத்திவந்தர்களுள், தீய - பொல்லாங்காகிய, இச்செய்கையை - இப்படிப்பட்ட ராகத்வேஷ மோககாரியத்தை, மருவுவார் - சேர்பவர்கள், உளரோ - உண்டோ, (இல்லை), எ - று.

மற்று - அசை. (௩௰)

வேறு.

334. அளவிலா நிதியை விட்டுப் பிறன்பொரு ளதனை மேவல்
களவுதா னிரண்டு கூறு மியல்புகா ரணங்க டம்மா
லளவிலாப் பொருளுண் டாயும் பிறன்பொருட் கிவற லாதி
களவுதான் கடைய தாகுங் கைப்பொரு ளற்ற வர்க்கே.

(இ - ள்) (மனிதர்) அளவிலா - அளவில்லாத, நிதியை - ஐஸ்வரியத்தை, விட்டு - தம்மிடமிருக்க அதை வைத்துவிட்டு, பிறன் பொருளதனை - அன்னிய னது திரவியத்தில், மேவல் - மனம் பொருந்துதல், களவு - ஸாமான்னியத்தால் களவென்றாகும், தான் - அக்களவுதான், இயல்பு காரணங்கள் தம்மால் - காரிய காரணங்களினால், இரண்டு கூறும் - காரியக் களவென்றும் காரணக் களவென் றும் இரண்டு விதமாகும், (அவற்றுள்), அளவிலாப் பொருளுண்டாயும் - கணக்கி லாத பொருள்கள் தமக்குண்டாகியிருந்தும், பிறன் பொருட்கு - அன்னியனுடைய திரவியத்திற்கு, இவறல் - இச்சிக்கின்றது, ஆதி - முதலிற் கூறப்பட்ட காரியக் களவாகும், கைப்பொருள் - தம் கைப்பொருள், அற்றவர்க்கு - இல்லாதவர்களாகிய தரித்திரர்களிடத்தி லுண்டாகும், களவுதான் - களவானது, கடையதாகும் - இரண்டாவதாகிய காரணக் களவாகும், எ - று. (கககூ)

335. இயல்பினுங் களவி னோர்கட் கினியவாஞ் செய்கை யொன்று
முயலுறு மனத்த ராகி வாங்குவ நிறைய வாங்கிக்
குயலராய்க் கொடுப்ப வெல்லாங் குறையவே கொடுத்த லாகு
முயலுறு ரிவைசெய் யாதே யொருபக லொழிய மேலும்.

(இ - ள்) இயல்பினுங் களவினோர்கட்கு - காரியக்களவை யுடையவர்களுக்கு, இனியவாம் - இனிமையாகிய, செய்கை ஒன்றும் - செய்கைகளில் ஒரு காரிய மேனும், (அதாவது நீதியோடு பொருந்திய காரியங்களில் ஒன்றையேனும்), முய லுறு - செய்ய முயற்சிக்காத, மனத்தராகி - மனத்தையுடையவர்களாகி (அதா வது அநீதி பொருந்திய மனமுடையவர்களாகி), வாங்குவ - தாங்கள் வாங்குமவை களை எல்லாம், நிறைய - அதிகமாக, வாங்கி - கிரகித்து, குயலராய் - லோப புத்தி யுடையவர்களாய், கொடுப்ப எல்லாம் - தங்களால் கொடுக்கப்படும் பொருள்களை எல்லாம், குறையவே - குறைவாகவே, கொடுத்தலாகும் - கொடுத்தல் உரிய தொழிலாகும், இவை செய்யாதே - இப்படிப்பட்ட காரியங்களைச் செய்யாமல், ஒரு பகலொழிய - ஒரு நாளாகிலும் நீங்க, மேலும் - மேலே, (அதாவது மேலும் வேறே காரியங்களில்), முயலுறார் - முயற்சி செய்யமாட்டார்கள், (அதாவது ஒரு நாளேனும் தவறாமல் தினந்தோறும் மோசத் தொழில்களையே புரிவர்), எ - று. ()

336\. மீன்சென்ற நெறியைப் போலும் விரும்பினார் வேட்கை யாதி
தான்சென்ற மனத்து மள்ளர் தாம்பொரு ளதனுக் காகக்
கான்சென்ற நெறியின் மன்றிற் சுருங்கையிற் களவு நூலின்
கூன்கொண்டு தொள்ளை கொள்ளல் காரணக் களவு தானே.

(இ - ள்) வேட்கையாதி சென்ற - பொருளாசை முதலியவை நிறைந்து போய்க் குடியேறிய (அதாவது பொருளாசை மிகுந்த), மனத்து - மனத்தை யுடைய, மள்ளர் தாம் - படர்களானவர்கள், பொருளதனுக்காக - பொருள் சம் பாதித்தற்காக, விரும்பினார் - இச்சித்தவர்களாகி, மீன் சென்ற நெறியைப் போலும் - ஜலத்திலே மஸ்யமானது சென்ற வழியை நிகர்த்த (அதாவது மீன் சென்ற வழியானது எப்படிப் பிறரால் கண்டுபிடிக்க முடியாமல் போகிறதோ அதுபோல பிறரால் கண்டுபிடிக்க முடியாதபடி அமைந்திருக்கின்ற), கான் சென்ற - காட்டில் சென்ற, நெறியின் - கள்ளமார்க்கங்களின் வழியாக, (போய்), மன்றில் - வெளியிலே (இருந்து தோண்டப்பட்ட), சுருங்கையின் - கன்னவாயி லென்னும் கள்ள வழியாக, களவு நூலின் - சோர சாஸ்திரத்தின்படியே, கூன் கொண்டு - விளங்கொடுங்கி உள்ளே நுழைந்து, (அதிரசியாஞ்சனம், நித்ரோத் பாதனம், தாளோத்காடனம் முதலிய மறைவுகளையும் ஆயுதங்களையுங்கொண்டு) கொள்ளை கொள்ளல் - பலவிதமான பொருள்களை அபகரிப்பது, காரணக்களவு - காரணக்களவாகும், எ - று. (கக௩)

337\. பொருளினைப் போக்குஞ் சீர்த்தி தன்னொடும் புகழைப் போக்கும்
அருளினைப் போக்குஞ் சுற்றந் தன்னொடு வாயு போக்கும்
பெருமையைப் போக்கும் பேறு தன்னொடு பிறப்பைப் போக்குந்
திருவினைப் போக்கும் தேற்றந் தன்னொடு சிறப்பைப் போக்கும்.

(இ - ள்) (மேற்கூறிய களவானது அதைச் செய்வாரின்) பொருளினை - ஐஸ்வரியத்தை, போக்கும் - (' திருட்டுடைமை உருட்டிக்கொண்டு போகும் ' என்ற பழமொழிக்கிணங்க) இல்லாமற் போக்கிவிடும், சீர்த்தி தன்னொடு - அழகுடனே, புகழை - கீர்த்தியையும், போக்கும் - போக்கடிக்கும், அருளினைப் போக்கும் - தயவையும் நீக்கும், சுற்றம் தன்னொடு - பந்துக்களுடனே, ஆயு - ஆயுஷ்யத்தையும், போக்கும் - நீக்கும், பெருமையை - மேலான தன்மையை, போக்கும் - நீக்கும், பேறு தன்னொடு - இலாபத்தோடு, பிறப்பை - நற்கதியில் பிறக்கும் பிறப்பையும், போக்கும் - நீக்கும், திருவினை - லக்ஷ்மியை, போக்கும் - நீக்கும், தேற்றந்தன் னொடு - தெளிவொடு, சிறப்பை - பலரால் பூசிக்குந் தன்மையையும் (அதாவது ஞானத்தையும்), போக்கும் - நீக்கும், எ - று. (கக௪)

338\. அங்கத்தைக் களைந்து வீழ்க்கு மருஞ்சிறைப் பிணியை யாக்கும்
வெங்கயத் தடியின் வீழ்க்கும் வெந்துனைக் கழுவி னேற்றித்

தொங்குவித் தொழியுந் தூண்டிற் றோலினை யுரிக்கப் பண்ணும்
கொங்கைகையைக் குறைக்கு மங்கைக் கண்ணினைக் குடையப்பண்ணும்.

(இ - ள்) அங்கத்தை - சரீரத்தின் பிரதானமான அங்கங்களை, களைந்து - சேதித்து, வீழ்க்கும் - விழப்பண்ணும், அரும் - அரிதாகிய, சிறை - நீங்காமையான, பிணியை - வியாதியை, ஆக்கும் - (அவர்களுக்கு) உண்டுபண்ணும், வெம் - வெவ்விதாகிய கோபத்தையுடைய, கயத்து - யானையின், அடியின் - பாதத்தின் கீழ், வீழ்க்கும் - (அவர்களை) வீழ்விக்கும், வெம் நுனை - வெப்பம் பொருந்திய நுனியையுடைய, கழுவின் - கழுவிலே, ஏற்றி - ஏற்றுவித்து, தூண்டில் - தூண்டிலைப்போல (அதாவது: தூண்டில் முள்ளில் அகப்பட்ட மீனைப்போல), தொங்குவித்து - தொங்கும்படி செய்து, ஒழியும் - நீங்கும், தோலினை - (அவர்களுடைய) உடம்பின் தோலை, உரிக்கப்பண்ணும் - உரிக்கும்படி செய்யும், மங்கை - திருபெம் ஸ்திரீகளின், கொங்கையை - தனங்களை, குறைக்கும் - குறைப்பிக்கும், கண்ணினை - நேத்திரத்தை, குடையப்பண்ணும் - ஆயுதமிட்டுக் குடையும் படியாகவுஞ் செய்யும், எ - று. (கக௫)

339. விழுந்தெழு நரகத் துய்க்கும் வெருவுறு விலங்கி லாக்கு
மழிந்ததீக் குலத்தி லுய்க்கு மட்டுணு வகத்து ளாக்கு
மிழிந்ததம் சுற்றத் தார்க்கும் பிச்சையு மிடாமற் காக்கும்
கழிந்தநோ யுடம்பை யாக்குந் தாயருங் கடியப் பண்ணும்.

(இ - ள்) விழுந்தெழு - தலைகீழாக வீழ்ந்து வீழ்ந்தெழுகின்ற, நரகத்துய்க்கும் - நரகத்தில் அவர்களைச் செலுத்தும், வெருவுறு - ஸ்வபாவத்தில் பயத்தையேயடையக் கூடிய, விலங்கிலாக்கும் - திரியக்கதியில் அடையும்படி செய்விக்கும், அழிந்த தீக்குலத்திலுய்க்கும் - கெட்ட பொல்லாங்கான தொழில்களையுடைய சண்டாளாதி குலத்தில் செலுத்தி மனுஷ்யராகப்பண்ணும், அட்டுணு அகத்துளாக்கும் - சமையல் செய்து சாப்பிடவகையில்லாத தரித்திரர் வீடுகளிற் பிறக்கும்படி செய்யும், இழிந்த - குறைந்த, தம் சுற்றத்தார்க்கும் - தம்முடைய பந்துக்களுக்கும், பிச்சையும் இடாமல் - ஒருவரையும் பிச்சை கூடக் கொடுக்கவொட்டாமல், காக்கும் - காவல் செய்யும், கழிந்த - அதிகமாகிய, நோய் - வியாதியையுடைய, உடம்பை ஆக்கும் - சரீரத்தை அவர்களுக்குண்டுபண்ணும், தாயரும் - பெற்ற தாயும், கடியப் பண்ணும் - (அவர்களை) வெறுக்கும்படி செய்விக்கும், எ - று. (ககசு)

340. ஆதலாற் களவ தாகா விருமைக்கு மொருமை யொக்கத்
தீதெலா மாக்கு மென்று தேறுநல் லறத்தைச் செப்பும்
பூதிதா னுதி யாய களவினைப் பொருந்திப் பொல்லா
நீதியா லமைச்சு நீங்கா செல்வமுங் கிளையு நீத்தான்.

(இ - ள்) ஆதலால் - ஆகையினாலே, களவது - திருடானது, ஆகா - யாவர்களாலும் செய்யவும் விரும்பவும் தகாதது, இருமைக்கும் - இம்மைமறுமை இரண்டிலும், தீதெலாம் - பொல்லாங்குகளை எல்லாம், ஒருமை யொக்க - ஒன்றாகப்பொருந்த, ஆக்குமென்று - அக்களவு செய்விக்குமென்று, தேறும், தெளியும் படியான, நல் - நன்மையாகிய, அறத்தை - தருமத்தை, செப்பும் - சொல்கின்ற, பூதிதான் - ஸ்ரீ பூதிமந்திரியானவன், ஆதியாய - இருவகைகளில் முதலாவதாகிய, களவினை - காரியக்களவை, பொருந்தி - சேர்ந்து, பொல்லா-பொல்லாங்காகிய, நீதியால் - தனது நீதியினால், அமைச்சு - மந்திரித் தனத்தையும், நீங்கா - நீங்கி, செல்வமும் - ஐஸ்வரியத்தையும், கிளையும் - பந்துக்களையும், நீத்தான் - இழந்தான், எ - று.

341\. மந்திரி வடிவை யெல்லாம் மன்னவன் மனத்திவ் வாறு
சிந்தியா வியந்து நோக்கா தேறுவ தாரை யென்னா
அந்தணன் றமிலன் றன்னை யவன்பதத் தமைச்ச னாக்கி
மந்திரம் போல நின்று மண்ணினைத் தாங்கு மன்னோ.

(இ - ள்) (அதன்மேல்) மந்திரி - மந்திரியினது, வடிவை எல்லாம் - கபடஸ்வரூபத்தை எல்லாம், மன்னவன் - அரசன், மனத்து - மனதில், இவ்வாறு - இந்தப் பிரகாரம், சிந்தியா - சிந்தித்து, வியந்து - ஆச்சரியமடைந்து, யாரை - இனி எவர்களை, தேறுவது - மந்திரியாகத் தேர்ந்தெடுப்பது, என்னா - என்று, நோக்கா - ஆராய்ந்து பார்த்து, அந்தணன் - பிராமணனாகிய, தமிலன்றன்னை - தர்மிலன் என்பவனை, அவன் பதத்து - அந்த ஸ்ரீ பூதிபதத்திலே, அமைச்சனாக்கி- மந்திரியாக ஸ்தாபித்து, மந்தரம் போல - மகம்மேரு பர்வதத்தைப் போல, நின்று - நடு நிலையில் சலனமின்றி நின்று, மண்ணினை - பூமி இராஜ்ஜியத்தை, தாங்கும் - தரித்து நடத்துபவனாயினன், எ - று. (கக அ)

342\. திரைசெறிந் திலங்கு மாழிப் படிமன்னன் றேவி யோடு
முரைசெறிந் திலங்குங் கீர்த்தி யுவகையி னோடச் செம்பொன்
வரைசெறிந் திலங்குந் திண்டோள் வணிகன்மற் றொருநாள் வாடா
விரைசெறிந் திலங்க திங்க வனஞ்சென்று விரகிற் புக்கான்.

(இ - ள்) (இவ்வாறு) திரை - அலைகள், செறிந்து - சேர்ந்து, இலங்கும் - விளங்கும், ஆழி - சமுத்திரஞ் சூழ்ந்த, படி - பூமியையாளும் படியான, மன்னன்- அரசன், தேவியோடும் - தனது தேவியுடன், உரை செறிந்து - உலகத்தார் வசனங்களிற் சேர்ந்து, இலங்கும் - விளங்குகின்ற, கீர்த்தி - புகழோடும், உவகையின் - சந்தோஷத்தோடும், ஓட - நீதி மார்க்கத்தில் செல்லுகின்ற காலத்தில், செம்பொன்வரை- மகம்மேரு பர்வதம்போல், செறிந்து - சேர்ந்து, இலங்கும் - விளங்குகின்ற, திண்டோள் - வலியதோளையுடைய, வணிகன் - பத்திரமித்திர ஸ்ரேஷ்டியானவன், ஒருநாள் - ஒருதினம், வாடா - குறையாத, விரை - வாசனை, செறிந்து-

நிறைந்து, இலங்கும் - விளங்குன்ற, அதிங்கவனம் - அதிங்கவனத்தில், விரகில் - உத்சாகத்திளுல், சென்று - போய், புக்கான் - புகுந்தான், எ - று. (கககூ)

343. விமலகாந் தார மென்னும் விலங்கலே யிலங்க வேறி
யமலமா யிலங்குஞ் சிந்தை யருந்தவன் வரதன் மாவின்
கமலமா யிலங்கும் பாதம் கைதொழு திறைஞ்சி வாழ்த்தித்
திமிரமாம் வினைக டீரத் திருவற மருள்க வென்ருன்.

(இ - ள்) (அவ்வாறு சென்ற அவன்) விமலகாந்தார மென்னும் - விமல காந்தார மென்னும் பெயரையுடைய, விலங்கலே - (அவ்வனத்தில் உள்ள) பர்வதத்தில், இலங்க - தன் அழகு விளங்க, ஏறி - ஏறிப்போய், அமலமாய் - நிர்மல கரமாகி, இலங்கும் - விளங்கும், சிந்தை - தியானத்தையுடைய, அரும் - அரிதாகிய, தவன் - தபசையுடையவனுன, வரதன்மாவின் - வரதர்ம னென்னும் பெயரையுடைய முனிவரனது, கமல மாய் - தாமரை புஷ்பமாகவே, (அதாவது அதைப் போல), இலங்கும் - விளங்குகின்ற, பாதம் - பாதங்களே, கைதொழுது - கை குவித்து, இறைஞ்சி - வணங்கி, வாழ்த்தி - ஸ்தோத்திரம் பண்ணி, திமிரமாம் - அஞ்ஞானுந்தகாரத்திளுலாகிய, வினைகள் - கர்மங்கள், தீர - நீங்க, திருவறம் - அழகிய ஜின தர்மத்தை, அருள்க - சொல்லக் கடவீராக, என்ருன் - என்று அவ ரிடம் கேட்டான், எ - று. (கஉ0)

344. அறிவுநற் காட்சி காந்தி சாந்திநல் லடக்க மைந்து
பொறிகளிற் செறிவு குத்தி சமிதியும் பொருந்தி யாசை
வறுவிய மனத்துத் தண்டங் காரவஞ் சன்னே வீந்த
உறுதவ னுரைக்க லுற்ரு னுவந்தவன் கேட்க லுற்ருன்.

(இ - ள்) (அவ்வாறு கேட்டபோது) அறிவு-சம்மியக்ஞானமும், நற்காட்சி - சம்மியக் தரிசனமும், காந்தி - சம்மியக் சாரித்திரமும், சாந்தி - உபசாந்தியும் (அதாவது: ப்ரசமம் அல்லது க்ஷமாபரிணுமமும்), நல்லடக்கம் - நன்மையாகிய ஸம்யமமும் (அதாவது பிராணி ஸம்யமம் ஆறும் விஷய ஸம்யமம் ஆறும்), ஐந்துபொறிகளில் செறிவு - பஞ்சேந்திரிய விஷயங்களில் ராகத்வேஷமில்லாமையும், குத்தி - திரிகுப்தியும், சமிதியும் - பஞ்ச சமிதியும், பொருந்தி - ஆகிய இவைகளில் சேர்ந்து, ஆசை - இகபரங்களில் அன்னிய திரவியா பேட்சையை, வறுவிய - நீக்கிய, மனத்து - ஸ்வாத்மத்தியான மனதையுடையவனும், தண்டம் - மனே வாக் காயதண்டங்களும், காரவம் - ரஸ ரித்தி சாதுவென்னும் திரிகாரவங்களும், சன்னே - ஆஹாரபய பரிக்கிரகஸ்திரீ என்னும் சதுஸ்ஸன்னேகளும், வீந்த - நீங் கியவனுமாகிய, உறு - பெரிதாகிய, தவன் - தபசையுடைய வரதர்ம முனிவன், உரைக்கலுற்ருன் - சொல்லத் தொடங்கினுன், அவன் - அப்பத்திரமித்திரன், உவந்து - சந்தோஷித்து, கேட்கலுற்ருன் - கேட்கத் தொடங்கினுன், எ - று. ()

345. கருணையு மறிவு முண்டி யுறையுளு மீதல் காம
மருளிலா விறைவன் பாதம் சிறப்பொடு வணங்கன் மைய
லிருளறத் தெளிதல் வென்றோர்க் கிறைவன தறத்தைச் சீல
மருவிநின் றொழுகல் மாற்றிற் சுழற்றிதீர் மருந்தி தென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லத் தொடங்கிய முனிவன்) கருணையும் - ஸ்தாவர சங்கமாதி சகல ஜீவன்கள்பேரில் தயவும், அறிவும் - ஞானத்திற்குக் காரணமாகிய சாஸ்திரமும், உண்டி - பவித்திராஹாரமும், உறையுளும் - ஆவாஸமும் ஆகிய இந்த நால்வகையாகிய தானங்களை, ஈதல் - பாத்திரமறிந்து கொடுத்தலும், காம மருளிலா - ஆசையு மயக்கமுமில்லாத, இறைவன் - வீதராக சர்வஜ்ஞனுடைய, பாதம் - பாதங்களை, சிறப்பொடு - பூஜையோடு, வணங்கல் - வணங்குதலும், வென்றோர்க்கு - இந்திரிய ராக த்வேஷங்களை ஜெயித்த கணதராதி முனிவர்களுக்கு, இறைவனது - தலைவனாகிய ஸ்வாமியால் சொல்லப்பட்ட, அறத்தை - ஜீவாதி தத்துவ தர்மத்தை, மையல் இருளற - மயக்கமாகிய இருள் நீங்க, தெளிதல் - தெளிவதும், சீலம் - விரதங்களை, மருவிநின்று - சேர்ந்துநின்று, ஒழுகல் - நடக்கின்றதும், (ஆகிய) இது - இந்தத் தானம் பூஜாஸம்மியக்த்வ சீலங்கள் பொருந்திய தன்மை, மாற்றில் - ஸம்ஸாரத்தில் வற்படும், சுழற்றி - சுழற்சியை, தீர் - நீக்குகின்ற, மருந்து - ஔஷதமாகும், என்றான் - என்று சொன்னான், எ-று.

346. வதங்களபன் னிரண்டு மேவி வையகத் துயிர்கட் கெல்லா
மிதஞ்செய்து வருந்தில் வெந்தீ யிடுவெண்ணெய் போன்றி ரங்கிச்
சிதைந்தின்னா தனசெய் தார்க்கு மினியவே செய்து சிந்தைக்
கதங்கடிந் தொழுக னல்லோர் கருணையைக் கொடுத்த லாமே.

(இ - ள) (அவ்வாறுசொல்லி மேலும்) நல்லோர்-ஸம்மியக்த்வத்தையுடையவர்கள், வதங்கள் பன்னிரண்டு மேவி - த்வாதச விரதங்களைப் பொருந்தி, வையகத் துயிர்கட்கெல்லாம் - இவ்வுலகிலுள்ள சகல ஜீவன்களுக்கும், இதஞ்செய்து - நன்மையைச் செய்தும், வருந்தில் - ஜீவன்கள் வருந்துமே யானால், வெந்தீயிடு - வெப்பம் பொருந்திய அக்னியில்வைக்கப்பட்ட, வெண்ணெய் போன்று - வெண்ணெயானது உருகுவதுபோல, இரங்கி - மனதிரங்கியும், சிதைந்து - அறிவு கெட்டுக் கோபித்து, இன்னாதன - துன்பம் தருபவைகளை, செய்தார்க்கும் - தமக்குச் செய்தவர்களுக்கும், இனியவே - நன்மைகளையே, செய்து - செய்தும், சிந்தை - மனதில், கதம் - கோபத்தை, கடிந்து - நீக்கி, ஒழுகல் - நடத்தலும், கருணையை - ஜீவ தயவாகிய அபயதானத்தை, கொடுத்தல் ஆம் - கொடுப்பதாகும், எ - று. ()

347. இங்கியல் மூட மென்னு மிருளினைத் துறந்து கொண்டு
வெங்கதிர் போலத் தோன்றி மெய்ம்மையை விளக்கி நிற்கு

மங்கபூ வாதி நூலி னறிவினைச் செறியச் செய்தன்
மங்கலத் தொழிலி னோர்க்கு மதியினைக் கொடுத்த லாமே.

(இ - ள்) இங்கியல் - இவ்வுலகிற் பொருந்திய, மூடமென்னும் - லோக தேவபாஷண்டமாகிய திரிமூடமென்னும், இருளினை - அந்தகாரத்தை, துறந்து - நீக்கி, கொண்டு - ஆகமஞானங்களைக் கொண்டு, வெம் - விருப்பத்தைச் செய்கின்ற, கதிர்போல - பால சூரியனைப்போல, தோன்றி - உண்டாகி, மெய்ம்மையை - உண்மை ஸ்வரூபத்தை, விளக்கி நிற்கும் - பிரகாசிக்கச் செய்துநிற்கின்ற, அங்க பூவாதிநூலின் - த்வாதசாங்கம் சதுர்த்தச பூர்வ முதலாகிய சாஸ்திரங்களினால், மங்கலத் தொழிலினோர்க்கு - புண்ணியத்தை யடையும் பக்குவிகளுக்கு, அறிவினை - ஸ்ருத ஞானத்தை, செறியச்செய்தல் - சேரும்படியாகச் செய்விப்பது, மதியினைக்கொடுத்தலாம் - அறிவைக் கொடுத்தலாகிய சாஸ்திர தானமாகும், எ - று. (கஉச)

348. உடம்புணர் வொழுக்கங் காட்சி யுவகைநல் லின்பம் வாணாள்
விடங்கொளி வீரம் வீடு மெய்த்தவந் தருமஞ் சீல
மடங்கலு மீந்தா னுண்டி யீந்தவ னதனால் வையத்
துடம்புகொண் டவர்கட் குண்டி போல்வதோ ருதவி யின்றே.

(இ - ள்) உண்டி - பவித்திரமாகிய ஆஹாரத்தை, ஈந்தவன் - கொடுக்கின்ற தாதாவானவன், உடம்பு - சரீரமும், உணர்வு - ஞானமும், ஒழுக்கம் - சாரித்திரமும், காட்சி - தர்சனமும், உவகை - சந்தோஷமும், நல் - நன்மையாகிய, இன்பம் - சௌக்கியமும், வாணாள் - ஆயுஷ்யமும், விடங்கு - அழகும், ஒளி - தேஜஸும், வீரம் - பராக்ரமமும், வீடு - மோக்ஷமும், மெய்த்தவம் - உண்மையாகிய தபசும், தருமம் - தருமமும், சீலம் - சீலாசாரமும், (ஆகிய) அடங்கலும் - இவைகள் முழுமையும், ஈந்தான் - கொடுத்தவனேயாவான், அதனால் - அதனாலே, வையத்து - இவ்வுலகில், உடம்புகொண்டவர்கட்கு - சரீரத்தை எடுத்தவர்களுக்கு, உண்டி போல்வது - ஆகாரத்தைப்போல்வதாகிய, ஒருதவி - வேறொரு உபகாரமானது, இன்று - இலதாகும், எ - று.

விடங்கம் என்பது விடங்கு என விகாரப்பட்டு நின்றது. (கஉரு)

349. ஊனொடு தேனுங் கள்ளு மின்றிநன் றாய வுண்டி
தானுவந் தெவர்க்கு மீதல் தானமாந் தானு மூன்றா
மூனுனுங் கொடுமை யார்க்கு முடன்பட்டு மூனு ணோர்க்கும்
மானமா தவர்க்கு மீதல் வரிசையாற் பெருகு மூன்றாம்.

(இ - ள்) ஊனொடு - மாம்சத்தோடு, தேனும் - மதுவும், கள்ளும் - கள்ளும், (ஆகிய மாம்ஸ மது மத்தியமென்னும் மூன்றும்), இன்றி - இல்லாமல்,

நன்றுய - பவித்திரமாகிய, உண்டி - ஆகாரத்தை, தான் - தாதாவானவன்-உவந்து, சந்தோஷித்து, எவர்க்கும் - யாவர்க்கும், ஈதல் - கொடுப்பது, தானமாம் - ஆஹார தானமாகும், தானும் - அதுவும், மூன்றும் - உத்தமமத்திம ஜகன்னிய பாத்திர பேதத்தால் மூன்று விதமாகும், மூன்றும் - அந்த மூன்றும், ஊனுணும் கொடுமை யார்க்கும் உடன்பட்டு - சம்பந்தப்பட்டு மாம்ஸம் புசிக்கும் அஸம்யத ஸம்மியக் திருஷ்டிகளுக்கும், ஊனுணர்க்கும் - மாம்ஸம் புசிக்காத விரதத்தை பலமாக வுடைய விரதீகன் முதலாகியவர்களுக்கும், மான - பெருமையாகிய குணத்தை யுடைய, மாதவர்க்கும் - மஹாதபசையுடைய முனிவர்களுக்கும், ஈதல் வரிசை யால் - ஆகாரம் கொடுக்கும் கிரமத்திஞலே, பெருகும் - விருத்தியடையும், (அதாவது: சம்பந்தப்பட்டு மாம்ஸம் புசிக்கும் அஸம்யத ஸம்யக் திருஷ்டிகளுக்குக் கொடுப்பது ஜகன்னிய பாத்திரதானமென்றும், மாம்ஸம் புசிக்காத விரதத்தை பலமாகவுடைய விரதீகன் முதலானவர்களுக்குக் கொடுப்பது மத்தியம பாத்திர தானமென்றும், மகாதபசையுடைய முனிவர்களுக்குக் கொடுப்பது உத்தம பாத்திரதானமென்றும் சொல்லப்பட்டு விருத்தியாகும்), எ - று.

இதிற் கூறப்பட்ட அஸம்யத ஸம்யக் திருஷ்டி யாரென்றல் நாலாங் குணஸ்தானவர்த்தி தர்சனீகனுகும். அவன் மூடத்திரயம், அஷ்டமதம், சங்காதி, அஷ்டதோஷம், ஷட் அநாயதநம் என்னும் இருபத்தைந்து மலங்களினீங்கிய சம்மியக்த்துவத்தையுடையவன்; மது, மத்திய, மாம்ஸம் புசிப்பவனல்லன்; அப் படியிருக்க அவனே ஊனுணும் கொடுமையானென்று ஆசிரியர் என்சொன்னு ரென்றல் அவன் ஆப்த, ஆகம, குருக்களை அறிந்தவனும், தத்துவார்த்த சிரத் தானமுள்ளவனும், அஸம்யத னென்கிறதிஞல் விரதமில்லாதவன் ஆகையிஞல் ஊனுணும் கொடுமையானென்ருர்; எப்படியென்றல் அவன் விரதங் கைக்கொள் ளாததிஞலே வெங்காயமுதலான கந்த மூலாதிகளைப் புசிக்கிருன்; கந்த மூலாதி கள் அனந்தஜீவ நிகாயமாய் நிகோத ஜீவன்கள் உற்பத்திக்கு ஸ்தானமாயிருப்ப தால் அவற்றை அவன் தின்கிறதிஞலே ஊனுணும் கொடுமையானென்று சொல் லப்பட்டான்; அவனுக்கு ஆகாரமளிப்பது மேற்கூறியபடி ஜகன்னிய பாத்திர தானமாகும்; இப்படி அஸம்யதஸம்யக் திருஷ்டியே ஜகன்னிய பாத்திரமாயிருக் கின் மித்தியா திருஷ்டி, மிலேச்சன் முதலாகிய பேர்களுக்குத் தானங் கொடுக்கக் கூடாதே யெனின் அவர்களுக்கும் கொடுக்கலாம். ஆனல் அது பாத்திரமாகாது. அப்படியிருந்தும் அது கொடுக்கலாமென எவ்வாறு ஏற்பட்டதெனின் ஜீவதயவி ஞல் ஸ்தாவரஜங்கமாதி சமஸ்த ஜீவன்களையும் ரக்ஷிக்கவேண்டும்; எல்லாவற்றிற் கும் உபகாரம் பண்ணவேண்டும் என்று ஜினேஸ்வரர் கூறியருளியபடியிஞலே அவ்வாறு ஏற்பட்டது. ஆதலின் அவர்களுக்கு ஆகார மளிக்கலாம்; அந்தப்பாத் திரயோக்கிய மல்லாத தானத்தின் பலனை ஆசிரியர் அடுத்தபாடலில் தெரிவிக் கிருர். ஸம்யக்த்துவத்தின் விவரங்களை பதார்த்தஸாரம் ஸம்மியக்த்துவாதிகாரத் தில் கண்டு கொள்க. உடன்படும் என்பதில் உம்மை - அசை. (கஉ௬)

350. புலைசுண்பா னுண்ட வுண்டி வலியினு லுயிரைப் போற்றின்
மலையினும் பெரிய வுண்டி வலியினு லுயிரைச் சால
நலியுமேல் நரகத் தாழ்த்து நடலைகள் படுமென் ருலிப்
புலைசுண்பார்க் குண்டி யீத னன்றுமா மன்று மாமே.

(இ - ள்) புலைசுண்பான் - மாம்ஸம் தின்பவன், உண்ட - புசித்த, உண்டி வலியினால் - ஆகாரத்தினுடைய சத்தியினால், உயிரை - ஜீவன்களை, போற்றின் - தயவுவந்து ரக்ஷிப்பானேயாமாகில், (அதனால் வரும் புண்ணியம்), மலையினும் பெரிய - தாதாவுக்குப் பர்வதத்தைப் பார்க்கிலும் பெரியதாகும், உண்டி - ஆகாரம் புசித்த, வலியினால் - சக்தியினால், உயிரை - ஜீவன்களை, சால - மிகவும், நலியுமேல் - வருத்துவானேயாமாகில், நரகத் தாழ்த்தும் - நரகத்தில் ஆழ்த்தும்படியான, நடலைகள் - பாபங்கள், படும் - தாதாவுக்கும் உண்டாகும், (என்று சாஸ்திரம் கூறுகின்றது) என்றால் - அது இவ்வாறென்று சொல்லுமிடத்தில், இப்புலைசுண்பார்க்கு - இந்த மாம்ஸம் தின்பவர்களுக்கு, உண்டி - ஆஹாரத்தை, ஈதல் - தானஞ் செய்வது, நன்றுமாம்-நல்லதாகவுமாகும், அன்றுமாம்-பொல்லாததாகவுமாகும், எ-று.

351. அகதிக ளறத்தி னின்ரு ரரும்பிணி யாளர் மூத்தார்
குகதிகள் குருடர் மூகர் கொலைத்தொழில் மனத்து மில்லார்
அகல்கையி னேந்தி னேருக் கருளினு லீந்த வுண்டி
மகரிகை மலிந்த பூணுய் மத்திம தான மாமே.

(இ - ள) அகதிகள் - வறுமையுற்றவர்களும், அறத்தினின்ரூர் - விரதத்தோடு கூடப்பட்ட தர்மஸ்தர்களும், அரும் - அரிதாகிய, பிணியாளர், வியாதியஸ்தர்களும், மூத்தார் - விருத்தர்களும், குகதிகள் - நடக்கவியலாத முடவர்களும், குருடர் - அந்தகர்களும், மூகர் - ஊமைகளும், கொலைத்தொழில் - ஜீவவதை செய்யும் தொழிலை, மனத்துமில்லார் - மனத்தினாலும் நினைக்காத அஹிம்ஸாவிரதத்தையுடையவர்களும், அகல் - பிக்ஷாபாத்திரத்தை, கையில் ஏந்தினேருக்கு - கையில் தரித்தவர்களும் ஆகிய இவர்களுக்கு, அருளினால் - தயவினால், ஈந்த - கொடுக்கப்பட்ட, உண்டி - ஆஹாரமானது, மலிந்த - நிறைந்த, மகரிகை - மகரகண்டிகையென்னும், பூணாய் - ஆபரணத்தை யணிந்திரா நின்ற பத்திரமித்திரனே!, மத்திம தானமாம் - மத்தியம தானமாகும், எ - று. (கஉஅ)

352. உறவினைப் பெரிது மோம்பி யொழுக்கத்தை நிறுத்தி யுள்ளம்
பொறிவழி படர்ச்சி நீக்கிப் பிறர்க்குநன் ருற்றிப் பொய்தீர்
நெறியினைத் தாங்கி நீங்கா வீட்டின்பம் விழைதல் செய்பு
முறுதவர்க் கீந்த வெல்லா முத்தம தான மாமே.

(இ - ள்) உறவியை - ஜீவன்களை, பெரிதும் - மிகவும், ஓம்பி - பாது காத்து, ஒழுக்கத்தை - ஸாமாயிகாதி சாரித்திரத்தை, நிறுத்தி - தன்னிடத்தி லிருத்தி, உள்ளம் - மனமானது, பொறிவழி - பஞ்சேந்திரிய வழிகளில், படர்ச்சி - செல்வதை, நீக்கி - செல்ல வொட்டாமல் பரிகரித்து, பிறர்க்கு - அன்னியர்க ளுக்கு, நன்றாற்றி - நன்மையையே செய்து, பொய்தீர் - குற்றந்தீர்ந்த, நெறி யினை - சன்மார்க்கமாகிற இரத்தினத்திரயத்தை, தாங்கி - தரித்து, நீங்கா - ஒரு காலும் நீங்குதலில்லாத, வீட்டின்பம் - மோக்ஷ சௌக்கியத்தை, விழைதல் செய் யும் - இச்சிக்கும், உறு - பெரிதாகிய, தவர்க்கு - தவசையுடைய மகா முனிவர்க ளுக்கு, ஈந்த வெல்லாம் - கொடுக்கப்பட்டவைக ளெல்லாம், உத்தம தானமாம் - உத்தம தானமாகும், எ - று. (கஉக)

353. ஊனொடு தேனுங் கள்ளு முவந்தவை பிறவு மீதற்
றானமென் றுரைத்துத் தம்மைக் கொன்றுயிர்க் கூனை யீவார்
தானமுந் தயாவு மெல்லாந் தாங்கண்ட வாறு காண்க
வீனமென் றாலுங் கேளா ரியல்புவே றுலகத் தாரே.

(இ - ள்) ஊனொடு - மாம்ஸத்தோடு, தேனும் - மதுவும், கள்ளும் - கள்ளு முதலாகிய அந்த ஜீவநிகாய வஸ்துக்களையும், உவந்தவை - அவையல்லாமலும் ஏற் றுக்கொள்பவர் சந்தோஷிப்பவைகளான, பிறவும் - இன்னம் அனேக வஸ்துக் களையும், ஈதல் - கொடுப்பது, தானமென்று - தானமாகு மென்று, உரைத்து - சொல்லி, தம்மை - தங்களையும், கொன்று - கொலை செய்து, உயிர்க்கு - அன்னிய ஜீவர்களுக்கு, ஊனை - மாம்ஸத்தை, ஈவார் - கொடுப்பவர்களாற் செய்யப்பட்ட, தானமும் - தானமும், தயாவும் - தயவும், எல்லாம் - ஆகிய இவைகளையெல்லாம், தாங்கண்டவாறு காண்க - தாங்கள் கண்டபடியே காண்க, இயல்பு - இயற்கை யானது, வேறு - வேறாகிய, (அதாவது ஸ்வபாவ குணத்தை [தத்துவ ஞானத்தை] யறிதலைவிட்டு விபாவகுணத்தை யடைந்து அஞ்ஞானிகளாகிய), உலகத்தார் - இவ்வுலகத்திலுள்ளவர்கள், ஈனமென்றாலும் - இவ்வித அயோக்கியமாகிய தானம் குறைவான காரியமென்று சொன்னாலும், கேளார் - கேட்கமாட்டார்கள், எ - று.

354. அனகமா யனந்த மாய குணம்புணர்ந் தார்வ மாதி
தனையிலா தியல்பி னின்றான் றன்மையைத் தன்கண் வைத்து
நினைதலுக் கேது நல்ல சிறப்பது வினையை நீக்குங்
கனலிசேர் கனகந் தன்கண் காளத்தைக் கழற்று மாறே.

(இ - ள்) அனகமாய் - பாபரஹிதமாகி, அனந்தமாய - முடிவில்லாத, குணம் - ஞானாதி குணங்களை, புணர்ந்து - சேர்ந்து, ஆர்வமாதி - ராகத்வேஷாதி களின் கூட்டம், இலாது - இல்லாமல், இயல்பின் - ஸ்வபாவத்தில், நின்றான் -

நின்ற சர்வஜ்ஞனுடைய, தன்மையை - ஸ்வரூபத்தை, (மனிதன்) தன் கண் - தன்னிடத்தில், வைத்து - ஸ்தாபித்து, நினைதலுக்கு - தியானிப்பதற்கு, எது - காரணமானது, நல்ல - நன்மையாகிய, சிறப்பு - பூஜையாகும், அது - அத்தன்மை யானது, வினையை - கருமங்களை, கனலி - அக்கினியானது, சேர் - தன்னிடத்தில் சேரப்பட்ட, கனகம் தன் கண் - ஸ்வர்ணத்தினிடத்தேயுள்ள, காளத்தை - கிட்டகாளிதத்தை, கழற்றுமாறு - நீக்குவதுபோல, நீக்கும் - கெடுக்கும், எ - று.

தினை - சாரியை. (கரு௪)

355. இறைவனு முனியு நூலு மியாதுமோர் குற்ற மில்லா
நெறியினைத் தெளிதல் காட்சி யாமது நிறுத்தும் வீட்டி
னிறுகுமெண் மயமு மூட மாறு தீவினய மின்றி
நெறிவிளக் குறுத்த லாதி யெட்டங்க நிறைந்த தென்றான்.

(இ - ள்) இறைவனும் - ஸ்வாமியையும், (அதாவது ஆப்தன் அல்லது பரமாத்ம ஸ்வரூபியையும்), முனியும் - குருக்களையும் (அதாவது அந்தராத்ம ஸ்வரூபிகளையும்), நூலும் - சகல பதார்த்தங்களினது ஸ்வரூபத்தைச் சொல்லும் பரமாகமத்தையும், யாதும் - எதிலும், ஓர் குற்றமில்லா - ஒரு குற்றமுமில்லாத, நெறியினை - யதா ஸ்வரூபத்தையும், தெளிதல் - தெளிகின்றது, காட்சியாம் - ஸம்மியக் தரிசனமாகும், அது - அந்தத்தெளிந்த தன்மையே (அதாவது ஸம்மியக் துவமே), வீட்டின் - மோக்ஷத்தில், நிறுத்தும் - ஸ்தாபிக்கும், (இன்னும் அந்த ஸம்மியக்த்வமானது), இறுகும் - சேர்ந்திரா நின்ற, எண்மயம் - அஷ்டமதமும், மும்மூடம் - திரிமூடமும், ஆறு தீவினயம் - அவிநயமாறும் (ஆகிய இவைகள்), இன்றி - இல்லாமல், நெறி விளக்குறுத்தலாதி - மார்க்கப் பிரபாவனை முதலாகிய, எட்டங்கம் - அஷ்டாங்கங்களினால், நிறைந்தது - நிறைவு பெற்றதாகும், என்றான் - என்றும் சொன்னான், எ - று.

ஸம்மியக்த்வம் அல்லது ஸம்மியக் தரிசனம் என்பதனையும், இதனது தோஷங்களையும், அங்கங்களையும் பதார்த்த சாரத்தில் ஸம்மியத்து மாக்கனுதிகாரத்தில் விரிவாகக் காணலாம். (கரு௫)

வேறு.

356. பெரியகொலை பொய்களவு பிறர்மனையி லொருவல்
பொருள்வரைதல் மத்தமது புலைசுணவி னீங்கல்
பெரியதிசை தண்டமிரு போகம்வரைந் தாடல்
மரீஇயசிக்கை நான்குமிவை மனையறத்தார் சீலம்.

(இ - ள்) பெரிய கொலை - த்ரஸ ஜீவவதை, பொய் - பொய், களவு - திருட்டு, பிறர் மனையில் ஒருவல் - அன்னிய ஸ்திரீகளைச்சேரல் ஆகிய இவற்றி

ளின்றும் நீங்குகின்றதும், பொருள் - பரிக்கிரஹ வஸ்துக்களை, வரைதல் - மிதம் பண்ணுவதும், (ஆகிய இந்த அஹிம்ஸா, ஸத்திய, அஸ்தேய, பிரம்மசரிய, பரிமித பரிக்கிரகமென்னும் பஞ்சாணு விரதங்களும்), மந்தம் - கள்ளும், மது - தேனும், புலைசு - மாம்ஸமும், (ஆகிய இந்த மது மத்திய மாம்ஸங்களை), உணவில் - உண்பதினின்றும், நீங்கல் - நீங்குகின்றதும், பெரிய - பெரிதாகிய, திசை - திக் விரதமும், தண்டம் - அனர்த்த தண்டவிரதமும், இருபோகம் வரைந்தாடல் - போகோப போகங்களை மட்டும் பண்ணுகிற போகோப போக பரிமாண விரதமும், (ஆகிய குணவிரத மூன்றும்), மரீஇய - சேர்ந்திரா நின்ற, சிக்கை நான்கும் - தேசாவகாசிகம் ஸாமாயிகம் ப்ரோஷதோபவாஸம் அதிதிஸம் விபாக மென்னும் நாலுவிதமான சிக்ஷாவிரதமும், (ஆகிய) இவை - இந்தத்வாதச விரதங்கள், மனையறத்தார் - இல்வாழ்க்கை தர்மத்தையுடையவர்களின், சீலம் - பொதுவான சீலமாகும் (என்றும் கூறினான்), எ - று.

இவற்றில் பஞ்சாணு விரதமும், மது மத்திய மாம்ஸ நிவிர்த்தியும் விரதமென்றும், மூலகுணமென்றுஞ் சொல்லப்படும். பின்னல் சொல்லப்பட்ட குணவிரத த்ரயமும், சிக்ஷாவிரத சதுஷ்டயமும் சேர்ந்து சீலாச்சார ஸப்தகமென்று சொல்லப்படும். இவைகளைப் பதார்த்த ஸாரம் ஸம்யம மார்க்கணை என்னும் அதிகாரத்தில் விரிவாகக் காணலாம். (கஙங)

மூன்றாவது :

பதத்திரமித்திரன் அறங்கேள்விச் சருக்கம் முற்றுப்பெற்றது.



நான்காவது :

## பூரணசந்திரன் அரசியற் சருக்கம்.

357. அமிர்தகர னொளியின்முனி யறவுரைசென் றெறிப்பத்
திமிரமென நின்றவினை தீர்த்தெழுந்த மதியிற்
குமுதமென மலர்ந்துவத மாற்றுவன கொண்டே
யமலனடி மனக்கமலத் தருக்கனில்வைத் தெழுந்தான்.

(இ - ள்) (முன் சருக்கத்திற் கூறியபடி முனிவர் தருமோபதேசம் செய்த பின்னர்) முனி - அந்த வரதர்ம முனீஸ்வரனது, அறவுரை - தருமவசனமானது, அமிர்தகரனொளியின் - சந்திரனது பிரகாசத்தினால், (மலர்ந்த) குமுதமென - அல்லிமலரைப்போல, சென்று - பத்திரமித்திரனிடஞ் சென்று, எறிப்ப - பிரகாசிக்க, திமிரமென - அந்தகாரம்போல, நின்ற - நிலைபெற்ற, வினை - மித்தியாத்துவ பிரகிருத வினையை, தீர்த்து - நீக்கி, எழுந்த - உதயமாகிய, மதியின் - அறிவினாலே, மலர்ந்து - விளங்கி, வதம் - விரத சீலங்களில், ஆற்றுவன - தன் சக்திக்குத் தக்கவற்றை, கொண்டு - கைக்கொண்டு, மனக்கமலத்து - தனது ஹிருதயமாகிற தாமரைப் புஷ்பத்தில், அமலன் - மலமில்லாத சர்வக்ஞனது, அடி - பாதத்தை, அருக்கனில் - ஸூர்யனைப்போல, வைத்து - தரித்து (ஸ்தாபித்து), எழுந்தான் - (அப்பத்திரமித்திரன்) எழுந்திருந்தான், எ - று. (க)

358. எழுந்துமுனி யிருகமல பாதந்தொழு தேத்திச்
செழுங்கனக மாடமிசைச் சீயபுரம் புக்கு
முழங்கியெழு முகிலிற்பொருண் முழுதும்வறி யோர்க்கு
வழங்கமனத் தழுங்கியுரைத் தாளவன்றன் மாதா.

(இ - ள்) எழுந்து - (அப்படி) எழுந்திருந்து, முனி - முனிவரனுடைய, இரு - இரண்டாகிய, கமலம் - தாமரைப்புஷ்பம் போன்ற, பாதம் - பாதங்களை, தொழுது - வணங்கி, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, செழும் - செழுமைபெற்ற, கனகம் - ஸ்வர்ணங்களையுடைய, சீயபுரம் - சிம்மபுரத்திலுள்ள, மாடமிசை - தனது உப்பரிகையில், புக்கு - அடைந்து, முழங்கி - கர்ஜித்து, எழு - எழும்பி மழையைப்பொழிகின்ற, முகிலில் - மேகத்தைப்போல, பொருண் முழுதும் - தனது திரவிய முழுமையும், வறியோர்க்கு - ஏழைகளுக்கு, வழங்க - தியாகமாகக் கொடுக்க, அவன்தன் - அப்பத்திரமித்திரனது, மாதா - தாய், மனத்து - மனத்தில், அழுங்கி - வருத்தமடைந்து, உரைத்தாள் - (கீழ்க்கண்டவற்றை அவனிடம்) கூறினாள், எ - று. (உ)

359. குலம்பெரிய குணமறிவு வடிவுகுடிப் பிறப்பு
பொலங்கையுடை யவர்க்கலது புகழ்ச்சியினி தடையா
இலங்குமனை யாளும்பொரு ளில்லவிடத் திகழு
மலங்கல்வரை மார்பபொரு ளாதலினி யழியேல்.

(இ - ள்) அலங்கல் - அசையுமாலையை யணிந்திராநின்ற, வரை மார்ப - விசாலித்த பர்வதம் போன்ற மார்பையுடைய குமாரனே!, குலம் - நல்லகுலமும், பெரியகுணம் - நற்குணமும், அறிவு - ஞானமும், வடிவு - நல்லவடிவும், குடிப்பிறப்பு - உயர்குடிப்பிறப்பும், புகழ்ச்சி - கீர்த்தியும், பொலம் - பொன்னை, கையுடையவர்க்கு - கையில் இருப்பாக (ஸ்திதியாக) உடைந்தான்வாகளுக்கு, அல்லது - அல்லாமல், இனிது - இனிதாக, அடையா - அடையமாட்டா, பொருள் - திரவியம், இல்லவிடத்து - இல்லாதவிடத்தில், இலங்கு - விளங்காநின்ற, மனையாளும் - பெண்சாதியும், இகழும் - புருஷனை இகழ்ச்சி செய்வாள் (மதிக்காள்), ஆதல் - ஆகையினால், பொருள் - கைவசமாயுள்ள பொருள்களை, இனி - இனிமேல், அழியேல் - நீ அழிக்காதே, (என்று சொன்னாள்), எ - று. (௯)

360. காதன்மிகு தாய்மொழியி லாதரமொன் றின்றிப்
போதரவெ ணாதுபொருண் முழுதுமவ னீயக்
கோதமெரி போன்றவனை கொல்லும்படி சூழ்ந்து
தீதுதனக் காக்கிமனஞ் சிதைந்தொழுகும் வழிநாள்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லியும்) காதன்மிகு - வாஞ்சை மிகுந்த, தாய்மொழியில் - தனது தாயின் வசனத்தில், ஆதரமொன்றின்றி - பிரீதி சிறிதும் இல்லாமல், போதரவு - (அப்பொருளைக்) காப்பாற்றுதலை, எணாது - நினைக்காமல், பொருண்முழுதும் - தன்னுடைய திரவிய முழுவதையும், அவன் - அந்தப் பத்திரமித்திரன், ஈய - இரப்போர்க்குக் கொடுத்துவிட, கோதம் - குரோதத்தினால், (தாயானவள்) எரிபோன்று - அக்கினிக்குச் சமானமாகி, அவனை - அக்குமாரனை, கொல்லும்படி - கொலை செய்யும்படியாக, சூழ்ந்து - நினைத்து, தீது - பொல்லாங்காகிய பாபகர்மத்தை, தனக்கு - தனது ஆத்மனுக்கு, ஆக்கி - உண்டுபண்ணி, மனம் - மனதானது, சிதைந்து - கெட்டு, ஒழுகும் நாள் வழி - செல்கின்ற காலத்தில், எ - று.

'வழி நாள்' என்பதை, 'நாள் வழி' என மாற்றவேண்டும்; வழி - இடப்பொருளைக் காட்டும் ஏழனுருபு. (௰)

361. ஆங்கவன்றன் சொன்மறுத்த வழற்சியினும் பொருள்க
ணீங்கவெழு மார்த்தத்தினு மவ்வுடம்பு நீத்துப்

பூங்குழலி யோங்கிய வதிங்கவனம் புக்கு
வேங்கைமக வாய்மகன்கண் வேரத்தொடும் பிறந்தாள்.

(இ - ள்) ஆங்கவன் - அங்கே அந்தப் பத்திரமித்திரன், தன்சொல் - தனது வசனத்தை, மறுத்த - தடைசெய்த, அழற்சியினும் - கோபத்தினாலும், பொருள் - திரவியங்கள், நீங்க - நீங்குதலாலே, எழு - உண்டாகிய, ஆர்த்தத்தினும் - ஆர்த்தத்தியானத்தாலும், பூம் - பொலிவுபெற்ற, குழலி - அளகத்தையுடையதாயாகிய சுமித்திரையானவள், அவ்வுடம்பு - அச்சரீரத்தை, நீத்து - விட்டு, ஓங்கிய - உன்னதமாகிய, அதிங்கவனம் - அதிங்கவனத்தில், புக்கு - அடைந்து, வேங்கைமகவாய் - புலிக்குட்டியாகி, மகன்கண் - புத்திரன் பேரில், வேரத்தொடும் - வைராபாவத்தோடு, பிறந்தாள் - உற்பவித்தாள், எ - று. (௫)

வேறு.

362. அருளினு லுயிர்கட் கீந்த வப்பொரு ணிமித்த மாக
வெருவினுன் மயங்கி வாழும் விலங்கிவிவ் வேழைத் தோற்ற
மிருளிலாந் தேவர் கோயிற் கிட்டதோர் விளக்கின் மேலே
மருளினுல் விட்டிற் பாய்ந்து மரித்ததே போல்வ தொன்றே.

(இ - ள) அருளினுல் - சீவதயவினுல், உயிர்கட்கு - அன்னிய ஜீவர்களுக்கு, ஈந்த - கொடுக்கப்பட்ட, அப்பொருள் - அந்தத் திரவியமே, நிமித்தமாக - காரணமாக, வெருவினுல் - பயத்தோடு, மயங்கி - பிரமித்து, வாழும் - வாழுகின்ற, விலங்கில் - விலங்கு கதியில், (தோன்றிய) இவ்வேழை - இந்த அஞ்ஞானியாகிய சுமித்திரையின், தோற்றம் - இந்தத்தோற்றமானது, இருளிலா - அந்தகாரமில்லாத, தேவர் கோயிற்கு - ஸ்வாமி கோயிலுக்கு, இட்டது - இடப்பட்டதாகிய, ஓர் - ஒரு, விளக்கின்மேல் - தீபத்தின்பேரில், மருளினுல் - மயக்கத்தினுல், விட்டில் - விட்டில் பூச்சியானது, பாய்ந்து - விழுந்து, மரித்தது - இறந்ததை, போல்வது - ஒப்பானதாகிய, ஒன்று - ஒரு காரியமாம், எ - று. (௬)

363. அப்பச்சக் காண மாய கோபலோ பத்தி னுலே
செப்பட்ட பிறவி யாளவ் வனத்திடைத் திரியு நாளுட்
கைப்பட்ட பொருளை யெல்லாங் கருணைபா லீயு மந்த
மெய்ப்பட்ட புகழி னுனவ் வனத்திடை விரகிற் புக்கான்.

(இ - ள்) அப்பச்சக் காணமாய - அப்பிரத்தியாக்கியான மென்னும், கோபலோபத்தினுலே - குரோதமான மாயாலோபத்தினுலே, செப்பு - முன் சொல்லப்பட்ட, அட்ட - கொடுமையான, பிறவியாள் - பிறப்பை யுடையவளாகிய சுமித்திரை, (அவ்வாறு புலியாய்), அவ்வனத்திடை - அந்தக்காட்டில், திரியுநாளுள் -

திரிகின்ற காலத்தில், கைப்பட்ட - தன் கையிலுண்டாகிய, பொருளை யெல்லாம்-திரவியங்களை யெல்லாம், கருணையால் - தயவினால், ஈயும் - கொடுக்கும், அந்த - அந்த, மெய்ப்பட்ட - உண்மையாகிற, புகழினான் - கீர்த்தியையுடைய பத்திரமித்திரன், அவ்வனத்திடை - அந்நாட்டில், விரகில் - உற்சாகமாக, புக்கான் - அடைந்தான், எ - று. (எ)

364. காரணந் தானொன் றின்றிக் கருமத்தின் பெருமை யாலே
வாரணிந் திலங்குங் கொங்கை மங்கைய ரோடவ் வள்ளல்
தாரணி சோலைக் குன்றந் தன்னுளே திரியும் போழ்தின்
வேரின்றி லங்குஞ் சிந்தை வேங்கைநின் றதனைக் கண்டான்.

(இ - ள) (அவ்வாறடைந்து) காரணந்தான் - காரணமானது, ஒன்று - யாதொன்றும், இன்றி - இல்லாமல், கருமத்தின் - கருமத்தினது, பெருமையாலே - மிகுதிப்பாட்டினாலே, வார் - ரவிக்கையை, அணிந்து - தரித்து, இலங்கும் - விளங்கும், கொங்கை - ஸ்தனங்களையுடைய, மங்கையரோடு - ஸ்திரீகளோடு, அவ்வள்ளல் - அவ்வீகைத்தன்மையுடைய பத்திரமித்திரன், தார் - பூங்கொத்துக்களையுடைய, அணி - அழகுபெற்ற, சோலை - தோப்புகளையுடைய, குன்றம் தன்னுளே - பர்வதத்திலே, திரியும்போழ்தில் - திரிகின்ற காலத்தில், வேரின்று - வைரபாவத்தோடு கூடிநின்று, இலங்கும் - விளங்கும், சிந்தை - மனத்தையுடைய, வேங்கைநின்றதனை - அவ்விடத்தில் நின்றதாகிய அப்புலியை, கண்டான் - பார்த்தான், எ - று. (அ)

365. கண்டவன் பெயரு மெல்லைக் கடியதோர் பசியி னாலும்
எண்டிசை யவரு நிற்ப வெழுந்தவே ரத்து மோடி
விண்டெரி விளக்கின் மேலே விட்டில்பாய்ந் திட்ட தேபோல்
தண்டிவர் தோளி னான்மேற் றாய்ப்புலி பாய்ந்த தன்றே.

(இ - ள) கண்டவன் - (மேற்கூறியபடி புலியைப்) பார்த்த அவன், பெயருமெல்லை - அதைவிட்டு நீங்கிச்செல்லுங் தருணத்தில், கடியது - தீவிரமுள்ளதாகிய, ஓர் - ஒப்பற்ற, பசியினாலும் - பசி வேதனையாலும், எழுந்த - (அவனைக்கண்ட மாத்திரத்தில்) உண்டாகிய, வேரத்தும் - வைரபாவத்தினாலும், ஓடி - விரைந்து சென்று, விண்டு - மிகுதியாக ஒளிவிட்டு, எரி - எரிகின்ற, விளக்கின்மேல் - தீபத்தின்மேல், விட்டில் - விட்டிலானது, பாய்ந்திட்டதேபோல் - பாய்ந்து அதனை அவிப்பதைப்போல, எண்டிசையவரும் - அஷ்டதிக்கிலுள்ளவர்களும், நிற்ப - இருக்க, தண்டு - ஸ்தம்பம், இவர் - (அவற்றின் திரட்சியையும் அழகையும் பெறும்பொருட்டு) விரும்புகின்ற, தோளினான்மேல் - தோள்களையுடைய பத்திரமித்திரன்மேல், தாய்ப்புலி - முன்னே சுமித்திரையென்னும் தாயாயிருந்த புலியானது, பாய்ந்தது - பாய்ந்து அவனைக்கொன்றது, எ - று (கூ)

366. வேபியா பசியின் வாடி விழுமுயிர்க் கீயக் கண்டு
கோபியா வஞ்ச நெஞ்சிற் கருணையொன் றின்றிச் செத்துந்
தீபியாப் பிறந்து நின்று மகனையுந் தின்ற விந்தப்
பாபியைப் போல கில்லார்க் கருணைபைப் பயில்கை நன்றே.

(இ - ள்) வேபியா - வருத்துகின்ற (சுடுகின்ற), பசியின் - பசியினால், வாடி - வாட்டமுற்று, விழும் - சோர்கின்ற, உயிர்க்கு - (வறுமையுற்ற) ஜீவர்களுக்கு, ஈய - (வேண்டியவற்றைக்) கொடுக்க, கண்டு - அதைப் பார்த்து, கோபியா - மிகுதியான குரோதமுற்று, வஞ்சம் - கபடத்துவமுடைய, நெஞ்சில் - மனதில், கருணை ஒன்றின்றி - ஜீவதயை சிறிதுமில்லாமல், செத்தும் - இறந்தும், தீபியா - புலியாகி, பிறந்து - ஜனித்து, நின்று - காட்டில் நிலைபெற்றிருந்து, மகனையும் - முன் தனது குமாரனாகியவனையும், தின்ற - கொன்றுதின்ற, இந்தப் பாபியைப் போலகில்லார் - இந்தப் பாபிஷ்டியைப்போலாகாதவர்களாய், (எல்லோரும்) கருணையை - தயவை, பயிலகை - சேர்ந்திருத்தல், நன்று - நல்லதாகும், எ - று. (௧௦)

367. பிறவிக ளனந்தந் தம்மிற் பெற்றதாய்ச் சுற்ற மல்லால்
உறவிக ளொன்று மில்லை யூனினை யுண்டு வாழ்வார்
மறமலி மனத்த ராய்த்தம் மக்களைத் தின்கின் றாரென்
றிறைவனை யிவ ளுரைத்தா ளின்றுதன் மகனைத் தின்றாள்.

(இ - ள்) பிறவிகள் - பிறப்புக்களானவை, (அநாதியாக உண்டாகி), அனந்தம் - முடிவில்லாதனவா யிருக்கின்றன (அதாவது: இதுவரையில் இத்தனை ஜன்மமெடுத்தோமென்னும் கணக்கில்லாமல் இராநின்றன), தம்மில் - அவைகளில், (ஆராய்ந்து பார்க்குமிடத்து), பெற்ற - ஈன்ற, தாய் - அன்னையாகிய, சுற்றமல்லால் - பந்துவல்லாமல், உறவிகளொன்றும் - யாதொரு ஜீவனும், இல்லை - இவ்வுலகில் இல்லாதனவாகும், (அப்படியிருப்பதனாலே), ஊனினை - மாமிசத்தை, உண்டு - புசித்து, வாழ்வார் - வாழ்கின்றவர்கள், மறமலி - பாபத்தினால் நிறைந்த, மனத்தாராய் - மனத்தையுடையவர்களாய், தம் - தங்களுடைய, மக்களை - பிள்ளைகளை, தின்கின்றாரென்று - தின்னுகிறார்களென்று, இறைவனை - சர்வஞ்ஞனால் சொல்லப்பட்ட சாஸ்திரத்தை, இவள் - இந்த ஸ்திரீயானவள், உரைத்தாள் - முன்னே சொன்னாள், (அப்படிச் சொல்லியும்), இன்று - இப்பொழுது, தன் - தன்னுடைய, மகனை - குமாரனை, தின்றாள் - தானே புலியாகிப் பிறந்து தின்றுவிட்டாள், (சாஸ்திரம் தெரிந்தும் இப்படி ஆய்விட்டாள் என்றபடி), எ - று.

இறைவன் - என்பது ஆகுபெயராய் இறைவனால் செய்யப்பட்ட சாஸ்திரத்தை உணர்த்திற்று. இறைவனை என்றும் பாடபேதமுண்டு; அங்ஙனங் கொள்ளின் அதற்குத் தக்கபடி பொருளுரைத்துக் கொள்க. (௧௧)

368. கருதினாற் கருதிற் றெல்லாங் கருணையா லீயுங் கற்பத்
தருவின்மே லுருமு வீழச் சாய்ந்தது போல மாய்ந்து
பருமத யானை வேந்தன் றேவிமேற் பற்றுள் ளத்தாற்
றிருமக ளனைய ராம தத்தைதன் சிறுவ னானான்.

(இ - ள) (இது நிற்க, அவ்வாறு புலி பத்திரமித்திரனைக் கொன்றபின்) கருதினா - இச்சித்தவர்கள், கருதிற்று - இச்சித்தவை, எல்லாம் - யாவையும், கருணையால் - தயவால், ஈயும் - கொடுக்கின்ற, கற்பத்தருவின்மேல் - கற்பகமரத்தின்மேல், உருமு - இடி, வீழ - வீழ்தலாலே, சாய்ந்ததுபோல - அது சாய்ந்து மறைந்து போவதைப்போல, மாய்ந்து - அப்பத்திரமித்திரன் இறந்து, பரும் - பருத்த, மதம் - மதம் பொருந்திய, யானை - யானைக்குத் தலைவனாகிய, வேந்தன் - சிம்மஸேனமகாராஜனுடைய, தேவிமேல் - மனைவியின்மேல், பற்றுள்ளத்தால் - (தனது நியாயத்தைக் கண்டுபிடித்ததனாலேற்பட்ட) ஆசையினால், திருமகளனைய - இலக்குமிக்குச் சமானமாகிய, ராமதத்தை - அந்த இராமதத்தா தேவியினுடைய, சிறுவனானான் - புத்திரனாகி அவள் கருப்பத்திலடைந்தான், எ - று. ()

369. கண்ணிடை வெளுப்பெ லாம்போய் முகத்திடை பரக்க காணா
நுண்ணிடை தோன்ற விம்மா கண்ணகில் கறுத்து நோக்கிப்
பண்ணிடை கிடந்த தீஞ்சொற் பவழவாய் பாண்டு வாக
மண்ணிடைத் தோன்ற மைந்தன் மதிபெற்ற திசையை யொத்தான்.

(இ - ள) (அவன் அவ்வாறு இராமதத்தையின் கருப்பத்திலடைந்த பிறகு) கண்ணிடை - (இராமதத்தைக்கு) கண்களிடத்துள்ள, வெளுப்பெல்லாம் - வெண்மை நிறமெல்லாம், போய் - சென்று, முகத்திடை - முகத்தில், பரக்க - வியாபிக்க, காணா - தெரியாமலிருந்த, நுண் - மெல்லிதாகிய, இடை - இடையானது, தோன்ற - தெரிய, விம்மா - கதித்து (விம்மி), கதில் - ஸ்தனங்களின், கண் - கண்கள், கறுத்து - கறுப்பாகி, நோக்கி - நோக்க, பண்ணிடை - கீதத்தினிடையே, கிடந்த - தங்கியிராநின்ற, (அதாவது: கீதம் போன்ற), தீம் - இனிமையாகிய, சொல் - வசனத்தைப் பேசக்கூடிய, பவழவாய் - பவழம்போற் சிவந்த வாயானது, பாண்டுவாக - வெண்மையாக, மண்ணிடை - பூப்பூமியில், மைந்தன் - (மேற்கூறியபடி கருப்பத்தில் உதித்த) புத்திரன், தோன்ற - பிறக்க, (அரசன்) மதிபெற்ற - சந்திரன் உதயமாகப்பெற்ற, திசையை ஒத்தான் - திக்கானது பிரகாசிப்பது போல சந்தோஷத்தால் பிரகாசித்தான், எ - று. (கரு)

370. வேயெனத் திரண்ட மென்றோண் மெல்லிய லோடும் வேந்த
னாயிரக் கிரணன் சென்ற திசையொடு வானை யொத்துப்
பாயிரும் பரவை ஞாலம் பைம்பொனா லார்த்தி நாமம்
சீயசந் திரனென் றேகைத் திசைதொறும் போக்கி னானே.

(இ - ள்) (அவ்வாறு புத்திரன் பிறக்கச் சந்தோஷித்தவுடனே) வேயென - பச்சை மூங்கிலைப்போல, திரண்ட - திரட்சிபெற்ற, மென் - மிருதுவாகிய, தோள் - தோள்களையுடைய, மெல்லியலோடும் - மிருதுவான நடையையுடைய இராமதத்தையோடும், வேந்தன் - அரசன், ஆயிரக்கிரணன் - சூரியன், சென்ற - நடந்த, திசையொடு - திக்கோடு கூடிய, வானை - ஆகாயத்தை, ஒத்து - நிகர்த்து, பாயிரும் - பெரிதாகிப்பரந்த, பாவை - சமுத்திரத்தால் சூழப்பட்ட, ஞாலம் - இப்பூமியிலுள்ள யாசகர் முதலானவர்களை, பைம்பொனால் - பசுமை பொருந்திய பொன்னினாலே, ஆர்த்தி - நிரப்பி, (அதாவது: அவர்களுக்குப் பொன்னை மிகுதியாகக் கொடுத்து), நாமம் - அக்குமாரனுக்குப் பெயர், சீயசந்திரனென்று - சிம்மச் சந்திரனென்று இட்டு, ஓகை - (புத்திரன் பிறந்த) சந்தோஷ செய்தியை, திசைதொறும்-திக்குகள்தோறும், போக்கினான் - (பத்திரிகைமூலம்) அனுப்பினான், எ-று.

371. நலிவிலாத் தடத்து ணின்ற நளினம்போல் வளர்ந்து நண்ணார்
குலமெலா மெலிய வாங்குங் கொடுஞ்சிலை பயின்று குன்றாக்
கலையெலாங் கடந்து காமங் கனிந்தன கமல மொட்டின்
முலைநல்லார்ச் சேர்த்தி னார்கள் முருகுண்ணும் வண்டை யொத்தான்.

(இ - ள்) (அதன்மேல்) நலிவிலா - நீர்குறைவில்லாத, தடத்துள் - தடாகத்தில், நின்ற - உண்டாகி நிலைபெற்ற, நளினம்போல் - தாமரையைப்போல, வளர்ந்து - (அக்குமாரன்) வளர்ச்சியுற்று, நண்ணார் - சத்துருக்களுடைய, குலமெலாம் - கூட்டமெல்லாம், மெலிய - தாழும்படியாக, வாங்கும் - வளைக்கப்படுகின்ற, கொடும் - கொடுமையாகிய, சிலை - வில்வித்தையை, பயின்று - கற்று, குன்றா - குறையாத, கலையெலாம் - மற்ற சதுசஷ்டி கலைகள் முழுமையும், கடந்து - கற்று அவற்றின் கரைகாண, காமம் - காமராகத்தில், கனிந்தன - கனிவு பெற்றனவாகிய, கமலமொட்டின் - தாமரை அரும்புகள் போன்ற, முலை - ஸ்தனங்களையுடைய, நல்லார் - இராஜகன்னிகைகளை, சேர்த்தினார்கள் - (அவனுக்குத் தாய்தந்தையர் விவாகவிதியால்) சேர்ப்பித்தார்கள் (அதாவது மணஞ் செய்வித்தார்கள்), (அங்ஙனம் மணஞ் செய்வித்த பின் அப்பெண்களிடம் அவன்) முருகுண்ணும் - புஷ்பத்தில் மகரந்தத்தை அனுபவிக்கும், வண்டை யொத்தான் - வண்டை நிகர்த்து இன்பத்தை அனுபவித்தான், எ - று.

கடக்க என்னும் எச்சம் கடந்து எனத்திரிந்து வந்தது. (கஞ)

372. சிலமயில் சூழச் செல்லும் சிங்கபோ தகத்தைப் போலக்
கலைபயி லல்கு லாருங் குமர னுங் கழுமு நாளுட்
கொலைபயில் கனிநல் யானைக் கொற்றவன் றேவி தன்பால்
மலைமிசை மதியம் போல மைந்தன்மற் றொருவன் வந்தான்.

(இ - ள்) (அவ்வாறு) சில - சிலவாகிய, மயில் - மயில்கள், சூழ - சூழும்படி, செல்லும் - செல்லுகின்ற, சிங்கபோதகத்தைப்போல - ஒரு ஆண் சிம்மக்குட்டியைப்போல, கலைபயில் - மேகலாபரணம் தங்கியிருக்கின்ற, அல்குலாரும் - அல்குலையுடைய ஸ்திரீமார்களும், குமரனும் - அரசகுமாரனாகிய சிம்மச்சந்திரனும், கழுமுநாளுள் - பொருந்தியிருக்கின்ற காலத்தில், கொலைபயில் - கொலைத்தொழிலிற் பழகியிருக்கின்ற, களி - கர்வம் பொருந்திய, நல்யானை - அழகியயானைகளையுடைய, கொற்றவன் - சிம்மஸேன மகாராஜனுடைய, தேவிதன்பால் - மனைவியாகிய இராமதத்தையினிடத்தே, மலைமிசை மதியம்போல - பர்வதத்தின் மேல் உதித்த சந்திரனைப்போல, மைந்தன் மற்றொருவன் - மற்றொரு புத்திரன், வந்தான் - வந்து தோன்றினான், எ - று. (கசு)

373. இரவல ரென்று முன்னீ ரிடர்கெட வெழுந்த வந்தப்
புரவல குமர னாமம் பூரசந் திரனென் றார்கள்
கரைபொரு கடலந் தானைக் காவல குமரர் வானத்
திரவியு மதியும் போல விருநிலத் தியலு நாளால்.

(இ - ள்) (அங்ஙனம்) இரவலரென்னும் - யாசகரென்று சொல்லப்பட்ட, முன்னீர் - சமுத்திரத்தினுடைய, இடர் - அலையென்னும் ஓயாதவறுமையானது, கெட - நீங்கும்படி, எழுந்த - உண்டாகிய, அந்தப்புரவலகுமரன் - அந்த இராஜகுமாரனுடைய, நாமம் - பெயரை, பூரசந்திரன் என்றார்கள் - பூரண சந்திரன் என்று (தாய்தந்தையர்) இட்டார்கள், கரை - கரையில், பொரு - மோதுகின்ற, கடல் - சமுத்திரம்போல் பெரிதாகிய, அம் - அழகிய, தானை - சேனையையுடைய, காவலகுமரர் - அந்த அரச குமாரர்களிருவரும், வானத்து - ஆகாயத்தில் செல்கின்ற, இரவியும் - சூரியனும், மதியும் - சந்திரனும், போல - நிகர்ப்ப, இருநிலத்து - பெரிதாகிய விப்பூமியில், இயலுநாள் - (வளர்ச்சியுற்றுச்) செல்கின்ற காலத்தில், எ - று.

ஆல் - அசை. (கஎ)

வேறு.

374. வாரி சூழ்வல யந்துய ரெய்திடிற்
றாரி யானது தானுட னெய்திடும்
ஏர ணிந்துல கின்புறி னின்புறும்
மாரி போற்கொடை வண்கையம் மன்னனே.

(இ - ள்) வாரிசூழ் - சமுத்திரஞ்சூழ்ந்த, வலயம் - வட்டமாகிய பூமியானது, துயரெய்திடில் - துக்கமடைந்தால், தாரியான் - மாலையை யணிந்தவ

ளுகிய, மாரிபோல் - மழையைப்போல, கொடை - தியாகஞ் செய்யும்படியான, வண் - வளப்பம் பொருந்திய, கை - கையையுடைய, அம்மன்னன் - அந்த சிம்ம ஸேன மகாராஜன், அது - அவ்வுலகமடைந்த அத்துக்கத்தை, தான் - தானும், உடன் - ஒரு தன்மையாக, எய்திடும் - அடைவான், ஏர் அணிந்து - நன்மை நிறைந்து, உலகு - இவ்வுலகத்தார், இன்புறின் - இன்பமுற்றால், இன்புறும் - தானும் சந்தோஷமடைவான், எ - று.

'தாரி' என்பதில், இ - சாரியை. (கஅ)

375. பொன்னு நன்மணி யும்புனை பூண்களும்
மன்னும் பொன்னறை மற்றொரு நாள்புக
பன்ன கம்முன்ன மாயவன் பார்த்திடா
மின்னின் வேரத்தின் வீழ்ந்தெயி றூன்றினன்.

(இ - ள்) பொன்னும் - ஸ்வர்ணமும், நல் - நன்மையாகிய, மணியும் - அரத்னங்களும், புனை - அலங்கிருதமாயணிந்து கொள்ளும்படியான, பூண்களும் - ஆபரணங்களும், மன்னும் - சேர்ந்திராநின்ற, பொன்னறை - பாண்டாகாரத்தில், மற்று - பின்னை, ஒரு நாள் - ஒரு தினம், புக - (மேற்கூறிய அரசன்) அடைய, முன்னம் - முன்னே, பன்னகம் ஆயவன் - சர்ப்பமாகப் பிறந்திருந்த ஸ்ரீபூதியான வன், பார்த்திடா - (அரசனைக்) கண்டு, வேரத்தின் வைரபாவத்தினால், மின் னின் - மின்னல் சடுதியில் தோன்றுவதுபோல, வீழ்ந்து - மேல் விழுந்து, எயி றூன்றினன் - பல்லைப்பதித்துக் கடித்தான், எ - று. (கக)

376. பைய ரவின் விடத்தொடு பார்மிசை
மைய லுற்று விழுந்தனன் மன்னவன்
வெய்ய வரவ வத்தொடு மேதினி
வைய நைய விழுந்தது போலவே.

(இ - ள்) (அவ்வாறு அந்நாகம் கடித்த மாத்திரத்தில்) வெய்யவன் - சூரிய னானவன், அரவத்தொடு - (தன்னைத் தீண்டிய) இராகுவாகிய சர்ப்பத்தோடு, மேதினி - இந்தப்பூமியில், வையம - இவ்வுலகத்தார், நைய - (இருளினால்) வருந் தும்படி, விழுந்ததுபோல - வீழ்ந்ததை நிகர்க்க, பை - படமுடியையுடைய, அர வின் - சர்ப்பத்தினுடைய, விடத்தொடு - விஷத்துடனே, பார்மிசை - இப்பூமி யின் மேல், மன்னவன் - அரசனானவன், மையலுற்று மயக்கத்தைப் பொருந்தி, விழுந்தனன் - விழுந்தான், எ - று. (உ0)

377. கல்லென் ஞோசை கடலுடைந் திட்டென
வெல்லை யின்றி யெழுந்த தியாவருஞ்

சொல்லு மெய்யு மறந்தனர் சோர்ந்தனர்
மல்லி யங்கு புயத்திரண் மைந்தரும்.

(இ - ள்) (அவ்வாறு அரசன் வீழ்ந்த மாத்திரத்தில்) கல்லென் - கல்லென்கிற, ஓசை - சப்தமானது, கடல் - சமுத்திரம், உடைந்திட்டென - கரையையுடைத்துப் புறப்பட்டது போல, எல்லையின்றி - மட்டில்லாமல், எழுந்தது - (அரண்மனையில்) உண்டானது, மல் இயங்கும் - மல்ல யுத்தத்தில் தேர்ந்து விளங்காநின்ற, திரள் - திரண்ட, புயம - புயங்களையுடைய, மைந்தரும் - அரசகுமாரர்களிருவரும், யாவரும் - அங்குள்ள மற்ற எவர்களும், சொல்லும் - வசனமும், மெய்யும் - சரீரமும், சோர்ந்தனர் - சோர்ந்தார்கள், எ - று. (உக)

378. இராம தத்தையு மின்னுயி ரன்பினால்
விராம முற்றதோர் மஞ்ஞையின் வீழ்ந்தனள்
கரா மறிக்கடல் சூழ்படிக் காவல
னிராமை யாற்பக லும்மிர வாயதே.

(இ - ள்) (அப்போது) இராமதத்தையும் - இராமதத்தாதேவியும், இன் - இனிமையாகிய, உயிர் - உயிர்போன்ற, அன்பினால் - ஆசையினாலே, விராமம் - ஆயுள்முடிவை, உற்றது - அடைந்ததாகிய, ஓர் - ஒரு, மஞ்ஞையின் - மயில்போல, வீழ்ந்தனள் - வீழ்ந்தாள், கரா - முதலைகள் தங்கியிருக்கின்ற, மறி - சுழலப்பட்ட, கடல்சூழ் - சமுத்திரம்சூழ்ந்த, படிக்காவலன் - இப்பூமியைக் காக்கும்படியான அரசன், இராமையால் - நல்ல நிலைமையாக இல்லாததனாலே, பகலும் - பகற்பொழுதும், இரவாயது - இராத்திரிக்கு ஒப்பாகியது, எ - று.

விராமம் - என்பதற்கு, அம்பு எனவும் பொருளுரைக்கலாம். (உஉ)

379. கருட னையவன் காலிலி கட்கெலாங்
கருட தண்டனென் பானக் கணத்திலே
மருவி மந்திர மோதவு மன்னனுக்
கிருள் பரந்துயி ரேகிய தேகனும்.

(இ - ள்) காலிலிகட்கெலாம் - பாதமில்லாத சர்ப்பங்களுக்கெல்லாம், கருடனையவன் - கருடனுக்குச் சமானமானவனாகிய, கருடதண்டனென்பான் - கருடதண்டனென்னும் ஒரு * காருடியானவன், அக்கணத்திலே - அப்பொழுது, மருவி - சேர்ந்து, மந்திரம் - கருடமந்திரத்தை, ஓதவும் - ஜெபிக்கவும், (தணியாமல்) மன்னனுக்கு - அரசனுக்கு, இருள்பரந்து - கரியவிஷமானது வியாபித்து,

* காருடி - கருடமந்திரம் கற்ற மந்திரவாதி.

உயிர் - உயிரானது, ஏகியது - சரீரத்தைவிட்டு நீங்கிற்று, ஏகலும் - அவ்வாறு நீங்கிவிடவும் (பின்னை என்ன நடந்ததெனில்), எ - று. (௨௩)

380. மைய லுற்றவன் மந்திர மொன்றினல்
நெய்யொ ழுக்கி நெருப்பை யெரித்திடாப்
பையெ னப்பண நாகமெ லாமழைத்
துய்ய நுமக் கொன்றுரை செய்கின்றேன்.

(இ - ள்) அவன் - அம்மந்திரவாதியானவன், மையலுற்று - மயக்கத்தை யடைந்து, மந்திரமொன்றினால் - மற்றொரு மந்திரத்தினால், நெய்யொழுக்கி - நெய்யை வார்த்து, நெருப்பை - அக்கினியை, எரித்திடா - எரித்து, (அதாவது: ஔபாஸனம் அல்லது ஓமம் பண்ணி), பையென - மெதுவாக, பணம் - பண முடியையுடைய, நாகமெலாம் - ஸர்ப்பங்களையெல்லாம், அழைத்து - அம்மந்திர பலத்தால் அழைப்பித்து, (அவைகளைப் பார்த்து ஸர்ப்பங்காள்!) நுமக்கு - உங்களுக்கு, உய்ய - பிழைக்கும்படியாக, ஒன்று - ஒருகாரியம், உரை செய்கின்றேன் - சொல்கின்றேன், (அதாவது), எ - று.

உம் - அசை. (௨௪)

381. குற்ற மில்லவர் மற்றிந் நெருப்பினை
யுற்ற போழ்திது நீரினை யொத்திடும்
குற்ற மில்லவர் போநடு வன்றெனி
லிற்ற தும்முயி ரென்கையி லென்றனன்.

(இ - ள்) குற்றமில்லவர் - (அரசனைக்கடித்த) குற்றமில்லாதவர்கள், இந் நெருப்பினை - இந்த ஓமாக்கினியை, உற்றபோழ்து - பொருந்தினபோது, இது - இவ்வோமாக்கினியானது, நீரினையொத்திடும் - (அவர்க்கு) ஜலத்தை நிகர்க்கும், குற்றமில்லவர் - குற்றமில்லாதவர்கள், நடு - இவ்வக்கினியின் மத்தியில், போம் - போவீராக, அன்றெனில் - அப்படியில்லாவிட்டால், உம்முயிர் - உங்கள் உயிரானது, என் கையில் - எனது கரத்தில், இற்றது - அகப்பட்டு இறந்து படுவதாகும், என்றனன் - என்று சொன்னான், எ - று.

மற்று - அசை. (௨௫)

382. அஞ்சி மற்றவ னாணை யிறந்திடா
நஞ்சு தாரிக ணண்ணின தீயினைப்
புஞ்சு பூம்பொய்கை புக்கன போலவே
யுஞ்சு போயின வொன்றொழி யாமையே.

(இ - ள்) மற்று - பின்பு, அவன் - அம்மாந்திரீகனுடைய, ஆணை - ஆக்கினைக்கு, அஞ்சி - பயந்து, இறந்திடா - அதனைக் கடவாதனவாகிய, நஞ்சுதாரிகள் - ஸர்ப்பங்களெல்லாம், தீயினை - ஹோமாக்கினியை, நண்ணின - அடைந்தவைகளாகி; புஞ்சு - நீர்சேர்ந்திராநின்ற, பூம் - அழகிய புஷ்பங்களையுடைய, பொய்கை - தடாகத்தில், புக்கனபோல - புகுந்து வெளியேறியவைபோல, ஒன்றுழியாமை - ஒன்றும் கெடுதியடையாமல், உஞ்சுபோயின - உயிர்பிழைத்துப் போயின, எ - று. (உசு)

383. வந்த கந்தனன் மற்றந் நெருப்பினை
நின்று புக்கிட நீறது வாயது
சென்று காள வனத்திலத் தீமையா
லன்று லோபச் சமரம தாயினான்.

(இ - ள்) * அகந்தனன் - அகந்தன ஸர்ப்பமானது, வந்து - சமீபத்தில் வந்து, அந்நெருப்பினை - அவ்வக்கினியில், புக்கிட - புகுந்த மாத்திரத்தில், நின்று - அந்நெருப்பிலேயே நின்று, நீறதுவாயது - பஸ்மமாகியது, (அவ்வாறாயபின் அவ்வகந்தனனாயிருந்த ஸ்ரீபூதி யென்னும் மந்திரி), சென்று - போய், அத்தீமையால் - அந்த பாப கர்மத்தினாலே, காளவனத்தில் - காளமென்னும் வனத்திலே, அன்று - அக்காலத்தில், லோபம் - லோபகுணத்தை மிகுதியாகவுடைய, சமரமதாயினான் - சமரீ மிருகமாய்ப் பிறந்தான், எ - று.

மற்று - அசை. (உஎ)

384. ஆயு வுங்கிளை யும்மா சும்மெலாம்
மாய மென்பவன் போல மரித்திடாச்
சீய சேனனுந் தீவினை வன்மையா
லாயி னன்சல்ல கீவனத் தானையே.

(இ - ள்) சீயசேனன் - சிம்மசேன மஹாராஜனானவன், ஆயுவும் - ஆயுஷ்யமும், கிளையும் - பந்துத்துவமும், அரசும் - இராஜ்யமும், (ஆகிய) எலாம் - இவைகளெல்லாம், மாயமென்பவன்போல - மாயமாக நீங்கப்பட்டவை யென்று யாவர்களுக்கும் தெரிவிப்பவன் போல, மரித்திடா - (மேற்கூறியபடி) இறந்து, தீவினை - பாப வினையினது, வன்மையால் - வலிமையினாலே, சல்லகீவனத்து - சல்லகீ என்கிற வனத்திலே, ஆனையாயினன் - யானையாகப் பிறந்தான், எ - று. (உஅ)

385. அசனி கோட மெனும்பெய ராயவன்
கசனி செய்து கடாத்தயல் யானையை

* அகந்தனன் - அகந்தனன் என்னும் பாம்பாகிய ஸ்ரீபூதி யென்னும் மந்திரி.

விசனி யாப்பிடி சூழ விலங்கன்மே
லசன மிங்குவ தாக வமர்ந்தனன்.

(இ - ள்) அவன் - அவ்வாறு யானையாகப் பிறந்த மன்னன், அசனி கோடமெனும் - அசனி கோஷமென்கிற, பெயராய் - பெயரை படைந்து, கடாத்து - தன்மதபலத்தினால், அயல் யானையை - பக்கத்தில் சஞ்சரிக்கின்ற ஆண் யானைகளை, கசனி செய்து - வருத்தஞ் செய்து, விசனியா - வருத்தமடையாத, பிடி - பெட்டை யானைகள், சூழ - தன்னைச் சூழ, விலங்கன்மேல் - அக்காட்டிலுள்ள பர்வதத்தின் மேல், அசனம் - கனத்த இரையானது, இங்குவதாக - பெருங்காயத் தழையாக, அமர்ந்தனன் - பொருந்தினான், எ - று. (உகூ)

386. நாவி நாறுங் குழல்கள் விரித்திடா
ஆவி போன கலாவி கிடந்தெனத்
தேவி யைத்தெருண் டாரெடுத் துத்துய
ரோவும் வண்ண முரைத்துட னோம்பினர்.

(இ - ள்) (இஃதிப்படியிருக்க, முன்னுரைத்தபடி மன்னன் இறந்ததற்கு) நாவி - கஸ்தூரி வாசனையானது, நாறும் - வீசுகின்ற, குழல்கள் - அளகங்களை, விரித்திடா - விரித்துக்கொண்டு, ஆவி போன - உயிர்நீங்கின, கலாவி - ஆண் மயிலானது, கிடந்தென - கிடந்ததுபோல, (பிரக்ஞையற்றுக் கிடந்த) தேவியை - இராமதத்தா தேவியை, எடுத்து - தூக்கி, தெருண்டார் - ஞானத்தெளிவுள்ள சிலர், துயர் - அரசனிறந்ததனா லுண்டாகிய துக்கம், ஓவும் வண்ணம் - அவளை விட்டு நீங்கும்படியான விதங்களை, உரைத்து - சொல்லி, உடன் - உடனே, ஓம்பினர் - (அவளை) உபசரித்தார்கள், எ - று. (௩௰)

387. தோன்றி னந்நிலை யாதுட னேகெட
லீன்ற தாயரு மீட்டுவைத் தேகலு
மான்ற வரழி வெய்தலும் வையகந்
தோன்றி னன்று தொடங்கின வல்லவோ.

(இ - ள்) (அவ்வாறு உபசரித்து) தோன்றின - (இவ்வுலகத்தில்) பிறந்த பரியாயங்களெல்லாம், நிலையாது - நிலையில்லாமல், உடனே - அவ்வாறு தோன்றுதலோடு கூடவே, கெடல் - கெடுதலும், ஈன்ற - நம்மைப்பெற்ற, தாயரும் - தாய்மார்களும், ஈட்டு வைத்து - பெற்று வைத்துவிட்டு, ஏகலும் - அழிவெய்திச் செல்லுதலும், ஆன்றவர் - பெரியோர்களாயினும், அழிவெய்தலும் - நாசத்தை அடைதலும், வையகம் - இந்த வுலகமானது, தோன்றினன்று - தோன்றின அன்று முதல், (அதாவது: அநாதியாகவே) தொடங்கினவல்லவோ - சேர்ந்து ஏற்பட்டவைகளல்லவோ?, எ - று.

இவ்வாறு கூறியதனால், சகல பொருள்களும், உத்பாத, விய, த்ருவ, யுக்தமாயன என்பது, திரவியார்த்திக, பரியாயார்த்திகமாகிய இருவித நயங்களாலும் ஆகமப் பிரமாணமாகக் கொள்ளப்படும்.

தோன்றினன்று என்பதில் அகரந்தொக்கது. (௩க)

388. செல்வ முஞ்சில நாளிடை யேகெடு
மல்ல லென்று முறாதவ ருமிலை
மல்லை வென்ற புயத்தெழின் மன்னவ
ரெல்லை யில்லையிம் மண்ணி லிறந்தவர்.

(இ - ள்) செல்வமும் - ஐஸ்வரியமும், சில நாளிடை - சில தினங்களுக்குள், கெடும் - நீங்கிவிடும், அல்லல் - துன்பத்தை, என்றும் - எப்பொழுதும், உறாதவரும் - அடையாதவர்களும், இலை - இல்லை, மல்லை - மல் யுத்தத்தை, வென்ற - ஜெயித்த, புயத்து - புஜங்களையுடைய, எழில் - அழகு பெற்ற, மன்னவர் - இராஜாக்களில், இம்மண்ணில் - இப்பூமியில், இறந்தவர் - இறந்துபோனவர்கள், எல்லையில்லை - கணக்கில்லை, எ - று. (௩௨)

வேறு.

389. இறந்தவர்க் கிரங்கி நாமு மழுதுமே லின்று காறும்
பிறந்தநம் பிறவி தோறும் பெற்றசுற் றத்தை யெண்ணி
லிறந்தநா ளலகை யாற்று தெவருக்கென் றழுது மென்னத்
திறந்தெரிந் துணர்ந்து தேவி சிறிதுபோய்த் தேறி னாளே.

(இ - ள்) இறந்தவர்க்கு - இறந்து போனவர்களுக்கு, இரங்கி - மனங்கரைந்து, நாமும் - (இப்போது உயிருடனிருக்கிற) நாமும், அழுது மேல் - அழுவோமானால், இன்றுகாறும் - இன்றைய வரையில், பிறந்த - தோன்றிய, நம் - நம்முடைய, பிறவி தோறும் - சரீரப் பிறப்புக்களிலெல்லாம், பெற்ற - அடைந்த, சுற்றத்தை - பந்துக்களை, எண்ணில் - கணக்கிடுமிடத்தில், இறந்த நாள் - இதற்கு முன் சென்ற நாள்களில், அலகை யாற்றுது - இவ்வளவென்கிற கணக்குச் சொல்லுதலில் முடியாது, (ஆகையால்), எவருக்கென்று - (அந்த அனந்தம் பிறப்புக்களிலெல்லாம் இறந்தவர்களில்) யாருக்கென்று, அழுதும் - அழுவோம், என்ன - என்று அறிவுள்ளவர் சொல்லவும், தேவி - இராமதத்தா தேவி, சிறிது போய் - கொஞ்சக்காலம் சென்று, திறம் - அவர்கள் சொன்ன உறுதிமொழிகளை, தெரிந்துணர்ந்து - ஆராய்ந்தறிந்து, தேறினாள் - தெளிந்தாள், எ - று. (௩௩)

390. தேறினாள் மைந்தர் தம்மைத் தருகெனச் செப்ப நொந்த
வேறுபோ னடந்து வந்தாங் கிறைஞ்சிநின் றவரை நோக்கிப்

பேறிலே னும்மைச் சூட்டி யரசனைப் பிரிந்தே னென்ன
வாறிழி வரையைப் போல வழுதடி தொழுது வீழ்ந்தார்.

(இ - ள்) தேறினாள் - (அவ்வாறு) தெளிவடைந்தவளாகிய இராமதத்தை, (அதன்மேல்) மைந்தர் தம்மை - தன் குமாரரிருவரையும், தருகென - அழைத்து வருக என்று, செப்ப - (அருகில் நின்றவரை நோக்கிச்) சொல்ல, (அவர்கள் போய்ச் சொன்ன மாத்திரத்தில் பிள்ளைகளும் வந்தார்கள்) நொந்த - வருத்தமுற்ற, ஏறுபோல் - விருஷபத்தைப்போல, நடந்து வந்து - மேற்கூறியபடி நடையாக வந்து, ஆங்கு - தாய் இருந்த அவ்விடத்தில், இறைஞ்சி நின்றவரை - வணங்கி நின்ற அந்தக் குமாரர்களை, நோக்கி - (இராமதத்தை) பார்த்து, பேறிலேன் - தவ பாக்கியமில்லாத யான், உம்மைச் சூட்டி - உங்களை ஈன்று பூமிக்கு அணியாகச் சேர்த்து (இராஜ்ய பட்டாபிஷேகம் செய்வதற்கு முன்னே), அரசனை - இராஜாவை, பிரிந்தேன் என்ன - விட்டு நீங்கினேன் என்று சொல்லி வருந்த, (அவர்களும் வருத்தமுற்று) ஆறிழி - அருவி பாயா நின்ற, வரையைப்போல - பர்வதத்தைப்போல, அழுது - மார்பின்மீது கண்ணீரை வடித்து, அடி தொழுது - தாயின் பாதத்தை வணங்கி, வீழ்ந்தார் - பூமியில் விழுந்தார்கள், எ - று. (௩௪)

391. திருவனா ளவரைத் தேற்றிச் சீயசந் திரனை நோக்கி
முருகுலா மகுடஞ் சூட்டி மண்முழு தாள்க வென்று
பொருவிலா ளதனிற் பின்னைப் பூரசந் திரனை நோக்கி
யரசிளங் குமர னாய்நீ யமர்ந்தினி திருக்க வென்றாள்.

(இ - ள்) (அப்படி வணங்கியபின்பு) பொருவிலாள் - ஒப்பில்லாதவளாகிய, திருவனாள் - இலக்குமிபோன்ற இராமதத்தை, அவரை - அந்தக் குமாரர்களை, தேற்றி - தெளியச் செய்து, (அவர்களுள்) சீயசந்திரனை - சிம்மச்சந்திர குமாரனை, நோக்கி - பார்த்து, முருகுலாம் - வாசனை வீசுகின்ற, (புஷ்பமாலைகளோடு கூடிய) மகுடஞ் சூட்டி - கிரீடத்தையணிந்து, மண்முழுது - இந்தப்பூமி இராஜ்யம் முழுவதையும், ஆள்க வென்று - நீ அரசாளக்கடவாய் என்று சொல்லி, அதனிற் பின்னை - அதன்பிறகு, பூரசந்திரனை நோக்கி - பூரணச்சந்திர குமாரனைப் பார்த்து, நீ - நீ, அரசிளங் குமரனாய் - யௌவராஜ்யத்தையுடைய இளவரசனாக, அமர்ந்து - பொருந்தி, இனிது - சந்தோஷமாக, இருக்க என்றாள் - இருக்கக்கடவாயென்று கூறினாள், எ - று. (௩௫)

392. இந்திர விபவந் தன்னை யிருவகிர் செய்து மைந்த
ரந்தரம் பிறிதொன் றின்றி யின்பத்து ளழுந்து நாளுட்
சிந்துரக் களிற்றுச் சீய சேனன்றன் வார்த்தை கேட்டு
வந்தனர் சாந்தி ரண்ணிய மதியென்பார் துறந்த மாதர்.

(இ - ள்) (அவ்வாறே அமைந்து) இந்திர விபவந்தன்னை - தேவேந்திர விபவத்தை, இருவகிர் செய்து - இரண்டு கூறுசெய்து, மைந்தர் - இக்குமாரர்கள், அந்தரம் பிறிதொன்றின்றி - வேறொரு வித்தியாசமுமின்றி, இன்பத்துள் - சௌக்கியத்துள், அழுந்து நாளுள் - ஆழ்ந்து அதனை அனுபவித்துக்கொண்டிருக்குங் காலத்தில், சிந்துரக்களிறு - சிந்துரம்போன்ற புள்ளிகளையுடைய மஸ்தகம் பொருந்திய பட்டத்து யானைக்கு (அதாவது: புகர்முகக்களிறாகிய யானைக்குத்) தலைவனாகிய, சீயசேனன் தன் வார்த்தை கேட்டு - சிம்மஸேன மகாராஜனிறந்த சமாசாரம் பொருந்திய வார்த்தைகளைக்கேட்டு, துறந்த மாதர் - தபத்தைக் கைக்கொண்டிரா நின்ற ஆரியாங்கனைகளாகிற, சாந்திரணியமதி யென்பார் - சாந்திமதி இரணியமதி யென்னும் இருவரும், வந்தனர்-இராமதத்தையிடம் வந்தார்கள், எ-று.

393. அங்கநூல் பயின்று வல்லா ரறவமிர் தளிக்குஞ் சொல்லார்
சிங்கநற் பாய்ச்ச லாதி நோன்பொடு செறிந்து நின்றார்
தங்கிய கருணை நெஞ்சிற் றரியினா ருயிர்கட் கெல்லாந்
திங்கள்வெண் குடையி னான்றன் றேவியைக் கண்டு சொன்னார்.

(இ - ள்) (அவ்வாறு வந்து) அங்க நூல் - அங்காகமம் முதலாகிய சாஸ்திரங்களை, பயின்று - கற்று, வல்லார் - அவற்றில் வல்லமையுடையவர்களும், அறவமிர்து - தர்மாமிருதத்தை, அளிக்கும் - கொடுக்கும் (அதாவது: உபதேசிக்கும்படியான), சொல்லார் - வசனத்தையுடையவர்களும், சிங்கநற் பாய்ச்சலாதி - *ஸிம்ம நிஷ்கிரீடித முதலாகிய, நோன்பொடு - மஹாநோன்புகளோடு, செறிந்து - சேர்ந்து, நின்றார் - நிலைபெற்றவர்களும், உயிர்கட்கெல்லாம் - ஸ்தாவர சங்கமாதி ஸகல ஜீவன்களின்மேரிலும், தங்கிய - சேர்ந்திராநின்ற, கருணை - தயவை, நெஞ்சில் - மனதில், தரியினார் - தரித்தவர்களுமாகிய அவ்விருவரும், திங்கள் - சந்திரன்போன்ற, வெண்குடையினான்தன் - வெள்ளைக்குடையையுடைய அரசனது, தேவியை - மனைவியாகிய இராமதத்தையை, கண்டு - பார்த்து, சொன்னார் - கீழ் வருமாறு சொன்னார்கள், எ - று. (௩௭)

394. அங்கர வல்கு லாரி லருந்ததி யனைய நங்கை
மங்கல மிழந்த தெம்ம னோர்கடம் பாவம் வாடிச்
செங்கய லனைய கண்கள் சிதறநீ யழுத போழ்தும்
வெங்களி யானை வேந்தன் வெளிப்படா னொழிக வென்றார்.

(இ - ள) அங்கு - அவ்விடத்தில், (மேற்கூறியபடி சொல்லத்தொடங்கிய அவர்கள், இராமதத்தையை நோக்கி), அரவு - ஸர்ப்பத்தினது படத்தைப்போன்ற, அல்குலாரில் - அல்குலையுடைய ஸ்திரீமார்களுக்குள்ளே, அருந்ததி யனைய - அருந்

---

* இதன் விவரத்தை நோன்புக் கதையில் பார்த்துக்கொள்க.

நதிக்குச் சமானமாகிய, (கற்பினையுடைய), நஙகை - பெண்ணே!, மங்கலம் - மாங் கல்யத்தை, இழந்தது - நீ இழந்துவிட்டது, எம்மனோர்கள் தம் - எங்களுக்குச் சமான மாகிய மாதர்களது, பாவம் - பாவமாகும், வாடி - வாட்டமுற்று, செம் - சிவந்த, கயலினை - கெண்டைமீனை யொத்த, கண்கள் - நேத்திரங்கள், சித்ற - நீர் சொரி யும்படியாக, நீ அழுதபோழ்தும் - நீ அழுத காலத்தும், வெம் - வெவ்விதாகிய, களி - கர்வத்தையுடைய, யானை - யானைகளுக்குத் தலைவனாகிய, வேந்தன் - அரசன், வெளிப்படான் - மீண்டுந் தோன்றி வெளிவரமாட்டான், (ஆகையினால்) ஒழிக - நீ வருத்தம் நீங்கக்கடவாய், என்றார் - என்று சொன்னார்கள், எ - று. (௩௮)

395. ஆர்வத்தி னாற்றிற் சிந்தை யார்த்தமா பதனிற் பின்னை
வேரத்தை யுடைய வாய விலங்கிடைப் பிறந்து தீமைப்
பாரத்தை யடைந்து சென்று நரகத்திற் பதைப்பர் கண்டாய்
நேரொத்த மனத்தை யாகி யநித்தமே நினைக்க வென்றார்.

(இ - ள) (அவ்வாறு சொல்லி மேலும்) ஆர்வத்தின் - ஆசையினால், ஆற் றின் - அழுதால், (அப்படி அழுபவர்கள்) சிந்தை - மனம், ஆல், ஆர்த்தமாய் - ஆர்த் தத் தியானமாகி, அதனில் - அதனால், பின்னை - பிற்பாடு, வேரத்தை யுடைய வாய - வைரபாவத்தை யுடையனவாகிய, விலங்கிடை - விலங்குகளின் ஜாதியில், பிறந்து - ஜனித்து, தீமைப் பாரத்தையடைந்து - பொல்லாங்காகிய பாபவினை களின் சுமையைச் சேர்ந்து, சென்று - அப்பிறப்பினின்றும் நீங்கிப்போய், நரகத் தில் - நரகத்திலே பிறந்து, பதைப்பர் - துக்கமுற்றுத் துடிப்பார்கள், கண்டாய் - நீயும் இதனை உணர்ந்துள்ளாய், (ஆகையினாலே), நேரொத்தமனத்தை யாகி - நீ இன்பதுன்பங்களோடு கூடிய சம்ஸாரத்தில் சமத்துவ பாவத்தையுடைய மன முடையவளாகி, அநித்தமே - (சம்ஸார ஸ்வரூபமானது அநித்யத்தையே உடை யது இதில் யாதொன்றும் சாஸ்வதமில்லையென்று) அநித்தியத்தன்மையையே, நினைக்க என்றார் - நினைப்பாயாக வென்றும் சொன்னார்கள், எ - று. (௩௯)

396. அழுந்தி நீ சோகந் தன்னி லரியவிப் பிறவி யாலாஞ்
செழும்பய னிழந்தி டாதே திருவறஞ் செறிந்து சிந்தை
எழுந்தநல் விசோதி தன்னா லிடர்க்கடல் கடந்து பற்றி
லழுந்திய வினையை வெல்லு மறத்துவித் தமைக்க வென்றார்.

(இ - ள்) (பின்னரும்) நீ - நீ, சோகந்தன்னில் - சோகத்திலே, அழுந்தி - முழுகி, அரிய - பெறுதற்கரிய, இப்பிறவியால் - இந்த மனிதப் பிறப்பினால், ஆம் - ஆகும்படியான, செழும் - செழிப்பையுடைய, பயன் - பலனை, இழந் திடாது - இழந்து போகாமல், திருவறம் - ஸ்ரீஜிந தருமத்தை, செறிந்து - சேர்ந்து, சிந்தை - மனதில், எழுந்த - உண்டாகிய, நல் - நன்மையாகிய, விசோதி

தன்னால் - விசோதி பரிணமத்தால், இடர்க்கடல் - துக்கமாகிற சமுத்திரத்தை, கடந்து - தாண்டி, பற்றில் - ஆசையில், அழுந்திய - மூழ்கிய, வினையை - கர்மங்களை, வெல்லும் - ஜயிக்கும்படியான, அறத்துவித்து - தர்மத்தின் விதையாகிய நோன்பு முதலான பாவனைகளை, அமைக்க - உன்னிடத்தில் சேர்க்கக்கடவாயாக, என்றார் - என்றும் சொன்னார்கள், எ - று. (௪0)

397. துவர்ப்பகை நான்கிற் றீய விலச்சை மூன் றாகி நாளை
அவத்தமே போக்கி டாதே யம்மைநும் மாற்றற் கேற்ற
தவத்தொடு விரதஞ் சீலந் தக்கன தாங்கிச் சிந்தை
யுவர்ப்பொடு வெறுப்பி னொன்றி யுறதிக்க ணுழக்க வென்றார்.

(இ - ள்) (மேலும்) துவர்ப்பகை நான்கில் - (நன்மைக்கு) விரோதமாகிய குரோதமான மாயாலோபமென்னும் சதுஷ்கஷாயத்தினால், தீய விலச்சை மூன்றாகி - (கிருஷ்ண நீலகபோதமென்னும்) துர்லேசியாபரிணம மூன்றாக, நாளை - ஆயுஷ்யநாளை, அவத்தமே போக்கிடாது - வீணாகப்போக்காமல், அம்மை - இராமதத்தையே!, நும் - உம்முடைய, ஆற்றற்கேற்ற - சக்திக்குத் தகுந்த, தவத்தொடு - தபத்தோடு, விரதம் - பஞ்சாணு விரதங்களையும், தக்கன - தகுதியானவைகளாகிய, சீலம் - சீலாசாரங்களையும், தாங்கி - மேற்தரித்து, சிந்தை - மனதில், உவர்ப்பொடு - (இந்தச சரீர போகாதிகளில் அசுசித்தன்மையிருப்பதை யுணர்ந்து அவற்றின் மீதேற்படும்) அருவருப்புடனே, வெறுப்பின் - வைராக்கிய பாவனையில், ஒன்றி - பொருந்தி, உறுதிக்கண் - ஆத்மனுக்கு உறுதியாகிய தர்மத்தில், உழக்க - உத்ஸாஹித்துச் செல்லக்கடவாயாக, என்றார் - என்றும் சொன்னார்கள், எ - று.

சதுஷ்கஷாயங்களையும், துர்லேசியாதிரயங்களையும் பதார்த்த சாரத்தில் விவரமாகத் தெரிந்துகொள்ளலாம். (௪௧)

398. அருந்தவத் தார்கள் சொல்லைக் கேட்டலு மிராமை சித்தம்
விரும்பிய தவத்த தாகி வேந்தனு மகனைக் கூவிப்
பொருந்திய செல்வஞ் சுற்றம் புற்புதம் போல மாயும்
திருந்திய குணத்தி னைப்நீ திருவறம் மறவ லென்றாள்.

(இ - ள்) (இவ்வாறு கூறியபின்னர்) அரும் - அரிதாகிய, தவத்தார்கள் - தபஸையுடைய அவ்விரு மாதர்களது, சொல்லை - வசனத்தை, கேட்டலும் - கேட்டவுடனே, இராமை - இராமதத்தையானவள், சித்தம் - தன்னுடைய மனமானது, விரும்பிய - இச்சிக்கப்பட்ட, தவத்ததாகி - தவஞ் செய்து நோற்றலில் பொருந்தியதாக, வேந்தனும் - அரசனாகிய, மகனை - தன்னுடைய சிம்மசந்திர குமாரனை, கூவி - அழைத்து, (அவனிடம்) திருந்திய - திருந்தியாகிய, குணத்தி

ஞய் - குணத்தையுடையவனே !, பொருந்திய - நம்மிடத்தே சேர்ந்திருக்கின்ற, செல்வம் - இராஜ சம்பத்தும், சுற்றம் - பந்துக்களும், புற்புதம்போல - நீர்க்குமிழியைப்போல, மாயும் - விநாசமாகும், (ஆகலால்) நீ - நீ, திருவறம் - ஸ்ரீஜிந தருமத்தை, மறவல் - மறந்துவிடாதே. என்றாள் - என்று சொன்னாள், எ - று.

**399.** என்றலு மஞ்சி நெஞ்சத் திளஞ்சிங்க நடப்ப தேபோற்
சென்றவன் பணிந்தெ ழுந்து செப்பிய தென்கொ லென்ன
மின்றிகழ் பூணி னாய்மேல் விழுத்தவந் தொடங்கி நோற்றற்
கொன்றிய துள்ள மென்ன வுருமுற்ற நாக மொத்தான்.

(இ - ள) என்றலும் - என்று அவள் சொல்லியவுடனே, நெஞ்சத்து - மனத்தில், அஞ்சி - பயந்து, இளஞ்சிங்கம் - இளமையாகிய சிம்மமானது, நடப்பதேபோல் - செல்வதுபோல, அவன் - அந்தச் சிம்மச்சந்திர குமாரன், சென்று - தாயினருகிற்போய், பணிந்து - வணங்கி, எழுந்து - எழுந்து நின்று (தாயே !), செப்பியது - நீ சொல்லியது, என்கொல் - யாது ? (அதனை எனக்கு விவரமாகச் சொல்வாயாக), என்ன - என்று கேட்க, (அவள்) மின்திகழ் - மின்னலைப் போன்ற பிரகாசம் விளங்குகின்ற, பூணினாய் - ஆபரணங்களை யணிந்த குமாரனே!, மேல் - இனி, விழுத்தவம் - பரிசுத்த மாகிய தபஸை, தொடங்கி - ஆரம்பித்து, நோற்றற்கு - நோற்பதற்கு, உள்ளம் - என்மனமானது, ஒன்றியது - பொருந்தியது, என்ன - என்றுசொல்ல (அவன்), உருமுற்ற - இடியிலகப்பட்ட, நாகம் ஒத்தான் - சர்ப்பத்தை நிகர்த்துக் கலங்கி வீழ்ந்தான், (எ - று.) (௯௩)

**400.** கடகமு முடியுஞ் சிந்தக் கற்பகம் போல வீழ்ந்து
படிமிசைக் கிடந்த வீரன் பரிசனந் தேற்றத் தேறி
அடியனேன் பிழைத்த தென்கொ லடிகணீர் துறத்தற் கென்ன
நெடிதுநீ ருரைய னீங்கள் பிழைத்ததொன் றில்லை யென்றாள்.

(இ - ள) கடகமும் - அஸ்தகங்கணமும், முடியும் - கிரீடமும், சிந்த - சிதற, கற்பகம்போல - கற்பக மரத்தைப்போல, வீழ்ந்து - கீழே வீழ்ந்து, படிமிசை - பூமியின்மேல், கிடந்த - மூர்ச்சித்துப் படுத்திருந்த, வீரன் - வீரபுருஷனாகிய சிம்மச் சந்திரகுமாரன், பரிசனம் - தன்னுடைய பரிவார ஜனங்கள், தேற்ற - தன்னை மூர்ச்சை தெளிவிக்க, தேறி - தெளிந்து, (ராமதத்தையை நோக்கி) அடிகள் - அடிகளே !, நீர் துறத்தற்கு - நீர் இவ்வாறு துறவடைவதற்கு, அடியனேன் - அடியேனாகிய யான், பிழைத்தது - தவறிச் செய்த காரியம், என்கொல் என்ன - யாது என்று வினவ, (அதற்கு அவள் அவனையும், தன்னுடைய மற்றொரு பிள்ளையையும் நோக்கி), நீர் - நீங்கள், நெடிது உரையல் - அதிகமாக ஒன்றுஞ் சொல்லவேண்டாம், நீங்கள் பிழைத்தது - நீங்கள் தவறிச் செய்த காரியம்,

ஒன்றில்லை - ஒன்றுமில்லை, (நான் எனது நன்மைக்காகத் தவத்தை விரும்பி னேன்) என்றாள் - என்று கூறினாள், எ - று.

உரையல் - எதிர்மறை வியங்கோள்; சொல்லாதிருக்க என்பது இதன் பொருள். (சுச)

401. மறம்புரிந் திலங்கும் வைவேல் மன்னவன் றேவி யுள்ளந்
திறம்புரிந் தெழுந்த வண்ண மறிந்தபின் சீய சந்தன்
றறம்புரிந் தடிக ளென்று தொழுதுடன் படலு நீல
நிறம்புரிந் தெழுந்த வைம்பா னெறிமையி னீக்கி னாரே.

(இ - ள்) (அவ்வாறு கூறியவுடனே) மறம் - வீரத்தொழிலை, புரிந்து - செய்து, இலங்கும் - பிரகாசியா நின்ற, வை - கூர்மை பொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, மன்னவன் - சிம்மசேன மஹாராஜனது, தேவி - மனைவியாகிய இராமதத்தையின், உள்ளம் - மனமானது, திறம் புரிந்து - (தவத்திலே) உறுதி செய்து (அதாவது திடமாகி), எழுந்த - சென்ற, வண்ணம் - விதத்தை, அறிந்த பின் - தெரிந்தபிறகு, சீயசந்தன் - சிம்மச்சந்திரன், துறம்புரிந்து - (அவள் அவ்வாறு கொண்ட) துறவை விரும்பி, அடிகள் - அடிகளே!, (உங்கள் விருப்பப் படியே செய்க), என்று - என்றுசொல்லி, தொழுது - வணங்கி, உடன்படலும் - அத்தவத்திற்குச் சம்மதித்தலும், (அவள் தவத்திற்குச் சென்றனள்; அவ்வாறு சென்ற பின் அந்த இராமதத்தா தேவியினுடைய) நீலநிறம்புரிந்து - நீலநிறத் தைச் செய்து, (அதாவது நீலநிறமாகி), எழுந்த - வளர்ந்த, ஐம்பால் - கூந்தலை, நெறிமையின் - தீட்சா விதியின்படி, நீக்கினார் - (ஆர்யாங்கனைகள்) பரிஹரித்தார் கள், எ - று.

'உங்கள் விருப்பப்படியே செய்க' என்பது இசையெச்சமாக வருவித்துரைக் கப்பட்டது. (சுரு)

402 அனிச்சத்தம் போது கொய்வார் போலணி மயிரை வாங்கிப்
பனிச்செப்பை யனைய கொங்கை பாணிறப் படத்தின் வீக்கித்
தனிச்சித்தம் வைத்த நங்கை தாமரைப் பூவி லன்னம்
பனிச்சுத்தன் சூட்டு வீழ விருந்ததோர் படி யிருந்தாள்.

(இ - ள்) (அவ்வாறு நீக்கவே) தனிச்சித்தம் - (இரத்தினத் திரயமாகிய ஆத்மபாவனையில்) ஏகாக்கிரமாகிய மனத்தை, வைத்த - ஸ்தாபித்த, நங்கை இராமதத்தாரியாங்கனை, அனிச்சத்து - அனிச்சத்தினுடைய, அம் - அழகிய போது - புஷ்பத்தை, கொய்வார்போல் - பறிப்பவர்களைப்போல, அணி - அழகிய மயிரை - கூந்தலை, வாங்கி - நீக்கி, பனி - குளிர்ச்சி பொருந்திய, செப்பு

அனைய - இரத்தினச் செப்பை நிகர்த்த, கொங்கை - ஸ்தனங்களை, பால்நிற - பால்போன்ற வெள்ளிய நிறத்தையுடைய, படத்தின் - வஸ்திரத்தினால், வீக்கி - இறுக்கிக்கட்டி, அன்னம் - ஹம்ஸ பக்ஷியானது, தன் - தன்னுடைய, பனிச் சூட்டு - மயிர்ச்சுருளோடு கூடிய உச்சிக்கொண்டையானது, வீழ - உதிர்ந்துவீழ, (தலைமொட்டையுடனே), தாமரைப்பூவில் - தாமரைப் புஷ்பத்திலே, இருந்ததோர் படி - இருந்த ஒருவிதமாக, இருந்தாள் - இருந்தனள், எ - று (சகூ)

403. அரசிளங் குமரன் பைம்பொ னாவின்றி யீந்து பின்னைப்
பிரசநின் றரூத பிண்டிப் பிரான்றிருச் சிறப்பி யற்றி
மரையிருந் தவளைப் போலு மிராமைதன் றுறவைக் கண்டு
விரைமலர் சொரிந்து வாழ்த்தி மீண்டுதன் னகரம் புக்கான்.

(இ - ள்) (அப்படியிருந்தபோது) அரசிளங்குமரன் - யுவராஜனானவன், மரையிருந்தவளை - தாமரைப்பூவில் வாசஞ்செய்யும் இலக்குமியை, போலும் - நிகர்க்கின்ற, இராமைதன் - இராமதத்தையினது, துறவை - தீக்ஷையை, கண்டு - பார்த்து (அவளுடைய பாதங்களில்), விரை - வாசனை தங்கிய, மலர் - புஷ்பங்களை, சொரிந்து - தூவி, வாழ்த்தி - அவளை ஸ்தோத்திரமும் பண்ணி (யாசகர்க்கு), பைம்பொன் - பசுமைபொருந்திய பொற்காசுகளை, ஈந்து - தானமாகக் கொடுத்து, பின்னை - பிறகு, பிரசம் - வண்டுகள், நின்று - நிலைபெற்று, அரூத - நீங்காதிருக் கின்ற, பிண்டி - அசோகவிருட்சத்தையுடைய, பிரான் - சர்வக்ஞனுக்குரிய, திரு - அழகிய, சிறப்பு - பூஜையை, இயற்றி - செய்து, மீண்டு - திரும்பி, தன் நகரம் - தன்னுடைய பட்டணத்தில், புக்கான் - அடைந்தான், எ - று. (சஎ)

404. மத்தமால் களிறு வான்கை யிழந்தது போன்றி ராம
தத்தையைப் பிரிந்து சீய சந்திரன் சால வாடி
முத்தணி முலையி னார்தம் முறுவலுஞ் சிறிய நோக்கும்
பித்தன்வாய்ப் பட்ட நல்ல பிரசம்போற் றிரிந்த வன்றே.

(இ - ள்) (அதன்மேல்) மத்தம் - மதம்பொருந்திய, மால் - பெரிதாகிய, களிறு - யானையானது, வான் - சிறந்த, கை - தனது துதிக்கையை, இழந்தது போன்று - இழந்துவிட்டதை நிகர்த்து, சீயசந்திரன் - சிம்மச்சந்திரன், இராமதத் தையை - தாயாகிய இராமதத்தா தேவியை, பிரிந்து - நீங்கி, சால - மிகவும், வாடி - வாட, (அதனால் அவனுக்கு சம்ஸார விரக்தியுண்டாகி), முத்தணி - முத்துமாலையை அணிந்த, முலையினார்தம் - ஸ்தனங்களையுடைய தேவிமார்களின், முறுவலும் - புன்சிரிப்பும், சிறிய நோக்கும் - கடைக்கண் பார்வையும், (இனிமையைச் செய் யாமல்), பித்தன் - பைத்தியம் பிடித்தவனுடைய, வாய்ப்பட்ட - வாயிலே சேர்ந்த, நல்ல - இனிமையாகிய, பிரசம்போல் - தேனைப்போல, (அதாவது தேன் அவ

னுக்கு இனிமையைச் செய்யாமல் விகற்பப்பட்டிருப்பதுபோல), திரிந்த - வேறு பட்டன, (அதாவது : அவன் போகத்தில் வெறுப்புற்றான்), எ - று.

வாட என்பது வாடி எனத் திரிந்து வந்தது. (சஅ)

405. ஈன்றதா யென்ப தன்றி யிறந்தநாட் சிறந்த வன்பிற்
றோன்றினா னாத லானும் பிரிவின்மா துயர முற்றா
னான்றவர்க் காய நன்றி யணுவுமா மேரு வாகித்
தோன்றுமேழ் பிறவி தோறுந் தொடர்ந்துவீ டெய்து காறும்.

(இ - ள்) (இந்த இராமதத்தை) ஈன்ற - இப்பிறப்பில் தன்னைப்பெற்ற, தாய் என்பதன்றி - தாயென்பதுமல்லாமல், இறந்த நாள் - முன்னே கழிந்த நாளிலும், (ஏற்பட்ட), சிறந்த - சிறப்பாகிய, அன்பின் - ஆசையினால், (இந்தச் சிம்மசந்திரன்), தோன்றினான் ஆதலானும் - இவள் கருப்பத்திலேயே பிறந்தானாகையினாலும், (இப்போது), பிரிவின் - இவளுடைய பிரிவினால், மா துயரமுற்றான் - மிகுந்த வருத்தமடைந்தான், (இவ்வுலகில்), ஆன்றவர்க்கு - பெரியோர்களிடத்து, ஆய - உண்டாகிய, நன்றி - நன்மையானது, அணுவும் - அணுவளவா யிருப்பதும், மேருவாகி - மகாமேருவுக்குச் சமானமாகப் பெரிதாகி, ஏழ்பிறவி தோறும் - மறுபடியுண்டாகும் எழு பிறப்புக்களிலும், வீடு எய்து காறும் - மோக்ஷமடையும் பரியந்தமும், தொடர்ந்து - சேர்ந்து, தோன்றும் - விளங்கும், எ - று. (சகூ)

406. பகைவர்தம் நண்பு போலப் பைந்தொடிப் பவழ வாயார்
முகைமுலை கண்ணுந் தோளு முறுவலுஞ் செறிய வந்த
வுவகையி னோடு நாளி லுறுதவ னொருவன் வந்தான்
புகரிலா நெறி விளக்கும் பூரசந் திரனென் பானே.

(இ - ள்) (இப்படி யிருக்கும்போது) பைந்தொடி - பசுமையான வளையல்களையும், பவழவாயார் - பவழம்போன்ற வாயையுமுடைய ஸ்திரீகளின், முகை - தாமரை மொக்குப்போன்ற, முலை - ஸ்தனங்களும், கண்ணும் - கண்களும், தோளும் - தோள்களும், முறுவலும் - புன்சிரிப்பும், செறிய - தன்னிடத்தே சேர, வந்த - அவற்றினாலே வந்த, உவகையின் - சந்தோஷத்தில், பகைவர்தம் - சத்துருக்களுடைய, நண்பு போல - உள்ளன்பிலாத சிநேகத்தைப்போல, (அகப்பற்றின்றி யிருந்து), ஓடுநாளில் - (மேற்கூறியபடி) சிம்மச்சந்திரன் இல்லறத்தில் செல்கின்ற காலத்தில், புகரிலா - குற்றமில்லாத, நெறி - சன்மார்க்கத்தை, விளக்கும் - தெரிவிக்கும்படியான, பூர சந்திர னென்பான் - பூரணச் சந்திரனென்னும் பெயரையுடையானாகிய, உறுதவன் ஒருவன் - மகாதபஸையுடைய ஒரு முனிவன், வந்தான் - அவனிடத்தே வந்து சேர்ந்தான், எ - று. (சுo)

407. வந்தமா தவன்றன் செந்தா மரையடி வணங்கிப் பூத்தூ
யந்தமி லுவகை யெய்தி யம்பொன்மங் கலங்க ளேந்தி
இந்துவா ணுதலி னாரோ டெதிர்கொண்டு பணிந்து புக்குச்
சுந்தரத் தலத்தி னேற்றித் துகளடித் துகிலி னீக்கி

(இ - ள்) (அப்போது சிம்மசந்திரன்) இந்து - சந்திரப் பிறைபோன்ற, வாள் - ஒளி பொருந்திய, நுதலினாரோடு - ஸ்திரீமார்களுடனே, எதிர்கொண்டு - முன்னேபோய், வந்த - அவ்வாறு வந்த, மா - பெரிய, தவன் தன் - தவத்தை யுடைய அந்த முனிவனின், செம் - சிவந்த, தாமரை - தாமரை மலர்போன்ற, அடி - பாதங்களை, வணங்கி - நமஸ்கரித்து, (அவற்றிலே), பூ - புஷ்பங்களை, தூய் - தூவி, அந்தமில் - முடிவில்லாத, உவகை - சந்தோஷத்தை, எய்தி - அடைந்து, அம்பொன் - மிகுந்த அழகினையுடைய, மங்கலங்கள் - அஷ்ட மங்க லங்களை, ஏந்தி - எடுத்து, பணிந்து - மீண்டும் வணங்கி, புக்கு - அவரை அழைத் துக்கொண்டு அரண்மனைக்குள்ளே புகுந்து, சுந்தரம் - அழகு பொருந்திய, தலத் தின் - இடத்தில், ஏற்றி - உட்காரவைத்து, அடித்துகள் - அவருடைய பாத தூளியை, துகிலின் - தனது உத்தரீய வஸ்திரத்தினால், நீக்கி - துடைத்து, எ-று.

அரசன் முனிவரைக் கண்டவுடன் முதலில் ஒருமுறை வணங்கி மலர்களால் அவர் பாதங்களில் அர்ச்சித்து அஷ்டமங்கலங்க ளேந்தி மீண்டும் ஒருமுறை வணங் கினனென்க. (௬௪)

408. மணிமலர்க் கலச நீரான் மாசறக் கழுவி வாசந்
தணிவிலா மாலை சாந்தஞ் சருவினா லருச்சித் தாற்றி
யிணையிலா முனிவன் பாதம் பணிந்துநா லமிர்த மீந்தாங்
கணியினாற் பணியும் போழ்தி லமரருஞ் சிறப்புச் செய்தார்.

(இ - ள்) மணி - அழகிய, மலர் - புஷ்பஞ் சூட்டப்பெற்ற, கலசம் - கும் பத்திலுள்ள, நீரால் - ஜலத்தினால், மாசற - அழுக்கு நீங்க, கழுவி - அப்பாதத்தைச் சுத்திகரித்து, வாசம் - வாசனையில், தணிவில்லா - குறைவில்லாத, மாலை - பூமாலை களாலும், சாந்தம்-சந்தனத்தாலும், சருவினால் - பலகாரங்களினாலும், அருச்சித்து - (அவர்முன்) அர்ச்சனை பண்ணி, ஆற்றி - பூசனையை முடித்து, இணையிலா - உவமையில்லாத, முனிவன் - அம்முனிவரது, பாதம் - பாதங்களில், பணிந்து - (மற்றொருமுறை) வணங்கி, நாலமிர்தம் - நால்வகையாகிய ஆகாரத்தை, ஈந்து - அவருக்கு அளிக்க, (அவ்வாறு), அணியினால் - அழகோடு, பணியும் போழ்தில் - அவன் சிறப்புச்செய்து அம்முனிவரை வணங்குகிற காலத்தில், ஆங்கு - அவ் விடத்தில், அமரரும் - தேவர்களும், சிறப்பு - பஞ்சாச்சரியத்தை, செய்தார் - செய்தார்கள், எ - று.

ஈய என்பது ஈந்து எனத் திரிந்து வந்தது. (௬௫)

409. வந்தவ ணியம முற்றி யிருந்தமா தவனை வாழ்த்தி
அந்தமும் பிறவிக் குண்டோ வில்லையோ வருளு கென்ன
அந்தமுண் டாகும் பான்மை யணியவர்க் கருந்த வத்தான்
மைந்தமற் றவையி லார்க்கு மாற்றிடைச் சுழற்சி யேயாம்.

(இ - ள) (அதன்மேல்) அவண் - அவ்விடத்தில், வந்து - வந்து சேர்ந்து, நியமம் - தம்முடைய நியமங்கள், முற்றி - முடிய (அதாவது நியமங்களை முடித்துக்கொண்டு), இருந்த - தங்கிய, மாதவனை - உத்கிருஷ்டமாகிய தபஸையுடைய முனிவரரை, வாழ்த்தி - சிம்மசந்திரன் ஸ்தோத்திரம்பண்ணி, பிறவிக்கு - இச் சம்ஸார பிறப்புக்கு, அந்தமும் - முடிவும், உண்டோ - உண்டாகுமோ, இல்லையோ - உண்டாகாதோ, அருளுக - அதன் விவரத்தை எனக்கு உபதேசித்தருள்வீராக, என்ன - என்று கேட்க (அவன்), மைந்த - ராஜபுத்திரனே !, பான்மை - பவ்வியத்துவ குணமாகிய, அணியவர்க்கு - அழகைப்பெற்ற பாவிநாத்மர்களுக்கு, அருந்தவத்தால் - அரிதாகிய தபஸினால், அந்தமுண்டாகும் - முடிவு உண்டாகும், அவையிலார்க்கு - அந்தப்பவ்வியத்துவமும் தபஸும் இல்லாதவர்களுக்கு, மாற்றிடை - நற்கதிக்கு மாற்றமாயிருக்கின்ற இச்சம்ஸாரத்திலேயே, சுழற்சியே யாம் - முடிவில்லாமல் சுழன்றுகொண் டிருப்பதே சம்பவிக்கும், எ - று.

முற்றவென்பது முற்றியெனத் திரிந்து வந்தது. (ருகூ)

410. பான்மையின் பரிசென் னென்னிற் பழுத்தலுக் காற்றல் பிந்தி
ஈனமாய்ப் பெருகி வந்த திலையிடைக் கனியு மிவ்வா
றூனமொன் றிலாத பான்மை யுயிரிடைக் கனியும் வீட்டைத்
தானம்பன் னிரண்டின் மெய்ம்மைத் தவத்திலை யடுத்த போழ்தே.

(இ - ள) ஈனமாய் - முதலில் குறைவாயிருந்து (அதாவது: சிறிதாயிருந்து), பெருகி - பின்னும் கொஞ்சங் கொஞ்சமாகப் பெருத்து, வந்தது - வந்த வாழைக் காயானது, (இயற்கையிலேயே மரத்தில் பழுக்கக்கூடியது எனினும் அதனைத் தாறுடன் அறுத்து வாழைச்சருகு முதலிய இலைகளோடு சேர்த்துப் புதைத்து வைத்தால்), இலையிடை - அந்த இலைகளின் நடுவிலிருந்தும், கனியும் - பழுக்கும், இவ்வாறு - இந்தப் பிரகாரமே, பான்மையின் - மேற்கூறிய பவ்வியத்துவத்தினுடைய, பரிசு - குணமானது, என்னெனில் - யாதென்றால், பழுத்தலுக்கு - அது சம்ஸாரத்தின் முடிவை அடைதற்கு, ஆற்றல் - (இயற்கையிலேயே) சக்தியுடையதா யிருத்தலாம், (எனினும்), பிந்தி - பிறகு, ஊனமொன்றிலாத - குற்றமொன்றுமில்லாத, பான்மை - அந்தப் பவ்வியத்துவமானது, உயிரிடை - ஆத்மனிடத்தில், தானம் பன்னிரண்டின் - பன்னிரண்டு ஸ்தானவரிசையாகிற, மெய்ம்மை - உண்மை பொருந்திய, தவத்திலை - தபமாகிய இலையை, அடுத்த

போழ்து - சேர்ந்த காலத்தில், வீட்டை - சம்ஸார விடுதலையாகிற மோட்சமென்னுங் கனிதலை, கனியும் - பழுக்கும், எ - று.

பான்மை இயற்கையிற் பழுத்தலாவது ஒருவன் உபதேசமில்லாமல் தபஸைக்கொண்டு வீடு அடைதலாம். அது தவஞ்செயினென்றல் பழுக்குமென்றது, ஒருவன் உபதேசத்தால் தபஸைக் கைக்கொண்டு வீடு அடைதலாம். (௩௪)

411. மெய்த்தவத் தன்மை தானும் வென்றவர் படிமந் தாங்கிச்
சித்தமெய் மொழிகண் மூன்றி லிருதொடர்ப் பாட்டி னீங்கிப்
பத்தறம் பன்னி ரண்டாந் தவத்தொடு பயின்று தன்கண்
உத்தமக் காட்சி ஞான வொழுக்கத்தை யழுத்தல் கண்டாய்.

(இ - ள்) மெய் - உண்மையாகிய, தவம் - தபஸினுடைய, தன்மை தான் - குணமானது, (யாதெனின் ஒருவன்), வென்றவர் - கர்மங்களை ஜெயித்திரா நின்ற அருக பரமனுடைய, படிமம் - ரூபமாகிய நிர்க்கந்த ரூபத்தை, தாங்கி - தரித்து, சித்தம் மெய் மொழிகள் மூன்றில் - மனம் காயம் வசனம் என்னும் மூன்றினாலும், இருதொடர்ப்பாட்டின் - பாஹ்யாப்யந்தர மென்னும் இரண்டு பரிக்கிரகங்களினின்றும், நீங்கி - விலகி, பத்தறம் பன்னிரண்டாந் தவத்தொடு - தசதர்மமும் துவாதச வித தபஸுமாகிய இவற்றோடும், பயின்று - பழகி, தன்கண் - தன்னிடத்தில், உத்தமம் - மேலான, காட்சி - நிச்சய தரிசனத்தையும், ஞானம் - சுத்த ஞானத்தையும், ஒழுக்கத்தை - சுத்த ஸ்திதி ஸ்வரூப லக்ஷணமாகிய சாரித்திரத்தையும், அழுத்தல் - ஸ்தாபித்தலாம், கண்டாய் - நீ இவற்றைத் தெரிந்து கொண்டனையா? எ - று.

கண்டாய் என்பது ஒருவகை அசையுமாம். பாஹ்யபரிக்கிரகம் 10, அப்யந்தர பரிக்கிரகம் 14. இவற்றின் விவரத்தை அறநெறி பேர்வழியென்னும் புத்தகத்திற் கண்டுகொள்க.

தான், உம் - அசைகள். (௩௫)

412. தானெனப் படுவ தெட்டு வினைவிட்ட தன்மை தன்கண்
ணூன மி லனந்த நான்மை யிருமையு மொருமை யாகி
யானென தென்ன நீங்கும் வினையன்றி யாக்கை சுற்றம்
யானென தென்ன நீங்கா தெண்வினைத் தொடரு மென்றான்.

(இ - ள்) தான் எனப்படுவது - தான் என்று சொல்லப்படுவது, எட்டு வினை - அஷ்ட கர்மங்களாம், விட்ட தன்மை - அவற்றினின்றும் நீங்கிய தன்மையாவது, தன்கண் - தன்னிடத்திலே, ஊனமில் - குற்றமில்லாத, அனந்த நான்மை - அனந்த ஞானாதி அனந்த சதுஷ்டய குணங்கள் பொருந்தியிருக்க

லாம், இருமையும் - தான் என்கிற சுத்தாத்ம திரவியமும் அதன் குணமாகிய அனந்த ஞானாதியும் ஆன குணிகுணங்களை, ஒருமையாக்கி - அபேத விவக்ஷை யாக்கி, யான் - இந்த ஆத்மத்ரவியம் நானே, எனது - இந்த அனந்த ஞானாதி குணம் என்னுடையதே, என்ன - என்று பாவனைசெய்து ஸ்வானுபூதியாக அறிய, வினை - அஷ்டகர்மங்கள், நீங்கும் - ஆத்மனை விட்டகலும், அன்றி - அப்படியல் லாமல், யாக்கை - எடுத்திராநின்ற சரீரம், யான் - நானே, சுற்றம் - பந்துக்களாதி யான சமூகம், எனது - என்னுடையதே, என்ன - என்று உபசரிதா னுபசரித அசத்பூத வியவகாரமான அசுத்த பரிணாமத்தால் எண்ண, எண்வினைத் தொடரும் - அஷ்டகர்மங்களின் சேர்க்கையும், நீங்காது - ஆத்மனைவிட் டகலாது, என்றான் - என்று முனிவரன் சொன்னான், எ - று. (௫௬)

413. என்றலு மெனதும் யானு மிவையென மயங்கிக் கீழ்நா
ணின்றியான் கதிக ணான்கிற் சுழன்றன னெறி யறிந்த
வின்றுநா னிவற்றி னீங்கா தொழிவனே லென்க ணீங்கா
தொன்றினா லொன்று நில்லா தொழிகவித் தொடர்ச்சி யென்றான்.

(இ - ள்) என்றலும் - என்று முனிவரன் சொல்லவும், எனதும் - என்னுடையதும், யானும் - நானும், இவையென - முன்சொன்ன பந்துக்களாதியும் இச்சரீரமுமான இவைகளேயென்று, மயங்கி - (உபசரித அனுபசரித அஸத்பூத நயங்களில்) பிரமித்து, கீழ்நாள் - கடந்த நாட்களில், நின்று - (சுத்த நிச்சய நயம் தெரியாமல்) நின்று, யான் - நான், கதிகள் நான்கில் - சதுர்க்கதிகளில், சுழன்றனன் - பிறப்பிறப்புக்களினாற் சுழற்சி யடைந்தேன், நெறி அறிந்த - (நீர் ஸ்வரூபங்களைச் சொல்ல அவற்றால்) நன்மார்க்கத்தினைத் தெளிந்த, இன்று - இப்பொழுது, நான் - யான், இவற்றின் - இவற்றினின்றும், நீங்காதொழிவனேல் - விலகாமற் போவேனாயின், என்கண் - ஆத்மனாகிய என்னிடத்தே, நீங்கா - அக்கருமங்கள் விலகமாட்டா, ஒன்றினால் - (நான் ஆத்ம குணங்களில்) பொருந்தினால், ஒன்றும் - யாதொரு வினையும், நில்லாது - நிற்கமாட்டாது, (ஆகையால்), இத்தொடர்ச்சி - இந்த அன்னியத் திரவியப்) பற்று, ஒழிக - என்னைவிட்டு நீங்குவதாக, (அதாவது: அது என்னைவிட்டு நீங்க நான் சுத்த ஜீவஸ்வரூப பாவனையாகிய தன்மையைக் கொள்வேனாக), என்றான் - என்று சிம்மச்சந்திரவரசன் சொன்னான், எ - று. (௫௭)

414. நெருப்பிடைக் கிடந்த செம்பிற் பட்டநீர்த் துள்ளி போலும்
விருப்பிடைக் கிடந்த வுள்ளத் தெழுந்தவே கத்தி னின்பந்
திருத்திபைச் செய்யு மென்று புலத்தினைச் செறிய நிற்றல் [நே.
நெருப்பைநெய் தெளித் தவிப்பா னெழுந்தவ னினைப்பி னான்

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும்) நெருப்பிடை - நெருப்பினிடத்தில், கிடந்த - தங்கியிருந்து (கொதிப்பேறிய), செம்பில் - செம்பிலே, பட்ட - அடைந்த, நீர்த்துள்ளிபோலும் - ஜலத்துளியை நிகர்க்கின்ற, விருப்பிடை - ஆசையாகிய (அக்கினியில்), கிடந்த - தங்கியிருந்த, உள்ளத்து - மனத்தில், எழுந்த - உண்டாகிய, வேகத்தின் - தீவிரத்தினலாகிய, இன்பம் - சுகமானது, திருத்தியைச் செய்யுமென்று - திருப்தியை உண்டாக்குமென்று, புலத்தினை - அறிவை, செறிய - அதுசேர, நிற்றல் - அதன் வழியிலே நிற்பது, (அதாவது: அறிவால் அதைப்பற்றி நிற்பது), நெருப்பை - அக்கினியை, நெய்த்தெளித்து - நெய்யை ஊற்றி, அவிப்பான் - அவிக்கும்பொருட்டு, எழுந்தவன் - பிரவேசித்தவனுடைய, நினைப்பின் - எண்ணத்தைப்போன்ற, ஒன்று - ஓர் எண்ணமாகும், எ - று. (கூஅ)

415. பூமியந் தரத்து வந்து பொருந்திய புலத்தி ளுசை
யோவிலந் துய்த்தும் வேறோர் சுவையின்மை யுணர்ந்து மீட்டும்
மேவுதற் கெழுதல் மென்று விட்டதை மென்ற லன்றிக்
கூவல்மண் டூகம் போலுங் குணத்தமே நினைக்கி னென்றான்.

(இ - ள) பூமி - இப்பூவுலகத்திலும், அந்தரத்து - தேவலோகத்திலும், வந்து - (நாம்) ஜனனமெடுத்து வந்து, பொருந்திய - சேர்ந்த, புலத்தின் - இந்திரிய விஷயங்களினலுண்டாகிய, ஆசை - விருப்பங்களை, ஓவிலம் - நீங்காதவர்களாய், துய்த்து - இடைவிடாமல் அனுபவித்தும், (அவற்றில்), வேறோர் - வேறு நூதனமாகிய ஒரு, சுவை - ரஸமானது, இன்மை - இல்லாததை, உணர்ந்தும் - அறிந்தும், மீட்டும் - மறுபடியும், மேவுதற்கு - அவற்றைப் பொருந்துதற்கு, எழுதல் - முயற்சித்தல், மென்று விட்டதை - முதலிலே மென்றுமிழ்ந்துவிட்டதை, மென்றல் - மறுபடியும் எடுத்து மெல்லுதலாம், அன்றி - இதுவுமல்லாமல், நினைக்கின் - (இக்குணத்தை நன்றாக) ஆராய்ந்து பார்க்குமிடத்து, (இக்குணமுடைய நாம்), கூவல் - கிணற்றினுள்ளிருக்கப்பட்ட, மண்டூகம்போலும் - (வெளி விஷயமொன்றையுமறியாத) தவளையைப்போன்ற, குணத்தமே - (வேறொரு நிலைத்த சுகத்தை யுணராத) குணத்தையுடையோமாவோம், என்றான் - என்றும் அவ்வாசன் நினைத்தான், எ - று. (கூ௯)

416. பெறற்கரும் பிறவி காட்சி பெருந்தவந் திருந்து மாற்றஞ்
சிறப்புடைக் குலநல் யாக்கை செறிவித்த செழுந் தவத்தை
மறப்பனேல் மாற்றை யாக்கு மிவையும்வந் தணுகா வென்று
திறத்துளி தெரிந்து திங்க ளுமற்குத் தெரியச் சொன்னான்.

(இ - ள்) (அவ்வாறு நினைத்துப் பின்னர்) பெறற்கரும் - பெறுதற்கரிதாகிய, பிறவி - இம்மனிதப் பிறப்பையும், காட்சி - தரிசனத்தையும், பெருந்

தவம் - பெரியதவத்தாலுண்டாகும் அரசையும், திருந்துமாற்றம் - திருத்தமாகிய சொல்லேயும், (அதாவது : ஞானசாஸ்திரத்தையும்), சிறப்புடை - மேன்மையுடைய, குலம் - குலத்தையும், நல்யாக்கை - நல்ல இலக்ஷணம் நிறைந்த சரீரத்தையும், செறிவித்த - ஒருவனை அடைவித்த, செழும் - செழுமை பொருந்திய, தவத்தை - (ஸம்மியத்துவத்துடன் கூடிப் புண்ணியத்திற்கும் ஹேதுவாகிய) தபஸை, மறப்பனேல் - அவன் மறந்து அஞ்ஞானத்துடன் சேர்ந்து மோஹனீயோதய பாவத்தில் வர்த்திப்பானேயானால், (அது), மாற்றை ஆக்கும் - ஸம்ஸாரத்தை உண்டுபண்ணும், (அப்படி உண்டான ஸம்ஸாரத்திலும்), இவையும் - (இங்குக் கூறிய புண்ணியப் பலன்களாகிய) மனித சரீர மாதியானவைகளும், வந்து அணுகா - வந்து சேரமாட்டா, என்று - என்று விளக்கி, திறத்துளி - இந்த ஸம்ஸார தத்காரண மோக்ஷ தத்காரணங்களின் விதத்தை, தெரிந்து - அறிந்து, திங்கள் நாமற்கு - (தன் தம்பியாகிய) பூரணசந்திரனுக்கு, தெரிய - (லௌகீக வைதீக விஷயங்களாகிய நிச்சய வியவகாரப் பகுதிகள்) தெரியும்படி, சொன்னான் - (அவ்வரசன்) கூறினான், எ - று.

'திறத்துளி' என்பதில் உளி - ஏழனுருபு ; திறத்தினிடத்தை (அதாவது : திறத்தை) என விரிக்கவேண்டும். (௬௦)

417\. முன்னஞ்செய் தவத்தின் வந்து முடிந்தநற் பயத்தைக் கண்டாற்
பின்னுமத் தவத்தைச் செய்து பெரும்பய னுகர்ந்தி டாதே
மின்னஞ்சு நுசுப்பி னார்தம் வேட்கையின் வீழ்ந்து போகும்
வன்னெஞ்சற் கில்லை கண்டாய் மாற்றிடைச் சுகமு மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு கூறிப் பின்னரும்) முன்னஞ் செய் - பூர்வத்தில் செய்யப்பட்ட, தவத்தின் - தவத்தினால், வந்து முடிந்த - வந்து கைகூடிய, நற் பயத்தை - நன்மையாகிய புண்ணிய பலன்களை, கண்டால் - அனுபவமாகவும், பார்த்தால், (அஃதிவ்வாறு சுகத்தைக் கொடுக்கக்கூடியதா யிருக்கிறதென்று மகிழ்ந்து) பின்னும் - மறுபடியும், அத்தவத்தை - அந்தத் தவத்தை, செய்து - இயற்றி, பெரும்பயன் - பெரிதாகிய அப்பியுதய நைஶ்ரேயஸபலன்களை, நுகர்ந்திடாது - அனுபவிக்காமல், (தான் அத்தவப்பயனை அனுபவமாகப் பார்த்திருந்தும் அதைவிட்டு) மின் அஞ்சும் - மின்னற்கொடியும் (பார்த்து நாம் உருவத்தில் இதற்கு நிகராகமாட்டோம் என்று நாணி) அஞ்சுகின்ற, நுசுப்பினார்தம் - இடையை யுடைய மாதர்களின், வேட்கையின் - காமவிருப்பத்தில், வீழ்ந்துபோகும் - மூழ்கி யிறந்துபோகின்ற, வன்னெஞ்சற்கு - (கொடுமையாகிய மோஹனீய பரிணாம முடைய) கடினநெஞ்சை யுடையவனுக்கு, மாற்றிடை - முத்திக்கு மாற்றமாகிய இந்த ஸம்ஸாரத்தில், சுகமும் - புண்ணியப் பகுதியாகிய சுகங்களும், இல்லை - உண்டாவதில்லை, என்றான் - என்றும் கூறினான், எ - று.

கண்டாய் - அசை. (௬௧)

418. அருந்தவந் தானஞ் சீல மறிவனற் சிறப்பி வற்றாற்
திருந்திய மனத்தி னாரைத் திருவென்றும் பிரிதல் செல்லாள்
பொருந்தியே நிற்கும் பூமி புகழொடுங் கீர்த்தி போகிப்
பரந்தென்று மவர்க ணீங்கா பகைவரும் பணிவர் கண்டாய்.

(இ - ள்) (அங்ஙனமுரைத்து மேலும்) அருந்தவம் - அரிதாகிய தபஸும், தானம் - நால்வகைத்தானங்களும், சீலம் - சீலாசார முதலிய விரதங்களும், அறிவன் நற்சிறப்பு - கேவல ஞானமுடைய அருகத்பரமேஷ்டிகளுக்குச் சிறப்புச் செய்தல் என்னும் பூஜாபரிணாமமும், (ஆகிய) இவற்றால் - இவைகளால், திருந்திய - திருத்தமாகிய, மனத்தினாரை - மனதையுடைய புண்ணிய பரிணாமமுடையவர்களை, திரு - இலக்குமி, என்றும் - எப்பொழுதும், பிரிதல் செல்லாள் - நீங்கமாட்டாள், பொருந்தியே நிற்கும் - அவர்களிடத்துச் சேர்ந்து நிலை பெற்றேயிருப்பாள், அவர் கண் - அப்படிப்பட்ட சுபப்பரிணாம முடையவரிடத்தே, கீர்த்தி போகிப் பறந்து - கீர்த்தியானது எங்கும் போய்ப்பரவ, புகழொடும் - அந்தக்கீர்த்தியும், பூமி - இந்தப் பூமி ராஜ்ஜியமும், என்றும் - எப்பொழுதும், நீங்கா - நீங்கமாட்டா, பகைவரும் - சத்துருக்களும், பணிவர் - வணங்குவார்கள், எ - று. (௬௨)

419. வேட்கையும் வெகுளி தானும் வெஞ்சொலு மஞ்சொ லார்மேற்
றாட்சியு முதல மன்னர்த் திருவினைத் தவறு செய்யும்
சூட்சியும் பெருமை தானு முயற்சியு மமைச்ச மாதி
மாட்சியைச் செய்து மன்னர் செல்வத்தை வளர்க்கு மென்றான்.

(இ - ள்) வேட்கையும் - வியவஹாரப் பழுதாகிய அத்தியாசையும், வெகுளி தானும் - கோபமும், வெஞ்சொலும் - கடுஞ்சொல்லும், அம் - அழகிய, சொல்லார் மேல் - சொற்களையுடைய ஸ்திரீகளின் மேல், தாட்சியும் - மோகத்தினாலே அவர்களிடத்து வணக்கங்காட்டுதலும், முதல - முதலிய செய்கைகள், மன்னர் - அரசர்களுடைய, திருவினை - ஐசுவரியத்தை, தவறுசெய்யும் - கெடுத்துவிடும், சூட்சியும் - (மேற்சொன்ன கெட்ட குணங்களினின்றும் நீங்கும்) உபாயமும், பெருமை தானும் - உயர்ந்த நற்குணமும், முயற்சியும் - விடாமுயற்சியும், அமைச்சும் - மந்திராலோசனையும், ஆதி - முதலானவைகள், மாட்சியைச் செய்து - அழகைச் செய்து, மன்னர் செல்வத்தை - இராஜாக்களுடைய சம்பத்தை, வளர்க்கும் - விருத்தியடையச் செய்யும், என்றான் - என்றும் சொன்னான், எ - று. (௬௩)

420. இனையன பலவுஞ் சொல்லி யெழின்முடி தம்பிக் கீந்து
கனைகழ லரசர் சூழக் காவலன் போகி யந்த
முனிவரன் சரண மூழ்கி முடிமுதற் றுறந்து நின்றான்
சினைமிசை யணியை நீத்த செறிந்தகற் பகத்தை யொத்தான்.

(இ - ள்) இனையன - இத்தன்மையனவாகிய, பலவும் - பல நீதிகளையும் சொல்லி - உரைத்து, (பின்னர்), எழில் - அழகு பொருந்திய, முடி - இராஜபட டாபிஷேக கிரீடத்தை, தம்பிக்கு - தம்பியான பூரணசந்திரனுக்கு, ஈந்து கொடுத்து, கனை - சப்தியாநின்ற, கழல் - வீரகண்டையை அணிந்த, அரசர் - இரா ஜாக்கள், சூழ - தன்னைச் சூழும்படியாக, காவலன் - சிம்மசந்திரவாசன், போகி போய், அந்தமுனிவரன் - முன்பு தனக்குத் தர்மஞ் சொன்ன அந்தப் பூரணசந்திர முனிவரது, சரணம் மூழ்கி - பாதத்திற் படிந்து, முடி முதல்-சிகைமுதலாகப் பல அணிகளையும், துறந்து - விதியின்படி பரிகரித்து, நின்றான் - தீக்ஷை கைக் கொண்டு நின்றவனாய், சினைமிசை - கிளைகளின் மேலுள்ள, அணியை - ஆபர ணதிகளை, நீத்த - நீக்கிய, செறிந்த - கிளையடர்ந்த, கற்பகத்தை - கற்பக விரு க்ஷத்தை, ஒத்தான் - நிகர்த்தான், எ - று. (சுச)

421. பணமிசை மணிதோல் நஞ்சு பிரிந்ததோர் பணியைப் போல
மணிமுடி யாடை குஞ்சி மனத்திடை மாசு நீக்கிக்
குணமணி யிலக்க மெண்பத் தீரிரண் டணிந்து கோமான்
பணிவினுஞ் சீல மாலை பதினெண்ணா யிரந் தரித்தான்.

(இ - ள்) (அவ்வாறு தவத்திற் சென்ற அவன்) பணமிசை - படமுடி யின் மேலுள்ள, மணி - இரத்தினத்தையும், தோல் - உடம்பிலுள்ள சட்டை யையும், நஞ்சு - பற்களிலுள்ள விஷத்தையும், பிரிந்தது - விட்டு நீங்கியதாகிய, ஓர் - ஒரு, பணியைப்போல - சர்ப்பத்தைப்போல, மணிமுடி - இரத்தின கிரீடத் தையும், ஆடை - வஸ்திரத்தையும், குஞ்சி - மயிர் முடியையும், மனத்திடை - மனத்திலுண்டாகிய, மாசு - அப்பியந்தரப் பற்றுக்களையும், நீக்கி - பரிகரித்து, எண்பத்தீரிரண்டு இலக்கம் - எண்பத்து நான்கு லக்ஷமாகிய, குணம்மணி - குணவிரதங்களென்னும் இரத்தினங்களை, அணிந்து - தரித்து, கோமான் - சர்வக்ஞ னாகிய இறைவனது, பணிவினும் - வணக்கத்தினாலுண்டாகின்ற, பதினெண் ணாயிரம் - பதினெண்ணாயிரமாகிய, சீலமாலை - சீலாசாரமென்னும் மாலைகளையும், தரித்தான் - அணிந்தான், எ - று. (சுரு)

422. தயாவெனுந் தைய லாளைச் சாலவுஞ் செறிந்து தன்க
ணுசாவெனு முறுதித் தோழ னுடன்புணர்ந் துறக்க மென்னு
மயால்செய்யு மடந்தை தன்னை மனத்தகத் தகற்றி மாண்பி
னயாவுயிர்த் திருக்கை வைத்தா னருந்தவக் கொடியை யண்ணல்.

(இ - ள்) தயாவெனும் - ஜீவதயவென்கிற, தையலாளை - மாதை, சால வும் - மிகவும், செறிந்து - அடைந்து, தன்கண் - தன்னிடத்தேயுள்ள, உசா வெனும் - ஆராய்தலென்கிற, உறுதி - உறுதியாகிய, தோழனுடன் - சிநேக

னுடனே, புணர்ந்து - சேர்ந்து, உறக்கமென்னும் - நித்திரை யென்கின்ற, மயால் செய்யும் - மயக்கத்தைச் செய்கின்ற, மடந்தைதன்னை - மாதை, மனத்தகத்து - மனத்தினுள்ளே, அகற்றி - இல்லாமல் போக்கி, மாண்பின் - ஸ்வசம்வேதன ஞானப்பிரத்தியக்ஷமென்னும் மாக்ஷிமையினால், அயாவுயிர்த்து - இளைப்பாறி, அண்ணல் - பெருமையிற் சிறந்தவனாகிய அச்சிம்மசந்திர முனிவரன், அரும் - தாங்குதற் கரிதாகிய, தவக்கொடியை - தபஸாகிற ஸ்திரீயை, இருக்கை வைத்தான் - தன்னிடத்திலே இருக்கையாகச் சேர்த்து வைத்துக்கொண்டான், எ - று.

## வேறு.

423. வினைகளுக் குதிர்ச்சி வேட்கை நீக்கிமெய் வசம்வரல்
புனைவரும் பொறிச் செறிப் புயிர்க்கழிவு போற்றுதல்
நினைவின தொருக்கமு நெறிவிளக்க முஞ்செயு
மனசன தவத்தினோ டருந்தவன் பொருந்தினான்.

(இ - ள்) (மேலும்) வினைகளுக்கு - சில கர்மங்களுக்கு, உதிர்ச்சி - நிர்ஜரையாக, வேட்கை - ஆசையை, நீக்கி - விலக்கி, மெய் - சரீரமானது, வசம் வரல் - ஆத்மாப்பியாச அறிவு காட்சிகளில் வியவகரிப்பதற்கு வசமாக வருதலும், புனைவரும் - சேர்க்கையாக வருகின்ற, பொறி - பஞ்சேந்திரியங்களின், செறிப்பு - அடக்கமாகிய விஷய ஸம்யமமும், உயிர்க்கு - ஸ்தாவர சங்கம ஜீவன்களுக்கு (ஏற்படும்), அழிவு - கெடுதியை (நீக்கி), போற்றுதல் - அவற்றைப் பாதுகாத்தலாகிய பிராணி சம்யமமும், நினைவினது - தியானத்தினது, ஒருக்கமும் - சேர்க்கையும், நெறி - மோக்ஷ மார்க்கத்தினது, விளக்கமும், - பிரகாசமுமாகிய (இவைகளை யெல்லாம்), செய்யும் - செய்தற்குக் காரணமாகிய, அனசன தவத்தினோடு - அன்னம் புசியாமல் உபவாசமிருந்து செய்யும்படியாகிய முதல் பாஹ்ய தவத்தினோடு, அருந்தவன் - அரிய தபத்திற்குரிய அம்முனிவரன், பொருந்தினான் - சேர்ந்தான், எ - று.

அசனம் - அன்னம் புசித்தல், அனசனம்-அன்னம் புசியாத உபவாசம். (கூஎ)

424. புகாமிகிற் பொறிமிகு மனசனம் பொருந்திடின்
நெகாவுடம் புடன்படாது நாட்கணீதி மாதவன
புகாவினைச் சுருக்க மெய் யுடன்படும் பொறிகளும்
மிகாவென விரும்பியாவ மோதுரிய மேவினான்.

(இ - ள்) புகா - அசனமானது, மிகின் - மிகுந்தால், பொறி - இந்திரியங்கள், மிகும் - விஷயங்களில் விருத்தியடையும் (அதனால் ராகாதிகள் அதிகமாகும்; அதனால் கர்மபந்தத்துக்குக் காரிய காரணமாகும்), அனசனம் - உபவாசத்தையே, பொருந்திடில் - சர்வதா அனுஷ்டித்தால், உடம்பு - இச்சரீரமானது, நெகா -

நெகிழ்ந்து (அதாவது தளர்ச்சியடைந்து), உடன்படாது - (ஞானதியானஸ்வாத்தி யாய முதலானவைகளைப் பழக) வசப்படாது, (ஆகையினால்) மாதவன் - மஹா தவத்தைச் செய்யும் இச்சிம்மசந்திர முனிவன், நாள்கள் - நாள்களில் (அதாவது தினந்தோறும்), நீதி - ஆகமோக்த கிரமமாக, புகாவினை - அன்னத்தை, சுருக்க - கவளங்கவளமாகக் குறைத்துத் தின பக்ஷமாசாதி உபவாஸங்களில் பழக்க, மெய் - சரீரம், உடன்படும்-வசத்துக்கு வரும், பொறிகளும்-ஸ்பரிசனாதி இந்திரிய விஷயங் களும், மிகா - அதிகமாகமாட்டா, என-என்று, விரும்பி-விருப்பத்தையுடையனாகி, ஆவமோதரியம் - ஆவமோதரியமென்னும் இரண்டாவது பாஹ்யதபஸை, மேவி னான் - பொருந்தினான், எ - று.

ஆகமோக்த கிரமவரிசை - யதியாசாரமென்னும் ஆகமத்தில் சொல்லப்பட்ட வரிசை. (கூஅ)

425. இருத்தல்போதல் நிற்றல்மண் ணிடைக்கிடத்த லில்லுயிர்
வருத்தமெய்தி டாமை யோம்புங் காயகுத்தி மாதவன்
திரப்பிதஞ்செல் தேசகால பாவமெல்லை செய்துணும்
விருத்திசங்க மம்மெனும் விழுத்தவம் பொருந்தினான்.

(இ - ள்) (மேலும்) இருத்தல் - உட்கார்ந்திருப்பதிலும், போதல் - நடந்து செல்வதிலும், நிற்றல் - நிற்பதிலும், மண்ணிடை - இப்பூமியின்மேல், கிடத்த லில் - படுத்திருப்பதிலும், உயிர் - ஜீவன்கள், வருத்தம் - யாதொரு உபத்திரவத் தையும், எய்திடாமை - அடையாதபடி, ஓம்பும் - (அவற்றை) இரக்ஷிக்கின்ற, காயகுத்தி - காய்குப்தியையுடைய, மாதவன் - இம்முனிவன், திரப்பிதம் - திரவி யம் (அதாவது வஸ்துக்கள்), செல் - போகின்ற, தேசம் - க்ஷேத்திரம் (அதாவது இடம்), காலம் - நேரம் (அதாவது நாழிகை), பாவம் - பரிணாமம் (ஆகிய இவை களை), எல்லை செய்து - அளவுபடுத்தி, உண்ணும் - அந்தக்கிரமத்தின்படி பிக்ஷை பண்ணுகிற (அதாவது ஆகாரம் ஏற்று உண்ணுகிற), விருத்தி சங்கமமெனும் - விருத்திபரிசங்கியானமென்னும், விழு - பரிசுத்தமாகிய, தவம் - பாஹ்யதபஸை யும், பொருந்தினான் - சேர்ந்தான், எ - று.

திரவியம், தேசம், காலம் முதலியவற்றை அளவுபடுத்தி ஆகாரம் கொள்வ தாவது :—இன்றைக்கு இத்தனை வஸ்துக்களுக்கு மேல் புசிப்பதில்லை யென்றும், பிட்சைக்காக இத்தனை தெரு அல்லது இத்தனை வீடுகளுக்கு மேல் போவதில்லை யென்றும், இவ்வளவு நாழிகைக்கு மேற்பட்டால் புசிப்பதில்லை யென்றும் பரி ணாமத்தை அளவு படுத்தி ஆகாரங்கொள்வதாம். (கூகூ)

426. நவைக்கெலா மிடமிதென்று நாவதன் புலத்தினிற்
சுவைக்கண் மேவல் விட்டறத் துறந்துநின் றவற்றினும்

உவத்தல்காய்த லின்றியொத்து நின்றசித்த மெய்த்தவன்
சுவைப்பரித்தி யாகமாகு மாதவத்தொ டொன்றினுன்.

(இ - ள) (பின்னரும்) எவற்றினும - எந்த விஷயங்களிலும், உவத்தல் - சந்தோஷித்தலும், காய்தல் - வெறுத்தலும், இன்றி - இல்லாமல், ஒத்துநின்ற - சமத்துவபாவத்தோடு கூடி நின்ற, சித்தம் - மனத்தையுடைய, மெய் - உண்மையாகிய, தவன் - தபஸையுடைய சிம்மச்சந்திர முனிவரன், நவைக்கெலாம் - துன்பத்திற்கெல்லாம், இடம் - ஸ்தானமானது, இதென்று - இதுவேயாகுமென்று நாவதன் புலத்தினில் - ரஸனேந்திரிய விஷயத்தினுல், சுவைக்கண் - ரஸங்களின் மேல், மேவல் - மனம் பொருந்துவதை, விட்டு - விடுத்து, அறத்துறந்து - முழுதும் நீங்கி, நின்று - அந்நிலையில் நின்று, சுவைப்பரித்தியாகமாகும் - ரஸபரித்தியாக மென்று சொல்லப்படும், மா - பெரிய, தவத்தொடு - பாஹ்யதபத்துடன் ஒன்றினுன் - பொருந்தினுன், எ - று. (௭0)

427. கவந்தமோரி கூகைபேய் நிவந்த காடு பாழக
முவந்தியானை வாளரி யுழுவைநின் றுழல் வனங்
குவிந்தரவு வெம்புலி குமிறுமால் வரைமுழை
யுவந்திராச சீயமொன்று போலவே றுறைந்தனன்.

(இ - ள) (அவ்வாறு பொருந்தி) கவந்தம் - தலையற்றவுடல்களும், ஓரி - குள்ளநரிகளும், கூகை - கோட்டான்களும், பேய் - பைசாசங்களும், நிவந்த - மிகுதியாகிய, காடு - சுடுகாட்டையும், பாழகம் - பாழ்மனைகளையும், உவந்து - சந்தோஷித்து, (அவற்றில் தங்கியும்), யானை - யானைகளும், வாள் - பிரகாசமான நிறம் பொருந்திய, அரி - சிம்மங்களும், உழுவை - புலிகளும், நின்று - நிலைபெற்று, உழல் - திரிகின்ற, வனம் - வனத்தையும், குவிந்து - கூட்டமாகி, அரவு - சர்ப்பங்களும், வெம் - கொடுமையான, புலி - புலிகளும், குமிறும் - சீறிமுழங்குகின்ற, மால் - பெரிய, வரை - பருவதங்களிலுள்ள, முழை - குகைகளையும், உவந்து - விரும்பி அவற்றில் தங்கியும், இராசசீயம் - அரசசிங்கம், ஒன்று போல - ஒன்றைப்போல, வேறு - தனியாக, உறைந்தனன் - அந்தச் சிம்மசந்திர முனிவரன் தங்கினுன் (அதாவது விவிக்த சையாஸனமென்னும் தபஸைப் பொருந்தினுன்), எ - று. (௭௧)

428. வேனல்வெம்பு கான்மலை வெயின்னிலையின் மேவியும்
வானமாரி சோருநாண் மரம்முதன் மருவியும்
ஊனுருக்கும் வன்பனிக் கடற்புறத்து வெள்ளிடைக்
கானயானை போலமூன்று காலயோகு தாங்கினுன்.

(இ - ள்) (அதன் மேலும்) வேனல் - வெய்யில், வெம்பும் - மிகுதியாக தகிக்கின்ற, கால் - காலமாகிய கிரீஷ்மத் காலத்திலே (அதாவது கோடைக்காலத்தில்), மலை - பர்வதத்தின் மேல், வெய்யில் - வெய்யிலில், நிலையின் - நிற்பதாகிய ஆதபயோகத்தில், மேவியும் - பொருந்தியும், வானம் - ஆகாயத்தினின்றும், மாரி - மழையானது, சோருநாள் - பொழிகின்ற வருஷாகாலத்தில், (அதாவது மழைக் காலத்தில்), மரம்முதல் - மரத்தினடியில், மருவியும் - சேர்ந்து நின்றும், ஊன் - மாமிசத்தை, உருக்கும் - உருகச் செயயும் (அதாவது கரைக்கும்), வன் - கடுமை யாகிய, பனி - பனிக்காலத்தில், கடற்புறத்து - சமுத்திரத்தின் பக்கத்திலுள்ள, வெள்ளிடை - யாதொரு மறைவுமில்லாத வெளியிடத்தில், மருவியும் - சேர்ந்தும், கானயானைபோல் - காட்டில் வசிக்கும் யானையைப்போல, மூன்றுகாலயோகு - திரிகால யோகங்களையும், தாங்கினான் - தரித்தான், (அதாவது காயக்கிலேசமென் னும் ஆருவது பாஹ்யதபஸையும் பொருந்தினான்), எ - று.

'மருவியும்' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (எஉ)

429. அரியவா யுலகெலாம் விலையிலா வருங்கலத்
திரயமெய் யணிந்தவர் செய்கைசொன் மனங்களான்
மரியமா சினைக்கெடுக்கு மத்திவார மாகிய
பெரியவர் மனங்கொளப் பெருந்தவம் பொருந்தினான்.

(இ - ள) (பின்னரும்) அரியவாய் - பெறுதற்கருமையானவைகளாகியும், உலகெலாம் - இந்த மூன்று லோகமும், விலையிலா - விலைப்பொருளாகக் கொடுப் பதற்குப் பொருந்தாதனவாகியும் (இருக்கின்ற), அருங்கலத்திரயம் - அரிதாகிய ரத்தினத்திரயத்தை, மெய் - மெய்யில், அணிந்தவர் - தரித்தவர்கள், செய்கை - காரியத்திற்கேதுவாகிய சரீரத்தாலும், சொல் மணங்களால் - வசனத்தாலும் மனதாலும் (அதாவது: மனவசனகாயங்களால்), மரிய-ஏதோசலன வசத்தால் சேர்ந்த, மாசினை - குற்றத்தை (அல்லது ஆஸ்ரவத்தை), கெடுக்கும் - போக்கும்படியான, அத்திவாரமாகிய - அஸ்திவாரமாகிய, (அதாவது அடிப்படையாகிய அல்லது முதன்மையாகிய பிராயச்சித்தமென்னும்), பெரியவர் - தத்துவஞானிகளாகிய பெரியோர்கள், மனங்கொள் - மனதிற்கொள்கின்ற, அப்பெருந்தவம் - அந்தப் பெரிதாகிய அப்பியந்தர தபத்தை, பொருந்தினான் - சேர்ந்தான், எ - று.

காரியத்தால் வந்த குற்றம் அதன் காரணத்தை யோசித்து விடுத்தால் தீரு மென்பது இதனால் பெறப்பட்டது. இந்தப்பிராயச்சித்த லக்ஷணம் பதார்த்த சாரத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (எங)

430. பெறற்கரிய காட்சிமெய் யுணர்ச்சிநல் லொழுக்கின்மே
விறப்பெய்தாமை மெய்ம்மொழி மனத்துழந் திறைஞ்சுதல்

சிறப்புடை யறத்தவர்க் கெதிரெழுச்சி யாதியித்
திறத்தநால் விநயமும் சிறந்துமா தவஞ்செய்தான்.

(இ - ள்) (அதன் மேல்) பெறற்கரிய - பெறுதற்கரிய, காட்சி - சம்யக் தரிசனமும், மெய்யுணர்ச்சி, சம்யக்ஞானமும், நல்லொழுக்கின்மேல் - சம்யக் சாரித்ரமுமாகிய இந்த ரத்னத்ரயங்களின் பேரில், குறைப்பெய்தாமை - விடுதல் இல்லாமையும், மெய் - சரீரத்தினாலும், மொழி - வசனத்தினாலும், மனத்து - மனத்தினாலும், உழந்து - பொருந்தி, இறைஞ்சுதல் - வணங்குதலாகிய தரிசன விநயம் ஞானவிநயம் சாரித்ரவிநயமும், சிறப்புடை - மேன்மையையுடைய, அறத்தவர்க்கு - அந்த ரத்னத்ரயத்தில் வர்த்தியா நின்றவர்களுக்கு, எதிரெழுச்சி - எதிர்கொண்டு வணங்குதலும், ஆதி - முதலாகிய, இத்திறத்த - இப்படிப்பட்ட, நால்விநயமும் - நான்கு வகையான விநயங்களும், சிறந்து - தன்னிடத்தே சிறப்பாக வளர, மா - பெரிதாகிய, தவம் - அந்த விநய தபத்தையும், செய்தான் - இச் சிம்மச்சந்திர முனிவன் இயற்றினான், எ - று. (௩௰௪)

431. பெருத்த நோன்பு வன்பிணிகள் பீடைமூ வியோகமாந்
திருத்தமேவி னார்கள்தியான நல்வதத்தொ டொன்றினார்
விருத்தர் வாலர் மெல்லியா ரறத்தைமேவி நின்றவர்
வருத்த நீக்கி யோம்புவையா வச்சமு மருவினான்.

(இ - ள்) (அவ்வாறியற்றியதோடு) பெருத்த - பெரிதாகிய, (அதாவது சம்யக்துவ பூர்வமான), நோன்பு - நோன்பும், வன்பிணிகள் - கொடுமையான வியாதிகளும், பீடை - மற்றும் துன்பங்களும், மூவியோகமாம் - திரிகால யோகங் கள் சேர்ந்த, திருத்தம் - திருந்திய தபஸும், (ஆகிய இவற்றை), மேவினார் - அடைந்தவர்களும், தியானம் - தர்மத்தியான சுக்கிலத்தியானமும், நல் - நன்மை யாகிய, வதத்தோடு - அணுவிரத குணவிரத சிக்ஷாவிரத மஹாவிரதங்களும் ஆகிய இவற்றுடனே, ஒன்றினார் - கூடிய பேர்களும், விருத்தர் - விருத்தாப்பியர் களும், வாலர் - பாலவயதுடையவர்களும், மெல்லியார் - சரீர சக்தியற்றவர்களும், (அல்லது ஸ்திரீ ஜாதியாரும்), அறத்தை - சம்யக்துவத்தில் கூடிய தர்மத்தை, மேவி நின்றவர் - பொருந்தி நின்றவர்களும், (ஆகிய இவர்களுடைய), வருத்தம் - ஏதோ கர்ம வசத்தால் நேரிட்ட உபசருக்கங்களை, நீக்கி - தனது குணத்துக்கும் அழிவுவாராமல் பரிகரித்து, ஓம்பும் - இவர்களை உபசரிக்கின்ற, வையாவச்சமும் - வையா விருத்தியமென்னும் அப்யந்தர தபஸையும், மருவினான் - சிம்மச்சந்திர முனிவரன் சேர்ந்தான், எ - று. (௩௰௫)

வேறு.

432. யாக்கைக்க ணிச்சை நீக்கு மெழுத்தின்மேற் பழுத்த சொல்லை
வாக்குநின் றமிழு மச்சொல் வசத்ததாஞ் செவியு முள்ளம்

நோக்குமப் பொருளின் மெய்ம்மை நுகர்ந்தெழுந் தெளிவி வற்றை
யாக்குநல் லொழுக்கிற் சால வருந்தவன் விரும்பிச் சென்றான்.

(இ - ள்) (மேலும்) யாக்கைக்கண் - சரீரத்தினிடத்தே, இச்சை - ஒரு பொருளின்மேலுண்டாகிய விருப்பமானது, நிற்கும் - நிலைபெறும், (அது விஷயமாக) எழுத்தின்மேல் - அக்ஷரங்களின் மேலதாய் (அதாவது அக்ஷரங்களினாலே), பழுத்த - கனிவு பெற்றுண்டாகிய, சொல்லை - வசனத்தை, வாக்கு - வாயானது, நின்று - நிலைபெற்று, உமிழும் - வெளிப்படுத்தும், (அதாவது: சொல்லும்), செவியும் - காதும், அச்சொல்வசத்ததாம் - அந்த வசனத்தின் வசப்பட்டதாகும், (அதாவது: அதற்கிசையும்), உள்ளம் - மனதானது, அப்பொருளின் - அந்தப் பொருள்களினது, மெய்ம்மை - யதார்த்தியத்தை, நோக்கும் - ஆராய்ந்து பார்க்கும் (அதாவது: அறியும்), தெளிவு - தரிசன விசுத்தியானது, நுகர்ந்து - அதனை அநுபவித்து (அதாவது: சுவானுபூதி ஞானத்தையடைந்து), எழும் - ஓங்கி நிலைபெற்று நிற்கும், இவற்றை - இப்படி ஏற்படும் இவைகளையெல்லாம், ஆக்கும் - செய்விக்கும், நல் - நன்மையாகிய, ஒழுக்கில் - ஸ்வாத்தியாயத்தில் (அதாவது. சாஸ்திரம்படித்தலென்னும் அப்யந்தர தபஸில்), சால - மிகவும், அருந்தவன் - அரிய தபத்தைச்செய்யும் இம்முனிவன், விரும்பி - இச்சித்து, சென்றான் - பிரவேசித்தான் (அதாவது: அதனை அனுஷ்டித்தான்), எ - று. (௪௩)

433. ஆர்த்தரவுத் திரத்த சிந்தை யறவெறிந் துயிரை மாற்றிற்
பேர்த்துமுத் திக்கண் வைக்குந் தருமசுக் கிலத்தி யான
மோர்த்துட னுள்ளம் வைத்தா னுதிர்ந்தன வினைகள் பின்னைப்
பார்த்திப குமரன் சிந்தைப் பரமமா முனிவ னானான்.

(இ - ள்) (அதன் மேல்) ஆர்த்தரவுத்திரத்தசிந்தை - ஆர்த்தத்தியானம் ரவுத்திரத்யான மென்னும் அசுபத்தியானங்களையுடைய சிந்தையை, அறவெறிந்து - பற்றில்லாமல் முழுவதும் நீக்கி, உயிரை - ஜீவனை (அதாவது: ஆத்மனை), மாற்றில் - சம்ஸாரத்தினின்றும், பேர்த்து - நீக்கி, முத்திக்கண் - மோக்ஷத்தினிடத்தில், வைக்கும் - சேர்க்கும்படியான, தரும சுக்கிலத்தியானம் - தருமத்தியானம் சுக்கிலத்தியான மென்கின்ற சுபத்தியானங்களை, ஓர்த்து - நன்றாக வறிந்து, உடன் - உடனே, உள்ளம் - மனதில், வைத்தான் - ஸ்தாபித்தான், பின்னை - பிறகு, வினைகள் - சில கர்மங்கள், உதிர்ந்தன - நிர்ஜரையை அடைந்தன, (அவ்வாறாகவே), பார்த்திபகுமரன் - முன் அரசகுமாரனாயிருந்த இச்சிம்மச்சந்திரன், (இப்போது), சிந்தை - தியானத்தினால், பரமம் - மேலான, மா - பெருமை பொருந்திய, முனிவனானான் - யதீஸ்வரனானான், எ - று.

ஆர்த்தத்தியானம் :—இஷ்டவியோகம், அனிஷ்டசம்யோகம், லாபஜம், ரோகஜம் என நான்கு வகைப்படும்.

ரௌத்திரத்தியானம் :— ஹிம்ஸானந்தம், ம்ருஷானந்தம், ஸ்தேயானந்தம், சம்ரக்ஷணானந்தம் என்பனவாம்.

தர்மத்தியானம் :— ஆஜ்ஞாவிசயம், அபாய விசயம், விபாக விசயம், சம்ஸ்தான விசயம் என்பனவாம்.

சுக்கிலத்தியானம் :— ப்ருதக்த்வ விதர்க்க வீசாரம், ஏகத்வ விதர்க்க வீசாரம், சூக்ஷ்மக்கிரியாப்ரதிபாதி, வியுபாதக்கிரியா நிவிருத்தி என்பனவாம்.

இவற்றின் விவரங்களை பதார்த்தசாரத்தில் கண்டு கொள்க.

ஏகாதசவிதமான நிர்ஜரைகளின் விதங்களை, தத்துவார்த்த சூத்திரவியாக்கியானமாகிய சர்வார்த்தசித்தி, சுகபோகை, ஸ்ருத சாகரேயம் முதலானவைகளில் நிர்ஜராதிகாரமென்னும் ஒன்பதாவது அதிகாரத்தில் பார்த்துக்கொள்க. (எ)

434. பொய்சித்த மகற்றி ஞான நாட்சிநல் லொழுக்கம் பேணி
மிச்சத்தம் வேத நோகி யகத்தின்மேல் விருப்பை மாற்றி
வைத்துத்தன் காய தேச முதற்புறத் தன்பு மாற்றி
விச்சித்தி யின்றிச் சென்றான் வியுற்சர்க்க தவத்தி னோடே.

(இ - ள்) (அவ்வாறாகி) பொய் - அசத்பூதோபசரிதானுபசரிதங்களை, சித்தம் - மனதினின்றும், அகற்றி - நீக்கி, ஞானகாட்சி நல்லொழுக்கம் பேணி - சம்யக்ஞான தரிசன சாரித்ரங்களை சத்பூதோபசரிதானுபசரிதத் தன்மையால் தெளிந்து ரக்ஷித்து, மிச்சத்தம் - மித்தியாத்துவமும், வேதநோகி - வேதநோகியும் (அதாவது: வேதத்திரயம், ஹாஸ்யாதிஷட்கம் க்ரோதாதி சதுஷ்கமும் ஆகிய), அகத்தின்மேல் விருப்பை - இந்த அந்தரங்க பரிக்கிரகத்தின்மேல் உளதாகும் ஆசையை, மாற்றி - நீக்கி (அதாவது: அந்தரங்க பரிக்கிரக பரித்தியாகம் பண்ணி), வைத்து - ஸ்வாத்மத்தியானத்தில் மனத்தை வைத்து, தன் காய தேசம்முதல் - தனது சரீரமிருக்கப்பட்ட க்ஷேத்திரம் முதலாகவுள்ள, புறத்தன்பு - பாஹ்ய பரிக்கிரகத்தின் ஆசையையும், மாற்றி - நீக்கி, (இந்தச் சர்வசங்க பரித்தியாகமென்னும்) வியுற்சர்க்கதவத்தினோடு - வியுத்சர்க்க தபஸில், விச்சித்தியின்றி - நழுவுதலில்லாமல், சென்றான் - ப்ரவேசித்தான் (அதாவது சேர்ந்தான், எ - று.

வேதத்திரயம் :— ஸ்திரீவேதம், பும்ஸவேதம், நபும்ஸகவேதம் என்பனவாம்.

ஹாஸ்யாதிஷட்கம் :— ஹாஸ்யை, ரதி, அரதி, சோகம், பயம், சுகுப்ஸை என்பனவாம்.

க்ரோதாதி சதுஷ்கம் :— க்ரோதம், மானம், மாயை, லோபம் என்பனவாம்.

பாஹ்ய பரிக்கிரகம் பத்துவகைப்படும். அவையாவன :— க்ஷேத்திரம், வாஸ்து, இரண்ணியம், ஸ்வர்ணம், தனம், தான்யம், தாசி, தாசன், குப்யம்,

பாண்டம் என்பனவாம்; இவற்றில் ஹிரண்ணியம், ஸ்வர்ணம் என்பவை இரண்டும் ஒரு பொருளையே குறிப்பினும் இங்கு இரண்டாக விவரிக்கப்பட்டிருக்கின்றன. இதன் விவரத்தைச் சுகபோதையென்னும் நூலில் சப்தமாதிகாரத்தில் இருபத்தொன்பதாவது சூத்திர வியாக்கியானத்தால் தெரிந்துகொள்க. (எஅ)

435. அடக்கமீ ராறுஞ் சிந்தை யாறிரண் டோடு மொன்றித்
துடிப்பறப் பரிசை வெல்லுந் தோன்றிய வொழுக்கந் தன்னால்
தடுப்பின்றி யுலக மூன்றிற் றன்னெல்லை விரியும் போழ்தும்
வடுப்படா விபுல மென்னும் மனப்பரி யத்தைப் பெற்றான்.

(இ - ள்) (அதன் மேல்) அடக்கம் ஈராறும் - பிராணி சம்யமம் விஷயசம்யம மாகிய பன்னிரண்டும், சிந்தை ஆறிரண்டோடும் - துவாதசானுப்பிரேக்ஷையும் ஆகிய இவற்றோடும், ஒன்றி - பொருந்தி, தோன்றிய - உண்டாகிய, துடிப்பற - சலனமானது நீங்க, பரிசை - பரீஷகங்களை, வெல்லும் - ஜெயிக்கும்படியான, ஒழுக்கந்தன்னால் - சம்யக்சாரித்ர பலத்தினால், தடுப்பின்றி - தடையில்லாமல், உலகம் மூன்றில் - மூன்றுலகத்தில், தன்னெல்லை - தனக்குண்டாகிய அளவு, விரியும் போழ்தும் - விசாலிக்கின்ற காலத்திலும், வடுப்படா - குற்றமடையாத, விபுலமென்னும் - விபுலமதியென்னும், மனப்பரியத்தை - மனப்பரியஞானத்தை, பெற்றான் - அடைந்தான், எ - று.

சம்யக்ஞான பஞ்சகத்தில் மனப்பரியஞானமும் ஒன்று. இந்த ஞானங்களின் விவரங்கள் பதார்த்தசாரத்தில் ஞானாதிகாரத்திலும், உபயோகாதிகாரத்திலும், தத்துவார்த்த சூத்திர வியாக்யானமாகிய சர்வார்த்தசித்தி, சுகபோதை முதலியவைகளில் பிரதமாத்தியாயத்திலும் விரிவாகவும், இம்மேருமந்தர புராணம் பதின்மூன்றாவது சருக்கத்தில் சுருக்கமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றைப் பார்த்துக்கொள்க. (எகூ)

436. சீரணி யடக்கஞ் செய்தோர் பற்றறா காயஞ் செல்லுஞ்
சாரணத் தன்மை பெற்று மாதவன் சரிக்கு நாளுட்
போரணி யானை வேந்தன் பூரசந் திரன்றன் சிந்தை
வாரணி முலையி னார்தம் வசஞ்சென்று மயங்கு கின்றே.

(இ - ள்) (மேற்கூறியவற்றை யெல்லாம் அடைந்ததோடு) சீரணி - சிறந்த அழகையுடைய, அடக்கம் செய்து - ஈராறடக்கங்களைப் பொருந்தி, ஓர் - ஒப்பற்ற (அதாவது பெரிய), பற்றற்று - பற்று நீங்கி, (அதாவது : யாதொரு பரிக்கிரகத்திலும் பற்றில்லாமல் நிஸ்ஸங்கத்துவனாகி), ஆகாயஞ்செல்லும் - ஆகாயத்திற்செல்லும்படியான, சாரணத்தன்மை - ஆகாய சாரணத்துவமென்கிற ரித்தியை, பெற்று - அடைந்து, மாதவன் - மஹாதபஸையுடைய இச்சிம்மசந்திரமுனிவன்,

சரிக்கும் நாளுள் - சஞ்சரிக்கின்ற நாட்களில், போர் - போர் செய்யக்கூடிய, அணி - அழகிய, யானை - யானையையுடைய, வேந்தன் - அரசனாகிய, பூரசந்திரன் றன் - பூரணசந்திரனுடைய, சிந்தை - மனமானது, வாரணி - இரவிக்கையை அணிகின்ற, முலையினார்தம் - ஸ்தனங்களையுடைய ஸ்திரீமார்களின், வசம்சென்று - வசத்திற்போய், நின்று - நிலைபெற்று, மயங்கும் - மயங்குவதாயிருந்தது, எ - று.

437. இசையின்மே லசுண மாவு மிளையவர் முலையி னின்பப்
பசையின்மா சுணமுங் கண்ணின் புலங்களிற் பறந்து வந்து
விசையினால் விளக்கின் வீழும் விட்டிலும் போன்று வேந்தன்
இசையுநா ளிராம தத்தை முனியைவந் திறைஞ்சி னாளே.

(இ - ள்) இசையின்மேல் - சங்கீதத்தின்மேல், அசுணமாவும் - கேகயபக்ஷியும், இளையவர் - இளமைப்பருவத்தையுடைய ஸ்திரீகளின், முலையின் - ஸ்தனங்களிலுண்டாகும், இன்பப்பசையில் - சுகப்பற்றில், மாசுணமும் - ஸர்ப்பமும், கண்ணின்புலங்களில் - நேத்திரேந்திரிய விஷயங்களில், பறந்துவந்து - பறந்தவலாகி வந்து, விசையினால் - வேகத்தினால், விளக்கின்வீழும் - தீபத்தில் வீழ்கின்ற, விட்டிலும் - விட்டிற்பூச்சியும், (பற்றுவைத்திருப்பதை) போன்று - நிகர்த்து, வேந்தன் - பூர்ணச்சந்திரவரசன், இசையும் நாள் - (அவ்வாறு) ஸ்திரீகளின் இச்சையில் பொருந்தியிருக்கின்ற காலத்தில், இராமதத்தை - இராமதத்தாரியாங்கனை, வந்து - வந்து சேர்ந்து, முனியை - சிம்மசந்திர மகாமுனியை, இறைஞ்சினாள் - வணங்கினாள், எ - று. (அக)

438 புடையவர் மெலியப் பொங்குங் கடையவர் செல்வம் போல
இடையது மெலிய வீங்கி யெழுந்திணை திருந்த கொங்கை
கடையவ ரிடருற் றந்கீழடி யடைவ தேபோல்
இடையடி யடையக் கண்டு துறந்தவெம் மிறைவ போற்றி.

(இ - ள) (அவ்வாறு வணங்கியவள் அம்முனியை நோக்கி) புடையவர் - பக்கத்திலுள்ள பெரியோர், மெலிய - மெலிவையடைய, பொங்கும் - (அதனால்) அதிகரிக்கும், கடையவர் - தாழ்ந்தகுணமுடையவர்களுடைய, செல்வம்போல - செல்வத்தைப்போல, இடையது - இடுப்பானது, மெலிய - மெலியும்படி (அதாவது : தளரும்படி), வீங்கி - பருத்து, எழுந்து - மார்பினிடமாக வுண்டாகி, இணைதிருந்த - இரட்டையாகச் சேர்ந்திருந்த, கொங்கை - தனங்கள், கடையவர் - மேற்கூறிய கீழ்மக்கள், இடருற - கேட்டையடைய, தங்கீழ் - அப்போது அந்தப் பெரியோர் தங்களின் கீழுள்ள, அடி - பாதத்தில்,' அடைவதேபோல் - சரணமாகச் சேருவதைப்போல, இடையடி - இடையினது அடியில், அடையக்கண்டு - சேரப் பார்த்து, (பெண்களின் பெருமிதம் இவ்வளவுதான் என்று வெறுத்து வைராக்கிய

முற்று), துறந்த - ஸம்ஸார வாழ்வை நீத்த, எம் இறைவ - எங்கள் சுவாமியே!, போற்றி - உன்னைத் துதிக்கின்றேன், எ - று. (அஉ)

439. காம்பெனத் திரண்டு மைந்த ருள்ளத்தைக் கனற்று மென்றோள்
பாம்பின துரியைப் போலப் பசையற்றுத் திரையக் கண்டுந்
தேம்பலில் மொழியி னார்தந் திறத்துளி வெறுத்துப் போந்து
காம்புடை யடவி சேர்ந்த காவல பாதம் போற்றி.

(இ - ள்) காம்பென - மூங்கிலைப்போல, திரண்டு - திரட்சிபொருந்தி, மைந்தர் - விடபுருஷர்களுடைய, உள்ளத்தை - மனதை, கனற்றும் - விருப்பத்தால் வெதும்பச் செய்கின்ற, மென் - மிருதுவாகிய, தோள் - ஸ்திரீகளின் தோள்கள், பாம்பினது - பாம்பினுடைய, உரியைப்போல - சட்டையைப்போல, பசையற்று - இரத்தப்பற்றற்று, திரைய - பின்னே திரைதலையடைய, கண்டும் - பார்த்தும், தேம்பலில் - வாடுதலில்லாத, மொழியினார்தம் - வார்த்தைகளையுடைய அந்த ஸ்திரீகளினது, திறத்து - நிலையற்ற வனப்பின் விதத்தில், உள்ளி - நினைத்து, வெறுத்து - விராகமுற்று, போந்து - அவர் கூட்டுறவை விட்டு நீங்கி வந்து, காம்புடை - மூங்கில்களை மிகுதியாகவுடைய, அடவி - காட்டில், சேர்ந்த - அடைந்து தவஞ் செய்கின்ற, காவல - ரக்ஷகனே!, பாதம் - உன்னுடைய அடிகளை, போற்றி - துதிக்கின்றேன், எ - று.

கண்டும் என்பதிலுள்ள உம்மை - இறந்தது தழுவிய எச்சப்பொருளது. ()

440. பெரியவர் பாதஞ் சேர்ந்த பேதையர் சிந்தை போலக்
கரியமென் கூந்தல் காலத் தாற்கறுப் பொழியக் கண்டும்
புரவலர் செல்வம் பார்க்கிற் புற்புதம் போலு மென்றும்
மருவிய வரசு நீத்த மாதவ பாதம் போற்றி.

(இ - ள்) பெரியவர் - ஞானவந்தர்களுடைய, பாதம் - அடியை, சேர்ந்த - அடைந்த, பேதையர் - அறிவில்லாதவர்களுடைய, சிந்தைபோல - மனதைப் போல, (அதாவது : அம்மனமானது பரிசுத்தமாவது போல), கரிய - கறுப்புநிற முள்ள, கூந்தல் - அளகமானது, காலத்தால் - கால முதிர்ச்சியின் சேர்க்கையால், கறுப்பொழிய - தனது கருமை நிறம் நீங்க, கண்டும் - அதனைப்பார்த்தும், பார்க்கின் - ஆராயுமிடத்து, புரவலர் செல்வம் - இராஜாக்களுடைய ஐசுவரியமும், புற்புதம்போலும் - நீர்க்குமிழியை நிகர்க்கும், என்றும் - என்று நினைத்துச் செல்வம் நிலையாமையை அறிந்தும், மருவிய - சேர்ந்திருந்த, அரசு - இராஜஐசுவரியத்தை, நீத்த - விட்டுத் தவங் கைக்கொண்ட, மா - சிறந்த, தவ - தவத்தையுடைய ஸ்வாமியே!, பாதம - உன் அடிகளுக்கு, போற்றி, ஸ்துதி செய்கின்றேன், (என்று பலவாறு துதித்தனள்), எ - று. (அக)

441. ஏத்தருங் குணனை யிவ்வா றேத்திய விராம தத்தை
பார்த்தறம் பகரக் கேட்டுப் பணிந்தன ளிருந்து பின்னும்
வார்த்தையுண் டிறைவ கேளுன் மாதவத் திடையூ றேனும்
பார்த்திபக் குமரன் பால தெனமுனி பகர்க வென்றான்.

(இ - ள்) ஏத்தரும் - துதித்தற் கருமையாகிய, குணனை - ஸம்யக் குணத்தையுடைய ஸிம்மச்சந்திர முனிவரனை, இவ்வாறு - இந்தப் பிரகாரம், ஏத்திய - துதித்த, இராமதத்தை - இராமதத்தையானவள், பார்த்து - அம்முனிவன் தன்னைப்பார்த்து, அறம் - தர்மத்தை, பகர - சொல்ல, கேட்டு - கேட்டறிந்து, பணிந்தனள் - அவனை மீண்டும் வணங்கியவளாய், இருந்து - அவன் சமீபத்திலுட்கார்ந்து, பின்னும் - மேலும் (அவனை நோக்கி), இறைவ - சுவாமி!, பார்த்திப குமரன் பாலது - இராஜ குமாரனாகிய பூரணசந்திரனிடத்தைச் சார்ந்ததாகிய, வார்த்தை - சில மொழிகள், உண்டு - இருக்கின்றன, (அவற்றைக் கேட்பது) உன் மாதவத்து - உன்னுடைய சிறந்த தபஸினது, இடையூறேனும் - விக்கினமாயிருந்த போதிலும், கேள் - கேட்பாயாக, என - என்று சொல்ல, முனி - அம்முனிவன் (அவளை நோக்கி), பகர்க - அம்மொழிகளைச் சொல்வாயாக, என்றான் - என்று உரைத்தான், எ - று. (அ)

442. மங்கலத் தொழில்கள் முற்றி மணிமுடி கவித்து வந்து
திங்கள்வெண் குடையி னீழற் சீயவா சனத் திருந்தான்
பொங்குசா மரைகள் வீசப் பொன்மலைக் குவடு தன்னிற்
சிங்கவே றிருந்த தொத்தான் சீயமா சேனன் மைந்தன்.

(இ - ள்) (அப்போது இராமதத்தை அம்முனிவரனை நோக்கி) சீயமா சேனன் - சிம்மச்சந்திர மகாராஜனுடைய, மைந்தன் - குமாரனாகிய பூரணசந்திரன், மங்கலத்தொழில்கள் - அரசர்களுக்குத் தினந்தோறும் உண்டாகிய மங்கல காரியங்களை, முற்றி - முடித்து, மணிமுடி - இரத்தின கிரீடத்தை, கவித்து - சிரசிற் சூட்டி, வந்து - கொலுமண்டபத்திற்கு வந்து சேர்ந்து, திங்கள் - சந்திரன் போன்ற, வெண்குடையின் - வெள்ளைக் குடையினது, நீழல் - நிழலில், பொங்கு - அதிகரிக்கின்ற, சாமரைகள் - சாமரைகளை, வீச - வார விலாஸனிகள் வீச, சீய ஆசனத்து - சிங்காசனத்தின்மேல், இருந்தான் - இருந்தவன், பொன்மலை - மஹா மேரு பர்வதத்தினுடைய, குவடுதன்னில் - சிகரத்தின்மேல், சிங்கவேறு - ஒரு ஆண்சிங்கமானது, இருந்தது - இருந்ததை, ஒத்தான் - நிகர்த்தான், எ - று. ()

443. இளஞ்சிங்க வேற்றைச் சூழ்ந்த விரும்புலிப் போத கம்போற்
களங்கண்டு முழங்கும் யானைக் காவல குமரர் சூழ்ந்தார்

உளங்கொண்ட வமைச்ச ராதி சூழவந் தூர்கோள் வட்டத்
திளந்திங்க ளாகிப் பூர சந்திர னிருந்திட் டானே.

(இ - ள்) (அப்படி யிருக்கும்போது) இளஞ்சிங்க வேற்றை - இளமை யாகிய ஆண் சிங்கத்தை, சூழ்ந்த - சூழ்ந்திருந்த, இரும் - பெரிதாகிய, புலிப்போதகம்போல் - புலிக்குட்டிகளைப்போல, களங்கண்டு - யுத்த களத்தைப் பார்த்து, முழங்கும் - கர்ஜிக்கின்ற, யானை - யானைகளையுடைய, காவலகுமரர் - பல தேசத் தரசகுமாரர்கள், வந்து - இவ்விடத்தில் வந்து, சூழ்ந்தார் - சூழ்ந்துகொண்டார்கள், பூரசந்திரன் - பூர்ணசந்திர அரசன், உளங்கொண்ட - தன் மனதிற்குச் சரியாய் ஆய்ந்தமைத்துக்கொண்ட, அமைச்சராதி - மந்திரியர் முதலானவர்கள், சூழ - தன்னைச்சூழ, ஊர்கோள் வட்டத்து - பரிவேடத்தினது வளைவில் உள்ள, இளந் திங்களாகி - பால சந்திரனுக்குச் சமானமாகி, இருந்திட்டான் - இருந்தான், எ-று.

வேறு

444. காமத் திருவின் மஞ்சரியுங் கமலத் திருவுங் கடலமிர்தும்
பூமொய்த் தெழுந்த விளங்கொடியும் புனமென் மயிலு மனையார்கள்
வாமப் புருவச் சிலைகோலி மலர்க்கண் ணம்பு தெரிந்துமனம்
காமக் கோமான் வில்லிகள்போற் கடிதார் மன்னன் புடைசூழ்ந்தார்.

(இ - ள்) (அச்சமயத்தில்) காமத்திரு - மன்மதனுடைய செல்வமாகிய ரதிதேவியையும், இன் - இனிய, மஞ்சரியும் - பூங்கொத்தையும், கமலத்திருவும் - தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கிற இலக்ஷ்மி தேவியையும், கடல் - க்ஷீரசமுத்திரத்திலுள்ள, அமிர்தும் - அமிர்தத்தையும், பூ - புஷ்பங்கள், மொய்த்து - நெருங்கி, எழுந்த - உண்டாகிய, இளங்கொடியும் - இளமையாகிய புஷ்பக்கொடியையும், புனம் - காட்டில் வசிக்கின்ற, மெல் - மிருதுவாகிய, மயிலும் - மயிலையும், அனையார்கள் - ஒத்த ஸ்திரீமார்கள், வாமம் - அழகு பொருந்திய, புருவம் - புருவமாகிற, சிலை - வில்லை, கோலி - வளைத்து, மலர் - நீலோற்பல புஷ்பம் போன்ற, கண் - தங்கள் கண்களாகிற, அம்பு - பாணங்களை, மனம் - மனதினால், தெரிந்து - ஆராய்ந்தெடுத்து எறிட்டெய்து, காமக்கோமான் - ஆசைக்குத் தலைவனாகிய மன்மதராஜனது, வில்லிகள்போல் - வில் வீரர்களைப்போல, கடி - வாசனையையுடைய, தார் - மாலையையணிந்த, மன்னன் - பூர்ணசந்திர அரசனது, புடை - பக்கத்தில், சூழ்ந்தார் - சூழ்ந்து கொண்டார்கள், எ - று. (அஅ)

வேறு.

445. பார்த்திபா தருதிறை கொண்டு பைம்பொனு
லார்த்தியிம் மண்ணினை யமிர்தச் செப்பென

வார்க்கடங் காமுலை யார் மகிட்சியிற்
போர்க்கடா யானையான புரிந்து செல்லுநாள்.

(இ - ள்) (அவ்வாறு சூழ) பார்த்திபர் - அநேக தேயத்தரசர்கள், தரு - கொடுக்கின்ற, திறை - பகுதியை, கொண்டு - கைக்கொண்டு, பைம்பொன்னால் - பசுமையாகிய பொற்காசுகளினால், இம்மண்ணினை - இப்பூமியில் மறைவாக வைக்கும்படியான பண்டோபஸ்துள்ள நிலவறையாகிய தனது பாண்டாகார அறையை, ஆர்த்தி - நிரப்பி, அமிர்தச் செப்பென - அமிர்தம் நிறைந்த செப்பென்று சொல்லும்படியாக, வார்க்கு - இரவிக்கைக்கு, அடங்கா - அடங்காமேனாங்கி யிருக்கின்றனவாகிய, முலையார் - ஸ்தனங்களையுடைய ஸ்திரீமார்களினது, மகிழ்ச்சியில் - காமராகத்தினாலாகிய சந்தோஷத்தில், புரிந்து - விரும்பி, போர் - யுத்தத்தைச் செய்யும், கடாயானையான் - ஆண் யானையையுடைய அவ்வரசன், செல்லுநாள் - அவ்வாறு சென்றுகொண்டிருக்குங்காலத்தில், எ - று. (அக)

446. கண்மிசை யவனையான் கண்டு காவல
விண்மிசை யின்பமும் வேந்தர் செல்வமும்
புண்ணிய மிலாதவர்க் கில்லை பூமக
ளெண்ணுவ துஞ்செயா ளென்றி யம்பினேன்.

(இ - ள்) கண்மிசை - எனது கண்ணினால், யான் - நான், அவனைக் கண்டு - அப்பூர்ணசந்திர குமாரனைப் பார்த்து, காவல - அரசகுமாரனே!, விண்மிசை - தேவர் லோகத்தில் ஏற்படும், இன்பமும் - சுகமும், வேந்தர் செல்வமும் - பூமியிலுள்ள இராஜாக்களின் சம்பத்து முதலானவைகளும், புண்ணியம் - பூர்வத்திற் செய்யப்பட்ட புண்ணிய கர்மம், இல்லாதவர்க்கு - இல்லாதவர்களுக்கு, இல்லை - உண்டாவதில்லை (அதுவல்லாமலும்), பூமகள் - லக்ஷ்மிதேவியும் (அல்லது பூமிதேவியும்), எண்ணுவதும் - அவர்களை நினைத்தலும், செய்யாள் - செய்ய மாட்டாள், என்று இயம்பினேன் - என்று சொன்னேன், எ - று.

மிசை - ஏழனுருபு; இஃதுருபுமயக்கம்; மூன்றனுருபு ஏழனுருபாக மயங்கி வந்தது. (கo)

447. உருவமு மழகுநல் லொளியுங் கீர்த்தியும்
செருவிடை வெல்வலத் திறனுஞ் சிந்தைசெய்
பொருளவை வருதலும் போக முமநல்ல
திருவுடை யறத்தது செய்கை யென்றனன்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும்) உருவமும் - ரூபமும், அழகும் - வனப்பும், நல் - நல்ல, ஒளியும் - பிரகாசமும், கீர்த்தியும் - புகழ்ச்சியும்,

செருவிடை - யுத்தரங்கத்தில், வெல் - சத்துருக்களைச் செயிக்கும்படியான, வலம் - வன்மைபொருந்திய, திறலும் - பராக்கிரமமும், சிந்தைசெய் - மனதினால் நினைக்கின்ற, பொருளவை - பொருளாகிய அவைகள், வருதலும் - வந்து சேர்வதும், போகமும் - சுகானுபவமும், நல்ல - நன்மையாகிய, திருவுடை - லக்ஷணமுள்ள, அறத்தது - ஸ்ரீஜிந தருமத்தினது, செய்கை - காரியமாகும், என்றனன் - என்றும் யான் சொன்னேன், எ - று. (௬௧)

448. நிலத்திடை யங்குரம் வித்தை நீத்தில
மலைத்தலை மழையிலா தாறு தான்வரா
புலத்திடை யின்பமு மில்லை புண்ணியந்
தலைத்தலை வரச்செயா தவர்கட் கென்றனன்.

(இ - ள்) (மேலும்) நிலத்திடை - இப்பூமியில், வித்தை நீத்து - விதையை நீக்கி, அங்குரம் - முளையானது, இல்லை - உண்டாவதில்லை, மலைத்தலை - பர்வதத்தின்மேல், மழையிலாது - மழைபெய்தல் இல்லாமல், ஆறுதான் - மலையருவியானது, வரா - பெருகிவரமாட்டாது, (இவற்றைப்போல), புண்ணியம் - புண்ணிய ஹேதுவாகிய சம்யக்தவத்துடனே கூடிய விரதாதிகளை, தலைத்தலை - ஒவ்வோரிடத்திலும், வர - மேவும்படி, செய்யாதவர்கட்கு - செய்யாதவர்களுக்கு, புலத்திடை யின்பமும் - பஞ்சேந்திரிய விஷயங்களிலான சம்ஸார சுகமும், இல்லை - உண்டாவதில்லை, என்றனன் - என்றும் சொன்னேன், எ - று. (௬௨)

449. காரண மில்லையே லில்லை காரியம்
போரணி வேலினாய் முன்செய் புண்ணியங்
காரண மாகநீ ருடுத்த கன்னியுஞ்
சீரணி செல்வமுஞ் செறிந்த வுன்னையே.

(இ - ள்) (இவ்வாறு சொல்லிப் பின்னர்) காரணமில்லையேல் - காரியத்திற்குக் காரணமாகிய தன்மை இல்லாவிட்டால், காரியம் - அக்காரணத்தாலாகும் காரியம், இல்லை - உண்டாவதில்லை, போர் - யுத்தத்தில், அணி - அழகு பொருந்திய (அதாவது: வெற்றியழகு பெற்ற), வேலினாய் - வேலாயுதத்தையுடைய குமரனே!, முன் - பூர்வத்தில், செய் - உன்னால் செய்யப்பட்ட, புண்ணியம் - புண்ணியமானது, காரணமாக - ஹேதுவாக, நீருடுத்த கன்னியும் - சமுத்திரஞ் சூழ்ந்த இப்பூமிதேவியும் (அதாவது: பூமி ராஜ்யமும்), சீர் அணி - சிறப்பைக் கொண்ட, செல்வமும் - இந்த ராஜ ஐஸ்வர்யமும், உன்னைச் செறிந்த - இப்போது அக்காரணத்தின் காரியமாக உன்னைச் சேர்ந்திருக்கின்றன, எ - று. (௬௩)

450. மண்ணின்மேல் மற்றிந்தச் செல்வ மேல்வர
வெண்ணிநீ புண்ணிய மீண்டச் செய்கெனப்

புண்ணின்மேல் பட்டவேல் போல வச்சொலை
யெண்ணிடா திகழ்ந்தவ னெழுந்து போயினான்.

(இ - ள்) மண்ணின்மேல் - இப்பூமியின்மேல், மற்று - பின்னையும், இந்தச் செல்வம் - இப்படிப்பட்ட ராஜஐஸ்வரியமானது, மேல்வா - மேலாக வரும்படி, எண்ணி - நினைத்து, புண்ணியம் - சுபபரிணாமமாகிய புண்ணியத்தை, ஈண்ட - பொருந்த, நீ செய்கென - நீ இப்போது செய்வாயாக வென்று யான் சொல்ல, (அச்சொல்லானது அவனுக்கு) புண்ணின் மேல் - இரணத்தின் மேல், பட்டவேல் போல - பாய்ந்த வேலாயுதத்தைப் போல (வருத்தஞ் செய்ய அதனால்), அச்சொல்லை - என்னால் சொல்லப்பட்ட அந்தத் தர்ம வசனத்தை, எண்ணிடாது- உயர்ந்ததாக நினைக்காமல், இகழ்ந்து - இகழ்ச்சி செய்து, அவன் - அவ்வாசகுமாரன், எழுந்து போயினான் - என்னை விட்டு நீங்கி எழுந்து போய்விட்டான், எ - று.

451. புலங்கண்மேல் புரிந்தெழு பொறிக ளோம்பியே
விலங்குபோ லேயவன் வீய்ந்து போகுமோ
இலங்குசெம் பொன்னெயி லிறைவ னல்லறத்
தலங்கல்வே லானவ னடையு மோசொலாய்.

(இ - ள்) (ஆதலின்) புலங்கள்மேல் - ஐம்புல விஷய வஸ்துக்களின் மேல், புரிந்து - விரும்பி, எழு - எழுகின்ற, பொறிகள் - பஞ்சேந்திரியங்களையும், ஓம்பி- உபசரித்து, அவன் - அக்குமாரன், விலங்குபோல் - மிருகத்தைப் போல (அதாவது : திரியக் ஜீவனைப்போல), வீய்ந்து போகுமோ - அழிந்துபோவனோ, (அல்லது) இலங்கும் - விளங்கும், செம்பொன் - சிவந்தபொன்னாலாகிய, எயில் - மும்மதில் சூழ்ந்த சமவசரணத்தில் வீற்றிருக்கின்ற, இறைவன் – அருகத்பரமேஸ்வரனால் அருளிச் செய்யப்பட்ட, நல் - நல்ல, அறத்து - ஸ்ரீ ஜிநதருமத்தில், அலங்கல் - மாலையையணிந்த, வேலான் - வேலாயுதத்தை யுடையவனாகிய, அவன் - அவ்வாச குமாரனான பூரணசந்திரன், அடையுமோ - சேர்வானோ, சொல்லாய் - சுவாமி நீ எனக்குச் சொல்வாயாக (என்று கூறினான்), எ - று (கூரு)

வேறு.

452 மாதவி யுரைத்த வெல்லாம் மாதவன் மனத்தை நோக்கும்
போதியி னுணர்ந் தறத்தைப் புரவலன் புரிந்து கொள்ளும்
யாதுநீ கவல வேண்டா மதனுக்கே பேது வாக
வோதுமிக் கதையைக் கேட்டு நீயவற் றுரைக்க வென்றான்.

(இ - ள்) (அவ்வாறு) மாதவி - பெரிய தவத்தையுடைய இராமதத்தாரியாங்கனை, உரைத்தவெல்லாம் - சொல்லியவைகளை யெல்லாம், மாதவன் - பெரிய

தவத்தையுடைய சிம்மச்சந்திர முனிவன், மனத்தை நோக்கும்-பிறருடைய மனோ நிலையைப் பார்த்தறியும்படியான, போதியின் - மனப்பரியாய ஞானத்தால், உணர்ந்து - தான் தெரிந்து, அறத்தை - ஸ்ரீ ஜிநதருமத்தை, புரவலன் - பூரண சந்திரனாகிய அரசன், புரிந்து - விரும்பி, கொள்ளும் - கைக்கொள்ளுவான், யாதும் - எவ்வளவும், நீகவல வேண்டா - நீ வருத்தப்படவேண்டாம், அதனுக்கே - அதற்கே, ஏதுவாக - காரணமாகும்படியாக, ஓதும் - என்றால் சொல்லப்படுகின்ற, இக்கதையைக் கேட்டு - இந்தச் சரித்திரத்தைக் கேட்டு, நீ - நீ, அவற்கு - அக் குமாரனுக்கு, உரைக்க - சொல்லுவாயாக, என்றான் - என்று சொன்னான், எ - று.

453. அடக்கத்தைப் பொதிந் துயிர்க்க ணருளினை யூறி யாறித்
தொடக்கமு முடிவு மொத்துத் தொடுத்ததோர் மாலை தன்னை
எடுத்துட னற்றி னற்போன் றிதத்தையெவ் வுயிர்க்கு மாக்கும்
வடுப்பரிந் திருந்த சொல்லான் மாதவ னுரைக்க லுற்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி) அடக்கத்தை - சம்யமத்தை, பொதிந்து - (தன்னிடத்தே) சேர்த்து, உயிர்க்கண் - சகல ஜீவன்களிடத்திலும், அருளினை - தயவை, ஊறி - மனத்தில் சுரந்து (அதாவது: உண்டுபண்ணி), ஆறி - அதனால் ஆறுதலடைந்து, (அதாவது: பகையென்பதின்றிச் சமத்துவ பரிணாமத்தில் தணிந்து), தொடக்கமும் - ஆரம்பமும், முடிவும் - முடிதலும், ஒத்து - சமமாக, தொடுத்தது - தொடுக்கப்பட்டதாகிய, ஓர் மாலை தன்னை - ஒருமாலையை, எடுத்து - தூக்கி, உடன் - ஒரு தன்மையாக (அதாவது: வக்கிரமில்லாமல்), நாற்றினாற் போன்று - தொங்கவிடுவதைப்போன்று, இதத்தை - நன்மையை, எவ்வுயிர்க்கும் - சகல ஜீவன்களுக்கும், ஆக்கும் - உண்டாக்குகின்றவனும், வடு - குற்றங்களையெல் லாம், பரிந்து - விட்டு நீங்கி, இருந்த - நற்குணத்தைச் சேர்ந்திருந்த, சொல்லான் - வசனத்தையுடையவனுமாகிய, மாதவன் - மஹா தபஸையுடைய சிம்மச்சந்திர முனிவரன், உரைக்கலுற்றான் - மேலே அக்கதையைச் சொல்லத் தொடங் கினான், எ - று. (கூஎ)

பூரணசந்திரன் அரசியற்சருக்கம் முற்றுப்பெற்றது.

——ooooo——

ஐந்தாவது :

# நால்வரும் சுவர்க்கம்புக்க சருக்கம்.

---

454. வாசநின் றறாத சோலை மழையென மதுக்கள் பெய்து
மூசுதேன் முழங்க மஞ்ஞை முகிலென வகவி முத்தின்
றாசுலா மலங்க லார்போற் றொடங்கிய நடங்க ளோவாக்
கோசலை யென்ப துண்டிக் குவலயம் புகழு நாடே.

(இ - ள்) வாசம் - பரிமளமானது, நின்று - வியாபித்து நின்று, அறாத - பற்றறாத, சோலை - தோப்புக்களில், மதுக்கள் - தேன்கள், மழையென - மழையைப் போல, பெய்து - சொரிந்து, மூசும் - அதில் மொய்க்கிடாநின்ற, தேன் - தேனீக் கூட்டங்கள், முழங்க - சப்திக்க, (அம்முழக்கத்தை), மஞ்ஞை - மயில்கள், முகிலென - மேக கர்ஜனையென்று, (நினைந்து); அகவி - சிறகு விரித்தாடி, முத்தின் தாசு - முன்றானையில் முத்துக்கட்டி செய்யப்பட்டிருக்கும் வஸ்திரத்தை அணிந்தவர்களும், உலாம் - மார்பில் அணியப்பட்டசைகின்ற, அலங்கலார்போல் - மாலையை யணிந்தவர்களுமாகிய நர்த்தனமாதர்கள்போல, தொடங்கிய - ஆரம்பிக்கப்பட்ட, நடங்கள் - நடனங்கள், ஓவா - இடைவிடாததும் (அதாவது: நீங்காததும்), இக்குவலயம் - இப்பூமியிலுள்ளவர்கள், புகழும் - புகழ்ந்து கூறத்தக்கதும், கோசலை என்பது - கௌசலையென்று சொல்லக்கூடியதும், (ஆகிய) நாடு - ஒரு தேசமானது, உண்டு - உள்ளது, எ - று. (க)

455. திருத்தகு நாடி தற்குத் திலதமாய்த் திகழ்ந்து சென்றோர்
வருத்தந்தீர் மாட மூதூர் மறையவ ருறையு மாண்ட
விருத்தநற் கிராமந் தன்னுள் மிருகாயண னென்ற மிக்கா
னொருத்தனங் குளனற் சாந்தி யுருவுகொண் டனைய நீரான்.

(இ - ள்) திருத்தகும் - செல்வம் பொருந்திய, நாடு - தேசமாகிய, இதற்கு - இந்தக் கோசல நாட்டுக்கு, திலதமாய் - நெற்றிப்பொட்டுக்குச் சமானமாகி, (அதாவது: மிக அழகாகி), திகழ்ந்து - பிரகாசித்து, சென்றோர் - அதில் அடைபவர்களது, வருத்தம் - சிரமங்கள், தீர் - நீங்கும்படியான, மாடம் - உப்பரிகைகளையுடைய, மூதூர் - பழமையாகிய ஊரானது, மறையவர் - பிராம்மணர்கள், உறையும் - தங்கியிராநின்ற, மாண்ட - மாட்சிமையுடைய, நல் - நன்மை பொருந்திய, விருத்தக்கிராமம் - விருத்த கிராமமாகும், தன்னுள் - அதனுள்ளே, மிருகாயணனென்று - மிருகாயணனென்று பெயர் கூறப்பட்டு, மிக்கான் - பெரியோனாகிய

வனும், நற்சாந்தியுருவு கொண்டனைய நீரான் - நன்மையாகிய க்ஷமையே ஒரு ரூபங்கொண்டு வந்ததை நிகர்த்த குணமுடையவனும், (ஆகிய), ஒருத்தன் - ஒரு பிராமணன், உளன் - உளனாயினான் (அதாவது: இருந்தான்), எ - று.

ந் - அசை. (உ)

456 அதிர்பட நடத்த லில்லா ளவன்மனைக் கிழத்தி யஞ்சொன்
மதுரையென் றுரைக்கப் பட்டாள் மகளும்வா ருணியா முத்தின்
கதிர்நகைக் கருங்கட் செவ்வாய்க் கால்பாந் தெழுந்து பொன்னின்
பிதிர்பரந் திருந்த கொங்கைப் பிணையனா ளொருத்தி யானாள்.

(இ - ள்) அதிர்பட - அதிர்ச்சிபடும்படி, நடத்தலில்லாள் - நடக்காதவளாகிய, (அதாவது: மிருதுவான நடையையும் நற்குணத்தையுமுடையவளாகிய), அவன் மனைக்கிழத்தி - அப்பிராமணன் மனைவியானவள், அஞ்சொல் - அழகிய மொழியைப்பேசும், மதுரையென்று - மதுரையென்று, உரைக்கப்பட்டாள் - பெயர் சொல்லப்பட்டவள், மகளும் - அவளுக்குப் புத்திரியும், வாருணியாம் - வாருணியென்னும் பெயருடையவளாம், (அவள்), கதிர் - பிரகாசம் பொருந்திய, முத்தின் நகை - முத்துக்களைப்போன்ற பற்களையும், கரும் - கருத்த, கண் - கண்ணையும், செவ்வாய் - சிவந்த வாயையும், கால்பாந்து - அடிபரந்து, எழுந்த-மார்பிலுண்டாகிய, பொன்னின் - பொன்போலும், பிதிர் பரந்திருந்த - தேமல் படர்ந்திருந்த, கொங்கை - ஸ்தனங்களையும், (உடைய), பிணையனாள் - பெட்டைமான் போன்ற பார்வை பொருந்தியவளாய், ஒருத்தியானாள் - ஒப்பற்ற அழகுடையவளானாள், எ - று. (௩)

457. கதிர்மறை பொழுதிற் கான்ற கமலமுங் குவளை யும்போல்
மதுரையும் மகளும் வாட மறையவன் மரித்துப் போகி
யெதிர்வரு பிறவி யில்லா ரிடையறு வயோத்தி யாளு
மதிபலன் றனக்குத் தேவி சுமதிக்கு மிளைய யானான்.

(இ - ள்) கதிர் - சூரியன், மறைபொழுதில் - அஸ்தமிக்கின்ற காலத்தில், கான்ற - தோன்றிய, (அதாவது: முகம்சாம்பிக் காணப்பட்ட), கமலமும்-தாமரைப் புஷ்பமும், குவளையும்போல் - குவளைப் புஷ்பமும்போல, மதுரையும் - (அப்பிராமணன் பாரியாளாகிய) மதுரையும், மகளும் - புத்திரியாகிய வாருணியும், வாட - வருத்தமடைய, மறையவன் - மிருகாயணனென்னும் அப்பிராமணன், மரித்துப் போகி - இறந்துபோய், எதிர்வரும் பிறவியில்லார் - இனி வரக்கூடிய பிறவியில்லாமல் மோக்ஷமடைபவர்கள், இடையறு - இடைவிடாமல் பிறக்கும்படியான, அயோத்தி - அயோத்தியென்னும் நகரத்தை, ஆளும் - அரசாளும், அதிபலன் தனக்கு - அதிபலனென்னு மரசனுக்கும், தேவி - அவன் தேவியாகிய,

சுமதிக்கும் - ஸுமதியென்பவளுக்கும், அரிவையானுன் - புத்திரியாக அவதரித் தான், எ - று. (௪)

458 இரணிய வதியென் பாள்பே ரிளமயி லனைய சாயல்
வரிசிலைப் புருவச் செவ்வாய் வல்லிதான் வளர்ந்த பின்னைத்
தரணிமே லரச ரெல்லாந் தையலைத் தருக வென்னச்
சுரமைநா டுடைய தோன்றற் றிண்புயந் துன்னு வித்தார்.

(இ - ள்) பேர் இளமயில் அனைய - மிகுந்த இளமையுள்ள மயிலை நிகர்த்த, சாயல் - சாயலையும், வரி - நீண்ட (அல்லது கட்டுக்களையுடைய), சிலை - வில்லுக் குச் சமானமாகிய, புருவம் - புருவத்தையும், செவ்வாய் - சிவந்த வாயையுமுடைய, வல்லிதான் - புஷ்பக் கொடிபோன்ற அக்குமாரியானவள், இரணியவதியென் பாள் - இரணியவதியென்று பெயர் கூறப்பட்டவளாய், வளர்ந்தபின்னை - வளர்ந்து யௌவன வயதை யடைந்தபிறகு, தரணிமேல் அரசரெல்லாம் - இப்பூமியின்மே லிருக்கும் இராஜாக்களெல்லாம், தையலை - இக்குமாரியை, தருகவென்ன - (மணஞ்செய்து) கொடுக்க வேண்டுமென்று கேட்கவும், (இந்த இரணியவதியின் தாய்தந்தையர் இவளை), சுரமை நாடுடைய - ஸுரம்மிய தேசத்தைச் சொந்தமாக வுடைய, தோன்றல் - பெருமையிற் சிறந்த பௌதனபுராதிபதியான பூரணசந்திர னுடைய, திண்புயம் - கெட்டியான புஜத்தை, துன்னுவித்தார் - சேரும்படி செய் தார்கள் (அதாவது: அவனுக்கு விவாக விதியால் மணஞ்செய்து கொடுத் தார்கள்), எ - று. (௫)

459. போதன புரத்து வேந்தன் பூரசந் திரனுந் தோகை
மாதனம் புணர்ந்து வந்த வின்பத்து மயங்கு நாளுட்
காதலாள் மதுரை யந்தக் காவலன் றேவி தன்பான்
மாதரா ளொருத்தி யானுள் மற்றவ ணீகண் டாயே.

(இ - ள்) போதனபுரத்து - அந்தப் பௌதனபுரத்துக்கு, வேந்தன் - அரச ளுகிய, பூரசந்திரனும் - பூர்ணசந்திரனும், தோகை-ஆண்மயில்போல சரீரச்சாயலை யுடைய ஹிரணியவதியின், மாதனம் - பெரிதாகிய ஸ்தனங்களை, புணர்ந்து - சேர்ந்து, வந்த - வரப்பட்ட, இன்பத்து - காமசௌக்கியத்தில், மயங்குநாளுள் - கலந்தனுபவிக்கின்ற காலத்தில், காதலாள் - முன் பிறப்பில் (ஹிரண்யவதியின் மேல்) வாஞ்சையை யுடைத்தானவளாயிருந்த, மதுரை - மதுரையென்னும் பிராம்மண ஸ்திரீயானவள், (இறந்து), அக்காவலன் - அந்தப் பௌதன புரவாச னுடைய, தேவி தன்பால் - தேவியாகிய ஹிரண்யவதியினிடத்தே, மாதரா ளொருத்தியானுள் - ஒப்பற்றவோர் புத்திரியாக வவதரித்தாள், அவள் - அப் புதல்வியானவள், நீ - நீயேயாகும், கண்டாய் - அறிந்தனையா?, எ - று. (௬)

மற்று - அசை.

460. அருந்தவ னருளி னாலப் பத்திர மித்தி ரன்றான்
திருந்திய குணத்து நின்பாற் சீயசந் திரனென் றானேன்
வருந்துநுண் ணிடையி னாளவ் வாருணி வந்துன் காதற்
பொருந்திய புதல்வ னாயப் பூரசந் திரனென் றானாள்.

(இ - ள்) அருந்தவன் - அரிதாகிய தபசையுடைத்தாகிய வரதர்மனென்னு முனிவானது, அருளினால் - தயவினால், அப்பத்திரமித்திரன் தான் - அந்தப் பத்திரமித்திரனென்கிற செட்டியான நானே, திருந்திய - திருத்தமாகிய, குணத்து - குணத்தையுடைய, நின்பால் - உன்னிடத்தே, சீயசந்திரனென்று - சிம்மச்சந்திரனென்று பெயர் கூறப்பட்டவனாய், ஆனேன் - புத்திரனாகப் பிறந்தேன், வருந்து - வருந்துகின்ற, நுண் - மெல்லிதாகிய, இடையாள் - இடையையுடையவளாகிய, அவ்வாருணி - அந்த வாருணியென்னும் பிராம்மண புத்திரி, வந்து - வந்து, உன் காதல் - உனதாசையால், பொருந்திய - பொருத்தமாகிய, புதல்வனாய் - மற்றொரு புத்திரனாகி, அப்பூரசந்திரனென்று - அந்தப் பூர்ணச்சந்திரனென்று பெயர் கூறப் பட்டு, ஆனாள் - பிறந்தாள், எ - று. (எ)

வேறு.

461. ஆதலா லவன்க ணீங்காக்
காதலை யாயி னாய் நீ
போதுலா மலங்க லானுங்
கோதிலாக் குணத்த னாமே.

(இ - ள்) ஆதலால் - ஆகையால், (அதாவது: அவனோடுனக்கு முற்பவ ஸம்பந்தம் ஏற்பட்டிருந்ததாகையால்), நீ - நீ, அவன்கண் - அக்குமாரனிடத்து, நீங்கா - நீங்காத, காதலையாயினாய் - ஆசையையுடையவளானாய், போதுலாம் - புஷ்பங்கள் தங்கி அசையாநின்ற, அலங்கலானும் - மாலையையணிந்த அக்குமாரனும், கோதிலா - குற்றமில்லாத, குணத்தன் ஆம் - குணத்தையுடையவனாவான், எ - று. (அ)

வேறு.

462. வினையெனுங் குயவ னம்மை வேண்டுரு வியற்றல் கண்டாய்
அனகனை முருவந் தன்னைப் பெண்ணுரு வாக்கி யங்கே
மனைவியை மகனு மாக்கி மகனையே மைந்த னாக்கி
நினைவினன் முடித்து நின்றான் நீதியார் கடக்க வல்லார்.

(இ - ள்) வினையெனும் - கர்மமென்று சொல்லப்பட்ட, குயவன் - குசவன், நம்மை - ஆத்மாவாகிய நம்மை, வேண்டுருவு - இச்சித்த உருவங்களாக, இயற்

றல் - செய்வதை, கண்டாய் - நீ பார்த்தனையா?, (அக்கர்மம்), அனகனும் - பாவங் களைப் போக்கும் பிராமணனாகிய, உருவந்தன்னை-ஆண்ரூபத்தை (அதாவது : முன் பிராமண புருஷனாகவிருந்தவனை), பெண்ணுருவாக்கி - பின் ஸ்த்ரீரூபமாகச் செய்து, அங்கே மனைவியை - அப்போது பெண்சாதியாகவிருந்த மதுரையை, மகளுமாக்கி - மறு ஜன்மத்தில் புத்திரியாகச் செய்து, மகளையே - அப்போது அவ னுக்குப் புத்திரியாயிருந்த வாருணியை, மைந்தனாக்கி - இச்சன்மத்தில் பூர்ணச்சந் திரனென்னும் குமாரனாகச் செய்ய, (அவர்கள்), நினைவினால் - சுபாசுப பரிணாமத் தின்படி, முடித்து நின்றார் - இவ்விதமாகப் பிறந்து (தங்கள் காரியங்களை நிறை வேற்றி) நின்றார்கள், நீதி - இந்தக் கர்ம பரிணாமத்தை, கடக்கவல்லார் - தாண்ட வல்லவர்கள், (அதாவது : சுத்த பரிணாமத்தையடைபவர்கள்), யார் - எவர்களிருக் கிறார்கள்? (வீதராக ஸம்யக்த்துவ சுத்தோபயோகத்தில் சேருபவர்கள் மிகவும் அருமை), எ - று. (௯)

463. பத்திர பாகு வென்னும் பரமமா முனிவன் பாரி
லுத்தமன் பாதஞ் சேர்ந்துன் பிதாவின்று முனிவ னாகி
யித்தல மேத்த நின்றா னெனக்குவந் திதத்தை யோதிச்
சித்தமெய் மொழிகண் மூன்றுஞ் செறிவித்த குரவ னாவான்.

(இ - ள்) பாரில் - இப்பூமியில், உத்தமன் - உத்தமனாகும், பத்திரபாகு வென்னும் - பத்திரபாகுவென்று பெயர் கூறப்படுகின்ற, பரம - உத்கிருஷ்ட மாகிய, மாமுனிவன் - மஹாமுனிவனுடைய, பாதஞ்சேர்ந்து - பாதத்தை அடைந்து, உன் பிதா - உனது தகப்பன், இன்று - இப்போது, முனிவனாகி - முனிவராகி, இத்தலம் - இப்பூமியிலுள்ளோர், ஏத்த - ஸ்துதிக்க, நின்றான் - தபசைச் சேர்ந்தனுஷ்டிப்பவனாய் அதில் நிலைபெற்றிருந்தான், வந்து - (அவன்) வந்து, எனக்கு - என்றனுக்கு, இதத்தையோதி - இதமாகிய தர்ம வசனத்தைச் சொல்லி, சித்தம் - எனது மனமும், மெய் - யாக்கையும், மொழிகள் - வசனமு மாகிய அந்தக் காரணங்களை, செறிவித்த - (ஆஸ்ரவங்களில் செல்ல வொட்டாமல் தபத்தில் அதாவது : சுத்தோபயோக ஹேதுவாகிய சுபோபயோகத்தில்) சேரும் படியாகச் செய்த, குரவனாவான் - குருக்களுமாவான், எ - று. (௧0)

464. சாந்தமா மதியைச் சார்ந்து தையலா யுனைப் பயந்தாள்
காந்திதா னாயி னாளக் காவலன் சீய சேனன்
பாந்தளான் மரித்துப் போகிச் சல்லகீ வனத்துக் கைமா
வேந்தனாய் முனிய வேட ரிட்டபே ரசனி கோடம்.

(இ - ள்) தையலாய் - (என் தாயாகிய) பெண்மணியே!, உனைப்பயந் தாள் - உன்னைப்பெற்ற தாயானவள், சாந்தமாமதியைச் சார்ந்து - சாந்திமதிக ளென்னும் ஆர்யாங்கனையை யடைந்து, காந்திதானாயினாள் - ஆரியாங்கனையானாள்,

அக்காவலன் - அவ்வரசனாகிய, சீயசேனன் - ஸிம்மஸேனன், (அதாவது : உனக்குக் கணவனும் எனக்குத் தந்தையுமாகியவன்), பாந்தளால் - சர்ப்பத்தினால், மரித்துப்போகி - இறந்துபோய், சல்லகீவனத்து - சல்லகீயென்கிற வனத்தில், கைமா வேந்தனாய் - மற்றுள்ள யானைகளுக்கெல்லாம் எஜமானாகி, முனிய - எதிர்ப்பட்டவர்களைக் கோபித்துத்திரிய, (அச்செய்கைக்குத் தக) வேடர் - அவ்வன வேடர்களினால், இட்ட - (அதற்கு) இடப்பட்ட, பேர் - பெயரானது, அசனிகோடம் - அசனி கோஷமென்பதாகும், (அதாவது: அவன் அவ்வனத்தில் பிறந்து எதிர்ப்பட்டவரைக் கோபித்து வேடரால் இடப்பட்ட அசனி கோடமென்னும் பெயருடன் திரிந்தான்), எ - று. (கக)

465. நாகாந்தத் தென்னைக் காணா மதத்தினா லந்த நாகம்
வேகாந்தத் தாலென் மேலே வெகுளியா லோடி வந்த
தாகாசத் தியானெ ழுந்தே னங்குவந் தென்னைக் காணா
வேகாந்த நெறிபுக் கின்மை கண்டவ னொருவ னொத்தே.

(இ - ள்) நாகாந்தத்து - பர்வதசிகரத்தில், என்னை - என்றனை, காணா - பார்த்து, மதத்தினால்-மதத்தினாலே, அந்த நாகம் - அவ்வியானையானது, வேகாந்தத்தால் - அதிக தீவ்ரத்தோடு, என்மேல் - என்றன்மேல், வெகுளியால் - கோபத்தினால், ஓடிவந்தது - விரைந்தோடிவந்தது, (அப்போது), யான் - நான், ஆகாசத்து- ஆகாசத்திலே, எழுந்தேன் - (ஆகாசச்சாரணத்தன்மை பெற்றிருப்பதால் உயர) எழும்பி நின்றேன், அங்கு வந்து - அவ்விடம் வந்து, என்னை -மேலே நின்ற என்றனை, காணா - பார்த்து, ஏகாந்த நெறிபுக்கு - ஏகாந்த வழியை (அதாவது: ஸ்யாத்வாதமல்லாத) ஏகாந்தவாதமாகிற மார்க்கத்திலடைந்து, இன்மை கண்டவன்- அதற்கு முட்டாகி ஒன்றுமில்லாததைப் பார்த்தவனாகிய, ஒருவன் - ஒரு ஏகாந்த வாதியை, ஒத்து - நிகர்த்து, எ - று (கஉ)

466. வெங்கதங் கடாவக் கூற்றொத் தென்னைமே னோக்கிற் பார்க்கச்
சிங்கமா புரத்து வேந்தே சீயமா சேன ஓய் நீ
யிங்குவந் தியானை யானாய் பாவத்தா லிதனை விட்டாற்
பொங்கிவீழ் நரகந் தன்னிற் பொருந்தவோ முயற்சி யென்றேன்.

(இ - ள்) (மேலும்) வெம் - வெப்பம் பொருந்திய, கதம் - கோபமானது, கடாவ - தன்னைச் செலுத்த, கூற்றொத்து - இயமனைப்போன்று, என்னை - என்னை, மேனோக்கிற் பார்க்க - மேற்பார்வையாகப் பார்க்க, (அப்போது யான் அதனை நோக்கி), சிங்கமாபுரத்து - ஸிம்மமஹாபுரத்து, வேந்தே - அரசனே, சீயமாசேன ஓய் - ஓய் ஸிம்மசேனனென்னும் பெயருடையவனே, நீ - நீ, இங்கு வந்து - இவ்விடத்தில் வந்து, பாவத்தால்-பாபவினையினுதயத்தால், யானையானாய்- யானையாகப் பிறந்தாய், (அவ்வாறாகியும்), இதனை விட்டால் - இவ்வியானைச் சரீ

ரத்தை விட்டு நீங்கினால், பொங்கிவீழ் - பெரிதாக உயரத்தில் எழும்பித் தலை கீழாக விழுகின்ற, நாகந்தன்னில் - நரகத்தில், பொருந்தவோ - போய்ப் பிறப்ப தற்கோ, முயற்சி - மேலும் செய்வதாகிய இப்பாப முயற்சி?, என்றேன் - என்று சொன்னேன், எ - று (கங)

467. அரசனாய்ப் பெரிய வின்பத் தழுந்தக்கண் டக்க ணாலே
கரியதாய்ப் பெரிய துன்பத் தழுந்தவிக் கானிற் கண்டேன்
பெரியதோர் பாவத் தாலிப் பிறவியைப் பெரிது மஞ்சித்
திருவற மருவு யானச் சீயசந் திரனென் றிட்டேன்.

(இ - ள்) (பின்னரும்) அரசனாய் - ராஜாவாகியிருந்து, பெரிய வின்பத்து - பெரிதாகிய ராஜைஸ்வரிய சௌக்கியத்தில், அழுந்தக்கண்ட அக் கணாலே - நீ மூழ்கி யனுபவிக்கக் கண்ட அந்த நேத்திரத்தாலேயே, கரியதாய் - யானையாகி, பெரிய துன்பத்து - பெரிதாகிய துக்கத்தில், அழுந்த - மூழ்க, இக்கானில் - இக்காட்டில், கண்டேன் - (நான்) பார்த்தேன், பெரியது - பெரிதாகிய, ஓர் - ஒப்பற்ற, பாவத்தால் - பாபோதயத்தாலாகிய, இப்பிறவியை - இந்த விலங்கு கதியில் யானை யாக விப்படிப் பிறந்திருக்கும் ஜன்மத்திற்கு, பெரிதும் - மிகவும், அஞ்சி - (பாப பலமென்று) பயந்து, திருவறம் - ஸ்ரீ ஜின தர்மத்தை, மருவு - சேரக்கடவா யாக, யான் - நான், அச்சீயசந்திரன் - முன் உனது குமாரனாகிய அச்சிம்மச் சந்திர னாகும், என்றிட்டேன் - என்றும் சொன்னேன், எ - று. (கச)

468. என்றலு மெழுந்த போதத் திறந்தவப் பிறவி தன்னை
யன்றவ னறிந்து மூர்ச்சித் தருவரை போல வீழ்ந்தான்
நின்றதோர் படியிற் றேறி நிறைதவன் போல நின்றான்
சென்றியா னறத்தைக் கூறச் செவியினைத் தாழ்த்த லோடும்.

(இ - ள்) என்றலும் - என்று சொல்லவும், எழுந்த - அவனுக்குண்டாகிய, போதத்து - பவஸ்மிருதி ஞானத்தால், இறந்த - முன்னீங்கின, அப்பிறவி தன்னை - ராஜாவாயிருந்த அப்பிறப்பினை, அன்று - அப்பொழுது, அவன் - அவ் வியானையாயிருந்த அவன், அறிந்து - தெரிந்து, மூர்ச்சித்து - மூர்ச்சை யடைந்து, அருவரை போல - பெரிய பர்வதத்தைப் போல, வீழ்ந்தான் - பூமியில் விழுந் தான், (பின்னர்) நின்றதோர் படியில் - (அவன் மனத்தில்) நின்றதாகிய ஓர் வித குணத்தினால், தேறி - தெளிந்து, நிறைதவன்போல - நிறைந்த தபஸையுடைய ஒரு முனிவனைப்போல, நின்றான் - (கோபம் நீங்கி உபசமபரிணாமத்தையடைந்து) நின்றான், யான் - நான், சென்று - அருகிற்சென்று, அறத்தை - தருமத்தை, கூற - சொல்லத் தொடங்க, செவியினை - தனது காதுகளை, தாழ்த்தலோடும் - அவன் தாழ்த்தவும், எ - று. (கரு)

469. யாக்கையுங் கிளேயு மாதி யாவையு நின்ற வில்லே
வீக்கிய வினேயின் றுன்பம் விலக்கலா மரணு மில்லே
தீக்கதி நான்கிற் சார்ந்து செல்வுழித் துணேயு மில்லே
நீக்கருங் குணங்க ளல்லா னின்றதா னில்லே யன்றே.

(இ - ள்) யாக்கையும் - சரீரமும், கிளேயும் - பந்து ஜனங்களும், ஆதி முதலாகிய, யாவையும் - உபசரிதானுபசரித அசத் பூதங்கள் யாவையும், நின்ற வில்லே - நித்தியமாயுள்ளவைகளல்ல, (அனித்தியமே யாகும்), வீக்கிய - ஆத்மன் ராகத்வேஷமோஹ மென்னும் அசுத்த பரிணமமாகிய விபாவங்களிற் சென்று அவற்றால் பந்திக்கப்பட்ட, வினேயின் - கர்மங்களின் பலமாகிய, துன்பம் - துன்பத்தை, விலக்கலாம் - நீக்கும்படியான, அரணும் - ரக்ஷணேயும், இல்லே - உண்டாகப்பட்டதில்லே, தீக்கதிநான்கில் - சதுர்க்கதிகளில், சார்ந்து - அடைந்து, செல்வுழி - செல்கின்றபோது, துணேயும் - சகாயமும், இல்லே - கிடையாது, நீக்கரும் - நீக்குதற்கு முடியாத, குணங்களல்லால் - ஆத்மனுடைய குணங்களே யல்லாமல், நின்றதான் - பிரியாமல் நிற்கப்பட்டவை, இல்லே - வேறொன்று மில்லே, எ - று.

தான் - அசை. (கசு)

470. உண்டுநாம் விட்ட வல்லாப் புற்கல மொன்று மில்லே
பண்டுநாம் பிறந்தி டாத பதேசமு முலகி னில்லே
கொண்டுநாம் நின்ற யாக்கை குணமிலாப் பூதி கந்தம்
மண்டிநாம் புலத்தின் வீழ்தன் வினேவரும் வாயி லென்றேன்.

(இ - ள்) நாம் - ஆத்மராகிய நாம், உண்டு - அனுதி காலமாகக் கொண்டு (அதாவது: ஸ்வீகரித்து), விட்டவல்லா - விடப்பட்டவைகளல்லாத, புற்கலம் - புத்கலத்திரவியம், ஒன்றும் - யாதொன்றும், இல்லே - கிடையாது, (அதாவது: லோகத்துள்ள சகல புத்கலங்களேயும் ஆத்மராகிய நாம் அனுதியாக அசுத்த நயத்தால், கருமநோகர்மங்களாக ஸ்வீகரித்து அனுபவிக்காதது இல்லே), பண்டு - முற்காலத்தில், நாம் - ஆத்மராகிய நாம், பிறந்திடாத - சுபாசுபகர்மோதயத்தால் ஜனனத்தை யடையாத, (அதாவது: உற்பத்தியடையாத), பதேசமும் - ஏகப்பிரதேசமும், உலகில் - இந்த லோகத்திலே, இல்லே - கிடையாது, (எவ்விடங்களிலும் ஜனித்தோம்), நாம் கொண்டு - இப்போது நாம் எடுத்து, நின்ற - நின்றதாகிய, யாக்கை - இச்சரீரமானது, குணமிலா - சேதன குணமில்லாததாகிய, பூதிகந்தம் - துர்க்கந்தஹேதுவாகும், நாம் - ஆத்மராகிய நாம், மண்டி - அவ்விதமான புத்கலத்தைச் சேர்ந்து, புலத்தின் - பஞ்சேந்திரிய விஷயங்களில், வீழ்தல் - சேர்தல் அதாவது: அசுத்தோபயோகத்தால் அசத்பூதங்களே விஷயிகரித்தல்), வினே - கிர

விய கர்மங்கள், வரும் - வந்து சேர்ந்து ஆத்மனுடன் பந்திப்பதற்கு, வாயில் - வழியாகிய ஆஸ்ரவமாகும், என்றேன் - என்று சொன்னேன், எ - று. (கஎ)

471. அரியதிவ் வுலகின் வென்றோர் திருமொழி யதனைப் பெற்றாற்
பெரியநற் காட்சி ஞான வொழுக்கமா மவற்றிற் பின்னை
வருவினை வாயி லெல்லா மடைக்கமுன் மிடைந்த பாவம்
நிருசரைச் செல்லு மிந்த நெறியைநீ நினைக்க வென்றேன்.

(இ - ள்) இவ்வுலகின் - இந்த வுலகத்தில், அரியது - பெறுதற்கருமையானது, வென்றோர் திருமொழி - வீதராகனாகி காதிகர்மங்களை ஜயித்து சுத்தோபயோகத்தை யுற்ற அரஹந்த பரமதேவனாலருளிச் செய்யப்பட்ட திவ்யத்துவனியினாலாகிய பரமாகமமாகும், அதனை - அந்த ஆகமமாகிய சுருதத்தை, பெற்றால் - ச்ருதஞானாவரணீய கர்மமுபசமத்தை யடையப்பெற்றுத் தெளிந்தால், (அதனால்) பெரிய - பெருமையையுடைய, நற்காட்சி - ஸம்யக் தரிசனமும், ஞானம் - அதற்குமேலுண்டாகின்ற ஸம்யக் ஞானமும், ஒழுக்கம் - அவற்றாலாகின்ற ஸம்யக் சாரித்திரமும், ஆம் - ஆத்மனுக்கு ஏற்படும், அவற்றில் - அந்த வியவஹார ரத்னத்திரயத்தால், பின்னை - பிறகு, வரும் - அசுத்த பரிணாமத்தால் வந்து சேரும், வினை - கருமங்களினது, வாயிலெல்லாம் - வழிகளாகிய அசுத்தபரிணாமங்களை யெல்லாம், அடைக்க - வாராமறறடுக்க (அதாவது: சுத்த பரிணாமமாகிய ஆத்ம பாவனையில் நிற்க), முன் - அனாதியாக இதற்கு முன், மிடைந்த - அசுத்த பரிணாமத்தா லாத்மனிடத்தில் அடைந்த, பாவம் - பாப கருமமெல்லாம், நிருசரைச் செல்லும் - நிர்ஜரையை யடையும், இந்த நெறியை - இப்படிப்பட்ட நல்வழியை (அதாவது: மோக்ஷ மார்க்கத்தை), நீ - நீ, நினைக்க - நினைக்கக் கடவாயாக, என்றேன் - என்றும் சொன்னேன், எ - று. (கஅ)

472. வெருவுறு துன்ப மாக்கும் விலங்கினு ளெழுந்து வீழ்தல்
நரகிடை மருவுந் துன்ப நரர்க்கெலாங் குடும்ப மோம்பல்
மருவிய தேவ லோகின் வழுத்தரல் வான வர்க்காந்
துருவமாய் நின்ற துன்பஞ் சொன்னநாற் கதிக்கு மென்றேன்.

(இ - ள்) விலங்கினுள் - விலங்கு கதியில், வெருவு - ஸ்வபாவமாகப் பயத்தையே எப்போதும் அடைவது, உறு - பொருந்திய, துன்பமாகும் - ஸ்வாபாவிகதுக்கமாகும், நரகிடை - நரகத்திலே, எழுந்து வீழ்தல் - எழும்பித் தலைகீழாக விழுவது, (நாரகர்களுக்கு) மருவு - சேர்ந்த, துன்பம் - ஸ்வாபாவிகதுக்கமாகும், நரர்க்கெலாம் - மனுஷ்யர்களுக்கெல்லாம், குடும்பமோம்பல் - குடும்பத்தைப் போஷிக்கிறது ஸ்வபாவதுக்கமாகும், தேவலோகின் - தேவலோகத்தில், மருவிய - அடைந்திராநின்ற, வானவர்க்கு - தேவர்களுக்கு, வழுத்தால் - இறந்துவிடுவது,

ஆம் - ஸ்வபாவதுக்கமாகும், சொன்ன - இப்போது சொல்லப்பட்டிருக்கிற, துன்பம் - துச்கங்கள், நாற்கதிக்கும் - சதுர்க்கதிகளுக்கும், துருவமாய்-(அவ்வக்கதிக்குச் சொன்னபடி நிச்சயமாகிய ஸ்வபாவிக) துக்கங்களாக, நின்ற - நின்றன, என்றேன் - என்றும் சொன்னேன், எ - று. (கக)

473. மனத்திடைப் பிறக்குந் துன்பம் வந்துறு மவற்றின் றுன்பம்
தனுத்தனிற் பிறக்குந் துன்பந் தானியல் பாய துன்ப
மெனச்சொலப் பட்ட நான்கு மியாவர்க்கு மாகு மின்ன
நினைத்தறம் புணரி னின்ற தீக்கதி நீங்கு மென்றேன்.

(இ - ள்) மனத்திடை - (மனத்தையுடைத்தாகிய ஜீவன்களுக்கு) மனதில், பிறக்கும் - உண்டாகும், துன்பம் - மனோதுக்கமும், வந்து - மனதில் ஒன்று நினைக்க அதற்கு விபரீதமாய் வேறொன்று வர, உறும் - அடைகின்ற, அவற்றின் - அச்செயல்களினாலுண்டாகிய, துன்பம் - ஆகந்துகதுக்கமும், தனுத்தனில் - சரீரத்தில், பிறக்கும் - உண்டாகின்ற, துன்பம் - துக்கமாகிய சரீர துக்கமும், இயல்பாய - அந்தந்தக் கதிகளுக்கு ஸ்வபாவமாகிய, துன்பம் - முற்கவியில் சொல்லப்பட்ட ஸ்வபாவ துக்கமும், என - என்று, சொல்லப்பட்ட - சொல்லப்பட்டிருக்கிற, நான்கும் - இந்த மானஸ ஆகந்துக சரீர ஸ்வாபாவிகமென்னும் நாலுவித துக்கமும், யாவர்க்கும் - ஸம்ஸார ஜீவன்கள் யாவர்க்கும், ஆகும் - உண்டாகும், இன்ன - இப்படிப்பட்ட துக்க ஸ்வரூபமாகிய ஸம்ஸார அஸாரத்தை, நினைத்து - மனதில் சிந்தித்து, அறம் - ஸ்ரீ ஜின தருமத்தை, புணரின் - சேரின், நின்ற - ஸம்ஸாரத்தில் நிலை பெற்றிருந்த, தீக்கதி - துக்க ஹேதுவாகிய இக்கதிகள், நீங்கும் - நீங்கி ஆத்மசுகம் உண்டாகும், என்றேன் - என்றும் சொன்னேன், எ - று.

தான் - அசை. (உ0)

474. விநயத்தோ டிறைஞ்சிக் கேட்கும் முனியைப்போல் விளம்பிற் றெல்லாம்
மனம்வைத்து வணங்கிக் கேட்டு வதங்கள்பன் னிரண்டு மேவிப்
பனையொத்த தடக்கை மாநல் லுயிர்களைப் பாது காக்கும்
முனியொத்துக் கருணை வைத்தெவ் வுயிரையு மோம்பிற் றன்றே.

(இ - ள்) (இவ்வாறு சொல்லிய பின்பு) பனையொத்த - பனைபோல் திரட்சி பொருந்திய, தடக்கைமா - பெரிய துதிக்கையையுடைய அந்த யானையானது, விநயத்தோடு - வணக்கத்துடன், இறைஞ்சி - தாழ்ந்து, கேட்கும் - கேட்கின்ற, முனியைப்போல்-ஒரு முனிவரன்போல, விளம்பிற்றெல்லாம்-என்னாற் சொல்லப்பட்டவைகளை யெல்லாம், மனம் வைத்து-மனத்தை நிலையாக வைத்து, வணங்கி - நமஸ்கரித்து, கேட்டு - கேட்டுக்கொண்டு, வதங்கள் பன்னிரண்டும் - த்வாதச விரதங்களையும், மேவி - பொருந்தி, நல் - நல்ல, உயிர்களை - ஸ்தாவரஜங்கமாதி சகலப் பிராணிகளையும், பாதுகாக்கும் - ரக்ஷிக்கும்படியான, முனியொத்து - ஒரு

முனிவன் போன்று, கருணை வைத்து - தயவை மனதிலே தாங்கி, எவ்வுயிரையும்- ஸகல ஜீவன்களையும், ஓம்பிற்று - இரக்ஷித்தது, எ - று. (உ௪)

475. பொய்கொலை களவு காமம் புலைசுதேன் கள்ள கற்றி
மெய்யுறத் திசையி னோடு பொருளினை வரைந்து மேனி
நையினும் வதங்க ளைபா வகையினு னாக ராசன்
சய்யமா சய்ய மத்திற் றலைநின்றார் போலச் சென்றான்.

(இ - ள்) (மேலும்) பொய் - அசத்தியமும், கொலை - ஹிம்சையும், களவு- ஸ்தேயமும், காமம் - ஆசையும், புலைசு - மாமிசம் பொசித்தலும், தேன் - மது பானம் பண்ணுதலும், கள் - கள் குடித்தலும், (ஆகிய இவ்வேழு துச்சாரித்திரங்களையும்) அகற்றி - நீக்கி, மெய்யுற - சத்தியம் பொருந்த, (அதாவது: ஸத்தியம், அஹிம்சை, அஸ்தேயம், விராகம் இவைகள் வந்து கூடி மது மத்திய மாம்ஸ நிவிருத்தியாக), திசையினோடும் - திக்விரதத்தோடும், பொருளினை - பரிக்கிரக வஸ்துக்களை, வரைந்து - மட்டுப் பண்ணி, மேனி - சரீரமானது, நையினும் - நைந்தாலும், வதங்கள் - விரதங்கள், நையாவகையினால் - குறையாத விதத்தினாலே, *நாகராசன் - இவ்வியானை யரசன், சய்யமாசய்யமத்தில் - தேச சம்யதகுணஸ்தானத்தில், தலைநின்றார் போல - முதன்மையாக நின்ற விரதீகர் என்னும் இரண்டா நிலை ஸ்ரீராவகர் போல, சென்றான் - இவற்றின் வழியிற் பிரவேசித்தவனாய் ஒழுகினான், எ - று. (உஉ)

476. உவர்ப்பொடு வெறுப்பி னொன்றி யுடம்பொடு புலங்க டம்மேற்
றுவர்ப்பசை நான்கு நீங்கிச் சொன்னபன் னிரண்டு முன்னிச்
சவர்ச்செய்கை யின்றிச் சித்தஞ் சாந்தியி னன்மை தீமைக்
குவத்தல்காய் வின்றிப் பக்கந் திங்களோன் பொன்றிச் சென்றான்.

(இ - ள்) (மேலும் அவன்) உடம்பொடு புலங்கள் தம்மேல் - இந்தச் சரீரத்தோடு பஞ்சேந்திரிய விஷயங்களின் மேலும், உவர்ப்பொடு - அருவருப்புடன், (அதாவது : சரீரத்தின்மேல் அசுசிபாவத்துடன்), வெறுப்பினொன்றி - இந்திரிய விஷயங்களில் ஏற்படும் வைராக்கியத்திலும் பொருந்தி, துவர்ப்பசை நான்கு நீங்கி - குரோத மான மாயா லோபமென்னும் சதுஷ்கஷாயங்களினின்றும் விலகி, சொன்ன - ஆகமத்திற் சொன்ன, பன்னிரண்டும் உன்னி - துவாதசானுப் பிரேட்சைகளை பாவித்து, சவர்ச்செய்கை - கெட்ட நடத்தைகள், இன்றி - இல்லாமல், சித்தம் - மனதில், சாந்தியின் - உபசாந்த பரிணாமத்தினோடு, நன்மை தீமைக்கு - சுகதுக்கங்களுக்கு, உவத்தல்காய் வின்றி - ஹர்ஷவிஷாதமின்றி, பக்

* யானையை உயர்திணையாகக் கூறியது சிறப்பினால் வந்த பால் வழுவமைதி யெனப்படும்.

கந்திங்களேனன்பு - பக்ஷோபவாஸமாஸோபவாஸ நோன்புகளோடு, ஒன்றி - பொருந்தி, சென்ருன் - அவற்றின் வழியிலும் ஒழுகினுன், எ - று. (உங)

477. வாரணந் தின்று விட்ட வற்றிய துவலும் புல்லும்
பாரணை யாகப் பார்த்தங் கருந்தவம் பயின்று பான்மைக்
காரண மிதுவென் பான்போற் காலங்கள் பலவு நோற்று
நீரணைந் தோடும் யூப கேசரி நதியைப் புக்கான்.

(இ - ள்) (பின்னர் அவன்) வாரணம் - இதரயானைகள், தின்றுவிட்ட - தின்றுவிட்டுக்கழித்த, வற்றிய - காய்ந்த, துவலும் - சருகும், புல்லும் - புல்லும், பாரணையாக - தனக்கு உபவாஸ முடிந்தவுடன் உண்பனவாக, பார்த்து - சோதித்துண்டு, அங்கு - அக்காட்டில், அருந்தவம் - அரிதாகிய உபவாஸ தவத்தில், பயின்று - பழகி, பான்மைக்காரணம் - பவ்வியத்துவம் ஆஸன்னமாகுந் தன்மைக்குக் காரணம், இதுவென்பான்போல் - இந்த அனசஞதியே யென்று காட்டுபவன் போல, காலங்கள் பலவும் - இப்படி வெகுகாலம், நோற்று - இந்த நோன்பை அனுஷ்டித்து, நீரணைந்து - ஜலம் மிகுதியாகச் சேர்ந்து, ஓடும் - ஓடுகின்ற, யூப கேசரி - யூபகேசரி யென்னும் பெயரையுடைய, நதியை - ஆற்றை, சேர்ந்தான் - அடைந்தான், எ - று. (உச)

478. உரையினுக் கரிய வண்ண மொருதிங்க ளேனன்பு முற்றி
வரையினைப் பிழிந்த தேபோல் வற்றிய காயத் தாற்றங்
கரையினைச் சார்ந்து நீருட் கையினை நீட்டக் கைமா
நிரையினுக் கரசன் கால்கள் நிலத்திடைக் குளிப்ப நின்ருன்.

(இ - ள்) (அவ்வாறடைந்த பின்னர்) கைமாநிரையினுக்கு - யானை சமூகங்களுக்கெல்லாம், அரசன் - அரச யானையாகிய அவன், உரையினுக்கு - சொல்வதற்கு, அரிய வண்ணம் - அரிதான விதமாக, ஒரு திங்கள்-ஒரு மாதம், நோன்பு-உபவாஸ விரதத்தை, முற்றி - முடிய (அதனை முடித்து), வரையினை - பர்வதத்தை, பிழிந்ததேபோல் - பிழிந்தது போல, வற்றிய - வாடின, காயத்து - சரீரத்தையுடையவனுகி, ஆற்றங்கரையினை, முன் சொன்ன நதிக்கரையை, சார்ந்து - அடைந்து, நீருள் - ஜலத்தில், கையினை - தனது துதிக்கையை, நீட்ட - ஜலபானம் பண்ணும்படியாக விட, (அப்போது), கால்கள் - தன் பாதங்கள், நிலத்திடை - சேருன மண்ணில், குளிப்ப - புகுந்துகொள்ள, நின்ருன் - அதை யெடுக்கச் சக்தியற்று நின்ருன், எ - று. (உரு)

479. அக்கணத் தமைச்ச ஞகஞ் சமரமா யதனை விட்டுக்
குக்குட வடிவிற் பாம்பாய்ப் பிறந்தவக் குபதன் காண

மிக்கெழுந் தனலுங் கோபத் தோடிமே லேறி நெற்றி
சிக்கெனக் கதுவத் தீரன் காயமுந் தியாகஞ் செய்தான்.

(இ - ள்) அக்கணத்து - அப்படி யானையரசன் சேற்றில் கால்புதைந்து நின்ற அக்காலத்தில், அமைச்சன் - முன் ஸிம்மஸேன பவத்தில் அந்த யானை யரசனுக்கு மந்திரியாயிருந்த ஸத்தியகோஷன், நாகம் - (பின் அடைந்த) அகந் தன ஸர்ப்ப ஜன்மம், (நீங்கி), சமரமாய் - பிறகு சமரீமிருகமாகி, அதனைவிட்டு - அதையும் ஆயுராவ ஸானத்தால் நீத்து, குக்குட வடிவிற் பாம்பாய்-வடிவினையுடைய கோழிப்பாம்பாய், பிறந்த - பிறந்திருந்த, அக்குபதன் - அந்தத் தாழ்ந்த பதவி யடைந்த அப்பாம்பு, காணு - இவ்வியானை யாசனைக்கண்டு, மிக்கெழுந்து - மிகுதி யாக உண்டாகி, அனலும் - அக்கினிபோல வெம்புகின்ற, கோபத்து - குரோதத் தினால், ஓடி - பறந்து சென்று, நெற்றிமேலேறி - யானையின் மஸ்தகத்தில் ஏறி, சிக்கென - சீக்கிரமாக, கதுவ - கடிக்க, தீரன் - தீரனாகிய அவ்வியானை யரசன், காயமும் - தனது சரீரத்தையும, தியாகஞ்செய்தான் - (இச்சரீரம் நம்மாத்ம ஸ்வ ரூபமல்லவென்று மனதினால் விஷாதமின்றி) விட்டான், எ - று. (உசு)

480\. மலையினைச் சூழ்ந்த மஞ்சி னஞ்சுவந் தெங்குஞ் சூழ
நிலையினிற் றளர்த லின்றி நின்றுமா தவன்றன் பாதந்
தலையிசைக் கொண்டு பஞ்ச மந்திரஞ் சிந்தை செய்து
நிலையிலா வுடம்பு நீங்கி நெறியிற்சா சாரம் புக்கான்.

(இ - ள்) (அவ்வாறு) மலையினை - ஒரு பர்வதத்தை, சூழ்ந்த - சூழ்ந்து கொண்ட, மஞ்சின் - மேகத்தைப் போல, நஞ்சு - (அப்பாம்பின்) விஷமானது, வந்து எங்குஞ்சூழ - சரீர முழுதிலும் சேர்ந்து பரவிச்சூழ, நிலையினில் - மனோ நிலையில், தளர்தலின்றி - நழுவாமல், நின்று - ஆத்ம பாவனையில் நின்று, மாத வன் தன் பாதம் - தனக்குக் குருவாகிய ஸிம்மச் சந்திர முனிவனாகிய என் பாதங் களை, தலை மிசைக் கொண்டு - சிரஸிற்றரித்து பாவனையால் வணங்கி, பஞ்ச மந்தி ரம் - பஞ்சநமஸ்கார பரமபதங்களை, சிந்தை செய்து - மனதில் தியானித்து, நிலை யிலா - அனித்திய ஸ்வரூபமாகிய, உடம்பு-யானைச் சரீரம், நீங்கி-விலகி, நெறியில் - சுபோபயோகபாவனாவழியால், சாசாரம் - ஸஹஸ்ராரகல்பமென்னும் தேவரு லகத்தை, புக்கான் - அடைந்தான், எ - று. (உஎ)

481\. ஆயுவுங் கதியு மானு புவ்வியு மக்க திக்கே
ஏயநல் வினைக ளெல்லா மெழுந்தவற் றோடுஞ் சென்று
பாயநல் லமளி மேலோர் பார்த்திப னணிந்து வந்து
மேயினு னெழுந்த தேபோல் வினையினுன் முடித்தெ ழுந்தான்.

(இ - ள் (அவ்வாறடைந்தவன்) ஆயுவும் - ஆயுஷ்யமும், கதியும் - கதிநாம கர்மமும், ஆனுபுவ்வியும் - அனுபூர்விநாமமும், அக்கதிக்கு - அத்தேவகதிக்கு,

ஏய - இசைந்த, நல்வினைகள் - புண்ணிய வினைகளும், (ஆய்) எழுந்த - டாகிய, எல்லாவற்றோடும் - எல்லாவற்றினுடனே, சென்று - அக்கதியிற்சென்று, பாய - பரந்த, நல் - நன்மையாகிய, அமளிமேல் - படுக்கை மெத்தையின்மேல், அணிந்துவந்து - அலங்காராபரணஸஹிதனாகி வந்து, மேயினான் - பொருந்தி நித்திரை செய்பவனாகிய, ஓர் பார்த்திபன் - ஒரு ராஜகுமாரன், எழுந்ததேபோல் - நித்திரை தெளிந்து எழுந்திருந்ததைப்போல், வினையினால் - முன் சொன்ன புண்ணிய வினையினால், முடித்து - தன்னுடைய முன் ஜன்மத்தை முடித்துவிட்டு (ஸஹஜாபரண ஸர்வாங்கோபாங்க ஸுந்தரனாய் நிறையப்பெற்று), எழுந்தான் - உபபாதசயனத்தினின்றும் ஷோடஸவர்ஷ யௌவனனாய் அந்தர்முகூர்த்தத்தில் அங்கே) அவதரித்தான், எ - று. (உ அ)

482. ஆனைதன் னுருவு நீங்கி யிரவிமுற் பிரபைத் தோன்றி
வானத்து வில்லைப் போல வடிவெலாஞ் சமைந்து மூழ்த்திற்
றேனொத்த வலங்க லான்பேர் சீதர னென்ப தாகு
மானொத்த நோக்கி னார்தம் வடிக்கணுக் கிலக்க மானான்.

(இ - ள்) (மேலும்) ஆனை - அசனிகோடமென்கிற யானை யாசன், தன்னுருவு - தனது ரூபமாகிய யானைச் சரீரத்தை, நீங்கி - விட்டு, இரவிமுன் - ரவியென்கிற சப்தத்தை முன்னேயுடைய, பிரபை - பிரபை யென்கிற, (அதாவது: ரவிப்பிரபை யென்கிற) தேவவிமானத்தில், தோன்றி - உண்டாகி, வானத்து வில்லைப்போல - ஆகாசத்தில் இடப்பட்ட இந்திரதனுஸுவைப் போல, வடிவெலாம் - சரீர வடிவமெல்லாம், மூழ்த்தில் - ஒரு அந்தர் முகூர்த்தத்தில், சமைந்து - அமைந்து, மானொத்த நோக்கினார் தம் - பெட்டைமான்போல் மருண்ட பார்வையையுடைய தேவஸ்த்ரீகளது, வடி - கூர்மைபெற்ற, கணுக்கு - கண்களுக்கு, இலக்கமானான் - பார்த்து மோஹிப்பதற்குக் குறியானான், தேன் ஒத்த - இனிமை பொருந்திய, அலங்கலான் - மாலையையணிந்த அத்தேவனுடைய, பேர் - நாமமானது, சீதரனென்பதாகும் - ஸ்ரீதரனென்று சொல்லப்பட்டதாகும், எ - று. (உகூ)

483. முடியுங்குண் டலமுந் தோடு மாரமுங் குழையும் பூணுங்
கடகமுங் கழலும் பட்டுங் கலாபமும் வீழு நாலு
முடனியல் பாகித் தோன்றி யொளியுமிழ்ந் திலங்கு மேனி
படரொளி பரப்ப மஞ்சிற் பருதியி னிருந்த போழ்தின்.

(இ - ள்) (அவ்வாறு தோன்றிய அவன்) முடியும் - கிரீடமும், குண்டலமும் - கர்ண குண்டலமும், தோடும் - கர்ணத்தோடும், ஆரமும் - முத்தாஹாரத்னஹாரங்களும், குழையும் - தளிர்களாலும் புஷ்பங்களினாலும் ஆகிய தெய்வீகம் பொருந்திய வாடாமாலைகளும், பூணும் - மற்றுமுள்ள வாபரணங்களும்,

கடகமும் - அஸ்தகங்கணமும், கழலும் - வீர கண்டயமும், பட்டும் - பட்டு வஸ்திரங்களும், கலாபமும் - (இடையணியாகிய) மேகலாபரணமும், வீழுநூலும் - மார்பில் தொங்குகின்ற பூணூலும், உடன்-தன்னுடனேயே, இயல்பாகி - இயற்கையாக, தோன்றி - உண்டாகி, ஒளியுமிழ்ந்து - பிரகாசத்தை வீசி, இலங்கும் - விளங்கும், மேனி - சரீரம், படரொளி - மிகுதியாகப்படர்ந்த ஜோதியை, பரப்ப - பரவுதல் செய்ய, மஞ்சில் - படுக்கை மெத்தையின்பேரில், பருதியின் - சூர்யன்போல, இருந்தபோழ்தில் - இருந்த காலத்தில், எ - று. (௩0)

484. காரென மலர்கள் மாரிக் கற்பக மரங்கள் வீழ்த்த
வாரணி முரச மெங்கும் முழங்கநந் தனவ னத்தில்
வேரியுந் தாது மேந்தி மந்தமா ருதங்கள் வீசச்
சீரணி கொங்கை யாருந் தேவருஞ் சென்று சேர்ந்தார்.

(இ - ள்) (அவ்வாறு அத்தேவன் பிறந்து மெத்தையில் எழுந்துட்கார்ந்த காலத்தில்) காரென - மழையைப் பொழியும் மேகத்தைப்போல, கற்பக மரங்கள் - அவ்விடத்தி லிருக்கும் கற்பகவிருட்சங்களானவை, மலர்கள் - புஷ்பங்களாகிற, மாரி - மழையை, வீழ்த்த - சொரிய, எங்கும் - அத்தேவலோகமெங்கும், வார் - இறுக்கிக்கட்டப்பட்ட வாரையுடைய, அணி-அழகிய, முரசம்-பேரிகைகள், முழங்க-சப்திக்க, நந்தனவனத்தில் - புஷ்பவனத்தினின்றும், வேரியும் - வாசனைகளையும், தாதும் - பூந்தாதுக்களையும், ஏந்தி - தரித்து, மந்தமாருதங்கள் - இளங்காற்றுக்கள், வீச - எப்பக்கமும் உலாவ, சீரணி - சிறப்போடு கூடிய ஆபரணதிகளை யணிந்த, கொங்கையாரும் - ஸ்தனங்களையுடைய தேவமாதர்களும், தேவரும் - ஸாமான்ய தேவர்களும், சென்று - இந்த ஸ்ரீதர தேவனிடத்தில் போய், சேர்ந்தார் - அடைந்தார்கள், எ - று. (௩௧)

485. எத்திக்கும் பார்த்தி தென்னோ யாவரோ யான்பி னாரோ
சித்தத்துக் கினிய தேசம் யாரதோ வென்றி ருந்து
தத்துறும் போழ்தி லந்தப் பவத்தைச்சார்ந் தெழுந்த வோதி
கைத்தலப் படிகம் போலக் கண்டது கருதிற் றெல்லாம்.

(இ - ள்) எத்திக்கும் - (அப்போது ஸ்ரீதரதேவன்) நாற்றிசையும், பார்த்து - நோக்கி, இது - இங்குத்தோற்றுவது, என்னோ - என்னவோ, யாவரோ - (இவ்விடத்திலிருக்கப்பட்டவர்களெல்லாம்) எவர்களோ, பின் - பிறகு, யான் - நான், ஆரோ - எவனோ, சித்தத்துக்கு - மனத்துக்கு, இனிய - இனிமையாகிய, தேசம் - இந்த க்ஷேத்திரம், யாரதோ - யாருடையதோ, என்று - என்று நினைத்து, இருந்து - தான் அவ்விடத்திலேயே யிருந்து, தத்துறும் போழ்தில்-மனந்ததும்பிப் பிரமிக்கின்ற காலத்தில், அந்தப் பவத்தைச் சார்ந்து - அத்தேவப் பிறப்பை

யனுசரித்து, எழுந்த - உண்டாகிய, ஓதி - பவப்பிரத்தியய அவதிஜ்ஞானமானது, கருதிற்றெல்லாம் - தன்னால் நினைக்கப்பட்டவைகளையெல்லாம், கைத்தலப் படிகம்போல - கையில் வைக்கப்பட்ட ஸ்படிகம்போல, கண்டது - அறிந்தது, எ - று.

486. தந்தியைத் துடக்க மாய வறிந்துயான் முன்பு செய்த
மந்தமா தவத்திற் பெற்ற துறக்கமந் தாரஞ் சூழ்ந்த
விந்திர விமான மென்னை யெத்திக்குஞ் சூழ வோதி
வந்துநின் றிறைஞ்சு கின்றார் வானவர் தாங்க ளென்றான்.

(இ - ள்) (அவ்வாறு அவதிஜ் ஞானத்தால் தெளிவுண்டான பிறகு அவன் தன்னை முன்னே தொடர்ந்த), தந்தியை - யானை ஜன்மத்தை, அறிந்து-தெரிந்து, யான் - நான், முன்பு செய்த - பூர்வத்தில் பண்ணியதான, மந்தமாந்தவத்தில் - அற்பமாகிய தவத்தினால், பெற்ற - அடைந்த இவைகள், துறக்கம் - தேவருலகமும், மந்தாரம் - மந்தார விருட்சங்களால், சூழ்ந்த - சூழப்பட்ட, இந்திர விமானம் - தேவவிமானமுமாகும், என்னை - என்றனை, எத்திக்கும் - எப்பக்கங்களிலும், சூழ - தங்கள் கூட்டம் நிறைய, வந்துநின்று - வந்துகூடி நின்று, ஓதி - ஜயஸ்துதி சொல்லி, இறைஞ்சுகின்றார் - வணங்குகின்றவர்கள், வானவர்கள் - ஸாமான்ய தேவர்களாவர், என்றான் - என்று கூறினான், எ - று.

தாம் - அசை. (௩௩)

487. பாடுவார் மதுர கீதந் தேவிமார் மின்னுப் போனின்
றாடுவா ரரம்பை யார்க ளரிவைய ரிலயத் தோடு
மூடுதா னெழுந்த வோசை துந்துபி யோசை யென்று
நீடியா தவதி யாற்பார்த் தறிந்தவ னிருந்த போழ்தில்.

(இ - ள்) (மேலும்) மதுரம் - மாதுரியமாகிய, கீதம் - சங்கீதங்களை, பாடுவார் - பாடுகின்றவர்கள், தேவிமார் - தேவிபரிவாரங்களாவர், மின்னுப்போனின்று - மின்னற் கொடிபோல் நுடங்கி நின்று, ஆடுவார் - இவ்விடத்தில் நர்த்தனஞ் செய்கின்றவர்கள், அரம்பையார்கள் - தேவநர்த்தன மாதர்களாவர், அரிவையர் - இவ்விதமான ஸ்திரீகளுடைய, இலயத்தோடும் - மிகவற்புதமாகிய கூத்துக்களின் தாளத்தோடும், ஊடுதானெழுந்த - இடையிலே கூடி யுண்டாகிய, ஓசை - சப்தமானது, துந்துபி - தேவவாத்தியங்களது, ஓசையென்று - சப்தமாகுமென்று, நீடியாது - தாமதமில்லாமல், (சீக்கிரமாக உண்டாகிய), அவதியால் - தனது அவதிஜ் ஞானத்தால், பார்த்து - நோக்கி, அறிந்து - (அங்குள்ள விசேஷங்களையெல்லாம்) தெரிந்து, அவன் - அந்த ஸ்ரீதர தேவன், இருந்தபோழ்தில் - தனது ஒல், எ - று. (௩௪)

வேறு.

488. வென்றி யுந்திரு வும்பர மாயுவு
மொன்றி வையக முள்ளள வுஞ்செல்க
என்று சொல்லி யிறைஞ்சிய வானவர்
நின்று பின்செயு நீதிக ளோதினர்.

(இ - ள்) வென்றியும் - வெற்றியும், திருவும் - தேவஸம்பத்தும், பரமாயுவும் - உத்கிருஷ்டாயுஷ்யமும், ஒன்றி - பொருந்தி, வையகமுள்ளளவும் - இந்த லோகமுள்ளவரையில், செல்க - இந்த ஸ்ரீதர தேவனுக்கு நடப்பதாக, என்று சொல்லி - என்று ஸ்துதிகளைச் சொல்லி, இறைஞ்சிய - வணங்கிய, வானவர் - அத்தேவர்கள், நின்று - ஸ்ரீதர தேவனெதிரில் நின்று, பின் - பிறகு, செயும் - அத்தேவனால் செய்யும்படியான, நீதிகள் - வரிசைக்கிரமங்களை, ஓதினர் - சொல்லத் தொடங்கினார்கள், எ - று. (கூ௫)

489. மஞ்ச னஞ்சமைத் தார்மதி போன்முகத்
தஞ்சொ லாரது முன்ன மமர்ந்தநீ
பஞ்ச காயம் பணித்த பிரானடிக்
கஞ்ச லிசெய் தமர்ந்த சிறப்புனி.

(இ - ள்) (அவ்வாறு தொடங்கி அத்தேவனை நோக்கி, ஸ்ரீதரதேவனே !) நீ - நீ, மஞ்சனஞ்சமைத்து - முதலில் திருமஞ்சனத்தை ஏற்படுத்திக்கொண்டு, (அதாவது: திருமஞ்சன நீரில் ஸ்நானம் பண்ணிப் பிறகு), ஆர்மதிபோல் - (ஒளி நிறைந்த) சம்பூர்ணச் சந்திரன்போன்ற, முகத்து - முகத்தையுடைய, அம் - அழகிய, சொலாரது - வசனத்தையுடைய தேவிமார்களினது, முன்னமமர்ந்து - எதிரில் இருந்து அவர்களுக்குக் காட்சி கொடுத்து, (அதன்பின்), பஞ்சகாயம் - பஞ்சாஸ்தி காயங்களை, பணித்த - பவ்விய ஜீவர்களுக்குபதேசித்த, பிரான் - ஸர்வஜ்ஞனுடைய, அடிக்கு - பாதங்களுக்கு, அஞ்சலிசெய்து - வணக்கஞ்செய்து, அமர்ந்த சிறப்பு - பொருந்திய பூஜாஸ்துதி முதலாகிய மஹிமைகளை, உன்னி - நினைத்துச் செய்து, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கூ௬)

490. தாவி லாத்தவத் தின்பய னாகிய
தேவர் தந்தொகை செய்வ தறிந்துபின்
னாவி னேனைய நரம்பி னெழுகுரற்
றாவி லாவி லயம்பயில் சாலைகாண்.

(இ - ள்) தாவிலா - தாழ்வில்லாத, தவத்தின் - தபத்தினுடைய, பயனாகிய - பலனாகிய, தேவர் தந்தொகை - தேவஸமூஹங்கள், செய்வது - செய்கின்ற காரியத்தை, அறிந்து - தெரிந்துகொண்டு, பின் - பிறகு, நாவினோசை - வாயினாற் பாடும் கீதங்களும், நரம்பினெழுகுரல் - நரம்புக்கருவிகளினால் (அதாவது: வீணை முதலாகிய தத - விதத - கன - சுஷிரமென்னும் வாத்தியங்களினால்) ஆகிய சங்கீத சப்தங்களும், தாவிலா - குறைவில்லாத, இலயம்-தாளமும், பயில் - தங்கியிருக்கின்ற, சாலை - நர்த்தனசாலை முதலானவைகளை, காண் - பார்ப்பாயாக, எ - று. (௩௭)

491. படங்க டந்தணி தங்கிய வல்குலார்
நுடங்கு நுண்ணிடை நோவ நுவலரும்
வடஞ்சு மந்த வனமுலை யின்பயன்
றுடங்கு பின்னென மற்றவர் சொல்லினார்.

(இ - ள்) பின் - அதன்பிறகு, படங்கடந்து - ஸர்ப்பத்தினது பணாமுடியை (உருவத்தினாலே) ஜெயித்து, அணிதங்கிய - அழகுபொருந்திய, அல்குலார் - அல்குலினையுடைய தேவிமார்களின், நுடங்கும் - அசைகின்ற, நுண் - மெல்லிதாகிய, இடை - இடையானது, நோவ - நோகும்படியாக, நுவலரும் - சொல்லுதற்கரிய குணமான, வடம் - முத்துமாலைகள் முதலியவைகளை, சுமந்த - அணிந்த, வனம் - அழகிய, முலையின் - ஸ்தனங்களிலுண்டாகும், பயன் - காம சௌக்கிய பலனை, துடங்கு - அனுபவிக்கத் தொடங்குவாயாக, என - என்று, அவர் - அத்தேவர்கள், சொல்லினார் - சொன்னார்கள், எ - று.

மற்று - அசை. (௩௮)

492. நீதி யைக்கட வார்பெரி யோர்கடா
மாத லாலம ரன்னவை செய்தபின்
காதி யைக்கடி யுந்திரு மாலடி
போது கொண்டு புகழ்ந்து பணிந்தனன்.

(இ - ள்) பெரியோர்கள் தாம் - குணவந்தர்கள், நீதியை - நீதி நெறியை, கடவார் - தவறார்கள், ஆதலால் - ஆகையால், அமரன் - ஸ்ரீதரதேவன், (அவர்கள் சொற்படி), அவை - அக்காரியங்களை, செய்தபின் - செய்த பிறகு, காதியைக் கடியும் - காதிகர்மங்களைப் போக்கின, திருமால் - * ஜினேஸ்வரனுடைய, அடி - பாதங்களை, போதுகொண்டு - புஷ்பங்களைக் கொண்டு அர்ச்சித்து, புகழ்ந்து - ஸ்துதித்து, பணிந்தனன் - வணங்கினான், எ - று. (௩௯)

* இங்கு ஜினேஸ்வரன் என்றது அத்தேவனது விமானத்திலிருக்கப்பட்ட அக்கிருத்திமசைத்யாலயப் பிரதிமைகளை.

வேறு.

493. அரணடைந்த வெங்கானத் தானையாய் நின்றான்
சரணடைந்தே னின்றிந்தச் சாசார ஞைற்
கரணமெலாம் வென்றான்னைக் கண்டவர்கள் காம
மரணமிலா வீடெய்தன் மற்றோர் பொருளோ.

(இ - ள்) (அவ்வாறு வணங்கிப் பின்னரும் அக்கடவுளை நோக்கி) அரணடைந்த - அரசன் நாட்டிற்குக் காவலாகச் சேர்ந்த, வெங்கானத்து - வெப்பம் பொருந்திய (காட்டு மிருகங்களும் வனசரர்களும் வசிக்கின்ற) சல்லகியென்கிற வனத்தில், ஆனையாய் நின்று - நான் ஆனையாகப் பிறந்து நிலைபெற்றிருந்து, உன் சரணடைந்தேன் - (ஜினேஸ்வரனே! உனது குணத்தைச் சிம்மச்சந்திர முனிவராகிய குரு சொல்லக்கேட்டுத் தெரிந்து, உனது பாதத்தை எனக்கு) ரக்ஷணையாக வடைந்தேன், (அங்ஙனம் அடைந்ததனால் நான்) இன்று - இப்பொழுது, இந்தச் சாசாரனால் - இச்சகஸ்ராரகல்பத்தில் தேவனாகப் பிறந்தால், கரணமெலாம் வென்று - மனோ வாக்கு காயமாகிய திரிகரணங்களையும் ஜெயித்து குப்தம்பண்ணி ஆத்மபாவனையில் பரிசுத்தராகிக் கர்மமலங்களை யகற்றி, உன்னைக் கண்டவர்கள் - உன்னை திரவிய குண பரியாயங்களால் நிச்சயமாக வறிந்து அதனால் ஸ்வானுபூதி பெற்றவர்கள், காமம் - காமராகமும், மரணம் - மரணமும், இலா - இல்லாத, வீடெய்தல் - மோக்ஷமடைதல், ஓர் பொருளோ - ஒரு அரிய பொருளாகுமோ? (அது அவர்களால் எளிதில் அடையக் கூடியதாகும்), எ - று.

ஆகுமோ - எதிர்மறை யெச்சம். மற்று - அசை. (சo)

494. நிழற்போல நின்றான்னை வந்தடைந்தார் மாற்று
மழற்போக்கி யந்தமிலா வின்பத்தை யாக்கி
வழுத்தரா முத்தியின்கண் வைக்குநின்பொற் பாத
நிழற்சேரார் மாற்று நெடுவழியைச் செல்வார்.

(இ - ள்) உன்னை வந்து அடைந்து - உன்னிடம் வந்து சேர்ந்து, நிழல்போல நின்றார் - உன்னுடைய நிழலைப்போல நீங்காது நின்று நின்தாளை வணங்குகின்றவர்களுடைய, மாற்றும் - ஸம்சாரமாகிற, அழல் - ஆதபத்தை, போக்கி - நீக்கி, அந்தமிலா - முடிவில்லாத, இன்பத்தையாக்கி - ஸௌக்கியத்தை உண்டுபண்ணி, வழுத்தரா - நீங்குதலில்லாத, முத்தியின்கண் - மோட்சத்தில், வைக்கும் - சேர்க்கின்ற, நின் - உனது, பொற்பாத நிழல் - அழகிய பாத நிழலை, சேரார் - அடையாதவர்கள், மாற்றும் - ஸம்ஸாரமாகிய, நெடுவழியை - நீண்ட வழியில், சேர்வார் - அடைவார்கள், எ - று.

'நின்றுன்னை வந்தடைந்தார்' என்பதை, 'உன்னை வந்தடைந்தார்' என மாற்ற வேண்டும். பக்தர்கள் நிழலைப்போல நீங்காதிருக்க வேண்டுமென்பது, 'நிழலினீங்கா னிறைந்த நெஞ்சமோடு' என்னும் நன்னூற்பாயிரச் சூத்திரவடியாலுணரப்படும். ()

வேறு.

495 காமனையுங் காலனையும் வென்றுலக மூன்றினுக்குஞ்
சேம நெறியருளிச் செந்தா மரைபுல்லிப்
பூமுதிராப் பிண்டிக்கீழ்ப் பொன்னெயிலுண் மன்னியநின்
னாம நவிற்ருதார் வீட்டுலக நண்ணாரே.

(இ - ள்) காமனையும் - மன்மதனையும், காலனையும் - அந்திய காலனாகிய இயமனையும், வென்று - ஜெயித்து, உலக மூன்றினுக்கும் - மூன்று லோகத்திலுமுள்ள பவ்விய பிராணிகளுக்கு, சேமம் - சௌக்கியமாகிற, நெறி - ஸன்மார்க்கத்தை, அருளி - உபதேசித்து, செந்தாமரை - தேவர்களால் நியமிக்கப்பட்ட செந்தாமரைப் புஷ்பத்தை, புல்லி - பாதத்தின்கீழ்ச் சேர்த்து, பூ - புஷ்பங்கள், முதிரா - முதிர்ச்சியடையாத தன்மையையுடைய, பிண்டிக்கீழ் - அசோகமரத்தின்கீழே, பொன்னெயிலுள் - பொன்னாலாகிய ஸமவஸரணத்தில், மன்னிய - சேர்ந்திரா நின்ற, நின் - உனது, நாமம் - பெயரை, நவிற்ருதார் - குணமறிந்து ஸ்துதிக்காதவர்கள், வீட்டுலகம் - மோக்ஷ உலகத்தை, நண்ணார் - அடையமாட்டார்கள், (என்றும் துதித்தான்), எ - று. (சஉ)

வேறு.

496. இப்ப டித்துதித் தேகிய பின்னரே
துப்ப டுந்தொண்டை வாயவர் துன்னினு
ரொப்பி லாதவின் பத்துக் குளித்தன
னெப்ப டித்துறக் கத்தியல் பென்றியேல்.

(இ - ள்) (அவன்) இப்படி - இந்தப்பிரகாரம், துதித்து - ஸ்துதிசெய்து, ஏகிய பின்னர் - சைத்யாலயத்தினின்றும் நீங்கி ஆஸ்தான மண்டபத்தை யடைந்த பிறகு, துப்பு - செம்பவளத்தையும், அடும் - நிறத்தினால் ஜெயிக்கின்ற, தொண்டை - கொவ்வைக்கனிபோன்ற, வாயவர் - வாயையுடைய தேவஸ்திரீகள், துன்னினர் - (அவனிடம்) வந்தடைந்தார்கள், ஒப்பில்லாத - உவமையில்லாத, இன்பத்து - (அவர்களுடைய இன்பமாகிய) சௌக்கியத்தில், குளித்தனன் - அந்த ஸ்ரீதரதேவன் முழுகினான், (அதாவது: அவ்வின்பத்தை அனுபவித்தான்), துறக்கத்து - தேவலோகத்தினது, இயல்பு - ஸ்வரூபமானது, எப்படித்தென்றியேல் - எப்படிப்பட்டதென்று நீ கேட்பாயானால், (அதைச் சொல்லுகிறேன் கேட்பாயாக), எ - று. (சங)

497. ஒன்றின் மேல்வைத்த முப்பதேழ் நான்கிரண்
டொன்றின் மேலொன்று மூன்றுமூன் றொன்பது
ஒன்று மேலொன்று மாந்துறக் கப்புரை
நின்ற மேலுற கீழ்நின்ற நீதியால்.

(இ - ள்) துறக்கப்புரை - ஸ்வர்க்கலோக படலங்கள், ஒன்றின்மேல் வைத்த முப்பது - (ஸௌதர்ம ஈசான கற்பத்தில்) ஒன்றுக்கு முன்னுகவைத்த முப்பதும், (அதாவது: முப்பத்தொரு படலங்களும்), ஏழ்-(ஸநத்குமார மாஹேந் திர கல்பத்தில்) ஏழுபடலமும், நான்கு - (பிரம்ம, பிரம்மோத்திர கல்பங்களில்) நான்கு படலங்களும், இரண்டு - (லாந்தவ, காபிஷ்ட, கல்பங்களில்) இரண்டு படலங்களும், ஒன்று - (சுக்ர, மகாசுக்கிர கல்பங்களில்) ஒரு படலமும், மேலொன்று - (சதாரசஹஸ்ரார கற்பங்களில்) ஒரு படலமும், மூன்று - (ஆனத பிராணத கற்பங்களில்) மூன்று படலங்களும், மூன்று - ஆரண அச்சுத கல் பத்தில்) மூன்று படலங்களும், ஒன்பது - (நவக்கிரைவேயகத்தில்) ஒன்பது பட லங்களும், ஒன்று - (நவாணுதிசையில்) ஒரு படலமும், மேலொன்று - (பஞ்சா ணுத்தரத்தில்) ஒரு படலமும், கீழ்நின்ற - இந்தப் பிரகாரம் கீழ்நின்றவைக ளாகிய சௌதர்ம ஈசான கல்பங்களினின்றும், மேலுற - மேலே பொருந்த, (அதாவது: ஸர்வார்த்தசித்தி பரியந்தம்), நீதியால் - இப்போது சொன்ன வரிசைக் கணக்காக, நின்ற - ஒன்றின்மேலொன்ருக இருக்கப்பட்டனவாய், ஆம் - ஆகும், எ - று. (சச)

498 இரண்டு மேழுமீ ரைந்துமீ ரேழுமா
யிரண்டு மேற்சென்றி ருபத்தி ரண்டெய்த
திரண்ட வற்றின்மே லொன்றுசென் ருயுக
முரண்டெ ழுங்கடன் முப்பத்து மூன்றுமே.

(இ - ள்) முரண்டு - சப்தித்து, எழும் - எழுகின்ற, கடல் - கடல்க ளானவை, இரண்டு - ஸௌதர்ம ஈசான கல்பத்திலிராநின்ற தேவர்களுக்கு இரண்டும், ஏழு - ஸநத்குமார மாஹேந்திர கற்பத்திலிராநின்ற தேவர்களுக்கு ஏழும், ஈரைந்து - பிரம்ம பிரம்மோத்தர கல்பத்திலிராநின்ற தேவர்களுக்குப் பத்தும், ஈரேழுமாய் - லாந்தவகாபிஷ்ட கல்பத்திலிராநின்ற தேவர்களுக்குப் பதி னாலுமாய், இரண்டு மேற் சென்று - அதன்மேல் ஒவ்வொரு யுகளங்களுக்கும் இரண்டிரண்டு அதிகமாகச் சென்று (அதாவது: சுக்ரமஹா சுக்ர கல்பத்துத்தேவர் களுக்குப் பதினறு கடலும், சதாரஸஹஸ்ரார கல்பத்திலிராநின்ற தேவர்களுக்குப் பதினெட்டுக் கடலும், ஆனதப் பிராணத கல்பத்தாருக்கு இருபது கடலும் ஆய் அதன்மேல்), இருபத்திரண்டு - ஆரண அச்சுத கல்பத்திலிராநின்ற தேவர்களுக்கு இருபத்திரண்டு கடலும், திரண்ட - சேர்க்கப்பட்ட, அவற்றின்மேல் - அந்த

இருபத்திரண்டு கடல்களுக்கு மேல், ஒன்று சென்று - (கல்பாதீதமாகிய நவக்கிரைவேயகம் ஒன்பது புரை, நவாணுதிசை ஒன்று, பஞ்சாணுத்தரம் ஒன்று ஆகிய பதினொரு ஸ்தானங்களுக்கும் ஒவ்வொரு ஸ்தானத்திற்கு) ஒவ்வொரு கடல் அதிகமாகிச் சென்று, முப்பத்துமூன்று - பஞ்சாணுத்திரத்திலிராநின்ற தேவர்களுக்கு முப்பத்து மூன்று கடலும், ஆயுகம் - உத்கிருஷ்டாயுஷ்யங்களாக, எய்த - அடைய, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௪௫)

499. கடற்கோ ராயிரத் தாண்டு கடந்தமிர்
துடற்றும் வெம்பசி தீர மனத்துணு
கடற்கு நாள்பதி னைந்து கழித்துயிர்த்
தடக்க மில்லையின் பத்தரத் தேவரே.

(இ - ள்) அத்தேவர் - (அக்கல்பங்களிலுள்ள) அத்தேவர்கள், கடற்கு - ஒரு கடலாயுஷ்யத்திற்கு, ஓராயிரத்தாண்டு கடந்து - ஆயிரம் வருஷங்கள் சென்று (அதாவது: ஆயிரம் வருஷம் கழித்து அல்லது ஆயிரம்வருஷத்துக்கொரு தடவை), உடற்றும் - தங்களை வருத்தும், வெம் - வெவ்விய, பசி - பசியானது, தீர - நீங்க, மனத்து அமிர்துணு - மனத்தினால் தேவாமிர்தத்தைப் புசித்தவர்களாகி (அதாவது: மனஸாஹார திருப்தர்களாகி), கடற்கு-ஒரு கடலாயுஷ்யத்திற்கு, நாள் பதினைந்து கழித்து - பதினைந்துதிவசம் அதாவது ஒரு பக்ஷம் கடந்து, உயிர்த்து - உச்வாஸ நிச்வாஸமுடையவர்களாகி (அதாவது: மூச்சுவிடக்கூடியவர்களாகி), அடக்கமில் - இந்திரிய விஷயங்களிலடக்கமில்லாத, இன்பத்தர் - ஸௌக்கியத்தை யுடையவர்களாவார்கள், (இவைகள் அந்தந்தக் கல்பத்தின் ஆயுஷ்ய கடல்களின் பிரகாரமாகும்), எ - று.

ஐ - சாரியை; அழகெனினுமாம். (௪௬)

500. எழுமு ழும்முதற் கேழரை வீழ்ந்திடை
யொழிமு ழுங்கற்பத் துச்சியின் மூன்றரை
விழுமு ழும்மரை யைந்துடன் வீழ்ந்துமே
லொழிமு ழும்மொன்ற னுத்தரத் தோக்கமே.

(இ - ள்) இடை - இத்தேவலோகத்தினிடத்தே இராநின்ற தேவர்களுக்கு, ஒக்கம் - உன்னதமானது, முதற்கு - ஸௌதர்ம ஈசான கற்பத்திலிராநின்ற தேவர்களுக்கு, எழுமுழம் - ஏழு முழமும், எழு-அதற்குமேலுள்ள ஏழு யுகளங்களுக்கும், அரை வீழ்ந்து - அரை அரை முழம் குறைந்து, (அதாவது: ஸநத்குமார மாஹேந்திர கற்பத்திலிராநின்ற தேவர்களுக்கு ஆறரை முழமும், பிரம்ம பிரம்மோத்தர கற்பத்தார்களுக்கு ஆறு முழமும், லாந்தவ காபிஷ்டர்க

ளுக்கு ஐந்தரை முழமும், சுக்கிரமஹா சுக்கிரர்களுக்கு ஐந்து முழமும், ஸதார ஸஹஸ்ரார த்தார்களுக்கு நாலரை முழமும், ஆனத பிராணத கல்பத்தார்களுக்கு நாலு முழமும், ஆய்) கற்பத்துச்சியின் - ஆரண அச்சுத கல்பத்துத் தேவர் களுக்கு, ஒழிமுழம் - மீந்து நின்ற முழம், மூன்றரை - மூன்றரையும், மேல் - அதற்கு மேலே, ஐந்து - (ஹேஷ்டிம, மத்திம, உபரிம பேதத்தால் நவக் கிரைவேயகப் பிரிவுமூன்று, நவாணுதிசை ஒன்று, பஞ்சாணுத்தரம் ஒன்றாகிய, இந்த) ஐந்து ஸ்தானங்களுக்கும், உடன் - ஒரு தன்மையாக, விழுமுழம் - குறை யும் முழமானது, அரை வீழ்ந்து - ஒவ்வொரு ஸ்தானத்துக்கும் அரை அரை முழ மாகக் குறைந்து (அதாவது: ஹேஷ்டிமத்திரயத்தில் மூன்று முழமும், மத்திம கிரைவேயகத்திரயத்தில் இரண்டரை முழமும், உபரிமகிரைவேயகத்திரயத்தில் இரண்டு முழம், நவாணுதிசையில் உள்ள தேவர்களுக்கு ஒன்றரை முழமும் ஆய்), அணுத்தரத்து - பஞ்சாணுத்தரத்தில் உள்ள தேவர்களுக்கு, ஒழி - மீந்து நின்றது, முழமொன்று - ஒரு முழமாகும், (இப்படி வரிசையால் தேவர்களுக்கு உன்னதம் ஏற்பட்டிருக்கின்றது), எ - று. (சஎ)

501 சோதமீ சானர்தம் மேலி ருவர்தம்
மோதிமண் ணொன்றிரண் டம்மு றையுறாம்
நீதியா னிலங்கீழ் மூன்று நாலைந்தா
லோதியால் மேலமுன் னல்வ ருணர்வரே.

(இ - ள்) சோதமீசானர் - ஸௌதர்ம ஈசான கல்பத்துத் தேவர்கள், தம் - தங்களுடைய, ஓதி - அவதிஜ்ஞானத்தினால், மண்ணொன்று - முதல் நரகபரி யந்தமும், மேலிருவர் - அதற்குமேலிரண்டு கல்பத்தார்களாகிய ஸநத்குமார மாஹேந்திர தேவர்கள், தம் - தங்களுடைய, ஓதி-அவதிஜ்ஞானத்தால், இரண்டு - இரண்டாநரகம் வரையிலும், அம்முறை - அந்த அவதியின் கிரமத்தால், உறும் - பொருந்தும், (அதாவது: அறிகின்ற), மேல முன்னல்வர் - அதற்குமேல் பன்னி ரண்டு கல்பத்தார்களும், (நாலு நாலு கல்பத்தார்களாக), நீதியால் - வரிசைக் கிரமத்தால், நிலங்கீழ் மூன்று - (பிரம்ம, பிரம்மோத்தர, லாந்தவ, காபிஷ்ட ஆகிய இந்த நாலு கல்பத்தார்கள்) கீழான மூன்றாநரகம் வரையிலும், நாலு - (சுக்கிர மஹாசுக்கிர சதாரஸஹஸ்ரார் ஆகிய இந்த நாலு கல்பத்தார்களும்) நாலா நரக பரியந்தமும், ஐந்து - (ஆனதப்பிராணத ஆரண அச்சுத ஆகிய இந்த நான்கு கல்பதேவர்கள்) ஐந்தாநரக பரியந்தமும், ஓதியால் - தங்களுக்குண்டாகிய அவ திஜ்ஞானத்தால், உணர்வர் - அறிவார்கள், எ - று.

முதல் ஓதி - இரண்டிடங்களினும் கூட்டப்பட்டது. (சஅ)

502. ஆற தாவதைக் கேவச்ச மாய்ந்திடு
மீறி லவ்விரு வர்க்குமே ழாவதாம்

மாறி லாச்சவ்வ சித்தியில் வானவ
ரூறி லாவோதி நாழிகை யுட்கொளும்.

(இ - ள்) கேவச்சம் - நவக்கிரைவேயகத்திலிராநின்ற தேவர்கள், ஆற தாவதை - ஆறுநரகம் வரையில், ஆய்ந்திடும் - அவதிஜ்ஞானத்தாலறிந்திடுவோர்கள், ஈறில் - அந்தியத்திலிராநின்ற, அவ்விருவர்க்கும் - நவாணுதிசை பஞ்சாணுத்தரத்திலுள்ள அந்த இரண்டு பேர்களுக்கும், ஏழாவதாம் - ஏழாநரகபரியந்தமும் அறியலாகும், மாறிலா - மாறுபாடில்லாத (அதாவது: உண்மைப் பொருளை யுணரும் நேர்மையாகிய), சவ்வசித்தியில் - சர்வார்த்த சித்தியில் உள்ள, வானவர் - தேவர்கள், ஊறிலா - குற்றமில்லாத, ஓதி - அவதிஜ்ஞானத்தால், உட்கொளும் - மனத்துட் கொள்கின்ற (அதாவது: அறிகின்ற), நாழிகை - த்ரஸ நாழிகை பரியந்தம், (அறிவார்கள்), எ - று. (சகூ)

503. மிடையின் மேனியைத் தீண்டலிற் காண்டலி
னடையு மின்சொலிற் சிந்தையின் மேவலின்
மடநல் லாரின் வரும்பய னெய்துவ
ரடைவி லோதியிற் சொன்னமுன் னைவரும்.

(இ - ள்) முன் - முதலிலே, அடைவில் - கிரமமாக, ஓதியில் - அவதிஜ்ஞானத்தில், சொன்ன - சொல்லப்பட்ட, ஐவரும் - ஐந்து ஸ்தானத்தார்களும், (அதே வரிசையாக), மிடையில் - (ஸௌதர்ம ஈசான கற்பத்துத் தேவர்கள் காயப் பிரவீசாரமாகிய) சரீர புணர்ச்சியாலும், மேனியைத் தீண்டலில் - (ஸநத்குமாரர், மாஹேந்திரரிருவரும் ஸ்பரிசப்ரவீசாரமாகிய) சரீரத்தைத் தொடுதலாலும், காண்டலின் - (அதன்மேல் நாலு கல்பத்தார்கள், அதாவது: பிரம்ம, பிரம்மோத்தர, லாந்தவ, காபிஷ்ட, தேவர்கள் கண்ணினால் பார்த்துத் திருப்தியடைவதாகிய) நேத்திரப்ரவீசாரத்தாலும், அடையும் இன்சொலின் - (அதன்மேல் சுக்ரமஹாசுக்ர சதாரஸஹஸ்ராரமாகிய இந்நாற் கற்பத்தேவர்களும்) இனிய வசனத்தினாலடையும் வசனப்ரவீசாரத்தாலும், சிந்தையின் மேவலின் - (ஆனதப்பிராணத ஆரண அச்சுதமென்னும் நாலு கற்பத்துத் தேவர்கள்) மனதில் நினைத்தலாலடையும் மனப்ரவீசாரத்தாலும், மடம் - அறியாமைத்தன்மையையுடைய, நல்லாரின்-தேவஸ்த்ரீகளிடத்தில், வரும் - உண்டாகின்ற, பயன் - காமராகத்தினாலாகிய சௌக்கியத்தை, எய்துவர் - அடைவார்கள், எ - று. (ருo)

504. பல்ல மைந்தின்மேற் பன்னிரண் டாவதை
யெல்லை யாக விரண்டிரண் டேறிடு
மல்ல நால்வருக் கேழுமிக் கைம்பத்தைம்
பல்ல மாந்தேவி யர்ப்பர மாயுவே.

(இ - ள்) தேவியர் - தேவஸ்த்ரீகட்கு, பரமாயு - உத்கிருஷ்டாயுஷ்ய மானது, பல்லமைந்து - (ஸௌதர்ம கல்பத்துத் தேவஸ்த்ரீகளுக்கு) ஐந்து பல்ல மும், மேல் - அதற்குமேலே, பன்னிரண்டாவதை - பன்னிரண்டாங் கல்ப மாகிய ஸஹஸ்ரார கல்ப்பபரியந்தம், எல்லையாக - அளவாக, இரண்டிரண்டு - ஒவ்வொரு கல்பத்துக்கு இரண்டு இரண்டு பல்லமாக, ஏறிடும் - விருத்தியாகி அதிகரிக்கும், அல்ல - அவையல்லாமல், நால்வருக்கு - (ஆனத, பிராணத, ஆரண, அச்சுதமாகிய), இந்நால்வருக்கும், ஏழுமிக்கு-(ஒவ்வொரு கற்பத்துக்கு) ஏழு ஏழு பல்லமாக அதிகரித்து, ஐம்பத்தைம் பல்லம் - (அச்சுத கல்பஸ்த்ரீகட்கு) ஐம்பத் தைந்து பல்லமும், ஆம் - ஆகும், எ - று.

ஐந்தின் என்பதில், இன் - சாரியை. ஆவதை என்பதில், ஐ - சாரியை.(நக)

505. மோகமின் முனிவன தின்பம் போலவே
தோகையை யனையவர் தொடர்ச்சி யின்றியே
சோகமோ டுறுதுய ரின்றித் தானியல்
பாகுநல் லகமிந்தி ரத்தவ ரின்பமே.

(இ - ள்) நல் - நன்மையாகிய, அகமிந்திரத்தவர் - அகமிந்திர தேவர்க ளுடைய, இன்பம் - ஸௌக்கியமானது, மோகமில்-மோஹனீய பரிணாமமில்லாத, முனிவனது - முனிவரனுடைய, இன்பம்போல - சுகத்தைப்போல, தோகையை யனையவர் - ஆண்மயிலுக்குச் சமானமாகிய சரீரச்சாயலையுடைய தேவஸ்த்ரீகளது, தொடர்ச்சியின்றியே - ஸம்பந்தமில்லாமலே (அதாவது: அவர்கள் நிஷ்ப்ரவீசார ராகி), சோகமோடு - மனக்கவற்சியுடன், உறு - அடைகின்ற, துயர் - துக்கங் களும், இன்றி - இல்லாமல், இயல்பாகும் - ஸ்வபாவமாகிய ஸௌக்கியமே யாகும், எ - று.

தான் - அசை. (நஉ)

506. சோதமர் சிறுமைச் சோதிட ருத்தம
மோதிய வரைக்கட லுத்த வுத்தமம்
நீதியா னிலங்கீழ்மே லவர்க்கு நின்றதா
மேதமி லிடையன பலவு மாகுமே.

(இ - ள்) சோதமர் - ஸௌதர்ம ஈசான கல்பத்தாருடைய, சிறுமை - ஜெகன்னிய்யாயுஷ்யமானது, சோதிடர் - ஜோதிஷ்க தேவர்களுடைய, உத்தமம்- உத்தமாயுஷ்யமாகிய ஒரு பல்லமாகும், நீதியால் - இவ்வரிசையால், நிலங்கீழ் - கீழ்க்கற்பத்தாரின் உத்தமாயுஷ்யமானது, மேலவர்க்கு - மேல் கல்பத்தாருக்கு, நின்றது - ஜெகன்னிய்யாயுஷ்மாக நிற்கப்பட்டதாக, ஆம் - ஆகும், ஓதிய- (அதுவல்லாமலும்) அந்தந்தக் கல்பங்களுக்குச் சொல்லப்பட்ட, (உத்கிருஷ்டாயுஷ்

யத்திற்கு மேலாக), அரைக்கடல் - அரை அரைக்கடல் ஜாஸ்தியாக, உத்த வுத்தமம் - உத்கிருஷ்டோத்கிருஷ்டாயுஷ்யமாகும், ஏதமில் - குற்றமில்லாத, இடையன - மத்தியாயுஷ்யமானது, பலவுமாகும் - பல பிரகாரங்களாகும், எ - று. (ருரு)

507. இதுவம ருலகுத னியல்பி தன்கணச்
சதிரமைச் சாசார கற்பத் தின்வழி
யதிற்பெற வவனரு மத்தி யாயுக
மதுரநன் மொழிவரு மின்ப மேவினன்.

(இ - ள்) அமருலகுதன் - தேவலோகத்தினுடைய, இயல்பு - ஸ்வரூபமானது, இது - இத்தன்மையதாகும், இதன் கண் - இப்படிப்பட்ட இத்தேவருலகத்தில், அச்சதிரமை - அந்த அழகமைந்த, சாசாரகற்பத்தின் வழியதில் - ஸஹஸ்ராரகல்பத்தில் சூர்யப்பிரபை யென்கிற விமானத்தில், அவன் - அந்த ஸ்ரீதரதேவன், (உற்பவித்து), அரும் - அருமையாகிய, மத்தியாயுகம் - மத்திமாயுஷ்யத்தை, பெற-மேற்கூறிய கிரமப்படி அடைய, (பின்னர் அங்கு முன்னுரைத்தவாறேயிருந்து தேவஸ்த்ரீகளின்) மதுரம் - மாதுரியமாகிய, நன் - நன்மை பொருந்திய, மொழிவருமின்பம் - வசனத்தினாலுண்டாகிய ஸௌக்கியத்தை (அதாவது : வசனப்ரவீசார ஸுஹத்தை), மேவினன் - பொருந்தினன், எ - று.

508. பதினறு கடன்மிசைப் பட்ட வாயுகம்
பதினறு வருடமா யிரங்க டந்துண
பதினறு பதினைநாள் விட்டு யிர்த்திடா
பதினறு பாவனை யாரைப் பாடுமே.

(இ - ள்) (அங்ஙனம் இன்பமனுபவித்த இந்த ஸ்ரீதரதேவனுக்கு) ஆயுகம் - மேற்கூறிய மத்திமாயுஷ்யமானது, பதினறு கடன்மிசை - பதினறு கடலுக்கு மேல், பட்ட - சிறிது அதிகமாகியதாம், (இவ்வகை ஆயுஷ்யத்தையுடைய இவன்), பதினறு வருடமாயிரம் - பதினறாயிரம் ஸம்வத்ஸரங்களை, கடந்து-தாண்டி, உண - உண்டு, (அதாவது: மனஸாஹாரமுடையவனாய்), பதினறு பதினைநாள்-பதினறு பக்ஷங்களை, விட்டு - தாண்டி, உயிர்த்திடா - மூச்சுவிட்டு, (அதாவது : உச்வாஸ நிச்வாஸங்களையுடையவனாகி), பதினறு பாவனையாரை - ஷோடச பாவனையை பாவித்து அதனால் தீர்த்தகரநாம மஹாபுண்ணிய முடையவர்களாகிய ஜினேந்திரர்களை, பாடும் - ஸ்துதி செய்வானாயினன், எ - று. (ருசு)

509. நாலரை முழமியல் பாமோர் மாத்திரை
மால்வரை யணுவள வாய்வி னைப்புழிச்
சால்வு நணியவர் போல வெய்தனு
மாலுறு முருப்பல வாகு மேனியான்.

(இ - ள்) (இன்னும்) நாலரைமுழம் - நாலரைமுழம், இயல்பாம் - அந்த ஸ்ரீதரதேவனுக்கு ஸ்வபாவ உன்னதமாகும், ஓர் மாத்திரை - (அதுவன்றியும்) ஒரு க்ஷணத்தில், (அவன்), மால் - பெரிதாகிய, வரை அளவாய் - பர்வதத்தின் அளவாகவும், அணுவளவாய் - அணுவளவாய்ச் சூக்ஷ்மமாகவும், நினைப்புழி - ஒருவர் நினைக்குமிடத்தில், சாலவும் - மிகவும், அவர்போல - அவரைப்போல, நணி - பொருந்தி, எய்தலும் - அடைவதும், மாலுறு - பிரமையடையும்படியான, உருப்பல எய்தலும் - பலவாகிய ரூபங்களையடைதலும், ஆகும் - ஆகின்ற, மேனியான் - சரீரத்தையுடையவனுமிருந்தான், எ - று.

அளவாய், எய்தலும் என்ற வாக்கியங்கள் இரண்டிடங்களினும் கூட்டப்பட்டன. (ருசு)

510. வாசமோ ரோசனை நின்று நாறிடுந்
தேசுமோ ரோசனை சென்றெ றித்திடும்
தூசணி மாசெய்தா மேனி யின்குணம்
பேசலாம் படியது வன்று பீடினால்.

(இ - ள்) தூசு - வஸ்திரங்களும், அணி - ஆபரணங்களும், மாசெய்தா - அழுக்கடையாத (அதாவது: ஒளிமழுங்காத), மேனியின் - இந்த ஸ்ரீதரதேவனுடைய சரீரத்தின், குணம் - குணமானது (எப்படிப்பட்டதென்றால் அதிலுள்ள) வாசம் - வாசனையானது, ஓரோசனை - எப்பககங்களிலும் ஒரு யோசனைப்பிரமாணம், நின்று - வியாபித்து நின்று, நாறிடும் - பரிமளித்துக்கொண்டிருக்கும், தேசும் - ஒளியும், ஓரோசனை - ஒரு யோசனைப்பிரமாணம், சென்று - எப்பக்கங்களிலும் வியாபித்து, எறித்திடும் - வீசும், பீடினால் - இவ்விதமாகிய பெருமைகளினால், பேசலாம் படியதுவன்று - (அது) வர்ணித்துக்கூற முடிந்ததன்று, எ - று. (ருஎ)

511. முன்செய்நல் வினையினான் முகிலின் மின்னனா
ரின்செய் வாயவ ரேந்து கொங்கையர்
வந்திடைச் சூழ்ந்திட வணங்க வானவ
ரந்தமி லின்பத்து ளமரன் மேவினான்.

(இ - ள்) (இவ்வித பெருமைகளுடனே) முன்செய் - பூர்வத்தில் செய்யப்பட்ட, நல்வினையினால் - புண்ணியகர்மத்தி னுதயத்தால், முகிலின் - மேகத்திலுண்டாகிய, மின்னனார் - மின்னற் கொடிபோன்றவரும், இன்செய்வாயவர் - இனிமையைச் செய்கின்ற சிவந்த வாயையுடையவரும், ஏந்து - மார்பினிடத்தில் தரித்த, கொங்கையர் - ஸ்தனங்களையுடையவரும் ஆகிய தேவமாதர்கள், வந்து - எப்பக்கங்களிலுமடைந்து, இடை சூழ்ந்திட - தன்னிடத்தே சூழ்ந்துகொள்ளவும்,

வானவர் - ஸாமான்னிய தேவர்கள், வணங்க - பணியவும், அந்தமில் - தனதாயுஷ்ய காலம் வரையில் முடிவில்லாத, இன்பத்துள் - இவ்விதமான தேவஸௌக்கியத்தில், அமரன் - இந்த ஸ்ரீதரதேவன், மேவினன் - (மேற் கூறியபடி) எ - று. (சுஅ)

512. மந்திரி தமிலனும் மரித்து மால்வனத்
தந்தர மின்றிவா னரம தாகினன்
சிந்துரக் களிற்றின்மேல் செறிந்த வன்பினல்
வெந்துய ரறுவர வத்தை வீட்டினன்.

(இ - ள்) (ஸ்ரீதரதேவன் அப்படியிருக்க) மந்திரி - (ஸிம்மஸேன வாசனுக்கு ஸத்தியகோஷ மந்திரிக்குப் பிறகு ஏற்பட்டிருந்த) மந்திரியாகிய, தமிலனும் - தர்மிலனென்னுமவனும், மரித்து - இறந்து, மால் - பெரிதாகிய, வனத்து - அந்தச் சல்லகீவனத்தில், அந்தரமின்றி - விக்கினமின்றி (அதாவது: மரித்தவுடனே), வானரமதாயினன் - குரங்காகப் பிறந்தான், (அவ்வாறு பிறந்தவன்) சிந்தூரம் - முகத்தில் சிந்தூரத்திலகம் போன்ற புள்ளிகளையுடைய, களிற்றின்மேல் - அசனிகோடமென்னும் யானையின்மேல், செறிந்த - சேர்ந்த, அன்பினல் - முற்பவத்தாசையினல், வெம் - வெப்பம் பொருந்திய, துயர் - துன்பங்கள், அறு - நீங்காத, அரவத்தை - அக் குக்குட ஸர்ப்பத்தை, வீட்டினன் - கொன்றான், எ-று.

513. உரகம்வா னரத்தினு லுயிரி ழந்துபோய்
நரகமூன் றுவதை நண்ணி யெண்ணரும்
பெரியமா துயரம துற்ற தாற்றவும்
விரகினல் வினைகணின் றுதயஞ் செய்யவே.

(இ - ள்) உரகம் - அக் குக்குடஸர்ப்பமானது, வானரத்தினல் - முன் சொன்ன குரங்கினல், உயிரிழந்து போய் - அச்சரீரத்தினின்றும் உயிர் நீங்கிப் போய், நரகமூன்றுவதை - மூன்று நரகத்தை, நண்ணி - அடைந்து நரகனுயவதரித்து, விரகினல் - கிரமத்தால், வினைகள்-பாபவினைகள், நின்று - தங்கிநின்று, உதயஞ் செய்ய - உதயத்தைக் கொடுக்க, அது - அக் குக்குடஸர்ப்பமாகி முன்னிருந்து இப்போது நாரகனுய்ப் பூர்வம் ஸ்ரீபூதியாகிய ஆத்மன், எண்ணரும் - நினைத்தற்கரிய, பெரும் - பெரிதாகிய, மாதுயரம் - மஹாதுக்கத்தை, ஆற்றவும் - மிகவும், உற்றது - அந்நரகத்தில் அடைந்தது, எ - று. (சுO)

514. ஒட்டகங் கழுதைநாய் பாம்பு வாசியூ
னிட்டதோர் குழியின்மிக் கெழுந்து நாறிடும்
மட்டிடை வீழ்ந்ததி லமைந்த யாக்கையான்
சுட்டதோர் பனைத்துணிப் போல தூங்கினன்.

(இ - ள்) ஒட்டகம் - ஒட்டையும், கழுதை - கழுதையும், நாய் - நாயும், பாம்பு - ஸர்ப்பமும், வாசி - குதிரையுமாகிய இவைகளினுடைய, ஊன் - மாமிசங்களை, இட்டதோர் - போட்டு நாற்றமெடுத்ததாகிய ஒரு, குழியின் - குழியைக் காட்டிலும், மிக்கெழுந்து-அதிகமாகக்கிளம்பி, நாறிடும்-நாறும்படியான, மட்டிடை-நாகத்தில், வீழ்ந்து - விழுந்து, அதிலமைந்த - அதிலிருக்கும் ஆவாஸத்தில் பொருந்திய, யாக்கையான் - சரீரத்தையுடையவனாகி, சுட்டதோர் பனைத்துணிப் போல - கொளுத்தப்பட்ட ஒரு பனங்கட்டையைப்போல, (அதிகக் கறுப்பு நிறத்தையுடைத்தாய்), தூங்கினன் - தொங்கினன், எ - று. (சுச)

515. முடையுடம் பதுவொரு மூழ்த்த மேகலும்
படைமிடை பூமிமேற் பதித்த போழ்தினே
தடியொடு தண்டுவா ளேந்திச் சூழ்ந்திடாக்
கடையற வதுக்கினர் காள மேனியார்.

(இ - ள்) முடை - துர்க்கந்தத்தையுடைய, உடம்பு - (ஆவாஸத்தில் பொருந்திய) அங்கநாக சரீரமானது, ஒரு மூழ்த்தமேகலும் - ஒரு அந்தர் முகூர்த்தம் சென்ற காலத்தில், படை - ஆயுதங்களினால், மிடை - நெருங்கிய, பூமிமேல் - நரக பூமியில், பதித்தபோழ்தின் - அழுத்திய காலத்தில், காளமேனியார் - கறுப்புச் சரீரத்தையுடைய புராதன நாரகர்கள், தடியொடு - கோல்களுடனே, தண்டு - தண்டாயுதங்களையும், வாள் - வாள் முதலான வாயுதங்களையும், ஏந்தி - கையில் தரித்து, சூழ்ந்திடா - இந்த நூதன நாரகனைச் சூழ்ந்துகொண்டு, கடையற - இவனது சரீரம் அடியற்று நீங்கும்படியாக, அதுக்கினர் - அடித்தார்கள், எ - று.

516. திரித்தனர் செக்குர லுட்பெ யர்ச்சியி
லுரித்தனர் கிழிகளை யொப்பச் சுற்றிடா
வெரித்தனர் நிறைத்தமுள் ளிலவ மேற்றிநின்
றுரைத்தன ரெதிரெதிர் வளைந்த முள்ளின்மேல்.

(இ - ள்) செக்குரலுள் - உரல்போன்று கல்லாலாகிய செக்கினுள்ளிட்டு, பெயர்ச்சியில் - ஆட்டுதலால், திரித்தனர் - (சரீரம் நசுங்கும்படியாக) சுற்றி அரைத்தார்கள், கிழிகளையொப்ப - துணித்துண்டுகளுக்குச் சமானமாக, உரித்தனர் - (சரீர முழுதிலுமுள்ள மேற் சதையை) கிழித்தார்கள், சுற்றிடா - எப்பக்கத்திலும் சுற்றி, எரித்தனர் - அக்கினியை உண்டுபண்ணிக் கொளுத்தினார்கள், நிறைத்த - நெருக்கிவைத்த, முள்ளிலவமேற்றி நின்று - முள்ளிலவமரத்திலே ஏற்றி நின்று, எதிர் எதிர் - ஒன்றுக்கொன்று எதிரெதிராக, வளைந்த - வளைந்து கூர்மையாகிய, முள்ளின் மேல் - முள்ளுகளின் மேலே, உரைத்தனர் - தேய்த்தார்கள், எ - று. (சுரு)

517. சிக்குழி யுட்புக நூக்கி னார்சிலர்
வாக்கினார் செம்பினை யுருக்கி வாயிடைத்
தூக்கிமுண் மத்திகை யாற்பு டைத்திரு
பாக்கதாய்ப் பிளந்திடு வாரு மாயினார்.

(இ - ள்) சிலர் - சில புராதன நாரகர்கள் கூடிக்கொண்டு, (இந்த நூதன நாரகனை), சிக்குழியுள் - சிழ்க்குழியினுள், புக - விழும்படியாக, நூக்கினார் - தள்ளினார்கள், செம்பினை - செம்பை, உருக்கி - ஜலமாகும்படி உருக்கி, வாயிடை - அவன் வாயில், வாக்கினார் - ஊற்றினார்கள், தூக்கி - உயரத்தூக்கி, முள் மத்திகையால் - முட்களையுடைய சம்மட்டிகளால், புடைத்து - அவனை அடித்து, இரு பாக்கதாய் - இரண்டு பங்காக, பிளந்திடுவாருமாயினார் - பிளப்பவருமானார்கள், எ - று. (கூச)

518. மலையெனப் பெரியதோ ரிருப்பு வட்டினை
யுலையழற் போற்கணத் துருகச் சுட்டிடு
நிலையழற் குட்டத்து வெந்து நீடியா
துலையின்வெம் பலியென வெழுந்து வீழுமே

(இ - ள்) (மேலும் அவர்கள் அவனை நெருப்பிலே யிட) மலையென - பர்வதம்போல, பெரியது - பெரியதாகிய, ஓரிருப்புவட்டினை - ஒரு இரும்புக் குண்டை, உலையழல் போல் - கருமானுடைய உலைக்கட அக்கினிபோல, கணத்து - ஒரு க்ஷணநேரத்தில், உருக - உருகும்படியாக, சுட்டிடும் - சுடும்படியான, நிலை - ஒரு காலும் பற்றறாமல் நிலைத்திராநின்ற, அழற் குட்டத்து - அக்கினித் திரளில், வெந்து - வேதலுற்று, நீடியாது - நீட்டிக்காமல் (அதாவது : உடனுக்குடன் சீக்கிரமாக), உலையின் வெம்பலியென - உலையிலே கொதிக்கப்பட்ட சோற்றுப்பருக்கை வெப்பத்தின் அழற்சியால் தானாகவே எழும்புகிறது போல, எழுந்து வீழும் - (அவன்) எழும்பி விழுவான், எ - று. (கூரு)

519. பஞ்செழ வுலர்ந்துநாப் பாந்த வேட்கையா
னஞ்சினை மடுத்துட னடுங்கி வீழ்ந்திடா
துஞ்சினுந் துஞ்சிடாத் துயர மாக்கட
லெஞ்சலி லாயுக மிரக்க மொன்றிலான்.

(இ - ள்) (மேலும் அவன்) பஞ்செழ - பஞ்சு பறக்க, உலர்ந்து - காய்ந்து, நா - நாக்கிலே, பாந்த - மிகுதியாக உண்டாகிய, வேட்கையால் - தண்ணீர்த் தாகத்தினால் (ஜலம் குடிக்க நினைக்கும் அப்போது அங்குள்ளவர்களால் கொடுக்கப்பட்ட), நஞ்சினை மடுத்து - விஷநீரைக்குடித்து, நடுங்கி - பயந்து, வீழ்ந்திடா -

மூர்ச்சையால விழுந்து, துஞ்சினும் துஞ்சிடா - மரணமூர்ச்சையடைந்தாலும் சாகாத, துயரம் - இவ்வித நரக துக்கமானது, எஞ்சலில் - குறைவில்லாத, மாக்கடல் - பெரிதாகிய கடல்களாகிய, ஆயுகம் - தனதாயுஷ்யத்தில், இரக்க மொன்றிலான் - நடுவிற் சாதலிலனாகிய அனபமிருத்தியாயுஷ்யத்தை யுடையவனாய்த் துக்கிப்பவனானன், எ - று. (கூகூ)

520. நின்றுநின் றுடற்றும்வெம் பசியை நோக்குவா
னொன்றிநின் றவர்நினைந் திட்ட வக்கணஞ்
சென்றுநஞ் செத்திசை யுஞ்செ றிந்திடா
பொன்றநின் றுடற்றிடுங் கணந்தொ றும்புகா.

(இ - ள்) (மேலும் அவன்) நின்று நின்று - நீங்காமல் எப்போதும் நின்று, உடற்றும் - வருத்துகின்ற, வெம் - வெப்பம் பொருந்திய, பசியை - பசிநோயை, நோக்குவான் - பார்த்து அதனை நீக்கும்பொருட்டு வருந்துவான், (அப்பொழுது), ஒன்றி - பொருந்தி, நின்றவர்-அங்கே நின்றவர்கள், நினைந்திட்ட - (அவனுக்கு ஆகாரத்திற்குப் பதிலாக விஷத்தை ஊட்ட வேண்டுமென்று) நினைந்த, அக்கணம் - அதே சமயத்தில், நஞ்சு-(அவர்களால் இடப்பட்ட) விஷமானது, எத்திசையும் சென்று - எப்பக்கத்திலு மடைந்து, புகா - அவனுட்புகுந்து, செறிந்திடா - நிறைந்து, (அவன் பசி வேதனை பொறுக்கமாட்டாமல் அதைப் புசிக்க), பொன்ற நின்று - அவன் பிரஜ்ஞை தப்பி மரணாவஸ்தையடைய நின்று, கணந்தொறும் - எச்சமயத்திலும், உடற்றிடும் - (அவனுக்கு) வேதனையைச் செய்யும், எ - று. ()

521. முழமிசை முப்பத்தோர் வில்லு யர்ந்தவ
னெழுமிசைப் புகைமுப்பத் தொன்று காதமும்
விழுமுடன் வெங்கனல் வெண்ணெய் போன்றுடைந்
தெழுகடற் றானுமீ தவனி யற்கையே.

(இ - ள்) (பின்னும்) அவன் - மூன்றுநரகத்தில் ஜனித்த அந்நாரகன், முழமிசை - ஒரு முழம் மேலாகிய, முப்பத்தோர் வில்லு - முப்பத்தொரு வில்லு, (அதாவது : முப்பத்தொன்றேகால் வில்லு), உயர்ந்து - சரீர உன்னத முடையவனாகி, புகைமுப்பத்தொன்று - முப்பத்தொரு யோசனையும், காதமும் - ஒருகாதமும், (அதாவது : முப்பத்தொன்றேகால் யோஜனை உயரம்), மிசை - நரகபூமியினின்றும் மேலே, எழும் - எழும்புவான், வெம் - வெப்பமுடைய, கனல் - அக்கினியிலகப்பட்ட, வெண்ணெய்போன்று - வெண்ணெயைப்போல், உடைந்து - நரகஸந்தாபத்தாலுருகி, உடன் - உடனே , விழும் - தலை கீழாக விழுவான், எழு கடல்தானும் - தனக்குண்டாகிய ஆயுஷ்யமாகிய ஏழுகடல் பரியந்தம், அவன் - அந்நாரகனது, இயற்கை - ஸ்வபாவ துக்கமானது, ஈது - இதுவாயிருந்தது, எ - று.

522. நெருப்பினை யுமிழ்ந்திடும் நிழல்கள் புக்கிடில்
விருப்புறு மவைவிப ரீத மாய்வருஞ்
செருச்செயா தாரிலைத் திரியுந் தீவளி
யுரைப்பதென் னவனினி நரகத் துற்றதே.

(இ - ள்) (இன்னும் அவன்) நரகத்து - நரகத்திலே, நிழல்கள் புக்கிடில் - நிழல் வேண்டுமென இச்சித்துத் தோப்புகளின் நிழல்களிலடைந்தால், (அத் தோப்புகள்), நெருப்பினை - அக்கினியை, உமிழ்ந்திடும் - மேலே சொரியும், (அது வன்றியும்), விருப்புறுமவை - அவனால் இச்சிக்கப்பட்டவைகளெல்லாம், விபரீத மாய் - நினைத்த அவற்றிற்கு எதிரிடையாக மாறுபாடாய், வரும் - உண்டாகும், செருச்செயாதார் - அவனோடு சண்டை செய்யாதவர்கள், இல்லை - அந்நரகத்தி லில்லை, தீவளி - அக்கினிக்காற்று, திரியும் - அவன் சஞ்சரிக்கும் எவ்விடங்களி லும் மிகுதியாய் உலாவும், இனி - இன்னமும், அவன் - அந்நாரகன், உற்றது - அடைந்த துயரத்தில், உரைப்பது என் - சொல்லக்கூடியது என்ன விருக் கின்றது, (எல்லாத் துன்பத்தையுமே அடைந்தான்), எ - று. (கக)

வேறு.

523. நாகத்தைப் போலு நாகம் நாகத்தால் நாக மெய்த
நாகத்தை நாகந் துய்த்து நாகந்தா னரக மெய்த
மேகத்தி னோடுந் திங்கள் வீழ்ந்துடன் கிடந்த தென்ன
நாகத்தின் கொம்பு முத்தும் நரியெனுங் குறவன் கொண்டான்.

(இ - ள்) (மேற்கூறியபடி) நாகத்தைப்போலும் - பர்வதத்துக்குச் சமான மாகிய, நாகம் - அசனிகோடமென்னும் யானையானது, நாகத்தால் - குக்குட ஸர்ப்பத்தினால், (கடிக்க இறந்து), நாகமெய்த - தேவலோகமடைய, நாகத்தை - அந்த ஸர்ப்பத்தை, நாகம் - குரங்கானது, துய்த்து - கடித்துத் தின்றுவிட, நாகந் தான் - அக்குக்குட ஸர்ப்பமானது, நரகமெய்த - மூன்று நரகத்தையடைய, மேகத்தினோடும் - மேகக் கூட்டத்தோடும், திங்கள் - சந்திரனும், வீழ்ந்து - பூமி யில் விழுந்து, உடன் - ஒரு தன்மையாக, கிடந்ததென்ன - கிடந்தது போல, (கரிய மேனியும் வெள்ளிய தந்தங்களும் விளங்கக்கிடந்த) நாகத்தின் - அந்த யானையினுடைய, கொம்பும் - கொம்பையும், முத்தும் - முத்துக்களையும், நரி யெனும் - நரியனென்னும் பெயரையுடைய, குறவன் - ஒரு வேடன், கொண் டான் - கைப்பற்றிக் கொண்டான், எ - று. (௭௦)

524. தந்தமு முத்துங் கொண்டு தனமித்தன் றன்னைக் கண்டு
வெந்திறல் வேட னீந்து வேண்டுவ கொண்டு போனான்

சுந்தர முத்துங் கொம்புங் கொண்டுபின் வணிகன் பூர
சந்திரன் சரணஞ் சார்ந்து சாலவுஞ் சிறப்புப் பெற்ருன்.

(இ - ள்) (அதன் மேல்) தந்தமும் - அந்த யானைக்கொம்புகளேயும், முத்தும் - முத்துக்களையும், கொண்டு - எடுத்துக்கொண்டுபோய், தனமித்தன்றன்னை - சிம்மமஹாபுரத்திலுள்ள தனமித்திரன் என்னும் ஒரு வியாபாரியை, கண்டு - பார்த்து, வெந்திறல் - வெப்பம் பொருந்திய வலிமையையுடைய, வேடன் - அவ் வேடனானவன், ஈந்து - அவனிடம் கொடுத்து, வேண்டுவ - தனக்கு வேண்டிய பொருள்களை, கொண்டு - வாங்கிக்கொண்டு, போனான் - போய் விட்டான், பின் - பிறகு, வணிகன் - அந்த வியாபாரியானவன், சுந்தரம் - அழகிய, முத்தும் - அம்முத்துக்களேயும், கொம்பும் - கொம்புகளேயும், கொண்டு - எடுத்துக்கொண்டுபோய், பூரசந்திரன் - அந்நகரத்தரசனாகிய பூர்ணசந்திரனுடைய, சரணம் - பாதங்களை, சார்ந்து - அடைந்து நமஸ்கரித்து, (அவனிடம் கொடுத்து), சாலவும் - மிகவும், சிறப்பு - மேம்பாட்டை, பெற்றான் - அடைந்தான், எ - று. (எக)

525. பைம்பொனும் மணியும் முத்தும் பவழமும் பயின்ற மஞ்சிற்
கொம்பிரண் டினையும் நாலு கால்களாய்க் கடைந்து கூட்டி
வம்பணி முலையி னார்கள் சூழமற் றதனை யேறிக்
கொம்பிடைப் பிறந்த முத்த மாலைகொண் டணிந்தி ருந்தான்.

(இ - ள்) (பிறகு) பைம் - பசுமை பொருந்திய, பொனும் - ஸ்வர்ணமும், மணியும் - அரதனங்களும், முத்தும் - முத்துக்களும், பவழமும் - பவளங்களும், பயின்ற - (சேர்த்துச் செய்யப்பட்டபடியால்) கலந்து தங்கிப்பிரகாசிக்கின்ற, மஞ்சில் - தனது படுக்கைக் கட்டிலில், கொம்பிரண்டினையும் - அந்த யானைக் கொம்புகளிரண்டையும், நாலு கால்களாய் - நான்கு கால்களாக, கடைந்து - கடைசற்பிடித்து (அதாவது: கடைசல் யந்திரத்தின் வேலையால் விசித்திரமாக ஒழுங்கு செய்து), கூட்டி - பூட்டி (அதாவது: சேர்த்து), வம்பணி - ரவிக்கையையணிந்த, முலையினார்கள் - தனங்களையுடைய ஸ்த்ரீமார்கள், சூழ - சூழும்படியாக, அதனை - அக்கட்டிலில், ஏறி - ஏறினவனாகி, கொம்பிடை - அந்தக் கொம்பினிடமாக, பிறந்த - உண்டான, முத்தம் - முத்துக்களை, மாலை கொண்டு - மாலையாகச் செய்து கைக்கொண்டு, அணிந்து - கழுத்திற் பூண்டு, இருந்தான் - இருந்தனன், எ - று. (எஉ)

526. இங்கிந்த மாற்றின் றன்மை கேட்டபின் யாரு மில்லைப்
பொங்கிய புலத்தி னீங்கி யறந்தலைப் படாது போவார்
சிங்கவே றனைய காளைக் கிதனைநீ செப்பு தீமைப்
பங்கநல் லறத்தி னைகு மெனப்பணிந் துவந்து போனாள்.

(இ - ள்) இங்கு - இவ்வுலகத்தில், இந்த - இவ்வாறுண்டாகிய இந்த, மாற்றின்தன்மை - ஸம்ஸாரத்தினது ஸ்வரூபத்தை, கேட்டபின் - கேட்ட பிற்பாடு, பொங்கிய - மிகுதியாகிய, புலத்தின் - இந்திரிய விஷயங்களினின்றும், நீங்கி - விலகி, அறந்தலைப்படாது - தர்ம ஸ்வரூபத்தில் சேராமல், போவார் - அஞ்ஞானத்தில் செல்பவர்கள், யாரும் - எவர்களும், இல்லை - கிடையாது (எப்படிப்பட்டவர்களும் அஞ்ஞான நீங்கி ஸம்ஜ்ஞானத்தைப் பெறுவார்கள்; ஆகையால்), சிங்கவேறனைய - ஆண்சிங்கம் போன்ற பராக்கிரமத்தையுடைய, காளைக்கு - விட புருஷனாகிய பூர்ணச்சந்திரனுக்கு, இதனை - இந்தச் சரித்திரத்தை, நீ - நீ, செப்பு - சொல்வாயாக, (அதனால்) தீமை - பொல்லாங்குகளுக்கெல்லாம், பங்கம் - கெடுதியாகிய, (அதாவது: பொல்லாங்குகளைக் கெடுத்து நீக்கும்படியான), நல்லறத்தின் - நல்ல ஸ்ரீ ஜினதர்மத்தில், ஆகும் - பிரவேசிப்பான், என - என்று ஸிம்மச்சந்திர முனிவரன் சொல்ல, பணிந்து - இராமதத்தை வணங்கி, உவந்து - சந்தோஷித்து, போனாள் - போய்விட்டாள், (நகருக்குத் திரும்பினாள்), எ - று. (எ௩)

527. மாதவன் பாத மேற்றி மனோகர வனத்தி னின்று
மாதரத் தோடும் போகி யரசனும் மகனைக் கண்டு
காதலுங் களிப்பு நீங்குங் கதையினை யுரைப்பக் கேளா
மேதினிக் கிறைவன் சால வெய்துயிர்த் தவல முற்றான்.

(இ - ள்) மாதவன் - மஹாதபஸையுடைய ஸிம்மச்சந்திர முனிவரனுடைய, பாதம் - பாதங்களை, ஏற்றி - உயர்த்திக்கூறி ஸ்தோத்திரம்பண்ணி, மனோகரம் - மனதுக்குரம்மியமாகிய, வனத்தினின்றும் - அவ்வனத்தினின்றும், ஆதரத்தோடும் - ப்ரீதியோடும், போகி - நகரத்திற்போய், அரசனும் மகனை - இராஜகுமாரனாகிய பூர்ணசந்திரனை, கண்டு - இராஜமாளிகையில் பார்த்து, காதலும் - ஆசையும், களிப்பும் - சந்தோஷமும், நீங்கும் - நீங்கி வைராக்யமுண்டாகும்படியான, கதையினை - (முனிவரனால் சொல்லக் கேட்ட) அக்கதையை, உரைப்ப - சொல்ல, கேளா - அதைக்கேட்டு, மேதினிக்கிறைவன் - இப்பூமிக்கு அரசனாகிய பூர்ணசந்திரன், சால - மிகவும், வெய்துயிர்த்து - வெப்பமாகப் பெருமூச்செறிந்து, அவலமுற்றான் - வருத்தமடைந்தான், எ - று. (எச)

528. மண்ணினுக் கிறைவ னாயு மறத்தினை மறந்து முன்னைப்
புண்ணிய முலர்ந்த போழ்தின் விலங்கிடைப் புக்கு வீழ்ந்தான்
விண்ணினுக் கிறைவ னானான் விலங்கினின் றறத்தை மேவி
யண்ணலுன் றாதை நீயு நல்லதீங் கறிந்து கொள்ளே.

(இ - ள்) (அதன் மேல் இராமதத்தை அவனை நோக்கி), அண்ணல் - பெருமையிற் சிறந்த புத்திரனே!, உன் தாதை - உனது தகப்பனான சிம்மஸேன

வரசன், மண்ணினுக்கு - இப்பூமிக்கு, இறைவனும் - இராஜாவாகியிருந்தும், அறத்தினை - ஸ்ரீஜின தருமத்தினது ஸ்வரூபத்தை, மறந்து - அறியாமல் மறந்து, முன்னைப்புண்ணியம் - பூர்வபுண்ணியமானது, உலர்ந்தபோழ்தில் - காய்ந்து நீங்கின காலத்தில், விலங்கிடைப்புக்கு - திரியக்கதியில் அடைந்து, வீழ்ந்தான் - வீழ்ந்து யானையாகப் பிறந்தான், விலங்கினின்று - அந்த விலங்கு கதியில் யானை யாக இருந்து, அறத்தை மேவி - ஸ்ரீஜின தருமத்தைப் பொருந்தி, விண்ணி னுக்கு - தேவலோகத்துக்கு, இறைவனானான் - எஜமானானான், நீயும் - நீயும், ஈங்கு - இவ்விடத்தில், நல்லது - நன்மையின்னதென்பதை, அறிந்துகொள் - தெரிந்து கொள்வாயாக, எ - று. (எ௫)

529. இலங்கொளி மகுடஞ் சூடி யிருநிலக் கிழவ னாயும்
புலங்கண்மேற் புரிந்தெ ழுந்து விலங்கிடைப் புரிந்து வீழ்ந்தான்
விலங்கிடைப் புலங்க டம்மை வெறுத்துவிண் ணுலகிற் சென்றா
னலங்கலந் தாரி னாய்நீ பறிந்துகொ ணல்ல தென்றாள்.

(இ - ள்) இலங்கும் - விளங்கும், ஒளி - பிரகாசம் பொருந்திய, மகுடம் - கிரீடத்தை, சூடி - தரித்து, இரு நிலம் - பெரிதாகிய பூமிக்கு, கிழவனும் - உரிய அரசனாயிருந்தும், (அம்மன்னன்), புலங்கள்மேல் - பஞ்சேந்திரிய விஷயங் கள்மேல், புரிந்தெழுந்து - மிகுதியாக விரும்பிச் சென்று, புரிந்து - (அவ்விஷயங் களைச்) செய்து, விலங்கிடை - திரியக்காகிய பிறவியில், வீழ்ந்தான் - (மேற்கூறிய படி) வீழ்ந்து யானையாய்ப் பிறந்தான், விலங்கிடை - அந்த யானைப்பிறப்பில், புலங் கடம்மை - இந்திரிய விஷயங்களை, வெறுத்து - வெறுப்புற்று நீக்கி வைராக்கிய மடைந்து, விண்ணுலகிற் சென்றான் - தேவலோகத்தை யடைந்தான், அலங் கல் - அசைகின்ற, அம் - அழகிய, தாரினாய் - மாலையையணிந்திராநின்ற அர சனே!, நீ - நீ, (இதனால்) நல்லது - நன்மையான ஸ்வரூபத்தை, அறிந்துகொள் - தெரிந்துகொள், என்றாள் - என்று இருமுறை அதனை வற்புறுத்திச் சொன் னாள், எ - று (எசு)

530. பற்றினாற் பூதி பாம்பாய்ச் சமரமாய்க் கோழிப் பாம்பாய்ச்
செற்றத்தாற் றீயில் வெம்பு நரகத்தைச் செறிந்து நின்றான்
கொற்றவேற் குமர நீயிப் பிறவியைக் குறுக வஞ்சிற்
செற்றமும் பற்று நீங்கித் திருவறம் புணர்க வென்றாள்.

(இ - ள்) (அவ்வாறு கூறிப் பின்னரும்) பூதி - ஸ்ரீபூதி மந்திரியானவன், பற்றினல் - பிற பொருளாசையாகிற ராகத்தால், (இறந்து), பாம்பாய் - அகந்தன ஸர்ப்பமாகி, (இறந்து), சமரமாய் - (பிறகு) சமரீ மிருகமாகி, கோழிப்பாம்பாய் - (அதன் பின்பு) கோழிப்பாம்பாகி, செற்றத்தால் - அரசன்மேல் வைத்த துவே ஷத்தால் (அதாவது : அனந்தானுபந்திக் குரோதத்தால் அவ்வரசன் எடுத்த ஜன்ம

மாகிய யானையைக்கடித்து), தீயில் வெம்பும் - (பிறகு) அக்கினியைப்போல் வேகின்ற, நாகத்தை - மூன்று நரகத்தை, செறிந்து - அடைந்து, நின்றான்-நரகனாய்ப் பிறந்து நின்றான், கொற்றம் - வெற்றி பொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, குமர - குமாரனே !, நீ - நீ, இப்பிறவியை - இப்பெற்றியதாகிய தீக்கதிப்பிறவியை, குறுக - அடைய, அஞ்சில் - பயப்படுவாயானால், செற்றமும் - த்வேஷத்தையும், பற்றும் - ராகத்தையும், நீங்கி - விட்டு நீங்கி ஸமத்வீபாவமாகி, திருவறம் - ஸ்ரீஜிந தருமத்தை, புணர்க - சேரக்கடவாயாக, என்றான் - என்றும் சொல்லினன், எ - று. (எஎ)

531 அரசவுன் றாதை யுற்ற தருந்தவன் சீய சந்தன்
றிரிவித வுலக மேத்துந் திருவடி பணிந்து கேட்டேன்.
ஒருவிநீ மறத்தை யிந்தப் பிறப்புநீ ருகுத்தி டாதே
மருவுநீ யறத்தை யிந்த மாற்றது வடிவி தென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும்) அரச - பூர்ணச்சந்திரராஜனே !, உன் - உன்னுடைய, தாதை - தகப்பனாகிய சிம்மஸேனவரசன், உற்றது - இப்படிக் கதியடைந்த சங்கதியை, அருந்தவன் - அரிதாகிய தபஸையுடையவனாகிய, சீயசந்தன் - சிம்மச்சந்திர முனிவனுடைய, திரிவிதவுலகம் - மூன்றுவிதலோகமும், ஏத்தும் - ஸ்துதிக்கும்படியான, திருவடி - அழகிய பாதத்தை, பணிந்து - வணங்கி, கேட்டேன் - அவரால் சொல்ல நான் கேட்டேன், நீ - நீ, இந்தப்பிறப்பு - இம்மனுஷ்ய பிறப்பினுடைய, நீர் - குணத்தை, உகுத்திடாது - நாசமாக்காமல், மறத்தை - பாபத்தொழிலை, ஒருவி - நீங்கி, நீ - நீ, அறத்தை - ஸ்ரீஜின தருமத்தை, மருவு - சேர்வாயாக, இந்தமாற்றது - ஸம்ஸாரத்தினது, வடிவு - ஸ்வரூபமானது, இது - இத்தன்மையாக நிலையில்லாத ஸ்வரூபமாகிய இதுவாகும், என்றான் - என்றும் சொன்னான், எ - று. (எஅ)

532. ஆங்கவ ளுரைத்த வின்சொ லறவிளக் கெறிப்ப வுள்ள
நீங்கிய திருளு நீங்க நெறியினைச் சிறிது கண்டான்
தாங்கருந் துன்ப முற்றான் றாதைபாற் காத லாற்பின்
றீங்கெலா நீங்க முத்தைக் கொம்பொடு தீயின் வைத்தான்.

(இ - ள்) ஆங்கவள் - அவ்விடத்து அந்த இராமதத்தாரியாங்கனை, உரைத்த - சொல்லிய, இன் - இனிமையாகிய, சொல் - வசனமென்னும், அறவிளக்கு - தர்மமாகிற தீபமானது, உள்ளம் - பூர்ணச்சந்திரனது மனதில், எறிப்ப - பிரகாசித்ததால், இருளும் - மித்தியாத்துவாதி அந்தகாரமும், நீங்கியது - நீங்கி உபசமமடைந்தது, நீங்க - அவ்வாறு உபசமபாவத்தால் அந்த காரம் நீங்க, சிறிது நெறி

யினை - கொஞ்சம் ஸத்பூத வியவஹார நயமார்க்கத்தை, கண்டான் - அவன் அறிந்தான், (அங்ஙனம் அறிந்த மாத்திரத்தில்), தாங்கரும் - சகித்தற்கரிய, துன்பம் - துக்கத்தை, உற்றான் - அடைந்தவனாகி, தாதை பால் காதலால் - தகப்பன் மேலாகிய வாஞ்சையால், பின் - பிறகு, தீங்கெலாம் - பொல்லாங்குகளெல்லாம், நீங்க - நீங்கும்படியாக, கொம்பொடு - கட்டில் கால்களாகிய அவ்வியானைக் கொம்புகளோடு, முத்தை - முத்துமாலையையும், தீயின் - அக்கினியில், வைத்தான் - இட்டு எரித்தான், எ - று. (எகூ)

533. பான்மையங் குதித்த போழ்திற் பைந்தொடிப் பவழ வாயார்
நீர்மையங் குரித்த லாமை மனத்தகத் தகன்று நிற்பச்
சீர்மையங் குதிப்ப நன்மை செறிந்தனன் செறியுந் தோறுங்
கூர்மையங் குதிக்கும் வைவேற் குமரனுக் குரகர் கோவே.

(இ - ள்) உரகர்கோவே - தரணேந்திரனே!, வை - கூர்மைபொருந்தி வேல் - வேலாயுதத்தைக் கையில் தரித்திராநின்ற, குமரனுக்கு - பூர்ணச்சந் குமாரனுக்கு, பான்மை - பவ்வியத்துவமானது, அங்கு - அவ்விடத்தில் (அத் மத்தைக் கேட்டதினின்றும்), உதித்தபோழ்தில்-உதயத்தைக்கொடுத்த காலத்தி பைம் - பசுமைபொருந்திய, தொடி - வளையல்களையணிந்த, பவழவாயார் - ழம்போற் சிவந்த வாயையுடைய ஸ்த்ரீமார்களிடத்துண்டாகிய, நீர்மை - குண மாகிய காமராகமானது, அங்கு - அவ்வாண்மனையில், மனத்தகத்து - மனதில், உரித்து - உரித்தான தன்மை, அலாமை-இல்லாமல், அகன்று நிற்ப - நீங்கி நிற்க, அங்கு - அப்பொழுது, சீர்மை - சிறப்பாகிய புண்ணியவினை, அங்கு-அத்தருணத் தில், உதிப்ப - உதயத்தைக் கொடுப்ப, நன்மை - நன்மைக்கேதுவாகிய ஸம்மியக் ஞானத்தை, செறிந்தனன் - சேர்ந்து பழகினான், செறியுந்தோறும் - அப்படிச் சேருந்தோறும், கூர்மை - நிஜாத்மருசிலக்ஷணமாம் தர்சனஹேதுவாகிய குசாக்கிர புத்திக்கூர்மையானது, அங்கு - அவ்விடத்தில், உதிக்கும் - உதயமாகக் கூடிய தாயிற்று, (அதாவது: உதயஞ் செய்தது), எ - று.

அங்கு - நான்கையும் அசைகளெனக்கோடலுமொன்று. (அ0)

534. கலையர வல்கு லார்தங் காதலிற் கழுமல் காமன்
வலைமலை யனைய செல்வ நரகத்து வீழ்க்கு மாய
மலைவிலா நெறியை விட்டு மயங்கினார் நெறியைப் பற்றின்
நிலையிலா மாற்றி னின்று சுழறற்கு நிமித்த மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு உதயமாகவே) காமன்வலை - மன்மதனுடைய வலை யாகிய, கலை - மேகலையையணிந்த, அரவு - ஸர்ப்பத்தினது பணமுடி போன்ற, அல்குலார்தம் - அல்குலினையுடைய ஸ்த்ரீமார்களினுடைய, காதலில் - ஆசையில்,

கழுமல் - (மோஹித்து ஹேயோபாதேய விஞ்ஞானமின்றிப்) பொருந்துதலும், மலையனைய - பர்வதம்போன்ற (அதாவது : மலையைப்போல் அதிகரித்த), செல்வம் - ஐசுவரியப்பற்றுதலும், மாயம் - மாய்கை பொருந்திய, நரகத்து - நரகத்திலே, வீழ்க்கும் - (அப்பற்றுதலுடையவர்களை) விழப்பண்ணி நாரகராக்கிவிடும், மலைவிலா - மாறுபாடில்லாத யதோக்தமாகிய, நெறியை - ஸன்மார்க்கத்தை (அதாவது : தத்துவார்த்த சிரத்தான ஞானாதிகளை), விட்டு - விலகி, மயங்கினர் நெறியை - மயக்கமடைந்தவர்களுடைய வழியை, (அதாவது: அயதாக்கிரஹணார்த்தமாகிய மித்தியாத்வ நெறியை), பற்றின் - அஞ்ஞானே தயத்தால் சேர்ந்தால், நிலையிலா - அனித்தியஸ்வரூபமாகிய, மாற்றில் - ஸம்ஸாரத்தில், நின்று - தீர்க்க காலம் நின்று, சுழறற்கு - ஜனன மரணாதி துக்கங்களையடைந்து சுழல்வதற்கு, நிமித்தம் - காரணமாகும், என்றான் - என்று அப்பூர்ணச்சந்திரவரசன் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான், எ - று. (அக)

535. அஞ்சினன் மாற்றைச் சால வடங்கினன் புலங்க டம்மை
நஞ்சையே போலு மென்று நடுங்கினன் றொடங்கல் செய்யான்
வஞ்சமும் படிறும் பற்றுஞ் செற்றமுங் களிப்பு மாற்றிப்
பஞ்சணு வதங்க ளோடு சீலங்கள் பயின்று சென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி) மாற்றை - இந்த ஸம்ஸார ஸ்வரூபத்தை, (அனித்தியமென்றும் துக்ககாரணமென்றும்), அஞ்சினன் - பயந்தவனாகியும், புலங்கடம்மை - பஞ்சேந்திரிய விஷயங்களை, (இவை) சால - மிகவும், நஞ்சையே போலுமென்று - விஷத்துக்குச் சமானமாகுமென்று, நடுங்கினன் - அவற்றிற்குப் பயந்தவனாகியும், தொடங்கல் செய்யான் - (அவ்விஷயாரம்பக் கிரியைகளை) ஆரம்பம் செய்யானாகியும் (அதாவது : அனாரம்ப விஷயனாகி), அடங்கினன் - விஷய ஸம்யமனாகியும், வஞ்சமும் - கபடமும், படிறும் - பொய்யும், பற்றும் - ஆசையும், செற்றமும் - த்வேஷமும், களிப்பும் - சந்தோஷமு மாதியாகியவைகளை, மாற்றி - நீக்கி, பஞ்சணுவதங்களோடு - பஞ்சாணு விரதங்களோடும், சீலங்கள் - சீல சப்தகங்களையும், பயின்று - சேர்ந்து, சென்றான் - அனுஷ்டித்து அவற்றின் வழியிலே பிரவேசித்தான், எ - று. (அஉ)

536. சித்தமெய் மொழிகண் மூன்றிற் சினவரன் செழும்பொற் பாதம்
மத்தகத் தணிந்து நான்கு மங்கலம் பயின்று வையத்
துத்தமர் தம்மை யேத்திச் சரணம்புக் குயிரை யோம்பித்
தத்துவம் பயின்று தானந் தவத்தொடு தயாவிற் சென்றான்.

(இ - ள) (மேலும்) சித்தம் - மனதும், மெய் - சரீரமும், மொழிகள் - வசனமுமாகிய, மூன்றில் - மனவாக்காய வந்தக்கரணங்களினால், சினவரன் -

ஜினேஸ்வரனுடைய, செழும் - செழுமை பொருந்திய, பொற்பாதம் - அழகிய திருவடிகளை, மத்தகத்து - சிரசில், அணிந்து - தரித்து, நான்கு மங்கலம் - (அரஹந்தர் மங்களம், ஸித்தர்மங்களம், ஸாதுமங்களம், தர்மமங்களமென்னும்) நான்கு மங்களங்களை, பயின்று - சேர்ந்து (அதாவது: பாவித்து), வையத்து - உலகத்தில், உத்தமர்தம்மை - உத்தமர்களாகிய பஞ்சபரமேஷ்டிகளை, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, சரணம்புக்கு - அவர்கள் பதமே ரக்ஷணையாக அப்பதத்தை அடைந்து, உயிரை - ஸகலஜீவன்களையும், ஓம்பி - உபசரித்து, தத்துவம் பயின்று - ஸ்வாத்மதத்துவத்தில் பழகி, (அதாவது: ஹேயோபாதேயதத்துவவிசாரணை செய்து), தானம் - ஸத்பாத்திரங்களில் செய்யும் தானங்களோடும், தவத்தோடு - தபோபாவனையுடனும், தயாவில் - ஜீவதயவிலும், சென்றான் - சேர்ந்தான், எ - று. (அரு)

537. இறைவன தறத்தை யேந்தல் சேர்ந்தபி னிராம தத்தை
கறைகெழு வேலி னானைக் கைவிடா திருந்து நோற்று
நிறைபழி காத லாலே நிதானத்து நின்று சென்றாள்
கறையிலா வாயு நீங்கிக் கற்பமா சுக்கி லத்தே.

(இ - ள்) (இவ்வாறு) இறைவனது - ஸர்வஜ்ஞனால் சொல்லப்பட்ட, அறத்தை - ஸ்ரீஜினதருமத்தை, ஏந்தல் - பெருமையிற் சிறந்தவனாகிய பூர்ணச்சந்திர குமாரன், சேர்ந்தபின் - சேர்ந்த பிறகு, இராமதத்தை - இராமதத்தாரியானவள், கறைகெழுவேலினானை - இரத்தக்கறை பொருந்திய வேலாயுதத்தையுடைய அக்குமாரனை, கைவிடாது - விட்டு நீங்காமல், இருந்து - அவனோடு கூடவேயிருந்து, நோற்று - மஹாநோன்பு முதலானவைகளை நோற்று, நிறையழி - மனோநிறைநழுவும், காதலாலே - ஆசையாலே, நிதானத்து நின்று - பவாந்தரத்திலும் இந்தப் பூர்ணச்சந்திர குமாரனையே புத்திரனாகப் பெறவேணுமென்னும் நிதானத்திலே செலுத்திய மனதினோடு நின்று, கறையிலா - குற்றமில்லாத, ஆயு - தனதாயுஷ்யமாகிய மனுஷ்யாயுஷ்யம், நீங்கி - நீங்கி, கற்பமாசுக்கிலத்து - மஹாசுக்ரகல்பத்தில், சென்றாள் - (தேவாயுஷ்யமுதிப்ப) அடைந்தாள், எ - று. (அச)

538. பாகரப் பிரபை யென்னும் விமானத்துப் பருதி போல
பாகரப் பிரப னென்னுந் தேவனாய்ப் பாவை தோன்றி
நாகர்வந் திறைஞ்ச வின்ப மூர்த்தியாய் நடுவி ருந்தாள்
சாகரம் பத்தோ டாறு தனக்குவாழ் நாள தாமே.

(இ - ள்) (அவ்வாறடைந்த பின்) பாகரப்பிரபையென்னும் - பாஸ்கரப்பிரபையென்கிற, விமானத்து - தேவ விமானத்திலே, பருதிபோல - சூரியனைப்போல, பாகரப்பிரபனென்னும் - பாஸ்கரப் பிரபனென்கிற, தேவனாய் - தேவனாகி,

பாவை - சித்திரப்பாவை போன்ற விராமதத்தை, தோன்றி - அவதரித்து, நாகர் - ஸாமான்ய தேவர்கள், வந்திறைஞ்ச - வந்து வணங்க, இன்பமூர்த்தியாய் - ஸௌக்கியரூபத்தை யுடையவனாகி, நடுவு - ஸாமான்ய தேவர்கள் தன்னைச்சூழ அவர்களினிடையில், இருந்தான் - தங்கினான், தனக்கு - அந்தப் பாஸ்கரப் பிரப தேவனாகப்பிறந்த தனக்கு, வாழ்நாள் - ஆயுஷ்யநாளானது, சாகரம் பத்தோ டாறது - பதினாறு கடற்காலம், ஆம் - ஆகும், எ - று. (அ௫)

539. ஈரெட்டா மாயி ரத்தாண் டிடைவிட்டின் னமுத முண்ணு
வீரெட்டாம் பக்கந் தன்னை யிடையிடை விட்டு யிர்த்து
மோரெட்டின் பாதி யாய நரகத்தி லவதி யொட்டா
வோரெட்டுக் குணங்கள் வல்ல வுடம்பைந்து முழமு யர்ந்தான்.

(இ - ள்) (அங்ஙனம் தோன்றிய அத்தேவன்) ஈரெட்டாமா யிரத்தாண்டு - பதினாறாயிரம் வருஷங்கள், இடைவிட்டு - நடுவிற் செல்லவிட்டு, (அதன் பிறகு), இன்னமுதம் - இனிமையாகிய தேவாமிர்தத்தை, உண்ணு - மனதினால் புஜித்த வனாகி, ஈரெட்டாம் பக்கந்தன்னை - பதினாறு பட்சங்களை, இடையிடைவிட்டு - மத்தியில் மத்தியில் செல்லவிட்டு (அதாவது: எட்டுமாதத்திற்கொருதடவை), உயிர்த்து - உச்வாஸ நிச்வாஸங்களையுடையவனாகி, ஓரெட்டின் பாதியாய - ஒரு எட்டில் பாதியான, நரகத்தில் - நாலாநரக பரியந்தம், அவதியொட்டா - அவதிஜ் ஞானத்தாலறியும் தன்மை சேர்ந்தவனாகி, (தான்பெற்ற) ஓரெட்டுக்குணங்கள் வல்லவுடம்பு - (அணிமா மஹிமா கிரிமா லகிமா ப்ராப்தி ப்ராகம்யம் ஈசித்வம் வசித்வம் என்னும்) அஷ்டசித்திகளைப் பெறவல்லதாகிய சரீரத்தில், ஐந்து முழ முயர்ந்தான் - ஸ்வபாவத்தால் ஐந்துமுழ உன்னதத்தையடைந்தான், எ - று. (அசு)

540. மின்னரிச் சிலம்பி னோசை மிளிருமே கலையி னோசை
யின்னரம் பிசையி னோசை யெழுந்தகீ தத்தி னோசை
மின்னுடங் கிடையி னார்தம் விளைந்துலா மொழியி னோசை
தன்னுளங் கவர வின்சொல் வீசாரத் தோடு நாளால்.

(இ - ள்) (இங்ஙனம் பெற்று அவன்) மின் - மின்னல்போல், நுடங்கும் - அசைகின்ற, இடையினார் தம் - இடையையுடைய ஸ்திரீமார்களின், மின் - பிர காசம் பொருந்திய, அரி - பருக்கைக் கற்களையுடைய, சிலம்பினோசை - பாதச் சிலம்புகளினது சத்தமும், மிளிரும் - ஒளியைவீசும், மேகலையின் - மேகலாபா ணத்தினது, ஓசை - ஓசையும், இன் - இனிமையாகிய, நரம்பிசையின் - நரம்புக் கருவிகளாகிய வீணை முதலிய வாத்தியங்களினாலாகிய கீதங்களினது, ஓசை - சத்தமும், எழுந்த - கண்டங்களினா லெழுப்பிப்பாட உண்டாகிய, கீதத்தின் - வாய்ப்பாட்டாகிய சங்கீதங்களது, ஓசை - சத்தமும், விளைந்து - வாயில் உண்டாகி,

உலாம் - வெளியில் வியாபிக்கின்ற, மொழியின் - மதுரவசனங்களது, ஓசை - சத்தமுமாகிய இவைகள், தன்னுளங்கவா - தன்னுடைய மனத்தைக் கிரகிக்க, இன்சொல்வீசாரத்து - வசனப்பிரவீசாரத்தில், ஓடு நாள் - செல்கின்றகாலத்தில், எ - று. (அஎ)

541. கொற்றவன் பூர சந்தன் குணக்கட றோன்றிப் போகி
மற்றந்த விமானத் தின்கண் வைடூரியப் பிரபை தன்னுட்
பெற்றியாற் றோன்றித் தானும் வைடூரியப் பிரப னானான்
முற்றுமுன் னுரைத்த வாயு முதலவிம் மூர்த்திக் காமே.

(இ - ள்) கொற்றவன் - அரசனாகிய, பூரசந்தன் - பூர்ணச்சந்திரன், குணக்கடல் தோன்றி - (தனக்கு மேற்கூறியபடி) ஸம்மியக்ஞானாதி குணமானது மிகவும் உண்டாக, போகி - ஆயுரவஸானத்தில் போய், அந்த விமானத்தின்கண் - முன் சொன்ன மஹாசுக்ர கல்பத்தில், வைடூரியப்பிரபை தன்னுள் - வைடூரியப் பிரபையில், பெற்றியால் - தான் அடைந்த புண்ணியத்தின் தன்மையால், தோன்றி - பிறந்து, தானும் - தானும், வைடூர்யப்பிரபனானான் - வைடூரியப் பிரபனென்னும் பெயருடையவனானான், முன்னுரைத்த - முன் பாஸ்கரப்பிரபதேவனுக்குச் சொன்ன, ஆயுமுதல - ஆயுஷ்யம் முதலானவைகளாகிய, முற்றும் - முழுமையும், இம்மூர்த்திக்கு - இந்த வைடூர்யப் பிரபதேவனுக்கும், ஆம் - ஆகும், எ - று. (அஅ)

மற்று - அசை.

வேறு.

542. பாடலின் மயங்கியும் பவழ வாயினா
ராடலின் மயங்கியு மரம்பை யாரொடு
மாடமுஞ் சோலையு மலையும் வாவியு
மூடுபோய் நீடவ ருவந்து வைகுநாள்.

(இ - ள்) (இவ்வாறு இருவரும் உதித்தபின்) பாடலின் - பாட்டுக்களினால், மயங்கியும் - மயக்கமடைந்தும், பவழவாயினார் - பவழம்போற் சிவந்தவாயையுடைய நர்த்தன ஸ்திரீமார்களது, ஆடலின் - நர்த்தனங்களினால், மயங்கியும் - பிரமையடைந்தும், அரம்பையாரொடு - தேவநர்த்தகிகளோடு, (கூடிக்கொண்டு), மாடமும் - உப்பரிகைகளிலும், சோலையும் - உத்தியானவனங்களிலும், மலையும் - பர்வதாதிகளிலும், வாவியும் - பத்மாதி தடாகங்களிலும், ஊடுபோய் - இடையிடையிற் சென்று, நீடு - சௌக்கியத்தில் நீடிய, அவர் - அத்தேவர்கள், உவந்து - சந்தோஷித்து, வைகுநாள் - அங்குத்தங்கி யிராநின்றகாலத்தில், எ - று. (அகூ)

543. தூயசந் திரன்கலை பெருக நாடொறுந்
தீயவன் காளகந் தேயு மாறுபோற்
சீயசந் திரன்றவம் பெருக நாடொறுங்
காயமுங் கசாயமுங் கரிச மானவே.

(இ - ள்) தூய - பரிசுத்தமாகிய, சந்திரன் - சந்திரனுடைய, கலை-ஷோடச கலைகளானவை, நாடொறும் - தினந்தோறும், பெருக - ஒவ்வொன்றாய் விருத்தியாக, தீய - பொல்லாத, வன் - வலிமைபொருந்திய, காளகம் - கறுப்புநிறமான நித்தியராகுவானது, தேயுமாறுபோல் - தேய்வதுபோல, சீயசந்திரன் - ஸிம்மச் சந்திர மஹாமுனிவருடைய, தவம் - தவமானது, பெருக - விருத்தியாக, நாடொறும் - நாள்தோறும் (அதாவது : நாளுக்கு நாள்), காயமும் - சரீரமும், கசாயமும் - குரோதாதி கஷாய பரிணாமங்களும், கரிசமான - க்ரசமாயின, (அதாவது : தேய்ந்து ஹீனமாயின), எ - று. (௯௦)

544. ஈற்றிலா ராதனை விதியி லேந்தலு
ணாற்றலுக் கேற்றவா றன்ன பானமுஞ்
சாற்றிய வகையினாற் சுருக்கிச் சையமே
லேற்றினன் றன்னைநின் றிலங்குஞ் சிந்தையான்.

(இ - ள்) (அவ்வாறானபின்) ஈற்றிலாராதனை விதியில் - (சதுர்வித ஆராதனைகளில்) கடைசியில் சொல்லப்பட்ட தபாராதனையின் விதிப்பிரகாரம், ஏந்தல் தான் - பெருமையிற் சிறந்தவனாகிய இம்முனிவன், ஆற்றலுக்கேற்றவாறு - தன் சக்திக்குத்தக்க வண்ணம், அன்னபானமும் - அன்னபானங்களை, சாற்றியவகையினால் - பரமாகமத்தில் சொல்லப்பட்ட விதம்போல், சுருக்கி - குறைத்து, நின்றிலங்கும் - (தன்னுடைய ஆத்மபாவனையாகிய, ஞானாராதனை, தர்சனாராதனை, சாரித்திராராதனை யென்னும் இக்குணங்களில்) நிலைபெற்று விளங்கும் படியான, சிந்தையான் - சுத்தாத்மத் தியானத்தை யுடையவனாய், தன்னை - தன்னை, சையமேல் - ஸம்மியங்களில் மேலான நிலையில், ஏற்றினன் - ஏற்றுவித்தான், (அதாவது : அவன் உத்க்ருஷ்ட ஸம்யமத்தை யுடையவனாய்ப் பிராணி ஸம்யமம் விஷய ஸம்யமங்களில் நிறைந்தான்), எ - று. (௯௧)

545. சித்தமெய் மொழிகளிற் செறிந்து யிர்க்கெலாம்
மித்திர னாயபின் வேத னாதியி
லொத்தெழு மனத்தன யுவகை யுள்ளுலாய்த்
தத்துவத் தவத்தினாற் றனுவை வாட்டினன்.

(இ - ள்) (பின்பு) சித்தம் - மனத்தினாலும், மெய் - சரீரத்தாலும், மொழிகளில் - வசனங்களினாலும், செறிந்து - பொருந்தி, உயிர்க்கெலாம் - த்ரஸஸ்தாவர

ஜீவன்கட் கெல்லாம், மித்திரனையபின் - ஸ்நேகனென பாவனைசெய்த பிறகு, வேத ஞதியில் - ஸாதாஸாத வேதனீயோதய சுகதுக்கங்களில், ஒத்தெழு மனத்தனாய் - ஒருதன்மைத்தா யுண்டாகு மனமுடையவனாய், (அதாவது: ஹர்ஷவிஷாதமின்றி ஸமதாபரிணமத்தனாகி), தத்துவத் தவத்தினால் - தத்துவ ஸ்வரூபங்தெரிந்து உபாதேய தத்துவத்தினால், உவகையுள்ளுலாய் - மிகுதியான ஸந்தோஷபாவனை மனத்துள் வியாபித்து, (அதாவது: நிஜஸ்வரூபருசிலக்ஷணமாகி), தனுவை - சரீரத்தை, வாட்டினான் - சுஷ்கமாக்கினான், (அதாவது: வாடச்செய்தான்), எ - று.

546 திருந்தினார் தேய்வுகண் டெழுமவ் வீசர்போ
னரம்பெலா மெழுந்தன நல்ல மாந்தரி
னரங்கின நயனமுள் ளருந்த வக்கொடி
யிருந்தமை காட்டிநின் றிலங்கு நீரவே.

(இ - ள்) (அவ்வாறாகவே) திருந்தினார் - திருத்தமான குணமுடைய பெரியோர்களுடைய, தேய்வு - மெலிவை, கண்டு - பார்த்து, எழும் - தலையெடுப்புப் பெற்றெழுகின்ற, அ - அந்த, நீசர்போல் - கீழ்மக்களைப்போல், நரம்பெலாம் - (இம்முனிவனது சரீரவாட்டத்தால்) நரம்புகளெல்லாம், எழுந்தன - மேலெழும்பித் தெரிந்தன, நல்லமாந்தரின் - நல்ல மனிதர்களைப்போல், நயனம் - (இம்முனிவரனது) கண்கள், அரங்கின - உள்ளழுந்திப் போயின, (இதனால்) அருந்தவக்கொடி - அரிதாகிய தவக்கொடியானது, உள்ளிருந்தமை - இனிப்பலனைத்தர உள்ளடங்கி யிருக்கப்பட்ட நிலைமையை, காட்டி - சரீரமே காண்பித்து, இலங்கும்- விளங்கும்படியான, நீர - குணத்தையுடையதாயிற்று, எ - று. (கூ௯)

547. தவத்தழ லெழுந்துயி ராம்பொற் றாதுவைத்
துவக்கறச் சுடச்சுடத் தோன்று நீரொளி
நிவத்தலா னின்றொளி துளும்பு மூர்த்தியா
னுவத்தலுங் காய்தலு மொருவி னானரோ.

(இ - ள்) (அதன்மேல்) தவத்தழல் - ஆத்மத்தியானமாகிற அக்கினியானது, எழுந்து - உண்டாகி, உயிராம் பொற்றாதுவை - ஆத்மனாகிற ஸ்வர்ணதாதுவை, துவக்கற - களங்கமற (அதாவது: விபாவமற), சுடச்சுட - தகித்துத் தகித்துப் புடம்போட, தோன்றும் - (அதனால்) உண்டாகிய, நீர் - ஸ்வகுணமாகிற, ஒளி - ஜோதியானது, நிவத்தலால் - பிரகாசித்தலால், நின்று - தன்னிலே நின்று, ஒளிதுளும்பும் - ஜோதித்தும்பும், மூர்த்தியான் - உருவத்தையுடைய (அதாவது: சரீரமாத்திர பரிக்கிரகமுடைய) இம்முனி, உவத்தலும் - யாதொரு விஷயத்தில் ஸந்தோஷித்தலும், காய்தலும் - கோபித்தலுமாகிய, (ராக, த்வேஷங்களை), ஒருவினான் - நீங்கினான், எ - று. (கூச)

548. தனுவது தனுவதாய்த் தனுவ தாயது
மனநிறை பொறைதவம் மகிழ்ச்சி யெய்துவ
நினைவது வினையினை நின்று திர்த்தது
முனிவனுந் தனதுமேற் கோளின் முற்றினன்.

(இ - ள்) (பின்னர்) தனுவது - இம்முனிவரன் சரீரமானது, தனுவதாய்- சிறியதாகி (அதாவது: வாடி மெல்லியதாகி), தனுவதாயது - க்ரசமாகப்பட்ட சரீரமாகியது, (அப்படிச் சரீரமெலிந்தும்), மனம் - மனமானது, நிறை - நிறைவு பெற்ற, பொறை - க்ஷமையினுலும், தவம் - அப்பியந்தர தபோபாவனையினுலும், மகிழ்ச்சியெய்துவ - ஸந்தோஷ பாவனையோடு கூடியதாயிற்று, அந்நினைவது - அந்தத் தபோத்தியான ஸம்யக் ஞானபாவனையானது, நின்று - நிலைபெற்று, வினையினை - மித்தியாத்துவாதி கர்மங்களை, உதிர்த்தது - நிர்ஜரைசெய்தது, முனிவனும் - (இப்படிப்பட்ட ஸம்யக் ஞானபாவனையால்) இந்த ஸிம்மசந்திர முனிவரனும், தனது - தன்னுடைய, மேற்கோளின் - மேலான கொள்கையாகிய ஸ்வஸம்வேதன ஞானத்தைப் பெறும்படியான ஸம்யக் சாரித்திரத்தில், முற்றினன்- பூர்த்திபெற்ருன், (அதாவது: கஷாயோபசமனம் செய்தான்), எ - று. (கூ௫)

549. எரியினுண் மூழ்கிய தென்ன தன்னதாய்ப்
பரிசையை வென்றவப் பரம மாமுனி
யருகனை யிருதய கமலத் துள்ளிரீஇத்
தெரிவருஞ் சித்தரைச் சென்னி சேர்த்தினன்.

(இ - ள்) (பின்னர்) எரியினுள் - அக்கினியினுள்ளே, மூழ்கியது - முழுகியது, என்னது - எத்தன்மையதோ, அன்னதாய் - அத்தன்மையதாக, பரிசையை- க்ஷுத்பிபாஸாதித்வாவிம்சதிபரீஷஹங்களை, வென்ற - ஆத்மத்தியான பாவஞபலத்தால் ஜயித்த, அப்பரமமாமுனி - உத்கிருஷ்ட தபஸையுடைய மேலான அந்த ஸிம்மசந்திர மஹாமுனி, அருகனை - வீதராக சுத்தோப யோகஞகிய அருகத் பட்டாரகனை, இருதயகமலத்துள் - தனது மனமாகிற தாமரை மலரில், இரீஇ - இருத்தி, (அதாவது: ஸ்தாபித்து), தெரிவரும் - தெரிதற்கரிய, சித்தரை - ஸித்த பரமேஷ்டியை, சென்னி - ஸிரஸில், சேர்த்தினன் - தரித்தான், எ - று. (கூகூ)

550. சென்னியி லிடுங்கவ சத்தொ டத்திரம்
பன்னரும் மூவரும் பாங்கி னயபின்
தன்னுடம் புயிரினைத் தடறு வாளென
வுன்னினின் றைம்பத முன்னி யோதினன்.

(இ - ள்) (அவ்வாறு சித்தரைச் சேர்த்ததாகிய) சென்னியில் - சிரசில், இடும் - இடப்பட்ட, கவசத்தொடு - மேற்சட்டையோடு, (அதாவது: தலைக்காவல்

மந்திரமாகிய கவசத்தோடும்), பன்னரும் - சொல்லுதற்கரிய, மூவரும் - (ஆச்சாரிய, உபாத்தியாய, சாதுக்கள் என்னும்) மூவரும், அத்திரம் - (இருகையிலும்) இரண்டு ஆயுதங்களாக, பாங்கின் - வரிசைக்கிரமத்தால், ஆயபின் - ஸ்தாபிதங்களான பிறகு, தன்னுடம்பு - தன்னுடைய சரீரத்தையும், உயிரினை - தனது ஆத்மனையும், தடறுவாளென - உறையும் அதற்குள்ளே யிருக்கப்பட்ட வாளாயுதமும் போல் பின்னத் திரவியங்களென்று, உன்னி நின்று - (இவ்விதமாகச் சரீரம்வேறு, ஆத்மன்வேறென்று அதனதனுடைய ஸ்வரூபம்) பாவித்து நின்று, ஐம்பதம் - பஞ்சபரமேஷ்டி பதங்களை (அல்லது பஞ்சமந்திரங்களை), உன்னி - மேலாக எண்ணி, ஓதினன் - உச்சரித்தான், (அதாவது : ஜெபம் செய்தான்), எ - று. ()

551. கண்ணினாற் களங்கமின் னிலையைக் கண்டிடா
பண்ணுறப் பெரியவர் பாதஞ் சேர்ந்தவப்
புண்ணியச் சுருதியைச் செவியிற் பூரியா
விண்ணுல கடைந்தனன் வென்றி வீரனே.

(இ - ள்) (அவ்வாறாயபின்) வென்றி - ஆத்மவெற்றியை யடையும்படியான, வீரன் - வீரபுருஷனாகிய சிம்மச்சந்திர முனிவன், கண்ணினால் - காட்சியினால் (அதாவது : தர்சனபலத்தால்), களங்கமில்-மாசில்லாத, நிலையை - யாதார்த்த தத்துவத்தின் நிலையினை, கண்டிடா - கண்டு, பண்ணுறு - குணமடையும்படியான, அப்பெரியவர் பாதம் - அந்த ஆப்தர்களாகிய (பரமாத்ம, அந்தராத்மர்களது) பாதத்தை, சேர்ந்து - ரக்ஷணையாகவடைந்து, அப்புண்ணியச் சுருதியை - (அவர்களாலருளிச் செய்யப்பட்ட அப்பியுதய நைஶ்ரேயஸத்திற்குக் காரணமாகிய பஞ்சாஸ்திகாய, ஷட்திரவிய, சப்ததத்துவ, நவபதார்த்த ஸ்வரூபமாகிய) ப்ரவசனஸார ஸ்ருதத்தை, செவியில் - காதில், பூரியா - நிரப்பி, (அதாவது : ஸ்ருதஜ் ஞானபலத்தையடைந்து), விண்ணுலகு - தேவலோகத்தை, அடைந்தான் - அடைந்தான், எ - று.

சேர்ந்தவப் - என்பதில் அகரம் சாரியை. (கூஅ)

552. பொருவிலா வுலகெனும் புரவ லர்க்கு நற்
கிரிவமாங் கேவச்சத் தொன்ப தாவதை
மருவினன் மாலொளி விமான மற்றதிற்
பிரிதியங் கரத்தினைப் பெரிய வீரனே.

(இ - ள்) (அவ்வாறடைந்து) புரவலர்க்கு - அரசர்க்கு, நல்-நன்மையுடைய, கிரிவமாம் - கழுத்தாகிய, பொருவிலா - உவமையில்லாத, உலகெனும் - லோகமென்று சொல்லப்பட்ட, கேவச்சத்து - க்ரைவேயகத்தில், ஒன்பதாவதை - ஒன்பதாவதாகிய உபரிமோபரிமக் கிரைவேயகத்தில், மால் - பெரிதாகிய, ஒளி - ஜோதி

யையுடைய, விமானமதில் - தேவவிமானத்தில், பெரிய வீரன் - மிகுந்த ஆத்ம வீரியத்தை யனுஷ்டிக்கும் அந்த ஸிம்மசந்திர முனிவன், பிரதியங்கரத்தினை - பிரீதிங்கரமென்று பெயர்பெற்ற விமானத்தில், மருவினன் - ப்ரீதிங்கரனென்னும் அஹமிந்திர தேவனாய்ச் சேர்ந்தான், எ - று.

மற்று - அசை. (கக)

553 முப்பத்தோ ராழியான் முடிந்த வாயுக
முப்பத்தோ ராயிரத் தாண்டு விட்டுணு
முப்பத்தோர் பக்கத்தைக் கடந்து யிர்த்திடா
முப்பத்தோர் நான்கதி சயரை வாழ்த்துமே.

(இ - ள்) (அவ்வாறு சேர்ந்தபின்) முப்பத்தோராழியால் - முப்பத்தொரு கடல்களின் கணக்கால், முடிந்த - தனக்கேற்பட்ட, ஆயுகம் - பரமாயுஷ்யத்தில், முப்பத்தோராயிரத்தாண்டு - முப்பத்தோராயிரம் வருஷங்களை, விட்டு - தாண்டி, உணு - மனஸாஹாரத்தை பொஜித்து, முப்பத்தோர்பக்கத்தை - பதினைந்தரை மாசத்தை, கடந்து - தாண்டி, உயிர்த்திடா - உச்வாஸ நிச்வாஸத்தைச் செய்து, முப்பத்தோர் நான்கதிசயரை - முப்பத்திநாலு அதிசயங்களையுடைய தீர்த்தங்கர பரமதேவரை, வாழ்த்தும் - ஸ்தோத்திரம் செய்பவனானான், எ - று- (க00)

554. அவதியா னரகமா றுவ தாய்ந்திடா
யுவதியால் வரும்பய னொன்று மின்றியே
சிவகதி யவர்க்குப்போ லிவர்க்கு நல்வினை
யவதியி னுதயத்தா லாகு மின்பமே.

(இ - ள்) அவதியால் - அவதிஜ் ஞானத்தால், நரகமாறுவது - ஆறுநரக பரியந்தம் (உள்ளவை), ஆய்ந்திடா - அறியப்பட்டு, யுவதியால் - ஸ்த்ரீமார்களால், வரும் - வருகின்ற, பயன் - காமபயன், ஒன்றும் - யாதொன்றும், இன்றி - இல்லாமல், சிவகதி யவர்க்குப்போல் - மோட்சகதியையுற்ற ஸித்த பரமேஷ்டிகளுக்குள்ளதுபோல, இவர்க்கு - இவ்வாறான இந்த அஹமிந்திர தேவர்களுக்கு, அவதியின் உதயத்தால் - அவதிஜ்ஞான உதயத்தால், இன்பம் - ஸௌக்கியமானது, ஆகும் - ஏற்படும், எ - று. (க0க)

555. அஞ்சிறப் பயர்வுழி யறிவ னாணையா
லஞ்சிரண் டடிநடந் திறைஞ்ச லல்லது
அஞ்சிவந் தொருவர்தம் மாணை யிற்செலா
ரஞ்சொலா ரின்மையா ரகமல் விந்திரர்.

(இ - ள்) (இன்னும்) அம் - அழகிய, சொலார் - சொல்லையுடைய ஸ்த்ரீமார்கள், இன்மையார் - இல்லாதவர்களாகிய, அகநல்லிந்திரர் - நன்மையாகிய இந்த அஹமிந்திர தேவர்கள், அஞ்சிறப்பு - (தீர்த்தங்கர பரம தேவர்களுக்கு) அழகிய பஞ்சகல்யாண பூஜையை, அயர்வுழி-மற்ற கல்பவாஸிதேவர்கள் செய்கின்றகாலத்தில், அறிவன் - கேவல ஞானத்தையுடைய அரஹந்தனது, ஆணையால் - ஆக்கினையால், அஞ்சிரண்டடி - ஏழடி, நடந்து - சென்று, இறைஞ்சலல்லது - வணங்குவதேயல்லாமல், அஞ்சிவந்து - பயந்துவந்து, ஒருவர் தம் - ஒருவருடைய, ஆணையில்-ஆக்கினையில், செலார் - செல்லமாட்டார்கள், எ - று. (௫0௨)

556. இன்பமே யிடையறு தெழுத லல்லது
துன்பமுங் கவலையுந் தோகை யன்னவர்க்
கன்புநண் பும்மிலா வகமிந் திரத்தவன்
முன்புபின் பழிந்தெய்தா மூர்த்தி யாயினன்.

(இ - ள்) இன்பமே - ஸௌக்கியமே, இடைபறுது - இடைவிடாமல் எப்போதும், எழுதலல்லது - உண்டாவதேயல்லது, துன்பமும் - துக்கமும், கவலையும் - மனவருத்தமும், தோகையன்னவர்க்கு - ஆண்மயில்போற் சரீரச்சாயலையுடைய ஸ்த்ரீமார்களிடத்து, அன்பு - ஆசையும், நண்பும் - அவர்கள் ஸ்நேகமும், இலா - இல்லாத, அகமிந்திரத்து - இவ்வஹமிந்திரத்திலே, அவன் - ப்ரீதிங்கரனென்னும் பெயருடைய அவ்வஹமிந்திரன், முன்பு பின்பழிந் தெய்தா - முன்னுக்குப்பின் கெடுதியடையாத (அதாவது: தோன்றிய சரீரசுகாதிகள் ஆயுஷ்ய மளவும் விகல்பமடையாத), மூர்த்தியாயினன் - தேவசரீரத்தை யுடையவனானான், எ - று. (௫0௩)

557. அருந்தவம் பொருந்திய சீல மாதியாற்
றிருந்திய நால்வருந் தேவ ராயினர்
பெருந்துயர் விலங்கிற்றீ வினையில் வீழ்ந்துபின்
பொருந்தினு னிரயத்துப் பூதி போகியே.

(இ - ள்) (இவ்வாறு) அரும் - தரித்தற்கரிதாகிய, தவம் - தபத்தினாலும், பொருந்திய-சேர்ந்திராநின்ற, சீலமாதியால் - சீலாச்சார முதலியவற்றாலும், திருந்திய - திருத்தமாகிய, நால்வரும் - (ஸிம்மசேன வரசனும், தேவியும், குமாரர்களிருவரும் ஆகிய) நான்கு பேர்களும், தேவராயினர் - தேவர்களாயினர்கள், பூதி - ஸ்ரீபூதி என்னும் மந்திரியானவன், பெருந்துயர் - பெரியவாகிய துக்கங்களையுடைய, விலங்கில் - விலங்குஜாதியில், தீவினையில் - பாபவினையால், வீழ்ந்து - மூன்று தடவை பிறந்து, (அதாவது: அகந்தன ஸர்ப்பம், சமரீமிருகம், கோழிப்பாம்பு என்னும் மூன்றும் ஆகி), பின் - பிறகு, நிரயத்து - மூன்றாநரகத்தில், போகி - சென்று, பொருந்தினன் - அடைந்து நாரகனானான், எ - று. (௫0௪)

வேறு.

558. பகைவனுந் தனக்குத் தானே பாவங்கள் பயின்று சொல்லி
நகையமை நண்பு தானே நல்வினைக் கேதுவாயிற்
பகையுற விரண்டும் பாவ புண்ணியப் பயன்க ளாத
லிகன்மத யானை பாந்த ளிரண்டினுந் தெளிந்த தன்றே.

(இ - ள்) பகைவனும் - சத்துரு பரிணாமமுடையவனும், தனக்குத்தானே - தன்னுடைய ஆத்மனுக்குத் தானாகவே, பாவங்கள் - பாப வசனங்களை, சொல்லி - கூறி, (அதன்படி செய்து) பாவங்கள் பயின்று - பாவங்களிலே தங்க, நகையமை - இனிமையமைந்த, நண்பும் - சிநேக பரிணாமமும், தானே - தானாகவே, நல் வினைக்கு - தனக்குப் புண்ணிய வினைகளை யுண்டுபண்ண, ஏது - காரணமாயிற்று, ஆயின் - இவற்றை ஆராய்ந்து பார்க்குமிடத்து, (இவ்வாறு) பகை - சத்துருத்துவமும், உறவு - மித்திரத்துவமும், (ஆகிய) இரண்டும் - இவ்விரண்டும், பாவபுண் ணியப்பயன்கள் - பாவபுண்ணியப் பயன்களாய், (அதாவது : சத்துருத் தன்மை பாவத்திற்கும், மித்திரத்தன்மை புண்ணியத்திற்கும், பலன்களாக), ஆதல் - ஆவது, இகல் - பராக்கிரமம் பொருந்திய, மதயானை - மதம் பொருந்திய அசனி கோடமென்னும் யானை, பாந்தள் - குக்குட ஸர்ப்பம், இரண்டினும் - (ஆகிய) இந்த இரண்டினாலும் (அதாவது : யானை புண்ணியமாகிய மித்திரபாவத்தால் வானுலகடைந்ததாலும், ஸர்ப்பம் பாவமாகிய சத்துரு பாவத்தால் நரகமடைந்ததாலும்), தெளிந்தது - தெளியப் பெற்றதாகும், எ - று.

பாவங்கள் - என்பது இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. அன்றே - அசை. (௫௫௮)

559. வாளரி யுழுவை கைம்மா வலையிடைப் பட்டு முய்வ
நீளரா ணைய நல்ல வினையது நின்ற போழ்திற்
கோளரி யேறு தன்னைக் குறுநரி யேனுங் கொல்லும்
நீளரா ணைய நல்ல வினையது நீங்கி னாங்கே.

(இ - ள்) வாள்-ஒளி பொருந்திய, அரி - ஸிம்மம், உழுவை-புலி, கைம்மா- யானை, (ஆகியவை) வலையிடைப்பட்டும் - வலையிற்சிக்கினாலும், நீளராணைய - ஆத்மனுக்குப் பெரிதாகிய ரக்ஷணையாகிய, நல்லவினையது - நல்ல புண்ணிய கர்ம மானது, நின்ற போழ்தில் - உதயத்தைக் கொடுத்து நின்ற காலத்தில், உய்வ - பிழைப்பனவாம், நீள் - பெரிதாகிய, அராணைய - ரக்ஷணையாகிய, நல்ல வினையது - நல்ல புண்ணிய வினையானது, நீங்கின் - நீங்கினால், ஆங்கே - அவ்விடத்தே, கோள் - கொலை செய்தலையுடைய, அரியேறுதன்னை - ஆண்சிம்மத்தையும், குறு நரியேனும் - குள்ளநரியாயிருந்தாலும், கொல்லும் - அது கொன்றுவிடும், எ - று.

வேறு.

560. தீக்கதிச் செலவினை நீக்கிச் சிந்தையின்
நோக்கிலாப் பொருளையு நோக்கி யின்பத்தை
வீக்கியிம் மாற்றினை நீக்கி வீட்டினை
யாக்குநல் லறத்தினை யமர்ந்து செய்மினே.

(இ - ள்) சிந்தையில் - தியானத்தால், தீக்கதி - துர்க்கதிகளில் (அதாவது: நாரகதிரியக்குகளில்), செலவினை - செல்லும்படியான ராகாதி விபாவங்களை, நீக்கி-விலக்கி, நோக்கிலா - இந்திரியங்களாலறிய முடியாத, பொருளையும், அமூர்த்தமாகிய ஆத்மாதித்திரவியங்களையும், நோக்கி - (மதிஜ்ஞான ச்ருதஜ்ஞான பூர்வகமாய் ஸ்வஸம்வேதன பிரத்தியக்ஷ ஞானத்தால் நிஜாத்மருசிலக்ஷணமாய்ப்) பார்த்து, இன்பத்தை - ஆத்மஸௌக்யத்தை, வீக்கி - நிலையாக உண்டுபண்ணி, இம்மாற்றினை - இந்த ஸம்ஸாரத்தை, நீக்கி - விலக்கி, வீட்டினை - மோக்ஷத்தை, ஆக்கும் - உண்டாக்கும்படியான, நல்லறத்தினை - நன்மையாகிய ஸ்வதர்ம ஸ்வரூபமாகிய ரத்தினத்திரயத்தினை, அமர்ந்து - விரும்பி, செய்யுமின் - யாவரும் செய்யுங்கள், எ - று.

இவ்வாறு கூறியதனால், ஸ்வஸ்வரூப பாவத்தில் (அதாவது: பரமார்த்த பாரிணாமிகத்தில்) பொருந்துங்கள்; அதுவே பரமோபாதேய மென்பது பெறப்படும். (கoஎ)

ஐந்தாவது:

நால்வரும் சுவர்க்கம்புக்க சருக்கம் முற்றுப்பெற்றது.

---

ஆருவது :

## மன்னனுந்தேவியும் மைந்தனுஞ் சுவர்க்கம்புக்க சருக்கம்

561. வெற்றிவேல் வேந்தனும் வேந்தன் றேவியுங்
கொற்றவக் குமரரும் கோவை யெய்தினார்
மற்றிந்த நிலத்திடை வந்து நால்வரு
முற்றன வுரைப்பன்கே ளுரக ராசனே.

(இ - ள்) உரகராசனே - தரணேந்திரனே!, வெற்றி - ஜயத்தையுடைய, வேல் - வேலாயுதத்தைக் கையில் தரித்த, வேந்தனும் - ஸிம்மஸேன மஹாராஜனும், வேந்தன் - அவ்வரசனுடைய, தேவியும் - பட்டத்தரசியாகிய இராமதத்தையும், கொற்றவக்குமரரும் - இராஜகுமாரர்களாகிய ஸிம்மச்சந்திர பூர்ணசந்திரர்களும் (ஆகிய இந்நால்வரும்), கோவை - (தங்களுடைய ஞானபரிணதிக்குத்தக்க வரிசையாகத்) தேவருலகத்தை, எய்தினார் - அடைந்து மகர்த்திக தேவரானார்கள், மற்று - பிறகு, நால்வரும் - அந்த நாலுபேர்களும், இந்த நிலத்திடை - இப்பூமியில், வந்து - வந்து, உற்றன - அடைந்தவைகளை, உரைப்பன் - சொல்லுவேன், கேள் - நீ கேட்பாயாக, எ - று. (க)

562. பாகரப் பிரபனும் பாவை யாயுகஞ்
சாகரந் துள்ளது பதினை நாளென
நாகரிற் பிரிவென நடுங்கிற் றுற்றவும்
பாகரப் பிரபையுட் பாரி சாதமே.

(இ - ள்) பாகரப் பிரபனும் - பாஸ்கரப் பிரபனென்னும் பெயரையுடைய மஹர்த்திக தேவனாகிய, பாவை - பூர்வம் இராமதத்தையாயிருந்த பெண்ணுக்கு, உள்ளது - உள்ளதான, ஆயுகம் - ஆயுஷ்யமாகிய, சாகரத்து - பதினாறு கடலில், (மீதி) பதினைநாளென - பதினைந்து நாள்களென்றிருக்கும்போது, நாகரில் - தேவர்களினின்றும், பிரிவு - இத்தேவனுக்குப் பிரிவாகும், என - என்று, பாகரப் பிரபையுள் - அந்தப் பாஸ்கரப்பிரபை விமானத்திலிராநின்ற, பாரிசாதம் - கற்பக விருட்சமானது, ஆற்றவும் - மிகவும், நடுங்கிற்று - சலித்தது, எ - று. (உ)

563. கற்பகஞ் சலிப்பது கண்ட தேவரும்
மற்றவர் சிந்தையு ணடுங்கி வாடினார்

கற்பகத் தொடையலுங் கண்ட மாலையும்
பொற்பழிந் தணிகளும் மாசு போர்த்தவே.

(இ - ள்) (அவ்வாறு) கற்பகம் - கற்பகவிருட்சமானது, சலிப்பது - சலிக்கின்றதை, கண்ட - பார்த்த, தேவர் - ஸாமான்ய தேவர்களும், மற்றவர் - மற்றுமுள்ள பரிவாரதேவர் தேவியராதியாரும், சிந்தையுள் - மனதில், நடுங்கி - பயந்து, வாடினார் - வாட்டமடைந்தார்கள், கற்பகத்தொடையலும் - (இந்தப் பாஸ்கரப்பிரபனணிந்திருந்த) கற்பகப் பூமாலையும், கண்டமாலையும் - இவனது கழுத்திலணியப்பட்டிருந்த கண்டமாலையும், பொற்பழிந்து - அழகழிந்து, அணிகளும் - மற்றுமுள்ள ஸஹஜாபரணாதிகளும், மாசுபோர்த்த - களங்கத்தால் மூடப்பட்டன, (அதாவது: மாசடைந்தன), எ - று. (ரு)

564 மதியொளி பதினை நாடோறு மாய்ந்திடா
விதியொளி மாசுறீஇ வீயு மாறுபோல்
முதிர்மதி யனையொளி மூர்த்தி மாசுறீக்
கதிர்கழன் றிடுவது கண்டு வாடினான்.

(இ - ள்) ஒளி - பிரகாசம் பொருந்திய, மதி - சந்திரன், பதினை நாடோறும் - (அபரபட்சப்பிரதமை முதல் அமாவாசை பரியந்தமான) பதினைந்து நாள்கள் தோறும், விதி - கிரமமாக (நாளுக்குநாள்), ஒளி - கிரணம், மாசுறீஇ - மாசுற்று (அதாவது: ஒளிமழுங்கி), மாய்ந்திடா - ஒளிகுறையப்பட்டதாகி, வீயுமாறுபோல் - (அமாவாசைத் தினத்தில் தன்னொளியே யில்லாமல்) தேய்ந்து போவதுபோல், முதிர்மதி - பூர்ணச்சந்திரனை, அனை - நிகர்த்த, ஒளி - ஜோதியையுடைய, மூர்த்தி - இந்தப் பாஸ்கரப் பிரபதேவனது சரீரம், மாசுறீ - களங்க முற்று, கதிர் - கிரணமானது, கழன்றிடுவது - நீங்கிப்போவதை, கண்டு - நாளுக்குநாள் தெரிந்து, வாடினான் - அந்தப் பாஸ்கரப் பிரபதேவன் வாடுதலடைந்தான், எ - று.

565. தேவனு யமளியைச் செறிந்த நாண்முதல்
லோவிலா வகையவ னுற்ற வின்பமோர்
தாவமாய்த் திரண்டுவந் தடுவ தொக்குமா
மூவைநா ளகவையின் முடிந்த துன்பமே.

(இ - ள்) மூவைநாள் - பதினைந்து நாளாகிய, அகவையின் - ஆயுக்கடையில், (அத்தேவனுக்கு) முடிந்த - ஏற்பட்ட, துன்பம் - மானுசிக துக்கமானது, தேவனும் - தேவனுகித்தோன்றி, அமளியை - உபபாதசயனத்தில், செறிந்த - சேர்ந்த, நாள்முதல் - அந்நாள் முதலாக, ஓவிலா - நீங்காத, வகை - விதமாய், அவன் - அத்தேவன், உற்ற - இதுவரையில் (அதாவது: பதினாறுகடலாயுபரியந்தம்) அடைந்த, இன்பம் - தேவ சௌக்கியமெல்லாம், ஓர் தாவமாய் - ஒரு காட்டுத்

தீயாகி, திரண்டு வந்து - சேர்ந்து வந்து, அடுவது - சுடுவதை, ஒக்கும் - நிகர்ப்பதாயிருந்தது, எ - று. (௫)

வேறு.

**566.** சூகர மாகித் தோன்றித் துயருறு முயிர்க டுன்பத்
தாகர மாகி நின்ற வவ்வுடம் பிடுத லாற்றா
நாகருக் கிறைவ ராகி விண்ணினை நண்ணி வீழ்வார்
சோகமுந் துயரு நம்மாற் சொல்லலாம் படிய தொன்றோ.

(இ - ள்) சூகரமாகி - பன்றியாகி, தோன்றி - பிறந்து, துயருறும் - துக்கமடைகின்ற, உயிர்கள் - ஜீவர்களும், துன்பத்து - துக்கத்துக்கு, ஆகரமாகி - இருப்பிடமாகி, நின்ற - நிற்கின்ற, அவ்வுடம்பு - அச்சரீரத்தை, இடுதல் - விடுவதற்கு, ஆற்றா - தாளாமல் வருத்தமுடையனவாகும், (அப்படியிருக்க), நாகருக்கு - தேவர்களுக்கு, இறைவராகி - அதிபர்களாகி, விண்ணினை - தேவலோகத்தை, நண்ணி - அடைந்து, வீழ்வார் - இறந்துபோகின்றவர்களுடைய, சோகமும் - மனவருத்தத்தையும், துயரும் - துக்கத்தையும், நம்மால் - நம்மாலே, சொல்லல் - சொல்லுதல், ஆம்படியதொன்றோ - ஆகும் விதமான தொன்றாகுமோ, (சொல்லல் முடியாது), எ - று. (௬)

**567.** கானெரி கவரப் பட்ட கற்பகம் போல வாடி
வானவ னிருந்த போழ்தின் வந்துசா மான தேவர்
தேனிவ ரலங்க லாயித் தேவர்தம் முலகிற் சின்னாள்
வானவ ரிருந்து பின்னை வழுத்தரல் மாபி தென்றார்.

(இ - ள்) (அவ்வாறாகவே) கான் எரி - காட்டுத் தீயால், கவரப்பட்ட - கிரகிக்கப்பட்ட, கற்பகம் போல - கற்பக விருட்சத்தைப்போல, வாடி - வாடுதலுற்று, வானவன் - பாஸ்கரப் பிரபதேவன், இருந்த போழ்தில் - இருந்தகாலத்தில், சாமானதேவர் - சாமான்ய தேவர்கள், வந்து - இம்மஹார்த்திக தேவனிடத்தில் வந்து, தேனிவர் - வண்டுகள் விரும்புகின்ற, அலங்கலாய் - மாலையையணிந்த மஹார்த்திக தேவனே !, இத்தேவர் தம்முலகில் - இந்தத் தேவர் லோகத்திலே, வானவர்-அவதரித்த தேவர்கள், சின்னாளிருந்து - தங்களுக்குள்ள ஆயுஷ்ய காலமாகிய சில நாட்களிருந்து, பின்னை - (ஆயுஷ்ய பிரமாணம் முடிந்த) பிறகு, வழுத்தரல் - இறந்து போவதாகிய, இது - இச்செய்கை, மரபு - பாரம் பரிய வரிசையாகும், என்றார் - என்று போதித்தார்கள், எ - று. (எ)

**568.** கணங்கணந் தோறும் வேறா முடம்பினைக் கண்டு பின்னு
மணந்துடன் பிரிந்த வற்றுக் கிரங்குவார் மதியி லாதார்

புணர்ந்தவை பிரியும் போழ்தும் புதியவந் தடையும் போழ்து
முணர்ந்துறு கவலை காத லுள்புகா ருள்ள மிக்கார்.

(இ - ள்) (மேலும்) கணங்கணந்தோறும் - ஒவ்வொரு சமயத்திலும், வேறும் - நிலையில்லாமல் பிரிந்து போகும்படியான, உடம்பினை - புத்கலரூபமான சரீரத்தை, கண்டு - பார்த்திருந்தும், பின்னும் - பிறகும், மணந்து - சேர்ந்து, உடன் - உடனே, பிரிந்தவற்றுக்கு - பிரிந்துபோகின்ற அவைகளுக்கு, மதியிலா தார் - புத்தியில்லாத அஞ்ஞானிகள், இரங்குவார் - வருந்துவார்கள், புணர்ந்தவை- சேரப்பட்ட புத்கலரூபமான சரீராதிகள், பிரியும் போழ்தும் - பிரிகின்ற காலத் திலும், புதிய வந்தடையும் போழ்தும் - நூதனமானவைகள் வந்தடைகின்ற காலத்திலும், உணர்ந்து - அவற்றின் ஸ்வரூபங்களையறிந்து, உறு-அவற்றினாலுண் டாகிய, கவலையுள் - வருத்தத்தினுள்ளும், காதலுள் - வாஞ்சையினுள்ளும், உள்ள மிக்கார் - புத்தியிற்சிறந்த பெரியோர்கள் (அதாவது: ஸம்யக் ஞானிகள்), புகார் - சேரார்கள், (அதாவது: அழிவுக்கிரங்குதலும், தோற்றத்திற்கு மகிழ்தலும் செய்யார்கள்), எ - று. (அ)

569. அறம்பொரு ளின்ப மூன்றி லாதியா லிரண்டு மாகும்
இறந்ததற் கிரங்கி னாலும் யாதொன்றும் பின்னை யெய்தா
பிறந்துழி பெரிய துன்பம் பிணிக்குநல் வினையை யாக்கு
மறம்புணர்ந் திறைவன் பாதஞ் சிறப்பினோ டடைக வென்றார்.

(இ - ள்) அறம் - தருமமும், பொருள் - பொருளும், இன்பம் - சௌக் கியமுமாகிய, மூன்றில் - இந்த மூன்றுகளில், ஆதியால் - முதலில் சொல்லப்பட்ட தர்மத்தால், இரண்டும் - மற்ற பொருளும் சுகமுமாகிய விரண்டும், ஆகும் - உண் டாகும், இறந்ததற்கு - இதற்கு முன் இறந்து போனவைகளுக்கு, இரங்கினாலும்- வருந்தினாலும், யாதொன்றும் - நீங்கிப்போகும் தன்மையை யுடைய யாதொரு வஸ்துவும், பின்னை - பிறகு, எய்தா - நீங்காமல் அடையமாட்டாது, (அவ்விதமா யிருக்க, அதனையறியாது வருத்தமுற்றால்), பிறந்துழி - மறுபடி வேறு பிறவியை யுற்றபோதும், பெரியதுன்பம் - (அதனால்) பெரிய துக்கம், பிணிக்கும் - கட்டுப் படுத்தும், (ஆகையால்) நல்வினையை - புண்ணிய வினையை, ஆக்கும் - உண்டு பண்ணும்படியான, அறம் - தருமத்தை, புணர்ந்து - சேர்ந்து, இறைவன் - ஸர் வஜ்ஞனது, பாதம் - பாதத்தை, சிறப்பினோடு - பூஜையாகிய குணஸ்துதியுடன், அடைக - சேர்வாயாக, என்றார் - என்றும் போதித்தார்கள், எ - று. (கூ)

570. என்றவ ருரைத்த மாற்றந் தெரியுறு மெழுகு நீருட்
சென்றது போலத் திண்ணென் றிறைவனற் சிறப்போ டொன்றி
நின்றநா ளுலப்ப மின்னி னீங்கினன் நிலத்தைச் சேர்ந்தா
னன்றைய நிதானத் தாலே யரிவையா யுரகர் கோவே.

(இ - ள்) உரகர்கோவே-தரணேந்திரனே!, என்று - என்று அவ்விஷயங்களை விளக்கிக்காட்டி, அவர்-அத்தேவர்கள், உரைத்த-சொல்லிய, மாற்றத்து-தர்ம வசனத்திஞலே, எரியுறும்-அக்கினியை யடைந்திளகிய, மெழுகு - மெழுகானது, நீருள் - ஜலத்தில், சென்றதுபோல் - அடைந்ததுபோல, திண்ணென்று - இந்தப்பாஸ்கரப் பிரபதேவன் மனம் கெட்டியாகி, இறைவன் - அருகத் பரமேஸ்வரனை, நல் - நன்மையாகிய, சிறப்போடு - பூஜையோடு, ஒன்றி - பொருந்தி, நின்ற - நிலைபெற்ற, நாள் - ஆயுஷ்யநாள், உலப்ப - நீங்க, மின்னில் - மின்னற்கொடி அத்திர்ச்யமாவதுபோல், நீங்கிஞன் - அவ்வுலகத்தை விட்டு நீங்கியவஞகி, அன்றைய நிதானத்தாலே - பூர்வத்தில் பண்ணப்பட்ட நிதான சல்லியத்தாலே, அரிவையாய் - ஸ்த்ரீயாகி, நிலத்தைச் சேர்ந்தான் - பூமியில் வந்து அவதரித்தான், எ - று. (௧௦)

571. காவலன் போலத் தீப சாகரஞ் சூழ நின்ற
நாவலந் தீவு தன்னுட் பரதத்து நடுவ ணோங்கிச்
சேவலன் னத்திற் சேடி சிறகினை விரித்துத் தீவை
மேவலுற் றெழுவ தொக்கும் விலங்கல்வே தண்ட முண்டே.

(இ - ள்) தீபசாகரம் - அஸங்கியாதத்வீபங்களும் சமுத்திரங்களும், சூழ - தன்னைச் சூழும்படியாக, காவலன்போல - இராஜாதிராஜனைப்போல, நின்ற - நடுவில் நின்ற, நாவலந் தீவுதன்னுள் - ஜம்பூத்வீபத்திலே, பரதத்துள் - பரதக்ஷேத்திரத்து, நடுவண் - மத்தியில், ஓங்கி - உயர்ந்து, சேவலன்னத்தில், ஒரு ஆண் ஹம்ஸத்தைப் போல, சேடி - உத்தரஸ்ரேணிதக்ஷிணஸ்ரேணிகளாகிற, சிறகினை - சிறகுகளை, விரித்து - விரித்துக்கொண்டு, தீவை - இச்சம்பூத்வீபத்தை, மேவலுற்று - பொருந்தியதாகி, எழுவது - மேலே எழுந்து போவதை, ஒக்கும் - நிகர்க்கும், வேதண்டம் - விஜயார்த்தமென்னும் பெயரையுடைய, விலங்கல் - வெள்ளியம் பெருமலையானது, உண்டு - உளது, எ - று. (௧௧)

572. ஆழியைச் செறிந்து கண்ட மாறையு மடிப டுத்து
வேழமா நிரைகள் விண்ணோர் வேந்தர்விஞ் சையர்கள் சூழ
வாழியங் கங்கை சிந்து வந்தடி யடைந்த குன்றம்
பாழியந் தடக்கை வேந்தன் பரதன்போன் றிலங்கு நின்றே.

(இ - ள்) ஆழியை - மஹாலவண சமுத்திரத்தை, செறிந்து - பூர்வாபர பாகங்களில் சேர்ந்து, கண்டமாறையும்-இப்பரதக்ஷேத்திரத்திலுள்ள ஷட்கண்டங்களையும், அடிபடுத்து - தன் கீழ்ப்படுத்தி, வேழமாநிரைகள் - பெரிதாகிய யானைக் கூட்டங்களும், விண்ணோர் - தேவர்களும், வேந்தர் - அரசர்களும், விஞ்சையர்கள் - வித்தியாதரர்களும், சூழ - தன்னைச்சூழ, ஆழி - ஸமுத்திரமும், அம் - அழகிய,

கங்கை - கங்கையும், சிந்து - சிந்துவும் (அவற்றின் பெயரையே பெயராக வகித்த வியந்தரதேவஸ்த்ரீகளின் இருப்பிடமுமாகி), வந்து அடியடைந்த - வந்து தன் கீழ் அடியில் சேர்ந்திராநின்றதாகிய, குன்றம் - இவ்விஜயார்த்த பர்வதமானது, பாழி - பெருமையையுடைய, அம் - அழகிய, தடக்கை - தியாகம் கொடுக்கும்படியான பெரிய கைகளையுடைய, வேந்தன் - அரசனென்னும், பரதன் போன்று - ஷட்கண்டாதிபதியாகிய பரதராஜச் சக்கரவர்த்தியைப்போல், நின்று - நிலை பெற்று, இலங்கும் - விளங்கும், எ - று.

இதில் சொன்ன பொருள் பரதராஜ சக்கரவர்த்திக்கும் பொருந்துகின்றது; ஆகையால் இம்மலையைப் பரதராஜனுக்கு உவமையாக வருணித்தார் ஆசிரியர்.(௯௨)

573. அன்பது மிருபத் தைந்தும் புகையகன் றுயர்ந்து நீள
மொன்பது மொன்று மாய வாயிரத் ததிக மோடி
யைம்பதும் பத்தை மேற்சென் றங்கிரு மருங்கும் புக்கு
விஞ்சைய ருலக மாகிப் பப்பத்து வீழ்ந்த வெற்பின்.

(இ - ள்) (இன்னும்) வெற்பின் - அம்மலையில், அன்பது புகையகன்றும் - தெற்கு வடக்கில் அன்பது யோஜனை யகலமாக விசாலித்தும், இருபத்தைந்து புகையுயர்ந்தும் - இருபத்தைந்து யோஜனை உன்னதமாக வுயர்ந்தும், நீளம் - கிழக்கு மேற்கு நீளமானது, ஒன்பது மொன்றுமாய வாயிரத்ததிகம் - தக்ஷிண பாரிசத்தில் ஒன்பதினாயிரம் யோஜனைக்குக் கொஞ்சம் அதிகமாயும் உத்தரபாரிசத்தில் பதினாயிரம் யோஜனைக்குக் கொஞ்சம் அதிகமாகவும், ஓடி - நீண்டும், அங்கு - அவ்விடத்தில், இருமருங்கும் - இரண்டு பக்கத்திலும், ஐம்பதும் பத்தும் மேற்சென்று - ஐம்பது யோஜனையும் பத்து யோஜனையும் மேலே செல்ல (அதாவது: ஐம்பது யோஜனை அகலமாகவும் பத்து யோஜனை உயரமாகவும் மேலே வியாபிக்க), பப்பத்து - பத்துப்பத்து யோஜனைகள், புக்கு - அடைந்து, வீழ்ந்த - ஒவ்வொன்றுக்கும் அகலமாக உத்தரதக்ஷிண பாரிசங்களில் தங்கி இருபிரிவாகத் தோற்றிய, விஞ்சையருலகமாகி - வித்தியாதர லோகமாக, எ - று.

புகை - இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. ஐம்பதும் என்பதிலுள்ள உம்மை இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. பத்தை - என்பதில் ஐ - சாரியை. இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௯௩)

574. நின்றமுப் பதும்பத் தேறி நெறியினாற் சேடி யாகிச்
சென்றன சக்க வாலர் வியோகர புரங்க ளாகு
மன்றியக் குன்றிற் பத்து மைந்துயர் சூளி யாமே
லொன்றின் றௌிருங் கூடம் மகுடம்போ லொன்ப தாமே.

(இ - ள்) நின்ற - இவ்வண்ணமாகத் தென்வட பாரிசங்களில் பத்துப் பத்து யோஜனை யகலம் வித்தியாதர லோகமாய் மீந்து நின்ற, முப்பதும் - முப் பது யோஜனை அகலமும், பத்தேறி - பத்து யோஜனையுயர்ந்து, சென்றன - சென்றனவாய், நெறியினால் - முன் சொன்ன கிரமத்தினால், சேடியாகி - இரு பக்கங்களிலும் பத்துப்பத்து யோஜனை யகலமாகிய உத்தர தட்சிண ஸ்ரேணிகளாகி, சக்கவாலர் - சக்ரவாளரென்னும் பெயரையுடைய வியந்தரதேவர்களின், வியோ கரம் - மனோஹரங்களாகிய, புரங்களாகும் - பட்டணங்கள் அந்த ஸ்ரேணிகளி லாகும், அன்றி - அவையல்லாமல், அக்குன்றில் - அவ்விஜயார்த்த பர்வதத்தில், பத்தும் - மீந்த பத்து யோஜனை யகலமும், ஐந்துயர் - ஐந்து யோஜனை யுயர்ந்த, சூளியாம் - சூளிகையாகும், மேல் - அந்தச் சூளிகையின் மேல், ஒன்றி நின்று - பொருந்தி நின்று, ஒளிரும் - பிரகாசியாநின்ற, கூடம் - சிகரமானது, மகுடம் போல - இராஜாக்களினுடைய சிரசில் சூட்டும் கிரீடம் போல, ஒன்பதாம் - நவ களாகும், எ - று. (கச)

575\. இமையத்தி னிரும ருங்கும் நிலங்கள்போன் றிலங்கும் வெள்ளிச்
சிமையத்தி னிரும ருங்கும் சென்றவிஞ் சையர்கள் சேடி
சமையத்து நான்க தாவ தொக்குமேற் றிழிவு தன்னின்
நமையொப்பர் விஞ்சை யாலிவ் விஞ்சையர் நாகர் கோவே.

(இ - ள்) நாகர்கோவே - தரணேந்திரனே !, இமையத்தின் - இமையோத் கிரிபர்வதத்தினுடைய, இருமருங்கும் - (உத்தர தக்ஷிணமாகிய) இரண்டு பக்கங் களிலு மிராநின்ற, நிலங்கள் போன்று - (பரதம் ஹைமவதமாகிய) நிலங்களைப் போல், வெள்ளிச் சிமையத்தின் - வெள்ளி மலையாகிய விஜயார்த்த பர்வதத்தி னுடைய, இருமருங்கும் - இரண்டு பக்கங்களிலும், சென்ற - விசாலமாகப் பரவிய, விஞ்சையர்கள் - வித்தியாதரர்கள் வசிக்கும்படியான, சேடி-உத்தர தக்ஷிணஸ்ரேணி களாகிய அடி நிலையில் உள்ள நகரங்களாகும், (இங்கு) ஏற்றிழிவு தன்னில் - உத் ஸர்ப்பிணி அவஸர்ப்பிணி காலங்களில், (ஏற்பட்டகாலமானது) சமையத்து நான் கதாவதொக்கும் - நாலாங்காலத்துக்குச் சமானமாகவிருக்கும், விஞ்சையால் - வித்தைகளினால், (பார்க்கும்பட்சத்தில்), இவ்விஞ்சையர் - இங்குள்ள வித்யாதரர் கள், நமையொப்பர் - நமக்கு ஸமானமான குணத்தையுடையவர்களாக இருப் பார்கள், எ - று. (கரு)

576\. எழுமுழம் வில்லைஞ் ஞூற்றி விழிவது மேற்று மில்லை
வழுவிலா வருட நூறு புவ்வகோ டியினிற் கீழ்மேல்
எழுமுழ மாயி ரத்தாண் டெண்பத்து நான்கு நிற்கும்
முழுவில்லைஞ் ஞூறு கோடா கோடிமூ வாறு முன்னீர்.

(இ - ள்) (இன்னும் இவ்வித்தியாதரர்கள்), எழுமுழம் - எழுமுழ உன்னதத்திற்குக் கீழ், இழிவதும் - குறைவதும், வில்லைஞ்ஞூற்றில் - ஐஞ்ஞூறுவில்லுயரத்திற்குமேல், ஏற்றும் - உயர்வதும், இல்லை - கிடையாது, வழுவிலா - குற்றமில்லாத, வருடநூறு - நூறு வருஷாயுஷ்யத்திற்கு, கீழ் - கீழே, இல்லை - குறைவதுமில்லை, புவ்வகோடியினில் - பூர்வகோடியாயுஷ்யத்தில், மேல் - மேலே, இல்லை - உயர்வதுமில்லை, எழுமுழம் - எழுமுழ உன்னதமானது, (அவஸர்ப்பிணியின் தீக்காலம் தீத்தீக்காலம் உத்ஸர்ப்பிணியின் தீத்தீக்காலம் தீக்காலம் ஆகிய), ஆயிரத்தாண்டெண்பத்து நான்கு - எண்பத்து நாலாயிரம் வருஷம், நிற்கும் - ஸ்திரமாயிருக்கும், முழுவிலைஞ்ஞூறு - நிறைந்த ஐஞ்ஞூறு வில்லுன்னதமானது, கோடாகோடி மூவாறுமுன்னீர் நிற்கும் - பதினெட்டுக் கோடாகோடி கடற்காலம் ஸ்திரமாகவிருப்பதாகும், எ - று.

(இதனால் உத்ஸர்ப்பிணி அவஸர்ப்பிணிகளில் நாற்பத்தீராயிரம் வருடம் குறைந்த ஒரு கோடாகோடி கடற்காலம் அளவுள்ள நற்றீக்காலம் தீநற்காலம் ஆகியவைகளில் அவர்கள் ஏற்றிழிவையுடையவர்களா யிருப்பார்கள் என்பது பெறப்படும்). இல்லை, நிற்கும் என்பன இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டன. ()

577. 'நாகத்தைச் சூழ்ந்து நாக நாகத்தைப் போல நிற்கும்
நாகத்தை விழுங்கி நாகம் நாகத்தைச் சூழ்ந்த வாங்கு
நாகத்தை யடைந்த நாகர் நாகத்தை யென்று நண்ணார்
நாகத்துக் கிறைவ வென்று னாகத்துக் கிறைவன் றானே.

(இ - ள்) நாகத்துக்கிறைவ - பவணலோகத்துக் கதிபதியாகிய தரணேந்திரனே !, நாகத்தை-இவ்விஜயார்த்த பர்வதத்தை, சூழ்ந்து-எப்பக்கத்திலும் சூழ்ந்து கொண்டு, நாகம் - யானைகளானவை, நாகத்தைப்போல - மேகதண்டங்களைப் போல் (அல்லது வேறு சிறு பர்வதங்களைப்போல்), நிற்கும் - நிற்பனவாம், நாகத்தை - ஆகாயத்தை, விழுங்கி - மறைத்து, நாகம் - புன்னாக விருட்சமானது, நாகத்தை - அவ்விஜயார்த்த பர்வதத்தை, சூழ்ந்த - சூழ்ந்திரா நின்ற, ஆங்கு - அவ்விடத்தில், நாகத்தை - அப்பர்வதத்தை, அடைந்த - சேர்ந்த, நாகர் - தேவர்கள், நாகத்தை - தேவலோகத்தை, என்றும் - எப்பொழுதும், நண்ணார் - நீங்கியடையமாட்டார்கள், என்றான் நாகத்துக்கிறைவன்றான் - என்று தேவலோகத்து லாந்தவகல்பாதிபதியாகிய ஆதித்யாபதேவன் சொன்னான், எ - று. (கஎ)

578. மறுவிலாப் பளிங்கிற் பாய்ந்த மரகதக் கதிரை மானக
ளறுகெனக் கறித்துக் கான னீரெனச் செல்வ போலும்
வெறிமலர் துதைந்த நீல மணித்தலத் தகத்தைச் சென்று
குறுகுவர் குவளை வட்ட மென்றுகோல் வளையி னாரே.

(இ - ள்) (அவன் அவ்வாறு சொல்லி மேலும் கீழ்வருமாறு கூறினன் :) மறுவிலா - களங்கமில்லாத, பளிங்கில் - ஸ்படிகத்தில், பாய்ந்த - வியாபித்த, மரகதக்கதிரை - பச்சையிரத்தினத்தினது கிரணத்தை, (அங்குள்ள) மான்கள்-மான் கூட்டங்கள், அறுகென - அறுகம்புல்லென்று, கறித்து - நாவால் வளைத்துப் பல்லால் கடித்து, கானல் - கானலை, நீரென - ஜலமென்று கருதி, செல்வபோலும் - செல்வனபோலப் பிரமிப்படையும், வெறி - வாசனையையுடைய, மலர் - புஷ்பங்கள், துதைந்த - சேர்ந்திராநின்ற, நீலமணித்தலத்தகத்தை - இந்திர நீலரத்தினத்தாலாகிய பூமியை, கோல் - புள்ளிகளையுடைய, வளையினர் - வளையல்களையணிந்திராநின்ற ஸ்த்ரீமார்கள், குவளைவட்டமென்று - இது குவளை மலர்களையுடைய தடாகமென்று கருதி, சென்று குறுகுவர் - போய் அடைவார்கள், எ - று.

வேறு.

579. வேழ மும்மத மும்விளை தேறலும்
வாழை யின்கனி யுஞ்சுளை யும்மளாய்
வீழும் வெள்ளரு வித்திரள் வெற்பிதன்
சூழு மாழி முழங்குவ தொக்குமே.

(இ - ள்) வெற்பு இதன் - இவ்விஜயார்த்த பர்வதத்தினுடைய, வீழும் - கீழிழியும், வெள் - வெளுப்பாகிய, அருவித்திரள் - அருவிஸமூஹங்கள், வேழம் - யானைகளினுடைய, மும்மதமும் - கர்ண கபோல பீஜ மதங்களாகிய மூன்றுவித மதஜலங்களோடும், விளை - அப்பர்வதத்தில் மற்றுமுண்டாகின்ற, தேறலும் - மது ஜலத்தோடும், வாழையின் கனியும் - வாழைப்பழத்தோடும், சுளையும் - பலாச்சுளையுடனும், அளாய் - கலந்து (அதாவது : இவற்றையெல்லாம் வாரிக்கொண்டு பாய்ந்து), சூழும் - பூமியைச் சூழ்ந்திருக்கின்ற, ஆழி - சமுத்திரமானது, முழங்குவது - சப்திப்பதை, ஒக்கும் - நிகர்க்கும், எ - று. (கக)

580. வருடை பாய வெழுந்த மணித்துகள்
கதிர்க ளாயெழில் வானைச் செறிந்தன
மரிஇய மாநிதி யாலிம் மலைமிசை
யிருது நீள்விழு தீன்றது போன்றவே.

(இ - ள்) மாநிதியால் - பெரிதாகிய நிதியோடு, மரீஇய - சேர்ந்திரா நின்ற, இம்மலைமிசை - இவ்விஜயார்த்த பர்வதத்தின் மேல், வருடை - எட்டடிமானனது (அதாவது: அஷ்டாபத மிருகமானது), பாய - பாய்தலால் (அதாவது : பாய்ந்தோடுவதால்), எழுந்த - மேலெழும்பிய, மணித்துகள்-இரத்தினத் தூள்கள், கதிர்களாய்-கிரணங்களாய், எழில் - அழகு பொருந்திய, வானை - ஆகாசத்தை, செறிந்தன - சேர்ந்தவைகள், இருது - தேவலோகத்திலுள்ள இருது விமானமானது, நீள் -

நீண்டிரா நின்ற, விழுது - விழுதுகளை, ஈன்றது போன்ற - ஈன்றதை நிகர்த்தன வாம், எ - று. (உ0)

581. மலைக்கண் வஞ்சியங் கொம்பன வின்சொலா
ரலத்த கஞ்செறிந் தஞ்சிலம் பாரடி
தலத்தெ ழுந்தசெந் தாமரைப் போதுபோ
னிலத்த கம்பொருந் திக்கி டந்தவே.

(இ - ள்) மலைக்கண் - அவ்விஜயார்த்த பர்வதத்தில், வஞ்சியங் கொம்பன - வஞ்சிக்கொடியையும் அழகிய பூங்கொம்பையும் போன்றவர்களாகிய, இன்சொலார்- இனிய சொல்லையுடைய ஸ்த்ரீமார்களின், அலத்தகம் செறிந்த - செம்பஞ்சுக்குழம் பூட்டிய, அம் - அழகிய, சிலம்பு - பாதச்சிலம்பு, ஆர் - பொருந்திய, அடி - பாதச் சுவடுகள், தலத்து - பூமியில், எழுந்த - உண்டாகிய, செம் - சிவந்த, தாமரைப் போதுபோல் - தாமரைப் புஷ்பங்கள்போல, நிலத்தகம் - பூமியில், பொருந்தி - சேர்ந்து, கிடந்த - கிடந்து விளங்குவனவாம், எ - று. (உக)

582. பைம்பொ னன்பவ ழம்படி கம்மணி
யொன்ப தின்னொளி யுங்கலந் துள்ளுலாய்
வம்பு கொண்டு கிடந்தவை மால்வரை
யும்பர் கோன்வில் லுறங்குவ தொக்குமே.

(இ - ள்) மால்-பெருமையையுடைய, வரை - அவ்விஜயார்த்த பர்வதத்தில், பைம் - பசுமையான, பொன் - ஸ்வர்ணம், நன் - நன்மையாகிய, பவழம் - பவளங்கள், படிகம் - ஸ்படிகங்கள், (முதலாகிய), ஒன்பதின் - நவரத்தினங்களினது, ஒளியும் - ஜோதியும், கலந்து - சேர்ந்து, உள் - உள்ளே, உலாய் - பரந்து, வம்பு கொண்டு - புதுமைகொண்டு, கிடந்தவை - இருந்தவை, உம்பர்கோன் - தேவேந்திரனது, வில் - தனுஸாகிய இந்திர தனுஸானது, உறங்குவது - வந்துறங்கியதை, ஒக்கும் - நிகர்ப்பனவாகும், எ - று. (உஉ)

583. எறிசு ருவுயர்த் தானிடம் போன்றெழில்
வெறியு லாமலர்ப் பந்தரம் மெல்லணைச்
செறியும் விஞ்சையர் சேயிழை யாரொடுங்
குறைவி லாக்குரு வத்தவ ரொப்பரே.

(இ - ள்) (இன்னும் அங்கு) எறி - ஜலத்தில் மோதுகின்ற, சுறு - ஆண் மகரமஸ்யத்தை, உயர்த்தான் - துவஜத்தில்லாஞ்சனமாக உடைய (அதாவது: மகரக்கொடியையுடைய) மன்மதனது, இடம்போன்று - ஸ்தானம் போன்று, எழில் - அழகிய, வெறி - வாசனையானது, உலாம் - பரந்து வீசும், மலர் - புஷ்

பத்தாலாகிய, பந்தர் - பந்தல்களினுள், அம் - அழகிய, மெல்லணை - மிருதுவாகிய புஷ்பமெத்தைகளில், சேயிழையாரொடும் - சிவந்த ஒளிவீசும் கலையணிந்த ஸ்திரீமார்களுடன், செறியும் - சேர்ந்திராநின்ற, விஞ்சையர் - யாதரர்கள், குறைவிலா - போகங்களில் குறைவில்லாத, குருவத்தவர் - போக பூமியாகிய உத்தரகுருக்ஷேத்திரத்திலிராநின்ற மனுஷ்யர்களை, ஒப்பர் - நிகர்ப் பார்கள், எ - று. (உ௩)

584. கின்ன ரமிது னஞ்செய்த கீதமாய்ந்
தின்ன ரம்பி னெழுந்த வெழால்வழி
மின்னி னாடு மரம்பையர் மேவலாற்
பொன்னு லகது போலுமோர் பாலெலாம்.

(இ - ள்) ஓர் பாலெலாம் - அம்மலையின் ஒரு பக்கமெல்லாம், கின்னர மிது னம் - கின்னர மிதுனங்கள், செய்த - பாடுதல் செய்த, கீதம் - சங்கீதத்தை, ஆய்ந்து - ஆராய்ந்து, நரம்பின் - வீணையின் நரம்புகளில், எழுந்த - உண்டாகிய, எழால் வழி - நாதத்தின் வழியே, மின்னின் - மின்னற் கொடிபோல, ஆடும் - அசைந்து நர்த்தனமாடுகின்ற, அரம்பையர் - நர்த்தனஸ்திரீகள், மேவலால் - பொருந்தி நர்த்தனஞ் செய்கின்றபடியால், பொன்னுலகது போலும் - தேவருல கத்தை நிகர்க்கும், எ - று. (உ௪)

585. கோங்கு வாகை குடசங் குருந்துநல்
வேங்கை சண்பகந் தண்பகம் பாடலம்
வாங்கு வாழையுந் தாழையும் புன்னையும்
பாங்கி னோங்கின பார்மிசை யில்லையே.

(இ - ள்) (இன்னும் அங்கே) கோங்கு - கோங்கு மரமும், வாகை - காட்டு வாகையும், குடசம் - மலைமல்லிகையும், குருந்து - காட்டு நாரத்தை காட்டெலு மிச்சையும், நல் - நன்மையாகிய, வேங்கை - வேங்கைமரமும், சண்பகம் - சண்பக விருட்சமும், தண்பகம் - தண்பகமென்னுமொரு ஜாதிமரமும், பாடலம் - பாதிரி விருட்சமும், வாங்கு - வளைந்த குலைகளையுடைய, வாழையும் - வாழைமரங்களும், தாழையும் - தாழை மரமும், புன்னையும் - புன்னைமரங்களும், பாங்கின் - வரிசை யாக, ஓங்கின - உயர்ந்திரா நின்றனவாம், பார்மிசை - இப்பூமியின்மேல், இல்லை - இதற்கு உவமை இல்லை, எ - று. (உ௫)

586. கள்ளு மிழ்ந்தல ருங்கழு நீர்ச்சுனை
புள்ளொ லிப்பவண் டார்த்தெழும் பூம்பொய்கை
வெள்ள மார்ந்துழ வின்றி விளைவய
லுள்ள வண்ண முரைத்தற் கரியவே.

(இ - ள்) (இன்னும் அவ்விடத்தில்) கள் - மதுவை, உமிழ்ந்து-சொரிந்து, அலரும் - மலரும், கழுநீர் - கழுநீர்ப்புட்பங்களையுடைய, சுனை - சுனைகளும், புள் - பட்சிகள், ஒலிப்ப - சப்திக்க, வண்டு - வண்டுகளும், ஆர்த்தெழும் - சப்தித்தெழு கின்ற, பூம்பொய்கை - புஷ்ப தடாகங்களும், வெள்ள மார்ந்து - ஜலப்பெருக்கு நிறைந்து, உழவின்றி - உழவுத் தொழிலில்லாமல், விளை - தாமாக விளைந்து பல னைத்தருகிற, வயல் - வயல்களும், உள்ள வண்ணம் - தங்கள் யதாஸ்வரூபங்களை, உரைத்தற்கு - அவ்விதமாகவே வர்ணிப்பதற்கு, அரிய - அருமையானவை யாம், எ - று. (உசு)

வேறு.

587. மற்றிந்த மலைமிசை வடதென் சேடியிற்
கொற்றவ ருறைபதி கோடி யூர்களாற்
சுற்றப்பட் டிருந்தவை நூற்றெ ருபதிற்
றெற்கொரு புரிநல தரணி திலகமே.

(இ - ள்) மற்று - பின்னை, இந்த மலைமிசை - இந்த விஜயார்த்த பர்வதத் தின்மே லிராநின்ற, வடதென் சேடியில் - முதனிலையாகிய உத்தர தக்ஷிண ஸ்ரேணிகளில், கோடியூர்களால் - கோடிக்கணக்கான அநேக கிராமங்களினால், சுற்றப்பட்டிருந்தவை - சூழ்ந்திராநின்றனவாகிய, கொற்றவர் - வித்தியாதர ராஜாக்கள், உறை - தங்கியிராநின்ற, பதி - இராஜதானியாகிய, நூற்றொருபதில் - நூற்றுப்பத்துப் பிரதான பட்டணங்களில், தெற்கு - தக்ஷிணஸ்ரேணியில், நல - நன்மையாகிய, தரணி திலகம் - தரணீ திலகமென்னும் பெயரையுடைய பட்டண மானது, ஒருபுரி - ஒரு நகரமாம், எ - று. (உஎ)

588. கொடிமிடை கோபுர வீதி வாயெலாம்
வடிவுடை மகளிரும் மைந்த ரும்மலிந்
தடியிடு மிடம்பெறு தடையும் மாநகர்
கடலிடை நதிபுகுங் காட்சித் தாகுமே.

(இ - ள்) கொடி - துவஜக்கொடிகள், மிடை - நெருங்கிச் சேர்ந்த, கோபு ரம் - கோபுரங்களையுடைய, வீதிவாயெலாம் - மஹா வீதிகளிலெவ்விடங்களிலும், வடிவுடை - நல்ல உருவத்தையுடைய, மகளிரும் - ஸ்த்ரீமார்களும், மைந்தரும் - புருடர்களும், மலிந்து - நிறைந்து, அடி - பாதங்களை, இடும் - பெயர்த்து வைக் கும், இடம் - இடத்தை, பெறுது - அடையாமல், அடையும் - நெருங்கிச் செல் கின்ற, மாநகர் - பெரிதாகிய ஜனஸமூகமுடைய அப்பட்டணமானது, (இவ்வித ஜன நெருக்கத்தின் ஆரவாரத்தால்), கடலிடை - சமுத்திரத்தில், நதிபுகும் - பல நதிகள் அடையும், காட்சித்தாகும் - தோற்றத்தையுடையதாகும், எ - று.

ஜனங்கள் நிறைந்த பல வீதிகள், அந்நகரத்தில் விளங்குவது ஜலம் பல நதிகள் கடலிற் பாய்வது போன்றிருக்கும். (உஅ)

589. சுறவுயர் கொடியுடைத் தோன்றல் காளையர்
நறைவிரி மரைமலர் நங்கை மங்கையர்
பொறியுறு புலங்களும் போக பூமிய
தறிவன தணிநகர் போலு மாநகர்.

(இ - ள்) (இன்னும்) மாநகர் - பெரிதாகிய அப்பட்டணத்துள்ள, காளையர் - விட புருஷர்கள், சுறவுயர் கொடியுடை - உயர்ந்த மகரக்கொடியை யுடைத்தாகிய, தோன்றல் - பெருமையிற் சிறந்த மன்மதனேயாவர், மங்கையர் - ஸ்த்ரீகள், நறை - வாசனையையுடைய, விரி - மலர்ந்த, மரைமலர் - தாமரை மலரில் வீற்றிருக்கின்ற, நங்கை - இலக்குமி தேவியேயாவார்கள், பொறியுறு - பஞ்சேந்திரியங்களிற் பொருந்துகின்ற, புலங்களும் - விஷயங்களும், போகபூமி - போகபூமியிலுள்ளவைகளேயாகும், (இவையன்றியும்) அது - அந்நகர், அறிவனது - அருகபரமனது, அணி - அழகு பொருந்திய, நகர்போலும் - சமவஸரணமென்னும் சபையை நிகர்க்கும், எ - று.

போகபூமி, ஆகுபெயராய் அதிலுள்ள அனுபவங்களை யுணர்த்தி நின்றது. ()

வேறு.

590. நரம்பி னின்னொலி நாடக மாடுநல்
லரம்பை யரனை யாரொலி யாய்பிழி
சுரும்பு ணும்மொலி சூதெறி * கோதையர்
கரும்பி னன்மொழி யுங்கவ்வை செய்யுமே.

(இ - ள்) (இன்னும் அங்கே) நரம்பின் - வீணைத்தந்தியினது, இன் - இனிமையாகிய, ஒலி - சப்தமும், நல் - நன்மையாகிய, நாடகமாடும் - நர்த்தனஞ் செய்கின்ற, அரம்பையரனையார் - தேவரம்பையரை நிகர்த்த நர்த்தகிகளது, ஒலி - சப்தமும், ஆய் - வண்டுகளால் ஆராய்ந்து கொள்ளப்பட்ட, பிழி - மதுவை, உணும் - உண்கின்ற, சுரும்பு - வண்டுகளது, ஒலி - ரீங்கார சப்தமும், சூதெறி - சொக்கட்டான் காய்களை யுருட்டி யாடுகின்ற, * கோதையர் - மாலையை யணிந்திரா நின்ற ஸ்த்ரீமார்களது, கரும்பின் - கரும்பின் ரஸம்போல, நல் - நன்மையாகிய (மதுரமுடைய), மொழியும் - வசனமும் (ஆகிய இச்சப்தங்கள்), கவ்வை செய்யும் - மிகுந்த ஆரவாரத்தைச் செய்து கொண்டிருப்பனவாம், எ - று. (கூ0)

* கோதையர் என்பது தோகையர் என்றும் சில பிரதிகளில் காணப்படு

591. மழையுண் மின்னென மாளிகை யூடலா
முழைய ஞார்புரு வத்துரு வச்சிலை
குழைய வாங்கி விடுங்கணம் புள்புக
வழலுங் கவ்வை யமர்ந்தகங் கோரொர்பால்.

(இ - ள்) (மேலும்) அங்கு-அந்நகரத்தில், ஓரொர்பால் - ஒவ்வோரிடங்களிலும், மழையுள் - மேகத்துள் பொருந்திய, மின்னென - மின்னற் கொடிபோல, மாளிகை யூடலாம் - மாளிகைகளினுலாவுகின்ற, உழையனார் - பெட்டைமானைப் போல மருண்ட பார்வையுடைய மாதர்கள், புருவம் - தங்களுடைய புருவங்களாகிற, உருவம் - ரூபம் பொருந்திய, சிலை - வில்லை, குழைய - வளையும்படியாக, வாங்கி - நெற்றியிலேறிட வளைத்து, விடும் - அந்த வில்லினின்றும் விடப்பட்ட, கண் - தங்கள் கண்களாகிற, அம்பு - அம்புகளானவை, உள்புக - மைந்தர்களுடைய மனதில் தைத்துக்கொள்ள, அழலும் - அதனால் அவர்கள் வெதும்பி வருத்தமடைகின்ற, கவ்வை - துன்பமானது, அமர்ந்தது - பொருந்தியதாகும், எ - று.

புருவத்து என்பதில் அத்து - சாரியை. (ரு௧)

592. மதிய டைந்த நெடுங்கொடி மாடவூர்க்
கதிபன் விஞ்சையர் கோனதி வேகனும்
நிதியி ரண்டென நீடிய தோளினன்
விதியின் விஞ்சை கடந்த நெடுந்தகை.

(இ - ள்) மதியடைந்த - சந்திரனிடத்தில் சேர்ந்த, (அதாவது: சந்திர மண்டலம்வரை அளாவிய), நெடும் - நீண்ட, கொடி - த்வஜங்கள்பொருந்திய, மாடம் - உப்பரிகைகளையுடைய, ஊர்க்கு - அத்தரணீதிலக புரத்துக்கு, அதிபன் - அதிபதியானவன், விஞ்சையர்கோன் - வித்தியாதரர்களுக் கெல்லாம் ராஜாவாகியவனும், நிதியிரண்டென - சங்கநிதி பத்மநிதிபோல (தியாகங்கொடுக்கும்படியான), நீடிய - பெரியனவாகிய, தோளினன் - கைகளை யுடையவனும், விதியின் - விதிக்கிரமத்தால், விஞ்சை - வித்தைகளை யெல்லாம், கடந்த - கரைகண்ட, நெடுந்தகை- பெரிதாகிய குணத்தை யுடையவனும், (ஆகிய) அதிவேகனும் - அதிவேகனென்னும் பெயரினையுடையவனுவான், எ - று. (ரு௨)

வேறு.

593. விலக்கிலா விழுநிதி வென்றி யாயுவா
மிலக்கண மியாவையு மிருந்த கொம்பனாள்
சுலக்கணை யாம்பெயர் துணர்க டோள்வலி
விலக்கிய புயத்ததி வேகன் றேவியே.

(இ - ள்) துனர்கள் - சத்துரு ராஜாக்களுடைய, தோள்வலி - புஜ பலத்தை, விலக்கிய - நீக்கிய, புயத்து - புஜபலத்தையுடைய, அதிவேகன் - அதிவேக ராஜனுடைய, தேவி - பட்டத்தரசியானவள், விலக்கிலா - நீங்காத, விழு - பரிசுத்தமாகிய, நிதி - ஐஸ்வரியமும், வென்றி - வெற்றியும், ஆயு - உத்கிருஷ்டமாகிய ஆயுஷ்யமும், ஆம் - ஆகின்ற, இலக்கணம் - லக்ஷணங்களும், (ஆகிய) யாவையும் - முழுமையும், இருந்த - நிறைந்திருந்த, கொம்பனாள் - புஷ்பக்கொடி போன்றவள், பெயர் - அவளுடைய நாமமானது, சுலக்கணையாம் - ஸுலக்ஷணை யென்பதாகும், எ - று. (௫௫)

594. பருதியின் னொளியளாம் பாவை தானவள்
வருசிலைத் திருநுதன் மாம டந்தைபாற்
றிருவெனத் தோன்றினாள் சீத ரையதாம்
மருவிய பொருள்வழி வந்த நாமமே.

(இ - ள்) பரிதியின் - சூரியன்போல, ஒளியளாம் - ஜோதியை வீசுகின்றவளாகிய, பாவைதானவள் - பூர்வம் ராமதத்தையாகிப் பின்னர் பாஸ்கரப் பிரபதேவனான அப்பெண்ணானவள், வரு - கைக்குவளைக்க இசைந்து வருகின்ற, சிலை - வில்லைப்போன்ற, திரு - அழகிய, நுதல் - நெற்றியையுடைய, மாமடந்தை பால் - பெருமைபொருந்திய அந்த சுலக்ஷணை யென்னும் பெண்ணின் கருப்பத்திலடைந்து, திருவென - (நவமாத பரிபூர்ணமானபின்) இலக்குமிபோல், தோன்றினாள் - பெண்ணாகப் பிறந்தாள், பொருள் - அப்போது மிகுதியான ஐஸ்வரியமானது, மருவிய - சேர்ந்த, வழி - காரணமாக, வந்த - அவளுக்கேற்பட்ட, நாமம் - பெயரானது, சீதரையதாம் - ஸ்ரீ தரையென்பதாகும், எ - று. (௫௬)

595. கொற்றவ னுங்குல மலையிற் றோன்றிய
கற்புடைச் சுலக்கணைக் கனகப் பாத்தியுட்
கற்பகக் கொடியது வளர்ந்து காமரும்
பொற்புடை முலையரும் பெழுந்து பூத்தவே.

(இ - ள்) கொற்றவனும் - அதிவேகனென்னும் ராஜாவாகிற, குலமலையுள் - குல பர்வதத்தில், தோன்றிய - உண்டாகிய, கற்புடை - பதிவிரதா குணமுடைய, சுலக்கணை - சுலக்ஷணையென்னும் பெயரையுடைய தேவியாகிற, கனகப் பாத்தியுள் - ஸ்வர்ணப்பாத்தியுள், கற்பகக்கொடியது - ஸ்ரீதரையென்கிற கல்பக வல்லிக் கொடியானது, வளர்ந்து - வளர்ச்சியுற்று, காமரும் - இச்சிக்கத் தகுந்த, பொற்புடை - அழகையுடைய, முலையரும்பு - ஸ்தனங்களாகிற அரும்புகளானவை, எழுந்து - உண்டாகி, பூத்த - அதனிடத்தே புஷ்பித்தன, எ - று.

இதனால் ஸ்ரீதரை யென்பவள் யௌவன மடைந்தாளென்பது பெறப்படும். (௫௭)

596. முத்தணி முகிண்முலை முளரி வாண்முகத்
தத்தையங் கிளவியைத் தருசகனெனும்
வித்தக னளகையான் வேந்தற் கீந்தனர்
முத்திபெற் றுரையொத் தானம் மூர்த்தியே.

(இ - ள்) முத்தணி - முத்துமாலைகளை யணிந்த, முகிழ் - தாமரை மொக்குப்போன்ற, முலை - ஸ்தனங்களையும், முளரி - தாமரை மலர்போன்ற, வாள் - ஒளிபெற்ற, முகம் - முகத்தையுமுடைய, தத்தை - கிளிப்பிள்ளை வசனத்தைப் போன்ற, அம் - அழகிய, கிளவியை - வசனம்பொருந்திய இந்த ஸ்ரீதரையை, தருசகனெனும் - தர்சகனென்று பெயர் கூறப்பட்ட, வித்தகன் - சாமர்த்திய புருஷனும், அளகையான் - அளகைக்கதிபனும், (ஆகிய), வேந்தற்கு - இராஜனுக்கு, (அந்த ஸ்ரீதரையின் தாய்தந்தையர்), ஈந்தனர் - விவாஹ விதியால் மணஞ்செய்து கொடுத்தார்கள், அம்மூர்த்தி - அவ்வளகாபுரியரசனும், முத்திபெற்றாரை யொத்தான் - முக்தி பெற்றவர்களைப்போலவளிடத்தில் நீங்காத இன்பத்தை யடைந்தான், எ - று. (௯௬)

597. அளகமுங் குழல்களுந் திருத்தி யம்மலை
யிளமயி லனையவ ளோடவ் வேந்தரு
முளமலி யுவகையி னோடு நாளினால்
வளரொளி வைடூரியப் பிரபை வானவன்.

(இ - ள்) அளகமும் - ஐம்பாலென்னுங் கூந்தலில் பின்னி விடுதலாகிய பனிச்சையும், குழல்களும் - சுருட்டிமுடிக்கும் முடிகளுமாகிய அலங்காரங்களை, திருத்தி - திருந்தச்செய்து, அம்மலை - அந்த விஜயார்த்த பர்வதத்தில், இளம் - இளமைப் பருவமுடைய, மயிலனையவளோடு - ஆண்மயிலுக்குச் சமானமான சரீரச் சாயலையுடையவளாய் உலாவிய அந்த ஸ்ரீதரையோடு, அவ்வேந்தல்தான்-பெருமையிற் சிறந்தவனாகிய அவ்வளகாபுராதிபதியானவன், உளம் - மனதில், மலி - நிறைந்த, உவகையின் - சந்தோஷத்துடன், (கூடி), ஓடுநாள் - செல்கின்ற காலத்தில், வளரொளி - நீண்ட கிரணத்தையுடைய, வைடூரியப் பிரபை - வைடூரியப் பிரபை விமானத்திலிராநின்ற, வானவன் - வைடூரியப் பிரபை தேவனானவன், எ - று.

நாளினால் என்பதில், இன், ஆல் - அசைகள். (௯௭)

598. இறைவனை யிராமைதன் னிளைய காளைமேற்
பிறவியி லென்வயிற் பிறக்கு மாய்விடி
னிறைதவப் பயனென நினைத்த சிந்தையின்
மறுவிலாத் திருவினாள் வயிற்றுட் டோன்றினான்.

(இ - ள்) இறை - உயர்ச்சிபெற்ற அல்லது இரேகைகளையுடைய, வளை - வளையல்களை யணிந்த, இராமை - இராமதத்தை, தன் - தன்னுடைய, இளைய காளை - இளைய குமாரனாகிய பூர்ணச்சந்திரன், மேல் பிறவியில் - இதன்மேல் வரும் பிறவிகளில், என் வயின் - எனது கருப்பத்தில், பிறக்குமாய்விடின் - பிறப்பானேயானால், (அது), நிறை - நிறைவு பெற்ற, தவப்பயன் - என்னுடைய தவத்தின் பயனாகும், (ஆதலின் நான் தவஞ்செய்தவளாயிருப்பின் அவ்வாறே அவன் பிறப்பானாக), எனா - என்று, நினைத்த - அவள் எண்ணிய, சிந்தையின் - நிதான சல்லிய சிந்தையினால், மறுவிலா - குற்றமில்லாத, திருவனாள் - இலக்குமி போன்றவளாகிய அச்சீதரையினுடைய, வயிற்றுள் - கருப்பத்திலடைந்து, தோன்றினான் - முன்னே பூர்ணச்சந்திரனாகவிருந்த வைடூரியப் பிரபதேவன் பெண்ணாய் அவதரித்தான், எ - று. (௫அ)

599. மங்கையாய் மைந்தனாய் வானிற் றேவனாய்
மங்கையாய் வைடூரியப் பிரபன் றோன்றினான்
இங்கிது மாற்றின தியல்பி சோதரை
செங்கய னெடுங்கணத் திருவி னாமமே.

(இ - ள்) மங்கையாய் - முன்னே வாருணியென்கிற பிராம்மண மங்கையாயிருந்து, மைந்தனாய் - பிறகு பூர்ணச்சந்திரனென்னு மரசகுமாரனாகி, வானில் - பிறகு சுக்கிரகல்பத்தில், தேவனாய் - தேவனாகி, மங்கையாய் - இப்போது ஸ்ரீதரைக்குப் புதல்வியாகி, வைடூரியப் பிரபன் - வைடூரியப் பிரபதேவன், தோன்றினான் - பிறந்தான், மாற்றினது - ஸம்சாரத்தினது, இயல்பு - ஸ்வரூபமானது, இங்கு - இவ்விடத்தில், இது - இதுவாகும், செம் - சிவந்த, கயல் - கெண்டை மத்ஸ்யம் போன்ற, நெடும் - நீண்ட, கண் - கண்களையுடைய, அத்திருவின் நாமம் - இலக்குமிபோன்ற அழகுடைய வப்புதல்வியின் பெயரானது, இசோதரை - யசோதரை யென்பதாகும், எ - று. (௫௯)

600. அங்கையு மடிகளு மலர்ந்த தாமரை
கொங்கையுங் குழல்களுங் குரும்பை கொன்றையாம்
வெங்கயற் பொருவகண் வேயை வென்றதோள்
பங்கய மலர்மிசைப் பாவை பாவையே.

(இ - ள்) பாவை - சித்திரப்பாவை போன்ற யசோதரையின், அங்கையும் - அகங்கையும், அடிகளும் - பாதங்களும், அலர்ந்த - மலர்ந்த, தாமரை - தாமரை மலர்களாம், கொங்கையும் - ஸ்தனங்களும், குழல்களும் - கூந்தலின் ஐந்து பகுப்புக்களும், குரும்பை கொன்றையாம் - கிரமமாகத் தென்னங் குரும்பையும் கொன்றைக்காயுமாம், (அதாவது : தனங்கள் குரும்பையும் ஐம்பால் கொன்றைக்காயுமாம்),

**கண்** - நேத்திரங்கள், வெம் - வெவ்விய, கயல் - கெண்டை மீனை, பொருவ - ஒத்திருப்பவைகளாம், தோள் - தோள்கள், வேயை - மூங்கிலை, வென்ற - ஜெயித்தனவாம், பாவை - அந்தப்பெண், பங்கய மலர்மிசை - தாமரைப் புஷ்பத்தின் மேல் வசிக்கின்ற, பாவை - இலக்குமிதேவியேயாவள், எ - று.

பாவை - இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (௬0)

601. மேகர வத்தொடு மிடைந்த பேரொலிப்
பாகரப் புரத்தவ ரிறைவன் பாரொடு
நாகர்தம் மிடத்தையும் நடுக்கும் விஞ்சைகட்
காகரன் சூரியா வருத்த னாகுமே.

(இ - ள்) (இது நிற்க) மேகரவத்தொடு - மேக கர்ஜனையோடு, மிடைந்த - சேர்ந்த, பேரொலி - பெரிதாகிய சப்தத்தையுடைய, (அதாவது: மேககர்ஜனையை நிகர்த்த), பாகரப்புரத்தவர் - பாஸ்கரப் புரத்திலுள்ளவர்களுக்கு, இறைவன் - இராஜாவாகியவன், பாரொடு - இந்தப் பூமியோடு, நாகர் தம்மிடத்தையும் - வித்தியாதர லோகத்தையும், நடுக்கும் - பயத்தால் நடுங்கப் பண்ணும்படியான, விஞ்சைகட்கு - வித்தைகளுக்கு, ஆகரன் - இருப்பிடமானவனாகிய, சூரியா வருத்தன் ஆகும் - சூர்யாவர்த்தனென்னும் பெயரையுடையவனாவான், எ - று. (௬௧)

602. நிறைமதி யனையமுக் குடையி னீழலி
னிறைவன திருந்தடி யிருந்த சிந்தையான்
பொறிகடம் புலங்கண்மேன் மிக்க போழ்தினும்
நெறியலா நெறிச்செலா னீதி யானவன்.

(இ - ள்) நீதியானவன் - நீதியை மிகவுமுடைத்தாகிய அச்சூரியா வருத்தன், நிறை - நிறைந்த, மதியனைய - சந்திரனுக்குச் சமானமாகிய, முக்குடையினீழலின் - சுவேத சத்திரத்தினது நிழலிலமைந்த, இறைவன - அருக பரமனுடைய, திருந்தடி-செவ்வையாகிய பாதங்களில், இருந்த - சேர்ந்த, சிந்தையான் - மனமுடையவன் (அதாவது: அருகத்பக்தியே மிகுந்தவன்), பொறிகள் - பஞ்சேந்திரியங்கள், தம் - தங்களுடைய, புலங்கண்மேல் - விஷயங்களின்மேல், மிக்க போழ்தினும் - மிகுதியாகச் சென்ற காலத்திலும், நெறியலாநெறி - நன்மார்க்கமல்லாத கெட்ட மார்க்கத்தில் (அதாவது: அநீதியாகிய துர்விஷயங்களில்), செலான் - செல்லாத இயல்பையுடையவன், எ - று. (௬௨)

603 ஆற்றன்மூன் றுன்மலை யரசர் தம்வலி
மாற்றிய புயவலி மற்ற மங்கைதன்

னேற்றிய வடஞ்சுமந் தெழுந்த கொங்கையை
யாற்றுளி வேள்வியா லண்ண லெய்தினன்.

(இ - ள்) ஆற்றல் மூன்றுல் - (உத்ஸாக சக்தி பிரபுசக்தி வித்தியா சக்தியாகிய) த்ரிசக்திகளால், மலே - அவ்விஜயார்த்த பர்வதத்திலுள்ள, அரசர் தம் - பகையரசர்களுடைய, வலி - பராக்கிரமத்தை, மாற்றிய - கெடுத்த, புயவலி - புஜபலத்தையுடைய, அண்ணல் - ஸ்ரேஷ்டனுகிய இந்தச் சூரியாவர்த்த மஹா ராஜன், மங்கை தன் - (அளகா புராதிபதியாகிய தர்சகனுக்கும் அவன்றேவி ஸ்ரீ தரைக்கும் புத்ரியாகிய யசோதரை யென்னும்) பெண்ணின், ஏற்றிய - மேலே சேர்க்கப்பட்ட, வடம் - முத்துமாலையை, சுமந்து - அணிந்து, எழுந்த- மார்பினிடமாக உண்டாகிய, கொங்கையை - ஸ்தனங்களிலுண்டாகிய போகத்தை, ஆற்றுள் - தர்மசாஸ்திர நெறியில் பொருந்திய, வேள்வியால் - ஔபாஸன விதிக் கிரமத்தால், எய்தினன் - விவாஹ பூர்வகமாக அடைந்தான், எ - று. (சங)

ஆற்றுளி என்பதில் இ - சாரியை.

604 ஆரியா வருத்தத்துள் ளாரைப் போலவச்
சூரியா வருத்தனுந் தோகை தன்னலம்
வாரியா வருத்தத்து ளமிழ்தின் வாங்கிய
தாரியான் பருகுநாட் சாச ரத்தினுள்.

(இ - ள்) ஆரியாவருத்தத்து - ஆரியா வருத்தமென்கிற உத்தம போக பூமியில், உள்ளாரைப்போல - இராநின்ற போகபூமி மனுஷ்யர்களைப்போல், தாரி யான் - மாலையை யணிந்தவனுகிய, அச்சூரியாவருத்தனும் - அந்தச் சூர்யாவர்த்த மஹாராஜனும், தோகைதன் - யசோதரையினிடமாகிய, நலம் - இன்பத்தை, வாரியா வருத்தத்துள் - க்ஷீரசமுத்திரத்தின் சுழற்சியிலுண்டாகிய, அமிழ்தின் - அமிர்தத்தைப்போல, வாங்கி - கிரகித்து, பருகுநாள் - அனுபவிக்கின்ற காலத்தில், சாசாரத்தினுள் - ஸஹஸ்ரார கல்பத்திலிராநின்ற, எ - று. (சச)

605. காமருந் தேவியர் வதனத் தாமரைத்
தேமரு வண்டெனச் செங்கட் சீதர
னுமத யானைசா சாரத் தின்வழீஇப்
பூமரு குழலிதன் புதல்வ னயினன்.

(இ - ள்) காமரும் - இச்சிக்கத்தகுந்த, தேவியர் - தேவிமார்களின், வத னம் - முகமாகிற, தாமரை - தாமரைப்புஷ்பத்தில், வண்டென - வண்டுபோல, (சேர்ந்து), தேம்மரு - இனிமையையடைந்த, செம் - சிவந்த, கண் - கண்களை யுடைய, சீதரனும் மத யானை - பூர்வம் மதயானையாயிருந்த ஸ்ரீ தரதேவன், சாசா ரத்தின் - அந்த ஸஹஸ்ரார கல்பத்தினின்றும், வழீஇ - ஆயுராவஸானத்தில்

நழுவி, பூமரு - பொலிவு பெற்ற, குழலிதன் - அளகத்தையுடைய யசோதரை யின், புதல்வனுயினுன் - புத்திரனுகி யவதரித்தான், எ - று. (௫௫)

606. சீதர னிசோதரைச் சிறுவ னுய்மண்ணிற்
கேதமாந் திமிர்கெடக் கிரண வேகனுய்
மாதிரந் தன்னையும் வணக்கும் விஞ்சையா
லோதநீர் வட்டத்தி னெருவ னுயினுன்.

(இ - ள்) சீதரன் - (மேற்கூறிய) ஸ்ரீதரதேவனுனவன், (முன்னுரைத்த படி), யசோதரை - யசோதரையினுடைய, சிறுவனுய் - குமாரனுகி, மண்ணில் - இப்பூமியிலுண்டாகிய யாசக ஜனங்களுடைய, கேதமாம் - தரித்திர துன்பமாகிற, திமிர் - அந்தகாரமானது, கெட - நீங்க, கிரணவேகனுய் - கிரணவேகனென்னும் பெயரையுடையவனுய், மாதிரந்தன்னையும் - இப்பூமி முழுமையும், வணக்கும் - வசப்படுத்தும்படியான, விஞ்சையால் - வித்தைகளினுல், ஓதநீர் வட்டத்தில் - ஸமுத்திரஜலஞ் சூழ்ந்த இப்பூமியில், ஒருவனுயினுன் - ஒப்பற்றவனுனுன், எ - று. (௫௬)

607. குஞ்சிகள் கருவளைச் சுருளின் கொத்தன
மஞ்சிலா மதியின தியற்கை வாண்முகங்
குஞ்சரத் தடக்கைத்திண் புயங்கண் மார்பகம்
பஞ்சின் மெல் லணைநல பதுமைக் கென்பவே.

(இ - ள்) குஞ்சிகள் - அக்கிரணவேகனுடைய தலைமயிர்கள், கருவளைச் சுருளின் கொத்தன - கருத்த வளையல் சுருள்களின் கொத்துகளுக்கொப்பாகும், வாள் - ஒளிபெற்ற, முகம் - முகமானது, மஞ்சிலா - களங்கமில்லாத, மதியினது - சந்திரனுடைய, இயற்கை - ஸ்வரூபத்தை உடையதாகும், திண் - கெட்டியாகிய, புயங்கள் - கைகள், குஞ்சரத்தடக்கை, யானைத் துதிக்கையாகும், மார்பகம் - மார்பானது, நல் - நன்மையாகிய, பதுமைக்கு - இலக்குமிதேவி தங்கியிருப்பதற்கு, பஞ்சின் - பஞ்சினுலாகிய, மெல் - மிருதுவாகிய, அணை - மெத்தையாம், என்ப - என்று அறிந்தோர் கூறுவார்கள், எ - று. (௫௭)

608. இடையரி யேற்றின திடையவ் வேந்தறன்
றுடைகண னாளிகைத் தூண்கள் போலுமே
நடைவிடை யொதுக்கமா நளினங் காலடி
யடையலர்க் கரியொடு கூற்ற மன்னனே.

(இ - ள்) (இன்னும்) அவ்வேந்தல் தன் - பெருமையிற் சிறந்த அக்கிரண வேகனுடைய, இடை - இடையானது, அரியேற்றினது - ஆண் சிம்மத்தி

னுடைய, இடை - இடையேயாகும், துடைகள் - துடைகளிரண்டும், மாளிகை - உப்பரிகையினுடைய, தூண்கள்போலும் - ஸ்தம்பங்களை நிகர்க்கும், நடை - நடையானது, விடை - விருஷபத்தினது, ஒதுக்கமாம் - நடையேயாகும், காலடி - பாதங்களின் அடிகள், நளினம் - தாமரை மலர்களேயாகும், (மேலும் அவன்), அடையலர்க்கு - சத்துரு ராஜாக்களுக்கு, அரியோடு - சிம்மத்தோடு, கூற்றம் - இயமனும், அன்னன் - ஒப்பவனுவான், எ - று. (சஅ)

609\. கலைகுண நூல்களிற் காம னன்னவன்
மலைமிசை மன்னர்தங் கன்னி வல்லிகண்
முலைமலி போகத்தின் மொய்ம்பன் மூழ்குநா
ணிலையின்மை சூரியா வருத்த னெண்ணினன்.

(இ - ள்) கலை - அறுபத்துநாலு கலைஞானமாகிற, குணம் - மேன்மை பொருந்திய, நூல்களில் - சாஸ்திரங்களில், மொய்ம்பன் - வல்லவனும், காமனன்னவன் - அழகில் மன்மதனை நிகர்த்தவனும் ஆகிய இந்தக் கிரணவேகன், மலைமிசை - அவ்விஜயார்த்த பர்வதத்திலுள்ள, மன்னர்தம் - ராஜாக்களுடைய, கன்னி வல்லிகள் - புஷ்பக்கொடிபோன்ற இளமைப்பருவமுடைய புத்ரிகளின், முலைமலி - ஸ்தனங்களில் நிறைந்திராநின்ற, போகத்தின் - போகத்திலே, மூழ்குநாள் - அழுந்தி அனுபவிக்கின்ற காலத்தில், சூரியா வருத்தன் - சூரியாவர்த்த மஹாராஜன், நிலையின்மை - ஸம்ஸாரத்தினது அனித்திய ஸ்வரூபத்தை, எண்ணினன் - நினைத்தான், எ - று. (சகூ)

610\. களிற்றினுக் கரசனென் றாலுங் காலவை
யளற்றினுட் செறிந்தபோ தாவ தில்லைநம்
வெளிற்றினிற் கட்டிய வினையின் வெந்துய
ரளற்றின்வீழ் போதுமொன் றாவ தில்லையே.

(இ - ள்) (அவ்வாறு நினைத்து ஒரு யானையானது), களிற்றினுக்கு-யானைகளுக்கெல்லாம், அரசனென்றாலும் - ராஜாவாகிப் பலம் பொருந்திய பட்டத்து யானையாயிருந்தாலும், காலவை - கால்கள், அளற்றினுள் - சேற்றில், செறிந்த போது - புதைந்தபோது, ஆவதில்லை - அதனின்றும் வெளியேறுதல் அதனுல் முடிவதில்லை, (அதைப்போல), நம் - நம்முடைய, வெளிற்றினில் - அஞ்ஞானத்தால், கட்டிய - நம்மைப் பந்தித்த, வினையின் - கர்மங்களினுல், வெம் - வெப்பம் பொருந்திய, துயர் - துக்கமாகிற, அளற்றின் - சேற்றில், வீழ்போதும் - நாம் வீழ்கின்ற காலத்திலும், ஆவது ஒன்று - (அதனின்றும் நம்மை வெளியேற்றிக் கொள்ள நம்மால்) ஆவதாகிய ஒரு காரியம், இல்லை - கிடையாது, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௬0)

611. மடந்தையர் மனத்தினுங் கடிது மாய்ந்திடு *
முடம்பொடு கிளையென வுள்ளம் வைத்தவன்
றடங்கண்வெம் முலையவர் சூழச் சாம்பிய
மடங்கல்போல் மலைநின்று நிலத்தின் வந்தனன்.

(இ - ள்) உடம்பொடு - இச்சரீரத்தோடு, கிளை - பந்துத்வமும், (ஆகிய இந்த அனுபசரித வுபசரித அசத்பூதங்களெல்லாம்), மடந்தையர் - ஸ்திரீகளது, மனத்தினும் - மனதைப்பார்க்கிலும், கடிது - சீக்கிரமாக, மாய்ந்திடும் - நிலையாமல் நீங்கிப்போவனவாம், என - என்று, அவன் - அச்சூர்யாவருத்தன், உள்ளம் - மனதில், வைத்து - (சம்சாரம் அனித்யஸ்வரூபமென்பதை) ஸ்திரம்செய்து, தடம் - விசாலம் பொருந்திய, கண் - கண்களையும், வெம் - விருப்பத்தைச் செய்கின்ற, முலையவர் - ஸ்தனங்களையுமுடைய ஸ்த்ரீமார்கள், சூழ - சூழ்ந்துவர, சாம்பிய - நொந்த, மடங்கல்போல் - சிம்மத்தைப்போல, மலைநின்று - விஜயார்த்த பர்வதத்தினின்றும் (இறங்கி), நிலத்தின் - பூமியில், வந்தனன் - வந்தான், எ - று. (௬௧)

வேறு.

612. மலைவின் மாதவன் மாமுனிச் சந்திரன்
றலைவ னன்னவன் றன்சர ணம்புயம்
நிலனு றப்பணிந் தேத்திநின் றெண்வினைப்
பலமெ னேபணிக் கென்று பணித்தனன்.

(இ - ள்) (அவ்வாறு வந்தவன்) மலைவில் - மாறுபாடில்லாத, மா-பெருமை பொருந்திய, தவன் - தபத்தையுடையவனாகிய, மா-சிறந்த, முனிச்சந்திரன்-முனிச்சந்திரனென்னும், தலைவனன்னவன் தன்-ஸர்வஜ்ஞனை நிகர்த்த முனிவரனது, சரணம்புயம்-பாதத் தாமரையில், நிலனுற - தனது சிரம் முதலாகிய அங்கங்கள் பூமியில் படும்படி, பணிந்து-தாழ்ந்து வணங்கி, ஏத்தி-ஸ்தோத்திரம் பண்ணி (பிறகு), நின்று - எழுந்து எதிரில் நின்று, எண்வினை - அஷ்டகருமங்களின், பலன் - பலனது, எனே - எவ்வகைத்தோ, பணிக்கென்று - அதை எனக்குச் சொல்லுக என்று, பணித்தனன் - கேட்டான், எ - று. (௬௨)

வேறு.

613. அறிவொடா லோகந் தன்னை யாரிருள் போல நின்று
மறுதலைச் செய்யும் ஞான காட்சியா வரணம் வாளி
னெறியும்வா யிரண்டி னென்றி னஞ்சொன்றி னமிர்தம் பூசிச்
செறியநா வைத்த லொக்குந் தீயநல் வேதனீயம்.

* வீந்திடும் என்றும் பாடபேதமுண்டு.

(இ - ள்) (அவ்வாறு கேட்டபோது அம்முனிவரன்), ஞானகாட்சியாவரணம் - ஞானவரணீயம் தர்சனவரணீயமென்னு மிரண்டு கருமங்களும், அறிவொடு - ஞானத்தோடு, ஆலோகந்தன்னை - தர்சனத்தையும், ஆர் - நிறைந்த, இருள்போல - அந்தகாரத்தைப்போல, நின்று - நிலைபெற்று, மறுதலை - மறைப்பதை, செய்யும் - உண்டுபண்ணும், தீயநல்வேதனீயம் - அசாதவேதனீயம் சாதவேதனீய மென்னும் இரண்டு கர்மங்களும், வாளின் - வாளாயுதத்தினுடைய, எறியும் - சேதிக்கும்படியான, வாயிரண்டின் - இரண்டு விதமான வாய்களில், ஒன்றில் - ஒன்றிலே, நஞ்சு - விஷத்தையும், ஒன்றில் - மற்றொரு வாயிலே, அமிர்தம் - அமிர்தத்தையும், பூசி - தடவி, நா - நாவிலே, செறிய - சேரும்படியாக, வைத்தல் - வைத்ததை, ஒக்கும் - நிகர்ப்பனவாம், எ - று. (௬௩)

614. மத்தத்தின் மயக்கு மோகம் வான்றளைப் போலு மாயச்
சித்திரக் காரி நாமஞ் சிறுமையும் பெருமை யுஞ்செய்
கொத்திரங் குலால னொக்கும் பொருளினைக் கொளாமற் காக்க
வைத்தவன் போலு மந்த ராயங்கள் மன்ன வென்றான்.

(இ - ள்) மன்ன - அரசனே !, மோகம் - மோகனீய கர்மமானது, மத்தத்தின் - பைத்தியம் பிடித்ததுபோல, மயக்கும் - மயக்கத்தை உண்டு பண்ணும், ஆயு - ஆயுஷ்ய கர்மமானது, வான் - பெரிதாகிய, தளைப்போலும் - விலங்குக்குச் சமானமாகும், நாமம் - நாமகர்மமானது, சித்திரக்காரி - (பல உருவங்களை எழுதும்) சித்திரக்காரியாகும் (அதாவது: பல உருவங்களை யெழுதும் சித்திரக்காரிபோலப் பல உருவங்களைச் செய்யும்), கொத்திரம் - கோத்திர கர்மமானது, சிறுமையும் - சிறியனவும், பெருமையும் - பெரியனவும், (ஆகிய பாண்டங்களை), செய் - செய்கின்ற, குலாலனொக்கும் - குயவனுக்குச் சமானமாக உச்சநீசக் கோத்திரங்களைப் பண்ணும், அந்தராயம் - அந்தராய கர்மமானது, பொருளினை - திரவியத்தை, கொளாமல் - எவரும் கைக்கொள்ளாமல், காக்க - காவல்செய்ய, வைத்தவன் போலும் - வைக்கப்பட்ட காவற்காரனுக்குச் சமானமாகும், என்றான் - என்று அம்முனிவரன் சொன்னான், எ - று.

கோத்திரம் - முதல் குறுகியது. கள் - அசை. (௬௪)

615. முடிவிலாக் கொடுமைத் தாய மோகந்தான் முன்ன மில்லாக்
கடியதீ வினைக ளெல்லாங் கட்டவே தானுங் கட்டுங்
கெடுவழி தான்கெ டாமுன் கேடெந்த வினைக்கு மொட்டா
தடுதலுக் கரிய மோக மரசனும் வினைகட் கென்றான்.

(இ - ள்) முடிவிலா - அளவில்லாத, கொடுமைத்தாய - பொல்லாங்குடையதாகிய, மோகந்தான் - மோகனீயகர்மமானது, முன்னமில்லா - அனாதியாகிய,

கடிய - பொல்லாங்கான, தீவினைகளெல்லாம் - பாபவினைகளெல்லாம், கட்ட - பந்திக்க, தானும் - அம்மோகனீயமும், கட்டும் - சேர்ந்து பந்திக்கும், கெடுவழி - கெடுகின்றவழி, தான் கெடா முன் - தான் கெடாததற்கு முந்தி, எந்த வினைக்கும் - மற்றெந்தக் கர்மத்திற்கும், கேடு-கெடுகையை, ஒட்டா-செய்யவொட்டாது, மோகம் - அப்படிப்பட்ட மோகனீய கர்மமானது, அடுதலுக்கு - ஜெயித்தற்கு, அரிய - மிகவுமருமையானது, வினைகட்கு - கர்மங்கட்கெல்லாம், அரசனும் - ராஜாவாகும், என்றான்-என்றும் சொன்னான், எ - று. (௬௫)

616\. மதியினு லார்வஞ் செற்ற மயக்கத்தான் வினைய வற்றாற்
கதிகளுட் கழுமக் காய மாறிலொன் றுமக் காயம்
பொதியவைம் பொறியை யாக்கும் பொறிகளாற் புலத்தை மேவி
விதியினும் வேட்கை செற்ற மீட்டுமச் சுழற்றி யாமே.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும்), மதியினால் - அஞ்ஞானத்தாலும், ஆர்வம் - ராகமும், செற்றம் - த்வேஷமுமாகிய, மயக்கத்தான் - மயக்கத்தினாலும், வினை - பாவகர்மங்கள், (ஆசிரவிக்கும்), அவற்றால் - அவற்றினால், கதிகளுள் - சதுர்கதிகளில், கழும - பொருந்த, காயமாறிலொன்றும் - ஷட்ஜீவனிகாயங்களிலொன்றுண்டாகும், அக்காயம் பொதிய - அப்படிப்பட்ட காயம் சேர, ஐம்பொறியையாக்கும் - பஞ்சேந்திரியங்களை யுண்டாக்கும், (அதாவது : மேற்கூறிய காயங்களில் ஒவ்வொன்றுக்கும் ஏற்பட்டபடி பஞ்சேந்திரியங்களில் ஒன்றோ இரண்டோ மூன்றோ நான்கோ ஐந்தோ உண்டு பண்ணும்), பொறிகளால் - அவ்விந்திரியங்களால், புலத்தை - விஷயங்களை, மேவி - பொருந்தி, விதியின் - கிரமத்தால், வேட்கை - ராகமும், செற்றம்-த்வேஷமும், ஆம் - உண்டாகும், மீட்டும் - அதனால் மறுபடியும், அச்சுழற்றியாம் - முன் சொன்ன சதுர்கதி சுழற்சியாகும், எ - று. (௬௬)

617\. பரியட்ட மிதனை வெல்வார் பான்மையார் பான்மை யில்லார்
திரிவட்டம் போல நான்கு கதிகளுட் டிரிவ ரென்னக்
கிரியட்ட விறைமை தன்னைக் கிரணவே கன்கண் வைத்துப்
பொறியொக்கப் போகம் விட்டுப் புரவலன் முனிவனானான்.

(இ - ள்) பான்மையார் - பவ்வியத்துவத்தை யடைந்தவர்கள், பரியட்டமிதனை - இந்தப் பரிவர்த்தனரூபத்தை, வெல்வார்-ஜெயித்து ஸ்வரூபத்தையடைவார்கள், பான்மையில்லார் - பவ்வியத்துவத்தை யடையாதவர்கள், திரிவட்டம் போல - வட்டமாகச் சுழலும் இயந்திரத்தைப்போல, நான்கு கதிகளுள் - சதுர்கதிகளில், திரிவர் - பிறந்து மிறந்தும் சுழலுவார்கள், என்ன - என்று சொல்ல, கிரி - அவ்விஜயார்த்த பர்வதத்தில், அட்ட - தன்னால் ஜெயித்து சம்பாதித்த

இறைமைதன்னை - ராஜ்யத்தை, கிரணவேகன்கண் வைத்து - தனது குமாரனாகிய கிரணவேகன் பேரில் ஸ்தாபித்து, பொறி - இந்திரியங்கள், ஒக்க - ஒருங்குபட்டு அடங்க, போகம் - போகோப போகங்களை, விட்டு - விலகி அல்லது நீக்கி (அதாவது விஷயஸம்யதனாகி), புரவலன் - சூர்யாவர்த்த மஹாராஜன், முனிவனானான் - முனியாயினான் (அதாவது: ஜினதீக்ஷையைக் கொண்டான்), எ - று. (௬எ)

618. எரிமுயங் கிலங்கும் வேலான் றுறந்தபி னிசோத ரையாஞ்
சுரிகுழற் கருங்கட் செவ்வாய்ச் சூரியா வருத்தன் றேவி
சிரிதரை யோடுஞ் சென்று குணவதி பாதஞ் சேர்ந்து
வரிசையிற் றுறந்து மஞ்ஞை மயிருகுத் திருந்த வொத்தார்.

(இ - ள்) (அவ்வாறு) எரி-அக்கினியில், முயங்கு - சேர்ந்து வடிவுபெற்று, இலங்கும் - விளங்கும், வேலான் - வேலாயுதத்தையுடைய, சூரியாவருத்தன் - சூர்யாவர்த்தனென்னுமரசன், துறந்தபின் - பரிக்கிரகங்களை விட்டு தீக்ஷித்த பின், இசோதரையாம் - யசோதரை யென்னும் பெயரையுடையவளாகிய, சுரி - சுருண்ட, குழல் - அளகத்தையும், கரும் - கருத்த, கண் - கண்களையும், செவ்வாய் - சிவந்த வாயையுமுடைய, தேவி - அவனுடைய பட்டத்தரசியானவள், சிரிதரையோடும் - தன் தாயாகிய ஸ்ரீதரையோடும், சென்று - போய், குணவதி - குணவதியென்னும் ஆர்யாங்கனையின், பாதம் - பாதத்தை, சேர்ந்து - அடைந்து, (பின்னர் அவ்விருவரும்), வரிசையில் - ஆகமோக்த வரிசையின்படி, துறந்து - தீக்ஷித்து, மஞ்ஞை - ஆண் மயிலானது, மயிர் - கலாபத்தை, உகுத்து - உதிர்த்து விட்டு, இருந்தது - இருந்ததை, ஒத்தார் - நிகர்த்தார்கள், எ - று.

இதனால், அவர்கள் தலைமயிரையும், ஆபரணாதி பரிக்கிரகங்களையும் பரிகரித்து விட்டார்கள் என்பது பெறப்படும். (௬அ)

619. அங்கபூ வாதி நூலு ளச்சியர்க் குரிய வோதி
வெங்கடுங் கானன் மேவல் வேறுபட் டுறைதல் விட்டுச்
சிங்கநற் பாய்ச்ச லாதி நோன்பொடு செறிந்து செம்பொன்
வங்கமே யனைய தோள்கள் வற்றிமா சடைய நோற்றார்.

(இ - ள்) (அவ்வாறாயபின்) அங்கபூவாதிநூலுள் - அங்காகமம் பூர்வாகமம் முதலிய பரமாகமங்களில், அச்சியர்க்கு - ஆரியாங்கனைகளுக்கு, உரிய - உரித்தானவைகளை, ஓதி - படித்து, வெம் - வெவ்விய, கடும் - கடுமையாகிய, கானல் மேவல் - காட்டில் ஆதபயோகம் தாங்குதல் முதலாகிய திரிகால யோகங்களையும், வேறுபட்டுறைதல் - தனியாகத் தங்குதலாகிய விவிக்தசய்யாஸன முதலானவைகளையும், விட்டு - தங்களுக்கில்லாமல் விட்டு விலகி, சிங்கநற்பாய்ச்சலாதி - ஸிம்ம

நிஷ்கிரீடித முதலாகிய, நோன்பொடு - மஹா நோன்புகளோடு, செறிந்து - சேர்ந்தனுஷ்டித்து, செம்பொன் - சிவந்தபொன்னலாகிய, வங்கமே யனைய - வழுதுணைக்குச் சமானமாகிய, தோள்கள் - கைகள், வற்றி - வாடி, மாசடைய - திரையும்படியாக, நோற்றார் - நோன்பை நோற்றார்கள், எ - று. (கூக)

620. தவக்கொடி யிரண்டு போலத் தாங்கருங் கொள்கை தாங்கி
யுவத்தல்காய் வின்றிச் சித்தத் தொத்துநின் றொழுகு நாளுள்
நவைக்கெலா மிடமிப் போக மென்றுநற் கிரண வேகன்
சிவத்திறை யுறையுஞ் சித்தா யதனநற் கூடஞ் சேர்ந்தான்.

(இ - ள்) (இவர்கள் இவ்வாறு நோன்பு நோற்று), தவக்கொடி யிரண்டு போல் - இரண்டு தபக்கொடிகள்போல, தாங்கரும் - தாங்குதற்கரிதாகிய, கொள்கை - சாரித்திரத்தை, தாங்கி - தரித்து, உவத்தல் - ஒரு விஷயத்தில் ஸந்தோஷித்தலும், காய்வின்றி - ஒரு விஷயத்தில் த்வேஷித்தலும் இல்லாமல், சித்தத்து - மனதில், ஒத்து நின்று - ஸமத்வீபாவத்தோடு கூடி நின்று, ஒழுகு நாளுள் - நடக்கின்ற காலத்தில், இப்போகம் - இந்த ஸம்சார போகமானது, நவைக்கெலாம் - துன்பங்கட்கெல்லாம், இடம் என்று - இருப்பிடமென்று, (தர்மத்தை யுணர்ந்து), நல் - நன்மையான, கிரணவேகன் - கிரணவேக மகாராஜன், சிவத்திறை - மோட்ச நாயகனாகிய ஜிநேஸ்வரப்பிரதிமை, உறையும் - தங்குதல் கொண்டிராநின்ற, சித்தாயதனம் - ஸித்தாயதனமென்னும் பெயரையுடைய, நல் - நன்மையாகிய, கூடம் - (விஜயார்த்த பர்வதத்தின் கீழ்த்திசையில் பிரதம சிகரத்திலுள்ள) அக்கிருத்திமசைத்யாலயத்தை, சேர்ந்தான் - அடைந்தான், எ - று.

621 ஐயைந்து காத மோங்கி யகன்றுநீண் டடியி னுச்சி
யையைந்திற் பாதி நீள மகலமாஞ் சிகரந் தன்னைப்
பையொன்றும் பரவை யல்குற் பட்டிகைச் சூட்டுப் போல
மையொன்றி மலர்ந்த கண்ணார் வனப்பிற்கா லிரண்டு சூழ்ந்த.

(இ - ள்) ஐயைந்து காதம் - (அந்த அக்கிருத்திமஜிநசைத்யாலயமானது) இருபத்தைந்து காதம், ஓங்கி - உன்னதமாகி, அடியின் - கீழிடத்தில், அகன்று - முன் சொன்ன இருபத்தைந்துகாத மகலமாகி, நீண்டு - அதே நீளமாகி, உச்சி - மேலே, (நடுவிடம்) ஐயைந்திற்பாதி - பன்னிரண்டரைக்காதம், நீளம் - நீளமும், அகலம் - அகலமும், ஆம் - ஆகின்ற, சிகரந்தன்னை - (அந்த அக்கிருத்திமஜிநசைத்யாலயமுள்ள) சிகரத்தினை, பை - சர்ப்பத்தினது படமுடியை, ஒன்றும் - ஒத்திராநின்ற, பரவை - விசாலித்த, அல்குல் - அல்குலினையுடையவரும், மை - அஞ்சனமானது, ஒன்றி - சேர்ந்து அழகு பொருந்தி, மலர்ந்த - அகன்ற, கண்ணார் - கண்களையுடையவருமாகிய மாதரது, பட்டிகைச்சூட்டுப்போல - மேகலாபரணம்

போல, வனப்பின் - அழகு பொருந்திய, காவிரண்டு - இரண்டு உத்யானங்கள், சூழ்ந்த - சூழ்ந்துள்ளன, எ - று. (கூக)

622. வேதிகைத் தோர ணங்கள் வேய்ந்தன காந்தி யார்ந்த
சேதிய மரங்க ணான்கு திசைதொறுஞ் செறிந்த காவு
ளாதியோ டந்த மில்லா வறிவரன் கோயி லெய்தும்
வீதிக டோறும் நான்கு கோபுரம் விளங்கு நின்றே.

(இ - ள்) வேதிகை - அந்த ஆலயத்திலுள்ள பீடத்தை, தோரணங்கள் - தோரணங்களானவை, வேய்ந்தன - சூழ்ந்துள்ளன, காந்தியார்ந்த - பிரகாசம் நிறைந்த, சேதியமரங்கள் - சைத்ய விருட்சங்கள், நான்குதிசை தொறும் - சதுர் மஹாதிக்குகடோறும், செறிந்த - சேர்ந்திராநின்றன, காவுள் - அந்தச் சைத்யாலத்தைச் சூழ்ந்திராநின்ற உத்யான வனத்தில், ஆதியோடந்தமில்லா - ஆதியந்தரஹிதமாகி அக்கிருத்திமமாகிய, அறிவரன் கோயில் - ஜினசைத்யாலயத்தை, எய்தும் - அடையும்படியான, நான்கு வீதிகள் தோறும் - சதுர் மஹா வீதிகள் தோறும், நான்கு கோபுரம் - (வீதிக்கொரு கோபுரமாக) நான்கு கோபுரங்கள், நின்று - நிலைபெற்று, விளங்கும் - பிரகாசிக்கும், எ - று.

நான்கு - இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. (கூஉ)

623. கனகநன் மணியுங் கம்பங் குமுதமும் பாலி காலு
மனநிறை பூத மாடும் பாவைகள் கூட சாலை
வினைவெல்லும் வேத மூன்றும் புராணமும் மெழுதி வெய்யோன்
றனதிடம் போன்று வென்றோர் தலைவன திருக்கை யாமே.

(இ - ள்) கனக நன்மணியும் - பொன்னும் நல்ல இரத்தினங்களும், கம்பம் குமுதமும் பாலிகாலும் - ஸ்தம்பங்களும் குமுதவீத்துகளும் பாலிகால்களுமாகிய போதிகைகளுமாம் (அதாவது: அவ்வாலயத்தில் ஸ்தம்பங்கள் பொன்னாலும் போதிகைகள் இரத்தினங்களாலும் செய்யப்பட்டனவாம்), கூடசாலை - கூடமென்னும் வெளிமண்டபம், மனம்நிறை - மனப்பூர்த்தியான, பூதம் - பவித்திரமாகிய, ஆடும் - ஆடுகின்ற, பாவைகள் - சித்திரப்பாவைகளின் வடிவங்கள் விளங்குவதாம் (அதாவது: அவ்வடிவங்கள் எழுதப்பட்டதாம்), வினை - கர்மங்களை, வெல்லும் - கெடுக்கும்படியான, வேதமூன்றும் - அங்கம் பூர்வம் பாஹ்யமென்னும் ஆகமத்திரயங்களும், எழுதி - எழுதப்பட்டு, வெய்யோன்றனது - சூர்யனுடைய, இடம்போன்று - ஸ்தானமாகிய விமானம்போல், வென்றோர் தலைவனது - ஸகல கர்மங்களையும் ஜயித்தவராகிய இறைவாது, இருக்கையாம்-ஸ்தானம் விளங்குவதாகும், எ - று. (கூ௩)

624. ஆயதங் காத மாகி யதனரை யகல மாகி
யாயதங் கால்கு றைந்த துயரமா யமல மாகி
நீதியா னின்ற கந்த குடிகளு நூற்றெட் டாகி
வாய்தலோர் மூன்று முன்பு மண்டபம் பலவு மாமே.

(இ - ள்) (இன்னும் அங்கே), ஆயதம் - நீளமானது, காதமாகி - ஒரு காதமாகி, அகலம் - அகலமானது, அதனரை - அந்த ஒரு காதத்தில் பாதியாகிய அரைக்காதம், ஆகி - ஆய், ஆயதம்-நீளத்தில், கால் குறைந்தது - கால் குறைந்தது போக முக்கால் காதம், உயரமாய் - உன்னதமாகி, அமலமாகி - நிர்மலகரமாகி, நீதியால் - வரிசைக்கிரமத்தால், நின்ற - வரிசையாக நிலைபெற்ற, கந்த குடிகளும் - கந்த குடி மண்டபங்களும், நூற்றெட்டாகி - நூற்றெட்டு என்கிற கணக்கையுடையனவாய், வாய்தலோர் மூன்று - மூன்று வாசல் வழிகளையுடையனவாய், முன்பு - எதிரில், மண்டபம் - மண்டபங்களானவை, பலவுமாகும்-அனேகமாகவும் விளங்கும், எ - று. (சுச)

வேறு.

625. தூபைசே தியமரம் வைச யந்தையாம்
மாபெருங் கொடிமலி மான தம்பநற்
கோபுரங் கொடிநிறை தோர ணமிவை
வாபிமா நந்தையை யெய்த வந்தவே.

(இ - ள்) தூபை - ஸ்தூபையும், சேதியமரம், சைத்யவிருட்சமும், வைசயந்தையாம் - வைஜயந்தை யென்னும் பெயரையுடையதாகிய, மாபெருங்கொடி - சிறந்த பெரிதாகிய இந்திரத்துவஜமும், மலி - அளவுபோல் நிறைந்திராநின்ற, மானதம்பம் - மானஸ்தம்பமும், நல் - நன்மையாகிய, கொடிநிறை - த்வஜங்களால் நிறைந்த, கோபுரம் - கோபுரமும், தோரணம் - அந்தக்கோபுர வாசல் வழிகளில் உள்ள தோரணமும், (ஆகிய), இவை - இவைகளெல்லாம், வாபி - தடாகமாகிய, மா - பெருமை பொருந்திய, (கீழ்த்திசையிலுள்ள), நந்தையை - நந்தையென்கிற தடாகத்தை, எய்த - அடையும்படி, வந்த - அக்கோயிலுண்ணின்று மொன்றின்பி 'ன்னொன்றாக வரிசையாய் வரப்பெற்றனவாம், எ - று. (சுரு)

626. ஆடுமா மிசைவந்த கிரண வேகனற்
கூடமா லுறைவிடங் குறுகு மெல்லையு
ணீடியா திழிந்துபின் னிலத்தின் மேல் வராக்
கோடுநீள் கோபுரங் கடந்து கும்பிடா.

(இ - ள்) (இவ்வாலயத்தின் சிறப்பு இங்ஙனமிருப்ப), ஆடும் - நர்த்தனஞ் செய்யும்படியான, மாமிசை - குதிரையின்மேலேறிக் கொண்டு, வந்த - வந்துள்ள,

கிரணவேகன் - கிரணவேக மகாராஜன், நல் - நன்மையாகிய, கூடம் - அச்சித் தாயதன கூடத்தில், மால் - ஸர்வஜ்ஞபிரதிமை, உறை - இராநின்ற, இடம் - ஆல யத்தை, குறுகும் எல்லையுள் - மேற்கூறியபடி அடைந்ததும், நீடியாது - காலம் நீட்டிக்காது சீக்கிரமாக, இழிந்து - இறங்கி, பின் - பின்பு, நிலத்தின்மேல் - பூமி யின்மேல், வரா - நடந்துவந்து, கோடு - சிகரங்களால், நீள் - நீண்ட, கோபுரம் - வாசற்கோபுரத்தை, கடந்து - தாண்டி, கும்பிடா - உள்நுழைந்து கையைக்குவித் துக் கும்பிட்டு, எ - று. (சுசு)

627. மலர்கையி னேந்திமா மேரு சூழ்வரு
மலர்கதி * ரருக்கனிற் கிரண வேகன்முன்
பலமுறை வலம்வரப் பரமன் கோயிலு
ணிலையுறு கதவங்க ணீங்கி நின்றவே.

(இ - ள்) (மேற்கூறியபடி கும்பிட்டபின்), மலர் - புஷ்பங்களை, கையின் - கையிலே, ஏந்தி - தரித்து, மாமேரு - மஹாமேரு பர்வதத்தை, சூழ்வரும் - சூழ்ந்து பிரதட்சிணமாகச் சுற்றி வருகின்ற, மலர் - விசாலித்த, கதிர் - கிரணங் களையுடைய, அருக்கனில் - சூர்யனைப்போல், கிரணவேகன்முன் - கிரணவேக மகாராஜன், பலமுறை - பலவாகிய மூன்று முறை, வலம் வர - பிரதக்ஷிணமாக வர, பரமன் - அருக பரமனுடைய, கோயிலுள் - ஆலயத்திற்குள், நிலையுறு - நிலை பெற்ற, கதவங்கள் - கபாடங்கள், நீங்கி - தாமே திறக்கப்பட்டு, நின்ற - நின் றன, எ - று. (சுஎ)

628. கெடுகலங் கண்டவந் நாய்கன் கேளிர்போற்
குடைமும்மை நீழனங் கோனைக் காண்டலு
மடிமிசை யலர்சொரிந் தாற்றி யன்பினாற்
படிமிசைக் களிறுபோற் பணிந்தெ ழுந்தனன்.

(இ - ள்) (அவ்வாறுகபாடங்கள் திறக்கப்பட்டதும்), கெடுகலம் - ஸமுத் திரத்தில் காணாமல் கெட்டுப்போன கப்பலை, கண்ட - மறுபடியும் பார்த்த, அந்நாய் கன் - அக்கப்பற்றலைவனாகிய செட்டியினது, கேளிர்போல் - சுற்றத்தாரைப் போல், குடைமும்மை - சத்திரத்திரயத்தின், நீழல் - நிழலையுடைய, நங்கோனை - நமது தலைவனாகிய ஜினனது பிரதிமையை, காண்டலும் - பார்த்த மாத்திரத்தில், (அக்கிரணவேகன்), அடிமிசை - பாதங்களில், அலர் - புஷ்பங்களை, சொரிந்து - தூவி, ஆற்றி - ஸ்துதித்து, அன்பினால் - பக்தியினால், படிமிசை - பூமியின் மேல், களிறுபோல் - யானையைப்போல், பணிந்து - படிந்து வணங்கி, எழுந் தனன் - எழுந்தான், எ - று. (சுஅ)

---

* அருக்கனிலென்பது பருதியில் என்றும் சில பிரதிகளில் காணப்படு கின்றது.

629. மணிநிலஞ் சந்தனங் கொண்டு மட்டியா
வணிபெற வருச்சனை விதியி னர்ச்சியா
விணையிலா விறைவனைப் பணிந்தெ ழுந்துபின்
றுணிபடு வினையவன் றுதிதொ டங்கினான்.

(இ - ள்) (அங்ஙனம் வணங்கி யெழுந்தபின்), மணி - அழகிய, நிலம் - பூமியை, சந்தனங்கொண்டு - சந்தனத்தைக்கொண்டு, மட்டியா - மெழுகி, (அதாவது: பூசி), அணிபெற - அழகுபெற, அருச்சனை - அஷ்ட விதார்ச்சனையை, விதியின் - கிரமத்தின்படி, அர்ச்சியா - அர்ச்சித்து, இணையிலா - உவமையில்லாத, இறைவனை - ஸர்வஜ்ஞனை, பணிந்து - வணங்கி, எழுந்து - எழுந்து நின்று, பின் - பிறகு, துணிபடு - கெடுக்கப்படும், வினையவன் - கர்மங்களையுடையவனாகிய அக்கிரணவேகன், துதி - ஸ்தோத்திரத்தைச் செய்வதற்கு, தொடங்கினான் - ஆரம்பித்தான், எ - று. (சுகூ)

வேறு.

630. அறிவி னாலறி யாத வறிவனீ
பொறியி னால்வரும் போகியு மல்லனீ
மறுவி லாத குணத்துனை வாழ்த்துமா
றறிகி லேனடி யேனற வேந்தனே.

(இ - ள்) (அவ்வாறு துதிக்கத்தொடங்கிய அவன், சர்வஜ்ஞனை நோக்கி), அறிவினால் - ஹேதுவாகிய மதி சுருதி அவதி மனப்பரியங்களிலும் விஷயமாகிய இந்த நான்கு ஞானங்களால், அறியாத - கிரகித்தறியாத, அறிவனீ - (ஸர்வத்திரவிய பரியாய, யுகபத் ஸகலப்பிரத்தியக்ஷமாகிய) கேவல ஞானத்தை யுடையவனீ, பொறியினால் - பஞ்சேந்திரியங்களினால், வரும் - வருகின்ற, போகியும் - போகத்தையுடையவனும், அல்லனீ - அல்லாதவனாகி ஸ்வாத்மோத்த அனந்த சுகத்தையுடையவனும் நீ, அறவேந்தனே - தர்மத்துக்கரசனாகிய சுவாமியே!, மறுவிலாத - களங்கமில்லாத, குணத்து - குணத்தையுடைய, உனை - உன்னை, வாழ்த்துமாறு - ஸ்துதிக்கும்படியான விதத்தை, அடியேன் - அடியேனாகிய யான், அறிகிலேன் - தெரியாதவனாயிரா நின்றேன், எ - று. (எ0)

631. ஒன்றி யாவையு முண்மையி னாலெனா
வொன்ற லாமையு முண்மையு மோதினை
யொன்றி டாதன போலுநின் வாய்மொழி
யொன்றி டாவினை யோடுழல் வாருளம்.

(இ - ள்) யாவையும் - ஜீவாதி திரவியங்கள் யாவையும், உண்மையினால் - அதனதன் தத்பாவமாகிய தன்மையினால் (அதாவது: திரவ்வியார்த்திக நிச்சய நயா

பேட்சையால்), ஒன்று - ஒன்றே, என - என்று, உண்மையும் - அதன் தத்துவமும், (அவ்விதம் திரவியார்த்திக நயத்தால் ஒன்றாகிய அப்பொருளே), ஒன்றலாமையும் - பரியாயார்த்திக வியவஹார நயாபேட்சையால்) ஒன்றல்லாமல் பலவாயிருக்கும் தன்மையும், ஓதினாய் - நீ சொல்லினாய், நின்வாய்மொழி - உனது திவ்யத்துவனியாகிய பரமாகம மொழிகள், ஒன்றிடா - ஆத்ம குணத்திற்கு வேறாகிப் பலவிதமாகிய, வினையோடு - கர்மங்களுடன், உழல்வார் - சுழல்பவராது, உளம் - மனதுக்கு, ஒன்றிடாதனபோலும் - பொருந்தாதவைகள்போலும், எ - று.

இவ்வாறு கூறியதனால் அவர்கள் நின்வாய் மொழியின் உண்மையை உணரமாட்டார்கள் என்பது பெறப்படும். (எக)

632. நித்த மாம்பொருள் நின்ற குணத்தென
நித்த முமல நின்ற குணத்தென
நித்த மொன்றி நிலாதநின் வாய்மொழி
நித்த மும்நினை வார்வினை நீங்குமே.

(இ - ள்) பொருள் - ஜீவாதிதிரவியங்கள், நின்ற குணத்து - நிச்சய குணமாகிய தத்பாவ ஸ்வபிரத்திய திரவியார்த்திக நயாபேட்சையால், நித்தமாம் - நித்யமாகும், என - என்றும், நின்ற - பரப்பிரத்தியத்தினால் கூடி நின்ற, குணத்து - வியவஹார பரியாயார்த்திக நயாபேட்சையால், நித்தமுமல - அனித்யஸ்வரூபமுமாகும், என - என்றும், (சொன்னாய்; இவ்வாறு சொல்லி), நித்தம் - நித்தியஸ்வரூபமாகிய தன்மையொன்றையே, ஒன்றி - பொருந்தி, நில்லாத - நிலை நில்லாமல் ஸ்யாதனித்ய ஸ்வரூபத்தையுமுடைய, நின் - உன்னுடைய, வாய்மொழி - பரமாகமமாகிய வசனத்தை, நித்தமும் - நாடோறும், நினைவார் - தியானிப்பவர்கள், வினை - கருமம், நீங்கும் - விலகும், எ - று. (எஉ)

633. அலகி லாவறி வின்கண் ணடங்கிவந்
துலகெ லாமுள் ளடங்கிய வுன்னையென்
மலமி லாத மனத்திடை வைத்தபின்
னலகி லாமைய தென்கண தாயதே.

(இ - ள்) அலகிலா - அளவில்லாத (அதாவது: அனந்த), அறிவின்கண் - கேவல ஞானத்தினிடமாக, அடங்கி வந்து - சேர்ந்து வந்து, உலகெலாம் - லோக முழுமையும், உள் - உனக்குள்ளே, அடங்கிய - அடங்கப்பட்ட (அதாவது: ஸர்வத் திரவிய பரியாயங்களை யுகபத் உணர்ந்த), உன்னை - உன்னை, என் - என்னுடைய, மலமிலாத - களங்கமில்லாத, மனத்திடை - மனதில், வைத்த பின் - ஸ்தாபித்த பிறகு, (அதாவது: உனது திரவியகுண பரியாயங்களை யறிந்த பின்), அலகிலா

மையது - முடிவில்லாத உனது ஸ்வரூபமானது, என்கணதாயது - என்னிடத்திலுமுண்டென் றுணரப்பெற்றது, எ - று. (எந)

634. வேரி யார்மலர் மீதுசெல் போதுபூ
மாரி யாய்மூ வுலோக மெடுக்குமா
வீரி யாவடி யேன்வினை தீரநல்
வாரி யாவரு ளாயற வேந்தனே.

(இ - ள்) அறவேந்தனே - தர்மசக்ரத் தலைவனாகிய ஸ்வாமியே!, வேரி - வாசனையால், ஆர் - நிறைந்த, மலர்மீது - தேவநிர்மித சோணம்புஜத்தின் மேல், செல்போது - நீ செல்கின்ற ஸ்ரீவிஹார காலத்தில், பூமாரியாய் - தேவர்களால் பொழியப்பட்ட புஷ்ப வருஷத்தை யுடையவனே !, மூவுலோகம் - இம்மூன்றுலகத்தையும், எடுக்கும் - ஞானத்தில் தரித்தேந்தும், மா - பெருமை பொருந்திய, வீரியா - அனந்த வீரியத்தை யுடையவனே !, நல் - நன்மையாகிய, ஆரியா-குணங்களால் நிறைந்தவனே !, அடியேன் - அடியேனுடைய, வினைதீர-கரும நீங்கும்படியாக, அருளாய் - அருளுவாயாக, எ - று.

இங்ஙன முரைத்ததால் உனது பக்தியே எனக்காகக்கடவ தென்பதும், அதனுல் வினை நீங்குமென்பதும் பெறப்படும். (எச)

635. மாரி மொக்குளின் மாய்ந்து பிறந்துமாற்
றூர ணத்திலென் ஹூழ்துயர் போயதன்
பார மாயவுன் பாத மடைந்தபின்
வாரி வீழ்ந்தவன் மால்கரை சேர்ந்தவாம்.

(இ - ள்) மாரி - மழையினுலாகிய, மொக்குளின் - நீர்க்குமிழிபோல, மாய்ந்து - நீங்கியும், பிறந்து - உண்டாகியும், மாற்று - ஸம்சாரமாகிய, *ஆரணத்தில் - காட்டில், (ஏற்பட்ட), என் - எனது, ஆழ்துயர் - ஆழ்ந்த துக்கமானது, அன்புஆர் - அன்பு பொருந்திய, அம்ஆய - அழகும் பரிசுத்தமுமுள்ள, உன் - உனது, பாதம் - பாதங்களை, அடைந்தபின் - அடைந்த பிறகு, போயது - நீங்கியது, (அவ்வாறு நீங்கியதானது), வாரி - சமுத்திரத்தில், வீழ்ந்தவன் - வீழ்ந்து மூழ்கியவன், மால் - பெரிதாகிய, கரை - அதன் கரையில், சேர்ந்த - அடைந்ததன்மை, ஆம் - ஆகும், எ - று. (எரு)

636. பொங்கு சாய்மரை பூமழை மண்டிலஞ்
சிங்க மேந்தணை பிண்டி செழுங்குடை

---

* ஆரண்யத்தில் என்பது ஆரணத்தில் என்று எதுகைபற்றிச் செய்யுளில் வந்தது.

யங்க பூவம தாமொழி துந்துபி
யெங்க ளுவினை தீர விளங்குமே.

(இ - ள்) பொங்கு - பெரிதாகிய, சாய்மரை - சாமரைகளும், பூமழை - புஷ்பவருஷமும், மண்டிலம் - பிரபாமண்டலமும், சிங்கமேந்தணை - சிம்மத்தினால் தாங்கப்பட்ட சிம்மாசனமும், பிண்டி - அசோக விருட்சமும், செழும் - செழுமை பொருந்திய, குடை - முக்குடையும், அங்கபூவமதாம் - அங்காகமம் பூர்வாகமம் ஆகிய, மொழி - திவ்வியத்துவனியும், துந்துபி - தேவ வாத்தியங்களும், (ஆகிய இந்த அஷ்ட மஹாப்ராதிஹார்யங்கள்), எங்கள் - (தரிசிக்கின்ற) எங்களுடைய, தீவினை - பாப வினைகள், தீர - நீங்கும்படியாக, விளங்கும்-நின்னிடத்தே விளங்குகின்றன, (என்று ஸ்தோத்திரம் பண்ணினான்), எ - று. (எசு)

வேறு.

637. விலங்கர சனையவக் காளை வீரனை
யிலங்கிநின் றடிபணிந் தேத்தி யிவ்வகை
வலங்கொண்டு முனியரிச் சந்தி ரன்னவ
னலங்கலஞ் சேவடி முடியிற் றீட்டினான்.

(இ - ள்) விலங்கரசனைய - மிருகராஜனாகிய சிம்மம்போன்ற பாராக்கிரமத்தை யுடைய, அக்காளை - அக்குமாரனாகிய கிரணவேக மகாராஜன், வீரனை - அனந்த வீரியத்தையுடைய ஸர்வஜ்ஞப் பிரதிமையை, இவ்வகை - இந்தப்பிரகாரம், இலங்கிநின்று - குணங்களால் விளங்கி நின்று, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, வலங்கொண்டு - மறுபடியும் ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து, முனியரிச்சந்திரனவன் - (ஆலயப் பிராகாரத்துள் னிராநின்ற) அரிச்சந்திரனென்னும் பெயருள்ள முனிவரனுடைய, சேவடி - அழகிய திருவடிகளை, அலங்கல் - மாலைகளையணிந்த, அம் - அழகிய, முடியில் - கிரீடத்தையுடைய சிரசில், தீட்டினான் - சேர்த்தி வணங்கினான், எ - று. (எஎ)

638. அருந்தவ னரசனே குசல மோவெனத்
திருந்திய குணத்தினா னிறைஞ்சிச் சீயவென்
றிருந்தவ னெழுந்துமாற் றகத்தும் வீட்டினும்
பொருந்துகா ரணமருள் போற்றி யென்றனன்.

(இ - ள்) (அவ்வாறு வணங்கிய மாத்திரத்தில்) அருந்தவன் - அரிதாகிய தபத்தையுடைய அம்முனிவன், (அக்கிரணவேகனை நோக்கி), அரசனே-ராஜனே !, சீயவென்று - ஜீயாத் என்று (அதாவது : ஜெயிக்கக் கடவாயென்று ஆசீர்வாதஞ் செய்து), குசலமோவென - க்ஷேமந்தானோ வென்று கேட்க, திருந்திய - திருத்த

மாகிய, (அதாவது : ஸம்ஸார விராகத்தை யடைந்த), குணத்தினன் - குணத்தை யுடைய கிரணவேகராஜன், இறைஞ்சி - மறுபடியும் அம் முனிவனை வணங்கி, இருந்தவன் - அவரனுமதிப்படி இருந்தவனாய், எழுந்து - பின்னர் எழுந்து நின்று, மாற்றகத்தும் - இந்தச் சம்சாரத்திலும், வீட்டினும் - மோக்ஷத்தும், பொருந்தும் - சேரும்படியான, காரணம் - ஸம்ஸார மோக்ஷ காரணங்களை, அருள் - உபதேசித் தருள்க, போற்றி - நினக்கு நமஸ்காரம், என்றனன் - என்று வினவினான், எ - று.

639. இந்துவி னெழிலோடொத் திலங்கு பாறைமே
னின்றபிண் டியினிழ லிருந்தச் சாரணன்
மன்றலர் முடியினாய் மாற்றம் வீட்டுமாஞ்
சென்றதத் துவந்தெளி யாமை தேறலால்.

(இ - ள்) (அவ்வாறு கேட்டபோது) நின்ற - அக்கோயிலுட் பிராகாரத்தில் நின்ற, பிண்டியினிழல் - அசோக விருக்ஷத்தினது நிழலில், இந்துவினெழிலோ டொத்து - சந்திர கிரணத்தின் அழகுக்கொப்பாகி, இலங்கும் - விளங்கும், பாறை மேல் - சந்திரகாந்தச் சிலையின்மேல், இருந்து - உட்கார்ந்திருந்து, அச்சாரணன் - சாரண பரமேஷ்டியாகிய வந்த அரிச்சந்திர முனிவன், (கிரணவேகனை நோக்கி), மன்றலர் - வாசனையோடு மலர்ந்த புஷ்பமாலையணிந்த, முடியினாய் - முடியை யுடைய வரசனே, சென்ற - இவ்வுலகத்தில் நடந்த, தத்துவம் - ஜீவாதி தத்துவங் களை, தெளியாமையால் - அறியாமையாகிய அஞ்ஞானத்தால் (ஏற்படும்) மித்தி யாத்துவத்தால், மாற்றம் - சம்சாரத்திலும், தேறலால் - தெளிவாகிய ஸம்மியக் துவ ஞானத்தால், வீட்டும் - மோக்ஷத்திலும், ஆம் - சேர்க்கை ஆகும், எ-று. (எக)

வேறு.

640. அத்தி நித்த மனித்த மவாச்சிய
மொத்த வேற்றுமை யொற்றுமை சூனியந்
தத்து வம்மிவை யொன்றிய தன்மையால்
மித்த மாறும்வே றேயென வேண்டினால்.

(இ - ள்) அத்தி - அஸ்திஸ்வரூபத்தையுடைய, நித்தம்-நித்யமும், அனித் தம் - அனித்யமும், அவாச்சியம் - அவாச்சியமும், ஒத்த - பொருந்திய, வேற் றுமை - பின்னமும், ஒற்றுமை - அபின்னமும், சூனியம் - சூன்யமுமாகிய, இவை- இவைகளாறும், ஒன்றிய தன்மையால் - ஒருபொருட் டன்மையால் (அதாவது : பொருந்திய தன்மையால், ஸ்யாத்நித்யம் ஸ்யாதநித்யமென்று பாவிப்பதால்), தத் துவம் - தத்துவமாகும், (அதாவது : ஸ்வரூபமாகும் அல்லது நிச்சயமாகும் யாதாத் மியமாகும்), ஆறும் - இவைகளாறையும், வேறேயென வேண்டினால் - வேறு வேறாக, (நித்தியமேவ தத்துவம், அனித்யமேவ தத்துவம், அவாச்யமேவ தத்து

வம், பின்னமேவ, அபின்னமேவ, சூன்யமேவ தத்துவமென்று) பாவித்தால், மித்தம் - மித்தியாத்துவமாகும், எ - று. (௬௰)

### நித்தியவாதம்

### வேறு.

641. நித்தமே தத்துவ மென்று நின்றவன்
சித்தம்வைத் தப்பொரு டெரிந்து செப்புமே
னித்தமே யென்றகோ ளழியு மன்றெனில்
தத்துவந் தான்பெறற் பாடு மில்லையே.

(இ - ள்) நித்தமே - ஸர்வதா நித்தியமே, தத்துவமென்று - தத்துவமாகு மென்று, நின்றவன் - சொல்லி அதன்வழியில் நின்றவன், சித்தம்வைத்து - மனம்வைத்து, அப்பொருள் - ஸர்வதா நித்யமாகிய வப்பொருளை, தெரிந்து - தெளிந்து, செப்புமேல் - சொல்லுமானல், நித்தமேயென்ற - ஸர்வதா நித்யமே யென்ற, கோள் - கொள்கையானது, அழியும் - கெடும், (அதாவது: ஸ்யாத னித்ய ஸ்வரூபமுமாகும்), அன்றெனில்-அப்படி ஒருவன் மனம்வைத்துச் சொல்ல வேண்டுவதில்லை நித்தியமேவதத்துவ மென்றால், தத்துவந்தான் - அவ்விதம் ஸர்வதா நித்தியமாகிய தத்துவமான வதனை, பெறற்பாடு - அதை ஒருவன் சொல்ல வேண்டியதும் அதனைக்கேட்டு அடைய வேண்டியதும், இல்லை - கிடையாது, எ - று. (௬௧)

642. நிலையின தன்மையே தோற்றங் கேடிவை
யிலையெனி லிறைவனு நூலு மில்லையால்
நிலையிலா மாற்றது நீக்க மின்மையிற்
றொலைவிலா வீட்டது தோற்ற மில்லையே.

(இ - ள்) நிலையின தன்மையே - (தத்துவம்) நித்தியஸ்வரூபமே, தோற்றம் - உத்பாதமும், கேடு - வியமுமாகிய, இவை - இந்த உத்பாதவ்யயங்களாகிய அநித்தியகுணங்கள், இலையெனில் - ஸர்வதா இல்லையென்றும் நித்தியமேவ தத்துவமென்றும் சொல்லுமிடத்தில், நிலையிலா-அநித்தியஸ்வரூபமாகிய, மாற்றது-ஸம்ஸாரத்தினது, நீக்கமின்மையில் - நீக்கம் முடிவு இல்லையாகையால், தொலைவிலா - நீக்கமில்லாத, வீட்டது - மோக்ஷத்தினது, தோற்றம் - தோற்றமானது, இல்லை - உண்டாவதில்லை, (ஆகையால்), இறைவனும்-(இவையறிந்து சொல்லும்) ஞானியாகிய ஆப்தனும், நூலும் - அவனால் தெரிவிக்கும்படியான பரமாகமும், இல்லை - இல்லாமற்போகும், எ - று.

ஸர்வதா நித்யமேவதத்துவமானல், ஆப்தேஷ்டம் ஆகமேஷ்டம் ஸம்சாரேஷ்டம் மோக்ஷேஷ்டங்கள் ஸம்பவியாவென்பது இதனால் பெறப்படும். (௬௨)

643. வினையினைச் செய்தலுந் துய்த்த லும்மிலை
நினைவது தோன்றிமீட் டுணர்வ தும்மிலை
யினையதான் வேண்டிய விட்ட மாறொடு
முனைதலுஞ் செயுநித்த முற்ற வேண்டினல்.

(இ - ள்) நித்தம் - நித்தியத்துவத்தை, முற்றவேண்டினல் - முழுதும் ஸர்வதா ஸாதித்தால், வினையினை - கருமங்களை, செய்தலும் - செய்வதும், துய்த்தலும் - அதன்பலனை யனுபவித்தலும், இலை - இல்லையாம், (அதாவது : இந்தக் கர்ம பலஸம்பந்தேஷ்டம் உண்டாகப் பட்டதில்லை), நினைவது - ஞானமானது, தோன்றி - உண்டாகி, மீட்டு - திரும்பவும், உணர்வதும் - அறிவதுமாகிய தன்மை, இலை - இல்லையாம் (அதாவது: இந்த ப்ரத்தியபிஜ்ஞானேஷ்டமும் உண்டாவதில்லை), இனையதான் - இத்தன்மையானவைகள், (வேதத்தில்), வேண்டிய - இச்சிக்கப்பட்ட, இட்டமாறொடும் - இந்த ஆறு இஷ்டங்களோடு, முனைதலும் செய்யும் - (ஸர்வதா நித்தியமானல்) மாறுபடலைச் செய்யும், (ஆகையால் ஸ்யாதனித்தியமே இஷ்டங்களுக்கு அவிருத்தம்), எ - று. (அ௩)

644. கடன்கொடுத் தான்கொளான் கொண்ட வன்கொடான்
மடந்தைதன் சிறுவனும் வளர்ச்சி யெய்திடான்
றொடங்கியே நூன்முடித் தோதி னுன்சொலான்
றிடம்பொரு ளெனிற்றிட்ட மூன்று மாறெய்தும்.

(இ - ள்) கடன் கொடுத்தான் - இவ்வுலகத்தில் கடன் கொடுத்தவன், கொளான் - கொடுத்தகடனை மறுபடியும் வாங்கமாட்டான், கொண்டவன் - வாங்கிக் கொண்டவன், கொடான் - மறுபடி கொடுக்கமாட்டான், (அதாவது : லோகப்ரவர்த்தி திருஷ்டத்திற்கு மாறுபடும்), மடந்தை தன் சிறுவனும் - ஸ்த்ரீயினல் பெறப்பட்ட அவளது பாலகனும், வளர்ச்சியெய்திடான் - வளரமாட்டான், (அதாவது : புருஷப்ரவர்த்தி திருஷ்டத்திற்கு மாறுபடும்), நூல் - ஒரு சாஸ்திரத்தை, தொடங்கி - சொல்லத்தொடங்கி, முடித்தோதினன் - முழுமையும் முடித்து ஓதியவனக, சொலான் - சொல்லமாட்டான், (அதாவது : சாஸ்திரப்ராவர்த்தி திருஷ்ட விருத்தம்), பொருள் - தத்துவமானது, திடமெனில் - ஸர்வதா நித்தியமென்று சொன்னல், திட்டமூன்றும் - இந்த திருஷ்டங்கள் மூன்றும், மாறெய்தும் - மாறுபாட்டை யடையும், (ஆகையால் திருஷ்ட விருத்தமாகா தத்துவம் ஒரு பிரகாரத்தால் நித்யமென்பதும் மற்றொரு பிரகாரத்தால் அனித்திய மென்பதுமாகிய ஸ்யாத்வாதம் பெறப்படும்), எ - று. (அச)

645. தன்சொல்மா றாகிமேற் கோள ழிந்ததன்
பின்பிறன் கோள்பிடித் திட்ட திட்டமா

மொன்பதி ஞேடுமா றெய்த வும்பொரு
ணின்றதே யென்பவர் நிற்க நிற்கவே.

(இ - ள்) தன்சொல் மாறுகி - ஸர்வதாநித்தியமே பேசுமிடத்தில் அப்படிப் பேசப்பட்டவனது வசனமே விரோதமாகி, மேற்கோள் - அதன்மேலெடுத்துச் சொல்லும் திருஷ்டாந்த பூதமாகிய மேற்கொள்கைகளும், அழிந்து - கெட்டு, அதன்பின் - அதன்பிறகு, பிறன்கோள்பிடித்து - பிறனுடைய கொள்கையைப் பிடித்துண்டாகிய, இட்டதிட்டமா மொன்பதிஞேடும் - இஷ்டம் ஆறு திருஷ்டம் மூன்றுமாகிய இந்த ஒன்பதிஞேடும், மாறெய்தவும் - மாறுபாட்டையடையவும், பொருள் - பொருளானது, நின்றதேயென்பவர் - ஸர்வதா நித்யமேவவென்று சொல்பவர், நிற்க நிற்க - அவ்வழியிலே தெளியாமல் நிற்கக்கடவர், எ - று. (அரு)

அநித்தியவாதம்

வேறு.

646. அனித்தமே தத்துவ மென்னு மாத்தனும்
நினைப்பும் வாசக மும்பொரு ளும்வினு
வனைத்து மக்கணத் தொட்டறக் கெட்டபின்
னெனைத்துமில் லென்பதெத் தைக்கொண் டெத்தையோ.

(இ - ள்) அனித்தமே - ஸர்வதா அனித்தியமேவ, தத்துவம் - தத்துவமாகும், என்னும் - என்று சொல்லும், ஆத்தனும் - முக்கியத்தை யுடையவனும், நினைப்பும் - அத்தத்துவத்தை நினைக்கின்ற ஆலோசனையாகிற தியானமும், வாசகமும் - அப்படி ஸர்வதா அனித்தியமாகிய அத்தத்துவத்தை மொழிதலும், பொருளும் - அப்படி ஸர்வதா அனித்தியமாகிய வஸ்துவும், வினு - அதை யொருவன் கேட்கின்றதுமாகிய, அனைத்தும் - இந்நான்கும், அக்கணத்து - அந்த சமயத்திலேயே (அதாவது : தத்க்ஷணத்தில்), ஒட்டற - பற்றற, (அதாவது: முழுதிலும்), கெட்டபின் - அத்தத்துவப் பிரகாரம் நாசமானபின், எனைத்தும் - யாதொன்றும், இல்லென்பது - ஸர்வதா இல்லையென்பது, எத்தைக்கொண்டு - எந்தவசனத்தைக் கொண்டு, எத்தை - எந்தப்பொருளை, எ - று.

ஸர்வதா அனித்தியம் சாதித்தால் ஒன்றுமில்லை யாகையால் அப்படிச் சாதிப்பதே பிரத்தியக்ஷ விரோதமென்பது இதன் தாத்பரியம். (அசு)

647. கணங்க ணந்தொறும் தோற்றமும் கேடுமாய்த்
தணந்த தேதத்து வம்நிலை யில்லெனிற்
கணங்க ணந்தொறுங் கெட்டவன் கேட்டினை
யுணர்ந்து சொல்லுமோ வில்லையோ வுண்டெனில்.

(இ - ள்) கணங் கணந் தோறும் - சமயஞ் சமயந்தோறும், தோற்றமும் - நூதனமாக வுண்டாவதும் (அதாவது: உத்பாதமும்,) கேடும் - (அப்படி உத்பாதமானது தத்சமயத்திலேயே) நாசத்தையடைவதும் (அதாவது : வியமும்), ஆய் - இப்படி உத்பாதவியமாகி, தணந்ததே - சேர்ந்ததே, தத்துவம் - ஸர்வதா அனித்திய தத்துவமாகும், நிலை - த்ரௌவ்யயுக்தமான நிலை, இல்லெனில் - ஸர்வதா இல்லையென்று சொன்னால், கணங்கணந்தோறும் - சமயஞ்சமயந்தோறும், கெட்டவன் - வ்யயமானவன், கேட்டினை - அப்படிச் சமயம் சமயம் நூதனமாகத்தோன்றி வியமான நாசத்தை, உணர்ந்து - ஒருவன் அறிந்து, சொல்லுமோ - சொல்லுவானோ?, இல்லையோ - சொல்லமாட்டானோ?, உண்டு - சொல்லப்பட்டவனுண்டு, எனில் - என்று சொல்லுமிடத்தில், எ - று. (அஎ)

648. அவிந்த வவ்விளக் கேயிரு ளைக்கெடச்
சிவந்து நின்றெரி யும்மெனச் செப்பினா
னிவந்து நின்றொரு வன்சொலு மென்றிடி
லுவந்த னித்தமு நித்தமு மொட்டினான்.

(இ - ள்) அவிந்த - அவிந்துபோகப்பட்ட, அவ்விளக்கே - அந்தத் தீபமே, இருளை - அந்தகாரத்தை, கெட - சிறிது நேரம் நீங்கும்படியாக, சிவந்து நின்று - சிவப்பாகியிருந்து, எரியும் - பிரகாசிக்கும், என - என்று, செப்பினான் - திருவஷ்டாங்கம் சொல்லப்பட்டவனாகி, நிவந்து நின்று, அதுபோலப் பிரகாசித்து நிமிர்ந்து நின்று, ஒருவன் - நாசத்தையடையப்பட்ட ஒருவன், சொலும் - சொல்லுவான், என்றிடில் - என்று சொன்னால், உவந்து - மகிழ்ந்து, அனித்தமும் - அனித்தியத்தையும், நித்தமும் - நித்தியத்தையும், ஒட்டினான் - சேர்ந்தவனாகும், எ - று.

649. மாய்ந்த வன்கண்ட வப்பொரு ளும்மனத்
தாய்ந்து தோன்று மவன்சொலு மென்றிடின்
மாய்ந்த னந்தர் மனத்தெப் பொருளையு
மாய்ந்து சொல்லுவ தாவது மாகுமே.

(இ - ள்) (அப்படி நின்று உணர்ந்து சொல்லும் ஒருவனில்லை) மாய்ந்தவன் - பிரதம ஸமயத்தில் நாசமாகப்பட்டவன், கண்ட - அறிந்த, அப்பொருளும் - அந்தப் பொருளையும், மனத்து - மனதில், தோன்றுமவன் - பின் சமயத்தில் உண்டாபவன், ஆய்ந்து - ஆராய்ந்து, சொலும் - சொல்லுவான், என்றிடில் - என்றால், மாய்ந்த - அதற்குமுன் அனாதியாகவே நாசமாகப்பட்ட, அனந்தர் - அனந்தம் பேர்களுடைய, எப்பொருளையும் - எல்லாக்காரியங்களையும், மனத்து - மனதில், ஆய்ந்து - தத்சமய வர்த்தியாயவன் ஆராய்ந்து, சொல்லுவதாவது - சொல்லுகின்றதாவதும், ஆகும் - முடியும், (அப்படிக்குக்

கூடாமையால் பிரத்தியக்ஷ விரோதமும், அப்படிக் கூடுமானால், அது நித்திய ஸ்வரூபமுமாகும்) எ - று. (அக)

650. சித்த முன்னதும் பின்னதுந் தத்தமி
லத்தி யந்தம்வே றுகுறிற் சொன்னதா
மத்தி யந்தம்வே றல்லவே யாய்விடி
னித்த மொட்டினு னின்றதொன் றுண்மையால்.

(இ - ள்) சித்தம் - மனவெண்ணம், முன்னதும் - முன் சமயத்து நின்றவனதும், பின்னதும் - மறுஸமயத்தில் தோன்றியவனதும், தத்தமில் - தங்கள் தங்களுக்குள், அத்தியந்தம் - மிகவும், வேறுகுறில் - ஒன்றுக்கொன்று வித்தியாசமானால், சொன்னது - ஸர்வதா அநித்தியமென்று சொன்னது, ஆம் - ஆகும், அத்தியந்தம் - மிகவும், வேறல்லவேயாய்விடின் - வித்தியாசப்படாதனவாய் ஒத்திருந்தால், நின்ற - ஸ்திரமாகநின்றது, ஒன்று - த்ரௌவ்யயுக்தமாகிய ஒன்று, உண்மையால் - இருக்கின்றபடியால், நித்தம் - நித்தியத்தையும், ஒட்டினன் - (அவன்) பொருந்தினவனாகும், எ - று. (கூo)

651. அறிவ னுங்கிரண் டும்மறி யும்மெனி
லறிவ னுமவன் யார்கொ லறிந்திலோம்
நெறியி னுற்றவஞ் செய்துநின் றோடியா
னறிவ னென்றிடி லாங்கவ னில்லையே.

(இ - ள) அறிவன் - ஞானியானவன், ஆங்கிரண்டும் - அப்படி முன் ஸமயம் பின் ஸமயமாகிய விரண்டின் காரியத்தையும், அறியும் - தெரிந்துகொள்ளும், எனில் - என்று சொல்லுமிடத்தில், அறிவனுமவன் - அப்படி ஞானியாகப்பட்டவன், (க்ஷணவிநாச ஸ்வரூபமாகிய ஸர்வதா அனித்தியதத்துவத்தில்), யார்கொல் - எவரோ?, அறிந்திலோம் - தெரிந்திலோம், நெறியினால், கிரமத்தினால், தவஞ்செய்து - தபத்தை செய்து, நின்று - த்ரௌவ்யயுக்தமாகி நின்று, ஓடியான் - நீடித்திருப்பவன், அறிவன் - ஞானியாகும், என்றிடில் - என்று சொல்லுமிடத்தில், ஆங்கவன் - அப்படி நித்தியமாயுள்ளவன், இல்லை - அத்தத்துவத்தில் இல்லை, எ - று. (கூக)

652. வாரி யோட்டில் வலாகரித் திட்டபோற்
பார மீதைகள் பத்தும் பயின்றவத்
தார்வத் தோடு மறித்தறி வெய்திடி
னோரி னித்தமு மொட்டின னுகுமே.

(இ - ள்) வாரியோட்டில் - நீர் ஓடையில், வலாகு - கொக்கானது, அரித்திட்டதேபோல் - தனக்குபயோக மில்லாவஸ்துவை நீக்கித் தனக்கு வேண்டும் வஸ்துவைக் கிரகிப்பதுபோல், (புத்தனாகற்பாலோன், போதிசத்துவன் சம்சாரத் துணின்று) பாரமீதைகள் பத்தும் - பத்துவிதமான பாரமீதைகள் என்னும் குண நிறைவுகளை, பயின்று - அப்பியசித்துப் பெற்று, அவத்து - அவஸ்து அல்லது நிர்வாணமடைய வேண்டுமென்ற, ஆர்வத்தோடு - விருப்பதுடன், மறித்து - திரும்பவும் (தன் இஷ்டப்படியே, பாரமீதைகளையடைந்ததால் புத்தனாகப் பிறந்து) அறிவு - போதி அல்லது ஞானத்தை, எய்திடின் - பெறுவானாகில், நேரில் - (அந்தப் புருஷன்) நேராகவே, நித்தமும் - நித்தியத்தையும், ஒட்டினனுகுமே - பொருந்தினவனாகும், எ - று.

ஒரே புருஷன் போதி சத்துவனாய்ப் பாரமிதைகள் என்று சொல்லப்படும் பத்துக் குணங்களைப் பூர்த்திசெய்து, மறுஜன்மத்தில் புத்தனாகப்பிறந்து போதியடைந்து நிர்வாணம் பெறுவானாகில் க்ஷணிகவாதத்தின்படி அநித்தியனாயிராமல் நித்தியனாகவும் ஆகிறான்.

பாரமிதை பத்தாவன: தானம், சீலம், க்ஷமை, வீரியம், தியானம், பிரஜ்ஞை, உபாயம், தயை, பலம், ஞானம். இவைகள் பெருகி நிறைதல் பாரமிதையாம்.

"கபிலையம்பதியி
னளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்துப்
போதி மூலம் பொருந்திவந் தருளித்
தீதறு நால்வகை வாய்மையுமந் தெரிந்து"

என்று மணிமேகலை வஞ்சிமாநகர்புக்க காதையிலும், (41—48).

"ஆதி முதல்வன் போதி மூலத்து
நாத னுவோ னளிநீர்ப் பரப்பி
னெவ்வமுற் றுன்றன தெவ்வந் தீரெனப்
பௌவத் தெடுத்துப் பாரமிதை முற்றவு
மறவா சாளவு மறவாழி யுருட்டவும்
பிறவிதோ றுதவும் பெற்றிய ளென்றே"

என்று - மணிமேகலை - தவத்திறம்பூண்டு தருமங்கேட்ட காதை (23-28)—யிலும் கூறியுள்ளதைக் காண்க.

சுமேதா (போதிசத்துவனும்) தீபங்கர புத்தனும் என்ற - ஜாதக கதையில் சுமேதா - 'நான் புத்தனாக வேண்டில் என்ன செய்ய வேண்டும்' என்று யோசித்து தானம் முதலாகிய பத்துப் பாரமிதைகளை ஒவ்வொன்றாகப் பூர்ணமாகப்

பெற்று மறு ஜன்மத்தில் கௌதமபுத்தனாக அவதரித்தான் - என்று சொல்லி யிருப்பதையும் காண்க.

(Buddhist Birth Stories or Jataka Tales translated by T. W. Rhys Davids.)

வலாகம் என்பது அம் - விகுதி குறைந்து வலாகு என நின்றது. (கூஉ)

653. வெந்த ஓட்டில் விழுந்தவத் துள்ளிபோல்
வந்த பாவனை யோடவன் மாயுமேல்
மைந்து போனவ னல்லன்மற் றார்கொலோ
பந்த மொன்றிலாப் பாழ்முத்தி நாதனே.

(இ - ள்) வெந்த ஓட்டில் - அக்கினியில் காய்ந்த ஓட்டில், விழுந்த - வீழ்ந்ததாகிய, அத்துள்ளிபோல் - அந்த நீர்த் துளியைப்போல், வந்த - வரப் பட்ட (அல்லது) உண்டாகிய, பாவனையோடு - பரிணாமத்தோடு, அவன் - அவ் வொருவன், மாயுமேல் - அக்ஷணத்தில் நாசமாவானேயானால், மைந்துபோனவன் - ஒரு வலி பெற்றாகிலும் அல்லது மயக்கமுற்றாகிலும் மாய்ந்து போனவன், அல் லன் - அல்லாதவனாகும், (ஆகையினால்), பந்தமொன்றில்லா - யாதொரு பந்தமு மில்லாத, பாழ் - பாழாகிய, முத்தி - அவர்களால் சொல்லும் நிர்வாணத்திற்கு, நாதன் - உரித்தானவன், யார்கொல் - எவனோ?, எ - று.

வலி - அழகென்றேனும், அல்லது தெளிவென்றேனும் பொருள்தரும். யார்கொல் என்பது - யார் கொலாம் என்றும் சில பிரதிகளில் பாட பேதமாகக் காணப்படும். (கூரு)

654. ஆத லாலனித் தம்பிடித் தாத்தனும்
போதி யானையும் போக வெறிந்தவ
ரோது நூல்களு மொட்டறக் கெட்டபின்
யாதி னானிலை யாமை நிறுத்துவார்.

(இ - ள்) ஆதலால் - ஆகையினால், (இந்த விரோதமெல்லாம் அறியாமல்), அனித்தம் பிடித்து - ஸர்வதாவனித்தியமே தத்துவமென்றுறுதியாகப் பிடித்து, ஆத்தனும் - முக்கியனாகிய, போதியானையும் - புத்தனாகிய விறைவனையும், போக - அனித்தியமாகும்படி, எறிந்து - கெடுத்து, அவர் - அந்த க்ஷணவிநாசம் தத்துவ மென்று சொல்பவர்களால், ஓதும் - சொல்லப்பட்ட, நூல்களும் - சாஸ்திரங்களும், ஒட்டற - ஒட்டுதலின்றி முழுதும், கெட்டபின் - ஸர்வதா அனித்தியமானதால் கெட்ட பிறகு, யாதினால் - எதனால், நிலையாமை - அனித்தியத்தை, நிறுத்து வார் - ஸ்தாபிப்பார்கள், எ - று. (கூசு)

வேறு.

655. நவ்வெனச் சொல்லினன் சொன்ன வந்நவு
மவ்வவக் கணத்திலே யழிந்து போதலால்
நவ்வையே நவ்வையே நவிற்றி னல்லது
மொவ்வினை யனித்தமென பார்கள் மூட்டிடார்.

(இ - ள்) நவ்வெனச் சொல்லினன் - ஸர்வதா அனித்தியமென்றே தத்துவத்தை ஸாதிப்பவர்கள் நமோவென்று சொல்லவேண்டி அதன் பிரதம அக்ஷரமாகிய நகரத்தை நவ்வென்று சொன்னவனும், சொன்ன - அவனாற் சொல்லப்பட்ட, அந்நவும் - அந்த நகரமும், அவ்வக்கணத்திலே - அந்தந்த ஸமயத்திலே, அழிந்துபோதலால் - ஸர்வதா அனித்தியத்தால் நாசமாவதால், அனித்தியமென்பார்கள் - அனித்தியமென்னும் அந்த அனித்தியவாதிகள், நவ்வையே நவ்வையே - நகரத்தையே நகரத்தையே, நவிற்றினல்லது - சொல்வதேயல்லாமல், மொவ்வினை - மோவென்னுமக்ஷரத்தை, மூட்டிட்டார் - சொல்ல முடியாதவர்களாக அத்தத்துவத்தாலாகா நின்றார்கள், எ - று. (கூரு)

656. வாசத்தைப் போல்வரு மென்னின் மாமலர்
நாசத்தைச் செலாதமுன் னண்ணு மொட்டிடை
வாசத்தை வைத்துப்பின் மாயு மாறுபோல்
பேசிற்றுண் டோபிறி தோடு நிற்கவே.

(இ - ள்) வாசத்தைப்போல் - வாசனைபோல, (அதாவது: மலர்ந்த புஷ்பமானது மாய்ந்துபோனால் அந்தப் புஷ்பத்தினது வாசனையானது மறுபடி உண்டாகி மலர்கின்ற புஷ்பத்திற்கு வருவதுபோல்), வரும் - முதற் சமயத்தில் நகரத்தைச் சொன்னவன் மாய்ந்துபோக அந்த வாசனையறிந்து மோகாரத்தைச் சொல்பவன் பிறக்கும், என்னின் - என்றால், மாமலர் - மலர்ந்த புஷ்பமானது, நாசத்தைச் செலாத முன் - நாசமடையாததற்கு முன்னமே, நண்ணும் - பக்கத்தில் சேர்ந்திரா நின்ற, மொட்டிடை - மொக்கினிடத்தில், வாசத்தை - தனது வாசனையைப்போன்ற வாசனையை, வைத்து - ஸ்தாபித்து, பின் - பிறகு, மாயுமாறுபோல் - நாசமடைவதுபோல், பிறிதோடு - நூதனமாகப் பிறக்கும் வேறொருவனோடு, பேசிற்று - பேசப்பட்டது, உண்டோ - உண்டாகுமோ?, நிற்க - இது நிற்க, எ - று. (கூசு)

657. முற்கணத் துரைத்தவன் முடிந்த போழ்தினிற்
பிற்கணத் துரைப்பவன் பிறக்கு மென்றலான்
முற்கணத் தவனொடு பிற்க ணத்தவ
னிற்குமென் றுரைத்திடி னித்த மாகுமே.

(இ - ள்) முற்கணத்து - அதீத ஸமயத்தில், உரைத்தவன் - சொன்னவன், முடிந்த போழ்தினில் - நாசமடைந்த போதே, பிற்கணத்து - பவிஷ்யத் ஸமயத்தில், உரைப்பவன் - அதறிந்து சொல்பவன், பிறக்கும் - பிறப்பான், என்றலால் - என்று சொல்வதினால், முற்கணத்தவனொடு - ப்ரதமஸமயவர்த்தியோடு, பிற்கணத்தவன் - உத்தரஸமயவர்த்தியாபவன், நிற்குமென்று - நிற்பானென்று, உரைத்திடில் - சொல்லுமிடத்தில், நித்தமாகும் - நித்தியமுமாகப்பட்டதாகா நின்றது, எ - று. (கஎ)

658. நல்வினைச் செயநினைத் தான்செ யான்பினை
யவ்வினைச் செய்தவ னதன்ப யன்றுவா
னிவ்வகை யனித்தமே யென்று ரைப்பவர்
செய்யுநல் வினைகளும் பயனு மில்லையே.

(இ - ள்) நல்வினை - நன்மையாகிய புண்ணிய வினையை, செய - முன் ஸமயத்தில் செய்ய வேண்டுமென்று, நினைத்தான் - நினைத்தவன், செயான் - அந்நல்வினையைச் செய்யமாட்டான், பினை - பின் ஸமயத்தில், அவ்வினை - அப்புண்ணிய வினையை, செய்தவன் - இயற்றியவன், அதன் பயன் - அப்புண்ணிய வினையின் பலனை, துவான் - அனுபவிக்கமாட்டான், இவ்வகை - இந்தப் பிரகாரமாக, அனித்தமே யென்று - ஸர்வதா அனித்தியமே தத்துவமாகுமென்று, உரைப்பவர் - சொல்பவர்கள், செயும் - செய்கின்ற, நல்வினைகளும் - புண்ணிய வினைகளும், பயனுமில்லை-அவைகளின் பலனுமில்லாமல் போகும், எ - று. (கஅ)

659. மறித்தது விதுவென வுணரு மவ்வுணர்
வறக்கெடு மனித்தத்து ளில்லை யாமெனி
லறக்கெட வேற்றின விளக்கை யஃதெனு
மறித்துணர் வுணர்வதும் மயக்க மாகுமே.

(இ - ள்) மறித்து - திரும்பி, அது - அந்த வஸ்துவானது, இதுவென - இதுதான் என்று, உணரும் - அறியும்படியாகிய, அவ்வுணர்வு - அந்தப் பிரத்தியபிஜ்ஞானமானது, அறக்கெடும் - ஸர்வதா நாசமடைகின்ற, அனித்தத்துள் - அனித்திய தத்துவத்தில், இல்லையாம் - இல்லாததாகும், எனில் - என்றால், அறக்கெட - இருளானது பற்றற நீங்கும்படியாக, ஏற்றின - ஏற்றப்பட்ட, விளக்கை - தீபத்தை, அஃதெனும் - அதுதானென்கின்ற, உணர்வு - அறிவால், மறித்து - திரும்பவும், உணர்வதும் - அறிகின்றதும், மயக்கமாகும் - பிராந்தமாகும், எ - று.

660. தவ்வியந் தேசமே கால பாவமென்
றவ்வியம் பிடித்தந்த விளக்கி தென்றெழு

மெவ்வகை யுங்கெடி னிதுவ தென்றெழு
மவ்வது மிதுவின்பே ரறிவு மில்லையே.

(இ - ள்) தவ்வியம் - திரவியமும், தேசம் - க்ஷேத்திரமும், காலம் - காலமும், பாவமென்று - அத்திரவ்யத்தினுடைய பாவமும் என்று, (இந்நான்கினால்), அவ்வியம் - அழியாத தன்மையாகிய த்ரௌவ்ய யுக்த தன்மையை, பிடித்து - சேர்ந்து, அந்த விளக்கு - அந்தத் தீபமானது, இதென்று - இதுதானாகுமென்று, எழும் - உண்டாகின்ற, (பிரத்தியபிஜ்ஞானமானது), எவ்வகையும் - ஸர்வதா, கெடின் - நாசமடைந்து அனித்தியமானால், இது - இப்பொருளானது, அது வென்று - அதுதானென்று, எழும் - உண்டாகின்ற, அவ்வதும் - அந்த நிச்சய ஸ்வரூபமும், இதுவின் பேர் - இப்பொருளினுடைய பெயரும், அறிவும் - (இவற்றின் தன்மைகளை அறியும் சக்தியாகிய), பிரத்தியபிஜ்ஞான ஸ்வரூபமும், இல்லை - அத்தத்துவத்தாலில்லை, எ - று. (சுOO)

661. அன்றுநாம் பிரிந்தன மடிக டாமிவ
ரின்றுவந் தாரென வுரைத்தி யாவருஞ்
சென்றறிந் திறைஞ்சுவ தெவ்வ றிவினா
லொன்றநின் றிடாவகை யுரைக்கு நூலினர்.

(இ - ள்) ஒன்று நின்றிடாவகை - ஸர்வதாவனித்யஸ்வரூபத்தை, உரைக்கும் - சொல்லும், நூலினர் - சாஸ்திரத்தையுடையவர்கள், அன்று - அந்நாளில், நாம் - நாம், பிரிந்தனம் - இவரை விட்டு நீங்கினோம், அடிகள் தாம் - அந்தக் குருக்கள் தாம், இவர் - இவராகும், இன்று - இப்பொழுது, வந்தார் - இவ்விடத்தில் வந்தார்கள், என - என்று, உரைத்து - சொல்லி, யாவரும் - எவர்களும், சென்று - அவரிடம் சென்று, அறிந்து - அவர்தானென்று அறிந்து, இறைஞ்சுவது - வணங்குவதானது, எவ்வறிவினால் - எந்த ஞானத்தினால்?, எ - று. (சுOக)

வேறு.

662. முன்னைக் கணத்தி னிறந்தவனும் முடிந்த கணத்து நின்றவனும்
பின்னைக் கணத்துப் பிறப்பவனும் பிறிது பிறிதே யுறவில்லை
யென்னிற் றடுமாற் றதுவில்லை யிவற்றைக் கொண்டு விடுமொருவன்
றன்னைக் காணே மாதலினுந் தடுமாற் றவர்க்குத் தடுமாற்றே.

(இ - ள்) முன்னைக்கணத்தின் - பூதசமயத்தில், இறந்தவனும் - நாசமடைந்தவனும், முடிந்த கணத்து - வர்த்தமான சமயத்தில், நின்றவனும் - இருந்தவனும், பின்னைக்கணத்து - பவிஷ்யத் ஸமயத்தில், பிறப்பவனும் - பிறக்கின்றவனும், பிறிது பிறிதே - வேறு வேறே, உறவில்லை - ஒருவருக் கொருவர் பந்த

மில்லை, என்னில் - என்று சொல்லுமிடத்தில், தடுமாற்றது - ஸம்ஸாரமானது, இல்லை - உண்டாவதில்லை, இவற்றைக்கொண்டு - இந்த ஸம்சாரத்தில் பிறந்து, விடும் - கருமங்களை நீக்கிவிடும், ஒருவன் தன்னை - ஒரு நித்தியமான ஆத்மனை, காணோம் - அவ்வனித்ய தத்துவத்தில் காண்கிலோம், ஆகலின் - ஆகையினால், (இப்படி ஸர்வதாவநித்திய தத்துவஞ் சொல்லுவார்களாகி), தடுமாற்றவர்க்கு - இப்படித் தடுமாறப்பட்டவர்களுக்கு, தடுமாற்றே - இச்சம்ஸாரப்பிரமணமே, (அதாவது : மோக்ஷமில்லை), எ - று.

உம் - அசை. (கூ0உ)

663. தானஞ் சீலந் தவந்தருமந் தயாக்க டம்மாற் றடுமாற்றில்
வானின் மண்ணிற் பிறந்திறந்து வந்து வீடு பெறுமொருவன்
றானங் கிலனென் பாரவர்க்குத் தடுமாற் றறுத்து வீட்டினைப்பெற்
றானென் றால்சொற் பொருளின்றே லாரோ வீடு பெறுவாரே.

(இ - ள்) தடுமாற்றில் - இச்சம்ஸாரத்தில், தானம் - தானமும், சீலம் - சீலமும், தவம் - தபமும், தருமம் - தருமங்களும், தயாக்கள் தம்மால் - ஜீவதயவு முதலாகிய காருண்யாதிகளாகிய இவற்றால் (அதாவது: தானஞ் செய்வதாலும், சீலாச்சாரத்திற் பொருந்துவதாலும், தவஞ்செய்தலாலும், தர்மங்களிற் பொருந்துவதாலும், ஜீவதயை முதலியவற்றைச் செய்வதாலும்), வானில் - தேவலோகத்திலும், மண்ணில் - பூமியிலும், பிறந்து இறந்து - தோன்றியும் மறைந்தும், (அதாவது : தேவவுலகிற்றோன்றி அச்யுதபலனனுபவித்து நீங்கியும், மண்ணுலகில் மனுஷ்ய க்ஷேத்திரத்தில் தர்ம கண்டங்களில் உச்சைர்வம் சோத்பூத மனுஷ்யனு யவதரித்து நீங்கியும்), வந்து - தக்கபருவம் வந்து, வீடுபெறும் - கர்மக்ஷயஞ் செய்து முக்தியடையும், ஒருவன்தான் - ஒரு ஆத்மனானவன்தான், அங்கு - அனன்ம வாதமாகிய அந்த க்ஷணிகைகாந்த வாதவனித்திய தத்துவத்தில், இலன்- இல்லாதவனாகும், என்பார் - என்று க்ஷணவிநாசமும் அனன்மையும் சொல்லுபவ ராகிய, அவர்க்கு - அந்த க்ஷணிகவாதிகட்கு, தடுமாற்று - இச்சம்சாரத்தை, அறுத்து - ஒருவன் கெடுத்து, வீட்டினை - மோட்சத்தை, பெற்றான் - அடைந் தான், என்றால் - என்று சொன்னால், சொல் - அப்படிப்பட்ட வசனம், பொருள்- தன்னால் குறிக்கப்பட்ட அவ்விதமான நித்யப்பொருள், இன்றேல்-அத்தத்துவத்தி லில்லையானால், (அந்த வசனத்திற்குப் பொருள் இல்லையாகையால்), வீடுபெறுவார்- அத்தத்துவ வறிவால் மோட்சமடைவோர்கள், யார் - எவர்கள் ?, (ஒருவரு மடையார்), எ - று. (கூ0௩)

664. எல்லா வகையுங் கெட்டுள்ளத் தில்ல தந்தக் கணத்துதித்து
வல்லே வருமிச் சந்தானம் முடியுங் கணத்து வந்ததற்கோ

வெல்லா வகையு மின்றாய்வந் தெய்து மதற்கோ வீடென்றா
னில்லா தந்தத் ததுபோத லியல்பே நின்ற வதற்கென்னில்.

(இ - ள்) எல்லாவகையும் - சமஸ்தவிதத்திலும், (ஸகல விதாயங்களும்), கெட்டு - உள்ளஸ்கந்தம் வியமடைந்து, உள்ளத்து - மனதில், இல்லது - இல்லாததாகியது, அந்தக்கணத்து - அந்த ஸமயத்திலேயே, உதித்து - உத்பவித்து, வல்லே - சீக்கிரமாக, (அதாவது: ஸமயம் ஸமயந்தோறும்), வரும் - நூதனமாக வரப்பட்டதாகிய, இச்சந்தானம் - இவ்வரிசையானது, முடியுங்கணத்து - முடிவடையும் சமயத்தில், வந்ததற்கோ - வரப்பட்டதற்கோ (அல்லது), எல்லா வகையும் - ஸமஸ்த விதத்திலும், இன்றாய் - இச்சந்தான சம்பந்தமின்றிப் பிரதமத்திலிருந்து இல்லாதனவாகி, வந்தெய்துமதற்கோ - புதிதாய் வந்தடையப்பட்டதற்கோ, வீடு - மோக்ஷம், என்றால் - என்று கேட்குமிடத்தில், அந்தத்தது - சந்தான அந்தியத்திலுள்ளது, நில்லாது - யாதொன்றும் நிலையில்லாமல், போதல் - நீங்கிவிநாசமாவதே, இயல்பு - ஸ்வபாவமாகும், நின்ற - பிறகு நூதனமாக வந்து நின்ற, அதற்கு - அத்தத்துவத்திற்கு, என்னில் - என்று சொல்லுமிடத்தில், எ - று.

இதுவும் பின்வரும் கவியும் குளகம். (௬0௪)

665\. அந்தத் ததன்பின் வருங்கந்த மதற்கு வீடு தானுகில்
முந்தைக் கணங்கொ டவஞ்செய்து முடிந்தா ரென்ன பயன்பெற்றார்
சிந்திப் பில்லான் றவந்தன்னை யறியா னல்லோர் செறிவில்லான்
வந்தும் பரிந்தும் வீடெய்தும் பான்மைக் கிந்தப் பாழ்வீடே.

(இ - ள்) அந்தத்ததன் - சந்தானமுடிவின், பின் - பிறகு, வரும் - வரப்பட்ட, கந்தமதற்கு - கந்தத்திற்கு, வீடுதானுகில் - மோக்ஷமென்றால், முந்தைக்கணங்கொள் - அதீதஸமயங்களில் கைக்கொள்ளும், தவம் - தவம் முதலானவைகளை, செய்து - செய்து, முடிந்தார் - முடிந்தவர்கள், என்ன பயன் - என்ன பலத்தை, பெற்றார் - அடைந்தார்கள், தவந்தன்னை - தபமுதலானவைகளை, சிந்திப்பில்லான் - ஒன்றும் நினையாதவனும், அறியான் - அதை இன்னதென்று நினைத்துச் செய்தறியாதவனும், நல்லோர் செறிவில்லான் - நல்லோர் சேர்க்கையில்லாதவனும், வந்தும் - கடைசியாக வந்தும், பரிந்து - பந்தங்களை நீங்கி, வீடெய்தும் - மோட்சமடையும், பான்மைக்கு - பக்குவத்திற்கு, இந்தப் பாழ்வீடே - (ஒன்றுமில்லாது நாசமாதலே நிர்வாணமென்று சொல்லுகிற) இந்தப் பாழ்வீடே தகுதியாகும், எ - று.

ஸர்வதா அனித்தியமாதலால் யாதொரு பொருளும் திறம் இல்லை யென்பது இதனால் பெறப்படும். (௬0௫)

அனித்திய அநான்மவாதங்களைப் பொருந்திய பௌத்த தரிசனத்தில் மோக்ஷமானது வீடு - நிர்வாணம் - என இருவகையால் கூறப்பட்டுள்ளது. (1) பிறப்பு பிணி மூப்பு சாக்காடு இவைகளுக்கு முதற்காரணமாகிய அவித்தை முதலாகிய பன்னிரு பாகுபாடுடைய பவசந்தானம் மீண்டு பிறப்பின்றி முடிவதே நிர்வாண மென்றும்-(பவநிரோதோ நிப்பாணம்.) (2) மிகவும் மேலான சுவர்க்க சுகமும் தோன்றிக் கெடுவதாகையால் இதையும் மீறினதான மீட்சியில் பேரின்பமே - வீடு அல்லது நிர்வாணமென்றும் அம்மார்க்கத்தினர் சொல்லுவர். (Buddha and the 'Gospel Buddhism'—by Ananda Coomaraswamy—pp. 126 — 136; Buddhism by Mrs. Rhys Davids, p. 195.)

"பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்ற வகுத்த வியல்பீ ராறும்"

பவசந்ததி யெனப்படும். இவைகளுள் முன்னது பின்னதைக் காரண காரிய சம்பந்தமாய் உண்டு பண்ணிச் சம்சார சுழற்சியைப் பண்ணும். இச்சுழற்சிக்குக் கர்த்தாவாகிய ஆன்மா ஒருவனுமில்லை.

"பண்ணுந ரின்றிப் பண்ணப் படாதா
யானு மின்றி யென்னது மின்றி

வினையும் பயனும் பிறப்பும் வீடு
மினையன வெல்லாந் தானே யாகி."

என்று கூறியுள்ளதைக் காண்க. (மணிமேகலை - 30 - பவத்திற மறுகெனப்பாவை நோற்றகாதை.)

இக்காதையிலேயே - வீட்டினதியல்பு அடியில் வருமாறு கூறப்பட்டுள்ளது:

பேதைமை மீளச் செய்கை மீளுஞ்
செய்கை மீள வுணர்ச்சி மீளு
முணர்ச்சி மீள வருவுரு மீளு
மருவுரு மீள வாயின் மீளும்
வாயின் மீள வூறு மீளு
மூறு மீள நுகர்ச்சி மீளு
நுகர்ச்சி மீள வேட்கை மீளும்
வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமத் தொகுதி
மீளுங் கருமத் தொகுதி மீளத்

தோற்ற மீளுந் தோற்ற மீளப்
பிறப்பு மீளும் - - - - - -

(119—130.)

என்றதால் காரணம் கெடக் காரியம் கெட்டுச் சந்ததி யொழிதல் இயல்பென்பதும், இவ்வாறே காரணமில்லாதொழித்துக் காரியத்தை யழித்து பவவிநாசஞ் செய்வதே வீட்டியல்பு என்பதும் விளங்கும்.

666. இட்ட மாறும் விட்டுமேற்கோ ளழிந்து தன்சொன் மாறாகித்
திட்ட மூன்றும் மறுதலைப்பத் தேறா தனித்த மென்பான்றன்
சட்டர் கெட்டே போயிடுகத் தடுமாற் றறுத்து வீடெய்துஞ்
சிட்டர் சொற்க தஞ்சித்தே யனித்த மென்பார் திருவறமே.

(இ - ள்) இட்டமாறும் - ஆறு இஷ்டங்களும், விட்டு - விடுபட்டு விரோத மாகி, மேற்கோள் - அதன் மேற் சொல்லும் திருஷ்டாந்தமும், அழிந்து - கெட்டு, தன் சொல் - தனது வசனமும், மாறாகி - மாறுபாடாகி, திட்ட மூன்றும் - திருஷ்டாந்தங்கள் மூன்றும், மறுதலைப்ப - மாறுபாடாகவும், தேறாது - தெளியாமல், அனித்தமென்பான் - ஸர்வதா அனித்தியமே தத்துவமென்று சொல்பவன், தன் சட்டர் - தன்னுடைய மேன்மையானது, கெட்டே போயிடுக - அத்தத்துவப் படி விநாசத்தையே அடைக, தடுமாற்று - ஸம்சாரத்தை, அறுத்து - கெடுத்து, வீடெய்தும் - மோக்ஷமடையும், சிட்டர் - ஸ்ரேஷ்டர்களாகிய, கதஞ்சித்து - ஒரு பிரகாரத்தினால், அனித்த மென்பார் - பொருள் அனித்தியமென்று சொல்லபவரது, சொல் - வசனமானது, திரு - அழகிய, அறம் - தருமமாகும், எ - று. (கOகூ)

வேறு.

667. வயிரமொன் றுடையன் வைபத் துயிர்கண்மேன் மாலை மைந்தன்
செயிர்விடத் தயாமுன் னோரா னறக்கெடு மனித்தஞ் சொன்னா
னுயிரினை யில்லை யென்றா னூனினை யுண்க வென்றான்
*பயிரினற் கொலையுஞ் சொன்னான் முத்தியும் பாழென் றிட்டான்.

* கொல்லான் புலால் மறுக்க வேண்டியிருக்க 'ஊனினைத்தின்க' வென்றும், 'கொல்லாதிருங்கள்' என்றும் சொன்னதால் - கோறல் குற்றமென்பது - வசன மாத்திரமே; ஆகையால் "பயிரினற் கொலையும் சொன்னான்" என்றார் ஆசிரியர்.

உலகத்து ஜீவன்களின்மேல் அன்பு கூர்ந்து, தயவால் அவர்கள் துன்பம் நீக்கித் தருமவழி காட்டுவதற்கே புத்தன் உலகில் அவதரித்தான் என்று கொள்ளும் மதத்திற்கு மாறாக உயிரை யில்லையென்றும் ஊனைத்தின்கவென்றும் சொன்ன

(இ - ள்) மாயைமைந்தன் - மாயாதேவியின் புத்திரனாகிய புத்தன், வயிர மொன்றுடையன் - சலஞ் சாதித்த லொன்றையே மிகவுமுடையன், வையத்து - இவ்வுலகில், செயிர்விட - துன்பம் நீங்க, முன் - முன்னே, உயிர்கள் மேல் தயா - ஜீவன்களின்மேலுள்ள தயவை, ஓரான் - அறியான், அறக்கெடும் - ஸர்வதாநாச மாகும், அனித்தம் - அனித்தியத்தை (அனித்தியம்), சொன்னான் - சொல்லி னான், உயிரினை - ஜீவனை (அனன்மவாதத்தால்), இல்லையென்றான் - இல்லையென் றுஞ் சொன்னான், ஊனினை - மாமிசத்தை, உண்கவென்றான் - உண்ணுகவென் றுஞ் சொன்னான், பயிரினால் - (இவ்வாறு கூறிய) பொருளற்ற சொற்களால், கொலையும் - கொலையையும், சொன்னான் - சொல்லினான், முக்தியும் - மோட்ச மும், பாழென்றிட்டான் - ஸர்வதா ஒன்றுமில்லாமல் நாசமாதலென்றுஞ் சொன்னான், எ - று.

பயிர் - பொருளற்ற மிருக கூச்சல். (கoஎ)

அவாச்சியவாதம்.

668. அவாச்சிய மாதற் சொல்லாற் பொருளின்மே லறிவெ ழாமை
அவாச்சிய மென்று சொல்லார் பொருளின்மே லறிவெ ழுந்த
தவாச்சிய மென்று சொல்லாற் சொலப்படாப் பொருளு முண்டோ
வவாச்சிய பக்கன் றன்சொன் மாறுமாய்க் கதஞ்சித் தாய்த்தே.

(இ - ள்) அவாச்சியமாதல் - ஸர்வதா அவாச்சியமாவது, சொல்லால் - வசனத்தினால், பொருளின்மேல் - வஸ்துவின்மேல், அறிவு - ஞானமானது, எழாமை - உண்டாகாமையாகும், பொருளின்மேல் - வஸ்துக்களின்மேல், அறிவு - ஞானம், எழுந்தது - உண்டாகிச் சொல்லப்பட்டதை, அவாச்சியமென்று - அவாச் சியமாகுமென்று, சொல்லார் - சொல்லமாட்டார்கள், அவாச்சியமென்று - இது அவாச்சியமே யென்று, சொல்லால் - வசனத்தினால், சொலப்படா - சொல்ல முடியாத, பொருளும் - திரவியமும், உண்டோ - இருக்கின்றதோ ?, அவாச்சிய பக்கன் - அவாச்சியமேவதத்துவமென்று சொல்லுபவன், தன்சொல் - தன் னுடைய வசனமே, மாறுமாய் - அவனுக்கு விரோதமுமாகி, கதஞ்சித்தாய்த்து - கதஞ்சித் அவாச்சிய மென்றாயிற்று, எ - று. (கoஅ)

---

தால் " மாயைமைந்தன் வைரமொன்றுடையன் வையத்துயிர்கண்மேல் தயாமுன் னோரான் " - என்றுங் கூறினர் ஆசிரியர்.

பயிரினால் என்பதற்கு விலங்கு நீர்மைகொண்டு என்று பொருள் கூறுவோரு முளர். பயிர் - விலங்கொலி. 'ஊனினை உண்க', என்பதில் கொலைக் குறிப்புக் கரந்து புலனாவதாலும், கொலையைக் கரவாக அறிவுறுத்துவதும் மக்கட்டன்மை யிழந்த விலங்கு நீர்மையாகலானும் 'பயிரினால்' என்றார்.

669. மதுரமென் றுரைத்த சொல்லான் மதுரந்தான் வசிக்கப் பட்டு
மதுரத்தின் விகற்ப மெல்லாம் வைத்தறி வறிந்த வண்ணம்
மதுரச்சொற் சொல்ல மாட்டா தாதலா லவாச்சி யம்மாம்
மதுரந்தான் மதுரச் சொல்லாற் சொலப்படும் சொலப்ப டாதாம்.

(இ - ள்) மதுரமென்று - மாதுரியமென்று, உரைத்த - சொல்லப்பட்ட, சொல்லால் - வசனத்தால், மதுரந்தான் - மாதுரியந்தான், வசிக்கப்பட்டு - வசிகரமாகிக் கிரகிக்கப்பட்டு, மதுரத்தின் - அத்தித்திப்பினுடைய, விகற்பமெல்லாம் - வித்தியாசமெல்லாம், வைத்து - ரஸநேந்திரியத்தில் வைத்து, அறிந்த வண்ணம் - மனதறிந்த விதாயமாக, மதுரச்சொல் - மதுரமென்றசொல், (அந்தத் தித்திப்பினுடைய பேதவசனத்தால்), சொல்லமாட்டாதாதலால் - சொல்ல முடியாதாகையால், அவாச்சியம்மாம் - அவாச்சியமாகும், மதுரந்தான் - அந்த மாதுரியந்தான், மதுரச்சொல்லால் - மாதுரியமென்கிற சொல்லினால், சொலப்படும் - வசனிக்கவும் படும், சொலப்படாதாம் - தித்திப்பின் பேதப்படி சொல்ல முடியாததுமாகும், எ - று. (௬௬௯)

670. வையத்து வார்த்தைக் கெல்லாம் வாச்சிய மில்லை யாகில்
பொய்மைத்தா முரைக்கின் றார்க ளாவரிப் பூத லத்தார்
மெய்மைத்தா னூலுஞ் சொல்லா துணர்வும்வே றுதல் வேண்டும்
வையத்து வழக்கு நூலோ டிவனுமா றுயி னானே.

(இ - ள்) வையத்து - இந்த வுலகத்தில் உண்டான, வார்த்தைக்கெல்லாம்- வசனங்களுக்கெல்லாம், வாச்சியம் - வசனத்தால் குறிக்கப்பட்ட பொருள், இல்லையாகில் - இல்லாவிட்டால், இப்பூதலத்தார் - இப்பூமியிலுள்ளவர்கள், பொய்மைத்தாம் - அசத்தியத்தைத்தாம், உரைக்கின்றார்களாவர் - சொல்லப்பட்டவர்களாவார்கள், மெய்மைத்தான் - ஸத்தியத்தை, நூலும் - பரமாகமும், சொல்லாது - சொல்லமாட்டாது, உணர்வும் - அறிவும், வேறுதல் வேண்டும் - வேறாகிய தன்மையை யடையவேண்டும், வையத்து - இவ்வுலகத்தில், வழக்கு - வழங்குகின்ற தன்மையுடனும், நூலோடு - ஆகம சாஸ்திரத்தினுடனும், இவனும் - இந்த அவாச்சியவாதியும், மாறுயினான் - மாறுபாடாகவானான், (அதாவது: லோக வழக்கு, ஆகமம் இவைகளுக்கு விரோதமாயினான்), எ - று.

வாசகத்தால் குறிக்கப்படும் பொருளாகிய வாச்சியமின்றாகில், வாசகம் பொய்யோ மேய்யோவென்று நிச்சயிக்கப்படாது; பொய் மெய் என்பதற்கு வேறுபாடின்றாகும்; ஆகையால் அவ்விரண்டும் இல்லாதுபோம். (௬௭௦)

பின்னவாதம்.

671. குணகுணி வேறே யென்னிற் கூடிய முடிவிற் றாகு
முணர்வொடு காட்சி யாதி யுயிரின்வே றாளவு மாகுங்

குணகுணித் தன்மை யன்றிக் குழுவலும் பிரிவு மாகு
முணர்ந்திடா துயிரி னிற்கு மொரோவழிக் குணியு மன்றும்.

(இ - ள்) குணகுணி - குணமும் அந்தக் குணத்தையுடைய பொருளும், வேறே யென்னில் - ஸர்வதா பின்னமேவ என்று சொல்லுமிடத்தில், கூடியமுடிவிற்றாகும் - வேறாகவிருந்துபின் அவ்விரண்டு மொன்றாகச் சேர்ந்து முடியப் பட்டனவாகும், உணர்வொடு - ஞானத்தோடு, காட்சியாதி - தர்சனம் முதலாகிய ஆத்ம குணங்கள், உயிரின் வேறுளவுமாகும் - ஆத்மனை விட்டு வேறிடத்திலிருப் பனவுமாகும், குணம் - குணங்கள், குணித்தன்மையன்றி - அந்தப் பொருள்களின் ஸ்வரூபமல்லாமல், குழுவலும் - வேறேயிடத்திலும் கூடுவதும், பிரிவுமாகும் - பிறகு அதனின்று நீங்கிவிடுவதுமாகும், உயிரின் - ஆத்மனிடத்தில், உணர்ந்தி டாது - (ஞானாதி குணங்கள் அல்லாத) அசேதன குணமும், நிற்கும் - இருப்ப தாகும், ஓரோவழி - இவ்விதத்தால் பார்க்குமிடத்தில் ஒருவழி, குணியும் - குணத் தையுடையதாகிய யாதொரு பொருளும், அன்றும் - இல்லையென்றும் ஆகும், எ - று.

உண்ர்ந்திடாதது-என்பது, உணர்ந்திடாது எனத்தொகுத்தலாய் வந்தது. ()

672. மயக்கமே செற்ற மார்வ மாம்பந்த காரணங்க
ளுயிர்ப்பரி ணாம மின்றி யொழியப்போய்க கட்டும் வீடுங்
கயக்கமி னிலையிற் றாகிக் கயத்திடைக் கல்லுப் போலாம்
வியப்புறு தவத்தி னாலென் பெறுவது வேறென் பாரேல்.

(இ - ள்) வேறென்பாரேல் - குணகுணிகள் ஸர்வதா பின்னமேவ என்று சொல்வார்களேயானால், மயக்கம் - மோகமும், செற்றம் - த்வேஷமும், ஆர்வம் - ஆசையும், ஆம் - ஆகிய, பந்த காரணங்கள் - கர்ம பந்தத்துக்குக் காரணமான ராகத்வேஷ மோஹங்கள், உயிர் - ஆத்மனுடைய, பரிணாமமின்றி - பரிணதகுண மில்லாமல், ஒழிய - நீங்க, கட்டும் - பந்தமும், வீடும் - மோட்சமும், போய் - நீங்கி, கயக்கமில் - சோர்வில்லாத, நிலையிற்றாகி - நிலையினையுடையனவாய், கயத்திடை - குளத்திலிருக்கப்பட்ட, கல்லுப்போல் - கல்லைப்போல, ஆம் - ஆகும், (அப்படி யிருக்க), வியப்புறும் - விஸ்மய மடையும்படியான, தவத்தினால் - தபம் முதலிய வைகள் செய்தலால், என் பெறுவது - பந்தமோட்சங்களில்லையாகில் எதையடை வது (அடைவது ஒன்றுமில்லை), எ - று. (ககஉ)

673. உடம்பினு ளுயிரைப் போல குணகுணி யொன்றே டொன்று
விடும்படிக் கண்ட துண்டேல் வேறென விளம்ப லாகும்
சடம்புரிந் துரைவே றாகப் பொருளும்வே றாமென் பானேல்
மடந்தைபெண் மாதென் றாலும் மகளலாப் பொருளு முண்டோ.

(இ - ள்) உடம்பினுள் - சரீரத்துளாகிய, உயிரைப்போல் - ஆத்மனைப் போல, குணகுணி - குணமும் அந்தக் குணத்தையுடைய குணியும், ஒன்றோடொன்று - ஒன்றுடன் ஒன்று (கூடியிருந்து), விடும்படி - பிறகு ஒன்றை விட்டு ஒன்று நீங்கும்படியான தன்மையை, கண்டதுண்டேல்-கண்டிருந்தால், வேறெனகுணகுணிகள் பின்னமேவ என்று, விளம்பலாகும் - சொல்லலாகும், (அப்படியின்றிக் குணகுணிகள் தாதாத்மிய மாதலாலும், குணியைவிட்டுக் குணம் ப்ரதேசத்தால் வேறுபண்ண முடியாத தன்மை யுடையதாதலாலும், அதை ஸர்வதா பின்னமேவ என்று சொல்ல முடியாது; அப்படியிருக்க), சடம்புரிந்து - அஞ்ஞானத்தைச் சேர்ந்து, உரை வேறாக - குணகுணி யென்று வசன மாத்திரத்தால் வேறேயிருக்க, பொருளும் - அதற்குப் பொருளும், வேறாம் - வேறாகிப் பின்னமேயாகும், என்பானேல் - என்று சொல்லுவானேயானால், (ஒரு பெண்ணை), மடந்தை என்றாலும் - மடந்தையென்று சொன்னாலும், பெண் என்றாலும் - பெண்ணென்று சொன்னாலும், மாதென்றாலும் - மாது என்று சொன்னாலும், மகளலா - ஸ்த்ரீத்வமல்லாத, பொருளும் - வேறு வேறு வசனத்திற்கு வேறு வேறு பொருளும், உண்டோ - உண்டாயிருக்கின்றதோ? (இல்லை), எ - று.

இதனால் திரவ்ய குணங்கள் ஸர்வதா பின்னமல்ல வென்பது பெறப்படும். 'என்றலும்' என்பது மூன்றிடத்துங் கூட்டப்பட்டது. (ககங)

## அபின்னவாதம்.

674. எத்திறந் தாலு மொன்றே தத்துவ மென்று வேண்டும்
வித்தக நாவி னாரிற் குணகுணி விகற்பம் வேண்டார்
பித்தன்றன் னுணர்வு செய்கை சுகதுக்கம் பிறவு மொன்றாய்த்
தத்துவ மொழியு மாறும் வீடுந்தான் பாழ தாமே.

(இ - ள்) எத்திறத்தாலும் - எப்பிரகாரத்தினாலும், தத்துவம் - தத்துவ ஸ்வரூபமானது, ஒன்றே யென்று - ஸர்வதா ஒன்றேயாமென்று, வேண்டும் - இச்சித்தறிகின்ற, * வித்தகம் - ஞானத்தையுடைய, நாவினாரில் - வித்துவான்களுக்குள்ளே, குணம் - குணத்தையும், குணி - அக்குணத்தையுடைய திரவியத்தையும், விகற்பம் - முன் பின்னவாதி கூறியதுபோல் வேறுவேறாக, வேண்டார் - விரும்பார்கள் (அதாவது: எல்லா மொன்றேயென்று சாதிப்பர்), பித்தன் தன் - பைத்தியக்காரனுடைய, உணர்வு - ஞானமானது, (அதாவது: பித்தமயக்கத்தால் யதார்த்தமறியாமல் மயங்கிய அறிவானது), செய்கை - அஞ்ஞானக் கிருதத்தால், சுகதுக்கம் பிறவும் - ஸுகதுக்காதிக ளெல்லாம், ஒன்றாய் - ஒன்றாக, (அதாவது: ஸர்வதா ஒன்றாக), தத்துவம் - தத்துவத்தை, மொழியுமாறும் - சொல்கின்ற

* வித்தக நாவினார் :—அபின்னம் சாதிக்கும் வாக்குச் சாமர்த்திய முள்ளோர்; இஃதிழிவு குறித்துரைத்த சிறப்பு.

மார்க்கமும், வீடும்தான் - மோட்ச ஸ்வரூபமும், பாழாகும் - நாசமாகின்றன வாகும், எ - று. (கக௪)

675. ஒன்றென வுரைப்பான் கேட்பா னுணர்வு சொன் ஞன்கும் வேண்டா
வொன்றெனி லொன் றி மின்று முளவெனி லொன்று மன்று
மென்றிடா நான்கும் வேண்டிப் பிராந்தியென் றுரைக்கும்போழ்து
நின்றவை பிராந்தி யாக நிலைபெற்ற விகற்ப மெல்லாம்.

(இ - ள்) ஒன்றென - ஜீவாத்ம பரமாத்மாக்கள் ஸர்வதா ஒன்றாகி அபின்னமேவ தத்துவம் என்று, உரைப்பான் - சொல்பவனும், கேட்பான் - அப்படிச்சொல்லும் தத்துவத்தைக் கேட்பவனும், உணர்வு - அதை அறியும் ஞானமும், சொல் - அந்த ஸர்வதா அபின்னமென்கிற வசனமும், (ஆகிய) நான்கும் வேண்டா - நான்கையும் வெவ்வேறென்று சொல்ல வேண்டாத, ஒன்றெனில் - ஏகமாகி அபின்னமென்று சொல்லுமிடத்தில், ஒன்றும் - சொல்வது கேட்பது முதலாகியவைகளில் யாதொன்றும், இன்றாம் - அத்தத்துவப்படி வேறில்லாததாகும், (அது: பிரத்தியக்ஷ விரோதம்), உளவெனில் - சொல்வது கேட்பது நினைப்பது முதலியவைகள் உண்டென்றால், ஒன்றுமன்றாம் - ஸர்வதா அபின்னமே யென்னும் தத்துவம் ஒன்றும் இல்லாமற்போகும், என்றிடா - என்று யோசித்து, நான்கும் வேண்டி - சொல்பவன் கேட்பவன் அறிதல் அத்தத்துவம் என்னும் நான்கையுமிச்சித்து, (இந்த நாலும்), பிராந்தியென்று - பிராந்தமாகுமென்று, உரைக்கும் போழ்தில் - அத்தத்துவ வாதிகளால் சொல்லுமிடத்தில், நின்றவை - அப்படிச் சொலப்பட்டு நின்றவை, பிராந்தியாக - மயக்கமாக, விகற்பமெல்லாம் - சொல்வது கேட்பது முதலாகிய வேறு வேறு தன்மைகளெல்லாம், நிலைபெற்ற - நிலையையடைந்தனவாம், எ - று.

இதனால் கதஞ்சித் பின்னமும் பெறப்பட்டது என்பது தாத்பரியம். (கக௫)

676. ஒன்றென வுரைத்த மேற்கோ ளுடன்செல்லு மேது வோடு
நின்றதோ ரெடுத்துக் காட்டு நின்றதன் பொருண்மு டிக்கி
லொன்றென்ற மேற்கோள் தன்சொ லழிந்துமா றெய்தி யோடி
நின்றவப் பக்கஞ் சேர்ந்தா னெறிபிறி தின்மை யாலே.

(இ - ள்) ஒன்றென வுரைத்த - ஸர்வதா அபின்னமேயென்று சொல்லப்பட்ட, மேற்கோளுடன் - பிரதிஜ்ஞை அல்லது பக்கம் என்ற கொள்கையுடன், செல்லும் - செல்லும்படியான, ஓர் ஏதுவோடு - ஒருஹேது காரணத்துடன், நின்றது - நின்றதான, எடுத்துக்காட்டு - திருஷ்டாந்தம், நின்றதன் - அதன் பின் நின்ற உபநயம் ஆகிய இவைகளை ஆதாரமாகக் கொண்டு இவற்றினுடைய (அதாவது : இவற்றின் படி), பொருள் முடிக்கில் - (அந்த ஸர்வதா

அபின்னமாகிய) அர்த்தத்தை முடித்துத் தீர்மானித்தால், ஒன்றென்ற - ஒன்றென்று கூறிய (அதாவது : அபின்னமேயென்ற), மேற்கோள் - பிரதிஜ்ஞை மேற்கொள்கையும், அழிந்து - (ஏது திருஷ்டாந்தம் உபநயம் முதலிய வேறு வேருகிய அவயவங்கள் சாதித்ததுபற்றி) கெட்டு, தன்சொல் - அந்த அபின்ன வாதியின் வசனமே, மாறெய்தி - விரோதமாகி, ஓடி - சென்று, நெறி - வழி யானது, பிறிது - வேறொன்றும், இன்மையால் - இல்லாமல் ஏகாந்தமாய்த் தடை யாவதால், நின்ற - முன் பின்னமே தத்துவமென்று ஏகாந்தமாய் நின்ற, அப்பக் கம் - அந்தப் பரபக்ஷத்தை, சேர்ந்தான் - அடைந்தான், எ - று.

இங்ஙனம் கூறியதனுல் ஏகாந்த அபின்ன பக்ஷம் பக்ஷாபாஸமாகி, பரபக்கத் தோடு ஒன்ருய்விடும். பிரதிஜ்ஞை அல்லது பக்ஷம், ஹேது, திருஷ்டாந்தம், உபநயம், நிகமனம் - இவை அநுமான பிரமாணத்தின் அவயவங்கள். மேற்கோள் அல்லது பக்ஷம் - பின்வரும் ஆதாரத்தைக்கொண்டு சாதிக்கப்படும். எல்லா மொன்றே என்று வாதிப்போன் அனுமானப் பிரமாணத்தால் சாதிக்கவேண்டில் - ஒன்றென்ற கொள்கை யழிந்து (பலவான அவயவங்களுள்ள அனுமானத்தால்) பரபக்ஷம் சார்ந்து தன்பக்கம் குலையும். (கக௬)

677. ஒன்றென வுரைக்கு நூலை யோதுவா னென்றன் றென்று
நின்றநூ லோது வானே டொத்திடும் வீடு மஃதே
யன்றெனி லொன்றன் ருகு மாமெனி லளியற் ருன்தா
னென்றென வுரைத்துப் பெற்ற வூதிய மென்கொ லோவே.

(இ - ள்) ஒன்றென-ஜீவாதி எல்லாத்திரவியங்களும் பரமாத்மாவில் ஸர்வதா அபின்னமென்றும், (அதாவது : எல்லாம் ஒன்றே என்றும்), உரைக்கும் - சொல் கின்ற, நூலை - சாஸ்திரத்தை, ஓதுவான் - சொல்பவன், ஒன்றன்றென்று - முன் ஸர்வதா பின்னமே யென்று, நின்ற - இராநின்ற, நூல் - சாஸ்திரத்தை, ஓதுவா னேடு - சொல்பவனேடு, (இவனும் அவனும் அத்வைத மதப்படி ஒன்றேயாகை யால்), ஒத்திடும் - சமானமாவன், வீடும் - அவர்களால் கூறப்பட்ட மோக்ஷமும், அஃதே - அவ்வாறே ஒத்திடும், அன்றெனில் - அவ்வாறு அவ்விருவரும் ஒத்திடார் அவர்கள் சொல்லிய வீடும் ஒத்திடாது வேறு வேறே என்று சொல்லும்பக்ஷத்தில், ஒன்று - அத்துவைதவாதி கூறிய அபின்னமதம், அன்ருகும் - இல்லாதுபோம், ஆமெனில், அப்படி ஒன்றேயாமெனில், அளியற்ருன்தான் - இந்தத் தரித்திரன், (அதாவது : பொருளளிக்கும் திறமற்ரோன்), ஒன்றென - (பின்னவாதிக்கு மாருக அபின்னவாதம் பற்றி எல்லாம்) ஒன்றே என்று, உரைத்து - சொல்லி, பெற்ற - அடைந்த, ஊதியம் - இலாபம், என்கொல் - என்னவோ ? (ஒன்றுமில்லை), எ-று.

ஓ, வே - அசைகள். (கக௭)

40

678. ஒன்றென வுரைக்கும் மாரி தீவெயிற் கொதுங்கு மோடித்
தின்றிடா மண்ணைச் சோறு தேடியே பசித்து றங்கு
மென்றிடா விரண்டு ரைக்கு மென்னைப்போல் பார்க்கி லெல்லா
மொன்றென வுரைக்கும் வாயே யுன்மத்தச் சரித மாய்த்தே.

(இ - ள்) (மேற்கூறியபடி ஒன்றென வுரைப்பவன்) ஒன்றென - ஸர்வதா அபின்னமென்று, உரைக்கும் - சொல்வான், மாரிக்கு - மழைக்கும், தீக்கு - அக்கினிக்கும், வெயிற்கு - வெயிலுக்கும், ஓடி - நீங்கிச்சென்று, ஒதுங்கும் - மறைவான், (எல்லாம் ஒன்ருனல் ஏனப்படிச் செய்யவேண்டும்? வேண்டியதில்லை; அது பிரத்தியக்ஷ விரோதம்; அதுவல்லாமலும்), மண்ணை - மண்ணை, தின்றிடா - தின்னுமல், சோறு - சோற்றை, தேடி - சம்பாதித்து, (அது கிடைப்பது அரிதானல்), பசித்து - பசியால் வருந்தி, உறங்கும் - தூங்குவான், (எல்லாம் ஒன்ருனல் ஏன் அப்படி அலையவேண்டும்? அதுவும் முன்சொன்னது போலவேயாகவேண்டும்), என்றிடா - என்று இவைகளையெல்லாம் விவரமாகத் தெரிவித்து, இரண்டுரைக்கும் - கதஞ்சித்பின்னம் கதஞ்சித் அபின்னமென்று சொல்கின்ற இரண்டு வசனங்கட்கும் (உள்ளதை), என்னைப்போல் - என்னைப் போல, பார்க்கில் - பார்க்குமிடத்தில், எல்லாம் - யாவும் (எப்பிரகாரத்தாலும்), ஒன்றென - அபின்னமே என்று, உரைக்கும் - சொல்கின்ற, வாயே - வசனமானது, உன்மத்த சரிதமாய்த்து - மயங்கிய நடவடிக்கையாக விராநின்றது, எ - று.

குவ்வுருபு மூன்றிடத்துங் கூட்டப்பட்டது. (கஅ)

வேறு.

679. விண்மதி யெண்ணிலா மண்ண கற்களி
னுண்ணிலா நீரகத் துருவு போலவுங்
கண்ணுறு கடங்தொறு காயம் போலவு
மெண்ணிலாக் காயத்து ளுயிரு மொன்றெனில்.

(இ - ள்) எண்ணிலா - கணக்கில்லாத (அதாவது அஸங்கியாதமாகிய), மண் அகல்களின் - மட்பாத்திரங்களின், உள் - உள்ளேயிருந்து, நிலா - பிரகாசிக்கும்படியான, நீரகத்து - ஜலத்தினுள்ளே, விண்மதி-ஆகாயத்திலிருக்கின்ற சந்திரனது, உருவு போலவும் - ரூபம் போலவும், கண்ணுறு - கருதப்பட்டிருக்கிற, கடங்தொறும் - பாத்திரங்கள் பாத்திரங்கள் தோறும், (தோன்றுகின்ற), ஆகாயம் போலவும் - ஆகாயத்தைப் போலவும், எண்ணிலா - கணக்கில்லாத, காயத்துள் - சரீரத்துக்குள், உயிரும் - ஆத்மனும், ஒன்றெனில் - ஒன்றே யென்று சொல்லுமிடத்தில், எ - று. (கககூ)

680. சாயைக்குத் தன்மைதா னெங்கு மொத்தபோ
லாயுநல் லறிவின்ப துன்ப மாதிகள்
காயத்து ளுயிர்களுக் கெங்கு மொத்திடி
லேயு மன்றியொன் றுதிவ் வெடுத்துரை.

(இ - ள்) சாயைக்கு - அந்தச் சந்திரனுடைய சாயலுக்கு, தன்மைதான் - ஸ்வபாவமானது, எங்கும் - எவ்விடத்தும், (அதாவது: ஜலமுள்ள எப்பாத்திரங்களிலும்), ஒத்தபோல் - வித்தியாசமில்லாமல் ஒத்திருப்பது போல், காயத்துள் - சரீரத்துளிருக்கப்பட்ட, உயிர்களுக்கு - ஆன்மாக்களுக்கு, ஆயு - ஆயுஷ்யமும், நல் - நன்மையாகிய, அறிவு - ஞானமும், இன்பம் - சௌக்கியமும், துன்பமாதிகள் - துக்கம் முதலானவைகளும், எங்கும் - எவ்விடத்திலும், (அதாவது: எல்லாச் சரீரங்களிலும்), ஒத்திடில் - சமானமாயிருந்தால், இவ்வெடுத்துரை - இத்திருஷ்டாந்தம், ஏயும் - இசையும், அன்றி - அப்படிக்கில்லாமல், (வித்தியாசமாக விருப்பதால்), ஒன்றுது - பொருந்தாது, எ - று. (கஉ0)

வேறு.

681 கார்து ளும்புங் கடத்துறாந் தீமையா
லோர் துளும்புணர் வாதிக ளொத்தொவா
நீர்து ளும்பநின் றம்மதிச் சாயையின
னேர்து ளும்புவ தெங்ஙன மென்றிடில்.

(இ - ள்) கார் - நீரானது, துளும்பும் - சிற்சில கடங்களில் காற்றினுல் அசையும், (அதனுல்), கடத்துறும் - சில கடங்களில் மாத்திரம் அவ்வசைதல் ஏற்படும், (அதுபோல்), ஓர் - ஒப்பற்ற, தீமையால் - ஏதோ பொல்லாத செய்கைகளால், துளும்ப - ஒவ்வோரிடங்களி லசைதலால், உணர்வாதிகள் - ஞான முதலிய குணங்கள், ஒத்து - சிலவிடங்களில் பொருந்தியும், ஒவா - சிலவிடங்களில் பொருந்தாதனவுமாகும், (என்னுமிடத்தில்), நீர் - ஜலமானது, துளும்ப - காற்றினுலசைய, நின்ற - ஆகாயத்திலிராநின்ற, மதி - சந்திரனுடைய, சாயையின் - சாயலினது, ஏர் - அழகானது, எங்ஙனம் - எவ்விதமாக, துளும்பும் - அசையும்? (அசையாது), என்றிடில் - என்று சொன்னுல், எ - று.

துளும்புணர் என்பதில் அகரந்தொக்கது. (கஉக)

682. இன்ப துன்ப முயிர்க்கல யாக்கைய
வென்ப திந்த வெடுத்துரை யால்வரும்
முன்செய் புண்ணிய பாவ முடித்ததற்
பின்பி றத்த லிறத்தலு மில்லையே

(இ - ள்) இன்பம் - சுகமும், துன்பம் - துக்கமும், உயிர்க்கல - ஆத்மனுக் கில்லை, யாக்கையவென்பது - சரீரத்தினுடையன வென்பது, இந்த எடுத்துரை யால் - இத்திருஷ்டாந்தத்தால், வரும் - வாராநின்றது, (ஆகையால் யாதொரு ஜீவனும்), முன் செய்-பூர்வத்தில் செய்யப்பட்ட, புண்ணியம்-புண்ணியத்தையோ, பாவம்-பாவத்தையோ, முடித்து - அனுபவித்துத் தீர்த்து, அதற்பின் - அதன் பிறகு, பிறத்தல் - மறுபடி பிறப்பதும், இறத்தலும் - மரணமடைவதும், இல்லை- இல்லை யாகும், எ - று. (கஅஉ)

683. வாரி மேன்மதி நிற்பவச் சாயைதான்
நீரி னீங்குத லில்லையே னின்னுரை
யோரு மோருயிர் நிற்ப வுடம்புயிர்
போர நீபிண மாகிப் பிழைத்ததே.

(இ - ள்) வாரிமேல் - கடத்திலுள்ள வச்சலத்தின்மேல் ஆகாயத்தில், மதி- சந்திரன், நிற்ப - இருக்க, அச்சாயைதான் - அந்தச் சந்திரச்சாயலானது, நீரின் - ஜலத்தினின்றும், நீங்குதலில்லையேல் - நீங்கப்பட்டதில்லையானால், நின்னுரை - ஸர்வதா அபின்னமே சொல்லுகிற உன்னுடைய வசனமானது, ஓரும் - அறி கின்ற, ஓருயிர் - சந்திரன்போல பரமாத்மனென்கிற ஒரு உயிரானது, நிற்ப - நீங் காமல் நிற்க, உடம்புயிர் - சரீரத்துள்ள சந்திரசாயைபோன்ற உயிரானது, போர - சரீரத்தினின்றும் நீங்க, நீ பிணமாகி - நீயென்னும் அச்சரீரம் பிரேதமாகி, பிழைத் தது - உன்னாற் சொல்லிய தத்துவத்தினின்றும் பிசகியதாகும், எ - று. (கஅங)

684. இந்துவுஞ் சாயையும் போலி ரண்டுயிர்
நின்றன கண்டிலம் நிற்குங் காட்டிது
வன்றியுஞ் சாயைபோ லாமி ரண்டுயிர்
நின்றதுண் டாகிலும் நின்ற தில்லையே.

(இ - ள்) இந்துவும்-சந்திரனையும், சாயையும் - நீரில் தோற்றும் அச்சந்திர னது சாயலையும், போல் - போல, இரண்டுயிர் - இரண்டுயிர்கள், நின்றன - நின்ற வைகளை, கண்டிலம் - பார்த்திலோம், இதுவன்றியும் - இது வல்லாமலும், சாயை போல் - சாயலைப்போல, ஆம்-இரண்டாகும் படியான, இரண்டுயிர் - இரண்டுயிர் கள், நின்றதுண்டாகிலும் - இருக்குமானாலும், நிற்கும் - உன் திருஷ்டாந்தத்தால் சாதிக்கப்பட்டிராநின்ற, காட்டு - தார்ஷ்டாந்தாகமாகிய அபின்ன தத்துவம், நின்ற தில்லை - நிலைக்கப்பட்டதில்லை, எ - று. (கஅச)

வேறு.

685. கடங்க டந்தொறு காயம தாயவா
றுடம்பு டம்புதோ றுமுயி ரொன்றெனில்

கடந்த கார்ந்துழிக் காய நிலைக்குமா
றுடம்பு டைந்துழி யும்முயிர் நிற்பதாம்.

(இ - ள்) கடங்கடந்தொறும் - கடங்கள் கடங்கள்தோறும், ஆகாயமது ஆகாசமானது, ஆயவாறு - ஆகியது போல், உடம்புடம்புதோறும் - எல்லாச் சரீரங் களிலும், ஆம் - உண்டாகின்ற, உயிர் - உயிரானது, ஒன்றெனில் - ஒன்றே யென்று சொல்லுமிடத்தில், கடம் - கடமானது, தகர்ந்துழி - உடைந்த விடத்தி லும், காயம் - ஆகாயமானது, நிலைக்குமாறு - நிலைத்திருப்பது போல், உடம்பு - சரீரம், உடைந்துழியும் - கெட்ட விடத்திலும், உயிர் - உயிரானது, நிற்பது - இருக்கவேண்டியதாக, ஆம் - ஆகின்றது, (அது பிரத்தியக்ஷத்திற்கு விரோ தம்), எ - று. (கஅ௫)

686. குடத்து ளுங்குட மின்றி யிருந்தமற்
றிடத்தி னுங்கவி னுக்கியல் பொத்தபோ
லுடம்பு ளுமுடம் பின்றி யிருந்தவெவ்
விடத்தி னுமுயி ரொத்திடல் வேண்டுமே.

(இ - ள்) குடத்துளும் - கடத்திலேயும், குடம் - கடமானது, இன்றி - இல்லாமல், இருந்த - இருக்கப்பட்ட, மற்றிடத்தினும் - மற்றெவ்விடங்களிலும், கவினுக்கு - ஆகாயத்திற்கு, இயல்பு - ஸ்வபாவமானது, ஒத்தபோல் - ஒத்திருப் பதுபோல், உடம்புளும் - சரீரத்தினுள்ளும், உடம்பின்றியிருந்த - சரீரமில்லாம லிருக்கப்பட்ட, எவ்விடத்தினும் - எவ்விடங்களிலும், உயிர் - ஜீவன், ஒத்திடல் வேண்டும் - சமானமா யிருக்கவேண்டும், எ - று. (கஅ௬)

687. உடம்பி னோடு முயிர்த் தொழி லா லுயி
ருடம்பி னுண்மை யுணர்த்திடு மத்தொழி
லடங்க லும்மில் லாவழி யாருயிர்
தொடர்ந்து நின்றமை சொல்லுவ தென்கொலோ

(இ - ள்) உடம்பினோடும் - சரீரத்தோடு கூடிய, உயிர் - ஆத்மனுடைய, தொழிலால் - சேதனத்தொழிலால், உயிர் - ஆத்மன், உடம்பின் - சரீரத்தில், உண்மை - இருக்குந்தன்மையை, உணர்த்திடும் - தெரிவிக்கும், அத்தொழில் - அச்சேதனத்தொழில், அடங்கலும் - முழுதிலும், இல்லாவழி - இல்லாதவிடத் தில், ஆர் - நிறைந்திராநின்ற, உயிர் - உயிரானது, தொடர்ந்து நின்றமை - எவ் விடங்களிலும் சேர்ந்து நின்றதை, சொல்லுவது என்கொல் - எப்படிச் சொல் வது, எ - று.

ஓ - சுற்றசை. (கஅ௭)

688. உடம்பு தானுயிர் போயது முண்டெனி
னடந்த துன்னுரை ஞாலவி ரோதியா
முடம்பு தன்னள வாயுட னின்றுபின்
விடும்ப டித்துயி ரென்பது வீழ்ந்ததே.

(இ - ள்) உடம்பு தான் - சரீரமானது, போய் - நீங்கிப்போகி, உயிர் அது - ஆத்மனானது, உண்டெனில் - இருக்குமேயாகில், உன்னுரை - உன்னாற் சொல்லப்பட்ட ஆத்மன் ஒன்றே யென்கிற அபின்ன வாதம், நடந்தது - செல்வாக்கை யடையப்பட்டது, (அப்படி உடம்பு நீங்கிய உயிரை யாவரும் காண்பதில்லை; உயிர் நீங்கிய உடம்பு அதாவது: பிரேதம் உலகில் யாவராலும் திருஷ்ட சுருத அனுபோகமாய்க் காணப்படுகின்றது; ஆகையால்), உயிர் - உயிரானது, உடம்பு தன்னளவாய் - சரீரப்பிரமாணமாய், உடனின்று - சேர்ந்திருந்து, பின் - பிறகு, விடும்படித்து - நீங்குந்தன்மையையுடையது, என்பது - என்கிறலோக வசனம், வீழ்ந்தது - உன்னுடைய ஒன்றே என்கிற அபின்ன தத்துவத்தால் கெடப்பட்டது, (அதனால் ஞாலவிரோதியாம் ஸர்வதா ஆத்மன் ஒன்றே யென்கிற அபின்னவாதம் இவ்வுலகத்தில் பிரத்தியட்ச விரோதமாயிருக்கிறது), எ - று. ( )

689. தத்து வம்மிது வெய்துவ தன்றெனி
லொத்தொவ் வாமையை விட்டுயி ரொன்றுதான்
சித்தி யெய்துவ தின்மையிற் சிந்தையான்
முத்தி யெய்த முயலுவ தென்கொலோ.

(இ - ள்) தத்துவம் - தத்துவஸ்வரூபமானது, இது - இத்தன்மையாக ஜீவாத்மன் பரமாத்மன் இரண்டும் வேறல்லாததாகிய ஒன்றே யென்பதாகும், (வேறாக நினைப்பது ப்ராந்தமாகையால்), எய்துவது - ஜீவாத்மனை விட்டுப்போய் அடையப்பட்ட வேறு வஸ்து ஒன்று, அன்றெனில் - அல்லவென்றால், (அதாவது: ஸர்வபிரகாரத்தாலும் இரண்டும் ஒன்றேயென்று சாதித்தால்), ஒத்து - ஒரு பிரகாரத்தால் பொருந்தியும், ஒவ்வாமையை - மற்றொரு பிரகாரத்தால் பொருந்தாமையுமாகின்ற தன்மையையும், விட்டு-(இவைகளையெல்லாம் யோசித்து அவிரோதமாயறியாமல்) மயங்கிவிட்டு, உயிர் - இவ்வுலகத்தில் உயிர், ஒன்றுதான் - ஒன்றேதான், (வேறில்லையென்றால்), சித்தியெய்துவது-மோட்சமடைவது, இன்மையில்- அத்தத்துவப்படியில்லாமையால், சிந்தையால் - தியானத்தால், முத்தியெய்த - மோட்சமடைய, முயல்வது - அத்தத்துவஞானிகள் முயற்சி செய்து தவம் முதலானவற்றைச் செய்கின்றது, என்கொல் - என்ன காரணம்?,. (அடையவேண்டிய பலனில்லாமையால் செய்யும் காரியம் வீணே), எ - று. (கஉக)

வேறு.

690. காட்சியை முடித்திடா காட்டியி வற்றைவிட்
டாட்சியா லொன்றெனி லந்தக னுக்கிருள்
மாட்சியாம் வையக மற்று னக்குமொன்
றாட்சியா லொன்றெனி லார்வி லக்குவார்.

(இ - ள்) காட்சியை-திருஷ்டத்தை (அதாவது: உலகில் கண்டவையாகிய லோகப்ரவர்த்தி திருஷ்டம் புருஷப்ரவர்த்தி திருஷ்டம் சாஸ்திரப் ப்ரவர்த்தி திருஷ்டம் என்கிறவற்றைக்கொண்டு), முடித்திடா - விரோதமில்லாமல் முடித்து, காட்டி - சுதஞ்சித் பின்னுபின்ன நிலைமைகளைக் காட்டியும், இவற்றை விட்டு - இந்தத் தன்மைகளை யறியாமல் விட்டுவிட்டு, ஆட்சியால்-தான் கொண்ட ஏகாந்தத் தன்மையின் உறுதியால், ஒன்றெனில் - ஸர்வதா ஒன்றேயென்றால், அந்தக னுக்கு - குருடனுக்கு, வையகம் - இவ்வுலகம், இருள்மாட்சியாம் - அந்தகாரமயமே யாகும், (அது போல), உனக்கும் - (அபின்னமே ஸர்வதா சொல்லுகின்ற) உனக் கும், ஒன்றாட்சியால் - ஒன்றே உறுதியாகையால், ஆர் - எவர்கள், விலக்குவார் - அதை நீக்குவார்கள், (ஒருவராலும் நீக்க முடியாது), எ - று. (கசுO)

சூனியவாதம்.

வேறு.

691. சுத்த சூனியந் தத்துவ மென்பவன்
சுத்த சூனிய மாகினு நிற்கினுஞ்
சுத்த சூனியந் தத்துவ மல்லதாஞ்
சுத்த சூனியந் தான்முத லல்லவோ.

(இ - ள்) சுத்த சூனியம் - ஸர்வதா சூன்யமேவ, தத்துவம் - தத்துவ மாகும், என்பவன் - என்று அத்தத்துவத்தைச் சொல்பவன், சுத்த சூனியமாகி னும்-ஸர்வதா சூனியமானாலும், நிற்கினும் - சூன்யமாகாமல் நின்றாலும், தத்துவம்- தத்துவமானது, சுத்த சூனியம் - முழுதிலும் சூன்யம், அல்லதாம்-அல்லாததாகும், சுத்த சூனியம் - அந்த ஸர்வதா சூன்யத்திற்கு, தான் - அச்சூன்யத்தைச் சொல் பவன், முதல் அல்லவோ - பிரதானமல்லவோ, (அவன் சூன்யமானால் அறிந்து சொல்லும் புருஷனில்லாததால் சூன்யவாதம் இல்லாதொழியும்; அவன் நின் றால் சூன்யவாதம் பிரத்தியட்ச விரோதமாகும்), எ - று. (கசுக)

692. சொன்ன சூனிய வாதியுஞ் சூனியம்
முன்ன மில்லதோ முன்னமுண் டாயதோ

முன்ன மில்லதற் கென்மொழி தானிலை
பின்னை யில்லதற் கேபிழை யாயதே.

(இ - ள்) சொன்ன - ஸர்வ சூனியத்தைச் சொல்லிய, சூனியவாதியும் - சூனியவாதியும், சூனியம் - சூனியமாகவேண்டும், (அதுவல்லாமலும் ஸர்வதா சூன்யமென்பது), முன்னமில்லதோ - முன்னாலேயே இல்லாததோ ?, (அல்லது), முன்னமுண்டாயதோ - பூர்வத்திலிருக்கப்பட்டதோ, (என்று கேட்குமிடத்தில்), முன்னமில்லதற்கு - அநாதியாகவே இல்லாத வஸ்துவுக்கு, மொழிதான் - வசனந் தான், என் - என்ன இருக்கின்றது, இலை - வசனமேயில்லை, பின்னையில்லதற்கு- முன்னாலிருந்து பிறகு இல்லையென்ற வஸ்துவுக்கு, பிழையாயது - ஸர்வ சூனியம் தவறுகின்றது, எ - று. (கசுஉ)

693. தோற்றம் வீதல் தொடர்ந்து நிலைபெற
லாற்ற வும்பொரு ளின்னிகழ் வாதலாற்
றோற்ற மாய்ந்திடல் சூனிய மென்றிடி
னேற்ற வாறுரைத் தானில்லை மற்றதே.

(இ - ள்) தோற்றம் - உத்பாதமும், வீதல் - வியமும், தொடர்ந்து - இவைகளைச் சேர்ந்து, நிலைபெறல் - த்ரௌவ்ய யுக்தமுமாகிய, (இந்த உத்பாதவியத் ரௌவ்ய யுக்தங்கள்), ஆற்றவும் - மிகவும், பொருளின் - திரவியங்களினது, நிகழ் வாதலால் - நடத்தையாகையால், தோற்றம் - உத்பாதமும், மாய்ந்திடல்-வியமும், (இவைகளை ஒட்டி) சூனியமென்றிடில் - தத்துவம் ஸர்வதா சூன்யமென்றால், மற்றது - மற்றதாகிய த்ரௌவ்ய தத்துவமானது, ஏற்றவாறு - இசையும் விதமாக, உரைத்தானில்லை - சொன்னவனல்ல, எ - று.

இதனால் உலகத்தில் பிரத்தியட்ச விரோதமாகின்றதென்பது பெறப்படும்.

694. இட்ட திட்ட மெறிந்து தன் கோளினை
விட்டு மாறெய்தித் தன்சொல் விரோதியா
கெட்ட வாறிவை தீநெறி கேளினி
மட்டு லாமுடி யாய்நல்ல வாநெறி.

(இ - ள்) மட்டு-மதுஜலமானது, உலாம்-வியாபித்திராநின்ற, (பூமாலையை யணிந்த), முடியாய் - முடியையுடைய கிரணவேகனே!, இட்டம் - (ஆப்தேஷ்டம், ஆகமேஷ்டம், பிரதிய பிஜ்ஞானேஷ்டம், கர்மபலஸம்பந்தேஷ்டம், ஸம்ஸாரேஷ்டம், மோட்சேஷ்டம், என்னும்) ஆறு இஷ்டங்களையும், திட்டம் - (லோகப்ரவர்த்தி திருஷ்டம் புருஷப்ரவர்த்தி திருஷ்டம் ஸாஸ்திரப்ரவர்த்தி திருஷ்டம்) என்னும் மூன்று திருஷ்டங்களையும், எறிந்து - கெடுத்து, தன்கோளினை - தனது

கொள்கையினையும், விட்டு - விட்டு, மாறெய்தி - மாறுபாட்டையடைந்து, தன் சொல் - தனது வசனமே, விரோதியா - எதிராக, கெட்ட - கெடுகையான, தீநெறி - பொல்லாங்கான மார்க்கங்கள், இவை - (இந்தப்பிரகாரம், நித்தியமேவ, அனித்தியமேவ, அவாச்சியமேவ, பின்னமேவ, அபின்னமேவ, சூன்யமேவ, என்கிற) இவைகள், ஆறு - ஆறுவிதங்களாகும், இனி - இனிமேல், நல்லவாம் - நன்மையாகிய, நெறி - ஸன்மார்க்கத்தை, கேள் - கேட்பாயாக, (என்று அரிச்சந்திர முனிவன் மேலும் சொல்லத் தொடங்கினான்,) எ - று. (கடூச)

## ஸ்யாத் வாதம்.

695. உண்மை யில்லத னிற்குரை யும்மிலை
யுண்மை யில்லத னிற்குணர் வும்மிலை
யுண்மை யில்லத னிற்பய னும்மிலை
யுண்மை யில்லதற் குண்மையு மில்லையே.

(இ - ள்) (அவ்வாறு சொல்லத் தொடங்கிய அம்முனிவன்), உண்மையில்லதனிற்கு - ஸத் ஸ்வரூபமில்லாததற்கு, உரையும் - வசனமும், இலை - இல்லை, உண்மையில்லதனிற்கு - அஸத்தன்மைக்கு, உணர்வும் - ஞானமும், இலை - இல்லை, உண்மையில்லதனில் - உண்மையில்லாதவற்றில், பயனும் - பலனும், இலை - இல்லை, உண்மையில்லதற்கு - அசத்தான தன்மைக்கு, உண்மையும் - ஸத்து தன்மையும், இல்லை - உண்டாவதில்லை, எ - று.

இக்கவியால் சூன்யவாதத்தைக் கண்டித்து ஸன்மார்க்க சம்மதமாகிய - ஸத் - என்பதைக் குறிப்பிட்டுக் கூறினார். ஸத்தென்பது அஸ்தித்துவத்தைக் குறிக்கின்றது. ஸத்தே பொருளென்பது பெறப்பட்டது. ஸத்தன்மை தத்வார்த்த சூத்ரவியாக்கியானமாகிய ஸர்வார்த்தஸித்தி பாதையில் ஐந்தாவது அத்தியாயத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (கடூரு)

696. அத்தி யன்வயத் தாலென்று நித்தமாஞ்
சித்த மும்மொழி யுந்திரி வின்மையா
னித்த மேவெதி ரேகத்த னித்தமாஞ்
சித்த மும்மொழி யுஞ்சிதை வெய்தலால்.

(இ - ள்) அத்தி - அஸ்திஸ்வரூபமாகிய ஸத்தானது, அன்வயத்தால் - அன்வயகுணத்தால் (அதாவது : நிச்சய குணத்தினால்), என்றும் - எப்பொழுதும், சித்தமும் - சத்தின் அன்வய குணத்தை யுணரும் மனமும், மொழியும் - சொல்லும் வசனமும், திரிவின்மையால் - கெடாமையால், (அதாவது : அன்வயமாகிய நிச்சய குணத்தை அத்திரவியத்தைவிட்டு வேறு படுத்த முடியாமையால் அக்குணத்தால் அந்த ஸத்தை யறியும் மனமும், குறிக்கும் சொல்லும் திரிவெய்தாவாகையால்),

நித்தமாம் - ஸ்யாத்நித்திய ஸ்வரூபமாகும், நித்தமே - அப்படி நித்தியமான வஸ்துவே, வெதிரேகத்து - வைதர்மியமாகிய குணத்தினால், சித்தமும் - மனதும், மொழியும் - வசனமும், சிதை வெய்தலால் - கேடடைதலால், அனித்தமாம் - ஸ்யாத் அனித்திய ஸ்வரூபமுமாகும், எ - று.

இதனால், இப்படி ஏகத்திரவியமே அன்வயவ்யதிரேக குணத்தினால் நித்தியானித்தியத்தை அவிரோதமாகப் பெற்றிருக்கின்ற தென்பது பெறப்படும். இதுவும் விரிவாக ஸு¬கபோதை ஐந்தாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அஸ்திஸ்வரூபம், ஸத் என்றும் சொல்லப்படும். அது உத்பாதவியத்ரௌவ்ய யுக்தமாகும். (கசுசு)

697. அன்வ யம்வெதி ரேக மனந்தமத்
தன்மை யாற்பொரு டானிக ழும்படி
சொன்னி கழ்ந்தத னைச்சொல்ல லில்லையத்
தன்மை யாற்பொரு டானத வாச்சியம்.

(இ - ள்) அன்வயம் - நிச்சய குணமும், வெதிரேகம் - பரியாய குணமும், அனந்தம் - முடிவில்லாததாகும், அத்தன்மையால் - அந்தந்த ஸ்வரூபத்தினால், பொருள் தான்-ஜீவாதி பொருள்கள், நிகழும்படி-ஸ்வபாவமாய் நடக்கும் பிரகாரம், சொல் - வசனத்தினால், நிகழ்ந்ததனை - சாமான்யமாய்க் கூறப்பட்ட அந்தப் பொருள்களின் ஸ்வபாவ பரபாவ குண பரியாயங்களையே, சொல்லலில்லை - விசேஷித்துச் சொல்லல் முடியாது, அத்தன்மையால் - அப்படிச் சொல்லால் கூறப்படாதனவாய் அனந்தமாகிய குண பரியாயங்களினால், பொருள் - ஜீவாதி பொருள்கள், அவாச்சியமதானது - ஒரு பிரகாரத்தால் ஸ்யாதவாச்சியம் பெறப்பட்டது, எ - று.

இதனால் தத்துவமானது, வாச்சியா வாச்சியமும் பெற்றிருக்கிறதென்பது பெறப்படும். (கசுஎ)

698. அன்வ யம்வெதி ரேகமற் றப்பொருட்
சொன்ன நல்லறி விற்பய னாதியிற்
பின்ன மாதலிற் பின்னமு மாம்பொரு
ளன்வ யம்வென் றலாதிய வற்றைச்சொல்.

(இ - ள்) அப்பொருள் - அந்த ஜீவாதி பொருள்கள், சொன்ன - அததற்குச் சொல்லப்பட்ட, அன்வயம் - நிச்சயமாகிய தாதாத்மிய குணமும், வெதிரேகம்- (ஸம்யோகஸம்பந்த, ஸமவாய ஸம்பந்தத்தினாலான) வெதிரிக்தமாகிய குணமும், (ஆகிய இவ்விரண்டு வகைகளில்), நல் - நன்மையாகிய அன்வயகுணத்தின், அறிவிற் பயனாதியில் - ஞானாதிபலன் முதலானவைகளில், பின்னமாதலில் -

(வெதிரேக குணத்தின் ஞானுதிபலன் முதலானவைகள்) வேருக விருப்பதால், பின்னமுமாம் - ஒரு பிரகாரத்தால் ஸ்யாத் பின்னமும் பெறப்படும், பொருள் - ஜீவாதி பொருள்கள், அன்வயம் - நிச்சய அன்வய குணம், வென்றலாதியவற்றை - ஜெயித்தல் முதலியவற்றை (அதாவது: விபாவத்தை விலக்கி ஜயித்து, தனது ஸ்வபாவத்தில் நிற்றல், முதலியவைகளை), சொல் - (இனி யான் கூறுகிறபடி யறிந்து பிறர்க்குச்) சொல்வாயாக, எ - று. (௬௯௮)

699. மாற்றி னின்றுபின் வீட்டினு நிற்குநல்
லாற்றல் பற்றி யெழும்முணர் வன்வயம்
மாற்றி னின்றது வீட்டிலில் லாமையால்
வேற்று மையுணர் வாம்வெதி ரேகமே.

(இ - ள்) மாற்றினின்று - (விபாவ பரிணமத்தால் பந்த முற்று) ஸம்ஸாரத்தில் நின்று, பின் - பிறகு, (சுத்தஸ்வபாவ பரிணமத்தால்), வீட்டினு நிற்கும் - மோட்சத்திலும் நிற்கும், (இவ்விரண்டிடங்களிலும் ஜீவனை விடாது பற்றி நிற்கும்), நல் - நன்மையாகிய, ஆற்றல் பற்றி - சேதனுசக்தியைத் தொடர்ந்து, எழும் - எழுகின்ற, உணர்வு - க்ஷாயிகஸம்மியக்துவ ஞானுதிகள், அன்வயம்-ஜீவத்திரவியத்தின் நிச்சயமாகிய அன்வய குணமாகும், மாற்றினின்று - (விபாவ பரிணமத்தால் பந்தமருமல்) ஸம்ஸாரத்தில் மாத்திரமே யிராநின்று, அது - அப்படி நின்ற குணம், வீட்டிலில்லாமையால் - மோட்சத்தை யடையும்போது ஜீவனிடத்தில் நில்லாமையால், வேற்றுமையுணர்வு - ஜீவனின் விபாவ பரிணமமாகிய ராகாதி அறிவுகள், வெதிரேகம் ஆம் - ஜீவத்திரவியத்தினது வ்யதிரிக்த குணமாகும், எ - று.

அன்வயவியதி ரேக குணங்களின் ஸ்வபாவம், எப்பெற்றியதென்பது ஜீவத்திரவியத்திஞல் உதாஹரிக்கப்பட்டது. (௬௯௯)

அந்த அன்வயவ்யதிரேக குணத்தின் செயலைப்பற்றி லோகப் பிரசித்தமாக ஒரு திருஷ்டாந்தத்தை யொருவாற்ருற் காட்டி ஸமர்த்திக்கின்ருர் ஆசிரியர்.

700. அன்வ யம்வெதி ரேகத்தை யாக்கலா
லின்ன வைபிறப் பாதியை யாக்கலால்
பொன்னி னப்பொரு ணிற்ற லதன்பய
னின்ன தொன்றையொன் றெய்தலு மொக்குமே.

(இ - ள்) அன்வயம் - அன்வயமாகி நின்ற குணமே, வெதிரேகத்தை - வ்யதிரிக்த குணமாகிய தன்மையை, ஆக்கலால் - உபாதான காரணமாக நின்று

உண்டுபண்ணுவதால், இன்னவை - இப்பேர்ப்பட்ட இக்குணங்களே, பிறப் பாதியை - (நர, நாரக, திரியக், தேவ ராதி) பிறப்பினை, ஆக்கலால் - உண்டு பண்ணுவதால், அதன் பயன் - அந்த அன்வய குணத்தின் பலனானது, அப் பொருள் - அந்த ஜீவத்திரவியத்தினிடத்தில், பொன்னின் - ஸ்வர்ணத்தினிடத் தில், நிற்றல்-அதன் பீதத்வாதி அன்வயகுணங்கள் பிரிக்க முடியாது நிற்பதையும், அதன்பயன் - அந்த அன்வய குணத்தோடு பொருந்திய பொன்னே உபாதான காரணமாகி உண்டுபண்ணிய அதன் பலனாக, இன்னது - இந்த ஸ்வர்ணமானது; ஒன்றை ஒன்றெய்தலுமொக்கும் - கடகம் குண்டலமாய் வேறு வேறு விதமாகி ஒன்றை யொன்றுபற்றி வர்த்திப்பதையும் நிகர்க்கும், எ - று.

ஜீவன் அன்வய குணங்களோடு பொருந்தி உபாதான காரணமாக வியதிரேக குணங்களைச் செய்து இது காரணம்பற்றிச் சதுர்க்கதிகளில் வேறு வேறு ஜீவனாக நிகழ்வது, பொன்தன் அன்வய குணம் பொருந்தி உபாதானகாரணமாகிக் கடக குண்டலாதிகளாக மாறி மாறி வர்த்திப்பதை யொக்கும் என்பது இதன் கருத்து.

701. என்று மிக்குண மும்பொரு ளுந்தம்மு
ளொன்றை யொன்றுவிட் டோரிடத் தின்கணுஞ்
சென்று நின்றன கண்டறி யாமையா
லொன்று மாம்பொரு ளோடு குணங்களே.

(இ - ள்) என்றும் - எப்பொழுதும், இக்குணமும் - இப்போது சொல்லப் பட்ட இந்தக் குணங்களும், பொருளும் - இந்தக் குணங்களையே பிரதானமாக வுடைய குணிகளாகிய திரவியமும், தம்முள் - தங்களுக்குள், ஒன்றை யொன்று விட்டு - ஒன்றினை யொன்று நீங்கி (அதாவது: குணத்தை விட்டுக்குணியும் குணியை விட்டுக்குணமும் நீங்கி), ஓரிடத்தின் கணும் - வேறோரிடத்திலும், சென்று - போகி, நின்றன - நின்றவைகளை, கண்டறியாமையால் - பார்த்தறியா மையால், பொருளோடு - ஜீவாதிதிரவியங்களோடு, குணங்கள் - ஞானாதிகுணங் கள், ஒன்றுமாம் - ஸ்யாத் அபின்னமுமாகும், எ - று.

குண குணிகள் பிரதேசத்தால், வேறு படுக்க முடியாவாகையால், வசன மாத்திரத்தால் வேறாயிருந்தும் பொருளால் அபின்னமே என்பது இதனால் பெறப்படும். (கசக)

702. அசேத னத்திடைச் சேதன மின்மையுஞ்
சேத னத்தில சேதன மின்மையு
மோது மூர்த்திய மூர்த்தியொன் றன்மையுந்
தீதி லாதவச் சூனியஞ் செப்பினேன்.

(இ - ள்) அசேதனத்திடை - அசேதனத் திரவியத்தினிடத்தில், சேதனம் - சேதன குணமானது, இன்மையும் - இல்லாமையாகிய சூன்யமும், சேதனத்தில் - சேதனத் திரவியத்தினிடத்தில், அசேதனம் - அசேதன குணம், இன்மையும் - இல்லாத சூன்யமும், ஓதும் - சொல்லப்படுகின்ற, மூர்த்தி - மூர்த்தமாகிய ரூபித்திரவியத்தினிடத்தில், அமூர்த்தியொன்று - அமூர்த்தமாகிய அரூபி குணம், அன்மையும் - அல்லாத சூன்யமும் (ஆகிய விவைகளால்), தீதிலாத - ஸர்வதா கெடுதலில்லாத, அச்சூன்யம் - அந்தச் சூன்யத்தை, (கதஞ்சித் சூன்யமுமாகுமென்று), செப்பினேன் - (பரமாகமத்தில் சொன்ன தத்துவஸ்வரூபப்படி) சொன்னேன், எ - று.

திரவியங்களின் ஸகல குணங்களையும், பரியாயங்களையும், பதார்த்தஸாரம், ப்ராப்ரதத்ரயம் முதலிய கிரந்தங்களில் கண்டுகொள்க. (கசஉ)

703. சொன்ன வாறு விகற்ப மொருபொருட்
டன்மை யிற்றலை வன்முத லாறுமா
றின்மை யில்லிது மெய்ம்மை யிவற்றின்மேற்
சொன்ன பங்கமு மேழுள சொல்லுவாம்.

(இ - ள்) சொன்ன - சொல்லப்பட்ட, ஆறுவிகற்பம் - (நித்தியம், அனித்தியம், அவாச்சியம், பின்னம், அபின்னம், சூன்யமென்கிற) ஆறுவிதங்களையும், ஒரு பொருள் தன்மையில் - ஒரே பொருளின் தன்மையில், (அதாவது: ஒவ்வொரு திரவ்வியத்தினிடத்திலும் உள்ளவையாகக் கருதிப்பார்க்குமிடத்தில்), தலைவன் முதலாறும் - ஆப்தேஷ்டம் முதலாகிய ஆறு இஷ்டங்களும் (மூன்று திருஷ்டங்களும்), மாறின்மையில் - வித்தியாசமடையாமையால், இது - இந்த ஆறும், (ஒரு பொருள் தன்மையென வறிவது), மெய்ம்மை - உண்மையான ஸத்ஸ்வரூபமாகும், இவற்றின்மேல் - இந்த ஆறுவிதத்தின் மேற்பட்டும், (திரவியங்களின் ஸர்வவிப் பிரதிபத்திகளை நிராகரித்து, நிச்சயித்தறிய வேண்டி), சொன்ன - ஸர்வஜ்ஞனலருளிக் கூறப்பட்ட, ஏழுள - ஏழாயிராநின்ற, பங்கமும் - பிரமாண ஸப்தபங்கி நயத்தினையும், சொல்லுவாம் - சொல்லுவோம், எ - று. (கசஙு)

வேறு.

704. உண்மைநல் லின்மை யுண்மை யின்மையு முரைக்கொ ணுமை
யுண்மைநல் லின்மை யுண்மை யின்மையோ டுரைக்கொ ணுமை
நண்ணிய மூன்று மாக நயபங்க மேழு மொன்றிற்
கண்ணுறி னன்ன யங்கள் கடாவிற்றீ நயங்கள் வேந்தே.

(இ - ள்) வேந்தே - கிரணவேக மகாராஜனே!, உண்மை - ஸ்யாதஸ்தியும், நல் - நன்மையாகிய, இன்மை - ஸ்யாநாஸ்தியும், உண்மையின்மையும் - ஸ்யாத

ஸ்திநாஸ்தியும்; உரைக்கொணுமை - ஸ்யாதவக்தவ்வியமும், உண்மை நல்லின்மை உண்மையின்மையோடு - ஸ்யாதஸ்தி ஸ்யாநாஸ்தி ஸ்யாதஸ்திநாஸ்தியாகிய இம்மூன்றினேடு, உரைக்கொணுமை - அவக்தவ்வியத்தம், நண்ணிய - சேர்ந்த, மூன்றுமாக - (ஸ்யாதஸ்தியவக்தவ்வியம் ஸ்யாநாஸ்தியவக்தவ்வியம் ஸ்யாதஸ்தி நாஸ்தியவக்தவ்யம் என) மூன்றுமாக, நயபங்கமேழும் - இந்த சப்தபங்கி நயங்களே, ஒன்றில் - ஒரு பொருளிடத்தே, கண்ணுறில் - கருதிப்பார்க்குமிடத்தில், நன்ன யங்கள் - ஸன்மார்க்க நயங்களாகும், கடாவில் - வேறு வேருக (அதாவது : அஸ்தி யேவதிரவியம் நாஸ்தியேவ திரவியம் என்று கருதுமிடத்தில்), தீநயங்கள் - மித்தி யாநயங்களாகும், எ - று. (கசச)

705. உண்டெனப் பட்ட தற்கே யில்லையா முருவ மின்றே
லுண்டெனப் பட்ட வொன்றே யாமிந்த வுலக மெல்லா
முண்டெனப் பட்ட தற்கே யில்லையா மாறென் னென்னில்
வண்டுணுங் கோதை யாவாள் மகளிலா வுருவ மன்றே

(இ - ள்) உண்டெனப்பட்டதற்கு - அஸ்தி யென்று சொல்லப்பட்ட பொருளுக்கு, இல்லையாமுருவம் - நாஸ்தி யென்கிற ரூபமானது, இன்றேல் - இல்லாமற் போகுமாளுல், இந்த வுலகமெல்லாம் - இந்தலோக முழுமையும், உண் டெனப்பட்ட - அஸ்தியென்று சொல்லப்பட்ட, ஒன்றே - ஒரு பொருளே, ஆம் - ஆகும், உண்டெனப்பட்டதற்கு - அஸ்தி யென்று சொல்லப்பட்ட வஸ்துவுக்கு, இல்லையாமாறு - நாஸ்தி யென்கிற ஸ்வரூபமானது, என்னெனில் - எப்படி யென்றுல், வண்டுணும் - வண்டுகளானவை மதுவையுண்ணும், கோதையாவாள் - பூமாலையை யணியப்பெற்ற பெண்சாதியானவள் (அதாவது : மனைவியானவள்), மகளிலா - அப்புருஷனுக்குப் புத்திரியாயில்லாத (அதாவது : குமாரத்தியாகாத), உருவமன்றே - ரூபமல்லவோ, எ - று.

பெண்சாதியானவள் புத்திரி அல்ல வென்று ஒரு பொருளுக்கு அஸ்தி நாஸ்திகள் ஏற்பட்டன என்பது இதனுற் பெறப்படும். (கசரு)

706. அத்தியாங் கும்ப மென்று லுலகெலா மடைய வாமோ
வைத்ததன் னிடத்த தாமோ மற்றந்தக் கும்ப மென்றுல்
வைத்ததன் னிடத்த தென்னின் மற்றெங்கு மிலாமை யாலே
நத்தியு முடைத்தன் றுகி லுலகநற் கும்ப மாமே.

(இ - ள்) கும்பம் - கடமானது, அத்தியாம் - அஸ்திஸ்வரூபம் ஆகும், என்றுல் - என்று சொன்னுல், உலகெலாமடைய - லோகமுழுமையு மெவ்விடங் களினும், ஆமோ - ஆகுமோ, மற்று - பின்னர், அந்தக் கும்பம் - அந்தக் கும்ப மானது, வைத்த - தன்னை வைக்கப்பட்ட, தன் இடத்ததென்னில் - தன்

திரமுடையதென்றால், வைத்த - அவ்வாறு தன்னை வைத்த, தன்னிடத்ததாமோ-தன்னிடமாகிய அந்த ஸ்வக்ஷேத்திரத்திலே மாத்திரமுள்ளதாகுமோ, என்றால் - என்று வினவுமிடத்து, மற்றெங்கும் - தானிரா நின்ற ஸ்வக்ஷேத்திரந்தவிர பரக்ஷேத்திரத் தெவ்விடங்களிலும், இல்லாமையால் - இல்லாததால், நத்தியுமுடைத்து - அந்தக் கும்பத்திற்குப் பரக்ஷேத்திராபேக்ஷயால் நாஸ்தியென்கிற பதமும் உளது, அன்றாகில் - அப்படிக்கில்லாவிட்டால், உலகம் - இந்தலோக முழுமையும், நற்கும்பமாம் - நன்மையாகிய ஒரே கும்பமயமாயும் விடும், எ - று.

இதனால் ஒவ்வொரு பொருளுக்கும் ஸ்வத்திரவ்யஸ்வக்ஷேத்ரஸ்வகால ஸ்வபாவத்தால் அஸ்தித்துவமும், பரதிரவிய பரக்ஷேத்ரபரகால பரபாவத்தால், நாஸ்தித்துவமும் ஏற்படுகின்றனவென்பது பெறப்படும். இதையே வரும்பாடலிலும் சொல்லுகின்றார் ஆசிரியர். (கஎசு)

707. இதுவது வலாமை யுண்டே லிதுவது வென்ன லாகு
மிதுவது வலாமை யின்றே லிதுவது விலாமை யாலே
பொதுவொடு விசேட மின்றிப் போம்பொருள் போன பின்னை
விதிவிலக் கிலாமை யாலே சூனிய மாகும் வேந்தே.

(இ - ள்) வேந்தே - அரசனே !, இது - இது என்று சுட்டிக் காட்டப்பட்ட ஒரு அஸ்தியான வஸ்துவுக்கு, அது வலாமை - அது என்று காட்டப்பட்ட வேறு பொருளின் தன்மையில்லாது நாஸ்தி யென்கிற பங்கு, உண்டேல் - இருக்குமானால், (இதனை), இது - இந்த வஸ்து, அது - அந்தவஸ்து, என்னலாகும் - என்று குணமறிந்து சொல்லமுடியும், (அப்படிக்கில்லாமல்) இது - இந்தப் பொருளுக்கு, அது வலாமை - அந்த வேறு பொருளல்லாத நாஸ்தித் தன்மை, இன்றேல் - இல்லாமல் போனால், இது - இந்தப் பொருள், அது - அந்தப் பொருள், (என்னும் வித்தியாசமாகிய அஸ்திநாஸ்தி குணங்கள்), இலாமையால் - இல்லாமல் நாஸ்தியாவதால், (அப்போது) பொதுவொடு - ஒவ்வொரு பொருளின் ஸாமான்ய குணத்தோடு, விசேடமின்றி - வேறுவேறாகிய விசேஷ குணமுமில்லாமல், பொருள் - பொருளானது, போம் - கெட்டுப்போகும், போன பின்னை - அப்படிக்கெட்டபிறகு, விதி - பொருள் உண்டென்று விதித்தலும், விலக்கு - இல்லை யென்று பிரதிஷேதித்தலும், இலாமையாலே-இல்லாததாலே, (அதாவது : சொல்ல முடியாததாலே), சூனியமாகும் - ஒன்றுமில்லாமற்போகும், எ-று. (கஎஎ)

708. அத்தியா லத்தி சீவ னறிவினா லறிவ னென்னி
லத்திமா றாய வெல்லாக் குணத்தையு மடையப் பற்றி
னத்தியாம் பங்கந் தோன்றிச் சீவனை நாத்தி யென்னு
மித்திறப் பங்க மேழும் பொருளிடை யிருந்த வாறே.

(இ - ள்) சீவன் - ஜீவனானது, அத்தியால் - ஸத்ஸ்வரூப அஸ்தித்துவத்தினாலும், அறிவினால் - சேதனமாகிய ஞானாதி குணங்களினாலும், அறிவன் - ஞானாதி குணியாகிய, அத்தி - ஸத்ஸ்வரூப அஸ்தியாகும், என்னின் - என்றால், அத்திமாறாய - அந்த அஸ்திக்குமாறாகிய, எல்லாக் குணத்தையும் - அசேதனாதியாகிய வஸத்ஸ்வரூபத்தை யெல்லாம், அடைய - சேர, பற்றில் - யோசிக்குமிடத்தில், நத்தியாம்பங்கம் - நாஸ்தியென்கிற பகுதியும், தோன்றி - ஏற்பட்டு, சீவனை - ஆத்மனை, நாத்தியென்னும் - ஸ்யாநாஸ்தி யென்றாக்குகின்றது, இத்திறம் - இந்த விதாயமாக, பங்கமேழும் - ஸப்தபங்கிகளும், பொருளிடை - திரவியத்தினிடத்தில், இருந்தவாறு - இருக்கப்பட்ட விதமாம், எ - று. (கஎஅ)

709. உண்மையு மின்மை தானு மொருபொருட் டன்மை யாகும்
வண்மையைச் சொல்லும் மூன்றாம் பங்கமற் றவ்வி ரண்டிற்
கண்ணுறு பொருளை யோர்சொற் சொலாமையைத் துரியங் காட்டுந்
திண்ணியோ டவாச்சி யத்தின் செறிவினைச் செப்பு மூன்றும்

(இ - ள்) உண்மையும் - ஸ்யாதஸ்தியும், இன்மைதானும் - ஸ்யாந்நாஸ்தியும், (ஆகிய இவ்விரண்டும்), ஒரு பொருள் தன்மையாகும் - (ஒரு திரவியத்தினுடைய ஸத்குண அசத்குணங்களாகிய ஸ்வதிரவிய, ஸ்வக்ஷேத்ர, ஸ்வகால, ஸ்வபாவ, பரத்திரவிய, பரக்ஷேத்ர, பரகால பரபாவங்களால்) ஏகத்திரவியத்தினிடத்தேயாகும், மூன்றாம் பங்கம்-(ஸ்யாதஸ்தி நாஸ்தியென்கிற) மூன்றாவது பிரிவானது, வண்மையைச் சொல்லும் - இந்த இரண்டு வளப்பத்தையும் ஏகமாகவே கூறிக் காண்பிக்கும், அவ்விரண்டில் - இப்படி அஸ்தி நாஸ்திகள் இரண்டால், கண்ணுறு - கருதப்பட்டிருக்கின்ற, பொருளை - ஜீவாதி திரவியத்தை, ஓர் சொல் - ஒரு சொல்லால் ஏகாந்தமாக, சொலாமையை - சொல்ல முடியாத தன்மையை, துரியம் - நாலாவதாகிய அவக்தவ்வியம், காட்டும் - காண்பிக்கும், திண்ணியோடு - அஸ்தி, நாஸ்தி, அஸ்திநாஸ்தி யென்கிற இம்மூன்றோடு, அவாச்சியத்தின் செறிவினை - அவக்தவ்வியத்தின் சேர்க்கையை, மூன்றும் - மற்ற மூன்று பகுதியும், செப்பும் - (அஸ்தி அவக்தவ்வியமென்றும், நாஸ்தியவக்தவ்வியமென்றும், ஸ்யாதஸ்திநாஸ்தியவக்தவ்வியமென்றும்) சொல்லும், எ - று.

இவ்வாறு கூறியதனால், இந்த விதமாக ஒரு பொருளிடத்தே ஸப்தபங்கி நயம் தெரிந்து திரவிய நிச்சயம் செய்ய வேண்டியதென்பது பெறப்படும். (கஎகூ)

710. செப்பிய பங்க மேழும் வத்துக்க டோறுஞ் செல்லு
மிப்படி யுரைத்த வெல்லா மேவகா ரத்தோ டொன்றிற்
றப்பித்தீ நயங்க ளாகித் தடுமாற்றந் தன்னை யாக்கும்
மெய்ப்பட வுணர்ந்த போழ்தின் வீட்டினை விளக்கும் வேந்தே.

(இ - ள்) வேந்தே - கிரணவேக மகாராஜனே!, செப்பிய - இப்பொழுது சொல்லப்பட்ட, பங்கமேழும் - ஸப்தபங்கிகள் ஏழும், வத்துக்கள் தோறும் - ஜீவாதி பொருள்கள் தோறும், செல்லும் - சேர்ந்திருக்கின்றனவாகும், இப்படி - இந்தப் பிரகாரம், உரைத்தவெல்லாம் - சொல்லப்பட்டவைகளை யெல்லாம், ஏவகாரத்தோடு - தனித்தனியாகவே, (அஸ்தியேவ, நாஸ்தியேவ, என்று), ஒன்றில் - பொருந்தினால், தப்பி - (திரவ்யபிரமாண நிச்சயங்கள்) கெட்டு, தீநயங்களாகி - மித்தியாநயங்களாகி, தமோற்றந்தன்னை - சம்சாரத்தில் தமோற்றந்தன்னை, ஆக்கும் - செய்விக்கும், மெய்ப்பட - உண்மையாக, உணர்ந்த போழ்தின் - அறிந்த காலத்தில், வீட்டினை - மோட்சத்தை, விளைக்கும் - உண்டு பண்ணும், எ - று.

வஸ்து யாதாத்மிய மறியாமையால் பந்தமே யாகுமென்பது இதன்கருத்து.

711. அனுதிமிச் சோத யத்தா லறிவுமிச் சத்த மாகிக்
கனவினும் மெய்ம்மை காணார் பான்மையாங் காலம் வந்தால்
வினவிமெய் யுணர்ந்த வற்றி னெழுந்தநல் விசோதி தன்னா
லனுதிமிச் சுவச மத்தா லடையுஞ்சம் மத்தம் வேந்தே.

(இ - ள்) வேந்தே - கிரணவேக அரசனே!, அனுதி - அனுதியாகவே, மிச்சு - மித்தியாத்துவ கர்மத்தினுடைய, உதயத்தால் - உதயத்தினால், அறிவு - ஞானமானது, மிச்சத்தமாகி - மித்தியாத்துவமாகி (அதாவது கலங்கி, ஸ்வரூபம் மறைந்து), கனவினும் - சொப்பனத்திலும், மெய்ம்மை - உண்மையை (அதாவது: யதாத்மியத்தை), காணார் - அறியாதவர்கள், பான்மை ஆம் - பான்மையாகிற, காலம் வந்தால் - காலமானது வந்தால், (அப்பொழுது), வினவி - ஒருவரைக் கேட்டு, மெய்யுணர்ந்து - உண்மையை யறிந்து, அவற்றின் - அவற்றினால், எழுந்த - உண்டாகிய, நல் - நன்மையாகிய, விசோதி தன்னால் - க்ஷயோபசம லப்தியினால், அனுதி - அனுதியாக பந்தித்துவராநின்ற, மிச்சு - மித்தியாத்துவப் பிரகிருதி, உவசமத்தால் - உபசமபாவத்தால், சம்மத்தம் - ஸம்மியக்துவமானது, அடையும் - ஆத்மனிடத்திற் சேரும், எ - று.

'உணர்ந்த போழ்தினெழுந்த' என்று வேறுபாடமுண்டு. (கஙக)

712. எழுபது கோடா கோடி சாகரத் திழிந்து நின்ற
பழுதெலாஞ் செய்ய வல்ல மிச்சத்தப் பகடி தன்னை
யழியவே சார்ந்த கோடா கோடிமே லந்த மூழ்த்த
மொழியமேற் றிதியைச் சோதி சாம்வண்ண மொருங்கு வீழ்க்கும்.

(இ - ள்) எழுபது கோடாகோடி சாகரத்து - உத்கிருஷ்டஸ்திதியில் எழுபது கோடாகோடி கடலில், இழிந்து நின்ற - குறைந்து நின்றதாகிய, பழு

தெலாம் - (ஆத்மஸ்வபாவ குணத்தையாக வொட்டாத) குற்றங்களையெல்லாம், செய்யவல்ல - செய்யும்படியான, மிச்சத்தப்பகடி தன்னை - மித்தியாத்துவப் பிரகிருதியை, அழிய - கெட, சார்ந்த - (முன்சொன்ன ஸ்திதி நிலைமையில்) சார்ந்த, அந்தக் கோடாகோடி மேலந்த மூழ்த்த மொழிய - அந்தக் கோடா கோடி மேல் அந்தர் முகூர்த்தம் நீங்கலாக (அதாவது : அவ்வளவு ஸ்திதியிருக்க), மேல் திதியை - அதற்கு மேல்பட்ட மத்தியமோத்கிருஷ்ட ஸ்திதிகளையெல்லாம், சோதி - விசோதி லப்தியானது, சாம்வண்ணம் - கெடும்; விதமாக, ஒருங்கு - ஒருமிக்க- வீழ்க்கும் - நீக்கும், எ - று. (கஙிஉ)

713. நின்றகீட் டிதியைக் கண்டங் கணந்தொறு நெறியிற் செய்யா
பந்தமு நாற்பத் தோரு பகடிகட் கொழித்த போழ்தே
வந்துடன் கட்டுந் தீய நல்வினைத் திதி சுருக்கா
வந்தமூழ்த் தஞ்சென் றந்த விசோதிய தகன்ற பின்னை.

(இ - ள்) நின்ற - இப்படியாகி நின்ற, கீழ்திதியை-குறைந்த ஸ்திதியை, கண்டம் - கண்டங் கண்டங்களாக, கணந்தொறும் - ஸமயம் பிரதிஸமயம், நெறியில் - கிரமத்தினால், செய்யா - செய்து, நாற்பத்தோரு பகடிகட்கு - மித்தியாத்துவாதி நாற்பத்தொரு பிரகிருதிகளுக்கு, பந்தமும் - பந்தகாரண பரிணாமமும், ஒழித்த - நீக்கின, போழ்து - அப்பொழுது, வந்து - ஆத்ம பரிணாமத்தால் வந்து, உடன் - ஆத்மனுடனே, கட்டும் - பந்திக்கும்படியான, தீய நல்வினை - சேஷ பாபபுண்ணிய வினைகளின், திதி - ஸ்திதியை, சுருக்கா - குறைத்து, அந்த மூழ்த்தம் சென்று - ஒரு அந்தர் முகூர்த்த காலம் சென்று, அந்த விசோதியது - தேசனாலப்தியென்கிற அந்தப் பரிணாமமானது, அகன்ற பின்னை - நீங்கின பிறகு, எ - று.

நாற்பத்தாறு பகடிகட்கென்றும் சில பிரதிகளில் பாடபேதமுண்டு. இந்தப் பிரகிருதிகளின் விவரம், ஸூகபோதை, பதார்த்த ஸாரம், கோம்மடஸாரம் ஆகிய வற்றில், சொல்லப்பட்டிருக்கிறது.

**நாற்பத்தொரு பிரகிருதிகளின் நாமங்களாவன :**

| | | |
|---|---|---|
| 1. மித்தியாத்துவம் | 8. த்ரீந்திரியஜாதி | 13. ஸ்தாவரம் |
| 2. நபும்ஸகவேதம் | 9. சதுரிந்திரியஜாதி | 14. ஸூக்ஷ்மம் |
| 3. நரகாயுஷ்யம் | 10. ஹூண்டஸம்ஸ்தானம் | 15. அபர்யாப்தகம் |
| 4. நரககதி | | 16. சாதாரணசரீரம் |
| 5. நரக கத்யானு பூர்வி | 11. அஸம்பிராப்தஸ்ரபாடிகாஸம்ஹனனம் | 17. நித்திராநித்திரை |
| 6. ஏகேந்திரியஜாதி | | 18. பிரசலாப்ரசலை |
| 7. த்வீந்திரியஜாதி | 12. ஆதபம் | 19. ஸ்த்யானக்கிருத்தி |

| | | |
|---|---|---|
| 20. அனந்தானுபந்திக் குரோதம் | 27. திரியக்கத்யானுபூர்வி | 34. அர்த்தநாராச, ஷை |
| 21. ஷை மானம் | 28. ந்யக்குரோதஸம்ஸ்தானம் | 35. வஜ்ரநாராச, ஷை |
| 22. ஷை மாயை | 29. ஸ்வாதிஸம்ஸ்தானம் | 36. உத்யோதம் |
| 23. ஷை லோபம் | 30. வாமனஸம்ஸ்தானம் | 37. அப்பிரசஸ்தவிஹா [யோகதி |
| 24. ஸ்த்ரீவேதம் | 31. குப்ஜஸம்ஸ்தானம் | 38. துர்ப்பகம் |
| 25. திரியக்காயுஷ்யம் | 32. கீலித, ஸம்ஹனனம் | 39. துஸ்வரம் |
| 26. திரியக்கதி | 33. நாராச, ஷை | 40. அநாதேயம் |
| | | 41. நீசைர்கோத்திரம் |

714. கணந்தொறு மனந்த மாகுங் குணமுடை விசோதி தோன்று
கணந்தொறுங் கட்டு கின்ற வினைத்திதி சுருக்கிக் கட்டா
கணந்தொறும் படிய னந்தம் நல்வினைப் பாக மேற்று
கணந்தொறு மளவிற் கட்டுந் தீவினைப் பாகம் வீழ்க்கும்.

(இ - ள்) கணந்தொறும் - ஸமயஞ் சமயந்தோறும், அனந்தமாகும் - முடிவில்லாமையாகிய, குணமுடை - ஸம்யக் குணங்களையுடைய, விசோதி - ப்ராயோக்கியதாலப்தியானது, தோன்று - தோன்றி, கணந்தொறும் - ஸமயந்தோறும், கட்டுகின்ற - பந்திக்கின்ற, வினை - கருமங்களினது, திதி - ஸ்திதியை, சுருக்கி - குறைத்து, கட்டா - கட்டி, கணந்தொறும்படி - பிரதிசமயந்தோறும் அவ்விதம், அனந்தம் - முடிவில்லாத, நல்வினை - புண்ணிய கருமத்தின், பாகம் - அனுபாகத்தை, ஏற்று - உயர்த்தியும், கணந்தொறும் - ஸமயந்தோறும், அளவில் - முன் சொன்ன வளவினால், கட்டும் - பந்தித்த, தீவினை-பாபகர்மத்தினது, பாகம் - அனுபாகத்தை, வீழ்க்கும் - கெடுக்கும், எ - று.

இங்ஙனம் கூறியதனால், இவ்வாறு பாபவினைக்கு ஸ்திதிகாண்ட காதகமும் செய்யும் என்பது பெறப்படும். (கஙிச)

715. இவ்வகைப் பயத்த தாய விதன்பின்வந் ததற்ப மத்த
மவ்வகைப் பயத்தைச் செய்யா வந்தமூழ்த் தத்தி னீங்கக்
கவ்வைசெய் வினைக்குக் காலன் போலபுவ் வாணி தோன்றிச்
செவ்வியிற் றிதியி னோடு பாகத்தைச் சிதைக்கு கின்றே.

(இ - ள்) இவ்வகை - இவ்விதமாகிய, பயத்ததாய - பலனைச் செய்யும்படியான தாகிய, இதன் பின் - இந்த ப்ராயோக்கியதாலப்தி பரிணாமத்தின் பிறகு, வந்தது - வரப்பட்டதாகிய, அதற்பமத்தம் - கரணலப்தியில் அதப்ரவர்த்தி கரண பரிணாமமானது, அவ்வகைப்பயத்தை - முன் ப்ராயோக்கியதா பரிணாமத்திற்குச் சொன்ன பலனையே, செய்யா - இப்பரிணாமமும் செய்து, அந்தமூழ்த்தத்தின்.

; அந்தர் முகூர்த்த காலத்தில், நீங்க - நீங்கிவிட (உடனே), கவ்வை - துன்
தை, செய் - செய்யும்படியான, வினைக்கு - கருமத்திற்கு, காலன் போல -
மனைப் போல, புவ்வாணி - அபூர்வகரணலப்தி பரிணமமானது, தோன்றி -
டாகி, நின்று - அந்தர்முகூர்த்தம் நின்று, செவ்வியில் - நன்மையில்லாத பாப
மங்களினுடைய, திதியினோடு - ஸ்திதியோடு, பாகத்தை - அனுபாகத்தையும்,
தக்கும் - கெடுக்கும், (அதுவல்லாமலும்), எ - று.

இதுவும் அடுத்த செய்யுளுங் குளகம். (கடுரு)

6. விதியினிக் கேபத் தோடு குணந்தசங் கமத்தைச் செய்யா
புதியவாம் விதியின் பாகந் திதியைமுன் போலக் கட்டா
பதராறு பலன்க ளாறைப் பயந்தபுவ் வாணி நீங்க
வதிசயம் பலவுஞ் செய்யு மணியட்டி விசோதி தோன்று.

(இ - ள்) விதியின் - கிரமத்தினால், நிக்கேபத்தோடு - குணநிக்ஷேபத்
ாடு, குணந்தசங்கமத்தை - குணசங்கிரமணத்தையும், செய்யா - செய்து, புதிய
ம் - முன்சொல்லாத புதியனவாகிய, விதியின் - புண்ணிய வினைகளினுடைய,
கம் - அனுபாகத்தையும், திதியை - ஸ்திதியையும், முன்போல - முன்னே
ால்லியதுபோல, கட்டா - உயர்த்திக் கட்டியும், பதராறு - குற்றமற்ற, பலன்க
றை - இப்படி ஆறுவிதமான பலன்களை, பயந்த - உண்டுபண்ணிய, புவ்வாணி-
பூர்வகரண பரிணமமானது, நீங்க - நீங்கிவிட, அதிசயம் பலவும் - அதற்குமேல்
த்மனுக்குப் பல அதிசயமான குணங்களை, செய்யும் - செய்யும்படியான, அணி
ட்டி - அநிவர்த்திகரணமென்கிற, விசோதி - பரிணமமானது, தோன்று -
ான்றி, எ - று.

இதுவும் அடுத்த பாடலும் குளகம். (கடுசு)

17. பந்தசந் தத்தைச் சார்ந்த நால்வகைப் பயத்தை யாக்கா
வொன்றலா வினைக்குக் கட்ட மோகட்ட மொருங்கு செய்யா
நின்றுடன் குணத்தச் சேடி நிக்கேவந் தன்னை யாக்கா
குன்றிய வினைகட் கென்றுங் குணந்தசங் கமத்தைச் செய்யா.

(இ - ள்) ஒன்றலா - இரண்டாகிய, வினைக்கு - புண்ணிய பாபமென்னும்
னைகளுக்கு, பந்தசந்தத்தை - பந்தத்தையும் ஸத்துவத்தையும், சார்ந்த - சேர்ந்
ாநின்ற, நால்வகைப் பயத்தை - நாலுவகைப் பலனை, (அதாவது: பாபவினை
ளுக்கு ஸத்துவத்தையும் உதீரணையையும் புண்ணிய வினைகளுக்கு பந்தத்தையும்
யத்தையும்), ஆக்கா - செய்து, (அதுவல்லாமலும்), உக்கட்டம் - புண்ணிய
னக்கு உத்கிருஷ்ட ஸ்திதியையும், மோகட்டம் - பாபவினைகளுக்கு அபக்ருஷ்ட
திதியையும் (அதாவது: ஜகன்னிய ஸ்திதியையும்), ஒருங்கு - ஒருங்கே,

'சய்யா - செய்து, குணத்தச் சேடியுடனின்று - குணஸ்ரேணியில் ஆரோஹண ாக நின்று, நிக்கேவந்தன்னை - குணநிக்ஷேபத்தையும், ஆக்கா - செய்து, என் 'ம் - அப்பரிணாமத்தால் எந்நேரமும், வினைகட்கு - கருமங்களுக்கு, குன்றிய - றைவையடைந்த, குணந்த சங்கமத்தை - மேலும் மேலும் ஸம்மியக்குண ஸங் ரமணத்தையும், செய்யா - செய்து, (அதுவன்றியும்), எ - று.

இதுவும் அடுத்த செய்யுளோடு தொடரும். (கஎ)

18\. அணியட்டி கரணம் பின்னை யந்தரக் கரணஞ் செய்யா
விதியந்தக் கோடா கோடி மூழ்த்தமேல் கீழ்முன் னின்ற
தனைவிட்டு நடுவ ணந்த மூழ்த்தமாய் நிடேதித் தன்கண்
வினையினைக் கீழு மேலு மந்தர வெளியைச் செய்யா.

(இ - ள்) அணியட்டி கரணம் - அந்த அநிவிர்த்தி கரண பரிணாமமானது, ின்னை-தனது காலமாகிய ஒரு அந்தர் முகூர்த்த காலத்தின் பிறகு அந்தியத்தில், யந்தரக்கரணம் - அந்தரக்கரணம் என்னும் ஒரு தன்மையை, செய்யா - செய்து, அவ்வந்தரக்கரணமான), விதி - (முன் விசோதிலப்தியில்) விதிக்கிரமத்தால், 'மல் - (மித்தியாத்துவ கருமத்தின்) உத்கிருஷ்ட ஸ்திதியையும், அந்தக் கோடா 'காடி மூழ்த்தம் - அந்தக் கோடாகோடி அந்தர் முகூர்த்தமாகிய, நடுவண் - மத்தி ஸ்திதியாகி, முன்னின்றதனை - முன்னால் நிற்கப்பட்டவந் நிலையையும், கீழ் - ]கன்னிய ஸ்திதியாகிய, அந்த மூழ்த்தமாய் - அந்தர் முகூர்த்தமாக, நிடேதித்து - ிஷேதித்து (அதாவது : குறைத்து), தன்கண் - ஆத்மனிடத்தில், (உள்ள), பினையினை - மித்தியாத்துவ கர்மத்தை, கீழும் - தன்னுடைய அதோ பாகத்தி லும், மேலும் - ஊர்த்துவ பாகத்திலும், (தள்ளி), அந்தரம் - நடுவில், வெளியை - ிரகாசத்தை (அதாவது : ஆத்மஜோதியை), செய்யா - செய்து, எ - று.

நிடேதித்து தன் என்பது நிடேதித்தன் எனத் தொகுத்தலாயிற்று. (கஅ)

'19. வெளியின்மேல் மிச்சத் தத்தின் வெம்மையைத் தண்மை செய்யா
வெளியின்கீழ் மிச்ச மெல்லாம் விரகுளி யெழுந்த போழ்தி
லளவிலா ஞானங் காட்சி யக்கணத் தெழுந்த வற்றால்
வெளியின்மே னின்ற துண்டங் கண்டமூன் றாகிவீழும்.

(இ - ள்) வெளியின்மேல் - ஆத்ம வெளியினது ஊர்த்துவபாகத்தி லிரா நின்ற, மிச்சத்தத்தின் - மித்தியாத்துவ கருமத்தினுடைய, வெம்மையை - வெப் பத்தை, தண்மைசெய்யா - குளிர்ச்சி செய்து, வெளியின் - ஆத்மவெளியின், கீழ் - அதோபாகத்திலிராநின்ற, மிச்சமெல்லாம் - மித்தியாத்துவமெல்லாம், விரகுளி - கிரமமாக, எழுந்தபோழ்தில் - விலகின காலத்தில், அளவிலா - அளவில்லாத, ஞானம் - ஸம்மியக்ஞானமும், காட்சி - ஸம்மியக் தர்சனமும், அக்கணத்து -

அந்த ஸமயத்தில், எழுந்து - ஆத்மனிடத்தில் தோன்றி, அவற்றால் - அவைகளி ளுல், வெளியின்மேல் - ஆத்மவெளியின் மேல்பாகத்தில், நின்ற - குளிர்ந்திரா நின்ற, துண்டம் - மித்தியாத்துவ துணிக்கையானது, கண்டம் மூன்றாகி - மூன்று துண்டுகளாகி, வீழும் - வீழா நிற்கும், எ - று. (கசுக)

720. திரியிற்பெய் தரைத்த போழ்திற் றிரிவித மாகி வீழும்
வரகைப்போல் மிச்சஞ் சம்மா மிச்சஞ்சம் மத்த மாகி
விரகினால் வீழ்ந்த மூன்றோ டனந்தானு பந்தி நான்காந்
திரையினை யவித்தான் மாற்றாந் திண்கடற் கரையைக் காணும்.

(இ - ள்) திரியில் - இயந்திரத்தில், பெய்து - இட்டு, அரைத்தபோழ் தில் - அரைத்த காலத்தில், திரிவிதமாகி - (வரகு, கப்பி, அரிசி, என்று) மூன்று விதமாக, வீழும் - வீழ்கின்ற, வரகைப்போல் - வரகு என்கிற தான்யம்போல், (இந்த மித்தியாத்துவமும்), மிச்சம் - மித்தியாத்துவமென்றும், சம்மாமிச்சம் - சம்மியக் மித்தியாத்துவமென்றும், சம்மத்தமாகி - ஸம்மியக்துவமுமென்றாகி, விரகினால் - கிரமத்தினால், வீழ்ந்த - வீழப்பட்ட, மூன்றோடு - மூன்றினோடு, நான்காம் - நாலுவிதமான, அனந்தானுபந்தி திரையினை - அனந்தானுபந்தி, (குரோத, மான, மாயா, லோபமென்னும் ஸம்ஸார ஸமுத்திரத்தின்) அலைகளை, அவித்தான் - உபசமிக்கப் பண்ணியவன் (அதாவது : உபசமஸம்மியக்துவ பரி ணாம விசோதியுற்றவன்), மாற்றாம் - ஸம்ஸாரமாகிற, திண்கடல் - வலிமையாகிய ஸமுத்திரத்தினது, (அதாவது : அனாதியாகிய ஸம்ஸார சுழற்சியினது), கரையை- முடிவை, காணும் - காண்பான், எ - று. (கசுo)

721. மிச்சத்தப் பகடி யேழும் விரகினா லுவச மிப்ப
வுச்சத்தி னின்ற வீர னுபசம சம்மத் திட்டி
மிச்சத்தப் பகடி பந்த முதல்வியா பார நீங்கா
வச்சத்தை வினைகட் காக்கி யந்தமூழ்த் தளவு நிற்கும்.

(இ - ள்) மிச்சத்தப்பகடி யேழும் - மித்தியாத்துவ பிரகிருதியாகிய, (மித்தியாத்துவம், ஸம்மியக் மித்தியாத்துவம், ஸம்மியக்துவப் பிரகிருதி, அனந் தானுபந்தி, குரோத, மான, மாயா, லோபமென்னும், இந்த) ஸப்தவித மித்தியாத் துவ பிரகிருதிகளும், விரகினால் - கிரமத்தினால், உவசமிப்ப - உபசமத்தையடைய, உச்சத்தின் - (ஸம்மியக்துவமாகிற ரத்ன பர்வதத்தினுடைய) சிகரத்தில், நின்ற - இராநின்ற, வீரன் - பராக்கிரம புருஷன், உபசமசம்மத்திட்டி - உபசம சம்மியக் திருஷ்டியாகும், (அந்த உபசம சம்மியக்திருஷ்டியின் நிலைமையானது), மிச்சத் தப்பகடி - மித்தியாத்துவ பிரகிருதிகளுக்கு, பந்தமுதல் - பந்தம் முதலாகிய, வியாபாரம்-வியாபாரத்தை, நீங்கா-நீங்கி, வினைகட்கு-கருமங்களுக்கு, அச்சத்தை -

பயத்தை, ஆக்கி - செய்து, அந்த மூழ்த்தளவு - ஒரு அந்தர் முகூர்த்தகாலம் வரையில், நிற்கும் - அப்பரிணாம நிலைமை நிற்கும், எ - று. (௭௨௧)

722\. உபசம காலத் துள்ளோ ரனந்தானு பந்தி தோன்றிற்
குபதமாஞ் சாதஞ் சம்மாத் திட்டியாங் குணத்தை யெய்து
முபசம காலத் தின்பின் மூன்றத்தொன் றுதய மாதல்
சபதமா மிச்சஞ் சம்மா மிச்சிலத் தன்மை தானும்.

(இ - ள்) உபசம காலத்துள் - உபசம காலமாகிய அந்தர் முகூர்த்தம் நிரம்புவதற்குள் (அந்திய பாகத்தில்), ஓர் அனந்தானுபந்தி - அனந்தானுபந்தி (குரோத, மான, மாயா, லோபங்களுள் யாதானு) மொன்று, தோன்றில் - உதயஞ் செய்யுமானல், குபதமாம்-குத்ஸிதபதமாகும் (அதாவது: ஸம்மியக்துவ பர்வதத்து மேனின்று தலை கீழாக விழுகிற பரிணமமாகும்; அவ்வாறுகி அது), சாதஞ் சம்மாத்திட்டியாம் - ஸாஸாதன ஸம்மியக்திருஷ்டியாகிற, குணத்தை - குண ஸ்தானத்தை, எய்தும் - அடையும், உபசம காலத்தின் பின் - உபசமகாலப் பிரமாணமான ஒரு அந்தர் முகூர்த்தத்தின்மேல், மூன்றத்தொன்று - (மித்தியாத் துவம், ஸம்மியக் மித்தியாத்துவம், ஸம்மியக்துவ பிரகிருதிகளாகிய) மூன்றில் யாதாகிலுமொன்று, உதயமாதல் - உதயங்கொடுத்தல், சபதமாம் - அந்த பத மாகும், (அவ்வாறுவதில்), மிச்சம் - (மித்தியாத்துவம் உதயங் கொடுத்தால்) மித்தி யாத்துவமும், சம்மாமிச்சு - (ஸம்மியக் மித்தியாத்துவ முதயங் கொடுத்தால்) ஸம்மியக் மித்தியாத்துவமும், (அல்லது மிஶ்ருகுணம்), இலத்தன்மை ஆம்-(மித் தியாத்துவமில்லாத ஸம்மியக்துவ பிரகிருதியுதயமானல் அப்போது) ஸம்மியக் துவமுமாகும், எ - று.

தான் - அசை. (௭௨௨)

723\. வேதக முதித்த போழ்தின் மெய்யுணர் வோடு காட்சிக்
கியாதுமோர் குற்ற மெய்தா தெறியுந்தீ வினைக டம்மைப்
போதியுங் காட்சி தானும் பூரணை சென்று நின்று
காதவே தகமுன் னேழைக் காட்சிகா யிகம தாமே.

(இ - ள்) வேதகம் - ஸம்மியக்துவ பிரகிருதியானது, உதித்த போழ்தில் - உதயத்தைக் கொடுத்த காலத்தில், மெய்-உண்மை ஸ்வரூபத்தை யறியும்படியான, உணர்வோடு - ஸம்மியக் ஞானத்தோடு, காட்சிக்கு - ஸம்யக் தரிசனத்திற்கும், யாதும் - எவ்வளவும் (அதாவது: கொஞ்சமாகிலும்), குற்றம் - குற்றத்தை, எய்தாது - அடையாமல், தீவினைகள் தம்மை - பாபவினைகளை, எறியும் - கெடுக் கும், (அப்போது), போதியும் - ஸம்மியக்ஞானமும், காட்சிதானும் - ஸம்மியக் தரிசனமும், பூரணை சென்று - பூர்த்தியடைந்து, நின்று - நிலைபெற்று, வேத

கம் - அந்த வேதக சம்மியக்துவமானது, முன் - முன்னால் சொல்லப்பட்ட, ஏழை - ஸப்த பிரகிருதிகளை, காத - கெடுக்க, (அப்போது), காட்சி - தரிசன மானது, காயிகமதாம் - க்ஷாயிகமாகும், (அதாவது: க்ஷாயிக ஸம்மியக்துவமென்று சொல்லப்படும்), எ - று.

க்ஷாயிக ஸம்மியக்துவமானது, க்ஷாயிக ஸம்யக்தரிசனமென்றும் சொல்லப் படும்; அந்நிலைமையடைந்தவன் க்ஷாயிக ஸம்மியக்திருஷ்டியாவன்.

ஓர் - அசை. (கஎங)

**இப்படி உபசம, வேதக, க்ஷாயிக ஸம்மியக்துவமென்னும் மூன்றுவிதமான ஸம்மியக்துவ நிலைமைகள், நாலாங்குண ஸ்தான முதல் இன்னவிதமாக வர்த்திக்குமென்னும் விவரம் இனிச் சொல்லப்படுகின்றது.**

724. அடக்கமி லானை யாதி நால்வர்க்கு மூன்று மாகு
முடைத்திடா துவச மிப்பார் நால்வருக் குபச மித்தாங்
கெடுத்தவ ரறுவர்க் காகிற் கேட்டின்க ணுய தாகுந்
தடக்கைமா வேந்தே யென்றான் றத்துவத் தவத்து வேந்தன்.

(இ - ள்) தத்துவம் - ஜீவாதிதத்துவ ஸ்வரூபங்களையறிந்த, தவத்து - மிகுதியான தபோ மாஹாத்மியத்தையுடைய, வேந்தன் - முனிவர்களுக்குள் ஸ்ரேஷ்டனாகிய அரிச்சந்திர மஹாமுனிவன், தடக்கை - பெரிய துதிக்கையை யுடைய, மா-யானைக்குத் தலைவனாகிய, வேந்தே-கிரணவேக மகாராஜனே!, அடக்க மிலானையாதி-அஸம்மியத ஸம்மியக்திருஷ்டி குணஸ்தானன் முதலாக,நால்வர்க்கு- நாலுபேர்களுக்கு (அதாவது: அஸம்யதன், தேசசம்யதன், பிரமத்தன், அப்பிரமத் தன்என்கிற நாலு குணஸ்தானவர்த்திகளுக்கு), மூன்றும் ஆகும்-(உபசமஸம்மியக் துவம், வேதக ஸம்மியக்துவம், க்ஷாயிகஸம்மியக்துவம், என்கிற) மூன்றுமாகும், (அதாவது: இந்த மூன்றிலும் எதானாலுமாகும்), உடைத்திடாது-கருமங்களைக் கெடுக்காமல், உவசமிப்பார்-உபசம ஸ்ரேணியிலேறுபவர்கள், நால்வருக்கு-(அபூர்வ கரண, அநிவிருத்திகரண, ஸூக்ஷ்மஸாம்பராய, உபசாந்தகஷாய, என) நான்கு குணஸ்தானத்தில் உள்ளவர்களுக்கு, உபசமித்தாம்-உபசமஸம்மியக்துவ மொன் றேயாகும், கெடுத்தவர் அறுவர்க்காகில் - க்ஷபகஸ்ரேணியிலேறிக் கருமங்களைக் கெடுத்தவர்களாகிய ஆறுபேர்களுக்காகில் (அதாவது: அபூர்வகரண, அநிவிருத் திகரண, ஸூக்ஷ்மஸாம்பராய, க்ஷீணகஷாய, ஸயோகிகேவலி, அயோகிகேவலி, என்னும் ஆறு குணஸ்தானவர்த்திகளுக்காகில்), கேட்டின் கண்ணுயது - கர்மக்ஷ பணத்தினாலாகிய க்ஷாயிக ஸம்மியக்துவமொன்றே, ஆகும் - ஆம், என்றான் - என்று சொன்னான், எ - று.

எனவே முதல் மூன்று குணஸ்தானத்தில் ஸம்மியக்துவமில்லை யென்பதாயிற்று. இதுவன்றியும் ஸம்மியக்துவம் இந்த மூன்று பிரகாரமல்லாமல் பத்துப் பிரகாரமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் விவரம் பதார்த்தசாரத்தில் ஸம்மியக்துவமார்க்கணை யென்னும் அதிகாரத்தில் பார்த்துக் கொள்ளலாம். அடக்கமிலானை யென்பதில் ஐ - சாரியை. (கசுச)

725. காட்சியு மறிவு மின்ன கதிர்ப்பவைம் பொறியும் வென்று
பூட்சிசா லொழுக்கந் தாங்கிப் புரிந்தெழு தியான வாளால்
வேட்கைவே ரறுத்துக் காதி வினைகளை வென்ற போழ்தி
லாட்சிமூ வுலக மாகு மரசமற் றறிமோ வென்றான்.

(இ - ள்) (மேலும்) காட்சியும் - தரிசனமும், அறிவும் - ஞானமும், இன்ன - இப்பேர்ப்பட்டனவாய் (அதாவது: இப்போது சொன்ன பிரகாரம்), கதிர்ப்ப - பிரகாசிக்க, ஐம்பொறியும் - பஞ்சேந்திரியங்களையும், வென்று - விஷயங்களில் செல்ல வொட்டாமல் தடுத்து ஜெயித்து, பூட்சி - பொருந்தும்படியான, சால் - மிகுதியாகிய, ஒழுக்கம் - ஸச்சாரித்திரத்தை, தாங்கி - தரித்து, புரிந்து - விரும்பி, எழும் - உண்டாகின்ற, தியானவாளால் - தர்மத்தியான சுக்கிலத்தியானமாகிற வாளாயுதத்தினால், வேட்கை - ஆசையாகிற, வேர் - சம்சார மூலத்தை, அறுத்து - சேதித்து, காதிவினைகளை - (ஆத்மகுண காதங்களான) காதிகருமங்களை, வென்றபோழ்தில் - ஜெயித்த காலத்தில், மூவுலகும் - இந்த மூன்று லோகமும், ஆட்சியாகும் - தன் ஆள்கைக்குட்பட்டு வசமாகும், அரச - கிரணவேக மகாராஜனே!, அறிமோ - அறிவாயாக, என்றான் - என்றும் முனிவான் கூறினான், எ - று.

மூவுலகும் தன் வசமாகுமென்றதனால் தனது குணத்தைக் கெடுக்க வுலகில் எவையாலும் ஆகாதென்பதும், அதனால் அனந்த ஸுகமாயிற்றென்பதும் பெறப்படும். (கசுரு)

726. மாத்வன் மலர்ந்த வாய்மை மணிவிளக் கெறிப்ப மைய
லாதியா மந்த கார மகன்றதன் னறிவு காட்சி
யோதிய வகையிற் றோன்ற வுலப்பிலாப் பொருளைக் கண்டா
னேதமொன் றிலாமைக் கேது வியற்றுவ னென்று சொன்னான்.

(இ - ள்) (அவ்வாறு கூறிய பின்பு) மாதவன் - உத்கிருஷ்டமான தவத்தையுடைய முனிவன், மலர்ந்த - வாய்மலர்ந்து கூறிய, வாய்மை - உண்மை ஸ்வரூபமாகிய, மணிவிளக்கு - இரத்தின தீபமானது, எறிப்ப - பிரகாசிப்ப, மையலாதியாம் - மித்தியாத்துவம் முதலாகிய, அந்தகாரம் - இருளானவை, அகன்ற - நீங்கின, (அப்போது), தன்னறிவு - தனது ஸ்வரூபமாகிய ஸம்மியக்

ஞானமும், காட்சி - ஸம்மியக்தரிசனமும், ஓதிய வகையில் - முனிவரன் சொன்ன விதமாக, தோன்ற - உத்பன்னமாக, உலப்பிலா - கெடுகையில்லாத, (அதாவது : நிச்சயமாகிய), பொருளை - ஜீவாதி திரவியங்களை, கண்டான் - யதாஸ்வரூபமாகத் தெளிந்தான், (அதனால் அப்போது), ஏதமொன்று - யாதொரு குற்றமும், இலாமைக்கு - இல்லாமையாகிய ஸ்வபாவ குணத்தையடைவதற்கு, ஏது - காரணமாகிய தவத்தை, இயற்றுவன் - செய்வேன், என்று - என்று, சொன்னான்-கிரணவேக மகாராஜன் சொன்னான், எ - று. (௭௨௬)

727. விரிதிரை வீந்து தோன்றல் வெள்ளம்வெந் துயரம் வேலை
திரிபுவ னத்தி னெல்லைத் திமிர்களாற் கதிக ளாசை
யெரிபுரி வடவை யின்பந் தீபமாற் றுழி நின்றிவ்
வுரையெனுந் தோணி சித்தி பத்தனத் துய்க்கு மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும்), மாற்றுழி - ஸம்ஸாரமாகிற சமுத்திரத்தில், வீந்து - இறந்து, தோன்றல் - பிறத்தல் (அதாவது : இறந்து பிறக்கிறதாகிய இந்த ஜனனமரணமே), விரி - விசாலித்த, திரை - அலைகளாம், வெம் - வெப்பம் பொருந்திய, துயரம் - துக்கமானது, வெள்ளம் - ஜலப்பிரவாகவருத்தாகும், திரிபுவனத்தின் - மூன்றுலோகத்தினுடைய, எல்லை - முடிவானது, வேலை - கரையாகும், நாற்கதிகள் - சதுர்க்கதிகள், திமிர்கள் - மேடுகளாகும், ஆசை - ஆசையானது, எரிபுரி - உஷ்ணத்தைச் செய்கின்ற, வடவை - வடவாமுகாக்கினியாகும், இன்பம் - சுகமானது, தீபம் - ரத்னதீபம் முதலான தீவுகளுக்குச் சமானமாகும், (ஆதலின்), நின்று-இப்படிப்பட்ட ஸம்சார சமுத்திரத்திலிருந்து, இவ்வுரையெனும் - முனிவரால் கூறியருளப்பட்ட இந்தத் தர்ம வசனமென்னும், தோணி - படகானது, சித்திபத்தனத்து - (தன்னில் ஏறுகின்றவர்களை) மோட்சமென்னும் நகரியில், உய்க்கும் - கொண்டுபோய்ச் சேர்க்கும், என்றான் - என்றும் கிரணவேக மகாராஜன் பாவனை செய்தான், எ - று. (௭௨௭)

728. போகமும் பொருளு மெல்லாம் மேகமுந் திரையும் போலும்
சோகமுந் துயரு மாக்குந் தொடுகடற் சுற்ற மாகும்
நாகமும் நிலமும் பெற்றால் நாலைந்து நாளில் வேறாம்
யோகியாய் வினையை வெல்வ னிறைவனென் றுரைசெய் தானே.

(இ - ள்) (பின்னரும் அவன் அம்முனிவரை நோக்கி), போகமும் - போகோப போகங்களும், பொருளும் - ஐசுவரியாதிகளும், (ஆகிய), எல்லாம் - யாவும், மேகமும் - ஆகாயத்தில் தோன்றும் மேகமண்டலமும், திரையும் - ஸமுத்திரத்துண்டாகிய அலைகளையும், போலும் - நிகர்க்கும், (அதாவது: அவற்றைப்போல சீக்கிரம் அழிந்து போகப்பட்டனவாகும்), தொடு - சேர்ந்திராநின்ற, சுற்ற

மாகும் - பந்துஜன ஸமூகங்களாகிற, கடல் - சமுத்திரமானது, சோகமும் - வருத்தத்தையும், துயரும் - துக்கங்களையும், ஆக்கும் - உண்டுபண்ணும், நாகமும் - தேவருலகமும், நிலமும் - பூமிராஜ்யாதிகளும், பெற்றால் - அடைந்தாலும் (அவை), நாலைந்து நாளில் - நாலைந்து தினங்களில் (அதாவது: கொஞ்சக் காலத்தில்), வேறும்-நீங்கிவிடும், (சம்ஸாரமானது இப்படி அநித்தியமாயிருப்பதினால்), இறைவ - முனிசிரேஷ்டரே !, யோகியாய் - நான் தபத்தைக் கைக்கொண்டு மஹாமுனியாகி, வினையை - கருமங்களை, வெல்வன்-ஜெயிப்பேன், என்று - என்றும், உரைசெய்தான் - சொல்லினான், எ - று. (கஉஅ)

729 அருந்தவந் தானஞ் சீல மறிவனற் சிறப்பு நான்குந்
திருந்திய குணத்தி னார்க்குச் சேதிக்கு வீதி யாகு
மருந்தவ மரிது சீல மாற்றுவ தாங்கித் தானம்
பொருந்திநற் சிறப்போ டொன்றிப் புரவல செல்க வென்றான்.

(இ - ள்) (அதுகேட்டு முனிவரன்) புரவல - அரசனே !, அரும் - செய்தற்கரிதாகிய, தவம் - தபஸும், தானம் - சதுர்விததானமும், சீலம் - சீலாச்சாரமும், அறிவனற் சிறப்பு-ஸர்வஜ்ஞனைக்குறித்துச் செய்யும் பூஜையும், (ஆகிய), நான்கும்- இந்த நான்கும், திருந்திய - திருத்தமாகிய, குணத்தினார்க்கு - ஸம்மியக்துவ குணத்தையுடையவர்களுக்கு, சேதிக்கு - மோட்சத்திற்கு, வீதியாகும் - வழியாகும், அரும் - அரிதாகிய, தவம் - தபமானது, அரிது - செய்தற்கரியது, (ஆகையால்), சீலம் - சீலாச்சாரங்களில், ஆற்றுவ - சக்திக்குத் தக்கவாறு பொருந்தியவைகளை மாத்திரம், தாங்கி - தரித்து, தானம் - தானங்களையும், பொருந்தி - மனம்பொருந்திப் பாத்திரங்களில் செய்து, நற்சிறப்போடொன்றி - அருஹந்த பரமாத்மாவின் நல்ல நிச்சய குணஸ்துதிகளோடும் சார்ந்து, செல்க - நீ செல்வாயாக, என்றான் - என்று சொன்னான், எ - று. (கஉகூ)

730. அருளிய மூன்று மென்கண் வினையற வெறிந்து வீட்டைத்
தருமெனி லரிய வந்தத் தவத்தினாற் பயனு மில்லை
அரியவத் தவத்தி னன்றிப் பிறப்பினைக் கடக்கொணாதே
லருளிய தென்கொ லென்ன வருந்தவ னமைக வென்றான்.

(இ - ள்) (அதைக்கேட்டு மன்னன் முனிவனை நோக்கி), அருளிய - இப்போது சொல்லியருளப்பட்ட, மூன்றும் - (தவம் நீங்கலாகிய, சீலம், தானம், பூஜையாகிய) மூன்றும், என்கண் - என்னிடத்தாகிய, வினையினை - ஸகல கருமங்களையும், அற - நீங்கும்படியாக, எறிந்து - கெடுத்து, வீட்டை - மோட்சத்தை, தருமெனில் - நீர் பின்னுரைத்தபடி கொடுக்குமென்றால், அரிய - மகா அருமையாகிய, அந்தத் தவத்தினால் - அத்தபசினால், பயனும் - வரப்பட்ட பலனும்

இல்லை - அம்மோக்ஷத்திற்கு மேலானதில்லை, (அப்படியிருக்க முன்னே தவத்தினுல் பிறப்பறுமென்றுஞ் சொன்னீர்; அங்ஙனம்), அரிய - பெறுதற்கரிதாகிய, அத்தவத்தினன்றி - அந்தத் தபசினுலல்லாமல், பிறப்பினை - ஜனனமாகிற இச் சம்சாரத்தை, கடக்கொணுதேல் - நீங்கி மோட்சமடைதல் முடியாதிருக்குமாகுல், அருளியது - இப்பொழுது அத்தபம் வேண்டியதில்லையென்று எனக்குத் தாங்கள் கூறி அருளியது, என்கொல் - என்ன காரணம், என்ன - என்று கேட்க, அருந்தவன் - அரிதாகிய தபசையுடைய முனிவரன், (அக்கிரணவேகனை நோக்கி), அமைக-நீ தபத்திலே பொருந்துவாயாக, என்றுன் - என்று சொன்னுன், எ - று.

131. செங்கயற் சருங்கட் செவ்வாய்ச் சீறடிப் பாவை யல்குற்
கொங்கைகள் வீங்கத் தேய்ந்து நுடங்கிடைக் கொடிய ஞர்கள்
வெங்களி யானை வேந்தன் விரதியாந் திருவை மேவ
வங்கவ னுமிழப் பட்ட தம்பலம் போல வாஞர்.

(இ - ள்) (அவ்வாறு முனிவரன் கூறிய பின்பு), வெம் - வெப்பம் பொருந்திய, களி - கொர்வத்தையுடைய, யானை - யானைக்குத் தலைவனுகிய, வேந்தன் - கிரணவேக மகாராஜன், விரதியாந் திருவை - வைராக்கியமென்னும் லட்சுமியை, மேவ - பொருந்த, செம் - சிவந்த, கயல்-கெண்டை மீன்போன்ற, கரும்-கறுத்த, கண் - கண்களையும், செவ்வாய் - சிவந்த வாயையும், சீறடி - சிற்றடிகளையும், பாவை - விசாலித்த, அல்குல் - அல்குலினையும், கொங்கைகள் - ஸ்தனங்கள், வீங்க - கதிக்க, (அதனுல்), தேய்ந்து - குறைந்து, (மெல்லியதாகி), நுடங்கும் - அசைகின்ற, இடை - இடையையும், (உடைய), கொடியனுர்கள் - புஷ்பக்கொடிக்குச் சமானமாகிய தேவிமார்கள், அங்கவன் - அவ்விடத்தில் அவ்வாசனுல், உமிழப்பட்ட - மென்று வாயினின்றும் துப்பிவிடப்பட்ட, தம்பலம் போல - தாம்பூலத்தைப்போல, ஆனுர் - (அவனுக்கு) ஆகினுர்கள், எ - று. (எஎக)

732. பருமணி முடியுந் தோடும் பட்டமுங் குழையும் பூணுந்
தருமணி யாரந் தாம மங்கதஞ் சன்ன வீரம்
[†] அருவிலைப் பட்டும் விட்ட வரசனுல் முனியப் பட்ட
பரிசனம் போலச் சாயை யிழந்துபோய் வீழ்ந்த வன்றே.

(இ - ள்) (மேலும் அக்கிரணவேகனுல்), விட்ட - நீக்கிவிடப்பட்ட, பரும் - பெருத்த, மணி - இரத்தினத்தாலிழைத்துச் செய்யப்பட்ட, முடியும் - கிரீடமும், தோடும் - கர்ணத்தோடும், பட்டமும் - நெற்றிப்பட்டமும், குழையும் - கர்ண குண்டலமும், பூணும் - மற்றுமுள்ள வாபரணங்களும், திரு - அழகிய, மணியாரமும் - முத்தாஹார இரத்தினஹாரங்களும், தாமம் - பூமாலை பொன்மாலை முதலியவைகளும், அங்கதம் - வாகுவலயங்களும், சன்ன வீரம் - வென்றிமாலையும், அரு

விலை - விலையுயர்ந்த, பட்டும் - பட்டு வஸ்திரங்களும், அரசனல் - ஒரு ராஜாவி னல், முனியப்பட்ட - கோபிக்கப்பட்ட, பரிசனம்போல - அவனது பரிசனங் களைப்போல, சாயையிழந்து - மேன்மை குறைந்து, போய் - நீங்கி, வீழ்ந்த - வீழ்ந்தன, எ - று.

அன்றே - ஈற்றசை. (எஉ)

733. குந்தள மாகி நீலங் குழன்றெழுந் தனைய குஞ்சி
மந்திரப் பதங்கள் சொல்லி வண்கையால் வாங்கு மெல்லை
யந்தரக் கரணஞ் சிந்தைக் கவ்வழி யுழைய தாக
விந்தியஞ் சிறகு வீழ்ந்த பறவைபோ லெழுந்த வேகம்.

(இ - ள்) (மேலும் அவ்வரசன்), நீலம் - நீலநிறமே, குந்தளமாகி - மயிர்த் திரளாகி, குழன்று - குழற்சியையடைந்து, எழுந்தனைய - வளர்ந்து மிகுதியான தற் கொப்பாகிய, குஞ்சி - தலையின் ரோமங்களை, மந்திரப்பதங்கள் - மூலமந்திரப் பதங்களை, சொல்லி - உச்சரித்து, வண்கையால் - ஈகைவளம் பொருந்திய கையின் பலத்தினால், வாங்குமெல்லை - லோச்சை செய்கிற காலத்தில், (அவனிடத்தே), அந்தரக்கரணம் - (கரணலப்தியானது பூர்த்தியாகிற அந்திய பாகத்துண்டாகும்) அந்தக் கரணபரிணம நிலைமையானது, சிந்தைக்கு - சிந்தையில், அவ்வழியுழைய தாக - அத்தியானத்தின் வழியிடத்ததாக, (சேர்ந்து நிற்ப), இந்தியம் - இந்திரியங் களின், வேகம் - விஷய வேகங்கள், சிறகு வீழ்ந்த-இறகொடிந்த, பறவைபோல்- பட்சியைப்போல், எழுந்த - உண்டாயின, (அதாவது : அடங்கின), எ - று.

இங்ஙனம் கூறியதனால் இந்திரிய விஷயங்களைத் தடை செய்தலாகிய விஷய ஸம்யமம் மிகவும் அடைந்ததென்பது பெறப்படும். (எங)

734. தண்டினைக் கோபித் தாற்றித் தருமத்தின் வழிய னாகி
விண்டங்கா ரவங்கள் வெய்ய பரிசைகளை வென்று வீரன்
முண்டமீ ரைந்தோ டொன்றி முனிமையிற் றனிய னாகித்
தண்டுளி முகிலிற் செல்லுஞ் சாரணத் தன்மை பெற்றான்.

(இ - ள்) (அவ்வாறடைந்தபின்), தண்டினை - (மனோதண்டம், வாக்தண் டம், காயதண்டமென்னும்) திரி தண்டங்களை, கோபித்து - விரோதித்து நீக்கி, ஆற்றி - ஆத்மபாவனையைச் செய்து, தருமத்தின் - தசதர்மத்தின், வழியனாகி- வழியானவனாகி, காரவங்கள் - (ரஸகாரவம், ஸாதுகாரவம், ரித்திகாரவம் என்கிற) திரி காரவங்களை, விண்டு - விட்டு, வெய்ய - கடுமையான, பரிசையை - க்ஷுதாதி த்வாவிம்சதிபரீஷஹங்களை, வென்று - ஜெயித்து, வீரன் - வீரபுருஷனாகிய கிரண

வேக முனிவன், முண்டமீரைந்தோடு - * தசமுண்டங்களோடு, ஒன்றி-பொருந்தி, முனிமையில் - முனீஸ்வரத்தன்மையில், தனியனுகி - ஒப்பற்றவனுகி, தண் - குளிர்ச்சி பொருந்திய, துளி - மழைத்துளிகளையுடைய, முகிலில் - மேகத்தைப் போல, செல்லும் - ஆகாயத்திற் செல்லும்படியான, சாரணத்தன்மை - ஆகாச சாரணத்தன்மையை, பெற்ருன் - இவ்வித தனது தபோபலத்தால் பெற்ருன், எ - று. (எஎச)

735. திரிவித யோகு தாங்கித் திரிவதோர் சிகரி போல
மருவிய கொள்கை நீங்கா மாதவர் மருளச் செல்வான்
கரியர சதனைப் போலக் காஞ்சனக் குகையைச் சேர்ந்தாங்
கரியிள வேறு போல வருந்தவ னிருந்த நாளால்.

(இ - ள்) (அவ்வாறு பெற்றபின்), திரிவிதயோகு - திரிகாலயோகங்களை, தாங்கி - தரித்து, திரிவது - திரியப்பட்டதாகிய, ஓர் - ஒரு, சிகரிபோல - பர்வதத்தைப்போல, மருவிய - சேர்ந்திராநின்ற, கொள்கை - சாரித்திரங்களில், நீங்கா - நீங்காத, மாதவர் - மஹாதபத்தையுடைய முனிவர்களெல்லாம், மருள - பிரமிக்கும்படி, செல்வான்-செல்லுகின்றவனுய், (பின்னர்), கரியரசதனைப்போல- ஓர் அரசயானையைப்போல, காஞ்சனக்குகையை - காஞ்சனம் என்னும் பர்வதக் குகையில், சேர்ந்து - அடைந்து, ஆங்கு - அவ்விடத்தில், அரியிளவேறுபோல - இளமைபொருந்திய ஆண் சிம்மத்தைப்போல, அருந்தவன் - அரியதபத்தை யுடைய கிரணவேகன், இருந்த நாள் - வசிக்கின்ற காலத்தில், எ - று.

ஆல் - அசை. (எஎடு)

736. எரிமூழ்கி யனைய கொள்கை யசோதரை யிலங்கு வாண்மேற்
றிரிகின்ற தனைய கொள்கை சிரிதரை யோடுஞ் செம்பொன்
விரிகின்ற குகையின் பாடம் மெய்த்தவன் றன்னை வாழ்த்தி
யிரிகின்ற வினைய ராகி யிறைவன்பா லிருந்த காலை.

(இ - ள்) எரிமூழ்கியனைய - அக்கினியிலே முழுகினதற்குச் சமானமாகிய, கொள்கை - சாரித்திரத்தையுடைய, யசோதரை - யசோதரை யென்னும் ஆரியாங்கனையும், இலங்கு - பிரகாசிக்கின்ற, வாள்மேல் திரிகின்றதனைய - வாளாயுதத்தின்

* தசமுண்டமென்றது பஞ்சேந்திரியங்களைத் தடுத்தல் - ஐந்து, திரிகாணங்களைக் குப்தம் பண்ணுதல் - மூன்று, சிரோமுண்டம் - ஒன்று, ஹஸ்தபாதங்களை ஒரு காரியத்திலும் விடாமல் நிற்பது - ஒன்று, ஆகிய பத்துமாம். ஹஸ்தபாதங்களை ஒரு காரியத்திலும் விடாததைப்பற்றிய விவரம், "பத்மநந்திபச்சிஸ்" என்னும் கிரந்தத்தில் முதலாவது யதியா சாராதிகாரத்தில் இரண்டாவது சுலோகத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. விண்டவங்காரங்கள் என்பதில், அம் - சாரியை. ()

வாய்மேல் நடப்பதற்குச் சமமாகிய, கொள்கை - சாரித்திரத்தையுடைய, சிரிதரை யோடு - ஸ்ரீதரை யென்னும் ஆரியாங்கனையோடும், செம் - சிவந்த, பொன் - ஸ்வர்ணபாஷாணங்கள், விரிகின்ற - மிகுந்திருக்கின்ற, குகையின் - அக்காஞ்சனக்குகையில், (இருக்கின்ற), மெய்த்தவன் தன்னை - உண்மையாகிய தபஸை யுடைய கிரணவேக முனிவனை, (கண்டு), பாடம் - துதிப்பாடல்களைப் படித்தலி னால், வாழ்த்தி - ஸ்தோத்திரஞ் செய்து, இரிகின்ற - நீங்குகின்ற, வினையராகி - பாபகருமங்களையுடையவராகி (அதாவது: சுப பரிணாமமுடையவர்களாகி), இறை வன்பால் - அம்முனிசிரேஷ்டன் சமீபத்தில், இருந்த காலை - இருந்தபொழுது, எ - று. (எஎசு)

737. விதியினாற் கதிக ணான்கின் மேவிநின் றூர்க டம்முண்
மதியினாற் பெரிய நீரார் மக்களாய் வந்து தோன்றி
விதியினாற் றானம் பூசை மெய்த்தவஞ் செய்து வீட்டைக்
கதிகளைக் கடந்து செல்வார் காரிகை யார்கள் செல்லார்.

(இ - ள்) (அம்முனிவரன் அவர்களை நோக்கி), விதியினால் - சுபாசுப பரி ணாமத்தாலாகிய கருமத்தினுடைய விதிப்படி, கதிகள் நான்கில் - சதுர்க்கதிகளில், மேவி நின்றூர்கள் தம்முள் - பொருந்திநின்ற ஸம்ஸார ஜீவன்களில், மதியி னல் - புத்தியினல் (அதாவது: மதிஜ்ஞான பலத்தால்), பெரிய - பெரிதாகிய, நீரார் - குணத்தையுடையவர்கள், மக்களாய் வந்து தோன்றி - வந்து மனிதர் களாகப் பிறந்து, (அவர்களுள் புருஷர்களாயிருப்பவர்கள்), விதியினல் - கிரமத்தி னல், தானம் - ஸத்பாத்திரங்களில் செய்யும் ஆகாராதி தானங்களையும், பூசை - அருகபரமனைப் பூஜித்தலையும், மெய் - உண்மையாகிற, தவம் - த்வாதசவித தபங் களையும், செய்து - புரிந்து, கதிகளை - சதுர்க்கதிப் பிறப்புக்களை, கடந்து - தாண்டி, (அதாவது: நீங்கி), வீட்டை - மோட்சத்தில், செல்வார் - போவார்கள் (அதாவது: அடைவார்கள்), காரிகையார்கள் - ஸ்த்ரீமார்கள், செல்லார் - தத்ஜன் மத்தில் மோட்சத்தில் செல்லமாட்டார்கள், எ - று.

தத்ஜன்மத்தில் ஸ்திரீமார்களுக்கு மோட்சமில்லை யென்பதைப்பற்றிய விவரம் ப்ராப்ரதத்திரயம் இரண்டாவது பகுதி, பிரவசனஸாரத்தில், சாரித்ராதி காரமென்னும் மூன்றாம் அதிகாரத்தில், விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ()

738. இந்திரன் றேவி மார்க்கு மிறைமைசெய் முறைமை யில்லை
பைந்தொடி மகளி ராவார் பாவத்தாற் பெரிய நீரார்
மைந்தரைப் பெறுமை பெற்று விழைந்திடல் மாற்றுப் பெண்ணி
லந்தரத் தனைய துன்பத் தாங்கதி நீங்கு வார்கள்.

(இ . ள்) இந்திரன் - தேவேந்திரனுடைய, தேவிமார்க்கும் - பெண்சாதிமார்களுக்கும், இறைமைசெய் - தலைமைத்தன்மையாகிய அதிகாரத்தைத் தாங்கள் செய்யும், முறைமை - கிரமமானது, இல்லை - இன்று, பைம் - பசுமை பொருந்திய, தொடி - வளையல்களை யணிந்த, மகளிராவார் - மனித ஸ்த்ரீமார்கள், பாவத்தால் - பாபவினையால், பெரியநீரார் - பெரிதாகிய குணமுடையவர்களாய், மைந்தரை - புதல்வரை, பெருமை - பெரும்மல் மலடியாவதாலும், (அல்லது), பெற்றால் - புதல்வர்ப்பெற்றால், இழந்திடல் - அப்பிள்ளைகளை இழந்து விடுவதினாலும், (அவையல்லாமலும்), மாற்றுப்பெண்ணில் - தன் புருஷனுக்கு மற்றொரு ஸ்த்ரீ ஏற்படுவதனாலும் (அதாவது: ஸபத்னி அல்லது சக்களத்தி ஏற்படுவதாலும்), அந்தரத்தனைய - ஆகாயத்திற்குச் சமானமாகிய (அதாவது : அளவில்லாத), துன்பத்து - துக்கத்தினால், ஆங்கதி - தங்களுக்காகிய அக்கதியையும், நீங்குவார்கள் - நீங்கி வேறொரு கதியையும் அடைவார்கள், எ - று. (எஎஅ)

739. விரதசீ லத்த ராகித் தானமெய்த் தவர்க்குச் செய்து
அருகனைச் சரண மூழ்கி யான்றவர்ச் சிறப்புச் செய்து
கருதிநற் கணவற் பேணுங் கற்புடை மகளி ரிந்த
வுருவத்தி னீங்கிக் கற்பத் துத்தம தேவ ராவார்.

(இ - ள்) விரதம் - பஞ்சாணு விரதங்களையும், சீலத்தராகி - சீலாச்சாரத்தையுமுடையவர்களாகி, மெய்த்தவர்க்கு - உண்மையாகிய தபத்தையுடைய முனிவர் முதலாகிய பாத்திரர்களுக்கு, தானம் - ஆஹாராதிதானங்களை, செய்து - கொடுத்து, அருகனை - அருகத்பரமேஸ்வரனது, சரணம் - பாதங்களில், மூழ்கி - படிந்து (அதாவது : வணங்கி), ஆன்றவர் - மேலான நிலைமையையுடைய பஞ்சபரமேஷ்டிகளின், சிறப்புச்செய்து - பூஜையைச் செய்து, நற்கணவன் - நன்மையான குணமுடைய தங்கள் புருடனை, கருதி - மேலாக நினைத்து, பேணும் - ரக்ஷிக்கின்ற, கற்புடை மகளிர் - பதிவிரதாகுணமுள்ள ஸ்த்ரீகள், இந்த வுருவத்தின் - இந்த ஸத்ரீ ரூபத்தினின்றும், நீங்கி - விலகி, (மறு சன்மத்தில்), கற்பத்து - ஸௌதர்மாதி கல்பங்களில், உத்தமம் - மேலான, தேவராவர் - கல்பவாஸிதேவர்களாகப் பிறப்பார்கள், எ - று.

அருகனைச் சரணமூழ்கி யென்பது அருகன சரணமூழ்கி என்றும், கரு நற்கணவற்பேணும் என்பது, கருதுநற் கணவற்பேணும் என்றும் பாடபேதமுண்டு. அவற்றைக் கொள்வார், அவற்றிற்குத் தக்கவாறு உரை செய்து கொள்க. மேலான தேவராவர் என்றதனால், மஹர்த்திக தேவர்களாகவே பிறப்பரென்பது கொள்ளப்படும். அருகனை - உருபுமயக்கம். (எஎகூ)

740. மாதவந் தாங்கி வையத் தையராய் வந்து தோன்றி
யேதமொன் றின்றி வீடு மெய்துவர் தைய லார்க

ணீதியா னோற்று வந்தீர் நீவிரிப் பிறவி நீங்கிக்
காதிக்க ணரிந்து வீடுங் காலத்தா லடைதி ரென்றான்.

(இ - ள்) தையலார்கள் - ஸ்திரீமார்கள், வையத்து - இப்பூமியில், ஐயராய் வந்து தோன்றி - புருஷர்களாகப் புண்ணியத்தினால் வந்து பிறந்து, மாதவந் தாங்கி - மஹா தபஸை மேற்கொண்டு செய்து, ஏதமொன்றின்றி - ராகத்வேஷாதிகளில் யாதொரு குற்றமுமில்லாமல், (வீதராகர்களாகி, ஸகலகர்மக்ஷயம் செய்து) வீடும் - மோட்சத்தையும், எய்துவர் - அடைவார்கள், நீவிர் - நீங்களிருவரும், நீதியால் - வரிசைக்கிரமத்தால், நோற்று - விரத சீலாதி நோன்புகளை நோற்று, வந்தீர் - வந்தீர்கள், (ஆதலின் நீங்களும்), காலத்தால் - காலாந்தரத்தினால், காதிக்கணரிந்து - (புருடர்களாய்ப் பிறந்து தவஞ்செய்து) காதிகர்ம க்ஷயஞ் செய்து, இப்பிறவிநீங்கி - இச்சம்ஸார பிறப்புக்களை விட்டு நீங்கி (ஸகல கர்ம க்ஷயம் செய்து), வீடும் - மோக்ஷத்தையும், அடைதிர் - அடைவீர்கள், என்றான் - என்று சொன்னான், எ - று. (௪௪0)

741. தூம்பன்ன தடக்கை மாவைத் துயர்செய்து நரகம் புக்கங்
காம்பல கடல்க ளெல்லா மவலமுற் றரிதிற் போந்து
மேம்பட விலாத வெல்லா விலங்கினுஞ் சுழன்று மீண்டும்
பாம்பதாய்ப் பதலை வங்கிற் பாவிதான் பரிண மித்தான்.

(இ - ள்) (இது நிற்க அக்காலத்தில்), தூம்பன்ன - உள்துளையையுடைய தூம்புக்குச் சமானமான, தடக்கை - பெரிய துதிக்கையையுடைய, மாவை - அசனிகோடமாகிற யானையை, துயர்செய்து - குக்குட ஸர்ப்பமாயிருந்து கடித்து அவ்வியானை இறந்துபடும்படி துன்பப்படுத்தி, (பிறகு தானும் இறந்து), நரகம் - மூன்றா நரகத்தை, புக்கு - அடைந்து, அங்கு - அந்நரகத்தில், ஆம் - உண்டாகிய (தன்னாயுஷ்யகாலமாகிய), பல கடல்களெல்லாம் - பலவாகிய ஏழு கடற்கால முழுமையும், அவலமுற்று - (நரக வேதனையால்) வருத்தமுற்று, அரிதில் - மஹா அருமையாக (ஆயுரவஸாநத்து), போந்து - வந்து, மேம்படலிலாத - மேன்மையாதலில்லாத, எல்லா விலங்கினும் - திரஸ ஸ்தாவரங்களெல்லாவற்றினும், சுழன்று - பரிப்ரமித்து, மீண்டு - மறுபடியும், பாம்பதாய் - மலைப்பாம்பாக, பதலை வங்கில் - பர்வதக் குகையில், பாவிதான் - பாபிஷ்டியாகிய சத்தியகோஷனவன், பரிணமித்தான் - பிறந்தான், எ - று. (௪௪௧)

742. இருவரு மியம்பக் கேட்ட வறத்தின ராகிப் போகப்
பெரியவன் குகையைச் சேரப் பிறைமெயி றிலங்க வங்காந்
தெரியெழ விழித்துக் காண விறைவனைப் பிடித்த போழ்தி
லருகவென் றுரைப்ப மீளா வச்சிய ரதனைக் கண்டார்.

(இ - ள்) (அவன் அவ்வாறு பிறந்திருக்கும்போது), இருவரும் - முன் சொன்ன ஆரியாங்கனைகளிருவரும், இயம்ப - முனிவன் சொல்ல, கேட்ட - செவிக்கொண்ட, அறத்தினராகி - தர்மத்தை யுடையவர்களாகி, போக - (அவனை விட்டு நீங்கிச் சிறிது தூரஞ்) செல்ல, பெரியவன் - மஹா தபத்தையுடைய கிரண வேக முனிவனாகியமேலோன், குகையை - பர்வத குகையை, சேர - அடைய, (அம்மலைப்பாம்பானது அவனை விழுங்க வேண்டி), எரியெழ-கண்களில் அக்கினி எழும்படி, விழித்து - அவற்றைத்திறந்து, காணு - அம்முனிவனைப்பார்த்து, பிறை - மூன்றும் பிறை போல வளைவாகிய, எயிறு - பற்கள், இலங்க - விளங்க, அங்காந்து - வாயைத்திறந்து, இறைவனை - மேலானவனாகிய அம்முனிவரனை, பிடித்த போழ்தில் - பற்றினகாலத்தில், (அவன்), அருகவென்று - அருகனே என்று, உரைப்ப - சொல்ல, மீளா - அதைக்கேட்டுத் திரும்பி வந்து, அச்சியர் - ஆரியாங்கனைகளிருவரும், அதனை - அம்மலைப்பாம்பால் அம்முனிவனுக்கு நேர்ந்த தீங்கினை, கண்டார் - பார்த்தார்கள், எ - று. (௪௮௨)

743. வெகுண்டுவெய் துயிர்த்துச் சீறி விழித்தன லுமிழ்ந்து வெண்ப
லகண்டமுஞ் சிலிர்ப்ப வங்காந் தரவுக்கஞ் சாது நாதன்
நுகந்திரண் டனைய தோளைப் பற்றியாங் குற்ற போழ்தின்
முகங்கண்டார் முனிவ னோடு மூவரும் விழுங்கப் பட்டார்.

(இ - ள்) (அவ்வாறு பார்த்தவுடனே), வெகுண்டு - கோபித்து, வெய்துயிர்த்து - வெப்பமாகப் பெருமூச்சு விட்டு, சீறி - சப்தித்து, விழித்து - கண்களை விழித்து, அனலுமிழ்ந்து - அக்கினியைக் கக்கி, வெண் - வெளுப்பாகிய, பல் - பற்கள், அகண்டமும் - முழுமையும், சிலிர்ப்ப - சிலிர்த்துக்கொள்ள, அங்காந்த - வாயைத்திறந்த, அரவுக்கு - அந்த மலைப்பாம்பிற்கு, அஞ்சாது - (இந்த ஆரியாங்கனைகளிருவரும்) பயப்படாமல், நாதன் - முனிசிரேஷ்டனாகிய கிரணவேக முனிவனுடைய, நுகந்திரண்டனைய - நுகத்தடி திரண்டதுபோலத் திரட்சிபெற்ற, தோளை - புயங்களை, பற்றி - பிடித்து, ஆங்குற்ற போழ்தின் - அவ்விடத்தில் அந்த ஸர்ப்பத்தினெதிரிலடைந்து இழுத்த காலத்தில், (அப்பாம்பு அம்முனிவனைக் கழுத்து வரையிலும் விழுங்கிவிட), முகங்கண்டார் - அவனது முகத்தை மாத்திரம் கண்டவர்களாகி, (தாங்களும் அப்பாம்பின் வாய்க்குட்பட்டு), முனிவனோடும்-கிரணவேக முனிவனோடு, மூவரும் - (அம்முனிவர் இந்த ஆரியாங்கனைகள் ஆகிய) மூன்று பேர்களும், விழுங்கப்பட்டார் - அந்த ஸர்ப்பத்தினால் விழுங்கப்பெற்றார்கள், எ - று.

அங்காந்தரவுக்கு, என்பதில் அகரந்தொக்கது. (௪௮௩)

744. அருக்கனைச் சனிசெவ் வாயோ டரவுதான் விழுங்கிற் றேபோ
லருக்கவே கன்றன் னோடே யாரியாங் கனைக டம்மை

நெருக்கியவ் வரவங் கொள்ள நின்றதம் மெய்ம்மை தம்மே
லொருக்கிய மனத்த ராகி யுடம்புவிட் டொருங்கு சென்றார்.

(இ - ள்) அருக்கனை - சூரியனை, சனியோடு - சனியென்னும் கிரகத்தோ டும், செவ்வாயோடு - அங்காரகனோடும், அரவுதான் - இராகுவென்னும் பாம்பானது, விழுங்கிற்றேபோல் - விழுங்கினதுபோல், அருக்கவேகன்றன்னோடு - கிரண வேக முனிவனோடு, ஆரியாங்கனைகடம்மை - (ஸ்ரீதரை, யசோதரை யென்னும் இரண்டு) ஆரியாங்கனைகளையும், நெருக்கி - சேர்த்து, அவ்வரவம் - அந்த மலைப் பாம்பானது, கொள்ள - அவ்வாறு உட்கொண்டு விழுங்க, (அம்மூவரும்), நின்ற - நிலைபெற்ற, தம் - தங்களுடைய, மெய்ம்மை தம்மேல் - யாதாத்மிய குணத்தின் மேல், ஒருக்கிய - ராகத்வேஷாதிகளை விட்டு ஒருமைப்பட்ட, மனத்தராகி - மனதையுடையவர்களாகி, உடம்புவிட்டு - சரீரத்தை விட்டு, ஒருங்கு - ஒருதன்மை யாக, சென்றார் - வேறு கதியில் சென்றார்கள், எ - று.

ஓடு - இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. (௪௪௪)

745. பாவிட்டன் மேலோர் கோபம் பணித்திலா மனத்தி னார்போய்க்
காவிட்ட கற்பத் தீரேழ் கடல்பெற்றங் குரிசைக் கைமா
பேர்பெற்ற விமானத் தின்கண் முனியற்கப் பிரப னானன்
றீபத்தைப் புரையு மாதர் தேவர்க்குத் திலத மானார்.

(இ - ள்) (அவ்வாறு சென்ற பின்), பாவிட்டன்மேல்-(இப்போது மலைப் பாம்பாகித் தங்களை விழுங்கிய) பாபிஷ்டனாகிய சத்தியகோடன்மேல், ஓர் கோபம் - யாதொரு கோபத்தையும், பணித்திலா - செய்யாத, மனத்தினார் - மனத்தை யுடைய இம்மூவர்களும், போய் - அவ்வாறு சரீரம் நீங்கிப்போய், காவிட்டகற் பத்து - காபிஷ்ட கல்பத்தில், ஈரேழ்கடல் - பதினாலு கடற்காலம், பெற்று - ஆயுஷ்யமாகப்பெற்று, அங்கு - அக்கல்பத்தில், உரிசைக்கைமா - ருசகப் பிரபை யென்ற, பேர்பெற்ற - பெயரையடைந்த, விமானத்தின்கண்-தேவவிமானத்தில், (அவர்களுள்), முனி - கிரணவேக முனிவான், அற்கப்பிரபனானான் - ரவிப்பிரப னென்னும் மஹர்த்திக தேவனாகப் பிறந்தான், தீபத்தைப்புரையும் - பிரகாசம் பொருந்திய குணத்தினால் தீபத்தை நிகர்க்கும், மாதர் - ஸ்த்ரீகளாகிய இரண்டாரி யாங்கனைகளும், தேவர்க்கு-அக்கல்பத்திலுள்ள மற்ற தேவர்களுக்கெல்லாம், திலத மானார் - திலகம்போற் சிறந்த தேவர்களானார்கள், (அதாவது: சற்குணமுள்ள ஸாமானீக தேவர்களாகப் பிறந்தார்கள்), எ - று. (௪௪௫)

746. மறுவிலாக் குணத்தி னார்போய் வர்னவ ராக மாயாக்
கறுவினாற் பாந்தள் போகி நரகநான் காவ தெய்தி

யறுபதோ டிரண்ட ரையாம் புகையுயர்ந் தெழுந்து வீழு
மறுபதோ டிரண்ட ரைவில் லுயர்ந்ததோ ருடம்பு பெற்றான்.

(இ - ள்) (இவ்வாறு) மறுவிலா - குற்றமில்லாத, குணத்தினார் - குணத்தை யுடைய மூவர்களும், போய் - சரீரம் நீங்கிப்போய், வானவராக - தேவர்களாய்ப் பிறக்க, மாயா - நீங்காத, கறுவினால் - த்வேஷத்தினால், பாந்தள் - மலைப்பாம்பா யிருந்த சத்தியகோஷன், போகி - ஆயுரவஸானத்துப்போய், நரக நான்காவது - நாலா நரகத்தை, எய்தி - அடைந்து, அறுபதோடிரண்டரையாம்புகை - அறுபத்தி ரண்டரை யோஜனை, உயர்ந்து - உன்னதமாகி, (அதாவது: அவ்வளவு தூரம் மேலே), எழுந்து வீழும் - ஆகாயத்தில் மேனோக்கி யெழுந்து தலை கீழாக விழு கின்ற, அறுபதோடிரண்டரைவில் - அறுபத்திரண்டரைவில், உயர்ந்தது - உன் னதமானதாகிய, ஒருடம்பு - ஒப்பில்லாத ஒரு நரக சரீரத்தை, பெற்றான் - அடைந்தான், எ - று. (எஅசு)

747. அறத்தினாங் காக்க மில்லை யென்பது மிதனை யாய்ந்து
மறத்தினாங் கில்லை கேடு மென்பது மதித்தி வர்தந்
திறத்தினை யறிந்து கொண்மின் றீக்கதிப் பிறவி யஞ்சில்
மறத்தைநீத் தறத்தோ டொன்றி வாழுநீர் வையத் தீரே.

(இ - ள்) வையத்தீர் - இப்பூமியிலுள்ளவர்களே!, அறத்தினாங்கு - தர்மத் தைக்காட்டிலும் பெரிதாகிய, ஆக்கம் - செல்வம், இல்லையென்பதும் - இல்லை யென்று உலகத்தில் சொல்வதையும், மறத்தினாங்கு - பாபத்தைக்காட்டிலும் பெரி தாகிய, கேடும் - கெடுகையும், இல்லையென்பதும் - இல்லை யென்று சொல்வதை யும், இதனை - இச்சரித்திரத்தை, ஆய்ந்து - ஆராய்ந்து, மதித்து - எண்ணி, இவர் தந்திறத்தின் - இந்த முனிவரன் ஆரியாங்கனை பாம்பாகிய சத்தியகோஷன் ஆகிய இவர்களின் தன்மையால், (அதாவது: முனிவன் ஆரியாங்கனை யிவர்களால் தருமபலன் சிறந்து நின்றதையும், பாம்பால் பாப பலன் தாழ்ந்து நின்றதையும்), அறிந்து கொண்மின் - தெரிந்து கொள்ளுங்கள், (அவ்வாறு தெரிந்துகொண்டு), நீர் - நீங்கள், தீக்கதிப்பிறவி - கெட்ட கதியிற் பிறக்கும் பிறப்புக்கு, அஞ்சில் - பயந்தால், மறத்தை நீத்து - பாபத்தை நீக்கி, அறத்தோடொன்றி - தருமத்தோடு சேர்ந்து, வாழும் - வாழக்கடவீராக, எ - று. (எஅஎ)

வேறு.

748. மன்னனுந் தேவியு மிளைய மைந்தனு
மின்னவ ராயினா ரினிய கேவச்சச்
சென்னியி லிருந்தவச் சீய சந்திரன்
றன்வர வுரைப்பன்கேள் தரண வென்றனன்.

(இ - ள்) மன்னனும் - ஸிம்மசேனவாசனும், தேவியும் - அவன் தேவி யாகிய விராமதத்தையும், இளையமைந்தனும் - இளையபுத்திரனாகிய பூர்ணசந்திர குமாரனும், இன்னவராயினார் - இப்பேர்ப்பட்ட காபிஷ்டகல்பத்துத் தேவர்களானார் கள், இனிய - இனிமையாகிய, கேவச்சச்செண்ணியில் - ஊர்த்துவக்கிரைவேயக மாகிய உபரிமோபரிமகிரைவேயகத்தில், இருந்த - அஹமிந்திரனாயிருந்த, அச் சீய சந்திரன்றன் - அந்த ஸிம்மசேன மஹாராஜாவின் ஜேஷ்ட புத்திரனாகிய ஸிம்மசந்திரனுடைய, வரவு - வருகையை (அதாவது: அவன் அஹமிந்திர லோகத்தினின்றும் இப்பூமியில் வந்து அவதரித்த வரலாற்றை), உரைப்பன் - இனிமேற் சொல்லுவேன், தரண - தரணேந்திரனே!, கேள் - கேட்பாயாக, என்றனன் - என்று ஆதித்யாபதேவன் சொன்னான், எ - று. (௧௮௮)

ஆறாவது :

மன்னனுந் தேவியும் மைந்தனும் சுவர்க்கம்புக்க சருக்கம் முற்றுப்பெற்றது.



ஏழாவது :

## சக்கராயுதன் முத்திச் சருக்கம்.

749. உலகமெனுந் திருவினிடை யுந்தியெனச் சம்பூத்
தலநிலவு பாதமலி தருமகண்ட மதனிற்
புலவர்புகழ் வரியபுரி சக்கர புரமென்
றுலகுடைய விறைவனுறை நகரமென வுளதே.

(இ - ள்) உலகமெனும் - லோகமென்று சொல்லப்பட்ட, திருவின் - இலக்ஷ்மியினுடைய, இடை - மத்தியில் உள்ள, (அதாவது: மத்தியம லோகமாகிய பூமியில் உள்ள), உந்தியென - நாபிபோல, (அமைந்திராநின்ற, சம்பூத்தலம் - ஜம்பூத்வீபமென்னுந்தலத்து, நிலவு - விளங்காநின்ற, பாதம் - பாத க்ஷேத்திரத்தில், மலி - நிறைந்த, தருமகண்டமதனில் - தர்மக்கண்டத்திலே, புலவர் - வித்துவாம்சர்களால், புகழ்வரிய - வர்ணித்தல் அரிதாகிய, புரி - பட்டணமானது, உலகுடைய - மூன்றுலோக ஆட்சியையும் உடைய, இறைவன் - ஜீனேந்திரன், உறை - தங்கியிராநின்ற, நகரமென - ஸமவஸரணத்தைப்போல, சக்கரபுரமென்று - சக்கரபுரமென்று பெயர் கூறப்பட்டு, உளது - மஹாலாவண்ணியமாகவும் ஆனந்தகரமாகவும் உளதாகும், எ - று. (க)

750. கிடங்குமதி டெருவுநிலை மாளிகையி னொழுங்கு
நடுவரசன் மாளிகையி னமர்ந்திருந்த நகரம்
நுடங்குதிரை வேதிகையோ டாறுகுல மலைக
ணடுவடைந்த மலையுடைய தீபமது வனைத்தே.

(இ - ள்) கிடங்கு - (அப்பட்டணத்தைச் சூழ்ந்திராநின்ற) அகழும், மதிள் - சுற்றுமதிலும், தெருவு - (அந்நகரத்தின்) வீதிகளும், நிலை - நிலையாகிய, மாளிகையின் ஒழுங்கும் - (அவ்வீதிகளிலிராநின்ற) உப்பரிகையின் வரிசைகளும், நடு - (அந்நகர) மத்தியில், (சேர்ந்திராநின்ற), அரசன் மாளிகையின் - இராஜ மாளிகைகளும் ஆகிய இவற்றினால், அமர்ந்திருந்த - பொருந்தியிருந்த, நகரம் - அந்நகரமானது, நுடங்கும் - ஓயாமல் அசைகின்ற, திரை - அலைகளையுடைய மஹாலவண சமுத்திரத்தையும், வேதிகையோடு - அந்த மஹாலவண சமுத்திரத்தினுடைய வஜ்ரவேதிகையையும், ஆறு - மஹா நதிகளையும், குலமலைகள் - குலகிரி பர்வதங்களையும், நடு அடைந்த - மத்தியிலடைந்த, மலையுடைய - பர்வதராஜனாகிய மஹாமேரு பர்வதத்தையும் உடைய, தீபமது - ஜம்பூத்வீபத்தை, அனைத்து - நிகர்த்ததாம், எ - று.

அகழுக்கு - மஹாலவண சமுத்திரமும், மதிலுக்கு - அதன் வஜ்ரவேதிகை யும், வீதிகளுக்கு - மஹாநதிகளும், உப்பரிகையின் வரிசைகளுக்கு - குலகிரிபர் வதங்களும், இராஜ மாளிகைக்கு - மஹாமேரு பர்வதமும், உவமையாகச் சொல் லப்பட்டதால், அந்நகரம் இவைகளை யெல்லாமுடைய ஜம்பூத்வீபத்திற்கு ஒப்பாக வர்ணித்துச் சொல்லப்பட்டது. (உ)

751. தோகையனை யார்கணட மாடுமிட மொருபால்
பாகமதி நுதலியர்கள் பாடுமிட மொருபால்
மேகமென வேகமுடை நாகநிலை யொருபால்
பூகமுத லாயமலி புறம்பணைய தொருபால்.

(இ - ள்) ஒரு பால்-அந்நகரத்தில் ஒரு பக்கத்தில், தோகை யனையார்கள் - ஆண்மயிலுக்குச் சமானமாகிய சரீரச்சாயலையுடைய நர்த்தனமாதர்கள், நடமாடும் - நர்த்தனமாடும்படியான, இடம் - நர்த்தன சாலைகளாகும், ஒரு பால் - மற்றொரு பக்கத்தில், பாகமதி - (பதினைந்தில் மூன்று பாகமாகிய) மூன்றாம் பிறைச்சந்திரன் போன்ற, நுதலியர்கள் - நெற்றியையுடைய மாதர்கள், பாடும் - சங்கீதங்களைப் பாடும்படியான, இடம் - ஸ்தானமாகும், ஒரு பால் - வேறொரு பக்கத்தில், மேக மென - மேகத்தைப்போன்ற, (அதாவது: மேகம்போற் கறுப்பு நிறமுடைய), வேகமுடைய - மிகுதியான கோப வேகமுடைய, நாக நிலை - யானை கட்டும்படி யான யானைச்சாலையாகும், ஒரு பால் - மற்றொரு பக்கத்தில், பூகமுதலாய - கமுகு விருட்சம் முதலாகிய விருட்சங்கள், மலி - நிறைந்திருக்கின்ற, புறம் - நகர பாகி யத்தைச் சார்ந்த, பணையது - மருத நிலமாகும், எ - று. (ங)

752. வானினைய ளந்துவரும் வாசிநிலை யொருபா
லூனுறையும் வேற்படை யடைக்குமிட மொருபாற்
றேனுலவு கூந்தலவர் திளைக்குந்தெரு வொருபா
லானைமிசை வரும்வணிக ரவரிடங்க ளொருபால்.

(இ - ள்) வானினை - ஆகாயத்தை, அளந்து - அடியால் அளந்து, வரும் - வரும்படியான வேகமான நடையையுடைய, (அதாவது: வேகத்தால் ஆகாயத்தில் தாவிச்சென்று வரக்கூடிய), வாசி நிலை - குதிரைகள் நிற்கும் சாலையானது, ஒரு பால் - ஒரு பக்கத்திலே இருக்கும், ஊனுறையும் - பகைவர் மாம்சம் தங்கியிருக் கின்ற, வேல் - வேல் முதலாகிய, படை - ஆயுதங்களை, அடைக்கும் - சேர்த்து வைக்கும், இடம் - ஆயுதச்சாலையானது, ஒரு பால் - ஒரு பக்கத்திலேயேயிருக்கும், தேனுலவு - (மலர் மாலையிலுள்ள மதுவை யுண்ணுதற்கு நெருங்கி) வண்டுகள் உலாவுகின்ற, கூந்தலவர் - அளகபாரத்தையுடைய பொது மகளிர், திளைக்கும் - நெருங்கியிராநின்ற, தெரு - வீதிகள், ஒரு பால் - ஒரு பக்கத்திலேயிருக்கும்,

ஆனை மிசை - யானையின்மேல், வரும் - ஏறி வரும்படியான, வணிகரவர் - (இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என்னும் மூவகைச்) சிரேஷ்டிகள் தங்கியிராநின்ற, இடங்கள் - இடங்களாகிய பெருங்கடை வீதிகள், ஒரு பால் - ஒரு பக்கத்திலே யிருக்கும், எ - று. (௪)

753. கந்தமலர் கந்தம்விழை கைவலவ ரொருபா
லந்தமிலா வறிவனுறை யாலயங்க ளொருபால்
வந்துலக மிறைஞ்சமன்ன னிருக்குமிட மொருபா
லந்தமிலா வின்னவிட மியார்க்குமுரைப் பரிதே.

(இ - ள்) கந்த மலர் - வாசனையுள்ள மலர் மாலையையும், கந்தம் - வாசனைப்பொடி முதலிய கந்த வஸ்துக்களையும், விழை - விரும்பிச் செய்கின்ற, கைவலவர் - கைத்தொழிலில் வல்லவர்கள், ஒரு பால் - ஒரு பக்கத்தில் தங்கியிருப்பார்கள் (அதாவது: இவர்கள் குடியிருப்பு ஒரு பக்கத்திலிருக்கும்), அந்தமிலாவறிவன் - அனந்த ஞானத்தையுடைய ஜினேஸ்வரன், உறை - தங்கியிராநின்ற, ஆலயங்கள் - ஸ்ரீஜிநசைத்யாலயங்களானவை, ஒரு பால் - ஒரு பக்கத்திலே யிருக்கும், உலகம் வந்து - உலகத்திலுள்ளவர்கள் வந்து, இறைஞ்ச - வணங்க, மன்னன் - அரசன், இருக்கும் - தங்கி யிருக்கும்படியான, இடம் - அரண்மனையிடங்கள், ஒரு பால் - ஒரு பக்கத்திலே யிருக்கும், அந்தமிலா - முடிவில்லாத, இன்ன - இத்தன்மையாகிய, இடம் - இடங்களை, யார்க்கும் - எவர்களுக்கும், உரைப்பரிது - அளவிட்டுச் சொல்லுதல் அரிதாகும், எ - று. (௫)

754. இந்நக ரிதற்கிறைவ னேத்தரிய கீர்த்தி
மன்னனப ராசிதன் வயப்புலியோ டொப்பா
னன்னமனை யார்மதன னாண்டகைப்பு யத்தைத்
துன்னிய வசுந்தரி துளும்பிய நலத்தாள்.

(இ - ள்) இந்நகரிதற்கு - இவ்வித நகரமாகிய சக்ரபுரமென்னும் இதற்கு, இறைவன் - இராஜாவானவன், ஏத்தரிய - ஸ்துதித்தற்கரிய, கீர்த்திமன்னன் - புகழ்ச்சிக்குத் தலைவனாகிய, அபராசிதன் - அபராஜித மஹாராஜனென்பான், (இவன் வீரத்தில்), வயம் - வெற்றி பொருந்திய, புலியோடு ஒப்பான் - புலிக்கு நிகரானவன், அன்ன மனையார் - ஹம்ஸ பக்ஷிபோன்ற மிருதுவாகிய நடையையுடைய ஸ்த்ரீமார்களுக்கு, மதனன் - மன்மதன் போன்றவன், (இத்தகைய) ஆண்டகை - ஆண்தன்மை பொருந்திய அரசனுடைய, புயத்தை - தோளை, துன்னிய - சேர்ந்திராநின்ற, துளும்பிய - ததும்பிய, நலத்தாள் - அழகையுடைய பட்டத்தரசியானவள், வசுந்தரி - வஸுந்தரியென்னும் பெயருடையவளாகும், எ - று. (௬)

755. மழலைக்கிளி தேனமிர்தம் வான்கரும்பு நல்லியாழ்
குழலொத்தெழு மொழிமதனன் கொடிமயிலஞ் சாய
லுழையிற்பொலி நோக்கத்துரு வக்கொடியி னோடு
மழலொத்திடும் வேலவன்று னமர்ந்தொழுகும் வழிநாள்.

(இ - ள்) கிளி - கிளிப்பிள்ளையின் சொல்லையும், தேன் - மதுவையும், அமிர்தம் - அமிர்தத்தையும், வான் - சிறந்த, கரும்பு - கரும்பையும், நல் - நன்மையாகிய, யாழ் - வீணையின் நாதத்தையும், குழல் - புள்ளாங்குழலினுடைய தொனியையும், ஒத்து - (ஒவ்வொரு குணங்களால்) நிகர்த்து, எழும் - உண்டாகின்ற, மழலைமொழி - மழலைச் சொல்லையும், மதனன் - மன்மதனுடைய, கொடி - துவஜமாகிய மீனத்தையும் (அதாவது: மீனத்தை நிகர்த்த) கண்களையும், மயிலஞ் சாயல் - ஆண் மயில் போன்ற அழகிய சரீரச் சாயலையும், உழையில் - பெட்டைமானினது பார்வையைப்போல, பொலி - விளங்குகின்ற, நோக்கத்து - மருண்ட பார்வையையும் (உடைய), உருவம் - ரூபம் பொருந்திய, கொடியினோடு - புஷ்பக் கொடிபோன்ற அவ்வஸுந்தரியினோடும், * அழலொத்திடும் - அக்னிபோன்ற, வேலவன்றன் - வேலாயுதத்தையுடைய அபராஜித மஹாராஜன், அமர்ந்து - பொருந்தி, ஒழுகும் நாள்வழி - இல்வாழ்க்கையில் செல்கின்ற காலத்தில், எ - று.

* அழலொத்தெழும் - என்றும் பாடபேதமுண்டு. மதனன் கொடி, உவமையாகு பெயராய்க் கண்களை யுணர்த்தி நின்றது. (எ)

756. தேசுடைய சீயசந்தன் கேவச்சத்தின் வழுவி
வாசமுல வுங்குழலி மங்கைதன் வயிற்றுட்
டூசுபொதி பாவையெனத் தோன்றியவன் மண்ணோர்க்
காசைகெட வந்ததொரு மாமணிய தானான்.

(இ - ள்) தேசுடைய - ஒளியையுடைய, சீயசந்தன் - (பூர்வம் தபோபலத்தால் அஹமிந்திரலோகத்தில் தேவனாயவதரித்த பிரீதிங்கரனென்னும் அஹமிந்திரனாகிய) சிம்மச்சந்திரன், கேவச்சத்தின் - உபரிமோ பரிமமென்னும் கிரைவேயகத்தினின்றும், வழுவி - ஆயுரவஸானத்து நழுவி, வாசமுலவும் - பரிமளம் வீசுகின்ற, குழலி - அளகபாரத்தையுடையவளாகிய, மங்கை தன் வயிற்றுள் - இந்த வஸுந்தரியினுடைய கருப்பத்தில், (அடைந்து), தூசு பொதி - வஸ்திரத்தால் மூடப்பட்ட, பாவையென - சித்திரப்பாவைபோல, தோன்றி - அக்கருப்பத்தினின்றும் புத்திரனாகப் பிறந்து, அவன் - அக்குமாரன், மண்ணோர்க்கு - பூமியிலுள்ள ஏழைகளுக்கு, (உண்டாகிய), ஆசை - பொருளாசையானது, கெட - நீங்கும்படியாக, வந்தது - வரப்பட்டதாகிய, ஒரு - ஒப்பற்ற, மா - பெருமை பொருந்திய, மணியதானான் - ஒரு இரத்தினத்துக்குச் சமானமானான், எ - று.

45

(இங்ஙனம் கூறியதனால் பிள்ளை பிறந்த காலத்தில் ஏழைகளது வறுமை நீங்கும்படி விசேஷமாகப் பொருள்கள் தானம் செய்யப்பட்டன என்பது பெறப் படும். (அ)

757. செக்கர்மலி வானினிடைத் திங்களென வந்தாங்
கக்குலம் விளங்கவண்ண லேன்றிய கணத்தே
விக்கிரம சாலிவினை யெட்டும்வெலு மென்றே
தக்கபெய ருஞ்சக்க ராயுதனென் றிட்டார்.

(இ - ள்) செக்கர் - சிவப்பு வர்ணமானது, மலி - நிறைந்த, வானினிடை- அந்திச் செவ்வானத்தில், (தோன்றிய), திங்களென - மூன்றாம் பிறைச்சந்திரன் போல, அண்ணல் - பெருமையிற் சிறந்தவனாகிய வக்குமாரன், ஆங்கு - அவ்விடத் தில், அக்குலம் - அந்த ராஜகுலமானது, விளங்க - பிரகாசிக்கும்படியாக, வந்து தோன்றிய கணத்தே - வந்து பிறந்த காலத்திலே, விக்கிரமசாலி - பராக்கிரம சாலியாகிய இப்புத்திரன், வினையெட்டும் - அஷ்ட கருமங்களையும், வெலுமென்று- கெடுப்பான் என்று, (அவனுக்கு), தக்க - தகுதியாகிய, பெயரும்-நாமமும், சக்கரா யுத னென்றிட்டார் - சக்கராயுதனென்று சொல்லி (அவன் தாய் தந்தையர்) வைத் தார்கள், எ - று. (க)

758. மங்கையர்தங் கொங்கைக்குவட் டிழிந்துநிறை மதிபோற்
பொங்குதவி சினிடைச்சிங் கபோதகத்தி னடிநற்
செங்கமல நிலமடந்தைச் சென்னிமிசை யணிந்து
பொங்குமிமி லுடையவிடை போலநடந் தானே.

(இ - ள்) (அதன் மேல் அவன்), மங்கையர் தம் - ஸ்த்ரீமார்களுடைய, கொங்கைக்குவட்டிழிந்து - ஸ்தன சிகரத்தினின்றும் இறங்கி (அதாவது: தனப் பாலுண்டு அதினின்றுமிழிந்து விளையாடி அதன் பிறகு), நிறைமதிபோல் - கலை நிறையும்படியான சந்திரன் விருத்தியடைவது போல (வளர்ந்து), பொங்கு - அழகினாலுயர்ந்த, தவிசினிடை - மெத்தையின் பேரில், சிங்கபோதகத்தின் - ஸிம் மக்குட்டியைப்போல (தவழ்ந்து திரிந்து), இழிந்து-அதினின்றுமிறங்கி, (நடக்கத் தொடங்கி), அடி - பாதமாகிற, நல் - நன்மையாகிய, செங்கமலம்-செந்தாமரைப் புஷ்பத்தை, நிலமடந்தை - பூமிதேவியின், சென்னிமிசை - சிரசின் பேரில், அணிந்து - சூட்டி, (அதாவது : நிலத்தில் அடியைவைத்து), பொங்கு - பெரி தாகிய, இமிலுடைய - திமிலையுடைய, விடைபோல-விருஷபத்தைப்போல, நடந் தான் - நடந்து விளையாடினான், எ - று.

இழிந்து என்பது இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. (கo)

759. அஞ்சுவரு டங்கடந்து நாமகளோ டாடி
வெஞ்சிலை முதற்படை பயின்றபினை வெம்பூஞ்
செஞ்சரம் வரிந்தசிலை யேந்தித்திறன் மாரன்
மைந்தனொடு போர்தொடங்கி வாளிதொட லுற்றான்.

(இ - ள்) (அதன்மேல்), அஞ்சுவருடம் - ஐந்து ஆண்டு (அதாவது: ஐந்து வயது), கடந்து - தாண்டி, நாமகளோடு - சரஸ்வதி தேவியோடு, ஆடி - விளையாடி, (அதாவது: சாஸ்திரங்களைக்கற்று அதன் பிறகு), வெம் - வெவ்விதாகிய, சிலைமுதல் - வில்முதலாகிய, படை - ஆயுதவித்தைகளையும், பயின்றபினை - கற்ற பிறகு, வெம் - விருப்பமுடைய, செம் - செம்மையாகிய, பூஞ்சரம் - புஷ்ப பாணங்களை, வரிந்த - தொடுத்த, சிலை - கரும்புவில்லை, ஏந்தி - தரித்து, திறல் - பராக்கிரமத்தையுடைய, மாரன் - மன்மதனனவன், மைந்தனொடு - இச்சக்ராயுத குமாரனோடு, போர் தொடங்கி - யுத்தஞ் செய்ய வாரம்பித்து, வாளி - புஷ்ப பாணத்தை, தொடலுற்றான் - தொடுத்து இவன்மீது விடுவதற்கு ஆரம்பித்தான், எ - று.

இவ்வாறு கூறியதனால், இவன், மதனன் போர்செய்கைக் கிடந்தரத்தக்க யௌவனத்தையடைந்தான் என்பது பெறப்படும். (கக)

760. ஆங்கதனை மன்னனப ராசித னறிந்து
கோங்கரும்பு போலுமுலைக் கொவ்வையெனச் செவ்வாய்
தேங்குழலி சித்திரநன் மாலையெனுஞ் செம்பொன்
வாங்கனைய தோளிதுணை யாகமலி வித்தான்.

(இ - ள்) ஆங்கு - அவ்விடத்தில், அதனை - (குமாரன் யௌவனமடைந்த) அவ்விஷயத்தை, மன்னன் - அரசனாகிய, அபராசிதன் - அபராஜிதனென்பான், அறிந்து - தெரிந்து, கோங்கரும்புபோலும் - கோங்கின் அரும்புபோலும், முலை - ஸ்தனங்களையும், கொவ்வையென - கோவைக்கனிபோன்ற, செவ்வாய் - சிவந்த வாயையும், தேம் - வாசனை பொருந்திய, குழலி - அளகத்தையுமுடையவளாகிய, சித்திர நன் மாலையெனும் - நல்ல சித்ரமாலையென்று பெயர் கூறக்கூடிய, செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, வாங்கனைய - வாங்குக்குச் சமானமாகிய, தோளி - கைகளையுடைய ஒரு ராஜகுமாரத்தியை, துணையாக - (அவனுக்குப்) பெண்சாதியாக, மலிவித்தான் - அன்பில் மிகுந்திருக்கும்படி செய்தான் (அதாவது: அன்பு மிகுந்த மனைவியாகச் செய்தான்), எ - று. (கஉ)

761. மின்னினொடு மேகம்விளை யாடுவது போல
வன்னநடை யோடவ னமர்ந்தொழுகும் வழிநாண்

மன்னருக்க வேகன்மலி காவிட்டத்தின் வழுவி
யன்னவர்க டம்புதல்வ னாகியவ தரித்தான்.

(இ - ள்) மின்னினொடு - மின்னற்கொடியோடு, மேகம் - மேகமானது, விளையாடுவதுபோல - சேர்ந்து விளையாடுவதுபோல, அன்னநடையோடு - ஹம்ஸ பக்ஷிபோன்ற நடையையுடைய வச் சித்ரமாலேயோடு, அவன் - அச்சக்கராயுதன், அமர்ந்து - பொருந்தி, ஒழுகும் வழிநாள் - செல்கின்ற நாட்களில், மன்னருக்க வேகன் - பூர்வத்தில் பொருந்திய கிரணவேகனாகிய அரசன், மலி-நிறைவுபெற்ற, காவிட்டத்தின் - காபிஷ்ட கற்பத்தினின்றும், வழுவி - ஆயுரவஸாநத்தில் நழுவி, அன்னவர்கள் தம் - அந்தச் சக்கராயுதன் சித்ரமாலேயாகிய தம்பதிகளுடைய, புதல்வனாகி - புத்திரனாகி, அவதரித்தான் - பிறந்தான், எ - று. (கங)

## வேறு.

762. வானத்து மின்னு முன்னாண் மதியினைப் பயந்த தேபோற்
றேனொத்த மொழியி னாளத் தேவனைப் பெற்ற போழ்தி
னூனத்தை வையத் தின்க ணகற்றிநின் றுதவி மன்னன்
மானத்தை யுடைய நாமம் வச்சிரா யுதனென் றிட்டார்.

(இ - ள்) வானத்து - ஆகாயத்திலுண்டாகிய, மின்னு - மின்னற்கொடியானது, முன்னாள் - பூர்வபட்சத்து, மதியினை - சந்திரனை, பயந்ததேபோல் - பெற்றதுபோல, தேனொத்த - தேனினை நிகர்த்த இனிமை பொருந்திய, மொழியினாள் - வசனத்தையுடைய சித்ரமாலேயானவள், அத்தேவனை - அந்தக்காபிஷ்ட கல்பத்துத் தேவனை, பெற்றபோழ்தில் - குமாரனைப் பெற்ற காலத்தில், மன்னன் - சக்கராயுத மகாராஜனானவன், வையத்தின்கண் - இந்தப் பூமியிலுண்டாகிய, ஊனத்தை - யாசக ஜனங்களுக்குண்டாகிய வறுமையாகிற குற்றத்தை, அகற்றிநின்று - நீக்கிநின்று, உதவி - தானமாக விசேஷ பொருள்களை யளிக்க, (அப்பிள்ளைக்குச் சுற்றத்தார்கள்), மானத்தையுடைய - பெருமையை யுடைத்தாகிய, நாமம் - பெயரானது, வச்சிராயுதனென்று - வஜ்ராயுத குமாரனென்று, இட்டார் - சூட்டினார்கள், எ - று. (கச)

763. மதிகலை வளரத் தானும் வளர்வதே போல மைந்தன்
விதியினாற் கலையும் வேந்தர் விஞ்சையும் விளங்க வோங்கி
நுதிகொண்ட வேற்க ணல்லார் நோக்கினுக் கிலக்க மானா
னதிபதி யதனை யாராய்ந் தரிவையர்ப் புணர்க்க லுற்றான்.

(இ - ள்) (அதன்மேல்), மதி - சந்திரனுடைய, கலை - ஷோடசகலைகள், வளர - பூர்வபட்சத்தில் வளர, தானும் - அச்சந்திரன் றானும், வளர்வதேபோல் - விருத்தி

யாவதுபோல், மைந்தன் - வச்சிராயுத குமாரன், விதியினால் - கிரமப்படி, கலையும்- சாஸ்திரங்களும், வேந்தர்-இராஜாக்களுக்குரிய, விஞ்சையும்-ஆயுதவித்தை முதலிய யாவும், விளங்க - மிகுதியாய்த் தன்னிடத்தே விருத்தியடைந்து பிரகாசிக்க, (அதாவது: அவற்றைக் கற்று அவை விருத்தியாகத் தானும்), ஓங்கி - மேலாகி வளர்ந்து, நுதிகொண்ட - கூர்மை பொருந்திய, வேல் - வேலாயுதம்போன்ற, கண் - கண்களையுடைய, நல்லார் - ஸ்திரீமார்களுடைய, நோக்கினுக்கு - பார்வைக்கு, இலக்கமானான் - குறியானான் (அதாவது: யௌவனத்தை யடைந்தான்), அதிபதி - சக்ராயுத மஹாராஜன், அதனை - அக்காரியத்தை, ஆராய்ந்து - தெரிந்து, அரிவையர் - ஸ்த்ரீமார்களை, புணர்க்கல் - விவாக விதியால் அவனுக்கு மனைவியராகச் சேர்த்தலாகிய காரியத்தில், உற்றான் - பொருந்தினான் (அதாவது: பிரவேசித்தான்), எ - று. (கஉ)

764. மருதம்வான் குறிஞ்சி முல்லை நெய்தலும் மயங்கி வானொத்
திருதுவின் விகற்ப மின்றி யிலங்கிய சோலைத் தாகிப்
பருதியின் வெம்மை யாற்றும் பதாகைசூழ் மாட மூதூர்
பிருதிவி திலக மென்னும் பேருடை நகரமுண்டே.

(இ - ள்) மருதம் - மருத நிலமும், வான் - அழகிய, குறிஞ்சி - குறிஞ்சி நிலமும், முல்லை - முல்லை நிலமும், நெய்தலும் - நெய்த நிலமும், (ஆகிய நால் வகை நிலங்களும்), மயங்கி - சேர்ந்து, வானொத்து - தேவலோகத்துக்குச் சமானமாகியும், இருதுவின் விகற்பமின்றி - இருதுகாலங்களின் வித்தியாசமில்லாமல், இலங்கிய - எப்பொழுதும் குளிர்ச்சியாகவே விளங்குகின்ற, சோலைத்தாகி - தோப்புகளையுடையதாகியும் (அமைந்த), பருதியின் - ஸூர்யனுடைய, வெம்மை - வெப்பத்தை, ஆற்றும் - தணிக்கும்படியான, பதாகை - துவஜங்கள், சூழ் - சூழ்ந்திரா நின்ற, மாடம் - உப்பரிகைகளையுடைய, மூதூர் - பழமையான ஊராகிய, பிருதிவி திலகமென்னும் - பிருதிவி திலகமென்கின்ற, பேருடை - பெயருடைய, நகரம் - நகரமானது, உண்டு - ஒன்றுளது, எ - று. (கரு)

765. மற்றிந்த நகர்க்கு நாதன் மாலதி வேகன் மாண்ட
பெற்றியான் றனக்குத் தேவி பிரியகா ரிணியென் பாளா
மற்றிவர் தமக்கு மங்கை யிரதன மாலை யானாள்
செற்றமி றவத்துத் தேவ ளுயவச் சீத ரைதான்.

(இ - ள்) இந்த நகர்க்கு - இந்தப் பிருதிவி திலகமென்னும் பட்டணத்துக்கு, நாதன் - அரசனானவன், மால் - பெரிய, அதிவேகன் - அதிவேகனென்னும் பெயருடையவனாவான், மாண்ட - மாட்சிமை பொருந்திய, பெற்றியான் தனக்கு - தன்மையையுடைய அவ்வரசனுக்கு, தேவி - பட்டத்தரசியானவள், பிரியகாரிணியென்பாளாம் - பிரியகாரிணியென்னும் பெயருடையவளாவாள், இவர் தமக்கு-

இந்த இரண்டு பேர்களுக்கும், செற்றமில் - த்வேஷமில்லாத, தவத்து - தபத்தி ஞலே, தேவனுய - தேவனுய்ப் பிறந்திருந்த, அச்சீதரைதான் - அந்த ஸ்ரீதரை யானவள், இரதனமாலே - இரத்தினமாலே யென்னும் பெயருடைய, மங்கை யானுள் - புத்திரியாகப் பிறந்தாள், எ - று.

மற்று இரண்டும் அசைகள். (கஎ)

766. கற்பக வல்லி யீன்ற கன்னிமஞ் சரியைப் போலும்
பொற்புடைத் திருவின் பாதம் பூமக ளிருக்கை காமன்
நற்கணைத் தூணி நங்கை தன்கணைக் கால்க ளூரு
பொற்றிரட் கதலி நல்லார் புகழெனப் பரந்த வல்குல்.

(இ - ள்) கற்பகவல்லி - கற்பகக் கொடியானது, ஈன்ற-பெற்ற, கன்னி- இளமையாகிய, மஞ்சரியைப்போலும் - பூங்கொத்துப்போலும், பொற்புடை - அழகையுடைய, திருவின் - லட்சுமி தேவி போன்ற இந்த அரதன மாலேயி னுடைய, பாதம் - பாதமானது, பூமகளிருக்கை - இலக்ஷ்மிதேவியின் இருக்கை யாகிய தாமரைப் புஷ்பமாகும், நங்கைதன்-இந்த இரத்தின மாலேயினது, கணைக் கால்கள் - கணைக்கால்களானவை, காமன் - மன்மதனுடைய, நல் - நன்மையாகிய, கணைத்தூணி - அம்பறுத்தூணியாகும், ஊரு - துடைகளானவை, பொன் - ஸ்வர் ணத்திஞலாகிய, திரள் - திரட்சிபெற்ற, கதலி - வாழையாகும், அல்குல் - அல்கு லானது, நல்லார் - குணவந்தர்களுடைய, புகழென - கீர்த்தியைப்போல, பரந்த - விசாலித்திராநின்றதாகும், எ - று. (கஅ)

767. மின்சுழி யிடைநற் கொப்பூ ழோர்கையிற் றூமம் வேய்தோள்
பொன்புனை யமிர்தச் செப்பி னிணைமுலே வலம்பு ரியின்
றன்சுரி போலும் நங்கை மங்கல விருக்கை கொவ்வை
நன்கனி யாகுஞ் செவ்வாய் முறுவனற் சிறிய முத்தம்.

(இ - ள்) நங்கை - இந்த இரத்தினமாலே யென்னும் நங்கையினுடைய, இடை - இடையானது, மின் - மின்னற்கொடியாகும், நல் - நல்ல இலக்ஷண மமைந்த, கொப்பூழ் - நாபியானது, சுழி - நீர்ச்சுழியாம், ஓர்கையில் - அறியுமிடத் தில், தாமம் - முத்துமாலேயையணிந்த, தோள் - தோள்களானவை, வேய்-பச்சை மூங்கிலாகும், முலே - ஸ்தனங்களானவை, பொன் புனை - பொன்னுற் செய்யப் பட்ட, அமிர்தச் செப்பினிணை - இரண்டு அமிர்தச் செப்புக்களாகும், மங்கல விருக்கை - மாங்கலியத்திற் கிருப்பிடமாகிய கழுத்தானது, வலம்புரியின்றன் - வலம்புரிச்சங்கினுடைய, சுரிபோலும் - சுருளுக்கொப்பாகும், செவ்வாய் - சிவந்த வாயானது, கொவ்வை நன்கனியாகும் - நல்ல கோவைக்கனியாகும், முறுவல் - பற்களானவை, நல் - அழகிய சிறிய - சிறுமையாகிய, முத்தம் - முத்துக்க ளாகும், எ - று. (கக)

768. முகத்திடை யழகெ லாம்போந் தொழுகுவ தொக்கும் மூக்கும்
வகுத்தநன் முகத்திற் கேற்ற வழகெய்த வடிந்த காதும்
நகத்தினுங் கண்ணொப் பில்லை நற்சிலை புருவம் நங்கை
முகத்தினுக் கொப்பு திங்கண் முயலின்றி யிருந்த தாமே.

(இ - ள்) மூக்கும் - நாசியும், முகத்திடை - முகத்தினிடமாகவுள்ள, அழகெலாம் - அழகுகளெல்லாம், போந்து - வந்து, ஒழுகுவதொக்கும் - ஒழுகுவதற்குச் சமானமாகும், காதும் - செவிகளும், வகுத்த - வடிவுபெற்ற, நல் - நன்மையாகிய, முகத்திற்கு - வதனத்திற்கு, ஏற்ற - இசைந்த, அழகெய்த - அழகடைய, வடிந்த - வடிவுபெற்றனவாகும், நகத்தினும் - இந்தப் பூமியில், கண் - நேத்திரங்களுக்கு, ஒப்பில்லை - உவமையில்லை, புருவம் - புருவங்கள், நல் - நன்மையாகிய, சிலை - விற்களாகும், நங்கை - இந்த இரத்தினமாலையினுடைய, முகத்தினுக்கு - முகத்திற்கு, ஒப்பு - உவமையானது, திங்கள் - சந்திரன், முயலின்றி - களங்கமின்றி, இருந்ததாம் - இருந்த தோற்றமாகும், எ - று.

நகத்தினும் என்பதில் உம் - அசை. (உ0)

769. நெறிந்துநெய்த் தொழுகி நீண்டு நீலத்தின் கதிரை யெல்லாங்
கறந்தொரு கற்றை யாக்கி வைத்ததாங் கவரி பந்தம்
புறம்புள வழகு சொல்லிற் புரிந்துழிப் பார்த்த கண்ணைத்
திறம்பிடா வகையைச் செய்யுஞ் செப்புவ தினிமற் றென்னோ.

(இ - ள்) கவரிபந்தம் - தலைமயிர்க் கற்றையானது, நெறிந்து - நெளிவுகொண்டு, நெய்த்து - தைலப் பசையுடையதாய், ஒழுகி - முறையாக வளர்ந்து, நீண்டு - நீளமாகி, நீலத்தின் - இந்திர நீலத்தின், கதிரையெல்லாம் - கிரணஸமூகங்களை, கறந்து - வாங்கி, ஒரு கற்றையாக்கி - ஒரு திரளாகச் சேர்த்து, வைத்ததாம் - வைத்ததாகும், புறம்புள - பின் பக்கத்திராநின்ற, அழகு - அழகை, சொல்லின் - கூறுமிடத்து, புரிந்துழி - அதனைப் பார்க்க விரும்பும்போது, பார்த்த கண்ணை - பார்த்த கண்களுக்கு, திறம்பிடாவகையை - நீங்காமையாகிய விதத்தை, செய்யும் - செய்துவிடும், இனி - இன்னமும், செப்புவது - சொல்வது, என் - என்ன, எ - று.

கண்ணை-உருபு மயக்கம். மற்று, ஓ - அசைகள். (உக)

770. மயிலிய லன்னம் போலு மென்னடை மான்மை நோக்குங்
குயில்குழன் மழலை நல்லியாழ் மொழிமலர்க் கொடிய ளுடன்
னியல்பெலாந் தூத ராற்சக் கராயுத னறிந்து பின்னைத்
தையலைவச் சிராயு தற்குத் தருகெனத் தூது விட்டான்.

(இ - ள்) (இவள் இவ்வகை அழகு பெற்றிருக்கும்போது), மயில் - ஆண் மயில்போன்ற, இயல் - சரீரச்சாயலும், அன்னம் போலும் - ஹம்ஸபக்ஷி போன்ற, மென்னடை - மிருதுவாகிய நடையும், மான்மை நோக்கும் - பெட்டை மான் போன்ற மருண்ட பார்வையும், குயில் - குயிலிசையையும், குழல் - புள்ளாங்குழலிசையையும், யாழ் - வீணையிசையையும், (நிகர்த்த), நல் - நல்ல, மழலைமொழி - மழலையாகிய வசனமும், (உடைய), மலர்க்கொடியனாள் தன் - புஷ்பக்கொடி போல்பவளாகிய இந்த இரத்தின மாலையினுடைய, இயல்பெலாம் - அழகதிசயங்களெல்லாம், தூதரால் - ஒற்றர்களினால், சக்கராயுதன் - சக்கராயுத வரசன், அறிந்து - தெரிந்து, பின்னை - (முன்னுரைத்தபடி தன் புத்திரனுக்கு மணஞ் செய்ய வேண்டுமென்று கருதியிருந்ததற்குப்) பிறகு, தையலை-இக்கன்னிகையை, வச்சிராயுதற்கு - தனது குமாரனாகிய வஜ்ராயுதனுக்கு, தருகென - கொடுக்க வேண்டுமென்று, தூது - தூதர்களை, விட்டான் - (அவள் தந்தையிடம்) அனுப்பினான், எ - று. (௨௨)

771. தூதர்வந் துரைத்த மாற்றங் கேட்டதி வேகன் சொன்னான்
போதுலாங் குழலை மைந்தன் புணர்ந்திடிற் புகழ்ச்சித் தாமென்
றியாதுநீ ருரைத்த தெல்லா மிசைந்தன னென்னப் பின்னை
நீதிநூல் வகையின் வேள்வி யாகுதி நெறியிற் செய்தார்.

(இ - ள்) (அவ்வாறனுப்பப்பட்ட), தூதர் - தூதர்கள், வந்து - பிருதிவி திலக நகரம் வந்து, உரைத்த - சொன்ன, மாற்றம் - வசனத்தை, அதிவேகன் - அதிவேக மகாராஜன், கேட்டு - கேட்டு, போதுலாம் - புஷ்பங்கள் தங்கியிருக்கப்பட்ட, குழலை - அளகத்தையுடைய நமது புத்திரியை, மைந்தன் - வச்சிராயுத குமாரன், புணர்ந்திடில்-சேர்ந்தால், (அது), புகழ்ச்சித்தாம்-பெருமையையுடையதேயாகும், என்று - என்று, சொன்னான் - சொன்னவனாகி, பின்னை - பின்னையும், யாது - எதுவானாலும், நீர் - நீங்கள், உரைத்தது யாது - சொல்லியது எதுவோ, எல்லாம் - அதற்கெல்லாம், இசைந்தனன் - நான் சம்மதித்தேன், என்ன - என்று சொல்ல, (அவன் சம்மதத்தின் பேரில் பெரியோர் அப்பெண்ணுக்கும் குமாரனுக்கும்), நீதிநூல் வகையின்-நீதி சாஸ்திர கிரமத்தால் (ஏற்பட்ட), வேள்வி - கலியாண வேள்வியை, ஆகுதி நெறியில் - ஓமாகுதியின் விதிப்படி, செய்தார் - செய்தார்கள், எ - று. (௨௩)

772. கடிமலர்க் கொடிய னாளைக் காவல குமர னெய்தி
வடிவுடைத் தடக்கை வேழம் பிடியொடு மகிழ்வ தேபோற்
கொடிமலர்ப் பந்தர் குன்றம் வாவியுங் காவு மெய்திப்
படிமிசைப் பட்ட வின்பம் பரிவின்றி நுகரு நாளில்.

(இ - ள்) (அதன் மேல்) கடி - வாசனை பொருந்திய, மலர்க்கொடியனுளை புஷ்பக்கொடிக்குச் சமானமாகிய அவ்விரத்தினமாலை யென்னு மாசகுமாரத்தியை, காவலகுமான் - இராஜ குமாரனுகிய வஜ்ராயுதன், எய்தி - விவாஹ விதி பூர்வமாக வடைந்து, வடிவுடை - ரூபத்தையுடைய, தடக்கை - துதிக்கை பொருந்திய, வேழம் - ஆண்யானையானது, பிடியொடு - பெண்யானையுடன், மகிழ்வதேபோல் - மனமொத்துக் கூடி ஸந்தோஷிப்பதுபோல, மலர்க்கொடிப்பந்தர் - புஷ்பக்கொடிகளாலாகிய லதாமண்டபங்களிலும், குன்றம் - செய்குன்றங்களிலும், வாவியும் - தடாகங்களிலும், காவும் - பூங்காவுகளிலும், எய்தி - (அவளுடன்) அடைந்து, படிமிசை - பூமியில், பட்ட - உண்டாகிய, இன்பம் - போக சௌக்கியத்தை, பரிவின்றி - வருத்தமில்லாமல், நுகருநாளில் - அனுபவித்திருக்கின்ற நாட்களில், எ - று. (உச)

773. இன்பநீர்க் கடலை யேறி யிசோதரை யான தேவ
னன்பினாற் சிறுவ னானா னரதன மாலைக் கன்று
நந்திய மதியைக் கண்ட நளிகடல் போன்று ஞால
மந்தமி லுவகை யெய்த வரதனா யுதனென் றாரே.

(இ - ள்) இசோதரையான - யசோதரையான, தேவன் - தேவனானவன், (அதாவது : முன் யசோதரையாயிருந்து அந்த ஜன்மம்நீங்கிப் பின்னர் தேவஜனன மெடுத்த காபிஷ்டகல்பத் தேவனானவன்), இன்பம் - தேவ இன்பத்தின், நீர் - குணம் பொருந்திய, கடலை - தனது ஆயுஷ்யஸ்திதியாகிய கடற்காலங்களை, ஏறி - கடந்து, (ஆயுரவஸானத்தில்), அரதனமாலைக்கு - இந்த இரத்தினமாலை யென்னும் பெண்ணுக்கு, அன்பினால் - பூர்வவாஞ்சையினால், சிறுவனானான் - புத்திரனாகத் தோன்றினான், அன்று - அப்பொழுது, ஞாலம் - இப்பூமியிலுள்ளோர், நந்திய - நிறைந்த, மதியை - பூர்ணச்சந்திரனை, கண்ட - பார்த்த, நளி-குளிர்ச்சியையுடைய, கடல்போன்று - சமுத்திரம்போன்று, (அதாவது : அச்சந்திரனைக்கண்ட சமுத்திரம் பொங்கி ஒலிப்பதுபோல), அந்தமில் - முடிவில்லாத, உவகை - ஸந்தோஷத்தை, எய்த - அடைய, (அவனுக்கு அவனுடைய தாய்தந்தையர்), அரதனாயுதனென்றார் - இரத்தினாயுதனென்று நாமகரணம் செய்தார்கள், எ - று. (உரு)

774. வாரிசூழ் வையத் தின்கண் வறுமையைக் கெடுக்க வந்த
பாரிசா தத்தின் கன்றிற் பரிவின்றி வளர்ந்து மைந்தன்
வேரிசூழ் கூந்த லாரை வேள்வியா லெய்தி யின்பம்
பூரியா மனத்த னாகிப் போகத்தி னாற்ற வீழ்ந்தான்.

(இ - ள்) வாரிசூழ் - சமுத்திரஞ்சூழ்ந்த, வையத்தின்கண் - இப்பூமியில், வறுமையை - தரித்திரத்தை, கெடுக்க - நீக்கும்படியாக, வந்த - தோன்றிய, பாரி

சூதத்தின் கன்றில் - கற்பக விருக்ஷத்தினது இளங்கன்றுபோல, மைந்தன் - இரத்தினாயுத குமாரனானவன், பரிவின்றி - துன்பமில்லாமல், வளர்ந்து - வளர்ந்து யௌவன வயதையடைந்து, வேரிசூழ் - வாசனைநிறைந்த, கூந்தலாரை - அளகத்தையுடைய இராஜ கன்னிகைகளை, வேள்வியால் - ஔபாசன விவாக விதிக்கிரமத்தால், எய்தி - அடைந்து, பூரியா - (தேகம் சந்தோஷத்தால்) பூரித்து, இன்பம் - சௌக்கியம் பொருந்திய, மனத்தனாகி - மனதுடையவனாகி, போகத்தின் - காமபோகத்தில், ஆற்ற - மிகவும், வீழ்ந்தான் - மூழ்கினான், எ - று. (உசு)

775. தானுந்தன் மகனும் பின்னை யவன்மகன் மகனு மாய்ப்பே
ரானந்தத் தழுந்து கின்ற நல்லப ராசி தன்போ
யூனந்தீர் தவத்தி னூற்றச் செறித்தமா தவனை யேத்தி
யீனந்தீ வினைகட் காக்கு முபாயமென் னிறைவ வென்றான்.

(இ - ள்) (இவன் இவ்வாறிருக்கின்ற காலத்தில்), தானும் - தானும், தன் மகனும் - தன் புத்திரனாகிய சக்ராயுதனும், பின்னை - பின்பு, அவன் மகன்-அவன் குமாரனாகிய வஜ்ராயுதனும், மகனும் - அவன் குமாரனாகிய இரத்தினாயுதனும், ஆய் - விருத்தியாகி, (இப்படிப் புத்திர, பவுத்திர, பிரபவுத்திரர்களோடு), பேர் - பெரிதாகிய, ஆனந்தத்து - ஸம்ஸாரசுகத்தில், அழுந்துகின்ற - தங்கியிராநின்ற, நல் - நன்மைபொருந்திய, அபராசிதன் - அபராஜித மகாராஜன், போய் - தபஸ்ரேஷ்ட முனிகளிருக்கும் இடம்சென்று, ஊனந்தீர் - குற்றநீங்கிய, தவத்தில் - தபஸினால், ஊற்று - ஆஸ்ரவத்தை, செறித்த - தடைசெய்த, மாதவனை - மஹாதபஸையுடைய பிஹிதாஸ்ரவரை, ஏத்தி - ஸ்தோத்திரம் செய்து, இறைவ - நாதனே!, தீவினைகட்கு - பொல்லாங்காகிய கருமங்கட்கு, ஈனமாக்கும் - குறைவைச் செய்யும் (அதாவது: அக்கருமங்களைக் குறைத்து நீக்கும்படியான), உபாயம்- உபாயமானது, என் - யாது?, என்றான் - என்று கேட்டான், எ - று. (உஎ)

776. வினையுயிர் கட்டு வீட்டின் மெய்ம்மையை யறிந்து தேறித்
தினையனைத் தானும்பற்றிற் செறிவிலா நெறியை மேவித்
தனைவினை நீங்கி நின்ற தன்மைய னாக நோக்க
வினையெனைத் தானும் நீங்கும் விகாரங்க ளோடு மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு வினவியவுடனே), வினை - கர்மங்களினது, மெய்ம்மையை - உண்மை ஸ்வரூபத்தையும், உயிர் - ஜீவனுடைய, மெய்ம்மையை - உண்மை ஸ்வரூபத்தையும், கட்டு - ஜீவனிடத்தில் கர்மங்கள் பந்திக்கும் பந்தத்தின், மெய்ம்மையை - உண்மை இயல்பையும், வீட்டின் - (அக்கருமங்கள் ஆத்மனைச்சேர்ந்து பந்திக்காமல் நீங்கி நின்றுவிடுகிற ஜீவனுடைய சுத்தத்தன்மையாகிற) மோட்சத்தின், மெய்ம்மையை - யதாஸ்வரூபத்தையும், அறிந்து - ஸம்யக்

ஞானத்தாலறிந்து, தேறி - உண்மையைத் தெளிந்து, (அதாவது: தரிசன சுத்தியாகி), தினையனைத்தானும் - தினையளவாகிலும், (அதாவது: சிறிதாயினும்), பற்றில் - (அன்னியத்திரவிய வாஞ்சையாகிற) ராகபரிணாமத்தில், செறிவிலா - சேராத, நெறியை - வழியை (அதாவது: சுத்தஸ்திதி ஸ்வரூபமாகிய ஸம்மியக் சாரித்திரத்தை), மேவி - பொருந்தி, தனை - தன்னை, வினை - கர்மங்கள், நீங்கி நின்ற - விலகிநின்ற, தன்மையனாக - சுத்தஸ்வபாவத்தை யுடையவனாக, நோக்க - வீதராக பரிணதியால் காண, (அப்போது), விகாரங்களோடு - ஆத்மகுண விகாரங்களோடு, (கூடிய), வினை - பாவகர்ம திரவிய கர்மங்கள், எனைத்தானும் - எவ்வளவானாலும், நீங்கும் - ஆத்மனிடத்தில் நிற்காமல் விலகி மோட்சமாகும், என்றான் - என்று பிஹிதாஸ்ரவ குருக்கள் கூறினான், எ - று.

'மெய்ம்மையை' என்பது தீபகமாக நான்கிடங்களினும் கூட்டப்பட்டது. ()

777. என்றலும் முடியை மன்னன் சக்கரா யுதனுக் கீந்து
குன்றெனத் திரண்ட தோளாய் குவலயங் காத்துச் சின்னாட்
சென்றுமண் காவ லுன்பாற் சிறுவனுக் கீந்து போகி
நின்றிடா நிலைமை நீங்கு நீயெனத் தொழுது நீத்தான்.

(இ - ள்) என்றலும் - (இவ்வாறு மோக்ஷமாகும்) என்று முனிவரன் சொல்லிய மாத்திரத்தில், மன்னன் - அபராஜித மஹாராஜன், முடியை - அரசாளும்படியான பட்டாபிஷேக முடியை, சக்கராயுதனுக்கு - தன் புத்திரனாகிய சக்ராயுத குமாரனுக்கு, ஈந்து - பட்டாபிஷேக பூர்வகம் கொடுத்து, (அவனை நோக்கி), குன்றென - பர்வதம்போல, திரண்ட - திரட்சிபொருந்திய, தோளாய் - புயத்தையுடைய குமாரனே!, சின்னாள் - சிலநாட்கள்வரை, நீ - நீ, குவலயங்காத்து - இப்பூமியை ஆட்சி செய்து, சென்று - அதன்வழியிலே நடந்து, (அதன்மேல்), மண்காவல் - இப்பூமியின் காவலை, உன்பால் - உன்னிடத்தேயுள்ள, சிறுவனுக்கு - குமாரனுக்கு, ஈந்து - கொடுத்து, போகி - இராஜ்யத்தினின்றும் விலகிப்போய், நின்றிடா நிலைமை - அனித்திய ஸ்வரூபமாகிய இப்பிறவியை, நீங்கு - நீங்கித் தபஞ்செய்து மோட்சமடைவாயாக, என - என்று சொல்லி, (இராஜ்ஜியத்தை விடுத்து), தொழுது - (மீண்டும் போகி முன்சொன்ன குருக்களை) வணங்கி, நீத்தான் - சர்வசங்க பரித்தியாகமாகிய தீக்ஷையைக் கைக்கொண்டான், எ - று. ()

வேறு.

778. அபரா சிதன்மா தவனா யினபின்
னுவரோ தமுடுத் தநிலத் தையெலாஞ்
சகரா யுதனுந் தளரா மையிறத்
தபரா சிதனும் மவனா யினனே.

(இ - ள்) (அவ்வாறு) அபராஜிதன்-அபராஜித மஹாராஜன், மாதவனுயினை பின்-மஹாதபஸைச் செய்யும்படியான முனிவரானுன பின்பு, சகராயுதனும் - சக்ரா யுதராஜனும், உவரோதம் - உவர்ச்சமுத்திரத்தை, உடுத்த - ஆடையாக வுடுத்திய (அதாவது : சமுத்திரத்தாற் சூழப்பட்ட), நிலத்தையெலாம் - பூமிராஜ்யத்தை யெல்லாம், தளராமை - தளர்ச்சியில்லாமல் (அதாவது : துன்பமின்றி), நிறுத்தி - ஸ்தாபித்து, அவன் - அச்சக்கராயுதன், அபராஜிதனும் - பிறவரசர்களால் ஜெயிக்க முடியாதவனும், ஆயினன் - ஆனுன், எ - று. (௩௦)

779. பொறிமீ துபுலத் தெழுபோ கமெலா
மிறவா திரவும் பகலும் நுகரா
நிறையா தொழியப் பினெருப் பினிடை
விறகே யிவையென் றுவெறுத் தனனே.

(இ - ள்) (அவ்வாறுனபின்), பொறி - பஞ்சேந்திரியங்களால், புலத்து - விஷயவஸ்துக்களின், மீது - மேலே, எழும் - உண்டாகிய, போகமெலாம் - போ கோபபோகங்களை யெல்லாம், இறவாது - நீங்காமல், இரவும் - இராத்திரியிலும், பகலும் - பகலிலும், நுகரா - அனுபவித்தும், நிறையாது - திருப்தியாகாமல், ஒழிய - நீங்க, பின் - பிறகு, இவை - இந்த இந்திரியவிஷய போகங்களானவை, நெருப்பினிடை - அக்கினியிடத்தில் அகப்பட்ட, விறகே யென்று - விறகுக்குச் சமானமே யாகுமென்று, வெறுத்தனன் - அவற்றை வெறுத்து வைராக்கிய முற்றுன், எ - று. (௩௧)

780. அறிவா லறியா வறியா வதனுற்
பிறிதாம் வினையைப் பிணியா வதனு
னிறையா துநிலா துவிருப் புறநின்
றுறவே முயல்வா ருணர்வொன் றிலரே.

(இ - ள்) (அங்ஙனம் வைராக்கியமுற்றபின்), அறிவால்-ஸம்மியக் ஞானத்தி னுலே, அறியா - (ஜீவாதி பதார்த்தங்களை ஹேயோ பாதேய ஸ்வரூபந்தெரிந்து வீதராகத் தன்மையாகிய சுத்தோபயோகம் பெற) அறியாத, அதனுல் - அத்தன்மையினுல், அறியா - வஸ்து ஸ்வரூபமறியாத, பிறிதாம் - தனது ஸ்வ ரூபத்துக்குவேருகிய, வினையை - புத்கல பரியாயமாகிய கர்மங்களை, பிணியா - பந்தித்துக்கொண்டு, அதனுல் - அக்கர்மங்களின் பந்தத்தால், நிறையாது - ஸம் சார விஷய சுகமானது நிறைந்து திருப்தியாகாமலும், நிலாது - நிற்காமல் அனித்திய ஸ்வரூபமாகவும், விருப்பு - ஆசையானது, உற நின்று - பொருந்த நின்று, உறமுயல்வார் - இந்திரிய விஷய சுகமடைய முயற்சிப்பவர், உணர் வொன்றிலர் - ஸம்மியக் ஞானேதயமில்லாத அஞ்ஞானிகளாவர், எ - று. (௩௨)

781. வினையான் வருமின் பம்வெறுத் திடவே
தனையே நுதலித் தளரா வகையா
னினைவான் வினைநீங் கிநிறைந் துடனே
புனையா துபொருந் துமனந் தசுகம்.

(இ - ள்) வினையால் - கர்மங்களினால், வரும் - வருகின்ற, இன்பம் - ஸம்ஸார சுகத்தை, வெறுத்திட - வெறுத்துநீக்க, தனையே - தனது ஆத்மபாவனையையே, நுதலி - கருதி, தளரா - தளர்ச்சியடையாத, வகையால் - விதத்தினாலும், நினைவால் - தியானத்தாலும், வினை - கருமங்கள், புனையாது - சேராமல், நீங்கி - விலகி, உடனே - அப்பொழுதே, அனந்த சுகம் - அனந்த ஸௌக்கியமானது, நிறைந்து - நிறைவுபெற்று, பொருந்தும் - அடையும், எ - று. (௩௯)

782. முடிவில் லதுமுன் னமுமென் கணதற்
றடையாம் வினையைத் தவநீ தியினிற்
றடைவன் னினியென் றரசன் னினையா
வடிவே லவன்வச் சிரவா யுதன்மேல்.

(இ - ள்) (ஆதலின்), முன்னமும் - முந்தியும், முடிவில்லது - முடிவில்லாததும், என்கணதன் - என்னிடத்துள்ள ஆத்மஸ்வபாவ குணத்தின், தடை - தடையானதும், ஆம் - ஆகிய, வினையை - பாவகர்ம திரவியகர்மங்களை, தவநீதியினில் - தபோநீதியால், இனி - இனிமேல், தடைவன் - தடைசெய்வேன், என்று - என்று, அரசன் - சக்ராயுத மஹாராஜன், நினையா - நினைத்து, வடிவேலவன் - கூர்மைபெற்ற வேலாயுதத்தை யுடையவனாகிய, வச்சிரவாயுதன் மேல் - தனது குமாரனாகிய வஜ்ஜிராயுதன்மேலே, எ - று.

இதுவும் அடுத்தசெய்யுளும் குளகம். (௪௦)

783. முடியும் படியும் முதலா யினவைத்
தடைவே லரசன் னபரா சிதனும்
வடுவின் முனிவன் னடிமா மலரை
முடியின் னணியா முனியா யினனே.

(இ - ள்) முடியும் - கிரீடமும், படியும் - பூமியும், முதலாயின - முதலாக உள்ள இராஜ்ஜிய சம்பந்தமானவைகளை யெல்லாம், வைத்து - ஸ்தாபிதம் செய்து, அடை - கையிற் பொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, அரசன் - சக்ராயுத மஹாராஜன், அபராசிதனும் - அபராஜிதனென்னும் பெயரை யுடையவனாகிய, வடுவில் - குற்றமில்லாத, முனிவன் - முனிவரானது, அடி - பாதமாகிற, மா - பெருமை பொருந்திய, மலரை - தாமரைமலரை, முடியின் - சிரசில், அணியா -

அணிந்து, (அதாவது: அவனடியைச் சிரசினால் வணங்கி), முனியாயினன்-முனிவ னாகி ஜிநதீக்ஷையைக் கொண்டனன், எ - று. (௩௫)

வேறு.

784. சக்கரா யுதனும் போகித் தாதைதன் பாதஞ் சார்ந்து
மிக்கமா முனிவ னாகி வெள்ளிடை யாதி யோகி
னிற்கும்வெவ் வினைக ணீங்க விராப்பகல் படிம நின்று
பக்கநோன் பிரதி யோடும் பாவனை பயின்று சென்றான்.

(இ - ள்) (அவ்வாறு), சக்கராயுதனும் - சக்ராயுதவாசனும், போகி - இராஜ்யத்தினின்றும் நீங்கிப்போய், தாதைதன் - தனது பிதாவாகிய அபராஜித முனிவரனுடைய, பாதஞ்சார்ந்து - பாதத்தையடைந்து நமஸ்கரித்து, மிக்க - மிகுதியாகிய, மா - பெருமையுடைய, முனிவனாகி - முனிவரனாகி, வெவ்வினைகள் - கடுமையான வினைகள், நீங்க - விலகும்படியாக, வெள்ளிடையாதி நிற்கும் யோகின் - வெள்ளாகாசத்தில் நிற்றல் முதலாகிய திரிகால யோகங்களிலும், இராப்பகல் - இரவும் பகலும், படிமம் - பிரதிமாயோகத்திலும், நின்று - நின்று, பக்கநோன்பு - பட்சோபவாஸம் மாஸோபவாஸங்களிலும், இரதியோடு - சந்தோஷத்தோடு கூடி, பாவனை-ஆத்ம பாவனையிலும், பயின்று - பழகி, சென்றான் - சென்றனன், எ - று. (௩௬)

785. நெறிவழி யெங்குஞ் செல்லு மீட்சிநற் படர்ச்சி நின்ற
செறிவினிற் பொறிக ளாறுஞ் செறித்தசய் யமத்த னாகி
யறுவகைக் காய மோம்பி யருள்புரி யடக்கத் தோடும்
மறுதரா வெறியுஞ் சிந்தை வழுவறத் தழுவி நின்றான்.

(இ - ள்) (அவ்வாறு சென்று பின்னரும்), நெறிவழியெங்கும் - விஷயவழிகளினிடத்தெங்கும், செறிவினில் - சேர்க்கையினாலே, செல்லும் - செல்லுகின்ற, பொறிகளாறும் - ஷட் இந்திரியங்களும், மீட்சி - அவைகளினின்றும் மீளுதலாய், நின்ற - நிலைபெற்ற, நற்படர்ச்சி - ஸம்மியக்சாரித்திரத்தில், செறித்த - சேர்த்த, சய்யமத்தனாகி - விஷயஸம்யமத்தை யுடையவனாகி, அறுவகைக்காயம் - ஷட்ஜீவனிகாயங்களை, ஓம்பி - ரக்ஷித்து, அருள்புரி - ஜீவதயவைச்செய்கின்ற, அடக்கத்தோடும் - பிராணி ஸம்யமத்தோடுங் கூடி, மறுதரவு - ஆத்மகுணத்தைத் தடைசெய்யும்படியான கர்மங்களை, எறியும் - கெடுக்கும் படியான, சிந்தை - *தருமத்தியானத்தை, வழுவற - குற்றமற, (அதாவது நழுவுதலில்லாமல்), தழுவி - சேர்ந்து, நின்றான் - நிலைபெற்றான், எ - று. (௩௭)

---

* தருமத்தியானத்தின் நாமங்களையுங் குணங்களையும் பதார்த்த ஸாரத்தில் 30 - வது உபயோகாதி காரத்தில் கண்டு கொள்க.

786. வேட்கையிற் பசியி னோயில் வேண்டலிற் பெறாமை தன்னிற்
றாட்சியி லிருத்தல் போதல் கிடத்தலி லுடாமை தன்னிற்
காட்சியி லறிவின் ஞான மின்மையிற் கலங்கிச் சித்த
மாட்சியைச் செலாத கத்துப் பரிசைபன் மூன்றும் வென்றான்.

(இ - ள்) (மேலும்), வேட்கையில் - தண்ணீர்த் தாகத்தாலும் (பிபாஸகத்தாலும்), பசியில்-பசியினாலும் (க்ஷுத்தினாலும்), நோயில் - பிணியாலும் (ரோகத்தாலும்), வேண்டலில் - யாசித்தலாலும் (யாசனாவாலும்), பெறாமைதன்னில்- (வேண்டியதைப்) பெறாததினாலும் (அலாபத்தாலும்), தாட்சியில் - தளர்வில்லாது, இருத்தல் - (பொருந்திய யோகாஸனத்தில்) இருத்தலாலும் (நிஷத்தியாவினாலும்), போதல் - (ஆகாராதிகளின் பொருட்டுச்) செல்லுதலாலும் (சர்யாவாலும்), கிடத்தலில் - படுத்தலினாலும் (சையாவாலும்), உடாமைதன்னில் - (ஆடை) உடாமையினாலும் (நக்னியாவாலும்), காட்சியில் - அதரிசனத்தாலும், அறிவில் - பிரஜ்ஞாவினாலும், ஞானமின்மையில் - அஞ்ஞானத்தாலும், சித்தம் கலங்கி - சித்தமானது கலக்கமுற்று, மாட்சியை - பெருமையில், செலாது-சேராததாலும் (அரதியினாலும்), (உண்டான வேதனைகளாகிய), அகத்துப்பரிசை - அப்பியந்தர பரீஷஹங்கள், பன்மூன்றும் - பதின் மூன்றையும், வென்றான் - ஜெயித்தான், எ - று.

மோக்ஷார்த்திகள் தவம்பொருந்தித் தியானம் குலையாது சம்யமத்தில் நிற்க வேண்டின் தங்களுக்கு நேரிடும் கஷ்டங்களைப் பரிகரிக்க முயலாது அவைகளைச் சகித்து ஜெயிக்கவேண்டும். அந்த வேதனைகளுக்கு பரீஷகங்களென்றும், அவைகளைத் தளராது சகித்தற்குப் பரீஷக ஜெயமென்றும் பெயர். காயசம்பந்தமாயுண்டாகும் கஷ்டங்கள் பாஹ்யபரீஷஹமென்றும், மனோசம்பந்தமாயுண்டாகுமவை அப்பியந்தர பரீஷஹ மென்றும் பரீஷகம் இருவகைப்படும். இச்செய்யுளில் கூறப்பட்டுள்ளவை 13 - ம் அப்பியந்தரபரீஷகம். அடுத்த செய்யுளில் பாஹ்யபரீஷகம் 9 - ம் கூறப்படும். ஆக பரீஷக மொத்தம் 22. (௩௮)

787. வெப்பமுங் குளிரும் மாசுஞ் சிற்பமுந் துறலும் வெஞ்சொற்
செப்பலுங் கொலையுந் தின்றல் குத்தலுந் தீய வூறுந்
துப்புறழ் வாயி னார்தந் தொடர்ச்சியாம் பரிசை யுள்ளிட்
டொப்பிலாப் புறத்து நின்ற வொன்பது மொருங்கு வென்றான்.

(இ - ள்) (அவ்வாறு ஜெயித்துப் பின்னரும்), வெப்பமும் - உஷ்ணமும், குளிரும் - சீதமும், மாசும் - மலஸ்பரிசமும், சிற்பமுந்துறலும் - ஸத்கார புரஸ்காரமும், வெஞ்சொற் செப்பலும் - ஆக்குரோசமும், கொலையும் - வதையும், தின்றல் குத்தலும் - தெம்சமசகமும், தீயவூறும் - திரணஸ்பரிசமும், துப்புறழ் - பவ

ளத்தை ஒத்திராநின்ற, வாயினார்தம் - வாயையுடைய ஸ்த்ரீகளின், தொடர்ச்சியாம் - சேர்க்கையாகிய, பரிசை - ஸ்த்ரீ பரீஷஹமும், உள்ளிட்டு - சேர்ந்து, புறத்து நின்ற - பாஹ்யமாகிய, ஒப்பில்லா - பொருந்தும் தன்மையில்லாத, ஒன்பதும் - இந்த ஒன்பது பரீஷஹங்களையும், ஒருங்கு - ஒருமிக்க, வென்றான் - (ஆத்ம பாவனாஸ்திரத் தியானத்தாலும், ஸம்யக்ஞான பலத்தாலும்), ஜயித்தான், எ-று.

788. சேதன மிதர மாயுஞ் செல்வன நிற்ப வாயு
மேதுவி னியல்பி னாகும் விகாரியாய் விகாரி யின்றி
யோதிய வுருவ மாகி யிதரமா யுலக மாகி
நீதியாற் பொருள்க ணின்ற நிலைமையை நினைத்து நின்றான்.

(இ-ள்) பொருள் - (ஜீவ, புத்கல தர்மாதர்ம ஆகாசகாலமென்னும்) ஷட் திரவியங்கள், சேதனமாயும் - (ஜீவத்திரவியம்) சேதனமாகியும், இதரமாயும் - (மற்றவைந்தும்) அசேதனத் திரவியமாகவும், செல்வனவாயும் - (ஜீவ புத்கல திரவியங்கள்) கமன சக்தியுள்ளனவாயும், நிற்பவாயும் - (மற்ற நான்கு திரவியங்களும்) ஸ்திர பரிணமத்தையுடையனவாயும், ஏதுவின் - (திரவியங்கள் ஒன்றுக் கொன்று) ஹேதுவாகும் தன்மையினால், இயல்பின்-ஸ்வபாவகுணத்தில், ஆகும்-உண்டாகும், விகாரியாய்-(வியவஹாரநயத்தால் ஜீவ புத்கல திரவிய மிரண்டும் விபாவபரியாயமுற்றுப்)பலவிகாரத் தன்மையையுடையனவாயும், விகாரியின்றி-(மற்ற நான்கும் விபாவ பரியாய மில்லாமல்) அவிகாரித்திரவியங்களாயும், ஓதிய - சொல்லப்பட்ட, உருவமாகி-(புத்கலத்திரவிய மொன்றுமே) ரூபித்திரவியமாகியும், இதரமாய் - (மற்றவைகள்) அரூபித்திரவியமாகியும், உலகமாகி-(இந்த ஷட்திரவியங்களே ஒன்று சேர்ந்து) லோகமாகியும், நீதியால் - தன் தன் குணபரியாய நீதிக்கிரமத்தால், நின்ற - (உத்பாத, விய, த்ரௌவ்ய யுக்தமாகி, ஸத்ஸ்வரூபமாய்) நின்ற, நிலைமையை - (பொருளின்) நிலையான தன்மையை, (அதாவது : அதனதன் நிச்சய குணத் தன்மையை), நினைத்து - தியானித்து, நின்றான் - (ஹேயஸ்வரூபத் தியாகமும், உபாதேயஸ்வரூப ஸ்வீகாரமும் செய்து) நின்றான், எ - று.

ஷட்திரவியங்களினது, திரவிய, குணபரியாயங்களின் விசேஷங்கள் இன்னும் விரிவாகப் பதார்த்தஸாரம் ஒன்று முதல் நாலு அதிகாரங்களிலும், ஸர்வார்த்த ஸித்தி, ஸங்கபோதை, என்னும் நூல்களில் ஐந்தாவது அத்தியாயத்திலும், ப்ராப்ர தத்திரயம் முதல் அதிகாரம் ஆகிய பஞ்சாஸ்திகாயத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன. (௪0)

789. அணுவினா லளக்க மூன்றுக் கயங்கிய பதேச மாகு
மணுவினுக் கேக மாகு மனந்தமா காய தேச
மிணையிலாக் கால மூன்று மேற்றிழி வாய னந்தம்
பணிவிலாப் பவங்க ருப்போப் பாதமூர்ச் சனைநி னைந்தான்.

(இ - ள்) அணுவினால் - புத்கலத்திரவியத்தின் ஜகன்னியாம்சமாகிய பரமாணுவினால், அளக்க - அளக்குமிடத்தில், மூன்றுக்கு - (ஜீவ, தர்ம, அதர்மமென்கிற) இம்மூன்று திரவியங்கட்கு, அயங்கியபதேசமாகும் - அஸங்கியாதப் பிரதேசமாகும், அணுவினுக்கு - புத்கல பரமாணுவுக்கும் கால பரமாணுவுக்கும், ஏகமாகும் - ஏகப்பிரதேசமாகும், ஆகாயம் - ஆகாசத் திரவியமானது, அனந்தம் தேசம் - அனந்தப் பிரதேசமுடையதாகும், இணையிலா - ஒன்றோடொன்று சேர்தலில்லாமல் ஏகப்பிரதேசியாய் இருக்கின்ற, காலம் - நிச்சய பரமாணுத்திரவிய காலமானது, மூன்றும் - (வியவஹார பரியாயத்தினால், பூத, பவிஷ்ய, வர்த்தமானமென்னும்) மூன்றாகும், (அதுவன்றியும்), ஏற்று - உத்ஸர்ப்பிணியென்றும், இழிவு - அவஸர்ப்பிணியென்றும், ஆய் - ஆகி, அனந்தம் - முடிவில்லாததாகும், பணிவிலாப்பவம் - குறையாத ஸம்ஸாரப்பிறப்பில், (நீங்காமல் இருக்கின்ற), கருப்பம் - கர்ப்பமும், உப்பாதம் - உபபாதமும், மூர்ச்சனை - மூர்ச்சனையும், (ஆகிய திரிவித ஜன்மஸ்தான விவரங்களையும்), நினைந்தான் - நினைத்து ஹேயஸ்வரூபத் தியாகமும் உபாதேயஸ்வரூபஸ்வீகாரமும் செய்தான், எ - று. (சக)

790. உதயத்தி னுபச மத்திற் கேட்டிற்கேட் டவிவு தன்கட்
பதமொத்த பரிணு மத்தாம் பஞ்சபா வத்தை யுன்னி
யிதமுத்தி யிதற்கு பாய மிரதனத் திரயந் தீய
மதமதற் குபாயந் தன்னை யிதமின்மை மனத்துள் வைத்தான்.

(இ - ள்) உதயத்தின் - ஏக விம்சதி பிரகாரம் கருமோதயத்தினாலாகிய உதய பாவத்தினாலும், உபசமத்தில் - (ஸஜ்ஞி பஞ்சேந்திரிய பரியாப்தி ஜீவன்களுக்கு காலலப்தியாதிப்ராப்திகளினால் ஸப்தவித தர்சன மோஹனீய கருமங்களும், மற்ற சாரித்திர மோஹனீய கருமங்களும் உபசமத்தை யடைந்த காலத்தாகும்) உபசமபாவத்தாலும், கேட்டில் - (ஞான தர்சனாவரணாந்தராய மோஹனீயங்களது நிரவசேஷ க்ஷயத்தினாலாகிய நவவிதமாகிய) க்ஷாயிக பாவத்தாலும், கேட்டவிவுதன்கண் - க்ஷயோபசம பாவத்தினிடத்தாலும், (அதாவது: சில கருமங்களது கேட்டினாலும், சில உபசமத்தாலுமாகும் மிசிர பாவத்தாலும்), பதமொத்த - பதத்தில் பொருந்திய, பரிணமத்து - திரிவித பாரிணமிக பாவத்தாலும், ஆம் - ஆகின்ற, பஞ்சபாவத்தை - பஞ்சவிதமான பரிணமங்களை, உன்னி - தியானித்து, இதம் - ஆத்மனுக்கு இதமாகிய, முத்தி - மோட்ச ஸ்வரூபத்தையும், இதற்கு - இந்த மோட்ச ஸ்வரூபத்திற்கு, உபாயம் - மார்க்கமாகிய, இரதனத்திரயம் - (ஸம்மியக் தர்சன, ஸம்மியக்ஞான, ஸம்மியக் சாரித்திரமாகிய, வியவஹார நிச்சய) ரத்னத்திரய ஸ்வரூபத்தையும், தீய மதம் - மித்தியா மதத்தினாலாகிய பிறவித்துன்பத்தையும், அதற்குபாயம் தன்னை - அதற்கு மார்க்கமாகிய மித்தியாதர்சன அஞ்ஞான விபரீத சரணத்தையும், இதமின்மை - நன்மையில்லாததனையும், மனத்துள் - மனதில், வைத்தான் - இருத்தினான் (அதாவது: இந்த ஸம்ஸார தத்காரண மோட்ச தத்காரணங்களையும் தியானித்தான்), எ - று.

இந்தப் பஞ்சபாவத்தின் விவரங்களைத் தத்துவார்த்த சூத்ரடீகா ஸர்வார்த்தஸித்தி எனும் மூலபோதை யில் இரண்டாவது அத்தியாயத்தில் கண்டு கொள்க. (சஉ)

791. வினையெட்டி னுதயத் தாகும் விகாரங்கள் விபாக மென்று
மனம்வைத்து முனிவன் செல்ல வச்சிரா யுதனும் போகந்
தனைவிட்ட மனத்த னாகிச் சதங்கைச்சீ றடியிற் செல்லு
மனமொக்கு மிரத மாலை யார்வத்தி னரிதிற் போந்தான்.

(இ - ள்) வினையெட்டின் - அஷ்ட கருமங்களின், உதயத்து - உதயத்தி னால், ஆகும் - உண்டாகின்ற, விகாரங்கள் - விகாரச் செயல்கள், விபாகமென்று - கர்மானுபாகமென்று, மனம் வைத்து - மனதிற்றியானித்து, முனிவன் - சக்ராயுத முனிவன், செல்ல - தவத்தின் மார்க்கத்தில் செல்கையில், வச்சிராயுதனும் - வச் சிராயுத மஹாராஜனும், போகந்தனை-ஸம்ஸாரபோகத்தை, விட்ட - நீக்கிய, மனத் தனாகி-மனதை யுடையவனாகி, சதங்கை - சதங்கையணிந்த, சீறடியில் - சிற்றடி யால், செல்லும் - செல்கின்ற, மனமொக்கும் - தன் மனதுக்கொத்த, இரதமாலை- இரத்தினமாலையினுடைய, ஆர்வத்தின் - ராகத்தினின்றும், அரிதில்-அருமையாக, போந்தான் - விலகிச் சென்றான், எ - று. (சங)

792. போகித்த போகந் தானே புதியவை யாகித் தோன்றி
மோகத்தைப் பெருக்க லல்லான் முடிவெய்தாச் செல்வ மாயும்
மேகத்தின் மின்னின் வீயு மிவற்றைநா முன்னம் நீங்கி
நாகத்தை வீட்டை நல்கு நற்றவம் புரிது மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு அவ்வாசையை விட்ட அவன்), போகித்த - முன் அனுபவித்த, போகந்தான் - போகோப போகங்களானவை, புதியவையாகித் தோன்றி - நூதனமானவைகளாகத் தோற்றி, மோகத்தை - அஞ்ஞானத்தாலா கும் மயக்கத்தை, பெருக்கலல்லால் - விருத்தியாக்குவதேயல்லாமல், முடிவு - முடிவை, எய்தா - அடையமாட்டா, செல்வம் - ஸம்பத்தும், ஆயும் - ஆயுஷ்ய கர்மமும், மேகத்தின் - மேகத்தைப்போலவும், மின்னின் - மின்னலைப்போலவும், வீயும் - நாசமெய்தும், (ஆகையால்), இவற்றை - இவைகளை, நாம் - அறிவுடைய நாம், முன்னம் - அவைகள் நீங்குவதன் முன்னமே, நீங்கி - விட்டு விலகி, நாகத்தை - தேவலோகத்தையும், வீட்டை - மோட்சத்தையும், நல்கும் - கொடுக் கும்படியான, நற்றவம் - நன்மையாகிய தபத்தை, புரிதும் - செய்வோம், என் றான் - என்று பாவனை செய்தான், எ - று. (சச)

793. இரதனு யுதனைக் கூவி முடியினை யீந்து வேந்தன்
விரமனு மனத்த னாகி வேட்கையின் வீழ்ந்து போகி

னுரையுணு வகையிற் பின்ன ளக்கர விடத்திற் பாவ
நிரையின வுதயஞ் செய்ய நின்றிடுந் துன்ப மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு பாவனை செய்த பின்பு), இரதனாயுதனை-தன் புத்திரனாகிய இரத்தினாயுத குமாரனை, கூவி - அழைத்து, வேந்தன் - வஜ்ராயுத மகாராஜன், முடியினை - பட்டாபிஷேக முடியை, ஈந்து - அவனுக்குக் கொடுத்து, (அவனை நோக்கிப் புத்திரனே!), விரமண-(தத்துவந்தெளிந்து), வைராக்கியத்தில் பொருந்தாத, மனத்தனாகி - மயக்கமுற்ற மனதுடையவனாகி, வேட்கையின் - மோஹராகத்தில், வீழ்ந்து போகின் - சேர்ந்து சென்றால், உரையுணு வகையில் - சொல்ல முடியாத தன்மையில், பின்னுள் - பின்னாளில், அக்கரவிடத்தில் - பெரிதாகிய விஷம்போல, பாவம் - பாபகர்மமானது, நிரையினல்-வரிசைக்கிரமத்தால், உதயஞ்செய்ய - உதயத்தைக் கொடுக்க, துன்பம் - துக்கமானது, நின்றிடும் - ஆத்மனிடத்தில் நின்று வருத்தும், என்றான் - என்று போதித்தான், எ - று. ()

794. திருமலி யார மாலை திளைக்குந்திண் புயத்த ராகி
யுருமலி களிற்றி னுச்சி யோங்கிய குடையி னீழல்
வருமவர் முன்பு தாஞ்செய் நல்வினை மாய்ந்த போழ்தி
னெரியுறு திருவி னென்னார்க் குழையரா யியல்வர் கண்டாய்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும்), திரு - அழகினல், மலி - நிறைந்த, ஆரம்-(முத்தாஹார, இரத்தினஹார முதலாகிய) ஹாரங்களும், மாலை - (பூமாலை, பொன் மாலை முதலிய) மாலைகளும், திளைக்கும்-சேர்ந்து பிரகாசிக்கின்ற, திண் - கெட்டியாகிய, புயத்தராகி-புஜத்தையுடையராகி, உருமலி - ரூபம்மிகுந்த, களிற்றினுச்சி - யானையின்பேரில், ஓங்கிய - பெரிதாகிய, குடையினீழல் - வெள்ளைக் குடையினுடைய நிழலிலே, வருமவர் - ஏறி உலாவருமவர்களும், முன்பு - பூர்வத்தில், தாம் செய் - தாங்கள் செய்த, நல்வினை - புண்ணியவினை, மாய்ந்த போழ்தில் - உலர்ந்த காலத்தில், எரியுறு - அக்னியையடைந்த, திருவின் - ஐஸ்வரியம்போல, ஒன்னார்க்கு - பகைவர்களுக்கு, உழையராய் - வேலைக்காரர்களாகி, இயல்வர் - செல்வார்கள், கண்டாய் - இதனை நீ பார்த்திருக்கின்றாய், எ - று. (சகூ)

795. பஞ்சநல் லமளி யின்கட் பருமணிப் பவழத் தின்காழ்
மஞ்சின்மே லஞ்செ லார்கள் வருடமா போற்று யின்றார்
முன்புதாஞ் செய்த தீமை முளைத்துழிக் கணத்தின் வேறாய்த்
துஞ்சினர் போல மாலைத் துகணிலத் துறைவர் கண்டாய்.

(இ - ள்) பஞ்ச - * ஐந்துவிதமான, (அதாவது: ஐவகை வஸ்துக்களால் செய்யப்பட்ட), நல் - நன்மையாகிய, அமளியின்கண் - படுக்கை மெத்தையி

னிடத்தே, (படுத்து), பரு - பெரிய (அதாவது : விலையுயர்ந்த, மணி - இரத்தினத்தாலும், பவழத்தின் - பவழத்தினாலும், (செய்யப்பட்டு), காழ் - உறுதி பொருந்திய, மஞ்சின்மேல் - கட்டிலின்மேல், அம் - அழகிய, சொலார்கள் - சொல்லையுடைய ஸ்த்ரீமார்கள், வருட - பாதந்தடவ, மாபோல் - யானைபோல, துயின்றார் - மெய்ம்மறந்து தூங்கியவர்கள், முன்பு - பூர்வத்தில், தாம் - தாங்கள், செய்த- இயற்றிய, தீமை - பாபவினையானது, முளைத்துழி - உதயத்தைக் கொடுத்த போது, கணத்தின் - க்ஷணநேரத்திலே, வேறாகி - முன் சொன்னவைகளுக்கு முற்றிலும் வேறாகி, துஞ்சினார்போல் - செத்தவர்களைப்போல, துகள் - புழுதிகளை (அதாவது : குப்பைகளை), மாலை - இயல்பாகவுடைய, நிலத்து - வெறு நிலத்தில், உறைவர் - தங்கிப்படுப்பார்கள், கண்டாய் - இதனையும் நீ பார்த்திருக்கின்றாய், எ - று.

* மெத்தையின் ஐந்துவித வஸ்துக்களாவன: "சிறுபூளை செம்பஞ்சு வெண் பஞ்சு சேண, முறுதூவி சேக்கையோரைந்து" என்பனவாம். (சுஎ)

796. கடல்விளை யமிர்த மன்ன கவளம்பொற் கலத்திற் காமத்
துடியிடை மகளி ரேந்தத் துயரமுற் றரிதி னுண்டா
ருடையகல் கையி னேந்தி யூர்தொறும் புக்குப் பெற்ற
வடகினை யமர்ந்துண் பார்கள் நல்வினை யவிந்த காலை.

(இ - ள்) கடல் - க்ஷீரஸமுத்திரத்தில், விளை - உண்டாகிய, அமிர்தமன்ன - அமிர்தத்திற்குச் சமானமாகிய, கவளம் - அன்ன கவளத்தை, பொற்கலத்தில் - பொற் பாத்திரத்தில், காமத்துடியிடை - விருப்பமுள்ள உடுக்கை போன்ற இடையையுடைய, மகளிர் - ஸ்த்ரீமார்கள், ஏந்த - தாங்க, துயரமுற்று - (வேண்டுதலில்லாதபடியால் அதை உண்பதற்கு) துக்கமுற்று, அரிதின் - மிகவும் அருமையாக, உண்டார் - வெறுப்புடனுண்டவர்கள், நல்வினை - புண்ணியவினையானது, அவிந்த காலை - நீங்கின காலத்தில், உடை - உடைந்த, அகல் - மட்பாத்திரத்தை, கையினேந்தி-கையிலெடுத்துக்கொண்டு, ஊர்தொறும் - ஊர்களூர்கள் தோறும், புக்கு - பிச்சையென்று கூவியடைந்து, பெற்ற - ஊராராலிடப்பெற்ற, அடகினை - இலைக்கறியை, அமர்ந்து - பொருந்தி இச்சித்து, உண்பார்கள் - இனிமையாகப் புசிப்பார்கள், எ - று. (சுஅ)

797. நுரையினும் நொய்ய வாய நுண்டுகி லுடுப்பி னொந்து
கரைவபோ னரலு மல்குற் கற்பக வல்லி யன்னார்
தெருவிடை வீழ்ந்து நீண்டாச் சிலதுணி யுடுப்பர் செல்வ
மொருவர்கண் ணொன்றி நில்லா துறுதிகொண் டொழுகு கென்றான்.

(இ - ள்) நரையினும் - பால்நுரையைப் பார்க்கிலும், நொய்யவாய-மிருது வுள்ளனவாகிய, நுண் - நேர்த்தி பொருந்திய, துகில் - பட்டு வஸ்திரங்களை, உடுப்பின்-உடுத்துக்கொள்ளுமிடத்தில், (அவற்றைத் தாங்கமுடியாது), நொந்து - வருந்தி, கரைவ போல் - மனம் உருகிக் கதறுவதுபோல், நரலும் - (மேகலாபரணத் தால்) ஒலி செய்கின்ற, அல்குல் - அல்கு லினையுடைய, கற்பகவல்லியன்னார் - கற்பகக்கொடிக்கொப்பாகிய மிகு புண்ணியமுடைய மாதர்களும், (அப்புண்ணிய முலர்ந்தால் உடுப்பதற்கோராடையுமின்றி), தெருவிடை - தெருவினிடத்தில், வீழ்ந்து - வீழ்ந்து கிடந்து, தீண்டா - தொடுவதற்கொப்பாத, சிலதுணி - சில வாகிய கந்தைத் துணிகளையும், உடுப்பர் - உடுத்துவார்கள், (ஆகையால்), செல்வம்- ஸம்பத்தானது, ஒருவர்கண் - ஒருவரிடத்திலேயே, என்றும் - எப்பொழுதும், நில்லாது - ஸ்திரமாக நிற்கமாட்டாது, (ஆகையால் குமாரனே!), உறுதி - உறுதி யாகிய குணத்தை, கொண்டு - ஸ்வீகரித்து, ஒழுகு-நடப்பாயாக, என்றான் - என் றும் சொன்னான், எ - று. (சகூ)

798. இனையன பலவுஞ் சொல்லி வச்சிரா யுதனும் பின்னைத்
தனையனை விடுத்துப் போகிச் சக்கரா யுதனைச் சார்ந்து
முனிவனற் கமல மன்ன வடியினை முடியிற் றீட்டி
வினையின பயன்க டம்மை வெருவின னடிக ளென்றான்.

(இ - ள்) (மேலும்), இனையன - இத்தன்மையனவான, பலவும்-பல தர்ம வசனங்களையும், சொல்லி - உரைத்து, வச்சிராயுதனும் - அந்தவச்சிராயுத மகாராஜ னும், பின்னை-பிறகு, தனையனை - தனது குமாரனாகிய இரத்தினாயுதனை, விடுத்து- இராஜ்யத்தில் விடுத்து, போகி - தான் தபோவனத்திற்குப் போய், சக்கராயுதனை- சக்ராயுதமுனிவனை, சார்ந்து - அடைந்து, முனிவன் - அம்முனிவரனுடைய, நல்- நன்மையாகிய, கமலமன்ன- தாமரைப் புஷ்பத்திற்குச் சமானமாகிய, அடியினை - பாதங்களை, முடியில் - சிரசில், தீட்டி - படியச்செய்து, (அதாவது: அவ்வடிகள் முடியிற்பட வணங்கி அவனை நோக்கி), அடிகள் - ஸ்வாமிகளே!, வினையின் - கருமங்களினது, பயன்கடம்மை - பலன்களாகிய ஸம்ஸார விஷயங்கட்கு, வெரு வினன் - யான் பயந்தேன், என்றான் - என்று சொன்னான், எ - று. (௬0)

799. புலைமக ரெனினுஞ் சாலப் புயவலி யுடைய ராகின்
நிலைமகட் கிறைவ ராகி நின்றிடுந் திருவு மங்கே
மலையின குலத்த ரேனும் புயவலி மாய்ந்த போழ்திற்
றலைநில னுறுத்தி யொன்னார் தாளிணைந் துழைய ராவார்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும்), புலைமகரெனினும் - (சிலர்) கெட்டகுணமுடைய ஜாதியிற் பிறந்தாராகிலும், சால - மிகவும், புயவலி - புஜ

பலத்தை, உடையாரகில் - உடைத்தானவராயிருந்தால், நிலமகட்கு - இப்பூமிக்கு, இறைவராகி - இராஜாக்களாகி, (விளங்குவார்கள்), அங்கே - அவரிருக்கும் அவ் விடத்திலே, திருவும் - ஐஸ்வரியமும், நின்றிடும் - வந்து நிற்கும், மலையினகுலத்த ரேனும் - பர்வதம்போல உயர்ந்த ஜாதியிற் பிறந்தவரானலும், புயவலி - புஜபல மானது, மாய்ந்தபோழ்தில் - அவர்களிடம் குறைந்த காலத்தில், தலை - தங்கள் தலையை, நிலனுறுத்தி - பூமியில் படும்படியாக வணங்கி, ஒன்னார் - சத்துருக்க ளுடைய, தாளணைந்து - பாதத்தைச் சார்ந்து, உழையராவார் - வேலைக்காரர் ஆவார் கள், எ - று. (நிக)

800. வினைவச மாய விந்த வீறிலா வாட்கை தன்னை
நினைதொறு முள்ள நின்று நடுங்கிடு மடங்கி நோற்று
வினைகளை வென்றிட் டென்றன் விழுக்குணம் பொருந்தி மீளா
நினைவரு முலக மெய்த நினைந்தியான் வந்த தென்றான்.

(இ - ள்) வினைவசமாய - கருமத்தின் வசமாகிய, வீறிலா - பெருமையில் லாத, இந்த வாட்கை தன்னை - இந்த ஸம்ஸார வாழ்க்கையை, நினை தொறும் - நினைக்குந்தோறும், உள்ளம் - மனதானது, நின்று - தர்ம பாவனையில் நின்று, நடுங்கிடும் - நிர்வேக பாவனையால் பயப்படும், (ஆகையால்), அடங்கி - *(ஈராறடக் கங்களால்) அடங்கி, நோற்று - (ஆத்ம பாவனையோடு கூடிய தபஸை) நோற்று, வினைகளை - கருமங்களை, வென்றிட்டு - ஜயித்து, என்றன் - என்னுடைய, விழுக் குணம் - பெரிதாகிய சுத்த குணத்தை, பொருந்தி - சேர்ந்து, நினைவரும் - நினைத் தற்கரிதாகிய, மீளாவுலகம் - மறுபடியும் திரும்பிவராத உலகமாகிய †மோட் சத்தை, யான் - நான், எய்த - அடையும்படியாக, நினைந்து - நினைத்து, வந்தது - தங்களிடம் வந்ததாகும், என்றான் - என்று சொன்னான், எ - று.

* ஈராறடக்கமாவது :- பிராணி ஸம்யமம் ஆறு, விஷய ஸம்யமம் ஆறு.

† மோட்சத்தின் ஸ்வரூபத்தை ஸுகபோதையில் பத்தாவது அத்தியாயத் திலும், அதை அடையும் மார்க்கத்தை ஷை புஸ்தகத்தின் மற்ற ஒன்பது அத்தி யாயங்களிலும் (அல்லாமலும்) ஸமய ஸாரத்திலுங் கண்டுகொள்க. (நிஉ)

801 சமைதமஞ் சாந்தி காந்தி தயாமலிந் தியாக்கை நோக்கி
யமைவருந் தொழில ரன்றி யச்சங்க ளேழு மின்றி
நமர்பிற ரென்ப தின்றி யொழிதல்மா தவமி தாமே
அமைகவென் றிறைவன் சொல்ல வருந்தவந் தொடங்கி னானே.

(இ - ள்) (அவ்வாறு வச்சிராயுதன் சொன்னதைக் கேட்டு), சமை - உத்தம க்ஷமையும், தமம் - மனதைக் கன்மேந்திரிய விஷயங்களின் வழிச் செல்லாது நிக் கிரகிக்கும் விஷய ஸம்யமமும், சாந்தி-உபசம பரிணாமமும் (அதாவது : ராகத்வே

ஷாதிகள் வரவொட்டாது சுத்தோபயோகத்திற் செல்லும் ஆத்மபாவனையும்), காந்தி - சுத்தசாரித்திரமும், தயா - ஜீவதயவை, மலிந்து - நிறைந்து, யாக்கை - ஷட்ஜீவநிகாய ஸமூகத்தை, நோக்கி - பார்த்து, (அவற்றை உபசரித்தலாகிய), அமைவரும் - சேர்ந்து அனுஷ்டிப்பதற்கரிதாகிய, தொழிலர் - (பிராணி ஸம்யம மாகிய) தொழிலும் உடையவர்களாகியும், அன்றி - அவையல்லாமலும், அச்சங்களேழும் - ஸம்மியக்தர்சன ஞானபலத்தால் ஸப்த பயங்களும், இன்றி - இல்லாமலும், நமர் பிறர் என்பதின்றி - நம்மவர் அன்னியர் என்னும் பேதமில்லாமலும், (தெளிந்து), ஒழிதல் - ஸர்வஸங்க பரித்தியாகம் பண்ணுதலும், (ஆகிய), இது - இத்தன்மையானது, மாதவம் - மஹாதபம், ஆம்-ஆகும், அமைக - இப்படிப்பட்ட தபத்தைச் சேர்வாயாக, என்று - என்று, இறைவன் - முன் அரசனுயிருந்த சக்கராயுத முனிவரன், சொல்ல - சொல்ல, (வச்சிராயுதன்), அருந்தவம் - செய்தற்கரிய தபஸை, தொடங்கினன்-செய்யத்தொடங்கி ஏற்றுக்கொண்டான், எ-று. ()

802. அரியன செய்ய வல்லா ரான்றவ ரன்றி யாரே
வரிசையின் மன்னன் மைந்தன் மைந்தனும் வையந் தன்னை
யொருதுகள் போல விட்டா ருலகெலா மிறைஞ்ச நின்ரு
ரிரவியே யன்றி நின்ற விருள்கடிந் தெழலு முண்டோ.

(இ - ள்) அரியன - செய்தற்கருமையானவற்றை, செய்ய - செய்து பலன் பெறுவதற்கு, வல்லார் - வல்லமையையுடையவர்கள், ஆன்றவரன்றி - பெரியோர்களாகிய குணவந்தரேயல்லது, யார் - மற்றெவர்கள்?, ஆன்றவர் - பெரியோராவர்?, வரிசையில் - குணத்தின் கிரமத்தால், மன்னன் - அபராஜித மகாராஜனும், மைந்தன் - அவனுடைய குமாரன் சக்ராயுதனும், மைந்தனும் - அவனுடைய குமாரன் வஜ்ராயுதனும், (ஆகிய இம்மூவர்களும் அரியன செய்யவல்லவர்களாயிருந்தமையின்), வையந்தன்னை - இந்தப் பூமி ராஜ்யத்தை, ஒரு துகள்போல - ஒரு தூளுக்குச் சமானமாக, (எண்ணி), விட்டார் - பரித்தியாகம் பண்ணிப் பெரியோர்களாயினுர்கள், (அதனுல்), உலகெலாம் - இந்த லோகத்திலுள்ள பவ்வியப் பிராணிகளெல்லாம், இறைஞ்ச - வணங்கும்படியாக, நின்ருர் - ஏகத்துவபாவனையில் நின்ருர்கள், (இன்னும்), இரவியேயன்றி - ஸூர்யனேயல்லாமல், நின்ற - உலகத்தில் வியாபித்து நின்ற, இருள் - அந்தகாரத்தை, கடிந்து - நீக்கி, எழலும் - செல்வதும், உண்டோ - வேறொன்றுண்டோ?, (இல்லை ; அதுபோல இத்தகைய ஆன்ருேரன்றி அஞ்ஞானுந்தகாரத்தை வேறொருவர் நீக்கமாட்டார்), எ - று.

'ஆன்றவர்' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (நிச)

803. திக்கய மலையைப் போலச் சிந்தனை திருத்திச் சின்ன
ளார்க்கன்வந் துதயத் துச்சி யடைவதே போல வந்து

சக்கரா யுதனும் பின்னைத் தடவரை முடியைச் சார்ந்து
சுக்கிலத் தியானந் தன்னால் வினையிரு ளூர்க்க லுற்றான்.

(இ - ள்) (அதன்மேல்), திக்கயமலையைப்போல - திக்கஜ பர்வதங்களைப் போல (அதாவது: திக்கஜ பர்வதங்கள் பெரிதாகிய மகம்மேரு பர்வதத்தின் சமீபத்தில் சூழ்ந்திருப்பதுபோல்), சின்னாள் - சிலகாலம், (ஆச்சாரியரோடு கூடி, வர்த்தித்து), சிந்தனை - தியானத்தை, திருத்தி - செம்மைப்படுத்தி, அர்க்கன் - ஸூர்யனானவன், வந்து - கிழக்கில் வந்து, உதயத்துச்சி - உதயகிரி சிகரத்தில், அடைவதேபோல் - சேர்ந்து பிரகாசிப்பதுபோல, சக்கராயுதனும் - சக்ராயுத முனியும், பின்னை - பிறகு, வந்து - சங்கங்களினின்றும் தனியாகிவந்து, தடவரை - பெரிதாகிய ஒரு பர்வதத்தினுடைய, முடியை - உச்சியை, சார்ந்து - அடைந்து, சுக்கிலத் தியானந்தன்னால் - சுக்கிலத்தியான ஜோதியால், வினையிருள் - கர்மங்களாகிய அந்தகாரத்தை, தூர்க்கலுற்றான் - செறுத்தலைப் பொருந்தினான், எ - று.

804. வரிசையிற் சுருக்கி வையத் துச்சியார் வடிவு தன்னைப்
புருவத்தி னிடையின் மூக்கி னுனியிற்றான் பொருந்த வைத்துத்
திரிவித யோகி னோடுஞ் சென்றுவந் தாடுஞ் சிந்தை
யுருவமற் றிதனை யுன்ன வினைகளே ழுடைந்த வன்றே.

(இ - ள்) (அவ்வாறு பொருந்தியவன்), வரிசையில் - தியானத்தினது வரிசையால், சுருக்கி - (பந்த ஹேதுவாகிய பரிக்கிரகங்களை யெல்லாம்) குறைத்து (அதாவது: திரிகுப்தியோடுங் கூடி இந்திரியங்களை விஷயங்களில் செல்லவொட்டாமல் தடுத்து, ஹேயஸ்வரூபத்தியாகஞ் செய்து), வையத்து - இவ்வுலகத்தினது, உச்சியார் - அக்கிரபாகத்தில் ஸ்திதிபெற்றிராநின்ற ஸித்த பரமேஷ்டிகளுடைய, வடிவுதன்னை - ஸ்வரூபமான சுத்தாத்துமத் தன்மையை, புருவத்தினிடையின் - இரண்டு புருவங்களின் மத்தியில், மூக்கின் நுனியில் - நாசியின் அக்கிரபாகத்தில், பொருந்த வைத்து - பொருந்தும்படியாக ஸ்தாபித்து, தான் - தான், திரிவிதயோகினோடும் - மனவசன காயமென்னும் மூன்றுவித யோகத்தோடு, சென்று - உயர்ந்த மார்க்கத்திற்போய், (மற்ற பந்த ஹேதுக்களாகிய, மித்தியாத்துவ, அவிரத, பிரமாத, கஷாயமென்னும், பிரத்தியயங்களை விடுத்து), உவந்து - (ஆத்மபாவனையில்) சங்கோஷித்து, ஆடும் - அலைகின்ற, சிந்தை - சிந்தையின், உருவமற்று - வடிவமற்று (அதாவது: ஏகசிந்தையாய் ஸ்வஸம்வேதனஞான தியானத்தினால்), இதனை-உபாதேயரூபமாகிய ஸித்தஸத்ரஸ நிச்சய ரத்தினத்திரய ஸ்வரூபமாகிற) இந்த ஸ்வஸமயத்தை, உன்ன - (நிர்விகல்பவீதராக பரிணதனாகி) பாவிக்க, வினைகளேழ் - (தர்சன மோஹனீயமாகிய) * ஸப்த பிரகிருதி கருமங்கள், உடைந்த - கெட்டன, எ - று.

*ஸப்த பிரகிருதிகள்-மித்தியாத்துவம், ஸம்மியக்துவம், ஸம்மியக் மித்தியாத்துவ பிரகிருதி, அனந்தானு பந்திகுரோத, மான, மாயா, லோபமென்ற ஏழுமாம்.

805. மோகனீ யத்தி னோடும் முப்பத்தேழ் பகடி வீழா
வேகயோ கத்தோ டொன்று வெழுந்தசுக் கிலத்தி யானம்
வேகயோ கத்தி னீரெண் பகடிகள் வீழ்ந்த வெய்யோன்
மேகயோ கத்தின் வீட்டின் விரிந்தன வனந்த நான்மை.

(இ - ள்) (மேலும்), வேகயோகத்தோடு - தீவ்ரமாகியப்ரதக்த்வ விதர்க்க வீசாரமென்னும் சுக்கிலத்தியான யோகத்தோடு கூடவே, (அதாவது: அதினை அனுஷ்டித்ததால் அதன் பூர்த்தியுடனே), மோகனீயத்தினோடும் - முன் பாடலில் சொன்ன தர்சன மோஹனீயம் தவிர பாக்கியாகிய சாரித்திர மோஹனீயம் இருபத்தொன்றுடன், முப்பத்தேழ்பகடி - (நாமகர்மத்தில் பதின்மூன்றும், தர்சனாவரணீய கர்மத்தில் மூன்றுமாக) முப்பத்தேழ் பிரகிருதிகள், வீழா - வீழ்ந்து, (அதாவது: ஆத்மனைவிட்டு நீங்கி, அப்போது), ஒன்றுவெழுந்த சுக்கிலத்தியானம் - ஏகத்துவவிதர்க்க வீசாரமென்னும் இரண்டாஞ் சுக்கிலத்தியானத்தின், வேகயோகத்தின் - தீவ்ரமாகிய யோக பரிணாமத்தால், ஈரெண்பகடிகள் - (தர்சனாவரணீய கர்மத்தில், முன் வீழ்ந்தது மூன்றுபோக பாக்கி ஆறும், ஞானாவரணீய கர்மம் ஐந்தும், அந்தராய கர்மம் ஐந்தும் ஆக) பதினாறு பிரகிருதிகள், வீழ்ந்த - நீங்கின, (அப்போது), மேகயோகத்தின் - மேகக் கூட்டங்களின், வீடு - விடுகையையுடை (அதாவது: மேகக் கூட்டங்களினின்றும் விலகிய), வெய்யோனின் - சூர்யனைப்போல (அதாவது: அச்சூரியனானவன் தனது குணத்தால் பிரகாசிப்பது போல), அனந்த நான்மை - (இந்தச் சக்ராயுத பட்டாரகருக்கு அனந்த ஞானம் அனந்த தர்சனம், அனந்தசுகம், அனந்த வீர்யமென்னும்) அனந்த சதுஷ்டயங்கள், விரிந்தன - விசாலிக்கப்பெற்றன, எ - று. (௫௬)

இந்தக் கர்மக் கேட்டின் விவரங்களும், நாமங்களும், முன் இரண்டாவது சஞ்சயந்தன் முக்திச் சருக்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன; மேலும் பதின்மூன்றாவது சமவசரணச் சருக்கத்தில் மேரு மந்தரர்கள் கர்மக் கெடுகையினும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலின் இவற்றை இவ்விரண்டு சருக்கங்களிலும் பார்த்துணர்ந்து கொள்க.

806. வெய்யவ னெழலும் வையம் வியாபரிப் பதனைப் போல
வையமி லனந்த நான்மை யெழுந்தவக் கணத்து வானோர்
மையறு விசும்பை யெல்லா மறைத்துடன் வந்து சூழ்ந்து
பொய்யறு தவத்தி னானைப் புகழ்ந்தடி பரவ லுற்றார்.

(இ - ள்) வெய்யவன் - ஸூர்யன், எழலும் - உதயமாதலும், வையம் - பூமியிலுள்ளோர், வியாபரிப்பதனைப்போல - (தங்கள் தங்கள்) தொழிலில் செல்வதுபோல, ஐயமில் - குற்றமில்லாத, அனந்த நான்மை - அனந்த சதுஷ்டயமானது, எழுந்த வக்கணத்து - உதயமான அக்காலத்தில், வானோர் - சதுர் நிகா

யாமரர்கள், மையறு - மாசற்ற, விசும்பையெல்லாம் - ஆகாயமெல்லாம், மறைத்து-மூடி (அதாவது: ஆகாய மறையும்படி மேலே கூடி), உடன் - உடனே, வந்து சூழ்ந்து - வந்து சூழ்ந்துகொண்டு, பொய்யறு-விபாவ நீங்கி ஸ்வபாவ குணத்தைப் பொருந்திய, தவத்தினனை - தபஸையுடைய சக்ராயுத பட்டாரகரை, புகழ்ந்து - துதித்து, அடி - அவருடைய பாதங்களை, பரவலுற்றார் - பூஜித்து வணங்குதலைப் பொருந்தினார்கள், எ - று. (௩எ)

வேறு.

807. காதி நான்மை கடந்தோய்நீ கடையி ளன்மை யடைந்தோய்நீ
வேத நான்கும் விரித்தோய்நீ விகல நான்மை யிரித்தோய்நீ
கேத நான்மை கெடுத்தோய்நீ கேடி லின்பக் கடலோய்நின்
பாத கமலம் பணிவாரே யுலகம் பணிய வருவாரே.

(இ - ள்) (அவ்வாறு வணங்கத் தொடங்கியவர்கள் கூறிய துதிகளாவன :-) "காதி நான்மை - (ஞானவரண, தர்சனவரண, மோஹனீய, அந்தராய, மென்கிற) காதிசதுஷ்டயங்களை, கடந்தோய் - ஜயித்தவன், நீ - நீயே, கடையில் - முடிவில்லாத, நான்மை - (அனந்தஞான, தர்சன, ஸுக, வீரியமென்னும்) அனந்த சதுஷ்டயங்களை, அடைந்தோய் - அடைந்தவனும், நீ - நீயே, வேதநான்கும் - * சதுர்வேதங்களை, விரித்தோய் நீ - தெரிவித்தவன் நீ, விகல நான்மை - மதியாதி சதுர்வித ஞானங்களை, இரித்தோய் - கடந்தவன், நீ - நீயே, கேத நான்மை - (சரீர, மானஸ, ஆகந்துக, ஸ்வாபாவிகமென்னும்) சதுர்க்கதி ஸம்ஸார துக்கங்களை, கெடுத்தோய் - நீக்கியவனும், நீ - நீயே, கேடில் - முடிவில்லாத, இன்பக் கடலோய் - அனந்த சௌக்கியமாகிற ஸமுத்திரத்தையுடையவனே, நின் - உன்னுடைய, பாதகமலம் - பாததாமரையை, பணிவாரே - வணங்குகின்றவர்களே, உலகம் - (பிறகு தங்களை) இவ்வுலகத்திலுள்ள பவ்வியப்பிராணிகள், பணிய - வணங்க, வருவார் - வந்து உனதுநிலைமையைக் காலக்கிரமத்தால் அடைவார்கள், எ - று.

* சதுர்வேதங்கள் - பிரதமானுயோகம், கரணானுயோகம், சரணானுயோகம், திரவ்யானுயோக மென்பனவாம். (௩அ)

808. பதினெண் குற்ற மரிந்தோய்நீ பரம நான்மை யடைந்தோய்நீ
இதமெவ் வுயிர்க்கு மளிப்போய்நீ யின்னாப் பிறவி யெறிவோய்நீ
கதமும் மதமுங் காமனையுங் கடந்து காலற் கடந்தோய்நின்
பதபங் கயங்கள் பணிவாரே யுலகம் பணிய வருவாரே.

(இ - ள்) பதினெண்குற்றம் - க்ஷுதாதியஷ்டாதச தோஷங்களை, அரிந்தோய் - கெடுத்தவன், நீ - நீயே, பரமம் - மேலாகிய, நான்மை - அனந்த சதுஷ்ட

யத்தை, அடைந்தோய் - பெற்றவனும், நீ - நீயே, எவ்வுயிர்க்கும் - ஸ்தாவரசங்கமாதி சகல ஜீவன்களுக்கும், இதம் - நன்மையாகிய அபயதானத்தை, அளிப்போய் - கொடுப்பவனும், நீ - நீயே, இன்னா - துன்பத்தையுடைய, பிறவி - ஸம்ஸாரப் பிறப்பை, எறிவோய்நீ - கெடுப்பவனும் நீயே, கதமும் - குரோதத்தையும், மதமும் - கர்வத்தையும், காமனையும் - மன்மதனையும், கடந்து - ஜெயித்து, காலன் - அந்திய காலனையும், கடந்தோய் - தாண்டினவனாகிய, நின் - உன்னுடைய, பத பங்கயங்கள் - பாதபத்மங்களை, பணிவாரே - இப்போது வணங்குகின்றவர்களே, உலகம் - பிறகு இவ்வுலகிலுள்ளோர், பணிய - தங்களை வணங்கும்படியாக, வருவார் - உனது நிலையில் வருவார்கள், எ - று.

* க்ஷுதாதியஷ்டாதச தோஷவிவரத்தைப் பதின்மூன்றாவது சருக்கத்தில் மேருமந்தரர்கள் தபத்தில் கண்டு கொள்க. (௬௯)

809. சிந்திப் பரிய குணத்தோய்நீ தேவ ரேத்துந் திறலோய்நீ
பந்தம் பரியும் நெறியோய்நின் பாத கமலம் பணிவாருக்
கந்த மில்லா வின்பத்தை யளித்து முத்தி யகத்திருத்து
மெந்தை பாதம் பணிவாரிவ் வுலகம் பணிய வருவாரே.

(இ - ள்) சிந்திப்பரிய - நினைத்தற்கரிய, குணத்தோய் - குணத்தையுடையவன், நீ - நீயே, தேவர் - சதுர்நிகாயாமரர்கள், ஏத்தும் - ஸ்துதிக்கின்ற, திறலோய் - அனந்த வீரியத்தையுடையவன், நீ - நீயே, பந்தம் - கருமபந்தங்களை, பரியும் - விடுதலை செய்கின்ற, நெறியோய் - ரத்தினத்திரயமார்க்கத்தை யுடையவனே, நின் - உன்னுடைய, பாதகமலம் - பாதத்தாமரைகளை, பணிவாருக்கு - வணங்குகின்றவர்களுக்கு, அந்தமிலா - முடிவில்லாத, இன்பத்தை - ஸௌக்கியத்தை, அளித்து - கொடுத்து, முத்தியகத்து - மோட்சத்தில், இருத்தும் - சேர்க்கும்படியான, எந்தை - எமது ஸ்வாமியே, பாதம் - நின்பாதங்களை, பணிவார் - வணங்குபவர்கள், (பின்பு தங்களை), இவ்வுலகம் - இவ்வுலகத்திலுள்ளோர், பணிய - வணங்கும்படியாக, வருவார் - வந்து இந்நிலைமையை யடைவார்கள், எ - று," என்பனவாம். (௭௦)

வேறு.

810. மலர்மழை பொழிந்து மாரி முகிலென வந்து வானோ
ரலைகடன் முகிலோ டொன்றி முழங்குவ தனைய தென்ன
வுலகுடை யிறைவன் பாத முள்ளமெய் மொழியோ டொன்றி
நிலையிலாப் பிறவி நீங்கு நெறியினைற் றுதிகள் சொன்னார்.

(இ - ள்) வானோர் - சதுர்நிகாயாமரர்கள், வந்து - இச்சக்ராயுத பகவானிடம் வந்து, மாரிமுகிலென - மழையைப்பெய்யும் மேகத்தைப்போல, மலர்மழை -

புஷ்ப வருஷங்களை, பொழிந்து - சொரிந்து, உலகுடை - இந்தத்திரிலோகத்தை யும் ஞானத்தாலுடைய, இறைவன் - இந்தச்சக்ராயுத பகவானுடைய, பாதம் - பாதங்களை, உள்ளம் மெய்மொழியோ டொன்றி - மன வசன காயங்களோடு பொருந்தி, நிலையிலா - அனித்தியஸ்வரூபமாகிய, பிறவி-ஸம்ஸாரப்பிறப்பானது, நீங்கும் - நீங்கும்படியான, நெறியினல்-கிரமத்தினல், (கேட்போர் இம்முழக்கம்), அலைகடல் - அலைகளால் சப்திக்கும்படியான கடலானது, முகிலோடு ஒன்றி - மேககர்ச்சனையோடு சேர்ந்து, முழங்குவதனையது என்ன - சப்திப்பதையொப்ப தாகுமென்று சொல்லும்படி, (கெம்பீரமாகிய துவனிகளால்), துதிகள் - ஸ்தோத் திரங்களை, சொன்னர் - மேற்கூறியபடி சொல்லினர்கள், எ - று. (சுக)

811. ஆயிடை யெண்பத் தஞ்சு வினைகெட்ட வக்க ணத்தே
போயுல குச்சி புக்கான் பொருந்தியெண் குணங்க ளோடுந்
தூயவான் மலர்சொ ரிந்து துதித்துட னமரர் போனர்
மாயமி றவத்தி ஞன்வச் சிராயுதன் வணங்கிப் போனன்.

(இ - ள்) ஆயிடை - அப்பொழுது, எண்பத்தஞ்சுவினை - எண்பத்தைந் தாகிய அகாதிகருமங்கள், கெட்ட - சக்ராயுதபகவானை விட்டு நீங்கின, அக் கணத்தே - (அவ்விதமாக சுத்தோபயோகதியானத்தால் ஸமயஸார லாபமடைந்த) அப்பொழுதே, எண் குணங்களோடும் - அனந்த ஞானதி அஷ்டகுணங்களோடும், பொருந்தி - சேர்ந்து, போய் - (சரீரம்நீங்கி ஊர்த்துவகதிஸ்வ பாவனய்) சென்று, உலகுச்சி - மூன்றுலோகத்திற்கும் உச்சியாகிய ஸித்திக்ஷேத்திரத்தை, புக்கான் - சக்ராயுதபகவான் அடைந்தான், (அப்பொழுது,)தூய - பரிசுத்தமாகிய, வான் - சிறந்த, மலர் - புஷ்பங்களை, சொரிந்து - வருஷித்து, துதித்து - (பரிநிர்வாண பூஜைசெய்து) ஸ்தோத்திரம் பண்ணி, உடன் - உடனே, அமரர் - சதுர்நிகாய தேவர்களும், போனர் - தங்கள் தங்களிடம் சென்றார்கள், மாயமில் - மாயாச்சார மில்லாத (அதாவது : உண்மையாகிய), தவத்தினன் - தபஸையுடையவனை, வச்சிராயுதனும் - வச்சிராயுத மஹாமுனிவரனும், வணங்கி - (பரிநிர்வாண பூஜா காலத்தில் சக்ராயுதபகவானை) தொழுது, போனன் - பிறகு தான் ஏகவிஹாரி யாகித் தபோவனத்திற் சென்றான், எ - று. (சுஉ)

812. வணிகனய்த் தரும மேவி மன்னனய் மாத வத்தா
லிணையிலாக் கேவச் சத்து ளமரனு யிங்கு வந்து
தணிவிலாத் தவத்தின் மாற்றை யெறிந்துசக் கராயு தன்போ
யிணையிலா வுலகம் புக்கா னிதுவறத் தியற்கை யாமே.

(இ - ள்) வணிகனய் - பூர்வம் பத்திரமித்திரனென்னும் வணிகனயிருந்து, தருமம் - (தான முதலாகிய சிராவக) தருமத்தை, மேவி-பொருந்தி, மன்னனய் -

# சக்கராயுதன் முத்திச் சருக்கம்

பிறகு ஸிம்மச்சந்திரனென்னும் அரசனுகி, மாதவத்தால் - உத்[illegible] செய்து அதன்பலத்தால், இணையிலா - உபமையில்லாத, [illegible] கிரைவேயகமென்னும் அஹமிந்திரலோகத்தில், அமானும் - ([illegible] னும்) அஹமிந்திர தேவனுகி, (ஆயுரவஸானத்து) இங்கு[illegible] மனிதனுய்வந்து, தணிவிலா - குறைவில்லாத, தவத்தில் - [illegible] மாற்றை - இந்தஸம்ஸாரப் பிறவியை, எறிந்து - கெடுத்து, சக்காயுதன் [illegible] யுதபகவான், போய் - (பரிநிர்வாணமாகிஸ்வயம்புத்தன்மைபெற்றும்) [illegible] இணையிலா - முன்ஒருகாலும் சேர்தலில்லாத, உலகம் - மோட்ச[illegible] ஸித்தி க்ஷேத்திரத்தில், புக்கான் - புகுந்து கிஸ்ஸம்ஸாரபரமாத்ம[illegible] தான், அறத்தியற்கை - ஸ்ரீ ஜினதர்மத்தினது ஸ்வரூபமானது, இது [illegible] தன்மைத்தாகும், எ - று.

ஏழாவது :

சக்கராயுதன் முத்திச்சருக்கம் முற்றுப்பெற்றது.



எட்டாவது :

# வச்சிராயுதனுத்தரம்புக்க சருக்கம்.

---

813. அரச னாயநல் லரத னாயுதன்
பிரச மார்குழற் பிணைய னாரொடும்
வரைசெய் தோளவன் மகிழ்ந்த வார்த்தையை
யுரைசெய் வன்னினி யுரக ராசனே.

(இ - ள்) உரகராசனே - தரணேந்திரனே !, அரசனாய - இராஜாவாகி யிருந்த, நல் - நன்மையாகிய, அரதனாயுதன் - இரத்தினாயுத மஹாராஜன், வரை செய் - பர்வதம்போல் கெட்டி பொருந்திய, தோளவன் - புயத்தையுடையவனாய், பிரசம் - வண்டுகள், ஆர் - நிறைந்து மொய்த்திராநின்ற, (பூமாலைகளை யணிந்த), குழல் - அளக பாரத்தையுடைய, பிணையனாரொடும் - பெட்டை மான்போல மருண்ட பார்வையையுடைய ஸ்த்ரீமார்களுடன், மகிழ்ந்த - சந்தோஷித்திருந்த செய்கையைப்பற்றிய, வார்த்தையை - சொற்களை, இனி - இனிமேல், உரை செய்வன் - சொல்லுவேன், (என்று ஆதித்யாபதேவன் அடியில் வருமாறு சொன்னான்), எ - று. (க)

814. வாம மேகலை மயிலஞ் சாயலார்
காமக் கோட்டியுட் கழூமுங் காதலாற்
சேம நல்லறஞ் செப்பிற் றீயிடை
யாமை போலவ னவல மெய்துமே.

(இ - ள்) வாமம் - அழகிய, மேகலை - மேகலாபரணத்தையணிந்த, மயில் - ஆண்மயில் போன்ற, அம் - அழகிய, சாயலார் - சரீரச்சாயலையுடைய ஸ்த்ரீமார்களின், காமம் - விருப்பம் பொருந்திய, கோட்டியுள் - கூட்டத்தினுள், கழூமும் - பொருந்துகின்ற, காதலால் - மிகுதியான வாஞ்சையை யுடைத்தானவனாகையினால், சேமம் - க்ஷேமத்தை யுண்டுபண்ணுகின்ற, நல்லறம் - ஸ்ரீஜின தருமத்தை, செப்பில் - அவனிடத்தில் சொல்லுமிடத்தில், தீயிடை - அக்கினியிலே அகப்பட்ட, ஆமைபோல - ஆமையைப்போல, அவன் - அவ்விரத்தினாயுதன், அவலம் - வருத்தத்தை, எய்தும் - அடைபவனாயின், எ - று. (உ)

815. அரசு மின்பமுங் கிளையு மாயுவும்
விரைசெய் தாரவன் வீயு மென்றெணான்

திரையு டுத்தவிப் படிமி சைத்தன
தரசு நிற்பதே யாக வெண்ணுமே.

(இ - ள்) விரைசெய் - வாசனையை வீசுகின்ற, தாரவன் - மாலையை யணிந்திராநின்ற இரத்தினயுத வாசனனவன், அரசும் - இராஜ்யமும், இன்பமும்- ஸௌக்கியமும், கிளேயும் - பந்து ஜனங்களும், ஆயுவும் - ஆயுஷ்யமும், வீயு மென்று - நாசத்தை யடையுமென்று, எணான் - நினைக்காதவனாகி, திரையுடுத்த - ஸமுத்திரஞ் சூழ்ந்த, இப்படிமிசை - இப்பூமிமேல், தனது - தன்னுடைய, அரசு - ராஜ்யமானது, நிற்பதேயாக - ஸ்திரமான நித்திய ஸ்வரூபத்தையுடைய தாகவே, எண்ணும் - நினைப்பவனாயினான், எ - று. (௩)

816. பொறியின் போகமும் புண்ணி யத்தின்வந்
துறுவ தென்றெண ணும்ப ரின்பமும்
மறுவில் வீடுமற் றில்லை மாய்ந்தவர்
பிறவி யும்மிலை யென்று பேசுமே.

(இ - ள்) பொறியின் போகமும் - (இந்த ஸம்ஸாரப் பிறப்பிலுண்டாகும்) இந்திரிய விஷய சுகமும், புண்ணியத்தின் - சுபோபயோக புண்ணியத்தினால், வந்து - ஆஸ்ரவமாகி வந்து, உறுவதென்று - பந்தித்து நின்று உதயத்தைக் கொடுப்பதென்று, எணான் - நினைக்காதவனாகி, உம்பரின்பமும் - தேவ சௌக்கிய மும், மறுவில் - குற்றமில்லாத (அதாவது: பந்த குணமற்ற), வீடும் - மோட்ச மும், இல்லை—, மாய்ந்தவர் - (இவ்வுலகத்தில்) இறந்துபோனவர்கள், பிறவியும் - மறுபடியும் பிறக்கின்றதும், இலை - இல்லை, என்று - என்றும், பேசும் - சொல் பவனாயினான், எ - று. (௪)

817. கற்ற மாந்தராய்க் காமச் செல்வத்திற்
பெற்ற வின்பத்தைப் பிழைக்க விட்டுப்போய்
மற்று மின்பமேல் வரவ ருந்துத
லுற்ற லூனரி விட்ட தொக்குமே.

(இ - ள்) கற்றமாந்தராய் - ஞான சாஸ்திரத்தைக் கற்றுக்கொண்ட மனுஷ் யர்களாகி, காமசெல்வத்தில் - இப்போது அழகிய ஐஸ்வரிய முதலான பலசாத னங்களால், பெற்ற - அடைந்திருக்கின்ற, இன்பத்தை - சௌக்கியத்தை, பிழைக்கவிட்டு - தவறுதலாக நீக்கிவிட்டு, போய் - தபஞ்செய்கிறேனென்று போய், மற்றும் - பின்னையும், இன்பம் - சௌக்கியமானது, மேல் - இனிமேல், வர - அடையும்படியாக, வருந்துதல் - வருத்தப்படுவதானது, (எப்படியாகின்ற தென்றால்), நரி-ஒரு நரியானது, (ஜலத்தில் கண்ட மஸ்யத்தை இரையாக அடை

யக்கருதி), உற்ற - முன்னே தன் வாயிலகப்பட்டிருந்த, ஊன் - மாமிசத்தை, விட்டது - போட்டுவிட்டதை, ஒக்கும் - நிகர்க்கும், எ - று.

மாமிசத்துண்டை வாயிற் கௌவிய ஒரு நரி ஜலத்திற்குள் கண்ட மஸ்யத்தைப் பிடிக்கக்கருதி மாமிசத் துண்டத்தைக் கரையில் போட்டுவிட்டு ஜலத்திற் பாய்ந்தது ; மீன் அதற்கு அகப்படாமல் ஓடிப்போயிற்று. நரி திரும்பி வருவதற்குள் மாமிசத் துண்டையும் ஒரு பருந்தடித்துக்கொண்டு போய்விட்டது. ()

818. துன்பத் தாற்றுன்பந் துய்த்த லல்லது
துன்பத் தாலின்பந் துய்க்க வெண்ணுத
லன்பிற் காஞ்சிர மாக்கி மாங்கனி
தின்குற் றஃதவர் சிந்தை வண்ணமே.

(இ - ள்) துன்பத்தால் - தவஞ்செய்வதாலடையும் வருத்தத்தாலே, துன்பம் - சரீர துக்கத்தையே, துய்த்தலல்லது - தற்காலம் அனுபவித்தலே யல்லாமல், துன்பத்தால் - அத்துன்பத்தினால், இன்பந்துய்க்க-சௌக்கியத்தைப் பின்பு அனுபவிக்க, எண்ணுதல் - நினைத்தலானது, (எவ்விதமென்றால்), காஞ்சிரம் - எட்டி மரத்தை, அன்பில் - ஆசையினால், ஆக்கி - உண்டுபண்ணி, (அதில்), மாங்கனி - மாம்பழத்தை, தின்குற்றது - தின்ன நினைத்ததாகும், அஃது - அவ்வாறு நினைக்கும் அது, அவர் - அக்கொள்கையுடையவர்களின், சிந்தை வண்ணம் - நினைப்பின் விதமாகும், (என்றும் சொல்பவனாயினன்), எ - று. (சு)

819. வினைகள் வேறுபட் டுதயஞ் செய்தலா
லினைய சிந்தைய னாகிச் செல்லுநாண்
முனிவன் வச்சிர தந்தன் மொய்ம்மலர்
வன மனோகரம் வந்து நண்ணினான்.

(இ - ள்) வினைகள் - கர்மங்கள், வேறுபட்டு - ஆத்ம குணத்தையறியவொட்டாமல் விகாரப்பட்டு, உதயஞ் செய்தலால் - உதயத்தைக் கொடுத்தலால், இனைய - இத்தன்மையான, சிந்தையனாகி - (தத்துவார்த்த அசிரத்தான) எண்ணமுடையவனாகி, செல்லு நாள் - இரத்தினாயுத மஹாராஜன் செல்கின்ற காலத்தில், வச்சிர தந்தன் - வஜ்ர தந்தனென்னும் பெயரையுடைய, முனிவன் - ஜிநதீக்ஷையினையுடைய முனிவரன் ஒருவன், மனோகரம் - மனோஹரமென்னும் பெயரினையுடைய, வனம் - (இரத்தினாயுத வரசனுடைய) உத்தியான வனத்தில், வந்து - சங்கங்களோடு யத்ரேச்சையாக வந்து, நண்ணினான் - சேர்ந்து தங்கினான், எ - று.

820. மேரு மால்வனப் பத்தி ராலத்துள்
வார ணம்மலை சூழ நின்றதும்

வீர மாதவர் சூழ மெய்த்தவன்
தார கைமதி தானு மொத்தனன்.

(இ - ள்) (அவ்வாறு வந்து சேர்ந்து தங்கியபோது), மெய்த்தவன் - உண்மையாகிய தவத்தையுடைய வஜ்ரதந்த முனிவன், வீரமாதவர் - ஸம்மியக் துவ குணவீரியத்தையுடைய முனிவர்கள், சூழ - தன்னைச்சூழ, மால்-பெரிதாகிய, மேரு - மஹாமேரு பர்வதமானது, (தாழ்வரையைச் சார்ந்த), பத்திராலவனத் துள் - பத்திராஸால வனத்தில், வாரணம்மலை - திக்கஜ பர்வதங்கள், சூழ - சூழும் படியாக, நின்றதும் - உயர்ந்து நடுவில் நின்றதையும், தாரகை - நக்ஷத்திர ஸமூ கங்களின் மத்தியில், (விளங்கும்), மதிதானும் - சந்திரனையும், ஒத்தனன் - ஒப் பாகிக் குணங்களினால் மேலாகப் பிரகாசித்தான், எ - று. (அ)

821. பிறவி மாக்கடல் பெயர்க்கு மாற்றலா
லிறைவ னன்னவ னேந்து கொள்கையான்
மறுவின் மாதவன் வைய மூன்றினு
முறவி நின்றவா றோத வொன்றினான்.

(இ - ள்) (அவ்வாறு விளங்கியபோது), பிறவி - ஸம்ஸாரமாகிற, மாக் கடல் - பெரிதாகிய ஸமுத்திரத்தை, பெயர்க்கும் - நீக்கும், ஆற்றலால் - ஸம் மியக்துவ சக்தியினால், இறைவன் அன்னவன் - ஸர்வஜ்ஞனை நிகர்த்தவனும், ஏந்து - தரித்திராநின்ற, கொள்கையான் - ஸம்மியக் சாரித்திரத்தையுடைய வனும், (ஆகிய), மறுவில் - குற்றமில்லாத, மாதவன் - மஹாதபத்தையுடைய இந்த வஜ்ரதந்த முனிவன், வையமூன்றினும் - இந்த மூன்று லோகத்திலும், உறவி - ஜீவன்கள், நின்றவாறு - இராநின்ற விதமாகிய திரிலோக பிரஜ்ஞப்தி என்னும் ஆகமத்தை, ஓத - சங்கங்களுக்குச் சொல்வதற்கு, ஒன்றினான் - பொருந் திக் கீழ்வருமாறு சொல்கின்றவனானான், எ - று. (கூ)

822. ஒன்றி ரண்டொரு மூன்று நாலைந்தாய்
நின்ற வைம்பொறி நெறியின் வாழுயி
ரொன்று நீர்மர நில நெருப்பு காற்
றென்றிக் காயமைந் தெய்தி வாழுமே.

(இ - ள்) (அதாவது :—) ஒன்று - ஏகேந்திரியமும், இரண்டு - த்வீந்திரிய மும், ஒரு மூன்று - ஒப்பற்ற த்ரீந்திரியமும், நாலு - சதுரிந்திரியமும், ஐந்து - பஞ்சேந்திரியமும், ஆய் - ஆகி, நின்ற - இங்கு நின்ற, ஐம்பொறி நெறியின் - இந்தப் பஞ்சவிதமாகிய இந்திரிய மார்க்கணைகளில், வாழும் - வாழ்கின்ற, உயிர் - ஜீவன்களில், ஒன்று - ஸ்பரிசனேந்திரிய மாத்திரமுடைய ஏகேந்திரிய ஜீவன் கள், நீர் - அப்காயமும், மரம் - வனஸ்பதிகாயமும், நிலம் - பிருத்வீகாயமும்,

நெருப்பு - தேஜஸ்காயமும், காற்று - வாதகாயமும், என்ற - என்று சொல்லப்பட்ட, இக்காயமைந்து - இந்த ஐந்து விதமான காயங்களையும், எய்தி - அடைந்து, வாழும் - வாழ்வனவாகும், எ - று.

'என்றிக்காயம்' என்பதில் அகரந்தொக்கது. (௧0)

823. நந்து சிப்பிசங் காதி நாவன
குந்தெ றும்புகோ பாதி மூன்றன
வந்து தும்பிவண் டாதி நாலவைந்
திந்தி யம்பசுநரர் நரகர் தேவராம்.

(இ - ள்) நந்து - நத்தையும், சிப்பி - சிப்பியும், சங்கு - சங்கும், ஆதி - முதலாகவுள்ளவைகள், நாவன - ரஸனேந்திரியத்தையுமுடைய த்வீந்திரிய ஜீவன்களாகும், குந்து - கிந்தி நடக்கின்ற, எறும்பு - எறும்பினங்களும், கோபாதி - பட்டுப்பூச்சி முதலாகிய இனங்களும், மூன்றன - த்ரீந்திரியத்தையுடைய ஜீவன்களாகும், அந்து - அந்தும், தும்பி - தும்பிகளும், வண்டு ஆதி - வண்டு முதலாகியவைகளும், நால - (ஸ்பரிச, ரஸ, க்ராண, சக்ஷுவென்னும்) சதுரிந்திரியங்களையுடைய ஜீவன்களாகும், பசு - பசுக்களும், நரர் - மனுஷ்யர்களும், நரகர் - நாரகர்களும், தேவர் - தேவர்களும், (ஆகிய ஜீவன்கள்), ஐந்திந்தியம், - பஞ்சேந்திரிய ஜீவன்கள், ஆம் - ஆகும், எ - று. (௧௧)

824. உழுதல் கல்லுத லடைத்த லோடுகாய்
தழல்க ளாதிமண் ணுயிர்கள் மாய்ந்திடு
மழலை யாற்றுத லவித்த லாதியாய்த்
தழலு டம்பன தானு மாயுமே.

(இ - ள்) உழுதல் - பூமியை உழுவதினாலும், கல்லுதல் - வெட்டுவதினாலும், அடைத்தலோடு - பள்ளம் முதலானவைகளைத் தூர்ப்பதினாலும், காய் தழல்கள் ஆதி - எரிக்கின்ற அக்கினி முதலானவைகளாலும், மண்ணுயிர்கள் - பிருத்வீகாய ஜீவன்கள், மாய்ந்திடும் - நாசத்தையடையும் (அதாவது: மரணமெய்தும்), அழலை - உஷ்ணத்தை, ஆற்றுதல் - தணித்தல், அவித்தல் - அக்னியையவித்தல், ஆதி - முதலாகிய தொழில்கள், ஆய் - உண்டாவதனால் (அதாவது: இத்தொழில்களைச் செய்வதினால்), தழலுடம்பனவும் - அக்னியையே சரீரமாக உடைய தேஜஸ்காய ஜீவன்களும், மாயும் - மரணமடையும், எ - று.

'தானும்' என்பதில், தான் - அசை. (௧௨)

825. திரைய லைப்பவுந் தீயிற் காய்ச்சவுந்
தரைந னைப்பவுஞ் சாங்க ணீருயிர்

வரையோ டெற்றவும் வட்ட மாதிகள்
பொரவும் வாதகா யங்கள் பொன்றுமே.

(இ - ள்) திரை - அலையினால், அலைப்பவும் - அலசலாலும், தீயில்-அக்னியில், காய்ச்சவும் - காய்ச்சுவதினாலும், தரை - பூமியை, நனைப்பவும் - ஜலத்தைப் பாய்ச்சி நனைப்பதனாலும், நீருயிர் - அப்காய ஜீவன்கள், சாங்கள் - மாணமடையும், வரையோடு - பர்வதங்களோடு, எற்றவும் - மோதுதலாலும், வட்டமாதிகள் - சுழற்காற்று முதலியவைகள், பொரவும் - அடிப்பதினாலும், வாத காயங்கள் - வாதகாய ஜீவன்கள், பொன்றும் - நாசமெய்தும், எ - று. (கரு)

826. வெயிலும் மாரியும் மிக்க வாதமு
மயில்செய் வெம்படைத் தீயோ டாதியாற்
பயிர்ம ரம்முதல் பசிய காயமா
முயிர்க ணொந்துவெந் துயரு ழக்குமே.

(இ - ள்) தீயோடு - தீயுடனே, மிக்க - மிகுதியாகிய, வெயிலும் - வெய்யிலினாலும், மாரியும் - மழையினாலும், வாதமும் - காற்றினாலும், அயில் செய் - கூர்மை பொருந்திய, வெம் - கொடுமையான, படை ஆதியால் - ஆயுதங்கள் முதலியவைகளினாலும், பயிர் - நெற்பயிர், மரம் முதல் - விருக்ஷங்கள் முதலாகிய, பசியகாயமாமுயிர்கள் - பசுமையான காயத்தையுடைய வனஸ்பதிகாய ஜீவன்கள், நொந்து - வருந்தி, வெம் - கொடுமையான, துயர் - துக்கங்களை, உழக்கும் - அனுபவித்து நாசமாகும், எ - று. (கச)

827. மால்க டற்பிறந் தாலு மாவதென்
மேலை வெவ்வினை நிற்கு மாய்விடின்
வால்வ ளைமக ரங்கள் சிப்பிமீன்
கால னன்னவர் கையின் மாயுமே.

(இ - ள்) வால் - வெளுப்பாகிய, வளை - சங்குகளும், மகரங்கள் - மகர மீன்களும், சிப்பி - சிப்பிகளும், மீன் - மற்றும் அனேகவித மஸ்யங்களும், மால் - பெரிதாகிய, கடல் - ஸமுத்திரத்திலே, பிறந்தாலும் - உற்பவித்தாலும், மேலை - முன்னாலாகிய, வெவ்வினை - வெவ்விதாகிய பாபவினையானது, நிற்குமாய்விடில் - இருந்து உதயஞ் செய்யுமானால், ஆவது - (அவற்றிற்கு) ரக்ஷணையாவது, என் - என்ன இருக்கின்றது, காலனன்னவர் - எமராஜனுக்குச் சமானமாகிய கொலைஞர்களுடைய, கையின் - கையினால், மாயும் - அவை மாணமடையும், எ - று. (கரு)

828. மலையும் வாவியும் கானு மேவியும்
வலையும் வில்லும்வான் பொறியு மாதியா

யலைசெய் வார்களுக் கஞ்சி நெஞ்சழிந்
துலைவி லாதவெந் துயரு ழக்குமே.

(இ - ள்) (இன்னும் விலங்கு கதியைச்சார்ந்தவைகள்), மலையும் - பர்வதங் களிலும், வாவியும் - தடாகங்களிலும், கானும் - காடுகளிலும், மேவியும் - பொருந் தியும், வலையும் - வலைகளும், வில்லும் - விற்களும், வான் - பெரிதாகிய, பொறி யும் - எந்திரங்களும், ஆதியாய் - முதலாக (மற்ற கொலைக்கருவிகளால்), அலை செய்வார்களுக்கு - பிடித்துக்கொல்கின்றவர்களுக்கு, அஞ்சி - பயந்து, நெஞ் சழிந்து - மனங்கலங்கி, உலைவிலாத - நீங்காத, வெந்துயர் - வெப்பம் பொருந்திய துக்கத்தை, உழக்கும் - அனுபவிக்கும், எ - று. (கசு)

829. ஊன காரரும் போர்செய் வீரருந்
தீனர் வேள்வியுந் தீய தெய்வமு
மீன மானவ ராதி யெய்துவர்
தானு டம்பிடுஞ் சார்ந்த சாதியே.

(இ - ள்) ஊனகாரரும் - மாமிசந் தின்பவர்களும் விற்பவர்களும், போர் செய் - யுத்தஞ் செய்கின்ற, வீரரும் - வீரபடர்களும், தீனர் - அஞ்ஞானிகளால் செய்யப்படும், வேள்வியும் - யாகமும், தீயதெய்வமும் - துர்த்தேவதைகளும், ஈன மானவர் - சாண்டாளாதி தாழ்ந்த ஜாதியாரும், ஆதி - முதலாக, எய்துவர் - இன் னும் பலவிதமாக அடைந்திராநின்ற பாபிஷ்டர்களினால், சார்ந்த சாதி - விலங்கி னத்தைச் சேர்ந்த ஜீவன்கள், உடம்பிடும் - சரீரத்தைவிட்டு மரணமடையும், எ - று.

தான் - அசை. (கஎ)

830. கூரி ரும்பினாற் குடுமி போழவும்
பார மேற்றவும் பாதம் யாப்பவும்
வார ணந்துய ரெய்து மற்றைய
வேரு மூர்தியு மீர்த்து நையுமே.

(இ - ள்) வாரணம் - பெரிய மிருகமாகிய யானைகள், கூர் - கூர்மை பொருந்திய, இரும்பினால் - இரும்பினாற் செய்யப்பட்ட அங்குச முதலான ஆயுதங் களினால், குடுமி - மஸ்தகங்களில், போழவும் - பாகர்கள் பிளக்கவும், பாரம் - மிகுதியான சுமைகளை, ஏற்றவும் - மேலே சுமக்கும்படி ஏற்றுதலாலும், பாதம் - கால்களை, யாப்பவும் - தொடரிட்டுக் கட்டுதலாலும், துயரெய்தும் - துக்கத்தை யடையும், மற்றைய - மற்ற மாடு குதிரை முதலியவைகள், ஏரும்-உழுபடையை யும், ஊர்தியும் - வண்டி முதலியவைகளையும், ஈர்த்து-இழுத்து, நையும்-நாசமெய் தும், எ - று. (கஅ)

வேறு.

831. இப்ப டிவிலங் கிற்பிறப் பார்கடா
மெப்ப டிப்பட் டவரென் றியம்பிடின்
மெய்ப்ப டத்துற வாது விழுத்தவத்
தொப்பின் மாயத்தி ேனாடுழல் வார்களும்.

(இ - ள்) இப்படி - இப்பிரகாரமாக, விலங்கில் - விலங்கு ஜாதியில், பிறப்பார்கள் தாம் - பிறக்கப்பட்டவர்கள், எப்படிப்பட்டவர் - எப்படிப்பட்ட குணத்தையுடையவர்கள், என்று - என்று, இயம்பிடில் - சொல்லுமிடத்தில், மெய்ப்பட - உண்மையாக, துறவாது - பாகியாப்பியந்தர பரிக்கிரகங்களை மனதிற்றுறவாமல், ஒப்பில் - உவமையில்லாத, விழு - பெரிதாகிய, தவத்து - தபோவேஷத்தில், மாயத்தினேடு - மாயாச்சாரத்தினேடு, உழல்வார்கள் - செல்பவர்களே, எ - று.

உம் - அசை. (கக)

832. மோக மோடுமிச் சோதயத் தாலுமற்
றேக மாதிநான் கில்விலங் காயிடுங்
காக மேயன காரிகை யார்மனத்
தாகு மாயம் விலங்கினை யாக்குமே.

(இ - ள்) (இன்னும் ஜீவன்கள்), மோகமோடு - தீவிரதரமாகிய சாரித்திர மோஹனீய கஷாயோதய பரிணாமத்தோடு, மிச்சு - தர்சன மோஹனீயமாகிய மித்தியாத்துவப் பிரகிருதியின், உதயத்தாலும் - உதயத்தினாலும் (அதாவது : மித்தியாத்துவ ஔதயிக பாவத்தினாலும்), ஆதி - திரியக்கதிக்கு முதலாகிய, ஏகம் - ஏகேந்திரியத்திலும், (அதுவல்லாமல் முன் சொனன கஷாய மித்தியாத்துவம் என்னும் மோஹனீயப் பிரகிருதிகளின் மந்தமத்திமதர ஔதயிக பரிணாமத்தால்), நான்கில் - (த்வீந்திரியம், த்ரீந்திரியம், சதுரிந்திரியம், பஞ்சேந்திரியமென்னும் இந்த) நான்கிலும், விலங்காயிடும் - பரிணாமானுஸாரப்படி திரியக்காக ஜனிக்கும், (அதுவல்லாமல்), காகமேயன-காகத்துக்குச் சமானமாகிய (அதாவது ஸ்திரமில்லாத), காரிகையார் - ஸ்த்ரீமார்களுடைய, மனத்து - மனதில், ஆகும் - உண்டாகின்ற, மாயம் - மாயாச்சாரமானதும், விலங்கினை - விலங்குஜாதிப் பிறவியை, ஆக்கும் - உண்டுபண்ணும், எ - று. (உ0)

833 உள்ளம் மெய்ம்மொழி யொன்றுத லுமிலா
வெள்ளை மாந்தரும் வீழ்வர் விலங்கிடைத்
தள்ள வாரஞ்செ யாத்தனந் தேடுமக்
கள்ள நெஞ்சினர் வீழ்கதி யும்மிதே.

(இ - ள்) உள்ளம் - மனதும், மெய் - காயமும், மொழி - வசனமும், ஒன்றுதலும் இலா - (ஒரு தன்மையாக ஞானத்தில்) பொருந்துதலில்லாத, வெள்ளை மாந்தரும் - அறிவற்ற அஞ்ஞானிகளாகிய மனிதரும், விலங்கிடை - திரியக் ஜாதியில், வீழ்வர் - விழுவார்கள், தள்ளவாரம் - செய்ய வேண்டிய தரு மப் பகுதிகளின் அப்பங்கை, செயா - செய்யாமல், தனந்தேடும் - செல்வந்தேடு கின்ற, கள்ளம் - கபடமாகிய, நெஞ்சினர் - மனதையுடையவர்கள், வீழ் - விழு கின்ற, கதியும் - கதியும், இதே - இவ்விலங்கு கதியேயாகும், எ - று. (உக)

834. மன்றி னின்று பிறன்பொருள் வாங்குவார்
தின்று தேனொடு கட்புல சிற்செல்வார்
நின்ற நீதி கெடுத்தய லார்மனை
யொன்று வாருழ லுங்கதி யும்மிதே.

(இ - ள்) மன்றில் நின்று - நீதிதலததில் அதிகாரவர்க்கத்தினராய் நின்று, பிறன் - அன்னியனுடைய, பொருளை - திரவியாதிகளை, வாங்குவார் - வாங்கிக் கொள்பவரும், தேனொடு - தேனோடு, கள் - கள்ளையும், புலசில் - மாமிசததையும், தின்று - பொசித்து, செல்வார் - செல்கின்றவர்களும், நின்ற - பாரம் பரியமாய் நின்ற, நீதி - நீதியை, கெடுதது - நாசஞ்செய்து, அயலார் மனை - பிறர் மனை யாளை, ஒன்றுவார் - பொருந்துபவர்களும், உழலும் - சுழல்கின்ற, கதியும் - கதி யும், இது - இவ்விலங்கு கதியேயாகும், எ - று. (உஉ)

835. ஒனற லாதுயி ரில்லை யெனச்சொலா
நின்ற தீநெறி யிற்செறி வார்களு
மொன்று நல்வழக் கோர்ந்துடைந் தானுழை
வென்றி யாக்குநர் வீழ்கதி யும்மிதே.

(இ - ள்) ஒன்றலாது - பரமாத்மா ஒன்றேயல்லாமல், உயிர் - ஜீவாதமாக கள், இல்லை - வேறில்லை, (எல்லாம் அப்பரமாத்மகலையே), என - என்று, சொலாநின்ற - சொல்லுகின்ற, தீநெறியில் - நன்மையில்லாத வழியில், செறி வார்களும் - சேர்பவர்களும், ஒன்றும் - பொருந்தும்படியான, நல் - நன்மையாகிய, வழக்கு - வழக்கின் கூறுபாட்டை, ஓர்ந்து - தெரிந்திருந்தும், உடைந்தானுழை - கெட்ட வழக்காளியின் பட்சமாகச் சேர்ந்து, வென்றியாக்குநர் - வெற்றியாக்கு கின்றவர்களும், வீழ் - விழுகின்ற, கதியும் - கதியும், இது - இவ்விலங்குகதி யாகும், எ - று. (உங)

836. இல்லை நல்வினை தீவினை யின்னுயி
ரில்லை யேபிறந் தார்கள் பிறத்தலு

மில்லை யேதுறக் கதல்தாடு வீடனுஞ்
சொல்லி ஞர்சுழ லுங்கதி யும்மிதே.

(இ - ள்) நல்வினை - புண்ணியவினையென்பதும், தீவினை - பாபவினையென்பதும், இன் - இனிமையாகிய (அதாவது: சேதனத்துவத்தையுடைய), உயிர் - ஜீவத்திரவியமென்பதும், இல்லை - சர்வதா சூன்யமாகும், இறந்தார்கள் - இவ்வுலகத்தில் மரணமடைந்தவர்கள், பிறத்தலும் - மறுபடியும் பிறப்பதும், இல்லை - கிடையாது, துறக்கத்தொடு - தேவலோகத்தோடு, வீடு - மோட்சமும், இல்லை - கிடையாது, எனும் சொல்லினர் - என்கின்ற சொல்லையுடையவர்களும், சுழலும் - சுழல்கின்ற, கதியும் - கதியும், இது - இவ்விலங்கு கதியேயாகும், எ - று.

837. அரச நீதி யழித்தவம் மன்னனு
மரச நீதி யழித்த வமைச்சனும
புரையி ஞற்பிற ரைப்புணர் தீப்பெ ணும்
நிரய மெய்தி விலங்கினு நிற்பரே.

(இ - ள்) அரசநீதி - இராஜநீதியை, அழித்த - கெடுத்த, அம்மன்னனும் - அவ்வரசனும், அரசநீதி - இராஜநீதியை, அழித்த - கெடுத்த, அமைச்சனும் - மந்திரியும், புரையினல் - குற்றத்தினல் (அதாவது: முக்குற்றத் தொன்ருகிய மிகு மோஹபரிணமோதயத்தால்), பிறரை - அன்னிய புருடனை, புணர் - சேர்கின்ற, தீப்பெணும் - கெட்ட புத்தியையுடைய ஸ்த்ரீயும், நிரயமெய்தி-நரகத்தை யடைந்தும், விலங்கினும் - (அல்லாமலும் மந்ததாரத்தால்) விலங்கு கதியிலும், நிற்பர் - சேர்வார்கள், (என்பதாம்), எ - று. (உரு)

வேறு.

838. அரதனு யுதன்றன் மேக விசயமாம் யானை யந்தப்
பிரசமார் வனத்தி ருந்த பெருந்தவன் விலங்கின் வாட்கை
யுரைசெய்தா னிதனைக் கேளா பிறப்பினை யுணர்ந்திட் டுனின்
விரவிய கவளங் கொள்ளா தொழிந்துவெய் துயிர்த்த தன்றே.

(இ - ள்) (இவ்வாறு), அந்த - முன் சொன்ன மனேஹரமென்னும் பெயருடைத்தாகிய அந்த, பிரசம் - மதுக்களால், ஆர் - நிறைந்த வனத்து - உத்தியான வனத்திலே, இருந்த - தங்கிய, பெருந்தவன் - பெரிதாகிய தபத்தையுடைய வஜ்ரதந்த முனிவன், விலங்கின் வாட்கை - திரியக்கதியின் வாழ்க்கையாகிய ஸ்வரூபத்தை, உரை செய்தான் - ஸங்கங்கட்குச் சொல்லினன், இதனை - இந்த விவரத்தினை, அரதனுயுதன் தன் - இராஜாவாகிய இரத்தினயுதனுடைய, மேக விசயமாம் - மேகவிஜயமென்னும் பெயரையுடையதாகிய, யானை - பட்டத்து

யானையானது, கேளா - கேட்டு, பிறப்பினை - தனது பூர்வபவ பிறப்பை, உணர்ந்திட்டு - (க்ஷயோபசமலப்தி பூர்வம் விசோதிலப்தியால் பவஸ்மிருதியென்னும் அறிவுண்டாகவதனால்) அறிந்து, ஊனின் விரவிய - மாம்ஸத்திற் கலந்த (அதாவது : மாம்ஸமிசிரமாகிய), கவளம் - கவளத்தை, கொள்ளாது - ஏற்றுக்கொள்ளாமல், ஒழிந்து - அதைவிட்டு நீங்கி, வெய்துயிர்த்தது - பெருமூச்செறிந்து நின்றது, எ - று. (உசு)

839. பிறர்மனை பிழைத்த நெஞ்சிற் பெரியவ னொருவன் போல
நிறைமதம் புலர்ந்து நைந்து நீசனென் செய்தே னென்று
மறமொழிந் துறவி யோம்பிக் கவளங்கள் வாங்கா நீங்க
வறைகழ லரசற் கோடி யறிந்தவ ருணர்த்தி னாரே.

(இ - ள்) (அவ்வாறாய் அந்த யானை), பிறர் மனை-அன்னிய ஸ்த்ரீயினிடத்தில், பிழைத்த-குற்றஞ் செய்த (அதாவது : நீதி விரோதஞ்செய்து அவளை அனுபவித்த), பெரியவனொருவன்போல - ஒரு பெரிய மனுஷ்யனைப்போல (அதாவது : பெரிய மனுஷ்யனானவன் தான்செய்த அக்காரியம் கெட்டவிஷயமென்று அறிந்து தன்னைத்தானே நிந்தித்து அதற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்வதுபோல) நிறை-நிறைந்த, மதம்-மதமானது, புலர்ந்து-உலர்ந்து (அதாவது: ஒழிந்து), நீசன்-புத்தியில்லாத நீசனாகிய யான், என்செய்தேனென்று-என்ன கெட்ட காரியத்தைச் செய்தேனென்று, நெஞ்சில் - மனதில், நைந்து - நினைந்துருகி (ஆத்மநிந்தனை பண்ணி), மறம் - பாபத்தொழிலை, ஒழிந்து - தவிர்ந்து, உறவி - ஜீவன்களை, ஓம்பி - இரக்ஷித்து (அதாவது : ஹிம்ஸைபண்ணாமல், ஜீவதயவுடையதாகி), கவளங்கள் - மாம்ஸ மிஸ்ரமாகிய கவளங்களை, வாங்காநீங்க - வாங்காமல் விட்டுவிட, அறிந்தவர் - இது கவளங்கொள்ளாதிருப்பதை யுணர்ந்த பாகர்கள், ஓடி - சென்று, அறை - சப்தியா நின்ற, கழல் - வீரகண்டயத்தை யணிந்த, அரசற்கு - இரத்தினாயுத மஹாராஜனுக்கு, உணர்த்தினார் - யானை கவளங்கொள்ளவில்லையென்று தெரிவித்தார்கள், எ - று. (உஎ)

840. மன்னன்வந் தமைச்ச ரோடு மருந்தறி புலவர் தம்மை
யென்னிதற் குற்ற தென்ன வியாதிமற் றியாது மில்லை
மின்னுமிழ்ந் திலங்கும் பூணோய் விலங்கல்போ னின்ற வேழ
முன்னினாற் பிறப்பு ணர்ந்த தொக்குமிவ் வுயிர்ப்பி னென்றார்.

(இ - ள்) மன்னன் - இரத்தினாயுதவரசன், அமைச்சரோடும் - மந்திரிகளுடன், வந்து - யானை யிருக்குமிடம் வந்து, மருந்தறிபுலவர் தம்மை - வைத்தியர்களை, என் - என்ன, இதற்குற்றது - இந்த யானைக்கு அடைந்தது, என்ன - என்று கேட்க (அவர்கள்), மின் - பிரகாசத்தை, உமிழ்ந்து-சொரிந்து, இலங்கும்.

விளங்கும், பூணேயும்-ஆபரணமணிந்த அரசனே!, விலங்கல்போல் - பர்வதம்போல, நின்ற - நின்றதாகிய, வேழம் - இந்த யானைக்கு, யாதும் - யாதொன்றும், வியாதி-நோயானது, இல்லை-உண்டானதில்லை, இவ்வுயிர்ப்பின்-இது விடுகின்ற இப்பெருமூச்சின் தன்மையால், உன்னிஞல்-யுக்தியாக ஆலோசித்துப் பார்த்தால், பிறப்பு-ஏதோ காரணத்தால் பூர்வபவ பிறப்பை, உணர்ந்தொக்கும் - அறிந்ததற்குச் சமானமாயிராநின்றது, என்றார் - என்று சொல்லினர்கள், எ - று. (உஅ)

841. ஐயொடு வாத பித்தம் விகாரத்தை யடைந்த தில்லை
மையலும் வெய்ய தொன்று மற்றிதற் குற்ற தில்லை
கைம்மலை யிதன்கை யூனிற் கவளங்கள் வைத்த போழ்தி
னையமொன் றின்றி வாங்கி னறிந்தது பிறப்பை யென்றார்.

(இ - ள்) (அவர்கள் அவ்வாறு சொல்லிப் பின்னரும்), ஐயொடு - சிலேத்துமத்தோடு, வாதம்-வாதமும், பித்தம் - பித்தமுமென்னும் பகுதிகள், விகாரத்தை - வித்தியாசத்தை, அடைந்ததில்லை - அடைந்த தன்மை இதனிடத்தில்லை, வெய்யது - கொடுமையுள்ளதாகிய, மையல் ஒன்றும் - மயக்கமொன்றும், இதற்கு - இவ்வியானைக்கு, உற்றதில்லை - அடைந்ததில்லை, கைமலை - துதிக்கையையுடைய மலைபோன்ற யானையாகிய, இதன்கை - இதனுடைய கையில், ஊனில் - மாம்ஸ மிஸ்ரமில்லாத, கவளங்கள் - பவித்திராஹார கவளங்களை, வைத்தபோழ்தில் - வைத்தகாலத்தில், ஐயமொன்றின்றி-சிறிதும் சந்தேகமில்லாமல், (இது), வாங்கின்-கிரஹித்துப் பொசிக்கின், பிறப்பை-தனது பிறப்பாகிய பூர்வ பவ ஸ்வரூபத்தை, அறிந்தது - பவஸ்மிருதி யென்னும் ஞானம் உற்பன்னமாகித் தெரிந்துகொண்டதாகும், என்றார் - என்று சொன்னார்கள், எ - று. (உகூ)

842. தேனுலாந் தாரி ஞனு மப்படிச் செய்க வென்ன
வூனிலாத் தூய நல்ல கவளங்க ளுழையர் நீட்ட
மானமா வாங்கக் கண்டு மன்னனும் வியந்து பின்னைக்
கானின்மா முனிவன் றன்னைக் கண்டடி பணிந்து சொன்னான்.

(இ - ள்) (அதைக்கேட்டு), தேன் - வண்டுகள், உலாம் - தேனையுண்ணும் பொருட்டு நெருங்கியுலவுகின்ற, தாரினனும்-மாலையை யணிந்தவாசனும், அப்படி-அப் பிரகாரம், செய்க - செய்யக்கடவீராக, என்ன-என்று ஆஜ்ஞாபிக்க, ஊனிலா-மாமிசமில்லாத, தூய - பரிசுத்தமாகிய, நல்ல - நலமான, கவளங்கள் - அன்னக் குவியல்களை, உழையர் - வேலைக்காரர்களாகிய பாகர்கள், நீட்ட-கொடுக்க, மானம் - அபிமானத்தையுடைய, மா - அவ்வியானையானது, வாங்க - வாங்கிப் புசிக்க, கண்டு - அதைப் பார்த்து, மன்னனும் - அரசனும், வியந்து - ஆச்சரியமடைந்து, பின்னை - பிறகு, கானில் - மனோஹரமென்னும் உத்தியானத்தில் இராநின்ற,

முனிவன் தன்னை - வஜ்ரதந்த முனிவரனை, கண்டு - பார்த்து, அடிபணிந்து - அவனுடைய பாதத்தில் வணங்கி, சொன்னான் - (யானைக் குற்றத்தைக்) கூறினன், எ - று. (௩௦)

843. மகரயாழ் வல்ல மைந்த னொருவனைக் கண்ட மற்றப்
புகர்முகக் களிற்றின் மன்னன் முனிவனை வணங்கிப் பின்னை
சிகரமால் யானைக் குற்ற தருளுக வென்று செப்ப
நிகரிலாப் போதி யாற்பார்த் தரசநீ கேண்மோ வென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும் அவன்), மகரயாழ் - மகரயாழென்னும் வீணை வாத்தியத்தில், வல்ல - கைதேர்ந்து வாசிக்கச் சாமர்த்தியமுள்ள, மைந்தன் ஒருவனை - ஒரு குமாரனை, கண்ட - பார்த்த, புகர்முகம் - புள்ளி பொருந்திய முகத்தையுடைய, களிற்றின் - யானையைப்போல (அதாவது : சரியான வீணாகானத்தினால் யானை சந்தோஷமடைந்து ஒருவனுக்கு வசமாகி ஏவல் செய்வது போல), மன்னன் - இவ்வரசனும், முனிவனை - வஜ்ரதந்த முனிவரனை, வணங்கி - நமஸ்கரித்து, (ஸந்தோஷமடைந்து), சிகரம்-பர்வதம் போன்ற, மால் - பெரிதாகிய, யானைக்கு - எனது பட்டத்துயானைக்கு, உற்றது - நேர்ந்ததை, அருளுக - சொல்லியருள்வாயாக, என்று செப்ப - என்று சொல்ல, நிகரிலா - உவமையில்லாத, (அதாவது : உத்கிருஷ்டமாகிய), போதியால் - அவதிஜ்ஞானத்தால், பார்த்து-அம்முனிவரன் ஆலோசித்துப் பார்த்தறிந்து, அரச - வாராய்ராஜனே !, நீ கேண்மோ - (நான் சொல்லப்போவதை) நீ கேட்பாயாக, என்றான் - என்று மேலும் சொல்லத்தொடங்கினான், எ - று. (௩௧)

844. மற்றிந்தப் பாரதத் தின்க ணத்தின புரத்தின் மன்னர்
பெற்றியாற் பெரிய மன்னன் பிரதிபத் திரனென் பானும்
வெற்றிவேல் வேந்தன் றேவி வசுந்தரி விலங்கல் போலுங்
கற்பினாள் புதல்வன் பிரிதி கரனென்பா னொருவ னானான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லத் தொடங்கியவர் அம்மன்னனை நோக்கி), இந்தப் பாரதத்தின்கண் - இந்தப் பாரத க்ஷேத்திரத்திலே, அத்தினபுரத்தின்-அஸ்தினபுரத்தினது, மன்னர் பெற்றியால்-அரசர் தன்மையினாலே, பெரிய-உயர்ந்தவனாகிய, மன்னன் - இராஜனானவன், பிரிதிபத்திரனென்பானும் - ப்ரீதிபத்திரனென்னும் பெயருடையவனாகும், வெற்றி - வெற்றிபெற்ற, வேல் - வேலாயுதத்தைக் கையிற்றரித்த, வேந்தன் - அவ்வரசனுடைய, தேவி - பட்டத்தரசியானவள், விலங்கல்போலும் - பர்வதம்போற் சலியாத, கற்பினாள் - பதிவிரதா குணமுள்ளவளாகிய, வசுந்தரி - வஸுந்தரியென்னும் பெயருடையவளாகும், புதல்வன் - அவ்விருவருக்கும் புத்திரன், பிரிதிகரனென்பான் - ப்ரீதிங்கரனென்

னும் பெயரினையுடையவனுன, ஒருவன் - ஒருத்தன், ஆனுன் - உண்டாயி ஞன், எ - று. (௩௨)

845 சித்திர மதியென் பானும் மந்திரி துணைவி தீஞ்சொல்
முத்தணி முறுவற் செவ்வாய்க் கமலையாங் கமலை யொப்பாள்
வித்தகப் புதல்வன் றானும் விசித்திர மதியென் பானும்
மத்தமால் களிற்று வேந்தன் மகனுக்கன் றெருவ னுனன்.

(இ - ள்) மந்திரி - அவ்வாசனுக்கு மந்திரி, சித்திரமதியென்பானும் - சித்திரமதி யென்னும் பெயருடையவனுகும், துணைவி - அவனது மனைவியானவள், தீஞ்சொல் - தித்திப்பாகிய வசனத்தையும், முத்து - முத்துக்களின், அணி - அழகைப்பெற்ற, முறுவல் - பற்களையும், செவ்வாய் - சிவந்த வாயையுமுடையவ ளாகிய, கமலை யொப்பாள் - இலக்ஷ்மிதேவிக்குச் சமானமாகிய அழகையுடையா ளாம், கமலையாம் - கமலை என்னும் பெயருடையவளாகும், வித்தகம் - சாமர்த்திய முடைய, புதல்வன்தானும் - (இவ்விருவருக்கும் புத்திரனுனவன், விசித்திரமதி யென்பானும் - விசித்திரமதியென்னும் பெயருடையவனுகும், (இவன்), மத்தம் - மதம் பொருந்திய, மால் - பெரிதாகிய, களிற்று - யானையையுடைய, வேந்தன் - அரசனது, மகனுக்கு - புத்திரனுகிய ப்ரீதிங்கர குமாரனுக்கு, ஒருவனுனன் - ஒப் பற்ற சினேகிதனுனன், எ - று. (௩௩)

846. அருமணி யார மார்ப ரிருவரு மனங்க னன்னுர்
மருவிய புலத்துச் சிந்தை மாசுண மன்ன நீரார்
தருமநல் லுருசி யென்னுஞ் சாதுவின் பாதஞ் சேர்ந்து
திருவற மருளக் கேட்டோர் புலங்கண்மேல் வெறுப்புச் சென்முர்.

(இ - ள்) (அவ்வாறு சிநேகிதனுயிருக்கும்போது), அரும் - அரிதாகிய, மணி-முத்துமணி இரத்தினமணிகளாலாகிய, ஆரம்-மாலைகளை யணிந்த, மார்பர் - மார்பையுடையவர்களாகிய, அனங்கனன்னுர் இருவரும் - மன்மதனுக் கொப் பானவர்களாகிய இராஜகுமாரன் மந்திரிகுமாரன் ஆகிய விருவரும், சிந்தை - மன தோடு, மருவிய - சேர்ந்திராநின்ற, புலத்து - பஞ்சேந்திரிய விஷய காமபோகங் களில், மாசுண மன்ன - ஸர்ப்பத்துக்குச் சமானமாகிய, நீரார் - குணமுடையவர்க ளாய், (இருந்து பின்னர்), தரும நல்லுருசியென்னும் - தர்மருசியென்னும் பெயரையுடைய, சாதுவின் - ஜினமுனிவனுடைய, பாதம் - பாதங்களை, சேர்ந்து - அடைந்து, திருவறம் - ஸ்ரீஜின தருமத்தை, அருள - அவர் கூறியருள, கேட்டு- கேள்வியுற்று, ஓர் - ஒப்பற்ற, புலங்கள்மேல்-இந்திரிய விஷய போகங்களின்மேல், (உண்டாகிய), வெறுப்பு - வெறுப்பில், சென்முர் - சேர்ந்தார்கள், (அதாவது: வைராக்கியத்தை யடைந்தார்கள்), எ - று. (௩௪)

847. மாற்றிடைச் சுழற்றும் மட்டிற் புலங்கண்மேன் மற்றி வற்றை
யாற்றவுந் துறக்க மாற்றின் சுழற்றிய தகலு மாகிற்
காற்றியெம் மனத்து மட்டைக் கடையிலாத் தெளிவை யாக்கு
மாற்றல்சால் துறவென் றோது மருமருந் தளிக்க வென்றார்.

(இ - ள்) (அங்ஙன மடைந்த அவர்கள் அம்முனிவனை நோக்கி), மட்டில்-கள்ளைப்போல் மயக்கத்தைச் செய்யும் படியான, புலங்கள் மேல் - இந்திரிய விஷயங்களிலே, (இஷ்டம், அனிஷ்டம், என்பவைகளில் மெட்டில்லாமல் ராகத்வேஷங்களோடு கூடினால் அது), மாற்றிடை-இந்த ஸம்ஸாரத்திலே, சுழற்றும் - (கள் குடித்தவன் ஹேயோபாதேயமின்றிப் புத்தி கெட்டுச் சுழல்வது போல அவ்வாறு கூடியவனைச்) சுழல்விக்கும், இவற்றை-இந்தப் பஞ்சேந்திரிய விஷய ராகத்வேஷங்களை, ஆற்றவும்-மிகவும், (அதாவது : முழுதிலும்), துறக்க-வர்ஜனை செய்ய (அதாவது: நீக்கிவிட), மாற்றின் - ஸம்ஸாரத்தினுடைய, சுழற்றியது - சுழற்சியாகிய ஜனனமரணமானது, அகலும் ஆகில் - நீங்கி ஆத்மன் ஸ்வஸ்தபாவத்தையடையுமானால், எம்மனத்து - எங்களுடைய மனதிலுண்டாகிய, மட்டை - மதுமயக்கத்தை, (அதாவது : கள்ளைப்போல மயக்கத்தைச் செய்யும்படியான, மனோஜ்ஞ, அமனோஜ்ஞ இந்திரிய விஷய ராக த்வேஷங்களை), காற்றி - போக்கி, கடையிலா-முடிவில்லாத, தெளிவை - ஹேயோபாதேய விஜ்ஞானமாகிய வறிவை, ஆக்கும் - உண்டு பண்ணும்படியான, ஆற்றல் சால் - சக்தியில் மிகுந்த, துறவென்று - பாஹியாப்பியந்தா பரிக்கிரக நிவர்த்தி என்று, ஓதும் - சொல்கின்ற, அரும் - பெறுதற்கரிதாகிய, மருந்து - பரமௌஷதமாகிய ஜினதீக்ஷையை, அளிக்க - சிக்ஷையுடன் கொடுக்கவேண்டும், என்றார் - என்று சொன்னார்கள், எ - று. (௩௫)

848. மாதவ னருளிச் சித்தி வருகமற் றிவர்கட் கென்னப்
போதணி குஞ்சி வாங்கப் புணர்ந்துமா தவத்திற் சென்றா
ராதாம் பண்ணு நாமத் தரசிளங் குமரன் பாலின்
மாதிரம் பில்கு நல்ல வார்த்தைமா முனிவ னானன்.

(இ - ள்) (அவ்வாறு சொன்னபோது), மாதவன்-தர்மருசி முனிவரானவன், இவர்கட்கு - இவ்விருவர்கட்கும், சித்தி - ஸ்வாத்மோ பலப்தியாகிய ஸித்தியானது, வருக - வரக்கடவது, என்ன - என்று, அருளி-ஆசீர்வதித்து, போதணி-புஷ்பமாலைகளணிந்த, குஞ்சி - தலைமயிர் முதலானவைகளை, வாங்க - தபோ * தீக்ஷாவிதியின் கிரமத்தால் பரிஹரித்து ஜினதீக்ஷயினை யருள, மாதவத்தில் - பெரிதாகிய தபத்தில், புணர்ந்து - சேர்ந்து, சென்றார் - இவ்விருவரும் சென்றார்கள், (அவர்களுள்), ஆதரம் பண்ணு நாமத்து-ப்ரீதிங்கரனென்னும் பெயருடைய, அரசிளங்குமரன் - இராஜபுத்திரனாகியவன், பாலின் - பால்போல், மாதிரம் - மாதுரியத்தை, பில்கும் - கொடுக்கும், நல்ல - நன்மையாகிய, வார்த்தை - (கேட்

பவர்களுக்குப் பிரியத்தை யுண்டு பண்ணும்படியான) வசனத்தையுடைய, மா - பெரிதாகிய ரித்தியடைந்த, முனிவனுனன் - மஹா முனிவானுனன், எ - று.

* தீக்ஷாவிதி முதலிய விவாங்களை யதியாச்சாரமென்னும் கிரந்தத்தில் பார்த்துக்கொள்க. (கக)

849. முனியிளங் களிறு போல்வார் முகிழ்முலைத் தடங்கட் செவ்வாய்
வனிதைய ரோடும் வானோர் மடந்தையர் மகிழு மாடம்
வினிதையின் புறத்து விட்டார் வேந்திளங் குமா னுய
வனகமா முனிவன் புக்கா னந்நகர்ச் சரிகைக் கென்றே.

(இ - ள்) (அவ்வாருன பின்), முனி-வெறுப்பையடைந்த, இளம்-இளமையாகிய, களிறுபோல்வார் - யானைக்கன்றுகளுக்குச் சமானமாகிய இவ்விருவர்களும், முகிழ் - தாமரை மொக்குப்போன்ற, முலை - ஸ்தனங்களையும், தடம் - விசாலம் பெற்ற, கண் - கண்களையும், செவ்வாய் - சிவந்த வாயையுமுடைய, வனிதையரோடும் - ஸ்த்ரீமார்களோடு, வானோர்மடந்தையர் - தேவஸ்த்ரீகளும், மகிழும் - சந்தோஷித்துத் தங்கும், மாடம் - உப்பரிகைகளையுடைய, வினிதையின் - அயோத்தியென்னும் பட்டணத்தின், புறத்து - பாஹ்யத்தில் இராநின்ற உத்தியானத்தில், விட்டார் - தங்கள் பிரயாணத்தை நிறுத்தினர்கள் (அதாவது: அங்குவந்து தங்கினர்கள்), (அவ்வாறு தங்கியபோது), வேந்திளங் குமானுய - ராஜபுத்திரனுகிய, அனகம் - பாபரஹிதமாகிய, மாமுனிவன் - பெரிதாகிய தபத்தையுடைய ப்ரீதிங்கர முனிவன், சரிகைக்கென்று - (இல்வாழ்க்கையை யுடைய விசுத்த வம்சத்தினர் எதிர் கொண்டழைத்து ஆஹாரம் கொடுப்பார்களே யானல் ஆஹாரம் கைக்கொள்ளவேண்டுமென்னும் நியமமுடையவனுய்) சரியா மார்க்கமாக, அந்நகர் - அப்பட்டணத்தை, புக்கான் - அடைந்தான், எ - று. (கஎ)

850. காற்றெதி ரின்றி மண்ணிற் கண்ணுகத் தளவு நோக்கி
மாற்றினை யெறியும் நூல்வாள் வாய்ப்பிடி நடப்ப தேபோ
லேற்றநாண் மீனே டேகும் பிறையென வில்லந் தோறும்
மாற்றின்வெந் துயரந் தீர மருந்துண்பான் போலப் புக்கான்.

(இ - ள்) (அவ்வாறடைந்தவன்), காற்றெதிரின்றி - (சரியாமார்க்கமாகப் போகிறபோது) எதிர்க்காற்று முதலானவையில்லாமல் பார்த்தும், மண்ணில் - (அதுவல்லாமலும்) பூமியில், கண் - கண்களினல், நுகத்தளவு - ஒரு நுகத்தடிப் பிரமாணம் (அதாவது: ஒரு வில்தூரம்), நோக்கி - (ஜீவபாதை வாாமல் பிரயத்தின பானகப்) பார்த்து, மாற்றினை - ஸம்ஸாரத்தை, எறியும் - சேதிக்கும்படியான, நூல் - சாஸ்திரோக்த கிரமத்தால், வாள்வாய் - வாளாயுதத்தினுடைய வாயின்மேல், பிடி - ஒரு பெட்டை யானையானது, நடப்பதேபோல் - (மிக ஜாக்

கிரதையாக அல்லது அருமையாக) நடப்பதுபோலவும், ஏற்ற - இசைந்திராநின்ற, நாண்மீனோடு-அன்றன்றைய நட்சத்திரத்தோடு, ஏகும் - கிரமஹானியின்றிச் செல்கின்ற, பிறையென - சந்திரன்போலவும், இல்லந்தோறும் - (வீடு வரிசையாக), ஒவ்வொரு வீட்டிலும், மாற்றின் - ஸம்ஸாரத்தின், வெம் - வெப்பம் பொருந்திய, துயரம் - துக்கம், தீர - நீங்க, மருந்து - ஔஷதத்தை, உண்பான்போல் - உண்பவனை யொப்ப, புக்கான் - அப்பட்டணத்தின் வீதியில் நடந்தான், எ - று. (நூஅ)

851. ஆயிடைக் கணிகை புத்தி சேனைதன் னகத்தைச் சார்ந்த
மாயமி றவத்தி னானை வந்தெதிர் கொள்ள மற்ற
வேயெனத் திரண்ட தோளாள் விழுமிய தானஞ் செய்தற்
கேயுநற் குலத்துட் டோன்றற் கேதுவென் னிறைவ வென்றாள்.

(இ - ள்) ஆயிடை - அப்பொழுது, கணிகை - தாசியாகிய, புத்திசேனைதன் - புத்தி ஷேனையினுடைய, அகத்தை - வீட்டை (அதாவது: வீட்டிற் கெதிரே தெருவில்), சார்ந்த - அடைந்த, மாயமில் - மாய்கையில்லாத, தவத்தினானை - தபஸையுடைய அம்முனிவரனை, மற்று - பின்னை, அ - அந்த, வேயெனத்திரண்ட - பச்சை மூங்கில்போல் திரட்சியாகிய, தோளாள் - கைகளையுடைய புத்தி ஷேனையானவள், எதிர்கொள்ள வந்து - எதிர் கொள்ளுதற்கு வந்து, (அவனை நோக்கி), இறைவ - சுவாமிகளே !, விழுமிய - பெரிதாகிய (அதாவது : சத் பாத்திரங்களில் செய்யப்படுவதாகிய), தானஞ்செய்தற்கு - ஆஹாராதி தானங்களைச் செய்வதற்கு, ஏயும் - இசையும்படியான, நற்குலத்துள் - உத்தமஜாதி வம்சங்களில், தோன்றற்கு - பிறப்பதற்கு, ஏது - காரணமானது, என் - என்ன, என்றாள் - என்று கேட்டாள், எ - று. (நூக)

852. தன்னைநிந் தித்தல் தக்கோர்ப் பழிச்சுதல் தயாவோ டொன்றி
யின்னுயிர்க் கருளை யீதல் புலைசுதேன் கள்ளின் மீண்டு
மன்னிய குணத்தி னிற்றல் மாயமின் மனத்த ராதல்
பன்னருங் குலத்தைப் பண்ணும் பான்மைக்கு நிமித்த மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு கேட்டவளை அம்முனிவன் நோக்கி), தன்னை நிந்தித்தல் - (உண்மையறியாது பிரமத்தமாகி இந்திரியங்களின் வழியே பந்தகாரணமாய்ச் செல்கின்றனையே என்று அறிந்து) ஆத்ம நிந்தனை பண்ணி (உதய பாவத்தை வெறுத்து உபசம பரிணாமத்திற்) கூடுதலும், தக்கோர் - ஞானிகளான பரமாத்மர்களை, பழிச்சுதல் - (தத்குணலப்தியார்த்தம்) ஸ்துதிப்பதும், தயாவோடு - ஜீவதயவோடு, ஒன்றி - பொருந்தி, இன் - இனிமையாகிய, உயிர்க்கு - ஸம்ஸார ஜீவன்களுக்கு, அருளை - காருண்யத்தை, ஈதல் - கொடுப்பதான அபயபிரதானமும் (அதாவது : சத்தியானுசாரத்தினால் செய்யும் பிராணி ஸம்யமமும்), புலைசு -

மாமிசமுண்ணலினின்றும், தேன் - மதுவுண்ணலினின்றும், கள்ளின்-கள்ளுண்ணலினின்றும், மீண்டு - திரும்பி (அதாவது: அவற்றைப் பொசிப்பதில்லையென்று நிவர்த்தி விரதங்கொண்டு), மன்னியகுணத்து - (தாதாத்மிய ஸ்வரூபமான சுத்தோபயோகத்தைப் பெறும்படி) பொருந்திய குணத்தில், நிற்றல் - (ஸம்மியக்மதிஞான பூர்வகமாக ஸ்ரீ தத்ஜ்ஞானுப்பியாசம் பண்ணி) நிற்றலும், மாயமில்- மாயாச்சாரமில்லாத, மனத்தர் ஆதல் - மனதுடையவர்களாதலும், (ஆகிய இச் சுபோபயோகங்கள்), பன்னரும் - சொல்லுதற்கரிய, குலத்தை - மேலான குலத்தை, பண்ணும் - செய்யும்படியான, பான்மைக்கு - பக்குவத்திற்கு, நிமித்தம் - காரணங்களாகும், என்ருன் - என்று சொன்னுன், எ - று. (௬௦)

853. அருந்தவ னுரைத்த வின்சொ லறவமிர் தார மாந்தித்
திருந்திய குணத்தி னுளும் புலைசுதேன் கள்ளி னீங்கிப்
பொருந்துவ சீல மற்று மாற்றுவ பணிந்து கொண்டாள்
திரிந்துபோய் முனிவன் கானின் விசித்திர மதியைச் சேர்ந்தான்.

(இ - ள) (இவ்வாறு), அருந்தவன் - அரிதாகிய தவத்தையுடைய ப்ரீதிங்கரமுனிவனுல், உரைத்த - சொல்லப்பட்ட, இன்சொல் - இனிமையான வசனமாகிற, அறவமிர்து - தாமாமிருதத்தை, ஆர - நிறைவாக, மாந்தி - பொசித்து (அதாவது: கேட்டு), திருந்திய - திருத்தமாகிய, குணத்தினுளும் - குணத்தையுடைய அந்த புத்திஷேனையும், புலைசு - மாமிசத்தினின்றும், தேன் - மதுவினின்றும், கள்ளின் - கள்ளினின்றும், நீங்கி - விலகி (அதாவது: அவற்றை விட்டு நிவர்த்தி விரதம் ஏற்றுக்கொண்டு), பொருந்துவ - தனக்கிசையும்படியான, சீலம் - சீல விரதங்களின் அமிசங்களையும், மற்றும் - பின்னையும், ஆற்றுவ - செய்யத்தக்கவைகளையும், பணிந்து - முனிவரனை வணங்கி, கொண்டாள்-கைக்கொண்டாள், (அதன்மேல்), முனிவன் - பிரீதிங்கர முனிவன், திரிந்து - ஆஹாரங்கொள்ளாமல் விக்கினமாகி, போய் - சென்று, கானின் - உத்யானத்திலுள்ள, விசித்திர மதியை - விசித்திரமதி முனிவனை, சேர்ந்தான் - அடைந்தான், எ - று. (௬௧)

854. விசித்திர மதியும் வீர விளம்பித்த தென்கொ லென்னப்
பவித்திர முனியும் பைம்பொற் கணிகைபாற் பட்ட வெல்லாம்
விரித்துட னுரைப்பக் கேட்டு வியந்துவெய் துயிர்த்து வேட்கை
யுருத்தெழ விருக்கை நாம முருவமுந் தெரியக் கேட்டான்.

(இ - ள்) (அவ்வாறு சேர்ந்தவுடன்), விசித்திரமதியும் - விசித்திரமதிமுனியும், !(இப்பிரீதிங்கர முனிவரனை நோக்கி), வீர - வீர்யாச்சாரத்தைப் பலமாக அனுஷ்டிக்கின்ற வீரபுருஷனே!, விளம்பித்தது - நீ திரும்பிவர இவ்வளவு காலதாமதமானதற்கு, (அப்பட்டணத்தில் நேர்ந்த காரணம்), என் கொல்-யாது?,

என்ன - என்று கேட்க, பவித்திரமுனியும் - பரிசுத்தனன அப்பிரீதிங்கர முனிவனும், பைம்பொன் - பசுமை பொருந்திய பொன்னுபரணங்களையணிந்த, கணிகை பால்-தாசியினிடத்தில், பட்ட வெல்லாம்-உண்டானவைகளையெல்லாம், (அதாவது: அவள் தர்மங்கேட்டது விரதங்கொண்டது முதலியவைகளை யெல்லாம்), விரித்துரைப்ப - விளக்கிச் சொல்ல, கேட்டு - அதைக்கேட்டு, உடன் - அப்பொழுதே, வியந்து-விசித்திர மதி (முனிவன்) ஆச்சரியமுற்று, வெய்துயிர்த்து - பெருமூச்சு விட்டு, வேட்கை - காமவிருப்பமானது, உருத்தெழ - தனக்குள் உருவமுற்று அதிகமாக உண்டாக, இருக்கை - அப்பட்டணத்தில் அவளிருக்கும் இடத்தையும், நாமம் - பெயரையும், உருவமும்-ரூபத்தையும், தெரிய - விளங்கும்படியாக, கேட்டான் - அவனிடம் வினவினன், எ - று. (சஉ)

855. வினையின தெழுச்சி தன்னல் வேதனை வசத்த னுகி
முனியவன் றனிய னுகிப் பாரணைக் கென்று போனன்
றனதிடங் குறுகக் கண்ட தையலா ளுவந்து சால
விநயத்தி னிறைஞ்சிக் கேட்டாள் விரதத்தின் பலனை யன்றே.

(இ - ள்) வினையினது - கருமத்தினது, எழுச்சி தன்னல் - உதயத்தினலே, (மேற் கூறியபடி), வேதனை - காம வேதனையின், வசத்தனுகி-வசமானவனுகி, முனியவன்-அவ்விசித்ரமதி முனிவனனவன், தனியனுகி-தனியானவனுய், பாரணைக்கென்று - ஆஹாரங்கொள்ளப் போக வேண்டுமென்று, போனன் - (மறு நாள் சரியா மார்க்கமாக மாயாச்சாரமாய்ப்) போனன், (அவ்வாறு சென்றவன்), தனதிடம்-தன்னுடைய வீட்டை, குறுக - அடைய, கண்ட - பார்த்த, தையலாள்-அந்தப் புத்தி ஷேனையென்னும் கணிகையானவள், உவந்து - ஸந்தோஷித்து, சால - மிகவும், விநயத்தின் - மரியாதையாக, இறைஞ்சி - வணக்கஞ்செய்து, விரதத்தின் - முன்னுள் தான் கொண்ட விரதத்தினது, பலனை - பிரதிபலனுகும் தன்மையை, கேட்டாள் - (அவனிடம்) வினவுதலுற்முள், எ - று. (சரு)

856. மோகரா கத்த வாய கதைகளை முனிவன் சொல்லப்
போகரா கத்த வார்த்தைப் புதியனே முனிவ னென்று
நாகரா கத்திற் கெட்டார் கதைகளை நவிற்றப் பின்னும்
வேகரா கத்த னுக மெல்லியல் வெறுப்பச் சொன்னுள்.

(இ - ள்) (அவள் அவ்வாறு வினவியதற்கு), முனிவன் - விசித்திரமதி முனிவன், மோகராகத்தவாய - மோகவாஞ்சையாகிய, கதைகளை - சரிதங்களை, சொல்ல - வசனிக்க, (புத்திஷேனை), போகராகத்த - காமபோக வாஞ்சையாகிய, வார்த்தை - வசனத்தைப் பேசுகின்ற, முனிவன் - இம்முனிவன், புதியனே - நேற்று வந்தவனன்றிப் புதியவனே?, என்று - என்று நினைத்து, (அவனை உற்று

நோக்கிப் புதியவனென்றறிந்து), நாகராகத்தில் - நாகர்களுக்குரிய பெரிதாகிய மோக வாஞ்சையினுல், கெட்டார் - கெடுதியுற்றவர்களின், கதைகளை - சரிதங்களை, நவிற்ற - சொல்ல, பின்னும் - அதன்மேலும், (அவன் உபசமமடையாமல்), வேக ராகத்தனுக - தீவிரமாகிய காமவாஞ்சையை அவள் பேரில் உடையவனுக, மெல்லியள் - மிருதுவான சரீரத்தையுடைய அக்கணிகையானவள், வெறுப்ப - வைராக்கியமடையும்படியாக, சொன்னுள் - அடியில் வருமாறு சொல்லினுள், எ - று.

857. எலும்புதோ லீருள் வெண்ணஞ் சூன்குடர் மலங்கண் மூளை
கலந்தநெய்த் தோர் நரம்பு வழுப்பிவை வேறு கண்டால்
விலங்கிமேற் சேர லின்றி வெறுத்துமிழ்ந் துவர்த்துப் போவார்
கலந்திவை கிடந்த குப்பை கண்டுகா முறுவ தென்னே.

(இ - ள்) (அவள், சரீரத்தில்), எலும்பு - அஸ்தியும், தோல் - சருமமும், ஈருள் - ஈரலும், வெண் - வெளுப்பாகிய, நஞ்சு - நஞ்சுக் கொடிகளும், ஊன் - மாம்ஸமும், குடர் - குடலும், மலங்கள் - (நவத்துவாரங்களாலும் சரீரத்தாலும் விளையும்) அசுசிசமூகமும், மூளை - மூளையும், கலந்த - சரீரப்பிரதேசம் முழுதிலும் சேர்ந்திராநின்ற, நெய்த்தோர் - இரத்தமும், நரம்பு - நரம்புகளும், வழுப்பு - கொழுப்பும், (ஆகிய), இவை - இவைகளை, வேறு கண்டால் - வேறு வேருகப் பிரித்துப் பார்த்தால், (அறிவுடையார்), மேல் - இவைகளின் மேலே, சேரலின்றி - சேராமல், விலங்கி - (வெகு தூரத்தில்) விலகி, வெறுத்து - விராகமடைந்து, உமிழ்ந்து - காறியுமிழ்ந்து, உவர்த்து - அருவருத்து, போவார் - போவார்கள், இவை - இவைகளெல்லாம், கலந்து - கூடி, கிடந்த - கிடந்ததாகிய (சரீரமென்னும்), குப்பை - கும்பலை, கண்டு - பார்த்து, காமுறுவது - ஆசைப்படுவது, என்னே - என்ன ஆச்சரியம்!, எ - று. (சரு)

858. உணர்வொடு வார்த்தை பார்த்த லுவத்தலு முனிவுங் காமத்
துணையிவை தொடர்ந்து நின்றால் தூயவே யாகு மன்றிப்
பிணமிது பிணத்தைச் சேர்ந்தால் பிழைத்ததென் பெரிய வின்ப
மணையுமே லென்னச் சாலச் சுளிந்தவள் வெறுத்துப் போனுள்.

(இ - ள்) (மேலும்), உணர்வொடு - (அறிவினுல் செய்கின்ற மனே எண்ணத்தில் ஸ்த்ரீ புமான்கள் உண்டு பண்ணும் காம) நினைப்பினேடு, வார்த்தை - ஒருவரோடொருவர் சம்பாஷிக்கும் வார்த்தையும், பார்த்தல் - ஒத்து நோக்குதலும், உவத்தலும் - சந்தோஷித்தலும், முனிவும் - புலவியென்னும் காமக்கோபமாகிய ஊடலும், (ஆகிய இவ்வைந்தும்), காமத்துணை - காமசௌக்கியம் பெறச் சகாயமாகும், இவை - இவைகளை, தொடர்ந்து நின்றால் - இருவரும் சேர்ந்து நின்றால், (இவைகள் மனமொத்த ஸ்த்ரீ புருஷர்கட்கு), தூயவேயாகும் - களங்க

மற்ற காம இன்பஹேதுக்களாகும், அன்றி - அப்படியல்லாமல், (ஸ்திரீ புருஷர் சேரின்), இது - இக்காம அனுபவமானது, பிணம் - பிரேதத்தோடொக்கும், (ஆதலின், விருப்பமற்ற என் உறவை நீ விரும்புவது வெறுக்கத்தக்க செய்கையாகும்; இதை நீ விட்டுவிடுவாய் என்று சொன்னாள்; அதற்கவன், பெண்ணே! பிணத்தின் சேர்க்கையிலும் இன்பமேயிருக்கின்றது; ஆதலின்) ,பிணத்தைச் சேர்ந்தால் - அப்படியாகிய பிரேதத்தைக் கூடினால், பிழைத்தது - தவறான காரியமானது, என் - என்ன, அணையுமேல் - ஒருவன் அப்பிணத்தைக் கூடுவானானால், பெரிய இன்பம் - அதுவே பெரிதான சுகம், என்ன - என்று சொல்ல, அவள் - அக்கணிகையானவள், சால - மிகவும், சுளிந்து - முகங்கடுத்து, வெறுத்து - இம்முனியின்மேல் வெறுப்பையடைந்து, போனாள் - பேசாமல் விலகிப் போயினாள், எ - று. (சசு)

859. மாலைசாந் தெண்ணெய் சுண்ணம் மஞ்சள்வான் கலிங்கம் வேறாச்
சாலநா ளிருக்கி னுந்தங் குணஞ்செவ்வி யழிந்தி டாவா
மூனுலா முடம்பைச் சேர்ந்தா லொருகணத் தழியும் வண்ணம்
வானெலாம் வணக்குஞ் சீல மாய்தலெண் ணாது சொன்னான்.

(இ - ள்) மாலை - புஷ்பமாலையும், சாந்து - சந்தனாதிகளும், எண்ணெய் - வாசனை யெண்ணெயும், சுண்ணம் - கதம்பத்தூள்களும், மஞ்சள் - மஞ்சளும், வான் - அழகிய, கலிங்கம் - பட்டு - வஸ்திர முதலானவைகளும், வேறா - தனியாக, சாலநாள் - வெகுகாலம், இருக்கினும் - இருந்தாலும், தம் - அவைகளுடைய, செவ்விகுணம் - அழகும் ஸ்வபாவமாகிய குணமும், அழிந்திடாவாம் - கெடாதவையாகும், ஊனுலாம் - மாம்ஸாதிகள் வியாபித்த, உடம்பை - சரீரத்தை, சேர்ந்தால் - அடைந்தால், ஒரு கணத்து - அடைந்த ஒரு ஸமயகாலத்துள், அழியும் - குணம் கெட்டு விபாவமடைந்து போம், வண்ணம் - இந்த விதத்தையும், (மோகத்தால்), வானெலாம் - தேவர்களெல்லாம், வணங்கும் - வணங்கும்படியான, சீலம் - சீலாச்சாரமானது, மாய்தல் - நாசமாகிக் குணம் கெட்டு விபாவமடைவதையும், எண்ணாது - மனதில் ஆலோசிக்காமல், (இந்த விசித்திரமதி முனிவன்), சொன்னான் - (கணிகையினிடத்தில் காமானுபவமாய்ச் சேருவோம், நீ இசைவாயாக என்று தன்னிலைமைக்குத் தகாத வார்த்தையைச்) சொல்லினான், எ - று. (சஎ)

860. மோகத்தால் முடைய டம்பின் நாற்றத்தை முனித லின்றிப்
போகத்தாற் கழுமி நிற்கும் புல்லறி வாள ராகுஞ்
சேகற்கா முடைய டம்பைச் சேர்தன்மற் றொன்று மென்றிட்
டாகத்தா னினைக்க மாட்டா தருந்தவத திழிந்து நின்றான்.

(இ - ள்) (மேலும்) மோகத்தால் - மோஹனீய பரிணாமோதயத்தால், முடை - துர்க்கந்தமுடைய, உடம்பின் - சரீரத்தினது, நாற்றத்தை - அத்துர்க்

கந்தத்தை, முனிதலின்றி - (ஆத்ம ஞானத்தால் பேத பாவனை பாவித்து) வெறுப்படையாமல், போகத்தால் - அச்சரீரத்தின் காமபோகத்தில், கழுமிநிற்கும்- பொருந்தி நிற்கின்றவர்கள், புல்லறிவாளர் ஆகும் - அற்ப புத்தியையுடைய அஞ் ஞானிகளாவார்கள், *சேகற்கு - மாமிச பட்சண பட்சிகளுக்கு, ஊம் - இரை யாகும்படியான, முடையுடம்பை-துர்நாற்ற சரீரத்தை, சேர்தல்-காமத்தினுல் சேர் தலினுல், ஒன்றுமென்று இட்டு-சுகம் பொருந்துமென்று கருதி, ஆகத்தான்-(அத னல்) ஆத்மனுக்கு பந்தமாகும்படியான அசுபகர்மத்தினது தன்மையை நெஞ்சினுல், நினைக்கமாட்டாது-தியானித்தறிய முடியாமல், அரும்-அரிதாகிய, தவத்து - தபஸி னின்றும், இழிந்து-நழுவி, நின்முன்-கெட்ட நிலைமையை அடைந்தான், எ-று.

*சேவலுக்கு என்னும் பதம், செய்யுளில், சேகற்கு, என வந்தது.

நிற்கும், ஆகும்-இழிவால் அஃறிணை முடிபுபெற்றன ; திணை வழுவமைதி. நிற்கும். வினையாலணையும் பெயர். (௬௮)

861. புழுக்குலம் பொதிந்த யாக்கை புனிதனேன் பொருந்தி னேன்முன்
னழுக்குடம் பிதன்கட் சென்ற வார்வத்தா லென்று தன்னை
யிழித்திடா தழுக்குச் சோரும் புழுக்குலத் திச்சை தன்னுல்
வழுக்கினுன் மாற்றை யாற்றக் கெடுக்குமா தவத்தின் மாதோ.

(இ - ள்) புழுக்குலம் - கிருமிக் கூட்டங்கள் பொதிந்த - நிறைந்த, யாக்கை - சரீரத்தை, புனிதனேன் - பவித்திராத்மாவாகிய யான், முன் - முன்னே, அழுக்கு - மலங்களோடு கூடிய, உடம்பிதன் கண் - இச்சரீரத்தினிடத் திலே, சென்ற - சென்றதாகிய, ஆர்வத்தால் - ராக பரிணதியினுலே, பொருந்தி னேன் - சேர்ந்து வருத்தமடைந்தேன், என்று - என்று, தன்னை - தான் என்னும் ஆத்மனை, இழித்திடாது - (அசுத்தோப யோகத்திற் சென்றனையே யென்று) நிந்தனை பண்ணுமல், அழுக்கு சோரும் - மலங்கள் சொரிகின்ற, புழுக்குலத்து - புழுக்கூட்டமாகிய சரீரத்தின்மேலாகிய, இச்சைதன்னுல்-மோஹ வாஞ்சையினுல், மாற்றை - இச்சம்சார பிறப்பை, ஆற்ற - மிகவும், கெடுக்கும் - கெடுத்து ஸமய ஸாரம் தரும்படியான, மா - பெருமை பொருந்திய, தவத்தின் - தபஸினின்றும், வழுக்கினுன் - நழுவி விட்டான், எ - று. (௬௯)

862. பொறிப்புலத் தெழுந்த போகத் தாசையைப் போக விட்டு
வெறுத்தெழு மனத்த ராகின் வீட்டின்பம் விளையு மன்றி
மறுத்தெதி ராகச் செல்லின் மாற்றிடைச் சுழல்வ ரென்னுந்
திறத்தினை நினைத்த லில்லான் சீலத்தி னிழிந்து சென்முன்.

(இ - ள்) (இன்னும் மனிதர்), பொறி - பஞ்சேந்திரியங்களின், புலத்து - விஷயங்களிலே, எழுந்த - உண்டாகிய, போகத்து - போகோபபோகங்களினு

லாகிய, ஆசையை - ராகத்தை, போகவிட்டு - பேத பாவனை பண்ணி நீக்கி, வெறுத்து - அவ்விந்திரிய விஷய போகங்களில் விராகமுற்று, எழும் - சுத்தாத்தும ஸ்வரூபத்தில் உண்டாகிய, மனத்தராகில் - ஏகாக்கிர சித்தத்தராகினால் (அவர்கட்கு), வீட்டின்பம் - மோட்ச சௌக்கியம், விளையும் - உண்டாகும், அன்றி - அப்படியில்லாமல், (அவர்கள்), மறுத்து - அதனைத் தடைசெய்து, எதிராகச் செல்லின் - அதற்கு விரோதமாக இந்திரிய விஷய போகங்களில் ராகமுற்றுச் சென்றால், மாற்றிடை - சம்ஸாரத்தில், சுழல்வர் - சுழலுவார்கள், என்னும் - என்கின்ற, திறத்தினை - சுருதஞான விதத்தை, நினைத்தலில்லான் - எண்ணாதவனாகி, சீலத்தின் - சீலாச்சாரத்தினின்றும், இழிந்து - நழுவி, சென்றான் - தாழ்ந்த ஸ்திதியிற் புகுந்தான், எ - று. (௬௦)

863. உண்டுநாம் விட்ட வல்லா வுருவில்லை யுலகத் தின்கண்
வண்டுலாங் கூந்த லாகி மாசெலாந் திரண்ட தன்றிக்
கண்டதொன் றில்லை காமங் கண்ணினைப் புதைத்த காலத்
துண்டுநாம் விட்ட வாசை யுவர்த்துமென் றுணர்வி லாதான்.

(இ - ள்) நாம் - சேதனஸ்வரூபமுள்ள ஆத்மனாகிய நாம், உண்டு - அநாதியாகவே அசுத்தசேதனையால் அனுபவித்து, விட்டவல்லா - நீக்கப்பட்டதல்லாத, உருவு - புத்கல பதார்த்தமானது, உலகத்தின் கண் - லோகத்திலே, இல்லை - கிடையாது (அதாவது : உலகத்துள்ள சகல புதகலங்களையும் ஆத்மன் அசுத்த சேதனையினால், பாவகர்ம, திரவியகர்ம, நோகர்மத்தால் பந்தித்து நின்றதேயாகும், ஆதலின் இதைக்கொண்டு ஆராயுமிடத்து), உலகத்தின்கண் - இவ்வுலகில், (ஸ்த்ரீரூபமானது), வண்டு - வண்டுகளானவை, உலாம் - உலாவும்படியான, கூந்தலாகி - அளகத்தை யுடையதாகி, மாசெலாம் - துர்கந்தமுள்ள அணுத்திரள்களெல்லாம், திரண்டதன்றி - ஸ்கந்தரூபமாகப் பரிணமித்ததன்றி, (இதில்), கண்டதொன்றில்லை-பார்த்தது வேறொன்று மில்லை, (ஆதலின்), காமம்-காமராகமானது, கண்ணினை-ஆத்மனது தர்சனத்தை, புதைத்தகாலத்து-மறைத்த அக்காலத்து, உண்டு-அனேகவாரம் அனுபவித்து, நாம் - நம்மால், விட்ட - விடப்பட்ட, ஆசை - இக் காம வாஞ்சையை, உவர்த்துமென்று - வெறுப்போமென்று, உணர்விலாதான் - இந்த விசித்ரமதி முனிவன் ஆலோசித்தல் இல்லாதவனாகினான், எ - று. (௬௧)

864. விலையிலா வாச மாலை தூமத்தால் வேய்ந்த கூந்தற்
றலையினின் றிழிந்த காலைத் தான்றுறந் திட்ட தேபோல்
மலையன தவத்து வேடங் கண்டுமுன் வணங்கி மாண்ட
நிலையினின் றிழியப் பின்னை நேரிழை யிகழ்ந்திட் டாளே.

(இ - ள்) விலையிலா - விலை மதிப்பில்லாத (அதாவது : அதிக விலையுள்ள), வாசம் - வாசனைகளையுடைய, மாலை - புஷ்பமாலையானது, தூமத்தால் - அகிற்றூப

முதலியவற்ருல், (வாசனேயேற்றி அலங்கரித்து), வேய்ந்த - முடிக்கப்பெற்ற, கூந்தல் - அளகத்தையுடைய, தலேயினின்று - தலேயினின்றும், இழிந்த காலே - நீங்கின காலத்தில், தான் - அதனே முன்னே உயர்வாக நினைத்துச் சூட்டியவன் தான், துறந்திட்டதேபோல் - மறுபடி கொள்ளாமல் அதனே நீக்கிவிடுவதுபோல, (விசித்ரமதியின்) மலேயன - பர்வதம்போல் பெரிதாகிய குணமுடைய, தவத்து வேடம் - தவ உருவத்தை, கண்டு - பார்த்து, முன் - முன்னே, வணங்கி - நமஸ்கரித்து, மாண்ட - பெரிதாகிய, நிலேயினின்று - தபோ நிலேயினின்றும், இழிய - (அவன்) நழுவ, பின்னே-பிறகு, நேரிழை - நேர்மையான ஆபரணங்களே யணிந்த புத்தி ஷேனேயானவள், இகழ்ந்திட்டாள் - இம்முனியை இகழ்ச்சி பண்ணினள், எ - று. (௬௨)

865. புகழ்வரம் பாய புத்தி சேனேயாந் தோகை தன்னே
யிகழவங் கெழுந்த கோபத் திசைந்தசோ கத்தோ டேகித்
தகைநெடுங் குழலி ளேச் சாரலா முபாயந் தேடி
யகநக ரெங்கும் புக்கா ளுவதொன் றிலாமைக் காணு.

(இ - ள்) (அதன்மேல் அவ்விசித்ரமதி முனிவன்), புகழ் - கீர்த்திக்கு, வரம்பாய - அணேயாகிய (அதாவது: புகழ்கெடாமல் அணேயாய் நின்று அதனே வளர்க்கக் கூடிய), புத்திசேனேயாம் - புத்திஷேனேயாகிய, தோகை - ஆண்மயில் போன்ற சாயலேயுடைய கணிகையானவள், தன்னே - தன்னே, இகழ - இகழ்ச்சி செய்ய, அங்கெழுந்த - அதனுல் அம்முனிக்கப்போது உதித்த, கோபத்து - குரோத பரிணுமத்தில், இசைந்த - பொருந்திய, சோகத்தோடு - மன வருத்தத்தோடு, ஏகி - போகி, தகை - அழகையுடைத்தாகிய, நெடும் - நீண்ட, குழலி ளே - அளகத்தையுடைய அம்மாதை, சாரல் - சேருதற்கு, ஆம் - ஆகின்ற, உபாயம் - தந்திரங்களே, தேடி - ஆராய்ந்து, அகநகர் - உள் நகரிலே, எங்கும் - எவ்விடங்களிலேயும், புக்கான் - புகுந்து பார்த்தவனுகி, (பலரை விசாரித்தும்), ஆவது ஒன்று - ஆகும்படியான தன்மை யாதொன்றும், இலாமை - இல்லாமையை, காணு - கண்டு, எ - று.

இதுவும், அடுத்த செய்யுளும் குளகம். (௬௩)

866. கடையனப் புரத்து வேந்தன் கந்தமித் திரனென் பானு
முடல்சுவைத் துண்டு செல்வா னுவப்பதோர் படியி னுனே
மடையனுய்ச் சமைத்துக் காட்டி மற்றந்த மன்ன னுலத்
துடியிடை புத்தி சேனே தன்னகந் துன்னினுனே.

(இ - ள்) கடையன் - தர்மாதர்மம் இத்தன்மை யென்றறியாது தாழ்ந்த நிலேயனும், (அதாவது: ஹேயோபாதேய வியவஹார நிச்சயமில்லாதவனும்), உடல் சுவைத்துண்டு செல்வான் - பிற ஜீவன்களின் உடல்களே (அதாவது:

மாமிசம் முதலியவைகளை) மென்றுதின்றொழுகுபவனும், அப்புரத்து வேந்தன் - அந்நகரத்தரசனும், ஆம் - ஆகிய, கந்தமித்திரன் என்பான் - கந்தமித்ரனென்னும் பெயருடையவன், உவப்பதோர் படியின் - சந்தோஷத்தை யடையும் விதத்தில், மடையனாய் - அவனுக்குச் சமையல்காரனாக அமர்ந்து, ஊனை - மாமிசங்களை, சமைத்துக் காட்டி - பாகம் செய்து அவன் அதேமாதிரி தின்னும்படியாகக் காண்பித்து, மற்று - பிறகு, அந்த மன்னனால் - அவ்வரசன் சகாயத்தினால், (அவளைத் தன்னோடு கூடும்படி அரசனால் அவளுக்கு ஆக்ஞையிடச் செய்து), துடியிடை - உடுக்கைபோலு மிடையையுடைய, அப்புத்திசேனை தன்னகம் - அந்த புத்திஷேணையினிடத்தில், துன்னினான் - சேர்ந்தான், எ - று. (கூச)

867. மௌவலங் குழலிக் காக மயங்கிமா தவத்தை விட்டூன்
செவ்வியைக் காட்டித் தீற்றச் செறிந்திட்ட பாவந் தன்னால்
அவ்வுடல் விட்டு வந்தவ் வளியனிவ் வானை யானா
னிவ்வனத் தியான்றி லோக பச்சத்தி யியம்பக் கேளா.

(இ - ள்) (இவ்வாறு), மௌவல் - முல்லைப் பூமாலையணிந்த, அம் - அழகிய, குழலிக்காக - அளகபாரத்தையுடைய அந்தக் கணிகை மாதிற்காக, மயங்கி - மோஹமடைந்து, மா - பெருமை பொருந்திய, தவத்தை - தபோநிலைமையை, விட்டு - நீங்கி, ஊன் - மாமிசத்தின், செவ்வியை - பாகநலத்தை, காட்டி - அரசனுக்குக் காட்டிச் சந்தோஷத்தை யுண்டாக்கி, தீற்ற - ஊட்டி (அவ்வேசியுடன் கூட அச்செய்கைகட்காக), செறிந்திட்ட - தன்னைச் சேர்ந்த, பாவந்தன்னால் - பாவத்தால், அவ்வுடல்விட்டு - அந்த மனித சரீரத்தைவிட்டு ஆயுரவஸானத்தில், அவ்வளியன் - அந்த ஏழை அஞ்ஞானியாகிய விசித்ரமதி முனிவன், இவ்வியானை யானான் - மேக விஜயமென்னும் பெயருடைய இந்த யானையாக உற்பவித்தான், (இப்போது), இவ்வனத்து - இந்த உத்தியானத்திலே, யான் - நான், திலோகப் பச்சத்தி - திரிலோகப் பிரஜ்ஞப்தி என்னும் பரமாகமத்தை, இயம்ப - சொல்ல, கேளா - இவ்வியானையானது கேட்டு, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கூரு)

868. அப்பிறப் பறிந்து நொந்திட் டவலமுற் றழுந்தி யின்று
மெய்ப்பட வுணர்வு தோன்ற விரதசீ லத்த தாய
திப்படித் திதன்றன் செய்கை யேந்திள முலையி னார்தந்
துப்புறழ் தொண்டைச் செவ்வாய்ப் பயனிது சொல்லி னென்றான்.

(இ - ள்) அப்பிறப்பு - பூர்வத்தில்தான் விசித்திரமதியென்னும் முனிவனாகி யிருந்த அந்த ஜென்மத்தை, அறிந்து - (இந்த ஆகமஸாரங் கேட்ட தெளிவினால் ஆத்மசக்தி கொஞ்சம் அதிகமாகவும், கர்மசக்தி உபசமமாகவும், அதனாலுண்டாகிய பவஸ்மிருதியால்) தெரிந்து, நொந்திட்டு - மனம் நொந்து தன்னை

நிந்தித்து, அவலமுற்று - மிக வருத்தமுற்று, அழுந்தி - துக்கத்திலழுந்தி, இன்று - இப்பொழுது, மெய்ப்பட - உண்மையாக, உணர்வு - ஸம்யக்ஞான மானது, தோன்ற - உண்டாக, விரதசீலத்ததாயது - விரதங்களையும் சீலாச்சாரங் களையும் தன் சக்தியானு ஸாரத்தினல் அடைந்ததாகியது, இதன் தன் செய்கை - இந்த யானையினுடைய செயலானது, இப்படித்து - இந்தப் பிரகாரமானது, ஏந்து - மார்பிற்றங்கிய, இளமுலையினர் தம் - இளமையாகிய தனங்களையுடைய ஸ்திரீமார்களின், துப்பு - பவளத்தையும், தொண்டை - கொவ்வைக்கனியையும், உறழ் - நிகர்த்த, செவ்வாய் - சிவந்த வாயையும், (கொஞ்சுதலாலுண்டாகும் இன்பத்தின்), பயன் - பலனை, சொல்லின் - சொல்லுமிடத்தில், இது - இத்தன்மைத் தாகும், என்றான் - என்று சொன்னான், எ - று.

வஜ்ரதந்த முனிவன் இரத்னயுதனுக்குச் சொன்னனென்றறிக. (௩௪)

869. விரிதிரை வேலி ஞால காவலர் விழுமவெந்நோ
யெரிபுரை நரகத் தன்றி வீழ்ந்திடார் துன்ப வெள்ளத்
திரைபொரு கடலை நீங்கித் துறந்துடன் செறிந்து நோற்பின்
வருமெதிர் கொள்ள வீடும் வானவ ருலகு மன்ன.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும்), விழுமம் - இடும்பை பொருந்திய, வெந்நோய் - ஆசையாகிய (அதாவது: விஷயப்பற்றாகிய) நோயுள்ள, விரி - விசாலித்த, திரை - அலைகளையுடைய கடலை, வேலி - வேலியாகவுடைய, ஞாலகாவலர் - இப்பூமி காவலராகிய அரசர்கள், எரிபுரை - அக்னியையொத்த, நரகத்தன்றி - நரககதியில் வீழ்வதல்லாமல், வீழ்ந்திடார் - மற்ற மனிதர் தேவரென்கிற கதிகளில் பொருந்தார்கள், (ஆகையால்), மன்ன - அரசனே!, துன்ப வெள்ளம் - துன்பமென்னும் நீர்ப்பெருக்கோடு கூடிய, திரை - ஜனன மரண மென்கிற அலைகள், பொரு - ஞானமென்னும் கரையோடு பொருதுகின்ற, கடலை - பவக்கடலை, நீங்கி - விலகி, துறந்து - பாஹ்யாப்யந்தர பரிக்கிரகங்களை விட்டு, உடன் - உடனே, செறிந்து - பிராணி ஸம்யமம் விஷய ஸம்யமமென்னும் ஈராறடக்கங்களைப் பொருந்தி, நோற்பின் - த்வாதசவித தபசில் நின்றால், வானவருலகும் - தேவருலகமும், எதிர்கொள்ள - எதிர்கொண்டு நிற்க, வீடும் - மோக்ஷமும், வரும் - உண்டாகும், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௩எ)

870. விலையிலா மணியை விட்டுக் காசத்தை மேவ லன்றித்
தலைவனுத் தாயை விட்டுத் தன்னடி யானை யோம்பல்
நிலையிலாப் போக மேவி நின்றுநல் லறத்தை நீங்க
லிலைகுலா மகரப் பைம்பூ ணேந்துதோள் வேந்த வென்றான்.

(இ - ள்) இலை-(கம்மியரால் அமைக்கப்பெற்ற), இலைக்கொடிகள், குலாம்-பிரகாசிக்கும், மகரம் - மகரவடிவமாகிய, பைம் - பசுமை பொருந்திய பொன்னாலாகிய, பூண் - ஆபரணத்தை, ஏந்தும், - தரித்த, தோள் - கைகளையுடைய, வேந்த - அரசனே!, நிலையிலா - நிச்சயமில்லாமல் கெடுகின்ற, போகம் - இந்திரிய விஷய போகங்களை, மேவி நின்று - பொருந்தி நின்று, நல் - நன்மையாகிய, அறத்தை - தர்ம ஸ்வரூபமாகிய ஆத்ம ஸ்வரூப பாவனையை, (அறிந்து பற்றாமல்), நீங்கல் - அதற்கு பகிர்முகமாக அசத் பூதங்களில் மயங்கிச் செல்லுதல், (எப்படிப் பட்ட ஸ்வரூபமுடையதென்றால்), விலையிலா - விலையிடுதலில்லாத (அதாவது : மேலான விலையுள்ள), மணியை - இரத்தினத்தை, விட்டு - குணமறியாமல் விட்டு, காசத்தை - காய்ச்சு மணியை, மேவல் - பொருந்துவதாகும், அன்றி - அதுவல்லாமலும், தலைவனாய் - குடும்பத் தலைவனாகி, தாயை - மாதாவை, விட்டு - ரக்ஷிக்காமல் விட்டு, தன் - தன்னுடைய, அடியாளை - பெண்சாதியை மாத்திரம், ஓம்பல் - இரக்ஷிப்பதுமாகும், என்றான் - என்றும் சொன்னான், எ - று. (௯௮)

871. கடலெனத் தோன்று நீலக் கானலை நீரென் றோடி
யுடலிழுந் துழையைப் போல வுறுதியொன் றோர்வ தின்றி
யிடரினை யீனு மின்னாப் பயில்புலத் திவறிச் சென்றேன்
படுதுயர் நரகந் தன்னிற் பதைப்பனோ வடிக ளென்றான்.

(இ - ள்) (இவற்றைக் கேட்டு இரத்தினாயுதவாசன்), கடலென - சமுத்திரம்போல, தோன்றும் - தோற்றுகிற, நீலக்கானலை - நீல நிறம் பொருந்திய பேய்த்தேரை, நீரென்று - ஜலமென்று, (நினைத்து), ஓடி - சென்று, உடலிழுந்த - சரீரம் விடுகின்ற, உழையைப்போல - மானைப்போல, உறுதி - ஆத்மனுக்கு உறுதியாகிய, ஒன்று - ஒப்பற்ற ஆத்ம குணத்தை, ஓர்வது - அறியுந்தன்மை, இன்றி - இல்லாமல், (அஞ்ஞானத்தால்), இடரினை - துன்பத்தை, ஈனும் - உண்டு பண்ணுகின்ற, இன்னா - பொல்லாங்கினையே, பயில் - பற்றியிருக்கின்ற, புலத்து - பஞ்சேந்திரிய விஷ்யங்களில், இவறி - மிகுதியாக இச்சித்து, சென்றேன் - அப்பிரசஸ்தாகத்தில் மிகுதியாகச் சென்றேன், (ஆகையால்), அடிகள் - ஸ்வாமிகளே!, (அந்த அசுபோபயோக பரிண மனத்தால் பாபாஸ்ரவபந்தமாகி அந்த பாபோதயத்தால்), படு - மிகுதியாக உண்டாகின்ற, துயர் - துக்கங்களையுடைய, நரகந்தன்னில் - நரகத்தில், பதைப்பனோ - (நரககதி நாமோதயத்தால் ஜனித்து) துன்பமடைவேனோ ?, என்றான் - என்று கேட்டான், எ - று.

இழுந்த உழையென்பது இழுந்துழையெனத் தொகுத்தலாயிற்று. (௯௧)

872. எரியிடைப் பதங்கம் போன்று மிளம்பிடிக் களிறு போன்றுங்
கரிமதத் தளியைப் போன்றுங் கானத்தி னசுணம் போன்றும்

விரகினுற் றூண்டிற் பொன்னை விழுங்கிய மீனைப் போன்றுந்
தெரிவின்றி நுகர்ந்த வெல்லாந் தீரயான் றுறப்ப னென்ருன்.

(இ - ள்) (அவ்வாறு வினவிப் பின்னரும்), எரியிடை - ஏற்றிய விளக்கின் நெருப்பில், பதங்கம்போன்றும் - (சக்ஷுரிந்திரிய விஷயத்தினுல் வந்து வீழ்கின்ற) விட்டில் பூச்சிபோன்றும், இளம் - இளமையாகிய, பிடிக்களிறுபோன்றும் - (சரீரேந்திரிய விஷயத்தில்) பெட்டை யானைபோலவும், கரி - யானையினுடைய, மதத்து - மதஜலத்தில், அளியைப் போன்றும் - கிராணேந்திரிய விஷயத்தினுல் வந்து மொய்க்கின்ற வண்டுக் கூட்டங்கள் போலவும், கானத்தின் - கீதத்தில், அசுணம்போன்றும் - (ஸ்ரோத்திர விஷயத்தினுல் மயக்க மடைகின்ற) கேகயப் புள் போலவும், விரகினுல் - தந்திரத்தாலாகிய, தூண்டில் - தூண்டில் முள்ளில் பற்றிய, பொன்னை - நாகப்பூச்சியை, விழுங்கிய - ரஸநேந்திரிய விஷயத்தினுல் விழுங்குகின்ற, மீனைப்போன்றும் - மஸ்யத்தைப்போலவும், தெரிவின்றி - மயக்கத்தினின்றும் தெளிதலின்றி, (அஞ்ஞானத்தினுலே), நுகர்ந்த வெல்லாம்-அனுபவிக்கப் பெற்றதனுலுண்டாகிய பாபங்களெல்லாம், தீர - நீங்கும்படியாக, யான் - நான், துறப்பன் - இந்திரிய விஷய வாஞ்சையை முழுதும் நீங்கித் தபசைக் கைக்கொள்வேன், என்ருன் - என்று சொன்னுன், எ - று. (சுo)

873. வினைப்பயன் றன்னை வேங்கை முன்விடை போல வஞ்சிச்
சினக்களிற் றுழவன் செம்பொன் முடியினை மகனுக் கீந்திட்
டினத்திடை நீங்கிப் போகு மேறென வேந்து கொங்கை
மினற்கொடிக் குழாத்து நீங்கி மீண்டுபோய் வனம்புக் கானே.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னர்), சினம் - கோபம் பொருந்திய களிற்றுழவன் - யானைக்குத் தலைவனுகிய ரத்னுயுத மஹாராஜன், வினை - கருமங்களினது, பயன் தன்னை - உதயத்தினுலாகிய பலங்களுக்கு, வேங்கைமுன் - புலியினெதிர்ப்பட்ட, விடைபோல - விருஷபத்தைப்போல, அஞ்சி - பயந்து, செம்பொன் - சிவந்த பொன்னுலாகிய, முடியினை - கிரீடத்தை, மகனுக்கு - தனது குமாரனுக்கு, ஈந்திட்டு - பட்டாபிஷேக பூர்வகமாகக் கொடுத்து, இனத்திடை - பசுமாட்டுக் கூட்டத்தினின்றும், நீங்கிப்போகும் - பிரிந்து போகின்ற, ஏறென - விருஷபத்தைப்போல, ஏந்தும் - மார்பிற்றரித்த, கொங்கை - ஸ்தனங்களையுடைய, மினல்கொடி - மின்னல் கொடிபோலப் பிரகாசம் பொருந்திய ராஜ ஸ்திரீமார்களின், குழாத்து - கூட்டத்தினின்றும், நீங்கி - விலகி, மீண்டு - மறுபடியும், வனம் - முன் சொன்ன முனிவரனிருக்கின்ற மனோகரவனத்தில், போய் - சென்று, புக்கான் - அம்முனிவரிடஞ் சேர்ந்தான், எ - று. (சுக)

874. இடையரு தேற்ற காலத் தீயுமோர் முகிலைப் போலும்
வடிவுடைத் தடக்கை வேந்தன் வச்சிர தந்தன் பாதம்

முடியுற வணங்கி மூவார் தொழுதெழு வடிவங் கொண்டா
னிடிமுர சதிர்ந்த தெங்கு மேத்தொலி பரந்த தன்றே.

(இ - ள்) (அவ்வாறு சேர்ந்தபின்), இடையறுது-இடைவிடாமல், ஏற்ற - இசைந்திராநின்ற, காலத்து - வருஷகாலத்திலே, ஈயும் - மழை ஜலத்தைக் கொடுக்கின்ற, ஓர் - ஒப்பற்ற, முகிலேப்போலும் - மேகத்தைப்போல தானங் கொடுக்கின்ற, வடிவுடை - ரூபம் பொருந்திய, தடம் - விசாலித்த, கை - கைகளை யுடைய, வேந்தன் - இரத்திளுயுத மஹாராஜன், வச்சிரதந்தன் - வஜ்ரதந்தமுனிவ னுடைய, பாதம் - அடிகளில், முடியுற - சிரம் பொருந்த, வணங்கி - நமஸ்கரித்து, மூவார் - தேவர்களும், தொழுதெழும் - வணங்கிச்செல்லும்படியான, வடிவம் - தபோரூபத்தை (அதாவது: ஜினதீக்ஷையை), கொண்டான்-ஏற்றுக்கொண்டான், (அப்போது), இடி - இடியைப்போல் சப்திக்கின்ற, முரசு - பேரிகையானது, அதிர்ந்தது - சப்தித்தது, எங்கும் - எவ்விடங்களிலும், ஏத்தொலி - ஸ்துதி செய் கின்ற சப்தமானது, பரந்தது - மிகுதியாகப் பரவிற்று, எ - று. (கூஉ)

875 வரையினை யுருக்கும் வச்சி ராயுதன் றுறந்த வந்நா
ளரதன மாலே மைந்தன் காதலா லகத்தி ருந்தா
ளுரையினுக் கரிய வண்ணம் மகனெடுந் துறந்திட் டுள்ளம்
புரையெலா நீங்கி நின்று புற்கலம் வருந்த நோற்முள்.

(இ - ள்) வரையினை - பர்வதத்தை, உருக்கும் - கெடுக்கும் (அதாவது: கல்லேயும் உடைக்கின்ற சக்தியுள்ள), வச்சிராயுதன் - வஜ்ராயுத மஹாராஜன், துறந்த - தீக்ஷித்த, அந்நாள் - அப்போது, மைந்தன் காதலால் - புத்திரனுகிய இரத்திளுயுதன் மேலுள்ள ஆசையால், அகத்து - வீட்டிலேயே, இருந்தாள் - இருந்தவளாகிய, அரதனமாலே - (வஜ்ஜிராயுதன் மனைவியாகிய) இரத்தினமாலே, (மேற் கூறியபடி இரத்திளுயுதன் துறவடைந்தபோது), உரையினுக்கு - சொல் வதற்கு, அரிய - அரிதாகிய, வண்ணம் - விதமாக, மகனெடும் - தன் புத்திர னுகிய அந்த இரத்திளுயுதனுடனே, துறந்திட்டு - தானும் ஆரியாங்களேக்குரிய தீக்ஷையைக் கைக்கொண்டு, உள்ளம் - மனதினுல், புரையெலாம் - குற்றங்களெல் லாம், நீங்கி நின்று - விலகும்படியாகப் பிராயச்சித்த விதியின்படி பாவித்து நின்று, புற்கலம் - சரீரம், வருந்த - க்ரசமாகும்படி, நோற்முள்-அனசனுதிகளேப் பொருந்தி நோன்புகளே நோற்முள், எ - று.

'வரையினையுருக்கும்' என்றது வஜ்ஜிராயுதத்திற்கடை. (கூங)

876. கச்சணி முலேயி ஞர்பாற் காதல்போற் றவத்தின் கண்ணும்
மெச்சிய மனத்த ஞகி வெயினிலே யாதி யோகின்

பச்சுதி யின்றி நின்று காலங்கள் பலவு நோற்றிட்
டச்சுத கற்பம் புக்கா னரதன மாலை யோடும்.

(இ - ள்) (அதன்மேல் இரத்தினயுதன்), கச்சு - இரவிக்கையை, அணி - அணிந்திராநின்ற, முலையினார்பால் - ஸ்த்ரீமார்களிடத்தில், காதல்போல் - முன் தனக்கிருந்த போகவாஞ்சையைப்போல (அதாவது: அது எப்படி அதிகரித்திருந்ததோ அவ்விதமாகவே பிறகு), தவத்தின் கண்ணும் - தபஸினிடத்திலும், மெச்சிய - மிகுதியாக விரும்பிய, மனத்தனாகி - மனமுடையவனாகி, வெயினிலையாதி யோகின் - ஆதபயோக முதலான திரிகாலயோகங்களில், பச்சுதியின்றி - நழுவுதலில்லாமல், நின்று - நிலைபெற்று, காலங்கள் பலவும் - ஆயுஷ்ய நாள் வரையிலும் அநேக காலங்கள், நோற்றிட்டு - தபஞ்செய்து, அரதனமாலையோடும் - தனது தாயாகிய இரத்தின மாலையென்னும் ஆரியாங்கனையோடும் (ஆயுரவஸான காலத்து), அச்சுதகற்பம் - அச்சுத கல்பத்தை, புக்கான் - அடைந்தான், எ - று.

877. இருபத்தி ராழி காலத் திருபத்தீ ராயி ரத்தாண்
டொருவித்தா மமுத முண்ணு வும்பரின் பத்தை யுற்றார்
மருவித்தான் யோகி னின்றான் வச்சிரா யுதனும் பின்னை
நரகத்தாழ்ந் தரவின் செய்கை நவிற்றுவன் நாகர் கோவே.

(இ - ள்) நாகர்கோவே - நாகேந்திரனே !, (அவ்வாறு அச்சுத கல்பத்தையடைந்த அவ்விருவர்களும்), இருபத்திராழி காலத்து - இருபத்திரண்டு கடற்காலமாகிய ஆயுஷ்யத்தை யுடைத்தான, இருபத்தீராயிரத்தாண்டு - இருபத்திரண்டாயிரம் வருஷங்களை, ஒருவி - நீங்கி (அதாவது: அவ்வளவு காலஞ்சென்று), அமுதை - தேவாமிர்தத்தை, உண்ணு - மனதினால் புசித்தவர்களாகி, உம்பரின் பத்தை - (இப்படிப்பட்ட) தேவசுகத்தை, உற்றார் - அடைந்தார்கள், வச்சிராயுதனும் - வஜ்ராயுத மஹாமுனியும், தான் - தானென்னும் ஆத்ம ஸ்வரூப பாவனையில், மருவி - சேர்ந்து, யோகின் - யோகத்தில், நின்றான் - நிலைபெற்றான், பின்னை - பிறகு, நரகத்தாழ்ந்த - முன் சொன்ன நாலா நரகத்தில் மூழ்கிய, அரவின் செய்கை - மலைப்பாம்பினது காரியத்தை, நவிற்றுவன் - இனிச் சொல்லுவேன், எ - று.

தாம்-அசை. 'தாழ்ந்த அரவின்' என்பது, 'தாழ்ந்தரவின்' எனத் தொகுத்தலாயிற்று. (சுரு)

878. பருமித்த கடல்கள் பங்கப் பிரபையிற் பத்தும் பெற்று
நரகத்தி னிதிற் போந்து நால்வகை யாழி காலந்
திரதா வரத்திற் சென்று தீயவாந் துயர முற்றுப்
பரதத்திற் கச்சை யென்னும் புரத்தின்பால் வேட னானான்.

- ள்) (அவன்), பங்கப்பிரபையில் - பங்கப்பிரபை யென்கிற நாலாநரகத்தில், பருமித்த - உத்கிருஷ்டமாகிய, கடல்கள் பத்தும் - பத்துக் கடல் காலங்களை, பெற்று - தனக்கு ஆயுஷ்யமாகவடைந்து, நரகத்தின் - அந்த நாலாநரகத்தினின்றும், அரிதில் - அருமையாக (அதாவது: நீங்கும் விஷயத்தில் வெகு பிரயாசையின்பேரில் ஆயுரவஸானத்து), போந்து - அந்நரகாயுஷ்யம் நீங்கி வந்து, நால்வகையாழிகாலம் - நாலுவகையான கடற்காலம், திரததாவரத்தில் - த்ரஸஸ்தாவரங்களில், சென்று - அடைந்து சுழன்று, தீயவாம் - கொடியனவாகிய, துயரம் - துன்பங்களை, உற்று - அடைந்து, பாரதத்தில் - பரதக்ஷேத்திரத்தில், கச்சையென்னும் - கச்சையென்கின்ற (பெயருள்ள), புரத்தின்பால் - பட்டணத்தின் பக்கத்துள்ள குறிச்சியுள், வேடனானான் - வேடனாகப் பிறந்தான், எ - று.

'டதும்' என்பதில், உம்மை - அசை நிறைப்பொருளது. (௬௬)

879. தாருண கிரண னென்னும் வேடன்றன் மனைவி தாழ்ந்த
வாரிணை யனைய கொங்கை மங்கிதன் சிறுவன் மிக்க
தாருண னாகித் தோன்றித் தலையிலாத் தால துண்டங்
கூரெரி கவர்ந்த தொப்பான் கொடுமையாற் கனலி யொப்பான்.

(இ - ள்) (அவ்வாறு வேடனாகப் பிறந்த அவன்), தாருணகிரணனென்னும் - தாருணகிரணனென்னும் பெயரையுடைய, வேடன் தன் - வேடனுடைய, மனைவி - பெண்சாதியும், தாழ்ந்த - தொங்கப்பட்ட, வார் இணையனைய - இரண்டு தோல் துண்டுகளுக்கு ஒப்பாகிய, கொங்கை-ஸ்தனங்களையுடையவளும், (ஆகிய), மங்கிதன் - மங்கி யென்பவளுடைய, சிறுவன் - புத்திரனான, மிக்க தாருணனாகி - அதிதாருணனென்னும் பெயருடையவனாகி, தோன்றி - விளங்கி, (அதாவது: அவ்வேடனுக்கும் அவன் மனைவிக்கும் புதல்வனாகி விளங்கி), தலையிலா - மட்டை முதலியவற்றையுடைய மேற்பாகம் இல்லாத, கூர் எரிகவர்ந்தது - மிகுந்த நெருப்புபற்றிக் கரிந்ததாகிய, தால துண்டம் - பனங்கட்டையை, ஒப்பான் - நிகர்த்தவனாய் விளங்கினான், (அதாவது: அந்தக் கரிந்த பனங்கட்டையைப்போன்ற கரிய நிறமுடையவனாய் விளங்கினான், அவன்), கொடுமையால் - பொல்லாங்குத் தொழிலினால், கனலியொப்பான் - அக்னிக்குச் சமானமாவான், எ - று. (௬௭)

880. பாவந்தா னுருவங் கொண்டெவ் வுயிரையும் படுக்க வேண்டிச்
சாபஞ்செஞ் சரங்க ளேந்தித் திரிகின்ற தனையான் வந்து
கோபந்தா னதி யுள்ளான் கொலையிலா னந்தத் தோடும்
வேபந்தா னுயிர்கட் காக்கி விலங்கன்மே லேறி னானே.

(இ - ள்) (அவ்வாறு பிறந்து வளர்ந்திருக்கும்போது), பாவந்தான்-பாபமே, உருவங்கொண்டு - ஒரு மனித ரூபத்தைக்கொண்டு, எவ்வுயிரையும் - எல்லாப்

பிராணிகளையும், படுக்கவேண்டி - துன்பப்படுத்திக் கொல்லவேண்டி, சாபம் - வில்லையும், செஞ்சரங்கள் - செம்மையாகிய (அதாவது: ஆயுத சேர்மைப்படி அமைந்த) அம்புகளையும், ஏந்தி - தரித்து, திரிகின்ற தீனயான் - திரிவதை கிகர்த்தவனாகிய அவ்வேடன், கோபந்தானுதியுள்ளான் - அனந்தானுபந்தியென்னும் குரோதமுடையவனாகி, கொலையில் - கொலை செய்வதில், ஆனந்தத்தோடும் - ஹிம்ஸானந்தத்துடன், உயிர்கட்கு - ஜீவன்களுக்கு, வேபம் - நடுக்கத்தை, ஆக்கி - உண்டுபண்ணி, வந்து - ஒரு பர்வத சமீபத்தில் வந்து சேர்ந்து, விலங்கல் மேல் - அப்பர்வதத்தின் மேல், ஏறினன் - எத்ரேச்சையாக ஏறினன், எ - று

மூன்றிடத்தும், தான் - அசை. (கஎ)

881. வரைமிசை யோகி னின்ற வச்சிரா யுதனைக் காணு
வெரியென விழித்து வேரத் தெழுந்ததோர் கோபத் தீயால்
வரையினை முருக்கு வான்போற் கணத்திடை வந்து கூடித்
தெரிவிலான் செய்த தீமை செப்புதற் கரிய தொன்றே.

(இ - ள்) (அவ்வாறு ஏறிய பின்), வரைமிசை - அந்தப் பர்வதத்தின்மேல், யோகின் - யோகத்திலே, நின்ற - நிலைபெற்றிருந்த, வச்சிராயுதனை - வச்சிராயுத மஹாமுனியை, காணு - கண்டு, எரியென - அக்கினிபோல, விழித்து - கண்ணை விழித்து, வேரத்து - வைரபாவத்தினால், எழுந்த - உண்டாகிய, ஓர் - ஒப்பற்ற, கோபத்தீயால் - கோபாக்கினியால், வரையினை - பர்வதத்தை, முருக்குவான் போல் - அழிப்பவன்போல, கணத்திடை - ஒருக்ஷண நேரத்திற்குள்ளே, வந்து - ஓட்டமாக வந்து, கூடி - முனிவரன் சமீபஞ்சேர்ந்து, தெரிவிலான் - அறிவிலியாகிய அவ்வேடன், (அவர்க்குக் கொடுமையைச் செய்யத் தொடங்கினன்), செய்த - அவ்வாறு செய்த, தீமை - உபஸர்க்கம், செப்புதற்கு - சொல்வதற்கு, அரியது - அருமையானதாகிய, ஒன்று - ஒன்ரும், எ - று.

'என்றே' என்பதில், ஏ - அசை. (கஅ)

882. கூர்நுனைப் பகழி கொண்டு செவியிடைக குடையுங் குத்துங்
கார்முகங் கொண்டு நின்று மத்தகத் தடிக்குங் கையிற்
கூர்முளின் சலாகை யேற்றுங் குறங்கிடைக் கொடியைச் சுற்றி
நீர்விழக் கடையும் பாதத் தடிக்குநீண் முளையை நின்றே.

(இ - ள்) (அவ்வாறு கொடுமை செய்யத் தொடங்கிய அவன்), கூர்நுனை - கூர்மை பொருந்திய முனையையுடைய, பகழி - அம்பை, கொண்டு - கையிற்பற்றிக்கொண்டு (அதனால்), செவியிடை - அம்முனிவனுடைய காதிலே, குடையும் - குடைவானும், குத்தும் - குத்துவானும், கார்முகங்கொண்டு - வில்லையெடுத்துக்கொண்டு, நின்று - எதிரில் நின்று, மத்தகத்து - தலையில், அடிக்கும் - அடிப்

பவனும், கையில் - அம்முனிவரனுடைய கையில், கூர் - கூர்மை பொருந்திய, முள்ளின்சலாகை - முள்ளைப்போன்ற சலாகைகளை, ஏற்றும்-ஏற்றுவானும், குறங்கிடை - துடையில், கொடியைச்சுற்றி - கொடியினைச்சுற்றி, நீர்விழ - செந்நீர்விழ (அதாவது: இரத்தஞ் சொரியும்படி), கடையும் - கடைபவனும், பாதத்து-காலில், நீண்முளையை - நீண்ட முளைகளை, (அதாவது: முளைக்கொம்புகளை), அடிக்கும் - அடிப்பவனும், நின்று - இன்னும் நீங்காமல் நின்று, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (எ0)

883. அச்சுமுட் கொண்டு சுற்று மடித்திடும் வயிர வாணி
யுச்சியுட் புடைத்தி ழுத்திட் டோடியங் கெறியுங் கல்லால்
கைச்சிலை கணையைக் கோத்துக் காதள வெய்த வாங்கி
யச்சுறத் தோன்று மிவ்வா றிடும்பைக ளனேகஞ் செய்தான்.

(இ - ள்) அச்சுமுட்கொண்டு - அச்சங்கரணை முள்ளுகளைக் கொண்டு, சுற்றும் - முனிவனைச் சுற்றிலும், அடித்திடும் - அடிப்பவனும், வயிரவாணி - வைரம் பொருந்திய ஆணிகளை, உச்சியுள் - தலையில், புடைத்து - அடித்து, இழுத்திட்டு - இழுத்து, ஓடி - தூரத்தில் சென்று, அங்கு - அவ்விடத்தினின்றும், கல்லால் - கற்களினால், எறியும் - எறிபவனும், கை - தன்கையிலிராநின்ற, சிலை - வில்லில், கணையை - அம்புகளை, கோத்து - தொடுத்து, காதளவெய்த - தன் காது பரியந்தம் அடையும்படி, வாங்கி - நாரியை இழுத்து, அச்சுற - யாவர்களும் நடுங்கும்படி, தோன்றும் - தோன்றுபவனும், (ஆகி), இவ்வாறு - இந்தப் பிரகாரம், இடும்பைகள் - உபஸருக்கங்களை, அனேகம் - இன்னும் பலவாகவும், செய்தான் - செய்தனன், எ - று. (எக)

884. எரிசொரிந் திட்ட வண்ண மிவன்செய்த விடும்பை யெல்லாந்
தெரிவதொன் றின்றி நின்றம் முனிவனும் பொறுத்துச் சிந்தைத்
தருமநற் றியானத் தோடுஞ் சென்றுதன் னுடம்பு நீங்கித்
திருமலி யுலகத் துச்சி சவ்வட்ட சித்தி புக்கான்.

(இ - ள்) எரி - அக்கினியை, சொரிந்திட்ட வண்ணம் - சொரிந்த விதம் போல, இவன் - இவ்வேடனால், செய்த - செய்யப்பட்ட, இடும்பையெல்லாம் - துன்பங்களையெல்லாம், தெரிவதொன்றின்றி நின்று - தெரிதலில்லாமல் (ஆத்ம பாவனையிலேயே மனவசன காயங்களை நிறுத்தி), அம்முனிவனும் - அவ்வஜ்ராயுத முனிவனும், பொறுத்து - உபசருக்கமென்னும் வதை பரீஷஹ ஜெயம் செய்து, சிந்தை - மனது, தரும நற்றியானத்தோடும் - (ஆஜ்ஞா, அபாய, விபாக, சம்ஸ்தான விசயமென்னும்) நல்ல தருமத்தியானத்தோடும், சென்று - செல்ல, தன்னுடம்பு - தனது சரீரத்தை, நீங்கி - விட்டு, உலகத்துச்சி - ஊர்த்துவ லோகத்

தூள்ளதாகிய, திருமலி - (ஸம்ஸார சுகத்துள் மேலாகிய) செல்வம் நிறைந்த, சவ்வட்ட சித்தி - ஸர்வார்த்த சித்தியென்னும் அஹமிந்திர விமானத்தில், புக்கான் - புகுந்து தேவனாகியவதரித்தான், எ - று. (எஉ)

885 முப்பத்து மூன்று தன்னால் முரணிய வாழி காலம்
முப்பத்து மூன்றி யாண்டா யிரமிடை விட்டு முண்ணு
முப்பத்து மூன்று பக்க முயிர்ப்பிடை முடிவு பெற்றான்
முப்பத்து மூன்ற திச்சா ரிணையிலா முனிவன் றானே.

(இ - ள்) முப்பத்து மூன்று - (ஸர்வதோஷப் பிராயச்சித்தம்) முப்பத்து மூன்றிலேயும், அதிச்சாரிணையிலா - அதிசாரமில்லாமல் பாவித்து அனுஷ்டித்த, முனிவன் தான் - வஜ்ராயுத முனிவனானவன், (மேற் கூறியபடி அஹமிந்திர லோகத்தில் ஸர்வார்த்தஸித்தி விமானத்திற்றேவனாகி), முப்பத்துமூன்று பக்கம் இடை - முப்பத்துமூன்று பக்ஷமாகிய பதினாறரை மாதத்திற்கொருதடவை, உயிர்ப்பு - உச்வாஸ நிச்சுவாசத்தை யுடையவனாகி, முப்பதது மூன்றாயிரமாண்டு - முப்பத்து மூவாயிரம் வருஷகாலம், இடைவிட்டு - இடையிற் கழிய, உண்ணு - ஆகாரம் உண்டு, (அதாவது : மனஸாஹாரா திருப்தனாகி), முப்பத்துமூன்று தன்னால் - முப்பத்து மூன்றால், முரணிய - குணிக்கப்பட்ட, ஆழிகாலம் - கடற்காலம் (அதாவது : முப்பத்துமூன்று கடற்காலம்), முடிவு - ஆயுஷ்ய முடிவை, பெற்றான் - அடைந்தான், எ - று.

'விட்டு முண்ணு' என்பதில் உம்மை - அசை.

ஸர்வதோஷப் பிராயச்சித்தம் முப்பத்து மூன்றின் விவரங்களை, ஸர்வ தோஷப் பிராயச்சித்த ஆராதனாவிதானமென்னும் நூலில் பார்த்துக்கொள்க. (எங)

886 அவதிதன் விமானத் தின்கீழ் நாழிகை யளவுஞ் செல்லு
முவதிகள் யாது மின்றி யொப்பிலா வுருவத் தாலே
சிவகதி யாரைப் போல வின்பத்துச் செறிந்தி ருந்தான்
றவநெறி நின்ற வீரன் றன்மையா ரறிய வல்லார்.

(இ - ள்) (இன்னும்), அவதி - அவதிஜ்ஞானமானது, தன் - தன்னுடைய, விமானத்தின் கீழ் - விமானத்திற்குக் கீழே, நாழிகையளவும் - த்ரஸநாழிகை பரியந்தம், செல்லும் - செல்லக்கூடியதாகும், உவதிகள் - ஸ்த்ரீசமூகங்கள், யாதும் - சிறிதும், இன்றி - இல்லாமல், ஒப்பிலா - உபமையில்லாத, உருவத்தால் - தேவ சரீரத்தால், சிவகதியாரைப்போல - பேரின்பமுற்றவர்களுக்கு ஒருவாறொப்பாக, இன்பத்து - (தனதாயுஷ்யபரியந்தம்) இப்படிப்பட்ட ஸர்வார்த்தஸித்தி சுகத்தில், செறிந்திருந்தான் - சேர்ந்திருந்தான், தவநெறி - தபோநெறியின்படி,

நின்ற-அனுஷ்டித்து உபசருக்கங்களைப் பொறுத்துத் தளர்வின்றி நின்ற, வீரன் - வீர புருஷனாகிய இம்முனிவனுடைய, தன்மை - ஸ்வபாவத்தை, யார் - எவர்கள், அறியவல்லார் - அறிய வல்லமையை யுடையவர்கள், (ஞானிகளால்தான் அறிய முடியும்), எ - று. (எச)

887\. கூன்சிலைப் பகழி கோத்துக் கொடியவன் குழைய வாங்கி
மான்களும் மரையும் வீழ்த்து முனிவனை வருத்திப் பாவி
தான்சில நாளி லேழா நரகத்தைச் செறிந்து காட்டிற்
றேன்சுடு தீயி னீப்போற் றிகைத்துப்போய் நிலத்து வீழ்ந்தான்.

(இ - ள்) (அதன்மேல்), கொடியவன் - பாபிஷ்டனாகிய அவ்வேடன், கூன் - வளைவையுடைய, சிலை - வில்லில், பகழிகோத்து - அம்பைத் தொடுத்து, குழைய - வளையும்படியாக, வாங்கி - நாரியை இழுத்துவிட்டு, (அதனால்), மான்களும் - மான்களையும், மரையும் - சமரீமிருகங்களையும், வீழ்த்து - கொன்று வீழ்த்தி, முனிவனை - முனிவரனை, வருத்தி - உபசருக்கமும் செய்து, பாவிதான் - அந்தப் பாவியானவன், சில நாளில் - கொஞ்சநாளில் (மரண மடைந்து), ஏழாநரகத்தை - தமத்தமப் பிரபையென்னும் சப்தம நரகத்தில், செறிந்து - சேர்ந்து, காட்டில் - வனத்தில், சுடுதீயின் - சுடுகின்ற அக்னியில், (அகப்பட்ட), தேனீப்போல் - தேனீயானது மயக்கமுறுவதுபோல, திகைத்து - மயங்கி, போய் - (அந்நரகத்தில் மேல் பாகத்திலிருந்து தலை கீழாகத் தொங்குகின்ற நாகாவாச உபபாதத்தினின்றும் சரீர நிறைந்து) போய், நிலத்து - அந் நரகத்தின் அடிப்பூமியில், வீழ்ந்தான் - விழுந்தான், எ - று. (எரு)

888\. வீழ்ந்தவக் கணத்துத் தண்டால் விழுப்பற வதுக்கி யிட்டுச்
சூழ்ந்தவ ருருக்கும் செம்பின் குட்டுவத் துடம்பு காட்டிட்
டாழ்ந்தவன் றன்னை வாங்கிச் செக்கிலிட் டரைத்திட் டாற்றச்
சூழ்ந்தமுள் ளிலவ மேற்றித் துயரங்கள் பலவுஞ் செய்தார்.

(இ - ள்) வீழ்ந்த - அப்படி நரக பூமியில் விழுந்த, அக்கணத்து - அப்பொழுதே, சூழ்ந்தவர் - அவ்விடத்துச் சூழ்ந்திராநின்ற புராதன நாரகர்கள், (இப்புது நாரகனைக் கண்டதும்), தண்டால் - தடிகளால், விழுப்பற - அஞ்சாரம் நீங்கும்படி, அதுக்கியிட்டு - அடித்து, உருக்கும் - உருக்கப்பட்ட, செம்பின் குட்டுவத்து - செப்புக் குழம்பிலே, உடம்பு - இவனுடைய சரீரத்தை, காட்டிட்டு - காண்பித்து, (அதாவது : பரிசிக்கத்தள்ளி), ஆழ்ந்தவன் தன்னை - அதில் வீழ்ந்து துடிக்கின்ற அவனை, வாங்கி - அதினின்றும் எடுத்து, செக்கிலிட்டரைத்திட்டு - செக்கில் போட்டுச் சரீரம் நொறுங்கும்படியாக ஆட்டி, ஆற்ற - மிகவும், சூழ்ந்த - சேர்ந்த, முள்ளிலவம் - முட்களையுடைய முள்ளிலவ மரத்தின்மேல், ஏற்றி-ஏறும்

படியாகச் செய்தும், துயரங்கள் பலவும் - இவையல்லாமலும் இன்னும் அனேக மாகிய துன்பங்களையும், செய்தார் - (இவனுக்குச்) செய்தார்கள், எ - று. (எசு)

889. பாவைதா னடித்த பந்திற் பாவிதான் புகையைஞ் ஞூற்றை
யோவிலா தெழுந்து வீழ்ந்தைஞ் ஞூறுவில் லுயர்ந்து டம்பாற்
றாவிலாத் துன்ப முற்றான் றன்னிலை தளர்க்கொ ணாத
வாயுவா லாங்குப் பெற்ற வாழிகா லத்தை யெல்லாம்.

(இ - ள்) (அப்போது), தன்னிலை - தனக்குக் கட்டின ஆயுஸ்திதியை, தளர்க்கொணாத - நடுவில் நீக்கிக் குறைக்க முடியாத, ஆயுர்நாகாயுஷ்யத்தினால், ஆங்கு - அந்த ஏழா நரகத்தில், பெற்ற - தனக்காயுமாகப்பெற்ற, ஆழி காலத்தை யெல்லாம் - கடற் காலங்கள் முழுமையும், ஐஞ்ஞூறுவில்லுயர்ந்த - ஐந்நூறு வில்லுன்னதமாகிய, உடம்பால் - சரீரத்தினால், பாவைதான் - சித்திரப்பாவை போன்ற ஒரு ஸ்த்ரீயினாலே, அடித்த - அடிக்கப்பட்ட பந்தில் - பந்தைப்போல், பாவி தான் - மிகுதியான பாபகர்மத்தையுடைய இந்நாரகனானவன், புகை யைந்நூற்றை - ஐந்நூறு யோசனை உன்னதம், ஓவிலாது - இடைவிடாமல், எழுந்து - நரக பூமியினின்றும் மேலே கிளம்பி, வீழ்ந்து - கீழாக வீழ்ந்து, தாவிலா - குறையாத, (அதாவது: மிகுதியாகிய), துன்பம் - துக்கத்தை, உற்றான் - அடைந்தான், எ - று.

'ஐந்நூற்றை' என்பதில், ஐ - சாரியை. (எஎ)

890. ஆர்வத்தா லொருவ னானை யாயினா னொருவ னின்ற
வேரத்தா னரகத் தாழ்ந்தான் விளம்பிய விலார்க ளின்ப
பாரத்தை முடியச் சென்றார் பன்னகர்க் கிறைவ பாரா
யார்வசெற் றங்க ளின்றிப் பகைநமக் கில்லை கண்டாய்.

(இ - ள்) (இவ்வாறு), ஆர்வத்தால்-அப்பிரசஸ்தராக பரிணதியினால், ஒருவன்-ஸிம்மஸேன மஹாராஜனை ஒருவன், ஆனையாயினான்-முதலில் யானையாகப் பிறந்தான், நின்ற - அவன்பேரில் ஏற்பட்டு நின்ற, வேரத்தால் - த்வேஷபரிணதியினாலே, ஒருவன் - அவனுடைய மந்திரியாகிய சத்திய கோஷனென்னும் ஒருவன், நரகத்தாழ்ந்தான் - நரகத்தில் பிறந்து மூழ்கினான், விளம்பிய - இப்போது சொல்லப்பட்ட ராகத்வேஷ பரிணதிகள், இலார்கள் - இல்லாதவர்கள், இன்ப பாரத்தை - சௌக்கிய சமூகத்தில், முடிய - முழுதிலும், சென்றார் - அடைந்தார்கள், பன்னகர்க்கு - பவணலோகத்து பவணதேவர்களுக்கு, இறைவ - நாதனாகிய தரணேந்திரனே!, நமக்கு - ஆத்மனாகிய நமக்கு, ஆர்வ செற்றங்களின்றி - ராகத்வேஷங்களே யல்லாமல், பகை - வேறொரு பகையானது, இல்லை - உண்டாவதில்லை, பாராய் - இவற்றை நீ நன்றாக யோஜித்துப்பார், (என்று ஆதித்யாபதேவன் சொன்னான்), எ - று.

கண்டாய் - அசை. (எஅ)

எட்டாவது:

வச்சிராயுதனணுத்தரம்புக்க சருக்கம் முற்றுப்பெற்றது.

ஒன்பதாவது:

# பலதேவன் சுவர்க்கம்புக்க சருக்கம்



891. மந்திரி மன்னன் றம்மின் மாறுமா ருகிக் கீழ்மே
லிந்திய மைந்து செல்லு மெல்லையை முடியச் சென்ருர்
வந்தவர் தம்மிற் கூடு மளவினின் றிளைய னுய
மைந்தனுந் தாயு முற்ற மாற்றினி யுரைக்க லுற்றேன்.

(இ - ள்) மந்திரி - சத்தியகோஷ மந்திரியும், மன்னன் - ஸிம்மஸேன மகாராஜனும், தம்மில் - தங்களுக்குள், (குணங்களினுல்), மாறு மாருகி - வேறு வேருகி, (அதாவது: ஒருவர் குணத்திற்கொருவர் குணம் விரோதமாய் மந்திரி துர்க்குணத்தையும் இராஜா நற்குணத்தையும் அடைந்து), கீழ் - (மந்திரியானவன் தனது குணத்தினுல்) அதோ லோகத்தில் ஏழா நரகத்திலும், மேல் - (அரசனுன வன் தனது குணத்தினுல்) ஊர்த்துவ லோகத்தில் ஸர்வார்த்த ஸித்தியிலும், இந்தியமைந்து செல்லும் எல்லையை - பஞ்சேந்திரிய ஜீவன்களினுல் அடையும் படியான கீழ் மேல் பிரமாண க்ஷேத்திரங்களை, முடிய - முடிவு பெறும்படியாக, சென்ருர் - அடைந்தார்கள், அவர் - அவ்விருவர்களும், வந்து - மறுபடியும் மத்தி மலோகமாகிய இப்பூமியில் வந்து, தம்மில் - தங்களுக்குள், கூடும் அளவில் - சேர்கின்றதற்குள், இளையனுய - குமாரனுகிய, மைந்தனும் - பூர்ணச்சந்திர புதல்வ னும், தாயும் - அவனுடைய தாயாகிய இராமதத்தா தேவியும், உற்ற - அடைந்த, மாற்று - ஸம்ஸாரப் பிறப்புக்களை, இனி - இனிமேல், இன்று - இப்பொழுது, உரைக்கலுற்றேன் - சொல்லத் தொடங்கினேன், (என்று ஆதித்யாபதேவன் சொன்னுன்), எ - று. (க)

892. போதொடு தளிர்கள் செற்றிப் பொறிவண்டும் ஞிமிறும் பாடத்
தாதொடு மதுக்கள் வீயுந் தாதகி யுடைய தீப
மோதிய புகைக ணுனா ருயிர முள்ள கன்று
வேதிகை யிரண்டிற் சக்க வாளத்தின் விளங்கு நின்றே.

(இ - ள்) போதொடு - புஷ்பங்களோடு, தளிர்கள் - துளிர்களும், செற்றி - நெருங்கி, பொறி - புள்ளிகளையுடைய, வண்டும் - வண்டுக் கூட்டங்களும், ஞிமி றும் - ஞிமிறினங்களும், பாட - இசைபாட, (அதாவது: கீதம்போல் சப்திக்க), தாதொடு - பூந்தாதுகளோடு, மதுக்கள் - தேன் துளிகளும், வீயும் - சொரி கின்ற, தாதகியுடைய - தாதகி விருட்சங்களை மிகுதியாகவுடைய, தீபம் - தாத

கிஷண்டத்வீபமானது, ஓதிய - சொல்லப்பட்ட, நான்குனூறாயிரம் புகைகள் - நாலு லட்சம் யோஜனைகள், உள்ளகன்று - உள்ளே விஸ்தீர்ணமுடையதாகி, வேதிகை யிரண்டின் - (தன்னை உட்புறமும், வெளிப்புறமும், சூழ்ந்த மஹா லவண, காளோதக, சமுத்திரங்களினுடைய வஜ்ரவேதிகைகள் இரண்டினால்), சக்கவாளத்தின் - சக்ரவாள கிரியைப்போல வட்டமாய்ச் (சூழ்ந்ததாகி), நின்று - நிலைபெற்று, விளங்கும் - விளங்கிக் கொண்டிருக்கும், எ - று.

ஏ - அசை. (உ)

893. மந்தர மிரண்டு மாண்ட குலமலை பன்னி ரண்டி
னந்தரத் தாறு நாலே ழாமத னகத்துக் கீழ்பான்
மந்தர மதற்கு மேல்பாற் சீதுதை வடக ரைக்கட்
கந்திலை யென்னு நாடு காமுறுந் தகைய துண்டே.

(இ - ள்) (அந்தத் தாதகிஷண்ட த்வீபத்திலே), மந்தரம் - மந்தரபர்வதங்கள், இரண்டு - கீழ்பாகத்தில் ஒன்று மேல் பாகத்தில் ஒன்றுமாக இரண்டாகும், மாண்ட - மாட்சிமைப்பட்ட, குலமலை - குல பர்வதங்கள், பன்னிரண்டின் - ஒரு ஒரு பக்கத்துக்கு ஆறு ஆறு ஆக அமைந்த பன்னிரண்டின், அந்தரத்து - அந்தரங்களிலே, (அத்தீபத்தில் செல்லா நின்ற), ஆறு - (கங்கா, சிந்து, முதலாகிய) மஹா நதிகள், நாலேழாம் - ஒரு பக்கத்துக்குப் பதினாலாக இரண்டு பக்கமுஞ் சேர்ந்து இருபத்தெட்டாகும், அதனகத்து - அப்படிப்பட்ட அத்தீபத்தினுடைய மத்தியில், கீழ்பால் - கிழக்குப் பக்கத்திலுள்ள, மந்தரமதற்கு-மந்தர பர்வதத்திற்கு, மேல் பால் - அபர பாகத்தில், (உள்ள), சீதுதை - சீதோதா நதியினுடைய, வட கரைக்கண்-வட கரையிலே, கந்திலையென்னும் - கந்திலா வென்கிற, நாடு - தேசமானது - காமுறும் - யாவர்களும் விரும்பும்படியான, தகையது - குணமுடையதாகி, உண்டு - உள்ளது, எ - று. (௩)

894. விலங்கல்வீ ழருவி வேழ மும்மதந் தேறல் வேரி
கலந்துடன் செல்லு மாறு கயந்தலைப் பட்ட காலைச்
சலஞ்சலம் பிரிந்த காத லார்தமைக் கண்ட போழ்தி
லலங்கலங் குழவி ஞர்போ லமர்ந்தினி தொழுகு நாட்டுள்.

(இ - ள்) விலங்கல் - பர்வதத்தினின்றும், வீழ் - சொரிகின்ற, அருவி - அருவிஜலமும், வேழ மும்மதம் - யானைகளது (கர்ண, கபோல, பீஜமென்கிற ஸ்தானங்களினின்றொழுகும்) மூன்றுவித மதங்களும், தேறல்-தேன் துளிகளும், வேரி - மற்ற வாசனைகளும், கலந்து - கூடி, செல்லும் - செல்கின்ற, ஆறு - நதியானது, கயம் - (நீரூறு) மடுக்களிலும் அகழியிலும் குளங்களிலும், தலைப்பட்ட காலை - வரத்துக் கால்களால் வந்து சேர்ந்த காலத்திலே, சலஞ்சலம் - (அவைகளி

விருக்கும்) சலஞ்சலமென்னும் சங்குகள், (அப்புதுப்புனலைக் கண்டதும்), பிரிந்த காதலார் தமை - பிரிந்துபோயிருந்த ஆசையையுடைய புருஷர்களை, கண்டபோழ்தில் - (வந்துசேரப்) பார்த்த காலத்தில், அலங்கல் - மாலையை யணிந்திராநின்ற, குழலினார்போல் - அளகபாரத்தையுடைய ஸ்த்ரீமார்களைப்போல, அமர்ந்து - அப்புதுப்புனலை மிகவும் விரும்பி, இனிது - இனிமையாக, ஒழுகும் - செல்கின்ற, நாட்டுள் - (நீர்வளமுள்ள அந்தக்) கந்திலை யென்னுந் தேசத்தில், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௪)

895. கதலியின் குலைகள் செம்பொற் கொழுங்கனி கான்று நான்று
மதலையைச் செறிந்த வற்றை மயிலன்ன சாய லார்தங்
குதலையம் புதல்வர்க் குண்ணக் கொடுத்தெடுத் துவக்குஞ் செம்பொன்
மதலைய மாட மூதா ரயோத்திமா நகர மாமே.

(இ - ள்) (அந்நாட்டின் தலை நகரம்), கதலியின் - வாழைமரத்தினது, குலைகள் - தார்களானவை, செம்பொன் - சிவந்த பொன் போன்ற, கொழும் - செழுமை பொருந்திய, கனி - பழங்களை, கான்று - தோற்றுவித்து, நான்று - தொங்கி, மதலையை - உப்பரிகைகளினுடைய கொடுங்கைகளில், செறிந்து-சேர, அவற்றை - அப்பழங்களை, மயிலன்ன - ஆண்மயில் போன்ற, சாயலார் - சரீரச் சாயலையுடைய ஸ்த்ரீமார்கள், தம் - தங்களுடைய, குதலை - மழலைச் சொற்களை யுடைய, அம் - அழகிய, புதல்வர்க்கு - புத்திரர்களுக்கு, உண்ண - தின்னும்படி, கொடுத்து - பறித்துக்கொடுத்து, எடுத்து - அக்குழந்தைகளைத் தூக்கியெடுத்து, உவக்கும் - சந்தோஷிக்கும்படியான, செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, மதலைய - தூண்களையுடையனவாகிய, மாடம் - உப்பரிகைகளால் நிறைந்த, மூதூர்- பழமையான ஊராகிய, அயோத்திமாநகரம் ஆம் - அயோத்திமாநகர மென்னும் பெயருடையதாகும், எ - று.

'செறிய' என்னும் செயவெனெச்சம், 'செறிந்து' எனச் செய்தெனெச்சமாகத் திரிந்து வந்தது. (௫)

896. இரவிபோற் றூப தீபத் திளையவர் வதன மென்னு
மரவிந்த மலராத் தோன்று மரசன்று னருக தாசன்
வரைபுரை மாட மூதூர் மற்றிதற் கிறைவன் றேவி
சுரிகுழற் கருங்கட் செவ்வாய்த் தோகைசுவ் வதையென் பாளாம்.

(இ - ள்) வரைபுரை - பர்வதம்போல் பெரிதாகிய, மாடம் - உப்பரிகைகளை யுடைய, மூதூரிதற்கு - பெரிதாகிய இந்த அயோத்திமாநகரத்திற்கு, இறைவன் - எஜமானனவன், தீபத்து - பிரகாசத்தையுடைய, இளையவர் - இளமைப் பருவம்

பொருந்திய ஸ்த்ரீமார்களுடைய, வதனமென்னும் - முகமென்கிற, அரவிந்தம் - தாமரை மலரானது, மலர - விகஸனத்தை யடையும்படி, இரவிபோல் - சூர்யன் போல், தோன்றும் - தோற்றுகின்ற, தாபம் - பிரதாபத்தையுடைய, அரசன்றான் - ராஜாவாகிய, அருகதாசன் - அர்ஹத்தாஸனென்னும் பெயருடையவன், தேவி - அவனுடைய பட்டத்தரசியானவள், சுரி - சுருண்ட, குழல் - அளகத்தையும், கரும் - கறுத்த, கண் - கண்களையும், செவ்வாய் - சிவந்த வாயையுமுடைய, தோகை - ஆண்மயில் போன்றவளாகிய, சுவ்வதையென்பாள் ஆம் - ஸுவ்ரதை யென்னும் பெயருடையவளாவள், எ - று.

தான், மற்று - அசைகள். (சு)

897. அச்சுதைக் கிறைவ னுய வரதன மாலை யந்தக்
கச்சணி முலையி னட்குப் புதல்வனுய்ப் பிறந்த காலை
நச்சுவேல் வேந்தற் கஞ்சி மன்னவர் நடுங்க வையத்
திச்சையை நிறைத்து வீத பயனிவ னென்று சொன்னர்.

(இ - ள்) அச்சுதைக்கு - அச்சுதகல்பத்துக்கு, இறைவனுய - நாதனுகிய, அரதனமாலை - பூர்வ இரத்தினமாலை யென்பவள், அந்த - இப்போது சொல்லப் பட்ட அந்த, கச்சணி - இரவிக்கையணிந்த, முலையினட்கு - ஸ்தனங்களையுடைய ஸுவ்ரதைக்கு, புதல்வனுய் - புத்திரனுக, (பிறந்தாள்), பிறந்த காலை - அவ்வாறு ஜனித்த காலத்தில், நச்சு - விஷம் பொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, வேந்தற்கு - அருகத்தாஸ மஹாராஜனுக்கு, மன்னவர் - எல்லாத்தேச வரசர்களும், நடுங்க - பயத்தையடைய, வையத்து - இவ்வுலகிலுள்ளவர்களுடைய, இச்சையை - வறுமையாலுண்டான பொருளாசையை, நிறைத்து - நிறையச் செய்து, (அதாவது : தரித்திரர்க்கு மிகுதியாகத் தானங்கொடுத்து), இவன்-பிறந்த இப்புத்திரன், வீத பயனென்று - வீத பயனென்று, சொன்னர் - (பெரியோர்) நாமகரணஞ் செய்தார்கள், எ - று. (எ)

898. மற்றந்த மன்னன் றேவி வடிநுனைப் பகழி வாட்கட்
சிற்றிடைப் பரவை யல்குற் சினதத்தைச் சிறுவ னுகிச்
சுற்றிய காத லால்வந் திரதனு யுதனுந் தோன்ற
வெற்றிவேல் வீரன் பேரும் விபீடண னென்று சொன்னர்.

(இ - ள்) மற்று - பின்னையும், அந்த மன்னன் - அந்த அருகத்தாஸ மஹா ராஜனுடைய, தேவி - மற்றொரு தேவியாகிய, வடி - கூர்மைபெற்ற, நுனை - நுனியையுடைய, பகழி - அம்புபோன்ற, வாள் - ஒளிபெற்ற, கண் - கண்களை யும், சிற்றிடை - மெல்லிய இடையையும், பரவை - அகன்ற, அல்குல் - அல்கு லினையுமுடைய, சினதத்தை - ஜினதத்தைக்கு, இரதனுயுதனும் - பூர்வம் இரத்

திஞயுத ராஜஞயிருந்து பின்னர் அச்சுத கல்பத்தையடைந்திருந்த தேவன், சுற்றிய-சேர்ந்திராநின்ற, காதலால் - வாஞ்சையினுல், வந்து - ஆயுரவஸாநத்துவந்து, சிறுவஞகித்தோன்ற - புத்திரஞகியவதரிக்க, வெற்றி - வெற்றி பொருந்திய, வேல் - வேலையுடைய, வீரன் - வீரபுருஷஞகிய அப்புதல்வனுடைய, பேரும் - நாமமும், விபீடணனென்று - விபீஷணஞகுமென்று, சொன்ஞர் - பெரியோர் கூறிஞர்கள் (அதாவது : நாமகரணஞ் செய்தார்கள்), எ - று. (அ)

899. இராமகே சவர்க ளாகி யெழின்மதி நீல மேகந்
தராதலத் திழிந்த போல்வார் தருமமும் புகழும் போன்றுங்
கராமலி கடலி ஞேத மதியொடு பெருகும் வண்ணம்
பராபவம் பகைவர்க் காக்கும் படியிஞல் வளர்வு சென்ருர்.

(இ - ள்) எழில் - அழகுடன் பிரகாசியாநின்ற, மதி - சந்திரனும், நீல மேகம் - நீல நிறத்தையுடைய மேகமும், தராதலத்து - இப்பூமியில், இழிந்த போல்வார் - இழிந்ததற்கு ஒப்பானவர்களாகிய இவர்கள், (அதாவது : சந்திரனையும் மேகத்தையும் போன்ற நிறத்தினையுடைய இவர்கள்), இராம கேசவர்களாகி - இராமனும் கேசவனுமாகி (அதாவது : வெண்ணிறமுள்ள வீதபயன் பலராமனைப் போலவும் நீல நிறத்தையுடைய விபீஷணன் வாசுதேவனைப் போலவும் ஆகி), தருமமும் புகழும் போன்றும் - தர்மமும் புகழ்ச்சியும் போலவும், (அதாவது : வெண்மையாகச் சொல்லப்படும் தருமமும் நீல நிறமாக வர்ணிக்கப்படும் கீர்த்தியும் போலவும்), கரா - முதலைகள், மலி - நிறைந்திராநின்ற, கடலின் - ஸமுத்திரத்தினுடைய, ஓதம் - ஜலமானது, மதியொடு - பூர்வபட்ச சந்திரஞேடு (கூடி), பெருகும் வண்ணம் - பெருகுகின்ற விதம் போலவும், (அதாவது : நீலநிறக்கடனீர் வெண்ணிறச் சந்திரஞேடு சேர்ந்து பொங்குவது போலவும் விளங்கி), பகைவர்க்கு- சத்துரு ராஜாக்களுக்கு, பராபவம் - மானபங்கத்தை, ஆக்கும்படியிஞல் - உண்டு பண்ணுகின்ற விதத்திஞலும், (அதாவது : வீரத்திஞலும்), வளர்வு சென்ருர் - வளர்ந்தார்கள், எ - று.

தர்மம் கீர்த்தி முதலியவற்றை நிறபேதத்தால் வர்ணித்தல் பெரியோர் வழக்கு. (கூ)

900. குலமலை யிரண்டு போலக் கொற்றவக் குமர ரோங்கி
நிலமகட் கிறைவ ராக நின்றதம் பகைவன் வெம்பி
மலைமிசைப் பருதி யோடு மால்கட லிரண்டு வந்து
நிலமிசைப் பொருவ போன்று நின்றுபோர் தொடங்கி ஞரே.

(இ - ள்) கொற்றவக்குமரர் - இந்த இராஜ புத்திரர்களிருவரும், குலமலை யிரண்டுபோல - இரண்டு குலகிரிகளைப்போல, ஓங்கி - உயர்ந்து,(இவ்வாறு), நிலம

கட்கு - இப்பூமிக்கு, இறைவராக - அரசர்களாக, (அப்போது), நின்ற - நிலை பெற்ற, தம் பகைவன் - இவர் தம் சத்துருவாகிய பிரதிவாஸுதேவன், வெம்பி- (இவர்களதிகாரத்தைப் பொருதவனாகிக்) கோபித்து, (யுத்தோன் முகனாக, இவ் விருவகையாரின் படைகளுமெதிர்த்தன; அங்ஙனமெதிர்க்கவே இருவகைப்படை வீரர்களும்), மலைமிசை - உதய பர்வதத்திலெழுந்தருளும், பருதியோடு - சூர்ய னோடு, மால் - பெரிதாகிய, கடலிரண்டு வந்து - இரண்டு ஸமுத்திரங்கள் வந்து, நிலமிசை - பூமியின்மேல், பொருவபோன்று - பொருதுவதுபோல, (சூரியனைப் போன்ற தங்கள் அரசர்கள் மலைபோன்ற யானைகளில் ஏறிவரத் தாங்கள் கடல் கள்போல் வந்து), நின்று - நேரே நின்று, போர் தொடங்கினர் - யுத்தம் செய்ய வாரம்பித்தார்கள், எ - று. (௧௦)

901. துரகங்க டிரைக ளான சுறவெறி வீர ராவர்
கரிமக ரங்க ளான காற்படை கடல தாகப்
பொருபடை வீரர் கைவாள் புரண்டெழு மீன்க ளாகக்
கரைசெறி நாவாய் தேராய்க் காவலர் காம ராவர்.

(இ - ள்) (அவ்வாறு போர் தொடங்கியபோது), காற்படை - பதாதிப் படைகள், கடலதாக - ஸமுத்திரமாக, துரகங்கள் - குதிரைகள், திரைகளான-அலை களாயின, எறி - ஒருவர்க்கொருவர் மேலே ஆயுதங்களையெறிந்து சண்டை தொடுக் கின்ற, வீரர் - ரணவீரர்கள், சுறவானார்-மகரமத்ஸயங்களுக்கு ஒப்பானார்கள், கரி- யானைகள், மகரங்களான - முதலைகளுக் கொப்பாயின, பொரும் - பொருதுகின்ற, படைவீரர் - படைவீரர்களின், கை - கையில் இராநின்ற, வாள் - வாள்கள், புரண் டெழும் - புரண்டு செல்கின்ற, மீன்களாக - மற்ற மத்ஸயங்களுக்கொப்பாக, கரை செறி - துறைமுகக் கரையில் சேரும்படியான, நாவாய் - கப்பல்கள், தேராய் - ரதங்களாக, காவலர் - அரசர்கள், காமரானார் - மீகாமருக்கொப்பானார் கள், எ - று. (௧௧)

902. வில்லொடு வில்வந் தெற்ற வேலொடு வேல்வந் தெற்ற
மல்லொடு மல்ல ரெற்ற வாட்படை வாளோ டெற்றக்
கொல்களி யானை யோடு தேர்களுந் தம்மி லெற்ற
நல்லுளைப் புரவி யோடு புரவிநாட் செய்த போரே.

(இ - ள்) (அங்ஙனமாய் இருதிறப்படைகளும் போர் செய்யும்போது), வில்லொடு - விற்படைகளோடு, வில் வந்தெற்ற - விற்படைகள் வந்து தாக்கவும், வேலொடு - வேலாயுதத்தையுடைய சேனைகளோடு, வேல்வந்தெற்ற - வேலாயு தத்தையுடைய சேனைகள் வந்து தாக்கவும், மல்லொடு - மல்ல யுத்தம் செய்யுமவர் களுடன், மல்லர் - மல்ல யுத்தஞ் செய்பவர்கள், எற்ற - தாக்கவும், வாட்படை - வாள் வல்லவர்கள், வாளோடு - வாள் வல்லார்களுடனே, எற்ற-தாக்கவும், கொல்-

[illegible]தொழிலையுடைய, களி - கர்வமுடைய, யானையோடு - யானைப்படைகளுடனே, தேர்களும் - ரதங்களும், தம்மில் - தங்கள் தங்கள் இனங்களோடு, ஏற்ற - தாக்கவும், நல் - நன்மையாகிய, உளை - கழுத்து மயிரையுடைய, புரவியோடு - குதிரைப்படைகளுடன், புரவி - குதிரைப்படைகளும், போர் - போரை, நாட் செய்த - தொடங்கின, எ - று.

நாட் செய்தல் - முதற் போரை நல்ல நாளில் தொடங்கல். (கஉ)

903. கால்பொரக் கதலிக் கானங் கடிதுடன் மடிந்த தேபோற்
கோல்பொரக் கொடியி னீட்டங் குடையொடு மற்று வீழ்ந்த
வேல்பொரக் குருதிக் கும்பிக் குமிழ்விட் டெழுந்த நீல
மால்வரை செங்கற் றூதின் குமிழ்வந் தெழுந்த தொன்றே.

(இ - ள்) (அவ்வாறு செய்த போரில்), கால் - காற்றானது, பொர-மிகுதியாக அடித்தலினாலே, கதலிக்கானம் - வாழைத்தோப்பானது, கடிது - சீக்கிரமாக, உடன் - உடனே, மடிந்ததே போல் - (இலை, பூ, காய்களுடன் ஒடிந்து வீழ்ந்து) நாசமானது போல, கோல் பொர - அம்புகள் தைத்தலாலே, குடையொடு - குடைகளோடு, கொடியினீட்டம் - த்வஜ சமூகங்களும், அற்று வீழ்ந்த - அறுந்து வீழ்ந்தன, கும்பி - யானைகளின் மேலே, வேல் பொர - வேலாயுதமானது தைத்துக்காயமாக்க, குருதி - இரத்தமானது, குமிழ்விட்டு - குமிழியிட்டுக் கொண்டு, எழுந்த - சொரிந்த தோற்றமானது, நீலம் - நீல நிறத்தையுடைய, மால் - பெரிதாகிய, வரை - பர்வதத்தினின்றும், செங்கத்தாதின் குமிழ் வந்து - சாதிலிங்கக் குழம்பின் குமிளியானது வெளிப்பட்டு, எழுந்தது-சொரிந்ததாகிய, ஒன்று - ஒரு தோற்றமாகும், எ - று. (கங)

904. விற்படை சரங்கள் வீழ்ந்து மேகங்கள் போல மாய்ந்த
மற்படை யுடன்றெ ழுந்து மடங்கல்போற் பொருது மாய்ந்த
வெற்பகம் பிளந்த வைவா ளெழிலியின் மின்னைப் போன்ற
கொற்றவர் குடைக ளேந்தி நடந்தது குருதி யாறே.

(இ - ள்) விற்படை - வில்லினால் போர் செய்யும் சேனைகள், மேகங்கள் போல - மேகங்கள் மழையச் சொரிவதுபோல, சரங்கள் - அம்புகள், வீழ்ந்து - மேலே வீழ்ந்து பாய்தலால், மாய்ந்த - உயிரிழந்து மாய்ந்தன, மற்படை - மல்ல யுத்தஞ் செய்யுஞ் சேனைகள், உடன்று - கோபித்து, எழுந்து - கிளம்பி, மடங்கல் போல் - ஸிம்மத்தைப்போல, பொருது - யுத்தத்திற் பொருந்திச் சண்டை செய்து, மாய்ந்த - உயிர்விட்டன, வெற்பு - பர்வதம்போற் பெரிதாகிய யானைகளின், அகம் - சரீரத்தினுள்ளே நுழைந்து, பிளந்த - அச்சரீரத்தைப் பிளவு செய்த, வை-கூர்மை பொருந்திய, வாள்-வாள்களானவை, எழிலியின்-மேகத்திற்றோன்றும், மின்னைப்போன்ற - மின்னற்கொடிக் கொப்பாயின, குருதியாறு - இரத்

தப் பிரவாகமானது, கொற்றவர் - ராஜாக்களுடைய, குடைகள் - குடைகளை, ஏந்தி - தரித்துக்கொண்டு, நடந்தது - சென்றது, எ - று. (கசு)

905. கால்பொரப் பெண்ணை நெற்றிக் கனிகள்போற் றலைகள் வீழ்ந்த
கோல்பொரக் குளித்த யானைக் குருவிசேர் குன்ற மொத்த
வேல்பொரக் கிடந்த வீரர் வேற்கணார் விழும நோயின்
மால்பொரக் கிடந்த நெஞ்சின் மைந்தர்போன் மயங்கி னாரே.

(இ - ள்) கால்பொர - பலமான காற்றடிக்க, பெண்ணை - பனைமரத்தி னுடைய, நெற்றி - மஸ்தகத்தில் இராநின்ற, கனிகள்போல் - பனம் பழங்கள் உதிர்வதுபோல, தலைகள் - படைவீரர்களின் தலைகளானவை, வீழ்ந்த - பூமியில் வீழ்ந்தன, கோல்பொர - சரீரமுழுமையும் அம்புகள் தைத்துக்கொள்ள, குளித்த - அதனால் மறைக்கப்பட்ட, யானை - யானைத்திரள்கள், குருவி சேர் - பட்சிகளால் நிறைந்திருக்கப்பெற்ற, குன்றமொத்த - பர்வதங்களுக்குச் சமானமாயின, வேல் பொர - வேலாயுதங்கள் சரீரத்தில் தைத்துக்கொள்ள, கிடந்த - மூர்ச்சையாகி விழுந்துகிடக்கின்ற, வீரர் - யுத்த வீரர்கள், வேற்கணார் - வேல் போன்ற கண் களையுடைய ஸ்த்ரீமார்களின்மேற்றோன்றிய, விழும நோயின் - வருத்துகின்ற காமநோயினது, மால் - மயக்கமானது, பொர - மிகுதியாக நெருக்கி வருத்த, கிடந்த - வேறொன்றும் தோன்றாமல் கிடந்து மயங்குகின்ற, நெஞ்சின் - மனதை யுடைய, மைந்தர்போல - புருஷர்களைப்போல, மயங்கினார் - மயக்கமுற்றவர்க ளானார்கள், எ - று. (கஎ)

906. உருமிடிப் புண்ட நீல மலையென வுருண்ட வேழம்
வரைமிசைப் பருதி போல மன்னவர் வந்து வீழ்ந்தார்
கரைபொரு கலங்கள் போலத் தேர்த்தொகை விழுந்து போன
புரவிகள் கரையைச் சார்ந்த திரையெனப் பொருது மாய்ந்த.

(இ - ள்) உருமிடிப்புண்ட-இடிவிழுந்ததனால் பிளந்து விழப்பட்ட, நீலம்- நீல நிறமுடைய, மலையென - பர்வதம்போல, வேழம் - யானைகள், உருண்ட - உருண்டு மடிந்தன, வரைமிசைப் பருதிபோல - பர்வதத்தின் மேலிருக்கின்ற சூர்யனைப்போல, மன்னவர் - யானைகளின்மேல் வரப்பட்ட அனேக வரசர்கள், வந்து - யுத்த களத்தில் வந்து சண்டையிட்டு, வீழ்ந்தார் - மடிந்தார்கள், கரை பொரு - ஸமுத்திரத்தில் கரைதட்டிக் கவிழ்ந்து போகப்பட்ட, கலங்கள்போல - கப்பல்களைப்போல, தேர்த்தொகை - ரதசமூகங்கள், விழுந்துபோன - விழுந்து முறிந்தன, புரவிகள் - குதிரைகள், கரையைச்சார்ந்த - கரையிற்றாக்கிய, திரை யென - அலைகளைப்போல, பொருது - யுத்தத்திற்றாக்கி, மாய்ந்த - உயிரிழந்து மாய்ந்தன, எ - று. (கஅ)

907. கொற்றவேன் மன்னர் வேழ கும்பத்தைத் தழுவி வீழ்ந்தார்
வெற்றிப்பொற் கொடியின் கொங்கை மேவினோர் தம்மை யொத்தார்
அற்றதோர் கேட கக்கை கவ்விய நரிகண் ணாடிப்
பற்றிய குறளி செல்வா டன்முகம் பார்த்த போலும்.

(இ - ள்) வேழகும்பத்தை - யானை மஸ்தகத்தை, தழுவி - கையாற்றழுவிக்கொண்டு, வீழ்ந்தார் - யுத்தகளத்தில் விழுந்தவர்களாகிய, கொற்றவேல் மன்னர் - வெற்றியுள்ள வேலாயுதத்தைத் தாங்கிய அரசர்கள், வெற்றிப் பொற் கொடியின் - ஜெயஸ்ரீயினது, கொங்கை - ஸ்தனங்களை, மேவினோர் தம்மை - பொருந்தினவர்களை, ஒத்தார் - ஒப்பாயினோர்கள், அற்றது - அறுப்புண்டு விழப் பட்டதாகிய, ஓர் - ஒரு, கேடகம் - கேடகத்தோடு கூடிய, கை - கையை, கவ்விய- கடித்து எடுத்துக்கொண்டுபோகின்ற, நரி - குள்ளநரியானது, கண்ணாடி பற்றிய- கண்ணாடியைக் கையில் எடுத்த, குறளி - குறுகிய வடிவுள்ள ஒரு தாதியானவள், செல்வாள் - நடப்பவளாய், தன் முகம்-தனது முகத்தை, பார்த்தபோலும் - பார்க்கின்றதற் கொப்பாகும், எ - று. (௭)

908. விழுந்துடன் கிடந்த வேழம் விட்டமூர்ச் சனைகள் பாந்தள்
செழுங்குகைச் சிறிது போந்து சீறுவ தொக்கும் போரி
னழிந்துடன் கிடந்த வீர ரருகுசென் னரியைக் கண்டு
முழுஞ்சிடை யுறங்குஞ் சிங்க முனிவதே போன்மு ரன்றார்.

(இ - ள்) விழுந்து - யுத்தகளத்தில் விழுந்து, உடன் - உடனே, கிடந்த - சாகாமல் கிடக்கின்ற, வேழம் - யானைகள், விட்ட - நோய் தாளாமல் விடுகின்ற, மூர்ச்சனைகள் - நினைவு மயங்கிய பெரு மூச்சுகள், பாந்தள் - சர்ப்பமானது, செழும் - செழுமையாகிய, குகை - குகையினின்றும், சிறிது போந்து - கொஞ்சம் வெளியே வந்து, சீறுவது - சீறுகின்ற சப்தத்திற்கு, ஒக்கும் - சமானமாயிருக்கும், போரில் - சண்டையில், அழிந்து - உயிர் போகாமல் பலமழிந்து, உடன் - உடனே, கிடந்த - விழுந்து கிடக்கின்ற, வீரர் - வீரபடர்கள், அருகு - தங்கள் பக்கத்தில், செல் - செல்கின்ற, நரியை - குள்ளநரிகளை, கண்டு - பார்த்து, முழுஞ்சிடை - பர்வத குகையில், உறங்கும் - தங்கியிராநின்ற, சிங்கம் - சிம்மமானது, முனிவதேபோல்-(சமீபித்துச் செல்கின்ற இதர மிருகங்களைக) கோபித்து கர்ஜிப்பதுபோல, முரன்றார் - கர்ஜித்தார்கள், எ - று. (௧௮)

909. வாசிக ளுலக்க வாளி பாய்ந்திட மனங்க லங்கி
வீசின பாத மேலாய் விழுந்தன வருடை போன்ற
பூசலிற் பொன்றும் வீரர் துறக்கமா மென்னும் பொய்ந்நூ
லாசையாற் பொருது வீழ்ந்தா ரரம்பைய ரார்வத் தாலே.

(இ - ள்) வாளி - (அந்த யுத்தரங்கத்தில்) பாணங்களானவை, பாய்ந்திட - ஊடுருவிப்பாய, மனங்கலங்கி-மனம் நொந்து, வாசிகள் - குதிரைகள், பாதம் - கால்கள், மேலாய் - மேலாக, வீசின - வீசினவாய் மல்லாந்து, விழுந்தன - விழுந்து கிடக்கின்றவை, வருடை - அஷ்டாபதமென்னும் திரியக் பிராணியை, போன்ற - ஒப்பாயின, பூசலில் - யுத்தத்தில், பொன்றும் - இறந்து போகின்ற, வீரர் - வீர புருஷர்கள் (தங்களுக்கு), துறக்கம் - வீர சுவர்க்கம், ஆம் - ஆகும், என்னும் - என்கின்ற, பொய்ந்நூல் - யுத்தகற்பனை சாஸ்திரத்தின், ஆசையால் - ஆசையினாலே, பொருது - யுத்தஞ்செய்து, அரம்பையார் - (வீரத்தினால் சுவர்க்கமடைந்தால் அவ்விடத்தில்) தேவரம்பையர்களை அனுபவிக்கலாமென்கிற, ஆர்வத்தால் - பிரீதியினால், வீழ்ந்தார் - இறந்தார்கள், எ - று. (கக)

910. கடல்கவர்ந் தெழுந்து பெய்யுங் காரெனச் சாபங் கான்ற
படுகணை மாரிக் கஞ்சிப் பலன்கெடப் பலன்வந் தன்று
குடரடைக் கொழுவி யொன்னா ருடலெனுங் கொழும்புற் சாயப்
படைமடுத் துழுது வெம்போர்ப் புலம்படு சேறு செய்தான்.

(இ - ள்) (இச்சம்பவங்கள் நிகழுங்கால்), கடல் - சமுத்திர ஜலத்தை, கவர்ந்து - கிரகித்து, எழுந்து - ஆகாயத்தில் கிளம்பி, பெய்யும் - மழையைப் பெய்கின்ற, காரென - மேகத்தைப்போல, சாபம் - வில்லினால், கான்ற - கக்கப்பட்ட, படு - எதிரிகள் மடியத்தக்க, கணைமாரிக்கு - எதிரிகளின் அம்பு வருஷத்திற்கு, அஞ்சி - பயந்து, பலன்கெட - (இராஜகுமாரர்களாகிய, வீதபய, விபீஷணரிருவர்களுடைய சேனைகளின்) பலமானது கெட, (அவை பின்னிட்டன), அன்று - அப்போது, பலன் - பலதேவனாகிய வீதபயன், வந்து - யுத்தரங்கத்தில் வந்து, ஒன்னார் - சத்துருச் சேனைகளுடைய, உடலென்னும் - சரீரமென்கிற, குடர் அடை - குடல்களைச் சேர்ந்த, கொழும் - கொழுவிய, புல் - புற்கள், சாய - சாயும்படி, படைகொழுவி - தன்னுடைய ஹலாயுதத்தைக் கொழுவிச்செலுத்தி, வெம் - வெப்பம் பொருந்திய, போர் - யுத்தரங்கமாகிய, புலம் - வயல் நிலத்தை, உழுது - உழுது, படு - உண்டாகின்ற, சேறு - இரத்தமாமிசச்சேற்றை, செய்தான் - உண்டு பண்ணினான், எ - று. (உo)

911. காற்றெறி கடலிற் பொங்கிக் காற்படை யுடையக் காணா
மாற்றவன் கூற்றம் போல வடிநுனைப் பகழி தூறித்
தோற்றினன் தோற்று வீரர் தொடுபடை யிட்டுத் தத்தங்
காற்பயன் கொண்டு போனார் காவல ரதனைக் காணா.

(இ - ள்) (அவ்வாறு செய்தபோது, எதிரி படை தோற்றோடிற்று; அங்ஙனம்) மாற்றவன் - சத்துருவாகிய பிரதிவாஸுதேவன், காற்படை - தனது பதாதிப்படைகள், காற்று - மிகுந்த காற்றினாலே, எறி - எறியப்பட்ட, கடலில் -

சமுத்திரத்தைப்போல, பொங்கி - அதிகரித்தெழுந்து, உடைய - தோற்று ஓட, காணு - பார்த்து, கூற்றம் போல - எமராஜனைப்போல, வடி - கூர்மைபெற்ற, துனை - நுனியையுடைய, பகழி - அம்பு வருஷங்களை, நூறி - செலுத்தி, தோற்றினன் - யுத்தரங்கத்தில் வந்து எதிர்த்துத் தோன்றினன், (அப்போது பல தேவவாலு தேவர் படையிலுள்ள), வீரர் - வீரர்கள், தோற்று - அப்போருக்குத் தோற்று, தத்தம் தொடுபடை - தங்கள் தங்களுடைய தொடுக்கும் ஆயுதங்களை, இட்டு - போட்டுவிட்டு, காற்பயன் கொண்டுபோனர் - காலினலாகின்ற பலனைக் கொண்டு போனர்கள் (அதாவது : ஓட்டம் பிடித்தார்கள்), அதனை - அப்படித் தங்கள் சேனைகள் தோற்று ஓடுகிறதை, காவலர் - இராமகேசவர்களாகிய அரசர்கள், காணு - கண்டு, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (உக)

912. எரியுரு மென்னச் சீறி யிடஞ்சிலை யேந்து மெல்லைச்
சுரியுளைச் செங்கட் பேழ்வாய்ச் சீயமுந் தோன்ற வேறி
வரிசிலை குனிய வப்பு மாரியப் பலன் படைத்தான்
செருவிளைத் துடைந்த வீரர் சேணிமேல் வினைக ளொத்தார்

(இ - ள்) அப் பலன் - (மேற்கூறிய இருவருள்) அந்தப் பல தேவனனவன், எரி - எரியாநின்ற, உருமென்ன - இடியைப்போல், சீறி - கோபித்துக் கர்ஜனை செய்து, இடம் - தனது இடக்கையில், சிலை - வில்லை, ஏந்தும் - தரிக்கின்ற, எல்லை - சமயத்தில், சுரி - சுருண்ட, உளை - கழுத்து மயிரையும், பேழ்வாய் - பிளப்பு வாயையுமுடைய, சீயமும் - ஒரு சிங்கமும், தோன்ற - பிரஸன்னமாக, (அதாவது : பூர்வ புண்ணியோதயத்தால் ஒரு தேவதையானது சிம்மரூப நிர்மிதத்தைச் செய்துகொண்டு தோன்ற, அதன்மேல்), ஏறி - ஏறிக்கொண்டு, வரிசிலை - வரிந்து கட்டிய வில்லானது, குனிய - நன்றாய் வளைந்து நிற்க, அப்பு மாரி - அம்பு வருஷத்தை, படைத்தான் - மிகவும் உண்டுபண்ணினன், (அப்போது), செரு - அந்த யுத்தரங்கத்திலே, இளைத்து - பலஞ் செய்யாமல் இளைத்து, உடைந்த - தோற்று ஓடுகின்ற, வீரர் - சத்துருஸமூஹ வீரர்கள், சேணிமேல் - சம்மியத்துவ குணத்தினல் க்ஷபகஸ்ரேணியில், மேல் மேலே ஏறுகிற காலத்தில், (உடைந்தோடும்), வினைகள் - கர்மங்களை, ஒத்தார் - நிகர்த்தார்கள், எ - று. (உஉ)

913. பாறுமேற் பறந்த தெங்கும் பருதியுங் கரந்த தங்கே
சேறுபட் டளறு தாகிச் செருக்களஞ் செல்ல லீங்க
மாறெதிர்ந் தவனைக் காணு மறிந்ததன் சேனைக் காணுச்
சீறினன் கருட னேறிச் சென்றுகே சவனெ திர்ந்தான்.

(இ - ள்) (மேலும்), செருக்களம் - யுத்தகளமானது, சேறுபட்டு - இரத்த மாமிசச்சேறுண்டாகி, அளறதாகி - சருக்கும் பூமியாகி, செல்லலீங்க - செல்வதற்

குத் தடையாக, எங்கும் - யுத்தகளமெவ்விடத்தும், பாறு - பருந்து, மேல் - ஆகாயத்தில், பறந்தது - (மாமிசத்தை யுண்ணப்) பறந்து திரிந்தது, அங்கே - அவ்விடத்தில், பருதியும் - சூரியனும், கரந்தது - (அப்பருந்துபறப்பதால்) மறைந்தது, (அப்போது), கேசவன்-வாசுதேவனும், (அந்த யுத்த களத்தில்), மாறு-தங்கட்கெதிரியாக, எதிர்ந்தவனை - எதிர்த்த பிரதி வாஸுதேவனை, காணு - பார்த்தும், மறிந்த - பின்னிடைந்து திரும்பின, தன் சேனை - தன்னுடைய சேனைகளை, காணு - கண்டும், சீறினன் - கோபித்தவனாகி, கருடனேறி - கருடதேவன்மேலேறிக்கொண்டு, சென்று - யுத்தகளத்தில் சென்று, எதிர்ந்தான் - பிரதி வாஸுதேவனை டெதிர்த்தான், எ - று. (உங)

914. அருக்கன்வந் துதய மேற மதியொளி யவிவ தேபோற்
றிருக்கிளர் கருடன் மேலக் கேசவன் றோன்றச் சிந்தி
வெருக்கொண்டு சேனை யோட வீழ்ந்தொளி மதியி னின்றா
னுருத்தெழு காலன் போல வுடன்றுசக் கரத்தை விட்டான்.

(இ - ள்) (அவ்வாறு), அருக்கன் - சூர்யன், வந்து - தோன்றி வந்து, உதயமேற - உதய பர்வதத்தினின்றும் மேற்கு நோக்கிச் செல்ல, மதியொளி - சந்திரனுடைய பிரகாசமானது, அவிவதேபோல் - மழுங்குவதுபோல, திரு - அழகானது, கிளர் - பிரகாசியா நின்ற, கருடன் மேல் - கருடதேவன்மேல், அக்கேசவன் - அந்த வாஸுதேவனாகிய விபீஷணன், தோன்ற - யுத்தரங்கத்தில் தோன்ற, சிந்தி - குலைந்து, வெருக்கொண்டு - பயத்தையடைந்து, சேனை - பிரதிவாஸுதேவன் சேனைகள், ஓட - தோற்றோட, வீழ்ந்தொளி - மழுங்கிய ஒளியையுடைய, மதியின் - சந்திரன்போல, நின்றான் - புண்ணிய கர்மம் மாண்டு நின்றவனாகிய பிரதி வாஸுதேவன், உருத்தெழு - கோபித்தெழுகின்ற, காலன்போல - எமனைப் போல, உடன்று - கோபித்து, சக்கரத்தை - தேவதா சக்தியாயிராநின்ற சக்ராயுதத்தை, விட்டான் - வாஸுதேவனாகிய விபீஷணன்மேல் செலுத்தினான், எ - று.

'வீழ்ந்த ஒளி' என்பது, 'வீழ்ந்தொளி' எனத் தொகுத்தலாயிற்று. (உச)

915. படைநடுக் கடலிற் செல்லும் பருதிபோ லாழி செல்ல
முடிமன்னர் நடுங்கி யிட்டார் முதுகிட்ட தரசர் சேனை
படைமன்ன ரார்த்தெ ழுந்தார் மாற்றவன் பக்கத் துள்ளார்
மிடைகதி ராழி மேருச் சூழ்வரும் பருதி போல.

(இ - ள்) கடலில் - கடலின் மத்தியில், செல்லும் - செல்கின்ற, பருதி போல் - சூர்யன் போல, ஆழி - அச்சக்ராயுதமானது, படை நடு - சேனைகளின் மத்தியில், செல்ல - போக, முடி - கிரீடத்தையுடைய, மன்னர் - இராமகேசவர் பக்கத்திலுள்ள அரசர்கள், நடுங்கியிட்டார் - பயந்தார்கள், அரசர் சேனை - இராம

கேசவபக்ஷ ராஜாதி சைன்யங்கள், முதுகிட்டது - யுத்த பூமியினின்றும் புற முதுகு காட்டி ஓடின, மாற்றவன் - சத்துருவாகிய பிரதி வாஸுதேவனுடைய, பக்கத்துள்ளார் - பக்ஷத்தி லிராநின்றவர்களாகிய, படைமன்னர் - சேனு வீரர் களாகிய அரசர்களும், ஆர்த்து - ஜெயசப்தமிட்டு, எழுந்தார் - எழும்பினுர்கள், (அப்போது மேற் கூறியவாறு சென்ற), மிடை - நெருங்கிய, கதிர் - பிரகாசம் பொருந்திய, ஆழி - சக்ராயுதமானது, மேரு - மஹாமேரு பர்வதத்தை, சூழ்வரும்- வலஞ் செய்கின்ற, பருதி போல - சூர்யனைப் போல, எ - று.

இதுவும், அடுத்த செய்யுளும் குளகம். (உரு)

916. கேசவன் றன்னைச் சூழ்ந்து வலப்பக்கங் கெழுமக் கண்டு
பேசொணு வகையி னுழி பிடித்தவன் றிரித்து விட்டான்
மூசுதேன் கவசங் கீண்டு மொய்வரை மார்பு புக்குத்
தேசறத் துருவி யோடித் திசைவிளக் குறுத்த தன்றே.

(இ - ள்) கேசவன் தன்னை - வாஸுதேவனுகிய விபீஷணனை, சூழ்ந்து - பிரதக்ஷிணமாக வந்து, வலப்பக்கம் - அவனுடைய வலப்பாரிசத்தில், கெழும - பொருந்தி நிற்க, கண்டு - அக்கேசவன் பார்த்து, (ஸந்தோஷித்து), பேசொணு வகையின் - சொல்வதற்கரிதான சக்தி வாய்ந்த, ஆழி - அச்சக்ராயுதத்தை, அவன்- அவ்வாசுதேவன், பிடித்து - கையாற்பற்றி, (விதிபூர்வகம் தியானித்து), திரித்து- (மறுபடி தனது தக்ஷிணஹஸ்தத்தால்) திருப்பி, (பிரதி வாஸுதேவனுன சத் துருவின்மேல்), விட்டான் - ஏவினுன், (அப்படி ஏவப்பட்ட அச்சக்ராயுத மானது), மூசுதேன் கவசங்கீண்டு - பிரதி வாஸுதேவ னணிந்திராநின்ற அழ கிய ஜீராவைப் பிளந்து, மொய் - பலம் பொருந்திய, வரை - பர்வதம் போன்ற, மார்பு - அவனுடைய மார்பினிடத்தில், புக்கு - புகுந்து, தேசு - அவனது ஒளியானது, (அதாவது: உயிர்), அற - நீங்கும்படி, துருவி - துளைத்துக் கொண்டு, ஓடி - கேசவனிடம் சென்று, திசை - திக்குகளிலெல்லாம், விளக் குறுத்தது - பிரகாசத்தை உண்டாக்கியது, (அதாவது: கேசவனுக்கு ஜெயத்தை உண்டுபண்ணிற்று), எ - று. (உசு)

"தேசழித்துருவிக்கொண்டு" என்றும் பாடபேதமுண்டு.

917. கருமுகி லுருமி னேடிக் கேசவன் கையி னுழி
யுருமிடிப் புண்ட நீல மலையிலொன் ஞனை வீழ்ப்ப
விருள்பரந் திட்ட தெங்கும் யாவரும் நடுங்கி வீழ்ந்தா
ரொருவர்க ணின்ற துண்டோ திருவென வுரைத்திட் டாரே.

(இ - ள்) (அவ்வாறு), கேசவன் - விபீஷணனுடைய, கையின் - கையி னின்றும், ஆழி - சக்ராயுதமானது, கரும் - கருத்த, முகில் - மேகத்தினின்றும்

உண்டாகிய, உருமின் - இடியைப்போல, ஓடி - கர்ஜித்துக்கொண்டு செல்ல, உருமிடிப்புண்ட - இடியினாலே பிளந்து வீழப்பட்ட, நீலம்-நீல நிறமுடையதா யின் - பர்வதம் போல, ஒன்னானை - சத்துருவாகிய பிரதி வாசுதேவனை, வீழ்ப்ப - கொன்று வீழ்த்த, எங்கும் - அவனைச் சேர்ந்தவர்களுள்ள விடமெல்லாம், இருள் - அந்தகாரமானது, பரந்திட்டது - வியாபித்தது, (அதாவது: அந்தகாரம் போன்ற துக்கம் அவன் பக்கத்தில் நிகழ்ந்தது; அது வல்லாமலும்), யாவரும் - அவன் பக்கத்தார் எவர்களும், நடுங்கி - பயமடைந்தவர்களாகி, வீழ்ந்தார் - மூர்ச் சித்தும் வீழ்ந்தார்கள், (அப்போது அவ்விடத்திருந்த சாமான்ய ஜனங்கள்), திரு - இலக்ஷ்மியானவள், ஒருவர்கண் - ஒருவரிடத்திலேயே, நின்றதுண்டோ - நிலைத் திருந்ததுண்டோ, என - என்று, உரைத்திட்டார் - பேசினார்கள், எ - று.

ஏ - அசை. (உஎ)

918\. மலைமிசை மதியி னீழற் பருதிபோன் மத்த யானைத்
தலைமிசைக் குடையி னீழல் தரணியை முழுது மாண்டார்
நிலமிசை யின்று காறும் நின்றவ ரில்லை யேனுந்
தலைவனைத் தானிவ் வாழி தடிந்தது கொடிதி தென்றார்.

(இ - ள்) (மேலும் அவர்கள்), மலைமிசை - பர்வதத்தின்மேல், மதியி னீழல் - சந்திரனுடைய நிழலின் கீழே, (இருக்கின்ற), பருதிபோல் - ஒரு ஸூர் யனைப்போல, மத்தம் - மதம் பொருந்திய, யானை - யானையினுடைய, தலைமிசை - மஸ்தகத்தின் மேலே, குடையினீழல் - வெள்ளைக் குடையினுடைய நிழலிலே, (தங்கியிருந்து), தரணியை - இப்பூமியை, முழுதும் - ஒருவருக்கும் பாகமில்லா மல் முழுமையும், ஆண்டார் - ஆண்ட அரசர்களில், நிலமிசை - இப்பூமிமேல், நின்றவர் - நிலைபெற்றிருந்தவர்கள், இல்லையேனும் - இல்லையென்றாலும் (அதா வது: தேக போகங்கள் அனித்திய பரியாயங்களாகிலும்), இவ்வாழிதான் - இச் சக்ராயுதமானது, தலைவனை - தன்னையுடையவனாயிருந்த எஜமானனை, தடிந்தது- கொன்றதாகிய, இது - இத்தன்மையான ஸம்ஸாரமானது, கொடிது - மிகவும் பொல்லாங்கினையுடையது, என்றார் - என்றும் சொன்னார்கள், எ - று. (உஅ)

919\. கருடனை யிழிந்து கைமா மிசைவந்து புரோதன் காட்டக்
குரவர்க ளுறையுங் கோடி சிலையினை வலம்வந் தேந்திப்
பெரியவ னின்ற போழ்தின் வேந்தர்விஞ் சையர்கள் விண்ணோர்
தருதிறை யோடும் வந்து தாழ்ந்தடி பரவி னாரே.

(இ - ள்) (அதன் மேல்), கருடனை - கருட தேவனினின்றும், இழிந்து - இறங்கி, கைமாமிசை - யானையின்மேல், வந்து - (ஏறிக்கொண்டு) வந்து, புரோ தன் - புரோகிதன், காட்ட - காண்பிக்க, குரவர்கள் - (ஸம்யக்ஞானாதி குண

முள்ள) மஹரிமுனிவரர்கள், உறையும் - மிகுதியாகச் சேர்ந்து தங்குதல் கொள்ளும், கோடி சிலையினை - கோடி சிலையென்னும் பர்வதத்தை, வலம் வந்து - பிரதக்ஷிணமாக வந்து, ஏந்தி - அதனைத் தன் கரங்களால் தூக்கி, பெரியவன் - பராக்கிரமத்தில் மிக்கோனாகிய விபீஷணன், (நின்றான், அவ்வாறு) நின்ற போழ்தில் - நின்ற காலத்தில், வேந்தர் - பூமியரசர்களும், விஞ்சையர்கள் - வித்தியாதரவரசர்களும், விண்ணோர் - வியந்தர தேவாதிபதிகளும், தரும் - கொண்டு வந்து கொடுக்கும்படியான, திறையோடும் - திறைப்பொருள்களோடும் பாகுட வஸ்துக்களோடும், வந்து - இராமகேசவர்களிடத்தில் வந்து, அடி - பாதங்களில், தாழ்ந்து - வணங்கி, பரவினர் - ஸ்துதித்தார்கள், எ - று. (௨௯)

920. மலரென மலையை யேந்தி வைத்தவன் மன்னர் சூழ
வலர்கதி ராழி பின்போய்த் திசையடிப் படுத்து மீண்டு
நிலமக டிலகம் போலு மயோத்திமா புரத்து நீ
மலையொடு மதியம் போல மன்னவர் துன்னி னாரே.

(இ - ள்) (பின்னர்), மலரென - புஷ்பத்தைப் போல, மலையை - அந்தப் பர்வதத்தை, ஏந்தி - (மேற்கூறியபடி) தூக்கி, வைத்து - மறுபடியும் வைத்துவிட்டு, அவன் - அக்கேசவனாகிய விபீஷணன், (பல தேவனாகிய வீதபயனோடும்), கூட, மன்னர் - அனேக தேசத்தரசர்கள், சூழ - சூழ்ந்துவர, அலர் கதிர் - பரந்த கிரணத்தையுடைய, ஆழி - சக்ராயுதத்தின், பின்போய் - பின்னாகவேச் சென்று, அதாவது : சக்கரத்தைச் செலுத்தி அது சென்று ஒவ்வோரிடத்திலும் ஜெயத்தையுண்டாக்க அது சென்றவழியே பின் சென்று) திசையடிப்படுத்து - திக்கு விஜயம் செய்ய (அதாவது : எத்திக்கிலு முள்ளவர்களையும் தனதாளுகைக்குட் படும்படி செய்ய அதன்மேல்), மீண்டு - திரும்பி, நிலமகள்-பூமிதேவிக்கு, திலகம்போலும்-நெற்றிப் பொட்டுக்குச் சமானமாகிய, அயோத்திமா புரத்து - அயோத்தியா புரியில், நீல மலையோடு - நீல பர்வதத்தோடு, (கூடிய) மதியம் போல - சந்திரனைப் போல, மன்னவர் - அரசர்களாகிய பல தேவ வாஸுதேவரென்னும் விபீஷண வீதபயர்கள், துன்னினர் - அடைந்தார்கள், எ - று. (௩௦)

921. மதியொடு கரிய மேகங் கண்டமாக் கடலைப் போலப்
பதியவர் காதல் பொங்கப் பார்த்திபர் புக்க போழ்தின்
விதியறி புலவர் சூழ்ந்து வெற்றிச்சீ யாச னத்து
மதியன்ன குடையி னீழல் வைத்துச்சா மரைகள் வீச.

(இ - ள்) (அவ்வாறு) மதியொடு - பூர்ணச் சந்திரனோடு, கரிய - கறுத்த, மேகம் - மேக மண்டலத்தையும், கண்ட - பார்த்த, மா - பெரிதாகிய, கடலைப் போல - ஸமுத்திரமானது பெருகுவதுபோல, அப் பதியவர் - அந்த அயோத்தியா புரியிலுள்ளவர்கள், (கண்டு) காதல் - ஆசையினால், பொங்க - மிகுதியாக, பார்த்தி

பர் - வீதபய விபீஷணரென்னு மிரண்டரசர்களும், புக்கபோழ்தின் - அடைந்த காலத்தில், விதியறி - பட்டாபிஷேக விதிகளைத் தெரிந்திராநின்ற, புலவர் - புரோகிதர் முதலாகிய புலவர்கள், சூழ்ந்து - சேர்ந்து, வெற்றி - வெற்றி பொருந்திய, சீயாசனத்து - சிம்மாசனத்தின்மேல், மதியன்ன - சந்திரன்போன்ற, குடையின்- குடையினுடைய, நீழல் - நிழலிலே, வைத்து - இவ்வரசர்களை ஸ்தாபிக்க, சாமரை - வெண் சவரிகளை, வீச - இருபக்கங்களிலும் (பணியாளர்) வீசவும், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். வைக்க என்பது, வைத்து எனத் திரிந்து வந்தது. (௩௧)

922. பாற்கடற் பரவைத் தெண்ணீர்ப் பருதியின் படிய கும்ப
மாற்றவா யிரத்தோ ரெட்டி னமரரா லேந்தப் பட்ட
நூற்கடல் கேள்வி யார்க ணுனித்தமந் திரங்கள் சொல்லி
யேற்றவா றாட்டி னார்க ளேத்தினார் பார்த்தி வேந்தர்.

(இ - ள்) ஆற்ற - மிகுதியாக, (யோக்கியாம்சம் வாய்ந்த), ஆயிரத்தோரெட்டின் - ஆயிரத்தெட்டாகிய, அமரரால் - கணபத்த தேவர்களால், பருதியின் படிய - சூர்யனுக்குச் சமானமான ஒளியுள்ள, கும்பம் - ரத்னகடங்களில், ஏந்தப் பட்ட - எடுத்துக்கொண்டு வரப்பட்ட, பரவை - விசாலமான, பாற்கடல் - க்ஷீர ஸமுத்திரத்தினுடைய, தெண்ணீர் - தெளிந்த நீரால், நூல்கடல் - சாஸ்திரமாகிற சமுத்திரத்தின், கேள்வியார்கள் - கேள்வியையுடைய புரோகிதர்கள், நுனித்த - சூக்ஷ்மமாக ஆராய்ந்தறிந்த, மந்திரங்கள் - சக்தி வாய்ந்த மந்திர பதங்களை, சொல்லி - கோஷசுத்தி பூர்வகமாகச் சொல்லி, ஏற்றவாறு - இசையும்படியான விதமாக, ஆட்டினார்கள் - (அவ்வரசர்கட்கு) அபிஷேகஞ் செய்தார்கள், (அப்போது), பார்த்திவேந்தர் - இப்பூமியரசர்களெல்லாம், ஏத்தினார் - (அவர்களை) ஸ்தோத்திரம் பண்ணினார்கள், எ - று. (௩௨)

923. முடியதன் பின்ன ணிந்தார் முரசங்கண் முழங்க மும்மைப்
படிமிசை யரச ரீரெண் ணாயிரர் பணிய விஞ்சைத்
தடவரை யரச ரைம்பத் தஞ்சினுக் கிரட்டி தாழப்
படரொளி பரப்ப வெண்ணா யிரவர்விண் ணோர்ப ணிந்தார்.

(இ - ள்) அதன் பின் - க்ஷீரவாருதியினுடைய க்ஷீரஜலாபிஷேக பூர்வகம் செய்ய வேண்டிய கிரியைகளெல்லாம் எழினி மறைப்பிற் செய்த பிறகு, முரசங்கள் - அஷ்டாதச வாத்தியங்கள், முழங்க - சப்திக்க, முடி - பட்டாபிஷேக யோக்கியத் திருமுடியை, (பெரியோர்), அணிந்தார் - (அவர்க்கு) யாவருமறியச் சூட்டினார்கள், (அப்போது), மும்மைப்படிமிசை - அந்நாட்டுத் திரிகண்டத்திலு முள்ள, ஈரெண்ணாயிர அரசர் - பதினாறாயிரவர்களாகிய ராஜாக்கள், (வரிசைக்கிர

ம[illegible] கூடி), பணிய - (அவர்களை), வணங்கவும், விஞ்சைத்தடவரை யரசர் - விஜயார்த்த பர்வத வாசிகளாகிய வித்தியாதர வாசர்கள், ஐம்பத்தஞ்சினுக்கிரட்டி - நூற்றொருபது பேர்கள், தாழ - வணங்கவும், படரொளிபரப்ப - மிகுதியான ஜோதி விசாலிக்க, விண்ணோர் - கணபத்த தேவாதிபர்கள், எண்ணுயிரவர் - எட்டாயிரம் பேர்களும், பணிந்தார் - வணங்கினார்கள், எ - று. (கூங)

924. யானையின் றொகுதி நாற்பத் திரண்டுநூ றாயிரந்தேர்
மானமற் றதுவே வாசி யொன்பதின் கோடி காலாட்
டானுநாற் பத்தி ரண்டு கோடிதா னவர்க டேவர்
தானமா னங்க ளெண்ணா யிரமறு படையி தாமே.

(இ - ள்) (அப்போது அந்த இராமகேசவர்கட்கு அமைந்திருந்தவை), யானையின் - யானைகளின், தொகுதி - கணக்கானது, நாற்பத்திரண்டு நூறாயிரம் - நாற்பத்திரண்டு லக்ஷங்கள் ஆகும், தேர் - ரதங்களுடைய, மானம் - அளவானது, அதுவே - முன் சொன்ன யானைகளின் கணக்காகிய நாற்பத்திரண்டு லக்ஷங்களாகிய அதுவேயாகும், வாசி - குதிரைகள், ஒன்பதின் கோடி-ஒன்பது கோடிகளாகும், காலாள் தானும் - காலாள்களானவர்கள், நாற்பத்திரண்டு கோடி - நாற்பத்திரண்டு கோடிகளாவா, தானவர்கள் - வித்தியாதரர்களும், தேவர் - கணபத்த தேவர்களும், (ஆகிய), தானம் - இவ்விரு ஸ்தானங்களின், மானங்கள் - தனித்தனிப் பிரமாணங்கள், எண்ணாயிரம் - ஒவ்வொரு வகையிலும் எண்ணாயிரம் பெயர்களாவர், அறுபடையிதாமே - இவ்வாறு சொல்லிய இந்தக் கூட்டம் ஷடங்க பல சேனைகளாம், எ - று.

மற்று - அசை. (கூச)

925. ஆழிவேல் தண்டு சங்க மருமணி வில்லு வைவா
ளேழுமா லிரத னங்க ளேழாயிர மமரர் காப்ப
மாழைமே கலையின் மாதே வியரெண்ணா யிரத்தி ரட்டி
வேழமேற் றிறைகொண் டெய்தும் நாடுமே லுரைத்த தாமே.

(இ - ள்) (இவ்வகைப் படைகளையுடைய இவர்களுள் கேசவனாகிய விபீஷண வாஸுதேவனுக்கு), ஆழி - சக்கராயுதமும், வேல் - வேலாயுதமும், தண்டு - தண்டாயுதமும், சங்கம் - வெற்றிச் சங்கும், அரும் - பெறுதற்கரிதாகிய, மணி - ஜெயகண்டாமணியும், வில்லு - காண்டீபமும், வை - கூர்மை பொருந்திய, வாள் - வாளாயுதமுமென்னும், ஏழு - ஏழும், மால் - பெரிதாகிய, இரதனங்கள் - இரத்தினங்களாம், (இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் ஆயிரம் பேர்களாக) ஏழாயிரமமரர் - ஏழாயிரம் வியந்தர தேவர்கள், காப்ப - (இவற்றைக்) காவல் செய்ய, மாழை - ஸ்வர்ணத்தினால் செய்த, மேகலையின் - மேகலாபரணத்தை யணிந்திரா

நின்ற, மாதேவியர் - முறைமாதேவியர்கள், எண்ணாயிரத்திரட்டி - பதினாறாயிரம் பெயர்களாவர், வேழமேல் - யானைகளின் மேலே, திறைகொண்டு - பகுதிப் பணங்கொண்டு வந்து, (கட்டும்படியாக), எய்தும் - அடைகின்ற, நாடும் - தேசங் களும், மேல் - முன் தேவிமார் கணக்கில், உரைத்ததாம் - சொல்லப்பட்ட சங் கியையாகிய பதினாறாயிரமாகும், எ - று. (ருஉ)

926. மாலைதண் டமோகம் வாளி கலப்பையும் பலன வாகும்
நாலுநல் லியக்கர் நாலா யிரவர்காப் பியற்றிச் செல்வ
ரேலவார் குழலின் மாதே வியருமெண் ணாயி ரவர்
மேலுலாம் மதியம் போலும் மேனியான் விரும்பப் பட்டார்.

(இ - ள்) மாலை - மணிமாலையும், தண்டு - தண்டாயுதமும், அமோகம் - சக்தி குறைதலில்லாத, வாளி - பாணமும், கலப்பையும் - ஹலாயுதமும், பலன வாகும் - பல தேவனுடையனவாகும், நாலு - இந்நாலு இரத்தினங்களையும், நல் - நன்மையாகிய, நாலாயிரவர் - நாலாயிரம் பெயர்களாகிய, இயக்கர் - யக்ஷதேவர்கள், காப்பு - காவல், இயற்றி - செய்து, செல்வர் - செல்வார்கள், (மேலும்), மேல் - ஆகாயத்தில், உலாம் - உலவுகின்ற, மதியம்போலும் - சந்திரன்போலும், மேனி யான் - வெண்ணிறமான சரீரமுடைய அப் பலதேவனாலே, விரும்பப்பட்டார் - இச்சிக்கப்பட்டவர்களாகிய, ஏலம் - மயிர்ச்சாந்தணிந்த, வார் - நீண்ட, குழலின் - அளகத்தையுடைய, மாதேவியரும் - பெருமை பொருந்திய பட்டத்துத் தேவி யரும், எண்ணாயிரவர் - எண்ணாயிரம் பெயர்களாவர், எ - று. (ருசு)

927. கந்திலை நாட்டுக் கண்ட மூன்றினிற் காமர் செல்வத்
திந்துவா ணுதலி னாரோ டின்பநீர்க் கடலை யாடி
யந்தரத் திறைவன் போல வாண்டுகள் பலவுஞ் சென்றார்
வெந்திறற் களிற்று வேந்தன் விபீடண னன் வியோக மானான்.

(இ - ள்) கந்திலை நாட்டு - கந்திலா தேசத்திலே, கண்ட மூன்றினில் - திரிகண்டத்திலேயாகிய, காமர் செல்வத்து - அழகிய அர்த்த சக்ரவர்த்தி ஸம்பத் தில், (சேர்ந்தவர்களாகி), இந்து - சந்திரன் போல, வாள் - ஒளிபெற்ற, நுதலினா ரோடு - நெற்றியையுடைய தேவிமார்களோடு, இன்ப நீர் கடலை - சௌக்கியமாகிற நீர் நிறைந்த சமுத்திரத்தில், ஆடி - மூழ்கி, (அவ்வின்பத்தை யனுபவித்து), அந்தரத்திறைவன் போல - விண்ணுலகத்தரசனாகிய தேவேந்திரனைப் போல, (சுகமுற்று), ஆண்டுகள் பலவும் - பல வருஷங்கள் வரையிலும், சென்றார் - (இவ் விருவரும்) சென்றார்கள், (பிறகு), வெம் - வெவ்விதாகிய, திறல்-வலிமையுள்ள, களிற்று - யானையையுடைய, வேந்தன் - அரசனென்னும் வாஸுதேவனாகிய விபீ ஷணன், வியோகமானான் - தேகவியோகமடைந்தான், எ - று.

கடலை - உருபு மயக்கம். (ருஎ)

928. அருமணி யிழந்த நாகம் போற்பல னலம்வந் தாற்றப்
பெருகிய துயர முற்றுப் பிறவியை வெருவிப் பின்னாண்
மருவிய பொருளும் நாடு மைந்தர்கட் கீந்து மாற்றை
விரகினு லெறியும் வீத ராகமா முனிவ னானான்.

(இ - ள்) (அவ்வாறான பின்), அரும் - அரிதாகிய, மணி - சிரோமணியை, இழந்த - இழந்துவிட்ட, நாகம்போல் - சர்ப்பத்தைப்போல, பலன் - பல தேவனாகிய வீத பயன், ஆற்ற - மிகவும், அலம் வந்து - சுழற்சியுற்று, பெருகிய - பெரிதாகிய, துயரமுற்று - துக்கமடைந்து, பிறவியை - இச்சம்ஸாரப் பிறப்புக்கு, வெருவி - பயந்து, பின்னாள் - பிந்திய நாட்களில், மருவிய - சேர்ந்திராநின்ற, பொருளும் - ஐஸ்வரியமும், நாடும் - தேசத்தையும், மைந்தர்கட்கு - தங்கள் குமாரர்களுக்கு, ஈந்து - கொடுத்து, மாற்றை - இச்சம்ஸாரத்தை, விரகினால் - கிரமத்தினால், எறியும் - கெடுக்கும்படியான, வீதராகம் - ஆசையற்ற, மா - பெரிதாகிய குணம் பொருந்திய, முனிவனானான் - விஷயகஷாய வர்ஜிதனாகிய முனிவரானுக் தன்மையைப் பொருந்தினான், எ - று. (ருஅ)

929. வலம்புரி வண்ண னாரா தனையினு லுடம்பு விட்டிட்
டிலாந்தவ கற்பம் புக்கான் யானவ னின்று வந்தேன்
புலங்கண்மேற் புரிந்து வீந்த கேசவன் புக்க தேச
மிலங்கிப்போய்த் தீர யானங் நரகிற்கண் டிடரை யுற்றேன.

(இ - ள்) வலம்புரி வண்ணன் - வலம்புரிச் சங்கு போலும் வெள்ளை வர்ணத்தையுடைய பலதேவன், ஆராதனையினால் - (ஞான, தர்சன, சாரித்திர, தபோ ஆராதனையாகிய, சதுர்வித) ஆராதனா பாவனையினால், உடம்பு விட்டிட்டு - தனது சரீரத்தை விட்டு, இலாந்தவகற்பம் - லாந்தவகல்பத்தில், புக்கான் - அடைந்தான், அவன் - (அந்தப் பலதேவனாகியிருந்து இறந்து லாந்தவேந்திரனாகிப் பிறந்த தேவனாகிய) அவன், யான் - நானே, இன்று - இப்பொழுது, (சஞ்சயந்த பட்டாரகருடைய, கைவல்ய பூஜை பரிநிர்வாண பூஜைகளைச் செய்வதற்கு), வந்தேன் - வந்தனன், (தரணேந்திரனே ! நீயும் அதற்காகத் தான் இவ்விடததில் வந்தாய்), புலங்கண் மேல் - விஷய வாஞ்சைகளின் மேல், புரிந்து - மிகவும் விரும்பி, வீந்த - இறந்து போன, கேசவன் - அந்த விபீஷணனென்னும் வாஸுதேவன், புக்க - அடைந்த, தேசம் - க்ஷேத்திரமானது, இலங்கி - அவதிஜ்ஞானத்தால் விளங்க, (அதனை அறிந்து அவனிருக்கப்பட்ட இடமாகிய), அந்நரகில் - அந்த நரகத்திலே, யான் - நான், போய் - சென்று, கண்டு - அவனைப் பார்த்து, தீர - அவனது நரக துக்கம் நீங்கும்படி, இடரையுற்றேன் - மிகவும் மனதில் வருத்தமுற்று அவன் சமீபமடைந்து தர்மபோதனை செய்ய வாரம்பித்தேன், எ - று. (ருகு)

ஒன்பதாவது :

பலதேவன் சுவர்க்கம்புக்கச் சருக்கம் முற்றிற்று.

பத்தாவது:

# நிரையத்துளறவுரைச்சருக்கம்.



980. சக்கரப் பிரபை தன்பா னிற்பதற் கார்வம் வைத்துச்
சக்கரப் பிரபை தன்பா னின்றவன் றன்னைக் காணு
மிக்கவெந் துயா முற்றே னவன்றுயர் நீங்க வெண்ணி
யக்கணத் தவனைக் கூடி யறிதியோ வென்னை யென்றேன்.

(இ-ள்) (மேற் கூறியபடி தர்மபோதனை செய்ய நாடி), சக்கரப் பிரபை தன் பால் - சர்க்கராப் பிரபையென்னும் இரண்டாநரகத்தில், நிற்பதற்கு - போய் ஜனித்து நிற்பதற்கேதுவாகிய, ஆர்வம் - பரிக்கிரக வாஞ்சையை, வைத்து - மனதில் தரித்த பாவகர்மத்தினால், சக்கரப்பிரபை தன் பால் - சர்க்கராப்பிரபை யென்னும் அவ்விரண்டா நரகத்தில், நின்றவன் தன்னை - திரவிய கர்ம பந்தனாகி நின்ற அந்நாரகனை, காணு - கண்டு, மிக்க - மிகுதியாகிய, வெம் - கொடுமை பொருந்திய, துயரம் - துக்கத்தை, உற்றேன் - அடைந்திராநின்றவனாகிய நான், அவன் - அந்நாரகனுடைய, துயர் - துக்கமானது, நீங்க - நீங்கும்படி, எண்ணி - ஆலோசித்து, அக்கணத்து - அச்சமயத்திலேயே, அவனைக் கூடி - அவனது சமீபஞ் சேர்ந்து, (அவனை நோக்கி, நாரகனே!), என்னை - என்றனை, அறிதியோ - தெரிவாயோ?, என்றேன் - என்று பூர்வசம்பந்த விருத்தாந்தங்களைச் சொல்ல வாரம்பித்தேன், எ - று. (க)

931. மதுரையா குக வென்பால் வாருணி மகளாய் நீபின்
சதுரமை தத்தை யானேன் மகன்பூர சந்திர னாய்
விதியினா னேற்றென் னோடு மாசுககம் புக்கு விஞ்சைப்
பதியிற்சி தரையா னேனென் மகளிசோ தரையு மானாய்.

(இ-ள்) (அவ்வாறு சொல்ல ஆரம்பித்து நாரகனே!), யான்-நான், மதுரை யாக - (சில பவங்களுக்கு முன்) மதுரையென்னும் பெயரையுடைய பிராம்மண ஸ்த்ரீயாக, (அப்போது), என்பால் - என்னிடத்தே, நீ - நீ, வாருணி - வாருணி யென்னும் பெயருடைய, மகளாய் - புத்திரியாகப் பிறக்க, பின் - மறு சன்மத்தில், (நான்), சதுர் அமை - அழகமைந்த, தத்தையானேன் - இராமதத்தை யென்னும் ராஜ ஸ்திரீயாயினேன், (அப்போது நீ), மகன் - எனக்குப் புத்திரனாகிய, பூரசந்திரன் ஆய் - பூர்ணச்சந்திரனென்னும் பெயருடையவன் ஆனாய், (அப்போது), என்னோடும் - என்னுடனே, விதியினால் - கிரமத்தின்படியினால், நோற்று - விர

தங்களனுஷ்டித்து, (அதன் பலனாக), மாசுக்கம் - மஹாசுக்ர கல்பமென்னும் தேவலோகத்தில், புக்கு - அடைய, (பின்னர் அங்கு நின்றும் ஆயுரவஸான காலத்தில் நான்), விஞ்சைப்பதியில் - வித்தியாதாருலகத்தில், சீதரையானேன் - சீதரை யென்னும் ராஜ ஸ்த்ரீயாக ஜெனித்தேன், (அப்போது நீ), என் மகள் - எனக்குப் புத்ரியாகிய, இசோதரையுமானாய் - யசோதரை யென்னும் பெயருடையவளும் ஆனாய், எ - று.

'புக' என்பது, 'புக்கு' எனத்திரிந்து வந்தது. (உ)

932. கந்தியாய் நோற்றென் னோடுங் காவிட்ட கற்பம் புக்கு
வந்தியா னிரத மாலை மண்ணின்மே லாக நீயு
மந்தரத் திழிந்தென் மைந்த னரதனா யுதனு மாகிச்
சிந்தைமா தவத்தோ டொன்றி யச்சுதஞ் சென்று மீண்டோம்.

(இ - ள்) (அதன் மேல் நீ), கந்தியாய் - ஆர்யாங்கனையாகி, நோற்று-நோன்புகள் நோற்று, என்னோடும் - என்னுடன் கூட, காவிட்ட கற்பம் - காபிஷ்டகல்பத்தில், புக்கு - சேர்ந்து தேவனாய்த் தோன்ற, (பின்னர்), யான் - நான், வந்து - அக் கல்பத்தினின்றும் ஆயுஷ் யாவஸானத்து வந்து, மண்ணின் மேல் - பூமியின் மேலே, இரத மாலையாக - இரத்ன மாலையென்னும் ராஜ ஸ்த்ரீயாக, நீயும் - நீயும், அந்தரத்து - அத்தேவ ருலகத்தினின்றும், இழிந்து - ஆயுஷ் யாவஸானத்து நழுவி, என்மைந்தன் - என் புத்திரனான, இரதனாயுதனும் ஆகி - இரத்தினா யுதனென்னும் பெயரை யுடையவனுமாக, (அதன் மேல் நாமிருவரும்), சிந்தை - தருமத்தியானத்தோடும், தவத்தோ டொன்றி - தபஸோடுஞ் சேர்ந்து, (அப்புண்ணிய கர்ம பலத்தால்), அச்சுதஞ் சென்று - அச்சுதமென்னும் தேவலோகத்தையடைந்து தேவர்களாகித் தேவசுக மனுபவித்து, மீண்டோம் - ஆயுரவஸான காலத்து அக் கல்பத்தினின்றும் திரும்பினோம், எ - று.

புக, ஆக வென்னும் செயவெனெச்சங்கள், புக்கு, ஆகி எனச் செய்தெனெச்சங்களாகத் திரிந்து வந்தன. (௩)

933. தாதகி தீவிற் கீழைக் கந்திலை யயோத்தி யின்க
ணேதமி லிராம னானீ கேசவ னாயி றந்திவ்
வேதனை நரகத் தாழ்ந்தாய் விழுத்தவத் திலாந்தம் புக்கே
னோதியா னுன்னைக் கண்டிங் குறுதியா னுரைக்க வந்தேன்.

(இ - ள்) (அவ்வாறு திரும்பி), தாதகிதீவில் - தாதகிஷண்டத்வீபத்தில், கீழை - பூர்வபாக விதேக க்ஷேத்திரத்தில், கந்திலை - கந்திலா நாட்டில், அயோத்தியின் கண் - அயோத்தியாபுரத்தில், ஏதமில் - குற்றமில்லாத, இராமன் - பலதேவன், நான் - யானாகவும், நீ - நீ, கேசவன் - வாஸுதேவனாகவும், ஆய் - ஆக,

(பின்னர் நீ), இறந்து - மரணமடைந்து, இவ்வேதனை - இப்படிப்பட்ட துன்பத்தையுடைய, நரகத்து - நரகத்தில், ஆழ்ந்தாய் - கர்மோதயத்தால் விழுந்து நரகனாய், யான் - நான், விழு - பெரிதாகிய, தவத்தில் - தபத்தினாலே, லாந்தம் - லாந்தவ கல்பத்தை, புக்கேன் - அடைந்தேன், (அவ்வாறடைந்து), ஓதியால் - எனக்குண்டாகிய அவதிஜ்ஞானத்தால், உன்னை - உன்னை, கண்டு - தெரிந்து, இங்கு - இவ்விடத்தில், உறுதி - உனக்குறுதியாகும்படியான தர்மங்களை, உரைக்க - சொல்லும்படி, வந்தேன் - உனது சமீபமடைந்தேன், எ - று.

இதுவும், அடுத்த செய்யுளும் குளகம். (௫)

934. என்றலு மிறந்த மேலைப் பிறவிக ளறிந்திட் டென்னை
வந்துடன் வணங்கி வீழ்ந்து மயங்கினா னவனைத் தேற்றி
இந்திர விபவ மேனு நின்றதொன் றியார்க்கு மில்லை
வெந்துயர் நரகின் வீழா வுயிர்களு மில்லை யென்றேன்.

(இ - ள்) என்றலும் - என்று யான் சொல்லவும், மேலை - முன்னாளில், இறந்த - (உண்டாகி) நீங்கப்பட்ட, பிறவிகள் - பிறப்புக்களை, உணர்ந்திட்டு - (அவன்) பவஸ் மிருதியாலறிந்து, உடன் - உடனே, வந்து - என் சமீபத்தில் வந்து, என்னை - என்றனை, வணங்கி - வணங்கினவனாகி, வீழ்ந்து - எனக்கு முன்னே வீழ்ந்து, மயங்கினான் - மயக்கமடைந்தான், (அப்போது நான்), அவனை - அந்நாரகனை, தேற்றி - தெளியும்படி செய்து, (அவனை நோக்கி, நாரகனே!) இந்திர விபவமேனும் - தேவேந்திர வைபவமானாலும், நின்றதொன்று - சாசுவதமாக நிற்கப்பட்ட அனுபவமொன்று, யார்க்கும் - எவர்களுக்கும், இல்லை - இச் சம்ஸாரத்தி லில்லை, வெம் - வெப்பம் பொருந்திய, துயர் - துக்கத்தையுடைய, நரகின் - நரகத்திலே, வீழா - அடையாத, உயிர்களும் - ஜீவன்களும், இல்லை - இச்சம்ஸாரத்தில் கிடையாது, என்றேன் - என்று சொன்னேன், எ - று. (௬)

935. மாற்றிடைச் சுழன்று வாழு முயிர்கட்கு வந்து செல்வந்
தோற்றின தொடரன் மாய்த லியல்புநீ கவல வேண்டா
மாற்றுதற் கரிய துன்பம் பெரிதென்று மயங்க வேண்டா
மாற்றுதற் கெளிது கீழ்கீழ் நரகத்தல் லியல்ப றிந்தால்

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும்), மாற்றிடை - (நரக, திரியக் மானுஷ, தேவரென்னும் சதுர்கதி) சம்ஸாரத்தில், சுழன்று - பரிப்பிரமித்துச் சுழன்று, வாழும் - வாழுகின்ற, உயிர்கட்கு - ஜீவன்களுக்கு, செல்வம் - ஐஸ்வரிய மானது, வந்து - வந்து, தோற்றின - உண்டானதாகி, தொடரல் - சேர்ந்திருப்பதும், மாய்தல் - மாய்ந்து விடுவதும் (அதாவது: நீங்கி விடுவதும்), இயல்பு - இச்சம்ஸாரத்தின் இயற்கையாகும், (ஆதலின்), நீ - நீ, கவலவேண்டாம் - (முன் மனுஷ்ய தேவ, பரியாயத்திலிருந்தேனே இப்போது அப்பரியாய ஸம்பத் சுகங்களைவிட்டு,

நாகபரியாய துக்கத்தை யடைந்தேனேயென்று) வருத்தமடைய வேண்டாம், மாற்றுதற்கரிய - நீக்குதற்கரிய, துன்பம் - நீ யடைந்திருக்கிற இவ்விரண்டாநரக துன்பம், பெரிதென்று - மிகவும் பெரியதென்று, மயங்கவேண்டாம்- நீ பிரமிக்க வேண்டாம், கீழ் கீழ் நரகத்து - இதற்குக் கீழே கீழேயுள்ள நரகங்களின், அவ் வியல்பு-அந்த ஸ்வபாவத்தை, அறிந்தால்-தெரிந்து கொண்டால், ஆற்றுதற்கு-இவ் விரண்டாநரக துன்பம் சகித்தற்கு, எளிது-எளிதாகும், (அவற்றின் விவரங்களைக் கூறுகின்றேன் கேள்), எ - று. (சு)

936. ஏழுள நரக நாம மிரதனஞ் சக்க வாலு
வாழிய பங்கந் தூமந் தமந்தமத் தமத்த மாகும்
பாழியிந் தகங்கள் சேணி பகிணகந் தொகுப்ப வந்த
வேழினும் புகவெண் பத்து நான்குலக் கங்க ளாமே.

(இ - ள்) ஏழுள - ஏழாயிரா நின்ற, நரகம் - நரகங்களினுடைய, நாமம் - பெயர்கள், இரதனம் - ரத்னப்பிரபையும், சக்கம் - சர்க்கராப் பிரபையும், வாலு - வாலுகாப்பிரபையும், ஆழிய - பெரிதாகிய, பங்கம் - பங்கப் பிரபையும், தூமம் - தூமப் பிரபையும், தமம் - தமப் பிரபையும், தமத்தமத்தமாகும் - தமஸ்தமப் பிரபையுமாகும், பாழி - பலம் பொருந்திய, இந்தகங்கள் - இந்திரகங்களும், சேணி - ஸ்ரேணிபந்தங்களும், பகிணகம் - புஷ்ப பிரகீர்ணங்களும், தொகுப்ப - சேர்க்க, வந்த - வரப்பட்ட ஸங்கியைகளானவை, ஏழினும் - ஏழுநரகங்களிலும், புக-சேர, எண்பத்து நான்கு லக்கங்களாம் - எண்பத்து நாலு லட்சம் ஆவாஸங்களாகும், எ - று. (எ)

937. ஒன்றுமூன் றைந்து மேழு மொன்பதும் பத்தோ டொன்று
நின்றமூன் றோடு பத்து நிரையத்துப் புரைகள் மேன்மே
லொன்றுமூன் றேழு பத்து மொருபத்தே ழிருபத் தீரி
னின்றமூன் றோடு முப்பா னாழிகீழ் புரைதோ றாயு.

(இ - ள்) நிரையத்து - நரகங்களில், புரைகள் - புரைகளானவை, ஒன்று - (ஏழா நரகத்தில்) ஒரு புரையும், மூன்று - (ஆறுநரகத்தில்) மூன்று புரையும், ஐந்து - (ஐந்தா நரகத்தில்) ஐந்து புரையும், ஏழும் - (நாலாநரகத்தில்) ஏழுபுரை யும், ஒன்பதும் - (மூன்றா நரகத்தில்) ஒன்பது புரையும், பத்தோடொன்று - (இரண்டா நரகத்தில்) பதினொரு புரையும், மூன்றோடு பத்து - (முதல் நரகத் தில்) பதின்மூன்று புரையும், மேன்மேல் - ஒன்றுக்கொன்று மேலே மேலே, நின்ற - இராநின்றன, கீழ்ப்புரைதோறும் - கீழ் கீழ்ப் புரைகள்தோறும், ஆயு-நார கர்களுடைய உத்கிருஷ்டாயுஷ்யமானது, ஆழி - கடல்கள், ஒன்று - (முதல் நர கத்தில் கீழ்புரையில் அதாவது : பதின்மூன்றாம் புரையிலிராநின்ற நாரகர்களுக்கு) ஒரு கடலும், மூன்று - (இரண்டா நரகத்துக் கீழ்ப்புரை நாரகர்களுக்கு) மூன்று

கடலும், ஏழு - (மூன்ற நாகத்துக் கீழ்ப்புரையில்) ஏழுகடலும், பத்து - (நாலா நரகத்துக் கீழ்ப்புரையில்) பத்துக்கடலும், ஒருபத்தேழு - (ஐந்தா நரகத்துக்கீழ்ப் புரையில்) பதினேழுகடலும், இருபத்தீரின் - (ஆரு நாகத்தின் கீழ்ப்புரையி லிராநின்ற நாரகர்களுக்கு) இருபத்திரண்டு கடலும், மூன்றேடு முப்பான் - (ஏழாநரகத்தில்) முப்பத்து மூன்று கடலும், நின்ற - நிலைபெற்றிராநின் றன, எ - று.

'இருபத்தீரின்' என்பதில், இன் - சாரியை. (அ)

வேறு.

938. முதலா நரகத் தின்முதற் புரையிற்
பதினா யிரமாண் டுகளாஞ் சிறுமை
விதியான் மிகையா யுகமே லனகீழ்
பதியார் பரமா யுகமல் லனவாம்.

(இ - ள்) முதலா நரகத்தின் - முதல் நரகத்து, முதற்புரையில் - முதல் புரையிலிராநின்ற நாரகர்களுக்கு, சிறுமை - ஜகன்யாயுஷ்யமானது, பதினாயிரம் ஆண்டுகளாம்-பதினாயிரம் வருஷங்களாகும், விதியால்-கிரமத்தினுல், மேலன-மேல் புரையிலுள்ளவர்களின், மிகையாயுகம் - உத்கிருஷ்டாயுஷ்யமானது, கீழ் பதி யார் - கீழ் புரையிலுள்ளவர்களுக்கு, பரமாயுகமல்லன - உத்கிருஷ்டாயுஷ்யமல் லாத ஜகன்யாயுஷ்யமாக, ஆம் - ஆகும், எ - று.

உத்கிருஷ்டாயுஷ்யம் வரிசைக் கிரமமாய், முதல் புரையில் தொண்ணூறாயி ரம் வருஷங்களாகும்; இரண்டாம்புரையில் தொண்ணூறு லக்ஷம் வருஷங்களாகும்; மூன்றாம் புரையில் அஸங்கியாத பூர்வகோடி வருஷங்களாகும்; நாலாவது புரை யில் ஒரு கடலில் பத்திலொ ருபாகமாகும்; ஐந்தாம் புரையில் ஒரு கடலின் பத்துப் பங்கில் இரண்டு பங்காகும்; ஆரும்புரையில் பத்தில் மூன்று பங்காகும்; ஏழாம்புரை யில் பத்தில் நான்கு பங்காகும்; எட்டாம்புரையில் ஒரு கடலில் பத்தில் ஐந்து பங்காகும்; ஒன்பதாம் புரையில் ஒரு கடலில் பத்தில் ஆறு பங்கு ஆகும்; பத்தா வது புரையில் ஒரு கடலில் பத்தில் ஏழுபங்காகும்; பதினொன்றாவது புரை யில் ஒரு கடலில் பத்தில் எட்டுப் பங்காகும்; பன்னிரண்டாவது புரையில், ஒரு கடலில் பத்தில் ஒன்பது பங்காகும்; பதின்மூன்றாவது புரையில் ஒரு கடல் சரியாய் ஆகும். (க)

939. முழமூன் றயர்வா முதலாம் புரையின்
முழமூன் றவில்லேழ் விரலா றளகீ
ழெழுவா யிதைஞ்னூ றவில்லெய் தளவும்
வழுவா திறுதொ றமிரட் டியதாம்.

(இ - ள்) முதலாம் புரையின் - முதல் நரகத்து முதல் புரையிலிராநின்ற நாரகர்களுக்கு, உயர்வு - சரீரோத்ஸேதமானது, முழமூன்று - மூன்று முழம், ஆம் - ஆகும், கீழ்-அம்முதல் நரகத்துப் பதிமூன்றாவது புரையில் நாரகர்களுக்கு, முழமூன்று - மூன்று முழமும், வில்லேழ் - ஏழுவில்லும், விரலாறு - ஆறங்குலமு மாகிய ஏழேமுக்காலே வீசம் வில்லு, உள - உன்னதமாகவுளதாம், இது - இந்த ஏழேமுக்காலே வீசம் வில், எழுவாய் - (ஏழு நரகத்துக்கும்), ஏழுதாம், ஐஞ்ஞூறு வில்லெய்தளவும் - ஐந்நூறு வில் அடைகிற பரியந்தம், வழுவாது-தப்பாமல், இறு தொறும் - கீழ் கீழ்ப்புரைகள்தோறும், இரட்டியதாம் - இரட்டித்த இரட்டித்த உன்னதங்களாகும், எ - று.

ஈறுதொறும் என்பது - இறுதொறுமென்றாயிற்று. (௧௦)

940. புகையைந் துமுதற் புரைபுக் கவர்தா
முகையார் விழுவா ருளவா யுவெலாம்
புகையே ழொடைஞ்ஞூ றுவில்கா வதமூன்
றுகையார் விழுவார் முதலீற் றினுளார்.

(இ - ள்) முதற்புரை புக்கவர்தாம் - முதல் நரக முதற் புரையிலடைந்திராநின்ற நாரகர்கள், புகையைந்து - ஐந்து யோஜனையுன்னதம், உளவாயு வெலாம் - தங்களுக்குண்டாகிய ஆயுஷ்யநாளெல்லாம், உகையார் விழுவார் - எழும்பித் தலைகீழாபவராய் இடைவிடாமல் விழுவார்கள், புகையேழொடு - ஏழுயோஜனையோடு, ஐந்நூறுவில் - ஐந்நூறு வில்லும், காவத மூன்று-மூன்றுகாதமுமாகிய இந்த ஏழேமுக்காலே வீசம் யோஜனை உயரம், முதலீற்றினுளார் - அம்முதல் நரகத்துப் பதின்மூன்றாவது புரையிலுள்ள நாரகர்கள், உகையார் விழுவார்-எழும்பித் தலை கீழாபவராய் நரக பூமியில் விழுவார்கள், எ - று. (௧௧)

941. எழுவா யதிரட் டியிரட் டியதாய்
வழுவா திறுவாய் புரைதோ றும்வரா
வெழுதா நரகத் தியல்பா யவைஞ் ஞூ
றொழியா துவிழுந் தெழுமோ சனையே.

(இ - ள்) எழுவாய் - ஏழுதாம், அது - அந்த ஏழேமுக்காலே வீசம் யோஜனை, இரட்டியிரட்டியதாய் - இரட்டித்த இரட்டித்ததாகி, வழுவாது - தப்பாமல், இறுவாய்புரைதோறும் - கீழ்கீழ்புரைகள் தோறும், வரா - வந்து, எழுதாநரகத்து - ஏழாநரகத்தில், (உள்ள நாரகன்), இயல்பாய-ஸ்வபாவமாகிய, ஐஞ் ஞூறு யோசனை - ஐந்நூறு யோசனை உன்னதம், ஒழியாது - இடைவிடாமல், விழுந் தெழும் - எழும்பித் தலைக்கீழாக விழுவான், எ - று.

'ஏழுதாம்' என்பதில், தாம் - அசை. (௧௨)

942. எறிவெம் படையா லிவர்வீழ்ந் தெழலா
லுறுவெந் துயரல் லதுடம் புவிடார்
கறுவா திகடும் பரிணா மமிடை
யெறியா வகையா யுவையாற் றலினே.

(இ - ள்) எறி - சரீரங்களை வெட்டும்படியான, வெம் - வெப்பம் பொருந்திய, படையால்-(அந்நரக பூமியிலிரா நின்ற) ஆயுதங்களினால், (சரீரம் வெட்டுண்டு), இவர் வீழ்ந்தெழலால் - இந் நாரகர்கள் இடைவிடாமல் எழும்பி விழுதலால், உறும் - அடையப்பட்ட, வெம் - வெப்பம் பொருந்திய, துயரல்லது - துக்கங்களே யல்லாமல், கறுவாதி - குரோதம் முதலாகிய, கடும்பரிணாமம் - அசுப லேசியா பரிணாமமானது, இடை யெறியாவகை - நடுவில் சேதிப்பதற்குக் கூடாத விதமாய், ஆயுவை - தங்களுக்குண்டாகிய ஆயுஷ்ய ஸ்திதியை, ஆற்றலின் - உண்டு பண்ணுகிறதால், உடம்புவிடார் - சரீரத்தினீங்கார், (அதாவது : அபமிருத்யாயுஷ்யமில்லாதவர்க ளாவார்கள்), எ - று. (கரு)

943, வினையே துயரத் தைவிளைப் பதலால்
நினைவார் செயல்மற் றிலைநீ டுயிரை
முனைமூட் டுவர்கீ ழுளதே வரிவன்
உனைமுன் னினசெய் தனனென் றுரையா.

(இ - ள்) உயிரை - அப்படிப்பட்ட நரகத்திலடைபவர்களின் உயிரை, நீடு - பெரிதாகிய, வினையே - (அவ்வவ்வுயிர்கள் முன் செய்த பாவகர்மத்தினாலாகிய) திரவிய பாபகர்மங்களே, துயரத்தை - துன்பத்தை, விளைப்பதலால் - (உதயமாகித்) துன்பஞ் செய்வதல்லது, நினைவார் செயல் - இப்படித் துன்பமுறுகின்றவர்களை நினைத்து அத்துன்பந்தீர பிரதிகாரக் கிரியைகளால் செய்யப்படுங் காரியங்கள், இல்லை - அந்நரகத்தில் கிடையாது, (ஆனாலும்), கீழுள தேவர் - பவண தேவர்களானவர்கள், (அந்நரகத்தில் போய் நாரகர்களைப் பார்த்து ஒவ்வொருவரையும் தனித்தனியாக), இவன் - இந்நாரகனானவன், உனை - உனக்கு, முன் - முன் சன்மத்திலே, இன செய்தனன் - பொல்லாங்குகளைச் செய்தான், என்று - என்று, உரையா - கலகஞ் சொல்லி, முனை மூட்டுவர் - ஒருவர்க்கொருவர் சண்டையை உண்டு பண்ணுவார்கள், எ - று.

இப்படித் துன்பம் அதிகமாவதே ஒழிய விலகுந்தன்மை ஆயுஷ்யமுள்ளவரையில் நாரகர்க்கு அரிதென்பது ஒருவகையாலாகிய தென்பது இதன் தாத்பரியம். இனசெய்தான் என்பது இனசெய்தானென்று வந்தது. உனை - உருபுமயக்கம். ()

944, கணமும் மிடையின் றியெழும் பசியா
றுணவென் றெனவந் துலகத் துளநஞ்

சிணையில் லெனகாய்ந் தவிரும் பினீ
ரணையும் படியா லணையா வடுமே.

(இ - ள்) கணமும் - (அந்நாரகர்களுக்கு) ஒரு நிமிஷமும், இடையின்றி - இடை விடாமல், எழும் - உண்டாகிய, பசியால் - பசியினால், உணவென்றென - அன்னம் எப்பொழுதுகிடைக்குமென்று நினைத்த வளவில், உலகத்துள - அந்நரக லோகத்திலுள்ள, நஞ்சு - விஷ ஸ்கந்தங்களெல்லாம், வந்து - அவர்களிடத்தில் வந்து, இணையில்லென - இதற்கு நிகரில்லை யென்று சொல்லும்படி, காய்ந்த - கருமான் உலையில் வெந்த, இரும்பினை - இரும்பினை, நீர் - ஜலமானது, அணையும் படியால் - சேர்ந்து ஏகமயமாவது போல், அணையா - சரீரத்திற் செறிந்து, அடும் - துன்பஞ் செய்யா நிற்கும், எ - று. (கஇ)

வேறு.

945. மேருநே ரிருப்பு வட்டை யிட்டவக் கணத்தி னுள்ளே
நீரென வுருக்குஞ் சீத வெப்பங்க ணின்ற கீழ்மே
லார்வமி லறிவன் றந்த நூலினைந் தாவ தன்னிற்
கார்முகில் வண்ண சீத வெப்பங்க ணின்ற கண்டாய்.

(இ - ள்) கார்முகில் வண்ண - கரிய மேகம்போன்ற நிறமுடைய நாரகனே!, மேருநேர் - மஹாமேரு பர்வதத்திற்குச் சமானமாகிய, இருப்பு வட்டை - இரும்புக்குண்டை," இட்டவக்கணத்தினுள்ளே அந்நரக பூமியில் இட்டஸமயத்திலே, நீரென - அது ஜலமாகும்படி, உருக்கும் - உருக்கும்படியான, சீதம் - சீதாவாஸங்களும், வெப்பங்கள் - உஷ்ணவாஸங்களும், கீழ்மேல் - கீழ் மேலாக (அதாவது: கீழில் சீதாவாஸங்களும் மேல் நரகங்களில் உஷ்ணவாஸங்களும்), நின்ற - நிலைபெற்றிருக்கின்றன, ஆர்வமில் - ராகமில்லாத (வீதராகனாகிய), அறிவன் - கேவல ஞானத்தையுடைய ஸர்வஜ்ஞன், தந்த - தெரிவித்த, நூலின் - பரமாகமத்திலே, (கூறியபடி) ஐந்தாவதன்னில் - ஐந்தா நரகத்திலே, சீதவெப்பங்கள் - சீதாவாஸங்கள் உஷ்ணவாஸங்கள் இரண்டும், நின்ற - நிலை பெற்றிருக்கின்றன, எ - று.

ஐந்தாநரகத்திலே மேலே மூன்று புரையிலும் அதற்கு மேல், நாலு, மூன்று, இரண்டு, ஒன்றுமாகிய நரகங்களில் உஷ்ணவாஸமும், அந்த ஐந்தாவது நரகத்திலே கீழ் இரண்டு புரையிலும், ஆறு நரகத்திலும், ஏழாவது நரகத்திலும் சீதாவாஸங்களுமாகும்.

கண்டாய் - அசை. (கஎ)

946. வேண்டிய வதற்கு மாறா விகுவணை யெட்டு மெய்யின்
மாண்பில் தோன்று நம்மை மாறமுன் செய்ய வந்தங்

ஈண்டிய பாவத் தாலேழ் நரகத்து மிரட்டிக் கீழ்க்கீழ்
மூண்டதீ மறுகித் தீமை முறுகுந்தீ வினைகளாலே.

(இ - ள்) வேண்டியவதற்கு - நாரகர்கள் தங்களால் இச்சிக்கப்பட்ட விஷயத்திற்கு, மாறு - மாறுபாடாய், விகுவனை யெட்டு - எட்டுப்பிரகாரமான விகுர்வணைகள், மெய்யில் - அவர்களுடைய சரீரத்தில், மாண்பில - மாட்சிமையில்லாதனவாக, தோன்றும் - ஏற்படும், நம்மை - ஆத்மனுகிய நம்மை, முன் - முன் சன்மத்தில், மாறு செய்ய - மாறுபாடாக மறைவைச் செய்ய (அதாவது: மாய்கையைச் செய்ய), வந்து - (அப்படிப்பட்ட மோஹனீயராகத்வேஷ பரிணத பாவ பாபகர்மத்தினல் ஆத்மனிடத்தில்) வந்து, அங்கு - அவ்வாத்ம பிரதேச பரிஸ்பந்தமாகிய அவ்விடத்தில், ஈண்டிய - சேர்ந்திராநின்ற, பாவத்தால் - திரவிய பாபகர்மத்தினுல், ஏழ் நரகத்தும் - இவ்வேழு நரகங்களுள்ளும், கீழ் கீழ் - ஒன்றுக்கொன்று கீழே கீழே யிருக்கப்பட்ட நரகங்களில், இரட்டி - இரட்டித்ததாகி, மூண்ட - மூளப்பட்ட, தீ - அக்கினியினுலே, மறுகி - வருந்த, தீவினைகளாலே - துஷ்கர்மோதயத்தால் ஆகிய துன்பங்களினுல், தீமை - கொடுமையானது, முறுகும் - அதிகரிக்கும், எ - று. (கஎ)

947. இயல்பினுந் துன்ப மென்று மேழ்நர கத்து நீங்கா
மயரிகள் செய்வ வெல்லாம் வந்துவந் துற்று நீங்கும்
புயலுறு தடக்கை வேந்தே புலசுதேன் கள்ளை யுண்டா
ருயலுறு வகையிற் செம்பை யுருக்கிவாய் பெய்கின் றாரே.

(இ - ள்) புயலுறு தடக்கை வேந்தே - மேகத்தை நிகர்த்த (அதாவது: மேகம் போல கொடுக்கும்) கையை முன் சன்மத்திலுடைத்தாகிய விபீஷணனென்னும் அரசனுகிய நாரகனே!, ஏழ் நரகத்தும் - ஏழு நரகங்களிலும், இயல்பினும் - ஸ்வபாவத்தினுலாகிய, துன்பம் - (எழுந்து விழுதலாகிய) துக்கம், என்றும் - எப்பொழுதும் (அதாவது: ஆயுஷ்ய பரியந்தம்), நீங்கா - நீங்காத, மயரிகள் - அஜ்ஞானிகளாகிய நாரகர்கள், செய்வவெல்லாம் - ஒருவருக்கொருவர் கலஹமிட்டுச் செய்கின்ற துக்கங்களெல்லாம், வந்துவந்துற்று - வந்தடைந்து வந்தடைந்து, நீங்கும் - நீங்கி நீங்கியுண்டாகும், புலசுதேன் கள்ளையுண்டார் - (பூர்வ சென்மத்தில்,) மாமிசம் மது கள்ளாகிய இவைகளை உண்டவர்களை, (இந்நரகங்களில்), உயலுறுவகையில் - பிழைக்க முடியாத வகையால், (புராதன நாரகர்கள்), செம்பை - செம்பை, உருக்கி - ஜலமாக உருக்கி, வாய் - நூதன நாரகனுடைய வாயில், பெய்கின்றார் - கொடிறுகளால் ஊற்றுகின்றார்கள், எ - று. (கஅ)

948. அறமறி வடக்க மாண்மை குடிப்பிறப் பழிய வன்பிற்
பிறர்மனை நலத்திற் சேர்ந்தார் பேரழற் குட்டந் தன்னின்

முறுகவெந் துருகுஞ் செப்புப் பாவையை முயங்க மூர்ச்சித்
தறிவழிந் தலம்வந் தாற்று தாற்றுகின் றார்க ளையா.

(இ - ள்) ஐயா - முன் விபீஷணனாகியிருந்த ஐயனாகிய நாரகனே!, அறம்- தர்மமும், அறிவு - ஞானமும், அடக்கம் - ஸம்யமமும், ஆண்மை-புருஷத்துவமும், (அதாவது: பௌருஷமும்), குடிப்பிறப்பு - நற்குடிப்பிறப்பும், (ஆகிய இவைக ளெல்லாம்), அழிய - நாசம் அடையும்படி, அன்பில் - மோஹனீயோதய ஜனித அப்பிரசஸ்தராக பரிணதியினால், பிறர்மனை நலத்தில் - அன்னிய ஸ்த்ரீக ளுடைய காம அனுபோகத்தில், சேர்ந்தார் - சேர்ந்தவர்கள், பேர் - பெரிதாகிய, அழற்குட்டந் தன்னில் - அக்னி ஸமூஹத்தின் குழியில், முறுக - உஷ்ணம் மிக ஏறும்படியாக, வெந்து - வேகப்பட்டதாகி, உருகும் - உருகும்படியான நிலைமையை யுடைய, செப்புப்பாவையை - செம்பாலாகிய பொம்மையை, முயங்க - சேர்ந்து தழுவி, மூர்ச்சித்து - மயக்கமடைந்து, அறிவழிந்து - புத்திகெட்டு, அலம் வந்து - வருத்தமுற்று, ஆற்றாது - பொறுக்க முடியாமல், அரற்றுகின்றார்கள் - சோகஸ் வரத்தால் கூக்குரலிட்டு அழா நின்றார்கள், எ - று. (கக)

949. ஊன்சுவைத் துறுதி யோரா ருள்ளத்திற் கொடிய ராகிக்
கூன்சிலைக் கணையோ டேந்திக் கொலைத்தொழில் புரிந்து வந்தார்
தான்செல விட்ட நாய்போற் கடியநாய் கவர வஞ்சி
வான்சினை யிலவ மேற்றி வந்துவீழ்ந் தரற்று கின்றார்.

(இ - ள்) உறுதியோரார் - உறுதியாகிய தர்மத்தை அறியாதவர்களாகி, உள்ளத்தில் - மனதில், கொடியராகி - பொல்லாங்கினை யுடையவர்களாகி, கூன் - வளைந்திராநின்ற, சிலை - வில்லை, கணையோடு - அம்புகளுடன், ஏந்தி - தரித்து, கொலைத்தொழில் - ஜீவஹிம்ஸைத் தொழிலிலே, புரிந்து - மிகவும் விரும்பி (அதாவது : ஹிம்ஸானந்த தத்பரர்களாய்), ஊன் சுவைத்து-மாம்ஸ போஜிகளாகி, வந்தார் - வந்தவர்கள், செலவிட்ட - (பூர்வஜென்மத்தில் வேட்டையாடத் தொடங்கிப் பிராணிகள் பேரில் கடிக்கும்படி) ஏவப்பட்ட, நாய்போல் - நாய்களைப் போல், (புராதன நாரகர்கள் கூட்டமாகிய), கடிய - பொல்லாங்காகிய, நாய் - நாய் கள், கவர - (தங்களைக்) கடிக்க, அஞ்சி - பயந்து, வான் - பெரிதாகிய, சினை - கிளைகளையுடைய, இலவம் - முள்ளிலவமரத்தில், (சில நாரகர் கூடி), ஏற்றி - ஏறச்செய்து, (மறுபடியும் அங்கு நின்றும் கீழே விழும்படி அடித்தலால்), வந்து வீழ்ந்து - நரக பூமியில் வந்து வீழ்ந்து, அரற்றுகின்றார் - அழுகின்றார்கள், எ-று.

தான் - அசை. (உ0)

950. மனையறம் மறந்து மன்றி னின்றுவான் குடிக ளையத்
தனம்வலி யதனின் வாங்கிச் சாலவுந் தளர்வு செய்தார்

துன்னமுடி விலாத முள்ளின் மத்திகைப் புடையி னுங்கி
நின்னவருந் துயரந் துய்த்து நெடிதுயிர்ப் பார்க ளையா.

(இ - ள்) ஐயா - ஐயனாகிய நாரகனே!, மனையறம் - இல்லறம் என்னும் தர்மத்தை, மறந்து - தெரியாமல் மயங்கி, மன்றினின்று - சபையிலே நீதிநாயக ஸ்தானம் வகித்து நின்று, வான் - பெரிதாகிய (அதாவது: பாரம்பரியமாக வரா நின்ற), குடிகள் - ஜனசமூகங்கள், நைய - வருந்தும்படி, தனம் - அவர்கள் சம்பாதித்த திரவியங்களை, வலிய்தனின் - (நியாய விரோதமாக) வல்லமையினாலே, வாங்கி - வாங்கிக்கொண்டு, சாலவும் - மிகவும், தளர்வு செய்தார் - சனங்களுக்கு வருத்தத்தைச் செய்தவர்கள், (அப்பாவ வினையினுதயத்தால் நரகத்திற் செனிக்க, அவர்களைப் புராதன நாரகர்கள் கூடிக்கொண்டு அடிக்கும்), துன்ன - கூர்மை பொருந்திய, முடிவில்லாத - கணக்கில்லாத, முள்ளின் - முட்களையுடைய, மத்திகைப்புடையின் - சம்மட்டியடிகளினால், நுங்கி - சரீரம் நொறுங்கி, நினை வரும் - எண்ணற்கரிய, துயரம் - கஷ்டங்களை, துய்த்து - அநுபவித்து, நெடி துயிர்ப்பார்கள் - பெருமூச்செறிந்து நிற்பார்கள், எ - று. (உக)

வேறு.

951\. வலையிலுயிர் வாரியதன் மாறுவிலை கொண்டார்
நிலையகழு வேறிநிணம் வந்தொழுக நின்றார்
விலையின்முடை கொண்டுணலை மேவினர்கள் கண்டாய்
நிலையில்பெருஞ் சீக்குழியி னின்றுசுழல் கின்றார்.

(இ - ள்) வலையில் - வலை முதலாகிய கருவிகளினால், உயிர் - மஸ்யாதி ஜீவ சமூகங்களை, வாரி - கொலை செய்து வாரி, அதன்மாறு - அதற்குப் பிரதியாக, விலை - கிரயத்தை (அதாவது: பெறுமானமாக இதர வஸ்துக்களான தன தான்யாதிவகைகளை), கொண்டார் - பெற்றவர்கள், (நரகத்திற் செனித்து), நிலைய - அந்நரகத்தில் நிலை பெற்றிராநின்ற, கழு - கழுமரத்தில், ஏறி - புராதன நாரகர்கள் ஏறும்படி செய்ய ஏறி, நிணம் - சரீரத்தினின்றும் இரத்த மாம்ஸாதி நிணங்கள், வந்து - வெளியாகி வந்து, ஒழுக - உதிர, நின்றார் - இரணவேதனையில் நின்றவர்களாவார்கள், விலையின் முடை - விற்கப்பட்ட மாமிசத்தை, கொண்டு - விலைக்கு வாங்கிக்கொண்டு, உணலை - உண்பதை, மேவினர்கள் - பொருந்தினவர்களாகிய மாமிச போஜிகள், நிலையில் - நீச்சு நிலையின்றி ஆழமாகிய, பெரும் - விசாலமாகிய, சீக்குழியுள் - சீயினால் நிறைந்த பெருங்குழியில், நின்று - தங்கி நின்று, சுழல்கின்றார் - சுழன்று வருந்துகின்றவர்களாவார்கள், எ - று. (உஉ)

952\. இல்லையுயிர் நல்வினை யிறந்தவர் பிறப்பெனச்
சொல்லினவர் செம்புருக்கி வாயிற்பெய் துயிர்வார்

கல்வியொடு புணர்ந்துகடை நல்லொழுக்க மென்பா
ரெல்லையில வெந்துயர மெய்தியுழல் கின்றார்.

(இ - ள்) உயிர் - ஜீவன்களும், நல்வினை - புண்ணிய கர்மாதிகளும், இறந்தவர் - மரணமடைந்தவர்கள், பிறப்பு - மறுபடி பிறத்தலும், (ஆகிய இவைகள்), இல்லையெனச் சொல்லினவர் - இல்லையென்று (நாஸ்திகமே பிரமாணமென்று அர்த்த அயதா கிரஹணமாகிய, மூஹ்ய புத்தியினால்) சொல்லுபவர்கள், (நரகத்திற் சென்மித்துப் புராதன நாரகர்களால்), செம்பு - செம்மை, உருக்கி - உருக்கி, வாயிற் பெய்து - வாயிலூற்ற, (சகிக்க முடியாத துன்பமுற்று), உயிர்வார் - பெருமூச்சு விடுவார்கள், கல்வியொடு புணர்ந்து - வித்தையோடு சேர்ந்து (அதாவது: படித்திருந்தும் யுக்தி குறைவினால்), நல்லொழுக்கம் - ஸம்மியக் சாரித்திரமானது, கடையென்பார் - தாழ்ந்த நிலையென்று சொல்லுபவர்கள், (நரகத்திற் செனித்து), எல்லையில் - மட்டுமித மில்லாததாகிய, வெம் - வெப்பம் பொருந்திய, துயரம் - துன்பங்களை, எய்தி - அடைந்து, சுழல்கின்றார் - சுழலாநின்றார்கள், எ - று. (உரு)

953 பொய்யுரை புனைந்துபொருள் வாங்கினர்கள் கண்டாய்
கையுகிரி னூசியவை காய்ந்தசெறிப் புண்பார்
வையம்புகழ் மாதவரை வைதனர்கள் காரி
னெய்யுருக்கி வாயிற்பெய நின்றுசுழல் கின்றார்.

(இ - ள்) பொய்யுரை - அஸத்திய வசனத்தை, புனைந்து - அலங்காரமாக ஸ்தாபிதஞ் செய்து சொல்லி, பொருள் வாங்கினர்கள் - அன்னியர்களின் திரவியத்தை வாங்கினவர்கள், (நரகத்திற் செனித்து), கையுகிரின் - அவர்கள் கை நகங்களில், காய்ந்த - அக்னியில் நன்றாக வேகப்பட்ட, ஊசியவை - இருப்பூசிகளினால், செறிப்புண்பார் - (புராதன நாரகர்களினால்) சொருகப்பெற்றலறுபவராவார்கள், வையம் - இந்த லோகத்திலே பவ்வியர்களினால், புகழ் - ஸ்துதிக்கும்படியான, (ஸம்மியக்ஞானாதி குணங்களையுடையராகிய), மாதவரை - உத்கிருஷ்டமாகிய தபசைச் சேர்ந்த மஹா முனிவரர்களை, வைதனர்கள் - நிந்தித்தவர்கள், (நரகத்திற் பிறக்க அவர்களைப் புராதன நாரகர்கள்), காரி - விஷத்தையும், நெய் - இரத்தத்தையும், உருக்கி - சேர்த்துக் காய்ச்சி, வாயில் - அவர்கள் வாயிலே, பெய - ஊற்ற, நின்று - அந்நரகத்தில் நின்று, சுழல்கின்றார் - சுழலா நின்றார்கள், எ - று.

954. ஒழுக்கினை யழித்துட னொழுக்குணர் வுரைத்தார்
புழுக்கணலி யப்புடை புடைத்துவிழு கின்றார்
வழுக்கினவர் நன்னெறியின் மத்திகை யெடுத்து
விழுப்பற வதுக்கவினை யேகொடிய தென்பார்.

(இ - ள்) ஒழுக்கிணை - ஸம்யக் சாரித்திரத்தை, அழித்து - கெடுத்து, உடன் - உடனே, அழுக்குணர்வு - கெட்ட செயலுக்கு ஏதுவாகிய, குமதி, குசுருதிஜ்ஞானங்களை, உரைத்தார் - (கர்மானுகுண உதயத்தால்) சொன்னவர்கள், (நரகத்திற்றோன்றி), புழுக்கள் நலிய - (அவர்களது சரீரத்தில்) கிருமிகள் ஸஞ்ஜாதங்களாகி உபத்திரவம் செய்ய, (தாளாமல்), புடை புடைத்து - விலாப்பக்கத்தில் அடித்துக்கொண்டு, விழுகின்றார் - பூமியில் விழுந்து புரளாநின்றார்கள், நன்னெறியின்-நன்மார்க்கமான செயல்களினின்றும், வழுக்கினவர் - நழுவினவர்களாகித் துச்சாரித்திரத்தில் சென்றவர்கள், (நரகத்திற்றோன்றிப் புராதன நாரகர்களால்), மத்திகை யெடுத்து - சம்மட்டிகளைத் தூக்கி, விழுப்பு - முன் செய்த துர்ச்சாரித்திரமாகிய அனுசாரம், அற - நீங்கும்படி, அதுக்க - (புராதன நாரகர் தங்களை) அடிக்க, வினையே - நமது கர்மமே, கொடியது - பொல்லாங்கினையுடையது, என்பார் - என்று சொல்வார்கள், எ - று. (உ0)

955. மிக்கவெகு ளிக்கனலி யிட்டுநகர் சுட்டார்
செக்குர லிடைப்பல திலத்தினெரி கின்றார்.
சக்கர மடைந்தபின் னறத்தினை மறந்தா
ரெக்கதுணை மிக்கதுய ரத்திடை யுழைப்பார்.

(இ - ள்) மிக்க - மிகுதியாகிய, வெகுளி - குரோதத்தினாலே, கனலியிட்டு - நெருப்பை வைத்து, நகர் - ஊர்பட்டணம் முதலியவைகளை, சுட்டார் - கொளுத்தினவர்கள், செக்குரலிடை - (நரகத்தில் பிறந்து அங்குள்ள) கற்காணத்தில், பல திலத்தின் - அனேகமாகிய எள்ளுகளைப்போல, (புராதன நாரகர்கள் தங்களை இட்டுச்சுற்ற), நெரிகின்றார் - சரீரம் நொறுங்கித் துன்புறுகின்றார்கள், சக்கரமடைந்த பின் - அரசுக்குரிய ஆக்ஞாசக்கரத்தை யடைந்து மிக்க ஐசுவரியம் பெற்ற பிறகு, அறத்தினை - தர்மத்தை, மறந்தார் - மறந்தவர்கள், (நரகத்தில் பிறந்து), எக்கம்-ஏகமாக, (அதாவது: ஒன்றாகவே நீங்காமல்), துணை-தங்களைச் சேர்ந்திராநின்றதாகிய, மிக்க - அதிகமாகிய, துயரத்திடை - அஸாதாதிதுன்பங்களிலேயே, உழைப்பார் - பொருந்திச் சுழன்று சிரமப்படுவார்கள், எ - று.

956. கொலைகளவு பொய்பொருளி னாசையின் மகிழ்ந்தார்
மலையின்மிசை வட்டென வுருட்டவிழு கின்றார்
குலநல குடிப்பெரிய கற்புழிய மேவும்
புலைமகளிர் காரகலிற் புழுக்களெனப் பொரிவார்.

(இ - ள்) கொலை - ஜீவவதை செய்வதும், களவு - பிறருடைமையைத் திருடுவதும், பொய் - அசத்தியம் பேசலும், பொருளினாசையில் - (மண், பொன், பெண்ணாதி) பரிக்கிரகத்தில், மிகுந்த ஆசையுமாகிய இவைகளில், மகிழ்ந்தார் -

இச்சித்து அவற்றிற்குரிய காரியங்களைச் செய்தவர்கள், (நரகத்தில் பிறந்து புராதன நாரகர்களால்), மலையின்மிசை - பர்வதங்களிலேற்றி, வட்டென - குண்டுகளைப்போல, உருட்ட - அங்கு நின்றும் உருட்டித்தள்ள, விழுகின்றார் - விழுந்தலறு நின்றார்கள், குலம் - உயர்குலத்தினும், நல்ல குடி - நற்குடிப் பிறப்பைக் காட்டிலும், பெரிய - மிகுந்த குணமுடைய, கற்பு - பதிவிரதா தன்மையானது, அழிய - கெடும்படி, மேவும் - (அன்னிய புருஷர்களை மோஹ புத்தியால்) பொருந்தும், புலைமகளிர் - தூர்க்குணமாகிய நீசத்துவமுள்ள ஸ்த்ரீகள், கார் - கறுத்த, அகலில் - நெருப்பில் வெந்த இரும்பு ஓட்டில், புழுக்களென - புழுக்களைப்போல், பொரிவார் - (அக்னிதாபத்தினால்) பொரிந்து வருந்துவார்கள், எ - று. (உஎ)

957. தோலினை யுரித்திடு நிணத்தடி சுவைத்தார்
சோலைபுக நீணெருப்பு சொரியவுரி கின்றார்
மாலைகுடை மன்னவரை வஞ்சனைசெய் தமைச்சர்
சாலக்கழு நிறத்திலுறத் தாமங்கணைந் திருப்பார்.

(இ - ள்) தோலினை - சரீரத்தின் மேற்றோலை, உரித்து - கழற்றி, இடும் - அத்தோலின் கீழிடப்பட்டுள்ள, நிணம் - இரண சம்பந்தமாகிய, தடி - மாமிசங்களை, சுவைத்தார் - தின்றவர்கள், (நரகத்திற் சேர்ந்து), சோலை புக - நிழலுக்காகத் தோப்புகளிலடைய, நீள் - பெரிதாகிய, நெருப்பு - அக்கினியானது, சொரிய - அத்தோப்புகளில் மேனின்றும் விழுதலால், உரிகின்றார் - தங்கள் மேற்றோலுரிந்து வேதனை யடைகின்றார்கள், மாலை - மாலைகளணிந்த, குடை - வெள்ளைக் குடையையுடைய, மன்னவரை - அரசர்களை, வஞ்சனை செய்த - கபடஞ் செய்தே மாற்றிய, அமைச்சர் - மந்திரிகள், (நாரகர்களாகப் பிறந்து), சால - மிகவும் பெரிதாகிய, கழு - கழுமரங்கள், நிறத்தில் - சரீரத்தில், உற - பொருந்தித் தைத்துக் கொள்ளும்படி, (புராதன நாரகர்கள் செய்விக்க), தாம்-நூதன நாரகர்களாகிய தாங்கள், அங்கு - அவ்விடத்தே அக்கழுமரத்தில், அணைந்து - சேர்ந்து, இருப்பார் - வருத்தமுற்றிருப்பார்கள், எ - று.

'செய்த அமைச்சர்' என்பது, 'செய்தமைச்சர்' எனத் தொகுத்தலாயிற்று. (உஅ)

958. இனையதுய ரெண்ணரிய வுடையவெழு நிலத்தில்
வினையினிரண் டாநரகின் வீழ்ந்தவனை மீட்டல்
முனிவரிறை தனக்குமரி தாயவுள தாகும்
இனியெனுரை யென்னினு மிதஞ்சிறி துரைப்பேன்.

(இ - ள்) எண்ணரிய - கணக்கில்லாததாகிய, துயர் - துன்பத்தை, உடைய - உடைத்தாகிய, இனைய - இத்தன்மைத்தாகிய, எழுநிலத்தில் - ஸப்த

நரகங்களில், வினையில் - பாபவினையினுல், இரண்டா நரகில் - இரண்டாவது நரகத்தில், வீழ்ந்த - வீழ்ந்திராநின்ற, உனை - உன்னை, மீட்டல் - அத்துன்பத்தினின்றும் விலக்குவது, முனிவர் - கணதராதி முனிவர்களுக்கெல்லாம், இறைதனக்கும் - எஜமானனுகிய அரஹந்த பரமதேவனுக்கும், அரிதாய் - முடியாத தன்மையாக, உளதாகும் - உண்டானதாகும், இனி - இனிமேல், உரை - சொல்வது, என் - என்ன இருக்கின்றது, என்னினும் - என்றாலும், இதம் - நன்மையாகும்படியான தர்ம மொழிகளை, சிறிது - சுருக்கமாக, உரைப்பன் - (நான்) உனக்குச் சொல்லுவேன் கேட்பாயாக, எ - று.

'அரிதாய்' என்பது, அகரச்சாரியை பெற்று, - 'அரிதாய' என வந்தது. ()

959. பொறிபுலம் வெறுத்தெழு தவத்தமா ணுகி
மறத்தொடு மலிந்தொளிரு மாழிமன்ன னுகிப்
பொறிபுல மிசைப்பொலி மனத்தொடு புணர்ந்தாய்
கறுத்துமுடை மேனிநர கத்திங்ஙன மானுய்.

(இ - ள்) (நாரகனே!), பொறி பஞ்சேந்திரியங்களின், புலம் - விஷயங்களில், வெறுத்து - வைராக்கியமடைந்து, எழும் - உண்டாகிய, தவத்து - தபஸினுலே, அமரனுகி - கல்பலோகத்தில் தேவனுகி, (பின்பு), மறத்தொடு - பாபத்தோடு, மலிந்து - நிறைந்து, ஒளிரும் - பிரகாசிக்கின்ற, ஆழிமன்னனுகி - அர்த்த சக்ரவர்த்தி பதவியை யடைந்து, (அப்போது), பொறி புலமிசை - பஞ்சேந்திரிய விஷயங்களின் மேலே, பொலி - அழகுபெற்று நிறைந்திராநின்ற, மனத்தோடு - மனதோடு, புணர்ந்தாய் - சேர்ந்தாய், (ஆகையால்), இங்ஙனம் - இப்படிப்பட்ட துன்பமுள்ள, நரகத்து - நரகத்தில், கறுத்து - கறுப்பாகி, முடை - துர்க்கந்தம் வீசுகின்ற, மேனி - சரீரமுடைய நாரகனுக, ஆனுய் - பிறந்தாய், எ - று. (௩௦)

960. அறத்தொடு புணர்ந்தமர லோகமடை வாயோ
மறத்தொடு மலிந்தெழு நிலத்துமுறை வாயோ
திறத்தினிவ் விரண்டையு நினைத்துறுதி சேரி
னறப்பொரு ளுரைப்பனுன தல்லல்கெடும் வண்ணம்.

(இ - ள்) அறத்தொடு - தர்மத்தோடு, புணர்ந்து - சேர்ந்து, அமரலோகம்- தேவலோகத்தை, அடைவாயோ - இனிமேல் சேர்வாயோ?, (அல்லது), மறத்தொடு - பாபத்தொழிலோடு, மலிந்து - மிகுதியாகச் சேர்ந்து, எழு நிலத்தும் - இந்த சப்த நரகங்களிலும், உறைவாயோ - மறுபடி மறுபடியும் சேர்வாயோ?, இவ்விரண்டையும் - இந்த இரண்டு வகைகளையும், நினைத்து - தீர்க்காலோசனை செய்து, திறத்தின் - ஆத்மனுடைய திறத்தில், உறுதி - உறுதியாகிய நிலையை, சேரின் - அடைவாயாகில், உனது - உன்னுடைய, அல்லல் - இத்துன்ப

மானது, கெடும் வண்ணம் - நீங்கும் விதமாக, அறப்பொருள் - தர்ம வசனமா கின்ற தத்துவார்த்தங்களை, உரைப்பன் - சொல்லுவேன், எ - று. (௬௧)

961. முனைத்துன்மிசை வந்தவர்கண் மேன்முனித லின்றி
நினைத்திடு துமுன்னையென் வினைப்பயன தென்றே
மனத்தின்மற மேவின்மிகு பாவம்வரும் வந்தா
லுனைப்பின்னை விலங்கினிடை யுய்த்திடரை யாக்கும்.

(இ - ள்) உன் மிசை - உன் மேல், முனைத்து - கோபித்து, வந்தவர்கள் மேல் - சண்டைக்கு வந்த நாரகர்களின் மேல், முனிதலின்றி - நீ கோபத்தைச் செய்தலின்றி, இது - இத்தன்மையானது, முன்னை - பூர்வத்தில், என் - என் னுற் செய்யப்பட்ட, வினைப்பயனதென்று - கர்மோதய வினையென்று, நினைத்திடு- தியானிப்பாயாக, (அப்படியல்லாமல்), மனத்தின் - உன்னுடைய மனதில், மற மேவின் - பாபகாரணங்களாகிய குரோதாதிகளை யடைவாயானல், (அவ்வந்தரங்க பரிணாமத்தினால்), மிகு - மிகுதியாகிய, பாவம் - திரவிய பாபகர்ம பிரகிருதிகள், வரும் - ஆத்மனிடத்தில் ஆஸ்ரவமாகும், வந்தால் - அப்படி ஆஸ்ரவமாகி ஆத்மப் பிரதேசபந்தமும் ஸ்திதிபந்தமுமானல் (அதனால்), உனை - உன்னை, (அனுபாக பந்தமாகிய தன்மையாலே), பின்னை - பிறகு, விலங்கினிடை - திரியக்கதியினிடத் தில், உய்த்து - அடைவித்து, இடரையாக்கும் - துன்பத்தைச் செய்விக் கும், எ - று. (௬௨)

962. அறிவன்முத லைவர்சர ணம்புகுதி யாயிற்
பிறவிமறு சுழியின்வழி யொழுகுதல் பிழைத்தி
கறவுசெறி வுறதலொடு வத்துவை யழித்தா
லிறுதியில்பல் தீவினைக ளெய்தியடு நின்றே.

(இ - ள்) அறிவன் முதல் - அருகத்பரமேஷ்டி முதலாகிய, ஐவர் - பஞ்ச பரமேஷ்டிகளை, சரணம் - ரக்ஷணையாக, புகுதியாயில் - சேர்வாயாகில், (அதாவது: பஞ்சபரமேஷ்டிகளைத் தியானித்தால் அதனாலே), பிறவி - ஸம்ஸார சமுத்திரத் தின், மறு - சுழலுகின்ற, சுழியின் - நீர்ச்சுழலினது, வழி - மார்க்கத்தில், ஒழுகு தல் - வீழ்கின்றதினின்றும், பிழைத்தி - நீ நீங்கினவனாவாய், (அப்படியில்லா மல்), கறவு - நீங்காத குரோதாதிகளையும், செறிவுறுதலொடு - சேர்தலோடு, வத் துவை - ஆத்மத் திரவிய சுபாவ குணத்தை, அழித்தால் - கெடுத்தால், (அதனால்), இறுதியில் - முடிவில்லாத, பல் - பலவாகிய, தீவினைகள் - திரவிய பாபங்கள், எய்தி - ஆத்மனிடத்தில் அடைந்து, நின்று - பந்தித்து நின்று, அடும் - துக்க பலனை உதிப்பித்து ஆத்மனை வருத்தப்பண்ணும், எ - று. (௬௩)

963. வீட்டினை விளக்குநல காட்சியினை விட்டிம்
மோட்டுநா கத்துயர் மூழ்கழலின் வீழ்ந்தாய்.

மீட்டுநா கத்திடை விழா தவகை வேண்டிற்
காட்சிதலை நின்றொழுகு காதன்முத னீத்தே

(இ - ள்) வீட்டினை - மோட்சத்தை, விளக்கும் - உண்டுபண்ணும்படியான, நல - நன்மையாகிய, காட்சியினை - ஸம்யக்தரிசனத்தை, விட்டு-(யோஜித்துப் பெறாமல்) விட்டுவிட்டு, இம்மோட்டு நரகத்துயர் - இந்தப் பெரிதாகிய நரக துன்பங்களையுடைய, முழங்கு - பெரிதாகி எரிகின்ற, அழலின் - அக்னிக்குச் சமானமாகிய ஸந்தாபத்தினையுடைய பூமியிலே, வீழ்ந்தாய் - வீழ்ந்தனை, மீட்டு - மறுபடி (அதாவது: இனிமேல் வரும் பிறவிகளில்), நரகத்திடை - இப்படிப்பட்ட நரகங்களில், விழாதவகை - அடையாதவகையை, வேண்டில் - நீ இச்சிப்பாயேயாகில், காதல் முதல் - அன்னியத் திரவியாபேட்சையாகின்ற பாகியாப்பியந்தர பரிக்கிரக வாஞ்சை முதலியவற்றை, நீத்து - பரிஹரித்து (அதாவது: நிர்காம்க்ஷையாகி), காட்சி - ஸம்யக்தரிசனமாகின்ற தத்வார்த்த சிரத்தானத்தில், தலை நின்று - முதன்மையாக நின்று (அதாவது: ஹேயோபாதேயங்களைத் தெரிந்து, உபாதேய ஸ்வரூபத்தில்), ஒழுகு - நடக்கக்கடவாய், எ - று. (௩௪)

964. வெகுளிமத மாயைமிகை பற்றலிவை வினைக்குப்
புகுதும்வழி நல்லவல பொறைவளைவு செம்மை
நகையொடுவந் தீதலிவை நல்வினைக்கு வாய்தல்
பகையுறவு பணிவுதெளி வின்பங்களைப் பயக்கும்.

(இ - ள்) வெகுளி - குரோதமும், மதம் - மானமும், மாயம் - மாயாச்சாரமும், மிகைபற்றல் - அதிலோபமுமாகிய, இவை - இந்தச் சதுர்விதமாகிய கஷாய பரிணமங்கள், வினைக்கு - பாபகர்மங்களுக்கு, புகுதும் - அடைகின்ற, வழி - வழிகளாகும், நல்ல - நன்மையாகிய, வல - ஸம்யக்துவ வல்லமை பொருந்திய, பொறை - க்ஷமையும், (அதாவது: பிரசமமென்கிற உபசமபாவமும்), வளைவு - வணக்கமும், செம்மை - (மாயத்தினகன்ற) உண்மையும், நகையொடு - முகமலர்ச்சியுடன், உவந்து - உள்ளமுவந்து, ஈதல் - சத்பாத்திரங்களில் ஆகாராதிகளையளிப்பதுமாகிய, இவை - இவைகள், நல்வினைக்கு - புண்ணிய கருமங்களுக்கு, வாய்தல் - வரப்பட்ட வழியாகிய காரணங்களாகும், (ஆகையால், நாரகனே!), பகை - ஆத்மனுக்குச் சத்துருவாகித் துன்பத்தைத்தரும் பாபகர்ம காரணங்களையும், உறவு - மித்துருவாகி இன்பத்தைத்தரும் புண்ணிய கர்மகாரணங்களையும், தெளிவு - இவைகளைத் தெளிதலென்னும் ஸம்யக்துவத்தினாலாகிய, பணிவு - பிராணி ஸம்யமம் விஷயஸம்யமங்களும், இன்பங்களை - அப்பியுதயநிச்ரேயஸ சுகங்களை, பயக்கும் - ஆத்மனுக்கு உண்டுபண்ணும், எ - று. (௩௫)

965. என்றிக்கதி நீங்குவதென் றேதமுற வேண்டா
நின்றவினை நீங்கிய கணத்திதுவு நீங்கு

மன்றித்துயர் நீங்குவதற் கார்வமெழு மாகி
லொன்றமுனை நின்றவினை யொறுக்குமினி மிக்கே.

(இ - ள்) இக்கதி - இந்நரககதியானது, என்று - எப்பொழுது, நீங்குவ தென்று - நீங்குவதாகுமென்று, ஏதம் - வருத்தத்தை, உறவேண்டா - அடைய வேண்டாம், நின்ற - பந்தித்து நின்ற, வினை - கருமங்களின் ஸ்திதிகாலமானது, நீங்கிய கணத்து - முடிவுபெற்று நீங்கினகாலத்து, இதுவும் - இக்கதியும், நீங்கும் - நீங்கிவிடும், அன்றி - அப்படியன்றி, துயர் - துக்கமானது, நீங்குவதற்கு - நீங்கி விடுவதற்கு, ஆர்வம் - ஆசையானது, எழுமாகில் - உண்டாகுமாகில், உனை - உன்னை, ஒன்றும் - பொருந்தியதாகிய, வினை - கருமங்கள், இனி இனிமேலும், மிக்கு - அதிகமாக, நின்று - உதயஞ்செய்து நின்று, ஒறுக்கும் வருத்தத்தைச் செய்விக்கும், எ - று. (௬௬)

966. சென்றதுன தாயுகமுஞ் சிறிதுபெரி தொழிய
நின்றபெருந் துயரிதுவு நீங்குஞ்சில நாளில்
வென்றவர்த மறநெறியின் மெய்யுணர்வு காட்சி
யொன்றியொழு குன்கண்வினை யெட்டுமுடன் கெடுக்கும்.

(இ - ள்) சென்றது - இதற்குமுன் சென்றதாகிய, உனது - உன்னுடைய, ஆயுகமும் - ஆயுஷ்யமும், பெரிதொழிய - அதிகமான பாகம் நீங்கிவிட, சிறிது நின்ற - இன்னும் சொற்பகால மிருக்கிறது, சிலநாளில் - அந்தச் சொற்ப காலத்தில், பெருந்துயரிதுவும் - பெரிதாகிய இந்நரக துன்பமும், நீங்கும் - நீங்கிவிடும், மெய்யுணர்வு - ஸம்மியக்ஞானத்திலும், காட்சி - ஸம்மியக் தரிசனத்திலும், ஒன்றி - பொருந்தி, வென்றவர்தம் - ஸகல விபாவங்களை ஜயித்திராநின்ற ஜினேஸ்வரனால் அருளிச் செய்யப்பட்ட, அறநெறியின் - தர்ம மார்க்கத்தில், ஒழுகு - பாவனை செய்துநடக்கக்கடவாய், (அப்படி நடப்பாயேயாமாகில் அப்பாவனையானது), உன்கண் - உன்னிடத்து பந்தமாகி நின்ற, வினையெட்டும் - அஷ்ட கருமங்களையும், உடன் - உடனே (அதாவது: அற்ப காலத்திலே), கெடுக்கும் - நீக்கிவிடும், எ - று. (௬௭)

வேறு.

967. வாளரி யுழுவை வாயின் மதகரி கையி னஞ்சிற்
சூழெரி யகத்திற் போரிற் சுழுவெறி கடலிற் கானி
னீளர ணுகி நிற்கு நிரையத்து விழாமற் காக்குங்
கேளினி யறத்தைப் போல கிடைப்பதொன் றில்லை கண்டாய்.

(இ - ள்) வாளரி - பிரகாசம் பொருந்திய சிம்மத்தினிடத்திலும், உழுவை வாயின் - புலியினுடைய வாயிலும், மதகரிகையின் - மதம் பொருந்திய யானையி

னுடைய கையிலும், நஞ்சில் - விஷ ஸமூகத்திலும், சூழெரியகத்தில் - சூழ்ந்து எரிகின்ற அக்னியினது மத்தியிலும், போரில் - யுத்தரங்கத்திலும், சுறு - மகா மத்ஸயங்களால், எறி - எறிகின்ற, கடலில் - ஸமுத்திரத்திலும், கானில் - காட்டிலும், (ஆகிய இவ்விடங்களிலெல்லாம்), நீள் - பெரிதாகிய, அரணுகி - ஆத்மனுக்குச் சகாயமாகி, நிற்கும் - நீங்காமல் நிற்கின்றதும், நிரையத்து - நரகங்களிலே, விழாமல் - விழவொட்டாமல், காக்கும் - காத்து ரக்ஷிக்கும்படியானதுமாகிய, அறத்தைப்போலும் - தர்மத்தைப்போல, கிடைப்பது - சேரப்பட்டதாகி ரக்ஷிக்கின்ற பொருள், ஒன்று - வேறொன்றும், இல்லை - இவ்வுலகத்திலில்லை, (ஆகையால் நாரகனே!) இனி - இனிமேல், (அந்த தர்ம ஸ்வரூபத்தை), கேள் - உறுதியாகக் கேட்கக்கடவாய், எ - று.

கண்டாய் - அசை. (கூ அ)

968. உம்பர்தம் முலகி னுய்க்கு முலகினுக் கிறைமை யாக்கும்
வெம்பிய பிறப்பின் வாங்கி வீட்டின்கண் வைக்கு மெய்யே
நம்பிநல் லறத்தைப் போலுந் துணையில்லை நமக்கு நாடின்
கம்பமி னிலைமை யாகித் திருவறங் கைக்கொ ளென்றேன்.

(இ - ள்) (மேற்கூறிய அறமானது), உம்பர்தம் - தேவர்களுடைய, உலகில் - உலகமாகிய ஊர்த்துவ லோகத்தில், உய்க்கும் - அடைவித்துப் புண்ணிய பலன்களைக் கொடுக்கும், (அதுவல்லாமலும்), உலகினுக்கு - இம்மூன்று லோகத்துக்கும், இறைமையாக்கும் - ஆதிபத்தியமாகுந் தன்மையான அரஹந்த பதவியையும் செய்விக்கும், வெம்பிய - வெதும்பும்படியான, பிறப்பின் - இச்சம்ஸாரத்தில் பிறக்குந் தன்மையினின்றும், வாங்கி - விலக்கி, வீட்டின்கண் - மோட்சத்திலே, மெய் - யாதாத்மியமாக (அதாவது: துருவமாக), வைக்கும் - ஸ்தாபிக்கும், நம்பி - தம்பியே!, நாடின் - ஆராயுமிடத்தில், நமக்கு - ஆத்மனுகிய நமக்கு, நல் - நன்மையாகிய, அறத்தைப்போலும் - தர்மத்தைப்போல, துணை - ரக்ஷணையாகும் பொருள், இல்லை - வேறொன்றில்லை, (ஆகையால்), கம்பமில் - சலனமில்லாத, நிலைமையாகி - உறுதியுடையவனுகி, திருவறம் - ஸ்ரீ ஜினதர்மத்தை, கைக்கொள் - சேர்வாயாக, என்றேன் - என்று ஆதித்யாபதேவனுகிய யான் சொன்னேன், எ - று. (கூக)

969. என்றலு மிறப்ப வென்க ணலத்துவிந் நிலத்து வந்தின்
றென்றலா வுறுதி சொன்னீ ருமொழி வழிநில் லேனே
னின்றன னென்று மிந்த நிரையத்து நீங்க லின்றி
யென்றவ னிறைஞ்ச நன்றென் றியானென துலகம் புக்கேன்.

(இ - ள்) என்றலும் - என்று யான் சொல்லவும், இறப்ப - மிகவும், என் கண் - என்னிடத்தில், நலத்து - நன்மையாகித் தங்களுக்குண்டாகிய ஆசையி

னுலே, இந்நிலத்து - இந்த நரக பூமியில், வந்து - சேர்ந்து, இன்று-இப்பொழுது, ஒன்றலா - அனேகமாகிய, உறுதி - உறுதியாகிய தர்மத்தை, சொன்னீர் - சொல்லினீர்கள், (நான்), உம்மொழி - உமது வசனத்தினுடைய, வழி - வழியில், நில்லேனேல் - அடையாமல் போவேனேயாகில், என்றும் - எப்பொழுதும், இந்த நிரையத்து - இப்படிப்பட்ட நரகங்களில், நீங்கலின்றி - நீங்குதலில்லாமல், நின்றனன்-அடைந்தவனுவேன், என்று - என்று சொல்லி, அவன் இறைஞ்ச-அவன் என்னை வணங்க, நன்றென்று - உனக்கு நன்மையாகக் கடவதென்று, (ஆசீர்வதித்து), யான் - நான், எனது - என்னுடைய, உலகம் - உலகமாகிய லாந்தவகல்பத்தை, புக்கேன் - அடைந்தேன், எ - று. (சo)

பத்தாவது :

நிரையத்துளறவுரைச்சருக்கம் முற்றுப்பெற்றது.

---

## பதினொன்றாவது :

# பிறவிமுடிச்சருக்கம்



970 நிறைபொறை சாந்தி யோம்பி நின்றதொன் றின்மை சிந்தித்
தறிவன சரண மூழ்கி யாருயிர்க் கருளி யந்தப்
பிறவியி னொருவிச் சித்த விரதம்பெ யிரும்பிற் பெற்ற
வறநெறி யதனின் வந்திங் கரசிளங் குமர னானான்.

(இ - ள்) (தான் அவ்வாறு வந்தபின் அவன்), நிறை - மனோ நிறைவு பெற்ற, பொறை - க்ஷமையும், சாந்தி-உபசம பரிணதியும், (ஆகிய சுபோபயோக குணங்களை), ஓம்பி - ரக்ஷித்து, நின்றதொன்றின்மை - ஸம்ஸார சுக துக்கங் களில் யாதொன்றும் நிலை நில்லாத அனித்திய ஸ்வரூபத்தை, சிந்தித்து - தியா னித்து, அறிவன சரணம் - அருகபரனது பாதங்களில், மூழ்கி - படிந்து (அதா வது: அருகத்பக்தி பரவசனாகி), ஆர் - நிறைந்திராநின்ற, உயிர்க்கு - ஸகலஜீவன் களுக்கும், அருளி - காருண்யத்தைச் செய்து, சித்த விரதம் - ஸித்தரஸத்தை, பெய் - சேர்க்கப்பெற்ற, இரும்பில் - அயமானது பிரகாசமானதுபோல, பெற்ற - அடையப்பட்ட, அறநெறியதனில் - தர்ம வழியினாலே, அந்தப் பிறவியின் - அந் நாகஜன்மத்தினின்றும், ஒருவி - நீங்கி, இங்கு வந்து-இப்பூமியில் வந்து, அரசிளங் குமரன் - ராஜபுத்திரனாக, ஆனான் - அவதரித்தான், எ - று. (க)

971. மற்றிந்தத் தீபத் தின்க ணிரேவதத் தயோத்தி யாளுங்
கொற்றவன் சிரிவம் மாவின் காதலி சுசிமைக் கொம்பின்
பெற்றியாள் வயிற்றுச் சீதா மாவெனுஞ் சிறுவ னாகிக்
கொற்றவர் குலங்க ளென்னுங் குலமலை விளக்கை யொத்தான்.

(இ - ள்) (அங்ஙனம் அவதரித்தவன்), மற்று - பின்னை, இந்தத் தீபத்தின் கண் - இந்த மத்திமலோக ஜம்பூத்வீபத்தில், ரேவதத்து - ஐராவதக்ஷேத்தி ரத்தில், அயோத்தி - அயோத்தியென்கிற நகரத்தை, ஆளும் - ஆள்கின்ற, கொற்றவன் - அரசனாகிய, சிரிவம்மாவின் - ஸ்ரீவர்மா வென்பவனுடைய, காதலி - வாஞ்சையையுடைய பட்டத்தரசியான, கொம்பின் - புஷ்பக் கொமபினது, பெற் றியாள் - தன்மையையுடையவளாகிய, சுசிமை-ஸுஸிமாவென்பவளது, வயிற்று- கர்ப்பத்திலே யடைந்து, சீதாமாவெனும் - ஸ்ரீதாமாவென்னும் நாமமுடைய, சிறுவ னாகி - புத்திரனாகி, கொற்றவர் - அரசர்களுடைய, குலங்களென்னும் - குலங்க

ளென்கிற, குலமலை - குலபர்வதங்களுக்கு, விளக்கை ஒத்தான் - தீபத்தைப் போல பிரகாசியாநின்றான், எ - று. (உ)

972. வினையத்தின் முனிவ னொத்து விஞ்சையின் வளர்ந்த வீர
னினைவொத்துத் தீய வேந்தர் நிலைகெடுத் தரசு மேவிக்
கணமொத்தெவ் வுயிர்க்கு மீந்து கமலப்பூந் தடத்து வெய்யோன்
றனையொத்து மரைமு கத்தார் தம்முலைத் தொய்யிற் பட்டான்.

(இ - ள்) (அங்ஙனம்), வினையத்தின் - வணக்கத்தினால், முனிவனொத்து - முனிவரனைப்போல, விஞ்சையின் - அரசர்களுக்குரிய வித்தைகளோடு, வளர்ந்த - வளர்ச்சியடைந்த, வீரன் - வீரனாகிய அக்குமாரன், நினை வொத்து - தனது எண்ணம் நன்மார்க்கத்திற் பொருந்தி, தீயவேந்தர் - சத்துரு ராஜாக்களுடைய, நிலை - நிலைமையை, கெடுத்து - போக்கி, அரசு - ராஜ்யத்தை, மேவி - பொருந்தி, கண மொத்து - மேகமானது கைம்மாறின்றி மழையை வருஷிப்பதுபோல, எவ்வுயிர்க்கும் - ஸகலர்களுக்கும், ஈந்து - தியாகம் கொடுத்து, கமலப் பூந்தடத்து - அழகிய தாமரைத் தடாகத்துக்கு, (சோபகவிளங்கும்), வெய்யோன்றனை யொத்து - சூரியனை நிகர்த்து, (அதாவது : சூரியன் தாமரைத் தடாகத்துக்கு நன்மை செய்து விளங்குவதுபோல), மரைமுகத்தார் தம் - தாமரை மலர்போன்ற முகமுடைய தேவிமார்களின், தொய்யில் - சாந்தால் எழுதிய இடுகொடிகளையுடைய, முலை - ஸ்தனங்களினாலே யுண்டாகின்ற காமபோகத்தில், பட்டான் - அடைந்தான், எ - று. (ங)

973 அழலிடை வந்த மைந்த னவ்வழ றணியு மெல்லை
நிழலிடை யிருப்ப தேபோ னிரையத்துத் துயரந் தீரக்
குழலன மொழியி னார்தங் குவிமுலைத் தடத்து வைகிப்
பழவினை துணிக்க நின்ற பான்மைவந் துதித்த நாளால்.

(இ - ள்) அழலிடை - ஆதபத்தினின்றும், வந்த - நீங்கி வந்த, மைந்தன் - புருஷனானவன், அவ்வழல் - அவ்வாதபம், தணியுமெல்லை - நீங்கும் பரியந்தம், நிழலிடை - நிழலிலே, இருப்பதேபோல் - இருப்பது போல, (இந்த ஸ்ரீ தாமா வாகிய அரசன்), நிரையத்துத் துயரம் - பூர்வத்தில் நரகத்தில் அனுபவித்த துக்கமானது, தீர - நீங்கும்படி, குழலன - புள்ளாங்குழலிசைக்குச் சமானமாகி இனிமை பொருந்திய, மொழியினார் தம் - வசனத்தையுடைய தேவிமார்களின், குவி - திரட்சி பொருந்திய, முலை - ஸ்தனங்களையுடைய, தடத்து - மார்பினிடத்து, வைகி - காமராகத்தினால் தங்கி, பழவினை - பூர்வத்திலிருந்துண்டாகிய வினைகள், துணிக்க - கெடும்படி, நின்ற - நின்றதாகிய, பான்மை - குணமானது, வந்து - அடைந்து, உதித்த நாள் - உதயத்தைக் கொடுத்த காலத்தில், எ - று.

ஆல் - ஈற்றசை. (ச)

974 அந்தமில் வினைக்கு மாறு மனந்தமா முனிவன் பாதம்
வந்தவன் வணங்கி மாற்றின் வடிவெலா முடியக் கேட்டிட்
டிந்திர விபவந் தன்னை யெரியுறு சருகி னீக்கி
வெந்திறல் வேந்தர் வீரன் மெய்த்தவத் தரச னானான்.

(இ - ள்) அந்தமில் - அழகில்லாத (அதாவது: ஆத்மகுண காதங்களான), வினைக்கு - வினைகளுக்கு, மாறும்-எதிராகி, (அவ்வினைகளைக் கெடுக்கும்படியான), அனந்தம் - முடிவில்லாத ஸம்யக்ஞானாதி குணங்களையுடைய, மா - பெருமை பொருந்திய, முனிவன் - ஒரு முனிவானுடைய, பாதம் - சரணங்களில், வந்து - வந்து அடைந்து, அவன் - அந்த ஸ்ரீதாமாவானவன், வணங்கி - நமஸ்காராதி களால் வணங்கி, மாற்றின் - ஸம்ஸாரத்தினுடைய, வடிவெலாம் - ஸ்வரூபங்களை யெல்லாம், முடிய - முழுமையும், கேட்டிட்டு - அவரால் சொல்லக்கேட்டு, இந்திர விபவந்தன்னை - தேவேந்திர வைபவம் போன்ற ராஜ்ய போகத்தை, எரியுறு - அக்கினியிடத்தடைந்த, சருகின் - உலர்ந்த சருகிலை பஸ்மமாகி ஒன்றுமில்லாமற் போவதுபோல, நீக்கி - தனக்கு யாதொரு சம்பந்தமுமின்றி வைராக்கிய பாவ னாக்கினியால் நீக்கி, வெம் - வெப்பம் பொருந்திய, திறல் - பராக்கிரமமுள்ள, வேந்தர் - ராஜாக்களுக்கெல்லாம், வீரன் - வீரனாகிய, (ஸ்ரீதாமாவானவன்), மெய்த் தவத்து - உண்மையாகிய தபஸுக்கு, அரசனானான் - ராஜவானான், எ - று.

இங்ஙனம் கூறியதனால் அவன் ஜினதீக்ஷையைக் கைக்கொண்டான் என்பது பெறப்படும். (ரு)

975. யோகங்கண் மூன்றுஞ் சிந்தை யுடன்செல வடங்கி யூற்று
மோகங்கண் முதுகிட் டோட முனிமையை முகடு கொண்டு
நாகங்க ணடுங்க நோற்று ராதனை நான்கி னீங்கிப்
போகங்கள் புகழ லாற்று பம்மனற் கற்பம் புக்கான்.

(இ - ள்) (அங்ஙனம் ஜினதீக்ஷையைக்கொண்ட அவன்), யோகங்கள் மூன்றும் - மனவசனகாயங்கள் மூன்றையும், சிந்தையுடன் - தர்மத்தியானத் துடனே, (கூடி), செல - செல்லும்படி, அடங்கி - அடக்கமுற்று (அதாவது: பிராணி ஸம்யமம் விஷய ஸம்யமங்களில் பொருந்தி, ஸம்யக்ஞான பாவனையால்), மோகங்கள் - மோஹனீய கருமங்களின், ஊற்று - ஆஸ்ரவமானது, முதுகிட் டோட - பின்னிட்டு நீங்க, முனிமையை - முனிவானுந்தன்மையை, முகடு கொண்டு - மேலாகக்கொண்டு, நாகங்கள்-தேவலோகத்திலுள்ள தேவர்களெல்லாம், நடுங்க - (இவரே மேலான ஸம்யக்ஞானியென்று பயபக்தியினால்) நடுங்கி வணங் கும்படி, நோற்று - தபஞ்செய்து, ஆராதனை நான்கின் - சதுர்வித ஆராதனாதியா னத்தால், நீங்கி - சரீர நீங்கி, போகங்கள் - போகோபபோக ஸௌக்கியங்களில்

புகழலாற்ரு - வர்ணிக்கமுடியாத, பம்மனற்கற்பம் - நன்மையாகிய பிரம்ம கல்பத்தை, புக்கான் - அடைந்தான், எ - று. (௬)

976. தன்னுள்ளே நின்று தன்னைத் தானர கத்து ளுய்க்குந்
தன்னுள்ளே நின்று தன்னைத் தான்றுறக் கத்து வைக்குந்
தன்னுள்ளே நின்று தன்னைத் தான்றடு மாற்று ளுய்க்குந்
தன்னுள்ளே நின்று தன்னைத் தான்சித்தி யகத்து வைக்கும்.

(இ - ள்) தன்னுள்ளே - (ஆத்மத்திரவிய குணமாகிய சேதன குணமானது) தனக்குள்ளே, நின்று - அசுத்த நிச்சயத்தால் அசுபோபயோகத்தில் பரிணமித்து நின்று, (அதனல்), தன்னை - அந்த ஆத்மன் தன்னை, தான் - அப்பரிணமமானது, நரகத்துள் - (அனுபசரிதாஸத்பூத வியவஹார கர்ம புத்கல பந்தங்களினல்) நரகங்களிலே, உய்க்கும் - செலுத்தி வெதிரேக பரியாயத்தையடையும், தன்னுள்ளே - (அப்படிப்பட்ட ஆத்மத் திரவியம் முன் சொன்ன அசுத்த நிச்சயத்தால்) தனக்குள்ளே, நின்று - சுபோபயோகத்தில் பரிணமித்து நின்று, (அதனல்), தன்னை - அவ்வாத்மனகிய தன்னை, தான் - அப்பரிணமமானது தான், துறக்கத்து - (அனுபசரிதாஸத்பூத வியவஹாரத்தால்) தேவலோகத்தில், வைக்கும் - ஸ்தாபித்து அப்பரியாயத்தைப் பண்ணும், தன்னுள்ளே - (ஆத்மன் தனது குணமான ஞானதி சேதனையினல்) தனக்குள்ளே, நின்று - (அசுத்த நிச்சயத்தில் சுபாசுபோபயோகத்தில்) பரிணமித்து, தன்னை - அப்படிப் பரிணமித்த ஆத்மனகிய தன்னை, தான் - அப்பரிணமாதி விபாவகுணந்தான், தடுமாற்றுள் - (அனுபசரிதாஸத்பூத வியவஹாரத்தால் சதுர்கதி) சம்ஸாரத்தில், உய்க்கும் - கர்ம பந்தத்தால் செலுத்தி நாரக திரியக் நர தேவரென்னும் பரியாயத்தைப் பண்ணும், தன்னுள்ளே - (அப்படிப்பட்ட ஆத்மன் தனது குணமாகிய சேதனையினல்) தனக்குள்ளே, நின்று-(சுத்த நிச்சயத்தினல் சுத்தோபயோகத்தில் பரிணமித்து) நின்று, தன்னை-அப்படிப் பரிணமித்த அவ்வாத்மனகிய தன்னை, தான் - அப்பரிணமமானது தான், சித்தியகத்து - (ஸ்வாத்மோத்த ஸித்தியென்னும் அனுபசரிதாஸத்பூத வியவஹாரத்தினல்) பந்தவிமுக்த சுத்த நிச்சய நிஜஸ்வரூபத்துள், வைக்கும் - ஸ்தாபித்து ஸ்வபரியாயத்தைப் பண்ணும், எ - று. (எ)

977. என்னுமிம் மொழிக்கி லக்காய் வந்தன மிதனைக் கண்ட
பின்னுநல் லறத்தைத் தேருர் பேதைமை யாதி யார்கள்
பன்னகர்க் கிறைவ பஞ்சா னுத்தரம் புக்க பைந்தார்
மன்னன்வச் சிராயு தன்காண் வந்துசஞ் சயந்த னுனன்.

(இ - ள்) என்னும் - என்று சொல்கின்ற, இம்மொழிக்கு - இந்த (வீதராக ஸர்வஜ்ஞேக்தமாகிய) ஆகம வசனத்தினுக்கு, இலக்காய் - சாட்சியாக, (அதா

வது : எடுத்துச் சொல்ல உதாரணமாக நாம்,) வந்தனம் - தோன்றி வந்தோம், இதனை - இந்த விதத்தை, கண்ட பின்னும் - கேட்டுத் தெரிந்த பிறகும், நல் - நன்மையாகிய, அறத்தை - ஸ்ரீஜின தர்மத்தினது ஸ்வரூபத்தை, தேறார் - தெளியாதவர்கள், பேதைமை - அஞ்ஞானத்துக்கு, ஆதியார்கள் - முதல்வர்களாகிய பிரபல தரமஹாமோஹனீய கர்ம உதய வசத்தர்களாவார்கள், பன்னகர்க்கு - பவண தேவர்களுக்கு, இறைவ - எஜமானனாகிய தரணேந்திரனே!, பஞ்சாணுத்தரம் - பஞ்சாணுத்தரமென்னும் அஹமிந்திர லோகத்தில் சர்வார்த்தஸித்தி விமானத்தில், புக்க - அடைந்த, பைந்தார் - பசுமை பொருந்திய மாலையை யணிந்திராநின்ற, மன்னன் - ஸிம்மஸேன வாசன், (கடைசியில்), வச்சிராயுதன் - வஜ்ஜிராயுதனாகி, (தபோபலத்தால் சர்வார்த்தஸித்தி தேவனாய்), வந்து - இவ்விடத்து விதேக க்ஷேத்திர கந்தமாலினி நாட்டு வீத சோகபுரத்தில் வந்து, சஞ்சயந்தனானான் - ஸஞ்சயந்தனென்னும் அரசகுமாரனாகி ஜினதீக்ஷா பிராப்தனாகி தபோபலத்தால் சுத்த நிச்சய நிஜஸ்வரூப ஸித்தியை யடைந்தான், எ - று. (அ)

978. பாகொத்த மொழியி னாரோ டின்பத்துப் படிந்து சிதா
மாகற்பத் திழிந்து மைந்தன் சயந்தனாய் வளர்ந்து மாய
போகத்துக் கிவரிச் சித்தி புகுதுநற் காட்சி போக
நாகத்துக் கிறைமை பூண்ட நம்பிநின் வரவி தென்றான்.

(இ - ள்) பாகொத்த - வெல்லப்பாகுபோல் இனிமையாகிய, மொழியினாரோடு - வசனத்தையுடைய தேவமாதர்களுடன், இன்பத்து - சௌக்கியத்தில், படிந்து - தங்கி, சிதாமா - பூர்வம் ஸ்ரீதாமாவாயிருந்த பிரம்ம கல்பத்து தேவன், கற்பத்து - அந்த பிரம்ம கல்பத்தினின்றும், இழிந்து - ஆயுரவஸானத்து நழுவி, சயந்தன் - சயந்தனென்னும் பெயரையுடைய, மைந்தனாய் - புத்திரனாகி, வளர்ந்து வளர்ச்சியுற்று, மாயம் - நிலையில்லாத, போகத்துக்கு - ஸம்ஸார போகத்துக்கு, இவரி - இச்சித்து, சித்திபுகுதும் - மோட்சமாகும்படியாகிய, நற்காட்சி - ஸம்மியக் தரிசனமானது, போக - நீங்கிப்போக, நாகத்துக்கு - பவணலோகத்துக்கு, இறைமை பூண்ட - எஜமானத்துவத்தை யடைந்த, நம்பி - நம்பியே!, நின் - உன்னுடைய, வரவு - வருகையானது, இது - இத்தன்மையாகும், என்றான் - என்று ஆதித்யாபதேவன் தரணேந்திரனுக்குச் சொன்னான், எ - று. (க)

979. சேகொத்த மனத்த வேடன் றீவினை துரப்பச் சென்று
மா கவி பெற்ற வந்த வாயுவுங் கழிந்து மண்மேல்
நாகத்திற் றோன்றி மூன்று நரகத்துப் புக்குத் தீமை
வேகத்தில் விலங்கி லைந்து பொறியுளுஞ் சுழன்று செல்வான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும் சொல்லத் தொடங்கினவனாய்), சேகு - மரவயிரத்தை, ஒத்த - நிகர்த்த, மனத்து - மனத்தினையுடைய, வேடன் -

அதிதாருணனாகிய வேடன், தீவினை - பாபவினையானது, தூப்ப - தூத்த, மாகவிசென்று - அவ்வேடனாகிய பரியாயம் நீங்கி மாகவியென்னும் ஏழாநரகத்தை யடைந்து, பெற்ற - அந்நரகத்தில் தனக்கு ஸ்திதியாகப் பெற்ற, ஆயுவும் - ஆயுஷ்யகாலமும், கழிந்து - நீங்கி, மண்மேல் - இப்பூமியின்மேல், நாகத்தில் - ஸர்ப்ப பிறப்பில், தோன்றி - பிறந்து, தீமை வேகத்தில் - பொல்லாங்காகிய தீவிரபரிணாமத்தினால், மூன்றுநரகத்துப் புக்கு - மறுபடியும் மூன்றாவது நரகத்தை யடைந்து மறுபடியும், விலங்கில் - திரஸஸ்தாவர விலங்குகளெல்லாவற்றிலும், (தோன்றி), ஐந்து பொறியுளும் - பஞ்சேந்திரியங்களிலும், சுழன்று - சுழற்சியுற்று, செல்வான் - செல்பவனாய், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௧௦)

980. வந்திந்தப் பரதத் தின்கண் பூதர மணவ னத்தி
னந்தரத் தணியிற் செல்லும் நதியயி ராவ தியின்
றன்கரைத் தாப தற்குத் தலைவன்கோ சிருங்கன் பன்னி
மந்தஞ்சேர் சங்கி மைந்தன் சிருங்கஞ்சேர் மிருக னானன்.

(இ - ள்) இந்தப் பரததின்கண் - இந்த ஜம்பூத்வீப பரதக்ஷேத்திரத்து, பூதரமண வனத்தில் - பூதரமணமென்னும் காட்டினுடைய, அந்தரத்து - மத்தியில், அணியில் - அழகாக, செல்லும் - செல்கின்ற, அயிராவதி நதியின் தன் - ஐராவதியென்னும் பெயருள்ள ஆற்றினுடைய, கரை - கரையில் இராநின்ற, தாபதர்க்கு - தாபஸர்களுக்கு, தலைவன் - தலைவனான, கோசிருங்கன் - கோஶ்ருங்கன் என்னும் பெயருடையவனது, பன்னி - பெண்சாதியான, மந்தஞ் சேர் - மந்த புத்தியையுடைய, சங்கி - சங்கியென்னும் பெயருடையவளுக்கு, மைந்தன் - புத்திரனாக, வந்து - தோன்றி, சிருங்கம் சேர - ஶ்ருங்கம் என்கிற பதத்தைக் கடைசியிற் சேர்ந்திராநின்ற, மிருகன் - மிருகன் என்று (அதாவது: ம்ருக ஶ்ருங்கன் என்னும் நாமமுடையவனாக), ஆனான் - ஆகினான், எ - று. (௧௧)

981. பரல்மிசைக் கிடந்தும் முள்ளின் பலகையிற் றுயின்றும் பஞ்ச
வெரிநடுப் பகலி னின்று மிராவகம் வருடம் புக்குங்
கரையுடை மடையிற் சேர்ந்துங் கலையின்பின் னோடிக் காமத்
துரையுடை யவரிற் சீத குடங்களைத் தழுவித் தோளால்.

(இ-ள்) (அவன் அவ்வாறு பிறந்து), பரல்மிசை-பருக்கைக் கற்களின்மேல், கிடந்தும்-தங்கியும், (அதாவது: படுத்தும்), முள்ளின் பலகை-இருப்பு முட்களை மேல் மட்டம் சமனாகச் செய்து நிறையத் தைத்திராநின்ற பலகையில், துயின்றும் - நித்திரை செய்தும், நடு பகலில் - மத்தியான காலத்தில், பஞ்சவெரி நின்று - பஞ்சாக்கினியின் மத்தியில் நின்றும், இராவகம் - நடு இராத்திரியில்

வருடம் புக்கும் - மழை பெய்தால் அதில் நின்று நனைந்தும், (அப்படி மழை பொழியாவிட்டால்), கரையுடை மடையில் - உடைகரை வழியாக அல்லது ஜலப் போக்கு வழியாக நீர் பற்றுமல் செல்கின்ற இடத்தில் ஜலத்திலே, சேர்ந்தும் - அடைந்து நின்றும், கலையின் பின் - மான் கூட்டங்களினது பின்னால், ஓடி - ஓட்டம் பிடித்தோடியும், காமத்து - காமராகத்தின், உரையுடையவரில் - புகழ்ச்சி யுடையவர்களைப்போல, (குளிர் காலங்களில்), சீதகுடங்களை - குளிர்ச்சியாகிய நீர்க் குடங்களை, தோளால் - கைகளால், தழுவி - தழுவியும், எ - று. (௧௪)

982\. தூங்குறிக் கிடந்தும் நல்லார் தோளினைப் புணர்ந்துந் தூய்மை
வாங்கிய தவத்திற் செல்வான் வானத்தோர் விஞ்சை வேந்தன்
தீங்கிலா விஞ்சு மாலி திவிதில கத்து நாதன்
ஆங்குவந் தவனைக் கண்டாங் கண்ணைதா னிதானஞ் செய்தான்.

(இ - ள்) தூங்கும் - தொங்கும்படியான, உறி - உறியில், கிடந்தும் - உட்கார்ந்திருந்தும், நல்லார் - ஸ்த்ரீமார்களுடைய, தோளினை - தோள்களை, புணர்ந்தும் - காமத்தால் தழுவிச் சேர்ந்தும், தூய்மை வாங்கிய - பரிசுத்தமில்லாத (அதாவது: ஹேயோபாதேய தத்துவார்த்த ஶ்ரத்தான ரஹிதமாகிய அதாவது: ஸம்யக்தர்சன ஹீனமாகி மூடமாகிய), தவத்தில் - தபஸில், செல்வான் - செல்கின்றவனானன், (அவ்வாறு சென்ற இத்தாபஸன்), வானத்து - ஆகாயமார்க்கமாக, ஆங்கு வந்தவன் - அங்கு வந்தவனாகிய, திவிதிலகத்து - திவிதிலகமென்னும் பட்டணத்துக்கு, நாதன் - எஜமானாகிய, தீங்கிலா - நன்மையான குணங்களையுடைய, விஞ்சுமாலி - வித்யுன்மாலியென்னும் பெயருடைய, ஓர் விஞ்சை வேந்தன் - ஓர் வித்தியாதரவரசனை, கண்டு - பார்த்து, ஆங்கு - அவ்விடத்திலேயே, அண்ணை தான் - முன்னர் மூடமான தவத்தைச் செய்தவனாகிய தான், நிதானஞ் செய்தான் - நிதானத்தைப் பண்ணினான், எ - று. (௧௫)

983\. மற்றிவன் றனக்குப் போனற் றவத்தின்மே லெனக்கு வந்திச்
சுற்றமுஞ் செலவு வேந்துந் தொக்குட னிற்க வென்றிப்
பெற்றியை நினைத்துச் சென்றப் பிறப்பின்க ணீங்கி வெள்ளி
வெற்பின்கண் வடக்கிற் சேடி கனகபல் லவத்து வேந்தன்.

(இ - ள்) (அவ்வாறு நிதானம் பண்ணத் தொடங்கிய அவன்), இவன் தனக்குப்போல் - இவ்வித்தியாதரனுக்குண்டான விபவம்போல, நற்றவத்தின் - என்னுற் செய்யப்பட்ட நல்ல தவத்தினலே, மேல் - மறு ஜன்மத்தில், எனக்கு - எனக்கு, சுற்றமும் - பந்துக்களும், செலவும் - ஆகாய கமனமும், வேந்தும் - இராஜத்துவமும், தொக்கு - சேர்ந்து, வந்து - வந்து சேர்ந்து, உடன் - என்னுடன், நிற்கவென்று - பொருந்தி நிற்கவென்று, இப்பெற்றியை - இந்த எண்ணமாகிய நிதானத்தை, நினைத்து - தியானித்து, சென்று - தபஸில் சென்று, அப்

பிறப்பின்கண் - அந்தத் தாபதனாகிய ஜன்மத்து நின்றும், நீங்கி - ஆயுஷ்யாவஸானத்தில் நீங்கி, வெள்ளி வெற்பின் கண் - விஜயார்த்த பர்வதத்தில், வடக்கில் சேணி - உத்தரஸ்ரேணியில் இராநின்ற, கனக பல்லவத்து - கனக பல்லவம் என்கிற பட்டணத்துக்கு, வேந்தன் - அரசனாகிய, எ - று.

மற்று - அசை. இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கச)

984. வச்சிர தந்த னுக்கும் மாதர்வித் துப்பிர பைக்கு
மிச்சையாற் றோன்றி வித்துத் தந்தனென் றியம்பப் பட்டான்
வச்சிரப் பிளவு போலும் வேரத்தால் வந்த பாவத்
திச்செய்கை முனிக்குச் செய்தா னிவனந்த வமைச்சன் கண்டாய்.

(இ - ள்) வச்சிரதந்தனுக்கும் - வஜ்ரதந்தனென்னும் அரசனுக்கும், மாதர் வித்துப் பிரபைக்கும் - அவனுடைய பெண்சாதி வித்யுத்பிரபை யென்பவளுக்கும், இச்சையால் - ஆசையால், தோன்றி - (பிள்ளையாகப்) பிறந்து, வித்துத்தந்தனென்று - வித்யுதம்ஷ்ட்ரன் என்று, இயம்பப்பட்டான் - யாவராலும் பெயர் சொல்லப்பட்டவனானான், வச்சிரப்பிளவுபோலும் - வஜ்ரக் கற்பிளப்புப்போலும், வேரத்தால் - வைரபாவத்தால், வந்த - உண்டாகிய, பாவத்து - பாபகர்மோதயத்தால், முனிக்கு - இந்தச் சஞ்சயந்த முனிவரனுக்கு, இச்செய்கை - இவ்விதமாகிய உபசருக்கங்களை, செய்தான் - பண்ணினான், இவன் - இந்த வித்துத் தந்தன், அந்த அமைச்சன் - (ஆதியில் ஸிம்மஸேன மஹாராஜனுடைய மந்திரியாகிய ஸ்ரீபூதியென்கிற) அந்த மந்திரியாகும், கண்டாய் - தரணேந்திரனே! நீ தெரிந்து கொண்டனையா?, எ - று. (கரு)

985. வேரத்தால் வேந்தற் கென்றும் பகைவனாய் வெய்ய துன்பப்
பாரத்தை முடியச் சென்றான் பகைவனாய்த் தனக்குத் தானே
வேரத்தை யொன்று மின்றி வேந்தனும் வீட்டி லின்பப்
பாரத்தை முடியச் சென்றான் பன்னகர்க் கிறைவ வென்றான்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லி மேலும் அவனை நோக்கி), பன்னகர்க்கு இறைவ - பவணதேவர்களுக் கதிபதியாகிய தரணேந்திரனே!, வேரத்தால் - வைரபாவத்தால், வேந்தற்கு - சிம்மஸேன மஹாராஜனுக்கு, என்றும் - எப்போதும், பகைவனாய் - (ஸ்ரீபூதியாகிய மந்திரியானவன்) சத்துருவாகி, (அப்பரிணாமத்தால்), தனக்குத்தானே - தன்னுடைய ஆத்மனுக்குத்தானே, பகைவனாய் - பாபகருமங்களை உண்டுபண்ணிக்கொள்ளும் சத்துருவாகி, (அதனால்), வெய்ய - வெப்பம் பொருந்திய, துன்பபாரத்தை - துக்க ஸமூஹ சுமையில், முடிய - முழுதிலும், சென்றான் - அடைந்தான், (அதாவது: நரககதி துன்பம் விலங்குகதி துன்பங்களில் மிகுதியானவற்றை யெல்லாம் அனுபவித்தான்), வேரத்தை -

பாவத்தில், ஒன்றுமின்றி - சிறிதுமில்லாமல், ,, வேந்தனும் - ஸிம்மஸேனனென்னும் அரசனும், வீட்டில் - என்றும் நீங்குதலில்லாத, இன்பபாரத்தை - அனந்த ஸௌக்கியமாகிய சுத்த ஸ்வாத்மோத்தலாபத்தை, முடிய-முழுதிலும், (அதாவது : அனந்த ஞானதி ஸகல குணங்களையும்), சென்றான் - (திரவிய, க்ஷேத்திர, கால பாவ நியதத்தால்) அடைந்தான், என்றான் - என்று சொன்னான், எ - று. (கசு)

986. மந்திரி நாகம் மான மாப்பின்வா ரணத்தி னாகம்
வெந்தெரி நாகன் மிக்க மாசுணம் நாகன் வேடன்
அந்தமா நாகன் னாக மாரழ னாகன் மற்றும்
மைந்தன்சங் கிக்கு வித்துத் தந்தன்றன் வரவி தாமே.

(இ - ள்) (பின்னரும்), மந்திரி - ஸ்ரீபூதி மந்திரியானவன், பின் - பின்பு, நாகம் - அகந்தன ஸர்ப்பமாகி, (அதன் பின்பு), மானமா - சமரீமிருகமாகி, (அதன் பிறகு), வாரணத்தினாகம் - கோழிப் பாம்பாகி, (பின்னை), வெந்தெரி - மிகவும் வெந்தெரிகின்ற, நாகன் - மூன்றாவது நாகனாகி, (பிறகு), மிக்கமாசுணம் - உருவத்தில் மிகுந்த மலைப்பாம்பாகி, (பின்பு), நாகன் - நாலாவது நாகனாய், (அதன் மேல்), வேடன்-(அங்கு நின்று நீங்கி) வேடனாகி, (பின்பு) அந்தமாநாகன்-கடைசியாகிய ஏழாநாகனாய், (ஆயுரவஸானத்து), நாகம்-பாம்பாகியிறந்து (பின்பு), ஆர் அழல் - நிறைந்த அக்கினி சொரூபமாகிய, நாகன் - மூன்றா நாகனாகி, மற்றும் - பின்னையும், சங்கிக்கு மைந்தன் - சங்கியென்னும் தாபஸஸ்த்ரீக்குப் புதல்வனாகி, (பிறகு), வித்துத் தந்தன் - வித்யுத்தம்ஷ்ட்ரன் என்பவனானான், தன் - இவனுடைய, வரவு - பிறப்பின் வருகையானது, இதாம் - இப்போது சொல்லப் பட்ட வரிசையாகும், எ - று. (கஎ)

987. மன்னவன் மத்த யானை சாசாரன் விஞ்சை வேந்தன்
பின்னைகா விட்ட தேவன் பெரியவச் சிராயு தன்பின்
பன்னருந் தவத்திற் பஞ்சா னுத்தரத் தமரன் பார்மேல்
மன்னிய புகழி னன்சஞ் சயந்தன்றன் வரவி தாமே.

(இ - ள்) மன்னவன் - ஸிம்மஸேன மஹாராஜன், மத்த யானை - (அடுத்த பிறப்பில்) மதயானையாகி, (பின்னர், விராதானுஷ்டான பாவனையால்), சாசாரன் - ஸஹஸ்ரார கல்பத்து தேவனாகி, (பின்பு), விஞ்சை வேந்தன் - (கிரண வேகனென்னும்) வித்தியாதர வரசனாகி, பின்னை - மறுபவத்தில், காவிட்டதேவன் - காபிஷ்ட கல்பத்து தேவனாகி, (அதன் பின்), பெரிய - உயர்ந்த, வச்சிராயுதன் - வஜ்ராயுதனென்னும் அரசனாகி, பின் - அப்பவத்தின் பிற்காலத்தில், பன்னரும் - சொல்லுதற்கரிய, தவத்தில் - ஜினதீக்ஷா பிராப்த தபஸினால், பஞ்சானுத்தரத் தமரன் - பஞ்சானுத்தரத்தில் அஹமிந்திர தேவனாகி, (அதன்பின்), பார்மேல் -

மறுபடி இப்பூமியில் வந்து, மன்னிய - நிலை பெற்ற, புகழினன் - புகழ்ச்சியை யுடையவனாகிய, சஞ்சயந்தன் - சஞ்சயந்த பட்டாரகனானான், தன் வரவு - அவனது பிறப்பின் வரிசை, இதாம் - இத்தன்மையாகும், எ - று. (௧௭)

988. வயிரத்தை யொருவர்க் காக்கி யிருவர்க்கும் பிறவி தோறுந்
துயரத்தை விளைத்தல் சொன்னா லிவர்களே சொல்ல வேண்டாம்
மயரிகண் மறத்தி னீங்கி நாகபா சத்தை வாங்கி
யுயிரொத்திங் கிவனோ டொன்றி யொழுகுநீ யுரகர் கோவே.

(இ - ள்) உரகர் கோவே - தரணேந்திரனே!, வயிரத்தை - வைர பாவத்தை, ஒருவர்க்கு - ஒருவருக்கு, ஆக்கி - உண்டு பண்ணி, இருவர்க்கும் - இந்த இரண்டு பேர்களுக்கும், பிறவிதோறும் - பவம் பவந்தோறும், துயரத்தை - துக்கத்தை, விளைத்தல் - உண்டு பண்ணிக்கொண்டதை, சொன்னால் - சொல்லினால், இவர்களே - இந்த இரண்டு பேர்களே அதற்குப் போதுமான சாட்சிகள், சொல்லவேண்டாம் - இனி வேறொருவரைச் சொல்ல வேண்டியதில்லை, (ஆகையால்), மயரிகண் - மயக்கத்தையுடைய இந்த வித்துத்தந்தன் மேலாகிய, மறத்தின் - வைரபரிணதியாகிய பாபத்தினின்றும், நீங்கி - விலகி, நாகபாசத்தை - இவனைக்கட்டின நாகபாசத்தை, வாங்கி - விடுவித்து, இங்கிவனோடு - இவ்விடத்து இந்த வித்துத் தந்தனோடு, ஒன்றி - சிநேகத்திற் பொருந்தி, உயிரொத்து - உனதுயிர்க்குச் சமானமாக, (இவனைக் கருதி), ஒழுகு - தயாபரிணதியிற் கூடிச் செல்லக்கடவாய், எ - று. (௧௧)

989. என்றலு மிறைவ வன்றென் னரகத்து ளிடும்பை தீர்த்தா
யின்றுமிப் பிறவி யெல்லா நின்றவா றெனக்குச் சொல்லி
வென்றவ ரறத்திற் காட்சி விமலம தாகச் செய்தா
யென்றனக் கிறைவ னீயே யின்னமொன் றருளிச் செய்வன்.

(இ - ள்) என்றலும் - என்று ஆதித்யாபதேவன் சொல்லவும், (தரணேந்திரன் அவனை நோக்கி), இறைவ - நாதனே!, அன்று - அப்பொழுது, என் - என்னுடைய, நரகத்துள் - நரகத்துளுண்டாகிய, இடும்பை - துன்பங்களை, தீர்த்தாய் - தர்மப் பிரபோதனஞ் செய்து நீக்கினாய், இன்றும் - இப்பொழுதும், இப்பிறவி யெல்லாம் - இந்தப் பிறப்புகளெல்லாம், நின்றவாறு - உண்டாகிய விதத்தை, எனக்குச் சொல்லி - எனக்குத் தெரியும்படி சொல்லி, வென்றவர் - கருமங்களை ஜெயித்த ஜினேந்திரனாற் சொல்லப்பட்ட, அறத்தில் - ஸ்ரீ ஜினதருமத்தினால், காட்சி - தர்சனத்தை, விமலமதாக-தோஷரஹிதமாக (அதாவது : சுத்த ஸம்யக்த்வமாக), செய்தாய் - எனக்குத் தெளியச் செய்தாய், என் தனக்கு - எனக்கு, இறைவன் - குருவானவன், நீயே - நீயே, இன்னம் - இன்னமும், ஒன்று - ஒரு

காரியமுண்டு, (அதை), அருளிச் செய்வன் - அன்புடன் சொல்லுகின்றேன், (கேட்பாயாக), எ - று. (௨0)

990. விஞ்சையின் வலியிற் போகி மேதக்கோர் தம்மை வவ்வித்
தஞ்சிறை வைக்கும் வித்துத் தந்தன்றன் குலத்து மிக்க
விஞ்சையைப் பறித்து வீழ்ந்த சிறகுடைப் பறவை போல
விஞ்சைமா நகரத் துள்ளே யிருத்துவ னிவரை யின்றே.

(இ - ள்) விஞ்சையின் - வித்தைகளினுடைய, வலியில் - வல்லமையினால், போகி-ஆகாயமார்க்கமாக விமானத்திற்சென்று, மேதக்கோர் தம்மை - மேன்மை பொருந்திய குணமுடையவர்களையும், வவ்வி - பிடித்து, தஞ்சிறை - தங்களிடம் கொண்டு வந்து சிறையாக, வைக்கும் - வைக்கின்ற, வித்துத்தந்தன் தன் - இந்த வித்யுத்தம்ஷ்ட்ரனுடைய, குலத்து - குலத்தார்களில் உண்டாகிய, மிக்க விஞ்சையை - மஹா வித்தைகளை, பறித்து - அவர்கட்காகாமல் தடை செய்து நீக்கி, வீழ்ந்த சிறகுடை - சிற குதிர்ந்திருக்கின்ற, பறவை போல - பட்சியைப்போல, இவரை - இவ்வித்தியாதர வம்சத்தார்களை, இன்று - இப்பொழுது, விஞ்சைமா நகரத்துள்ளே - வித்தியாதரர் வசிக்கின்ற பட்டணங்களிலேயே, இருத்துவன் - ஸ்தாபிப்பேன், எ - று. (௨க)

991. என்றிடா வுரைப்ப வாதித் தாபனிப் பிழைபொ றென்னப்
பொன்றிடாக் கேதஞ் சூழா திவர்களென் வெகுளி நீங்கா
தென்றிடா வுரைத்து மேனு னிறைவநின் னருளி னாலே
மன்றலாங் குழலி னார்க்கே மாவிஞ்சைப் பணிசெய் கென்றான்.

(இ - ள்) என்றிடா - என்று, உரைப்ப - சொல்ல, ஆதித்தாபன் - ஆதித்யாபதேவன், (அவனை நோக்கி தரணேந்திரனே!), இப்பிழை - இவனால் செய்யப் பட்ட இந்தத் தவறுதலை, பொறு - நீ க்ஷமைப் பண்ணிக்கொள், என்ன - என்று சொல்ல, (அதற்கவன்), இறைவ-நாதனே!, இவர்கள்-இவ்வித்தியாதர வர்க்கத்தார் கள், பொன்றிடா - என்னால் இறவாமலும், கேதம் சூழாது - இவர்கட்கு என்னால் ஒரு பொல்லாங்காகிய தண்டனை பற்றாமலும், என் வெகுளி - எனது கோபம், நீங்காது - நீங்கமாட்டாது, என்றிடாவுரைத்து - என்று சொல்லி, (மேலும்), மேனுன் - இனிவருங் காலத்தில், நின்னருளினாலே - உனது தயாபரிணாமானு சாரத்தினால், மன்றலாம் - வாசனை வீசும், குழலினார்க்கு - அளகத்தையுடைய இவ்வம்சத்து ஸ்த்ரீமார்களுக்கு, மாவிஞ்சை - மஹா வித்தைகள், பணிசெய்க - சாதகமாகி ஏவல் செய்க, என்றான் - என்று சொன்னான், எ - று. (௨௨)

992 இவ்வண்ணஞ் செய்தி டேனே யிருட்பிழம் பிரண்டு மின்னுக்
கவ்விய வனைய மேனிக் கடையர்தங் களிப்பி னாலே

யெவ்வழி யானு மோடி யெளியவர் தம்மை யெல்லாங்
கவ்வைகள் பலவுஞ் செய்வர் மேல்வருங் காலத் தென்ருன்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும்), இவ்வண்ணம் - இப்பிரகாரம், செய்திடேனேல் - செய்யாமற் போவேனேயாமாகில், இருள்பிழம்பு - அந்தகார புஞ்சமானது, இரண்டு மின்னு - இரண்டு மின்னற்கொடிகளை, கவ்வியதனைய - சேர்ந்ததற்குச் சமானமாகிய, மேனி - இரண்டு கோர தந்தங்கள் பொருந்திய கறுத்த சரீரத்தையுடைய, கடையர் - கீழோராகிய இவ்வித்தியாதரர்கள், தம் - தங்களுடைய, களிப்பினுலே - சந்தோஷத்தினுலே, எவ்வழியானும் - எந்தத்திக்கி லாகிலும், ஓடி - சென்று, எளியவர் தம்மை யெல்லாம் - எளிய மனுஷ்யர்களுக் கெல்லாம், மேல்வருங்காலத்து - இனிமேல் வருங்காலத்தில், கவ்வைகள் பலவும் - பலவாகிய உபசருக்கங்களை, செய்வர் - செய்வார்கள், என்ருன் - என்று சொன் ஞன், எ - று. (உ௩)

993. மௌவலங் குழலி ஞரும் மாவிஞ்சை யடிப்ப டுப்பார்
செவ்வியாஞ் சஞ்ச யந்தன் றிருவடிக் கமலஞ் சேர்ந்தங்
கவ்விய மின்றி நின்று சிறப்பயர்ந் தோதி னல்லா
லெவ்வகை விஞ்சை யேனு மெதிர்வர லொழிக வென்ருன்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னர்), மௌவல் - முல்லைப் புஷ்பங் களை யணிந்த, அம் - அழகிய, குழலிஞரும் - அளகபாரத்தையுடைய ஸ்த்ரீமார் களும், செவ்வியாம் - சுத்த ஸ்வரூபமுடைய, சஞ்சயந்தன் - சஞ்சயந்த பட்டாரக ருடைய, திருவடிகமலம் - அழகிய பாத தாமரைகளை, சேர்ந்து - நமஸ்கரித் தடைந்து, அங்கு - அவ்விடத்திலேயே, அவ்வியமின்றி - வஞ்சனை பொருமை முதலாகிய துர்க்குணங்களின்றி, நின்று - சுபத்தியானத்துடன் கூடி நின்று, சிறப்பு - அருகத் பரமேசுவர பூஜையை, அயர்ந்து - மங்கலார்த்தமாகச் செய்து, ஓதின்-வித்யா மந்திரங்களை ஓதுவார்களேயாஞல், மாவிஞ்சை - மஹா வித்தையை, அடிப்படுப்பார் - தங்கள் வசப்படுத்துவார்கள், அல்லால் - அப்படியல்லாமல், எவ் வகை விஞ்சையேனும் - எந்த விதமான வித்தைகளாயிருந்த போழ்திலும், (அவற் றில்), எதிர்வரல் ஒழிக - அபிமுகமாகாமல் நீங்கக்கடவீராக, என்ருன் - என்று (வித்யா தேவதைகளுக்கு) ஆக்ஞாபித்தான், எ - று.

'செவ்வியற்சஞ்சயந்தன்' என்றும் பாடபேத முண்டு. (உ௪)

994. தரைமக டிலக மன்ன தடவரை யிதன்கண் மேஞட்
பிரமரி முதல விஞ்சை யடிபடப் பிணைய ஞருக்
* கிரிமந்தா ரிக்கு லத்து மைந்தர்க்கா கென்றி தன்பே
ரிரிமந்த மென்றோர் குன்றி னிறைவஞ லயஞ்ச மைத்தான்.

(இ - ள்) (அவ்வாறு செய்து பின்னர்), தலைமகள் - பூமிதேவியின், திலக மன்ன - நெற்றிப்பொட்டுக் கொப்பாகிய, (அதாவது : பூமியிற்சிறந்த), தடவரையி தன் கண் - இச் சஞ்சயந்தர் பரி நிர்வாணமுற்ற இந்த விசாலமான கிரியின்மேல், மேனாள் - இனிவருங்காலத்தில், பிணையனாருக்கு - பெட்டைமான்போல் மருண்ட பார்வையையுடைய ஸ்த்ரீமார்களுக்கு, பிரமரி முதல - பிரம்மரி முதலாகிய, விஞ்சை - வித்தைகள், அடிபட - வசமாக, இரிமந்தான் - மானபங்கந்தான், இக் குலத்து - இந்த வித்துத்தந்தன் குலத்துட்டோன்றும், மைந்தர்க்கு - புருஷர் களுக்கு, ஆக என்று - உண்டாகக்கடவது என்று உறுதிபண்ணி, இதன் பேர் - இப்பர்வதத்தின் பெயரானது, இரிமந்தமென்று - ஹ்ரீமந்தமென்று சொல்லி, ஓர்- ஒப்பற்ற, குன்றின் - அப்பர்வதத்தின்மேல், இறைவனாலயம்-சஞ்சயந்த பட்டாரக ருடைய கோயிலை, சமைத்தான் - உண்டுபண்ணினான், எ - று. (உரு)

* இரிமம் - ஹ்ரீமம் என்னும் வடமொழித் திரிபு : இரிமம் - லஜ்ஜை.

வேறு.

995. மஞ்சு லாமலை மேன்மலி மாநகர்
பஞ்ச நன்மணி யோடு பசும்பொனாற்
சஞ்ச யந்தபட் டாரக சட்டகம்
நஞ்சு கட்கிறை வன்செய்து நாட்டினான்.

(இ - ள்) (அவ்வாறு செய்து), நஞ்சுகட்கிறைவன் - நாகர்க்கிறைவனாகிய தரணேந்திரன், மஞ்சு - மேகங்கள், உலாம் - உலாவுகின்ற, மலை மேல் - ஹ்ரீமந் தமென்னும் அப்பர்வதத்தின் மேலே, மலி (லக்ஷணங்களால்) நிறைந்த, மா - பெருமையையுடைய, நகர்-கோயிலை, பஞ்சம்-ஐந்து விதமான வர்ணங்களையுடைய, நல் - நன்மையாகிய, மணியோடு - (பத்மராகம், இந்திர நீலம், மரகதம், கோமேத கம், வைரம், ஸ்படிகம், முதலாகிய) இரத்தினங்களோடு, பசும்பொனால் - மாற் றற்ற பசுமையாகிய பொன்னினால், செய்து - இயற்றி, சஞ்சயந்தபட்டாரக சட்ட கம் - சஞ்சயந்தபட்டாரகருடைய பிரதிமாரூபத்தை, செய்து - செய்து, நாட்டி னான் - ஸ்தாபித்தான், எ - று.

'செய்து' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (உசு)

996. முழவு தண்ணுமை மொந்தை முழங்கின
முழை மழையின் முரன்ற வலம்புரி
கழல நின்றழைத் திட்டன காகளங்
குழலோ டேங்கின வீணைக் குழாங்களே.

(இ - ள்) (அவ்வாறியற்றிச் சிறப்புச்செய்யத் தொடங்கினபோது), முழவு - மத்தளங்களும், தண்ணுமை - பேரிகைகளும், மொந்தை - ஓர்கட்பறையும், முழை மழையின் - இருளோடுகூடி சப்திக்கின்ற மேகத்தைப்போல, முழங்கின - அக் கோவிலுக்குள் சப்தித்தன, வலம்புரி - வலம்புரிச் சங்குகளும், முரன்ற - முழங் கின, காகளம் - எக்காளங்கள், கழல நின்று-வெளியாகத் தொனிபுறப்பட நின்று, அழைத்திட்டன - கூவித் தொனித்தன, குழலோடு - புள்ளாங்குழல்களோடு, வீணைக்குழாங்கள் - வீணை ஸமூஹங்களும், ஏங்கின - சப்தித்தன, எ - று. (உ௭)

997. நிரந்த கின்னரர் கீத நிலமிசை
யரம்பை யர்மின்னி னெங்கணு மாடினார்
சுரந்த காதலிற் சொற்றழ காகநற்
கரங்கு வித்துர கர்க்கிறை யேத்தினான்.

(இ - ள்) (இன்னும்), நிலமிசை-பூமிமேல், (வந்து அச்சிறப்பிற்குக் கூடிய), கின்னரர் - கின்னர தேவர்களுடைய, கீதம் - இசையானவை, நிரந்த - வரிசை யாக அமைந்தன, எங்கணும் - எவ்விடங்களிலும், மின்னின் - மின்னற் கொடி யைப்போல், அரம்பையர் - தேவநர்த்தகிகள், ஆடினர் - நர்த்தனஞ் செய்தார்கள், உரகர்க்கு - பவண தேவர்களுக்கு, இறை - இறைவனாகிய தரணேந்திரனானவன், சுரந்த - மிகுதியாகி உண்டாகிய, காதலில் - பக்தியின்விருப்பினால், சொற்று - புகழ் வசனங்களைச் சொல்லி, அழகாக - இலக்ஷணமாக, நல் - நன்மைபொருந்திய, கரங்குவித்து - ஹஸ்தமுகுளிதஞ் செய்து, ஏத்தினான் - கீழ்வருமாறு ஸ்தோத்தி ரம் பண்ணினான், எ - று. (உ௮)

வேறு.

998. கலையிலா வறிவனீ கலனிலா வழகுநீ
மலைவிலா மதனுநீ மறுவிலா மதனுநீ
* யுலகினுள் ளாயு நீ யுலகினுள் ளாயொரு
நிலையிலா நிலையைநீ யாகிலு மிறைவனீ.

(இ - ள்) (அத்துதிகளாவன :—) கலையிலா - நிரம்சமாகியிருக்கும், (அதா வது : கிரமகரணவிதாயிகளும் ஸ்வபாவ காலதேச அம்சங்களோடு கூடிக் கிரமமாய் விருத்தியடைவனவுமான மதி, ச்ருதி, அவதி, மனபர்யய ஞானங்களைப் போலல் லாமல்), அறிவன் - ஸகலத்தையும் ஏகசமயத்தில் ஒருங்காக அறியும் கேவல ஞான மென்னும் அனந்த குண மஹாத்மியமுடையவன், நீ - நீயே, கலனிலா - ஆபரண ரஹிதமாகிய, அழகு நீ-காந்தியும் நீயே, மலைவிலா-இனி மாறுதலையடைந்து விகார மெய்தாத, மதனு நீ-மோக்ஷாநந்தப் பெருமை யுடையவனும் நீயே, மறுவிலா-குற்ற மில்லாத, மதனு நீ - மோக்ஷமார்க்கமும் அல்லது சமயமும் நீயே, உலகினுள்-சான்

றோர் சங்கங்களில், ஆயும் - ஆராய்ந்தறியும் பொருளும், நீ - நீயே, ஒரு நிலையிலா நிலையை - ஒரு நிலையலாத நிலைமையை யுடையவன், (அதாவது : அர்த்தபரியாயத்தால் உத்பாத, வ்யய, த்ரௌவ்ய யுக்த ஸத்தா லக்ஷண சுத்த திரவிய குண பரியாயத்தையுடையவனாக), நீயாகிலும்-நீ இருந்தபோதிலும், உலகில் - இவ்வுலகத்தில், நீ - நீ, உள்ளாய் - துருவமாகவிருக்கிறாய், இறைவ - நாதனே !, எ - று. (௯௯)

* உலகின் - திரிலோகத்தையும், உள்ளாய் - உன்னுடைய அனந்த ஞானத்திற்குள் அடக்கிக்கொண்டவனும், நீ - நீயே, (அப்படி நீ உலகத்தை உனக்குள் அடக்கிக்கொண்டு) உலகின் - இவ்வுலகத்திலும், உள்ளாய் - நீயும் ஒருபொருளாய் இருக்கிறாய், இறைவ - இறைவனே !, என்று பொருள் கூறுவோருமுளர்.

உலகின் - உருபுமயக்கம்.

999. அமலனீ யறிவனீ யருகனீ யசலனீ
விமலனீ வீரனீ வேரமி லொருவனீ
தமிலனீ தறவனீ சுகதனீ சிவனுநீ
கமலனீ கருணைநீ கைவலச் செல்வனீ.

(இ - ள்) அமலன் - மலமில்லாத நிர்மல ஸ்வரூபன், நீ - நீயே, அறிவன் - சுத்தசேதன பிரத்தியக்ஷ ஸ்வாத்மோத்தகுண, ஸ்வ, பரப்பிரகாசன ஸர்வஜ்ஞனும், நீ - நீயே, அருகனீ - யோக்யனும் நீயே, அசலனீ - சலனமில்லாதவனும் நீ, விமலனீ - தன்னிலை யெய்தின பரிசுத்தனும் நீயே, வீரனீ - ஸ்வயம்புகுண சக்த சுத்த சக்தி யுக்த அனந்த வீரியனும் நீயே, வேரமில் - வைரபாவ மில்லாத, ஒருவன் - ஒற்றுமையானவன், நீ - நீயே, தமிலனீ - ஓங்கார வடிவனும் நீயே, தறவனீ - பாகியாப்பியந்தர பரிக்கிரகாஹிதனும் நீயே, சுகதனீ - அனந்த சுக ஸ்வரூபியும் நீயே, சிவனு நீ - மோக்ஷமங்களனும் நீயே, கமலன்நீ-பத்மாஸனனும் நீயே, கருணை நீ - ஸர்வ ஜீவதயாபரனும் நீயே, கைவலச் செல்வனீ - நிச்சய ஆத்மத்திரவிய ஸ்வரூபமாகிய கேவல லக்ஷ்மியையுடைவனும் நீயே, எ - று.

'சுகதனீ விகதனீ' எனவும் பாட பேத முண்டு. (௯௦)

1000. இறைவனீ ஈசனீ எண்குணத் தலைவனீ
பொறியிலா வறிவனீ பூசனைக் கிறைவனீ
மறுவிலா வொருவனீ மாதவத் தலைவனீ
சிறியயா னின்குணஞ் செப்புதற் கரியனீ.

(இ - ள்) இறைவன் நீ - நாதனும் நீயே, ஈசன் நீ - முதல்வனும் நீயே, எண் குணத்தலைவனீ - அனந்தஜ்ஞானாதி அஷ்ட குணத்தலைவனும் நீயே, பொறியிலாவறிவனீ - அதீந்திரிய ஞானஸ்வரூபனும் நீயே, பூசனைக்கு இறை

வனீ - திரிபுவனுதி பதிகளால் பிரிய தமமாக பூஜிக்கப்படுபவனும் நீயே, மறுவிலா வொருவனீ - களங்கமில்லாத (அதாவது : கலத்தற்றன்மையில்லாத) ஸ்வயம்புவானவனும் நீயே, மாதவத் தலைவனீ - மஹா தபஸையுடைய கணதராதி யதிவரர்களுக்கெல்லாம் அக்ரணியானவனும் நீயே, சிறியயான் - அற்ப புத்தியையுடைய நான், நின் குணம் - உனது அனந்தமாகிய குணங்களை, செப்புதற்கு - சொல்வதற்கு, அரியனீ - அருமையானவனும் நீயே, (என்பவைகளாம்), எ - று. (௲க)

வேறு.

1001. இனையன துதிகள் சொல்லி யிருக்கையோ ரிரண்டு நான்கு
மனமலி வணக்கந் தோறு மூவகைச் சுழற்றி மாண்பின்
வினையற வெறிந்த கோனை விண்ணவ ரோடு மின்னுங்
கனைகழ லுரகர் கோமான் கைதொழு திறைஞ்சிப் போனான்.

(இ - ள்) வினை - கர்மங்களை, அற - நீங்கும்படி, எறிந்த - (வீதராக சுத்தோபயோகதியானத்தால்) நீக்கின, கோனை - தலைவராகிய இச்சஞ்சயந்தபட்டாரகரை, விண்ணவரோடு - சதுர்ணிகாயாமரர்களோடு, மின்னும் - பிரகாசியாநின்ற, கனை - சப்தியாநின்ற, கழல் - வீரகண்டயத்தை யணிந்த, உரகர்கோமான் - தரணேந்திரனானவன், இனையன - இத்தன்மையனவாகிய, துதிகள் - ஸ்துதி வசனங்களை, சொல்லி - தொடுத்துச்சொல்லி, இருக்கையோரிரண்டு - ஒப்பற்ற இரண்டுவித இருப்பில், (அதாவது: காயோத் ஸர்க்கமாக நிற்பதிலும், பர்யங்காசனமாக இருப்பதிலும், (பொருந்தி), மனமலி - மனதில் நிறைந்த, (ஏகாக்கிரமாகிய), நான்கு வணக்கந்தோறும் - (அரஹந்த, ஸித்த, ஸாஹு, தர்மமென்னும்) சதுர்வித வணக்கத்துடன், மாண்பின் - (பக்தி பிரகிருஷ்ட முடிவில்) அழகாக, கைதொழுது - ஹஸ்த முகுளிதஞ்செய்து, மூவகைச் சுழற்றி - (கருப்போபபாத சம்மூர்ச்சனையால் சுழலும் ஸம்ஸாரம் நீங்கும்படி அவ்வாறு முகுளித்தகையை) மூன்றுதரஞ் சுழற்றி, இருக்கையோரிரண்டு - (மீண்டும்) ஒப்பற்ற இரண்டுவித இருக்கையில், (அதாவது : சாஷ்டாங்கமாகவும், பஞ்சமுஷ்டியாகவு மிருப்பதில்), இறைஞ்சி-வணங்கி, போனான் - தனதிடம் சென்றான், எ - று. (௲உ)

"இருக்கையோரிரண்டு" என்னும் தொடர் உரையில் இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

1002. மாதக்க போதத் தாதித் தாபனும் விஞ்சை வேந்தன்
மேதக்க வருள வோம் விடத்தக்க தென்று மிக்க
கோபத்தை யுபச மிப்பித் தருளினைக் கொண்டு நிற்கு
நோதக்க நீதி யுள்ளா னுவனுதற் குள்ளம் வைத்தான்.

(இ - ள்) (அதன் மேல்), மாதக்கபோதத்து - பெருமை பொருந்திய ஸம்மியக்ஞானத்தையுடைய, ஆதித்தாபனும் - ஆதித்யாபதேவனும், விஞ்சைவேந்தன் - வித்தியாதரவரசனுகிய வித்யுத்தம்ஷ்ட்ரனுடைய, வேரம்-குரோதபரிணாமமானது, விடத்தக்கதென்று - விட்டு நீங்கத்தக்கதென்று, (கருதி), மிக்க - மிகுதியாகிய கோபத்தை - அவனுடைய குரோதத்தை, உபசமிப்பித்து - உபசமம் பண்ணுவித்து, அருளினை - தயவை, கொண்டு - மனதிற்கொண்டு, மேதக்கது-மேன்மை பொருந்தியதாகிய தரும நீதியை, அருள - அவனுக்குச் சொல்லியருள,( அதனுல்), நிற்கும் - அங்கே நிற்கின்ற, நோதக்க - வருத்தந்தங்கிய, நீதி உள்ளான் - முன்னே நீதியை நினைக்காதவனுகிய அவ்வித்துத் தந்தன், நுவலுதற்கு - அத்தேவன் சொல்வதற்கு, (அதாவது : அதனைக்கேட்பதற்கு), உள்ளம் வைத்தான் - மனம் பொருந்தினுன், எ - று. (௩௩)

1003. மதகரி மசகம் போல்வார் வசம்வரல் வைய மூன்றிற்
கதிபதி யாகு மாகா விதிவசம் வருத லொன்று
மதிபெரி துடைய நீரார் மாற்றிடை யின்ப மேவார்
விதியற வெறிய வெண்ணும் விஞ்சையால் விஞ்சை வேந்தே.

(இ - ள்) (அவ்வாறு நீதி கூறத்தொடங்கிய ஆதித்தியாபதேவன் அவனை நோக்கி), விஞ்சை வேந்தே - வித்தியாதர வரசனே !, மசகம்போல்வார் - அற்ப சரீரமுடைய கொசுப்போல மிகவும் தாழ்ந்த சரீர பரிமாணத்தையும் தாழ்ந்த ஆயுஷ்யத்தையு முடையவர்களாகிய மனுஷ்யர்களுக்கு, (ஞான சக்தியாலும் மனுே முயற்சியாலும்), மதகரி - மதம்பொருந்திய யானையும், வசம் வரல் - ஏவல்கேட்டு வசமாகின்றது, ஆகாவிதிவசம்வருதல் - (அம்மதகரிக்கு) கெட்ட விதிவசத்தால் வருவதாகும், மசகம்போல்வார் - கொசுகைப்போல் அற்பமானவர்கள், (க்ஷாயிக பாவ ஸம்மியக்ஞான சக்தியுற்று சுத்த ஸ்திதியில் நிற்றலாகிய ஸ்வசாரித்திர வசம் பெற்று), வைய மூன்றிற்கு - இம் மூவுலகத்துக்கும், அதிபதி - ஆதிபத்யமாகிய ஈஸ்வரத்தன்மை யடைவது, ஆகும் விதிவசம் வருதல் - நல்ல விதிவசத்தால் வருவதாகும், (ஆதலால்), ஒன்றும் - பொருந்திய, மதிபெரிதுடையநீரார் - ஸம்மியக்ஞானோத்கிருஷ்டமாகிய குணமுடையவர்கள், விதியற - பாவகர்ம திரவியகர்ம நோகர்மங்கள் முழுமையையும், எறிய - சேதித்து நீக்கும்படியாக, எண்ணும் - கருதுகின்ற, விஞ்சையால் - தங்களுடைய சுருத ஞானபலத்தால், (அங்ஙனம் விதியறவெறிய வெண்ணுமல்), மாற்றிடை - இச்சமுசாரத்திலாகிய, இன்பம் - இந்திரியவிஷய சுகத்தை, மேவார் - பொருந்த விரும்பமாட்டார்கள், எ - று.

'மசகம் போல்வார்' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (௩௪)

1004. கோபத்திக் குடைய வோடி நரகத்தைக் குறுகிப் பல்கால்
வேபத்தின் வெதும்பி நின்றெவ் விலங்கினுஞ் சுழன்று வந்தாய்

தாபத்தைத் தணிக்கு நீழல் போலுநல் லறத்தை மேவி
யாபத்தை யகற்றி யின்ப மூர்த்திநீ யாக வென்றான்.

(இ - ள்) (ஆதலால் நீ இதை யனுசரியாமல்), கோபத்தீ - குரோதாக்கினி யானது, குடைய - மிகுதியாகப் பற்றியெரிந்து உள்ளேகுடைய, ஓடி - சென்று, நரகத்தை - நரகத்தை, பல்கால் - அநேகதரம், குறுகி - அடைந்து, வேபத்தின் - கருமசலன கொதிப்பினால், வெதும்பிநின்று - சூடுற்றுநின்று, எவ்விலங்கினும் - திரஸஸ்தாவரமாகிய எல்லா விலங்குகதிகளிலும், சுழன்று - சுழல்பட்டு, வந்தாய் - வந்தனை, (இனி அவ்வாறு செய்யாமல்), தாபத்தை - ஆதபத்தை, தணிக்கும் - தணிப்பிக்கின்ற, நீழல்போலும் - குளிர்ந்த நிழலுக்கொப்பாகிய, நல்லறத்தை - நன்மையாகிய ஸ்ரீஜினதர்மத்தை, மேவி - பொருந்தி, ஆபத்தை - பாவத்தினு லாகிய ஆபத்துக்களையெல்லாம், அகற்றி - நீக்கி, நீ - நீ, இன்பமூர்த்தியாக - ஸ்வாத்மோத்தசுகத்தை யுடையவனாகக்கடவாய், என்றான் - என்று சொல்லி னான், எ - று. (௩௫)

1005 அழலிடை மலையை யேந்தி வந்தவ னம்ம லைக்கீழ்
நிழலிடைப் பெற்ற வின்ப நீர்ப்பிடும் பைக்க ணின்பஞ்
சுழலவு முழுவை நிற்பத் தளிரினைக் கறித்து மெல்லு
முழையுறு மின்பம் போலும் விலங்குறு மின்ப மென்றான்.

(இ - ள்) (இவ்வாறு சொல்லிப் பின்னரும்), இடும்பைக்கண் இன்பம் - துக்கஸ்வரூபமாகிய ஸம்ஸாரத்தின் சுகமானது, அழலிடை-அக்கினியினிடத்தில், மலையையேந்தி - மலையைத் தலையில் தூக்கிக்கொண்டு, வந்தவன் - வந்துசேர்ந்த வன், அம்மலைக்கீழ் - அந்தமலையின் கீழுண்டாகிய, நிழலிடை - நிழலினிடத்தே, பெற்ற - அடைந்த, இன்பம் - சௌக்கியத்தின், நீர்ப்பு - தன்மையாகும், சுழல வும் - தன்னைச்சுற்றி எப்பக்கத்திலும், (சூழ்ந்து), உழுவை - புலிகள், நிற்ப - கொல்லுதற்கு நிற்ப, தளிரினை - இலைத்துளிரை, கறித்து - கடித்து, மெல்லும் - மெல்லுகின்ற, உழையுறும் - மானானது அடைகின்ற, இன்பம்போலும் - சுகத் தைப் போலும், விலங்குறும் - விலங்குகதி ஜீவன்கள் அடைகின்ற, இன்பம் - நிலையற்ற சௌக்கியமானது, என்றான் - என்றும் சொன்னான், எ - று. (௩௬)

1006. அருளிலார்க் கில்லை யின்ப மார்கலி யுலகத் தின்கட்
பொருளிலார்க் கின்ப மில்லா வாறுபோற் பொன்கொள் வாரிற்
றெரிவிலார்க் கில்லை யென்றுந் தீநெறிச் செல்ல லீங்கன்
மருளிலா மனத்தை யாய்நீ மனையற மருவு கென்றான்.

(இ - ள்) (பின்னரும்), ஆர்கலி யுலகத்தின்கண் - ஸமுத்திரஞ்சூழ்ந்த இப் பூவுலகத்தில், பொருளிலார்க்கு - திரவியமில்லாதவர்களுக்கு, இன்பமில்லாவாறு

போல் - சௌக்கியமில்லாத வித்தைப்போல, அருளிலார்க்கு - ஜீவகாருண்ய மில்லாதவர்களுக்கு, இன்பம் - சௌக்கியம், இல்லை - இவ்வுலகத்தில் உண்டாவ தில்லை, பொன்கொள்வாரில் - பொன்னை வாங்குகின்றவர்களில், தெரிவிலார்க்கு - மாற்றுரை நிறைமுதலிய குணந் தெரியாதவர்களுக்கு, இல்லை - நலமாகும் குண மில்லை, (இவைபோல), என்றும் - எப்பொழுதும், தெரிவிலார்க்கு - ஸம்யக் தர்சன மில்லாதவர்களுக்கு, தீநெறி - பொல்லாங்கான வழியில், (அதாவது: ஸம்ஸாரவிருத்தியாகிய பந்தமார்க்கத்தில்), செல்லல் - அடைவதைவிட்டும், நீங்கல்- நீங்கி மோக்ஷமார்க்கத்தை யடைவது, இல்லை - உண்டாவதில்லை, (ஆகையால்), நீ - நீ, மருள் - மயக்கம், இலா - இல்லாத, மனத்தையாய் - மனமுடையனாகி, (அதாவது: ஸம்யக் ஞானப்பியாஸம் செய்பவனாகி), மனையறம் - (அதற்கேற்ப உபாஸகாத்தியயநாங்கமென்னும் ஸ்ராவகாச்சாரத்தில், சொல்லப்பட்ட) கிரஹஸ்த தர்மத்தை, மருவுக - சேர்ந்து அனுஷ்டிக்கக்கடவாய், என்றான் - என்றும் சொன் னான், எ - று.

'தெரிவிலார்க்கில்லை' என்ற தொடர் இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. ()

1007. அரசன்சஞ் சயந்த னாக வவற்குநீ யமைச்ச னாகப்
பெரியமா தேவி யானேன் பின்னையப் பவங்க டோறும்
மருவிநாம் மகிழ்ந்து சென்ற பிறப்புமற் றதனுக் கப்பா
லொருவரா லுரைக்க லாகா வுலந்தன பிறவி மேனாள்.

(இ - ள்) (வித்யுத்தம்ஷ்ட்ரனே!), சஞ்சயந்தன் - இச்சஞ்சயந்த பட்டார கன், அரசனாக - பூர்வம் ஸிம்மஸேன மஹாராஜனாயிருக்க, அவற்கு - அவ்வரச னுக்கு, நீ - நீ, அமைச்சனாக - அக்காலத்தில் ஸ்ரீபூதி என்னும் பெயருடையவ னாகிய மந்திரியாக, (நான் அவ்வரசனுக்கு), பெரியமா தேவியானேன் - பெருமை பொருந்திய பட்டத்துத் தேவியாகிய இராமதத்தையானேன், பின்னையப்பவங் கள் தோறும் - அதன் பிறகுண்டாகி இப்போதென்னால் சொல்லப்பட்ட அந்தப் பிறப்புக்கள் தோறும், மருவி - கர்ம ஸஹிதமாகி, நாம் - ஆத்மனாகிய நாம், மகிழ்ந்து - இச்சம்ஸார போகத்தில் சந்தோஷித்து, சென்ற - அடைந்த, பிறப்பு- பிறப்புக்களாகும், மற்று - பின்னையும், (சொல்ல வேண்டுமானால்), அதனுக்கு - (இப்போது சொல்லப்பட்ட) அந்தப் பிறப்புவகைக்கு, அப்பால் - அப்பாலாகிய (அதாவது: முன்னாகிய), மேனாள் - முற்காலத்தில், உலந்தன - எடுத்தெடுத்து நீக்கப்பட்டனவாகிய, பிறவி - பிறப்புக்கள், ஒருவரால் - ஒருவராலே, உரைக்க லாமோ - எண்ணிச் சொல்லல் முடியுமோ? (முடியாது, அனந்தமாகும் என்றும் சொன்னான்,) எ - று. (௩௮)

1008. இனையன கேட்டுத் தன்னை யிழித்தந்த வித்துத் தந்தன்
மனமஞ்சி கறுவு நீக்கி வானவன் றன்னை வாழ்த்திக்

கனைகழ லரசன் றன்மேற் கறுவினாற் பிறவி தோறும்
நினைவிலேன் செய்த தீமை நீங்குமா றருளு கென்றான்.

(இ - ள்) இனையன - இத்தன்மையான பவவரிசைகளை, கேட்டு - (ஆதித்தியாபதேவன் மேற் கூறியபடி) சொல்லக் கேட்டு, அந்த வித்துத்தந்தன் - அவ் வித்தியுத்தம்ஷ்ட்ரன், தன்னை யிழித்து - ஆத்ம நிந்தனைபண்ணி, மனமலி - மனத்தில் மிகுந்த, கறுவு - த்வேஷ பரிணதியானது, நீங்கி - விலகி, வானவன் தன்னை - அந்த ஆதித்யாப தேவனை, வாழ்த்தி - ஸ்தோத்திரம் பண்ணி, கனை - சப்தியாநின்ற, கழல் - வீரகண்டயத்தை யணிந்த, அரசன் தன்மேல் - ஸிம்ம ஸேன மஹாராஜன் மேலே, கறுவினால் - த்வேஷத்தினால், பிறவிதோறும் - பவம்பவந்தோறும், நினைவிலேன் - ஆத்மத்தியான மில்லாத அஞ்ஞானியாகிய என்னால், செய்த - செய்யப்பட்ட, தீமை - பொல்லாங்குகள், நீங்குமாறு - நீங்கும் விதத்தை, அருளுக - எனக்கு உபதேசித்தருளுக, என்றான் - என்று சொன்னான், எ - று. (௫௯)

1009. இறைவனு யுலக மேத்த விருந்தசஞ் சயந்தன் பாதம்
நறையுலா மலர்க டூவி வணங்கென நமோவென் றேத்தி
யறிவிலேன் செய்த தீமை பொறுக்கவென் றவுணன் போனான்
உறுதிநின் றுரைத்த வானோ னுவந்துதன் னுலகம் புக்கான்.

(இ - ள்) (அதுகேட்டு ஆதித்யாபதேவன் அவனை நோக்கி), இறைவனாய் - நாதனாகி, உலகம் - இம்மூன்றுலகத்துள்ள பவ்வியர்கள், ஏத்த - துதிசெய்ய, இருந்த - இராநின்ற, சஞ்சயந்தன் - இச்சஞ்சயந்த பட்டாரகருடைய, பாதம் - பாதங்களை, வணங்கென - வணங்குவாயாகவென்று சொல்ல, (அவ்வித்துத்தந்தன்), நறையுலாம் - வாசனை வீசுகின்ற, மலர்கள் தூவி - மலர்களை அவருடைய பாதங்களிற் சொரிந்து, நமோவென்று - நமோஸ்து நமோஸ்து என்று, ஏத்தி - அவரை ஸ்துதி செய்து வணங்கி, அறிவிலேன் - புத்தியில்லாத என்னால், செய்த - செய்யப்பட்ட, தீமை - பொல்லாங்குகளை, பொறுக்க வென்று - க்ஷமை செய்வீராகவென்று, அவுணன் - அவ்வித்தியாதரன், போனான் - தனதிடம் சென்றான், நின்று - அவ்விடத்தில் நின்று, உறுதி - அவனுக்குறுதியாகிய தர்மங்களை, உரைத்த - சொல்லின, வானோன் - ஆதித்யாபதேவன், உவந்து - ஸந்தோஷித்து, தன்னுலகம் - தனது வாசஸ்தலமாகிய லாந்தவ கல்பத்தை, புக்கான் - அடைந்தான், எ - று. (௬௦)

1010. கறுவினா லொருவ னென்றுங் கடுநவை நரகி னாழ்ந்தான்
பொறையினா லொருவன் புத்தே ளுலகெய்தி வீடு புக்கான்
கறுவொடு பொறையி னுயை பயனிவை கண்டு பின்னும்
பொறையொடு செறிவி லாதார் புல்லறி வாள ரன்றே.

(இ - ள்) கறுவினல் - குரோதபரிணமத்தால், ஒருவன் - பூர்வம் ஸ்ரீபூதி யென்னும் மந்திரியாகிய ஒருவன், என்றும் - என்றைக்கும் (அதாவது : ஆயுக் கால பரியந்தம்), கடுநவை - கடுமையாகிய துன்பமுடைய, நரகின் - நரகங்களில், ஆழ்ந்தான் - பலதடவை யமிழ்ந்தினன், பொறையினல் - க்ஷமாபரிணமத்தால், ஒருவன் - ஸிம்மஸேனனென்னும் ஓரரசன், புத்தேளுலகு - தேவருலகத்தை, எய்தி - பலதடவை யடைந்து, வீடு புக்கான் - (கடைசியில்) மோக்ஷத்தையு மடைந்தான், கறுவொடு - த்வேஷத்தோடு, பொறையின் - க்ஷமையினலும், ஆய - உண்டாகிய, பயன் - பலன்களாகிய, இவை கண்டு - இவற்றைத் தெரிந்து, பின்னும் - பிறகும், பொறையொடு - க்ஷமையோடு, செறிவிலாதார் - சேராதவர்கள், புல்லறிவாளர் - அற்பபுத்தியையுடைய அஞ்ஞானிகளாவார்கள், எ - று. (சக)

பதினென்றவது :

பிறவிமுடிச்சருக்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது:

# ஸ்ரீ விஹாரச்சருக்கம்



1011. காதியைக் கடிந்து வேந்தன் கைவலச் செல்வ னானான்
வேதிய னமைச்சன் விஞ்சை வேந்தனும் வியந்து போனான்
போதணி குழலி னாளும் புதல்வனுந் தேவ ரானார்
யாதினி யிவர்கள் செய்கை யென்றிடி லியம்ப லுற்றேன்.

(இ - ள்) வேந்தன் - ஸிம்மஸேன மஹாராஜன், (கடைசியாக சஞ்சயந்த னாகி), காதியைக்கடிந்து - தபஞ் செய்து காதி கர்மங்களைக் கெடுத்து (பாவ மோக்ஷமாகிய அரஹந்த பதவியை யடைந்து உடனே அகாதிகருமங்களையும் கெடுத்து), கைவலச் செல்வனானான் - திரவிய மோக்ஷமடைந்தான், வேதியன் - பிராம்மணனாகிய, அமைச்சன் - ஸ்ரீபூதியென்கிற மந்திரியானவன், விஞ்சைவேந்தனும் - வித்தியாதரவாசனாகிய வித்துத்தந்தனாகி, வியந்து - ஆச்சரியத்தை யடைந்து, போனான் - போய்விட்டான், போதணி குழலினாளும் - புஷ்பமாலை களையணிந்த அளகத்தையுடைய இராமதத்தா தேவியும் புதல்வனும் - அவளுடைய இளைய புத்திரனாகிய பூர்ணச் சந்திரனும், தேவரானார் - தேவர்களானார் கள் (அதாவது: இராமதத்தை லாந்தவ கல்பத்தில் ஆதித்யாபனென்னும் தேவ னாகவும் பூர்ண சந்திரன் பவணலோகத்தில் தரணேந்திரனென்னும் தேவனாகவும் ஆனார்கள்), இனி - இனிமேல், இவர்கள் செய்கை - இந்த இரு தேவர்களுடைய செய்கையானது, யாது என்றிடில் - என்னவென்றால், இயம்பலுற்றேன் - அதைச் சொல்லத் தொடங்குகிறேன், எ - று. (க)

1012. வேதிகை வேதண் டத்தின் வில்லுநாண் வீக்கிற் றேபோ
லோதநீ ருடுத்த மண்மே லுத்தர மதுரை யென்னும்
போதொடு தளிர்கண் மிண்டிப் பொறிவண்டுந் தேனும் பாடத்
தாதொடு மதுக்கள் வீயுந் தண்பணைச் சோலைத் துண்டே.

(இ - ள்) மண்மேல் - இப்பூமியில், வேதிகை - மஹாலவண சமுத்திரத் தின் வஜ்ரவேதிகையாலும், வேதண்டத்தின் - விஜயார்த்த பர்வதத்தினாலும், வில்லு - வில்லில், நாண் வீக்கிற்றேபோல் - நாணேறிட்டுக் கட்டினதுபோலும் (ஆக்கிருதியையுடைய), ஓதநீருடுத்த - சமுத்திரஜலஞ் சூழ்ந்த, மண்மேல் - பூமி யாகிய இந்தப் பரத க்ஷேத்திரத்தில், போதொடு - புஷ்பங்களோடு, தளிர்கள் - தளிர்களும், மிண்டி - நெருங்கி மிகுதியாகி, பொறி - புள்ளிகளையுடைய, வண்

டும் - வண்டுகளும், தேனும் - தேனினங்களும், பாட - கீதங்கள் பாட, தாதொடு-பூந்தாதுகளோடு, மதுக்கள் - மது ஜலங்களும், வீயும் - சொரிகின்ற, தண் - குளிர்ந்த, பணை - மரக்கிளைகள் பொருந்திய, சோலைத்து - தோப்புகளையுடையதாகிய, உத்தர மதுரையென்னும் - உத்தரமதுரை யென்கிற பட்டணமானது, உண்டு - உளது, எ - று. (உ)

1013. பகற்கிடை கொடாத பைம்பொன் மாளிகைப் பாவை நல்லா
ரகிற்புகை யகத்து நின்றா ரணிவரை யதனைச் சூழ்ந்த
முகிற்கொடி மின்னுப் போன்று தோன்றுவார் குழாமு ழங்கத்
துகிற்கொடி யோடு மஞ்ஞை தொடங்கிய நடங்க ளோவா.

(இ - ள்) (அந்நகரத்தில்), துகிற்கொடி - துவஜக்கொடிகளினது, குழாம்-கூட்டங்கள், முழங்க - அசைதலால் படபடவென்று சப்திக்க, (அதை மேககர்ஜனையென்று), மஞ்ஞை, மயில்களானவை, தொடங்கிய - ஆட ஆரம்பித்த, நடங்கள் - நர்த்தனங்கள், ஓவா - நீங்காதனவாம், (இன்னும் அந்நகரில்), பகற்கு - சூரியனுக்கு, இடைகொடாத - போக இடங்கொடாமல் உன்னதமாகிய, பைம் - பசுமையுற்ற, பொன் - பொன்னாலாகிய, மாளிகை - உப்பரிகைகளில், அகிற்புகையகத்து - அகிற்புகையினுள், நின்றார் - நின்றவர்களாகிய, பாவை - சித்திரப்பாவைக் கொப்பாகிய, நல்லார் - ஸ்த்ரீமார்கள், அணிவரையதனை - அழகிய பர்வதத்தை, சூழ்ந்த - சூழ்ந்த, முகில் - மேகத்தினுளாகிய, கொடிமின்னுப்போன்று-மின்னற் கொடிபோல, தோன்றுவார் - பிரகாசிப்பார்கள், எ - று.

ஓடு - அசை. (௩)

1014. காமனே கவ்வை செய்வான் கரிகளே நிகளம் பெய்வ
தாமமே மெலியும் வண்ணஞ் சங்கரஞ் சிற்பி யர்க்கே
சேமமார் சிறைபு னற்கே தீத்தொழின் மறைய வர்க்கே
வாமமே கலையி னரே வசியமந் நகரத் துள்ளே.

(இ - ள்) அந்நகரத்துள் - அப்பட்டணத்திலே, காமனே - மன்மதனே, கவ்வை செய்வான் - வருத்தஞ் செய்பவனாவான், (வேறு வருத்தங்கிடையாது), நிகளம் - விலங்கை, (அதாவது: சங்கிலியை), பெய்வ - பூட்டிக் கட்டப்பட்டவை, கரிகளே - யானைகளே, மெலியும் வண்ணம் - வாடும் விதமானது, தாமமே - பூமாலைகளே, சங்கரம் - கலத்தற்றொழிலானது, சிற்பியர்க்கே - வர்ணங் கூட்டுகின்ற சிற்பியர்களுக்கே, சேமம் - காவலால், ஆர் - நிறைந்த, சிறை - அணையானது, புனற்கே - ஜலத்துக்கே, தீத்தொழில் - அக்கினியாற் செய்யும் ஔபாசனத் தொழிலானது, மறையவர்க்கே - பிராம்மணர்களுக்கே, வசியம் - வசம்

செய்யுந்தன்மையுடையார், வாமம் - அழகிய, மேகலையினாரே - மேகலாபாண மணிந்த ஸ்த்ரீகளே (வேறு வசியமில்லை), எ - று. (௯)

1015. சினந்தலை நின்ற வேந்தர் திண்புயஞ் சிதைத்த வீரத்
தனந்தவீ ரியனென் பானு மந்நகர்க் கிறைவ னல்லார்
மனந்தொறு மிருந்த காமன் வண்மையான் மாரி யொப்பா
னனந்தலை யுலகி னுள்ள நவையெலாந் தீர நின்றான்.

(இ - ள்) அந்நகர்க்கு - அப்பட்டணத்திற்கு, இறைவன் - அரசனானவன், சினந்தலை நின்ற - கோபத்தில் மிகுதிபெற்று நின்ற, வேந்தர் - சத்துரு ராஜாக்களுடைய, திண் - கெட்டியாகிய, புயம் - புஜபலங்களை யெல்லாம், சிதைத்த - கெடுத்த, வீரத்து - பராக்கிரமத்தினால், அனந்த வீரியனென்பானும் - அனந்த வீரியனென்னும் பெயருடையவனானவன், (இவன்), நல்லார் - ஸ்த்ரீமார்களுடைய, மனந்தொறும் - மனங்கள் தோறும், இருந்த - இருக்கின்ற, காமன் - மன்மதனுக் கொப்பான லாவண்யனானவன், வண்மையால் - த்யாகம் கொடுக்கின்ற கையின் வளப்பத்தினால், மாரி யொப்பான் - மேகத்தை யொப்பவனானவன், நனந்தலையுலகின் - விசாலித்த இந்த மத்திம லோகத்திலே, உள்ள - இராநின்ற தனது ராஜ்யத்தில், நவையெலாம் - வருத்தங்களெல்லாம், தீர - நீங்கும்படியாக, நின்றான் - செங்கோலோச்சி அரசு செலுத்தி நிலைபெற்றிருந்தான், எ - று. (௰)

1016 பாரிசா தத்தைச் சார்ந்த பவழத்தின் கொழுந்தை யொப்பாண்
மேருமா லினியென் பாளவ் வேந்தன்மா தேவி மிக்காள்
வாரிவா யமிர்த மன்னா ளமிர்தமா மதியென் பாளாங்
காரொன்றோ டிரண்டு மின்போற் காவலற் கழுமி நின்றார்.

(இ - ள்) அவ்வேந்தன் - அவ்வரசனது, மாதேவி - சிறந்த பட்டத்தேவிகளாக, மிக்காள் - மிகு குணமுடையவளும், பாரிசாதத்தை - கற்பக விருட்சத்தை, சார்ந்த - சேர்ந்த, பவழத்தின் கொழுந்தை யொப்பாள் - பவழக்கொடிக் கொப்பவளும், (ஆகிய), மேருமாலினி யென்பாள் - மேருமாலினி யென்பவளும், வாரிவாய் - க்ஷீரஸமுத்திரத்திலுண்டாகிய, அமிர்தமன்னாள் - அமிர்தத்துக்கு ஒப்பவளான, அமிர்தமாமதி யென்பாள் - சிறந்த அமிர்தமதி யென்பவளும், ஆம் - உண்டாகிய, காரொன்றோடு - ஒரு மேகத்தோடு, இரண்டு மின்போல் - இரண்டு மின்னற் கொடிகள் சேர்ந்திருக்கின்றதுபோல, காவலன் - அவ்வரசனை, கழுமி - பொருந்தி, நின்றார் - நிலைபெற்றிருந்தார்கள், (அதாவது: மேருமாலினி முதல் மனைவியாயும், அமிர்தமதி இரண்டா மனைவியாயும் அவ்வரசனைச் சேர்ந்திருந்தார்கள்), எ - று. (௧௧)

1017. மகரவே றிரண்டு தோளால் வாரியுட் டிரிவ தேபோற்
சிகரமால் யானை யானத் தேவிமார் புயங்க ளாக
நிகரிலா வின்ப வெள்ளக் கடலிடை நீந்து நாளுட்
புகரிலார் வானின் வந்திவ் விருவர்க்கும் புதல்வ ராஞர்.

(இ - ள்) மகரவேறு - ஆண்மகரமஸ்யமானது, இரண்டு தோளால் - கைகளுக்கொப்பாகி இரண்டு பக்கத்துமுள்ள செட்டைகளால், வாரியுள் - சமுத்திரத்துள், திரிவதேபோல் - நீந்தித் திரிவதுபோல, சிகரம் - பர்வதம்போல, மால் - பெரிதாகிய, யானையான் - யானைகளுக்கதிபஞகிய அவ்வரசன், அத்தேவிமார் - அந்த இருதேவியர்களும், புயங்களாக - கைகளாக, நிகரிலா - உவமையில்லாத, இன்ப வெள்ளக்கடலிடை - ஸம்ஸார சௌக்கியமாகிற பெரிதாகிய ஸமுத்திரத்திலே, நீந்துநாளுள் - நீந்துகின்ற காலத்தில், புகரிலார் - குற்றமில்லாதவர்களாகிய ஆதித்யாபதேவனும் பவணேந்திர தேவனும், வானின் வந்து - தேவருலகத்தினின்றும் ஆயுரவஸானத்து வந்து, இவ்விருவர்க்கும் - இந்த இரண்டு தேவிமார்களுக்கும், புதல்வராஞர் - புத்திரராகப் பிறந்தார்கள், எ - று. (எ)

1018. மாலினி தன்க ணாதித் தாபன்மா மேரு வாஞன்
பாலன மொழிம திக்கட் பவணன்மந் தரனு மாக
வேலையைச் செறிந்த வாழி போற்களி சிறந்து வேந்தன்
ஞாலத்துக் கிடரைத் தீர நடக்குங்கற் பகத்தை யொத்தான்.

(இ - ள்) மாலினி தன்கண் - மேருமாலினியென்னும் தேவியினிடத்தே, ஆதித்தாபன் - ஆதித்யாபதேவன், மா - பெருமை பொருந்திய, மேருவாஞன் - மேருவென்னும் பெயருடைய புதல்வஞகியவதரித்தான், (அதன்மேல்), பாலன மொழி - பால்போலினிமையான வசனத்தையுடைய, மதிக்கண் - அமிர்தமதியினிடமாக, பவணன் - தரணேந்திரன் வந்து, மந்தரனுமாக - மந்தரனென்னுங் குமாரஞகப் பிறக்கவும், வேந்தன் - அரசஞனவன், வேலையைச் செறிந்த - பொங்கிக் கரையில் சேர்ந்த, ஆழிபோல - ஸமுத்திரம்போல், களிசிறந்து - சந்தோஷமதிகரித்து, ஞாலத்துக்கு - இப்பூமியில் யாசகர்களுக்கு, இடர் - தரித்திர துன்பமானது, தீர - நீங்கும்படி, நடக்கும் - செல்கின்ற, கற்பகத்தை - கற்பக விருட்சத்தை, ஒத்தான் - நிகர்த்தான், எ - று.

'இடரை' என்பதில், ஐ - சாரியை. (அ)

1019. மங்கையர் கொங்கை யென்னுங் குவட்டினின் றிழிந்து நல்ல
சிங்கப்போ தகங்கள் போலத் தவிசிடைத் தவழ்ந்து சென்று
பங்கயத் தலங்கள் போலும் பவழச்சீ றடியைப் பாரா
மங்கைதன் சென்னி சூட்டி நடந்திட்டார் மாலை யாக.

(இ - ள்) (அவ்வாறு பிறந்த அக்குழந்தைகள் வளருங்காலத்தில்), மங்கை யர் - தாய்மார்களுடைய, கொங்கையென்னும் - ஸ்தனங்களென்னும், குவட்டி னின்று - பர்வத சிகரங்களினின்றும், இழிந்து - இறங்கி, (அதாவது: முலைப் பாலுண்டு அதை மறந்து பின்பு), நல்ல - நன்மையாகிய, சிங்கப் போதகங்கள் போல - சிங்கக்குட்டிகளைப்போல, தவிசிடை - மெத்தைகளின்மேல், தவழ்ந்து சென்று - தவழ்ந்தோடி, (அதன் பிறகு), பங்கயத்தலங்கள் போலும் - தாமரைத் தளங்களுக்குச் சமானமாகிய, பவழம் - பவளம்போற் சிவந்த, சீறடியை - சிற்றடி களை, பாராம்மங்கை தன் சென்னி - இப்பூமிதேவியாகிய பெண்ணினுடைய சிர சில், சூட்டி - அணிந்து, மாலையாக - ஒழுங்காக, நடந்திட்டார் - நடந்தார் கள், எ - று. (க)

1020. நாவிளங் கொம்பி னல்ல கலையல்கு னலத்தை யுண்டு
மாவிளங் களிறு தேர்வாள் விற்றொழில் வல்ல ராகித்
தேவிளங் குமரர் போலத் தேசொடு திளைக்கு மேனிக்
கோவிளங் குமரர் காமன் குனிசிலைக் கிலக்க மானார்.

(இ - ள்) (அதன்மேல்), கோவிளங்குமரர் - அந்த இளமையாகிய இராஜ குமாரரிருவரும், நாவிளங்கொம்பின்-நாவிலுறையும்படியான இளங்கொடிபோன்ற ஸரஸ்வதி தேவியின், நல்ல - நன்மையாகிய, கலையல்குனலத்தை - மேகலை யணிந்த அல்குல் நலத்திற்குச் சமானமாகிய சதுஷ்சஷ்டி கலைஞானங்களையும் அத னாலாகும் அழகிய பலன்களையும், உண்டு-அனுபவித்து, (அதாவது: தத்துவ சாஸ் திர நிபுணர்களாகி), மா - குதிரை ஏறுதலும், இளங்களிறு - இளம்பருவமுள்ள யானைகளை ஏறிச் செலுத்துவதும், தேர் - இரத சாரத்தியஞ் செய்வதும், வாள் - வாள் வீசுதலும், வில் - வில் பழக்கமும், (ஆகிய), தொழில் - தொழில்களில், வல்லராகி - வல்லமையையுடையவர்களாகி, தேவிளங்குமரர்போல - இளமை யாகிய தேவகுமாரர்போல, தேசொடு - ஒளியோடு, திளைக்கும் - பொருந்திய, மேனி - சரீரமுடைய, காமன் - மன்மதனுடைய, குனி - வளைந்த, சிலைக்கு - கருப்பு வில்லுக்கு, இலக்கமானார் - குறியானார்கள், (அதாவது: யௌவனவயதை யடைந்தார்கள்), எ - று. (௪0)

1021. கடைந்தநல் லலகம் பெண்ணைக் கறுத்திடை வெளுத்துச் சூழ
மடங்கல்போன் மொய்ம்பின் மைந்தர் மனத்தினைக் கணத்த ழிக்குந்
தடங்கணம் பாக நல்லார் தனுவில்நா ணேற்றித் தானங்
கடங்கிநின் றனங்கன் மைந்த ருள்ளத்தை யழிக்க லுற்றான்.

(இ - ள்) (அவ்வாறு யௌவனத்தை யடைந்த காலத்தில்), கடைந்த - கடைசற்பிடித்த, நல் - நன்றாகிய, அலகு - கூர்மை பொருந்திய, அம்பெண்ண -

அம்புபோல, இடை - மத்தியிலே, கறுத்து - கறுப்பாகி, சூழ - சுற்றிலும், வெளுத்து - வெளுப்பாகி, மடங்கல்போல் - ஸிம்மம்போன்ற, மொய்ம்பின் - பராக்கிரமத்தையுடைய, மைந்தர்-விட புருஷர்களுடைய, மனத்தினை - மனதை, கணத்து - ஒருக்ஷண நேரத்திலே, அழிக்கும் - கெடுக்கும்படியான, நல்லார் - ஸ்த்ரீமார்களுடைய, தடம் - விசாலம் பொருந்திய, கண் - கண்கள், அம்பாக - அம்பாக, தனுவில் - (அவர்களுடைய புருவமாகிய) வில்லினிடத்தே, நாண் - நாரியை, ஏற்றி - ஏறிட்டு, அனங்கன்தான் - மன்மதனானவன், அங்கு - அவ் விடத்திலே, அடங்கி நின்று - அடக்கமாக நின்று, மைந்தர் - இந்தக் குமாரரிரு வர்களுடையவும், உள்ளத்தை - மனதை, அழிக்கல் - கெடுத்துத் தன் வசமாக்கு கைக்கு, உற்றான் - பொருந்தி நின்றான், எ - று. (கக)

1022 கைச்சிலை குழைய வாங்கிக் கணைமழை பொழிந்து காமத்
திச்சையை மைந்த ருள்ளத் தெழுத்தமாட் டாத னங்கன்
வச்சிரம் பஞ்சிற் றய்யா வடுப்படு மேனுங் காமத்
திச்சையை மைந்த ருள்ளத் தெழுத்தொணா தென்று போனான்.

(இ - ள்) (அவ்வாறு செய்யத் தொடங்கிய), அனங்கன் - மன்மதனான வன், கை - கையில், சிலை - வில்லை, குழைய - வளையும்படி, வாங்கி - வளைத்து, கணைமழை - பஞ்சபாணமாகிற அம்பு வருஷங்களை, பொழிந்து - சொரிந்து, காமத்து - காமராகத்தின், இச்சையை - ஆசையை, மைந்தருள்ளத்து - இக் குமாரர்களின் மனதில், எழுத்தமாட்டாது-உண்டாக்க முடியாமல், வச்சிரம்-வஜ்ரா யுதமானது, பஞ்சில் - பஞ்சிலே, தய்யா - சேர்ந்து, வடுப்படுமேனும் - அப்பஞ்சு வெட்டுண்டு குற்றமடைந்தாலும், காமத்திச்சையை - காமராகத்தை, மைந்தருள் ளத்து - இந்தக் குமாரர்களின் மனதில், எழுத்தொணாதென்று-உண்டாக்க முடியா தென்று, போனான் - நீங்கிப் போனான், எ - று.

இவ்வாறு கூறியதனால், அக்குமாரர்கள், சம்சார சரீர போகங்களில் விராக மடைந்தார்களென்பது பெறப்படும். பஞ்சில் வச்சிராயுதம் புகுதாது; அத் தகைய அது பஞ்சிற் புகுந்து வடுப்படுத்தினும், இக்குமாரர் மனதில் காம இச்சை யை எழுத்த முடியாதென்றதனால் அவர்களின் மனோதிடம் நன்கு விளங்கும். ()

1023. காயத்தி னுவர்ப்புங் காம போகத்தின் வெறுப்பும் மாற்றும்
மாயத்தின் வடிவு மெல்லாம் நினைப்பிலா மனத்தி னார்கள்
நோயொத்த நுகர்ச்சி செல்வ நுரையொத்த விளமை தேசு
காயத்து வில்லை யொத்த காமனுக் கிடமங் குண்டோ.

(இ - ள்) காயத்தின் - சரீரத்தினது, உவர்ப்பும் - அசுசித்தன்மையையும், காமபோகத்தின் - காம சுகத்தின், வெறுப்பும் - விராகமும், மாற்றும் - ஸம்ஸார

மாகிற, மாயத்தின் - நிலையில்லாத தன்மையுள்ள, வடிவு - ஸ்வரூபமும், (ஆகிய), எல்லாம் - இவைகளெல்லாம், நினைப்பில் - தியானத்தில், ஆம் - உண்டாகின்ற, (அதாவது: இவற்றைச் சிந்திக்கின்ற), மனத்தினார்கள் - ஸம்வேக பாவனையை யும் வைராக்கிய பாவனையையுமுடைய இக்குமாரர்களிடத்தில், நுகர்ச்சி - பஞ்சேந் திரிய விஷய வனுபோகமானது, நோயொத்த - வியாதிக்குச் சமானமாகியது, செல்வம் - ஐஸ்வரியமானது, நுரையொத்த - ஜலத்திலுண்டாகின்ற நுரை யொத்தது, இளமை - பாலபருவமும், தேசு - சரீர தேஜஸும், காயத்து - ஆகாயத்திலுண்டாகும், வில்லையொத்த - இந்திரதனுசிற் கொப்பாகியது, (இத் தகைய பாவனையுடைய), அங்கு - அந்த மனத்தினிடத்தில், காமனுக்கு - மன்மத னுக்கு, இடம் உண்டோ - தங்குதற்கு இடமுண்டாகுமோ? (ஆகாது), எ - று.

இங்ஙனம் கூறியதனால் அவர்களிடம் விராகம் மேலிட்டதென்பது பெறப் படும். (கஉ)

வேறு.

1024. அனித்தமரணின்மையுற வின்மைபிறி தின்மை
யுணற்கரிய மாற்றுலக மூற்றுதர லுவர்ப்பு
நினைப்பில்வருஞ் செறிப்புதிர்ச்சி போதிபெறற் கருமை
மனத்தின்வர னினைத்துமனை யறத்தொழுகும் வழிநாள்.

(இ - ள்) (இவ்வாறுகி), அனித்தம்-சரீராதிகளினது அனித்தியத் தன்மை யையும், அரணின்மை - பந்துக்களும் திரவியங்களும் ரக்ஷணையாகாத விதமாகிற அசரண பாவனையையும், உறவின்மை - உடலாதிபரத் திரவியங்கள் அன்னியத் துவமென்பதையும், பிறிதின்மை - ஆத்மகுண ஞானுதிகள் ஏகத்துவமான தன்மையையும், உணற்கரிய - நினைத்தற்கரிதாகிய, மாற்று - ஸம்ஸார அஸா ரத்தையும், உலகம் - இந்த லோகத்தினது தன்மையையும், ஊற்றுதரல் - ஆத்ம னுக்கு மித்தியாதர்சனுதி விபாவ குணத்தாலாகும் பாவாஸ்ரவத் திரவியாஸ்ரவ ஸ்வ ரூபத்தையும், உவர்ப்பு - அசுசித்துவத்தையும், நினைப்பில் வருசெறிப்பு - பாவஸம் வரை நிமித்தமாக வரும் திரவியஸம்வரையையும், உதிர்ச்சி - பாவ நிர்ஜ்ஜரை திர விய நிர்ஜ்ஜரைகளின் விதாயத்தையும், போதி பெறற்கருமை - நிச்சய ஸம்மியக் ஞானம் லப்தமாவ தருமையாகிய போதி துல்லபமென்கிற தன்மையையும், மனத் தின் - மனதிலே, வரல் - இவைகள் வருதலாகிய தர்ம ஸ்வாக்கியாயத்தையும், நினைத்து - இந்த துவாதசானுப் பிரேட்சைகளை தியானித்து, மனையறத்து - கிர ஹஸ்த தர்மத்தில், ஒழுகும் நாள் வழி - இக்குமாரர்கள் செல்கின்ற காலத் தில், எ - று. (கசு)

1025. அமலநல வாடியகத் தானிழற் போல
தமிலமிடை மூவுலகுந் தோன்றுமறி வுடைய

விமலனெனு மறிவன்மலர் மழைபொழிய விண்ணோர்
கமலமிசை யுலவியொரு காவக மடைந்தான்.

(இ - ள்) அமலம் - நிர்மலகரமான, நல - நன்மையாகிய, ஆடியகத்து - கண்ணாடியினிடத்தில், ஆன - உண்டாகிய, நிழல்போல - சாயைபோல, துமில மிடை - சப்த காரணமாகிய பரமாணுக்களால் செறிந்த, மூவுலகும் - இம்மூன்று லோகமும், தோன்றும் - தோற்றுகின்ற, அறிவுடைய - கேவலஜ்ஞானத்தை யுடைய, விமலனெனும் - விமல தீர்த்தங்கரனென்னும் பெயருடைய, அறிவன் - அரஹந்த பரமதேவன், விண்ணோர் - தேவர்கள், மலர்மழை - புஷ்ப வருஷங்களை, பொழிய - சொரிய, கமலமிசை - தேவர்களால் நிருமித்த செந்தாமரைப் புஷ்பத்தின்மேல் (வ்யோமகமனத்துவமாக), உலவி - ஸ்ரீ விஹாரமாகி, ஒரு - ஒப்பற்ற, காவகம் - உத்தர மதுரையிலுள்ள ஒரு உத்யானத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ - று. (கரு)

1026. அனகன்வினை யகலவெழுந் தருளுமெனு மளவிற்
கனகநவ மணிமயமோர் கமலநறு மலரோ
சனையகல முடையவத னிதழ்கடொறு மடவார்
மனமகிழ நடநவில வானவ ரமைத்தார்.

(இ - ள்) அனகன் - பாபரஹிதனாகிய விமல தீர்த்தங்கரன், வினை - பவ்விய ஜீவன்களுடைய பாப வினைகள், அகல - நீங்கும்படி, எழுந்தருளும் - ஸ்ரீ விஹாரம் வரும், எனும் - என்கின்ற, அளவில் - காலத்தில், வானவர் - தேவர்கள், கனகமயம் - ஸ்வர்ணமயமும், நவ - ஒன்பது விதமாகிய, மணிமயம் - இரத்தின மயமுமாகிய, ஓர் - ஒப்பற்ற, நறும் - வாசனையையுடைய, ஓசனை யகலமுடைய - ஒரு யோஜனை யகலமுள்ள, கமலமலர் - செந்தாமரைப் புஷ்பத்தை, அதன் - அக்கமலத்தின், இதழ்கடொறும் - இதழ்களிதழ்கடோறும், மடவார் - தேவ அரம்பையர்களால், மனமகிழ - பார்க்கப்பட்டவர்கள் மனம் ஸந்தோஷத்தை யடையும்படி, நடம் - நர்த்தனங்களை, நவில - செய்யும்படியாக, அமைத்தார் - நிருமிதஞ் செய்தார்கள், எ - று.

'மயம்' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (கசு)

1027. வாசமலர் நான்கினவன் மேவியிறை வானோ
ரோசனை யிரண்டகன்ற மண்டபமொன் றமைத்தா
ரீசனெழுந் தருளுமென வெழின்மணிப்பொன் முத்தி
னோசனைகண் மூன்றகன்ற வீதியுட னமைத்தார்.

(இ - ள்) (அவ்வாறியற்றிமேலும்), ஈசன் - திரிலோகநாதனாகிய, அவன் - அந்த விமலதீர்த்தங்கரனாகிய ஜினேந்திரன், வாசம் - வாசனைபொருந்திய, மலர் -

செந்தாமரைப் புஷ்பத்தின்மேல், இறைநான்கின் - சதுரங்குலத்துக்கு மேலே, மேவி - பொருந்தி, எழுந்தருளுமென - ஸ்ரீ விஹாரம் வருவாரென்று, வானோர் - தேவர்கள், எழில் - அழகு பொருந்திப் பிரகாசியாநின்ற, மணி - இரத்தினங்களாலும், பொன் - ஸ்வர்ணத்தினாலும், ஓசனை யிரண்டகன்ற - இரண்டு யோசனை யகலமுடையதாகிய, மண்டபமொன்று - ஒரு மண்டபத்தை, அமைத்தார் - நிர்மாபணஞ் செய்தார்கள், (அவ்வாறு செய்து), உடன் - அப்பொழுதே, முத்தின் - முத்துக்களினால், (மணற் பரப்புக்களையுடையதாக), ஓசனைகள் மூன்றகன்ற - மூன்றுயோஜனை யகலமுடையதாகிய, வீதி - வீதியை, அமைத்தார் - செய்தார்கள், எ - று. (கஎ)

1028. மாருதியும் வாசமய மாகிமந்தம் வீசிப்
பாரின்மலி நுண்டுகள் பரிந்திட முயன்றான்
காரின்மிசை வந்துவரு ணன்கமல மாதி
வேரிமலர் கமழுநறு நீர்த்துவலை விட்டான்.

(இ - ள்) (அவ்வாறு அவற்றை அமைத்த பின்), மாருதியும் - வாயுகுமாரனும், வாசமயமாகி - வாஸனை மயமாக, மந்தம் - மந்தமாருதத்தை, வீசி - வீசப்பண்ணி, பாரில்மலி - இப்பூமியில் மிகுந்துண்டாகின்ற, நுண்துகள் - சிறிய தூளிகளை, பரிந்திட - பரிகரித்துச் சுத்தஞ் செய்ய, (அதாவது: அத்தூளிகள் பறந்து போகும்படி), முயன்றான் - முயற்சி செய்தான், வருணன்-வருண குமாரனானவன், காரின்மிசை - மேகத்தின் மேலே, வந்து - வந்து, கமலமாதி - தாமரைப் பூவாதியாக, மலர் கமழும் - புஷ்ப வாஸனைகளை வீசும், வேரிநறு நீர்த்துவலை - வாசனை பொருந்திய நல்ல நீர்த்துளிகளை, விட்டான் - தெளித்துக் குளிர்ச்சியை யுண்டுபண்ணித் தூளியுபசமஞ் செய்தான், எ - று. (கஅ)

1029. இந்திர னுமெண்மையுல காந்தியரு மிறைவன்
வந்தெழுந் தருளும்பொழு தென்றெதிர் வணங்க
இந்திரர்தங் கோனுமெழுந் தானிரு நிலத்து
ளந்தரங்க டீர்ந்தவறி வற்கியல்பி தாமே.

(இ - ள்) (அத்தருணத்தில்), இந்திரனும் - ஸௌதர் மேந்திரனும், எண்மை - எட்டுப் பிரகாரமான, உலகாந்தியரும் - லௌகாந்திக தேவர்களும், இறைவன் - ஸர்வஜ்ஞன், வந்து - ஸ்ரீ விஹாரமாகும்படி வந்து, எழுந்தருளும் பொழுதென்று - எழுந்தருளுங்காலமென்று, எதிர் - ஜிநேந்திரனுடைய எதிரிலே, வணங்க - வணக்கஞ் செய்ய, இந்திரர்தங் கோனும் - தேவேந்திரர்களுக்கெல்லாம் நாதனாகிய ஸ்வாமியும், எழுந்தான் - செல்லா நின்றான், இருநிலத்துள் - பெரிதாகிய இப்பூமியில், அந்தரங்கள் - மோகங்கள், தீர்ந்த - நீங்கின, அறிவற்கு -

வீதராக ஸர்வஜ்ஞனுக்கு, இது - இத்தன்மையாகிய ஸ்ரீ விஹார ஆஸ்தாநாதி கிரியைகள், இயல்பாம் - ஸ்வபாவமாகும், எ - று. (௰௯)

1030. இடிமுரசந் திமிலைகண்டை காளமெழிற் சங்கந்
துடிமுழவ மொந்தைதுண வந்தண்ணுமை செகண்டை
கடன்முகிலி னொலிகரந்து திசைகள்விம்ம வொலித்த
தடமலரின் மிசையிறைவன் றானொதுங்கும் பொழுதே.

(இ - ள்) இடி - இடிபோல் சப்திக்கின்ற, முரசம் - பேரிகைகளும், திமிலை - பம்பையென்னும் மேளமும், கண்டை - பெருமணியும், காளம் - சிறு சின்னங்களும், எழில் - அழகு பொருந்திய, சங்கம் - ஊது சங்குகளும், துடி - உடுக்கை வாத்தியமும், முழவம் - மத்தளங்களும், மொந்தை - ஓர் கட்பறைகளும், துணவம் - துணவமென்கிற வாத்தியமும், தண்ணுமை - உறுமி மேளமும், செகண்டை - ஜெயகண்டை யென்னும் சேமங்கலமும், (ஆகிய இவ்வாத்தியங்கள்), தடம் - விசாலமாகிய, மலரின்மிசை - செந்தாமரைப் பூவின்மேல், இறைவன் தான் - ஸ்வாமியான ஜினேந்திரன், ஒதுங்கும்பொழுது - ஸ்ரீவிஹாரமாகுங் காலத்தில், கடல் - ஸமுத்திரத்தினுடையவும், முகில் - மேகத்தினுடையவுமாகிய, ஒலி - சப்தங்கள், கரந்து - மறைந்து போகும்படி, திசைகள் - எத்திக்குகளிலும், விம்ம - வியாபிக்கும்படி, ஒலித்த - சப்தித்தன, எ - று. (உ0)

1031. இன்னரம்பின் யாழ்குழல்கள் வீணைமுத லேந்திக்
கின்னரியர் கிளைநரம்பி னோதினர்கள் கீதம்
பொன்வயிர மணியமிர்த மீன்றமல ரேந்திப்
பன்னரிய வகையினில மடந்தையெதிர் பணிந்தாள்.

(இ - ள்) கின்னரியர் - கின்னர தேவர்கள், இன் - இனிமையாகிய ஒலியைச் சப்திக்கும்படியான, நரம்பின் - நரம்பினாலாகிய தந்திகளையுடைய, யாழ் வீணை - யாழ்வீணையென்னும் பல பேதங்களையுடைய வீணைகளின் வாத்தியங்களையும், குழல்கள் - ஊதிடுங் குழல்வாத்தியங்களையும், ஏந்தி - தரித்து, கிளை - கிளை கிளைகளாக, கீதம் - சங்கீதங்களை, (கண்டத்தினாலும்), நரம்பின் - தந்திப் பிரயோகத்தாலும், ஓதினர்கள் - பாடினார்கள், நிலமடந்தை - பூமி தேவியானவள், பொன் - பொன்களையும், வயிரம் - வஜ்ரக்கற்களையும், மணி - பத்மராகாதி மணிகளையும், அமிர்தம் - (பூலோகத்தில் பிராணிகளுக்கு ரக்ஷணையாகிய) ஜலமாதியான பொருள்களையும், ஈன்று - தந்து, மலர் - புஷ்பங்களையும், ஏந்தி - தரித்து, பன்னரிய - சொல்லுதற்கரிய, வகையின் - விதத்தினால், எதிர் - சர்வஜ்ஞனுடைய எதிரில், பணிந்தாள் - வணங்கினாள், எ - று. (உக)

1032. சுந்தரியர் வந்தரியர் துறக்கத்திளம் பிடிய
ரந்தரையி னந்தரத்தின் வானினடம் பயின்றார்
மந்தரநன் மலர்மழைகள் வண்டினங்கள் சூழ
விந்திரர்கோ னெழுந்தருளும் வீதியெங்கும் பொழிந்தார்.

(இ - ள்) சுந்தரியர் - ஜோதிஷ்கதேவ ஸ்த்ரீயர்களும், வந்தரியர் - வியந்தரதேவ ஸ்த்ரீயர்களும், துறக்கத்திளம் பிடியர் - கல்பலோகத்து இளம் பெட்டையானையை நிகர்த்த நர்த்தகிகளும், அம் - அழகிய, தரையின் - தேவ நிர்மித மண்டபத்தலத்தில், அந்தரத்தின்-அந்தரமாகவிருந்து; வானின்-ஆகாயத்தில், நடம்பயின்றார் - நர்த்தனம் செய்தார்கள், கோன்-ஸ்வாமியாகிய ஜினேந்திரன், எழுந்தருளும்-செல்கின்ற, வீதியெங்கும் - வீதிகளிலெல்லாம், இந்திரர் - தேவேந்திரர்கள், நல் - நன்மையாகிய, மந்தரமலர் - கற்பக விருட்சத்தின் பூக்களை, வண்டினங்கள் சூழ - வண்டுக் கூட்டங்கள் மொய்க்கும்படி, மழைகள் - மழைகளைப்போல, பொழிந்தார் - சொரிந்தார்கள், எ - று. (உஉ)

1033. * வாமனர்கண் மண்ணின்மறிந் தெழுந்துநடம் புரிந்தார்
காமம்பில வகவரசர் கரணஞ்சுழன் றெழுந்தார்
கேமங்கர நாமங்களோ ராயிரத்தோ ரெட்டுந்
தாமங்கலம் பாடவர்க ளாமிந்திரர் படிந்தார்.

(இ - ள்) வாமனர்கள்-அழகிய தேவர்கள், மண்ணின்-இச்சமவசரண பூமியில், மறிந்து-தங்கி, எழுந்து-உயர எழுந்து, நடம்-நர்த்தனங்களை, புரிந்தார் - செய்தார்கள், பிலவக வரசர் - பவணலோகத் திறைவர்களாகிய பவணேந்திரர்கள், காமம் - அழகாக, கரணஞ்சுழன்று - கரணம் போடுதல் முதலாகிய வித்தைகளைச் செய்து, எழுந்தார் - சென்றார்கள், இந்திரர் - கல்பாமரேந்திரர்கள், கேமங்கரம் - க்ஷேமத்தைச் செய்யும்படியான, நாமங்கள் - ஜினேந்திரனுடைய பெயர்களாகிய, ஓர் - ஒப்பற்ற, ஆயிரத்தோரெட்டும் - ஆயிரத்தெட்டையும், மங்கலம் - பாபவிநாசார்த்தமாகவும் புண்ணிய வியாப்த்தியர்த்தமாகவும், பாடவர்களாம் - பாடுகின்றவர்களாகி, படிந்தார் - பொருந்தினார்கள், எ - று.

தாம் - அசை.

* வானவர்களென்றும் சில பிரதிகளிற் பாடபேதமுண்டு. (உந)

1034. செங்கமல மொன்றிரண்டு பங்கயம லர்ந்தென
வங்கமலத் தறிவன்றிரு வடியிணைவைத் தளவிற்
றிங்களன குடைமும்மையும் மண்டலமுஞ் செறிந்த
பொங்கியவெண் சாமரைகள் பூமழை பொழிந்தார்.

(இ - ள்) செங்கமலமொன்று - ஒரு செந்தாமரைப் பூவின் மேல், இரண்டு ங்கயம் - இரண்டு செந்தாமரைப் புஷ்பங்கள், மலர்ந்தெனை - புஷ்பித்தது போல, அம் - அழகிய, கமலத்து - தேவர்களால் நிருமித்த செந்தாமரைப் புஷ்பத்தின் மேலே, அறிவன்-அதீந்திரியஞான ஸ்வரூபியாகிய விமல தீர்த்தங்கர ஜினேந்திரன், திரு - அழகிய, அடியிணை - இருபாதங்களையும், வைத்தளவில்-வைத்தகாலத்தில், திங்களன - சந்திரன்போல பிரகாசியாநின்ற, குடைமும்மையும் - வெண்சத்திரத் திரயமும், மண்டலமும் - பிரபாமண்டலமும், பொங்கிய - பெரிதாகிய, வெண்-வெளுப்பாகிய, சாமரைகள்-யக்ஷகுமாரரால் வீசுகின்ற சாமரைகளும், செறிந்த-சோர்ந்தன, பூமழைகள் - புஷ்ப வருஷங்களை, பொழிந்தார் - தேவர்கள் சொரிந் தார்கள், எ - று. (உச)

1035\. மாதவர்கண் மலரடி பணிந்துபி னெழுந்தார்
சோதமனோ டெண்மையுல காந்தர்தொழு தேத்தி
நாதனெதிர் வைத்தமுக ராகிமுன் னடந்தார்
காதிகெட வந்ததிரு வோடுசசி சென்றாள்.

(இ - ள்) மாதவர்கள் - மஹாதபஸைச் செய்கின்ற முனிவர்கள், மலரடி - பகவானுடைய, செந்தாமரைப் புஷ்பம் போன்ற பாதங்களை, பணிந்து - வணங்கி, பின் - பின்னாலே, எழுந்தார் - எழுந்து சென்றார்கள், சோதமனோடு - ஸௌதர் மேந்திரனோடு, எண்மை - எட்டுப் பிரகாரமாகிய, உலகாந்தியர் - லௌகாந்திக தேவர்களும், தொழுது - வணங்கி, ஏத்தி - ஸ்தோத்திரஞ் செய்து, நாதன் - ஜினேந்திரனுடைய, எதிர் வைத்த - எதிரிலே வைக்கப்பட்ட, முகராகி-முகத்தை யுடையவர்களாகி, முன் - முன்னாலே, நடந்தார் - சென்றார்கள், காதிகெட - காதி கர்ம்மமானது நீங்க, வந்த - வரப்பட்ட, திருவோடு - புண்ணியமாகிய லக்ஷ்மி யோடு, சசி - சசி மஹாதேவியும், சென்றாள் - அடைந்தாள், எ - று. (உரு)

1036 பூரகல சம்முதலெண் மங்கலங்க ளேந்தி
வேரிமலர் மடந்தையொடு மேவின ரெழுந்தார்
காரின்மணி கனகம்பொழி யாக்கமலஞ் சங்கின்
பேருடைய நிதிக்கரசர் பின்னைமுன் னெழுந்தார்.

(இ - ள்) பூரகலசம் முதல - பூர்ணகும்பம் முதலாக, எண் மங்கலங்கள் - அஷ்டமங்கலங்களை, ஏந்தி - தரித்து, வேரி - வாசனை பொருந்திய, மலர் - தாமரைப் புஷ்பத்தின் மேல் வஸிக்கின்ற, மடந்தையொடு - லக்ஷ்மிதேவியுடன், (சில தேவவனிதைகள்), மேவினர் - பொருந்தினவர்களாகி, எழுந்தார் - வந்தார் கள், காரின் - மேகமானது மழையைச் சொரிவதுபோல, மணி - இரத்தினங்களை யும், கனகம் - ஸ்வர்ணங்களையும், பொழியா - சொரிந்து, கமலம் - பத்மமும்,

சங்கின் - சங்கும் (ஆகிய) இருநிதிகளின், பேருடைய - பெருமையையுடைய, நிதிக்கரசர் - நிதித்தலைவராகிய தேவர்கள், பின்னை - பின்புறத்திலும், முன் - எதிர்ப்புறத்திலும், எழுந்தார் - வந்தார்கள், எ - று. (உசு)

1037. பன்னகர்கள் பன்மணிக டீவிகைக ளாக
முன்னமிறை பாதம்பணிந் தேகினர்கண் முறையால்
வன்னிமுடி வானவர்கள் சென்னிமிசை வைத்த
பன்னரிய தூபகட மேந்திப்பணிந் தெழுந்தார்.

(இ - ள்) பன்னகர்கள் - பவணதேவர்கள், பன்மணிகள் - பலவாகிய இரத்தினங்களை, தீவிகைகளாக - தீவட்டிகளாகக் கொண்டு, இறை - ஸ்வாமியினுடைய, பாதம் - திருவடிகளை, பணிந்து - வணங்கி, முன்னம் - எதிரிலே, முறையால் - வரிசைக்கிரமத்தால், ஏகினர் - சென்றார்கள், வன்னி முடிவானவர்கள் - அக்னிகுமாரர்கள், சென்னிமிசை - சிரசின்மேல், வைத்த - வைக்கப்பட்ட, பன்னரிய - சொல்லுதற்கரிய வாசனையை வீசுகின்ற, தூபகடம்-தூபகலசங்களை, ஏந்தி - தரித்து, பணிந்து - (சுவாமியை) வணங்கி, எழுந்தார் - எழுந்துபோனார்கள், எ - று. (உஎ)

1038. இரவிசசி யெண்ணரிய தொகைக்கனைய விறைவன்
றிருவுருவி னொளியழகு கண்டுசிறந் தேத்திப்
பருதிமதி பான்மையுடை மாந்தர்முக மென்னு
மரவிந்தமுங் குமுதங்களும் மலரவுட னெழுந்தார்.

(இ - ள்) எண்ணரிய - எண்ணுதற்கரிதாகிய, இரவி - சூர்யர்களும், சசி - சந்திரர்களும், தொகைக்கனைய - ஒன்றாகக் கூடினாலொத்த பிரகாசமுள்ள, இறைவன் - தலைவனாகிய ஜினேந்திரனுடைய, திரு - அழகிய, உருவின் - பரமௌதாரிக திவ்விய தேகத்தினுடைய, ஒளி - ஜோதியுள்ள, அழகு - லாவண்யத்தை, கண்டு - பார்த்து, சிறந்து - சிறப்பையடைந்து, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, பான்மையுடை - பவ்வியத்துவம் பொருந்திய, மாந்தர் - மனிதர்களின், முகமென்னும் - வதனமென்கிற, அரவிந்தமும் - தாமரைப் புஷ்பங்களும், குமுதங்களும் - அல்லி மலர்களும், பருதிமதி - ஸ்வாமியினுடைய சூர்ய சந்திர குணமொத்த ஒளிகளால், மலர - மலர்ச்சியடைய, உடன் - உடனே, எழுந்தார் - சந்தோஷித்தெழுந்தார்கள், எ - று. (உஅ)

1039 குடையினொடு கொடிபருதி மின்னின்மிசை குலவ
வடிவுடைய வைசயந்தை வான்கொடிமுன் னேக
விடியினொலி யவியவெழு ஞந்திமுன் னியம்பப்
படருவினை யெறியுமரு ளாழியுமுன் னேக.

(இ - ள்) குடையினொடு - சத்திரத்துடன், கொடி - த்வஜங்களும், பருதி - சூர்யன் போலவும், மின்னின் - மின்னல் போலவும், மிசை - ஆகாயத்தில், குலவ - பிரகாசிக்க, வடிவுடைய - ரூபம் பொருந்திய, வான் - பெரிதாகிய, வைசயந்தை - வைஜயந்தை யென்னும் பெயர்பெற்ற, கொடி - த்வஜக்கொடியானது, முன் - முன்னால், ஏக - செல்ல, இடியினொலி - மேககர்ஜனையும், அவிய - அடங்கும்படி, எழில் - அழகையுடைய (அதாவது: கெம்பீரமான தொனியையுடைய), நாந்தி - மங்கலவாழ்த்துப் பாடல்களும், முன் - எதிரிலே, இயம்ப - சப்திக்க, படரும் - ஆத்மனிடம் படருகின்ற, வினை - கருமங்களை, எறியும் - சேதிக்கும்படியான, அருளாழியும் - தயவு பொருந்திய தர்ம சக்கரமும், முன் - முன்னாலே, ஏக - செல்லவும், எ - று. (௪௯)

1040. தேசுதிசை சிறந்ததிசை யுடையமட வார்கள்
வாசமலர் மழைபொழிந்து மலரடி பணிந்தார்
காசினியி னீதிமுத லானவை கரந்த
வீசனெழில் வாசமல ரேறிய கணத்தே.

(இ - ள்) ஈசன் - திரிலோகாதிபத்யமுடைய ஜினேந்திரன், எழில் - பிரகாசியாநின்ற, வாசம் - வாசனை பொருந்திய, மலர் - தேவ நிர்மித செந்தாமரைப் புஷ்பத்தின்மேல், ஏறிய - ஆரோகணித்த, கணத்து - அந்த ஸமயத்திலே, திசை - திக்குகளெல்லாம், தேசு - ஒளி பொருந்தி, சிறந்த - சிறப்படைந்தன, திசையுடைய மடவார்கள் - திக்குக்கன்னியராகிய தேவதைகள், வாசம் - வாசனை பொருந்திய, மலர் மழை - புஷ்ப வருஷங்களை, பொழிந்து - சொரிந்து, மலரடி - பகவானுடைய தாமரைப் புஷ்பம் போன்ற பாதங்களில், பணிந்தார் - வணங்கினார்கள், காசினியில் - இந்தப் பூமியின், ஈதிமுதலானவை - அதிவிருஷ்டி அனாவிருஷ்டி முதலானவைகளால் வரும் உபத்திரவங்களெல்லாம், கரந்த - மறைந்தன (அதாவது: நீங்கின), எ - று.

இங்ஙனங் கூறியதனால் க்ஷேமகரமாயிற்று என்பது பெறப்படும். (௫௦)

1041. மூகர்மொழிந் தார்விடையின் முடவர்க ணடந்தார்
சோகமொழிந் தாரெவருஞ் செவிடர்மொழி கேட்டார்
கோபமொழிந் தார்குபிதர் குருடர்விழி பெற்றார்
வேகமொழிந் தாறியநம் வீரனெழும் பொழுதே.

(இ - ள்) வேகம் - விபாவகுணங்களாகிய மோஹாதிகள், ஒழிந்து - நீங்கி, ஆறிய - ஸ்வஸ்தபாவத்தையுற்ற, நம் வீரன் - நமது ஸ்வாமியாகிய அனந்த வீரியன், எழும்பொழுது - ஸ்ரீ விஹாரமாகின்ற காலத்தில், மூகர் - ஊமைகள், மொழிந்தார் - பேசுந்திறம் பெற்றார்கள், முடவர்கள் - நொண்டிகள், விடையின் -

விருஷபத்தைப்போல, (அதாவது: விருஷபம்போல கெம்பீரமாகி), நடந்தார் - நடைக்கலாயினார்கள், எவரும் - வருத்தமுள்ளவர்களெல்லாம், சோகம்- துக்கத்தை, ஒழிந்தார் - நீங்கிச் சுகமடைந்தார்கள், செவிடர் - செவிடர்கள், மொழி - பிறர் கூறும் வசனத்தை, கேட்டார் - செவிடு நீங்கி ஸ்ரோத்திர பலத்தால் கேட்டுக் கொள்ளும் தன்மை யடைந்தார்கள், குபிதர் - கோபிகள், கோபம் - குரோதத்தை, ஒழிந்தார் - விட்டார்கள், குருடர் - அந்தகர்கள், விழி - கண்விழியால் பார்வையை, பெற்றார் - அடைந்தார்கள், எ - று. (௩௧)

1042 பிறவியுறு பகையுடைய பணிநகுல முதலா
வுறவியிற வாதவுற வாயவ ணிலத்துக்
கிறைவனிறை காதலொடு மங்கங்கெதிர் கொண்டார்
மறமலி விலாழியுடை மன்னவனை வந்தே.

(இ - ள்) பிறவி-ஜன்மத்தினாலேயே, உறு-அடையப்பட்ட, பகையுடைய- ஜன்மவைர சத்துருத்துவமுடைய, பணி - சர்ப்பம், நகுலம் - கீரிப்பிள்ளை, முதலாம் - முதலாகிய, உறவி - (ஒன்றுக்கொன்று ஜன்மவைரமாயுள்ள) பிராணி களும், இறைவன் - ஸ்வாமியினமேல், நிறை - நிறைந்த, காதலொடு - பக்தியி னோடு (கர்மோப சமமாவதோடு), இறவாத - நீங்காத, உறவாய் - மித்திரத்துவ மாகி, அவணிலத்து - ஸ்ரீவிஹாரமாகிற அவ்வவ்விடங்களில், மறமலிவில் - பாபம் மிகுதலில்லாத, ஆழியுடை - தர்ம சக்கரத்தையுடைய, மன்னவனை - ஸ்வாமியை, அங்கங்கு - அவ்வவ்விடங்களிலும். வந்து - வந்து, எதிர்கொண்டார் - எதிர்கொண் டார்கள், எ - று. (௩௨)

1043 வெவ்வினைக டரவிம லனகமல மேற்கொண்
டிவ்வகை யெழுந்தருளி வந்தவிவை கண்டாங்
கவ்வியமின் மைந்தரை யணைந்துசிலர் சொன்னார்
மௌவன்மலர் தூயவரும் மலரடி பணிந்தார்.

(இ - ள்) வெவ்வினைகள் - பொல்லாங்காகிய பாபவினைகள், தீர - நீங்கும் படி, விமலன் - விமலதீர்த்தங்கரனாகிய ஜினேந்திரன், கமலமேற்கொண்டு - தேவ நிர்மித செந்தாமரைப் புஷ்பத்தின் மேலேறி, இவ்வகை - இவ்விதமாக, எழுந் தருளிவந்த - ஸ்ரீ விஹாரமாகிய, இவ்வை - இவ்வதிசயங்களை, கண்டு - பார்த்து, ஆங்கு - அப்பொழுதே, சிலர் - சில பேர்கள், ஔவியமில் - பொறாமையில்லாத நற்குணமுடைய, மைந்தரை - இம்மேருமந்தரரென்னும் குமாரர்களிடத்தில், அணைந்து - சேர்ந்து, சொன்னார் - தெரியச் சொன்னார்கள், அவரும் - அக்குமாரர் களும், மௌவல்மலர் - வனமல்லிகைப் புஷ்பங்களை, தூய் - சொரிந்து, மலரடி- பகவானுடைய மலர்ப்பாதங்களை, பணிந்தார் - வணங்கினார்கள், எ - று. (௩௩)

வேறு.

1044. ஏழடி யெழுந்து வந்தாங் கிறைவனை யிறைஞ்சி யேத்திப்
பாழியந் தடக்கை வேந்தர் பலகல மவர்க்கு நல்கி
யேழுய ருலகந் தன்னு ளிருள்கெட வெழுந்த கோவின்
சூழொளி யனைய பாதந் தொழுதுநா மெழுக வென்றார்.

(இ - ள்) ஏழடி - ஏழடி தூரம், எழுந்து வந்து - எழுந்திருந்து வந்து, ஆங்கு - அவ்விடத்தில், இறைவனை - சுவாமியை, இறைஞ்சி-வணங்கி, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, பாழி - பலம் பொருந்திய, அம் - அழகிய, தடக்கை - விசாலம் பொருந்தி தியாகம் கொடுக்கும்படியான கையையுடைய, வேந்தர் - இராஜ குமாரர்கள், பல கலம் - பலவாகிய ஆபரணங்களை, அவர்க்கு - அச்செய்தி சொல் லியவர்களுக்கு, நல்கி - கொடுத்து, ஏழுயருலகந்தன்னுள் - உயர்ந்த இந்த ஏழு லோகத்துள்ள பவ்வியப் பிராணிகளுக்கு, இருள் - மித்தியாத்து வாந்தகாரம், கெட - நீங்கும்படி, எழுந்த - ஸ்ரீவிஹாரமாகி வந்த, கோவின் - ஸ்வாமியினுடைய, சூழொளியனைய - நிறைந்த சூர்யன் ஒளிபோலப் பிரகாசத்தைப் பொருந்திய, பாதம் - பாதங்களை, நாம் - நாம், தொழுதும் - போய் வணங்குவோம், எழுக - அதற்காகச் செல்க, என்றார் - என்று பரிவாரங்களுக்கு ஆக்ஞாபித்தார்கள், எ - று.

1045. முரன்றன சங்க மெங்கும் முழங்கின முரச நின்று
துரங்கம மேறி யானை மேன்மன்னர் தொடைய லேந்தி
நிரந்தனர் நெளிந்த தன்று நிலமகண் முதுகு நீடுங்
கரந்தன கடிய வாய கருவினைக் குழாங்க ளாங்கே.

(இ - ள்) சங்கம் - சங்கவாத்தியங்கள், முரன்றன - பலமாகச் சப்தித்தன, எங்கும் - எவ்விடங்களிலும், முரசம் - பேரிகைகளானவை, நின்று - வியாபித்து நின்று, முழங்கின - சப்தித்தன, மன்னர் - இந்த இராஜகுமாரர்கள், தொடையல் - புஷ்பமாலை முதலியவைகளை, ஏந்தி - தரித்துக்கொண்டு, யானைமேல் - யானை யின்மேலும், துரகமம் - (பரிவாராதியர்கள்) குதிரைகள் முதலானவைகளின் மேலும், ஏறி - ஏறி, நிரந்தனர் - (அங்கே வந்து) நெருங்கினார்கள், அன்று - அப் பொழுது, நிலமகள் முதுகு - பூமிதேவியின் முதுகு, நெளிந்தது - நெளிவுற்றது, நீடும் - ஆத்மனிடத்தில் வெகு காலமா யிராநின்ற, கடியவாய - பொல்லாங்காகிய, கருவினைக் குழாங்கள் - பாபஸமூகங்களெல்லாம், ஆங்கு - அப்பொழுது, கரந்தன- மறைந்தன (அதாவது : நீங்கின), எ - று. (ருஉ)

1046. சந்தனக் குழம்பி னூர்ந்த சந்திர காந்தச் செப்புங்
குங்குமக் குழம்பு விம்மு மிரவியின் குழவிச் செப்பு

மிந்திர நீலச் செப்பு மகிற்புகைப் புகைத்த வேந்தி
மைந்தரைச் சூழ்ந்து நின்றார் மயிற்குழாம் போல வந்தே.

(இ - ள்) சந்தனக்குழம்பின் - சந்தனக்குழம்பினால், ஆர்ந்த - நிறைந்த, சந்திரகாந்தச் செப்பும்-சந்திரகாந்தச் செப்புகளும், குங்குமக் குழம்புவிம்மும் - குங்குமக்குழம்பு நிறைந்திருக்கின்ற, இரவியின் குழவிச் செப்பும் - சூரியகாந்தச் செப்பும், அகிற்புகை - அகிற்றூபங்களை, புகைத்த - புகைத்துக்கொண்டிருக்கின்ற, இந்திர நீலச்செப்பும் - இந்திர நீல ரத்தினத்தினால் செய்த தூபகலசங்களையும், ஏந்தி - தரித்து, மயிற்குழாம்போல வந்து - மயில் கூட்டங்களைப்போல் வந்து, மைந்தரை - இந்தக் குமாரர்களை, சூழ்ந்து - எப்பக்கமுஞ் சூழ்ந்துகொண்டு, நின்றார் - (பரிசாரகர்கள்) நின்றார்கள், எ - று. (௩௬)

1047. விசும்புற விரிந்து நாறும் விரைமர் மாலை பெய்து
பசும்பொனும் மணியும் மின்னும் படலிகை பலவு மேந்தி
யசும்பறுக் கடாத்த வேழத் தரசிளங் குமரார் வந்தார்.
விசும்பின்மேல் வினையுற் பாத மருக்கர்தா மிருவ ரொத்தார்.

(இ - ள்) விசும்புற - ஆகாயமெங்கும் பொருந்த, விரிந்து - விசாலித்து, விரை நாறும் - வாசனை வீசுகின்ற, மலர் மாலை - புஷ்பமாலை முதலியவைகளை, பெய்து - வைத்து, பசும் பொன்னும் - பசுமை பொருந்திய ஸ்வர்ணத்தினாலும், மணியும் - இரத்தினங்களினாலும், மின்னும் - பிரகாசியாநின்ற, படலிகை பலவும் - அனேகமாகிய தட்டுக்களை, ஏந்தி - தரித்து, அசும்பறு - ஊற்று நீங்காத, கடாத்த - மதஜலத்தையுடைய, வேழத்து - யானையின் மேலே, வந்தார் - வந்தவர்களாகிய, அரசிளங்குமரர் - மேரு மந்தரரென்கிற இரண்டு ராஜகுமாரர்களும், விசும்பின்மேல் - ஆகாயத்தின் மேலே, வினையுற் பாதம் - உத்பாத காரியத்தாலான, அருக்கர்தா மிருவரொத்தார் - இரண்டு சூர்யர்களுக்கொப்பானார்கள், எ - று.

பன்னிரண்டாவது:

ஸ்ரீவிஹாரச்சருக்கம் முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது :

## சமவசரணச்சருக்கம்.

1048. யோசனை பன்னி ரண்டி னும்பர்கோன் றம்பங் காணாப்
பேசொணா வகையி னின்ற பெருமித மழிந்த தியார்க்கு
மீசனை யிறைஞ்சி னார்க ளெய்தினா ரிறைவன் கோயில்
வீசுவெண் சாம ராதி பரிச்சந்த முழுதும் விட்டார்.

(இ - ள்) யோசனை பன்னிரண்டின் - பன்னிரண்டு யோஜனை விஸ்தீர்ண முள்ள சமவசரண பூமியின் பிராரம்பமாகிய பிரதம பூமியில், உம்பர்கோன் தம்பம் - தேவர்களுக்கெல்லாம் நாதனாகிய ஜினேந்திரனுடைய (கோயிலாகிய சமவசரணத்தின் உள்ளே செல்லும்படியான நாலு மஹாதிக்குகளிலுள்ள வீதியின் மத்தியிலிராநின்ற) மானஸ்தம்பத்தை, காணா - கண்டு, யார்க்கும் - எவர்க்கும், பேசொணா வகையில் - சொல்லி முடியாத விதமாக, நின்ற - இராநின்ற, பெரு - பெரிதாகிய, மிதம் - மித்தியாத்துவ கர்மமானது, அழிந்தது - நிலை குலைந்தது, வீசும் - வீசுகின்ற, வெண் - வெளுப்பாகிய, சாமராதி - சாமரை முதலிய, பரிச்சந்தம் - ராஜ பரிச் சின்ன பரிவாரங்களை, முழுதும் - முழுமையும், விட்டார் - (இந்த மேரு மந்தரரென்னுமிரண்டு ராஜ குமாரர்களும்) விடப்பட்டவர்களாகி, இறைவன் - ஸ்வாமியினுடைய, கோயில் - ஆலயத்தை, எய்தினார் - அடைந்தார்கள், (அவ்வாறடைந்து), ஈசனை - திரிலோகாதிபதியாகிய பகவானை, இறைஞ்சினார்கள் - வணங்கினார்கள், எ - று. (க)

1049. யானையி னிழிந்து மானுங் கணத்திரு காத வீதி
மானபீ டத்தை மார்பி னளவுள மதிலை யெய்திக்
கானுறை கமலப் போதிற் கைதொழு திறைஞ்சி வாழ்த்தி
யூனந்தீர் தூயத் தானுங் கணம்புக்கார் கோசம் போயே.

(இ - ள்) யானையின் - ஆனையினின்றும், இழிந்து-(மேருமந்தராகிய விருவர்களும்) இறங்கி, அளவுள - யோக்கியோத்ஸேதத்தினை யுடைய, மதிலை - தூளிசாலமென்னும் மதிலையும், மானுங்கணத்து - அதன் அப்பியந்தர பாகத்திலுள்ள ப்ராஸாத சைத்ய பூமியையும், இருகாதவீதி - அப்பூமியில் சதுர்மஹா திக்குகளிலுமிராநின்ற இரண்டுகாத மகலமான வீதிகளின் பிரதமத்தில், மார்பின் மானம் - மார்பளவு உன்னதமுடைய, பீடத்தை - பிரதமபலிபீடத்தை, எய்தி - அடைந்து, கானுறை - வாசனை பொருந்திய, கமலப்போதில் - தாமரைப் புஷ்பத்திற்குச்

சமானமாகிய, கைதொழுது - தங்களுடைய கைகளை முகுளிதஞ் செய்து, இறைஞ்சி - வணங்கி, வாழ்த்தி - ஸ்தோத்திரம் பண்ணி, கோசம்போய் - அங்கு நின்று ஒரு குரோச தூரம் போய், ஊனந்தீர் - குற்றம் நீங்கி லட்சணமமைந்த, தூயத்தானுங்கணம் - பரிசுத்தமாகிய அந்த ப்ராஸாத சைத்ய பூமியின் நடுவில், புக்கார் - அடைந்தார்கள், எ - று. (உ)

1050. ஆங்கத னகத்து வீதி நடுவணாற் காத மோங்கிப்
பாங்கின்மா திசையிற் பன்னீ ரோசனை காண நின்ற
வாங்குகாந் தம்போல் மானம் வாங்குநன் மானத் தம்பம்
பாங்கினாற் றோர ணம்வே திமங்கலம் பலவுஞ் சூழ்ந்த.

(இ - ள்) ஆங்கதன் - அவ்விடத்தே அந்த சைத்ய ப்ராஸாத பூமியினுடைய, அகத்து - மத்தியிலும், வீதி - வீதிகளினுடைய, நடுவண்-நடுவிலும், (இரா நின்றனவாகி), நாற்காதமோங்கி - நாலுகாதம் உன்னதத்தையுடையதாகி, பாங்கின் - வரிசைக்கிரமத்தால், மாதிசையில் - மஹா திக்குகளில், பன்னீரோசனை - பன்னிரண்டு யோஜனை தூரம், காண - அளவிற்காணும்படி, நின்ற - ஒவ்வொரு மஹா திக்கில் ஒவ்வொன்றாகி நின்ற, வாங்கும் - இரும்பைத் தன்னிடம் வாங்கிக் கொள்ளும்படியான, காந்தம்போல - காந்தத்தைப்போல, மானம் - பார்க்கின்றவர்களுடைய மான கர்மத்தை, வாங்கும் - வாங்கிக்கொள்ளும்படியான, நல் - அழகாகிய, மானத்தம்பம் - மானஸ்தம்பங்களை, பாங்கினால் - வரிசையினாலே, தோரணம் - தோரணங்களும், வேதி - மதில்களும், மங்கலம் பலவும் - அஷ்டமங்கலங்களும், சூழ்ந்த - சூழ்ந்திரா நின்றன, எ - று. (ந)

1051. வயிரநற் படிகம் வயிடூ ரியமடி நடுவ ணுச்சி
யுயரத்தின் பாக மோக்கம் படிகமேற் கீழ வோக்கம்
வெயில்விடு தாரைக் கீழ்மே லாயிரம் நடுவி ரட்டித்
துயரினைக் கெடுக்குஞ் சித்தப் படிமைநாற் றிசையு மாமே.

(இ - ள்) அடி - அந்தமான ஸ்தம்பத்தின் அடியில், வயிரம் - வஜ்ராரத்தினமும், நடுவண் - மத்தியில், நல் - நன்மையாகிய, படிகம் - ஸ்படிகரத்தினமும், உச்சி - மேலே, வயிடூரியம் - வைடூரியரத்தினமுமாகி, உயரத்தில் - மொத்த உன்னதத்தில், பாகமோக்கம் - பாதிநீளம் (அதாவது: நடுவில் இரண்டு காதநீளம்), படிகம் - ஸ்படிகரத்தினமும், மேல் கீழவோக்கம் - மேலே ஒரு காதநீளம் வைடூரியமும் கீழே ஒரு காதநீளம் வஜ்ரரத்தின மயமுமாகி, கீழ் - கீழிலாகிய வஜ்ரரத்தின ஸ்தம்பமும், மேல் - மேலேயாகிய வைடூரியரத்தின ஸ்தம்பத்திலும், வெயில்விடு - கிரணத்தை வீசுகின்ற, தாரை - பட்டைகளானவை, ஆயிரம் - ஆயிரமாகி, நடுவு - மத்தியில் இரண்டு காதநீளமான ஸ்படிகத்தில், இரட்டி - இரண்டாயிரம்

பட்டைகளாகிய அத்தம்பத்தின், நாற்றிசையும் - அடியிலும் மேலேயும் நாலு திக்குகளிலும், துயரினை - துன்பத்தை, கெடுக்கும் - போக்கும், சித்தப்படிமை - ஸித்த பரமேஷ்டிகளின் பிரதி பிம்பங்களாகிய பிரதிமைகள், ஆம் - நிர்மிக்கப் பட்டனவாகும், எ - று. (௮)

1052 நான்முகப் பூதத் துச்சி பாலிகைக் கமலப் போதின்
மேல்வைத்த செம்பொற் கும்பத் துச்சிமேற் பலகை தன்னிற்
பானிறப் பகடு பாலைப் பதுமைமேற் பொழியத் தேவி
மேன்முடிப் பதும ராக மிருபதோ சனைவி ளக்கும்.

(இ - ள்) நான்முகப் பூதத்து - அந்த மானஸ்தம்பத்தின்மேலே நிருமிக்கப் பட்ட சதுர்முகத்தையுடைய பூதத்தின், உச்சி - தலையின்மேல் உள்ள, பாலிகை - பாலிகையில், கமலப் போதின்மேல் வைத்த - தாமரைப்புஷ்பத்தைத் தலையில் வைத்திராநின்ற, செம்பொற் கும்பத்துச்சிமேல் - சிவந்த பொன்னாலாகிய பூர்ண கும்பத்தின்மேலே, பலகை தன்னில் - பலகையாகச்செய்து அதில், பதுமை - லக்ஷ்மிதேவி உருவம் நிருமித்து, மேல் - அந்த லக்ஷ்மிதேவிமேல், பால் நிறம் - வெள்ளை நிறத்தையுடைய, பகடு - யானைகளானவை, பாலை-க்ஷீரத்தை, பொழிய- சொரியும்படி செய்திருக்க, அத்தேவி - அந்த லட்சுமிதேவியின், முடிமேல் - கிரீடத்தின்மேலிராநின்ற, பதுமராகம் - பத்மராகரத்தினமானது, இருபதோசனை - இருபதுயோசனை தூரம், விளக்கும் - பிரகாசிப்பதாகும், எ - று. (௯)

1053. மணிமய மாய சுக்கம் நான்றுமங் கலங்க ளேந்தி
யணிபெற நின்ற நான்கா மந்தமா னத்தம் பத்தை
யிணையிலார் வலங்கொண் டேத்தி யிறைஞ்சிப்போய்க் கோச நீல
மணிநிலத் தகழி மார்பி னளவுள மதிலைக் கண்டார்.

(இ - ள்) மணிமயமாய - இரத்தினமயமாகிய, சிக்கம் - உறிகள், மங்கலங் கள் - அஷ்டமங்கலங்களை, ஏந்தி - தரித்து, நான்று - அந்த லக்ஷ்மியிருக்கப்பட்ட பலகையினின்றும் தொங்கப்பட்டனவாகி, அணிபெற - அழகு பெறும்படி, நின்ற - (ப்ராஸாதசைத்ய பூமியாகிய முதல் பூமியில் சதுர் மஹாதிக்கு வீதிகளில்) இராநின்ற, நான்காம் - நாலாகிய, அந்தமானத் தம்பத்தை - அந்தமான ஸ்தம்பங் களை, இணையிலார் - உபமையில்லாத அழகையுடைத்தாகிய இந்த மேருமந்தரிரு வர்களும், வலங்கொண்டு - பிரதக்ஷணமாக வந்து, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, இறைஞ்சி - வணங்கி, கோசம்போய் - அந்த ப்ராஸாத சைத்ய பூமியின் மற்ற பாதியாகிய ஒரு குரோச தூரமும்போகி, (அவ்விடத்திலிராநின்ற), மார்பினளவுள - மார்பளவுயரமுள்ள, மதிலை - மதிலையும், (அதன் அப்பியந்தர பாகத்திலுள்ள), நீலமணி நிலத்து - இந்திர நீலரத்தினத்தினாலாகிய நிலத்தையுடைய, அகழி -

அகழாகிய (அதாவது : ஜலத்தினால் நிறைந்த காதிகையாகிய) இரண்டாம் பூமியை யும், கண்டார் - பார்த்தார்கள், எ - று. (சு)

1054. ஆழமு நிறைவு முண்டே யாகிலு மலையென் பானி
லூழிபேர்ந் தாலும் பேரா விதனைநா னொழிப்ப னென்றிங்
காழிவந் திறைவன் பாத மடைந்துபூம் பட்டை போர்த்துச்
சூழுந்தான் கிடந்த தொத்துத் தோன்றுமிப் பரிகை யென்றார்.

(இ - ள்) (அவ்வாறு பார்த்து), இப்பரிகைதான் - இந்தக் காதிகையானது, ஆழமும் - ஆழமும், நிறைவும் - ஜலநிறைவும், உண்டேயாகிலும் - உண்டாகியும், சூழுகிடந்தது-(ஸமவஸரணத்தின் இரண்டாம் பிராகாரமாகிச்) சூழ்ந்திருப்பதைப் பார்த்தால், ஆழி - ஸமுத்திரமானது, இங்குவந்து - இவ்விடம்வந்து, அலையென் பானில்-அலையென்று சொல்லும் விதத்தில், ஊழிபேர்ந்தாலும் - ஊழிஊழிகாலம் அனேகம் நீங்கினாலும், பேரா - நீங்காத, இதனை - என்னிடமுள்ள இந்த அலை யென்பதை, நான் - நான், ஒழிப்பனென்று - ஒழித்து விடுவேனென்று, பூம்பட் டைப் போர்த்து - புஷ்பங்களாகிற பட்டுவஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு, இறைவன்பாதம் - ஜினேந்திரனது பாதாரவிந்தத்தை, அடைந்ததொத்து-சேர்ந்த தற் கொப்பாகி, தோன்றும் - தோன்றாநின்றது, என்றார் - என்று சொன்னார் கள், எ - று. (எ)

1055. மணிதெளித் தனைய வாரி வாசவான் சுவைய தார்ந்தங்
கணுகுவார்க் காழ்ந்து தோன்றி யடைந்தவர் தாண்மட் டாகிப்
பணிவுயர் விலாது போதிற் பயின்றுபைம் பொன்செப் வீதி
மணியொளி பரந்து வான விற்களாய் மயங்கு நின்றே.

(இ - ள்) மணி - இந்திர நீலரத்தினத்தை, தெளித்தனைய - அரைத்துக் கரைத்துத் தெளியவைத்ததற்குச் சமானமாகிய, வாரி - ஜலமானது, வாசம் - பரி மளமாகிய, வான் - அழகிய, சுவையது - ரஸமானது, ஆர்ந்து - நிறைந்து, அங்கு - அவ்விடத்து, அணுகுவார்க்கு - அடைந்தவர்களுக்கு, ஆழ்ந்துதோன்றி - ஆழமாகத்தோன்றி, அடைந்தவர் - உள்ளே யடைந்தவர்க்கு, தாண்மட்டாகி - முழுந்தாள் பரியந்தமாகி, பணிவு - தாழ்வும், உயர்வு - மேடும், இலாது - இல்லாது சமமாகி, போதில் - புஷ்பங்களினால், பயின்று - நிறைந்து, பைம் - பசுமை பொருந்திய, பொன் செய் - பொன்னினால் நிருமித்த, வீதி - சதுர் மஹாவீதி களும், மணியொளி - இரத்தினங்களின் ஒளியானது, பரந்து - வியாபித்து, வானவிற்களாய் - இந்திர தனுசுவைப்போல பஞ்சவர்ணமுடையனவாக, நின்று - நிலைபெற்று, மயங்கும் - பார்ப்பவர்களைப் பிரமிக்கச் செய்கின்றதாகும், எ - று.

1056. காதத்தி னரைய கன்ற காதிகைக் கமல மாதிப்
போதைக்கொய் தங்கை யேந்திப் பொன்செய்தோ ரணங்க டந்து
மேதக்க மணியி னுய பாதத்த வீதி நின்ற
வாதிகோ புரத்தி னுதி நிலையள வாகி யம்பொன்.

(இ - ள்) காதத்தின் அரை - அரைக்காதம், அகன்ற - அகலத்தையுடைய, காதிகை - அகழில் இராநின்ற, கமலமாதி - தாமரை முதலாகிய, போதை - புஷ்பங்களை, கொய்து - பறித்து, அங்கை - அழகிய கையினுள், ஏந்தி - எடுத்துக் கொண்டு, பொன்செய் - பொன்னுல் நிர்மித்த வீதிகளிலுள்ள, தோரணம் - தோரணம் முதலானவைகளை யெல்லாம், கடந்து - தாண்டி (அதாவது: இரண்டாம் ப்ராகாரமான காதிகாபூமியின் விஸ்தீரணமான இரண்டு குரோச தூரத்தையும் போகி), பாதத்தவீதி - அவ்விடத்தில் திக்குவீதிகள் பிரதமத்தில் சொன்ன இரண்டு காதத்தில் நாலத்தொன்று குறைந்த, (அதாவது: ஒன்றரைக்காத அகலமுடையதாகிய வீதியில்), ஆதிகோபுரத்தில் - (இனிமேற் சொல்லப்போகும்) பிரதம கோபுரமாகிய உதயதர கோபுரத்தின், ஆதிநிலை - முதல் நிலை எவ்வளவு உயரம் இருக்கின்றதோ அவ்வளவு, அளவாகி - உன்னதமுடையதாகி, அம் - அழகிய, பொன் - பொன்னினுலும், மேதக்க - மேன்மை பொருந்திய, மணியின் - இரத்தினங்களினுலும், ஆய - அமைந்த கோபுரமானது, நின்ற - இராநின்றது, எ - று. (௯)

1057. பாலிகை முதல வாய பரிச்சந்த முடைய வற்றை
மாலையுஞ் சாந்து மேந்தி வணங்கின ராகிப் போகி
சீலம்போற் செம்பொ னிஞ்சிச் சிலைகளீ ரொன்ப தோங்கி
மாலைபோற் சூழக் காத மகல்வல்லி வனத்தைச் சேர்ந்தார்.

(இ - ள்) பாலிகை முதலவாய - பாலிகை முதலாகிய, பரிச்சந்தம் - பரிவாரங்களை, உடைய - உடைத்தாகிய (அதாவது: கோபுராங்கமாகிய கும்ப முதலாகிய எல்லா லக்ஷணங்களையும் உடைய), அவற்றை - அக்கோபுரங்களையும், செம்பொன் - சிவந்த பொன்னுலாகி, சிலைகளீரொன்பதோங்கி - பதினெட்டு வில்லு உன்னதமுடையதாகி, சீலம்போல் - சீலாச்சாரம்போல ஒழுங்காகிய, இஞ்சி - மதிலையும், மாலையும் - பூமாலை முதலியவும், சாந்தும் - சந்தனங்களும், ஏந்தி - தரித்து, வணங்கினராகி - வணங்கம் செய்தவர்களாகி, போகி - சென்று, மாலைபோல் - புஷ்பமாலையை வட்டமாக வைத்ததுபோல, சூழ் - சூழ்ந்திராநின்றதாகிய, (அதாவது: இப்போது சொன்ன மதிலுக்கு அப்பியந்தர பாகத்தில் உள்ளதாகிய), காதம் அகல் - ஒருகாத விஸ்தீர்ணமாகிய, வல்லிவனத்தை - கொடிப் பூவனமாகிய வல்லி பூமியை, சேர்ந்தார் - (அவர்கள்) அடைந்தார்கள், எ - று. (௬0)

1058. வல்லிமண் டபங்கள் பந்தர் வயிரவா லுகத்த லங்கள்
வில்லுமிழ்ந் திலங்கும் பூமி விழுந்தபூ வணையின் வீயைப்
புல்லும்வண் டோசை பூமி தேவனைப் பாடல் போலு
மெல்லையி லிடங்க ளிவ்வா றியம்புதற் கரிய தொன்றே

(இ - ள்) வல்லி - (அந்த மூன்றும் ப்ராகாரமாகிய) வல்லி பூமியில், மண்ட பங்கள் - மண்டபங்களும், பந்தர் - லதா மண்டபங்களாகிய பூம்பந்தல்களும், வயிரம் - வஜ்ர ரத்தினங்களாலாகிய, வாலுகம் - மணல்களையுடைய, தலங்கள் - தரைகளாகி, வில் - கிரணங்களை, உமிழ்ந்து - கக்கி, இலங்கும் - விளங்குகின்ற, பூமி - பூமியிலே, விழுந்த - உதிர்ந்து கிடக்கின்ற, பூவணையின் - புஷ்பத்திரள்களில் உண்டாயிருக்கின்ற, வீயை - புதுமலரிலுள்ள மதுமகரந்தங்களை, புல்லும் - மொய்த்துக் கொண்டிருக்கின்ற, வண்டு - வண்டுகளின், ஓசை - ரீங்கார சப்தமானது, பூமி - அப்பூமியே, தேவனை - ஸ்வாமியை, பாடல்போலும் - ஸ்துதிப் பதுபோலு மாகாநின்றது, (இன்னும்) எல்லையில் - அளவில்லாத, இடங்கள் - அவ்வல்லிபூமியின் இடங்களின்விதம், இவ்வாறு - இந்தப்பிரகாரம், இயம்புதற்கு - வர்ணிப்பதற்கு, அரியது-அருமையானதாகிய, ஒன்று - ஒன்றாகும், எ-று.

1059 மல்லிகை முல்லை மௌவன் மாலதி மாத விநற்
பல்லிதழ் பத்தி பித்தி சண்பகங் குறிஞ்சி வெட்சி
சொல்லிய பிறவுஞ் செல்விச் சூட்டெனச் செறியப் பூத்த
வல்லிநன் மலர்க்கை யேந்தி வந்துகோ புரம டைந்தார்.

(இ - ள்) வல்லி - அந்த வல்லி பூமியில், மல்லிகை - மல்லிகையும், முல்லை - முல்லைப் பூங்கொடிகளும், மௌவல் - வனமல்லிகைகளும், மாலதி - சிறு சண்பகமும், மாதவி - குருக்கத்தியும், நல் - நன்றாகிய, பத்தி - பந்திவரிசைகள், பல் - பலவாகிய, இதழ் - இதழ்களையுடைய, பித்தி - கருமுகையும், சண்பகம் - சண்பகமும், குறிஞ்சி - குறிஞ்சியும், வெட்சி - வெட்சியும், சொல்லிய - சொல்லப்பட்ட, பிறவும் - இன்னும் அனேக பூங்கொடிகளும், செல்வி - இலக்ஷ்மிதேவியினுடைய, சூட்டென - தலைச்சூட்டலங்காரத்தைப்போல, செறிய - நெருங்க, பூத்த - புஷ்பித்தன, நன் - நன்மையாகிய, மலர் - அப்புஷ்பங்களை, கையேந்தி - கையில் எடுத்துக்கொண்டு, வந்து - வந்து, கோபுரம் - உதயதரம் என்கிற கோபுரத்தை, அடைந்தார் - இவ்விருவர்களும் சேர்ந்தார்கள், எ - று. (கஉ)

1060. காதமூன் றிரண்டு யர்ந்து காதநீண் டகன்று வாய்தல்
காதமாய்ச் சிறப்பு மும்மைப் படிமைமுன் னிலைய தாகிச்
சோதியுட் குளித்து வாய்தல் சேர்திடத் தேவர் காப்பப்
போதரும் பதாகை சூழ்ந்த துதயகோ புரம தாமே.

(இ - ள்) உதய கோபுரமது - உதயதரமென்னும் அக்கோபுரமானது, காத மூன்று - மூன்று காதம், உயர்ந்து - உன்னதமாகி, இரண்டுகாத நீண்டு - இரு காதம் நீளமுடையதாகி, வாய்தல் - வாசற்படியானது, காதமாய் அகன்று - ஒரு காதம் அகலமாகி, சிறப்பு - அஷ்டமங்கலங்களையுடைய, மும்மைப்படிமை - மூன்று ஜினப்பிரதிமைகள், (நிலைக்கொன்றாக விராஜின்ற), முன்னிலையதாகி - மூன்று மேல் நிலைகளையுடையதாகி, வாய்தல் - அக்கோபுரத்தின் வாசற்படியின் இரு பக்கங்களிலும், சோதியுள் - (உண்டாகிய) ஜோதிமயத்தினால், குளித்து - தங்கள் ஜோதியானது மறையப்பட்டு, சோதிடத் தேவர் - ஜோதிஷ்கத் தேவர்கள், காப்ப - துவார பாலகர்களாகிக் காவல் செய்ய, போதரும் - லட்சணம் நிறைந்திரா நின்ற, பதாகை - துவஜக் கொடிகள், சூழ்ந்தது - சூழ்ந்திராநின்றதாக, ஆம் - ஆகும், எ - று. (கரு)

1061. வில்லைஞ்ஞூ றகன்று யர்ந்து வெள்ளியா லியன்று சென்னிச்
சொல்லிய வகையி னாலே சுருங்கிப்பொற் சூட்ட தாகி
வல்லிமுந் நிலையட் டாலைக் கொடியுடை மதிலி னின்ற
சொல்லிய கோபு ரத்தைத் தொழுதுபூச் சிதறிப் புக்கார்.

(இ - ள்) வில்லைஞ்ஞூறு-ஐந்நூறுவில்லு, அகன்று - அடியிலே அகலத்தை யுடையதாகி, உயர்ந்து - * பின்னால் சொல்லப்பெற்ற உன்னதத்தை யுடையதாகி, வெள்ளியால் - வெள்ளியினால், இயன்று - செய்யப்பட்டதாகி, சொல்லியவகையி னாலே - † பின் சொல்லப்பட்ட விதத்தினாலே, சுருங்கி - அடியகலத்தினின்றும் மேலே சுருங்கப்பட்டதாகி, பொற் சூட்டதாகி - பொன்னாலியன்ற தலைக்கட் டையை யுடையதாகி, வல்லி - அளவின் பிரகாரமாகிய, அட்டாலை - மேற்றிண் ணையை யுடைய, முந்நிலை - மூன்று நிலைகளை யுடையதாகி, கொடியுடை - துவ ஜக் கொடிகளையும் உடைய, மதிலின் - உதயதரமென்னும் மதிலிலே, நின்ற - சேர்ந்து வீதிகளின் நேரில் நின்ற, சொல்லிய - முன் பாடலில் சொல்லப்பட்ட, கோபுரத்தை - உதயதர கோபுரத்தை, தொழுது - வணங்கி, பூச்சிதறி - புஷ்பங் களைத்தூவி, புக்கார் - அதனுள் ஆகிய வன பூமியை அடைந்தார்கள், எ-று. (கச)

* இச்சருக்கத்தில் 80 - வது பாடலில் சொல்லப்பட்ட உன்னதமாகியது.

† இச்சருக்கத்தில் 34 - வது பாடலில் சொன்னவகைபோல் சுருங்கப் பெற்றது.

1062. பலநிறம் பயின்ற பூமி பரமனா தறிவு போல
வுலகெலா மடங்கு மேனு மூள்ளிரு காத மாகி
நிலவிய மதிலின் மூலை நின்றகுட் டியங்க ளுன்கிற்
பலவன மாகிப் பைம்பொன் மதிலினைச் சூழ்ந்த துண்டே.

(இ - ள்) பலநிறம் - பலவர்ணங்களினால், பயின்ற - செய்திராநின்ற, பூமி - அந்த வன பூமியானது, பரமனது - ஸ்வாமியினுடைய, அறிவுபோல - கேவல ஞானத்தைப்போல, உலகெலாம் - இவ்வுலகத் துள்ளவர்களெல்லாம், அடங்குமேனும் - வந்தடங்கினாலும், உள் - அதனுள்ளகலமானது, இருகாதமாகி - இரண்டுகாத விஸ்தீர்ணத்தை யுடையதாகி, மதிலின் - அப்பூமியின் வெளிப்புறத்தில் உதயதாமமென்னும் மதிலையும் உட்புறத்தில் பிரீதிதரம என்னும் மதிலையு முடையதாய், நிலவிய - பிரகாசித்த, மூலை - அப்பூமியின் வீதிவழிகள் தவிர மூலைகளாகிய சதுஷ்கோணங்களிலும், நின்ற - நடுவில் நின்ற, குட்டியங்கள் - மேடைகள், நான்கில் - (கோணத்துக் கொன்றாக) நாலாகிய அம்மேடைகளையும் உடையதாகி, பைம் - பசுமை பொருந்திய, பொன் - பொன்னாலாகிய, மதிலினை - ப்ரீதிதரமென்னும் மதிலையும், சூழ்ந்தது - பரிவேஷ்டித்ததாகி, பல - பலவாகிய விருக்ஷங்களையுடைய, வனமாகி - வன பூமியென்னும் பெயருடையதாகி, உண்டு - நாலாம் பிரகாரமாகி யிராநின்றது, எ - று. (கரு)

1063. குட்டியத் திரும ருங்குங் கோபுரத் துயர மாகி
யெட்டுள தூபை நின்ற விஞ்சிக்கு ளெட்டே யாகும்
வட்டவெண் குடைய சேதி மரங்களெட் டிவற்றைச் சார்ந்த
வெட்டுள வதனுக் காதி பாதவ மிவற்றி னிப்பால்.

(இ - ள்) குட்டியத்து - (அந்தவன பூமியின் கோணத்தில் நடுவிலிரா நின்ற) மேடைகளினுடைய, இருமருங்கும் - இரண்டு பக்கங்களிலும், கோபுரத் துயரமாகி - முதல் கோபுரத்தினுடைய உயரத்தையுடையதாகி, எட்டுள - எட்டா யிராநின்ற, தூபை - ஸ்தூபைகளானவை, நின்ற - நிலைபெற்றுள்ளன, இஞ்சிக்குள் - மதிலுக்குள் இராநின்ற அவ்வன பூமியில், எட்டேயாகும் - மொத்த ஸ்தூபைகள் எட்டேயாகி யிராநின்றன, (அதாவது: மேடை ஒன்றுக்கு இரண்டு ஸ்தூபைகளாகி, நாலு கோணத்துள்ள மேடைகளுக்கும் எட்டு ஸ்தூபைகளாகும்), வட்டம் - வட்டமாகிய, வெண் - வெளுப்பாகிய, குடைய - சத்திரத்திரயத்தை மேலேயுடைய, சேதிமரங்கள் - (ஜிநபிம்பங்களையுடைய) சைத்ய விருட்சங்கள், இவற்றை - இந்த ஸ்தூபைகளை, சார்ந்த - சேர்ந்தவைகளாய், எட்டுள - எட்டாகி யிராநின்றன (அதாவது: அவ்வன பூமியில் ஒரு கோணத்திலிரண்டு விருட்சமாக நாலு கோணத்திலும் சேர்த்து எட்டுச் சைத்ய விருட்சமாகும்), இவற்றினிப்பால் - அவ்வன பூமியில் இந்த சைத்ய விருட்சங்களுக்கிப்பால், அதனுக்கு - அவ்விருட் சக்கூட்டத்திற்கு, ஆதி - முதலிலே, பாதவம் - கற்பக விருட்சங்கள், (ஒரு கோணத்திலிரண்டாக), எட்டுள - எட்டுள்ளன, எ - று. (கக)

1064. வீதியைச் சார்ந்து முக்கோண் வட்டநாற் சதுர மாகி
நீதியா னின்ற வாவி யெட்டுமூன் றிவற்றை யெய்தி

யோதிய வகையி ணென்றிற் குளித்துவாய் பூசி யொன்றிற்
போதுகொண் டொன்றின் மண்ணோர் பணிவர்போய்த் தூபை யெய்த.

(இ - ள்) வீதியைச்சார்ந்து - அவ்வனபூமியில் மஹா வீதிகளைச் சேர்ந்து, (அதாவது: வீதியிலிருந்து கோணத்திற்குப் போகின்ற வழியில் பிரதமத்தில்), முக்கோண் - முக்கோணமாகிய, வாவி - தடாகமும், (அதனைப்பியந்தர பாகத்தில்), வட்டம் - வட்டமாகிய தடாகமும் (அதற்குள்ளே), நாற்சதுரமாகி - நாற் சதுர மாகிய தடாகமும் உண்டாகி, நீதியால் - வரிசையாக ஒன்றின்பின் ஞென்ருகி, எட்டு மூன்று - அவ்வனபூமியில் இருபத்துநாலு தடாகங்கள், நின்ற - நிலைபெற் றுள்ளன, ஓதியவகையின் - இப்போது சொன்ன கிரமத்தின விராநின்ற, இவற்றை - இந்தத் தடாகங்களை, எய்தி - அடைந்து, ஒன்றிற்குளித்து-முதலில் இருக்கப்பட்ட முக்கோணமாகிய குளத்தில் ஸ்நானஞ்செய்து, ஒன்றில் வாய்பூசி - வட்டமாகிய மற்றொரு குளத்தில் தந்ததாவனஞ் செய்து வாய் கொப்பளித்துச் சுத்தம் பண்ணிக்கொண்டு, ஒன்றில் போது கொண்டு - நாற் சதுரமாகிய குளத் தில் உள்ள புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு, மண்ணோர் - இப்பூமியிலுள்ள மனுஷ்யர்கள், தூபையெய்த - ஸ்தூபைகளையடைந்து, பணிவர் - வணங்கு வார்கள், எ - று. (கஎ)

1065. திரளரைக் கோச மோங்கிச் சினைகளெண் டிசையு மோடிப்
பருதியோர் கோச மாகிப் பயின்றகற் பகத்த சோலைக்
கிருமடி யுயர்ந்த சோக மேழிலம் பாலை செண்பகந்
திருமலி மாவுங் கீழைத் திசைமுதன் மாம ரங்கள்.

(இ - ள்) திரள் - அடியினின்றும் திரட்சியையுடைய ஸ்தம்பமானது, அரைக்கோசம் ஓங்கி - அரைக்குரோசம் உன்னதமாகி, சினைகள் - அதன் மேல் கிளைகளானவை, எண்டிசையும் - எட்டுத் திக்குகளிலும், ஓடி - சென்று, பருதி - அப்படிச் சென்ற மேற்பரப்புச் சுற்றளவு விஸ்தீர்ணமானது, ஓர் கோசமாகி - ஒரு குரோசமாகி, பயின்ற - உண்டாகிய, கற்பகத்த சோலைக்கு - கற்பக விருக்ஷ சோலைக்கு, இருமடியுயர்ந்த - இரட்டித்த உன்னதமுடைய, அசோகம் - அசோக மரமும், ஏழிலம்பாலை - ஏழிலம்பாலை மரமும், செண்பகம் - செண்பக விருட்சமும், திருமலி - அழகு நிறைந்த, மாவும் - மாமரமும், (ஆக) கீழைத்திசை முதல் - அவ் வன பூமியில் கிழக்குத் திக்கு முதலாகப் பிரதக்ஷிணமாக வரிசைக்கிரமத்தால், மாமரங்கள் - பெரிதாகிய மரங்கள் இராநின்றன, எ - று. (கஅ)

1066. ஆடகத் தியன்றி ரண்டு கோபுரத் தளவுஞ் சென்ற
நாடக சாலை மூன்று நிலையின லெட்டுப பந்தி
யூடுசென் ருடு நல்லார் சோதிடர் தேவி மார்கள்
வீடில பலவு நின்ற வீதியி னிரும ருங்கும்.

(இ - ள்) ஆடகத்து - ஸ்வர்ணத்தினால், இயன்று - செய்யப்பட்டதாகி, வீதியின் - அந்த வன பூமியினுடைய, திக்கு - மஹா வீதிகளின், இருமருங்கும் - இரண்டு பக்கங்களிலும், இரண்டு கோபுரத்தளவுஞ் சென்ற - உதயதர கோபுராப் பியந்தர பாகத்திலிருந்து ப்ரீதிகர கோபுரம்வரையில் செல்லப்பட்டதாகி, மூன்று நிலையினால் - மூன்று நிலைகளால், எட்டுப்பந்தி - ஒவ்வொரு நிலையிலும் எட்டெட்டுப் பந்தியாய் (அதாவது: ரங்கங்களையுடையதாகி), ஊடு சென்று - அதனுள்ளே சென்று, சோதிடர் தேவிமார்கள் - ஜோதிஷ்கத் தேவர்களுடைய தேவியர்களாகிய, நல்லார் - ஸ்த்ரீமார்கள், வீடில - கெடுதலில்லாத, பலவும் - பலப்பிரகாரமான நர்த்தனங்களை, ஆடும் - ஆடுகின்ற, நாடகசாலை - நர்த்தனசாலைகள், நின்ற - இராநின்றன, எ - று. (கக)

1067 பைம்பொனும் மணியி னாலும் குயின்றவே பாத வாதிச்
செம்பொன்மங் கலங்கள் வேதி தோரணஞ் செறிந்த யாவு
மும்பர்தம் முலகும் போக பூமியு மொன்றி னாற்போல்
வம்பணி முலையி னாரு மைந்தரு மலிந்த வெங்கும்.

(இ - ள்) பைம் - பசுமைபொருந்திய, மணியினாலும் - இரத்தினங்களினாலும், குயின்ற - நிருமிக்கிராநின்ற, பாதவாதி - கற்பகவிருட்ச முதலான, யாவும் - (சைத்யவிருட்சம், ஸ்தூபைகள்) இவைகளையெல்லாம், செம் - சிவந்த, பொன் - பொன்னாலாகிய, மங்கலங்கள் - அஷ்ட மங்கலங்களும், வேதி - மதில்களும், தோரணம் - துவார தோரணங்களும், செறிந்த - சேர்ந்திராநின்றன, எங்கும் - அவ்வனபூமியில் எவ்விடங்களிலும், உம்பர்தம் முலகும் - தேவருலகமும், போகபூமியும் - போக பூமியும், ஒன்றினாற் போல் - வந்து பொருந்தினது போல, வம்பணி - இரவிக்கையை யணிந்த, முலையினாரும் - ஸ்தனங்களையுடைய தேவ ஸ்த்ரீயர் கூட்டங்களும் மனுஷ்ய ஸ்த்ரீ கூட்டங்களும், மைந்தரும் - தேவகுமாரர் கூட்டங்களும் மனுஷ்யர் கூட்டங்களும், மலிந்த - நிறைந்திராநின்றன, எ - று.

1068. குயிலிசை முழவ மாகக் கொம்பின்மேற் றும்பி பாட
மயில்நடம் பயிலு மெங்கும் வானவர் மடந்தை நல்லார்
புயலியன் மின்னுப் போலச் சோலைவாய்ப் பொலிந்து தோன்றிக்
கயல்விழி பிறழக் காமங் கனியநின் றாடி னாரே.

(இ - ள்) எங்கும் - இன்னும் அவ்வனபூமியி லெவ்விடங்களிலும், குயில் - குயில்கள் கூவுகின்ற, இசை - ஓசையானது, முழவமாக - மத்தளமாக, கொம்பின்மேல் - பூங்கொத்துக்களின்மே லிராநின்ற, தும்பி - தும்பிக்கூட்டங்கள், பாட - சங்கீதம்போலப்பாட, மயில் - மயில்களானவை, நடம்பயிலும் - நர்த்தனஞ் செய்வதுபோல் சிறகு விரித்தாடா நிற்கும், வானவர் மடந்தை நல்லார் - தேவ குமாரியர்கள், புயலியல் - மேகத்திற் றோன்றுகின்ற, மின்னுப்போல் - மின்னற்

கொடிகளைப் போல், சோலைவாய் - தோப்புகளில், பொலிந்து-அழகாக, தோன்றி - வந்து தோன்றி, கயல் - கெண்டைமஸ்யம் போன்ற, விழி - கண்களானவை, பிறழ - சுழலும்படி, காமங்கனிய - பார்ப்பவர்களுக்கு இச்சை அதிகரிக்கும் படியாக, நின்று ஆடினார் - நின்று நர்த்தனம் புரிந்தார்கள், எ - று. (உக)

1069 கற்பக மடநல் லார்கள் காமனைச் செறிவ தேபோற்
கற்பக மரத்தைக் காம வல்லிகள் செறிந்த காமர்
விற்பயி லொளியைக் கண்டு வேதிகை யென்று மீள்வார்
தப்புவர் நடையிற் றாழ்வை யொளியினா லுயரமென்று.

(இ - ள்) கற்பு - பதிவிரதா குணம் பொருந்திய, அகம் - மனத்தை உடைய, மட நல்லார்கள் - இளமையுள்ள அழகிய ஸ்த்ரீமார்கள், காமனை - இச்சையைச் செய்யும் தங்கள் புருஷனை, செறிவதே போல் - சேர்ந்து மனமொத்திருப்பது போல, கற்பக மரத்தை - கற்பக விருட்சங்களை, காமவல்லிகள் - காமவல்லிக்கொடிகள், செறிந்த - சேர்ந்திராநின்றன, (மற்றும் அவ்வனபூமியில்), காமர் - அழகிய, வில் - கிரணத்தினால், பயில் - மிகுதியாகி ஸ்தம்பித்திராநின்ற, ஒளியை - ஜோதித்திரளை, கண்டு - பார்த்து, வேதிகையென்று - மதிலென்று, மீள்வார் - (அங்கே சென்றவர்கள்) திரும்புவார்கள், தாழ்வை - பள்ளமாகிய தலத்தை, ஒளியினால் - பிரகாசத்தினால், உயரமென்று - இது மேடான பூமியென்று கருதி, நடையில் - அடி பெயர்த்து நடப்பதில், தப்புவர் - தவறிப் பிரமிப்பார்கள், எ - று. (உஉ)

1070. மதுகரந் தும்பி வண்டு வண்சிறைப் பறவை மற்றும்
பொதியவிழ் போதின் மீது போர்த்தன புகழ லாற்றா
மதியொளி பரந்த பூமி விதியுளி கிடந்த வல்லிப்
பொதுளிய போதின் மீது போர்த்தகண் வாங்க லாற்றா.

(இ - ள்) மதியொளி - சந்திரகிரணம்போல, பரந்த - விசாலித்த, பூமி - அவ்வன பூமியில், விதியுளி - கிரமத்தையுடையதாய், கிடந்த - சேர்ந்திராநின்ற, பொதியவிழ் - முறுக்கவிழ்ந்து மலர்ந்திரா நின்ற, போதின் மீது - புஷ்பங்களின் மேல், மதுகரம் - தேனினங்களும், தும்பி - தும்பிக்கூட்டங்களும், வண்டு - வண்டினங்களும், வண் - வளப்பமாகிய, சிறை - இறகுகளையுடைய, பறவை - பக்ஷிகளும், மற்றும் - மற்ற ஜீவின முதலானவைகளும், போர்த்தன - நிறைந்திராநின்றன, புகழல்-அதைப் புகழ்ச்சியாக வர்ணிப்பது, ஆற்றா-முடியாது, (மேலும்), வல்லி - காமவல்லியாதிக்கொடிகளில், பொதுளிய - நெருங்கிமலர்ந்த, போதின் மீது - பூக்களின் மேலே, போர்த்த - பார்க்கப்பெற்ற, கண் - கண்களை, வாங்கல் - திருப்பி வாங்குதல், ஆற்றா - முடியாது, எ - று. (உ௩)

1070. (a) வனமிது விதியி னெய்தி வாவியைச் சார்ந்து மைந்த
ரினமல ரேந்திச் சொன்ன வெட்டெட்டு மரத்தி னன்கு
சினைதொறுஞ் செறிந்த சீய வணைமிசைத் தேவர் கோமா
னனையபொற் படிமைத் தானை யருச்சித்துப் பிரிதி சேர்ந்தார்.

(இ - ள்) விதியின் - கிரம வரிசையையுடைய, வனம் இது - இந்த வன பூமியை, மைந்தர் - மேருமந்தர குமாரரிருவரும், எய்தி - அடைந்து, வாவியை - தடாகங்களை, சார்ந்து - வரிசைப்படி யடைந்து, இனமலர் - நல்ல இனங்களான புஷ்பங்களை, ஏந்தி - தரித்து, சொன்ன - அவ்வன பூமியில் சொல்லப்பட்ட,

எட்டெட்டமரத்தின் - எட்டு எட்டாகிய மரங்களில் (அதாவது: கற்பக விருக்ஷம் எட்டு சைத்ய விருக்ஷம் எட்டாக இராநின்றவைகளில்), நான்கு சினை தொறும் - சைத்ய விருக்ஷங்களினுடைய நாலு கிளைகள் தோறும், செறிந்த - சேர்ந்திரா நின்ற, சியவணை மிசை - ஸிம்மாசனத்தின் மேலே யிராநின்ற, தேவர் கோமானனைய - ஜினேந்திரனுக் கொப்பாகிய, பொன் - பொன்னாலாகிய, படிமை - ஜினப்பிரதிமைகளையும், தூபை - ஸ்தூபைகளிலுள்ள ஜின பிம்பங்களையும், அருச்சித்து - அர்ச்சனை செய்து, பிரிதி சேர்ந்தார் - (அவ்வன பூமியின் எல்லைப் பிரமாண முடிவில் அப்பியந்தர பாகத்திலுள்ள) பிரிதிதரமென்னும் மதிலை யடைந்தார்கள், எ - று. (௨௩-௨)

1071. இருநிதி யிருந்த சென்னி யிமையம்வந் திறைவன் பாதம்
மருவிய தென்னச் செம்பொன் மயமதாய் வெள்ளி சூடி
யுருமலி யுதயத் திற்கு மிருமடி யாகும் பிரிதி
தரமெனு மிஞ்சி யைந்து நிலையவட் டாலைத் தாகும்.

(இ - ள்) இருநிதி - சங்க நிதி பத்மநிதித்தலைவர்களாகிய தேவர்கள், இருந்த - தங்கியிராநின்ற, சென்னி - சிகரத்தையுடைய, இமையம் - ஹிமவான் பர்வதமானது, வந்து - இவ்விடத்தில் வந்து, இறைவன் பாதம் - ஜினேந்திரனுடைய பாதத்தை, மருவியதென்ன - சேர்ந்ததை யொப்ப, செம்பொன் மயமதாய் - சிவந்த ஸ்வர்ணமயமாகி, வெள்ளி சூடி - வெள்ளியாலாகிய தலைச்சூட்டையுடையதாகி, உருமலி - ரூபத்தினால் நிறைந்த, உதயத்திற்கும் - உதயதரமென்னும் மதிலுக்கும், இருமடியாகும் - இரட்டித்த உன்னதமும் அகலமுமுள்ளதாகும், பிரிதிதரமெனும் இஞ்சி - ப்ரீதிதரமென்னும் மதிலானது, ஐந்து நிலைய - ஐந்து நிலைகளை யுடையவைகளாகிய, அட்டாலைத்தாகும் - அட்டாலயங்களையுடையதாகும், எ - று. (௨௪)

1072. கொடியிடைக் கோபு ரங்க ளோங்கின நான்கு காத
மிடிமுர சியம்ப வானோ ரியற்றுமஞ் சிறப்பை யெய்தும்
படிமைக ளிருந்த பஞ்ச நிலங்களை யுடைய பைம்பொற்
குடமுகம் பதுமந் தேமாங் கொத்தன கோணந் தானே.

(இ - ள்) கோணந்தான் - மூலைகளிலெங்கும், கொடி - துவஜக்கொடிகளால், யிடை - நெருங்கி அழகுடைய, கோபுரங்கள் - ப்ரீதிதர மென்னும் கோபுரங்கள் நாலும், நான்குகாதம் - நாலுகாதம், ஓங்கின - உன்னதமாயின, இடி - இடிப்போல சர்ஜிக்கின்ற, முரசு - பேரிகைகள், இயம்ப - சப்திக்க, வானோர் - தேவர்கள், இயற்றும் - செய்கின்ற, அம் - அழகிய, சிறப்பை - பூஜையை, எய்தும் - அடைகின்ற, படிமைகள் - ஜினப்ரதிமைகள், இருந்த - இராநின்ற, பஞ்ச நிலங்களையுடைய, ஐந்து நிலைகளையுடையதாகிய, (சிகரத்திலே), பைம்பொன் - பசுமை பொருந்திய பொன்னாலாகிய, குடம் - கடமும், முகம் - அக்கடத்தின் முகமும், பதுமம் - பொன்னாலாகிய தாமரை புஷ்பமும், தேமாங்கொத்தன - அப்பதுமமலரின் அடியில் அழகிய மாவிலைக் கொத்துமுடையனவாய் விளங்கும், எ - று. (௨௫)

1073. கோபுரத் திரு மருக்குங் குடவரை யனைய தோளார்
பாகரப் பிரபை போலப் படரொளிப் பவண வேந்தர்
நாகருக் கிறைவர் கோமா னலம்புகழ்ந் தலங்க லார்ந்த
வேதிரம் பிடித்துக் காக்கும் புரத்துளார் கொடியின் வீதி.

(இ - ள்) கோபுரத்து - அக்கோபுரத் துவாரத்தின், இருமருங்கும் - இரண்டு பக்கத்திலும், குடவரையனைய - அஸ்தங்கிரி பர்வதத்திற்குச் சமான மாகிய, தோளார் - புஜத்தையுடையவர்களாகிய, பாகரப்பிரபை போல - சூர்யப் பிரபைபோல, படரொளி - மிகுதியான ஒளியை வீசுகின்ற, பவண வேந்தர் - பவண தேவர்களுக்கு அதிபதியாகிய, சமர, வைரோசன ரென்கிற பவணேந்திரர் கள், நாகருக்கு இறைவர் - தேவேந்திரர்களுக்கெல்லாம், கோமான் - நாதனாகிய ஜினேந்திரனுடைய, நலம் - அழகிய குணாதிசயங்களை, புகழ்ந்து - துதித்துக் கட்டியஞ் சொல்லிக்கொண்டு, அலங்கலார்ந்த - மாலைகளால் அலங்கரித்திராநின்ற, வேதிரம் - பிரம்பை, பிடித்து - பிடித்துக்கொண்டு, காக்கும் - காவல் செய் கின்ற, புரத்து - அக்கோபுரத்து, உள் - அப்பியந்தரத்தில், ஆர் - நிறைந்திரா நின்ற, கொடியின் - துவஜங்களையுடைய, (துவஜ பூமியாகிய ஐந்தாம் பிரா காரத்தின்), வீதி - மஹாவீதிகளாகும், எ - று. (உசு)

1074. ஐந்துவிற் சதுர மாகி யாயிரத் தெண்ப தாய
பந்தியின் வருக்க மாய மண்டலம் பத்தின் பாக
மிங்கிவை திரட்டி யேக திக்கினுக் காமி வற்றை
மங்கலந் தன்னின் மாற வந்தவப் பந்தின் மீது.

(இ - ள்) (ஐந்தாம் பிரகாரமாகிய வப்பூமியில் மஹா வீதி போகக் கோணங் கள் நாலில் ஒவ்வொரு கோணத்திலும்), ஐந்துவிற் சதுரமாகி - ஐந்துவில் சதுரத் தோடு கூடி, ஆயிரத் தெண்பதாய - ஆயிரத்தெண்பதாகிய, பந்தியின் வருக்கமாய- (ஆயிரத்தெண்பது ஆயிரத்தெண்பது) பந்தி வரிசைகளையுடைய, மண்டலம் - மேடைகள், பத்தின்பாகம் - பத்தில் பாதியாகிய ஐந்துவில் உன்னதமாம், இங் கிவை - இங்கு இந்த மேடைகளை, திரட்டி - மொத்தக் கணக்காகச் சேர்க்க, (வந்த சங்கியைகளாகிய, பதினொருலக்ஷத்து அறுபத்தாறாயிரத்து நானூறு மேடை கள்), ஏகதிக்கினுக்கு - ஒரு கோணமாகிய பூமியில், ஆம் - ஆகும், இவற்றை-இத் தொகையை, மங்கலந்தன்னில் - முக்கிய மங்கலத்தின் தொகையாகிய நாலினால், மாற - பெருக்க, வந்த - வரப்பட்ட சங்கியைகளாகிய, அப்பந்தின் மீது - அந்நாலு கோணத்திலுமாகிய திரண்ட கணக்காகிய, நாற்பத்தாறு லக்ஷத்து அறுபத்தையா யிரத்து அறுநூறாகிய மேடைகளின்மேல், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (உஎ)

1075. மூன்றுவிற் சதுர மாகி முழுமணிப் பீடத் துச்சி
யூன்றிவில் லிரண்டு சுற்று யுயர்ந்திரு காதம் பைம்பொ
னீன்றவே போன்று கண்ணி னெழின்மணி யிருந்த தண்டி
ளுன்றபா லிகையி னுச்சிப் பலகைமேற் பதாகை யாமே.

(இ - ள்) மூன்றுவில் சதுரமாகி - மூன்றுவில் சதுரத்தை யுடையதாகி, முழுமணி - முதிர்ந்த குணமுடைய ரத்தினத்தாலாகிய, பீடத்து-பீடத்தினுடைய, உச்சி - மேலே, ஊன்றி - நடப்பட்டதாகி, வில்லிரண்டு சுற்றாய் - இரண்டுவில் சுற்றளவுள்ளதாய், இருகாதம் - இரண்டுகாதம், உயர்ந்து - உன்னதமாகி, பைம்பொன் - பசுமை பொருந்திய பொன்னினாலே, ஈன்றவேபோன்று - உற்பத்தி செய்யப்பட்டவை போல, கண்ணின் - பார்க்கப்பட்டவர்களுடைய கண்களி லுள்ள, எழில் - அழகுபிரகாசியா நின்ற, மணி - கண்மணிகள், இருந்த-தங்கிய, (அதாவது: பார்த்தகண்கள் வேறொன்றிற் செல்லாத வழகுடைய), தண்டின் - ஸ்தம்பத்தின் தலையிலே, ஆன்ற - பெரிதாகிய, பாலிகையின் - பாலிகையி னுடைய, உச்சி - உச்சியிலே, பலகை மேல் - அமைக்கப்பட்ட பலகையின் மேல், பதாகை - துவஜக் கொடிகள், ஆம் - ஆகும், எ - று. (உஅ)

1076. சிங்கமா லியானை மாலை சிகியன்னங் கருட னேறு
பங்கய மகர மாழிப் பதிகளாம் பதாகை பத்தும்
பொங்கியா காய மென்னும் புணரிவெண் டிரைகள் போலும்
மங்கலக் கிழவன் கோயில் மதிலைச்சூழ்ந் தாடு நின்றே.

(இ - ள்) சிங்கம் - சிங்கமும், மால் - பெரிதாகிய, யானை - யானையும், மாலை - பூமாலையும், சிகி - மயிலும், அன்னம் - ஹம்ஸமும், கருடன் - கருடனும், ஏறு - விருஷபமும், பங்கயம் - தாமரை புஷ்பமும், மகரம் - மகர மஸ்யமும், ஆழி - சக்கரமும், (ஆகிய இவைகள்), பதிகளாம் - லாஞ்சனமாகவுடைய, பதாகை பத்தும் - இந்த தசவிதமான துவஜங்களும், (ஒவ்வொரு ஸ்தம்பங்களின் பலகையின் மேலும்), பொங்கி - பெரிதாகி, ஆகாயமென்னும் - ஆகாசமென்கின்ற, புணரி - ஸமுத்திரத்திற்கு, வெண் - வெளுப்பாகிய, திரைகள் போலும் - அலைகளைப்போலும், மங்கலக்கிழவன் - பிரதமமங்கலத்திற்கு முக்கியனான ஜினேந்திர னுடைய, கோயில் - ஸமவ ஸரணத்தில், மதிலை - இனிச்சொல்லப்படும் கல் யாண தரமென்னும் மதிலை, சூழ்ந்து - பரிவேஷ்டித்து, நின்று - நிலைபெற்று, ஆடும் - அசைவனவாம், எ - று. (உகு)

1077. முடிமணி முத்த மாலை நான்றுகிண் கிணிகள் மொய்த்த
கொடிநிரை கோடி நான்கோ டறுபத்தா றிலக்கங் கோமா
னுடையன வைம்பத் தாறு யிரமுன்றி லுலாவு கின்ற
படியிது காத மூன்றாய்ப் பயோதிபோற் சூழ்ந்த தாமே.

(இ - ள்) முடி - அந்த த்வஜஸ்தம்பங்களினது சிகரத்தினின்றும், முத்தம்-முத்துமணிகளாலாகிய, மாலை - மாலைகள், நான்று - தொங்கி, கிண்கிணிகள் - சிறுசதங்கைகள், மொய்த்த - நெருங்கிய, கொடி நிரை - த்வஜ ஸமூகங்கள், கோடி நான்கோடு - நாலுகோடியோடு, அறுபத்தாறிலக்கம் - அறுபத்தாறுலக்ஷத்து,

ஐம்பத்தாருயிரம்-ஐம்பத்தாருயிரம், கோமானுடையன - ஸ்வாமியினுடையனவாய், முன்றில் - அழகிய ஐந்தாம் பிரகாரமாகிய முற்றத்தில், உலாவுகின்ற - அசையா நின்றன, படியிது - இந்த த்வஜ பூமியானது, காதமூன்ருய் - மூன்று காதமகல முடையதாகி,பயோதிபோல் - ஸமுத்திரம் போல, சூழ்ந்ததாம் - சூழ்ந்திராநின்ற தாகும், எ - று. (௩௦)

1078. பலமணி பயின்ற பத்தி பித்திநற் படிகம் பைம்பொன்
னிலேகளைந் தாகி நின்ற நாடக சாலே தோறும்
முலேயும்மே கலேயும் முத்த மாலேயும் குலாவ மின்போற்
பலநடம் பயிலும் மாதர் பவணர்தம் பவழ வாயார்.

(இ - ள்) பல - பலவாகிய, மணி - இரத்தினங்களால், பயின்ற - செய்யப் பட்ட, பத்தி - பந்தி வரிசைகளேயுடைய, பித்தி - சுவர்கள், நல் - நன்மையாகிய, படிகம் - ஸ்படிகத்திஞலும், பைம் - பசுமை பொருந்திய, பொன் - பொன் ஞலும், நிலேகள் - நிலேகளானவை, ஐந்து - ஐந்தாகவும், ஆகி நின்ற - ஆகியிரா நின்ற, நாடகசாலேதோறும் - இந்த துவஜ பூமி வீதியில் இரண்டு பக்கத்திலு முள்ள நர்த்தன சாலேகளில், முலேயும் - ஸ்தனங்களும், மேகலேயும் - மேகலா பரணங்களும், முத்தமாலேயும் - முத்து மாலேகளும், மின் போல் - மின்னலேப் போல, குலாவ - பிரகாசிக்க, பல - பலவாகிய, நடம் - நர்த்தனங்களே, பயிலும் - செய்யாநின்ற, பவணர்தம் - பவண தேவர்களுடைய, மாதர் - ஸ்த்ரீயர்களாகிய, பவழவாயார் - பவளக்கொடிபோல் சிவந்த வாயையுடைய நர்த்தகிகளாவர், எ - று.

1079 புழைக்கைமா வீட்ட மோளி யாளானம் புணர்ந்த வற்றின்
தழைச்செவி போல வாடும் பதாகையாந் தாணி தன்னே
மழைக்கைமா வேந்தர் வந்து மங்கல மாபி னெய்திக்
குழைத்தெழும் பொழிலேச் சூழ்கல் யாணகோ புரத்தைச் சார்ந்தார்.

(இ - ள்) புழைக்கை - துவாரம் பொருந்திய துதிக்கையையுடைய, மாவீட்டம் - யானே சமூகங்களானவை, ஒளி - ஒழுங்காகிய, ஆளானம் - கட்டுத்தறிகளே, புணர்ந்து - வரிசை வரிசையாகச் சேர, (அவ்விடத்தில் ஆடுகின்ற), அவற்றின் - அவ்வியானேகளின், தழை - விசாலித்த, செவிபோல - காதுகள்போல, ஆடும் - அசைகின்ற, பதாகையாம் - துவஜக் கொடிகளேயுடைய, தாணிதன்னே - துவஜ பூமியை, மழை - மேகத்தைப்போன்ற (அதாவது: மேகமானது மழையைச் சொரிவதுபோல தியாகம் கொடுக்கும்படியான), கை - கைகளேயுடைய, மா - பெருமை பொருந்திய, வேந்தர் - மேருமந்தரரென்கிற வாசகுமாரர்கள், மங்கலம் - மங்கலமாக (அதாவது: தங்களுக்கு பாபவிநாசமாகவும் புண்ணியலாபமாகும்படி யாகவும்), மாபின் - கிரமத்திஞல், எய்தி - அடைந்து, (அதனப்பியந்தரத்திலிரா நின்ற), குழைத்து - தளிர்த்து, எழும் - உயர்ந்திராநின்ற, பொழிலே - கற்பக

விருட்ச பூமியை, சூழ் - சூழ்ந்ததாகிய, கல்யாண கோபுரத்தை - கல்லியாணதர மென்கிற கோபுரத்தையும் மதிலையும், சார்ந்தார் - அடைந்தார்கள், எ - று. (ருஉ)

1080. முதனடு விறுதி கோச மூன்றரை யரைய கன்றிட்
டுதயத்தின் முத்தி யோங்கித் தமனியத் தியன்று நானு
விதமணி யணிந்து சென்னி மிடைந்தவெண் கொடிய தாகி
மதிலின தகத்தட் டாலை மலிந்தவேழ் நிலத்த தாமே.

(இ - ள்) (அந்தக் கல்யாணதரமென்கிற மதிலானது), முதல் - அடியில், கோசமூன்று - மூன்று குரோசமும், நடு - மத்தியில், அரை - அம்மூன்றில் பாதியாகிய ஒன்றரைக் குரோசமும், இறுதி - கடையில் (அதாவது : தலைப்பில்), அரை - ஒன்றரையில் பாதியாகிய முக்கால் குரோசமும், அகன்றிட்டு - அகலமுடையதாகி, உத்யத்தின் - உதயதரமதிலினுடைய உன்னதத்திற்கு, முத்தி யோங்கி - மூன்று பங்காகிய உன்னதமுடையதாகி, தமனியத்து - ஸ்வர்ணத்தினுல், இயன்று - செய்யப்பட்டதாகி, நானுவிதமணி - பலவிதமான ரத்தினங்களினுல், அணிந்து - அலங்கரித்துச் செய்த தலைச் சூட்டையுடையதாகி, சென்னி - தலையிலே, மிடைந்த - நெருங்கிய, வெண் - வெளுப்பாகிய, கொடிய தாகி - துவஜக்கொடிகளையுடையதாகி, மதிலினதகத்து - கல்யாண தரமென்கிற அம்மதிலினுள், அட்டாலை - அட்டாலையங்களினுல், மலிந்த - நிறைந்த, ஏழ் நிலத்ததாம் - ஏழ்நிலவட்டாலையங்களுடையதாகும், எ - று. (ருரு)

1081. பத்தரைக் காத மோங்கிப் பைம்பொற்கோ புரங்க ணான்கு
முத்தமத் துறக்க மேழை யொத்தவேழ் நிலத்த வாகிப்
பத்துநா மத்த வாமேழ் பவத்தொடர் பதனைக் காட்ட
வைத்தகண் ணாடி வாய்தல் மருங்கிரண் டுடைய தாமே.

(இ - ள்) பைம் - பசுமை பொருந்திய, பொன் - பொன்னுலாகிய, கோபுரங்கள் நான்கும் - கல்யாணதரமென்கிற கோபுரங்கள் நாலும், உத்தமம் - மேலான, துறக்கமேழை - ஏழுதேவருலகத்தை, ஒத்த - நிகர்த்த, ஏழ்நிலத்தவாகி - ஏழு நிலைகளையுடையனவாகி, பத்தரைக்காதம் - ஐந்து காதம், ஓங்கி - உயர்ந்து, பத்து நாமத்தவாம் - பாகியபரிக்கிரம் பத்தின்மேலாகிய நாகத்திலுலாகும், வாய்தல் - அக்கோபுரவாசற்படியானது, இரண்டு மருங்கும் - இரண்டு பக்கங்களிலும், ஏழ் பவத் தொடர்பதனை - முன் ஏழ்பவத்தொடர்ச்சிகளை, காட்ட - பார்க்கப்பட்டவர்களுக்குக் காட்டும்படி, வைத்த - ஸ்தாபிக்கப்பட்ட, கண்ணாடி - கண்ணாடிகளை உடையதாமே - உடைத்தாகியதாம், எ - று. (ருச)

1082. உரைத்தநா மத்த வாய புறத்தகத் துதயம் போலப்
பொருத்தகோ புரங்க ணான்கு பெருவிலை மணிய மாலை

தாரத்தினாற் பருத்துத் தாழ்ந்து சணசண வென்னுங் கண்டை
பரித்துநாற் றிசையும் வீதி பருதிபோ லொளிரு நின்றே.

(இ - ள்) உரைத்த - இப்போது சொல்லப்பட்ட, நாமத்தவாய - கல்யாண தரமென்கிற பெயரை யுடைனவாகிய, பெருத்த - பெரியனவாகிய, நான்கு கோபு ரங்கள் - சதுர் கோபுரங்களிலும், புறத்தகத்து - உட்புறத்தில், உதயம்போல - சூர்யோதயம் போல, பெரு விலை - பெரிதாகிய விலை மதிப்பையுடைய, மணி - இரத்தினத்தினாலாகிய, அம் - அழகிய, மாலை - சங்கிலி மாலைகளானவை, தாரத்தினால் - மேலான வேலைத் தாரத்தினால், பருத்து - திரண்டு, தாழ்ந்து - தொங்கப் பட்டதாகி, சணசண வென்னும் - சணச்சணவென்று சப்திக்கும்படியான, கண்டை - சேமங்கலமானது (அதாவது : ஜெயமங்களத்வனியையுடைய வாத்திய மானது), நாற்றிசையும் வீதி - நாலு திசையிலுமுள்ள மஹா வீதிகளில், பரித்து - ஆர்ப்பரித்து, பருதி போல் - சூர்ய பிம்பம்போல, நின்றொளிரும் - நிலை பெற்றுப் பிரகாசிக்கும், எ - று. (௩௫)

1083. உரைத்தகோ புரத்து வாய்தல் காப்பவ ருலக பாலர்
நிரைத்தவேழ் நிலத்த தாய நாடக சாலை யின்கட்
டாரத்தி னிரைத்த மின்னிற் றானடம் புரியு மாதர்
விரித்துநா முரைத்த தேவர் மேவுமா தேவி மாரே.

(இ - ள்) உரைத்த - சொல்லப்பட்ட, கோபுரத்து - இக்கல்யாணதரகோபுரத்தினுடைய, வாய்தல் - வாசற்படிகளினிருபக்கத்திலும், காப்பவர் - காவல் செய்கின்ற த்வாரபாலகர்கள், உலகபாலர் - லோகபாலகதேவரென்று சொல்லப்பட்ட கல்பவாஸி தேவர்களாவர், நிரைத்த - (அக்கோபுரத்தின் அப்பியந்தரத்தில் கற்பக விருட்சபூமியின் வீதிகளிலிருபக்கங்களிலும்) வரிசை பெற்றிராநின்ற, ஏழ்நிலத்த தாய - ஏழு நிலைகளையுடையதாகிய, நாடகசாலையின் கண் - நர்த்தனசாலையில், தாரத்தினால் - மேலான தன்மையால், நிரைத்த - வரிசையாகிய, மின்னின் - மின்னலைப்போல, நடம்புரியும் மாதர் - நடனஞ் செய்கின்ற ஸ்திரீகள், நாம் - நாம், விரித்துரைத்த - இப்பொழுது விரித்துச் சொல்லிய, தேவர் - லோகபாலகதேவர்கள், மேவும் - பொருந்திச் சேர்கின்ற, மா - பெருமை பொருந்திய, தேவிமார் - தேவிமார்களாவர், எ - று. (௩௬)

1084 வடிவுடைப் பீடத் திப்பால் மணித்திரள் மலர்ந்த நான்கு
விடவங்கண் மிக்க திக்கை யளப்பன போன்று சித்தப்
படிமைக ளிருந்த சித்த பாதவம் பயின்ற போதுங்
குடையின்மீ தணிந்து வீதி நான்கினுங் குலாவு மிப்பால்.

(இ - ள்) (அக்கோபுரத்தினுள் கற்பகவிருட்ச பூமியின் சதுர் மஹா வீதிகளிலும்), வடிவுடைப்பீடத்து - பிரதமத்தில் உள்ள நல்ல ரூபம் பொருந்திய பலிபீடத்திற்கு, இப்பால் - அப்பியந்தரத்தில், மணி - அழகிய, திரள் - ஸ்தம்பத்தில், மலர்ந்த - மேனின்று விசாலித்ததாகிய, மிக்க - மிகுதியாகிய, திக்கை - சதுர் மஹா திக்குகளை, அளப்பன போன்று - அளவிடுவனபோல, நான்கு விடவங்கள் - நாலு கிளைகளில், சித்தப்படிமைகள் - ஸித்த பிரதிமைகள், இருந்த - இராநின்றதாகிய, சித்தப்பாதவம் - சித்தாயதன விருட்சமானது, பயின்ற - நிலைபெற்றிருப்பதாம், போதும் - அதன் புஷ்பங்களும், குடையின், சத்திரத்தைப்போல, மீதணிந்து - அப்பிரதிமைகளின் சிரமேலணியப்பட்டு, வீதி நான்கிலும் - நாலு மஹா வீதிகளிலும், குலாவும் - பிரகாசிக்கும், இப்பால் - அகணப்பியந்தர பாகத்தில், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௬௭)

1085. அஞ்சுட ருமிழுந் தூபை யறிவனா லயத்தைச் சூழ்ந்த
மஞ்சுற நிமிர்ந்து மாழைத் தலங்கள்பன் னிரண்ட வாகி
யஞ்சன மலையைச் சூழ்ந்த ததிமுக மனைய நான்கா
யிஞ்சிகோ புரங்க ளாற்பா லுடையவாந் தடங்க ணான்காம்.

(இ - ள்) அறிவன் - கேவல ஞானத்தையுடைய பகவானுடைய, ஆலயத்தை - இருப்பிடமாகிய கோயிலை, சூழ்ந்த - பரிவேஷ்டித்திராநின்ற, இஞ்சி கோபுரங்கள் - கல்யாணதர மதில் கோபுரங்களினுடைய, நாற்பால் - நான்கு மஹா திக்குகளிலாகிய ஆறும் பிராகாரமாகிய கல்பகவிருட்ச பூமியின் வீதிகளில், அம் - அழகாகிய, சுடர் - பிரகாசத்தை, உமிழும் - சொரிகின்ற, தூபை - ஸ்தூபைகளானவை, மஞ்சுற - மேகமண்டலத்தைப் பொருந்த, நிமிர்ந்து - உயர்ந்து, மாழை - ஸ்வர்ணத்தினாலாகிய, தலங்கள் - ஸ்தலங்களானவை (அதாவது : நிலைகள்), பன்னிரண்டவாகி - பன்னிரண்டையுடையனவாகி, அஞ்சனமலையை - நந்தீஸ்வரத்வீபத்தில் இராநின்ற அஞ்சன பர்வதத்தை, சூழ்ந்த - சூழ்ந்திராநின்ற, ததிமுகமனைய - ததிமுகபர்வதத்திற்குச் சமானமாகிய, நான்காயுடையவாம் - நாலாகியிரா நின்றவனவாம், தடங்கள் நான்காம் - மற்றும் அந்த வீதிகளில் வீதிக்கு ஒன்றாக நாலு தடாகங்கள் உள்ளனவாம், எ - று. (௬௮)

1086. நந்தைபத் திரைச யந்தை பூரநா மத்த வாவி
வந்தமா திக்கி னான்கில் வாரியைத் தெளித்த போழ்தின்
முந்தைய பிறப்பை யோர்வார் முன்பினேழ் பவத்தைக் காண்பார்
சிந்தைசெய் தவற்றைப் பார்க்கத் தெளிக்கநோ யாவுந் தீரும.

(இ - ள்) வந்த - அந்தக் கல்பக விருட்ச பூமியில் வரப்பட்ட, மாதிக்கில் - மஹாதிக்கு வீதிகளில் வரிசையாக பூர்வதிசையில், நந்தை - நந்தையென்றும்,

பத்திரை - (தக்ஷிணதிசையில்) பத்திரை யென்றும், சயந்தை - (அபரதிசையில்) ஜயந்தை யென்றும், பூரம் - (உத்தரதிசையில்) பூர்ணை யென்றும், நாமத்த - பெயரையுடையனவாகிய, வாவி - தடாகங்களாகும், நான்கில் - அந்நான்கு தடாகங்களில், வாரியைத் தெளித்தபோழ்தின்-முதல் தடாக ஜலத்தை மேலே தெளித்துக்கொண்டபோது, (அவ்வாறு தெளித்துக்கொண்டவர்கள்), முந்தைய பிறப்பை - பூர்வ ஜன்மத்தை, ஓர்வார் - அறிவார்கள், முன்பின் ஏழ்பவத்தைக் காண்பார் - (இரண்டாவது தடாக ஜல ஸம்பர்க்கத்தால்) முன் பின்னாகிய ஏழ்பவ ஜாதியைத்தெரிந்து கொள்ளுவார்கள், பார்க்க - மூன்றாந்தடாகோதகத்தைப் பார்த்த மாத்திரத்தில், சிந்தை செய்தவற்றை - நினைத்தவற்றை யெல்லாம், காண்பார் - பிரத்தியக்ஷமாகத் தோன்றக் காண்பார்கள், தெளிக்க - (நாலாந் தடாக நீரைத்) தெளித்துக்கொள்ள, நோய்யாவும் - சகல வியாதிகளும், தீரும் - நீங்கும், எ - று.

'காண்பார்' என்பது இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. (௩௯)

1087. வாசநின் றறாத சோலை மதிலின தகத்து மாண்ட
வோசனை யகன்ற தேனு முலகெலா மடங்கி னாலு
மாசைபோ லகன்று தோன்று மருமணி நிலத்த தாகி
மாசிலா மணியி னாய மரங்களாற் செறிந்த தெங்கும்.

(இ - ள்) மதிலினது - கல்யாணதர மதிலினுடைய, அகத்து - அப்பியந்தர பாகத்தில், வாசம் - பரிமளமானது, நின்று - நிலைபெற்று, அறாத - நீங்காத, மாண்ட - மாட்சிமையுடைய, சோலை - கற்பகச் சோலையாகிய ஆறும் பிராகாரமானது, ஓசனை யகன்றதேனும் - நாலுகாத விஸ்தீர்ணமுடையதா யிருந்தும், உலகெலாம் - இந்தத் திரிலோகத்தும் பவ்வியத்துவமுள்ள தேவர் மனிதர் விலங்குகள் எல்லாம் வந்து, அடங்கினாலும் - சேர்ந்தாலும், ஆசைபோல் - ஆசையைப்போல, அகன்று - விசாலித்து, தோன்றும் - தோன்றுகின்ற, அரும் - அரிய, மணி - இரத்தினங்களாலாகிய, நிலத்ததாகி - பூமியையுடையதாகி, எங்கும் - எவ்விடங்களிலும், மாசிலா - குற்றமில்லாத, மணியின் - இரத்தினங்களினால், ஆய - ஆகிய, மரங்களால் - விருட்சங்களால், செறிந்தது - நிறைந்தது, எ - று. (௪0)

1088. பலநிறம் பயின்ற போதும் பலங்களுஞ் செறிந்த சாகை
நிலைதளர்ந் தொசியக் காணா நிறையவஞ் சிறைக ளீண்டி
மலர்நிறைந் திருந்த மட்டை வாங்கினாற் றாங்கப் பாரா
மிலையெனு மிலாத வர்க்கு விருந்தெழுந் துண்ட தேனே.

(இ - ள்) (அம்மரங்களில்), பல - பலவாகிய, நிறம் - வர்ணங்களை, பயின்ற - உடைத்தாகிய, போதும் - புஷ்பங்களும், பலங்களும் - பழங்கள்

காய்களும், செறிந்த - நிறைந்த, சாகை - கிளைகள், நிலை - நிலையில்லாமல், தளர்ந்து - தாழ்ந்து, ஒசிய - வளைய, காணு - பார்த்து, அம் - அழகிய, சிறைகள் - வண்டுகள், நிறைய - முழுதும், ஈண்டி - நெருங்கி, மலர் - புஷ்பங்களில், நிறைந்திருந்த - நிறைவு பெற்றிருந்த, மட்டை - மதுவை, வாங்கினுல் - நாம் உண்டு விடுவோமேயானுல், தாங்கப்பாராம் - கிளைகள் தாங்குதலேப்பார்க்கமாட்டோம், (என்று எண்ணி) இருந்து - அப்பூக்களின் மீது உட்கார்ந்து, தேனை - மதுவை, உண்ட - பருகின, எழுந்து - கிளம்பி, (அக்கிளைகளும் பாரம் நீங்கி உயரக்கிளம்பி), இலாதவர்க்கு - வறுமையினுல் பொருளில்லாமல், (தன்னிடத்தில் வந்து யாசித்தவர்களுக்கு), இலை யெனு - என்னிடத்தில் ஒன்றுமில்லை என்று கையைத் தூக்கிக்காட்டியதற் கொப்பாயிராநின்றது, எ - று. (௬௧)

இலாதவர்க்கு + இருந்து; இலாதவர்க்கு விருந்து என வகர உடம்படு மெய் பெற்றது. "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்" என்னுஞ் சூத்திரத்தில் கெடும் என்னுது ஓடும் என்றமையான், "இ ஈ ஐ வழியவ்வும் ஏனை உயிர் வழிவவ்வும் என்னுஞ் சூத்திரப்படி வகர உடம்படு மெய்பெற்றதென்க. "வெண்ணிலா மதியந்தன்னை விரிசடை மேவவைத்து - வுண்ணிலாப் புகுந்து" என்முர் பிறரும்.

1089. சிறப்பொடிங் கடைந்த தேவர் செறிபொழி லதனைச் சேர்ந்தாற்
றுறக்கத்தை மறப்ப ரென்முற் சொல்லுவ தினியென் னன்றிப்
பிறப்பெறிந் திருந்த வீரன் பெருமையைச் சிறிது காட்ட
விறப்பவு முயர்ந்த தேவ ராசனு லியன்ற தன்றே.

(இ - ள்) இங்கு - இவ்விடத்தில் இந்த ஸமவஸரணத்தில், சிறப்பொடு - பூஜாத்திரவியங்களோடு கூடி, அடைந்த - சேர்ந்த, தேவர் - தேவர்கள், செறி - மரங்களால் நெருங்கிய, பொழிலதனை - கற்பக விருட்ச பூமியை, சேர்ந்தால் - அடைந்தால், துறக்கத்தை - தேவருலகத்தை, மறப்பர் - மறந்து விடுவார்கள், என்முல் - என்று சொன்னுல், இனி - இன்னமும், சொல்லுவது - அப்பூமியை வர்ணித்துரைப்பது, என் - யாது?, அன்றி - அதுவல்லாமலும், பிறப்பு - ஜனன மாணங்களை, எறிந்திருந்த - கெடுத்திராநின்ற, வீரன் - அனந்த வீரியனுகிய ஜினேந்திரனுடைய, பெருமையை - மஹாத்மிய குணத்தை, சிறிது - கொஞ்சம், காட்ட - யாவர்களுக்கும் காண்பிக்கும்படி, இறப்பவும் - மிகவும், உயர்ந்த - மேலான, தேவாரசனுல் - தேவேந்திரனுல், இயன்றதன்றே - (இது) நிருமிதம் செய்யப்பட்டதல்லவோ, எ - று. (௬௨)

1090. பளிக்குநற் றலமி தென்று வாவியுட் பாதம் வைத்துக்
குளிக்கவீழ்ந் தவரைக் காணுக் கைகொட்டிச் சிரிப்பர் நோக்கா

பளிக்கறைத் தலத்தை வெள்ளப் பரப்பென்று பார்த்து மீள்வா
ரொளிப்பிழம் பிவற்றைப் பித்தி யென்றுபோக் கற்று நிற்பார்.

(இ - ள்) (இன்னும் அங்கே), பளிக்குநற்றலமிதென்று - இவ்விடம்ஸ்படி கரத்தினத்தினாலாகிய பூமியென்று, நோக்கா - பார்த்து, வாவியுள் - தடாகத்தினுள், பாதம் - கால்களை, வைத்து - இட்டு, குளிக்க - சரீராதிகள் நனைய, வீழ்ந்தவரை - வீழ்ந்தவர்களை, காணூ - (அருகிலிருப்பவர்கள்) பார்த்து, கைகொட்டி - கையைத் தட்டிக்கொண்டு, சிரிப்பர்-சிரிப்பார்கள், (இன்னும் சிலர்), பளிக்கறைத் தலத்தை - ஸ்படிகத்தினாலாகிய பூமியை, வெள்ளப் பரப்பென்று - ஜலபூரிதமாகிய தடாகமென்று, பார்த்து - நோக்கி, மீள்வார் - அதிற்செல்லாமல் திரும்புவார்கள், ஒளிப்பிழம்பிவற்றை - ஒளியின் சமூகத்திரட்சி முதலிய இவற்றினை பித்தியென்று - கண்ணாடிச் சுவரென்று, போக்கற்று - அங்கே செல்கையற்று, நிற்பார் - நிற்பார்கள், எ - று. (சங)

1091. கதிர்மணி மாடந் தம்மைக் கண்ணுறு வார்தஞ் சாயை
யெதிர்வரு வாரை யொப்ப விடைந்திடைந் தெங்கு நிற்பர்
மதுரமாந் தஞ்சொற் றாமே தமக்கெதிர் மாற்ற மாக
வெதிரெதிர் மொழிகின் றாரொத் தியம்புவ ரெங்கு மெங்கும்.

(இ - ள்) கதிர் - கிரணத்தையுடைய, மணி - ஸ்படிக மணிகளாலாகிய மாடந்தம்மை - உப்பரிகைகளை, கண்ணுறுவார் - பார்க்கின்றவர்கள், தம் - தங்களுடைய, சாயை - பிரதிச்சாயலாகியது, எதிர் வருவாரை - எதிர்வரப்பட்டவர்களுக்கு, ஒப்ப - சமானமாக, (அவர்கள்), எங்கும் - எவ்விடங்களிலும், இடைந்திடைந்து - ஒதுங்கி யொதுங்கி, நிற்பார் - நிற்பார்கள், எங்குமெங்கும் - எவ்விடங்களிலும், மதுரமாம் - மாதுரியமாகிய, தஞ்சொல் - தங்களுடைய வசனங்கள், தாமே - தாமே, தமக்கு - தங்களுக்கு, எதிர்மாற்றமாக - பிரதிசப்தமாக, எதிர் எதிர் - எதிரெதிராக, மொழிகின்றாரொத்து - சொல்பவர்களையொத்து, இயம்புவர் - பேசுவார்கள், எ - று. (சச)

வேறு.

1092. வரைபுரையு மாளிகையி னிரைகளவை யொருபால்
பருதியொளி தெறுவபல மண்டபங்க ளொருபால்
மருவினரு மறிவரிய மாடநிரை யொருபால்
பருமணிய தூணிரைய பாடலிட மொருபால்.

(இ - ள்) (அந்தக் கற்பகவிருட்ச பூமியில்), வரை புரையும் - பர்வதத்திற்குச் சமானமாகிய (அதாவது: பர்வதம்போல் உன்னதமாகிய), மாளிகையின் - உப்

பரிகைகளினுடைய, நிரைகளவை - வரிசைகளானவை, ஒருபால் - ஒரு பக்கத்திலாகும், ஒருபால் - மற்றும் ஒரு பக்கத்தில், பருதியொளி - சூர்யகிரணத்தை, தெறுவ - ஜெயித்த ஜோதியையுடைய, பல - அனேகங்களாகிய, மண்டபங்கள் - மண்டப ஸமூகங்களாகும், ஒருபால் - மற்றுமொரு பக்கத்தில், மருவினரும் - அதனுள் சேர்ந்தவர்களும், அறிவரிய - இதன் தன்மையிப்பெற்றியதென்று அறிதற்கரிதாகிய, மாடநிரை - மாடங்களினுடைய வரிசைகளாகும், பரும் - பருத்த, மணிய - இரத்தினத்தினாலாகிய, தூணிரைய - ஸ்தம்ப ஸமூகங்களையுடைய, பாடலிடம் - ஸங்கீதங்களைப் பாடும்படியான இடங்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலாம், எ - று. (சஙு)

1093. நாடக மடந்தையர்க ளாடுமிட மொருபால்
ஆடவர்கள் கூடிவிளை யாடுமிட மொருபால்
கோடுயர்செய் குன்றமவை நின்றவிட மொருபா
லாடகநல் வேதிகைய கூடமிட மொருபால்.

(இ - ள்) நாடக மடந்தையர்கள் - நர்த்தன மாதர்கள், ஆடும் - நர்த்தனஞ் செய்கின்ற, இடம் - நர்த்தன சாலைகள், ஒருபால் - ஒரு பக்கத்திலே யிராநின்றன, ஆடவர்கள் - புருஷர்கள், கூடி - சேர்ந்து, விளையாடுமிடம் - விளையாடுகின்ற இடமானது, ஒருபால் - ஒரு பக்கத்திலாகும், கோடுயர் - சிகரங்களினால் உயர்ந்திராநின்ற, செய்குன்றமவை - கிரீடாத்திரி பர்வதங்கள், நின்ற - இராநின்ற, இடம் - இடமானது, ஒருபால் - ஒரு பக்கத்திலேயாகும், ஆடகம் - பொன்னாலாகிய, நல் - நன்மையாகிய, வேதிகைய - சுவர்களையுடைய, கூடமிடம் - கூடங்களானவை, ஒருபால் - ஒரு பக்கத்திலே யிராநின்றன, எ - று. (சசு)

1094. வான்கரும்பின் றீஞ்சுவைய வாரிநதி யொருபால்
தேன்செறிந்த பூந்தடங்கள் சிறைபயின்ற தொருபால்
வாய்ந்தமணித் தலங்கள்வல்லி மண்டபங்க ளொருபால்
சூழ்ந்தசெம்பொன் வேதிகைய வாகுஞ்சில வொருபால்

(இ - ள்) ஒருபால் - மற்றும் அக்கல்பக விருட்ச பூமியில் ஒரு பக்கத்தில், வான் - அழகிய, கரும்பின் - கரும்பினுடைய, தீம் - தித்திப்பாகிய, சுவைய - சுவையையுடையனவாகிய, வாரி - ஜலங்களையுடைய, நதி - ஆறுகளாகும், ஒருபால் - மற்றொரு பக்கத்தில், தேன் - மதுக்கள், செறிந்த - சேர்ந்திராநின்ற, பூம் - புஷ்பங்களையுடைய, தடங்கள் - தடாகங்கள், சிறை பயின்றது - தங்குதல் கொண்டிராநின்ற தன்மையாகும், வாய்ந்த - அழகு வாய்ந்த, மணித்தலங்கள் - ரத்தினத்தினாலாகிய தளங்களும், வல்லிமண்டபங்கள் - லதாமண்டபங்களும், ஒரு பால் - ஒரு பக்கத்தில் உள்ளனவாம், ஒருபால் - ஒரு பக்கத்தில், சில - சில

விடங்கள், சூழ்ந்த - சூழ்ந்திராநின்ற, செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, வேதிகையவாகும் - சுற்று மதில்களையுடையனவாகும், எ - று. (௬௭)

1095. மஞ்சமலி பஞ்சமணி யுடையவிட மொருபா
லுஞ்சன்மிசை யஞ்சொலவ ராடுமிட மொருபால்
வஞ்சியனை யார்களொடு மைந்தரிட மொருபா
லிஞ்சியத னகத்தினை யியம்பிடவொ ணாதே.

(இ - ள்) பஞ்சமணியுடைய - பஞ்சு மெத்தைகளையுடைய, மஞ்சம் - கட்டில்களினாலே, மலி - நிறைந்திராநின்ற, இடம் - இடங்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலாகும், உஞ்சல்மிசை - ஊஞ்சல் பலகையின்மேல், (உட்கார்ந்துகொண்டு), அஞ்சொலவர் - அழகிய சொல்லையுடைய ஸ்த்ரீமார்கள், ஆடும் - ஊசலாடுகின்ற, இடம் - இடமானது, ஒரு பால் - ஒரு பக்கத்திலேயாகும், வஞ்சியனையார்களொடு - புஷ்பக்கொடிக்குச் சமானமாகிய ஸ்த்ரீமார்களோடு, மைந்தர் - புருஷர்களும், (தங்கும்படியான), இடம் - இடமானது, ஒருபால் - ஒரு பக்கத்திலாகும், இஞ்சியதன் - கல்யாண தரமென்னும் அந்த மதிலின், அகத்தினை - அப்பியந்தர பாகத்திலான கல்பகவிருட்ச பூமியை, இயம்பிடவொணாது - சொல்ல முடியாது, எ - று.

1096. மலையனைய நிலையுடைய மாதவர்க ளொருபால்
விலையமற வெறிதரும விரோசனர்க ளொருபான்
மலைவின்மொழி நிலையுணல மௌனதர ரொருபா
னிலைபனியின் வெயின்மழையி னீங்கலில ரொருபால்.

(இ - ள்) மலையனைய - பர்வதம்போல சலனமில்லாத, நிலையுடைய - ஏகாக்கிரத்தியானத்தில் நிலைத்து நிற்கின்ற நிலையினையுடைய, மாதவர்கள் - மஹா தபஸையுடைய முனிவரர்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலிராநின்றார்கள், விலையம் - ஸம்ஸார ஹேதுவாகிய குற்றங்களெல்லாம், அற - நீங்கும்படி, எறிதரும் - சேதிக்கின்ற, அவிர் - பிரகாசம் பொருந்திய, ஓசனர்கள் - உபாத்தியாய குணத்தையடைந்தவர்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலிராநின்றார்கள், மலைவில் - மாறுபாடில்லாத, நல் - நன்மையாகிய, மொழி நிலையுள் - தர்ம வசனத்தில் நிலைத்திருக்கின்ற, மௌனதரர் - மவுன விரதத்தைத் தரிக்கப் பெற்றவர்கள், ஒரு பால் - ஒரு பக்கத்திலிரா நின்றார்கள், பனியின் - பனி காலத்தும், வெயில் - கோடை காலத்தும், மழையின் - வர்ஷா காலத்தும், நிலை - நின்ற யோக நிலையில், நீங்கலிலர் - நீங்காதவர்களாகிய காயக்கிலேச தபமுடையவர்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலிரா நின்றார்கள், எ - று. (௭௧)

1097. உக்கதவர் தித்ததவர் தத்ததவ ரொருபான்
மிக்கதவர் கோரதவர் மேவுமிட மொருபான்

தொக்கநல காயமன வசிவலிக ளொருபால்
பக்கமுத ஞேன்புடைய பரமதவ ரொருபால்.

(இ - ள்) உக்கதவர் - உக்கிர தபஸையுடையவர்களும், தித்ததவர் - தீப்த தபமுடையவர்களும், தத்ததவர் - தப்த தபஸ்வியர்களும், ஒருபால் - ஒரு பக்கத்திலிருப்பார்கள், மிக்கதவர் - மஹா தபஸையுடையவர்களும், கோரதவர் - கோர தபஸையுடையவர்களும், (ஆகிய தபோரித்தியையுடையவர்கள்), மேவும் இடம் - பொருந்துமிடம், ஒருபால் - ஒரு பக்கத்திலேயிருக்கும், நல - நன்மையாக, தொக்க - சேர்ந்திரா நின்ற, காய மன வசிவலிகள் - காயபெலிகளும் மனோ பெலிகளும் வசன பெலிகளுமாகிய பெலரித்தி பெற்ற முனிவர்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலேயிருப்பார்கள், பக்க முதல் - பக்ஷோபவாஸம் மாஸோபவாஸாதி விரதங்களையுடைய, பரம - மேலான, தவர் - தபத்தையுடையவர்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலேயிருப்பார்கள், எ - று. (௬௦)

1098. மாசுமலம் வாய்த்திவலை மூக்குடைய மருந்தாம்
பேசரிய பெருந்தவர்க ளிருந்தவிட மொருபால்
வாசநறு நெய்யமுது பாலமுது வின்மே
லாசையற வுரைசெய்மொழி யருந்தவர்க ளொருபால்.

(இ - ள்) மாசுமலம் - (தங்களுடைய) சரீரத்தின்மேலாகிய அழுக்குத் துளிகளும், வாய்த்திவலை - வாயிலுண்டாகிய நீர்த்துளியும், மூக்குடைய - மூக்கிலுண்டாகும் சளிப்பும், (ஆகிய இவைகள்), மருந்தாம் - பிறர்களின் வியாதிகளுக்கு மருந்தாகின்ற, பேசரிய - சொல்லுதற்கரிய, பெரும் - பெருமையையுடைய ஔஷதரித்திகளை யடைந்திராநின்ற, தவர்கள் - (ஆமௌஷதிப் பிராப்தர் க்ஷேளௌஷதிபிராப்தர், ஜல்லௌஷதி பிராப்தர், விப்ரௌஷதி பிராப்தர், ஸர்வௌஷத பிராப்தர் ஆகிய) தபஸிகள், இருந்த - தங்கியிராநின்ற, இடம் - இடமானது, ஒரு பால் - ஒரு பக்கத்திலாகும், வாசம் நறும் - நறுமணம் பொருந்திய, நெய்யமுது - நெய்யன்னம், பாலமுதுவின்மேல் - பாலன்னம் ஆகிய இவற்றின்மேல், ஆசையற - ஆசை நீங்கும்படி, உரைசெய் - சொல்லப்பட்ட, மொழி - தர்ம வசனத்தையுடைய, அரும் - அரிதாகிய, தவர் - (க்ஷீரஸ்ரவீணம் முதலாகிய ரஸரித்தியையுடைய) தபஸிகள், ஒருபால் - ஒரு பக்கத்திலே யிருப்பார்கள், எ - று. ()

1099. முதலிறுதி நடுவெனொரு பதமதுகொண் டந்நூல்
விதிமுழுது மறிஞர்சிலர் மூலபத மேவி
முதனடுவு முடியவுணர் வார்சம்பின்ன மதிகண்
மதியின்புகை பன்னிரண்டின் வருமொழிக ளறிவார்.

(இ - ள்) (ஒரு நூலில்), முதல் - பிரதமத்திலும், இறுதி-அந்தியத்திலும், நடுவண்-மத்தியிலும், ஒரு பதமது - ஒரு பதத்தை, கொண்டு - தெரிந்துகொண்டு, அந்நூல் - அந்த சாஸ்திரத்தினுடைய, விதி - கிரமத்தை, முழுதும் - முழுமையும், அறிஞர் - அறியும்படியாகிய கோஷ்ட புத்திகளும், சிலர் - சில பேர்கள், மூல பதம் - முதலிலொரு பதத்தை, மேவி - பொருந்தி, முதல் - ஆதியும், நடு - மத்தியும், முடிய - அந்தியமுமாகிய சகல விதிகளையும், உணர்வார் - அறிபவர்களாகிய பீஜபுத்திகளும், மதியின் - புத்தி யதிசயத்தினால், புகை பன்னிரண்டின் - பன்னிரண்டு யோஜனை தூரத்திலிருந்தும், வரும் - உண்டாகி வருகின்ற, மொழிகள் - வசனங்களை, அறிவார் - விவரமாகத் தனித்தனியாகத் தெரிந்துகொள்பவர்களாகிய, சம்பின்னமதிகள் - ஸம்பின்னஸ்ரோத்திரத்துவ புத்தி பலத்தையுடையவர்களும், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கூஉ)

1100. மதியவதி சுதமிருது விபுலமதி ஞானத்
ததிசயர்க ளனகார கேவலிக ளொருபால்
விதியிலணு மாதிவிகு வணைவலவ ரொருபான்
மதியின்வரு சாரணநன் மாமுனிவ ரொருபால்.

(இ - ள்) மதி - மதிஜ்ஞான பலமுள்ளவர்களும், அவதி - அவதிஜ்ஞானிகளும், சுதம் - சுருதஜ்ஞான ஸம்பன்னர்களும், இருது - ருஜுமதிமனப் பரியய ஞானிகளும், விபுலமதி ஞானத்ததிசயர்கள் - விபுலமதி மனப்பரியய ஞானாதிசய ஸமுத் பன்னர்களும், அனகாரகேவலிகள் - இதர கேவலிகளும், ஒருபால் - ஒரு பக்கத்திலிருப்பார்கள், விதியில் - கிரமத்தோடு கூடிய, அணுமாதி - அணுமா முதலாகிய, விகுவணைவலவர் - விக்கிரியாரித்திப் பிராப்தர்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலிருப்பார்கள், மதியின் - சந்திரன் ஆகாயத்திற் சென்று வருவதுபோல, வரும் - ஆகாயத்திற் சஞ்சரித்து வருகின்ற, சாரண - ஆகாச சாரணத்துவரித்தியை யடைந்த, நல் - நன்மையாகிய, மா - பெருமை பொருந்திய, முனிவர் - முனிவர்கள், ஒருபால் - ஒரு பக்கத்திலேயிருப்பார்கள், எ - று. (கூ௩)

1101. வேதமொரு நான்கைவினை யத்தைமிக மேவி
யோதுபவர் கேட்பவ ருரைப்பவர் நிருக்தர்
வாதியர்கள் கற்றமற வாதமதி யோர்கண்
மேதகைய சிந்தனைகண் மேவுநர்க ளொருபால்.

(இ - ள்) வேதமொரு நான்கை - (பிரதமானுயோகம், கரணானுயோகம், சரணானுயோகம், திரவ்வியானுயோகம், என்னும்) சதுர் வேதங்களையும், வினையத்தை மிகமேவி - மிகுதியான வணக்கத்துடன் கூடி, ஓதுபவர் - படிப்பவர்

களும், கேட்பவர் - ஸ்ரோதாக்களும், திருத்தர் - பதம் பிரித்துத் தெளிய வியக்தி சொல்லுகின்ற வியாக்கியான கர்த்தாக்களும், வாதியர்கள் - தர்க்க சாஸ்திரம் படித்து யூகித்துத் தத்துவ நிச்சயஞ் செய்பவர்களும், கற்ற - தாம் கற்ற ஆக மாத்தியயனத்தை, மறவாத - மறுபடி மறந்து போகாத, மதியோர்கள் - தாரணை மதிஜ்ஞான வீரிய வந்தர்களும், மேதகைய - மேன்மை பொருந்திய, சிந்தனைகள் - தருமத்தியான சுக்கிலத் தியானங்களை, மேவுநர்கள் - பொருந்தி பாவிக்கின்ற ஏகாக்கிரசித்த தபஸ்வியர்களும், ஒரு பால் - ஒரு பக்கத்திலிருப்பார்கள், எ - று.

1102. புக்கவிடஞ் சக்கரன்றன் படையொதுங்கப் போது
மிக்கதவர் பாணிமிசை மேயமிகை யடிசில்
புக்குலக முண்டிடினும் போதுபக லெல்லைத்
தக்கதவர் முதன்முனிவர் சாற்றமுடி யாரே.

(இ - ள்) (இன்னும் அங்கே), புக்கவிடம் - தாம் அடைந்திரா நின்ற இடமானது, (அளவினால் அற்ப விஸ்தீர்ணமாயிருந்தும்), சக்கரன் தன் - மஹா சக்ரவர்த்தியினுடைய, படை - த்வாதச யோஜனை விஸ்தீர்ணமாகிய பெரும்படைகள், (வந்துற்றாலும்), ஒதுங்க - தங்குவதற்கு, போதும் - குறைவில்லாமல் போதும் படியான, (அக்ஷீண மஹாலயத்துவமென்கின்ற ரித்தியையுடைய), மிக்க - மிகுதியாகிய, தவர் - தபஸையுடைய முனிஸ்ரேஷ்டர்களும், பாணி மிசை - (பிக்ஷா போஜியாகச் சரியா மார்க்கம் வந்த காலத்தில் பத்ர சீலர்கள் எதிர்கொண்டழைத்து சப்த குணங்களுடன் நவபுண்ணிய விதிக்கிரமத்தால் உதவ) தமது கையில், மேய - பொருந்திய, மிகை அடிசில்-மிகுந்த அன்னமானது, (அதாவது: தாம் உண்டதுபோக மிகுந்திருந்த ஆகாரமானது), உலகம் - இந்த உலகத்துள்ளோரெல்லாரும், புக்கு - அடைந்து, உண்டிடினும் - போஜித்தாலும், பகலெல்லை - அன்று பகற்பொழுதுவரையில், போதும் - குறைவடையாமல்போதும் படியான, தக்க - தகுதியாகிய, தவர் முதல் - (அக்ஷீண மஹா அசனத்துவமென்கின்ற ரித்தியையுடைய) தவசிரேஷ்டர்கள் முதலாகிய, முனிவர் - முனிவர்கள், சாற்ற முடியார் - சொல்ல முடியாத தன்மையாக ஸம்மியக் தரிசனஞான சாரித்திர குணவிர்த்தியையுடையவர்களாக இருப்பார்கள், எ - று. (ருரு)

1103. இனையமுனி வனமிதனின் வீதியிரு மருங்கிற்
கனகமணி வேதிகையி லுடையகொடி யதனின்
னினையமலி நிலங்களையவ் வேந்தர்பணிந் தேத்தி
யனகமன ராயிறைஞ்சி யாசிர மடைந்தார்.

(இ - ள்) வீதி - ஆறும் பிராகார சதுர் மஹா வீதிகளினுடைய, இருமருங்கில் - இரண்டு பக்கங்களிலுமாகிய, வனமிதனின் - இந்தக் கற்பக விருட்சாவனி

யில், இனைய - இத்தன்மையாகச் சொல்லப்பட்ட, முனி - முனிவரர் கணங்களிரா நின்றார்கள், (அந்த ஆறும் பிராகாரத்தின் அப்பியந்தர பாகத்தில்), வில்லுடைய - பிரகாசம் பொருந்திய, (அல்லது ஒரு விற்பிரமாண முயரமுள்ள), கனகமணி வேதிகை-ஸ்வர்ணத்தினாலும் ரத்தினத்தினாலுமாகிய வேதிகையானது, (உண்டு), அதனின் - அந்தக் கற்பக விருட்சாவனியில், மலி - (மதில்கள் கோபுரங்கள் ஸ்தூபைகள் முதலியவைகளில்) நிறைந்திராநின்ற, கொடி - துவஜக்கொடிகளை யும், இனைய - (இச்சருக்கத்தின் 34-வது பாடல் முதலாக இதுவரையில் வர்ணிக் கப்பட்ட லக்ஷணங்களையுடைய) இத்தன்மையாகிய, நிலங்களை - அந்த ஆறும் பிராகாரத்தில் பலவிதமாக அமைந்த பூமிகளையும், அவ்வேந்தர் - அந்த மேருமந்தா ரென்கிற அரசர்கள், பணிந்து - வணங்கி, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, அனக மனராய் - பாபரஹித சித்தமுடையவர்களாய், இறைஞ்சி - மறுபடியும் வணங்கி, ஆசிரம் - (முன் சொன்ன கனகமணி வேதிகையினுடைய அப்பியந்தரத்தில் ஏழாம் பிராகாரமாகிய கிரஹாங்கண பூமியின் மஹா வீதிகளில் பிரதமத்திலிரா நின்ற) ஜெயாஸ்ரீயமென்னும் பெயரையுடைய முகமண்டபத்தை, அடைந்தார் - போய்ச் சேர்ந்தார்கள், எ - று. (௱௬)

வேறு.

1104. கடிதடத்தள வுள்ள வரண்டகைக்
கொடிநி ரைத்த சயாசிரங் கோசத்தி
னுடன கன்றதோ ரோசனை யோக்கமுங்
கடன தாயது காவத மாகுமே.

(இ - ள்) கடிதடத்தளவுள்ள - துவஜக் கொடிச் சீலையின் பேர் பாதிப் பிரமாணமுள்ள, வரண்டகைக் கொடி - வரண்டகப்பதாகையினால், நிரைத்த - நெருங்கி வரிசை பெற்றிரா நின்ற, சயாசிரம் - அந்த ஜயாசிரய மண்டபமானது, கோசத்தினுடனகன்றது - ஒரு குரோசத்துடனே பொருந்திய அகலத்தையுடைய தாய், ஓரோசனையோக்கமும் - உன்னதம் ஒரு யோஜனையும், கடனதாயது - பாக்கியாய் நின்ற நீளமானது, காவதமாகும் - ஒரு காதமுமாகும், எ - று. (௱௭)

1105. மாதி ரத்தெழும் மாமதி வான்கட
லோத மேற வுடன்புகு மாறுபோ
னுதன் மாநகர் முன்றிலின் வாய்தல் வாய்ப்
போது வார்புகு வார்கண் மிடைந்தனர்.

(இ - ள்) மாதிரத்து - ஆகாயத்தில், எழும் - தோன்றுகின்ற, மா - சிறந்த, மதி - சந்திரனுடைய பிரகாசத்தைப் பெற்ற, (அதாவது : பூரண சந்திரன் உதயஞ்

செய்யக்கண்ட), வான் - பெரிதாகிய, கடல் - ஸமுத்திரத்தினது, ஓதம் - ஜலமானது, ஏற - அதிகரித்து வெளியாகி வர, உடன் - அதனுடனே, புகும் - எதிர்த்து அதனுள்ளடைகின்ற, ஆறுபோல் - ஆற்று ஜலங்களைப் போல், நாதன் - ஸ்வாமியினுடைய, மா - பெருமை பொருந்திய, நகர்-சமவஸரணத்தினது, முன்றிலின் - எதிர் முற்றத்தில், (இராநின்ற இந்த ஜயாசிரய மண்டபத்தின்), வாய்தல் வாய் - வாசற்படி வழியில், போதுவார் - உள்ளிருந்து வருபவர்களும், புகுவார்கள் - வெளியினின்று போகின்றவர்களும், மிடைந்து - நெருங்கி, அமூர் - பற்றறுதவர்களாவார்கள், எ - று. (கூஅ)

1106. சுந்த ரத்தா ளம்பவ ழத்திரள்
பந்தி பந்தி பரந்தன பார்மிசை
யிந்து வின்கதி ரோடிர விக்கதிர்
வந்து வாலுக மாயின போலுமே.

(இ - ள்) (அங்கே), சுந்தரம் - அழகிய, தாளம் - முத்து மணிகளும், பவழத்திரள் - பவழ ஸமூகங்களும், பந்தி பந்தி - தனித்தனி வரிசை வரிசைப் பட்டைகளாக, பார்மிசை - பூமியின் மேல், பரந்தன - விசாலித்திரா நின்றன, (அத்தோற்றத்தைப் பார்த்தால்), இந்துவின் கதிரோடு - சந்திர கிரணத்துடன், இரவிக்கதிர் - சூர்ய கிரணமும், வந்து - இவ்விடம் வந்து, வாலுகமாயின - மணலாயினதை, போலும் - நிகர்க்கும், எ - று. (கூகூ)

1107. மரைத்த லத்தரை சோதிட மண்டிலம்
வரைத்த குங்குமஞ் சந்தன மண்டிலம்
நிரைத்த செங்கம லங்க ணிலமிசைத்
தரைத்த லத்தெழு தாமரை போலுமே.

(இ - ள்) (பின்னையும் அந்த ஜெயாச்ரயமண்டபத்தில் மேல் பரப்பின் உள்ள பாகத்தில்), குங்குமம் - குங்குமக் குழம்பாலும், சந்தனம் - சந்தனக் குழம்பாலும், வரைத்த - அளவு செய்தெழுதப்பட்ட, மண்டிலம் - சூரிய சந்திர வட்டங்கள், மரைத்தலத்தரை - புஷ்கரவரத்வீபத்தின் பாஹ்யார்த்த பாகத்திலுள்ள, சோதிட மண்டிலம் - ஜோதிஷ்க தேவர்களாகிய சூர்ய சந்திர மண்டலங்கள் செல்கையில்லாமல் ஸ்திரமாக நிற்பது போல விளங்கும், (இன்னும்), நிலமிசை - பூமியில் அல்லது அடியில், செங்கமலங்கள் - செந்தாமரைப் பூக்கள், நிரைத்த - வரிசையாக எழுதப்பெற்றனவாம், (அத்தோற்றத்தைப் பார்த்தால்), தரைத்தலத்து - அப்புஷ்கரார்த்த த்வீபத்தினுடைய பூமியில், எழும் - உண்டாகிய, தாமரைப் போலும் தாமரைப் புஷ்பத்தினை நிகர்க்கும், எ - று. (கூ0)

1108. மாளி கைநிரை மண்டப மல்லவு
மாளி மானவர் தேவ ரடைந்துழி
நாளு நாளுநல் லின்பம் பயப்பன
சூளி யானையைச் சூழ்பிடி போல்வன.

(இ - ள்) மண்டபம் - அந்த ஜெயாஸ்ரூயமண்டபமும், அல்லவும் - அஃ தல்லாதனவும், மாளிகை நிரை - உப்பரிகை ஸமூகங்களும், சூளி யானையை - ஆண் யானையையும், சூழ் - அதைச் சூழ்ந்திரா நின்ற, பிடிபோல் வன - பெட்டை யானைகளையும் போல்வனவாம் (அதாவது: அந்த ஜெயாஸ்ரூயமண்டபம் ஆண் யானையைப் போலவும், மற்ற மாளிகை முதலியவைகள் அதைச் சூழ்ந்த பெட்டை யானைகளைப் போலவும் விளங்கும்), ஆளி-ஸிம்ம முதலாகிய திரியக் ஜீவன்களும், மானவர் - மனுஷ்யர்களும், தேவர் - தேவர்களும், அடைந்துழி - அவ்வுப்பரிகை களில் சேர்ந்தபோது, (அவை), நாளு நாளும் - எப்பொழுதும், நல் - நன்மை யாகிய, இன்பம் - சௌக்கியத்தை, பயப்பன - கொடுப்பனவாம், எ - று.

ஆளிமானவர் - என்பதற்கு, ஸிம்மம்போல் பராக்கிரமமுள்ள மனுஷ்யர்கள் எனப் பொருளுரைப்பாருமுளர். (சுக)

1109. சிப்பி செய்கை முடிந்தன செய்வினை
துப்பு ருவை யுரைப்பன நன்னெறி
தப்பி ளூர்தடு மாற்றை விரிப்பன
விப்ப டிய விவற்றினே னைப்பல.

(இ - ள்) இப்படியவிவற்றின் - இவ்விதமாகிய இந்த மண்டபத்திலும் உப்பரிகைகளிலும், செய்வினை - ஜீவர்களினால் செய்யப்பட்ட புண்ணிய பாப வினைகளின், துப்புருவை - அனுபோகங்களினது அம்சங்களை, உரைப்பன - சொல்லிக் காட்டுவனவும், நன்னெறி - ஸத்சாரித்திரத்தினின்றும், தப்பினூர் - தவறித் துச்சாரித்திரத்தில் வர்த்தித்தவர்களுக்கு, (ஏற்படும்), தடுமாற்றை - ஸம் ஸார துக்கத்தை, விரிப்பன - விசாலித்துத் தெரிவிக்கப்பட்டனவும், ஏனை - இன்னும் மற்ற, பல-அனேகம் விவரங்களையுடையனவும் (ஆகிய), சிப்பிசெய்கை - தேவஸ்தபதிகளாகிய சிற்பிகளுடைய செய்கைகளெல்லாம், முடிந்தன - அமைத்து முடிக்கப் பெற்றனவாம், எ - று. (சுஉ)

1110. மந்தி ரத்தை யணிந்துபொற் பீடிகை
யிந்தி ரத்துவ சம்மிடை நின்றன
சந்தி ரத்திர ளின்புள கத்திடை
வந்தா நித்தில மாலைக ளுன்றவே.

(இ - ள்) மந்திரத்தையணிந்து - அந்த ஜயாஸ்ரீயமண்டபத்து அப்பியந்தர மாயுள்ள உப்பரிகையின் அப்பியந்தரத்தில் அழகாகிச் சேர்ந்து, பொற்பீடிகை - பொன்னாலாகிய ஒரு பீடமிரா நின்றது, இடை - அப்பீடத்தின் மத்தியில், இந்திரத்துவசம் - இந்திரத்துவஜமென்னுங் கொடிகளானவை, நின்றன - நிலை பெற்றுள்ளன, சந்திரபுளகத்து - சந்திர கிரணத்தைப் போல பிரகாசிக்கின்ற கண்ணாடியினாலாகிய, திரளின் - அந்தத்துவஜ ஸ்தம்பத்தினது, இடை - உச்சியி னின்றும், வந்து - தாழ்ந்து வரப்பட்டனவாகி, நித்திலமாலைகள் - முத்து மாலை கள், நான்ற - தொங்கின, எ - று. (சுஙு)

1111. சுந்த ரத்திரண் மாமணி சூடின
மின்ப ரப்பின் மிளிர்ந்துவில் வீசுவ
பைந்து கிற்கொடி கால்பொரப் பார்ப்பின
மந்த ரத்திடை யாடுவ போலுமே.

(இ - ள்) சுந்தரத்து - அழகையுடைய, திரள் - கண்ணாடியாலாகிய அந்த துவஜ ஸ்தம்பத்தில், சூடின - பதிக்கப்பட்டனவாகிய, மா - பெருமைபொருந்திய, மணி - இரத்தினங்கள், மின் பரப்பின் - மின்னல் பரப்பைப்போல, மிளிர்ந்து - பிரகாசித்து, வில் - கிரணங்களை, வீசுவ - வீசுவனவாம், பைந்துகிற் கொடி - அந்த ஸ்தம்பத்தின் நுனியிலிரா நின்ற அழகிய துவஜக் கொடியை, கால்பொர - காற்றானது தாக்க (அக்கொடி அசைகின்றதைப் பார்த்தால் அது), பார்ப்பினம் - ஹம்ஸ பட்சியின் கூட்டம், அந்தரத்திடை - ஆகாயத்தில், ஆடுவபோலும் - பறந்து உலவுவதை நிகர்க்கும், எ - று. (சுச)

1112. காரின் மீதுல வுங்கத லிக்கொடி
தார்ம ணிகள் சலிப்ப வொலிப்பன
வாரி மீது வரும்பரித் தேரிடைத்
தார்ம ணிகள் சலித்தொலி போலுமே.

(இ - ள்) காரின் மீது - மேக மண்டலத்துக்கு மேலே, உலவும் - ஆடு கின்ற, கதலிக்கொடி - இந்த இந்திரத்துவஜக் கொடிச் சீலையானது, சலிப்ப - காற்றினால் அசைந்தாட, (அதனால் துஜஸ்தம்பத்தில் கட்டியிருக்கப்பட்ட), தார் மணிகள் - முத்துமாலைகளும் மணிகளும், ஒலிப்பன - சப்திப்பவை, வாரிமீது - (உதயகாலத்தில்) சமுத்திரத்தின் மேல், வரும் - வருகின்ற, (சூரியனுடைய), பரித்தேரிடை - குதிரைகள் பூட்டிய ரதத்திலிருக்கின்ற, தார் - மாலைகளும், மணிகள் - மணிகளும், சலித்து - சலிக்க, (அதனாலுண்டாகின்ற), ஒலி - ஒலியை, போலும் - நிகர்க்கும், எ - று. (சுரு)

1113. இந்த வான்கொடி யைக்கடந் தேகலும்
வந்து தோன்று மகோதய மண்டபஞ்

சுந்த ரம்மணித் தூணிரை யாயிரத்
தெந்தை கோயின் முகத்தி னிருந்ததே.

(இ - ள்) இந்த - இப்போது சொல்லப்பட்ட இந்த, வான் - பெரிதாகிய, கொடியை - துவஜக் கொடியை, கடந்து - தாண்டி (அப்புறத்தில்), ஏகலும் - செல்லலும், வந்து - அவ்விடத்தில் வந்து, தோன்றும் - காணப்படும், மகோதய மண்டபம் - மகோதய மண்டபமானது, சுந்தரம் - அழகிய, மணி - இரத்தினங்களினலாகிய, தூணிரை ஆயிரத்து - ஆயிரம் தூண் சமூகங்களையுடையதாகி (அதாவது: ஆயிரங்கால் மண்டபமாகி), எந்தை - ஸ்வாமியினுடைய, கோயில் - ஆலயத்தின், முகத்தின் - அபிமுகத்திலே, இருந்த - இராநின்றது, எ - று. (சுசு)

1114. மற்றிம் மண்டபத் துண்மணிப் பீடிகை
சொற்கி ழத்தி யிருக்கைச் சுதக்கடன்
முற்றும் வந்தொரு மூர்த்திக்கொண் டாலன்ன
பெற்றி யாலிருந் தாளை வலத்திரீஇ.

(இ - ள்) மற்று - பின்னை, இம்மண்டபத்துள் - இந்த மஹோதயமண்டபத்தில், மணி - ரத்தினத்திலைாகிய, பீடிகை - பீடமானது, சொற்கிழத்தி - சாஸ்வதி தேவியின், இருக்கை - இருக்கையாகும், சுதக்கடல் - சுருதஞானமாகிற சமுத்திரமானது, முற்றும் - முழுமையும், வந்து - இவ்விடத்தில் வந்து, ஒரு மூர்த்திகொண்டாலன்ன - ஒருஉருவமானதற்குச் சமானமாகிய, பெற்றியால் - தன்மையினல், இருந்தாளை - நிறைந்திருந்தவளாகிய அந்த சாஸ்வதி தேவியை, வலத்து - தனது வலப்பக்கத்தில், இரீஇ - ஸ்தாபித்துக்கொண்டு (அதாவது: தான் அதற்கிடப்பக்கத்தில் சேர்ந்து), எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (சுஎ)

1115. சோர்வின் மாதவர் சூழ்சுத கேவலி
தார கைநடுச் சந்திரன் போல்பவன்
கார்ப யிர்க்குத வும்படி யாலுயிர்க்
கார்வ மின்றி யறத்தை யளிக்குமே.

(இ - ள்) சோர்வில் - தபசுகளில் நழுவுதலில்லாத, மாதவர் - மஹாமுனிவரர்கள், சூழ் - தன்னைச்சூழ்ந்திருக்கின்ற, சுதகேவலி - ஒரு சுருதகேவலியானவன், தாரகை நடு - தாராகணங்களின் நடுவிலேயிருக்கின்ற, சந்திரன் போல்பவன் - சந்திரனுக்குச் சமானமாகியவனுய், கார் - மேகமானது, (மழை பெய்து), பயிர்க்கு - சஸ்யங்களுக்கு, உதவும்படியால் - உதவுவதுபோல, உயிர்க்கு - பவ்விய

ஜீவன்களுக்கு, ஆர்வமின்றி - தனக்கொரு வாஞ்சையுமின்றி, அறத்தை - தர்ம ஸ்வரூபத்தை, அளிக்கும் - உபதேசிக்கின்றவனுயினுன், எ - று. (சுஅ)

1116. மேரு வின்றிசை யெட்டையு மேவிய
வார ணம்மலை போல்வன மண்டப
மேர ணிந்துள வெண்டிசை யுமிதன்
னேர்முன் னின்றதோர் பீடிகை நன்றரோ.

(இ - ள்) இதன் - இந்த மஹோதய மண்டபத்தின், எண்டிசையும் - எட்டுத் திக்குகளிலும், மேருவின் - மஹம்மேருபர்வதத்தின், திசையெட்டையும் - எட்டுத் திக்குகளையும், மேவிய - பொருந்தியிரா நின்ற, வாரணம் மலைபோல்வன - திக்கஜ பர்வதங்களை நிகர்ப்பனவாகிய, மண்டபம் - மண்டபங்களானவை, ஏரணிந்து - மிகவும் அழகைப்பெற்று, உள - உள்ளன, நேர்முன் - (இந்த மண்டபங்களையெல்லாந் தாண்டி வீதியில்) நேராக முன்னே, நன்று - நன்மையானதாகிய, ஓர் பீடிகை - ஒரு பலி பீடமானது, நின்றது - நிலைபெற்றுளது, எ - று.

அரோ - ஈற்றசை. (சுகூ)

1117. வல்லி நன்மணி பொன்மய மாகிய
வெல்லி யும்பக லும்பலி யேந்துமி
தெல்லை செய்திறை வன்னகர் வாயிலுட்
செல்ல வல்லிகண் மண்டப மீண்டுமே.

(இ - ள்) வல்லி - யோக்கியப் பிரமாணேத்ஸேத அகல நீளங்களையுடையதாகி, நல் - நன்மையாகிய, மணிமயம் - இரத்தினங்களின் சொரூபமும், பொன்மயம் - ஸ்வர்ணங்களின் சொரூபமும், ஆகிய - ஆன (அதாவது: இவைகளை இழைத்துச் செய்திராநின்ற), இது - இப்பீடமானது, எல்லியும் பகலும் - இரவும் பகலும், பலியேந்தும் - பலிபிண்டங்களை பூஜகர்களால் தரிக்கும், எல்லை செய்து - இதனை அளவிட்டு, (அதாவது: இஃதிவ்வளவினதென்று ஆராய்ந்துகொண்டு), இறைவன் நகர் - ஜினேந்திரனுடைய ஆலயத்தின், வாயிலுள் - வாயிலுக்குள்ளே, செல்ல - போக, (அவ்விடத்தில்), வல்லிகள் - பூங்கொடிகளையுடைய, மண்டபம் - லதாமண்டபங்கள் (அதாவது: புஷ்பபந்தல்கள்), ஈண்டும் - நெருங்கியிருக்கும், எ - று.

மயம் - இரண்டிடங்களிலுங் கூட்டப்பட்டது. (எ0)

1118. போத ருமணிப் பீடத்தி னப்புறம்
வூய்தல் வீதியை நோக்கிய மண்டப

நீதி யானிதிக் கோக்க ணிரந்தர
மீதல் மேவி யிருப்ப விரண்டுள.

(இ - ள்) (இன்னும்) போதறு - மலர்கள் நீங்காத (அதாவது: புஷ்பங்களினால் அர்ச்சனைகள் பற்றறுமல் செய்யும்படியான), மணி - ரத்தின நிருமித மான, பீடத்தின் - அந்தப் பலி பீடத்திற்கு, அப்புறம் - அப்பால், (உட்சென்றால்), வாய்தல் வீதியை - வாயிலின் வழியை, நோக்கிய - பார்த்துக்கொண்டிருக்கின்ற, மண்டபம் - அவ்வழியின் இரண்டு பக்கங்களிலும் உள்ள மண்டபங்களில், நீதியால் - வரிசையினால், நிதிக்கோக்கள் - நவநிதிகளுக்கு அதிபர்களாகிய குபேர தேவர்கள், நிரந்தரம் - இடைவிடாமல், ஈதல்மேவி - கொடுக்குந் தன்மையைப் பொருந்தி, இருப்ப - இருக்கப்பட்டவைகள், இரண்டுள - (மஹா வீதியினிரு பக்கத்திலும் பக்கத்துக் கொன்றாக) இரண்டு மண்டபங்கள் உள்ளன, எ - று.

1119. பாட லோடு பயின்றி லை யம்பல
கூடி நீடு நிலாவொல்லை மின்னெனத்
தோடு மாடுவ வச்சுர தேவிய
ராடு நாடக சாலையப் பாலவே.

(இ - ள்) (அப்பால் அந்தக் கொடைக்கர மண்டபத்தைத் தாண்டி வீதி வழியாகவே உட்சென்றால் அவ்விடத்தில்), பாடலோடு-பாட்டுக்களோடு, பயின்று-சேர்ந்து, இலயம்பல - மஹாலயம் பலவும், கூடி - சேர்ந்து, (நர்த்தனத்துடனே), நீடு - பெரிதாகிய, நிலா-சந்திரகிரணம் பொருந்திய, தோடும் - கர்ணத்தோடுகளும், ஆடுவ - அசைந்தாடக் கூடியனவாகிய, அச்சுரத்தேவியர் - அந்தக்குபேரதேவர்களின் தேவிமார்கள், ஒல்லை - சீக்கிரத்தில் தோன்றும், மின்னென - மின்னலைப் போல, ஆடும் - நர்த்தனஞ் செய்கின்ற, நாடகசாலை - நர்த்தனச்சாலைகள், அப்பால - அந்தக்கொடைக்கர மண்டபத்திற்கப்பாலுள்ளனவாம், எ - று. (எஉ)

1120. வெற்றி முற்ற விதிக்கினைத் தூபைக
ளேற்று நின்றன வோங்கியோ ரோசனை
சுற்றும் வேறுள வேதிகை தோரணம்
வெற்றி வெண்கொடி மாலைய மேலெலாம்.

(இ - ள்) (ஏழாம் பிராகாரமாகிய அந்தக்கிரகாங்கண பூமியின் மஹா வீதிகளில் உள்ள சிறப்புக்கள் இதுவரையிலும் சொல்லப்பட்டன. இனி அப்பிராகார பூமியின் விதிக்குகளில், அதாவது கோணங்களில் உள்ளவற்றைச் சொல்வாம்), விதிக்கின் - அப்பிராகார பூமியின் விதிக்குகளில் (அதாவது: கோணங்களில்), ஐ - அழகிய, தூபைகள் - ஸ்தூபைகளானவை, ஓரோசனை

யோங்கி - ஒரு யோஜனை உன்னதமுடையவையாகி, வெற்றி முற்ற - (அதைப் பார்த்துக் கவனிப்பவர்களுக்கு) ஜயம் அடையும்படி, உற்று நின்றன - பொருந்தியிரா நின்றன, சுற்றும் - அவற்றுள் ஒவ்வொரு ஸ்தூபையைச் சுற்றிலும், வேறுள - வேறு வேறாக உள்ள, வேதிகை - மதில்களும், தோரணம் - துவார தோரணங்களும், மேலெலாம் - மேலிடமெங்கும், வெற்றி - ஜயந்தருகின்ற, வெண் - வெளுப்பாகிய, கொடி - துவஜக்கொடிகளும், மாலைய - புஷ்பமாலை முத்துமாலை முதலாகிய மாலைகளும் உடையனவாகும், எ - று. (எங)

1121. அடியி னிற்பிரப் பின்மணை யொத்திடை
துடியை வென்ற விரிமுழ வின்னல
வடிவை யொப்பன வையகத் தூபையிப்
படியி னுகுமற் றுள்ளதுஞ் சொல்லுவாம்.

(இ - ள்) அடியினில் - அதோபாகத்தில், பிரப்பின் மணையொத்து - பிரம்பினால் செய்யப்பட்ட மணைக்குச் சமானமாகி, இடை - மத்தியத்தினால், துடியை - உடுக்கையை, வென்ற - ஜயித்ததும், (அதாவது : மத்தியில் மிகவுஞ் சுருங்கிக்குறைந்ததும்), விரி - பிறகு விரிந்ததும், (ஆகி), முழவின் - மத்தளத்தின், நலம் - நன்மையாகிய, வடிவை - ரூபத்தை, ஒப்பன - ஒத்திராநின்றனவாகிய, வையகத்தூபை - லோகஸ்தூபையும், இப்படியின் - இந்தக் கிரகாங்கண பூமியின் கோணத்தில், ஆகும் - உளதாகும், மற்றுள்ளதும் - மற்றுமுள்ளதையும், சொல்லுவாம் - சொல்லுவோம், எ - று. (எச)

வேறு.

1122. மத்திம லோகமும் மந்த ரத்தையு
மொத்தவுந் துறக்கநற் கேவை யொப்பவுஞ்
சித்திசவ் வட்டமுஞ் சித்த ரூபியும்
பற்றியல் களைத்தெறும் பவிய கூடமும்.

(இ - ள்) மத்திமலோகமும் - மத்தியமலோகத்தையும், மந்தரத்தையும் - மந்தர பர்வதத்தையும், ஒத்தவும் - ஒத்திராநின்றனவாகிய மத்தியமலோகஸ்தூபையும் மந்தர ஸ்தூபையும், துறக்கம் - ஸ்வர்க்க ஸ்தூபையும், நல் - நன்மையாகிய, கேவையொப்பவும் - நவக்கிரைவேயகத்திற் கொப்பாகிய கிரைவேயகஸ்தூபையும், சித்திசவ்வட்டமும் - ஸர்வார்த்த சித்திஸ்தூபையும், சித்தரூபியும் - ஸித்தஸ்தூபையும், பற்றியல்களை - ஆசைகளாலாகிய மயக்கத்தின் இயற்கைகளை, தெறும் - நீக்கும்படியான, பவிய கூடமும் - பவ்வியஸ்தூபையும், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (எரு)

1123. வீத சோகமு மெய்ம்மை விளக்குமென்
றோது நாமத்த வொன்றிஞென் றுள்ளவாங்
காத பாத மகன்றுவில் லோங்கிமே
லேத மில்வலங் கொள்வட்ட மிங்கிதே.

(இ - ள்) மெய்ம்மை - யதாஸ்வரூபத்தை, விளக்கும் - பிரகாசிக்கச் செய்கின்ற, வீதசோகமும் - சோகமற்றதாகிய போதி ஸ்தூபையும், என்றோதும் - என்று சொல்லப்பட்ட, நாமத்த-நாமங்களையுடையனவாகிய இத்தூபைகள், ஒன்றிஞென்றுள்ளவாம் - அந்தவெழாம் பிராகாரத்தின் கோணங்களில் மஹா வீதிகளின் ஓரத்திலிருந்து வரிசையாக வொன்றுக்கொன்று அப்பியந்தரங்களிலாகாநின்றனவாம், இங்கிது - இங்கே இந்த ஸ்தூபைகள் உள்ள இவ்விடமானது சுற்றிலும், காதபாதமகன்று - கால்காதம் அகலத்தையுடையதாகி, வில்லோங்கி - ஒரு வில்லுயர்ந்து, மேல் - அதன் மேலே, ஏதமில் - குற்றமில்லாத, வலங்கொள் வட்டம் - வந்தவர்கள் பிரதக்ஷிணம் பண்ணுகின்ற இடமாகும், எ - று. (எசு)

வேறு.

1124. வானவர் கோன்மனத் தெண்ணிச் செய்தவன்
றான்மிக வியப்புறுந் தரணி தன்மையை
யானிவ ணுரைப்பதற் கெழுந்த மற்றிது
வூனமே யாகினு மொழிய வல்லனே.

(இ - ள்) வானவர்கோன் - தேவேந்திரனானவன், மனத்து - தன்னுடைய மனதில், எண்ணி - நினைத்து, செய்து - நிருமித்துச்செய்து, அவன்தான் - அத்தேவேந்திரன், மிக - மிகுதியாக, வியப்புறும் - ஆச்சரியப்படும்படியான, தரணி தன்மையை - இந்த சமவஸரணத்து சப்த பூமிகளின் ஸ்வரூபத்தை, யான் - நான், இவண் - இவ்விடத்தில், (இப்படிப்பட்ட தன்மையுடையதென்று), உரைப்பதற்கு - வர்ணிப்பதற்கு, எழுந்த - உத்தேசித்த, இது - இந்தத் தன்மையானது, ஊனமேயாகினும் - சொல்ல முடியாததாகினும், மொழியவல்லன் - ஒரு விதத்தில் சொல்ல வல்லமையுடையவனாவேன் (அதாவது: எனக்குத் தெரிந்தவரையில் ஒரு விதத்தில் சொல்வேன்), எ - று. (எஎ)

1125. கோசமுங் கோசமு மிரண்டு கோசமுங்
கோசநான் கெட்டுமுந் நான்கி ரெட்டுமாய்
கோசமோர் பத்தொடே ழொன்று மும்மதிற்
கோசமோ ராறுபோய்க் கோயி லெய்தினர்.

(இ - ள்) கோசமுங்கோசமும் - இரண்டு குரோச விஸ்தீர்ணமுடைய பிராஸாத சைத்ய பூமியையும், இரண்டு கோசமும் - இரண்டு குரோசவிஸ்தீர்ண முடைய காதிகாபூமியையும், கோசநான்கு - ஒரு காத அகலமுள்ள வல்லி பூமியை யும், எட்டு - எட்டுக்குரோசம் (அதாவது: இரண்டுகாத விஸ்தீர்ணமான) உத்தி யான பூமியையும், முந்நான்கு - பன்னிரண்டு குரோச விசாலமான துவஜபூமியை யும், ஈரெட்டு - பதினாறு குரோசமகன்ற கல்பகவிருட்ச பூமியையும், ஆய் - ஆரா யப்பட்ட, கோசமோர் பத்தோடு ஏழ் ஒன்று - பதினெட்டுக் குரோச விசாலமான கிரஹாங்கண பூமியையும், மும்மதில் - மூன்று மதில்களின் விசாலமாகிய, கோசம் ஓராறு - ஆறு குரோசமும், போய் - கடந்து சென்று (அதாவது : இப்படி அறுபத் தெட்டுக் குரோசவகலமான ஸப்த பூமிகளையும் மும் மதில்களையும் கடந்துபோய்), கோயில் - அதனப்பியந்தரத்திலுள்ள ஸ்ரீநிலயமென்னும் ஆலயத்தை, எய்தினார் - மேருமந்தரரென்கிற இருவர்களும் அடைந்தார்கள், எ - று. (எஅ)

1126. கார்முக மொன்றுமே லொன்று பத்தோடேழ்
கார்முகங் குறைந்தமும் மதிலி னுக்கமுங்
கார்முக மீராயி ரமொன்று மாயபின்
னீர்மையா லுயர்ந்தன நிலங்க ளென்பவே.

(இ - ள்) ஒன்றுமேலொன்று - ஒன்றுக்கொன்று மேலே மேலேயாகிய, ஏழ்நிலங்கள் - (இந்தச் சமவஸரணத்தின்) ஏழு பூமிகளும், கார்முகம் பத்தோடு - ஒரு பூமிக்கொரு பூமி பத்து வில்லோடு கூடிய அளவாய், உயர்ந்தன - உயர்ந் திராநின்றன, மும்மதிலின் - மூன்று மதில்களுடைய, உக்கமும் - உன்னதத்தை யும், கார்முகமும் - இப்படிவில் அளவினால், (சொல்லுமிடத்தில்), குறைந்த - பிர மாணத்தினால் தாழ்ந்திராநின்ற, ஒன்று - முதல் மதிலாகிய உதயதரமானது, ஈராயிரங் கார்முகமாய - இரண்டாயிரம் வில்லுன்னதமாகும், பின் - பிறகு உள்ள இரண்டு மதில்களும், நீர்மையால் - முன்னமே அந்தந்த மதில்களைச் சொன்ன இடத்தில் சொல்லிய வரிசைக் கிரமத்தின்படி, உயர்ந்தன - உயர்ந்தனவாம் (அதா வது : இரண்டாவதாகிய பிரீதிதரமதில் நாலாயிரம் வில்லும், மூன்றாவதாகிய கல் யாணதரமதில் ஆறாயிரம் வில்லுமாக உயர்ந்திரா நின்றன), என்ப - என்று அறி ஞர் கூறுவர், எ - று.

உயர்ந்தன என்னும் பதம் பூமிக்கும் மதிலுக்குமாக இரண்டிடத்திலும் கூட்டப்பட்டது. (எக)

வேறு.

1127. வார்ம லிம்முலை மாதர் நடங்களும்
கார்ம லிக்கத லிக்கொடி நீட்டமுஞ்

சேர்வின் மற்று முரைத்தனன் சுந்தர
மோரி னன்மதி யத்தினை யோதுமே.

(இ - ள்) வார் - ரவிக்கைகள், மலி - நிறைந்த, முலை - ஸ்தனங்களை யுடைய, மாதர் - தேவஸ்த்ரீகளுடைய, நடங்களும் - நர்த்தனங்களும், கார்மலி - மேக மண்டலத்தை அளாவி உயர்ந்து நிறைந்த, கதலிக்கொடி - த்வஜக்கொடி களின், ஈட்டமும் - திரள்களையும், சோர்வில் - தளர்வில்லாத, மற்றும் - இன்னும் அந்த ஸப்த பூமிகளிலுள்ள எல்லாவற்றையும், உரைத்தனன் - இதுவரையிற் சொன்னேன், ஓரின் - இனி அறியுமிடத்தில், சுந்தரம் - அழகு வாய்ந்த, நல் - நன்றாகிய, மதியத்தினை - ஸமவஸரணத்தின் மத்தியஸ்தானமாகிய லட்சுமீ வா மண்டபத்தின் ஸ்வரூபத்தை, ஓதும் - சொல்லுவோம், எ - று. (அ0)

வேறு.

1128. மகரவண் கொடியவன் றன்னை வென்றவன்
நகரமுந் தனதிட மாக நாட்டியொண்
புகரறு பொன்னெயி லாம்பொற் றாமரை
சிகரமாந் திருநிலை யமைதி செப்புவாம்.

(இ - ள்) (அவ்வாறு சொல்லத் தொடங்கி முதலில்), மகரவண் கொடிய வன்றன்னை - வளப்பம் பொருந்திய மகரக் கொடியையுடைய மன்மதனை, வென் றவன் - ஜெயித்தவனாகிய ஜினேந்திரனுக்கு, நகரமும் - தங்கும்படியான நகரமும், தனதிடமாக - இதனினிடமாக, நாட்டி - தேவர்களால் செய்து, ஒண் - ஒளி பொருந்திய, புகரறு - களங்கமற்ற, பொன்னெயிலாம் - பொன்னாலாகிய ஸமவ ஸரணமாகிற, பொற்றாமரை - பொன்னாலாகிய அழகிய தாமரை மலரினுடைய, சிகரமாம் - சிகரமாகிய, திருநிலை - ஸ்ரீநிலயத்தின், அமைதி - அமைப்பையும், செப்புவாம் - சொல்லுவோம், எ - று. (அக)

1129. தேவர்கோன் றிசைதிசை கண்டு செப்பிய
மூவுல கரசர்க ளாதி மூதுறை
மேவிய விதனையான் விளம்ப லுற்றது
நாவலர் நகுவதோர் வாயி லாகுமே.

(இ - ள்) தேவர்கோன் - தேவேந்திரன், திசை திசை - திக்குகள் திக்கு கள்தோறும், கண்டு - பார்த்து, செப்பிய - (இவ்விடத்தில் இவ்விதமாகச் செய்ய வேண்டுமென்று) சொல்லி நிருமிக்கப்பட்ட, மூவுலகரசர்கள் - தேவதானவமான வேந்திரர்களுக்கு, ஆதி - முதல்வனாகிய ஆதிபத்தியத்தையுடைய ஜினேந்திரன்,

மூதுறை - உயர்ந்த இருப்பிடமாக, மேவிய - பொருந்திய, இதனை - இந்த ஸ்ரீநில யத்தை, யான் - நான், விளம்பலுற்றது - வர்ணிக்க உத்தேசித்தது, நாவலர் - வித் வான்கள், நகுவது - சிரிப்பதற்கு, ஓர் வாயிலாகும் - ஒரு வழியாகும், எ - று. ()

1130. இவ்விட மிவ்வண்ண மாகி னன்றெனி
லவ்விட மவ்வண மாகித் தோன்றிடு
மிவ்விடத் திவ்விட மழகி தென்றிடி
னவ்விடத் தவ்விட மழகி தாகுமே.

(இ - ள்) (அங்கே), இவ்விடம் - இந்த இடமானது, இவ்வண்ணமாகில் - இந்த விதமானால், நன்று - நல்லது, எனில் - என்று நினைத்தால், அவ்விடம் - அந்த இடமானது, அவ்வணமாகி - அதே பிரகாரமாகி, தோன்றிடும் - தோன்றும், இவ்விடத்து - இவ்விடத்தைக்காட்டிலும், இவ்விடம் - இந்த இடமானது, அழகிது - அழகையுடையதாகும், என்றிடில் - என்று நினைத்தால், அவ்விடத்து - அவ் விடத்தைக்காட்டிலும், அவ்விடம் - அந்த நினைத்த இடமானது, அழகிதாம் - அழகையுடையதாகும், எ - று. (அங)

1131. உச்சமே நீசமாய நீச முச்சமா
யிச்சையா லொருவனுக் கியலு மாறுபோ
லுச்சமே நீசமாய் நீச முச்சமா
யிச்சையின் படியினா லெங்குந் தோன்றுமே.

(இ - ள்) உச்சமே - மேலான தன்மையே, நீசமாய் - தாழ்ந்ததன்மையாய், நீசம் - தாழ்வான நிலைமையே, உச்சமாய் - உயர்ந்த நிலைமையாகி, இச்சையால் - ஆசையினால், ஒருவனுக்கு - ஒரு புருஷனுக்கு, இயலுமாறுபோல் - அவன் உள் ளத்தின் படி இசைவதுபோல், (இச்சமவசரணத்திலும்), உச்சமே - உயர்ந்தவை களே, நீசமாய் - தாழ்ந்தவைகளாகவும், நீசம் - தாழ்ந்தலக்ஷண முள்ளவைகள், உச்சமாய் - மேலான லக்ஷணமுள்ளவைகளாகவும், இச்சையின்படியினால் - அவ ரவர்களின் அபிப்பிராய கருத்துக்கிசைந்த விதமாகி, எங்கும் - எவ்விடங்களிலும், தோன்றும் - விளக்கமுடையனவாகும், எ - று. (அச)

இவ்விரண்டு பாடல்களாலும் இவ்விடம் பிரமிக்கும் தன்மையையுமுடைய தென்பது பெறப்படும்.

1132. ஓசனை மூன்றரை யகன்ற தோங்கிய
தோசனை நான்குமேற் கோச மைந்துகீழ்
மாசிலாப் பொன்மணி பத்தி ரெட்டினா
லாசைபோற் பரந்தவில் லவய வத்ததாம்.

(இ - ள்) ஓசனை மூன்றரையகன்றது - (சப்த பூமியும் தாண்டி மத்தியத்திலிருக்கப்பட்ட ஸ்ரீ நிலயமானது) பதினாலு காதம் அகலத்தையுடையதாகும், ஓங்கியது - உன்னதமானது, கீழ் - அங்ஙனம் பதினாலு காதமகன்ற அடியினின்றும், மேல் - ஸ்ரீ நிலயத்தின் கோபுரசிகரபரியந்தம், ஓசனை நான்கு கோசமைந்து - நாலு யோஜனையும் ஐந்து குரோசமும், ஓங்கியது - உயர்ந்ததாம், பத்து - பத்துமாற்றாகிய, பொன் - ஸ்வர்ணத்தினாலும், ஈரெட்டொளிலா - பதினாறு தோஷநீங்கின, மணியினால்-இரத்தினங்களினாலும், (நிருமிதமாகி), ஆசைபோல் - ஆசையைப்போல், (அளவில்லாமல்), பரந்த - விசாலித்த, வில் அவயவத்ததாம் - கிரண சமூகங்களையுடையதாகும், எ - று. (அ௫)

1133. தலந்தன்மேற் சகதிகண் மூன்று தம்மிசை
யிலங்குபட் டிகையுமைஞ் ஞூறு விற்களை
விலங்ககன் றுயர்ந்தன வேறு வேறொளி
மலர்ந்துவிற் பயின்றுவச் சிரம யங்களாம்.

(இ - ள்) தலந்தன் மேல் - அந்தப் பதினாலு காதவகலமுடைய பூமியின் மேல், சகதிகள் மூன்று - மூன்று ஜகதீ தலங்கள், தம்மிசை - ஒன்றுக்கொன்று தங்கள் மேலே, இலங்கும் - விளங்காநின்ற, பட்டிகையும் - மேகலைகள் போல சூழப்பட்டனவாயும், வேறு வேறு - தனித்தனியாக, (ஒவ்வொரு ஜகதியும்), அஞ்ஞூறு விற்கள் - ஐஞ்ஞூறு விற்களின் அளவு, விலங்ககன்று - ஒவ்வொன்றும் இடைவிட்டு விசாலித்து, உயர்ந்தன - யோக்கியமான உன்னதத்தையுடையனவாயும், ஒளிமலர்ந்து - பிரகாசத்தினால் விசாலித்து, வில்-கிரணங்களை, பயின்று - நீங்காமல் சேர்ந்து, வச்சிரமயங்கள் - வஜ்ரரத்ன மயங்களாக, ஆம் - விளங்குவனவாம், எ - று. (அ௬)

1134. மார்பள வுயர்ந்தபொன் வரண்ட கத்தின்மேற்
கார்முகஞ் சகதியின் கதலி கட்கிடை
பாரவிற் பத்திடை கூடங் கோட்டக
நீர்மையாற் றனுமுப்ப திரட்டி நீண்டவே.

(இ - ள்) சகதியின் - அந்த ஜகதீ தலங்களில், மார்பளவு - மார்பளவாய், உயர்ந்த - உயர்ந்திராநின்ற, மேல் - மண்டபங்களின் மேல் விளிம்புகளில், (இராநின்ற), பொன் - அழகிய, வரண்டகத்தின் கதலிகட்கு - வரண்டகத்துவஜங்களுக்கு, இடை - நடுவில், கார்முகம் - ஒரு வில் பிரமாணமாம், (அதாவது: அவை ஒரு வில் பிரமாணம் இடை விட்டு ஒவ்வொன்றுயிருக்கும்), (இன்னும் அம்மண்டபங்களின் மேலே), பாரம் - பெரிதாகிய, வில்பத்திடை - பத்து வில்லிடையையுடைய, (அதாவது : பத்துவில்லளவு இடைவிட்ட), கூடம்-கூட்டங்களும், கோட்

டகம் - கோட்டகங்களுமாம், நீர்மையால் - வரிசையினால், (அவைகளில்), தனுமுப்பது - கூடங்கள் முப்பதுவில்லும், இரட்டி - கோட்டகங்கள் அறுபது வில்லும், நீண்ட - நீண்டனவாம், எ - று. (அஎ)

1135. தலமி ரண்டிவற் றின்வாய்தல் காவலா
நிலையமந் தராளத்து நின்ற வெங்கணும்
தலையெழு நூறுமுற் சகதி யின்முறை
நிலையிரண் டெழுபது நாற்பத் தெட்டுமாம்.

(இ - ள்) இவற்றின்-இந்த ஜகதீதலத்தின் மண்டபங்களின் மேலே யிரா நின்ற, தலமிரண்டு - கூட கோட்டகமாகிய ஸ்தலங்களிரண்டும், நிலையம் - நிலைகளோடும், அந்தராளத்து - அந்தராளங்களோடும், எங்கணும் - எவ்விடங்களிலும், வாய்தல் காவலா-வாசற் றுவார காவற்காரர்களைப்போல, நின்ற-நின்றன, முற்சகதியில்-முதல் ஜகதிமண்டபத்தில், (மேலிருக்கப்பட்ட கூடங்கள்), தலை - முதலிலே, எழுநூறு - எழுநூற்றோடே கூட, நிலை - நிலைத்த, இரண்டோடு - இரண்டுடன், எழுபது - எழுபதும் (அதாவது : எழுநூற்றெழுபத்திரண்டும்), முறை - (அதற்கு மேல்) கிரம வரிசையால், நாற்பது - (இரண்டாவது ஜகதிமண்டபத்தின்மேல்) நாற்பதும், (அதாவது : எழுநூற்று நாற்பதும்), எட்டும் - (மூன்றாஞ் சகதி மண்டபத்தின்மேல்) எட்டும், (அதாவது : எழுநூற்றெட்டும்), ஆம் - ஆகும், எ - று.

1136. கூடத்தி னெண்ணவே கோட்ட கங்கொடி
பீடத்தி னெழுபத்தே ழாயி ரங்களி
னூடுற்ற மூன்றுநூற் றெண்பத் தொன்றுமாய்
நீடுற்ற முதலாஞ் சகதி நின்றவே.

(இ - ள்) (மேற்கூறிய), கூடத்தின் - கூடங்களுடைய, எண்ணவே - கணக்கையுடையனவே, கோட்டகம் - கோட்டகங்கள், நீடுற்ற - பெரிதாகிய, முதலாஞ்சகதி - முதற்சகதி மண்டபத்தின் விளிம்புகளில், பீடத்தின் - பீடங்களில் (ஸ்தாபிதமாகிச் சூழ்ந்திராநின்ற), கொடி - வரண்டகக் கொடிகளானவை, எழுபத்தேழாயிரங்களின் - எழுபத்தேழாயிரங்களோடு, ஊடுற்ற - ஊடே சேர்ந்த, மூன்று நூற்றெண்பத்தொன்றுமாய் - மூந்நூற்றெண்பத் தொன்றாகி, நின்ற - நின்றன, எ - று. (அக)

1137. எழுபத்து நான்கையா யிரத்து மாறிய
குழுவுற்ற விரண்டுநூற் றெழுபத் தொன்பது
மெழுபத்தோ ராயிரத் தைம்பத் தாறுமாம்
பழுதற்ற சகதிமேல் மேற்ப தாகையே.

(இ - ள்) பதாகை - வாண்டகத்துவஜங்கள், பழுதற்ற - குற்றமற்ற, சகதி மேல் - இரண்டாஞ் சகதி மண்டபத்து மேல், எழுபத்து நான்கை - எழுபத்து நாலை, ஆயிரத்து மாறிய - ஆயிரத்தினால் பெருக்கிய, குழு - கூட்டத்தில், (அதாவது: எழுபத்து நாலாயிரத்தில்), உற்ற - பொருந்திய, இரண்டு நூற்றெழுபத்தொன்பது - இருநூற்றெழுபத்தொன்பதும், மேல் - மூன்றாஞ்சகதி மண்டபத்தின் மேல், எழுபத்தோராயிரத் தைம்பத்தாறும் - எழுபத்தோராயிரத் தைம்பத்தாறும், ஆம் - ஆகும், எ - று. (கல)

1138. இரண்டுநூற் றெழுபத்தே ழாயி ரத்தொடு
திரண்டதொள் ளாயிரத் திருப தாமுதற்
கிரண்டுநூற் றறுபத்தா றாயி ரத்தொடு
நிரந்தநா னூறுகண் ணடுவு நின்றவே.

(இ - ள்) முதற்கு - முதல் சகதிமண்டபத்திற்கு, (மேலுள்ள கூடங்களில் கொடிகளானவை), இரண்டு நூற்றெழுபத்தேழாயிரத்தொடு - இரண்டு லக்ஷத்து எழுபத்தேழாயிரத்தோடு, திரண்ட - சேர்க்கப்பட்ட, தொள்ளாயிரத்திருபதாம் - தொளாயிரத்திருபது கொடிகளாகும், இரண்டு நூற்றறுபத்தாறாயிரத்தோடு - இரண்டு லக்ஷத்தறுபத்தாறாயிரத்துடனே, நிரந்த - சேர்க்கப்பட்ட, நானூறுகள் - நானூறு என்கிற கணக்கையுடைய கொடிகள், நடுவு - இரண்டாஞ் சகதி மண்டபத்தின் கூடங்களில், நின்ற - இராநின்றன, எ - று. (கக)

1139. சுன்னையெட் டெட்டுநான் கைந்தி ரண்டிடைச்
சொன்னதா னத்தின்மூன் றாவ தின்றொகை
யின்ன கூடத்த கோட்டகந் தன்மிசைச்
சொன்ன சொன்னவை யங்கங் கிரட்டியே.

(இ - ள்) மூன்றாவதின் - மூன்றாஞ் சகதி மண்டபத்தில், (மேல் கூடங்களில் உள்ள கொடிகள்), சுன்னை - (ஒன்றாவது ஸ்தானத்தில்) ஸுன்னமும் (அதாவது: பூஜ்யமும்), எட்டு - (பத்தாவது ஸ்தானத்தில்) எட்டும், எட்டு - (அதன்மேல் நூறாவது ஸ்தானத்தில்) எட்டும், நான்கு - (ஆயிரத்தானத்தில்) நாலும், ஐந்து - (பதினாயிரத் தானத்தில்) ஐந்தும், இரண்டு-(லட்ச ஸ்தானத்தில்) இரண்டும், (ஆக), இடைச்சொன்ன-இவற்றினிடமாகச் சொன்ன, தானத்தின் - ஸ்தான வரிசையின் படி, (ஆகிய), தொகை - தொகையாகிய இரண்டு லக்ஷத்து ஐம்பத்து நாலாயிரத்து எண்ணூற்று எண்பதாகும், கூடத்த - கூடங்களினுடைய கொடித் தொகைகளும், இன்ன - இத்தன்மையனவாகும், கோட்டகந்தன் மிசை - கோட்டகத்தின் மேலுள்ள கொடிகள், (எவ்வளவென்றால்), அங்கங்கு - அவ்வவ் விடங்களில், சொன்ன சொன்னவை - கூடங்களுக்குப் பலவாகச் சொல்லப்பட்ட தொகைகளின், இரட்டியே - இரட்டித்த இரட்டித்த தொகைகளாகும், எ - று.

1140. பட்டிகைத் தலத்தின்மேற் பைம்பொற் கோயிலி
னெட்டலாத் திசைமுகத் திருந்த மண்டபத்
துட்டொளி திரண்டுகா வதமொன் றோக்கமும்
விட்டொளி துளும்பவெஞ் சுடரி னின்றவே.

(இ - ள்) பைம்பொன் - பசுமை பொருந்திய பொன்னாலாகிய, கோயி லின் - ஸ்ரீநிலயமாகிய கோயிலின், எட்டலாத் திசைமுகத்து - எப் பக்கங்களிலும், இருந்த - சூழ்ந்திராநின்ற, பட்டிகைத் தலத்தின் - இப்போது சொன்ன திரிமேகலைகளாகிய ஜகதீ தலத்தின், மேல் - மேலே, இருந்த - (இப் போது சொல்லப்பட்ட கூடங்கள் கோட்டகங்கள் கொடிகளோடும் விளங்கி) யிருந்த, மண்டபத்துட்டொளி - மண்டபங்களின் ஜோதியானது, திரண்டு - சேர்ந்து, வெம் - (யாவர்களும்) விரும்பும்படியான, சுடரின் - பால சூர்யனைப் போல, ஒளி விட்டு - எவ்விடங்களிலும் கிரணங்களை வீசி, துளும்ப - ததும்ப, ஒக்கமும் - அம்மண்டபங்களின் உன்னதங்கள், காவதமொன்று - ஒவ்வொரு காத மாக, நின்ற - இராநின்றன, எ - று. (கங)

1141 மகரவாய் மண்டபத் தரைய வாயநாற்
சிகரவாய்ச் சினகரஞ் சிவஞ்செய் மூர்த்திகள்
பகரொணு தனபரி வாரந் தன்னொடு
புகரிலா வானத்தம் போன்று தோன்றுமே.

(இ - ள்) மகரவாய் மண்டபத்து-முன்சொன்ன ஜகதீதலத்து நிதானமான அளவையுடையனவாகி மூன்று சுற்ருகிய அம்மண்டபங்களில், (நாலு மஹா வீதி யில் தவிர நாலு கோணங்களிலும்), நால் வாய - நாலு பக்கமும் வாசற்படிகளை யுடையனவாயும், வாய் சிகர - பொருந்திய கோபுரங்களை யுடையனவாயும், (உள்ள), சினகரம் - ஜின சைத்யாலயங்களாம், (அதாவது: ஒவ்வொரு கோணத் திலும் தனித்தனியாக ஆறுகும்), அரை - அந்த சைத்யாலயங்களின் மத்தியத்தில், பகரொணுதன - சொல்ல முடியாத அழகையுடையனவாகிய, சிவஞ்செய் - (பார்க்கப்பட்டவர்களுக்குப்) புண்ணியத்தைச் செய்கின்ற, மூர்த்திகள் - ஜினப்பிர திமைகள், பரிவாரந் தன்னொடு - சத்திரத்திரயசாமராதிப்ராதிஹார்யங்களுடன், புகரிலா - குற்றமில்லாத, வான் - அழகிய, அத்தம் போன்று - கண்ணாடியைப் போன்று, தோன்றும் - விளங்கும், எ - று. (கச)

1142. வில்லுமிழ்ந் திடுமணி யிடைந்த மேனிய
நல்லநா மங்களு லாறு மேவின
செல்வமுந் திண்மையு மறிவும் வென்றியு
நல்குவ நாற்றிக்கு முகமு நான்கவே.

(இ - ள்) (அந்த ஜினப் பிரதிமைகள்), வில்லுமிழ்ந்திடும் - கிரணத்தை வீசும்படியான, மணி - அழகை, மிடைந்த - சேர்ந்திராநின்ற, மேனிய - ரூபங்களையுடையனவாம், நல்ல - நன்மையாகிய, நாலாறு - இருபத்துநான்கு, (தீர்த்தங்கரர்களுடைய), நாமங்கள் - பெயர்களை, மேவின - பொருந்தினவாம், செல்வமும்- (வணங்குகின்றவர்களுக்கு) சம்பத்தும், திண்மையும் - பராக்கிரமத்தையும், அறிவும் - ஞானமும், வென்றியும் - ஜெயமும், நல்குவ - கொடுப்பவைகளாம், நாற்றிக்கும் - நாலு திக்குகளிலும், முகமும் - முகங்களும், நான்க - நாலாகவுடையனவாம், எ - று.

வாசற்படியையுடைய திக்குகள் தோறும் முகம் என்றதனால் சதுர்முக பஸ்திகளாக மூன்று சகதியிலும் இருப்பதால் எழுபத்திரண்டு தீர்த்தங்கரர்களுடைய (அதாவது: திரிகால தீர்த்தங்கரர்களுடைய) பெயர்களாகும் என்பது பெறப்படும். (கூரு)

வேறு.

1143. நாத னுள்ளுறு நான்முகம் போலுநல்
வாய்த ஞன்குடை மண்டப நான்கினுட்
சாத கும்பமஞ் சங்கணு லைந்துவில்
லோது மைம்பது மோங்கி யகன்றவே.

(இ - ள்) உள்ளுறும் - உள்ளேயடைந்திராநின்ற, நாதன் - ஜினேந்திரனுடைய, நான் முகம்போலும் - சதுராননத்துவம் போலும், நல் - நன்மையாகிய, வாய்தல் நான்குடை - நாலு மஹா திக்குகளிலும் நாலு வீதி வழிகளையுடைய, மண்டபம் - இந்த ஜகதீதல மண்டபங்கள் மூன்றிலும், நான்கினுள் - நாலு மஹா வீதி வாசற்படி வழிகளில், (ஒவ்வொரு திக்கு வழிகளிலும்), சாதகும்பம் - ஸ்வர்ணத்திலாலாகிய கும்பங்களை நடுவில் மேலே வைக்கப்பட்டனவாகிய, மஞ்சங்கள் - மேடைகள், நாலைந்து வில் - இருபது வில்லும், ஓதும் - சொல்லப்பட்ட, ஐம்பதும் - ஐம்பது வில்லும், ஓங்கி - உயர்ந்து, அகன்ற - அகன்றனவாம், (அதாவது: இருபது வில்லுயர்ந்தும், ஐம்பது வில்லகன்றும் ஒரு மண்டப வழிக்கொன்றாக மூன்றுக்கும் மூன்று மேடைகள் நாலு திக்கிலும் இராநின்றன) எ-று. (கூகூ)

1144. மாரி போல முழங்குவ மஞ்சின்மேல்
பேரி நான்முகச் சங்க மிரண்டுள
காரி னுண்மலி சூரிய னேர்பொனின்
வாரின் வந்திழி கண்டையு மாகுமே

(இ - ள்) அம்மஞ்சின் மேல் - அந்த மேடைகளில் ஒவ்வொன்றின்மேலும், மாரி போல - வர்ஷா காலத்து மேகம் போல, முழங்குவ - கர்ஜிக்கும்படியான,

பேரி - முரசமும், நான் முகம் - நான் முகமுடைய, சங்கம் - சங்கும், (ஆகிய), இரண்டு - இந்த இரண்டும், உள-உள்ளனவாம், காரினுள் - அழகோடு கூடிய அம் மண்டபத்தினுள், மலி - ஒளி நிறைந்த, சூரியனோர் - சூர்யபிம்பம் போன்றதும், பொன்னின் - பொன்னாலாகிய, வாரின் - சங்கிலியினின்றும், வந்திழி-வந்து அம் மேடையில் தொங்குகின்ற, கண்டை - சேமங்கலம் (அதாவது: ஜெயமங்களம் என்னும் ஜெயகண்டையானது,) ஆகும் - விளங்குவதாகும், எ - று. (கள)

வேறு.

1145. கடிகையுஞ் சாமமுங் கலந்த சந்தியு
முடிவினிற் கண்டைசங் கங்கள் பேரிகை
யிடியெனத் தம்மிலே முழங்கி யின்னொலிப்
படுவதா முப்பதோ சனைப ரக்குமே.

(இ - ள்) கடிகையும் - ஒரு நாழிகையும், சாமமும் - ஒரு சாமமும், கலந்த சந்தியும் - நாழிகையும் சாமமும் கலந்த சந்திப்பாகிய பதினைந்து நாழிகையும், முடிவினில் - முடிந்த காலமாகிய இவைகளில், (அதாவது: நாழிகை முடிவில்), கண்டை - ஜெயகண்டையும், (ஒரு சாம முடிவில்), சங்கங்கள் - சங்குகளும், (பதினைந்து நாழிகையில்), பேரிகை - பேரிகையும், (சப்திப்பனவாகிப் பதினைந்து நாழிகை சென்ற வேளையில், நாழிகை முடிவும் சாம சந்தியும் வருவதால் அப்போது இந்த மூன்று வாத்தியங்களும்), இடியென - மேககர்ஜனையைப்போல, தம்மிலே - தமக்குள்ளே மூன்றும் ஒன்றாகச் சேர்ந்து, முழங்கி - கர்ஜிக்க, இன் - இனிமையாகிய, ஒலி - அந்த சப்தமானது, படுவதாம் - வியாபிக்குந் தூரமாகிய, முப்பதோசனை - முப்பது யோஜனை தூரம், பரக்கும் - விஸ்தரித்துக் கேட்கும், எ - று. (கஅ)

1146. பெருமலர் மாரிய பேரி யாதியின்
றிருநிலை வாய்தல்க ளிரு மருங்கிசை
மருவிய கருவிக ளேந்திக் கந்தப்ப
வரசர்க டேவிமார் பாட லாகுமே.

(இ - ள்) பேரியாதியின் - பேரிகை முதலாகிய இப்போது சொன்ன வாத்தியங்களையும், பெரும் - மிகுதியாகிய, மலர் மாரிய - தேவர்களால் சொரியப்பட்ட புஷ்ப வருஷங்களையுமுடைய, திருநிலை - இந்த ஸ்ரீ நிலயத்தினுடைய, வாய்தல்கள் - வழிகளின், இருமருங்கு - இரண்டு பக்கத்திலும், இசை - கீதங்களை, மருவிய - சேர்ந்திராநின்ற, கருவிகள் - வீணை முதலாகிய வாத்தியங்களை, ஏந்தி - தரித்து, கந்தப்பவரசர்கள் - கந்தர் வேந்திரர்களுடைய, தேவிமார் -

தேவியர்களின், பாடலாகும் - பாடல்கள் நிகழ்கின்ற சங்கீத மண்டபங்க ளாகும், எ - று. (கக)

1147. மங்கல நிரையவே வாய்தல் தோரணப்
பந்தியி னிரையவே படி முடிவெலா
மிங்கெலா வாய்தலுங் காவ லோம்பலிற்
றங்கினார் சோதமீ சான ராசரே.

(இ - ள்) படி முடிவெலாம் - இந்த ஜகதீதல பூமிகளிலெல்லாம், மங்கலம்- அஷ்டமங்கலங்களின், நிரைய - வரிசைகளையுடையனவாம், வாய்தல் - வாசற்படி வழிகளெல்லாம், தோரணம் - மகர தோரணங்களினுடைய, பந்தியின் - வரிசை களின், நிரைய - ஸமூகங்களையுடையனவாம், இங்கு - இவ்விடங்களில், எலா வாய்தலும் - எல்லா வாசற்படிகளிலும், காவலோம்பலிற் - காவல் செய்வதில், சோதமீசானராசர் - ஸௌதர்ம ஈசான கல்பத்து தேவாதிபதிகள், தங்கினார் - தங்குதல் கொண்டார்கள், எ - று. (௧00)

1148. இரவியெண் ணரியவாம் பரிதி யின்னிடை
மருவிய தெனமணி யொளிசெய் மண்டலத்
துருவொரு பிழம்பதா யொளியிற் றோன்றிடுந்
திருநிலை யம்மெலாந் திருநி லையமே.

(இ - ள்) எண்ணரியவாம் - அஸங்கியாதமாகிய, இரவி - சூர்யர்கள், பரிதி யின்னிடை - பரிவேஷ்டத்தினுடைய மத்தியில், மருவியதென - சேர்ந்து பிர காசிப்பது போல, மணியொளி செய் - இரத்தின ஜோதி செய்கின்ற, மண்ட லத்து - பரிவேஷ்டத்தினுள், உருவு - இந்த ஸ்ரீ நிலயத்தின் ரூபமானது, ஒரு பிழம்பதாய் - ஒரே கூட்டமாக, ஒளியில் - பிரகாசத்தோடு, தோன்றிடும் - காணப்படும், திருநிலையம்மெலாம்-இப்படிப்பட்ட ஸ்வரூபமுடைய ஸ்ரீநிலயமெல் லாம், திருநிலையம்மே - ஸ்ரீ நிலயமே, எ - று.

இங்ஙனங் கூறியதனால், இதற்குவேறொன்று உபமையாகாதென்பது பெறப் படும். (௧0௧)

1149. பலநெறி யொளிமணி பயின்ற பந்தியு
மிலதையும் வல்லியு மிருந்த கூடமும்
விலையல்குன் மடநல்லார் மேக லைகளு
முலைகளும் போன்மயக் குறாக்கு முற்றுமே.

(இ - ள்) முற்றும் - அந்த ஜகதீதலங்கள் முழுதும், பல - பலவாகிய, நெறி - வழிப்பாட்டையுடைய, ஒளி - பிரகாசியாநின்ற, மணி - இரத்தினங்களி

ஞல், பயின்ற - செய்திராநின்ற, பத்தியும் - பந்தி வரிசைகளும், இலதையும் - இலைக்கொடிகளின் வேலையும், வல்லியும் - கோல் கொடி வேலைகளும், இருந்த - செய்திராநின்ற, கூடமும் - கூட கோட்டகங்களும், (பார்த்தால்), விலையல்குன்மட நல்லார் - வேசியா ஸ்த்ரீகளுடைய, மேகலைகளும் - மேகலாபரணங்களும், முலைகளும் - ஸ்தனங்களும், போல் - போல, மயக்குறுக்கும் - பிரமிக்கச் செய்யும், எ - று. (கO௪)

1150. துவர்ப்பசை நான்கிலார்க் கிறைவன் றொன்னகர்ச்
சுவர்த்தல நான்கிரு காத மோங்கிமா
தவர்க்கிறை நகர்ச்சுவ ரகலம் பாதமே
லுவப்பமூன் றோசனை விரிந்த கன்றவே.

(இ - ள்) துவர்ப்பசை நான்கு - சதுஷ்கஷாயங்கள், இலார்க்கு - இல்லாதவர்களுக்கு, இறைவன் - நாதனாகிய ஜினேந்திரனுடைய, தொல் - பழமையாகிய (அதாவது : பாரம்பரியமாக வாராநின்ற), நகர் - சமவஸரணத்தில், (லட்சுமீ வர மண்டபத்தின்), சுவர்த்தலம் - சுற்றுச்சுவர்கள், இரு - பெரிதாகிய, நான்கு காதமோங்கி - நாலு காத உன்னதமாகி, மாதவர்க்கு - கணதராதி மஹா முனிவார்களுக்கெல்லாம், இறை - நாதனாகிய அந்த பகவானுடைய, நகர்ச்சுவர் - முன் சொன்ன கோவில் சுவரினுடைய, அகலம் - அகலமானது, பாதம்-கால் காதமாம், மேல் - (அந்தச் சுவர்போக) அதற்கு மேல், உவப்பம் - உள்ளகலமானது, மூன்றோசனை - மூன்று யோஜனை, விரிந்து - விசாலமாகிய, அகன்ற - அகலத்தையுடையதாகும், எ - று. (கO௩)

1151. தலங்களி னுயரமா மறுபத்து நான்குவில்
விலக்குட னறுபத்து நான்கு வீழ்ந்தவ
ணிலங்கண்மூன் னூற்றெழு பத்தோ ரைந்துகீழ்த்
தலந்தன்மண் டலங்கண்மூ வாயி ரங்களாம்.

(இ - ள்) தலங்களின் - (முன் சொன்ன அந்தச் சுவருக்குமேல் கோபுரத்தின்) தலங்களினுடைய, உயரம்-உன்னதமானது, அறுபத்து நான்கு வில்.(ஒவ்வொன்றுக்கும்) அறுபத்து நாலுவில், ஆம் - ஆகும், உடன் - உடனே, விலங்கு-குறுக்காக, அறுபத்து நாலு வீழ்ந்து - (அடிநிலையாகிய பன்னிரண்டு காதம் அதாவது மூன்று யோஜனை அகலத்தினின்றும்) அறுபத்து நாலுவில்லகலம் சுற்றிலும் மேகலையாக வீழ்ந்து, நிலங்கள் - (மறுபடியும் அறுபத்துநாலு வில்லுயர்ந்து அதன் மேல் அறுபத்து நாலுவில் குறுக்காகச் சுற்றிலுமகன்று மேகலையாகி இம் மாதிரியாகவே மேலே மேலே) நிலைகளானவை, முந்நூற்றெழுபத்தோரைந்து - முந்நூற்றெழுபத்தைந்து, கீழ் - அடியிலாகிய, தலந்தன் - அறுபத்துநாலுவில்

லகன்ற முதனிலையாகிய தளத்தில், மூவாயிரம் - மூவாயிரமாகிய, மண்டலங்கள்-மேடைகள், ஆம் - ஆகாநின்றன, எ - று. (௧0௪)

1152. ஆயவித் தலந்தொறும் மண்டல மெட்டினை
மாயச் சென்றொழிந் திருந்த வெட்டின்மேற்
றூயமண் டலத்தொகை யிலக்க மைந்தினோ
டாயிர மறுபத்து நான்கு மாகுமே.

(இ - ள்) ஆய - இப்படி முதனிலையில் மூவாயிரங்களாகிய, மண்டலம் - மேடைகளானவை, இத்தலந்தொறும் - இந்தக்கோபுரத்தின் மேல் மேல் நிலைகள் தோறும், எட்டினை - எட்டெட்டு மேடைகளாக, மாயச்சென்று - குறைவாகிச் சென்று, மேல் - மேனிலையாகிய முந்நூற்றெழுபத்தைந்தாம் நிலையில், ஒழிந்திருந்த - மீந்து நின்ற மேடைகள், எட்டு - எட்டேஆகும், தூய - பரிசுத்தமாகிய, மண்டலத்தொகை - இந்தக்கோபுரத்தின் மொத்தமேடைகளின் சங்கியைகள், இலக்கமைந்தினோடு - ஐந்து லட்சத்தோடு, ஆயிரமறுபத்து நான்குமாகும் - அறுபத்து நாலாயிரங்களாகா நின்றன, எ - று. (௧0௫)

வேறு.

1153. கடித டத்தள வுள்ள வரண்டகம்
படியி னூற்றடி நான்கிற் பரந்தன
கொடி நிரைத்தன கோயி னிலங்களை
மடநல் லார்கலை போல வளைந்தவே.

(இ - ள்) கோயில் - ஸ்ரீ நிலயமாகிய கோயிலில், நிலங்களை - இப்போது சொன்ன கோபுரத்தில் ஒவ்வொரு நிலங்களிலும் அறுபத்து நாலு வில்லுயர்ந்த விளிம்புகளில், கடிதடத்தளவுள்ள - துவஜக்கொடியில் பேர் பாதிப் பிரமாணமான, வரண்டகம் கொடி - வரண்டகத்துவஜங்கள், நிரைத்தன - சூழ்ந்தனவாகி, படியினால் - கிரமத்தினால், தடிநான்கில் - நான்கு வில்லுக்கொன்றாக, பரந்தன - பரவினவாம், (அவற்றைப் பார்த்தால்), மடநல்லார் - ஸ்த்ரீமார்களுடைய, கலை போல - மேகலை போல, வளைந்த - சூழ்ந்திராநின்றனவாம், எ - று. (௧0௬)

1154. தேசுலாந் திருநிலை யத்தின் மேனிலங்
கோசநீண் டகன்றுவச் சிரத்த டக்கமாய்
மாசிலா மணிகளான் மலிந்த தன்மிசைக்
கோசநான் குயர்ந்துபொற் கும்ப மாகுமே.

(இ - ள்) தேசுலாம் - ஜோதியால்வியாபித்திராநின்ற, திருநிலையத்தின் - ஸ்ரீ நிலய கோபுரத்தின், மேனிலம் - முந்நூற்றெழுபத்தைந்தாவது நிலையில்,

கோச நீண்டகன்று - ஒரு குரோசம் அகல நீளமாகி, வச்சிரத்து - வஜ்ர ரத்தினத்தால், அடக்கமாய் - மேலே தளமாகச் செய்து, அதன் மிசை - அதன் மேல், மாசிலா - குற்றமில்லாத, மணிகளால் - இரத்தினங்களால், மலிந்து - நிறைந்து, கோச நான்குயர்ந்து - நாலு குரோசம் உன்னதமாகி, பொற்கும்பமாகும் - பொன்னாலாகிய கடமானது ஆகாநின்றது, எ - று. (கoஎ)

வேறு.

1155. இரவிவந் துதய மேறி யிருந்தது போலு மிந்தத்
திருநிலை யத்தி னுச்சி செம்பொற்கும் பத்த சென்னி
மருவிய கமலத் துட்செம் மாமணி பாத மோங்கி
விரகினாற் கோசம் பாதம் விரிந்துகீழ் சுருங்கிற் றும்மேல்.

(இ - ள்) இரவி - ஸூர்யன், உதயமேறி வந்து - உதயாசல பர்வதத்தின் மேல் உதயமாகி வந்து, இருந்தது போலும்-பிரகாசித்திருந்ததற்குச் சமானமாகிய, இந்தத் திருநிலையத்தின் - இந்த ஸ்ரீநிலய கோபுரத்தின், உச்சி - மேலே யிராநின்ற, செம் - சிவந்த, பொற்கும்பத்த - பொன்னாலாகிய கும்பத்தினுடைய, சென்னி - அக்கிரத்திலே, மருவிய - சேர்ந்திராநின்ற, கமலத்துள், தாமரைக் கமலத்திலே, (உள்ள), செம்மாமணி - பத்மராகரத்தினமானது, பாதமோங்கி - முன் சொன்ன கும்பத்தின் உயரத்தில் நாலிலொன்றாகிய கால்பாகம் (அதாவது: ஒரு குரோசம்) உன்னதமாகி, கீழ் - அடியில், கோசம் பாதம் - கால்குரோசம், விரிந்து - அகன்று, விரகினால் - கிரமத்தினால், மேல் - மேலே, சுருங்கிற்றும் - சுருங்கப்பட்டதாம், எ - று. (கoஅ)

1156. இத்தலத் தகத்தி னுள்ளா லினமணிக் குமுத வீற்றின்
வைத்தபொற் கமலஞ் சூழ்ந்து காவத மாய தன்பான்
முத்தமா லைகள்போய்க் கந்த குடியினை முழுதுஞ் சூழ்ந்த
தத்துநீர் கங்கை கூடந் தன்மிசைச் சென்ற தன்றே.

(இ - ள்) இத்தலத்து - (இப்போது சொல்லிவந்த விதமாயிராநின்ற மூன்றாற்றெழுபத்தைந்து நிலைகள் பொருந்திய இந்தக் கோபுரத்தலங்களினுடைய, அகத்திலுள்ளால் - முதனிலையின் கீழுள்ள மண்டபத்தின் மேலே மத்தியில் (அதாவது: பன்னிருகாத மகன்ற அம்மண்டபத்தின் மேலே நடுவில் அதாவது: அம்மண்டபத்தின் கீழே நடுவிலிரா நின்ற ஒரு காத மகன்ற அந்த குடிக்கு நேராக மேலே), இனம் - உயர்ந்த இனமாகிய, மணி - இரத்தினத்தாலே செய்த, குமுதவீற்றின் - குமுத விருத்தத்தினாலே (அதாவது: கர்ணிகையாக் கிருதியாக உள்ள சிகரத்தாலே), வைத்த - நடுவில் வைக்கப்பட்டதாகிய, பொற்கமலம் - பொன்னாலாகிய தாமரைக்கமலமானது, காவதமாய் - ஒரு காதவகல

முடையதாகி, சூழ்ந்து - விரத்தமாகச் செய்திராநின்றதாகி, [illegible] மலத்தினிடம், முத்த மாலைகள் - முத்து மாலைகள், போய் - தொங்கிநின்று போகி, கந்த குடியினை - அதற்கு கோசக் கீழாகவிராநின்ற கந்தகுடி மண்டபத்தை, முழுதும் - முழுமையும், சூழ்ந்த - சூழ்ந்து தொங்கின, (அதைப்பார்த்தால்), கங்கை கூடந்தன் மிசை - கங்கா தேவியின் மாளிகையது சிகரின்மேலே, தந்த நீர் - இமையோத்கிரி பர்வதத்தினின்றும் ததும்பி விழுகின்ற ஜலமானது, சொரிவதொத்த - சொரிகின்றதற்குச் சமானமாயிராநின்றது, எ - று. (௧௦௯)

1157. பருமணி கூட மொன்றின் பக்கத்தி னிரண்ட வற்றை
மருவிய விரண்டு தூபை மண்டலம் மற்றி தன்கட்
பெரியதெண் ணான்கு மெட்டும் வில்லுயர்ந் தகன்ற தன்றன்
னரையதன் னரைய நின்ற வந்தர நுகம தாமே.

(இ - ள்) மண்டலம் - (முன் சொன்ன ஸ்ரீ நிலைய கோபுரத்தினுடைய நிலைகளிலிராநின்ற மேடைகளில்) ஒவ்வொரு மேடைகளிலும், மணி - இரத்தின நிர்மிதமாகிய, பரும் - பெரிதாகிய, கூடமொன்று - ஒரு கூடமானது மத்தியி லிராநின்றது, அவற்றை - அந்தக் கூடத்தை, மருவிய, சேர்ந்திராநின்றதாகிய, இரண்டு பக்கத்தின் - இரண்டு பக்கங்களிலும், இரண்டு தூபை - ஒரு பக்கத் துக்கு இரண்டு தூபைகள் (அதாவது: கூடத்தைச் சேர்ந்தாப்போல பெரிய தூபை யும் அதன் பக்கத்தில் சிறிய தூபையுமாக இப்படி ஒரே மேடையில், நடுவில் கூடமும் கூடத்தின் ஒரு பக்கத்துக்கும் பெரிதும் சிறிதுமாகிய இரண்டு தூபை களும், ஆக ஐந்தும்) இராநின்றன, மற்றிதன்கண் - இந்த ஐந்துகளில், பெரியது - பெரிதாகிய கூடமானது, எண்ணான்கு வில்லுயர்ந்து - முப்பத்திரண்டு வில்லு உன் னதத்தையுடையதாகி, அதன் தன்னரை - அந்தக் கூடத்தின் உன்னதம் அகலங் களில் பேர்பாதியாகிய பதினறு வில்லுயரமும் நாலு வில்லகலமுமாகிய பெரிய தூபைகளும், அதன்னரை - அதில் பாதியாகிய எட்டு வில்லுயரமும் இரண்டு வில் லகலமும் சிறிய தூபைகளுமாகி, நின்ற - இராநின்றன, அந்தரம் - ஒவ்வொரு ஸ்தூபைகளுக்கும் கூடத்துக்கும் இடைவிட்ட இடமானது, நுகமதாம் - ஒரு வில்லுப் பிரமாணமாகும், எ - று. (௧௧௦)

1158. நிலங்கணான் கிரண்டொன் றாகி நின்றமா கூட மாகி
யிலங்குமண் டலங்க டந்த மிடைநுக மிரண்ட வாகும்
மலிந்துவெண் கொடிக ணின்ற மண்டல மொன்றி னூறாம்
விலங்கன்மே லெழுந்த வன்னக் குழாத்தினுற் பத்து நான்காம்.

(இ - ள்) நிலங்கணான்கு - (மேடையின் நடுவிலிருக்கப்பட்ட கூடமானது) நாலு நிலையும், இரண்டு - (அதன் ஓரத்தில் இராநின்ற பெரிய ஸ்தூபை) இரண்டு நிலையும், ஒன்றாகி - (அதன் ஓரத்தில் இராநின்ற சிறிய ஸ்தூபை) ஒரு நிலை

யாகியும், மாகூடமாகி - பெரியதாகிய சிகரங்களாகியும், மண்டலங்கள் - ஒவ்வொரு மேடைகளும், நின்ற - நிலை பெற்றனவாய், இலங்கும் - விளங்கும், மண்டலங்கள் தந்தமிடை - ஒவ்வொரு மேடைகளுக்கும் உள்ள இடை வெளியானது, நூகமிரண்டவாகும் - இரண்டு வில்லுப் பிரமாணமாகும், (அதாவது: இரண்டு வில் லிடை விட்டு ஒவ்வொரு மேடையும் இருக்கும்), மண்டலமொன்றின் - மற்றும் அந்த மேடைகளில் ஒவ்வொன்றிலும், மலிந்து - நிறைந்து, வெண் கொடிகள் - வெளுப்பாகிய த்வஜக் கொடிகள், விலங்கல் மேல் - பர்வதத்தின் மேல், எழுந்த - எழுந்து பறக்கின்ற, அன்னக்குழாத்தின் - ஹம்ஸ பக்ஷிக்கூட்டங்கள் போல, நூறும் நாற்பத்து நான்காம் - நூற்று நாற்பத்து நான்காகும், எ - று. (கககஎ)

1159. ஈரெட்டா யிரமு மீரா றிலக்கமுங் கோடி யெட்டும்
வாரத்தை யட்டார் கோயின் மண்டலக் கொடியி னீட்டம்
தேரட்டார் கோயிற் கீழைத் தலத்தின்மேல் வரண்ட கத்த
வோரெட்டின் பாதி யொன்பா னெட்டைஞ்சேழ் தானத் தாலே.

(இ - ள்) வாரத்தை - ஆசையை, அட்டார் - விலக்கி ஜயித்திராநின்ற ஜினேந்திரனுடைய, கோயில் - ஸ்ரீ நிலயத்தின் (கோபுரத்திலிருக்கப்பட்ட), மண்டலம் - மேடைகளின் மேலிராநின்ற, கொடியின் - த்வஜக்கொடிகளுடைய, ஈட்டம் - மொத்தத் தொகையானது, கோடி யெட்டும் - எட்டுக்கோடியும், ஈராறிலக்கமும் - பன்னிரண்டிலட்சமும், ஈரெட்டாயிரமும்-பதினாறாயிரமுமாகும், தேர்-ரதம் போல், அட்டு-(தேவர்களால்) நிருமிதஞ் செய்து, ஆர்-நிறைந்திராநின்ற, கோயில்- இந்த ஸ்ரீநிலயகோபுரத்தின், கீழைத்தலத்தி ன்மேல்-அடி நிலையின் விளிம்புகளில், வரண்டகத்த-(இராநின்ற) வரண்டகக் கொடிகளின் சங்கியைகளானவை, தானத்தால்-ஸ்தானவரிசைக்கிரமத்தால், ஓரெட்டின் பாதி - (ஏக ஸ்தானத்தில்) நாலும், ஒன்பான்-(தசஸ்தானத்தில்) ஒன்பதும், எட்டு-(சதஸ்தானத்தில்) எட்டும், ஐஞ்சு-(ஸஹஸ்ர ஸ்தானத்தில்) ஐந்தும், ஏழ் (தசஸஹஸ்ர ஸ்தானத்தில்) ஏழும், (ஆகிய எழுபத்தையாயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்று நாலு கொடிகள் ஆகும்), எ - று. (ககஉ)

இதில் நூற்று நாற்பத்துநாலு கொடி ஜாஸ்தியாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

1160. இரண்டினோ டிரண்டு நூறு தலந்தொறுங் குறைந்து சென்னி
யிரண்டினோ டிரண்டு நூறுந் தொகையொரு கோடி நாற்பத்
திரண்டிலக் கங்க ளறுபத் தோராயிர மிவற்றி னோடு
வரண்டகப் பதாகை நூற்று நாற்பத்து நான்கு மாமே.

(இ - ள்) (இப்போது முதனிலையில் சொன்ன வரண்டகத் தொகையானது), தலந்தொறும் - மேல் மேல் நிலைகடோறும், இரண்டினோடிரண்டு

நூறு - இருநூற்றிரண்டு இருநூற்றிரண்டாக, குறைந்து - குறைந்து, சென்னி - மேனிலையாகிய மூந்நூற்றெழுபத்தைந்தாநிலையில், இரண்டினோடிரண்டு நூறும்-இருநூற்றிரண்டு வரண்டகக்கொடிகளாகும், வரண்டகப்பதாகை-இப்படியாகிய வரண்டகத்துவஜங்களின், தொகை - மொத்தத் தொகையானது (எவ்வளவென்றால்), ஒரு கோடி நாற்பத்திரண்டு லக்கங்கள் - ஒரு கோடியே நாற்பத்திரண்டு லக்ஷங்களுடன் சேர்ந்த, நாற்பத்தோராயிரம் - நாற்பத்தோராயிரமும், இவற்றினோடு - இவற்றோடு, நூற்றுநாற்பக்துநான்கும் - நூற்றுநாற்பத்துநாலும், ஆம் - ஆகும், எ - று.

இதில் இருபதினாயிரத்து மூந்நூற்று நாற்பத்துநாலு ஜாஸ்தியாகச் சொல்லியிருக்கிறது. (கக௩)

1161 வரண்டகம் மண்ட லத்தின் வந்தவக் கொடியின் குப்பை
இரண்டையுந் தொகுப்பக் கோயிற் கொடியின திட்ட மாகுந்
திரண்டுவந் திழியுந் தேவர் சித்திர கூடங் காணு
மருண்டுநின் றுரைப்பர் வையத் தில்லதோர் வடிவி தென்றே.

(இ - ள்) வரண்டகம் - வரண்டகத்திலும், மண்டலத்தின் - மேடைகளிலும், வந்த-வரப்பட்ட, அக்கொடியின் - அந்த துவஜங்களினது, குப்பை இரண்டையும் - கும்பல்களிரண்டின் தொகைகளையும், தொகுப்ப - ஒன்றாகச் சேர்த்துக் கூட்ட வந்த தொகையானது, கோயில் - ஸ்ரீநிலைய கோபுரத்தின், கொடியினது - த்வஜங்களது, ஈட்டமாகும் - சமூகங்களாகும், திரண்டுவந்து - கூட்டங்களாக வந்து, இழியும் - இச்சமவசரணத்தில் சேர்கின்ற, தேவர் - அமரர்கள், சித்திர கூடம் - விசித்ரமாகிய சிகரங்களையுடைய இக்கோபுரத்தை, காணு - பார்த்து, மருண்டு நின்று - பிரமித்து நின்று, இது - இந்த ஸ்ரீ நிலையமானது, வையத்து - இந்த லோகத்தில், இல்லது - வேறெங்கும் இல்லாததாகிய, ஓர் - ஒப்பற்ற, வடிவு - ஸ்வரூபமாகும், என்றுரைப்பர் - என்று சொல்வார்கள், எ - று. (ககச)

1162. தேவரை வியப்பு றுக்குஞ் சித்திர கூடஞ் செம்பொற்
காவத மிரண்டு யர்ந்த வாய்தல்க ளகன்ற காத
மூவுல கத்தி னல்ல மணிமுத்தின் வைரத் தாய
காவலர் முடிகள் போலுங் குடுமிய கதவ மெல்லாம்.

(இ - ள்) தேவரை - சதுர்ணிகாயாமரர்களை, வியப்புறுக்கும் - ஆச்சரியப் படுத்தும்படியான, சித்திரகூடம் - இந்தச் சித்திரகூட மண்டபமானது, (ஸ்ரீநிலையமென்றும் லக்ஷ்மீவரமண்டபமென்றும் பெயர்கள் கூறப்பட்டு, சுவர் போக உள்ளே பன்னிரு காத விஸ்தீர்ணமுடையதாகி மேலே மேலே மூந்நூற்றெழுபத்தைந்து நிலைக்கோபுரத்தையுமுடையதாகி இதில் நாலு காதம் உயர்ந்த சுவரில்), எல்லாம் -

நான்கு மஹா திக்கு வீதிகளிலும், செம்பொன் - சிவந்தபொன்னாலாகிய, வாய்தல்கள் - வாசற்படிகள், காவதமிரண்டுயர்ந்த - இரண்டு காதம் உன்னதமாகியன, காதம் அகன்ற - ஒரு காதம் அகலத்தையுடையன, கதவம் - கதவுகள், மூவுலகத்தின் - இந்த மூன்று லோகத்தில் உள்ள, நல்ல-நன்மையாகிய, மணி - இரத்தினத்தினாலும், முத்தின் - முத்துக்களினாலும், வைரத்து - வஜ்ர ரத்தினத்தினாலும், ஆய - ஆகிய, காவலர் முடிகள்போலும் - அரசர்களது கிரீடம்போலும், குடுமிய - சிகரங்களையுடையனவாகும், எ - று. (கக௫)

1163. கதவுகால் கந்தப் பட்டிக் கம்புகள் வயிரம் நானு
விதமணி பயின்ற பத்தி யாயிரத் தகத்து பைம்பொ
னிலதைவல் லிகளி னுள்ளா லிருந்தபத் திரிகண் முத்தின்
கதலிகைக் கம்பி னம்பொற் கமலங்கள் செறிந்த வற்றுள்.

(இ - ள்) கதவு - அக்கதவுகளில், கால் - நெடுக்குச் சட்டங்களும், கந்தப்பட்டி - குறுக்குச் சட்டங்களும், கம்புகள் - ஆணிகளும், வயிரம் - வஜ்ர ரத்தினங்களாம், நானுவிதமணி - பலவித ரத்தினங்களினால், பயின்ற - செய்திராநின்ற, பத்தி - பந்திகள், ஆயிரத்து - ஆயிரத்தின், அகத்து - நடுவில், பைம்பொன் - பசுமைபொருந்திய பொன்னாலாகிய, இலதை - கொடிகளும், வல்லிகள் - கோற்கொடிகளும், உள் - இவைகளினுள்ளே, இருந்த - இருந்தன, பத்திரிகள் - இலைகளும், முத்தின் - முத்துக்களாலாகிய, கதலிகை-கொடியும், (உடைய), கம்பின்- (குறுக்குச்சட்டம் நெடுக்குச்சட்டங்கள் சேர்ந்த சந்திப்புக்களில் உள்ள) ஆணிகளில், அம் - அழகிய, பொன் - பொன்னாலாகிய, கமலங்கள் - தாமரைக் கமலங்கள், செறிந்து - சேர்ந்து, அவற்றுள் - அத்தாமரைக் கமலங்களில், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கக௬)

1164. மருவிய மரக தத்தின் கொட்டைகள் வண்டு மட்டைப்
பருகுவ போலும் பைம்பொற் கிம்புரி யிருந்த பாங்கிற்
றிருமுதன் மங்க லங்கட் செறிந்தன சதங்கை மாலை
யரவமு மனங்கன் வில்லு மாயிடைப் பரந்த மாதோ.

(இ - ள்) மருவிய - சேர்ந்திராநின்ற, மரகதத்தின் - பச்சை ரத்தினத்தினாலாகிய, கொட்டைகள் - திரட்சிபெற்ற குமிழ்கள், வண்டு - பச்சைநிறமுள்ள வண்டானது, மட்டை - தாமரைமலரிலுள்ள மதுவை, பருகுவபோலும் - கிரகிப்பதற்குச் சமானமாகும், பைம்பொற்கிம்புரி - பசுமை பொருந்திய பொன்னாலாகிய பூண்களும், இருந்த - பொருந்தியிருந்தன, பாங்கின் - வரிசையாகிய முன்சொன்ன பந்திகளில், திருமுதல் - லக்ஷ்மிதேவி முதலாக, மங்கலங்கள் - மங்கலங்களாகிய ரூபங்களுடனே அஷ்டமங்கலங்களும், செறிந்தன - சேர்ந்திருந்தன,

சதங்கை - சிறுமணிச் சதங்கைகளுடையவும், மாலை - மாலைகளினுடையவும், அரவமும் - சப்தமும், அனங்கன் வில்லும் - மன்மதனுடைய வில்வடிவமும், ஆயிடை - அவ்விடத்தில் (அதாவது: அக்கதவுகளுடைய பந்திகளிலும் சட்டங்களிலும் சட்டப்பொருத்துகளிலும்), பரந்த - பரவியிருந்தன, எ - று. (கசஎ)

1165. புளகமும் பிறையுங் கம்பி னீலத்தின் சவியும் பொற்று
ரளகமு நுதலு நல்லார் வதனமு மனைய மொட்டின்
றளையவிழ் தாம முத்தின் றமங்கள் வயிரத் தாம
மிளவெயின் விரிபொற் றம மின்மணித் தாம மின்ன.

(இ - ள்) புளகமும்-(அந்தக் கதவுகளின் சட்டப் பொருத்துக்களில் உள்ள, குமிழ்களின் கீழ் சூர்யன் போல வட்டமாகிப் பிரகாசிக்கும்) கண்ணாடியும், பிறையும் - சந்திரப் பிரபை போன்ற கண்ணாடியும், கம்பின் - அந்தக் குமிழின் ஆணி முனையிலிராநின்ற, நீலத்தின் சவியும் - பச்சை ரத்தினத்தின் காந்தியும், (ஆகிய இவைகள்), நல்லார் - ஸ்திரீமார்களுடைய, பொற்றுரளகமும் - அழகிய மாலை யணிந்த அளகபாரத்தையும், நுதலும் - நெற்றியையும், வதனமும் - முகத்தையும், அனைய - நிகர்த்தனவாம், (அதாவது: நீலரத்தின காந்தி கூந்தலையும், சந்திரப் பிரபைக் கண்ணாடி நெற்றியையும், சூரியன் போன்ற விருத்தக் கண்ணாடி முகத்தையும் நிகர்க்கும்), (இன்னுமக்கதவுகளில்), மொட்டின்றளையவிழ்தாமம்-மொக்குகள் முறுக்கவிழ்ந்து மலர்ந்த பூந்தாமங்களும், முத்தின் தாமங்கள் - முத்து மாலைகளும், வயிரத் தாமம் - வஜ்ர ரத்தின மாலைகளும், இளவெயில் - இளவெயில் போன்ற பிரகாசம், விரி - பரவியிருக்கின்ற, பொற்றமம் - பொன் மாலைகளும், மின் - பிரகாசம் பொருந்திய, மணித்தாமம் - இரத்தின மாலைகளும், மின்ன - பிரகாசிக்க, எ - று. (கசஅ)

1166. வம்புகொண் டெழுந்து சூழ்ந்த மணியொளி பரந்த வாய்த
றம்புடை யிருந்து யர்ந்த தமனிய பீடத் துச்சிக்
கும்பங்க ளிருந்த வற்றிற் றூபங்கள் கோட்ப டாதே
யம்பரத் தெழுந்து திக்கைப் பரிமள மாக்கு நின்றே.

(இ - ள்) வம்புகொண்டு-புதுமையாகக் கிரணங்களைக் கொண்டு, எழுந்து - எழும்பி, சூழ்ந்த - வியாபித்த, மணியொளி - இரத்தினங்களின் ஜோதியானது; பரந்த - விசாலித்த, வாய்தல் - இப்போது சொன்ன வாசற்படியினுடைய, புடை - ஸமீபமாக அப்பியந்தரத்தில், இருந்து - இருக்கப்பெற்றதாகி, உயர்ந்த - தக்க உன்னதமுடைய, தமனியபீடத்து - ஸ்வர்ணபீடத்தின், உச்சி - மேலே, கும்பங்கள் - தூபகலசங்கள், இருந்து - இரா நின்றனவாகி, அவற்றில் - அவைகளில், தூபங்கள் - தூபங்களானவை, கோட்படாது - குறைவுபடாமல், அம்பரத்து -

ஆலயத்தில், எழுந்து - கிளம்பி, திக்கை - ஸ்ரீநிலயக்கோயிலின் எத்திக்குகளிலும், நின்று - வியாபித்து நின்று, பரிமளமாக்கும் - வாசனையை நிரப்பா நின்றன வாகும், எ - று.

தம் - சாரியை. திக்கை - உருபுமயக்கம். (கசக)

1167. வீதிக ளகன்று காதம் வேதிகை யிரண்ட வாகு
மோதிய கும்பத் திப்பா லொன்பது தூபை நிற்கும்
நீதியாற் றோர ணம்பத் தவற்றிடை நின்ற வப்பாற்
போதொடு பலிக ளேந்தும் பொன்செய்பீ டங்க ளாமே.

(இ - ள்) வீதிகள்-(அந்த வாசற்படியினுள்ளேயும் அதனப்பியந்தரத்திலும்) மஹாவீதிகள், காதம் அகன்று - ஒருகாதம் அகலமாகி, வேதிகையிரண்டவாகும் - (வீதியையும் கோணபூமியையும் வேறுபடுத்துவதற்கு வீதியினிருபக்கத்திலும்) இரண்டு வேதிகளையுடையனவாகும், ஓதிய - (வீதிவழியில் வாசற்படியின் உட்புறத்துமுன்) சொல்லப்பட்ட, கும்பத்து - தூபகலசமிருக்கும் மேடைக்கு, இப்பால் - அப்பியந்தர பாகத்தில், (வீதியிலேயே), ஒன்பது தூபை - ஒன்பது ஸ்தூபைகளானவை, நிற்கும் - ஒன்றின்முன்னொன்றாக வரிசையாய் நிற்கும், நீதியால் - வரிசையினால், தோரணம் பத்து - பத்துத்தோரணங்கள், அவற்றிடை- அத்தூபைகளை மத்தியவர்த்தியாகச்செய்து, நின்ற - இராநின்றன, அப்பால் - அதற்கும் உள்ளே, (அவ்வீதிவழியில்), போதொடு - புஷ்பங்களோடு, பலிகள் - பலிபிண்டங்களை, ஏந்தும் - தரிக்கும்படியான, பொன்செய் - பொன்னாற் செய்யப்பட்ட, பீடங்கள் - (நாலு வீதிக்கும் வீதிக்கொன்றாக நாலு) பீடங்கள், ஆம் - ஆகும், எ - று. (கஉO)

1168. கோசமூ வைந்திற் கந்த குடியினைச் சூழ வந்து
மாசிலாப் படிக பித்தி மார்பள வுயர்ந்தீ ரெட்டா
லாசைபோ னிறைவி லாத நிலங்கள்பன் னிரண்ட வாகி
யீசன்மா கணங்க ளீரா றிருக்கைதா னிருக்கு மாறே.

(இ - ள்) கோசமூவைந்தில் - பதினைந்து குரோசங்களால், கந்தகுடியினை - கந்தகுடி மண்டபத்தை, சூழவந்து - சுற்றிவந்து, மாசிலா - களங்கமில்லாத, படிக பித்தி - ஸ்படிகச்சுவர்கள், மார்பளவுயர்ந்து - மார்பளவுன்னதமாகி, ஈரெட்டால் - பதினாறு சுவர்களாலான, ஆசைபோல் - ஆசையைப்போல, நிறைவிலாத - எவ்வளவு வந்து சேர்ந்தாலும் நிரம்புதலில்லாத, நிலங்கள் பன்னிரண்டவாகி - த்வாதச கோஷ்ட பூமிகளாகி, ஈசன் - ஜினேந்திரனுடைய, மா-பெருமைபொருந்திய, கணங்கள் ஈராறு-த்வாதச கணங்கள், இருக்குமாறு-இருக்கும்படியான, இருக்கை- ஸ்தானங்கள், தான் - இவைகள்தானாகும், எ - று;

இவ்வளையபூமியானது பதினைந்து குரோசம் என்றதனால் ஒருபக்க விஸ்தீர்ணம் இதன் பாதியாகிய ஏழரைக்குரோசம் இரண்டு பக்கமும் சேர்ந்தால் பதினைந்து குரோசமாம் (அதாவது : மூன்றேமுக்கால் காதம்). ஒவ்வொரு பக்கத்திலும் முன்சொன்ன நாலுகாதம் உயர்ந்த ஸ்ரீநிலய கோயிலின் சுற்றுச் சுவரிலிருந்து ஏழரைக்குரோசம் (அதாவது : ஒன்றே முக்காலே அரைக்கால் காதம்) விஸ்தீர்ணமாகும்.

வீதிவழிபோக மற்ற கோணங்கள் ஒவ்வொன்றிலும் இரண்டு சுவராக எட்டோடு வீதிக்கு இருபக்கத்திலுமுள்ள சுவரைச் சேர்க்கச் சுவர்கள் மொத்தம் பதினாறும். சதுர்மஹா வீதிகளில் தூபகலச மேடையும் நவஸ்தூபைகளும் பத்துத் தோரணங்களும் பலிபீடங்களு மிருக்கின்றன.

சதுஷ்கோணங்களிலும் ஒரு கோணத்துக்கு மூன்று நிலங்களாக மொத்தம் பன்னிரண்டு நிலங்களாகும்.

த்வாதச கணங்களின் பெயர் விவரங்களை இன்னும் பின்னால் சொல்லுகின்றார். (கஉக)

1169. விக்கிர மங்கண் மூன்றாய் விரியும்வீ ரியன்றன் கோயிற்
சக்கர பீடங் காத மிரண்டகன் றுயர்வு கோமான்
றக்கதன் னளவ தாய்ப்பொன் மணிமய மாகி நானுப்
பக்கமு மேற லாகும் படிபதி னாறு தாமே.

(இ - ள்) விக்கிரமங்கள் - ஆத்ம ஸ்வபாவ குணபராக்கிரமங்கள், மூன்றாய்- மூன்றாகி, விரியும் - பரவும், (அதாவது : அதனாலேயே பரம்பி அறிந்தும், கண்டும், ஸ்வயம்புவாகி ஸ்வசாரித்திரத்தில் நிற்கும் அனந்தோத்ஸாஹம், அனந்தலருத்துவம், அனந்த விசித்திரம் என்கிற தன்மைகளையடையும்), வீரியன்தன் - அனந்த வீரியனாகிய ஜினேந்திரனுடைய, கோயில் - இந்த ஸ்ரீ நிலயமென்னும் ஆலயத்தில், (கோஷ்ட பூமிக்கும் அப்பியந்தரத்திலிராநின்ற), சக்கரபீடம் - தர்ம சக்கரமிருக்கும்படியான சக்கர பீடமானது, காதமிரண்டகன்று - இரண்டு காத விஸ்தீர்ணமாகி, உயர்வு - உன்னதமானது, கோமான் தக்க தன்னளவதாய் - ஜினேந்திரனுயரத்திற்குத் தகுந்த பிரமாணமாகி, நானுபக்கமும்-நாலு வீதிப்பக்கத்திலும், ஏறலாகும் - ஏறும்படியாகிய, படி - ஸோபானங்களானவை, பொன்மணிமயமாகி - பொன் இரத்தினங்களின் மயமாகி, பதினறதாம் - பதினாறாகும், எ - று. (கஉஉ)

1170. உரைசெய்த பீடத் தும்பர் வலங்கொண்மண் டலமோர் கோசத்
தரைநல்ல வரண்ட கத்த தனதகத் தளவ தேயாய்

விரைமலர் மாரி மேலா முகத்தவாய் விழுந்த போதின்
றரையின தகத்து நான்கு சதுமுகப் பூத மாமே.

(இ - ள்) உரைசெய்த - இப்போது சொல்லப்பட்ட, பீடத்து - பிரதம பீடமாகிய சக்கர பீடத்தினுடைய, உம்பர் - மேலே, வலங்கொள் மண்டலம் - (பவ்விய ஜீவன்கள் ஏறி) பிரதக்ஷிணம் வரும்படியான இடமானது, ஓர் கோசத்து - ஓர் குரோசம் அகலமாகி யிராநின்றது, அரைநல்ல வாண்டகத்த - இன்னும் அப்பீடத்தில் நன்மையாகிப் பேர்பாதியாகிய வாண்டக் கொடிகளினிடமானது, தனதகத்தளவதேயாய் - அந்த இடத்திற்குத் தக்க லக்ஷணமான உத்ஸேத பிரமாணங்களையுடையதாகியும், (அதுவல்லாமலும் அப் பீடத்தில்), மேலாமுகத்தவாய் - ஆகாசமுகத்தினின்றும் தேவர்களால் சொரியப் பட்ட, விரை - வாசனைபொருந்திய, மலர்மாரி - புஷ்பவருஷங்களினால், விழுந்த - விழுந்துகிடக்கின்ற, போதின் - புஷ்பங்களால் நிறைந்த, தரையின தகத்து - அப்பீடபூமியின் மத்தியில், சதுமுகப்பூதம் - சதுர்முகத்தையுடைய பூதங்கள், நான்கு - நான்கு மஹாவீதிகளின் நேராக வீதிக்கொன்றாக நாலு சதுர்முக பூதங் கள், ஆம் - ஆகும், எ - று. (கஉ௬௩)

1171. சக்கரன் சாபம் போலத் தனுவில்லை யுமிழச் சென்னி
மிக்கமா மணிசெ யாரம் விளங்குமா யிரத்த தாகித்
திக்குலாம் பொழுது காத நான்கதாய்ச் செறிந்தி ருந்தால்
விற்கண்மூன் றாய றப்பே ராழிதான் விளங்கு நின்றே.

(இ - ள்) சக்கரன் - தேவேந்திரனுடைய, சாபம்போல - வில்லாகிய இந் திரதனுஸைவைப் போல, தனு - அந்தச் சதுர்முகப் பூதத்தினுடைய சரீரமானது, வில்லை - கிரணத்தை, உமிழ - சொரிய, சென்னி - சிரசில், மிக்க-மிகுதியாகிய, மா - பெருமை பொருந்திய, மணி - இரத்தினங்களால், செய் - செய்யப்பட்ட, ஆரம் - ஹாரங்களானவை, ஆயிரத்ததாகி - ஆயிரங்களை யுடையதாகி, விளங்கும் - பிரகாசிக்கப்பெற்றதாகும், திக்குலாம்பொழுது - ஸ்ரீவிஹாரமாகின்றபோது, காத நான்கதாய் - நாலு காதமாகி, செறிந்திருந்தால் - ஸமவஸரணத்தை யடைந்திருந் தால், விற்கண் மூன்றாய் - மூன்று வில் பிரமாணமாகி, அறப்பேராழிதான் - தர்ம சக்கரமானது, நின்று - தரிக்கப்பெற்றதாகி நின்று, விளங்கும் - பிரகாசிக்கும், எ - று. (கஉ௪)

1172. முன்னைப்பீ டத்தின் பாதங் குறைந்தகன் றுயர்ந்த வாறே
யன்னமு மயிலு மில்லா வக்கொடி பீடந் தன்மேற்
சொன்னவா றுயர்ந்திட் டைந்து கோசமாந் தலத்தின் மீது
மன்னிய கந்தகுடியின் மண்டபங் காத மாமே.

(இ - ள்) முன்னைப் பீடத்தில் - முன்சொன்ன பிரதம பீடத்தில், பாதங் குறைந்து - நாலத்தொன்று குறைந்து, அகன்று - ஒன்றரைக் காதம் அகலத்தை யுடையதாகி, அவ்வாறே யுயர்ந்து - முன் பீடமுயர்ந்தது போல யோக்கியோத் ஸேதமாகி, அன்னமும் - ஹம்ஸமும், மயிலும் - மயில்ரூபமும், இல்லா - இல் லாததாகிய, அக்கொடிபீடந் தன்மேல் - (மற்ற அஷ்டவித த்வஜக்கொடிகளை யோக்கியப் பிரமாணமாகவுடைய) அந்த த்வஜபீடத்தின்மேல், சொன்னவாறு - முன்சொன்ன விதமாக, உயர்ந்திட்டு - உயர்ந்ததாகி, ஐந்து கோசமாம் - ஒன்றேகால் காத விஸ்தீர்ணமாகிய, தலத்தின்மீது - திரிதீய பீடத்தின்மேலே, மன்னிய - சேர்ந்திராநின்ற, கந்தகுடியின் மண்டபம் - நிர்க்கந்தனாகிய ஜினேந் திரனிருக்கும்படியான கந்தகுடி மண்டபமானது, காதமாம்-ஒருகாதவகலமுடைய தாகி யிராநின்றது, எ - று. (கஉ௩)

இதோடு ஸமவஸரண பூமியின் அளவுகள் பன்னிரண்டு யோஜனை மொத் தத்திற்குச் சரியாய் விட்டதை அறிந்துகொள்க.

1173. வான்பளிங் காலி யன்று நாலைந்து வில்லு யர்ந்த
நான்குதம் பங்க ளேந்த நவமணி மாலை வாயிற்
சூழ்ந்தத னடுவெண் முத்த மாலைகள் பத்து வில்லுத்
தாழ்ந்துசெம் முகிலி னின்றுந் தாரைவந் திழிவ போன்ற.

(இ - ள்) (அந்தமண்டபம்), வான் - வெள்ளையாகிப் பரிசுத்தமாகிய, பளிங் கால் - ஸ்படிகத்தினால், இயன்று - செய்யப்பட்டு, நாலைந்து வில்லுயர்ந்த-(ஜினேந் திரனுடைய உன்னதத்துக்குமேல்) இருபதுவில் உன்னதமாகிய, நான்குதம்பங்கள்- நாலு ஸ்தம்பங்கள், ஏந்த - தாங்க, வாயில் - அம்மண்டபத்தின் நாலுபக்கமும் விளிம்புகளில் மேலே, நவமணிமாலை - ஒன்பதுவித இரத்தினங்களினாலும் ஆகிய மாலைகள், சூழ்ந்து - சூழப்பட்டு, அதன்நடு - அம்மண்டபத்தின் நடுவில் உள்ளே, வெண் - வெளுப்பாகிய, முத்தமாலைகள் - முத்துமாலைகள், பத்துவில்லுத்தாழ்ந்து- மேனின்று பத்துவில்லு தாழ்ந்து தொங்கி, செம் - சிவந்த, முகிலினின்றும் - மேகத்தினின்றும், தாரை - மழைத்தாரைகள், வந்திழிவபோன்ற - வந்திறங்குவ தற்கு ஒப்பாயின, எ - று. (கஉ௪)

1174. மூன்றுவில் லுயர்ந்த கன்ற முழுமணிப் பீடஞ் சிய
மேன்றுமே லெழுவ போல விருந்தன வேந்தப் பட்ட
தான்றபொன் னணையு மம்பொன் விசியுநுண் டுகிலு மேவித்
தோன்றுமண் டபத்தி னுள்ளாற் சுடருமிழ்ந் திரவி போன்ற.

(இ - ள்) மண்டபத்தின் - இப்போது சொன்ன மண்டபத்தின், உள் - நடுவிலே, மூன்றுவில்லுயர்ந்து - மூன்றுவில்லுன்னதமாகி, அகன்று - யோக்கியப்

பிரமாண வகலத்தை யுடையதாகி, அம் - அழகிய, முழுமணி - முதிர்ச்சிபெற்ற இரத்தினத்தினாலாகிய, பீடம் - பீடத்தை, ஏந்தப்பட்ட - தரிக்கப்பட்ட, சீயம் - சிம்மங்கள், ஏன்று - பொருந்தி, மேலெழுவபோல - மேலெழும்பிச் செல்வன போல, இருந்தன - இராநின்றன, (அந்த ஸிம்ம பீடத்தின்மேலே), ஆன்ற - பெரிதாகிய, பொன்னணையும் - பொன்னாலாகிய மெத்தையும், அம் - அழகிய, பொன்- பொன்னாலாகிய, விசியும் - கட்டும், (அதாவது : திண்டும்), நுண் - மெல்லிதாகிய, துகிலும் - பட்டு வஸ்திரமும், மேவி - பொருந்தி, தோன்றும் - தோன்றுகின்ற, சுடருமிழ்ந்து-பிரகாசத்தைவீசி, (ஜினேந்திரனாகிய பகவான் அமர்ந்திருக்க) இரவி போன்ற - சூர்யப்பிரகாசத்தை நிகர்த்துப் பிரகாசித்தன, எ - று. (கஉஎ)

1175. வில்லலரை யகன்று யர்ந்த விழுமணிப் பீட மேய
வெல்லைநின் றிருமருங்கு மியக்கர்சா மரையி யக்க
நல்லெழிற் பீட மேவி நாகவிந் திரரு நாறு
வில்லுமிழ்ந் திலங்குந் தோண்மேல் விளங்குசா மரைய ராறுர்.

(இ - ள்) வில்லலரையகன்றுயர்ந்த - அரைவில்லகன்று அரைவில்லுயர்ந் திராநின்ற, விழுமணிப்பீடம் - பெருமை பொருந்திய ரத்தினத்தாலாகிய பீடங்களானவை, மேய - (நாலு திசையிலும் பகவானுடைய பீடத்தின் இரண்டு பக்கங்களிலும்) பொருந்தியிரா நின்றன, எல்லை நின்று - (அந்தப் பீடத்துக்கு இப்பால்) மெட்டாக நின்று, இருமருங்கும் - இரண்டு பக்கங்களிலும், இயக்கர் - யக்ஷதேவர்கள், சாமரை - வெண்சாமரைகளை, இயக்க - வீச, நல் - நன்மையாகிய, எழில் - அழகையுடைய, பீடம் - இப்போது சொன்ன பீடங்களில், மேவி - பொருந்தி, நாகவிந்திரரும் - பவணேந்திரர்களும், நாறுவில்லுமிழ்ந்து - பல விதமான கிரணங்களைச் சொரிந்து, இலங்கும் - விளங்குகின்ற, (ஆபரணங்களை யணிந்த), தோள்மேல் - தங்கள் தோள்களின்மேல், (வைத்து வீசாநின்ற), விளங்கும் - பிரகாசம் பொருந்திய, சாமரையாறுர் - வெண் சாமரைகளை யுடையவர்களானுர்கள், எ - று. (கஉஅ)

1176. தாமரைத் தடத்தெ ழுந்து பொன்மலை தன்னைச் சூழ்ந்த
காமரு கன்னி யன்னக் குழாத்தினின் றுன்கி லாத
சாமரைத் தொகுதி நான்கு பத்துறு முயி ரந்தான்
சோமரை வென்ற மூன்று குடையினுன் புடைய வாமே.

(இ - ள்) தாமரைத்தடத்து - தாமரைத் தடாகத்தினின்றும், எழுந்து - எழும்பி, பொன்மலைதன்னை - மஹாமேரு பர்வதத்தை, சூழ்ந்த-சூழ்ந்துகொண்ட-காமரு - வாஞ்சிக்கும்படியான, கன்னி - இளமையாகிய, அன்னக் குழாத்தினின்- ஹம்ஸ கூட்டங்களைப்போல, (வெளுப்பாகிய), சாமரைத்தொகுதி - சாமரைக்

டங்கள், நான்கிலாத - நாலு குறைந்த, நான்கு பத்து நூறாயிரந்தான் - நாற்பது லட்சமாம், சோமனை - சந்திரனை, வென்ற - ஜெயித்திராநின்ற, மூன்று குடையினன் - சத்திரத்திரயத்தையுடைய ஜினேந்திரனுடைய, புடைய - நாலு பக்கங்களிலும் உள்ளனவாய், ஆம் - ஆகும், எ - று. (கஉக)

1177. கருத்தினு லன்றி வானோர் கரத்தினுற் கண்ட தன்றி
யுரைத்தமண் டபத்தி னும்ப ருலகொரு மூன்று போல
நிரைத்தமூந் நிலத்த தாயெண் ணைந்துவில் லோங்கி யோக்கத்
தரைத்தலங் கீழ தாகி யரையரை மேல வாகி.

(இ - ள்) வானோர் - தேவர்கள், கருத்தினுலன்றி - மனதினுல் நினைத்து நிர்மாபணஞ்செய்தார்களே யல்லாமல், கரத்தினுல் - கையினுலே, கண்டதன்றி - செய்ததல்லாமையாகி, உரைத்த - இப்போது சொல்லப்பட்ட, மண்டபத்தின் - ஜினேந்திரன் அமர்ந்திராநின்ற கந்தகுடிமண்டபத்தினுடைய, உம்பர் - மேலே, உலகொரு மூன்றுபோல - இந்த ஒப்பற்ற மூன்று லோகத்தைப்போல, நிரைத்த- (ஒன்றின்மேலொன்ருக) வரிசைபெற்றிராநின்ற, மூந்நிலத்ததாய் - மூன்று நிலைகளையுடையதாகி, எண்ணைந்து வில்லோங்கி - மொத்தம் நாற்பது வில்லுன்னதமாகி, ஒக்கத்து - அந்த உன்னதத்தில், அரைத்தலம் - பாதியாகிய இருபது வில்லிடம், கீழதாகி - அடி நிலையாகி, அரையரை - அதன் பாதியாகிய பத்து பத்து வில்லு, மேலவாகி - மேல் இரண்டு நிலைகளுக்கும் உன்னதமாகி எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கஉ0)

1178. படிகளின் பந்தி வாய்தல் பரமன துருவ மங்கங்
குடையமூந் நிலங்கண் மும்மை யுலகினுக் கிறைமை யோதி
யிடையிருந் திறைவன் கோயிற் கிறைமைகொண் டிருந்த துள்ளார்
கடையிலா வறிவன் கந்த குடியமா ளிகையி தாமே.

(இ - ள்) படிகளின் - படிகளினது, பந்தி - வரிசைகளையுடைய, வாய்தல் - வாய்தல்கள் (நிலைக்கு நிலையுள்ளனவாகி), அங்கங்கு - ஆங்காங்கே நிலைக்கு நிலை, பரமனதுருவம் - ஜினேந்திரரூபமாகிய ஜினபிம்பங்களை, உடைய - உடைத்தாகிய, மூந்நிலங்கள் - மூன்று நிலங்கள், மும்மை யுலகினுக்கு - மூன்று லோகத்திற்கும், இறைமை - நாதனுந்தன்மையை, ஓதி - தெரியப்பண்ண, இடையிருந்து - ஸமவஸரணத்தின் மத்தியிலிருந்து, இறைவன் கோயிற்கு - ஜினேந்திரனுடைய ஆலயத்துக்கு, இறைமை கொண்டு - முதன்மை பெற்று, இருந்தது- (அம்மண்டபம்) இராநின்றது, உள் - உள்ளே, ஆர் - நிறைந்திராநின்ற, கடையிலா - முடிவில்லாத, (அதாவது : அனந்தமாகிய), அறிவன் - கேவல ஞானத்தை

யுடைய பகவனுடைய, கந்த குடிய மாளிகை - கந்தகுடி மாளிகையானது, இதாம்- இத்தன்மையுடையதாகும், எ - று. (கஉக)

வேறு.

1179. குடதிசைக் கொடிநிறை பீடத் தின்மிசை
யடிநிலாய்ப் பிண்டிவில் லறுப தோங்கிமேற்
கடியுலா மலர்மிடை கவடு கந்தமா
குடியினைச் சூழ்ந்துபோய்க் குலாவி நின்றதே.

(இ - ள்) கொடிநிறை - த்வஜங்களினால் நிறைந்த, பீடத்தின் மிசை - த்வீதிய பீடமான த்வஜ பீடத்தின் மேலே, குடதிசை - மேல் பக்கத்தில், அடி - அடியானது, நிலாய் - நிலைபெற்று, பிண்டி - அசோக விருட்சமானது, வில்லறுபது - அறுபது வில்லு, ஓங்கி - உன்னதமாகிய அடித்திரள் ஸ்தம்பமாகி, மேல் - அதற்கு மேலே, கடி - வாசனையானது, உலாம் - வியாபித்திராநின்ற, மலர் - புஷ்பங்களினால், மிடை - நெருங்கியதாகிய, கவடு - கிளைகளானவை, கந்தமா குடியினை - கந்தகுடி மண்டபத்தை, சூழ்ந்து போய் - சூழப்பட்டதாகிப்போய், குலாவி - பிரகாசித்து, நின்றது - நிலைபெற்றுளது, எ - று. (கஉஉ)

1180. முத்தமா மணிமுதன் மாலை தாழ்ந்து பூந்
தொத்துமேற் றதைந்தன சுரும்பு வண்டுதேன்
றத்தியின் பிரசமுண் டெழுவ தம்மொலி
மொய்த்தலாற் கடன்முகின் முழக்க மொக்குமே.

(இ - ள்) முத்தமா மணிமுதல் - முத்து சிறந்த ரத்தினம் ஆகியவற்றாலாகிய மாலைகள் முதலாக, மாலை - பலவிதமான புஷ்ப மாலைகளும், தாழ்ந்து - அந்த அசோக விருட்சத்தில் அலங்கிருதமாகத் தொங்கி, பூந்தொத்து - புஷ்பக் கொத்துகளும், மேல் - மேலெங்கும், ததைந்தன - நெருங்கி நிறைந்தன, சுரும்பு- சுரும்பினங்களும், வண்டு - வண்டினங்களும், தேன் - தேன் கூட்டங்களும், தத்தி - அப்புஷ்பக் கொத்துகளில் பாய்ந்து, இன் - இனிமையாகிய, பிரசம் - மதுவை, உண்டு - குடித்து, எழுவ - எழும்பிப் பறக்கின்றனவாம், தம்மொலி - அவைகளின் சப்தங்கள், மொய்த்தலால் - நெருங்கி முழங்குவதால், கடல் - சமுத்திரத்தினதும், முகில் - மேகத்தினதும், முழக்கம் - கர்ஜனையை, ஒக்கும் - ஒத்திருக்கும், எ - று. (கஉங)

1181. தருவலி தலநல தடத்தின் மீதெலா
விருதுவு மலர்மல ருட னலர்ந்திலை

மரகத மணிகளாய் முறிகள் வான்றளி
ரருமணி யாலியன் றசோக நின்றதே.

(இ - ள்) தரு - அவ்வசோக மரத்தின், வலி - பலம் பொருந்திய, தலம் - பெரிதாகிய, நலம் - அழகுள்ள, தடத்தின் - கிளைகளினது, மீது - மேலே, எலாவிருதுவும் - ஷட்ருதுக் காலங்களிலும், மலர் - புஷ்பிக்கும்படியான, மலர் - புஷ்பங்களை, உடன் - ஒரு தன்மையாக, அலர்ந்து - மலர்ந்து, இலை - இலைகள், மரகத மணிகளாய் - பச்சை ரத்தினங்களால் செய்தனவாகி, வான் - அழகிய, முறிகள் - பெருந்தளிர்களும், தளிர் - சிறு தளிர்களும், அரும் - அரிதாகிய, மணியால் - பத்மராகரத்தினத்தினால், இயன்று - பொருந்தியதாய், அசோகம் - அந்த அசோக விருட்சமானது, நின்றது - இவ்விதமாக நிர்மிதமாகி பிரா நின்றது, எ - று. (கஙச)

1182. முத்தம்வாய்ச் செறிந்தன நிறைந்த மும்மதி
யொத்துமூ வுலகினுக் கிறைமை யோதுவ
பத்தியிற் குயின்றது நிலாவி ரிந்துமேற்
சித்திமா வேந்தைமுக் கவிகை சேர்ந்தவே

(இ - ள்) முத்தம் - முத்து மாலைகளை, வாய் - விளிம்புகளில், (சூழ), செறிந்தன - சேர்ந்திராநின்றனவாகி, நிறைந்த - நிறைவு பெற்ற, மும்மதி - மூன்று சந்திரனை, பத்தியில் - ஒன்றின்மேலொன்றாக வரிசை பெற, குயின்றது - செய்து வைத்ததற்கு, ஒத்து - ஒப்பாகி, மூவுலகினுக்கு - இந்த மூன்று லோகத்திற்கும், இறைமை - எஜமானத்துவத்தை, ஓதுவ - சொல்வனவாகி, நிலா - கிரணமானது, விரிந்து - விசாலித்து, மேல் - மேலே, சித்தி மாவேந்தை - ஸித்தியடையும்படியாகிய ஜினேந்திரனை, முக்கவிகை - சத்திரத்திரயமானது, சேர்ந்த - அடைந்து நிழற்றப்பெற்றன, எ - று. (கஙரு)

1183. புண்டரீ கத்தொடு புணர்ந்த சாயைபோற்
பிண்டியின் கொழுநிழற் பிரம மூர்த்திபின்
மண்டலம் மலரடி வணங்கிப் பின்றனைக்
கண்டவர்ப் பிறவியேழ் காண நின்றதே.

(இ - ள்) பிண்டியின் - அந்த அசோக விருட்சத்தினுடைய, கொழுநிழல் - செழுமை பெற்ற நிழலிலே, பிரம மூர்த்தி பின் - ஸ்வாமியின் பின்னாலே, புண்டரீகத்தொடு - (ஸ்வாமியானவர் இராநின்ற) செந்தாமரைப் புஷ்பத்தோடு, புணர்ந்த - சேர்ந்திராநின்ற, சாயை போல் - ஜோதிக்கு ஒப்பானதாக, மண்டலம் - பிரபாமண்டலமானது, மலரடிவணங்கி - ஜினேந்திரனுடைய பாத தாமரையை

வணங்கி, பின் - பிற்பாடு, தனே - அப்பிரபா மண்டலத்தை, கண்டவர் - பார்க்கின்றவர்களுடைய, பிறவியேழ் - சப்தபவஜாதியை, காண - பார்க்கும்படியாக, நின்றது - இராநின்றது, எ - று. (கஙசு)

1184. அந்தமி லுவகைய ரான வானவர்
துந்துபி முழக்கொலி தொடர்ந் தறுதெழ
வந்துடன் வீழ்ந்தவா னவர்பெய் பூமழை
பந்தியும் பரவையும் பிறவு மாகவே.

(இ - ள்) அந்தமில் - அளவில்லாத, உவகையரான - சந்தோஷத்தை யுடையவர்களான, வானவர் - தேவர்களுடைய, துந்துபி - வாத்தியங்களின், முழக்கு - கர்ஜனையின், ஒலி - சப்தமானது, தொடர்ந்து - சேர்ந்து, அறுது - பற்றறுமல், எழ - வியாபிக்க, வானவர் - மற்றும் தேவர்கள், பெய் - சொரிகின்ற, பூமழை - புஷ்ப வருஷங்கள், பந்தியும் - வரிசைகளாகவும், பரவையும் - விசாலமாகவும், பிறவும் ஆக - இன்னும் அனேக விசித்திரங்களாகவும் ஆக, வந்து - வந்து, உடன் - உடனுக்குடன், வீழ்ந்த - வீழ்ந்தன, எ - று. (கஙஎ)

வேறு.

1185. மாதவர் துறக்க மாதர் மாதவம் புரியு மாதர்
சோதிடர் வான வந்தரர் பவணர்தந் தோகை யன்னர்
மேதகு பவணர் வான வந்தரர் விளங்குந் தேவர்
சோதம னாதி வானோர் மன்னர்சொல் லறிவி லங்காம்.

(இ - ள்) மாதவர் - கணதராதி மஹாமுனிவரர்களும், துறக்கமாதர் - கல்பவாஸி தேவஸ்த்ரீயர்களும், மாதவம்புரியும் மாதர் - தபஞ்செய்து நோற்கின்ற ஆர்யாங்கனைகளும், சோதிடர்வான வந்தரர் பவணர் தம் தோகையன்னர் - ஜோதிஷ்க தேவஸ்த்ரீகளும் வியந்தர தேவஸ்த்ரீகளும் பவணதேவஸ்த்ரீகளும், மேதகு - மேன்மையிற்றகுந்த, பவணர் - பவணதேவர்களும், வானவந்தரர் - வியந்தரதேவர்களும், விளங்குந்தேவர் - ஜோதிஷ்கதேவர்களும், சோதமனாதிவானோர் - ஸௌதர்மாதிகல்பவாஸி தேவர்களும், மன்னர் - அரசாதியரும், சொல்லறிவிலங்கு - தர்மவசனத்தையறியும் சக்தியுள்ள (அதாவது: மனோபலமுள்ள) திரியக்ஜீவன்களும், ஆம் - இப்படி வரிசையாக த்வாதசகணங்கள் கோஷ்டபூமியிலாகும், எ - று. (கஙஅ)

1186. பன்னிரு கணமுஞ் சூழப் பருதியி னடுவணுச்சி
மன்னிய வருக்க னைத்தும் மந்தர மூலக மூன்றின்

தன்னடு விருந்த தொத்தும் தாரகை நடுவட் சோம
னென்னவு மிருந்த கோமான் றன்னிடங் குறுகி னாரே.

(இ - ள்) பன்னிருகணமும் - இப்போது சொல்லப்பட்ட த்வாதசகணங்களும், சூழ - சொன்ன முறையே பிரதக்ஷணமாக வரிசையிற் சேர்ந்து தன்னைச் சூழ்ந்திருக்க, பருதியின் - பரிவேஷ்டத்தினுடைய, நடுவண் - மத்தியில், உச்சி - உச்சியை, (அதாவது: உயரத்திலே), மன்னிய - சேர்ந்திராநின்ற, அருக்கனொத்தும் - சூரியனுக்குச் சமானமாகியும், மந்தரம் - மஹாமேருபர்வதமானது, உலக மூன்றின் - மூன்று லோகத்தினுடைய, தன்னடுவிருந்த தொத்தும் - நடுவிலே யிருந்ததற் கொப்பாகவும், தாரகை நடுவண் - தாராகணங்களினது மத்தியில், சோமனென்னவும் - சந்திரனைப் போலவும், இருந்த - (ஸமவஸரணத்தில் லக்ஷ்மீவர மண்டபத்தில் த்ரிதீய பீடத்தின் மேலுள்ள கந்தகுடி மாளிகையின் நடுவிலுள்ள சிம்ம பீடத்தின் மேல்) இராநின்ற, கோமான் தன்னிடம் - ஜினேந்திரனுடைய ஸ்ரீ நிலயமெனும் உள்ளிடத்தை, குறுகினர் - (மேரு மந்தரரென்னும் இருவர்களும்) அடைந்தார்கள், எ - று. (கஅக)

1187. மேருவைச் சூழவோடும் விரிகதி ரிரண்டுபோல
லூர்கொண்மண் டலத்தை யொக்கும் வலங்கொண்மண் டலத்தி னுள்ளான்
மாரிபோன் மலர்சொ ரிந்து வலங்கொண்டு பணிந்து புக்கார்
தோரணங் கடந்த போழ்திற் றுறவினுக் கிறைவன் றோன்ற.

(இ - ள்) (அவ்வாறடைந்தவர்கள்), மேருவை - மஹாமேரு பர்வதத்தை, சூழ - சூழ்ந்து, ஓடும் - செல்லுகின்ற, விரி - விசாலித்த கிரணங்களையுடைய, கதிரிரண்டுபோல - இரண்டு சூர்யர்களைப்போல, ஊர்கொள் மண்டலத்தை யொக்கும் - பரிவேஷ்டத்திற்குச் சமானமாகிய, வலங்கொள் - பிரதக்ஷணமாக வரும்படியான, மண்டலத்தின் - ஸமவஸரண பூமிகளில், வலங்கொண்டு - பிரதக்ஷணஞ் செய்துகொண்டு, மாரிபோல் மலர் சொரிந்து - மழையைப்போல் மலர்களைச் சொரிந்து, பணிந்து - வணங்கி, உள்ளால் - ஸ்ரீநிலயத்தின் உள்ளாக, புக்கார் - அடைந்தார்கள், தோரணம் - அந்த ஸ்ரீநிலயத்தில் வீதியில் உள்ள ஒன்பது ஸ்தூபைகளையும் பத்துத் தோரணங்களையும் தாண்டியுள்ள பலிபீடத்தையும், கடந்தபோழ்தில் - கடந்து போனபோது, துறவினுக்கு - தபங்களுக்கெல்லாம், இறைவன் - நாயகனாகிய ஜினேந்திரன், தோன்ற-(இவர்கட்குத்) தெரிய, எ - று.

1188. கரங்கள்முன் குவிந்த வுள்ளக் கமலங்கள் விரிந்து கண்ணீர்
சொரிந்தன பரந்த ரோமம் புளகங்க டுடித்த வாய்ச்சொல்
லரிந்தன சுரந்த காத லடிமுறை யிடுத லோய்ந்த
விரிந்தன வினைக ளெல்லா மிரவிமுன் னிருளை யொத்தே.

(இ - ள்) கரங்கள் முன் குவிந்த - சுவாமியைக்கண்ட காலத்தில் இவர்களுடைய கைகள் முன்னே குவிந்தன, உள்ளக்கமலங்கள் - இருதய கமலங்கள், விரிந்து - மலர்ந்து, கண்ணீர் - ஆனந்தக்கண்ணீர்த்துளிகள், சொரிந்தன - சொரிவுற்றன, ரோமம் - சரீர மயிர்களில், புளகங்கள் பரந்த-சிலிர்ப்புக்கள் உண்டாயின, வாய்ச்சொல் - வசனங்கள், அரிந்தன - குழறப்பட்டனவாகி, துடித்த - துடித்த, காதல் - ஸ்வாமி பக்தியாகிற ஆசையானது, சுரந்த - மிகுந்தது, அடி - பாதங்கள், முறையிடுதல் - அதற்குமேல் கிரமமாகப் பெயர்த்து வைத்தல், ஓய்ந்தன - ஓய்வுற்றன, (அப்போது), இரவிமுன் - ஸூர்யனுடைய எதிரில், (உண்டாம்), இருளை யொத்து - அந்தகாரத்தை நிகர்த்து (அதாவது: இருளில்லாமல் நீங்கி விடுவது போல), வினைகளெல்லாம் - கர்மங்களெல்லாம், இரிந்தன - கெட்டு நீங்கின, எ - று. (கசக)

1189. தும்பமார் நேமி ஞான காட்சிநல் லொழுக்க மாய
சம்பவன் முன்பு நின்ற தருமசக் கரத்தி னும்பர்
மைந்தரா னவர்க ளேறி வலங்கொண்டார்ச் சனையின் முற்றித்
தும்பிபோற் பணிந்தெ ழுந்து வாழ்த்துபு தொடங்கி னாரே.

(இ - ள்) தும்பம் - பிரகாசம், ஆர் - நிறைந்த, நேமி - ஸமவஸாண மண்டலத்திலிராநின்ற, ஞானக்காட்சி நல்லொழுக்கமாய - க்ஷாயிக ஞான தர்சன சாரித்திரமாகிய, சம்பவன் - ஆத்மகுண ஸ்வபாவஸம்பவனாகிய பரமாத்ம ஸ்வரூபமடைந்த ஜினேந்திரனுடைய, முன்பு - எதிரிலே, நின்ற - நிலை பெற்ற, தரும சக்கரத்தின் உம்பர் - தர்மசக்கரம் இராநின்ற சக்கர பீடமாகிய பிரதம பீடத்தின் மேலே, மைந்தரானவர்கள் - மேருமந்தரரென்கிற இவ்விருவர்களும், ஏறி - ஏறி, வலங் கொண்டு - பிரதக்ஷணமாக வந்து, அர்ச்சனையின் முற்றி - அஷ்டவிதார்ச்சனைகளைச் செய்து முடித்து, தும்பி போல் - யானையானது படிந்து படுப்பது போல, பணிந்து - சாஷ்டாங்கமாக வணங்கி, எழுந்து - எழுந்து நின்று, வாழ்த்துபு - ஸ்துதி சொல்வதற்கு, தொடங்கினார் - ஆரம்பித்தார்கள், எ - று. (கசஉ)

வேறு.

1190. காமாதி கடந்ததுவுங் கைவலப்பெண்
ணடைந்ததுவுங் கமலப் போதிற்
பூமாரி பொழியவெழுந் தருளியதும்
பொன்னெயின்மண் டலத்த சோகந்
தேமாரி மலர்பொழியச் சீயவணை
யமர்ந்ததுவுந் தேவர் கோமான்
முமாதி யணிந்துபணிந் தெழுந்ததுவுந்
தத்துவமென் றகவோ வென்ன.

(இ - ள்) (அவ்வாறு வாழ்த்தத் தொடங்கியவர்கள்), காமாதி - ராகத்வேஷ மோஹங்களை, கடந்ததுவும் - ஜெயித்ததும், கைவலப் பெண்ணடைந்தவுதும் - கேவலஞ்ஞானமென்னும் மோட்சலட்சுமியினையடைந்ததும், பூமாரி - புஷ்பவருஷங்களை, பொழிய - தேவர்கள் சொரிய, கமலப்போதில் - செந்தாமரை புஷ்பத்தின் மேலே, எழுந்தருளியதும் - ஸ்ரீ விஹாரம் செய்வதும், பொன்னெயில் - பொன்னாலாகிய மதில்கள் சூழ்ந்த, மண்டலத்து - ஸமவஸரண மண்டலத்திலே, அசோகம் - அசோகவிருட்சமானது, தேம் - வாசனை பொருந்திய, மலர்மாரி - புஷ்பவருஷங்களை, பொழிய - சொரிய, சீயவணை - ஸிம்மாஸனத்தின் மேலே, அமர்ந்ததுவும் பொருந்தியிருந்ததும், தேவர் கோமான் - தேவேந்திரன், தாமாதி யணிந்து - மாலை முதலானவைகளை யணிந்துகொண்டு, பணிந்தெழுந்ததுவும் - வணங்கி யெழுந்ததும், தத்துவம் - இந்த ஸ்வரூபம், என்தகவோ - இஃது என்ன குணமோ ?, என்ன-என்றும், எ - று. (கசங)

1191. ஒருமொழியே பதினெட்டா யுலகறிய
வியம்பியது மொளிகொண் மூன்றிற்
றிருமறுவாய்த் திகழ்கின்ற திருமூர்த்தி
யதனழகுந் தேவ நின்பான்
மருவினர்க்கு மல்லவர்க்கு மொத்திருந்தும்
அடைந்தவர்க்கு வார்த்தை நல்கும்
பெருமையமோ வதிசயமோ பிரானீயே
மூவுலகோர் பிரானு கின்றாய்.

(இ - ள்) ஒரு மொழியே - திவ்யத்துவனி யொன்றே, பதினெட்டாய் - பதினெட்டு விதமான பாஷைகளாக, உலகறிய - லோகத்துள்ள பவ்விய ஜீவன்கள் அறியும்படி, இயம்பியதும்-சொல்லியதும், ஒளிகொள் மூன்றில்-மனோஜோதி வாக்ஜோதி காயஜோதி என்கிற மூன்றிற் பொருந்தி, திருமறுவாய்த் திகழ்கின்ற - ஸ்ரீதேவியாதி ஸ்ரீலக்ஷணங்கள் ஆயிரத்தெட்டுடன் பிரகாசியாநின்ற, திருமூர்த்தி யதனழகும் - பரமௌதாரிக திவ்ய தேகத்தினழகும், தேவ - ஸ்வாமியே!, நின்பால் - உம்மிடத்தில், மருவினர்க்கும் - அடைந்தவர்கட்கும், அல்லவர்க்கும் - சேராதவர்கட்கும், ஒத்திருந்து - நீ ராக த்வேஷமில்லாமல் சமத்துவமாயிருந்து, அடைந்தவர்க்கு-சேர்ந்தவர்கட்கு, வார்த்தை-தர்மோபதேசத்தை, நல்கும்- அளிக்கின்ற, பெருமையமோ - பெரிதாகிய ஸ்வபாவகுணமோ ?, அதிசயமோ - கர்ம க்ஷயத்தினாலான மிக்க அதிசயமேயாகும், பிரான் - எப்பொருட்கும் இறைவன், நீயே - நீயேயாகின்றாய், மூவுலகோர் - இந்த மூன்று லோகத்திலுமுள்ள பவ்விய ஜீவன்களுக்கு, பிரானுகின்றாய் - கடவுளாகின்றாய், எ - று. (கசச)

1192. விலங்கரசன் வலிவிலக்கி வேர்ப்பொழிந்து
விமலமாய் வெளிதா யுன்மே
லிலங்குபொறி யாயிரத்தெட் டிருந்தழகார்ந்
திளநாற்ற மியல்பா யின்சொற்
புலந்தனக்கின் னமுதாகி வச்சிரப்பூண்
செறிந்தாணி யறைந்த யாப்பா
யிலங்குவடி வுடையதிரு மூர்த்தியியல்
பதிசயமெம் மிறைவ நீயே.

(இ - ள்) விலங்கரசன் வலி விலக்கி - மிருகராஜன் வலி நீக்கி (அதாவது : அளவில்லாத மஹா பலம்பெற்று), வேர்ப்பொழிந்து - சுவேதா பாவமுற்று, விமலமாய் - ரஜோ மலா பாவமாய், வெளிதாய் - க்ஷீரஸமான ரஸ விசேஷமாய், உன் மேல் - உனது தேகத்தில், இலங்கு - விளங்குகின்ற, பொறியாயிரத்தெட்டு - ஆயிரத்தெட்டாகிய திருமறுவுகள், இருந்து - தங்கி (அதாவது : ஸ்ரீ தேவியாதி ஸ்ரீ லட்சணம் அமைந்து), அழகார்ந்து - உபமாதீத ஸௌந்தரியம் பொருந்தி, இளநாற்றமியல்பாய் - பரமமான பரிமள கந்தம் இயற்கையாய், இன் சொல் - ஸ்ரீவணப் பிரியமான வசனப் பிரவர்த்தியும், புலந்தனக்கின்னமுதாய் - கட்புலனுக்கு அமுதான, ஸமசதுர ஸ்ரீ ஸம்ஸ்தானமாய், வச்சிரப் பூண் செறிந்து ஆணியறைந்த யாப்பாய் - வஜ்ரவ்ரஷபநாராச ஸம்ஹனனமாய், இலங்கு வடிவுடைய - விளங்குகின்ற இந்த ஸ்வரூபங்களை முதலாகவுடைய, திருமூர்த்தி - பரமௌதாரிக திவ்ய தேகத்தையுடையவனும், இயல்பின் அதிசயன்-ஸ்வபாவாதிசய சம்பத்தையுடையவனும், (ஆகிய), எம்மிறைவன் - எங்கட்கு ஸ்வாமியாகியவன், நீயே - நீயேயாகின்றாய். எ - று. (கசுஙு)

1193. சாயைபசி யிமைப்பொழிந்து சதுமுகமாய்
மயிருகிர்தம் மளவிற் கேற்றுக்
காயமிசை யுலவிநல கலைக்கெல்லா
மிறைவனுமாய்க் கருமக் கேட்டி
னேசனைநா னூறகத்தி னுயிர்க்கழிவு
பசிகளுப சருக்க நீங்கத்
தேசினொடு திளைத்திருந்த திருமூர்த்தி
யதிசயனெஞ் செல்வ னீயே.

(இ - ள்) சாயை பசியிமைப்பொழிந்து - அச்சாயத்துவமும் நிர்புக்தித்துவமும் நிர்னிமேஷத்துவமும் பெற்று, சது முகமாய் - சதுராननத்துவம் அமைந்து, மயிருகிர்தம்மளவிற் கேற்று - ஸமான நககேசத்துவமும் பெற்று,

காயமிசை யுலவி - வ்யோமகமனத்துவம் அடைந்து, கலைக்கெல்லா மிறைவனுமாய் - ஸர்வவித்தியேசுவரத்துவமும் பெற்று, ஓசனை நானூறகத்தின் - சுற்றுக்கு நானூறு யோஜனை பரியந்தம், உயிர்க்கழிவு பசிகள் உபசருக்கம் நீங்க - நிர்ஜ்ஜந்துகவதையும் துர்ப்பிக்ஷ விரஹமும் நிருப ஸர்க்கமும் ஆகி, கருமக்கேட்டின் - கர்ம க்ஷயத்தினாலாகிய, தேசினொடு - ஜோதியோடு, திளைத்திருந்த - சேர்ந்திரா நின்ற, திருமூர்த்தி - பரமௌதாரிக திவ்விய தேகத்தையுடைய, அதிசயன் - இந்த கர்மக்ஷயாதிசயசம்பத்தை யுடையவனாகிய, எஞ்செல்வன் - எமது பக்திக்குகந்த ஸம்பத்தையுடையவன், நீயே - நீயேயாகின்றாய், எ - று. (கஅசு)

1194. திருமொழியின் வியத்தகவு மனைத்துயிரின்
மைத்திரியுந் திக்கா காய
நிருமலமாய் விளங்குதலெவ் விருதுவும்வந்
துடனிகழ்த னிலத்துப் பைங்கூழ்ப்
பெருமையொடு மங்கலங்க ளறவாழி
பூமாரி நறுங்காற் றம்பொன்
மரைமலரி னிரைமுதல்வா னவரின்வரு
மதிசயனெம் மன்ன னீயே.

(இ - ள்) திருமொழியின் வியத்தகவும் - ஸகல பாஷாஸமன்விதவாக் பிரவர்த்தியும், அனைத்துயிரின்மைத்திரியும் - ஸர்வஜீவ மித்ரபாவமும், திக்காகாயம் நிருமலமாய் விளங்குதல் - ஆகாசதிசா வைமல்லியமும், எவ்விருதுவும் வந்துடனிகழ்தல் - ஷட்ருது ஸம்பூர்ண ஸஹப்பிரவர்த்தித்துவமும், நிலத்துப் பைங்கூழ் பெருமை யொடும் - பூதல ஸர்வஸஸ்யாதி ஸம்ருத்தியும், மங்கலங்கள் - அஷ்டமங்கல ஸமூஹங்களும், அறவாழி - தர்ம சக்ரமும், பூமாரி - புஷ்ப வருஷமும், நறுங்காற்று - மந்த மாருத சலனமும், அம்பொன் மரைமலரின் நிறை - அழகிய பொன்போன்ற அரவிந்தஸ்ரேணியும், முதல் - முதலாக, வானவரின் வரும் அதிசயன் - தேவர்களாலாகிய தெய்வீகாதிசய முடையவனாகிய, எம்மன்னன் - எமக்கு நாயகனாகியவன், நீயே - நீயேயாகும், எ - று. (கஅள)

1195. அழுந்துவினைப் பகைப்புறங்கண் டனைத்துலகு
மலோகமுந்தன் னகத்தி னுங்க
வெழுந்தறிவின் முகத்தாலெப் பொருளுமுன
தகத்தடக்கி யிருந்தோய் வந்து
செழுங்குவடு செறிந்திருந்து முழங்குமெழின்
முகில்போல விராக மின்றி
யெழுந்தருளி வந்திருந்தெப் பொருளுமரு
ளியவெங்க ளிறைவ னீயே.

(இ - ள்) அழுந்தும் - ஆத்மனிடத்தில் அனுதியாகப் பதிந்து பந்தித்திரா நின்ற, வினைப்பகை - காதிகர்மங்களாகிய சத்துருக்களை, புறங்கண்டு - ஓடச் செய்து, (வென்ற ஜயத்தால்), அனைத்துலகும் அலோகமும்-லோகாலோக சமஸ் தங்களையும், தன்னகத்தின்-தன்னுக்குள்ளே, நுங்க-விழுங்க, எழுந்த-உண்டாகிய, அறிவின்முகத்தால்-கேவலஞானமென்னுங் குணத்தால், எப்பொருளும் - லோகா லோகமாகிய ஜீவாதிஷட் திரவிய குண பரியாயங்களையும், உனதகத்து-உன்னிடத் திலே, அடக்கி - ஞானுந்த ஸ்திதமாக்கி, இருந்தோய் - ஸர்வகதனுகியிருந்த ஸ்வாமியே!, வந்து - ஆகாயத்தில் வந்து, செழுங்குவடு - செழுமையாகிய பர்வத சிகரத்தில், செறிந்திருந்து - சேர்ந்திருந்து, முழங்கும் - சப்திக்கின்ற, எழில் - பிரகாசம் பொருந்திய, முகில்போல் - மேகத்தைப்போல், விராகமின்றி - வெறுப் பில்லாமல், எழுந்தருளி வந்து-ஸ்ரீவிஹாரமாகி வந்து, இருந்து - ஸமவஸரணத்தில் த்ரீதிய பீடத்தில் சிம்மாசனத்தின் மேலிருந்து, எப்பொருளும் - ஸகல பதார்த்த ஸ்வரூபங்களையும், அருளிய - திவ்யத்வனியால் கூறியருளியவனுகிய, எங்கள் இறைவனீயே - எங்களுக்கு நாதன் நீயே யாகின்ருய், எ - று.

'எழுந்த அறிவின்' என்பது, 'எழுந்தறிவின்' எனத்தொகுத்தலாயிற்று. ()

1196. செங்கமலத் துலவுமுன்றன் றிருந்தடியை
நினைத்திடவே சித்தி யென்னு
மங்கனைவந் தவரையடைந் திடவதன்மேற்
கொடையின்ரு யருளு நீங்கி
வெங்கதங்கொண் டுனையடையா தொழிந்தவர்க
ணெடுந்துயரின் வீழக் காணு
வங்கவர்மே லருள்புரிவு முனிவுமகன்
றிருந்தனையெம் மிறைவ னீயே.

(இ - ள்) செங்கமலத்து - செந்தாமரை புஷ்பத்தின் மேலே, உலவும் - ஸ்ரீ விஹாரமாகின்ற, உன்தன் - உன்னுடைய, திருந்தடியை - செவ்விதாகிய பாதங்களை, நினைந்திட - எண்ணி ஸ்வரூப மறிந்து பக்தி செய்ய, அவரை - அப் படிப்பக்தி செய்தவர்களை, சித்தியெனும் - மோக்ஷமென்று சொல்லும், அங்கனை - லக்ஷ்மி, அடைந்திட - சேர, அதன்மேல் கொடையின்ருய் - அதற்குமேல் அவர்க்கு யாதொரு கொடையும் இல்லாததாக, (அப்படிக்கில்லாமல்), அருளு நீங்கி - ஜீவதயவும் இன்றி, வெங்கதங்கொண்டு - மிகுதியான குரோத பரிணும முற்று, உனையடையாது - உனது ஸ்வரூபமறிந்து உன்னைச் சேராமல், ஒழிந்த வர்கள் - நீங்கினவர்கள், நெடும் - பெரிதாகிய, துயரின் - துக்கத்திலே, வீழ - வீழ்ந்து தவிப்பதை, காணு - அறிந்து, அங்கவர்மேல் அருள்புரிவும் - அவ் விடத்தே பக்திசெய்து உம்மைச் சேர்ந்தவர்கள்பேரில் தயவும், முனிவும் - சோரத

வர்கள்பேரில் கோபமும், அகன்று - நீங்கி, இருந்தனை - அவரவர்களின் தன்மை யென்று ஸமத்துவ்பாவமாக வீதராக சுத்தோபயோகமாய் இராநின்றாய், (ஆகை யால்), எம்மிறைவனீயே - எங்களுக்கிறைவன் நீயேயாகும், எ - று. (கசகக)

1197. பொதுவகையாற் பொருளெல்லா மொன்றேயென்
றருள்செய்தப் பொதுவ லாத
விதிவகையாற் பொருளெல்லாம் வேறேயென்
றவ்விரண்டு மொன்றே யென்றும்
பொதுவிரிவு பொருணிகழ்வால் வெவ்வேறா
யொன்றமா மென்றா லுன்சொன்
மதிபெரிது மிலாதார்க்கு மாறாகித்
தோன்றாதோ வானோர் கோவே.

(இ - ள்) வானோர்கோவே - தேவர்களுக்கெல்லாம் முதல்வனாகிய ஸ்வாமி யே!, (நீ) பொருளெல்லாம் - ஜீவாதி திரவியங்கள், பொதுவகையால் - தத்தம் ஸாமான்னிய குணத்தினால், ஒன்றேயென்று - ஒன்றாகுமென்றும், அருள் செய்து - அருளிச் செய்து, அப்பொதுவலாத - அந்த ஸாமான்ய குணமல்லாத, விதிவகையால் - விசேஷ குணத்தினால், பொருளெல்லாம் - ஜீவாதி பொருள்க ளெல்லாம், வேறேயென்று - வேறு வேறென்றும், அவ்விரண்டும் - அப்படி ஸாமான்ய விசேஷ குணங்களினாலாகிய ஒன்றும் பலவும் என்னும் தன்மைகள், ஒன்றேயென்றும் - தத்தம் ஸாமான்ய விசேஷாஸ்தித்துவத்தினால் ஒன்றேயென் றும், பொருள் - ஜீவாதி பொருள்கள், பொது - ஸாமான்யத்தினாலும், விரிவு - விசேஷத்தினாலும், நிகழ்வால் - அஸ்தித்துவமாகி நிகழ்கின்ற விதத்தால், வெவ் வேறாய் - விசேஷ குண பரியாயத்தால் வேறு வேறாகி, ஒன்றுமாம் - ஸாமான்ய குண பரியாயத்தால் ஒன்றும் ஆகும், என்றால் - என்று அருளிச் செய்தால், உன் சொல் - உனது வசனமானது, மதி பெரிது மிலாதார்க்கு - அற்ப புத்தியை யுடையவர்களுக்கு, மாறாகி - விரோதமாகி, தோன்றாதோ - தோற்றாதோ, எ - று.

1198. ஆதியா யாதியிலா யந்தமா
யந்தமிலா யடையா தெய்தும்
போதியாய் போதியிலாய் புறத்தாயெப்
பொருளினுக்கு மகத்தாய் மூன்று
சோதியாய் சோதியிலாய் சுருங்காதாய்
பெருகாதாய் தோன்றா மாயா
நீதியாய் நீதியிலாய் நினைப்பரியாய்
வினைப்பகையெம் மிறைவ னீயே.

(இ - ள்) ஆதியாய் - ஜீவஸ்வபாவ குணைமுற்ற முதல்வனே!, ஆதியிலாய்-திரவியார்த்திக தன்மையினால் முதலில்லாமல் அனாதியானவனே !, அந்தமாய் - ஸம்ஸாரத்தை நீக்கி மோட்சமென்னும் முடிவாய், அந்தமிலாய் - இனி அத்தத்துவத்தின் முடிவு ஒருபோது மில்லாதவனே !, அடையாத - இந்திரியங்களுக்கு விஷயமாகி அடையாமல், எய்தும் - ஆத்மகுண ஸ்வபாவத்தாலடைகின்ற, போதியாய் - அதீந்திரிய ஞானத்தையுடையவனே !, போதியிலாய் - இந்திரிய விஷயமாகிய மதிசுருத அவதி முதலாகிய கிரமகாண ஞான பரிண மனமில்லாதவனே !, புறத்தாய் - ஸகல பதார்த்தத்திற்கும் நீங்கலான ஸ்வத்திரவிய குண ஸ்வயம்புவானவனே, எப்பொருளினுக்கும் - ஸகல பதார்த்தத்திற்கும், அகத்தாய் - உனது குணத்தினால் ஞானாந்த ஸ்தித யுக்தனே, மூன்று சோதியாய் - ஆத்ம குணமான சுத்த ஞான தர்சன சாரித்திர ஜோதி யுக்தனே !, சோதியிலாய் - இதர ஜோதிகளில்லாதவனே, சுருங்காதாய் பெருகாதாய் - சுருக்கமும் பெருக்கமும் இல்லாத தன்மையனே !, தோன்றுமாயா நீதியாய் - திரவியார்த்திக நயத்தினால் ஜனன மரண ஸ்வரூபமாகிய தன்மை இல்லாத த்ரௌவ்ய யுக்த நிச்சய நீதிஸ்வரூபனே!, நீதியிலாய் - பரியாயார்த்திக நயவ்யவஹார ஸ்வரூப வ்யதிரிக்த நீதி ரஹிதனே!, நினைப்பரியாய் - அசிந்திய ஸ்வரூபனே !, வினை - கருமங்களுக்கு, பகை - சத்துருவாகி ஜயித்தவனே !, எம் இறைவன் - எங்கள் நாயகன், நீயே - நீயேயாகின்றாய், எ - று. (கஉகஎ)

1199. காமருதுந் துபிகறங்கக் கடிமலர்மா
மழைபொழியக் கவரி பொங்கத்
தேமருபூம் பிண்டியின்கீழ் மண்டலம்போய்த்
திசைகுலவத் திங்கள் வட்டந்
தாமொருமூன் றனையமணி முக்குடைக்கீழ்
மிக்கவினை யுடையச் செல்லுஞ்
சேமமுடை நெறியருளிச் சீயவணை
யமர்ந்தனையெஞ் செல்வ னீயே.

(இ - ள்) காமரும்-விரும்பத்தக்க, துந்துபி-தேவ வாத்தியங்கள், கறங்க-சப்திக்க, கடி - வாசனை பொருந்திய, மா - சிறந்த, மலர் மழை - புஷ்ப வருஷங்களை, பொழிய - சதுர்ணிகாயாமரர்கள் சொரிய, கவரி - சாமரைகள், பொங்க - அசைய, தேமரும் - வாசனையைச் சேர்ந்த, பூம் - புஷ்பங்களையுடைய, பிண்டியின்கீழ் - அசோக விருட்சத்தின் கீழ், மண்டலம் போய் - பிரபாமண்டல ஒளியானது சென்று, திசைகுலவ - திக்குகளில் வியாபிக்க, திங்கள் வட்டந்தாமொரு மூன்றனைய - மூன்று ஸம்பூர்ண சந்திர மண்டலங்களை யொன்றின்மேலொன்று அடுக்கிட்டு வைத்ததை யொப்பாகிய, மணி - அழகிய ரத்தினத்தாலாகிய தண்ட

யுடைய, முக்குடைக்கீழ் - தவள சத்திரத்திரயத்தின் கீழ், மிக்க - மிகுதியாகிய, வினை - கர்மங்கள், உடைய - கெடும்படியாக, செல்லும் - நடக்கின்ற, சேமமுடை - க்ஷேமகாரத்தையுடைய, நெறி - ரத்னத்திரயமாகிற மோட்ச மார்க்கத்தை, அருளி - திவ்யத்வனியாலுபதேசித்து, சீயவணை - சிம்மாசனத்தின் மேலே, அமர்ந்தனை - பொருந்தி யிருக்கின்ற ஸ்வாமியே!, எம் - எங்கட்கு, செல்வன் - ஸம்பத்தை யளிக்கின்ற நாதனானவன், நீயே - நீயேயாகின்றாய், (என்றும் துதித்தார்கள்), எ - று. (கஉ)

வேறு.

1200. இனையன துதியினோ டிறைஞ்சு மெல்லையின்
வினைகளின் வயறுகள் வெந்த மைந்தர்கண்
முனிமையின் வடிவினை முடிய நின்றுதம்
வினைகளை முதலற வெறிய வெண்ணினார்.

(இ - ள்) இனையன - இத்தன்மையனவாகிய, துதியினோடு - ஸ்தோத்திரங்களோடு, இறைஞ்சும் - ஜினேந்திரனை வணங்குகின்ற, எல்லையில் - காலத்தில், வினைகளின் வயறுகள் - கர்மக் கூட்டங்களின் இருக்கைகளானவை, வெந்த - வேக்காடுற்றன, (அதாவது: ஸ்திதிகாண்ட காதகங்களாகக் குறைவுபட்டன), மைந்தர்கள் - அப்படிப்பட்ட ஸம்மியக்துவ குணேத் கிருஷ்ட பரிணாமமுடைய இம்மேருமந்தரரென்கிற இருவர்களும், முனிமையின் வடிவினை - முனிவர் ரூபமாகிய நிர்க்கந்த தீக்ஷையை, முடிய - அடையும்படியாக, நின்று - அச்சமவசரணத்தில் நின்று, தம் - தங்களுடைய, வினைகளை - கர்மங்களை, முதலற - முழுமையும் நீங்கும்படி, எறிய - கெடுப்பதற்கு, எண்ணினார் - நினைத்தார்கள், எ - று. (கஙு)

1201. ஏத்தருங் குணத்தவத் திறைவ யாமுடைக்
கோத்திரங் குலமிவை யருளு வாழிநீ
நீத்தரும் பிறவிநீர்க் கடலை நீந்துநற்
றேப்பையாந் திருவுரு வென்றி றைஞ்சிடா

(இ - ள்) (அப்படி நினைத்தவர்கள்), ஏத்தரும் - ஸ்துதித்தற்கரிய, குணத்து - அனந்த ஞானாதி குணங்களையுடைய, தவத்து - தபஸையுடைய, (கணதராதி ரிஷியாதியர்களுக்கு), இறைவ - நாதனாகிய ஸ்வாமியே!, யாமுடை - எங்களுடைய, கோத்திரம் - கோத்திரமும், குலம் - குலமும், இவை - இத்தன்மையாக உச்சைர் கோத்திரமும் அரசர் குலமுமாகும், (ஆகையால்), நீத்தரும் - கடத்தற்கரிய, பிறவி நீர்க்கடலை - ஸம்ஸாரமாகிற ஜல ஸமுத்திரத்தை, நீந்தும் - கடக்கும்படியான, நல் - நன்மையாகிய, தேப்பையாம் - தெப்பமாகிற, திருவுருவு-

நிர்க்கந்த ரூபமாகிற ஜினதீக்ஷையை, அருளு - தயவுடன் அளிக்கக் கடவாய், வாழிநீ - நீ வாழக்கடவாய், என்று - என்று சொல்லி, இறைஞ்சிடா - வணங்கி, எ - று.

தெப்பை, நீண்டது. இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (கருச)

1202. முடிகளுங் கடகமு முத்தின் பூண்களுங்
கடிமிசைக் காஞ்சியு நாணு மாடையும்
வடிவுடைத் தடக்கையால் வாங்கி விட்டவை
விடுசுடர் விளக்கின்முன் னிமைத்து வீழ்ந்தவே.

(இ - ள்) முடிகளும் - கிரீடங்களும், கடகமும் - அஸ்த கங்கணங்களும், முத்தின் பூண்களும் - முத்தாபரணங்களும், கடிமிசை - அரையின்மேலணியும் படியான, காஞ்சியும் - மேகலாபரணமும், நாணும் - அரைநாண்கயிறும், ஆடையும்- வஸ்திரங்களும், வடிவுடை - ரூபம் பொருந்திய, தடக்கையால் - விசாலித்த தங்களுடைய கைகளால், வாங்கிவிட்டு - நீக்கிவிட, அவை - அவ்வாபரணாதிகள், விளக்கின்முன் - தீபத்தினுடைய எதிரில், விடு - விளக்கினின்றும் விழுகின்ற, சுடர் - தீபச்சுடர்போல, இமைத்து - விளங்கி, வீழ்ந்த - வீழ்ந்தன, எ - று. (கருரு)

1203. குறுநெறி பயின்றெழு குஞ்சி யஞ்சொலார்
நெறிமையை யறநெறி நினைப்ப நீக்குமென்
றறிவன தடிமுத லைம்ப தஞ்சொலா
நெறிமையி னீக்கினார் நீண்ட தோளினார்.

(இ - ள்) நீண்ட - நீட்சியுடைய, தோளினார் - கைகளையுடைய இவ்விருவரும், அஞ்சொலார் - அழகிய சொல்லையுடைய ஸ்திரீமார்களால், குறுநெறி பயின்று - வகுப்பெடுத்து வார்தல் முதலிய சிறு வழிப்பாடுகளையடைந்து, எழும் - வளர்ந்திராநின்ற, குஞ்சி - தலையின் மயிரினது, நெறிமையை - வழிப்பாடாகிய போற்றுகையை, நினைப்ப - எண்ண, அறநெறி - ஜின தர்மத்தின் வழியாகிய ஸம்யக்தர்சன ஞான சாரித்திரங்களை, நீக்குமென்று - விலக்கி மித்தியாத்துவ மயக்கத்தைச் செய்து விடுமென்று பாவித்து, அறிவனது - அருகபரமனது, அடிமுதல் - பாதமுதலாக, ஐம்பதம் - * பஞ்ச பரமேஷ்டிகளுடைய பதத்தை, சொலா - உச்சரித்து, நெறிமையின் - †ஜின தீக்ஷா விதி முறையின்படி, நீக்கினார்- (அவ்வுரோமத்தை) பரிஹரித்து விட்டார்கள், எ - று.

* பஞ்ச பரமேஷ்டிகளின் ஸ்வரூபங்களையும் பாவனையின் லக்ஷணங்களையும் பதார்த்த சாரத்தில் மூப்பதாவது அதிகாரத்தில் கண்டு கொள்க.

† ஜின தீக்ஷையின் விதி முறைகளை ஆசாராங்கமென்னும் புஸ்தகத்தில் யதியாசாரமென்னும் பகுதியில் பார்த்துத் தெரிந்துகொள்க. (கருசு)

1204. மற்புயத் தார்மயிர் வாங்கி நின்றவர்
கற்பக மிலைமலர் கழன்ற தொத்தனர்
மற்றவா னவரந்த மயிரை மாலையாற்
சுற்றிவான் கடலிடைத் தொழுதிட் டார்களே.

(இ - ள்) மயிர் - தலை மோவாய் மீசை கன்னம் ஆகிய இவைகளின் மயிர்களை, வாங்கி - தீக்ஷா விதிப்படி பரிகரித்து, நின்றவர் - நின்றவர்களாகிய, மற்புயத்தார் - மல்லயுத்தஞ் செய்வதில் சிறந்த தோள்களையுடைய இந்த மேருமந்தரரென்கிற இருவர்களும், கற்பகம் - கற்பக மரமானது, இலை-இலைகளையும், மலர்-புஷ்பங்களையும், கழன்ற தொத்தனர் - உதிர்த்திருந்ததற்கு ஒப்பானார்கள், மற்று-பிறகு, வானவர் - தேவர்கள், அந்த மயிரை - அந்த ரோமங்களை, மாலையால் - பூமாலைகளால், சுற்றி - சூழச்சுற்றி, தொழுது - வணங்கி, வான் - வெளுப்பாகிய, கடலிடை - க்ஷீர ஸமுத்திரத்திலே, இட்டார்கள் - கொண்டு போய்ப் போட்டுவிட்டார்கள், எ - று. (கஉஎ)

1205. சீலமும் வதங்களுஞ் செறிந்த வெல்லையின்
மாலையுஞ் சாந்தமு மேந்தி வானவர்
கோலமா தவர்குணம் புகழ்ந்தி றைஞ்சினா
ரேலவந் திருத்தியே ழடைந்த வென்பவே.

(இ - ள்) சீலமும் - சீலாச்சாரங்களையும், வதங்களும் - பஞ்சமஹா விரதங்களையும், செறிந்த - (இவ்விருவர்களும்) சேர்ந்த, எல்லையில் - காலத்திலே, வானவர் - தேவர்கள், மாலையும் - பூமாலைகளையும், சாந்தமும் - சந்தனங்களையும், ஏந்தி - கொண்டு அர்ச்சித்து, கோலம் - அழகாகிய, மாதவர் - மஹா தபஸையுடைய இவ்விருவர்களுடைய, குணம் - ஸம்மியக்ஞானாதி குணத்தை, புகழ்ந்து - புகழ்ச்சி செய்து, இறைஞ்சினார் - வணங்கினார்கள், ஏல வந்து - இவர்கள் குணத்திருஷ்டத்திற்கு இசைய வந்து, இருத்தியேழ் - ஸப்தரித்திகளும், அடைந்த - சேர்ந்தன, எ - று.

என்ப - அசை. (கஉஅ)

1206. போதியா றைந்துமா மருந்து மாதவ
நீதியா னற்சுவை வலிகண் மூன்றிரண்
டோதினார் குறைபடா வுறையு ளூணிவை
யாதியாம் மாதவ ரிருத்தி வண்ணமே.

(இ - ள்) ஓதினார் - இங்குச் சொல்லப்பட்டவர்களாகிய, மாதவர் - மஹா தபஸையுடையவர்களுடைய, இருத்தி - ரித்தியினது, வண்ணம் - விதமானது,

போதியாறு - ஆறுவிதமாகிய புத்திரித்தியும், ஐந்துமாமருந்து - ஐந்து விதமாகிய ஔஷதரித்தியும், மாதவம் - பெரிதாகிய தபோரித்தியும், நீதியால் - வரிசையினாலே, நாற்சுவை - நாலுவிதமான ரஸரித்தியும், வலிகள் மூன்று - த்ரிப்பிரகாரமான பெலரித்தியும், இரண்டு - இரண்டு விதமாகிய, குறைபடாவுறையுள் - அக்ஷீண மஹாலயத்துவமும், ஊண் - அக்ஷீண மஹாசனத்துவமு மென்னும் அக்ஷீணரித்தியும், ஆதியாம் - முதலாகியவைகளாம், எ - று.

இந்தரித்திகளின் விவரங்களை பதார்த்த ஸாரத்தில் முப்பதாவது அதிகாரத்தில் பார்த்துக்கொள்க. (கஙகூ)

1207. துவர்ப்பசை நான்கொடு தொடர்ந்த பத்துமா
சுவர்ப்புநீ ரார்கழீஇ யுள்ளந் தூயமா
தவத்தவர் புறப்பத்து மாசு தன்னையு
முவத்தல்காய் விலாமையா லொருவி னார்களே.

(இ - ள்) துவர்ப்பசை நான்கொடு - குரோத மான மாயா லோபமென்னும் சதுஷ்கஷாயத்தோடு, தொடர்ந்த - சேர்ந்திரா நின்ற, பத்துமாசு - (மித்தியாத்துவம், நபும்ஸகவேதம், ஸ்த்ரீவேதம், புருஷவேதம், ஹாஸ்யை, ரதி, அரதி, சோகம், பயம், ஜுகுப்ஸை என்னும்) பத்துக் களங்கங்களும், (சேர்ந்து பதினாலாகிய அப்பியந்தர பரிக்கிரகங்களை), உவர்ப்பு - வைராக்கியமென்கிற, நீரால் - ஜலத்தினால், கழீஇ - பரிஹரித்து, உள்ளம் - மனதில், தூய - பரிசுத்தமாகிய, மா - பெரிதாகிய, தவத்தவர் - தபத்தையுடைய இவ்விருவர்களும், புறப்பத்து மாசு தன்னையும் - (க்ஷேத்திரம், வாஸ்து, ஹிரண்யம், ஸ்வர்ணம், தனம், தானியம், தாஸீ, தாஸன், குப்பியம், பாண்டம், என்னும் பாஹ்ய பரிக்கிரகம்) பத்தையும், உவத்தல் - சந்தோஷித்தலும், காய்வு - த்வேஷித்தலும், இலாமையால் - இல்லாத விதத்தினாலே, ஒருவினார்கள் - விட்டார்கள் (அதாவது: நிஷ்பரிக்கிரகர்களானார்கள்), எ - று.

இங்ஙனம் கூறியதனால், ஸர்வஸங்கபரித்தியாகம் பண்ணினார்கள் என்பது பெறப்படும். (கசo)

1208. ஒழுக்கநீர் குளித்துடுத் தம்ப ரத்தினை
வழுக்கிலா மாதவச் சாந்து மட்டியா
விழுக்குண மணியணி மேனி சேர்த்தினார்
தொழிற்றொடை சீலமா மாலை சூடினார்.

(இ - ள்) ஒழுக்கநீர் - நல்லொழுக்கமென்னும் ஜலத்தினால், குளித்து - ஸ்நானஞ்செய்து, அம்பரத்தினை - ஆகாசத்தினை, உடுத்து - உடுத்திக்கொண்டு, வழுக்கிலா - கழுவுதலில்லாத, மாதவச்சாந்து - மஹாதபமாகிற சந்தனத்தை,

மட்டியா - பூசி, விழு - பெரிதாகிய, குணமணி - ஸம்யக் ஞானுதி குணங்க ளாகிய ரத்நாபரணங்களை, மேனி - சரீரங்களில், சேர்த்திஞர் - அணிந்தவர்க ளாகி, தொழில் தொடை - எல்லையாகச் சேர்ந்த தொழிலென்னும், சீலமாலை - சீலாச்சாரமென்னும் பூமாலைகளையும், சூடிஞர் - (அவர்கள்) அணிந்துகொண் டார்கள், எ - று. (கககக)

1209. விதிமனர் தமைவெல வந்த கேவலத்
ததிபதி தனக்கிள வரச ராக நற்
சுதமலி கேவல பட்டஞ் சூடிஞர்
விதியிஞ லிறைவனை வந்தி றைஞ்சிஞர்.

(இ - ள்) விதிமனர் தமை - கருமங்களாகிற அரசர்களை யெல்லாம், வெல - ஜயிக்க, வந்த - வரப்பட்ட, கேவலத்து - கேவல ஞானத்தையுடைய, அதி பதி தனக்கு - ஜினேந்திரனுக்கு, இளவரசாக - யுவராஜபதமுடையவர்களாக, நல் - நன்மையான, சுதமலி - ஸ்ரீ சுதஞான ஸம்பூர்ணமாகிய, கேவலபட்டம் - சுருத கேவலி பட்டத்தை, சூடிஞர் - அணிந்தவர்களாகி, விதியிஞல் - கிரமத்தி ஞல், வந்து - ஸ்வாமியின் அபிமுகமாக வந்து, இறைவனை - ஜினேந்திரனுகிய நாதனை, இறைஞ்சிஞர் - வணங்கிஞர்கள், எ - று. (ககூஉ)

1210. இறைவநின் னடியடை யுலகி யற்கையும்
பெறுபொரு ளளவையும் பிழைத்த நீதியும்
மறவினை மனமிக வருதற் கேதுவும்
பிறவியின் விகற்பமும் வீட்டின் பெற்றியும்.

(இ - ள்) (அவ்வாறு வணங்கியவர்கள்), இறைவ - ஸ்வாமியே !, நின் - உன்னுடைய, அடி - பாதத்திலே, அடை - அடைகின்ற, உலகு - லோகத்தி னுடைய, இயற்கையும் - ஸ்வரூபமும், பெறு - அவ்வுலகத்திலடைந்திராநின்ற, பொருள் - ஜீவாதி பொருள்களின், அளவையும் - அவற்றைப் பிரமாணித்து அறியும்படியான ஞானப்பிரமாணமும், பிழைத்த நீதியும் - அதற்கு மாருகிய மித்தியாமார்க்கமும், மறவினை - பாபவினைகள், மனம் - மனோ பரிணமத்தால், மிக - மிகுதியாக, வருதற்கு - ஆத்மனிடம் வந்து சேர்ந்து பந்திப்பதற்கு, ஏது வும் - காரணமாகிய பரிணமத்தையும், பிறவியின் - ஸம்ஸாரத்தினது, விகற்ப மும் - பிறப்பு விகற்பங்களையும், வீட்டின் - மோக்ஷத்தின், பெற்றியும் - பெரு மையையும், எ - று. (ககூஙு)

1211. அருளென விறைஞ்சலு மணிக்*கட் டின்புற
முரசுநின் றதிர்வதி னெழுந்து கேவலத்

திருவிடு தூதிபோல் செஞ்†சொல் வல்லிதான்
மருவினுண் முனிவர்தம் மனத்த கத்தையே.

(இ - ள்) அருளென - எங்களுக்கு அருளிச் செய்ய வேண்டுமென்று, இறைஞ்சலும் - மேலும் வணங்கவும், அணி - அழகிய, கட்டு - (மேளக்கட்டாகும்படி வாரினால் விசித்து கட்டப்பட்ட) கட்டையுடைய, முரசு - பேரிகையானது, இன்புற - கேட்பவர் இனிமையடையும்படி, நின்று - தளராமல் நின்று, அதிர்வதின் - சப்திப்பதுபோல, எழுந்து - திவ்யத்வனியானது உண்டாகி, கேவலத் திருவிடும் - கேவலஞானமாகிய லக்ஷ்மியால் அனுப்பப்பட்ட, தூதிபோல் - தூது செல்பவள்போல, செம் - செவ்விதாகிய, சொல்வல்லிதான் - ஸரஸ்வதி தேவியானவள், முனிவர் தம் - இம்மேருமந்தரரென்கிற முனிவர்களுடைய, மனத்தகத்தை - மனத்தினிடத்தை, மருவினள் - சேர்ந்தாள், எ - று.

இங்ஙனங் கூறியதனால், அவர்கள், ஸ்ரு தஞான ஸம்பூர்ணர்களாகிக் கணதர பதவியை யடைந்தார்கள் என்பது பெறப்படும்.

*கட்டிப்புற என்றும் பாடம் †சொல்வஞ்சிதான் - என்றும் பாடம். (கககச)

1212. ஒருதிரு மொழியுமே பதினெண் பாடையாய்
மருவிய தோசனை மிகுதி மண்டலத்
தருகிடை முடிவத னகத்த வர்க்கெலா
மொருவகை யாலினி தாயொ லித்ததே.

(இ - ள்) ஒரு திருமொழியுமே - ஒப்பற்ற திவ்யத்வனியொன்றே, பதினெண்பாடையாய் - பதினெட்டு விதமான பாஷைகளாக, மருவியது - சேர்ந்திராநின்றதாகி, ஓசனை மிகுதி - பன்னிரண்டு யோஜனை விஸ்தீர்ணத்தையுடைய, மண்டலத்து - ஸமவஸரண மண்டலத்தில், அருகு - பக்கத்திலுள்ளவர்க்கும், இடை - நடுவிலுள்ளவர்களுக்கும், முடிவு - கடைசியிலுள்ளவர்களுக்கும், அதனகத்தவர்க்கெலாம் - இப்படியாக அச் சமவஸரணத்திலிருப்பவர்களுக்கெலாம், ஒருவகையால் - ஒரே தன்மையால், (கேட்கும்படியானதாகி), இனி தாய் - யாவர்களுக்கும் இனிமையாக, ஒலித்தது - சப்தித்தது, எ - று. (ககரு)

1213. வினவிய பொருளெலாம் விழுங்கி மெய்த்தவர்
மனம்வலி மொழிவழி வாங்கி யப்பொரு
டனித்தனி யாகம்நாற் பத்தி ரண்டதாய்
முனிவறச் செய்துமா முனிவர்க் கோதினார்.

(இ - ள்) மெய்த்தவர் - உண்மையாகிய தபோதனர்களாகிய இம்மேருமந்தரரென்கிற கணதரர் பதவியைப் பெற்ற சுருத கேவலிகளிருவரும், வினவிய -

தங்களால் பகவானை பிரசினை பண்ணப்பட்ட, பொருளெலாம் - பொருள்களை யெல்லாம், மனம் வலி - மனோபலமென்னும் சித்தியதிசயத்தால் சுருத ஞானோ தயமாக, விழுங்கி - உட்கொண்டு, மொழி வழி - (வசனமாக வரும்படியாகச் செய்து) அவ்வசன வழியாக, அப்பொருள் - அந்த பிரசினையின் பொருள்களை, வாங்கி - கிரஹித்து, தனித்தனி - தனித்தனியாக, ஆகம் நாற்பத்திரண்டதாய் - நாற்பத்திரண்டு பரமாகமங்களாக, முனிவற - குற்றமற, செய்து - கிரந்தமாகச் செய்து, மாமுனிவர்க்கு - மஹா முனிவர்கள் முதலாகிய கோஷ்டத்திலிருந்து கேட்கப்பட்டவர்களுக்கு, ஓதினார் - அடியில் வருமாறு சொல்லினார்கள், எ - று.

'ஆகமம்' என்பது, 'ஆகம்' எனத் திரிந்து வந்தது. (கசுசு)

1214. முடிவிடை யகலமா யதமொன் றேழ்முழ
விடையினைங் கயிறகன் றேழு நீளமா
யடியினே ழகன்றுநீண் டுயரமீ ரேழுமாய்
வடிவுடை யுலகமூ வாதஞ் சூழ்ந்ததே.

(இ - ள்) முடிவு - (லோகத்தினுடைய) உச்சியிலேயும், இடை - மத்திம லோகத்திலேயும், அகலம் - பூர்வாபரவகலமானது, ஒன்று - ஒரு கயிறாகும், ஆயதம் - தக்ஷிணோத்திரத்தில், (நீளமானது), ஏழ் - ஏழு கயிறாகும், முழவு - மத்தளம் போல, இடையின் - (மத்திமலோகத்துக்கும் லோகாக்கிரத்துக்கும்) மத்தியில், (அதாவது : பிரம்மகல்பாந்தியத்தில்), ஐங்கயிறகன்று - பூர்வாபரம் ஐந்து கயிறகலமாகி, ஏழு நீளமாய் - ஏழு கயிறு நீளமாகி, அடியின் - லோகத்தினுடைய அடியிலே, ஏழகன்று - ஏழுகயிறகலமாகி, நீண்டு - ஏழு கயிறு நீளமாகி, உயரம் - லோகத்தின் உன்னதமானது, ஈரேழுமாய் - பதினாலு கயிறு உன்னதமாகி, வடிவுடை - இந்த ஸ்வரூபத்தையுடைய, உலகம் - லோகமானது, மூவாதம் - (கனோததி, கனவாத, தனுவாத மென்கிற) மூன்று வாதங்களால், சூழ்ந்தது - பரிவேஷ்டித்திரா நின்றது, எ - று. (கசுள)

1215. முழஞ்சிலை காவத மேழ்மு டிந்துழி
முழஞ்சிலை காவத மூன்று வீழ்ந்தோர்பா
லெழுந்திவ்வா றெழுகயி றெய்தச் சென்றிடை
விழுந்தவா றொழிந்ததொன் றுரு மேன்முகம்.

(இ - ள்) முழம் - முழத்தினாலாவது, சிலை - வில்லினாலாவது, காவதம் - காதத்தினாலாவது, ஏழ் முடிந்துழி - ஏழுசென்ற விடத்தில், முழம்-முழமாவது, சிலை - வில்லிலாவது, காவதம் - காதமாவது, ஓர் பால் - ஒரு பக்கத்துக்கு, மூன்று வீழ்ந்து - மூன்று மூன்றாகக் குறைந்து, இவ்வாறு - இந்தப் பிரகாரமாக, எழுந்து - (ஏழுகயிறகன்ற லோகத்தினுடைய அடியினின்றும்) எழுந்து, எழுகயி

றெய்தச் சென்றிடை - ஏழுகயிறுயர்ந்த மத்திமலோகத்தில், விழுந்தவாறு - பூர்வாபர பாகத்தில் ஒரு பக்கத்துக்கு மூன்றாக இரண்டு பக்கத்துக்கும் அந்த ஆறு கயிறு குறைந்து, ஒழிந்தது - மீந்து நின்றது, மேன்முகம் - மேலளவானது, ஒன்றாகும் - ஒரு கயிறாகும், எ - று. (கஉஅ)

1216. அரைமுழ மேழுசென் றங்கு நான்முழம்
பெருகவிவ் வாற்றினாற் பெருகிச் சென்றுமே
லரையெழு கயிற்றினைங் கயிற கன்றுமேற்
பெருகிய படியினாற் பின்சு ருங்குமே.

(இ - ள்) அரைமுழமேழு சென்றங்கு - மூன்றரை முழம் சென்ற அவ்விடத்தில், நான் முழம் பெருக - நாலு முழம் விரிவாக, இவ்வாற்றினால் - இந்தக் கிரமத்தினால், பெருகிச் சென்று - ஒரு கயிறகன்ற மத்திமலோகத்தினின்றும் பூர்வாபரபாக மிரண்டிடத்தும் கிரமத்தால் விரிவாகிச் சென்று, மேல் - மேலே, அரையெழு கயிற்றின் - மூன்றரைக் கயிறுயர்ந்த பிரம்ம கல்பாந்தியத்தில், ஐங்கயிறகன்று - ஐந்து கயிறகலமாகி, பெருகியபடியினால் - பெருகிய கிரமம் போல, பின் - பிற்பாடு, மேல் - மேலே, சுருங்கும் - சுருக்கமாகும், எ - று. (கஉக)

1217. பொதுவினா லொன்றுமாம் நாளி பாயிரம்
விதியினா லுலகிரண் டாக வேண்டினார்
முதனடு விறுதியான் மூன்று மாகினாற்
கதியினா னிலத்தினான் காகு மென்பவே.

(இ - ள்) பொதுவினால் - ஸாமான்யத்தினால், உலகு - லோகமானது, ஒன்றுமாம் - ஒன்றேயாகும், நாளி - த்ரஸ நாளிகையென்றும், பாயிரம் - பாஹ்யமென்றும், விதியினால் - இந்த விதியினாலே, இரண்டாக வேண்டினார் - இரண்டாகவும் விரும்பிச் சொன்னார்கள், முதல் - அதோலோகமும், நடு - மத்திமலோகமும், இறுதியால் - ஊர்த்துவலோகமுமாகிய இம்மூன்றினால், மூன்றுமாகி - மூன்றாகியும், நாற்கதியினான் - (நாரகதிரியக் மனுஷ்ய தேவரென்னும்) சதுர்கதிகளினால், நிலத்தின் - பூமிவகையின், நான்காகுமென்ப - நாலாகுமெனவும் சொன்னார்கள், எ - று. (கஎ0)

1218 அஞ்சுமாம் பஞ்சத்தி காயத் தாறுமா
மெஞ்சிய காலத்தோ டேழு நாரகர்
நஞ்சுதா ரிகணர ரொளியர் மேலவ
ரஞ்சொலா ரிலாதவ ரகதி யார்க்கிடம்.

(இ - ள்) பஞ்சத்தி காயத்து - பஞ்சாஸ்திகாயங்களினாலே, அஞ்சுமாம் - லோகமானது ஐந்துமாகும், எஞ்சிய - பஞ்சாஸ்திகாயத்தோடு கூடி மிஞ்சிய,

காலத்தோடு - காலத்திரவியத்தோடு, ஆறுமாம் - ஆறுமாகும், [illegible] - [illegible] வசிக்கும் நரகலோகமும், நஞ்சுதாரினர் - பவணர் வசிக்கும் பவணலோகமும், [illegible] - மனுஷ்ய லோகமும், ஒளியர் ஜோதிஷ்கருலகமும், மேலவர் - [illegible], அம் - அழகிய, சொலார் - சொல்லையுடைய ஸ்த்ரீமார்கள், இவர்தவர் - [illegible] அஹமிந்திரர் தங்கியிருக்கும் அஹமிந்திரலோகமும், அகதியார்க்கு - [illegible] கதியையுடைய ஸித்த பரமேஷ்டிகளுக்கு, இடம் - ஸ்தானமாகிய ஸித்தக்ஷேத்திரமும், (ஆகிய இவைகளால்), ஏழு - ஏழும் ஆகும், எ - று. ([illegible])

1219. நிகோதமே நிரையங்க ளஞ்சு தன்னிடைப்
பகாதள வகலமோர் கயிற்ற வாகுமே
மிகாதொரு கயிறுதான் மேரு வெய்திடா
பகாநர கிரண்டுமேற் பவணம் பத்துமாம்

(இ - ள்) நிகோதம் - (கிழக்கு மேற்கு ஏழுகயிறகலமும் தெற்கு வடக்கு ஏழுகயிறு விஸ்தீர்ணமுமாகிய லோகத்தின் அடியிலே நாலு திக்குகளிலும் மூன்று மூன்று கயிறு விஸ்தீர்ணம் பாஹ்யமாகவும் நடுவில் ஒரு கயிறகல நீளமுமாகிய த்ரஸ நாளிகையின் அடியினின்று) நிகோதமும், மேல் - அதற்குமேல், நிரயங்களஞ்சு தன்னிடை - ஐந்து நரக பரியந்தம், அகலம் - அகலம், பகாதளவு - முன் சொல்லாத அளவு, (அதாவது : நீளம் உன்னதம்), ஓர் கயிற்றவாகும் - ஒவ்வொன்று ஒவ்வொரு கயிறு அகலம் நீளம் உன்னதமுடையதாகும், மிகாது - (லோகமத்திமம்வரையில்) மீந்து நின்றது, ஒரு கயிறுதான் - ஒரு கயிறுன்னதப் பிரமாணமேயாம், மேருவெய்திடா - மஹாமேரு பர்வத மூலம்வரையில் அடைந்து, பகா - முன் சொல்லாத, நரகிரண்டும் - இரண்டு நரகங்களும், மேல் - அதற்கு மேல் இராநின்ற, பவணம்பத்தும் - பத்துவிதமாகிய பவணலோகமும், ஆம் - அந்த ஒரு கயிறுப் பிரமாணத்திலாகும், எ - று. (கஎஉ)

1220. ஒன்றரை யொன்றரை யரையொ டாறமாய்
நின்றவொண் டுறக்கமோர் கயிறு நின்றவா
மன்றியேழ் நிலப்புரை நாற்பத் தொன்பதிற்
சென்றமிந் திரகத்தெண் டிசையுஞ் சேணியே.

(இ - ள்) ஒன்றரை - பூமிக்குமேல் ஒன்றரைக் கயிறுன்னதம், (ஸௌதர்ம ஈசான கல்பமும்), ஒன்றரை - அதன் மேலொன்றரைக் கயிறுன்னதம், (ஸநத்குமார மாஹேந்திர கல்பமும்), அரையொடு - அதற்கு மேல் அரையரைக் கயிறுன்னதத்தோடு கூடியதாகி, ஆறமாய் - மற்ற ஆறுயுகளங்களுமாகி, நின்ற - அதற்கு மேல் மீந்திரா நின்ற, ஓர் கயிறு - ஒரு கயிறுன்னதத்தில், ஒண் - ஒளிபொருந்திய, துறக்கம் - அஹமிந்திரலோகமும், (ஸித்திக்ஷேத்திர பரியந்தம்), நின்றவாம் -

நிலை பெற்றுள்ளனவாம், அன்றி - இது வல்லாமல், (அதோ லோகத்திலுள்ள), ஏழ் நிலம் - ஏழு நரகங்களுடைய, புரை நாற்பத்தொன்பதில் - நாற்பத்தொன்பது புரைகளிலும், இந்திரகத்து - நடுவில் உள்ள இந்திரகங்களின், எண்டிசையும் - எட்டுத் திக்குகளிலும், சேணி - ஸ்ரேணிபந்தங்கள், சென்ற - வரிசையாக அடைந்திரா நின்றன, எ - று.

இவ்வாறு கூறியதனால் பிரகீர்ணகங்கள் வரிசையில்லாமலிருக்கின்றனவென்பது பெறப்படும். (கஎஉ)

வேறு.

1221. ஆறெட்டாம் விதிக்கி லொன்றொன் றுங்கவை திக்கி லாமே
ஊறிட்ட சேணி பந்தம் புரைதொறொன் றொழித்தொன் றுங்கீழ்
நூறிட்டா யிரங்க ளேச ஐயாறை யைந்து மூவைந்
தேறிட்ட ரைந்து மூன்றொன் றைந்திலா வைந்து கீழாம்.

(இ - ள்) விதிக்கில் - முதல் நரகத்து முதற்புரையில் விதிக்குகளிலே, ஆறெட்டு - நாற்பத்தெட்டு ஸ்ரேணிபந்தங்கள், ஆம் - ஆகும், ஒன்றொன்று - ஒவ்வொன்றதிகமாக, ஆங்கவை - அங்கு அந்த முதல் நரகத்து முதற் புரையில் நாற்பத்தொன்பது ஸ்ரேணிபந்தங்கள், திக்கில் - திக்குகளிலே, ஆம் - ஆகும், ஊறிட்ட - இப்படியாகச் சொல்லப்பட்ட, சேணிபந்தம் - ஸ்ரேணிபந்தங்கள், புரைதொறும் - கீழ் கீழ்ப்புரைகள் தோறும், ஒன்றொழித்து - திக்குவிதிக்குகளில் ஒன்றொன்றாகக் குறைக்க, கீழ் - ஏழா நரகத்தில், ஒன்றும் - திக்குகளில் ஒரே ஆவாஸமாகும், நூறிட்டு - நூறிலேயிட்டு, ஆயிரங்கள் - ஆயிரங்களை, ஏச-இசைக்க, (அதாவது: கணிக்க), ஐயாறு - முப்பது நூறாயிரம், (அதாவது: முப்பது லக்ஷம்) (ஆவாஸங்கள் முதல் நரகத்திலும்), ஐயைந்து - இருபத்தைந்து லக்ஷம் (ஆவாஸங்கள் இரண்டாவது நரகத்திலும்), மூவைந்து - பதினைந்து லக்ஷம், (ஆவாஸங்கள் மூன்றாவது நரகத்திலும்), ஏறிட்ட-இசைந்தொன்றிய, ஈரைந்து - பத்து லக்ஷம் ஆவாஸங்கள், (நாலாநரகத்திலும்), மூன்று - மூன்று லக்ஷம் ஆவாஸங்கள், (ஐந்தாநரகத்தினும்), ஐந்திலா - ஐந்து குறைந்த, ஒன்று - ஒரு லக்ஷம் ஆவாஸங்கள் (ஆறு நரகத்திலும்), கீழ் - ஏழா நரகத்தில், ஐந்து - ஐந்தே ஆவாஸங்கள், ஆம் - ஆகும், எ - று. (கஎச)

வேறு.

1222. அசுரர் நாகரம் பொன்னர் தீவரெண்
டிசையர் தீயவ ருதகர் வாயுவர்
விசையின் மின்னவர் மேக ராகுமத்
தசவி காயமாம் பவணர் தாங்களே.

(இ - ள்) பவணர்தாங்கள் - பவணதேவ கூட்டங்கள், அசரர் - அசுர குமாரர்களும், நாகர் - நாக குமாரர்களும், அம் - அழகிய, பொன்னர் - ஸ்வர்ண குமாரர்களும், தீவர் - தீபகுமாரர்களும், எண் திசையவர் - திக்குகுமாரர்களும், தீய வர் - அக்னிகுமாரர்களும், உதகர் - உததிகுமாரர்களும், வாயுவர் - வாதகுமாரர் களும், விசையின் மின்னவர் - வித்யுத் குமாரர்களும், மேகர் - மேக குமாரர்களும், ஆகும் - ஆகிய, அ - அந்த, தசம் - பத்துவிதமாகிய, நிகாயமாம் - ஸமூஹங்களா கும், எ - று. (கஎ௨)

வேறு.

1223. அறுபத்து நான்கு நான்கோ டெண்பத்தேழ் பத்தி ரண்டும்
செறிவுற்ற தொண்ணூற் றாறுஞ் செப்பிய வெழுபத் தாறும்
மறுவற்ற வசுரர் நாகர் பொன்னர்வா யுக்கள் மற்றை
யறுவர்க்கும் வேறு நூறா யிரம்பவ ணங்க ளாமே.

(இ - ள்) மறுவற்ற - களங்கமற்ற, அசுரர் - அசுர குமாரர்களுக்கு, அறு பத்து நான்கு நூறாயிரம் பவணங்கள் - அறுபத்து நாலு லட்சம் விமானங்களும், நாகர் - நாககுமாரர்களுக்கு, நான்கோடெண்பத்து நூறாயிரம் பவணங்கள் - எண் பத்து நாலு லக்ஷம் விமானங்களும், பொன்னர் - ஸ்வர்ண குமாரர்களுக்கு, எழ் பத்திரண்டு நூறாயிரம் பவணங்களும் - எழுபத்திரண்டு லக்ஷம் விமானங்களும், வாயுக்கள் - வாதகுமாரர்களுக்கு, செறிவுற்ற - சேர்ந்திரா நின்ற, தொண்ணூற் றாறு நூறாயிரம் பவணங்களும் - தொண்ணூற்றாறு லக்ஷம் விமானங்களும், மற்றை - இவர்களல்லாத, அறுவர்க்கும் - ஆறுதாரத்தார்களுக்கும், வேறு - வேறு வேறாக, செப்பிய - சொல்லப்பட்ட, எழுபத்தாறு நூறாயிரம் பவணங்களும் - எழுபத்தாறு எழுபத்தாறு லக்ஷம் விமானங்களும், ஆம் - ஆகும், எ - று.

நூறாயிரம் பவணங்கள் என்னும் பதங்கள் எல்லாத் தொகைகளோடுங் கூட்டப் பட்டன. (கஎ௩)

வேறு.

1224. பவணர்தம் பவணங்கள் கோடி யேழொடு
சிவணிய வெழுபதோ டிரண்டு லக்கமாம்
அவணுறை யசுரருக் காயு வான்கட
லுவமையி றனுதனு வையைந் தோங்கினர்.

(இ - ள்) பவணர்தம் - பவண தேவர்களுடைய, பவணங்கள் - விமான சங்கியைகள், கோடியேழொடு - எழுகோடியோடு கூட, சிவணிய - சேர்க்கப்பட்ட, எழுபதோடிரண்டு லக்கமாம் - எழுபத்திரண்டு லட்சமாம் (அதாவது : எழுகோடி யே எழுபத்திரண்டு லட்சம் விமானங்களாகும்), அவண் - அந்தப் பத்துதாரங்

களில், உறை - முதலில் தங்கி யிராநின்ற, அசுரருக்கு - அசுர குமாரர்களுக்கு, ஆயு - உத்கிருஷ்டாயுஷ்யமானது, வான்கடல் - சிறந்த ஒரு கடற்காலமாகும், உவமையில் - உபமையில்லாத, தனு - (அவர்கள்) சரீர உன்னதத்தில், தனுவை யைந்து - இருபத்தைந்து வில்லு, ஓங்கினர் - உயரமானார்கள், எ - று. (கஎஎ)

1225. பல்லமூன் றிரண்டரை யிரண்டு மூவரை
சொல்லிய நாகர்நற் சுவணர் தீவரோ
டல்லவ ரறுவர்க்கு மாயு நாகர்க்கு
வில்லுமூ வைந்துமே லவர்க்கீ ரைந்துமாம்.

(இ - ள்) சொல்லிய - சொல்லப்பட்ட, நாகர் - நாக குமாரர்களுக்கு, பல்ல மூன்று - மூன்று பல்லமும், நல் - நன்மையாகிய, சுவணர் - ஸ்வர்ண குமாரர்களுக்கு, இரண்டரை - இரண்டரைப் பல்லமும், தீவர் - தீப குமாரர்களுக்கு, இரண்டு - இரண்டு பல்லமும், அல்லவர் - இவர்களல்லாதவர்களாகிய, அறுவர்க்கும் - ஆறு தரத்தார்களுக்கும், மூவரை - ஒன்றரை ஒன்றரைப் பல்லமும், ஆயு - உத்கிருஷ்ட ஆயுஷ்யங்களாகும், நாகர்க்கு - நாக குமாரர்களுக்கு, வில்லு மூவைந்து - பதினைந்து வில்லு உன்னதமும், மேலவர்க்கு - இவர்களல்லாத எட்டுத்தரத்தார்க்கு, ஈரைந்து - பத்துப் பத்து வில்லும், ஆம் - சரீர உத்ஸேதங்களாகும், எ - று. (கஎஅ)

1226. மானவ ருறைவிடம் மந்த ரத்தினைத்
தானடு வுடையது தீப சாகர
மூனமி லிரண்டரை யிரண்டு மாய்ப்புகை
தானவற் றிடையொன்பத் தைந்து லக்கமாம்.

(இ - ள்) மானவர் - மனுஷ்யர்கள், உறை - தங்கி யிராநின்ற, இடம் - ஸ்தானமானது, மந்தரத்தினைதான் - மந்தர பர்வதத்தை, நடுவுடையது - நடுவே யுடைத்தானதாகி, ஊனமில் - குற்றமில்லாத, இரண்டரைத் தீபம் - இரண்டரைத்வீபமும், இரண்டு சாகரம் - இரண்டு சமுத்திரமும், ஆய் - ஆகி, அவற்றிடை - இந்த இரண்டரைத்வீப இரண்டு ஸமுத்திரங்களின் மத்திய விஸ்தீர்ணமானது, ஒன்பத்தைந்து லக்கம் புகைதான் - நாற்பத்தைந்து லட்சம் யோஜனைகள்தான், ஆம் - ஆகும், எ - று (கஎக)

வேறு.

1227. ஆரியர் மிலேச்ச ராவார் மானவ ரறத்தை யோர்வா
ராரியர் தரும கண்டம் நூற்றெழு பத்தி னுவார்
வாரியுட் டீவு தொண்ணூற் றாறுமற் றைக்கண் டத்துஞ்
சேருந ரறத்தைச் சேரார் மிலேச்சராய்ச் செப்பப் பட்டார்.

(இ - ள்) மானவர்கள் - மனுஷ்யர்கள், ஆரியர் - ஆரிய மனுஷ்யர்களென்றும், மிலேச்சர் - மிலேச்ச மனுஷ்யர்களென்றும், ஆவார் - இரண்டு தரமாவார்கள், அறத்தையோர்வார் - தருமத்தையறிந்து கைக் கொள்பவராகிய, ஆரியர் - ஆரிய மனுஷ்யர்கள், தரும கண்டம் நூற்றெழுபத்தினுவார் - நூற்றெழுபது தரும கண்டங்களிலே பிறப்பார்கள், வாரியுள் - (லவணம், காளோதகம், என்னும் இரண்டு) ஸமுத்திரங்களிலும் உள்ள, தீவு தொண்ணூற்றாறு - தொண்ணூற்றாறு அந்தரத்வீபங்களிலும், மற்றைக் கண்டத்தும் - மற்றையைந்தைந்து மிலேச்ச கண்டங்களிலும், சேருநர் - சேர்ந்திரா நின்றவர்கள், அறத்தைச் சேரார் - தருமத்தைச் சேராதவர்கள் (ஆகையால்), மிலேச்சராய் - மிலேச்ச மனுஷ்யர்களாக, செப்பப்பட்டார் - பரமாகமத்தில் சொல்லப்பட்டார்கள், எ - று. (கஅ0)

1228. ஒன்றதாங் காலர் வாலர் கொம்பர்தாழ் செவியர் சீயம்
பன்றிமான் குரங்கு கீரி யொட்டகங் காடி யாதி
ஒன்றலா முகத்தர் பல்ல மாயுகங் காத மோக்கங்
தின்றிடா பழத்தை மண்ணை முழஞ்சிலும் மரத்துஞ் சேர்வார்.

(இ - ள்) (அந்தரத்வீப வாஸிகளாகிய மனுஷ்யர்கள்), ஒன்றதாங்காலர் - ஒருகால் மனுஷ்யர்களாகவும், வாலர் - வால் மனுஷ்யர்களாகவும், கொம்பர் - கொம்பு மனுஷ்யர்களாகவும், தாழ் செவியர் - நீண்டகாதுடையவர்களாகவும், சீயம் - சிம்மமுகமும், பன்றி - பன்றிமுகமும், மான் - மான்முகமும், குரங்கு - வானரமுகமும், கீரி - கீரிமுகமும், ஒட்டகம் - ஒட்டை முகமும், காடி - காடி முகமும், ஆதி - முதலாக, ஒன்றலா - மனுஷ்யர்களுக்குப் பொருந்தாத, முகத்தர் - முகத்தையுடையவர்களாகவும், பல்லமாயுகம் - ஒரு பல்லமாயுஷ்யத்தை யுடையவர்களாகவும், காதமோக்கம் - இரண்டாயிரம் வில்லுன்னதத்தையுடையவர்களாகவும், பழத்தை, - பழங்களையும், மண்ணை - அத்வீபங்களிலுள்ள தித்திப்பாகிய மண்ணையும், தின்றிடா - ஆஹாரமாகப் பொசித்து, முழஞ்சிலும் - பர்வத குகைகளிலும், மரத்தும் - விருட்சங்களிலும், சேர்வார் - சேர்ந்து வாசம் பண்ணுவார்கள், எ - று. (கஅக)

வேறு.

1229. இமையமா விமையமும் நிடத நீலியுஞ்
சிமையநல் லுருக்கியுஞ் சிகரி யாமலை
தமைநடு வுடையவேழ் நாடி வற்றினுட்
சமையமா றுடையவாம் பாத ரேவதம்.

(இ - ள்) இமையம் - ஹிமவான் பர்வதமும், மாவிமையமும் - மஹாஹிமவான் பர்வதமும், நிடதம் - நிஷதி பர்வதமும், நீலியும் - நீலிபர்வதமும், சிமை -

சிகரங்களினால், அம் - அழகிய, நல் - நன்மையாகிய, உருக்கியும் - ருக்மிபர்வதமும், சிகரியாம் - சிகரிபர்வதமுமாகிய, மலைதமை - இந்த ஆறு குலகிரி பர்வதங்களை, நடுவுடைய - நடுவில் உடைத்தாகிய, ஏழ்நாடு - பரதாதி ஏழுநாடுகளாகும், இவற்றி னுள் - இந்த ஏழுநாடுகளுக்குள், பரதம் - தெற்கிலுள்ள பரதக்ஷேத்திரமும், ஏரவ தம் - வடக்கிலுள்ள ஐராவதக்ஷேத்திரமும், சமைய மாறுடையவாம் - ஆறு காலங் களையுடையனவாம், எ - று. (கஉஉ)

1230. நன்மையு நன்மையு நன்மை யாயதும்
நன்மையிற் றீமையுந் தீமை நன்மையுந்
திண்ணிய தீமையுந் தீமை தீமையென்
றெண்ணிய காலமேற் றிழிவை யாக்குமே.

(இ - ள்) நன்மையு நன்மையும் - நன்னற்காலமும், நன்மையாயதும் - நற் காலமும், நன்மையிற்றீமையும் - நற்றீக்காலமும், தீமைநன்மையும் - தீநற்காலமும், திண்ணிய - திண்மை பொருந்திய, தீமையும் - தீக்காலமும், தீமை தீமை யென்று - தீத்தீக்காலமுமென்று, எண்ணிய - எண்ணப்பட்ட, காலம் - காலங் கள், ஏற்று - உத்ஸர்ப்பிணியையும், இழிவு - அவஸர்ப்பிணியையும், ஆக்கும் - உண்டாக்கும், எ - று. (கஉஙு)

1231. ஒருமுழம் பதினையாண் டுந்தி யுந்திமேல்
வருசிலை யாறுயி ரம்பல்ல மூன்றெய்திப்
பெருகிய பரிசினாற் பின்சு ருங்கிவந்
தொருமுழம் பதினையாண் டாமொர் கற்பமாம்.

(இ - ள்) (உத்ஸர்ப்பிணி காலமானது), ஒரு முழம் - ஒரு முழ உன்ன தத்தினின்றும், பதினையாண்டு - பதினைந்து வருஷ ஆயுஷ்யத்தினின்றும், உந்தி உந்தி - பெருகிப் பெருகி, மேல் - மேலே, வரு - வரப்பட்ட, சிலை - வில்லுகள், ஆறுயிரம் - ஆறுயிரம் உன்னதமும், பல்லமூன்று - மூன்றுபல்ல ஆயுஷ்யமும், எய்தி - அடைந்து, (அவசர்ப்பிணி காலமானது), பெருகிய பரிசினால் - பெருகிய கிரமத்தினால், பின் - பிறகு, சுருங்கி வந்து - குறைந்து வந்து, ஒரு முழம் - ஒரு முழ உன்னதமும், பதினையாண்டு - பதினைந்து வருஷ ஆயுஷ்யமும், ஆம் - ஆகும், ஓர் கற்பமாம் - (இந்த உத்ஸர்ப்பிணி அவஸர்ப்பிணி யிரண்டும் சேர்ந்து) ஒரு கல்பமாகும், எ - று. (கஉச)

1232. ஆழி கள்கோடா கோடியை யிரண்டினில்
நாலுமூன் றிரண்டொன்று நாலுகா லங்களீற்
றாழியி லாண்டுநாற் பத்தீ ராயிரம்
மேலவை யிரண்டிற்கும் விதிக்கப் பட்டவே.

(இ - ள்) ஆழிகள் கோடா கோடி யையிரண்டினில் - (அவஸர்ப்பிணிக் கேற்பட்ட) பத்துக் கோடா கோடி கடற்கால காலத்தில், நாலு - (நன்னற்காலத் துக்கு) நாலு கோடா கோடி கடலும், மூன்று - (நற்காலத்துக்கு) மூன்று கோடா கோடி கடலும், இரண்டு - (நற்றீக் காலத்துக்கு) இரண்டு கோடா கோடி கடலும், ஒன்று - (தீ நற்காலத்துக்கு) ஒரு கோடா கோடி கடலும், நாலு காலங்கள் - இப்படி நாலு காலங்களிலே, ஆம் - ஆகும், ஈற்ருழியில் - தீ நற்காலத்தின் கடைசிக் கடற்காலத்தில், ஆண்டு நாற்பத்தீராயிரம் - நாற்பத்தீராயிரம் வருஷங்கள், மேலவையிரண்டிற்கும் - முன் சொல்லாத தீக்காலம் தீத்தீக்காலமாகிய இரண்டிற் கும், விதிக்கப்பட்ட - இருபத்தோராயிரம் இருபத்தோராயிரம் வருஷங்களாக சொல்லப்பட்டனவாம், எ - று. (கஅ௫)

1233. கருமமும் போகமு மிருமை யுமுடன்
மரியமுன் னிலங்களுட் பாத ரேவத
மிருமைய முதல்முக் காலம் போகத்தின்
மருவிய கருமத்தை மற்றை மூன்றுமே.

(இ - ள்) முன்னிலங்களுள் - முன்னாலே சொல்லப்பட்ட அந்த ஏழு நாடுகளினுள்ளே, பாதம் - பாத க்ஷேத்திரமும், ரேவதம் - ஐராவத க்ஷேத்திரமும், கருமம் - கரும பூமியாகவும், போகமும் - போக பூமியாகவும், இருமையும் - இந்த இரண்டையும், உடன் - ஒரு தன்மையாக, மரிய - சேர்ந்திராநின்றன, இருமைய- இந்த இரண்டில், முதல் முக்காலம் - முதலிலே சொல்லப்பட்ட (நன்னற்காலம் நற்காலம் நற்றீக்காலமாகிய இந்த) மூன்று காலங்களும், போகத்தின் மருவிய - போக பூமியைச் சேர்ந்திராநின்றன, மற்றை மூன்றும் - (தீநற்காலம் தீக்காலம் தீத்தீக்காலமாகிய இந்த) மூன்று காலங்களும், கருமத்தை மருவிய - கரும பூமி யைச் சேர்ந்திராநின்றன, எ - று.

'மருவிய' என்பது இரண்டிடங்களினும் கூட்டப்பட்டது. (கஅசு)

1234. நன்மையுட் டீமையுட் டீமை நன்மையுட்
பன்னரும் பிரமரும் பரம தீர்த்தரும்
மன்னரும் பலவரும் வாசு தேவருந்
தன்னுறு பகைவருஞ் சாமர் தாமுமாம்.

(இ - ள்) நன்மையுட்டீமையுள் - அவஸர்ப்பிணியின் மூன்ருங்காலமாகிய நற்றீக்காலத்திலுடைய அந்தியத்திலேயும், தீமை நன்மையுள் - நாலாங்காலமாகிய தீநற்காலத்திலும், பன்னரும் - சொல்வதற்கரிய, பிரமரும்-பிரம்மாக்களும், பரம - உத்கிருஷ்டமாகிய குணமுடைய, தீர்த்தரும் - தீர்த்தங்கர பரம தேவர்களும், மன்னரும் - சக்ரவர்த்திகளும், பலவரும் - பலதேவர்களும், வாசுதேவரும் - வாஸு

தேவர்களும், தன் - இவ்வினத்தன்னிலே, உறு-பொருந்திய, பகைவரும் - பகைஞரும் (அதாவது: பிரதி வாஸுதேவர்களும்), சரமர்தாமும் - இன்னும் அனேகமாகிய சரமதேகதாரிகளும், ஆம் - உற்பத்தியாம், எ - று. (கஅஎ)

1235. உத்தர தெக்கண குரவ முத்தமம்
மத்திம மரிவரு டம்மி ரம்மிய
மத்தக மைவத மைரண்ணி யம்மிவை
நித்தமாய்ப் போகங்க ணின்ற பூமியே.

(இ - ள்) உத்தரகுரவம் - உத்தரகுரு க்ஷேத்திரமும், தெக்கணகுரவம் - தக்ஷிணகுரு க்ஷேத்திரமும், உத்தமம் - உத்தமபோக பூமியாகவும், அரிவருடம் - ஹரிவருஷ க்ஷேத்திரமும், இரம்மியம் - ரம்மியக க்ஷேத்திரமும், மத்திமம் - மத்திமபோக பூமியாகவும், ஐவதம் - ஹைமவத க்ஷேத்திரமும், ஐரண்ணியம் - ஹைரண்ணியவத க்ஷேத்திரமும், அத்தகம் - ஜகன்னியபோக பூமியாகவும், இவை - இந்த க்ஷேத்திரங்கள், நித்தமாய் - நித்தியங்களாய், போகங்கள் - போகங்களுடனே கூடி, நின்ற-நிலைபெற்றிராநின்ற, பூமி - போக பூமிகளாகும், எ - று.

1236. மூன்றிரண் டொருபல்ல முறையு ளாயுக
மான்றவில் லாயிர மாறு நாலிரண்
டூன்றிய வொக்கமூன் றிரண்டோர் நாள்விடா
தோன்றிய பசிகெட வமுத முண்பரே.

(இ - ள்) மூன்று பல்லம் - (உத்தமபோக பூமியிலிராநின்ற மனுஷ்யர்களுக்கு) மூன்று பல்லமும், இரண்டு - (மத்திமபோக பூமியிலிராநின்ற மனுஷ்யர்களுக்கு) இரண்டு பல்லமும், ஒரு பல்லம் - (ஜகன்னிய போகபூமி மனுஷ்யர்களுக்கு) ஒரு பல்லமும், முறை - கிரமமாக, ஆயுகம் - ஆயுஷ்யங்கள், உள - உண்டாகும், ஆன்ற - பெரிதாகிய, வில் - விற்கள், ஆயிரமாறு - (உத்தமபோக பூமி மனுஷ்யர்களுக்கு) ஆறாயிரமும், நாலு-(மத்திமபோக பூமி மனுஷ்யர்களுக்கு) நாலாயிரமும், இரண்டு - (ஜகன்னிய போகபூமி மனுஷ்யர்களுக்கு) இரண்டாயிரமும், ஊன்றிய - உண்டாகப்பட்ட, ஒக்கம் - உன்னதங்களாகும், மூன்று நாள் விடா - (உத்தமபோக பூமியிலிராநின்ற மனுஷ்யர்கள்) மூன்று நாளிடைவிட்டும், இரண்டு - (மத்திமபோக பூமி மனுஷ்யர்கள்) இரண்டு நாள் இடைவிட்டும், ஓர் நாள் விடா - (ஜகன்னிய போகபூமி மனுஷ்யர்கள்) ஒரு நாள் இடைவிட்டும், தோன்றிய - தங்களுக்குண்டாகிய, பசி - பசியானது, கெட - நீங்கும்படியாக, அமுதம் - அமிர்த்தத்தை, உண்பர் - பொசிப்பார்கள், எ - று. (கஅஆ)

1237. உரைத்தமுக் காலமூன் றுதி யுள்ளுமாம்
நிரைத்தவைஞ் ஞூறவிற் புவ்வ கோடியு

மாத்தியே யிரண்டுநூற் றிருபத் தைம்பது
முரைத்திலா மூன்றிலா திக்கு மொக்கநாள்.

(இ - ள்) உரைத்த - முதலிலே சொல்லப்பட்ட, முக்காலம் - (நன்னற் காலம், நற்காலம், நற்றீக்காலமாகிய இந்த) மூன்று காலங்களினுடைய, ஆதி - முதலிலேயுள்ள குணங்கள், மூன்றுள்ளும் - மூன்று போகபூமியுள்ளும், ஆம் - ஆகும், (அதாவது : மூன்று காலங்களின் ஆதியிலுள்ள மனிதரின் உன்னதமும், ஆயுஷ்யமும் உத்தமம் மத்திம ஜகன்னிய போக பூமியிலுள்ளவர்களின் உன்னதம் ஆயுஷ்யத்திற்கு முறையே சமானமாகும்), நிரைத்த-வரிசைபெற்ற, ஐந்நூறு வில்- ஐந்நூறு வில்லுன்னதமும், புவ்வகோடியும்-பூர்வகோடியாயுஷ்யமும், அரத்தியேழு- எழு முழமும், நூற்றிருபது-நூற்றிருபதுவருஷமும், இரண்டு-இரண்டு முழமும், ஐம்பதும்-ஐம்பது வருஷமும், உரைத்திலா - முன் சொல்லாத, மூன்றில்-(தீநற் காலம், தீக்காலம், தீத்தீக்காலம் இந்த) மூன்று காலங்களினுடைய, ஆதிக்கும்-முத லுக்கும், (முதலிலுள்ள மனிதர்களின்), ஒக்கம் - உன்னதமும், நாள் - ஆயுஷ்யமும், ஆம் - ஆகும், எ - று. (கக0)

1238 கருமத்த கச்சைநற் சுகச்சை காமிக
மருவிய மாகச்சை கச்ச காவதி
யருமையி லாவதை யிலங்க லாவதை
பொருவிலா பொக்கலை பொக்க லாவதி.

(இ - ள்) கருமத்த - நித்திய கர்மபூமியைச் சேர்ந்திராநின்றவை, கச்சை- கச்சாவும், நல் - நன்மையாகிய, சுகச்சை - சுகச்சாவும், காமிகம் - அழகை, மரு விய - சேர்ந்திராநின்ற, மாகச்சை - மஹாகச்சாவும், கச்சகாவதி - கச்சகாவதியும், அருமையில் - (நற்குணம் பொருள்கள் முதலியவைகளால்) அருமையில்லாத (அதாவது : குண ஐஸ்வரியங்களால் மிகுந்த), ஆவதை - ஆவர்த்தாவும், இலங் கலாவதை - லாங்கலாவர்த்தாவும், பொருவிலா - உபமையில்லாத, பொக்கலை - புஷ்கலாவும், பொக்கலாவதி - புஷ்கலாவதியுமாகும், எ - று. (ககக)

1239. மன்னு தென்கரை வச்சைநற் சுவச்சைமா
துன்னுமா வச்சையே வச்ச காவதி
சொன்னநல் லிரமையே சுரமை தோமிலா
மன்னர்மன் ரமணிய மங்க லாவதி.

(இ - ள்) தென்கரை - (சீதா நதியினுடைய) தென்கரையில், மன்னும் - சேர்ந்திராநின்ற, வச்சை - வஸ்ஸாவும், நல் - நன்மையாகிய, சுவச்சை - ஸுவஸ் ஸாவும், மா - பெருமையை, துன்னும் - சேர்ந்திராநின்ற, மாவச்சை - மஹாவஸ் ஸாவும், வச்சகாவதி - வஸ்ஸகாவதியும், சொன்ன - சொல்லப்பட்ட, நல் - நன்

மைகளையுடைய, இரமை - ரம்மியாவும், சுரமை - ஸுரம்மியாவும், தோமிலா - குற்றமில்லாத, மன்னர் - ராஜாக்களினுலே, மன் - சேர்ந்திராநின்ற, ரமணியம் - ரமணீயாவும், மங்கலாவதி - மங்கலாவதியுமாகும், எ - று.

ஏகாரங்கள் எண்ணுப் பொருளன. (கஙஉ)

1240. பரவரும் பதுமைநற் பதுமை மாபதம்
மருவுமப் பதுமையே பதும காவதி
திரிவினற் சங்கையே நளினே சீதுதைக்
கரையதென் குமுதையே சரிதை காண்வரில்.

(இ - ள்) காண்வரில் - பார்க்குமிடத்தில், சீதுதை - சீதோதாநதியினுடைய, கரையதென் - தென்கரையில் உள்ளவை, பரவரும் - சொல்லுதற்கரிய, பதுமை - பத்மாவும், நற்பதுமை - ஸுபத்மாவும், மாபதம் - மஹாவென்னும் பதத்தை, மருவும் - சேர்ந்திராநின்ற, அப்பதுமை - அந்தப் பதுமையும் (அதாவது: மஹா பத்மாவும்), பதுமகாவதி - பத்மகாவதியும், திரிவில் - கெடுதலில்லாத, நல் - நன்மையாகிய, சங்கை - சங்காவும், நளினே - நளினுவும், குமுதை - குமுதாவும், சரிதை - ஸரிதாவுமாகும், எ - று. (கஙரு)

1241. வடதடத் தின்வப்பை நல்ல வப்பையு
மிடரிலா மாவப்பை வப்ப காவதி
சுடருடைக் கந்தையே சுகந்தை தோமிலாக்
கடலுடைக் கந்திலே கந்த மாலினி.

(இ - ள்) வடதடத்தின் - ஸீதோதா நதியினுடைய வடகரையில், வப்பை - வப்ராவும், நல்ல வப்பையும் - ஸுவப்ராவும், இடரிலா - துன்பமில்லாத - மாவப்பை - மஹாவப்ராவும், வப்பகாவதி - வப்ரகாவதியும், சுடருடை - பிரகாசம் பொருந்திய, கந்தை - கந்தாவும், சுகந்தை - ஸுகந்தாவும், தோமிலா - குற்றமில்லாத, கடல்-ஸமுத்திரத்தை, உடை - உடைத்தாகிய, கந்திலே - கந்திலாவும், கந்தமாலினி - கந்தமாலினியுமாகும், எ - று. (கஙச)

வேறு.

1242. நாலுமுன் னதியினும் நாலுநால் வரையினும்
நாலுநா லிரட்டியாய் விதேகநாடு நின்றவே.

(இ - ள்) நாலுமுன்னதியினும் - நால்மூன்று பன்னிரண்டாகிய விபங்க நதிகளாலும், நாலுநால் வரையினும் - நால்நான்கு பதினருகிய வக்ஷாரபர்வதங்

களாலும், நாலு நாலிரட்டியாய் - நாலை நான்குதரம் இரட்டித்ததாகிய முப்பத்தி ரண்டாகிய, விதேகநாடு - விதேகநாடுகள், நின்ற - இராநின்றன, எ - று. (ககூ)

1243. சீதையின் வடகரை யாதியாய் வலம்முறை
போதியவந் நாடுகள் நீதியோடு நின்றவே.

(இ - ள்) ஓதிய - சொல்லப்பட்ட, அந்நாடுகள் - அந்தக் கச்சா முதலாகிய முப்பத்திரண்டு நாடுகளும், சீதையின் - ஸீதாநதியினுடைய, வடகரை - வடகரையி னின்றும், ஆதியாய் - முதலாகி, வலம்முறை - பிரதக்ஷிணமாக, நீதியோடு - வரிசையோடு, நின்ற - இராநின்றன, எ - று. (ககசு)

1244. சொல்லியவந் நாடுகள் வெள்ளியம் மலையினுஞ்
சுல்லியா றிரண்டினும் நல்லகண்ட மாறுமாம்.

(இ - ள்) சொல்லிய - சொல்லப்பட்ட, அந்நாடுகள் - அந்தக் கச்சா முத லிய முப்பத்திரண்டு நாடுகளும், வெள்ளியம்மலையினும் - ஒவ்வொரு விஜயார்த்த பர்வதத்திலும், சுல்லியாறிரண்டினும் - இரண்டு க்ஷுல்லக நதிகளினாலும், நல்ல - நன்மையாகிய, கண்டம் ஆறுமாம் - (ஒவ்வொரு நாடுகளில்) ஆறு கண்டங் களாகும், எ - று. (ககஎ)

1245. செவ்விலைந்து நூறுயர்ந்து புவ்வகோடி யாயுக
மிவ்வகைய நாட்டுளென்றும் வெவ்வினைக டீர்ப்பரே.

(இ - ள்) இவ்வகைய - இந்தப் பிரகாரமாகிய, நாட்டுள் - இந்த முப்பத்தி ரண்டு நாடுகளிலேயும், (இராநின்ற மனுஷ்யர்கள்), செவ் - செவ்விதாகிய, வில் - வில்லுகள், ஐந்துநூறுயர்ந்து - ஐந்நூறுன்னதமுடையவர்களாகி, புவ்வகோடியா யுகம் - பூர்வகோடி ஆயுஷ்யத்தில், என்றும் - (காலவேறுபாடில்லாமல்) எப்பொ ழுதும், வெவ்வினைகள் - கர்மங்களை, தீர்ப்பர் - கெடுத்து முக்தியையும் அடைவார் கள், எ - று. (ககஅ)

1246. சுல்லிமேரு நான்குடைய நல்லநாடு நான்கினு
மில்லைவேறு பாடிவட் சொன்னசொன்ன யாவையும்.

(இ - ள்) சுல்லிமேரு - க்ஷுல்லக மஹம்மேரு, நான்குடைய - நாலை யுடைத்தாகிய, நல்ல - நன்மையாகிய, நாடு நான்கினும் - (தாதகீஷண்டம் புஷ் கரார்த்தங்களி லிராநின்ற) நாலு விதேக க்ஷேத்திரங்களிலும், இவண் - இந்த ஜம்பூத்வீபத்தில், சொன்ன சொன்ன - சொல்லப்பட்ட சொல்லப்பட்ட, யாவை யும் - சமஸ்தங்களும், இல்லை வேறுபாடு - வேறுபாடில்லாமல் சமானமாயிரா நின்றன, எ - று. (ககக)

1247. ஒன்றினென் றிரட்டியாய்ச் சென்றதீபஞ் சாகரம்
மன்றன மலைப்புறத்து நின்றவா றியம்புவாம்.

(இ - ள்) ஒன்றினென் றிரட்டியாய் - ஒன்றுக்கொன்று இரட்டித்த இரட்டித்த விஸ்தீர்ணமுடையனவாகி, சென்ற - ஒன்றையொன்று சூழ்ந்து அடைந்திராநின்ற, தீபம் - அஸங்கியாதத்வீபங்களும், சாகரம் - அஸங்கியாத ஸமுத்திரங்களும், மன்றனமலை - மானுஷோத்தர பர்வதத்தின், புறத்து - பாஹ்யத்திலே, நின்றவாறு - இராநின்ற விதத்தை, இயம்புவாம் - இனிச் சொல்லுவோம், எ-று.

1248. இருபத்தைந்து கோடாகோடி யாமுத்தார பல்லங்கட்
குரியரோம மெண்ணவாந் தெரியுந்தீபஞ் சாகரம்.

(இ - ள்) தெரியும் - விளங்குகின்ற, தீபம் - அஸங்கியாதத்வீபங்களும், சாகரம் - அஸங்கியாத சமுத்திரங்களும், (எவ்வளவென்று கேட்டால்), இருபத்தைந்து கோடா கோடியாம் - இருபத்தைந்து கோடா கோடியாகிய, உத்தார பல்லங்கட்கு - உத்தார பல்லங்களுக்கு, உரிய - உரித்தாகிய, ரோமம் - மயிர்களின், எண்ணவாம் - எண்ணிக்கையையுடையனவாம், எ - று. (உ0ா)

1249. உவரிதண்ணீர் தேன்சுரைத் திவருபாலெ யிக்குவின்
சுவையநீரின் வாரிக ளவையுமேழ தாகுமே.

(இ - ள்) உவரி - உப்புஜலத்தையுடைய ஸமுத்திரமும், தண்ணீர் - சுத்த ஜலத்தையுடைய ஸமுத்திரமும், தேன் - மதுபோல ஜலத்தையுடைய ஸமுத்திரமும், சுரைத்து-கள்ளுப்போன்ற ஜலமுள்ள ஸமுத்திரமும், இவரு-விரும்புகின்ற, பால் - பால் ஸமுத்திரமும், நெய் - நெய் ஸமுத்திரமும், இக்கு - இட்சுரஸஸமுத்திரமும், (ஆகிய) ஏழது - ஏழும், ஆகும் - ஏழுவிதமாகிய ஜலஸ்வாதுக்களையுடைய ஸமுத்திரங்களாகும், வாரிகளவையும் - மற்ற அஸங்கியாத ஸமுத்திரங்களெல்லாம், நீரின் இன்சுவைய - இட்சுரஸமாகிற ஜலஸ்வாதுவையுடைய ஸமுத்திரங்களாகும், எ - று. (உ0உ)

1250. சாகரஞ் சலசரங்கட் காகரங்க ளல்லவாம்
நாகமாதி பாதநால் போகபூமி தீவெலாம்.

(இ - ள்) சாகரம் - அஸங்கியாத ஸமுத்திரங்களும், சலசரங்கட்கு - ஜலசர ஜீவன்களுக்கு, ஆகரங்கள் - இருப்பிடங்கள், அல்லவாம் - அல்லாதனவாகும், தீவெலாம் - அஸங்கியாதத்வீபமெல்லாம், நாகமாதி - யானை முதலாகிய, பாதநால் - சதுஷ்பாதங்களையுடைய ஜீவன்களிருக்கும்படியான, போகபூமி - திரியக் போக பூமிகளாகும், எ - று. (உ0ங)

1251. முடிந்தநீபம் சாகரத் தடைந்தவை விலங்குமிவ்
விடங்களெண் ணிறந்தன முடிந்திடா வுரைக்கவே.

(இ - ள்) முடிந்த - அந்தியத்திலிராநின்ற, நீபம் - ஸ்வயம்புரமணார்த்த த்வீபத்திலும், சாகரத்து - ஸ்வயம்புரமண ஸமுத்திரத்திலும், இவ்விடங்கள் - இந்த இரண்டரை த்வீபம் இரண்டு ஸமுத்திரங்களிலும், அடைந்தவை - சேர்ந்திராநின்றவைகளாகிய, விலங்கும் - த்வீந்திரிய திரீந்திரிய சதுரிந்திரியமாகிய விகலேந்திரிய விலங்குகளும் பஞ்சேந்திரிய விலங்குகளும், எண்ணிறந்தன - கணக்கு மீறினவையாயிராநின்றன, உரைக்க - அவை இவ்வளவென்று கணக்கிட்டுச் சொல்வதற்கு, முடிந்திடா - முடியா, எ - று. (௨௦௪)

வேறு.

1252. ஏழு சாகரத் தீவத்தி னெட்டதாய்ச்
சூழ்கி டந்தநந் தீச்சுர தீவதி
னூழி யூழிவா னோர்வந் திறைவனைத்
தாழு மற்றதன் பெற்றியைச் சாற்றுவாம்.

(இ - ள்) ஏழுசாகரத்தீவத்தின் - ஜம்பூத்வீப முதல் ஏழுத்வீபங்களினின்றும் மஹாலவண ஸமுத்திரம் முதல் ஏழு சமுத்திரங்களினின்றும், (தாண்டி), எட்டதாய்-எட்டாவது த்வீபமாகி, சூழ்கிடந்த - ஏழு த்வீபங்களையும் ஏழு ஸமுத்திரங்களையுஞ் சூழ்ந்து வளையாக்கிருதமாய் இராநின்ற, நந்தீச்சுரத்தீவதில் - நந்தீசுவரத்வீபத்தில், ஊழி ஊழி - அனாதி காலமாக முறைமையால், வானோர் - சதுர்ணிகாயாமரர்கள், வந்து - அந்தத்வீபத்திலுள்ள அக்கிருத்திமசைத்யாலயங்களிற் சேர்ந்து, இறைவனை - ஜினேந்திரப்பிரதிமைகளை, தாழும் - வணங்கி பூஜிக்கின்ற, அதன் - அந்த நந்தீஸ்வரத்வீபத்தின், பெற்றியை - பெருமையை, சாற்றுவாம் - இனிச் சொல்லுவோம், எ - று. (௨௦௫)

வேறு.

1253. அறுபத்து மூன்றினோ டாய நூற்றினா
லெறியப்பட் டிருந்தன கோடி யோசனை
செறிவுற்ற விலக்கமெண் பத்து நான்கொடு
மறுவற்ற தீவத்துள் ளகல மாகுமே.

(இ - ள்) அறுபத்து மூன்றினோடு - அறுபத்து மூன்றோடு, ஆய-கூட்டப்பட்ட, நூற்றினால் - நூற்றினாலே (அதாவது: நூற்றியறுபத்து மூன்றினாலே), எறியப்பட்டிருந்தன - பெருக்கப்பட்டிருந்தனவாகிய, கோடி - நூற்றியறுபத்து

மூன்று கோடியோடு, செறிவுற்ற - சேர்க்கப்பட்ட, இலக்கமெண்பத்து நான் கொடு - எண்பத்து நாலு லட்சத்தோடாகிய, ஓசனை - நூற்றறுபத்து மூன்று கோடியே யெண்பத்து நாலு லட்சம் யோஜனைகள், மறுவற்ற - குற்றமற்ற, தீவத்து - அந்த நந்தீஸ்வர த்வீபத்தின், உள் - உள்ளேயாகிய, அகலம் - அகலமாக, ஆகும் - ஆகாநின்றது, எ - று. (உ0சு)

1254. நிலங்கள்பொன் மணிகளா னிறைந்தி ருந்தன
விலங்கலுங் கயங்களும் வீத ராகரைப்
புலங்களால் வெல்வன போக பூமியோ
டிலங்குவா னவரிடந் தன்னை யேசுமே.

(இ - ள்) நிலங்கள் - அந்த நந்தீசுவர த்வீபத்தின் பூமிகள், பொன் - ஸ்வர்ணங்களினாலும், மணிகளால் - இரத்தினங்களினாலும், நிறைந்திருந்தன - நிறைவு பெற்றிராநின்றன, விலங்கலும் - அதிலிருக்கும் பர்வதங்களும், கயங்களும் - தடாகங்களும், வீதராகரை - ஆசையற்றவர்களையும், புலங்களால் - விஷயங்களால், வெல்வன - ஜெயிக்கப்பட்டன போன்று மிகுதியும் அழகுடையன வாயிராநின்றன, (இப்படிப்பட்ட அழகுடையதாகையால் அந்தத்வீபமானது), போக பூமியோடு - போக பூமியோடும், (அதுவல்லாமலும்), இலங்கும் - விளங்கா நின்ற, வானவரிடந் தன்னை - தேவருலகத்தினையும், ஏசும் - இகழ்ச்சி பண்ணும், எ - று. (உ0எ)

1255. கண்ணையும் மனத்தையுங் கவர்ந்து கொள்வன
வண்ணமே கலையினார் வடிவு போலவே
விண்ணவர்க் கிறைவரும் விடாத வேட்கைய
வெண்ணிலா விடங்களா லியன்றி ருந்ததே.

(இ - ள்) கண்ணையும் - பார்க்கின்றவர்களுடைய நேத்திரங்களையும், மனத்தையும் - இருதயத்தையும், கவர்ந்துகொள்வன - கிரஹித்துக்கொள்வனவாகி, வண்ணம் - வர்ணம் பொருந்திய, மேகலையினார் - மேகலாபரணத்தையுடைய ஸ்த்ரீமார்களுடைய, வடிவுபோலவே - ரூபத்தைப் போலவே, விண்ணவர்க்கிறைவரும் - தேவேந்திரர்களும், விடாத - நீங்காத, வேட்கைய - ஆசையையுடையவைகளாய், எண்ணிலா - அஸங்கியாதமாகிய, இடங்களால் - லாவண்யமுடைய ஸ்தானங்களால், இயன்று - இசைந்து, இருந்தது - இராநின்றது, எ - று. (உ0அ)

1256. இலதைவல் லிகண்மணி யாலி யன்றுதன்
சலதிரும் போயது தரணி மூன்றுடை
யுலகினுக் கிறைவனு லயங்க ளாலிம்மூ
வுலகினுக் கிறைமைகொண் டோங்கு கின்றதே.

(இ - ள்) (இன்னும் இத்தீவானது), இலதை - இலைக்கொடிகளும், வல்லிகள் - கோல்கொடிகள் முதலாகிய கொடிகளும், மணியாலியன்று - (அலங்கிருதமாகும்படி) இரத்தினங்களால் அமைந்ததாகி, தன் சலதி - தன்னுடைய நந்தீச்சுவர சமுத்திரமானது, சூழ் போயது - தன்னைச் சூழ்ந்திராநின்றதாகி, தாணி மூன்றுடை - அதோ மத்திம ஊர்த்துவபேதத்தால் மூன்று பிரகாரமான தாணியையுடைய, உலகினுக்கு - இந்த லோகத்துக்கு, இறைவன் - நாதனாகிய அருகபரமனுடைய, ஆலயங்களால் - கோயில்களினால், இம்மூவுலகினுக்கு - இந்த மூன்று லோகத்துக்கும், இறைமை கொண்டு - மேலான தன்மையைக் கொண்டு, ஓங்குகின்றது - உயர்வடைந்திராநின்றது, எ - று. (உ0க)

1257. பண்சிறைக் கிடந்தசொற் பாவை மாருடன்
விண்சிறைக் களமென விட்டு வீரனை
வண்சிறப் போடுவந் தடைந்த வானவர்
கண்சிறைப் படுவது காமர் பூமியால்.

(இ - ள்) பண் - கீதமானது, சிறைகிடந்த - தங்குதல் கொண்டிராநின்ற, சொல் - வசனத்தையுடைய, பாவைமாருடன் - சித்திரப்பாவைக்குச் சமானமாகிய தேவஸ்த்ரீகளுடன், (கூடிக்கொண்டு), விண் - தேவலோகமானது, சிறைக்களமென - சிறைச்சாலைக்குச் சமமாகுமென்று, விட்டு - அத்தேவலோகத்தை விட்டு, வண் - வளப்பம் பொருந்திய, சிறப்போடும் - பூஜாத்திரவியாதி சிறப்புகளோடு, வந்து - அங்கேவந்து, வீரனை - அங்குள்ள கோயிலில் வீற்றிருக்கின்ற ஜினேந்திரப் பிரதிமையை (பூஜிக்கும்படியாக), அடைந்த - சேர்ந்த, வானவர் - சதுர்ணிகாயாமரர்களின், கண் - கண்கள், காமர் - அழகிய, பூமியால் - அப்பூமியால், சிறைப்படுவது - தங்குதல் கொள்ளப்படுவதாகும், எ - று. (உகO)

1258. அஞ்சன மலைசதுன் காரு மாங்கதன்
மஞ்சிலா மாதிசை நடுவ ணின்றன
வஞ்சன மூலமா யகன்று யர்ந்தன
வெஞ்சிலா யிரம்புகை நான்கொ டெண்பதே.

(இ - ள்) மஞ்சிலா - குற்றமில்லாத, ஆங்கதன் - அங்கு அந்த நந்தீசுவரத்வீபத்தினுடைய, மா - பெருமை பொருந்திய, திசை - மகாதிக்கு பூமிகளில், நடுவண் - மத்தியிலே, நின்றன - நின்றனவாகிய, அஞ்சனமலைகள் - அஞ்சனமென்னும் பெயரை யுடைய பர்வதங்கள், நான்காகும் - (கிழக்கில் ஒன்று தெற்கில் ஒன்று மேற்கில் ஒன்று வடக்கில் ஒன்று ஆக) நாலு பர்வதங்களாகும், எஞ்சலில் - குறைவில்லாத, அஞ்சனம் - அந்த அஞ்சன பர்வதங்கள், ஆயிரம் புகை நான்கோடெண்பது - எண்பத்து நாலாயிரம் யோஜனைகள், மூலமாயகன்று -

அடியாய்விசாலித்து, உயர்ந்தன - எண்பத்துநாலாயிரம் யோஜனை யுயர்ந்திராநின்றன, எ - று. (உ௧௧)

1259. மற்றிந்த மலையின்மா திக்கின் வாவிகள்
பெற்றியாற் கிடந்தன பெரிய சாலவு
முற்றுநீர் சூழ்தலாற் றதிமு கங்களென்
றுற்றபேர் மலைகளத் தடத்தி னுள்ளவே.

(இ - ள்) மற்று - பின்னையும், இந்த - இப்போது சொல்லப்பட்ட இந்த, மலையின் - ஒவ்வொரு அஞ்சன பர்வதங்களினுடைய, மாதிக்கில் - (கிழக்கு தெற்கு மேற்கு வடக்கென்னும்) நாலு திக்குகளிலும், சாலவும் பெரிய - மிகவும் பெரியனவாகிய, வாவிகள் - தடாகங்கள், பெற்றியால் - உயர்ந்த தன்மையோடு, கிடந்தன - இராநின்றன, அத்தடத்தின் - அந்தத் தடாகங்களின் மத்தியில், முற்றும் - எப்பக்கங்களிலும், நீர் சூழ்தலால் - ஜலஞ் சூழ்ந்திருப்பதால், ததிமுகங்களென்று - ததிமுகங்களென்று, பேர்உற்ற - பெயரையுடைய, மலைகள் - பர்வதங்கள், உள்ள - இராநின்றன, எ - று. (உ௧உ)

1260. ஆயிரம் புகைபத்தை யகன்று யர்ந்தன
வாய்மையா னீரின்மேல் வரைகள் வாவியின்
சூழுந்தான் கிடந்தநால் வனங்க டம்பெய
ரேழிலைச் சண்பகந் தேமாவ சோகமே.

(இ - ள்) நீரின்மேல் - (அத்தடாக மத்தியில்) ஜலத்தின் மேல், வாய்மையால் - வாய்த்த தன்மையினால், வரைகள் - (இராநின்ற) ததிமுக பர்வதங்களானவை, ஆயிரம் புகைபத்தை - பதினாயிரம் யோஜனைகள், அகன்று - அகலமுடையனவாகி, உயர்ந்தன - அவ்வளவு உயரத்தையும் உடையனவாகும், வாவியின் - அத்தடாகங்களை, சூழுந்தான் கிடந்த - நாலுதிக்கிலும் சூழ்ந்திராநின்ற, நால்வனங்கள் - நாலு வனங்களாகும், தம் பெயர் - அவ்வனங்களின் பெயர், ஏழிலை - ஏழிலைம் பாலைவனமும், சண்பகம் - சண்பகவனமும், தேமா - மாவனமும், அசோகமே - அசோகவனமுமாகும், எ - று. (உ௧௩)

1261. வனத்திடைப் புறம்படி வாவி கோணத்தின்
மனத்தினுக் கிரதிசெய் மலைக ணின்றன
தனக்குயர் வகலமா யிரங்க ளோசனை
யெனைப்பல விடங்களா லிரதி செய்யுமே.

(இ - ள்) வனத்திடை - அந்த வனங்களின், புறம்படி - பாஹ்யபூமியில் (அதாவது: வெளியில்), வாவி - ஒவ்வொரு தடாகங்களினுடையவும், கோணத்

தின் - வெளி மூலைகளிரண்டிலும், மனத்தினுக்கு - பார்க்கின்றவர்களுடைய மனதிற்கு, இரதிசெய் - ரதியைச் செய்யும்படியான, மலைகள் - ரதிகரபர்வதங்கள், நின்றன - நிலைபெற்றுள்ளன (அதாவது: ஒவ்வொரு தடாகத்தின் வனங்களின் பாஹ்ய மூலைகளில் ஒவ்வொன்றாக இரண்டு மூலைக்கும் இரண்டு பர்வதமாய் நாலுபக்கங்களிலும் உள்ள தடாகங்களுக்கும் அமைந்திருந்தன, தனக்கு - அந்த ரதிகரபர்வதம் ஒவ்வொன்றிற்கு, உயர்வு - உன்னதமும், அகலங்கள் - அகலமும், ஆயிரங்கனோசனை - ஆயிரம் ஆயிரம் யோஜனைகளாகும், எனை பல விடங்களால் - (அந்த நந்தீசுவரத்வீபம்) இன்னும் பல விடங்களின் அழகுகளாலும், இரதி செய்யும் - பார்க்கின்றவர்களுக்கு ஆஹ்லாதத்தைப் பண்ணும், எ - று.

'எனை' என்பது, 'எனை' எனக் குறுகி வந்தது. (உ௪௪)

1262. மலைநல மணிபொனின் மயம தாகிய
பலவடி வுடையன பரமன் கோயில்க
ணிலவிய மகுடமா யிலங்கும் பாரிலும்
மலையிதும் மாயிரம் புதைக ளாழ்ந்தவே.

(இ - ள்) மலை - (அந்த நந்தீசுவரத்வீபத்திலுள்ள, அஞ்சன, ததிமுக, ரதிகரமென்னும்) பர்வதங்களின் மேல், நல - நன்மையாகிய, மணிமயம் - இரத்தின மயங்களும், பொனின்மயமதாகிய - சுவர்ண மயங்களுமாகிய, பல - பலவாகிய, வடிவுடையன - இலக்ஷண ரூபங்களையுடையனவாகிய, பரமன் - ஜினேந்திரனாகிய அருக பரமனுடைய, கோயில்கள் - ஸ்ரீசைத்யாலயங்கள், நிலவிய - பிரகாசிக்கப்பட்ட, மகுடமாயிலங்கும் - கிரீடம்போல விளங்கும், மலையிதும் - இப்பர்வதங்களெல்லாம், பாரிலும் - பூமியிலும், ஆயிரம் புதைகள் - ஆயிரம் யோஜனைகள், ஆழ்ந்த - ஆழ்ந்திராநின்றன, எ - று. (உ௪௫)

1263. வனங்களுந் தடங்களும் மலையின் மாமணித்
தலங்கண்மே னின்றன தமனி யத்தியன்
றிலங்குதோ ரணமுடை வேதி சூழ்ந்துநல்
லலங்கலார்ந் தருமணி யாலி யன்றவே.

(இ - ள்) வனங்களும் - அந்தநந்தீசுவர த்வீபத்திலிராநின்ற வனங்களும், தடங்களும் - தடாகங்களும், மலை - பர்வதங்களும், இன் - இனிமையாகிய, மா - பெருமை பொருந்திய, மணி - இரத்தினத்தினலாகிய, தலங்கண் மேல் - பூமியின் மேலே, நின்றன - இராநின்றன, (ஆலயங்கள்), தமனியத்தியன்று - ஸ்வர்ணத்தினல் செய்யப்பட்டு, இலங்கும் - பிரகாசியாநின்ற, தோரணம் - தோரணங்களை, உடை - உடையதாகிய, (வழிகளையுடைய), வேதி சூழ்ந்து - மதில்களினல் சூழப்பட்டு, நல் - நன்மையாகிய, அலங்கலார்ந்து - மாலைகளினல் நிறைந்து, அரும் - அரிதாகிய, மணியால் - இரத்தினங்களினல், இயன்ற-அமைந்திராநின்றன, எ-று.

1264. மஞ்சன வஞ்சன மலையு நான்குள
வெஞ்சிடாத் ததிமுகத் தீரெட் டாகுமே
வஞ்சிபோ லிரதி கரத்தெண் ணான்குள
மஞ்சிலா தனநல வாமன் கோயிலே.

(இ - ள்) மஞ்சன - மேகம்போல் கருப்பு நிறமுடைய, அஞ்சன மலையும் - அஞ்சன பர்வதங்களும், நான்கு - நாலு, உள - உண்டாயிராநின்றன, எஞ்சிடா - குறைவில்லாத, ததிமுகத்து - ததிமுக பர்வதங்களில், ஈரெட்டாகும் - பதினாறும், வஞ்சிபோல் - கொடி போலச் சுற்றியிராநின்ற, இரதிகரத்து - இரதிகர பர்வதங்களில், எண்ணான்கு-முப்பத்திரண்டாகும், (இந்தப் பர்வதங்களின் மேலே), மஞ்சிலாதன - குற்றமில்லாதனவாகிய, நல - நன்மையாகிய, வாமன் - ஜினேந்திரனுடைய, கோயில் - ஸ்ரீ சைத்யாலயங்களானவை, உள - உண்டாயிராநின்றன, எ - று. (உகஎ)

1265. ஆயத மைம்பதிற் றிரட்டி யோசனை
யாயதங் கால்குறைந் தல்ல தோக்கமா
மாயதந் தன்னரை யகல மாயின
வாயின்மூன் றுடையமுன் மண்ட பங்களாம்.

(இ - ள்) ஆயதம் - (அந்த சைத்யாலயங்களின் சுற்றுமதிலுள்பட) நீளமானது, ஐம்பதிற்றிரட்டி யோசனை - நூறு யோஜனைகளாகும், ஓக்கம் - கோபுரசிகரத்தினுடன்கூடிய உன்னதமானது, ஆயதம்-நீளமாகிய நூறு யோஜனையில், கால் குறைந்து - நாலில் ஒன்று குறைந்து, அல்லது - மீந்ததாகிய எழுபத்தைந்து யோஜனை, ஆம் - ஆகும், அகலம் - அகலமானது, ஆயதந்தன்னரையாயின - நீளத்தில்பாதியாகிய ஐம்பது யோஜனைகளாகும், (இப்படி விஸ்திர்ணமாகி அளவையுடைய மதிலுக்குள்), வாயில் மூன்றுடைய-மூன்று வாசற்படிகளையுடையதாகிய, முன்மண்டபங்களாம் - (கிழக்குப் பார்த்ததாகிய) கந்தகுடி மண்டபங்களையுடைய பிரதம மண்டபங்கள் அல்லது பீடிகா மண்டபங்களாகும், எ - று. (உகஅ)

1266. மாலையுஞ் சாலங்கள் வாச மார்ந்தவுஞ்
சாலவுந் தாழ்ந்துள வாச லின்புடைப்
பாலிகை முதல்பரிச் சந்தங்க ளூற்றெட்டு
மாலவேய்ந் தனபல மலிந்தி ருந்தவே.

(இ - ள்) வாசலின் - (அந்தக் கந்தகுடி மண்டபங்களின்) மூன்று வாசற்படிகளினுடையவும், புடை - இருபக்கங்களிலும், வாசமார்ந்த - வாஸனைகளால் நிறைந்திராநின்றனவும், மாலையும் - மாலைகளும், சாலவும் - மிகவும், தாழ்ந்து -

தொங்கப்பட்டு, சாலங்கள் - சன்னல்கள், உள - உண்டாயிராநின்றன, (அவை பல்லாமலும் அம்மண்டபத்தைச் சூழ்ந்து), பாலிகை முதல் - பாலிகை முதலாகிய, நூற்றெட்டுப் பரிச்சந்தங்கள் - நூற்றெட்டு மங்கலக் கருவிகள், மாலை - ஒழுங்காக, வேய்ந்தன - அணியப்பட்டன, பல - இன்னும் அனேக உபகரணங்களும், மலிந்திருந்த - நிறைந்திராநின்றன, எ - று.

'ஆர்ந்தவும்' என்பதில், உம் - அசை. (உகக)

1267. ஆலயத் தளவதா யமைந்து கோயின்முன்
பாலிருந் தனபல பல்ல வாதியா
மாடலும் பாடலு மமர்ந்து காண்பவ
ரூடுசென் றனவல வுழைக்க லத்தவே.

(இ - ள்) கோயில் - இந்த அக்கிருத்திம சைத்யாலயங்களின், முன்பால் - முன்னே கிழக்குப்பக்கத்தில், ஆலயத்து - கந்தகுடிகள் இராநின்ற ஆலயத்தினுடைய, அளவதாய் - பிரமாணமாகி, அமைந்து - பொருந்தி, பல - பலவாகிய, பல்லவாதியாம் - அரங்கங்கள் முதலானவைகளாம், (அவைகளில்), ஆடலும் - நர்த்தனங்களும், பாடலும் - ஸங்கீதங்களும் (இன்னும் அனேக வாத்தியங்களும்), அமர்ந்து - பொருந்தி, காண்பவர் - பார்க்கின்றவர்களும், ஊடுசென்றன - இவைகளையெல்லாந் தன்னுள்ளேயடைந்திரா நின்றனவாகிய, வல - பலம் பொருந்திய, உழைக்கலத்த - உழைக்கல மண்டபங்கள், இருந்தன - இராநின்றன, எ - று.

1268. இஞ்சிக ளம்பொனா லியன்ற கோபுர
முன்சொன வளவினான் முடிந்த மாதிசை
யஞ்சொலார் முகமென விருந்த வத்தொடு
வஞ்சிமே கலையென வந்து சூழ்ந்ததே.

(இ - ள்) இஞ்சிகள் - அக்கோயிலின் சுற்றுமதில்களானவை, அம் - அழகிய, பொன்னாலியன்று - ஸ்வர்ணத்தினால் அமைந்து, முன் - முன்னாலே, சொன்ன - சொல்லப்பட்ட, அளவினால் - அகல நீள வளவினால், முடிந்த - முடிந்திராநின்றன, மாதிசை - (கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு என்னும்) மஹா திக்குகளில் மத்தியில், கோபுரம் - கோபுரங்களானவை, அம் - அழகிய, சொலார் - சொல்லையுடைய ஸ்த்ரீமார்களின், முகமென - முகம்போல (அழகாக), இருந்த - இராநின்றன, அத்தொடு - அந்த அமைப்போடு, (முன் சொன்னமதில்களின் வளைவானது), வஞ்சி - ஸ்த்ரீயினுடைய, மேகலையென - மேகலாபரணம் போல, வந்து - சுற்றி வந்து, சூழ்ந்தது - சூழ்ந்திராநின்றது, எ - று. (உ௨௪)

வேறு.

1269. உகப்புடை பெயர்ச்சி யீற்றி னும்முதல் மனித ரோக்கம்
யுகத்தினுக் கிறைவர் தோற்ற முள்ளிட மலாத தேசம்
சகத்தது வடிவு தீப சாகரந் தனதி டக்கை
நகத்தவர் நாகர் மக்கள் விலங்குறை ஞாலங் காட்டும்.

(இ - ள்) உள் - அந்த உழைக்கல மண்டபத்தினுள்ளே, இடமலாத தேசம் - வெற்றிடமில்லாத பிரதேசமானது, உகப்புடை பெயர்ச்சி- (உத்ஸர்ப்பிணி அவஸர்ப்பிணியாகிய) யுகப்பிரளயங்களுடைய காலஸ்வரூபத்தையும், ஈற்றினும் முதல் - உத்ஸர்ப்பிணி அவஸர்ப்பிணி காலங்களினுடைய கடைசியிலும் முதலிலும், மனிதரோக்கம் - மனுஷ்யர்களுடைய உன்னதங்களையும், யுகத்தினுக்கு - அந்தக் காலங்களுக்கு, இறைவர் தோற்றம் - ஸ்வாமிகளாகப்பட்டவர்கள் பிறக்கும் விதமும், சகத்தது வடிவு - லோகத்தினுடைய வடிவங்களையும், தீபசாகரந்தன திடக்கை - அஸங்கியாத த்வீப ஸமுத்திரங்களினுடையவும் அவைகளிடம் இருக்கப்பட்டவைகளுடையவும் ஸ்வரூபங்களையும், நகத்தவர் - விஜயார்த்த பர்வதவாஸி வித்தியாதரர்களுடைய ஸ்வரூபமும், நாகர்-தேவர்களுடைய ஸ்வரூபமும், மக்கள் - மனுஷ்யர்களுடைய விவரங்களும், விலங்கு - திரியக் ஜீவன்களுடைய ஸ்வரூபமும், உறை - இவைகளெல்லாம் தங்கும்படியான, ஞாலம் - பூமிகளின் விவரங்களையும், காட்டும் - தெரிவிக்கும், (அதாவது: இவைகளெல்லாம் அதில் எழுதப் பெற்றிருக்கும்), எ - று. (உஉஉ)

வேறு.

1270. துறக்கத்தும் வீட்டினும் தோன்றி னரெய்துஞ்
சிறப்பது விகற்பமுந் தீயநல் வினைகளிற்
பிறப்பதுங் கதிகளிற் பெயரும் பெற்றியுங்
குறித்தன புராணத்தாற் கூறு கின்றவே.

(இ - ள்) (இன்னும் அவ்விடங்கள்), துறக்கத்தும் - தேவருலகத்திலும், வீட்டினும் - மோக்ஷத்திலும், தோன்றினர் - போய்த்தோன்றியவர், எய்தும் - அடைகின்ற, சிறப்பது - பெருமையினுடைய, விகற்பமும் - விகல்பங்களையும், தீயநல்வினைகளில் - பாபபுண்ணியங்களினால், கதிகளில் - சதுர்கதிகளில், பிறப்பதும் - பிறக்கின்ற விதமும், பெயரும் - இப்படிப் பிறக்கும்படியான தன்மையினின்று நீங்கி மோட்சமடைகின்ற, பெற்றியும் - பெருமையும், புராணத்தால் - ஆகமபுராணத்தால், குறித்தன - எழுதப்பட்டனவாகி, கூறுகின்ற - சொல்வதைப் போல (பார்க்கின்றவர்களுக்குத்) தெரிவிக்கின்றன, எ - று. (உஉ௩)

1271. கண்டவர் காட்சியைத் தூப்பஞ் செய்துடன்
பண்டுசெய் தீவினைப் பரப்பைத் தீர்ப்பன
வண்டுறை பிண்டிநல் வாமன் சேவடி
கண்டவர் செயுஞ்சிறப் பைந்துங் காட்டுமே.

(இ - ள்) (இன்னும்) கண்டவர் - அந்த உழைக்கல மண்டபத்திலெழுதியிருக்கப்பட்ட இவைகளை யெல்லாம் பார்க்கின்றவர்களுக்கு, காட்சியை - தரிசனத்தை, தூப்பஞ்செய்து - சுத்தஞ்செய்து, உடன் - உடனே, பண்டுசெய் - பூர்வத்தில் செய்யப்பட்ட, தீவினைப்பரப்பை - தீவினைகளின் கூட்டத்தை, தீர்ப்பன - நீக்கப்பட்டனவாகியும், வண்டு - வண்டுகள், உறை - தங்குகின்ற, பிண்டி - அசோக விருட்சத்தின் கீழ் எழுந்தருள்கின்ற, நல் - நன்மையாகிய, வாமன் - அருகபரமனுடைய, சேவடி - சிவந்த திருவடிகளை, கண்டவர் - பார்க்கின்றவர்கள், செயும் - செய்கின்ற, சிறப்பைந்தும் - பஞ்சகல்யாண பூஜைகளின் விதிக்கிரமங்களையும், காட்டும் - அம்மண்டபம் தெரிவிக்கும், (அதாவது : அம்மண்டபத்தில் இவையெல்லாம் விளங்க எழுதப்பட்டிருக்கும்), எ - று. (உஉச)

1272. உழைக்கல மண்டப முன்பு தூபையாந்
தழைத்தெழு சேதியத் தருமுன் னின்றது
அழைப்பதி லாடும்வை சயந்தை யாங்கொடி
வழக்கின்மா னத்தம்ப மெய்த வந்ததே.

(இ - ள்) முன்பு - அந்தக் கந்தகுடி மண்டபங்களிராநின்ற மண்டபத்தின் எதிரிலே (அதாவது : கிழக்கில்), உழைக்கல மண்டபம் - இப்போது சொன்ன உழைக்கல மண்டபமாகும், (அதன் கிழக்கில்), தூபை - ஸ்தூபையானது, ஆம் - ஆகும், முன் - அதன் முன்னே, தழைத்து- தளிர்களால் நிறைந்து, எழும் - உண்டாகிய, சேதியத்தரு - சைத்ய விருட்சமானது, நின்றது - இராநின்றது, (அதனெதிரில்), அழைப்பதில் - வரப்பட்டவர்களை அழைப்பது போல, வைசயந்தையாம் - வைஜயந்தை யென்கிற, கொடி - துவஜமானது, ஆடும் - அசையாநின்றது, வழக்கின் - இப்போது சொன்ன வரிசையாகவே, (இவற்றின் கூட்டம்), மானத்தம்பம் - மானஸ்தம்பத்தை, எய்த - அடையும்படியாக, வந்தது - வந்திராநின்றது, எ - று. (உஉரு)

1273. கோபுரத் தின்புறங் குணக்க தாந்திசை
வாபிமா னந்தையா மாசி லாதநீர்
பூவினு னிறைந்துபொன் மணியி னுயதோர்
சோபனஞ் சூழ்ந்தவே திகைத்து மாகுமே.

(இ - ள்) கோபுரத்தின் - கீழ்த்திசையில் மதிலின் கோபுரத்தினுடைய, புறம் - வெளியில், குணக்கதாந்திசை - நேர்கிழக்குத் திக்கில், நந்தையாம் - நந்தையென்று பெயருடைய, வாபி - தடாகமானது, மாசிலாத - களங்கமில்லாத, நீர் - ஜலத்தினாலும், பூவினால் - புஷ்பங்களினாலும், நிறைந்து - ஸம்பூர்ணமாகி, பொன் - ஸ்வர்ணத்தினாலும், மணியின் - ரத்தினங்களினாலும், ஆயது - ஆகியதாகிய, ஓர் - ஒப்பற்ற, சோபனம் - படிகளால், சூழ்ந்த - சூழ்ந்ததாகிய, வேதிகைத்து - சுற்றுமதில் மண்டபங்களையுடையதாய், ஆகும் - அமைந்ததாகும், எ-று.

வேறு.

1274. கந்தகுடி மண்டபங்க ணூற்றெட்டவை காணிற்
பந்தியொரு மூன்றுநிரை யாகிவைடூ ரியத்
தம்பமிசை யிருந்ததல மூன்றுடைய தாமு
மந்தரங்க டம்மிடை யனேகஞ்சிலை யாமே.

(இ - ள்) கந்தகுடி மண்டபங்கள் - (இந்த அக்கிருத்திம சைத்யாலயத்துள் இராநின்ற) கந்தகுடி மண்டபங்கள், நூற்றெட்டு - நூற்றெட்டாகும், அவை - அவைகளை, காணில் - பார்க்குமிடத்தில், பந்தியொரு மூன்று நிரையாகி - தெற்கு வடக்காய் முப்பத்தாறு முப்பத்தாறுகமூன்று வரிசையாகி, வைடூரியத் தம்பமிசை - வைடூரிய ரத்தினத்தாலாகிய நாலு ஸ்தம்பங்களின்மேலே, இருந்த - இராநின்ற, தலமூன்றுடைய - மூன்று நிலையையுடைய ஸ்தூபியுஞ் சிகரமுமாகி இராநின்றன, தாமும் - அந்தக் கந்தகுடிகள் தாமும், தம்மிடை - தங்களுள் ஒன்றுக்கொன்று இடையில், அந்தரங்கள் - இடம்விட்ட வெளிகள், அனேகம் - பலவாகிய, சிலையாம் - வில்லுகளாம், எ - று. (உ௨எ)

1275. செம்மணிமண் டபத்தினிடைச் சீயவணை மீது
வம்மலையின் மிசையிருந்த வருக்கனவன் போல
வெம்மைவினை யுங்கெட விருந்ததிரு வுருவந்
தம்மளவைஞ் ஞூறுதனு வாகியுயர்ந் தனவே.

(இ - ள்) செம் - செவ்விதாகிய, மணி - இரத்தினங்களாலாகிய, மண்டபத்தின் - அந்தக் கந்தகுடி மண்டபங்களினுடைய, இடை - மத்தியிலே, சீயவணை மீது - ஸிம்மாஸனத்தின்மேல், அம்மலையின்மிசை - அந்தப் பர்வதத்தின் மேலே, இருந்த - இராநின்ற, அருக்கனவன்போல - சூர்யன்போல, வெம்மை - பொல்லாங்காகிய, வினையுங்கெட - வினைகளெல்லாம் நீங்கும்படியாக, இருந்த - இராநின்ற, திருவுருவம் தம் - அழகிய ஜினேந்திர பிரதிமைகளின், அளவு - பிரமாணமானது, ஐஞ்ஞூறு தனுவாகி - ஐந்நூறு வில்லளவாக, உயர்ந்தன - உன்னதமாகிக் கிழக்கு முகமாகப் பல்லியங்காஸனமாக இராநின்றன, எ - று. (௨௨அ)

1276. இருமருங்குஞ் சாமரைக ளியக்கரொடு மியக்க
மருவியமண் டலமும்மலர்ப் பிண்டியுமுக் குடையும்
விரைமலர்கள் சொரிந்தமர ரேத்தவினை நீங்க
பரவுகணம் பன்னிரண்டுஞ் சூழ்ந்திருந்த வாங்கே.

(இ - ள்) ஆங்கே - அந்த ஜினேந்திரப் பிரதிமைகளின் இடத்தே, இரு மருங்கும் - இரண்டு பக்கத்திலும், சாமரைகள் - வெண்சாமரைகளை, இயக்கர் - யக்ஷதேவப் பிரதிமைகள், இயக்க - வீசுவது போல் அமைந்திருக்க, மண்டலமும் - பிரபாமண்டலமும், மலர் - புஷ்பங்களோடு கூடிய, பிண்டியும் - அசோக விருட்சமும், முக்குடையும் - சத்திரத்திரயமும், மருவிய - சேர்ந்திராநின்றன, விரை - வாசனை பொருந்திய, மலர்கள் - புஷ்பங்களை, சொரிந்து - தூவி' அமரர்-தேவர்கள் வந்து, ஏத்த - ஸ்தோத்திரம் செய்ய, வினை - பாவங்கள், நீங்க - கெட, பரவு - ஸ்துதிக்கின்ற, கணம் பன்னிரண்டு - த்வாதிரம்சதீந்திர கணங்கள், சூழ்ந்திருந்த - சூழ்ந்திருந்தன, எ - று. (உஉக)

வேறு.

1277. ஞாலமோர் மூன்றுடை யானது மைமையின்
மேலெழு காதல் தேவர் விரும்பியுங்
காலம ஞாதி பாரம்பரை யின்கட்
டாலய மக்கண மேவுத லாலும்.

(இ - ள்) காலமஞாதி - அஞாதிகாலமாக, பாரம்பரையின்கண் தேவர் - தேவர்கள் பாரம்பரிய வரிசையாக, ஞாலமோர் மூன்றுடையானது - திரிலோக நாதனாகிய ஜினேந்திரப் பிரதிமைகளின், மைமையின்மேல் - பூஜிப்பதன்மேல், எழும் - உண்டாகிய, காதல் - பக்தியில், விரும்பியும் - மிகுதியும் இச்சித்தும், ஆலயம் - அந்த நந்தீசுவரத்வீபத்திலிராநின்ற அக்கிருத்திம ஜின சைத்யாலயங்களில், அக்கணம் - அந்தந்தக் காலந்தோறும், மேவுதலாலும் - அடைகின்ற எண்ணத்தாலும், எ - று. (உருO)

1278. சோதம ஞாதி சுரேந்திரர் மைமைகட்
கோதிய பெற்றியின் முற்றுமு ழைக்கலம்
மாதர்க ளேந்திய வாச்சிய கோடணை
யோத வெழுந்துடன் யாவரும் வந்தார்.

(இ - ள்) மைமைகட்கு - அந்த ஜினபூஜா காரியத்திற்கு, ஓதிய - சொல்லப்பட்ட, உழைக்கலம் முற்றும் - யோக்கியமாகிய எல்லா வஸ்துக்களையும், பெற்றி

யின் - பெருமையோடு, ஏந்திய - தரிக்கப்பட்டவர்களாகிய, மாதர்கள் - தேவ வனிதைகளும், சோதமனுதி - ஸௌதர்மேந்திரன் முதலாகிய, சுரேந்திரர் யாவரும் - தேவேந்திரர்களெல்லாரும், வாச்சியகோடணை - தேவ வாத்தியங்களின் சப்தங்கள், ஓத - மிகவும் சப்திக்க, உடன் - உடனே, எழுந்து - கிளம்பி, வந்தார்- அந்த நந்தீசுவரத்வீபத்தில் வந்தார்கள், எ - று. (உஉக)

1279. சங்கு முரன்றன தாரைகள் பேர்சொல
வெங்கு முழங்கின பேரிய மவ்வொலி
பொங்கிய வாத மடித்துழி மால்கட
லங்கெழு வோசையை வென்றன வன்றே.

(இ - ள்) சங்கு - சங்கு வாத்யங்கள், முரன்றன - சப்தித்தன, தாரைகள் - சிறு சின்னங்கள், பேர்சொல - இரைச்சலிட, பேரியம் - பேரிகைகளும், எங்கும் - எவ்விடங்களிலும், முழங்கின - சப்தித்தன, அவ்வொலி - அந்தச் சப்தங்கள், பொங்கிய - பெரிதாகிய, வாதம் - காற்றானது, அடித்துழி - அடிக்கின்ற காலத்தில், மால் - பெரிதாகிய, கடல் - ஸமுத்திரத்தில், அங்கெழு-அப்பொழுது உண்டாகிற, ஓசையை - சப்தத்தை, வென்றன - ஜெயித்தன, எ - று. (உஉஉ)

1280. துகிற்கொடி வெண்குடை தொக்கு நிரைத்தன
மகத்தவர் மங்கலம் பாடவ ரோசை
புகத்திசை விம்ம வொலித்த மனத்தின்
மிகைத்தெழு மானந்த ராகி யிருந்தார்.

(இ - ள்) துகிற்கொடி - துவஜக்கொடிகளும், வெண்குடை - வெள்ளைக் குடைகளும், தொக்கு - கூடி, நிரைத்தன - நெருங்கப்பெற்றன, மகத்தவர் - ஜினேந்திரனுடைய, மங்கலம் பாடவர் - மங்கல பாடகர்களுடைய, ஓசை - சப்த மானது, திசை - எத்திக்குகளிலும், புக - அடையும்படியாக, விம்ம - அதிகரிக்க, ஒலித்த - சப்தித்தது, மனத்தின் - மனதில், மிகைத்தெழும் - மிகுதியாக உண் டாகிய, ஆனந்தமாகி - சந்தோஷமுடையவர்களாகி, இருந்தார் - இராநின்றார் கள், எ - று. (உஉந)

1281. பரந்த வரம்பையர் பாடலோ டாட
னிரந்த வியாழ்குழல் கின்னர கீதந்
துரங்கமு மாவொடு மானமு மேறி
விரும்பிய வண்ண மணிந்து வியந்தார்.

(இ - ள்) அரம்பையார் - தேவரம்பையருடைய, பாடலோடு - பாட்டுகளுடன், ஆடல் - நர்த்தனங்களும், பரந்த - வியாபித்தன, யாழ் - வீணைகளும்,

குழல் - புள்ளாங்குழல்களும், கின்னரகீதம் - கின்னர தேவர்களுடைய ஸங்கீதங்களும், நிரந்த - நிரம்பின, துரங்கமும் - குதிரைகளிலும், மாவொடு - யானைவாஹனங்களிலும், மானமும் - விமானங்களிலும், ஏறி - ஏறிவந்து, விரும்பிய வண்ணம் - இச்சித்த வண்ணமாக, அணிந்து - அலங்கரித்துக்கொண்டு, வியந்தார் - ஆச்சரியமடைந்து ஸந்தோஷித்தார்கள், எ - று. (உ௱ச)

1282. விக்கிரி யைப்பல வெட்டு மடுத்தவ
ரக்கிரி யைக்கண் ணழித்தவர் தம்மொடு
பொக்க முரைத்து நடித்துட னேசிலர்.
நக்கனர் தக்கவர் நாணமொ ழிந்தே.

(இ - ள்) சிலர் - சில தேவர்கள், விக்கிரியைப் பல - பலவகையாகும்படியான விகுர்வணைகள், எட்டும் - அணிமா முதலாகிய ரூலரித்திகள் எட்டும், அடுத்தவர் - சேர்ந்தவருடைய, அக்கிரியைக் கண் - அந்தவிகுர்வணை கிரியைகளை, அழித்தவர் தம்மொடு - நீங்கும்படி செய்கின்றவர்களுடன், பொக்கமுரைத்து - அகஸ்யம் பேசியும், நடித்து - நர்த்தனம் பண்ணியும், உடனே - இப்படியாகச் செய்கின்றவர்களுடனே, தக்கவர் - தகுதியாயுள்ளவர்களும், நாணம் ஒழிந்து - வெட்கம் நீங்கி, நக்கனர் - சிரித்தார்கள், எ - று. (உ௱ரு)

1283 வந்திகள் வந்தனை செய்திறை வன்புக
ழந்தமி லாதன கொண்டடி தாழ்ந்தனர்
கந்திற மோதிய காளப தாகையின்
வந்தனர் தாம்பல ராகிய வானோர்.

(இ - ள்) வந்திகள் - மங்கல பாடகர்கள், வந்தனை செய்து - வணக்கமாக நமஸ்காரம் செய்து; இறைவன் - ஸ்வாமியினுடைய, புகழ் - கீர்த்தியை, அந்தமிலாதன - அளவில்லாதனவாக, (பக்தியினால்), கொண்டு - ஸ்துதிகளாகப்பாடிக் கொண்டு, அடி - (அவருடைய) பாதகங்களில், தாழ்ந்தனர் - வணங்கினார்கள், பலராகிய - அனேகர்களாகிய, வானோர் தாம் - தேவர்கள், கந்திறமோதிய (காற்றினால்)'ஸ்தம்பம் அசையும்படியாக மோதுகின்ற, பதாகையின் - துவஜங்களையுடையவர்களாகியும், காளம் - காளமென்கிற வாத்தியத்தோடு கூடினவர்களாயும், வந்தனர் - வந்தார்கள், எ - று. (உ௱சா)

1284. எழுச்சி முழாவொலி யெங்கு மிபம்பப்
பழிச்சி யெழுந்தனர் பண்ணவர் கோனை
வழக்கினில் வந்துல கந்நடு மைமைத்
தொழிற்கிறை சோதம னேவலி னாலே.

(இ - ள்) எழுச்சி - இவ்விதமாக எழுந்து வருகின்ற காலத்தில், முழா வொலி - மத்தளங்களின் சப்தமானது, எங்கும் - எவ்விடங்களிலும், இயம்ப - சப்திக்க, பண்ணவர்கோனை - தேவர்கள் நாதனாகிய ஸ்வாமியை, பழிச்சி - ஸ்தோத்திரஞ் செய்து, எழுந்தனர் - புறப்பட்டார்கள், வழக்கினில் - பாம்பரை வழக்கத்தினால், உலகங்கு - இந்த மத்திம லோகத்துள்ள நந்தீசுவரத்வீபத்தில், வந்து - வந்து சேர்ந்து, மைமைத் தொழிற்கிறை - பூஜைத் தொழிலுக்குத் தலைவனாகிய, சோதமன் - ஸௌதர்மேந்திரனுடைய, ஏவலினால் - ஆக்ஞையினாலே, எ - று. (உஙஎ)

1285. கத்திகை பங்குனி யாடிய காசறு
சுக்கில பக்கநல் லட்டமி தன்னில்
ஒத்தவோர் பாதியில் வந்துநந் தீச்சரம்
புக்கவர் மைமை தொடங்கின ரன்றே.

(இ - ள்) கத்திகை - கார்த்திகை மாதத்திலும், பஙகுனி - பங்குனிமாதத்திலும், ஆடிய - ஆடிமாதத்திலும், காசறு - குற்றமற்ற, சுக்கிலபக்கம் - பூர்வ பட்சத்தில், ஒத்த - பொருந்திய, நல் அட்டமிதன்னில் - நல்ல அஷ்டமிதிதி முதல், ஓர் - ஒப்பற்றதாகிய, பாதியில் - அந்த பக்ஷத்தில் உள்ள எட்டு நாளைக்கும், நந்தீச்சரம் - நந்தீசுவரத்வீபத்தில் வந்து, புக்கவர் - அடைந்து தங்குகிறவர்களாகி, மைமை - பூஜையை, தொடங்கினர் - செய்வதற்காரம்பித்தார்கள், எ - று. ()

1286. அக்கண மிக்க வரம்பைய ராடுநர்
பக்க மெழுந்த வியாழ்குழல் பண்ணொலி
தொக்கு முரன்ற வலம்புரி துந்துபி
நக்கன வான முழக்கினை மாதோ.

(இ - ள்) அக்கணம் - அப்பூஜாகாலத்தில், மிக்க - மிகுந்த, அரம்பையர் - தேவநர்த்தகிகள், ஆடுநர் - நர்த்தனமாடுபவர்களானார்கள், யாழ் - வீணைகளுடையவும், குழல் - புள்ளாங்குழல்களுடையவும், பண் - கீதங்களினுடையவும், ஒலி - சப்தமானது, பக்கம் - எப்பக்கங்களிலும், எழுந்த - உண்டாயின, வலம்புரி - வலம்புரிச்சங்குகளும், துந்துபி - மேளங்களும், தொக்கு - கூடியொலித்து, வான முழக்கினை - மேக கர்ஜனையை, நக்கன - சிரிப்பனவாய், முரன்ற - சப்தித்தன, எ - று. (உஙகூ)

1287. சல்லரி தண்ணுமை பேரி முழாவொலி
யெல்லை தமக்கிலை யென்ன வெழுந்தன

சொல்லினர் தம்மெதிர் சொல்லினர் தம்மொலி
யொல்லெனு மாக்கட லோசையி னொன்றே.

(இ - ள்) சல்லரி - ஜல்லரி வாத்தியமும், தண்ணுமை - ஓர்கட்பறை முத ாகிய வாத்தியங்களும், பேரி - பேரிகைகளும், முழா - மத்தளங்களும், (ஆகிய )வற்றின்), ஒலி - சப்தங்கள், எல்லை - எல்லையானது, தமக்கிலை - தமக்கு )ல்லை, என்ன - என்று, எழுந்தன - வியாபித்தன, சொல்லினர்தம் - வசனிப்ப ர்களுக்கு, எதிர் சொல்லினர் தம் - மறுமொழி சொல்பவர்களுடைய, ஒலி - சப் ங்களும், ஒல்லெனும் - ஒல்லென்றிரைகின்ற, மா - பெரிதாகிய, கடலோசை ின் - ஸமுத்திர இரைச்சலைப்போல, ஒன்று - ஒன்றாகும், எ - று. (உ௪0)

1288. தும்புரு நாரதர் தொக்குடன் மிக்கவ
ரெங்கு மியாழிசை யோடொலி தொட்டனர்
தங்கிய கின்னரர் தம்மிது னங்களை
தங்கிய கீதமோ டாயினர் தாமே.

(இ - ள்) தும்புரு நாரதர் - தும்புரு நாரதரென்கிற ஒரு வகையான தேவ ரிஷியர்கள், யாழிசையோடு மிக்கவர் - வீணாகானஞ் செய்வதோடு மிகு வல்லவர் களாய், எங்கும்-எவ்விடங்களிலும், உடன் தொக்கு - உடனே கும்பல் கும்பலாகச் சேர்ந்து, ஒலி தொட்டனர் - வீணாவாத்திய வொலியைச் செய்யத் தொடங்கினார் கள், தங்கிய - தங்குதல் கொண்ட, கின்னரர்தம் மிதுனங்கள் தாம் - கின்னர தேவதம்பதிகள், ஐ தங்கிய - அழகு சேர்ந்திராநின்ற, கீதமோடாயினா - கீதங் கள் பாடுதலுடன் செறிந்தார்கள், எ - று. (உ௪௧)

வேறு.

1289. சக்க ரன்முதற் றேவர்க டாஞ்செய்த
மிக்க செல்வத்தை யாவர் விளம்புவா
ரக்கண முச்சகத் துள்ளவ ராலயந்
தொக்க வேதொடங் கிச்சிறப் போடுமே.

(இ - ள்) சக்கரன்முதல் - ஸௌதர்மேந்திரன் முதலாக, தேவர்கள் தாம் - தேவர்கள், செய்த - உண்டாக்கிய, மிக்க - மிகுதியாகிய, செல்வத்தை - ஐஸ்வரி யத்தை, யாவர் - எவர்கள், விளம்புவார் - சொல்லுவார்கள், அக்கணம் - அக்காலத் தில், முச்சகத்திலுள்ளவாலயம் - மூன்று லோகத்துள்ள அக்கிருத்திம ஜின சைத்யாலயங்களில், தொக்க - சேர்ந்ததாகி, சிறப்பு-தேவர்களால் செய்யப்பட்ட பூஜையானது, தொடங்கி - ஆரம்பித்து, ஓடும் - செல்லாநிற்கும், எ - று. (உ௪உ)

வேறு.

1290. சக்கரன் சமர னீசன் வைரனுந் தேவ ராசர்
தொக்கவா னவரை நான்கு பாகமாய்த் தொகுத்துக் கொண்டு
மிக்கவத் திக்கை மேவி விரகுளி சிறப்ப யர்ந்த
பக்கத்தெண் ணாளுஞ் செய்வர் பதினைநா ழிகையோர் பாலே.

(இ - ள்) சக்கரன் - ஸௌதர்மேந்திரனும், சமரன் - பவண தேவகுலத் துச்சமரனென்னும் பெயருடைய அஸுரேந்திரனும், ஈசன் - ஈசான கல்பத்திந் திரனும், வைரன் - வைரோசனனென்னும் பெயருடையவனாகிய அஸுரகுலத் திந்திரனும், ஆம் - ஆகிய, தேவராசர் - இந்த நாலு தேவராசர்களும், தொக்க - சேர்ந்திராநின்ற, வானவரை - தேவர்களை, நான்கு பாகமாய் - நாலு பங்காக, தொகுத்துக்கொண்டு - பிரித்துச் சேர்த்துக்கொண்டு, மிக்க வத்திக்கைமேவி - மிகுந்த அந்த நந்தீசுவர த்வீபத்தில் நாலு மஹாதிக்குகளிலும் உள்ள ஆலயங் களில் பொருந்தி, விரகுளி சிறப்பயர்ந்த - கிரமமாகச் சிறப்புச் செய்த, பக்கத் தெண்ணாளும் - பூர்வபட்சத்தஷ்டமி முதல் எட்டு நாளும், பதினை நாழிகையோர் பால் - பதினைந்து நாழிகை வரையில் ஒரு பக்கத்தில், (அதாவது: நாலு பங்குக் காரர்களும் செய்ய, அறுபது நாழிகையாக இப்படி எட்டு நாளும் இடைவிடாமல்), செய்வர் - சிறப்புச் செய்வார்கள், எ - று. (உ௯ங)

1291. அக்கணத் தகத்துப் பஞ்ச மந்திரத் தால யத்துட்
புக்குசா ரணரின் மிக்கா ரிறைவனைப் போற்றி சைப்பர்
திக்கெட்டி லிறைவன் பாதஞ் செறிந்துல காந்தி தேவர்
தக்கவச் சிறப்பை யெல்லாந் தாஞ்சிந்தித் திருப்ப ரன்றே.

(இ - ள்) அக்கணத்தகத்து - அந்த நந்தீசுவர பூஜாகாலமாகிய கார்த்திகை பங்குனி ஆடிமாஸ பூர்வபட்ச அஷ்டமி முதல் பௌர்ணமிவரையில், பஞ்சமந் தரத்து - (ஜம்பூத்வீபமேரு ஒன்றும், தாதகிஷண்டத்திலிரண்டும், புஷ்கரார்த்தத் தில் இரண்டுமாகிய இந்த) ஐந்து மஹாமேரு பர்வதங்களிலுள்ள, ஆலயத்துள் - அக்கிருத்திம ஜினசைத்யாலயங்களில், சாரணரின் மிக்கார் - மிகுந்த ஸம்மியக் ஞானாதி குணமுடைய சாரண பரமேஷ்டிகளாகிய யதிவரர்கள், புக்கு - அடைந்து, இறைவனை - ஜினேந்திரனை, போற்றிசைப்பர் - ஸ்துதிசெய்வார்கள், திக்கெட் டில் - பிரம்மலோகாந்தியத்தில் எட்டுத்திக்கிலு மிராநின்ற, உலகாந்தி தேவர் - லௌகாந்தி தேவர்கள், இறைவன் பாதம் - ஜினேந்திரனுடைய பாதங்களை, செறிந்து - மனதில் சேர்ந்தவர்களாகி, தக்க - தகுதியாகிய, அச்சிறப்பையெல் லாம் - அந்த நந்தீசுவர பூஜைகளை யெல்லாம், சிந்தித்திருப்பர் - தியானித்துக் கொண்டிருப்பார்கள், எ - று.

தாம், அன்றே - அசைகள். (உ௯௪)

வேறு.

1292. ஞானவிதி முதல்விதிக ளறிந்துமஞ்ச ஞங்கத்
தானமவை யெய்திமஞ்ச ஞங்கமவை வாங்கி
வானவர்கண் மணிக்குடத்து நந்தையெனும் வாவி
பானந்தனை முகந்துமுகம் பதுமமலர் சூட்டி.

(இ - ள்) ஞானவிதிமுதல் - ஜினேந்திரப் பிரதிமைகளுக்குச் செய்யும்படியான ஸ்நானாபிஷேக விதிமுதலாகிய, விதிகள் - வரிசைக்கிரமங்களை, அறிந்து - தெரிந்து, மஞ்சனங்கத்தானமவை - திருமஞ்சனங்கள் இருக்கும்படியான இடங்களை, எய்தி - அடைந்து, மஞ்சனங்கமவை - திருமஞ்சன அங்கமாகிய திரவியங்களை, வாங்கி - கிரகித்துக்கொண்டு, வானவர்கள் - தேவர்கள், மணிக்குடத்து - ரத்னங்களாலாகிய கடங்களில், நந்தையெனும் - நந்தையென்கிற, வாவிபானந்தனை - தடாகத்தின் ஜலத்தை, முகந்து - விதிப்பிரகாரம் மொண்டு, முகம் - அக்குடத்தின் முகத்தில், பதுமமலர் - தாமரைப் புஷ்பத்தை, சூட்டி - அணிந்து, எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (௨௬௯)

1293. அஞ்சலியி னேடிறைவ னாலயத்தை வலமாய்
வந்தவர்க ணின்றிடத்தின் மணிக்கதவந் திறப்ப
வந்தமினல் லறிவிறைவன் றிருவுருவங் காணு
வந்தெழுந்த வானந்தத்தின் மயங்கிமிகத் துதித்தார்.

(இ - ள்) அஞ்சலியினோடு - வணக்கத்துடன், இறைவன் - ஜினேந்திரனுடைய, ஆலயத்தை - கோயிலை, வலமாய் - பிரதக்ஷிணமாக, வந்து - மூன்று சுற்றுவந்து, அவர்கள் - அத்தேவர்கள், நின்றிடத்தில் - இராநின்ற விடத்தில், மணிக்கதவம் - அழகிய கதவுகள், திறப்ப - திறக்கப்படுதலால், (அப்பொழுது உள்ளே யிராநின்ற), அந்தமில் - முடிவில்லாத, நல் - நன்மையாகிய, அறிவு - கேவல ஞானத்தையுடைய, இறைவன் - ஜினேந்திரப் பிரதிமையின், திரு - அழகிய, உருவம் - ரூபத்தை, காணு - பார்த்து, வந்து - மனத்தில் தோன்றி, எழுந்த - உண்டாகிய, ஆனந்தத்தின் - பக்தியினால், மிக மயங்கி - மிகுதியாகக்கூடி, துதித்தார் - தோத்திரம் செய்தார்கள், எ - று. (௨௭௦)

1294. அனந்தவறி வாலனந்த வீரியனு மானுய்
அனந்ததெரி சியனந்த வின்பமுடை யோனை
மனஞ்செயலின் வணங்கினவர் பணிந்துலக மேத்த
நினைந்தபடி யெய்திவினை நீத்துயர்வ

(இ - ள்) (அவ்வாறு துதித்தவர்கள்), அனந்தவறிவால் - அனந்த ஞானத்தினலே, அனந்த வீரியனுமாளுய் - அனந்த வீரியத்தை யுடையவனுமாளுய், அனந்ததெரிசி - அனந்த தர்சனத்தை யுடையவனும், அனந்தவின்பமுடையோயை - அனந்தஸௌக்கியத்தை யுடையவனுமாகிய உன்னை, மனம்செயலின் - மனேவாக் காயங்கள் பொருந்த, பணிந்து - நமஸ்கரித்து, வணங்கினவர் - வணங்குகின்றவர்கள், நினைந்தபடி - நினைத்த பிரகாரம், எய்தி - அடைந்து, வினைநீத்து - கர்மங்களைக் கெடுத்து, உலகம் - இவ்வுலகத்துள்ள பவ்வியர்கள், ஏத்த - ஸ்துதிக்க, உயர்வர் - மேலானபதவியைப் பெறுவார்கள், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (உசஎ)

1295. என்றுநின்று துதித்திறைவ ஞலயத்தி னுள்ளா
லன்றுசென்று புக்கமர ராசரவர் தாங்கள்
வென்றவர்த மிறைவன்றிரு வுருவதனுக் கேற்ப
நின்றவர்கள் செய்தசிறப் பெவர்க்குநினைப் பரிதே.

(இ - ள்) என்று நின்று துதித்து - என்று சொல்லி நின்று துதிசெய்து, அமரர் - தேவர்களும், அரசரவர் தாங்கள் - தேவேந்திரர்களும், இறைவன் - சர்வஜ்ஞனுடைய, ஆலயத்தினுள்ளால் - ஆலயத்துள், அன்று - அப்பொழுது, சென்றுபுக்கு - போய் உள்ளேயடைந்து, வென்றவர்தம் - ஸகல கர்மங்களையும் ஜெயித்தவராகிய, இறைவன் - ஜினேந்திரனுடைய, திரு - அழகிய, உருவதனுக்கு - ரூபமாகிய பிரதிமைகளுக்கு, ஏற்ப - இசையும்படி, நின்று - நிலைபெற்று, அவர்கள் - அத்தேவர்கள், செய்த - இயற்றிய, சிறப்பு - பூஜையானது, எவர்க்கும் - யாவர்களுக்கும், நினைப்பு - எண்ணுவதற்கு, அரிது - அருமையாகும், எ - று. (உசஅ)

வேறு.

1296. தோள்க ளாயிரத் தழுத்தினர்
மணிக்குடம் சோதமன் முதலானோர்
வீழும் மேருவின் னருவியின்
வீழ்த்தனர் வென்றவர் தம்மேனி
யூழி யூழிதோ றுயதீ
வினையவை தீர்ந்தழு வுலகத்தோர்
தாழு மப்பெயர்த் தாண்டக
மாயிர முகத்துடன் படித்தாரே.

(இ - ள்) சோதமன் முதலானோர் - ஸௌதர்மேந்திரன் முதலாகிய தேவர்கள், தோள்களாயிரத்து - ஆயிரம் புயங்களை நிருமித்துக்கொண்டு அவற்றால்,

மணிக்குடம் - ரத்தினத்தினலாகிய பூர்ண கடங்களை, அழுத்தினர் - தரித்தவர்களாய், வென்றவர்தம்மேனி - கருமங்களை ஜெயித்த ஜினேந்திரப் பிரதிமைகளின் மேல், மேருவின் - மஹம்மேரு பர்வதத்தினின்றும், வீழும் - சொரிகின்ற, அருவியின் - அருவிஜலம்போல, வீழ்த்தனர் - சொரிந்தார்கள், ஆயிரமுகத்து - (பிறகு) ஆயிரம் முகங்களை நிருமித்துக்கொண்டு அவற்றால், மூவுலகத்தோர் தாழும் - மூன்று லோகத்தார்களாலும் வணங்கும்படியாகிய, அப்பெயர் - அந்த ஜினேந்திர குண ஸஹஸ்ராஷ்ட நாமங்களாகிய, தாண்டகம் - தண்டகஸ்துதியை, உடன் - அபிஷேகவிதி முடிந்தவுடன், படித்தார் - சொல்லித் துதித்தார்கள், ஊழிஊழி தோறும் - ஒவ்வொரு ஊழிக்காலத்திலு முண்டாகிய, தீவினையவை - கெட்ட வினைகளெல்லாம், தீர்ந்த - நீங்கின, எ - று. (உ௩௯)

1297. கண்க ளாயிர முடையவச்
சக்கரன் காதியைக் கடிந்தோர்தம்
பண்பெ லாமுட னிருந்தவப்
படிமத்தைப் பலமுறை பார்த்தாரா
வண்கை யாற்றொழு திறைவன்றன்
சரணத்தை வாழ்த்தொடு மருச்சித்தான்
பெண்க ளிற்பிறப் பில்லவிந்
திராணியிப் பெருஞ்சிறப் புடன்செய்தாள்.

(இ - ள்) கண்களாயிரமுடைய - ஆயிரம் கண்களையுடைய, அச்சக்கரன் - அந்தத் தேவேந்திரனானவன், காதியை - காதிகருமங்களை, கடிந்தோர்தம் - ஜெயித்தவராகிய ஜினேந்திரருடைய, பண்பெலாம் - குணமெல்லாம், உடனிருந்த - ஒரு தன்மையைப்போல் சேர்ந்திராநின்ற, அப்படிமத்தை - அந்தப் பிரதிமாரூபங்களை, பலமுறை - பலதடவையும், பார்த்து - நோக்கி, ஆரா - ஆர்ந்து, (அதாவது: பொருந்தி), இறைவன்தன் சரணத்தை - ஜிநப்பிரதிமைகளின் பாதத்தை, வண் கையால் தொழுது - ஈகைபொருந்திய கையால் வணங்கி, வாழ்த்தொடும் - ஸ்துதியுடன், அருச்சித்தான் - அர்ச்சனையும் செய்தான், பெண்களில் - தேவஸ்த்ரீகளில், பிறப்பில்ல-இனி அதிகப் பிறப்பில்லாமல் அடுத்த ஒரு பவத்தில் கர்மக்ஷயம்செய்து மோட்சமடையும் பக்குவமுள்ள, இந்திராணி - இந்திராணியானவள், இப்பெருஞ் சிறப்பு - இந்த நந்தீசுவர பூஜையை, உடன் - தேவேந்திரனுடன்கூட, செய்தாள் - செய்து முடித்தாள், எ - று. (உ௫0)

1298. கந்த முங்கடி மாலையுஞ் சுண்ணமுங் காரகி லிடுதூப
நந்தை யின்னல வாரியுந் தீபமு நலபல சருவாலு
மந்த மில்லநல் லுவகையின் னடம்பல தொடங்கினின் றருச்சித்தார்
சந்தி ராதிகீழ் முத்தேவ ருமிந்திரர் சோதமன் முதலானோர்.

(இ - ள்) கீழ்முத்தேவரும் - (பவண, வியந்தர, ஜோதிஷ்கரென்கிற) கீழ் முத்தேவர்களும், சந்திராதி - சந்திராதித்யர் முதலாகிய, இந்திரர் - கீழ்முத் தேவேந்திரர்களும், சோதமன் முதலானோர் - ஸௌதர்மேந்திரன் முதலாகிய கல்பாமர இந்திரர்களும், அந்தமில்ல - அளவில்லாததாகிய, நல்லுவகையின் - நன்மையாகிய ஸந்தோஷத்தினால், நடம்பலதொடங்கிநின்று - பலவிதமாக ஆனந்த நர்த்தனங்களைச் செய்து நின்று, கந்தமும் - சந்தனக்குழம்பு முதலிய ஸுகந்த வஸ்துக்களாலும், கடி - வாசனை தங்கிய, மாலையும் - பூமாலைகளாலும், சுண்ண மும் - வாசனைத் திரவிய கதம்பத் தூள்களாலும், கார் - கருமை பொருந்திய, அகி லிடும் - அகில் கட்டையின் தூள் முதலியவற்றால் போடப்பட்ட, தூபம் - தூபங் களாலும், நந்தையின் - நந்தையென்கிற தடாகத்திலுண்டான, நல - நன்மை யான, வாரியும் - ஜலத்தினாலும், தீபமும் - தீபத்தாலும், நல - நன்மையாகிய, பல - அநேக விதங்களாகிய, சருவாலும் - அப்பவர்க்கங்களாதியாலும், அருச்சித் தார் - அர்ச்சனை செய்தார்கள், எ - று. (உருக)

1299. மற்ற விந்திரர் தம்மொடும்
படிந்திரர் மைமைகண் மும்மைக்க
ணுற்று நற்சிறப் புழைக்கலந்
தாங்கினர் தேவியர் தம்மோடும்
பெற்றி யாற்பிறப் பறுக்குநற்
சிறப்பினைச் செய்துசக் கரன்பின்னைக்
குற்ற மில்லநல் லறிவுடை
யிறைவன்றன் குணத்துதி சொலலுற்றான்.

(இ - ள்) மற்ற - மீந்த, இந்திரர் தம்மொடும் - இந்திரர்களோடு, படிந் திரர் - பிரதீந்திரர்களும், மைமைகண் - பூஜா காரியத்தில், மும்மைக்கண் - மன வசன காயங்களென்னும் மூன்றினாலும், உற்று - பொருந்தி, நல் - நன்மையாகிய, சிறப்பு - அந்த பூஜைக்கு யோக்கியமாகிய, உழைக்கலம் - பொருள்களை, தேவியர் தம்மோடும் - தங்கடங்கள் தேவி மார்களுடன், தாங்கினர் - தரித்தார்கள், சக்கரன் - ஸௌதர் மேந்திரனானவன், பெற்றியால் - பெருமையினாலே, பிறப்பறுக்கும் - ஸம்ஸாரத்தைக் கெடுக்கும்படியான, நல் - நன்மையாகிய, சிறப்பினை - இந்த நந்தீசுர பூஜையை, செய்து - செய்து, பின்னை - பிறகு, குற்றமில்ல - தோஷ நிவாரணமாகிய, நல் - நன்மையாகிய, அறிவுடை - கேவல ஞானத்தையுடைய, இறைவன் தன் - ஜீனேந்திரனுடைய, குணத்துதி - குணத்தின் ஸ்துதிகளை, சொலலுற்றான் - சொல்லத் தொடங்கினான், எ - று. (உருஉ)

வேறு.

1300. அருக னீநல்ல பூசைக் கருகனுய்ப்
பெரியை யாயினை பெண்ணசை யின்மையா
லொருவ னுயினை யொப்பவ ரின்மையாற்
றுருவ மாயினை தோற்றம தின்மையால்.

(இ - ள்) நல்ல - நன்மையாகிய, பூசைக்கு - பவ்வியர்களினால் செய்கின்ற பூஜைக்கு, நீ - நீ, அருகனுய் - உரியவனுகி, (அதனால்), அருகன் - அருகன் என்கிற பெயருடையவனுனுய், பெண்ணசை யின்மையால் - ஸ்த்ரீவாஞ்சையில்லாததினால், பெரியையாயினை - பெரியோனுனுய், ஒப்பவரின்மையால் - உனக்கொப்பானவர்களில்லாமையால், ஒருவனுயினை - உபமாதீதனுகினுய், தோற்றமதின்மையால் - பிறப்பில்லாததனால், துருவமாயினை - நிச்சயமான நித்தியஸ்வரூபியானுய், எ - று. (உஙரு)

1301. எரியும் போல்வைநீ யெண்வினைக் காளித
முருகச் சுட்டுயிர் தூப்பத்தைச் செய்தலால்
தருவு நீழலும் போல்வைநீ சார்ந்தவர்
பெரிய துன்பப் பிறப்பினை நீத்தலால்.

(இ - ள்) எண்வினை - அஷ்ட கர்மங்களாகிற, காளிதம் - களிம்பை, உருக - உருகும்படி, சுட்டு - தியானுக்னியால் சுட்டு, உயிர் - ஆத்மனே, தூப்பத்தைச் செய்தலால் - பரிசுத்தஞ் செய்தலால், நீ - நீ, எரியும் போல்வை - அக்கினிக்கும் ஒப்பாவை, சார்ந்தவர் - உனேயடைந்தவர்களின், பெரிய - பெரிதாகிய, துன்பம் - இடர் பொருந்திய, பிறப்பினை - பிறப்புக்களை, நீத்தலால் - நீக்குவதினுலே, நீ - நீ, தருவும் நீழலும் போல்வை - மரமும் நிழலும்போல் இராநின்ருய், எ - று. (உஙச)

1302. அறிவ னீயறி யாப்பொரு ளின்மையால்
முறையு நீயிலே முற்ற வுணர்ச்சியாற்
கறவு நீயிலே காய்வதொன் றின்மையால்
இறைவ னீயுல கியாவு மிறைஞ்சலால்.

(இ - ள்) நீயறியா - நீ அறியாத, பொருள் - திரவியம் (அல்லது) வஸ்துக்கள், இன்மையால்-இல்லாததினுல், அறிவன் - ஸர்வஜ்ஞனுகினுய், முற்றவுணர்ச்சியால் - ஸகல பொருள்களேயும் ஏககாலத்தில் அறிவதால், முறையு நீயிலே - கிரமகரண வியவதானமென்பதை நீ யில்லாதவனுயினுய், காய்வதொன்றின்மையால் - கோபத்தன்மை சிறிதுமில்லாததினுல், கறவு நீயிலே - துவேஷமென்பதை

நீயில்லாதவனுயினுய், உலகுயாவும் - உலகத்துள்ள பவ்வியப் பிராணிகளெல்லாம், இறைஞ்சலால் - உனை வணங்குகின்றபடியால், இறைவனீ - திரிலோகத்துக்கும் நாதன் நீயேயாகின்ருய், எ - று. (உருஉ)

1303. முழுது நீமுழு துக்கு மிறைவனீ
முழுது தன்வடி வின்முழு தாகிநீ
முழுதுங் கண்டுணர்ந் தாயின்ப முற்றநீ
முழுதும் விரித்து நான்முக ஞகிநீ.

(இ - ள்) முழுதும்நீ - லோகாலோக ஸமஸ்தமும் காண்கின்ற அனந்த தரிசனத்தால் நிஜருசிலக்ஷண முழுதையும் அடைந்தவனீயே, முழுதுக்கும் - லோக முழுதுக்கும், இறைவனீ - நாதனுனவனும் நீயே, முழுது தன் வடிவின் - உனது முழு ரூபத்திஞல், முழுதாகி - ஸர்வவியாபியாகி, (அனந்த ஞானத்திஞல்) நீமுழுதுங் கண்டுணர்ந்தாய் - ஜீவாதி சகல பதார்த்தங்களையும் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்து அறிந்தாய் நீ, இன்பமுற்றநீ - ஸம்பூர்ண ஸௌக்கியமான அனந்த ஸுகமுள்ளவனும் நீ, முழுதும் விரித்து - ஜீவாதி சகல பதார்த்தங்களையெல்லாம் திவ்யத்வனியால் விசாலமாக விரித்துச் சதுர்வேதங்களாகும்படி சொல்லியருளி, நான்முகனுகிநீ - சதுர்முகத்தையுடையவனும் நீயே, எ - று. (உருச)

1304. உண்மை தானின்மை யுண்மை யின்மையாந்
திண்ணிய தன்னுே டவாச்சியஞ் செப்பிடிற்
பண்ணு பங்கங்க ளேழ்பொருட் கில்லையே
லுண்மை தான்பொருட் கில்லையென் ருேதினுய்.

(இ - ள்) உண்மைதான் - ஸ்யாதஸ்தியும், இன்மை - ஸ்யாநாஸ்தியும், உண்மையின்மை - ஸ்யாதஸ்திநாஸ்தியும், ஆம் - ஆகிய, திண்ணிய - சேர்ந்திரா நின்ற, தன்னுேடு - இந்த மூன்ருேடு, அவாச்சியம் - ஸ்யாதவக் தவ்யமும், (என நாலாக), செப்பிடில் - சொல்லுமிடத்தில், பண்ணு - சேர்க்கின்ற (அதாவது: முன் பண்பாகிய மூன்றுகளுடன் நாலாவதாகிய அவக்தவ்யத்தைத் தனித்தனி யாகச் சேர்க்க, ஸ்யாதஸ்தி அவக்தவ்யம், ஸ்யாநாஸ்தியவக்தவ்வியம், ஸ்யாதஸ்தி நாஸ்தியவக்தவ்வியமுமென்று கணக்கிடுகின்ற), பங்கங்களேழ் - இந்த ஸப்தபங்கி நியாயமானது, பொருட்கு - ஜீவாதி பொருள்களுக்கு, இல்லையேல் - இல்லாமல் போகுமானுல், பொருட்கு - ஜீவாதி பதார்த்தங்களுக்கு, உண்மைதானில்லை யென்று - நிச்சயமில்லை யென்று, ஓதினுய்-சொல்லினுய், எ - று. (உருரு)

1305. சுற்ற நீயெவர்க் குந்துன்ப நீக்கலாற்
பற்று நீயிலே பற்றவை தீர்த்தலான்

முற்று நீயுணர்ந் தாய்மூ வுலகத்தின்
பெற்றி தன்னைநீ யாவர்க்கும் பேசலால்.

(இ - ள்) எவர்க்கும் - உன்னையடைந்த யாவர்களுக்கும், துன்பம் - துக்கங்களை, நீக்கலால் - நீங்கச் செய்வதால், சுற்ற நீ - ஸகல பவ்வியபந்துவும் நீயே, பற்றவை - மோஹத்தினுலாகின்ற ராகத்வேஷாதி பற்றுக்களை, தீர்த்தலால் - நீக்குகின்ற பிரகாரத்தினுல், பற்று நீயிலை-நீராகாதி பற்றின்றி வீதராகனுகின்றாய், மூவுலகத்தின் பெற்றிதன்னை - மூன்று லோகத்தினுடைய ஸ்வரூபங்களை, யாவர்க்கும் - கணதராதி ஸகல பவ்விய ஜீவர்களுக்கும், நீ பேசலால் - நீ உபதேசஞ் செய்வதினுல், முற்றும் - ஸகலத்தையும், உணர்ந்தாய் நீ - அறிந்தவனும் நீயே, எ - று. (உகஅ)

1306. அருவ னீயக திக்க ணிருத்தலால்
உருவ னீயுடம் போடுசென் றவெலாம்
மருவி வானவர் வாழ்த்தியிவ் வாற்றினற்
பொருவி லாப்புண்ணி யத்தொடும் போயினர்.

(இ - ள்) அகதிக்கண் - இனியாதொன்றிலு மடைந்து பிறத்தலில்லாத மோட்சத்தில், இருத்தலால் - இருக்கின்றபடியால், அருவன்நீ-அரூபியானவனும் நீயே, உடம்போடு செல்நாளெலாம்-மோட்சமடைவதன் முன் சரீரத்தோடு கூடிச் சென்ற காலத்திலெல்லாம், உருவன்நீ-ரூபத்தையுடைத்தானவனும் நீயே, (என்று), இவ்வாற்றினுல்-இந்தப் பிரகாரத்தினுல், வானவர்-சதுர்ணிகாயாமரர்களும், மருவி-நந்தீசுவரத்வீபத்தில் அக்கிருத்திமசைத்யாலயப் பிரதிமைகளின் எதிரிலடைந்து, வாழ்த்தி - ஸ்தோத்திரங்களைச் செய்து, பொருவிலா - உபமையில்லாத, புண்ணியத்தொடும் - புண்ணியத்தோடும் கூடினவர்களாகி, போயினர் - தங்கள் தங்களிடமடைந்தார்கள், எ - று. (உகக)

வேறு.

1307. இமையவர் போலவிச் சிறப்பைச் செய்தவ
ரிமையவ ருலகத்தை யெய்தி யிங்குவந்
திமையவர் செயுஞ்சிறப் பைந்து மெய்திப்போ
யிமையவர் தொழச்சித்தி யகத்தி ருப்பரே.

(இ - ள்) இமையவர்போல - தேவர்களைப்போல, இச்சிறப்பை - இந்த நந்தீசுவர பூஜையை, செய்தவர் - செய்த அருகத் பக்திபாவனு பலமுள்ள பவித்திர மனுஷ்யர்கள், இமையவருலகத்தை யெய்தி - அடுத்த பிறப்பில் தேவருலகடைந்து தேவர்களாகிப் பிறந்து உத்கிருஷ்ட சுபோபயோகதத்பரர்களாகிப் பிறகு,

இங்கு வந்து - இந்தப் பூமியில் வந்து தீர்த்தங்கரர்களாகி, இமையவர் - தேவர்கள், செயும் - செய்கின்ற, சிறப்பைந்தும் - பஞ்சகல்யாண பூஜைகளையும், எய்தி - அடைந்து, போய் - ஸகல கர்மக்ஷயம் செய்து போய், இமையவர் தொழ - தேவர்கள் வணங்கும்படி, சித்தியகத்தும் - மோட்சமென்கிற ஸித்தி க்ஷேத்திரத்தில், இருப்பர் - ஸ்வயம்புவாக வீற்றிருப்பார்கள், எ - று. (உகூ0)

1308. எண்வகை வியந்தரர்க் கிடமி தாகவும்
பண்ணவர் பணித்தனர் பல்ல மாயுக
முன்னிலத் தெங்கணு முறைவ ரோக்கமும்
பண்ணுறு சிலைகள்பத் தாகு மென்பவே.

(இ - ள்) எண்வகை - எட்டுப்பிரகாரமாகிய, வியந்தரர்க்கு - வியந்தர தேவர்களுக்கு, இடம் - ஸ்தானமானது, இதாகவும் - இந்த மத்தியமலோகமேயாகவும், பண்ணவர் - ஸர்வஜ்ஞர், பணித்தனர் - சொன்னார், (மேலும் இவர்கள்), பல்ல மாயுகம் - ஒரு பல்லமாயுஷ்யத்தில், முன்னிலத்து - முன்னாலே சொல்லப்பட்ட அஸங்கியாதத்வீப சமுத்திரங்களில், எங்கணும் - எவ்விடங்களிலும், உறைவர் - தங்கியிராநின்றவர்களாவார்கள், (இவர்கட்கு), ஓக்கமும் - உன்னதமும், பண்ணுறு - பண்ணிட்டிரானின்ற, சிலைகள் - விற்கள், பத்தாகும் - பத்தாம், என்ப - என்றும் சொல்லுவர், எ - று. (உகூக)

1309. ஆயிரம் யோசனை யாழ்ந்த தோங்கிய
தாயிர மிலாதநூ றாயி ரம்புகை
யாயிரம் பத்தடி யகல மாயது
மேயநால் வனத்தது மேரு வென்பவே.

(இ - ள்) மேருவென்ப - மஹம்மேரு பர்வதமென்று சொல்லப்படுவது, ஆயிரம் யோசனை - ஆயிரம் யோஜனைப் பிரமாணம், ஆழ்ந்தது - பூமிக்குள் ஆழ்ந்ததாகும், ஆயிரமிலாத - ஆயிரங்குறைந்த, நூறாயிரம்புகை - நூறாயிரம் யோஜனை, (அதாவது: தொண்ணூற்றொன்பதினாயிரம் யோஜனை), ஓங்கியது - பூமிக்குமேல் உன்னதத்தையுடையதாகும், அடி - அடியில், ஆயிரம் பத்து - பதினாயிரம் யோஜனை, அகலமாயது - அகலமுள்ளதாகும், மேய - பொருந்திய, நால்வனத்தது - (பத்திராஸால, நந்தன, ஸௌமனஸ, பாண்டுகமென்னும்) நாலு வனங்களை யுடையதாகும், எ - று. (உகூஉ)

1310. நுகணில மீதுபத் திலாதவெண் ணூறுநற்
புகையிசை நூற்றொரு பத்து வான்புகை
யிகழ்விலாச் சோதிட ரொருக யிற்றெல்லை
யகணிலத் தியங்குவர் புறத்து நிற்பரே.

(இ - ள்) தகணிலமீது - சித்ரா பூமிக்கு மேலே, பத்திலாதவெண்ணூறு நற்புகைமிசை - எழுநூற்று தொண்ணூறு யோஜனைக்கு மேல், நூற்றொரு பத்து வான்புகை - நூற்றுபத்து யோஜனை உயர பரியந்தம், இகழ்விலா - இகழ்ச்சியில்லாத, சோதிடர் - ஜோதிஷ்கதேவர்கள், ஒரு கயற்றெல்லை - மத்திமலோக விஸ்தீர்ணமாகிய ஒரு கயிறப் பிரமாணத்திலும், அகணிலத்து - இரண்டரைத்வீபம் இரண்டு ஸமுத்திரங்களிலும், இயங்குவர் - கமனத்தையுடையவர்களாயிரா நின்றார்கள், புறத்து - மானுஷோத்தரபர்வதத்திற்குப் புறம்பிலே, நிற்பர் - ஸ்திரமாக நிலை பெற்றிருப்பார்கள், எ - று. (உகூ)

1311. இரவிபத் தின்மிசை யெண்ப தின்மிசை
யரவிந்தப் பகைவனு மீன்க ளூன்மிசை
யுரைசெய்த புதற்குயர் நான்கு மூன்றின்மேல்
விரகினுல் வெள்ளிவி யாழஞ்செவ் வாய்சனி.

(இ - ள்) பத்தின்மிசை - முன் சொன்ன எழுநூற்றுத் தொண்ணூறு யோஜனைக்கு மேல் பத்து யோஜனையுயர்ந்த யெண்ணூறு யோஜனையில், இரவி - ஸூர்யவிமானமும், எண்பதின் மிசை - எண்ணூற்றெண்பது யோஜனையில், அரவிந்தப் பகைவன் - சந்திரவிமானமும், ஆம் - ஆகும், நான் மிசை - எண்ணூற்றெண்பத்து நாலு யோஜனையில், மீன்கள் - இருபத்தேழு நட்சத்திரங்களும், உரைசெய்த - சொல்லப்பட்டன, புதற்கு - புதவிமானத்திற்கு, உயர் - உன்னதமானது, நான்கு - அதன்மேல் நான்காகிய எண்ணூற்றெண்பத்தெட்டு யோஜனையாகும், மூன்றின் மேல் - இதற்கு மேல் மூன்று யோஜனை உயர்ந்தவிடத்தில், விரகினுல் - கிரமத்தினுல், வெள்ளி - (எண்ணூற்றுத் தொண்ணூற்றொரு யோஜனையில்) சுக்கிரவிமானமும், வியாழம் - (எண்ணூற்றுத் தொண்ணூற்று நாலு யோஜனையில்) பிரகஸ்பதி விமானமும், செவ்வாய் - (எண்ணூற்றுத் தொண்ணூற்றேழு யோஜனையில்) அங்காரக விமானமும், சனி - (தொளாயிரம் யோஜனையில்) சனி விமானமும், (ஆகும்), எ - று. (உகச)

1312. கீழவாந் தாரகை கேட்கின் மேலுமா
மேழுவான் சிலையுயர்ந் தேக பல்லமாம்
வாழுநாள் சோதிடர்க் கன்றி மூவரும்
கீழவா யுகமீரா யிரங்க ளஞ்சரே.

(இ - ள்) கேட்கின் - கேட்குமிடத்தில், தாரகை - தாராகணங்கள், கீழவாம் - சந்திராதித்யர்க்கு கீழாயிருப்பனவும், மேலுமாம் - மேலாயிருப்பனவும் ஆகும், ஏழுவான் சிலையுயர்ந்த - ஏழு வில்லுன்னதத்தையடைந்த, சோதிடர்க்கு - ஜோதிஷ்க தேவர்களுக்கு, வாழு நாள் - ஆயுஷ்ய நாள், ஏகபல்லமாம் - ஒரு பல்லமாகும், அன்றி - அதுவல்லாமல், மூவரும் - (பவண, வியந்தர,

ஜோதிஷ்காரகிய) மூவகை தேவர்களுக்கும், கீழவாயுகம் - ஜகன்னியாயுஷ்ய மானது, ஈராயிரங்கள் அஞ்சு - பதினாயிரம் வருஷங்களாகும், எ - று (உ௬௫)

1313. இரண்டு நான்குமுன் னொன்குமே மூாறுமற்
றிரண்டினோ டெழுபதா மிந்து வருக்கனுந்
திரண்ட நூற்றுமுப் பத்திரண் டுஞ்செலு
மிரண்டி ரண்டரைச் சாகரத் தீவினே.

(இ - ள்) இரண்டி ரண்டரைச் சாகரத் தீவின் - மத்தியமலோக மத்திய பூமியாகிய இரண்டரைத்வீபம் இரண்டு ஸமுத்திரங்களிலும், இந்து - சந்திரனும், அருக்கனும் - ஸூர்யனும், இரண்டு - (ஜம்பூத்வீபத்தில்) இரண்டு சந்திரர் இரண்டு ஸூர்யர்களும், நான்கு - (லவண ஸமுத்திரத்தில்) நான்கு சந்திரர் நான்கு ஸூர்யர்களும், முன்னான்கு - (தாதகீஷண்டத்வீபத்தில்) பனிரண்டு சந்திரர் பனிரண்டு ஸூர்யர்களும், ஏழாறு - (காளோதக ஸமுத்திரத்தில்) நாற்பத்திரண்டு ஸூர்யர்களும், இரண்டினோடெழுபதாம் - (புஷ்க்கரார்த்தத்வீபத்தில்) எழுபத் திரண்டு சந்திரர் எழுபத்திரண்டு ஸூர்யர்களும், (ஆகி) திரண்ட - சேர்க்கப்பட்ட, நூற்றுமுப்பத்திரண்டும் - இந்த நூற்று முப்பத்திரண்டு ஸூர்ய சந்திரர்களும், செலும் - கமனத்தையுடையவர்களா யிராநின்றார்கள், எ - று. (உ௬௬)

வேறு.

1314. துறக்கத்தி னியற்கை சொல்லிற் சொல்லிய படலந் தோறு
மிறப்பவிந் திரகஞ் சேணி பந்தங்கிண் ணகமு மாகுந்
திறத்துளி சேணி பந்த மிருதுநாற் றிசையுஞ் சென்ற
வறக்கதி ராழி வேந்த னறுபதோ டிரண்டென் றானே.

(இ - ள்) துறக்கத்தின் - ஸ்வர்க்க லோகத்தினுடைய, இயற்கை - ஸ்வ ரூபத்தை, சொல்லில் - சொல்லுமிடத்தில், சொல்லிய - சொல்லப்பட்டிருக்கிற, படலந்தோறும் - படலங்கள் படலங்கள் தோறும், இறப்ப - மிகவும், இந்திரகம் - இந்திரகங்களும், சேணி பந்தம் - ஸ்ரேணிபந்தங்களும், கிண்ணகமும் - புஷ்ப்ப பிரகீர்ணங்களும், (என) ஆகும் - (இப்படி மூன்று விதமான விமானங்கள்) ஆகும், திறத்துளி - வரிசையை உள்ளிட்டிராநின்ற, சேணி பந்தம் - ஸ்ரேணிபந்தங்க ளானவை, இருது - (ஸௌதர்ம கல்ப்பத்தில்) இருது விமானத்தினுடைய, நாற் றிசையும் - நாலு திக்குகளிலேயும், சென்ற - வரிசையாக இராநின்ற சங்கியை யானது, அறக்கதிராழி வேந்தன் - தர்ம சக்கரத்தையுடைய அர்ஹந்த பரம தேவன், அறுபதோடிரண்டு - அறுபத்திரண்டு ஸ்ரேணிபந்தமாகும், என்றான் - என்று சொன்னான், (அதாவது தெரிவித்தான்), எ - று. (உ௬௭)

1315. சொல்லிய படலந் தோறு மொரொரொன்று சுருங்கிச் சென்று
நல்லிசை யணுதி சைக்கட் டிசைதொறு மொரொரொன் றாகும்
வில்லுமிழ்ந் திலங்கும செம்பொன் விமானத்தின் கணனை வேண்டிற்
சொல்லுதும் கேட்கச் சோத மீசானத் தொடக்க மாக.

(இ - ள்) சொல்லிய - ஸௌதர்ம கல்பத்தில் திக்குகளில் அறுபத்திரண்டாகச் சொல்லப்பட்ட ஸ்ரேணி பந்தங்களானவை, படலந்தோறு - மேல் மேல் படலங்கள் தோறும், ஒரொரொன்று சுருங்கிச் சென்று - திக்குகளில் ஒவ்வொரு ஸ்ரேணிபந்த விமானங் குறைவாகிச் சென்று, நல் - நன்மையாகிய, இசை - புகழ்ச்சியையுடைய, அணுதிசைக்கண் - நவாணுதிசையில், திசைதொறும் - திக்குகள் தோறும், ஒரொரொன்றாகும் - ஒவ்வொரு ஸ்ரேணிபந்த விமானமாகும், வில் - கிரணங்களை, உமிழ்ந்து - சொரிந்து, இலங்கும் - விளங்குகின்ற, செம்பொன் - சிவந்த பொன்னாலாகிய, விமானத்தின் - (இந்திரகம், ஸ்ரேணிபந்தம், புஷ்பபிரகீர்ணமுமாகிய) தேவ விமானங்களினுடைய, கணனை - ஸங்கியைகளை, வேண்டில் - சொல்லவேண்டுமொனல், சோதமீசானத் தொடக்கமாக - ஸௌதர்ம ஈசானகல்ப முதல் வரிசையாக, சொல்லுதும் - சொல்லுகின்றோம், கேட்க - கேட்கக் கடவீராக, எ - று. (உகஅ)

1316. இலக்கமெண் ணான்கு மேழு நான்குமுந் நான்கு மெட்டு
மிலக்கநான் கிரண்டிற் காகு மேலிரண் டிரண்டிற் கிவ்வா
றிலக்கத்தின் பாதி யெண்ணஞ் சாயிர மாறு மாகி
விலக்கிலா விமான நான்கு நூறுமுந் நூறு மாமே.

(இ- ள்) விலக்கிலா - நீக்குதலில்லாத, விமானம் - தேவ விமானங்கள், இலக்கமெண்ணான்கு - (ஸௌதர்ம கல்பத்தில்) முப்பத்திரண்டு லக்ஷம் விமானங்களும், ஏழுநான்கு - (ஈசான கல்பத்தில்) இருபத்தெட்டு லக்ஷம் விமானங்களும், முந்நான்கு - (ஸநத்குமார கல்பத்தில்) பன்னிரண்டு லக்ஷம் விமானங்களும், எட்டு - (மாஹேந்திர கல்பத்தில்) எட்டு லக்ஷம் விமானங்களும், இரண்டிற்கு - (பிரம்மபிரம்மோத்தர) மென்னும் இரண்டு கல்பங்களுக்கு, இலக்க நான்கு - நாலு லக்ஷம் விமானங்களும், ஆம் - ஆகும், மேல் - அதற்கு மேல், இரண்டிரண்டிற்கு - இரண்டிரண்டு கல்ப்பங்களுக்கு, இவ்வாறு - இந்தப் பிரகாரம், இலக்கத்தின் பாதி - (லாந்தவகாபிஷ்ட கல்பங்களில்) ஐம்பதினாயிரம் விமானங்களும், எண்ணஞ்சாயிரம் - (சுக்ர, மஹா சுக்ர கல்பங்களில்) நாற்பதினாயிரம் விமானங்களும், ஆறுமாகி - (சதார, ஸஹஸ்ரார கல்ப்பங்களில்) ஆறாயிரமுமாகி, நான்கு நூறு - (ஆனத, பிராணத கல்ப்பங்களில்) நானூறும், முந்நூறும் - (ஆரண, அச்சுத கல்பங்களில்) முந்நூறு விமானமும், ஆம் - ஆகும், எ - று. (உகக)

1317. நூற்றினோ டொருபத் தொன்று மேட்டிம திரயத் தின்க
ணூற்றினோ டேழு மாகு மத்திம மும்மை யிற்றொண்
ணூற்றினோ டொன்று மாகு முபரிம மும்மை யின்கண்
ணூற்றவு மொன்ப தைந்தா மணுதிசா ணுத்த ரத்தே.

(இ - ள்) எட்டிமதிரயத்தின்கண் - ஹேஷ்டிமத்திரயத்தில், நூற்றினோ டொருபத் தொன்றும் - நூற்றுப்பதினொரு விமானமாகும், மத்திம மும்மையில் - மத்திமத்திரயத்தில், நூற்றினோடேழும் - நூற்றியேழு விமானங்களும், ஆகும் - ஆம், உபரிம மும்மையின்கண் - உபரிமத்திரயத்தில், தொண்ணூற்றினோடொன் றும் - தொண்ணூற்றொரு விமானங்களும், ஆகும் - ஆம், ஆற்றவும் - மிகவும் மேலான தன்மையுள்ள, அணுதிசா - நவாணுதிசையில், ஒன்பது விமானங்களும், அணுத்தரத்து - பஞ்சாணுத்தரத்தில், ஐந்து - ஐந்தேவிமானங்களும், ஆம் - ஆகும், எ - று. (உ௭0)

1318. இந்திரர் சாமா னீகர் தாயத்திங் கர்பா ரிடதர்
கந்தபா லர்காப்ப ரா னீகர்கீ ணர்கில் விழியர்
விந்திரா திகளிற் பத்து மரசர்கள் குரவ ரன்றி
மந்திரர் சூழ்ந்தி ருப்பர் காஞ்சுகி யாதி போல்வார்.

(இ - ள்) இந்திரர் - இந்திரர்களும், சாமானீகர் - ஸாமானீக தேவர்களும், தாயத்திங்கர் - த்ராயத்ரிம்ச தேவர்களும், பாரிடதர் - பிரகீந்திரர்களும், கந்தபாலர்- லோகபால தேவர்களும், காப்பர் - தண்டநாயகர்களும், ஆனீகர் - ஆனீக தேவர் களும், கீணர் - ப்ரகீர்ணக தேவர்களும், கில்விழியர் - கில்விழிகர்களும், (ஆகிய) இந்திராதிகளில் - இந்திரர் முதலானவர்களில், பத்தும் - இந்தப் பத்துத் தரங்க ளும், அரசர்கள் - பூமியிலிராநின்ற ராஜாக்களும், குரவர் - பெரியோர்களும், அன்றி - அல்லாமலும், மந்திரர் - மந்திரி முதலானவர்களும், சூழ்ந்திருப்பார் - கூடியிருப்பார்கள், (இவர்கள்) காஞ்சுகியாதிபோல்வார் - மேற்சட்டை முதலியவை போல்வார்கள், எ - று. (உ௭௧)

1319. நடுவெணெண் புகைக்கொ ழூப்பாய் நந்திமீச் சிறகொத் தீற்றிற்
குடைமலர்ந் திருந்த தேபோன் றிரண்டரைத் தீவோ டொத்துக்
கடையிலா வறிவு காட்சி யுடையவர் கழுமி நின்ற
விடமது வுலகத் துச்சி யேத்தருந் திறத்த தாமே.

(இ - ள்) கடையிலா - அனந்தமாகிய, அறிவு - ஞானத்தையும், காட்சி - தர்சனத்தையும், உடையவர் - உடைத்தானவர்களாகிய சித்தபரமேஷ்டிகள், கழுமி நின்ற - பொருந்தி யிராநின்ற, இடமது - ஸித்திக்ஷேத்திரமென்னும் இடமானது,

உலகத்துச்சி - லோகத்தினுடைய சிகரமாகி, (அஷ்டமப்பிரத்வீ என்னும் பெயருடைய சித்தசிலை யமையப்பெற்று), நடுவண் - மத்தியில், எண்புகைக்கொழுப்பாய் - எட்டுயோஜனை பிரமாண பாகுல்லியத்தை யுடையதாகி, சுந்தி - நிறைந்து, ஈற்றில் - கடையில், ஈச்சிறகொத்து - ஈசலிறகுப் பிரமாணமாகி, குடைமலர்ந்திருந்ததே போன்று - குடையானது விரிந்திருந்ததற் கொப்பாகி, இரண்டரைத் தீவோடொத்து - இரண்டரை த்வீபத்தினுடைய விஸ்தீர்ணமாகிய நாற்பத்தைந்து லட்ச யோஜனை விஸ்தீர்ணமாகி, (அதன்மேல் ஸித்தபரமேஷ்டிகள் பொருந்தியிருப்பதால்), ஏத்தரும் - பவ்விய ஜீவர்களால் ஸ்துதித்தற்கரிய, திறத்ததாம் - விதாயத்தையுடையதாகும், எ - று.

168-வது, "முடிவிடைய கலமாயதமொன்றேழ் முழ" என்னும் பாடல் முதல் 273-வது பாடலாகிய இதுவரையிலும் லோகத்தின் ஸ்வரூபம் ஸம்க்ஷேபமாகச் சொல்லப்பட்டது. இதன் ஸ்வரூபங்களை திரிலோகஸாரம், காதல லோகாணி, முதலிய கிரந்தங்களில் விசாலமாக அறிந்துகொள்ளலாம். (உஎஉ)

1320. மதிசுத மவதி மாண்ட மனப்பச்சங் கேவ லமாம்
விதியவாம் பமாணம் வேண்டின் விகற்பங்க ளியாவு மாகும்
மதிசுதம் பரோக்க மாகும் மற்றுபச் சக்க மாகும்
விதியிவை விகலந் தூலஞ் சகலநிச் சயமு மாமே.

(இ - ள்) (ஸம்மியக்ஞானங்கள்), மதி - மதிஜ்ஜானமென்றும், சுதம் - ஸ்ருதஜ்ஞானமென்றும், அவதி - அவதிஜ்ஞானமென்றும், மாண்ட - மாட்சிமை பொருந்திய, மனப்பச்சம் - மனப்பரியயஜ்ஞானமென்றும், கேவலம் - கேவலஜ்ஞானமென்றும், ஆம் - இந்த ஐந்துரூலமாகிய, விதியவாம் - விதிப் பிரிவுகளையுடையவாகும், பமாணம் - இவைகளின் அளவுகளை, வேண்டின் - தனித்தனியாகச் சொல்லவேண்டினால், விகற்பங்கள்யாவும் - பலபல விகல்பங்களும், ஆகும் - ஆகும், மதி - மதிஜ்ஞானமும், சுதம் - சுருதஞானமும், பரோக்கமாகும் - பரோக்ஷ ஞானங்களாகும், மற்ற - அவதி மனப்பரியய கேவலஜ் ஞானங்களாகிய மற்றவைகள், பச்சக்கமாகும் - பிரத்தியக்ஷ ஞானங்களாகும், விதியிவை - விதித்த இவை, விகலம் - (அவதிஜ்ஞானம்) விகலப் பிரத்தியக்ஷமாகவும், தூலம் - (மனப்பரியயம்) ஸ்தூல பிரத்தியக்ஷமாகவும், சகல நிச்சயமும் - (கேவலஞானம்) ஸ்தூலமும் ஸூக்ஷ்மமுமாகியுள்ள ஸகல பதார்த்தங்களையும் அறிகின்ற நிச்சயப் பிரத்தியக்ஷமாகவும், ஆம் - ஆகும், எ - று. (உஎங)

1321. மதியினுங் கருத்து கண்கூ டிரண்டுமாம் விசேடம் பத்தாம்
விதியது கண்கூ டாகும் விசாரணை நீக்கந் தேற்றம்
மதிசுருதி சன்ஞை சிந்தை மற்றிவை பரோக்க மாகுஞ்
சுதமதன் முன்பு செல்லு மதியுநற் பரோக்க மாமே.

(இ - ள்) மதியினும் - மதிஜ்ஞானத்திலும், கருத்து - அர்த்தாவக்கிரகமென்றும், கண்கூடு - வியஞ்சனவக்கிரகமென்றும், இரண்டோம் - இரண்டுவிதங்களுமாகும், விதியது - இந்த விதியின், விசேடம் - விசேஷத்தினால், கண்கூடு - கண்கூடாக, (இவை) பத்தாம் - பத்துவிதமாகும், (அதாவது: ஸ்பரிச ரஸ கிராண சக்ஷு ஸ்ரோத்திரம் மனம் என்னும் இந்த ஆறுக்கும் தனித்தனியாக ஏற்பட்ட அருத்தவாக்கிரகம் ஆறோடு சக்ஷுவுக்கும் மனஸுக்கும் வியஞ்சனவக்கிரகமில்லை ஆகையால் அவை நீங்க மற்றவைகட்கு ஏற்பட்ட வியஞ்சனவக்கிரகம் நாலும்சேர அவக்கிரகபேதம் பத்துவிதமாம். (இனி அர்த்தாவக்கிரகத்துக்கு மேல்), விசாரணை - ஈகையென்றும், நீக்கம் - ஆவாயமென்றும், தேற்றம் - தாரணையென்றும், ஆகும் - ஸ்பரிசனாதி ஆறு இந்திரியங்கட்கும் தனித்தனி ஆகும், (ஆகவே இவை பதினெட்டாகும்; இவற்றோடு முன்சொன்ன அவக்கிரகங்களையும் கூட்ட இருபத்தெட்டாகும்; இவைகளை பகு, பகுவிதம், ஏகம், ஏகவிதம், க்ஷிப்பிரம், அக்ஷிப்ரம், நிஸ்ரதம், அனிஸ்ரதம், உக்தம், அனுக்தம், த்ருவம், அத்ருவம், என்னும் பன்னிரண்டில் கணிக்க மதிஜ்ஞானம் முந்நூற்று முப்பத்தாறு பேதமாகும்.) மற்று - பின்பு, இவை - இந்த ஞானவகைகள், மதி - மதியென்றும், சுருதி - ஸ்ம்ருதியென்றும், சன்ஞை - ஸஜ்ஞையென்றும், சிந்தை - சிந்தையென்றும், (ஆபினிபோதியென்றும், பரியாயப் பெயர்களுடையதாகி), பரோக்கமாகும் - பரோக்ஷ ஞானமே யாகும், அதன்முன்பு - அந்த மதிஜ்ஞானம் பூர்வகமாக, செல்லும் - உண்டாகிச் செல்லும், சுதமதியும் - சுருதஜ்ஞானமும், நல் - நன்மையாகிய, பரோக்கமாம் - பரோக்ஷ ஞானமாகும், எ - று.

இந்த மதிஜ்ஞான பேதங்களை, தத்துவார்த்த ஸூத்ரம் பிரதமாத்தியாயத்தில் ஒன்பதாவது ஸூத்ரம் முதலாக இருபதாவது ஸூத்ரம் வரைக்குமுள்ள, ஸர்வார்த்தஸித்தி, ஸுகபோதை, வியாக்கியானங்களிலும்; பதார்த்தஸாரத்தில் முப்பதாவது அதிகாரத்திலும் விரிவாகப் பார்த்துக்கொள்ளலாம். (உஎச)

1322. வைப்புநய னளவை வாயில் மார்க்கணை குணசீ வன்கள்
செப்பிய சுதத்திற் சென்று விகற்பமாஞ் சதாதி யோடு
மெய்ப்பட வுணர்வை தோற்றின் வினைகளைக் கெடுக்கு மென்று
பொய்ப்பறு பமாண மாகப் புண்ணியக் கிழவன் சொன்னான்.

(இ - ள்) வைப்பு - (நாம ஸ்தாபனா திரவிய பாவ ஸ்தன்யாஸஹா என்கிற நாலுவிதத்தினால் ஆகும்படியான) நிக்ஷேபமும், நயன் - (திரவியார்த்திக பரியாயார்த்திக நயங்களாலாகும் நைகம ஸங்கிரக வியவஹார ருஜுஸூத்ர சப்த ஸமபிரூட ஏவம்பூத நயாதிகளாலும், அத்தியாத்ம பாஷையாலும் ஏற்படும் உப சரிதானுப சரிதாஸத்பூத ஸத்பூத வியவஹார, சுத்த நிச்சய அசுத்த நிச்சயமாகிய) நயங்களும், அளவை - (திரவிய பிரமாண பாவப் பிரமாண பிரத்தியக்ஷ பிரமாண பரோக்ஷப் பிரமாண லௌகிகப் பிரமாண பாமார்த்தப் பிரமாணாதிகளா

லாகின்ற) பிரமாணமும், (ஆகிய) வாயில் - இந்த நிக்ஷேபநயப் பிரமாணத் துவாரா வாக, மார்க்கணை - (கதி, இந்திரிய, காய, யோக, வேத, கஷாய, ஞான, ஸம்யம, தரிசன, லேசியா, பவ்விய, சம்மியக்துவ, ஸஞ்ஞித்வ, ஆஹாரமுமாகிய சதுர்த்தச) மார்க்கணு ஸ்தானமும், குணம்-(மித்தியா திருஷ்டி, சாசாதன ஸம்மியக் திருஷ்டி, மிசிரன், அஸம்யதஸம்மியக் திருஷ்டி, தேசசம்யதன், பிரமத்தன், அப்பிரமத்தன், அபூர்வகரணன், அனிவிர்த்திகரணன், ஸூக்ஷ்மஸாம்பராயன், உபசாந்தகஷாயன், க்ஷீணகஷாயன், ஸயோகிகேவலி, அயோகிகேவலி என்கிற) சதுர்த்தசகுண ஸ்தானமும், சீவன்கள் (ஸூக்ஷ்ம ஏகேந்திரிய பரியாப்தி அபரியாப்தி, பாதர ஏகேந்திரிய பரியாப்தி அபரியாப்தி, த்வீந்திரிய பரியாப்தி அபரியாப்தி, த்ரீந்திரிய பரியாப்தி அபரியாப்தி, சதுரிந்திரிய பரியாப்தி அபரியாப்தி, அஸஞ்ஞி பஞ்சேந்திரிய பரியாப்தி அபரியாப்தி, ஸஞ்ஞி பஞ்சேந்திரிய பரியாப்தி அபரியாப்திகளாகிய) சதுர்த்தச ஜீவஸ்தானமும், (ஆகிய இவைகள்) சுதத்தில் - (கேவலஞ்ஞானியாகிய அரஹந்த பரம தேவனெனும் ஜினேந்திரனால் திவ்யத்வனியாகிற) சப்தத் துவாரத்தினால், செப்பிய - சொல்லப்பட்டன, இவை சென்று - அந்த சப்தத் துவாராவாக அடைந்து, (ஸ்ருதகேவலிகளாகிய பாவ சுருத ஞான ஸம்பூர்ணர்களான கணதராதி குருக்களால்), விகற்பமாம் - ஸவிகல்ப நிர்விகல்ப பேதமாகும் (அதாவது : திரவியாகமமாகி கிரந்தரசனைகளால் த்வாதசாங்க பரமாகமங்களாகச் சொல்லப்பட்டனவாகும்), சதாதியோடு - (ஸத் - ஸங்கியா - க்ஷேத்ர - ஸ்பரிசன - காலாந்தர - பாவ - அல்ப - பகுத்துவங்களென்னும்) ப்ரரூபணபாவனையோடு, மெய்ப்பட - உண்மையாக, உணர்வை - பாவசுருத ஞானமானது, தோற்றின் - கர்மோபசமகாலலப்தியினால் உண்டாகுமேயானால், வினைகளை - கர்மங்களை, கெடுக்குமென்று - (ஆத்மன்) க்ஷயஞ் செய்து பரமாத்ம ஸ்வரூபியாகுமென்று, பொய்ப்பறு - குற்றமற்ற, பமாணமாக - பிரமாணமாக, புண்ணியக் கிழவன் - தீர்த்தங்கரபரமதேவன், சொன்னான் - திவ்யத்வனியால் சொல்லிக் கணதராதியார்களுக்குத் தெரிவித்தான், எ - று.

இந்தப் பாடலில் சொல்லப்பட்ட நிக்ஷேப, நய பிரமாணங்களையும், மார்க்கணு ஸ்தான - குணஸ்தான - ஜீவஸ்தானங்களையும், ஸத்ஸங்கியாதிப்ரரூபணைகளையும், விவரமாக அறியவேண்டில், பதார்த்தஸாரம் - சர்வார்த்தஸித்தி - சுகபோதை - ப்ராப்ரதத்திரயம் - கோமட ஸாரமாதியாகிய நூல்களைப் பார்த்தும் குருமூலமாகக் கேட்டுக் பவ்வியர்கள் பிரயத்ன பூர்வகமாக அறிந்துகொள்ளக் கடமைப்பட்டு ஞானம் பெறுவது அத்தியாவசியம்.

'உணர்வை' என்பதில் ஐ - சாரியை. (உஎ௫)

1323. அங்கபுவ் வாதி நூல்க ளாகமம் பமாண மாகுஞ்
சிங்கிய மதிசு தங்கள் விபங்கமூந் தீய ஞான
மங்கவை மூடஞ் சந்தே யம்விப ரீத மாகுந்
தங்கிய சன்னிக் கிப்பாற் றுனெலா மூட மாமே.

(இ - ள்) அங்கபுவ்வாதிநூல்கள் - த்வாதசாங்கம் - சதுர்தச பூர்வம் முத லாகிய சாஸ்திரங்கள், ஆகமம் - கணதராதி குருக்களால் கிரந்த பூர்வகமாகச் செய் யப்பட்ட திரவியாகமங்களானவை, (ஆதலின்) பமாண மாகும் - சுருத ஞானப் பிரமாணமாகும், சிங்கிய - கர்மோதயத்தால் மாறுபாடாகிய, மதி - குமதியும், சுதங் கள் - குசுருதிகளும், விபங்கமும் - விபங்கமாகிய அவதியும், தீயஞானம் - மித் தியாஞானமாகும், அங்கவை - அவ்விடத்தில் அவைகள், மூடம் - மூடமென்றும், சந்தேயம் - சந்தேகமென்றும், விபரீதம் - விபரீதமென்றும், ஆகும் - மூன்றுவகை யாகும், தங்கிய - தரித்திராநின்ற, சன்னிக்கிப்பால் - ஸஜ்ஞிபஞ்சேந்திரிய ஜீவன் களுக்கு இப்பால், (தாழ்ந்துள்ள,) தான் எல்லாம் - அஸஜ்ஞிபஞ் சேந்திரிய ஜீவன் முதலாக உள்ள பதின்மூன்று வகை ஜீவஸ்தான ஜீவன்களெல்லாம், மூடமாம் - குமதி ஞானத்தையேயுடையனவாகும், எ - று.

இங்ஙனம் கூறியதனால் ஸஜ்ஞி ஜீவன்களில் கருமோபசமத்தால் ஸம்மியக் ஞானமும் கருமோதயத்தால் மித்தியா ஞானமும் வர்த்திக்கும், அஸஜ்ஞி ஜீவன்க ளெல்லாம் கருமோதயத்தினாலான மித்தியா ஞானங்களிலேயே வர்த்திக்கும்; ஆகையால் கருமோபசம க்ஷயோபசம க்ஷாயிக பரிணாமங்களின்றி ஸம்மியக்ஞானப் பிராப்தி யாகாதென்பது பெறப்படும்.

ஆறாவது ஸர்க்கம் 151 - வது பாடல் முதல், 164 - வது பாடல் வரைக்கும் ஸம்மியக்துவ லப்தமாகும்விதம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்மியக்துவ பூர்வக மாகத்தான் ஸம்மியக்ஞானம் ஏற்படும். பதார்த்தஸாரத்தில் 27 - வது அதிகாரத் தில் சம்மியக்துவத்தைப்பற்றிய விவரம் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

1324. அருத்தத்திற் காமத் தின்க ணவ்விரண் டகத்துஞ் சென்று
விருத்தத்தைத் தெளிவி லாமை விசதமா மூட மாகு
மொருத்துழிச் செறித லின்றி யுலாவல்சந் தேக மாகும்
விருத்தமா யுணர்தல் சொல்லல் விபரீத நயம தாமே.

(இ - ள்) (ஸஜ்ஞி பஞ்சேந்திரிய ஜீவன்களும்) அருத்தத்தில் - பொருள் களின் மேலும், காமத்தின்கண் - காமராகத்தினிடத்தும், அவ்விரண்டகத்தும் - அந்த அர்த்தம் காமமாகிய இரண்டிலும், சென்று - பரிணமித்துச் சென்று, விருத் தத்தை - இவ்விரண்டின் வேறாகிய தர்மத்தை, தெளிவிலாமை - தெரியாமல் நிற்பது, விசதமாம் - வெளியாகிய, மூடமாகும் - மித்தியாஞானமாகிய மயக்கமா கும், ஒருத்துழி - ஒருமித்தவிடத்தை, செறிதலின்றி - அடையாமல், உலாவல் - பலவிதமாக வியாபித்து தெளியாமல் உலாவுவது, சந்தேகமாகும் - சந்தேக ஞான மாகும், விருத்தமாயுணர்தல் - மாறுபாடாக அறிவதும், சொல்லல் - சொல்வதும், விபரீதநயமதாம் - விபரீத நயமாகும், எ - று.

இங்கு ஞானப்பிரமாணஞ் சுருக்கிச் சொல்லப்பட்டது. இன்னும் விரிவாக அறிய வேண்டுமோனால் ஞானார்ணவ முதலான கிரந்தாந்தரங்களைப் பார்த்துக் கொள்க. (உஎஎ)

1325. அராகாதி மான்க ளாத்த ரல்லவர் நல்ல ரென்றும்
விராகாதி யல்ல மார்க்கம் விகற்பத்தை விடுத லென்று
முரோகாதி யோம்ப லின்றி யுயிர்க்கொலை தரும மென்றும்
வராகாதிப் பிறவி யானே வையத்துக் கிறைவ னென்றும்.

(இ - ள்) அராகாதிமான்கள் - ராகத்வேஷ பரிணமன புத்தியையுடையவர்கள், ஆத்தர் - கடவுளாகிய முக்கியர்களென்றும், அல்லவர் - பாபத்தொழிலைப் புரியுமவர்கள், நல்லரென்றும் - நற்குணமுடையவர்களென்றும், விராகாதியல்ல மார்க்கம் - வைராக்கியபாவனையில்லாதராக மார்க்கமே, விகற்பத்தை - ஸம்ஸார விகல்பத்தை, விடுதலென்றும் - விட்டு நீக்குவதென்றும், உரோகாதி - ரோகம் முதலாகிய பீடைகளை, ஓம்பலின்றி - பரிகரித்து உபசரிக்காமல், உயிர்க்கொலை - ஜீவஹிம்சை பண்ணுதலே, தருமமென்றும் - தர்மமாகுமென்றும், காதி - காதி கர்மத்தினுடைய வசனாகி, வரா - சுழன்று சுழன்று வருகின்ற, பிறவியானே - ஜனனமரணமாகிய பிறப்புடையவனே, வையத்துக்கு - இவ்வுலகிற்கு, இறைவனென்றும் - நாதனென்றும், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (உஎஅ)

1326. விகாரமில் லொருவன் செய்கை யுலகத்தில் விகார மென்று
மவாவொடு மனையி னீங்கா தவரைமா தவர்க ளென்றுந்
தகாதன யாவுஞ் செய்ய வல்லவர் தலைவ ரென்றுந்
தொகாவிரி பொருள்க ளில்லை சூனிய மல்ல தென்றும்.

(இ - ள்) விகாரமில் - விகாரகுணங்களில்லாத, ஒருவன் - ஒருவனுடைய, செய்கை - செயல்களானவை, உலகத்தில் - லோகத்திலே, விகாரமென்றும் - விகாரமானதென்றும், அவாவொடு - ராகாதியோடு கூடி, மனையின் இல்வாழ்க்கையினின்றும், நீங்காதவரை - நீங்கி நிஸ்ஸங்கத்துவம் பொருந்தாதவர்களை, மாதவர்களென்றும் - மஹா தபஸ்விகளென்றும், தகாதனயாவும் - தகாத குரூர கிருத்தியங்களாகிய எல்லா ஹிம்ஸாதிகளையும், செய்ய வல்லவர் - செய்யும்படியான வல்லமையுடைய புருஷர்கள், தலைவரென்றும் - நாதர்களென்றும், சூன்ய மல்லது - ஸர்வ சூன்யமல்லாமல், தொகாவிரி - ஸாமான்ய விசேஷமாகிய, பொருள்கள் - ஜீவாதி பொருள்கள், இல்லை என்றும் - உலகத்தில் இல்லையென்றும், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (உஎகூ)

1327. தன்னைக்கொன் றுயிரை யோம்பல் தக்கநற் கருணை யென்றும்
பின்னைத்தா னூனை யுண்கை பெருந்தவ மாவ தென்று
முன்னிற்றான் கணத்தி யாவு மொட்டறக் கெடுமென் றோதிப்
பின்னைத்தா னித்த முத்திக் குழக்கெனப் பேசலாமே.

(இ - ள்) தன்னைக்கொன்று - தன்னை ஹிம்ஸித்து, உயிரையோம்பல் - பிற ஜீவன்களை ரக்ஷிக்கின்றது, தக்க - தகுதியாகிய, நல் - நன்மையாகிய, கருணை யென்றும் - தயவாகுமென்றும், பின்னை - பிறகு, தான் - தானே, ஊனை யுண்கை - மாமிசம் பொசித்தலே, பெரும் - பெரிதாகிய, தவமாவது - தபஸாகப்பட்டது, என்றும் - என்றும், உன்னில் - யோசிக்குமிடத்தில், தான் - ஆத்மனானது, கணத்து - ஸமயத்தில், யாவும் - முழுதிலும், ஒட்டற - பற்றற, கெடுமென்று - ஸர்வதா நாசமாகுமென்றும், ஓதி - சொல்லி, பின்னை - பிறகு, தான் - ஆத்மன் தான், நித்தம் - நித்தியமாகிய, முத்திக்கு - மோட்சத்திற்கு, உழக்கென - உத்ஸாஹித்துச்செல்லுமென்றும், பேசல் பேசுவதும், ஆம் ஆகுமென்றும், எ - று.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். (உ௲௦)

1328. அறிவினே வீடா மன்றி யாசாரத் தாகு மன்றி
யிறைவனற் காத லாலா மிவ்விரண் டாலு மாகு
நெறிமுத்திக் கில்லை நித்தம் முத்தனே சீவ னென்றும்
அறிவின்மை நன்றே யென்று மழைத்தலாம் பிழைத்த நீதி.

(இ - ள்) அறிவினே - ஞானத்தாலேயே, வீடாம்-மோக்ஷமாகும், அன்றி- அது வல்லாமல், ஆசாரத்து - ஆசாரத்தினாலே, ஆகும் - மோட்சமாகும், அன்றி - அது வல்லாமல், இறைவன் - ஸ்வாமியின் மேலுண்டாகிய, நல் - நன்மையாகிய, காதலால் - பக்தியினாலேயே, ஆம் - ஆகும், இவ்விரண்டாலும் - இந்த ஆசாரம் பக்திகளாகிய இரண்டினாலேயே, ஆகும் - ஆகும், முத்திக்கு - மோட்சத்திற்கு, நெறி - வழி, இல்லை வேறொன்றில்லை, சீவன் - ஜீவன், நித்தம் - நித்தியமும், முத்தனே - முக்த ஸ்வரூபனே, என்றும் - என்றும், அறிவின்மை-அஜ்ஞானமே, நன்று - நல்லது, என்றும் - என்றும், அழைத்தல் - சொல்லுகின்றது முதலானவைகள், பிழைத்த நீதி ஆம் - மித்தியா நீதி ஆகும், எ - று. (உ௲௧)

1329. இறைவமற்றென்கொ லேது வினைமன்னர் மிகுதற் றென்றங்
கறைகழ லரசர் கேட்டா ரருந்தவ ருரைக்க லுற்று
நெறியினு லெட்டுந் தத்த நிமித்தத்தை நிறையப் பெற்றுச்
செறியமிக் கல்ல தீன மாமது செப்பக் கேண்மின்.

(இ - ள்) இறைவ ஸ்வாமியே!, வினை மன்னர் - கர்மமாகிற ராஜாக்கள், யிருதற்கு - ஆத்மனிடத்தில் வந்து யிருந்து பந்திப்பதற்கு, ஏது - காரணமானது, என்கொல் என்று - என்ன காரணம் என்று, அங்கு - அப்பொழுது, அறை - சப்தியாநின்ற, கழல் - வீரகண்டயத்தை யணிந்த, அரசர்-இராஜாக்கள், கேட்டார்-வினவினார்கள், அருந்தவர் - மேருமந்தர கணதரர்கள், உரைக்கலுற்று - சொல்லத் தொடங்கி, எட்டும் - ஞானவரணாதியஷ்ட கர்மங்களும், நெறியினால் - கிரமத்தினால், தத்தம் - தங்கள் தங்களின், நிமித்தத்தை - காரணமாகிய அசுத்த சேதன பரிணமத்தை, நிறையப்பெற்று - நிறைதலாகப் பெற்று, செறிய - ஆத்மனிடத்தில் சேர்ந்ததனாலே, மிக்கு - அதிகாஸ்ரவமாகியும், அல்லது - அல்லாமல், ஈனம் - ஹீனாஸ்ரவமாகியும், ஆம் பந்தமாகும், அது - அந்தக்கர்மாஸ்ரவ காரணமான பரிணமத்தை, செப்ப - சொல்ல, கேண்மின் - கேளுங்கள், எ - று. (உ௮உ)

1330. பரமனூல் பழித்தல் மாய்த்த லிடையுறல் பிழைக்க வோதல்
குரவர்மா றுதல் சுருதங் கொண்டுழி கரத்தற் றீநூன்
மருவுதல் துவர்க ணான்கின் ஞானமாச் சரிய முற்றும்
பெருகிலா வரண ஞானக் காட்சியைப் பிணிக்கு மிக்கே.

(இ - ள்) பரமன் - அஷ்டாதசதோஷரஹிதனான ஜினேந்திரனெனும் அரஹந்த பரமதேவனது (அதாவது: அவனால் சொல்லப்பட்ட), நூல் - (திவ்விய பாஷாவாக் பிரவர்த்தியாகி கணதரரசித த்வாதசாங்காதி) பரமாகமங்களை, பழித்தல் - நிந்திப்பதும், மாய்த்தல் - நாசஞ் செய்தலும், இடையுறல் - விக்கினம் பண்ணுவதும், பிழைக்கவோதல் - அதன் கருத்துக்களை மாறுபாடாகச் சொல்லுவதும், குரவர் மாறுதல் - ஆசாரிய உபாத்தியாயாதி சுருதகுருக்களை மாறுபாடாகத் தூஷிப்பதும், சுருதங்கொண்டுழி - ஆகமத்தை வைத்துக்கொண்டிருந்த விடத்தும், கரத்தல் - வஞ்சனை செய்து பவ்வியோபகாரமாகச் செய்யாமல் மறைத்து விடுவதும், தீ நூல் மருவுதல் - மித்தியாவாகிய சாஸ்திரங்களைச் சேர்வதும், துவர்கள் நான்கில் - குரோத மான மாயா லோபங்க ளென்னும் நான்கில், ஞானம்-சம்மியக் ஞானத்தின் மேல், மாச்சரியம் - பகையாவதும், (ஆகிய) முற்றும் - இவையாவும், பெருகில் - விருத்தியாகுமேயானால், (அதனாலே), ஆவரண ஞானக்காட்சியை - ஞானவரணீய தர்சனவரணீய மென்கிற கருமங்களை, மிக்கு - மிகுதியாக பிணிக்கும் - ஆஸ்ரவமாகி ஆத்மனிடத்தில் பந்திக்கும். எ - று. (உ௮௩)

1331. தன்முத லுயிரைக் கோறல் வருத்துதல் படைக ளேந்தி
யின்னுயிர் நடுங்கச் சேற லெளியிட லுறப்ப றுத்தல்
வின்முத லீத லுள்ளம் வருந்தவெந் துயரைச் செய்தல்
இன்னவை யிடரை யீனு மசாதவே தத்தை யீட்டும்.

(இ - ள்) தன்முதல் - தான் முதலாகிய, உயிரை - ஜீவன்களை, கோறல் - கொலை செய்கின்றதும், வருத்துதல் - உபஸர்க்கஞ் செய்தலும், படைகள் - ஆயுதங்களை, ஏந்தி - தரித்து, இன் - இனிமையாகிய, உயிர் - இதர ஜீவன்கள், நடுங்க - நடுக்கத்தை யடையும்படியாக, சேறல் - வேட்டை முதலானவையாகிய தொழில்களில் செல்லுதலும், எரியிடல் - அக்கினியிட்டுக் கொளுத்துவதும், உறுப்பு - அவயவங்களை, அறுத்தல் - சேதிப்பதும், வில்முதல் - வில்முதலாகிய கருவிகளை, ஈதல் - கொடுப்பதும், உள்ளம் வருந்த - பிற ஜீவன்கள் மனம் வருந்தும்படியாக, வெம் - வெப்பம் பொருந்திய, துயரை - துன்பங்களை, செய்தல் - செய்கின்றதும், (ஆகிய) இன்னவை - இப்படிப்பட்ட, குரூரசித்த - குரூரகிருத்தியங்கள், இடரையீனும் - துன்பத்தைத் தரும்படியான, அசாத வேதத்தை - அசாத வேதனீய கருமத்தை, ஈட்டும் - ஆத்மனிடத்தில் பந்திக்கும், எ - று. ()

1332. உரைசெய்த குணங்க ளின்றிக் கருணையை யுள்ளிட் டேழு
மருவிய மனத்தி னார்க ளுயிர்களின் வருத்த மோம்பித்
தருநயத் தால்வந் தெய்துந் துன்பத்தைத் துணிய நூறிப்
பெரியவின் பத்தை யாக்குஞ் சாதந்தான் பிணிக்கு மிக்கே.

(இ - ள்) உரைசெய்த - சொல்லப்பட்ட, குணங்கள் - குரூர குணங்கள், இன்றி - இல்லாமல், (ஸமதாகுணமாகி), கருணையை - ஜீவதயாபரிணதியை, உள்ளிட்டு - சேர்ந்து, ஏழு - (காருண்யம், பிரஸன்னபாவம், குணானுராகம், தருமத்தியானப் பிரவர்த்தி, பிரசஸ்த பிரவர்த்தி, ஸம்மியக்ஞானம், தபோனுப்பிரயோகமாகிய) ஸத்பரிணாமங்களை, மருவிய - சேர்ந்த, மனத்தினார்கள் - மனதுடையவர்கள், உயிர்களின் - ஜீவன்களின், வருத்தம் - உபஸர்க்காதி கஷ்டங்களை, ஓம்பி - சக்தியானுஸாரத்தினால் நீக்கி, தரு நயத்தால் - மித்தியா நயத்தால், வந்தெய்தும் - வந்தடைகின்ற, துன்பத்தை - துக்கத்தை, துணிய நூறி-கெடும்படியாக விலக்க, மிக்கு - மிகுதியாக, பெரிய வின்பத்தை - பெரிதாகிய அனந்த ஸௌக்கியாதிகளை, ஆக்கும் - உண்டாக்கும்படியாகிய, சாதந்தான் - ஸாதவேதனீய கர்மமானது, பிணிக்கும் - பந்திக்கும், எ - று. (உஅ௫)

1333. அருகனா லயங்க ணூல்க ளறநெறி தமக்கு மாறாய்ப்
பொருள்கடே றுது மாறும் பொருளுரைத் தருக னாதிப்
பெருமையைப் பொறாது குற்றம் பிறங்கினர் தமையி றைஞ்சல்
மருவுமிச் சத்த மட்டி நெறிமயக் குறுக்கு மிக்கே.

(இ - ள்) அருகன் - (காதிகர்மாஹித அனந்தஞான சகிதவீதராக அர்ஹந்த பரமதேவனான) ஜினநாதனும், ஆலயங்கள் - ஜினாலயங்களும், நூல்கள் - ஜினேந்திரப்பிரணீத ஆகமங்களும், அறநெறி தமக்கு - ஜினதர்ம மார்க்கமும், (ஆகிய) 5, மாறாய் - விரோதமாகியும், பொருள்கள் - (ஆப்த ஆகம பதார்த்த

முதலாகிய) பொருள்களை, தேருது - யதாஸ்வரூப மறியாமல், மாறும் - மாறு பாடாகிய, பொருள் - பொருள்களை, உரைத்து - சொல்லி, அருகனுகிப்பெரு மையை - ஜினேந்திரன் முதலாகிய பஞ்சபரமேஷ்டிகளாகிய ஆப்தர்களின் குண மஹாத்மியத்தை, பொருறு - ஸஹிக்காமல், குற்றம் பிறங்கினுர்தமை - ராகத்வேஷ மோஹத்தோடு கூடி நின்றவர்களை, இறைஞ்சல் - வணங்குவதும், (ஆகிய இப்பரி ணமங்களினுலே), மிக்கு-மிகவும், நெறிமயக்குறுக்கும் - ஸம்மியக்த்வ மார்க்கத்தை மயங்கச்செய்யும்படியான, மிச்சத்தமட்டி - மித்தியாத்துவ மென்னும் தர்சன மோஹனீய பிரகிருதியானது, மருவும் - ஆத்மனிடத்தில் பந்திக்கும், எ - று. ()

1334. ஒழுக்கத்தை யழித்தல் காயத் தூர்வன நிற்ப தம்மை
யழித்திடல் கிளையிற் சேர்த னீக்குத லாதி யாலும்
வழுக்கிலாச் செற்ற மார்வ மயக்கமா மையைந் தானு
மொழுக்கத்தை யழிக்கும் மோகமுடன் வந்து பிணிக்கு மிக்கே.

(இ - ள்) ஒழுக்கத்தை - சத்சாரித்திரத்தை, அழித்தல் - கெடுப்பது, காயத்து - சரீரங்களோடு கூடி, ஊர்வன நிற்பதம்மை - திரஸ ஸ்தாவர ஜீவவர்க் கங்களை, அழித்திடல் - ஹிம்ஸித்தல், கிளையிற் சேர்தனீக்குதல் - அவையவை களின் கூட்டங்களையடைய வொட்டாமல் தடுத்தல், ஆதியாலும் - முதலாகிய துஷ்பரிணமகிருத்தியத்தாலும், வழுக்கிலா - நீங்குதலில்லாத, செற்றம் - த்வேஷ மும், ஆர்வம் - ராகமும், மயக்கமாம் - மோஹமுமாகிய, ஐயைந்தானும் - இரு பத்தைந்து விதமாகிய கஷாயாகஷாய பரிணம சாரித்திரமோஹோதயத்தாலும், ஒழுக்கத்தை யழிக்கும் - சாரித்திரத்தைக் கெடுக்கும்படியான, மோகம் - சாரித் திரமோஹனீயப் பிரக்கிருதிகள், உடன் - ஒரு தன்மையாக, மிக்கு - மிகுதியாக, பிணிக்கும் - பந்திக்கும், எ - று. (உஅஎ)

1335 மருள்செய்யும் வினைமுன் னெட்டின் மாற்ருெணு வுதயத் தாலும்
பொருள்கொலை களவு பொய்யிற் புரிந்தெழு முவகை யாலுந்
திரிவிதத் தீயி லேச்சை முறுக்கிப்பே ராரம் பத்து
மருவுமா னிரைய வாயு மாற்ருெணு வுதயத் தாலே.

(இ - ள்) முன் - அனுதியாகவே, (பந்தித்து நின்று) மருள் செய்யும் - ஆத்மகுணத்திற்கு மயக்கத்தைச் செய்யும், வினை எட்டின் - அந்த அஷ்டவித கருமங்களினுடைய, மாற்ருெணு - நீக்க முடியாத, உதயத்தாலும் - உதயத்தாலும், பொருள் - பரிக்கிரக வாஞ்சையும், கொலை - ஜீவவதையும், களவு - திருட்டும், பொய்யில் - அசத்தியமும் ஆகிய இவைகளில், புரிந்து - விரும்பி, எழும் - எழு கின்ற, உவகையாலும் - ஸந்தோஷத்தினுலும், திரிவிதத் தீயிலேச்சை - (கிருஷ்ண நீல கபோதமென்கிற) அசுபலேசியா பரிணமத் திரயத்தினுலும், முறுக்கி - பல மாகி, பேராரம்பத்து - பகுவாரம்ப பரிக்கிரகத்தினுலும், மாற்ருெணு - நீக்க முடி

யாத, உதயத்தாலே - உதையத்தினால், மாஙிரவாயு - பெரிய துன்பத்தைச் செய்யும்படியான நரகாயுஷ்ய கர்மமானது, மருவும் - ஆத்மனிடத்தில் பந்திக்கும், எ-று.

1336. வஞ்சனை மனத்து வைத்து வாக்கொடு காயம் வேறாய்
நஞ்சென வொழுக்கம் பற்றி நல்லொழுக் கழிந்த லாலு
மெஞ்சிடா மூட மாதி மூன்றமிச் சுதயத் தாலுஞ்
செஞ்செவ்வெவ் விலங்கி லுய்க்கு மாயுகஞ் செறிக்கு மிக்கே.

(இ - ள்) வஞ்சனை - கபடத்தை, மனத்து-மனதில், வைத்து - வைத்துக்கொண்டு, வாக்கொடு - வசனத்தோடு, காயம் - சரீரமும், வேறாய் - வேறாகி, நஞ்சென - விஷம்போன்று பொல்லாங்காகிய, ஒழுக்கம் - ஹிம்ஸாதிதுச்சாரித்திரத்தை, பற்றி - பொருந்தி, நல்லொழுக்கு - அஹிம்ஸாதிசத் சாரித்திரத்தை, அழித்தலாலும் - கெடுப்பதினாலும், எஞ்சிடா - குறைவில்லாத, மூடமூன்று - (லோக தேவ பாஷண்டமாகிய) திரிமூடங்கள், ஆதி - முதலாகிய, மிச்சு - மித்தியாத்துவகர்மத்தினுடைய, உதயத்தாலும் - உதயவசத்தினாலும், செஞ்செவ்வெவ் விலங்கில் - ஸஜ்ஞி அஸஜ்ஞிகளாகிய திரியக்கதிகளிலே, உய்க்கும் - செலுத்தும்படியான, ஆயுகம் - திரியக்காயுஷ்யகர்மமானது, மிக்கு - மிகுதியாக, செறிக்கும் - பந்திக்கும், எ - று. (உ௩௯)

1337. மெய்ம்மையாந் தெளிவி லாகும் வென்றவர் குணத்து ளார்வஞ்
செம்மைவான் கருணை மெய்ம்மை சிந்தையுட் கலக்க மின்மை
யிம்மையாம் போகம் வேண்டா முனிவர்கட் கீத லாதி
தம்மினும் போக பூமி மக்களா யுகங்க டாமே.

(இ - ள்) மெய்ம்மையாம் தெளிவில் - உண்மை ஸ்வரூபத்தையறியும்படியான ஸம்மியக்தரிசன சுத்தியினாலே, ஆகும் - ஆகின்ற, வென்றவர் - காதி அகாதி கர்மங்களை ஜெயித்தவர்களாகிய அரஹந்த ஸித்த பரமேஷ்டிகளின் மேலும், குணத்துள் - நிச்சய வியவஹார ரத்தினத்திரய குணங்களின் மேலும், (ஆகின்ற), ஆர்வம் - பக்தியும், செம்மை - நடுவுநிலைமையும், வான் கருணை - ஹேயோபாதேய விஜ்ஞான தயவும், மெய்ம்மை-ஸம்மியக்த்துவதிடமும், சிந்தையுள் - மனதுள், கலக்கமின்மை - கலங்காத தர்மத்தியான சுக்லத்தியானுதி ஸத்பாவனையும், இம்மை - இஹஜன்மத்து, ஆம் - ஆகின்ற, போகம் - இந்திரிய விஷய போகங்களை, வேண்டா - இச்சிக்காது வைராக்யபாவனுதத்பரர்களாகிய, முனிவர்கட்கு - முனிவரர் முதலாகிய கணங்களுக்கு, ஈதல் - ஆஹார ஔஷத ஆவாஸ சாஸ்திராதி தானங்களைக் கொடுப்பதும், ஆதிதம்மின் - முதலாகிய தான பூஜாதப சீலபரிணாமாதிகள், ஆம் - ஆகின்ற, போக பூமி மக்களாயுகங்களாம் - போக பூமி மனுஷ்யாயுஷ்ய கர்மங்களை பந்திக்கும் காரணங்களாகும், எ - று. ()

1338. உரைத்தவிக் குணங்கள் மாய மொன்றிடி லந்தப் பூமி
திரிக்கய வாயு வாகுஞ் செப்பிய குணங்கள் மாயம்
பொருத்தமில் லாத போது மந்தமத் திமங்க ளாகில்
வருத்தமில் கரும பூமி மக்களா யுகங்க ளாமே.

(இ - ள்) உரைத்த - சொல்லப்பட்ட, இக்குணங்கள் - இந்த தர்சன விசுத்தியாதி ஸம்மியக்துவ ஸத்குணங்கள், மாயம் மாயாச்சாரத்தை, ஒன்றிடில் - பொருந்தினல், அந்தப் பூமி - அந்த போகபூமியில், திரிக்கய வாயுவாகும் - திரியக்காயுஷ்ய காரணமாகும், செப்பிய - சொல்லப்பட்ட, குணங்கள் - இந்த ஸத்குண பாவனைகளில், மாயம் பொருத்தமில்லாதபோது - மாயாச்சாரமில்லாத காலத்தில், மந்தம்மத்திமங்களாகில் - பரிணமங்கள் உத்கிருஷ்டமில்லாமல் மிருதுதர மத்தியதரமாகில், வருத்தமில் - ஸுகாகரமாகிய, கரும பூமிமக்களாயுகங்கள் - கர்ம பூமி மனுஷ்யாயுஷ்ய கர்மங்கள், ஆம் - பந்தமாகும், எ - று. (உகக)

1339. அறத்தெழு விருப்பி னுை மான்றநற் காட்சி யாலும்
வெறுத்தெழு மனத்தி னுலும் மிக்கநற் பொறையி னுலுஞ்
சிறப்புடைச் சமத்தி னுலும் தேவர சாக்கும் பூமி
பிறப்பினைச் சமைக்கு மக்க ளாயுகம் பிணிக்கு மிக்கே.

(இ - ள்) அறத்தெழும் - தர்மத்தியானத்தில் உண்டாகிய, விருப்பினுலும் - பிரீதியினுலும், ஆன்ற - மேன்மையாகிய, நற்காட்சியாலும் - ஸம்மியக் தரிசனத்தினுலும், வெறுத்தெழுமனத்தினுலும் - ஸம்ஸார விஷயசுகதுக்கங்களில் விராக பாவனை செய்யும் மனத்தாலும், மிக்க நற்பொறையினுலும் - மிகுந்த நல்ல க்ஷமையினுலும், சிறப்புடை - மேம்பாடுடைய, சமத்தினுலும் - சமத்வீபாவத்தினுலும், தேவரசாக்கும் - தேவர்களுக்கெல்லாம் நாதனுகும்படியான, தன்மையை உண்டாக்கும், பூமி - தர்மக்ஷேத்திரத்தில், பிறப்பினை - பிறக்கும்படியான (அதாவது: ஸ்வாமித்துவம் ஆகும்படியான) சரமதேஹப்பிறப்பை, சமைக்கும் - உண்டாக்கும்படியான, மக்களாயுகம் - திவ்விய மனுஷ்யாயுஷ்யமானது, மிக்கு - உத்கிருஷ்டமாக, பிணிக்கும் - பந்திக்கும், எ - று. (உகஉ)

1340. நெறியிவைப் பெறுதா ரந்த நிலத்துள விலங்கு மாவார்
அறிவொன்று முதல்வி லங்குந் தெளிவிலா மனித ராகு
மறுவிலாந் தெளிவி னுலே வாயுதே யுக்கள் சென்று
செறியுமைம் பொறிவி லங்கில் சிறியதோர் கருணை யாலும்.

(இ - ள்) நெறியிவை - இந்த நெறிகளை, பெறுதார் - அடையாதவர்கள், சிறியதோர் கருணையாலும் - அற்பகுண தயவினுல், அந்த நிலத்துள விலங்கு

மாவார் - அந்த கர்ம பூமியில் திரியக் காயுஷ்யபந்த காரணமாவார்கள், அறிவொன்று முதல் விலங்கும் - ஏகேந்திரிய முதலாகச் சதுரிந்திரியம் வரையிலுள்ள விலங்குகள், மறுவிலாத்தெளிவினாலே - மோஹபகுளத்தினாலாகிய சேதனு வாஸனையினால், தெளிவிலா மனிதராகும் - நீசமனுஷ்யாயுஷ்ய கர்மமும் பந்திக்கும், வாயுதேயுக்கள் - அந்த ஏகேந்திரியத்திலும் வாதகாயிகதேஜஸ் காயிகஜீவன்கள், (தங்கள் மோஹபகுளத்தினால்), செறியுமைம்பொறி விலங்கில் - நீசமனுஷ்யாயுஷ்யங்கூட கட்டாமல் ஏதோ ஒருக்கால் பஞ்சேந்திரிய அஸஞ்ஞி விலங்காயுஷ்ய கர்மத்தில், ஆகும் - பந்திக்கும், எ - று.

உம்மைகள் - அசைப்பொருளன. 'ஆகும்' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (உ௬௩)

1341. விரதமில் காட்சி தீமை விரவிய வொழுக்க மார்வ
மருவிய சரிதங் குத்தி சமிதைபன் னிரண்டு சிந்தை
தருமமுந் தவமுந் தேவ ராயுகந் தன்னை யாக்கும்
விரதசீ லங்கள் மிச்சம் விரவின தாலு மாமே.

(இ - ள்) விரதமில் காட்சி - அஸம்மியத ஸம்மியக்த்துவமும், தீமை விரவிய வொழுக்கம் - ஹேயோபாதேய விஜ்ஞானமில்லாத அஜ்ஞான சாரித்திரமும், ஆர்வமருவிய சரிதம் - இந்திரிய விஷயபோக வாஞ்சையை விரும்பிய காமியார்த்தியாக பூஜாதபவிரதாதிகளாகிய சரியையும், குத்தி - திரிகுப்தியும், சமிதை - பஞ்சசமிதிகளும், பன்னிரண்டு சிந்தை - த்வாதசானுப்பிரேக்ஷா பாவனையும், தருமமும் - தசதர்மதத்பரத்துவமும், தவமும் - பாஹியாப்பியந்தர பேத தபோனுப் பிரயோகமும், தேவராயுகந்தன்னை ஆக்கும் - உத்தம மத்திம ஜகன்னிய பேதமாகிய தேவாயுஷ்ய கர்மத்தை உண்டாக்கும், மிச்சம் விரவினது - ஸம்மியக்துவ ரஹித மித்தியாத்துவ ஸஹிதமாகியதான, விரத சீலங்களாலும் - விரத சீலாச்சாராதிகள் ஆகியவைகளாலும் (அதாவது : இப்பரிணாமங்களின் தீவ்ர மந்ததாத்தின் தரதமமாகவும்), ஆம் - இது பந்திக்குங் காரணமாகும், எ-று (௩௪௪)

1342. நற்குணம் பொறுமை தீய கதைகளை நவிற்ற னல்ல
சொற்களை யுறழ்தல் தூய வொழுக்கின்மை துயர மெய்தல்
குற்றத்தால் மனோவாக் காயங் கோட்டம் பொல் லாச்சி ரிப்பும்
மற்றிவை பழித்தல் நாமம் பிணித்தலுக் கேதுவாமே.

(இ - ள்) நற்குணம் - ஸம்மியக்த்துவாதி குணங்களை, பொறுமை - ஸஹிக்கமுடியாமையும், தீயகதைகளை - பொல்லாங்காகிய சரித்திரங்களை, நவிற்றல் - சொல்வதும், நல்லசொற்களை - தர்மவசனங்களை, உறழ்தல் - நீக்கிவிடுவதும், தூயவொழுக்கின்மை - ஸத்சாரித்திர மில்லாது துச்சாரித்திர பிர

வர்த்தியும், துயரமெய்தல் - துக்கமடைதலும், குற்றத்தால் - ராகத்துவேஷாதிக ளால், மனோவாக்காயங்கோட்டம் - மனவசனகாய மாறுபாடும், பொல்லாச்சிரிப்பும் - பொல்லாங்கை உண்டுபண்ணும் ஹாஸ்யமும், (ஆகிய), இவை - இவைமுதலாகிய பரிணாமாதிகள், பழித்தல் நாமம் - அசுபநாமகர்மம், பிணித்தலுக்கு - பந்திப் பதற்கு, ஏதுவாம் - காரணமாகும், எ - று.

மற்று - அசை. (உகரு)

வேறு.

1343. தூய காட்சியுஞ் சுருக்கமில் வினயமு மிறப்பிலா வதஞ்சீல
மாய நல்லுப யோகமும் வேக மாற்றிய தவந் தியாகஞ்
சாய றிந்துசெய் சமாதிவை யாவச்ச மாவச்சந் தாழ்வின்மை
மாய மின்னெறி விளக்கலுந் துளக்கின்றி யறத்துவச் சளத்தாழும்.

(இ - ள்) தூயகாட்சியும் - தர்சனவிசுத்தியும், சுருக்கமில் - குறைவில்லாத, வினயமும் - சதுர்வித விநயமும், இறப்பிலா - அதிசாரமில்லாத, வதம் சீலம் - சீலவிரதேஷு அனதீசாரமும், ஆய - ஆகிய, நல் - நன்மையாகிய, உபயோகமும் - அபீக்ஷண ஞானோபயோகமும், வேகம் - ஸம்வேகமும், ஆற்றியதவந்தியாகம் - சக்தித தபஸும் சக்தித தியாகமும், சாயறிந்து - ஸன்மார்க்கமறிந்து, செய் - செய்கின்ற, சமாதி - ஸாது ஸமாதியும், வையாவச்சம் - வையாப்பிரத்திய கரண மும், ஆவச்சம் - ஆவசியகா பரிஹாணியில், தாழ்வின்மை - தளராது செய்கின்ற தன்மையும், மாயமில் - மாயாச்சாரமில்லாத, நெறிவிளக்கலும் - மார்க்கப்பிரபாவன மும், துளக்கின்றி - சலனமில்லாமல், அறத்துவச்சளத்தாழும் - பிரவசன வத் ஸலத்துவமும், எ - று. (உகசு)

1344. அறிவ னாகம மாசரி யன்பல சுருதிவ லாரன்புஞ்
செறிய நின்றிடுந் தீர்த்தக ரத்துவஞ் செய்யுநற் றிருநாமம்
மறுவி லிக்குண நல்லநற் குணத்தினில் வையகத் துயிர்நம்மைக்
குறுகு நாமங்க ணல்லவை சாலவுங் குணநல்ல வைகளாலே.

(இ - ள்) அறிவன் ஆகமம் ஆசரியன் பலசுருதிவலாரன்பும் - அருகத் பக்தியும் பிரவசனபக்தியும் ஆசாரியபக்தியும் பகுசுருதபக்தியும் (ஆகிய இந்த ஷோடசபாவனா பரிணாம பூர்த்தியானது), தீர்த்தகரத்துவம் - தீர்த்தகரநாம மஹா புண்ணியகர்மம், செறியநின்றிடும் - பந்திக்கின்றதற்குக் காரணமாகி நிற்கும், (அதுவல்லாமலும்), நல் - நன்மையாகிய, திரு - அழகிய, நாமம் - சுபநாமப் பிர கிருதிகள், மறுவில் - குற்றமில்லாத, இக்குணம் - இப்போது சொன்ன குண மாகிய, நல்ல-நன்மையாகிய, நற்குணத்தினில் - சுபகுணத்தினாலும், வையகத்து-

இவ்வுலகத்தில், உயிர்தம்மை - ஜீவன்களை, குண நல்லவைகளாலே - சற்குண பாவனையாலே, சாலவும் - மிகவும், நல்லவை நாமங்கள் - சுபநாமகர்மங்கள், குறுகும்- ஆத்மனிடத்தில் அடையும், எ - று. (உகஎ)

வேறு.

1345. பிறர்களைப் பழித்துத் தன்னைப் புகழ்ந்துடன் பிறர்க ணின்ற
மறுவிலாக் குணத்தை மாய்த்துத் தீக்குணம் பரப்பி மாறாய்
நிறைவிலா நீச மாய வொழுக்கத்தைப் புகழ்ந்து நல்லோர்
நிறையுலா வொழுக்கங் காய்ந்தார் நீசகோத் திரம தாகும்.

(இ - ள்) பிறர்களை - அன்னியர்களை, பழித்து - நிந்தித்து, தன்னை - தன்னை, புகழ்ந்து - புகழ்ச்சிசெய்து, உடன் - உடனே, பிறர் கண்ணின்ற - அய லார்களிடத்துள்ள, மறுவிலா - களங்கமில்லாத, குணத்தை - ஸத்குணத்தை, மாய்த்து - கெடுத்து, தீக்குணம் - பொல்லாங்காகிய குணத்தை, பரப்பி - விசால மாக உண்டுபண்ணி, மாறாய் - மாறுபாடாய், நிறைவிலா - நன்மையில்லாத, நீச மாயவொழுக்கத்தை - கெட்ட நடத்தையை, புகழ்ந்து - துதித்து விரும்பி, நல் லோர் - பெரியோர்களேயும், நிறையுலா - நிறைவுபெற்று வியாபித்த, நல்லொழுக் கம் - ஸத்சாரித்திரத்தையும், காய்ந்தார் - கோபித்தவர்களுக்கு, நீசகோத்திரமது - நீசகோத்திர கர்மமானது, ஆம் - பந்திக்குங் காரணமாகும், எ - று. (உகஅ)

1346. அறைந்தவிக் குணத்தின் மாறா யறிவனை யுள்ளிட் டாரை
யிறைஞ்சிநின் றொழுகல் தன்னை யிழித்தல்பார்த் துண்ட னல்ல
வறம்புகழ்ந் திடுத றன்னைப் பொக்கஞ்செய் யாமை தம்மாற்
பிறந்துல கிறைஞ்ச நிற்குங் கோத்திரஞ் செறியு மென்றான்.

(இ - ள்) அறைந்த - சொல்லப்பட்ட, இக்குணத்தின் - இந்த துர்க்குணங் களினின்றும், மாறாய் - வேறாகி, அறிவனை - அனந்த ஞானஸ்வரூபனான அர ஹந்த ஸித்த பரமாத்மனையும், உள்ளிட்டாரை - அவர்களைத் தியானிக்கின்ற ஆசாரியாதி மூவகையான அந்தராத்மர்களையும், (அதாவது: பஞ்ச பரமேஷ்டி களையும்), இறைஞ்சிநின்று - வணங்கிநின்று, ஒழுகல் - நடப்பதும், தன்னையிழித் தல் - தன்னை நிந்தித்தலும், பார்த்துண்டல் - மஹா முனிவராதியார் பிக்ஷாடன மாகவரும் வேளையைப்பார்த்து அக்காலம் கடந்து தான் பொசிப்பதும், நல்லவறம்- அஹிம்ஸாதியாகிய தயா தருமத்தை, புகழ்ந்திடுதல் - விரும்புவதும், தன்னை பொக்கஞ்செய்யாமை தம்மால் - தன்னை அலங்கரித்துப் பொலிவுபண்ணுமையும் ஆகிய இப்பரிணமங்களினால், பிறந்து - லோகத்திற்றோன்றி, உலகு - இவ்வுலகி லுள்ளயாவரும், இறைஞ்ச - வணங்கும்படியாக, நிற்கும் - நிலைபெற்றிராநின்ற,

கோத்திரம் - உச்சைர் கோத்திர கர்மமானது, செறியும் - பந்திக்கும் காரண மாகும், என்றான் - என்று சொல்லினான், எ - று. (உகக)

1347. கொலையைக்கோ பித்துச் செய்யாக் கொடையினை யிடைவி லக்கா
விலையெனி னுவந்து நன்றென் றீந்துழிக் காய்ந்து நெஞ்சிற்
புலைசுதேன் கள்ளு மேவிப் பிறன்செல்வம் பொறாது வவ்வ
வலைசெய்ய வந்த ராய மைந்துமவ் வந் தடையு மென்றான்.

(இ - ள்) (ஆத்மன்) கோபித்து - ரௌத்திரத்தியான தத்பரனாய், கொலையை - ஹிம்ஸாத்யுபத்திரவங்களை, செய்யா - செய்தும், கொடையினை - அன்னியர்களால் கொடுக்கின்ற தானம் முதலான வியவஹார நிச்சயங்களை, இடை - மத்தியில், விலக்கா - தடுத்தும், இலையெனின் - (அப்படிப்பட்ட வியவஹார நிச்சயங்களில் தான் தடுத்து விக்கினம் செய்யும் பாவ்யத்தைக் கேட்டுக்கொண்டு ஒருவன் அசத்தியங்களில் தலையிட்டு) இல்லையென்பானாகில், உவந்து - ஸந்தோஷித்தும், ஈந்துழி - (வியவஹாராதியின்படி ஒருவன்) கொடுக்குமிடத்து, நெஞ்சில் - மனதினால், காய்ந்து - கோபித்தும், புலைசு - மாம்சங்களையும், தேன் - மதுவையும், கள்ளு - கள்ளுமுதலானவைகளையும், மேவி - பொருந்தியும், பிறன் - அன்னியனுடைய, செல்வம் - ஐஸ்வரியத்தை, பொறாது - ஸஹிக்காமல், வவ்வ - அபகரிக்கவும், அலைசெய்ய - துன்பஞ்செய்யவும், (இவை யாதியாகிய பரிணாமங்களால்), அந்தராயமைந்தும் - ஐந்துவிதமாகிய அந்தராய கர்மங்களும், வந்து - அந்த ஆத்மனிடத்தில் வந்து, அடையும் - பந்திக்கும், என்றான் - என்றும் சொல்லினான், எ - று. (ங00)

1348. சொன்னகா ரணங்கள் பாவ யோகத்தின் படியிற் சொல்லி
னுன்னலாம் படிய வல்ல வுரைக்கினுஞ் சொற்க ளாற்று
வென்னமுந் நாற்க ணத்துள் யாவரு மிறைஞ்சி யேத்தித்
துன்னிய வினையை வெல்லத் தொடங்கினார் பலரு மன்றே.

(இ - ள்) சொன்ன - சொல்லப்பட்ட, பாவகாரணங்கள் - இந்தச் சேதன பரிணாமங்கள், யோகத்தின்படியில் - மனவசன காயத்தினால் ஆத்ம பிரதேச பரிஸ்பந்தங்கள் முதலியவைகளினால், சொல்லின் - சொல்லுமிடத்தில், உன்னலாம் படியவல்ல - நினைக்கும் தன்மையுடையனவல்ல, உரைக்கினும் - சொல்லப்புகினும், சொற்களாற்று - சொற்கள் பற்றுவாம், என்ன - என்று மேருமந்தர கணதரர்கள் சொல்ல, முந்நாற்கணத்துள் - த்வாதசகணங்களிலிராநின்ற, யாவரும் - எவர்களும், இறைஞ்சி - வணங்கி, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, பலரும் - அனேகமான பேர்களும், துன்னிய - சேர்ந்திராநின்ற, வினையை - கர்மங்களை, வெல்ல - ஜெயிக்க, தொடங்கினார் - ஆரம்பித்தார்கள், எ - று. (ங0க)

வேறு.

1349. ஆயுவுங் காணமும் பொறியு மக்கதி
வாயுவுங் கெடுதலால் மரண மற்றவை
போயுழிப் பெறுதலாம் பிறவி போமிடத்
தேயுமொன் றிரண்டுமூன் றுங்க ணங்களே.

((இ - ள்) அக்கதி - அந்தந்தக் கதிகளுக்கு ஸ்திதியாகிய, ஆயுவும் - ஆயுஷ்யமும், காணமும் - காய வாக் மனமும், பொறியும் - இந்திரியமும், வாயுவும் - உச்வாஸ நிச்வாஸமுமாகிய பிராணன்கள், கெடுதலால் - நாசமாவதனால், மரணம் - மரணமென்பதாகும், மற்று - பின்பு, அவை - அவைகள், போயுழி - கார்மண காயத்தோடு கூடிச் சென்றவிடத்து, பெறுதல் - மறுபடியும் அப்பிராணன்களைப் பெறுவது, பிறவி - ஜனனமென்பதாக, ஆம் - ஆகும், போமிடத்து - அப்படி மரணமாகிப் போகுமிடத்தில், (ஜனனமென்னும் பிராணன்களை மறுபடியடைவதற்கு), ஒன்று இரண்டு மூன்று - ஒன்றும் இரண்டும் மூன்றும், ஆம் - ஆகிய, கணங்கள் - ஸமயங்கள், ஏயும் - இசைவனவாகும், எ - று.

ஜீவன்கள் கதியாந்தரங்களுக்குச் செல்லும்போது ஏற்படும் ஒரு ஸமயம் இரண்டு ஸமயம் மூன்று ஸமயமாகிய காலங்களையும் அக்கதியின் விவரங்களையும், ஸூகபோதை யென்னும் தத்துவார்த்த ஸூத்ர வியாக்கியானமாகிய கிரந்தத்தில் 2-வது அதிகாரத்தில் பார்த்துக்கொள்ளவும். பதார்த்த ஸாரத்தில் மூப்பதாவது அதிகாரத்திலும் விரிவாகக் காணலாம். (௩0௨)

1350. உரைத்தவிப் பிறப்புப பாத மூர்ச்சனை
கருப்பமு மாமும்மைத் தேவர் நாரகர்க்
குரைத்த வற்றுப பாதஞ் சராயுகங்
கருப்பமா னவர்களுக் காவ தாகுமே.

(இ - ள்) உரைத்த - சொல்லப்பட்ட, இப்பிறப்பு - இந்த ஜனனமானது, உபபாதம் - உபபாதமென்றும், மூர்ச்சனை - ஸம்மூர்ச்சனையென்றும், கருப்பமும் - கர்ப்பமென்றும், மும்மையாம் - மூன்றுபிரகாரமாகும், உரைத்தவற்று - சொல்லப்பட்ட இவைகளில், தேவர்-தேவர்களுக்கும், நாரகர்க்கு-நரகர்களுக்கும், உபபாதம்-உபபாதப் பிறப்பாகும், மானவர்களுக்கு-மனிதர்களுக்கு, சராயுகங் கருப்பம்-ஜராயு படலத்தோடு கூடிய கர்ப்பமானது, ஆவதாகும் - ஆகப்பட்டதாகும், எ - று. ()

1351. நம்மினுண் ணியவர்நா லறிவு காறுளார்
சம்மூச்சப் பிறவியர் விலங்கி லைம்பொறி

விம்மினர் சம்முச்சங் கருப்பத் தாவதாந்
தம்மிலுஞ் சராயுக மண்டம் போதமாம்.

(இ - ள்) நம்மினுண்ணியவர் - நமக்குள் நுண்ணியராகிய பஞ்சேந்திரிய லப்திய பரியாப்தக மனுஷ்யரும், நாலறிவு காறுளார் - ஏகேந்திரிய த்வீந்திரிய த்ரீந்திரிய சதுரிந்திரிய ஜீவன்கள்வரை உள்ளவரும், சம்முச்சப்பிறவியர் - ஸம்மூர்ச்சனுப் பிறப்புடையராவர், விலங்கில் - திரியக் ஜீவன்களில், ஐம்பொறி விம்மினர் - பஞ்சேந்திரியங்களில் பிறப்பவர்கள், சம்முச்சம் - சில சம்மூர்ச்சனுப் பிறப்பிலும், கருப்பத்து - சில கர்ப்பங்களிலும், ஆவதாம் - ஆக்கப்பட்டதாகும், தம்மிலும் - அந்ததிரியக்கதி கர்ப்பங்களிலும், சராயுகம்-ஜராயுபடலத்தோடு கூடிப் பிறப்பதும், அண்டம் - முட்டைகளில் பிறப்பதும், போதம் - குட்டிகளாகப் பிறப்பதும், ஆம் - ஆகும், எ - று.

இவைகளின் விஸ்தாரங்களை ஸூகபோதை என்னும் நூலில் இரண்டாவது அத்தியாயத்தில் பார்த்துக்கொள்ளவும். (௩௦௪)

1352. யாவையுந் தோற்செவி யுடைய சன்னியாந்
தாவருந் துளைச்செவி சன்னிய சன்னியாம்
மேவருந் திருவறம் மேவுஞ் சன்னிக
ளோவிலாப் பிறப்பிவற் றியோனி யொன்பதாம்.

(இ - ள்) ஓவிலா - இடைவிடாமல் பிறக்கும்படியான, பிறப்பிவற்றின் - இந்தப் பிறப்புகளின், யோனி - ஜீவன்கள் பிறக்கும்படியான யோனிஸ்தானங்கள், ஒன்பதாம் - ஒன்பது பிரகாரமாகும், யாவையும் - இந்த ஜீவன்களில் யாவையும், தோற்செவியுடைய - தோல்காதுடையவைகள், சன்னியாம் - ஸஜ்ஞிஜீவன்கள் ஆகும், தாவரும் - நீக்குவதற்கு அரிதாகிய, துளைச்செவி - துவாரக்காதுடைய ஜீவன்கள், சன்னிய சன்னியாம் - சில ஸஜ்ஞிகளும் சில அஸஜ்ஞிகளிலுமாகும், சன்னிகள் - ஸஜ்ஞிஜீவன்கள், மேவரும் - பெறுதற்கரிதாகிய, திருவறம் - ஸ்ரீஜினதர்மத்தை, மேவும் - பொருந்தும், (சில பொருந்தாமையுமாகும்), எ - று.

யோனிபேதங்களின் விவரங்களை ஸூகபோதையில் இரண்டாவ ததிகாரத்தில் பார்த்துக்கொள்ளவும். (௩௦௫)

1353. வினையுயிர் தத்தமில் விடுதல் வீடது
தனகுண நீங்கலுந் தவியஞ் சூனியம்
முனையவ ருடனுறல் முதல்வ னன்றுதா
னனகனுய்க் குணங்களு மனந்த மாகுமே.

(இ - ள்) வினை - (அசேதனமாகிய புத்கலாத்மகங்களாகிய) கர்மங்களும், உயிர் - (சேதனாத்மகங்களாகிய) ஜீவன்களும், தத்தமில் - தங்கள் தங்களிடமாக, விடுதல் - (சுத்த சேதனுபரிணாமத்தினால் ஆத்மா ஸ்வரூபோபலம்பனமாகி கர்மங்களை பந்தத்தினின்றும்) நீக்குதல், வீடது - மோட்சமாகும், தனகுண நீங்கலும் - ஆத்மா கர்மபந்தத்துக்குக் காரணமான அசுத்தசேதனு பரிணாமமாகிய ராகாதி விபாவ குணங்களில் நீங்குதலும், தவியம் - அசேதனு இதரத் திரவிய குணங்கள் பற்றாமல், சூன்யம் - பரத்திரவியாதி சூன்யமாகி, முனையவருடன் - லோகாக்கிரஸ்தாயிகளானவர்களுடன் ஒரு தன்மையாக, உறல் - ஸித்தத்துவமடைதல், முதல்வன் - முதல்வன் தன்மையான தனது ஸ்வபாவகுண ஸ்வயம்புவாகும், அன்று - அப்பொழுது, தான் - தானென்னும் தன்னிலையானது (அதாவது: சுத்த ஆத்மாவானது), அனகனாய் - பாபரஹிதனாகி, குணங்களும் - தனது ஸித்த சுத்த குணங்களும், அனந்தமாகும் - முடிவில்லாமல் ஸ்தாயிகளாகும், எ - று. (௩௦௬)

1354. ஐம்பத்தைங் கணதரார்க் காதி யாங்கணத்
தைம்பத் தைந்திரட் டிபத்தாம் புவ்வத
ரைம்பதி னிரட்டிநாற் பத்தெட் டோதிய
ரைம்பதி னிரட்டியொன் பான்வி குவ்வணர்.

(இ - ள்) கணத்து - அந்த விமல தீர்த்தங்காருடைய கணங்களில், ஆதியாம் - முதன்மையாகிய, ஐம்பத்தைங்கணதரர் - கணதரர் ஐம்பத்தைந்து பெயர்களாகும், புவ்வதர் - பூர்வதரர்கள், ஐம்பத்தைந்திரட்டி பத்தாம் - ஆயிரத்து நூற்றுவராவர், ஓதியர் - அவதிஜ்ஞானிகள், ஐம்பதினிரட்டி நாற்பத்தெட்டு - நாலாயிரத்தெண்ணூற்றுவர், விகுவ்வணர் - விக்கிரியாரித்தி பிராப்தர்கள், ஐம்பதினிரட்டி யொன்பான் - தொளாயிரவர்களாவர், எ - று. (௩௦௭)

1355. விலக்கில சையத ரறுபத்தெண் ணாயிரம்
இலக்கமூன் றெட்டெட்டா யிரங்கள் சாதவ
ரிலக்கமொன் றாயிர மூன்று காந்திய
ரிலக்கநான் கிரண்டுசா வகிய சாவகர்.

(இ - ள்) விலக்கிலசையதர் - ஸம்பூர்ணஸம்யதர்கள், அறுபத்தெண்ணாயிரம் - அறுபத்தெண்ணாயிரம் பேர்களாவர், சாதவர் - நவஸம்யதர்கள், இலக்கமூன்றெட்டெட்டாயிரங்கள் - மூன்று லட்சத்து அறுபத்துநாலாயிரவர், காந்தியர் - ஆரியாங்கனைகள், இலக்கமொன்றாயிர மூன்று - இலக்ஷத்து மூவாயிரம் பெயர்களாவர், சாவகியர் - ஸ்ராவகிகள், இலக்க நான்கு - நாலுலட்சமாவர், சாவகர் - ஸ்ராவகர்கள், இரண்டு - இரண்டு லக்ஷம் பெயர்களாவர், எ - று. (௩௦௮)

1356. இனையவாம் விமலனார் கணத்து நாதராய்
வினையெலா மறவெறி வேத நான்கினை
மனைதுற வாணருக் கோதி மற்றவர்
வினைகண்மே னினைவுறீஇ விவித்த மேவினார்.

(இ - ள்) மற்றவர் - அந்த மேருமந்தரர் இருவர்களும், இனையவாம் - இத் தன்மையாகிய, விமலனார் - விமல தீர்த்தங்கரருடைய, கணத்து - த்வாதசகணங் களுக்கு, நாதராய் - முக்கியமானவர்களாகி, வினையெலாம் - கர்மங்களை யெல்லாம், அற - நீங்க, எறி - கெடுக்கும்படியான, வேத நான்கினை - சதுரானுயோகமாகிய ஸ்ரு தத்தினை, மனைதுறவாணருக்கு - ஸ்ராவகர்களுக்கும் யதிகளுக்கும், ஓதி - உப தேசித்து, வினைகண்மேல் - தங்களுடைய கர்மங்களின் மேல், நினைவுறீஇ - கெடுக்க வேண்டுமென்கிற தியானத்தைப் பொருந்தி, விவித்தம் - கணங்களினின் றும் வேறாகிப் பிரிந்து, மேவினார் - தனியான இடத்தை யடைந்தார்கள், எ - று.

1357. இனத்திடைப் பிரிந்துபோ மேறி ரண்டுபோற்
கணத்திடைப் பிரிந்துபோய்க் கான மேவிய
வனத்திடைப் பெருவரை யுச்சி மன்னினார்
நினைப்பினைத் தன்கணே நிறுத்தி நின்றரோ.

(இ - ள்) இனத்திடை - கூட்டத்தினின்றும், பிரிந்துபோம் - பிரிந்து செல்லுகின்ற, ஏறிரண்டு போல் - இரண்டு விருஷபங்களைப் போல, கணத் திடை - கணங்களினின்றும், பிரிந்துபோய் - நீங்கிச் சென்று, கானமேவிய - ஆரண்யத்தைச் சேர்ந்த, வனத்திடை - ஒரு வனத்தில், நினைப்பினை - தியா னத்தை, தன்கணே - தனது ஆத்மனிடத்தில், நிறுத்தி நின்று - ஸ்தாபித்து நின்று, பெரும் - பெரிதாகிய, வரையுச்சி - ஒரு பர்வத சிகரத்தை, மன்னினார் - அடைந்தார்கள், எ - று. (௩௪௦)

1358. வரைப்பினுங் குளிர்ப்பைசெய் மரத்தி னீழலு
மரைப்பினுஞ் சீதமாஞ் சந்தம் போலவும்
நிரைத்துநின் றிறைசெய் தவர்க்கு மின்பமா
முரைக்கணின் றுத்தமப் பொறையோ டோம்பினார்.

(இ - ள்) வரைப்பினும் - தன்னை அறுத்தாலும், குளிர்ப்பைசெய் - அறுப் பவனுக்கும் நிழலைத் தருகின்ற, மரத்தின் - மரத்தினது, நீழலும் - நிழலையும், அரைப்பினும் - அரைத்த காலத்தும், சீதமாம் - குளிர்ச்சியாகிய, சந்தம்போலவும் - சந்தனக் கட்டையையும் போலவும், நிரைத்துநின்று - வரிசையாகச் சேர்ந்துநின்று, இறுத - துன்பங்களை, செய்தவர்க்கும் - செய்தவர்களுக்கும், இன்பமாம் - அவர்

களும் ஸௌக்கியத்தை யடையும்படியான, உரைக்கணின்று - தர்மோபதேச வசனத்திற்பொருந்தி, உத்தமப்பொறையோடு - உத்தம க்ஷமையென்கிற தர்மத் துடன்கூடி, ஓம்பினர் - அத்தருமத்தை நழுவாமல் உபசரித்துப் போற்றினர் கள், எ - று. (நூகக)

1359. மார்த்தவத் தால்வளைந் தாரு யிர்க்கெலாம்
பார்த்தறம் பகர்ந்துளம் பஞ்சின் மெல்லிய
ரார்ச்சவத் தகம்புறம் மணிவி ளக்கொத்
தூர்த்தமா யொருவகை யொழுகு நீரரே.

(இ - ள்) மார்த்தவத்தால் - உத்தம மார்த்தவ குணத்தால் (அதாவது: கர்வ ரஹித குணத்தினால்), வளைந்து - வணக்கத்தோடு கூடியவர்களாகி, ஆர் - நிறைந் திராநின்ற, உயிர்க்கெலாம் - ஜீவர்களையெல்லாம், பார்த்து - ஸமத்வீபாவமாக நோக்கி, அறம்பகர்ந்து - பவ்விய ஜீவன்களுக்கு தர்மோபதேசஞ்செய்து, உளம் - மனமானது, பஞ்சின் - பஞ்சைப்பார்க்கிலும், மெல்லியர் - மிருதுவானகுணத்தை யுடையவர்களாகி, ஆர்ச்சவத்து - உத்தம ஆர்ஜவமென்னும் தர்ம குணத்தினால், அகம் புறம் - உள்ளும் புறமும், மணிவிளக்க தொத்து - ரத்தின தீபத்துக்குச் சமானமாகி, ஊர்த்தமாய் - மேலான ரிஜுபரிணாமமாகி, ஒருவகை - ஒப்பற்ற விதமாக, ஒழுகும் - நடக்கின்ற, நீரர் - குணமுடையவரானார்கள், எ - று. (நூகஉ)

1360. ஆர்வமுஞ் செற்றமு மயக்க மின்மையா
லாருயிர்க் குறுதியல் லாத சொல்லிலா
ரோர்விடத் தொருவிய புலத்தின் மீட்டுளஞ்
சோர்விடத் துஞ்செலாத் தூய ராயினர்.

(இ - ள்) ஆர்வமும் - (இஷ்ட வஸ்துகளென்று சிலவற்றில்) ராகமும், செற்றமும் - (அனிஷ்ட வஸ்துக்களென்று சிலவற்றில்) த்வேஷமும், மயக்கம் - மோகமும், இன்மையால் - இவர்கட்கில்லாமலாகிய ஸம்யக்த்வ குணவிருத்தி யினால், ஆர் - நிறைந்திராநின்ற, உயிர்க்கு - பவ்விய ஜீவன்களுக்கு, உறுதியல் லாத - உறுதியை உண்டுபண்ணுதலில்லாத, சொல்லிலார் - வசனத்தைச் சொல் லாதவர்களாய் உத்தம சத்திய தர்மத்தையுடையவர்களாய்த் தர்மோபதேசமொழியே சொல்லா நின்றார்கள், ஓர்விடத்து - யாதொரு பிரகாரத்தாலும், ஒருவிய - ஆகா தென்று நீக்கிவிடப்பட்டிருக்கிற, புலத்தின்-விஷய வஸ்துக்களின் மேல், மீட்டு- மறுபடி, சோர்விடத்தும்-சோர்வுற்ற விடத்திலும், உளஞ்செலா - மனஞ்செல்லாத திடதர தன்மையுள்ள, தூயராயினர் - உத்தம சவுசமென்னும் பரிசுத்த தர்மகுண முடையவர்களானார்கள், எ - று. (நூகந)

1361. அறுவகைப் பொறிவழி படர்ச்சி நீங்கியு
மறுவகைக் காயத்தை யருளி னோம்பியுஞ்

செறிதவம் பன்னிரண் டிற்செ லாப்பினைத்
துறவுமெய்த் தியாகமுந் துன்னி னார்களே.

(இ - ள்) அறுவகைப்பொறி - ஸ்பரிச ரஸ கிராண சக்ஷு ஶ்ரோத்திரம் மனமென்னும் ஷட் இந்திரியங்களினுடைய, வழி - விஷய வழிகளில், படர்ச்சி - செல்கின்ற பரிணாமங்களை, நீக்கியும் செல்லாமற் றடுத்துப் போற்றுதலாகிய விஷய ஸம்யமமும், அறுவகைக் காயத்தை - பிருத்திவி அப்பு தேயு வாயு வனஸ்பதி திரஸகாயமென்னும் ஷட்ஜீவனி காயங்களை, அருளின் - தயவோடு, ஓம்பியும் - உபசரித்தும் (அதாவது : பிராணி ஸம்யமமும், உத்தம ஸம்யமமும்), செறி - சேர்ந்திரா நின்ற, தவம்பன்னிரண்டில் - த்வாதசவிததபங்களில், செலா - நிரதிசாரமாகச் சேர்ந்து (அதாவது : உத்தம தபஸும்), பினை - பிறகு, துறவு - யாதொரு பரிக்கிரகங்களின் மேல் பற்றின்றித் துறக்கின்ற உத்தம ஆகிஞ்ஜின்னியமென்னும் தர்ம பரிணாமமும், மெய்தியாகமும் - ஆஸன்ன பவ்விய ஜீவன்களுக்குத் தத்துவோபதேசம் பண்ணுதலாகி பரமாகமங்களை வியாக்கியானம் பண்ணியருளும் சாஸ்திர தான சக்தியாகிய உத்தமத் தியாகமும், துன்னினார் - பொருந்தினார்கள், எ - று. (௲௩௱௬௰௧)

வேறு.

1362. மாதரைப் புகழ்தல் பார்த்தல் மற்றவ ரட்ட தென்றா
லாதரித் துண்டல் புக்க வவ்வகத் துறைத லஞ்சொல்
மேதகக் கேட்டல் மேவிச் சிரித்திடல் விழைவு நோக்கல்
ஏதமின் றிவற்றி னீங்கி யிலங்குமுள் ளத்த ரானார்.

(இ - ள்) மாதரை - ஸ்த்ரீ ஜனங்களை, புகழ்தல் - ஸ்துதித்தலும், பார்த்தல் - விரும்பி நோக்குதலும், மற்றவர் - பின்பு அந்த ஸ்திரீமார்களால், அட்டதென்றால்-சமையல் செய்ததென்றால், (அதனை), ஆதரித்துண்டல் - ப்ரீதியோடு கூடிப் புசித்தலும், புக்கவவ்வகத்துறைதல் - (அவர்கள்) அடைந்திருக்கின்ற அவ்வீட்டில் வாஸம் செய்வதும், அஞ்சொல் - அவர்களுடைய அழகிய மொழிகளை, மேதக - மேன்மையாக, கேட்டல் - கேட்கின்றதும், மேவி - அவர்களுடன் பொருந்தி, சிரித்திடல் - ஹாஸ்யமாக நகைப்பதும், விழைவு நோக்கல் - அவர்களுடைய விருப்பத்தைப் பார்த்தலும், (ஆகிய), இவற்றின் - இந்தப் பரிணாமங்களினின்றும், நீங்கி - பரிஹாரமாகி, ஏதமின்று - குற்றமின்றாக, இலங்கும் - விளங்குகின்ற, உள்ளத்தரானார் - (உத்தம பிரம்மசரியமென்னும்) தர்மகுணமுந் தமானார்கள், எ - று. (௲௩௱௬௰௨)

1363. முன்னுகத் தளவு நோக்கி முன்புபின் பிரியச் செல்லா
ரின்சொலும் பிறர்த மக்கு மிதத்தன வன்றிச் சொல்லா

ரன்புநீத் துயிரை யோம்பி யளவமைந் துண்ப ரார்க்குந்
துன்புறக் கோடல் வைத்தல் மலங்களைத் துறத்தல் செய்யார்.

(இ - ள்) (பின்னரும்), முன் - எதிரிலே, நுகத்தளவு - ஒருவில்லுப்பிரமாணம், நோக்கி - நன்ருகப் பார்த்து, முன்பு பின்பு - முன்னும் பின்னும், இரிய- ஜீவன்கள் பாதை யடைந்து நீங்கும்படியாக, செல்லார் - செல்லாதவர்களாயும், (அதாவது : ஈரியாஸமிதியுடையவர்களாயும்), இன்சொலும் - இனிய வசனத்தையும், பிறர் தமக்கு - அன்னியர்களுக்கு, மிதத்தனவன்றி - மிதமானவையில்லாமல், சொல்லார் - சொல்லாதவர்களாயும், (அதாவது : பாஷாஸமிதியுடையவர்களாயும்), அன்பு நீத்து - ராகத்வேஷமின்றி, உயிரை யோம்பி - ஸகல ஜீவன்களையும் உபசரித்து, அளவமைந்து - அளவிற் பொருந்தி (அதாவது : மட்டுப்பண்ணி), உண்பர்-பவித்திராஹாரத்தை பொஜிப்பவர்களாயும் (அதாவது : ஏஷணஸமிதியுடையவர்களாயும்), ஆர்க்கும் - எவ்விதமானவர்களுக்கும், துன்புற - துக்கமடையும்படியாக, வைத்தல் - ஒன்றை நிக்ஷேபிப்பதும், கோடல் - ஆதானம் பண்ணுவதும், மலங்களை - மலமூத்திராதிகளை, துறத்தல் - விடுதலும், (ஆகிய இவைகளை), செய்யார் - செய்யாதவர்களாயும், (அதாவது ; ஆதான நிக்ஷேபணஸமிதியுடையவர்களாயும்), (இவற்ருேடு வியுத்ஸர்க்கஸமிதியுடையவர்களாயும் இந்தப்பஞ்சஸமிதிகளையும் ஜீவரக்ஷணையின் பொருட்டுப் பொருந்தி), எ - று (௩௬௬)

1364. இருத்தலே கிடத்தல் நிற்ற லியங்குதல் முடக்கல் நீட்டல்
திருத்தியெவ் வுயிர்க்கும் தீமை செறிந்திடா வொழுக்க மோம்பி
யுரைத்துயிர்க் குறுதி மார்க்க மோம்புவ கொடுப்பிற் கொண்டும்
பரிக்கதப் பாவை மாரைப் பற்றறத் துறந்திட் டாரே.

(இ - ள்) இருத்தல் - பரியங்காஸனமாக உட்கார்ந்திருத்தலாலும், கிடத்தல் - சையாஸனமாகப் படுத்திருத்தலாலும், நிற்றல் - காயோத்ஸர்க்கமாக யோகத்தில் நிற்கின்றதாலும், இயங்குதல் - சரியா மார்க்கமாகச் செல்கின்றதாலும், முடக்கல் நீட்டல் - ஹஸ்தபாதாதிகளை முடக்குதலாலும் நீட்டுதலாலும், எவ்வுயிர்க்கும் - ஸகல ஜீவன்களுக்கும், தீமை செய்திடா - உபஸர்க்கம் செய்யாத, ஒழுக்கம் - சாரித்திரமாகிய காயகுப்தியை, திருத்தி - செம்மையாகச் செய்து, ஓம்பி - ரக்ஷித்தும் (அதாவது : காயகுப்தம் செய்தும்), உயிர்க்கு - பவ்விய ஜீவன்களுக்கு, உறுதி மார்க்கம் - உறுதியாகிய மோக்ஷ மார்க்கத்தை, உரைத்து - சொல்லியும் (அதாவது: அதனைச் சொல்லி வேறு வார்த்தைகளைப் பேசாத தன்மையாகிய வாக் குப்தியடைந்தும்), ஓம்புவ-ரத்னத்திரய விருத்திக்கு ரக்ஷணையாகும்படியான ஆகாராதிகளை, (உபசரித தன்மையால்), கொடுப்பில் - பத்ரசீலர்கள் கொடுத்தால், கொண்டும் - ஏற்றுக்கொண்டும், பரிக்கதப் பாவைமாரை - த்வாவிம்சதிபரீஷஹங்களென்னும் உபாதிகளாகிய பாவைமார்களை, பற்றற - ஆசையற, துறந்திட்டார் - நீக்கினுர்கள் (அதாவது : மனே குப்தியையும் பொருந்தினுர்கள்), எ - று. (௩௬௭)

1365. நன்மைதீ மைக்கண் ணொத்து நாதன்றன் பாத மோதித்
தன்மைக்கண் ணின்றார் தம்மைப் பணிந்துதம் பிழைப்பின் மீண்டு
பின்னைத்தம் பால்வந் தெய்தும் பிழைப்பைமுன் மறுத்துக் காயந்
தன்னைத்தாம் விட்டு நின்றார் தடவரைச் சூளி யொத்தார்.

(இ - ள்) நன்மை தீமைக்கண்ணொத்து - நன்மை தீமைகளிடத்து ஒரு தன்மைத்தாகியும், (அதாவது: நன்மை வந்தபோதிலும் தீமை வந்தபோதிலும் யதாஸ்வரூபமறிந்து சமானமாயிருக்கிற ஸாமாயிக பாவனை செய்தும்), நாதன் தன் - திரிலோகேஸ்வரனாகிய அரஹந்த பகவானுடைய, பாதம் - திருவடிகளை, ஓதி - சொல்லி ஸ்துதி செய்தும், தன்மைக்கண்ணின்றார் தம்மை - ஸ்வரூபத்திலும் ஸ்வரூப பாவனையிலுமிராநின்ற பஞ்ச பரமேஷ்டிகளை, பணிந்து - வணங்குதலாகிய வந்தனை செய்தும், தம் - தங்களுடைய, பிழைப்பின் - குற்றங்களினின்றும், மீண்டும் - நீங்கியும், (அதாவது: நீங்குதல் பாவனையாகிய பிரதிக்கிரமணஞ் செய்தும்), பின்னை - (அப்படிப் பிரதிக்கிரமண குணத்திலிருந்தும்) பிறகு கர்மோதய வசத்தால், தம்பால் - தங்களிடத்தே, வந்தெய்தும் - வந்தடையப்பட்ட, பிழைப்பை - குற்றங்களை, முன் மறுத்து - முன்னே மறுத்தும் (அதாவது: ஆலோசனாதி பூர்வகமாகிய விவேக பலத்தினால் பிராயச்சித்த விதானஞ் செய்கின்ற பிராயச்சித்த பாவனையடைந்தும்), காயந்தன்னை - சரீரத்தையும், தாம் - அவர்கள் தாம், விட்டு - விடுத்து (அதாவது: அதனை நமதல்லவென்று மனதில் பாவிக்கின்ற வியுத்ஸர்க்க பாவனை யடைந்தும்), நின்றார் - இந்த ஷடாவசியக் கிரியைகளில் கூடி நின்றார்கள், (அப்படி நின்றவர்கள்), தடம் - விசாலம் பொருந்திய, வரை - பர்வதத்தின், சூளியொத்தார் - சிகரத்துக் கொருவாறு ஒப்பாகச் சலனமின்றி நின்றார்கள், எ - று. (ரூகஅ)

1366. ஆதப யோகந் தாங்கி யருந்தவர் நின்ற போழ்திற்
பாதவம் போது கொண்டு பணிந்தன பனியைச் சேரச்
சீதபங் கயங்கள் கூம்ப விரிந்தசெங் கமலஞ் சிந்தை
மாதவர் மரத்தைச் சேர மகிழ்ந்துவான் பொழிந்த வன்றே.

(இ - ள்) ஆதபயோகம் - ஆதபயோகத்தை, தாங்கி - தரித்து, அருந்தவர் - அரிய தபஸையுடைய மேருமந்தரரிருவர்களும், நின்ற - மலைமேல் நிற்கின்ற, போழ்தில் - கோடை காலத்திலே, பாதவம் - விருட்சங்கள், போது கொண்டு - புஷ்பங்களைக் கொண்டு, பணிந்தன-வணங்கின, பனியைச்சேர-ஹிமக்காலயோகத்தில் நிற்க, (அதாவது: மறைவு இல்லாத கடற்கரை முதலான இடத்தில் வெள்ளாகாசத்தை யடைந்து யோகத்தில் நிற்க), சீதம் - பனியின் சீதத்தினால், பங்கயங்கள் - தாமரை புஷ்பங்கள், கூம்ப - வாடி நாசமெய்த, சிந்தை - இவர்கள் மானதாகிற, செங்கமலம் - செந்தாமரை புஷ்பம், (ஆத்மத் தியானத்தினால்), விரிந்த - மலர்ந்தது, மாதவர் - மஹா தபத்தையுடைய இவ்விருவர்களும், (அந்த

ஹிமக்காலங்கழிந்து), மரத்தைச் சேர - (வருஷாகாலத்தில்) விருட்சத்தினுடைய அடியில் நின்று யோகம் தாங்க, (அப்போது), வான் - மேகமானது, மகிழ்ந்து - இவர்களுடைய தபத்திற்கு மகிழ்ந்து, பொழிந்த - மழையை (அபிஷேகஞ் செய்வது போல்) சொரிந்தன, எ - று. (ருகக)

1367. கூகைபேய் கவந்த மோரி டாகினி குலவுங் காடு
நாகமா நாகஞ் சீய முழுவைசேர் மலேமு முஞ்சு
ஏகமாய் வேக மேவி யிராசமா சீயம் போல
யோகமே போக மாக வுவந்தவ ருறைந்து சென்ருர்.

(இ - ள்) (மேலும்), கூகை - கோட்டான்களும், பேய் - பேய்க் கூட்டங்களும், கவந்தம் - தலையற்ற துண்டங்களும், ஓரி - குள்ள நரிகளும், டாகினி - பூதங்களும், குலவும் - வியாபித்திராநின்ற, காடு - சுடுகாடுகளிலும், நாகம் - நாகப் பாம்புகளும், மாநாகம் - பெரும் பாம்புகளும், சீயம் - சிம்மங்களும், உழுவை - புலிகளும், சேர் - தங்கும்படியான, மலே முழஞ்சு - பர்வத குகைகளிலும், ஏகமாய் வேகமேவி - தனித்திருந்து ஏகாக்கிர சிந்தையாகிய ஆத்மத் தியானத்தில் தீவிரதரமாகப் பொருந்தி, இராசமாசீயம்போல - ஒரு சிறந்த ராஜஸிம்மத்தைப் போல, யோகமே - மனவசன காயத்தை தியானத்திலடக்கலே, போகமாக - மிகுதியான சௌக்கியமாக, உவந்து-சந்தோஷித்து, அவர் - அவர்கள், உறைந்து- இவ்விதமாகத் தியானங்களில் பொருந்தி, சென்ருர் - அம்மார்க்கத்தில் செல்வாராயினர், எ - று. (ருஉ0)

1368 இருதுநல் லயன மாண்டை யெல்லேசெய் திருந்து நின்று
மரீஇயமுக் கால யோகம் வழங்குமார்க் கத்தை விட்டுத்
திரிவித கரணந் தம்மைச் செறியவைத் தறிவை யூன்றிப்
பொருவிலார் சிந்தை யோகந் தன்னேயே பொருந்தி ஞரே.

(இ - ள்) (பின்னரும்), இருது - இரண்டு மாஸகாலமும், நல் - நன்மையாகும், அயனம் - ஆறுமாத காலமும், ஆண்டை - ஒரு வருஷ காலமும், எல்லே செய்து - யோகத்தில் நிற்க இவ்வளவு இவ்வளவு என்று பிரமாணம் பண்ணிப் பிரதிஜ்ஞை செய்து, இருந்து - அவ்வளவு அவ்வளவு காலம் வரையிலும் தளராது யோகத்தில் இருந்தும், நின்று - நிலேயில் உறுதியாக நின்றும், மரீஇய - இவ்விதமாகத் தக்க வண்ணம் சேர்ந்து கூடிய, முக்கால யோகம் - ஆதபகால வருஷாகால ஹிமத் காலங்களில் செய்யும் யோகத்திலே, வழங்கும் - செல்கின்ற, மார்க்கத்தை - காயக்கிரசமென்னும் பாஹ்ய தப மார்க்கத்தை, விட்டு - ஒரு பொருட்டாக எண்ணுமல் விலகி, திரிவிதம் - காயம் வாக் மன மென்னும் மூன்று விதமாகிய, கரணந்தம்மை - அந்தக் கரணங்களே, செறிய வைத்து - ஆத்ம தியானத்தில் சேரும்படியாக அடக்கி ஸ்தாபித்து, அறிவை - நிச்சய ஸம்யக் ஞானத்தை,

ஊன்றி - உறுதிப்படுத்தி, பொருவிலார் - உபமையில்லாத ஸம்யக் குணேத் கிருஷ்ட பாவனா பலமுள்ள இவ்விருவர்களும், சிந்தை - ஆத்மத் தியானத்தில், யோகந்தன்னையே - மனவசனகாயத்தை மிகவும் பலமாக நழுவாமல் ஒன்றுபடுத் தலை, பொருந்தினார்கள் - சேர்ந்தார்கள், எ - று. (௬௨௧)

1369 உடம்புயி ருறைவா ளேரென் றுடம்பைவிட் டுயிரைப் பார்த்தங்
கடுந்துயர் வினைக ளவ்வா ளுருக்கொடு நெருப்பு யிர்க்கட்
கெடும்பரி யாய மவ்வாட் கிட்டமா மென்ற வற்றைக்
கடந்ததம் வடிவைக் காளங் கழன்றபொன் போலக் கண்டார்.

(இ - ள்) (அவ்வாறு பொருந்தியவர்கள்), உடம்பு - சரீரமும், உயிர் - ஆத் மனும், உறைவாள் நேரென்று - உறையும் வாளும் போலுமென்று, (அதாவது: சரீரம் உறையும் உயிர் வாளும் போலுமென்று), உடம்பை - சரீரத்தை, விட்டு - வேறென்று பேத பாவனை பண்ணி விலக்கி, உயிரை - ஆத்மனை, பார்த்து - அதன் ஸ்வகுணம் இன்னதென்று நோக்கி, அங்கு - அவ்விடத்தில், அடுந்துயர் - வருத்தும்படியான துக்கமாகிற, வினைகள் - சரீராதியாகிய கர்மங்களென்னும், பரியாயம் - பரியாயங்கள், அவ்வாள் - ஆத்மனாகிற அந்த வாளிடத்தே, உருக் கொடு - வடிவுகொண்டு, அவ்வாள் - அவ்வாளிடத்தே பற்றும், கிட்டமாம் - களிம் பாகும், உயிர்க்கண் - அவ்வாளாகிய உயிரிடத்தே, (உண்டாகும்), நெருப்பு - சுக் கிலத்தியானமென்னும் அக்கினியால், கெடும் என்று - நீங்கிவிடும் என்று, (சுக் கிலத் தியானத்தால் கர்மங்களை நீக்கி), அவற்றை-அந்தக் கிட்டத்துக்கொப்பாகிய கர்மங்களை, கடந்த - நீங்கிய, தம் வடிவை - தங்களுடைய சுத்தாத்ம திரவிய சொரூபத்தை, காளங்கழன்ற - கிட்டகாளிதத்தினின்றும் நீங்கிய, பொன் போல- ஸ்வர்ணத்தைப் போல, கண்டார் - நிச்சய ஸம்யக்தர்சனத்தால் பார்த்தார்கள், எ - று. (௬௨௨)

1370. மதிசுத மவதி யாமா வரணத்தி லறிவு மற்ற
விதியறக் கெடவொன் றாகி யனந்தமாய் விரியுங் காட்சி
பொதுவினு லறிவின் முன்பு புலத்தைக்கொண் டனேக மாய்த்தன்
விதியறக் கெடவொன் றாகி விரியுமா றுன்னி னாரே.

(இ - ள்) (அதன்மேல்), மதி - மதிஜ்ஞானமும், சுதம் - ஸ்ருதஜ்ஞான மும், அவதியாம் - அவதிஜ்ஞானமும், (ஆகிய இவற்றின்), ஆவரணத்தில் - ஆவர ணீயங்களினுலும், அறிவுமற்ற - மற்ற மனப்பரியயஞான கேவல ஞானங்களி னுடைய ஆவரணீயங்களினுதயத்தாலுமாகிய, விதி - கர்மங்கள், அற - முழுமை யும், கெட - நீங்க, ஒன்றாகி - ஒப்பற்றதாகி, அனந்தமாய் - முடிவில்லாததாய், (ஆத்ம ஸ்வரூபமாகிய ஸ்வபர பதார்த்த பரிசித்தி ரூபமாகி யாகாரமாகிய ஸம் பூர்ண சுத்த ஞான குணமாய்), விரியும் - விசாலிக்கின்ற, காட்சி - தர்சனமானது,

பொதுவினால் - சாமான்யத்தினால், அறிவின் முன்பு - ஞான குணத்துக்கு முன்னே, புலத்தைக் கொண்டு - இந்திரிய விஷயங்களைக் கொண்டு, அனேகமாய் - பலவித பேதமாய் சக்ஷு தர்சனாதியாகிய, தன் விதி - தனது அந்த தர்சனாவரணீய கர்மங்கள், அறக்கெட - முழுமையும் நீங்க, ஒன்றாகி - ஒப்பற்றதாகி, விரியுமாறு - அனந்த தர்சனமென்னும் ஸம்பூர்ண சுத்த தர்சனமாய் ஆத்ம திரவிய குணமாக வியாபகமாகின்ற நிஜரூபி லக்ஷணமாகி நிராகாரமாகிய குணத்தையும், உன்னினார் - ஸம்யக்ஞான தர்சன பலத்தால் ஸ்வஸம் வேதன பிரத்தியக்ஷத்தால் பாவித்தார்கள், எ - று. (௩௨௩)

1371. சுகதுக்க மோக மாகிச் சுழலுஞ்சே தனசு கத்தைத்
தகைவைசெய் யந்த ராயந் தம்மொடு மோக நீங்க
முகைவிட்ட நாற்றம் போல முழுதும்வந் தெழுந்த னந்த
சுகமற்ற தாகு மென்று துளக்கற நினைந்து நின்றார்.

(இ - ள்) (மேலும்), சேதன சுகத்தை-அதீந்திரிய நிருவ சுத்த சைதன்ய சுகத்தை, சுகம் - அநித்திய இந்திரிய சுகமும், துக்கம் - துக்கமும், மோகமாகி - மயக்கமுமாகி, தகைவைசெய் - தடைசெய்கின்ற, சுழலும் - சுழல்வதாகிய, அந்தராயந் தம்மொடு - பஞ்சப்பிரகார அந்தராய கர்மங்களோடு, மோகம் - தர்சன சாரித்திர விகல்பமாகிய மோஹனீய கர்மங்களும், நீங்க - நிரவசேஷமாய் விலக, முகை விட்ட நாற்றம்போல - மொக்கவிழ்ந்து மலர்ந்து வெளிப்படுத்திய வாசனையைப் போல, முழுதும் வந்து - ஆத்மனுக்குத் தனது ஸ்வரூப முழுக் குணமும் வந்து, எழுந்து - வியாபகமாகி, மற்றது - அந்தத் தன்மையானது, அனந்த சுகமாகுமென்று - அனந்த ஸௌக்கியமாகுமென்று, துளக்கற - சலனமின்றி, நினைந்து நின்றார் - பாவித்து நின்றார்கள், எ - று. (௩௨௪)

1372. வீரியாந் தராய நீங்க விகலத்தி னீங்கி வீரங்
காரியங் கடையி லாது கணத்திலே முடித்த ளந்து
மூரிமூ வுலகந் தன்னை யேந்தலு மாகு மாற்றல்
வீரிய மாகு மென்றிவ் விதியுளி நினைந்திட் டாரே.

(இ - ள்) (பின்னர்), வீரியாந்தராயம் - வீரியாந்தராய கர்மமானது, நீங்க - ஆத்மனிடத்தினின்றும் விலக, வீரங்காரியம் - வீர்யகுணமானது, விகலத்தினீங்கி- குறைபாட்டினின்றும் நீங்கி, கடையிலாது - முடிவில்லாது (ஸம்பூர்ண நிலையாகி), கணத்திலே - ஒரு ஸமயத்திலே, மூரி - பலமாகிய, மூவுலகந்தன்னை - மூன்றுலகத்தையும், அளந்து முடித்து - பிரமாணித்து, ஏந்தலும் - தரித்தலும், ஆகும் - ஆகும்படியான, ஆற்றல் - சக்தியானது, வீரியமாகுமென்று - அனந்த வீரிய குணமாகுமென்று, இவ்விதி - இந்தக் கிரமத்தையும், உளி - உள்ளிட்டு, நினைத்திட்டார் - தியானித்தார்கள், எ - று. (௩௨௫)

1373. உருவமு மொலியு மூறு நாற்றமுஞ் சுவையு மின்றாய்த்
தெரிவரு நுண்மைத் தாகி நொற்பமுஞ் சிறப்பு மின்றாய்
மருவிய வினைக ளெட்டும் மாய்ந்தவக் கணத்துச் சென்று
திரிதா வுலகத் துச்சி நிற்றலுஞ் சிந்தித் தாரே.

(இ - ள்) (அதன் மேல்), மருவிய - (ஆத்மனிடத்தில் அனாதியாக பாவ கர்மங் காரணமாகச்) சேர்ந்திரா நின்ற, வினைகளெட்டும் - திரவிய கர்மங்களெட்டும், மாய்ந்தவக் கணத்து - நிரவசேஷவிநாசமான அந்த ஸமயத்திலே, உருவமும் - ரூபமும், ஒலியும் - சப்தமும், ஊறும் - ஸ்பரிசமும், நாற்றமும் - கந்தமும், சுவையும் - ரஸமும், இன்றாய் - இல்லாமல், தெரிவரும் - இந்திரிய ஞானத்தினால் அறிவதற்கு அரிதாகிய, நுண்மைத்தாகி - சூக்ஷ்மமாகி, நொற்பமும் - லகுத்துவமும், சிறப்பும் - குருத்துவமும், இன்றாய் - இல்லாமல், (அதாவது: அகுருலகுத்துவ குணமுடையதாகி), சென்று - ஊர்த்துவகதி ஸ்வபாவமாகிச் சென்று, திரிதா - மறுபடி ஒரு காலும் திரும்பி வாராத, உலகத்துச்சி - மூன்று லோகத்துக்கும் உச்சியாகிய தனுவாதாக்கிரத்தில் (அதாவது: ஸித்தி க்ஷேத்திரத்தில்), நிற்றலும் - துருவமாகி நிற்கின்ற ஸ்வரூபத்தையும், சிந்தித்தார் - தியானித்தார்கள், எ - று.

சுத்த ஜீவத் திரவிய ஸ்வரூபம், பிராப்ரதத்திரயத்தில் தர்சனாதிகாரத்தில் 184-வது காதையில் சொல்லப்பட்டிருக்கிறது. தவிரவும் அதே நூலில் பஞ்சாஸ்திகாயாதிகாரத்தில் 27-வது காதை முதலாக 79-வது காதை வரையிலும், சுத்தாசுத்தத்தால் இருவகைப் பேதமாகிய, ஜீவன்களுடைய ஸ்வரூபமும் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விவரத்தை விளக்கமாகக் காணவேண்டின் அவற்றைப் பார்த்துணர்ந்து கொள்க. (௩௨௬)

வேறு.

1374. குணகுணி நிலைமையுங் குணங்க ணிற்றலும்
மனமுடை மற்றவர் தத்தஞ் சிந்தியா
வணவரும் பமாதம்விட் டப்ப மத்தரா
யிணையிலாச் சேணிமே லேறி னார்களே.

(இ - ள்) (பின்னர்), குணம் - ஜீவாதியாகிய அநந்தத் திரவிய குணங்கள், குணி - குணியாகிய அநந்தத் திரவியங்கள், (ஆகியவற்றின்), நிலைமையும் - (அதனதன் ஸாமான்ய விசேஷத்தால் நிற்கின்ற திரவியார்த்திக பரியாயார்த்திக அர்த்த வியஞ்சன பரியாயங்களின்) தன்மைகளையும், குணங்கள் - (அதனதன் அஸ்தித்துவாதி திரவியார்த்திக குணங்களால் நித்தியமாயும் பரியாயார்த்திக குணங்களால் அனித்தியமாயும் ஆகிய ஸகலார்த்த வியஞ்சன ஸாமான்ய விசேஷ

ஸ்வரூப பரரூப) குணங்கள், நிற்றலும் - (ஸ்யாத்வாத ஸப்தபங்கி நியாயத்தால் நாம, ஸ்தாபனு, திரவிய பாவங்களால், உத்பாதவ்யயத்ரௌவ்யயுக்தமாய்) நிற்கும் தன்மைகளையும், மனமுடை - ஸ்ரு தஞானபாவனு பலத்தால் மனதிலுடைத்தாகிய, அவர் - அவ்விரு முனிவர்களும், சிந்தியா - (தங்களுடைய ஆத்ம ஸ்வரூபத்தை மாத்திரம் ஏகமென்றும் சாஸ்வதமென்றும் ஞான தர்சன நாயகமென்றும் சேஷங்கள் ஸம்யோகங்களென்றும் ஏகத்துவ அன்னியத்துவ பிரதக்த்துவ அப்பிரதக்த்துவ ஸ்வரூபங்களைத்) தியானித்து, தத்தம் - தங்கள் தங்களுடைய, அணவரும் - நெருங்குதற்கரிய, பமாதம் விட்டு - பஞ்சதச ப்ரமாதங்களை நீக்கி, அப்பமத்தாராய் - அப்பிரமத்த குணஸ்தானவர்த்திகளாகி, இணையிலா - உபமையில்லாத, சேணிமேல் - க்ஷபகஸ்ரேணி யென்கிற குணஸ்தான வரிசையின் மேல், ஏறினர் - கிரமமாக ஆரோகணித்தார்கள், எ - று.

மற்று - அசை. (௩௨௭)

1375. வினைகளேழ் விரகினல் வீழ்ந்த வக்கண
முனிவர்புவ் வாணிநன் முனிவ ராயினர்
வினையெலா நிலைதளர்ந் திட்டு திர்ச்சிக
டனையடைந் திட்டநால் வகையி ஞற்பினே.

(இ - ள்) அக்கணம் - அந்த அப்பிரமத்த குணஸ்தானத்தில் க்ஷபகஸ்ரேணி நிலையில் ஏறிய காலத்து, விரகினல் - கிரமத்தினல், வினைகளேழ் - (மித்தியாத்துவ, ஸம்மியக்மித்தியாத்துவ, ஸம்மியக்த்துவபிரகிருதி, அனந்தானுபந்திகுரோத, மான, மாயா, லோபமென்னும் தர்சன மோஹனீயமாகிய) ஸப்த பிரகிருதிகள், வீழ்ந்த - கெட்டன, (அதன் மேல்), முனிவர் - இவ்விரு முனிவர்களும், புவ்வாணி நன்முனிவராயினர் - அபூர்வ காண குணஸ்தான வர்த்திகளானர்கள், (அந்த அபூர்வ காண குண ஸ்தானத்தில்), வினையெலாம் - மற்ற கர்மங்களெல்லாம், நிலை தளர்ந்திட்டு - தளர்வுபட்டுக்குறைந்து, நால்வகையினல் - (பந்த, ஸத்துவ, உதய, உதீரணுவென்னும்) நான்கு விதத்தால், உதிர்ச்சிகடனையடைந்த - நிர்ஜரிக்கின்ற நிலைமையையடைந்தன, பினே - அதன் பின்பு, எ - று.

தனே - சாரியை. (௩௨௮)

1376. நின்றுழி நிலாதசுக் கிலத்தி யானத்தோ
டன்றவ ரணியட்டி முனிவ ராயினர்
சென்றன சிலபல கணங்கள் சென்றபின்
வென்றனர் வினைகளீ ரெட்டை வீரரே.

(இ - ள்) நின்றுழிநிலாத - ஒரு விதமாக நின்றவிடத்திலேயே நில்லாமல் ஸமயந்தோறும் வேறே வேறே விர்த்தியாகி அவலம்பனமாகின்ற, சுக்கிலத் தியா*

னத்தோடு - பிரதக்த்துவ விதர்க்க வீசாரமென்னும் சுக்கிலத் தியானத்தோடு கூடி, அன்றவர் - அப்பொழுது அம்முனிவர்கள், அணியட்டி முனிவராயினர் - அனிவிர்த்தி கரணகுணஸ்தானத்தை யடைந்த முனிவராயினர்கள், (அப்படி அனிவிர்த்தி கரணகுணஸ்தானத்தை யடைந்து அக்குணஸ்தானமாகிய அந்தர் முகூர்த்தத்தில்), சில பல கணங்கள் - சில கணங்களும் பல கணங்களும், சென்றன - கழிந்தன, சென்றபின் - அவ்வாறு அனேக ஸமயங்கள் சென்ற பிறகு, வீரர் - வீர புருஷர்களாகிய அவ்விருவரும், (அக்குணஸ்தானத்தில் அந்தியத்தில் ஒன்பது ஸமயமிருக்கும்போது அதில் பிரதம ஸமயத்தில்), வினைகளீரெட்டை - ஷோடச பிரகிருதிகளை, வென்றனர் - ஜெயித்தார்கள், எ - று. (ருஉகூ)

வேறு.

1377. தீக்கதி யிரண்ட வற்றப் புவ்விக ணன்கு சாதி
யாக்கையி னிற்ற னுட்பம் பொதுவெயில் விளக்கி வற்றை
யாக்குமன் னமைங் காட்சி யாவரணத் தியானத் தீட்டி
நீக்கரும் பசலை நித்தை யாகுமீ ரெட்டை நீத்தார்.

(இ - ள்) (எப்படி ஜெயித்தார்களெனில்), தீக்கதியிரண்டு - நரககதி திரியக் கதி யெனும் இரண்டும், அவற்றப்புவ்விகள் - அவற்றினுடைய அந்த அனுபூர்வியாகிய நரக கத்யானுபூர்வி திரியக்கத்தியானுபூர்வி எனும் இரண்டும், நான்கு சாதி - ஏகேந்திரிய ஜாதி த்வீந்திரிய ஜாதி த்ரீந்திரிய ஜாதி சதுரிந்திரிய ஜாதி யென்னும் நான்கும், யாக்கையினிற்றல் - ஸ்தாவரமும், நுட்பம் - ஸூக்ஷ்மமும், பொது - சாதாரண சரீரமும், வெயில்-ஆதபமும், விளக்கு-உத்யோதமும், (ஆகிய), இவற்றை - இவைகளை, ஆக்கும் - ஆக்குகின்ற, அந்நாமம் - அந்த நாம கர்ம பிரகிருதியில் பதின்மூன்றும், காட்சியாவரணம் - தர்சனாவரணீய கர்மத்தில், தியானத்தீட்டி - ஸ்தியான கிரந்தியும், நீக்கரும் பசலை - பிரசலா பிரசலையும், நித்தை - நித்திரா நித்திரையும் கூடி, ஆகுமீரெட்டை - ஆகின்ற பதினாறு பிரகிருதிகளை, நீத்தார் - மேற்கூறியபடி நீக்கினார்கள், எ - று. (ருஙO)

1378. வெகுளியே மான மாய முலோபமா மிக்க நான்கு
பகடியப் பச்ச பச்சக் கணத்ததா மெட்டை நீத்து
முகடுற வெழுந்த சிந்தை முறுக்கிப்பின் னுருக்க மற்போல்
தொகையுடைப் பேடி வேதந் தன்னையு முடைத்திட் டிப்பால்.

(இ - ள்) வெகுளியே மானமாயமுலோபமா மிக்க நான்கு - மிகுதியாகிய குரோதம் மானம் மாயம் லோபம் என்னும் நாலுவகையான, பகடி - பிரகிருதிகள், அப்பச்ச பச்சக்கணத்ததாம் - அப்பிரத்தியாக்கியான பிரத்தியாக்கியான கணத்தின் பேதத்தால் ஆகின்ற, எட்டை - எட்டுப் பிரகிருதிகளையும், நீத்து -

த்விதீயஸமயத்திற்கெடுத்து, முசிற - பெருமை பொருந்த, எழுந்த - உண்டாகிய, சிந்தை - அந்த பிரதம சுக்லத் தியானத்தை, (விருத்தியாக), முறுக்கி - பலஞ்செய்து, பின் - பிறகு மூன்றுவது ஸமயத்தில், உருக்கழல்போல் - கொல்லனுலையிலிரும்புருக்கும் அக்னி போல், தொகையுடை - சேர்க்கையுடைய, பேடிவேதந்தன்னையும் - நபும்ஸக வேதமென்னும் கர்மத்தையும், உடைத்திட்டு - கெடுத்து, இப்பால் - அதற்கிப்பால் நாலாவது ஸமயத்தில், எ - று. (௩௩௭)

1379. முட்டைத்தீப் போல வெம்பும் மொய்குழ லார்தம் வேதங்
கெட்டபி னிரதி யாச்சம் பயமுவர்ப் பரதி சோகம்
விட்டவப் பொழுது வைத்தீப் போலெழும் புங்க வேத
மட்டவர் வேத நீத்த வணியட்டி முனிவ ராஞர்.

(இ - ள்) முட்டைத் தீப்போல - எருமுட்டையின் அக்னி போல, வெம்பும் - வெதும்புகின்ற, மொய்குழலார் தம் வேதம் - ஸ்த்ரீ வேதமென்னுங் கர்மமானது, கெட்ட பின் - நீங்கின பின்பு, (ஐந்தாவது ஸமயத்தில்), இரதி ஆச்சம் பயம் உவர்ப்பு அரதி சோகம் - ரதி ஹாஸ்யம் பயம் ஜுகுப்ஸை அரதி சோகமென்னும் ஆறு பிரகிருதிகள், விட்ட - நீங்கிவிட்டன, அப்பொழுது - அந்த ஆருவது ஸமயத்தில், வைத்தீப்போல் - வைக்கோலில் பற்றின அக்னி போல், எழும் - வெதும்பி யெழுகின்ற, புங்க வேதம் - புருஷவேதமென்னும் கர்ம பிரகிருதியையும், அட்டு - ஜயித்து, அவர் - அவ்விரு முனிகளும், வேதநீத்த - நவ நோகஷாயங்களை விலக்கி ஜயித்த, அணியட்டி முனிவராஞர் - அனிவிருத்திகரண குணஸ்தான முனிவர்களாஞர்கள், எ - று. (௩௩௮)

1380. நல்லவாஞ் சலன கோத மானமா யுலோபந் தம்மைச்
சொல்லிய முறையின் மூன்று தானத்திற் றுவக்க றுத்துப்
புல்லிதா முலோபந் தன்னை வீழ்த்தந்த மூழ்த்தத் திற்பி
னெல்லையிற் சுத்தி பெற்று ரிருபத்தெண் மோக நீத்தே.

(இ - ள்) (அதன் மேல்), நல்லவாஞ் சலனகோதமானமாயுலோபந்தம்மை - ஸஞ்ஜ்வலன க்ரோதம் ஸஞ்ஜ்வலன மானம் ஸஞ்ஜ்வலன மாயம் ஸஞ்ஜ்வலன லோபமென்னும் நாலு பிரகிருதிகளை, சொல்லிய முறையின் - சொல்லப்பட்ட வரிசைப் பிரகாரம், மூன்று தானத்தில் - மூன்று சமயத்தில் (அதாவது: ஏழாவது ஸமயத்தில் ஸஞ்ஜ்வலன க்ரோதத்தையும், எட்டாவது ஸமயத்தில் ஸஞ்ஜ்வலனமானத்தையும், ஒன்பதாவது ஸமயத்தில் ஸஞ்ஜ்வலன மாயத்தையும், மூன்றுஸ்தானமாக), துவக்கறுத்து - சம்பந்தத்தை நீக்கி, (இப்படி அனிவிர்த்திகாணகுணஸ்தானத்தில் செய்து முடித்து அதன் பிறகு ஸூக்ஷ்மஸாம்பராய குணஸ்தானகாலமாகிய), அந்த மூழ்த்தத்தில் - அந்தர் முகூர்த்த காலத்தின் அந்திய

ஸமயத்தில், புல்லிதாமுலோபங்தன்னை-ஸஞ்ஜுவலன லோபகர்மத்தை, வீழ்த்து-கெடுத்து, பின் - பின்பு, (அக்காலத்தில்), இருபத்தெண்மோக நீத்து - இருபத்தெட்டு மோகனீயப் பிரகிருதிகளைத் தீர்த்து, (அதாவது: அப்பிரமத்த குணஸ்தான க்ஷபகஸ்ரேணியாரோகணத்தில், தர்சன மோஹனீயமான ஸப்த பிரகிருதிகளும், பிறகு அநிவிருத்திகரண குணஸ்தானத்தில் நாம கர்மத்தில் பதின்மூன்றும், தர்சனுவாணீயகர்மத்தில் மூன்று பிரகிருதிகளும், நீங்கலாக சாரித்திர மோஹனீயத்தில் இருபது பிரகிருதிகளும், பிறகு ஸூக்ஷ்ம ஸாம்பராய குண ஸ்தானத்தில், சாரித்திர மோஹனீயத்தில் பாக்கி நின்ற ஒரு பிரகிருதியுமாகச் சேர்ந்து அஷ்டாவிம்சதி பேதமாகிய மோஹனீய கர்ம பிரகிருதிகளை நிரவசேஷம் தீர்த்து), எல்லையில் - அளவில்லாத, சுத்தி - ஆத்ம சுத்தி பரிணமைத்தை, பெற்றார் - அடைந்தார்கள், எ - று. (௩௩௩.)

1381. வெம்பிய வினைக்கு மூல மாகுமோ கத்தை வீழ்த்தா
ரம்பரப் படிகஞ் செம்பஞ் சடுத்துவிட் டதனை யொத்தா
ரும்பரொன் றுகுஞ் சிந்தை யுடனின்றோர் மூழ்த்தத் தீற்றின்
முன்பினுங் கணத்து நித்தை பசலைகண் முறியச் சென்றார்.

(இ - ள்) (மேலும் அவர்கள்), வெம்பிய - வெப்பமாகிய, வினைக்கு-கர்மங்களுக்கு, மூலமாகும் - முதலாகின்ற, மோகத்தை - தர்சன சாரித்திர விகல்பமாகிய அஷ்டாவிம்சதி மோஹனீய கர்மங்களை, வீழ்த்தார் - கெடுத்தவர்களாகி, அம்பரப் படிகம் - ஆகாசஸ்படிகத்தில், செம்பஞ்சு - சிவந்த பஞ்சு, அடுத்துவிட்டதனை யொத்தார் - சேர்ந்துவிட்டதற்கொப்பாக ஸத்பரிணமமுடையவர்களானார்கள், உம்பர் - அதன்மேல், ஒன்றுகுஞ்சிந்தையுடன் - ஏகத்துவ வீதர்க்க வீசாரமென்கிற த்வீதிய சுக்லத் தியானத்துடன், நின்று - பொருந்தி க்ஷீணகஷாய குணஸ்தானத்தில் நின்று, ஓர் மூழ்த்தத்து ஈற்றின் - அந்தக் குணஸ்தான காலமாகிய ஓர் அந்தர் முகூர்த்த காலத்தின் அந்தியத்தில், முன்பினுங்கணத்து - இரண்டு ஸமயத்தில், (முதல் ஸமயத்திலே), நித்தைபசலைகள் - நித்திரையும் பிரசலையுமென்னும் இரண்டு கர்மங்கள், முறிய - கெட, சென்றார் - தியானத்தில் அடைந்தார்கள், எ - று. (௩௩௪)

1382. ஒருகணங் கடந்த போது ஒருநால்வர் கன்மர் கூடிப்
பொருகிற வேளை தன்னிற் போதியா வரண மைந்தும்
மருவிநின் றெதிர்த்த காலத் தந்தரா யந்தா னைந்துந்
திருகியீ ரெழுவ ரந்தக் கணத்திலே தீர்ந்தா ரன்றே.

(இ - ள்) ஒரு கணங்கடந்தபோது - க்ஷீணகஷாய குணஸ்தான காலாந்தியத்தில் பிரதம ஸமயம் முன் சொன்ன இரண்டு கர்மமும் நீங்கி அந்த ஒரு

கணமும் போகப் பின்பு த்விதீய ஸமயத்தில், ஒரு கல்வர் கன்மர் கூடி - சக்ஷு-ர் தர்சனவரணீயம் அசக்ஷு-ர் தர்சனவரணீயம் அவதிதர்சனவரணீயம் கேவலதர்சன வரணீயமென்னும் நாலு கர்மங்களும் சேர்ந்து, பொருகிற வேளை தன்னில் தாக்குகின்ற அக்காலத்திலேயே, போதியாவரணமைந்தும் - மதிஞானவரணீயம் ஸ்ரு-ர் தஞானவரணீயம் அவதிஞானவரணீயம் மனப்பரியய ஞானவரணீயம் கேவலஞானவரணீயம் என்னும் ஐந்து பிரகிருதிகளும், மருவி நின்று - சேர்ந்து நின்று, எதிர்த்த காலத்து - பொருதுகின்ற அந்த ஸமயத்திலேயே, அந்தராயந்தா னைந்தும் - தானந்தராயம் லாபாந்தராயம் போகாந்தராயம் உபபோகாந்தராயம் வீர்யாந்தராயமென்னும் ஐந்து கர்மங்களும், திருகி - சேர்ந்து பொருதி, அந்தக் கணத்திலே - அந்த க்ஷீணகஷாயகுணஸ்தானந்திய ஸமயத்திலே, ஈரெழுவர் - இந்தப் பதினாலு பேர்களும், தீர்ந்தார் - கெட்டு நீங்கினார்கள், எ - று. (௩௩௫)

1383. மாலைவா யிருளை நீக்கி வையத்தைத் துயி லெழுப்பும்
காலைவா யருக்கன் போலக் காதிக ணன்கு நீங்க
மேலெலா முறங்கு நான்மை விழித்துல கனைத்துங் காண
மாலிலா மனத்துச் சிந்தை யருக்கன துதித்த தன்றே.

(இ - ள்) மாலைவாய் இருளை - இராத்திரியிற் பொருந்தும் அந்தகாரத்தை, நீக்கி - போக்கி, வையத்தை - இந்தப் பூலோகத்துப் பிராணிகளை, துயில் - நித்திரையினின்றும், காலைவாய் - பிராதக்காலத்தில், எழுப்பும் - எழுப்புகின்ற, அருக்கன் போல - பால சூரியனைப் போல, மேலெலாம் - ஆத்மப் பிரதேச முழுவதும், உறங்கும் - தங்கியிருந்த, காதிகணன்கும் - ஞானவரணீய தர்சனவரணீய மோஹனீயாந்தராயங்களென்கிற காதி சதுஷ்டயங்கள், நீங்க - விலக, நான்மை - அனந்த சதுஷ்டயமானது, விழித்து - பிரகாசித்து, உலகனைத்தும் - லோகா லோக முழுமையும், காண - கேவல தர்சனத்தால் தெரிய, மாலிலா - மயக்கமில் லாத, மனத்து - மனதிலே, சிந்தை - சுத்த ஸ்வரூப சுக்கிலத் தியானத்தினால், அருக்கனது - கேவலஞானமென்னும் சூர்யனனது, உதித்தது - கிரணத்தினால் வியாபித்து உதயமாகினது, எ - று.

இதனால் அவர்கள் ஸ்வஸ்வரூப ஞான தர்சன குண ஸம்பூர்ணமாகிய யதாக் கியாத சாரித்திரத்தை யடைந்தார்கள் என்பது பெறப்படும். (௩௩௬)

1384. உள்ளெழுந் தீயி னால்வெந் தொளிபெற்ற விறகைப் போல
வெள்ளையத் தியானந் தன்னால் வெந்தெரி யுமிழ மேனி
பள்ளிகொண் டிடுதல் மூத்தல் பசித்தனோய் வேட்கை யின்றிப்
பிள்ளையா தித்தன் போல பிறப்பிரு ளோர்த்தி ருந்தார்.

(இ - ள்) (பின்னர் அவர்கள்), உள் - உள்ளே, எழும் - பற்றி வியாபித்த, தீயினால் - அக்கினியினால், வெந்து - எரிதலுற்று, ஒளி பெற்ற - பிரகாசம் பொருந்திய, விறகைப் போல - காஷ்டத்தை யொப்ப, வெள்ளையத் தியானந் தன்னால் - சுக்கிலத்தியானக்கினியினால், வெந்து - கர்மங்கள் எரிந்து, எரியுமிழ - ஆத்மப்பிரகாசம் தோன்ற, மேனி - சரீரமானது, பள்ளி கொண்டிடுதல் - சயனித்தலும், மூத்தல் - விருத்தாவஸ்தை யடைவதும், பசித்தல் - க்ஷுத்பாதாதி பீடிதங்களும், நோய் - வியாதிகளும், வேட்கை - ஆசையும், இன்றி - இல்லாமல், பிள்ளையாதித்தன் போல - பாலசூரியனைப் போல, (தோன்ற ஆத்ம ஜோதியால்), பிறப்பிருள் - ஸம்ஸாரத்தில் தோன்றிச் சுழலும்படியான அந்தகாரத்தை, தூர்த்து- நீக்கி, இருந்தார் - வீதராக சுத்தோபயோகிகளாகி யிருந்தார்கள், எ - று. (௩௩௭)

1385. பயம்பகை பணித்த லார்வஞ் செற்றமே கவர்ச்சி சோகம்
வியந்திடல் வெகுளி சோபம் வேர்த்திடல் விரும்பல் கேதம்
மயங்குதல் தெளிதல் சிந்தை வருந்துதல் களித்தல் மாயம்
இயம்பருந் திறத்த வின்ன யாவையு மெறிந்தி ருந்தார்.

(இ - ள்) (இன்னும்), பயம் - அச்சமும், பகை - விரோதமும், பணித்தல் - ஏவலிடுதலும், ஆர்வம் - அன்பும், செற்றம் - துவேஷமும், கவர்ச்சி - ஒன்றைக் கிரகிக்கும் குணமும், சோகம் - சோர்வும், வியந்திடல்-ஆச்சரியப்படுதலும், வெகுளி - கோபமும், சோபம் - அலங்கரிப்பும், வேர்த்திடல் - வேர்வை விடுதலும், விரும்பல் - ஒன்றைக் கருதுவதும், கேதம் - துக்கமும், மயங்குதல் - கலங்குதலும், தெளிதல் - ஆராய்ந்தறிதலும், சிந்தை வருந்துதல - மனதிற் கஷ்டமுறுவதும், களித்தல் - சந்தோஷப்படுவதும், மாயம் - வஞ்சமும், (ஆகிய), இயம்பரும் - சொல்லுதற்கரிய, இன்ன - இத்தன்மையாகிய, யாவையும் - ஸகல விபாவங்களையும், எறிந்திருந்தார் - கெடுத்து நின்றார்கள், எ - று. (௩௩௮)

1386. ஆயிடை யமரர் தங்கண் முடியொடா சனந்து ளங்கப்
பாயநல் லவதி யென்னும் பருதியாற் கண்ட தெல்லாம்
ஆயிரங் கண்ணி னானை யதிபதி யாகச் சூழ்ந்து
மாயிரும் விசும்பும் மண்ணும் மறையவா னவர்கள் வந்தார்.

(இ - ள்) ஆயிடை - அப்பொழுது, அமரர்தங்கள் - சதுர்ணிகாயாமரர்களுடைய, முடியொடு - கிரீடங்களோடு, ஆசனம் - இருக்கும் ஆஸனங்களும், துளங்க - சலிக்க, பாய - பரவிய, நல் - நன்மையாகிய, அவதியென்னும் - அவதிஜ்ஞானமென்னும், பருதியால் - ஒளியால், (அவர்கட்கு), எல்லாம் - யாவும், கண்டது - தெரிந்தது, (அவ்வாறு விளங்கிய மாத்திரத்தில் அப்பொழுதே), ஆயிரங் கண்ணினானை - ஸஹஸ்ராக்ஷனாகிய ஸௌதர்மேந்திரனை, அதிபதியாக -

தங்களெல்லாருக்கும் நாதனுக, (அமைத்து), சூழ்ந்து - சுற்றி நிறைந்து, மாயிரும்- மிகவும் பெரிதாகிய, விசும்பும் - ஆகாயமும், மண்ணும் - பூமியும், மறைய - மறை யும்படியாக, வானவர்கள் - இந்திராதி ஸர்வ தேவர்களும், வந்தார் - வந்தார்கள், எ - று. (௩௩௯)

1387. முழங்கின முரச மெங்கும் முரன்றன சங்க முன்னே
யெழுந்தன ரேறு சீயம் யானைமா வேறி விண்ணோர்
விழுந்தபூ மாரி விண்ணை விழுங்கின பதாகை வெள்ள
மெழுந்தவேத் தரவங் கீர்த்தி யியம்பின காள மெங்கும்.

(இ - ள்) எங்கும் - எவ்விடங்களிலும், முன்னே - முதன்மையாக, முர சம் - பேரிகைகள், முழங்கின - சப்தித்தன, சங்கம் - சங்கு வாத்தியங்களும், முரன்றன - ஒலித்தன, விண்ணோர் - தேவர்கள், ஏறு - விருஷபத்திலும், சீயம் - ஸிம்மத்திலும், யானை - யானைகளிலும், மா - குதிரைகளிலும், ஏறி - ஏறிக் கொண்டு, எழுந்தனர் - (கேவல பூஜையை இவர்கட்குச் செய்யும்பொருட்டு விரைந்து) சென்றூர்கள், பூமாரி - புஷ்ப வருஷங்கள், விழுந்த - சொரியப் பெற் றன, பதாகை வெள்ளம் - துவஜக் கொடிகளின் பெருக்கம், விண்ணை விழுங் கின - ஆகாயத்தை மறையப் பண்ணின, ஏத்தரவம் - அரஹந்தஸ்துதியாகிய சப்தமும், கீர்த்தி - புகழொலியும், எழுந்த - வியாபித்தன, எங்கும் - எவ்விடங் களிலும், காளம் - சிறு சின்னங்கள், இயம்பின - சப்தித்தன, எ - று. (௩௪0)

1388. அரம்பையர் நடம்பு ரிந்தா ரம்பர மரங்க மாக
நரம்பொலி பொலிந்த வெங்கு நண்ணினூர் மண்ணை விண்ணோர்
கரங்களுங் குவிந்த கண்ணீர் பொழிந்தன காதி நான்மை
யுரங்கடிந் திருந்த வீர ருறுதுணை யடிப ணிந்தார்.

(இ - ள்) அரம்பையர் - தேவ நர்த்தகிகள், அம்பரம் - ஆகாயமே, அரங்க மாக - நாடக சபையாக, நடம்புரிந்தார் - நர்த்தனஞ் செய்தார்கள், எங்கும் - எவ் விடங்களிலும், நரம்பொலி - வீணைவாத்தியாதி நரம்புக்கருவிகளின் சப்தமானது, பொலிந்த - இனிமையாக நிறைந்தன, விண்ணோர் - தேவர்கள், மண்ணை - இப் பூமியில் - நண்ணினூர் - அடைந்தார்கள், கரங்களும் - அவர்களுடைய ஹஸ்தங் களும், குவிந்த - முகுளிதமாயின, கண்ணீர் - ஆனந்தக் கண்ணீர்த் துளிகள், பொழிந்தன - சொரிந்தன, காதி நான்மை - காதி சதுஷ்டயங்களின், உரம் - சக் தியை, கடிந்திருந்த - நீக்கி ஜெயித்திராநின்ற, வீரர் - அனந்த வீர்யத்தையுடைய இவ்விரு கேவலிகளுடைய, உறுதுணையடி - பெருமை பொருந்திய இரண்டு பாதங்களை, பணிந்தார் - வணங்கினூர்கள், எ - று. (௩௪௧)

1389. பிண்டியுங் குடையுஞ் சீய வணையுஞ்சா மரையு மற்று
மண்டவர்க் கிறைய மைத்தா னன்னவர்க் குரிய வாற்றா
லுண்டற வமிர்தம் வந்தீங் குண்மினென் றொலித்த வூழி
கண்டவர் கழலை வாழ்த்திக் காமக்கோ டணைக ணின்ற.

(இ - ள்) பிண்டியும் - அசோக விருக்ஷமும், குடையும் - ஏகசத்திரமும், சீயவணையும் - சிம்மாஸனமும், சாமரையும் - வெண்சாமரைகளும், மற்றும் - பின்னும் புஷ்பமாரி துந்துபி முதலானவையும், அன்னவர்க்கு - அனகார கேவலி களாகிய அவர்கட்கு, உரியவாற்றால் - உரித்தான விதமாக, அண்டவர்க்கிறை - தேவர்களுக்கதிபதியாகிய ஸௌதர்மேந்திரன், அமைத்தான் - நிருமித்தான், ஈங்கு - இவ்விடத்தில், அறவமிர்தம் - தர்மாமிருதமானது, உண்டு - உண்டாயிருக் கின்றது, வந்து - பவ்வியர்களே வந்து, உண்மின் - அனுபவியுங்கள், என்று - என்று, ஒலித்த - திவ்வியத்துவனி சப்தித்தது, ஊழிகண்டவர் - அஞுதியாகிய கர்மங்களை ஜயித்து ஆத்ம ஸ்வரூபத்தைக் கண்டு அனந்த ஞான அனந்த தர்சனங் களையுடைய இந்த மேருமந்தரர்களாகிய இருபகவான்களுடைய, கழலை - பாதங் களை, வாழ்த்தி - தேவர்கள் ஸ்துதிப்பதால், காமகோடணைகள் - அழகிய ஜய கோஷணைகள், நின்ற - நிலைபெற்றன, எ - று (௩௩௮௯)

1390 மந்தர மிரண்டைச் சூழ்ந்த தாதகி மலைகள் போல
விந்திரர் விஞ்சை வேந்தர் மண்ணவ ரேனை யோர்கள்
சுந்தர மலருஞ் சாந்துந் தூபமு மேந்தி மேரு
மந்தர நாமர் பாதம் பணிந்துவாழ்த் தோடெ ழுந்தார்.

(இ - ள்) தாதகி - தாதகீஷண்டத்வீபத்தில் இராநின்ற, மந்தரமிரண்டை - இரண்டு மந்தர பர்வதங்களை, சூழ்ந்த - வேறு வேறாகச் சூழ்ந்திராநின்ற, மலைகள் போல - குலகிரி பர்வதங்களைப் போல, இந்திரர் - சதேந்திரர்களும், விஞ்சை வேந் தர் - வித்தியாதரவரசர்களும், மண்ணவர் - பூமியரசர்களும், ஏனையோர்கள் - மற்றுமுள்ள பவ்விய ஜீவர்களும், சுந்தரம் - அழகிய, மலரும் - புஷ்பங்களும், சாந்தும் - சந்தனங்களும், தூபமும் - தூபதீபாதிகளும், ஏந்தி - தரித்து, மேருமந் தர நாமர் - மேருமந்தரரென்கிற பெயரையுடைய பகவான்களுடைய, பாதம் - பாதங்களை, பணிந்து - வணங்கி, வாழ்த்தொடு - ஸ்துதி செய்வதுடன், எழுந் தார் - எழுந்து நின்றார்கள், எ - று. (௩௩௯௦)

வேறு.

1391. வெருவுறு துயரொடு விழுவெழு துயருங்
கருவுறு துயரொடு கடைவரு துயரும்

மருவிய வுயிர்வினை மறுவற வருளும்
பொருவரு திருவடி புகழ்தர வடைதும்.

(இ - ள்) (அவ்வாறெழுந்து நின்றவர்கள் மேலும் துதிக்கத் தொடங்கி), வெருவுறும் - ஸ்வபாவத்தில் எப்போதும் பயத்தையே யடைந்திரா நின்ற, துய ரொடு - விலங்குகதி துன்பத்துடன், விழவெழு துயரும் - எழும்பித் தலைகீழாக வீழ ஸதா உண்டாகும் நரககதி ஸ்வாபாவிக துக்கமும், கருவுறு துயரொடும் - கருப்பத்திலடைகின்ற மனுஷ்ய கதி துன்பமும், கடைவருதுயரும் - மரண காலத் தில் மிகவுமடைகின்ற தேவகதி ஸ்வாபாவிக துன்பமும், மருவிய - இந்தச் சதுர்க் கதி துன்பத்தில் சேர்ந்திராநின்ற, உயிர் - ஜீவன்களின், வினை மறுவு - கர்ம மாகிற களங்கமானது, அற - நீங்கும்படியாக, அருளும் - திவ்வியத்துவனியால் தர்மோபதேசஞ் செய்கின்ற, பொருவரு - உபமையில்லாத உங்களுடைய, திரு வடி - அழகிய பாதங்களை, புகழ்தர - எங்கட்குக் கீர்த்தி யுண்டாகும்படியாக, அடைதும் - ரக்ஷணையாக அடைகின்றோம், எ - று. (ருசச)

1392. பருதியி னொளிவெல பகைபசி பிணிகெட
வருவன மலர்மிசை மதனனை நலிவன
வுயிருறு தொடர்வற வெறிவன வுலகினி
லரியன பெரியநும் மடியிணை யடைதும்.

(இ - ள்) பருதியின் - சூர்யனுடைய, ஒளி - ஜோதியையும், வெல - ஜெயிக்கவும், பகை - சத்துருத்துவமும், பசி - க்ஷுதாதியும், பிணி - ரோகாதி களும், கெட - நீங்கவும், மலர்மிசை - தேவநிர்மித செந்தாமரைப்பூவின் மேல், வருவன - உலாவி வருவனவும், மதனனை - மன்மதனை, நலிவன - வருத்துவன வும், உயிர் - ஆத்மன்களிடத்தில், உறு - அனுதியாக விபாவத்தாலடைகின்ற, தொடர்வு-பாவ கர்ம திரவியகர்ம நோகர்மங்களாகிய ஸம்யோக ஸம்பந்தங்களை, அற - நீங்கும்படியாக, எறிவன - சேதிக்கின்றனவும், உலகினில் - லோகத்திலே, அரியன - பெறுதற்கரியனவும், பெரிய - மாஹாத்மியமுடையனவும், (ஆகிய), நும் - உங்களுடைய, அடியிணை-பாதங்களை, அடைதும் - சேர்கின்றோம், எ - று.

1393. முறைபொறி மறைகெட முழுதுமோர் கணமதி
லறியுநல் லறிவுடை யிறைவநும் மடியிணை
யுறுதவர் மனமிசை யுறைவன வுயிருறு
பிறவியை யறவெறி பெருமைய சரணம்.

(இ - ள்) முறை - கிரமமாக அறியும்படியான, பொறி - இந்திரியங்களா லாகிய ஞானமும், மறை - ஆவரணீயங்களும், கெட - நீங்க, முழுதும் - ஸக

லார்த்த ஸமூகத்தினையும், ஓர் கணமதில் - ஒரு ஸமயத்தில், அறியும் - ஞாத்ருபரிச்சித்தியினாலேனேயாவலம்பனமின்றி அறிகின்ற, நல் - நன்மையாகிய, அறிவுடை - கேவல ஞானத்தையுடைய, இறைவ - நாதனான தன்மையடைந்தவரே, நும் - உங்களுடைய, அடியிணை - பாதங்கள், உறுதவர் - மஹா தபஸ்விகளுடைய, மணமிசை - மனதிலே, உறைவன - தங்கும்படியானவை (அதாவது : அவர்களால் தியானிக்கும்படியான நிலைமையையுடையன), உயிர் - ஸம்ஸாரஜீவர்கள், உற - அடைந்திராநின்ற, பிறவியை - ஜனனமரணமான அந்த ஸம்ஸாரத்தை, அற - நீங்கும்படி, எறி - கெடுக்கின்ற, பெருமைய - உயர்வையுடையன, (ஆதலின், அப்பாதங்களே), சரணம் - இப்பொழுதெங்களுக்குப் புகலிடமாம், எ - று. (௩௪௬)

1394. குலிகமோ டிகலுவ குவிமுலை புணருநர்
தலைமையை நகுவன தவநெறி வருவன
உலகினை யொருநொடி யகவையி னளகுவ
மலைவில நிலையநும் மலரடி யடைதும்.

(இ - ள்) குலிகமோடு - ஜாதிலிங்கக் குழம்பினோடு, இகலுவ - செஞ்சந்தனாதிகள் பூசப்பெற்று ஒப்பனை செய்யப்பட்டமைந்த செம்மையால் எதிர்த்து அதனைத் தாழ்மைப்படுத்துவனவும், குவி - திரட்சி பொருந்திய, முலை - ஸ்தனங்களைக் கண்டு மோஹித்து, புணருநர் - காமத்தால் புணர்ச்சி செய்து தங்கியிராநின்றவர்களுடைய, தலைமையை - இறுமையை, நகுவன - சிரிப்பனவும், தவநெறி - தபோ நெறியில், வருவன - வரப்பட்டனவும், உலகினை - லோகத்தை, ஒரு நொடியகவையின் - ஒரு க்ஷண நேரத்திலே, அளகுவ - பிரத்தியக்ஷ ஞானத்தால் பிரமாணிப்பனவும், மலைவிலா - கெடுதலில்லாத, நிலைய - கேவல ஞானாதிகுண நிலையினையுடையனவும், (ஆகிய), நும் - உங்களுடைய, மலரடி - மலர்ப்பாதங்களை, அடைதும் - அடைகின்றோம், எ - று. (௩௪௭)

1395. உயர்வற வுபரிய வுலகினி னுயிர்களின்
அயர்வற வறவமு தருளுவ வமரர்கள்
மயர்வற மணிமுடி யணிவன பணிவார்
துயர்வற வெறியுநுந் துணையடி தொழுதும்.

(இ - ள்) உலகினின் - இந்த லோகத்திலே, உயிர்களின் - பவ்விய ஜீவன்களுடைய, அயர்வு - வருத்தங்கள், அற - நீங்கும்படியாக, அறவமுது - தர்மாமிருதத்தை, அருளுவ - ஈகின்ற தன்மையுடையவைகளும், அமரர்கள் - தேவர்கள், மயர்வற - விபாவ மயக்கங்கள் நீங்கும்படியாக, மணிமுடி யணிவன - அழகிய கிரீடங்களில் அணியத் தக்கனவும், பணிவார் - வணங்குவார்களின், துயர்வற - துக்கங்களெல்லாம் நீங்கும்படியாக, எறியும் - கர்ம மலங்களைக் கெடுப்பன

வும், உயர்வற உயரிய - தமக்கு மேலான உபமையில்லாத மேம்பாடுடையனவும், (ஆகிய), நும் - உங்களுடைய, துணையடி - பாதங்களை, தொழுதும் - வணங்கு கின்றோம், (என்று துதித்தார்கள்), எ - று. (௩௯அ)

1396. இனையன துதியினோ டிமையவ ரிறைவரை
மனமலி யுவகையின் வழிபடு முறைநாள்
வினைவழி யாமும்மை யோகுவி யோகுசெய்
கனமலி யூணில யோகிக ளானார்.

(இ - ள்) இனையன - இத்தன்மையனவாகிய, துதியினோடு - தோத்திரங் களுடன், இமையவர் - சதுர்ணிகாயாமரர்கள், இறைவரை - நாதர்களாகிய இவ் விருஜினர்களையும், மனமலி - மனதில் நிறைந்த, உவகையின் - ஸந்தோஷத்தினால், வழிபடும் முறைநாள் - முறையாக வணங்கிச் செல்கின்ற காலத்தில், (அவர்கள்), வினைவழியாம் - கர்ம வழியாகிய, மும்மையோகு - மனவசனகாயமென்னும் கர்மக் கூட்டங்களை, வியோகுசெய் - நீக்குதல் செய்கின்ற, கனமலி - உயர்ச்சி பொருந் திய, ஊணில் - இதரபுத்கலஸ்வீகாரமாகாத, அயோகிகளானார் - அயோகிகேவலி குணத்தை யடைந்தார்கள், எ - று. (௩௯௯)

1397. ஆயிடை யைந்திறோ டெண்பது வெவ்வினை
மாய வெழுந்து கணத்துல குச்சியை
மேயினர் விண்ணவர் மண்ணவர் மேனிகட்
காய சிறப்பொடு வந்தன ரங்கே.

(இ - ள்) ஆயிடை - அந்த அயோகி கேவலி குணஸ்தான காலமான அந் தர் முகூர்த்தாந்தியத்தில், ஐந்திறோடெண்பது வெவ்வினை - வெவ்விய அகாதி கர்மங்களாய் நின்ற எண்பத்தைந்து பிரகிருதிகள், மாய - கெட, எழுந்து - ஆத் மன் ஊர்த்துவகதி ஸ்வபாவனாக, கணத்து - அந்த ஸமயத்திலேயே, உலகுச் சியை - மூன்று லோகத்துக்கும் உச்சியாகிய ஸித்தி க்ஷேத்திரத்தில், மேயினர் - பொருந்தினார்கள், (அப்பொழுது), விண்ணவர் - தேவர்களும், மண்ணவர் - மனி தர்களும், மேனிகட்கு - பரிநிர்வாணமடைந்த அவர்களுடைய சரீரங்களுக்கு, ஆய- செய்யும்படி முறைமையாகிய, சிறப்பொடும் - பூஜாதிரவியத்தோடும், அங்கே - அவ்விடத்திலே, வந்தனர் - வந்தார்கள், எ - று (௪௦௦)

வேறு

1398. பொன்னரி மாலை சாந்தஞ் சுண்ணம்பூ மாலை தூம
மின்னன பலவு மேந்தி யிமையவ ரிறைஞ்சு மெல்லை
மின்னென முனிவர் மேனி மறைந்தன வியந்து நோக்கிப்
பன்னருந் துதிய ராகி வானவர் பணிந்து போனார்.

(இ - ள்) பொன்னரிமாலை - பொன்னாலாகிப் பிரகாசிக்கின்ற மாலைகளும், சாந்தம் - சந்தனாதிகளும், சுண்ணம் - கந்தப்பொடிகளும், பூமாலை - புஷ்பமாலை முதலியவைகளும், தூமம்-அகில் தூபம் முதலியவைகளும், (இன்னும்), இன்னண-இத்தன்மையனவாகிய, பலவும்-அனேக வஸ்துக்களும், ஏந்தி - மேற் கூறியபடி தாங்கிக்கொண்டு வந்து அர்ச்சித்து, இமையவர் - தேவர்கள், இறைஞ்சமெல்லை-பரிநிர்வாண பூஜையை விதிப்படி செய்து வணங்குகின்ற காலத்தில், முனிவர் மேனி - இவ்விரு முனிவர்களாகிய மேருமந்தரரென்னும் பட்டாரகர்களது சரீரங்கள், மின்னென - தோன்றிமறையும் மின்னற் கொடியைப்போல, மறைந்தன - அத்திர்சயமாயின, (அப்பொழுது), வானவர் - தேவர்கள், வியந்து நோக்கி - ஆச்சரியத்தையடைந்து பார்த்து, பன்னரும் - சொல்லுதற்கரிய, துதியராகி - ஸ்துதிகளையுடையராகி, பணிந்து - வணங்கி, போனார் - தமதிடமடைந்தார்கள், எ - று.

வேறு.

1399. முடிவிலாத் தடுமாற்ற முதல்கிழிய மூவமிர்த
முறையிற் றோன்றி
யிடையிலாம் வினைமுதலா மோகமெறிந் தார்வமிலா
வியல்பிற் றோன்றிக்
கடையிலாக் காதிகெடக் காட்சிவலி யறிவின்பங்
கண்ணே தோன்றித்
தொடர்வெலா மறவெறிந்து தோன்றிநாற் குணத்திலுநற்
சுயம்பு வானார்.

(இ - ள்) (அதன் மேல் மேருமந்தரர்கள்), முடிவிலா - அளவில்லாமலனாதியாகிய, தடுமாற்றம் - சம்ஸாரத்துக்கு, முதல் - காரணமாகிய மித்தியாத்துவமென்னும் தர்சன மோஹனீயமானது, கிழிய - கெட, மூவமிர்தம் - ஸம்யக் தர்சன ஞான சாரித்திரமென்னும் ரத்னத்திரயமாகிய மூவமிர்தங்கள், முறையிற் றோன்றி - லப்திபஞ்சக வசத்தினாற் கிரமமாகக் கூடி, யிடையிலாம் - ஆத்மனிடத்திலாகின்ற, வினை முதலாம் - கர்ம காரணமாகிய, மோகமெறிந்து - சாரித்திர மோஹனீயத்தையுங் கெடுத்து, ஆர்வமிலா - விபாவமாகிய ராகத்துவேஷமில்லாத, இயல்பிற்றோன்றி - ஸ்வபாவ பரிணதியில் தோன்றி, கடையிலாக்காதிகெட - முடிவில்லாத காதி கர்மமான மற்ற ஞானாவரண தர்சனாவரண அந்தராயங்களும் கெட, காட்சி - அனந்த தர்சனமும், வலி - அனந்த வீர்யமும், அறிவு - அனந்த ஞானமும், இன்பம் - அனந்த ஸௌக்கியமும், கண்ணே - தம்மிடத்திலே, தோன்றி - உண்டாகி, தொடர்வெலாம் - மறுபடியும் சம்பந்தங்களாயிராநின்ற அகாதி கர்மங்களெல்லாம், அற - நீங்கும்படியாக, எறிந்து - கெடுத்து, நாற்குணத்திலுந் தோன்றி - அவ்வியாபாதத்துவம் அகிலாக்ஷ்மத்துவம் அகுருலகுத்து

வம் அவகனத்துவம் என்னும் நாலு குணங்களிலும் தோன்றி, நல் - நன்மை யாகிய, சுயம்புவானூர் - சுத்த நிச்சய ஸ்வரூபமானூர்கள், எ - று. (ருஙூஉ)

1400. மணமலிந்த ஒளியெனவு மலர்நிறைந்த விரையெனவும்
மல்கு சந்தின
துணியுமிழ்ந்த தண்மையினுந் தோன்றியவப் பேரின்பத்
துள்ளே தோன்றி
யிணைபிறிது மிலராகி யிமையவரும் மாதவரு
மிறைஞ்சி யேத்தப்
பணிவரிய சிவகதியி னமர்ந்திருந்தா ரறவமிர்த
முண்டா ரன்றே.

(இ - ள்) (இன்னும்), அறவமிர்தமுண்டார்:- தர்மாமிருதத்தைக் கேட்டு அனுபவித்த இவ்விருவர்களும், மணி - ரத்தினத்திலே, மலிந்த - நிறைந்த, ஒளி யெனவும் - பிரகாசம்போலவும், மலர் - புஷ்பத்திலே, நிறைந்த - வியாபித்திரா நின்ற, விரையெனவும் - வாஸனைபோலவும், மல்கு - நறுமணம் நிறைந்த, சந்தின் துணி - சந்தனக் கட்டையானது, உமிழ்ந்த - சொரிந்த, தண்மையினும் - குளிர்ச் சியைப்போலவும், தோன்றிய - ஆத்மஸ்வபாவமாக உண்டாகிய, அப்பேரின்பத்து ள்ளே தோன்றி - அந்தப் பெரிதாகிய அனந்தஸௌக்கியத்திலே விளங்கி, இணை பிறிது மிலராகி - உபமாதீதர்களாகி, இமையவரும் - தேவர்களும், மாதவரும் - கணதராதி மஹா முனிவர்களும், இறைஞ்சி - வணங்கி, ஏத்த-தோத்திரம் செய்ய, பணிவரிய - தாழ்வில்லாத, சிவகதியில் - மோட்ச கதியில், அமர்ந்திருந்தார் - பொருந்தி நின்றூர்கள், எ - று. (ருஙூரு)

வேறு.

1401. மதுரைநல் லிராமை தேவன் மலையிற்சீ தரைகா விட்டத்
ததிர்கழ லமரன் பின்னு மரதன மாலை வானோன்
விதியினு லச்சு தைக்கண் வீதபீ தன்னி லாந்தைக்
கதிபதி யாதித் தாபன் மேருநல் லகதி வேந்தன்.

(இ - ள்) (மேருவென்பவன்), மதுரை - ஆதியில் மதுரையென்கிற பிராம மண ஸ்த்ரீயாய், (பிறகு), நல் - நன்மையாகிய, இராமை - இராமதத்தா தேவி யாகி, (அதன் பிறகு), தேவன் - பாஸ்கரப் பிரபனென்னும் நாமமுடைய தேவ னுகி, (கற்பத்திற்ரோன்றிப் பிறகு), மலையில் - விஜயார்த்த பர்வதத்தில், சீதரை - ஸ்ரீதரை யென்னும் ஸ்த்ரீயாய், (பின்பு), காவிட்டத்து - காபிஷ்ட கல்பத்திலே, அதிர் - சப்தியாநின்ற, கழல் - வீரகண்டயத்தை யணிந்த அமரன் - தேவனுகித்

தோன்றி, பின்னும் - அதன் பின்பும், அரதன மாலை - இரத்தினமாலை யென்னும் ஸ்த்ரீயாகிப் பிறந்து, (அதன் பிறகு), விதியினால் - கிரமத்தினால், அச்சுதைக் கண் - அச்சுதகல்பத்திலே, வானோன் - தேவனாகப் பிறந்து, (அதன் பின்பு), வீதபீதன் - வீதபயனென்னும் பெயர் பெற்ற பல தேவனாகிப் பிறந்து, (பிறகு), லாந்தைக்கதிபதி - லாந்தவகல்பத்துக்கதிபதியாகி, ஆதித்தாபன் - ஆதித்யாபன் என்னும் பெயர் பெற்று, (பின்பு), மேரு - மேருவென்னும் பெயருடையவனாய் மனுஷ்ய கதியிற்றோன்றி, நல் அகதிவேந்தன்-(இனிப் பிறக்கின்ற கதியில்லாது) நன்மையாகிய மோட்சத்தையுற்றுத் திரிலோக பூஜ்யனாகும் தன்மையடைந்தான், எ - று. (கூ௯௪)

1402. வாருணி பூர சந்தன் வானவன் மங்கை வானோன்
ஏரணி யிரத னாயு தன்னச்சு தன்வி பீடண
னாரழல் நரகன் வேந்த னமரன்பின் சயந்த னம்பொற்
றாரணி தரணன் பைந்தார் மந்தரன் சிவக திக்கோன்.

(இ - ள்) (மந்தரனென்பவன்), வாருணி - வாருணியென்னும் பிராம்மண புத்திரியாக இருந்து, (பின்பு), பூரசந்தன் - பூர்ணச் சந்திரனாகிய அரசகுமாரனாகி, (பின்பு), வானவன் - தேவனாகிப் பிறந்து, (பின்பு), மங்கை - யசோதரை யென்னும் ஸ்த்ரீயாக ஜனித்து, (மறுபடி), வானோன் - தேவனாகி, (பின்பு), ஏரணி - அழகையணிந்த, இரதனாயுதன் - இரத்தினாயுதனென்னும் ராஜகுமாரனாகி, (பின்பு), அச்சுதன் - அச்சுத கல்பத்துத் தேவனாகி, (பிறகு), விபீடணன் - விபீஷணனென்னும் வாஸுதேவனாகிப் பிறந்து, (பின்பு), ஆர் - நிறைந்த அழல் - அக்கினியையுடைய, நரகன் - நரகனாய்ப் பிறந்து, (அங்கு நின்றும் பூமியில் வந்து), வேந்தன் - ஸ்ரீதாமாவென்னும் அரசனாகி, (மறுபவத்தில்), அமரன் - பிரம்மகல்பத்திற்றேவனாகித் தோன்றி, பின் - பின்பு, சயந்தன் - ஸயந்தனென்னும் ராஜபுத்திரனாகி, (மறுபடி), அம்பொன் - அழகிய பொன்னாலாகிய, தாரணிதரணன் - மாலைகளணிந்த தரணேந்திரனாகி, (மறுபவத்தில்), பைந்தார் - பசுமைபொருந்திய மாலைகளை யணிந்திராநின்ற, மந்தரன் - மந்தரனென்னும் இராஜகுமாரனாய்ப் பிறந்து, (தபம்செய்து), சிவகதிக்கோன் - மோட்சகதியிலுற்றுத் திரிலோக பூஜ்யனான சாசுவதப்பதவியை யடைந்தவனானான், எ - று. (கூ௯௫)

வேறு.

1403. இனையது வெகுளியி னியல்பு மாற்றியல்
பினையது வினைகளி னியல்பு பற்றியல்
பினையது பொருளின தியல்பு வீட்டியல்
பினையது திருவறத் தியல்பு தானுமே.

(இ - ள்) வெகுளியினியல்பு - க்ரோதத்தினாலாகின்ற ஸ்வபாவமானது, இனையது - இப்புராணத்தில் சொல்லப்பட்ட சத்தியகோஷன் முதலானவர்களின் சரித்திரத்திற் கூறிய இத்தன்மையானது, மாற்றியல்பு - ஸம்ஸாரப் பிறப்புகளின் இயல்பும், இனையது - இந்தப் புராணத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற இத்தன்மை யானது, வினைகளின் இயல்பு - கர்மங்களினுடைய ஸ்வரூபமும், இனையது - இத்தன்மையதாகும், பற்றியல்பு - லோபமாகிய ஆசையின் இயற்கையும், இனை யது - இதில் சொல்லப்பட்ட இத்தன்மையாகும், பொருளினதியல்பு - ஜீவாதி திரவியங்களின் ஸ்வரூபங்களும், இனையது - இத்தன்மையதாகும், வீட்டியல்பு - மோட்சத்தினது இயல்பும், இனையது - இத்தன்மையதாகும், திருவறத்தியல்பு தானும் - ஸ்ரீ ஜின தர்மத்தினது விதமும், இனையது - இதிற்சொன்ன இத்தன் மையதாகும், எ - று.

இரண்டாமடியிலும் மூன்றாமடியிலுமுள்ள இனையதென்பது முடிபு நோக் கித் தீபகமாக இரண்டிரண்டிடங்கட்குக் கூட்டப்பட்டது. (௲௩௱௪)

1404. அறமல துறுதிசெய் வார்க டாமிலை
மறமலா திடர்செய வருவ தும்மிலை
நெறியிவை யிரண்டையும் நினைந்து நித்தமுங்
குறுகுமி னறநெறி குற்ற நீங்கவே.

(இ - ள்) அறமலது - தர்மமேயல்லாமல், உறுதி செய்வார்கள் தாம் - ஆத் மனுக்கு உறுதியான தன்மை செய்பவர்கள், இலை - இல்லை, மறமலாது - பாபமே யல்லாமல், இடர் செய வருவதும் - துன்பஞ் செய்ய வருவதும், இலை - வேறில்லை, நெறியிவை யிரண்டையும் - இவ்விரு மார்க்கங்களையும், நினைந்து - மனதிலெண்ணி, நித்தமும் - நாள்தோறும், குற்றம் நீங்க - பாபகாரணமாகிய ராகத்துவேஷ மோஹாதி குற்றங்கள் விலகும்படியாக, அறநெறி - தர்மாமிருத மாகிய ஸம்யக் தர்சனஞானசாரித்ரமாகிய ரத்னத்திரயமாகிற மோட்சமார்க்கத்தை, குறுகுமின் - ஜீவர்களே! அடையுங்கள், எ - று. (௲௩௱௫)

1405. ஆக்குவ தேதெனி லறத்தை யாக்குக
போக்குவ தேதெனில் வெகுளி போக்குக
நோக்குவ தேதெனில் ஞான நோக்குக
காக்குவ தேதெனில் விரதங் காக்கவே.

(இ - ள்) ஆக்குவது - செய்யும்படியான காரியமானது, ஏதெனில்-என்ன வென்றால், அறத்தை-ஸ்ரீ ஜின தர்மத்தையே, ஆக்குக - செய்க, போக்குவது-நீக்க வேண்டியது, ஏதெனில் - என்னவென்றால், வெகுளி-கோபத்தை, போக்குக - நீக்குக, நோக்குவது - பார்க்கவேண்டியது, ஏதெனில்-என்னவென்றால், ஞானம்-

ஸம்மியக்ஞானத்தையே, நோக்குக - கருத்தாகப் பார்த்தறிக, காக்குவது - காப்பது, ஏதெனில் - என்னவென்றால், விரதம் - ஸம்மியக் சாரித்திரத்தையே, காக்க - நழுவாமல் காப்பாற்றுக, எ - று.

இச்செய்யுள் நரிவிருத்தத்தினீற்றிலும் வந்துளது. (௩௩௮)

பதின்மூன்றாவது :

சமவசரணச்சருக்கம் முற்றிற்று.

செய்யுட்டொகை.

ஆயிரத்து நானூற்றின் மேலு மிருமூன்றும்
பாயபுகழ் மேருக்கள் மந்தரர்பாற்—றூய
தவராச ராசன் குருமுனிவன் றந்த
பவரோக மந்திரமாம் பாட்டு.

மேருமந்தரபுராணம் மூலமும், உரையும் முற்றுப்பெற்றன.



ஸ்ரீ

# மேருமந்தர புராண

## செய்யுள் முதற்குறிப்பகாராதி



### அ

ஆ

# அரும் பொருள் அபிதானவிளக்க அகராதி

## 1-வது சருக்கம்



*

## 2 - வது சருக்கம்

## 3-வது சருக்கம்

## 4 - வது சருக்கம்

## 5 - வது சருக்கம்

## 6 - வது சருக்கம்

†

---

## 7-வது சருக்கம்

## 8-வது சருக்கம்

## 9-வது சருக்கம்



## 10-வது சருக்கம்

## 12-வது சருக்கம்

## 13-வது சருக்கம்



‡